# முருகவேள் பன்னிரு திருமுறை

## தொகுதி-1

தணிகைமணி
டாக்டர் வ.சு. செங்கல்வராயன்

# முருகவேள் பன்னிரு திருமுறை

## தொகுதி 1

அருணகிரிநாதர் அருளிய

## திருப்புகழ்: ஆறுபடை வீடு

[பாடல்கள் 1 முதல் 450 முடிய]

உரையாசிரியர்

டாக்டர் வ.சு. செங்கல்வராயன். எம்.ஏ., டிலிட்.

திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.

154, டி.டி.கே.சாலை, ஆழ்வார்பேட்டை,
சென்னை - 600 018.

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING, SOCIETY, TINNEVELLY, LTD.

பதி-1 1951
பதி-2 1965
பதி-3 1992



# MURUGAVEL PANNIRU THIRUMURAI

## Part - I. Vol. I & II.

### Tiruppugazh: Arupadaiveedu

APPAR ACHAKAM, MADRAS 600 108.

# பதிப்புரை

சிவபெருமானுக்குப் பண்டு பன்னிரு திருமுறைகள் வகுக்கப்பட்டுப் பன்னூறு ஆண்டுகளாகச் செந்நெறிச் செல்வர்களால் ஓதி வழிபடப்பட்டு வருதல் போலத் திருமுருகப் பெருமானுக்கும் பன்னிரு திருமுறைகள் வகுத்தல் வேண்டும் என உளங் கொண்ட டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ., அவர்கள் 'முருகவேள் பன்னிரு திருமுறை' என்னும் இத்தொகுப்பினைத் தக்க ஆராய்ச்சி உரையுடன் தொகுக்க முன் வந்து அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்களை ஏழு திருமுறைகளாக வகுத்து உரையெழுதி ஐந்து தொகுதிகளாக அமைத்து அச்சிட்டு வெளியிட்டனர்.

அடுத்து அருணகிரிநாதர் அருளிய கந்தரலங்காரம் கந்தரந்தாதி ஆகிய இருநூல்களையும் எட்டாந் திருமுறையாகவும், திருவகுப்பை ஒன்பதாந் திருமுறையாகவும், கந்தரனுபூதியைப் பத்தாந் திருமுறையாகவும் திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, மற்றும் முருகனைப் பற்றிய பாடல்களைப் பதினொன்றாந் திருமுறையாகவும், தேனூர் வரகவி சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் பாடிய சேய்த்தொண்டர் புராணம்' பன்னிரண்டாம் திருமுறையாகவும் தொகுக்க 'முருகவேள் பன்னிரு திருமுறை' உருப்பெறலாயிற்று.

இப் பன்னிரு திருமுறைகளின் மறு பதிப்புகளைக் கழகவழி வெளியிடக் கருதி ஏற்று, 1965 ஆம் ஆண்டில் சில தொகுதிகளை வெளியிட்டோம். முதன் முறையாக முன்பு வெளியான ஆறு தொகுதிகளையும் ஒரு சேர வெளியிட வேண்டுமென்ற ஆவல் நிறைவேறும் வகையில் ஈண்டு நான்கு பாகங்களில் வெளியிட்டுள்ளோம். திருமுருக அன்பர்கள் இதனை ஏற்றுப் போற்றி முருகன் அருள் பெறுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



தணிகைமணி,

திரு. வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ.

# தணிகைமணி அவர்களின் வரலாறு

டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராயன் அவர்கள் தென்னாற்காடு மாவட்டம், மஞ்சக்குப்பம் என்னும் ஊரில் மாவட்ட நீதிமன்ற நடுவராயிருந்த வ.த. சுப்பிரமணிய பிள்ளையும், அவர் தம் துணைவியார் தாயாரம்மாள் அவர்களும் ஆற்றிய நற்றவப் பயனால் 15 - 8 - 1883-ல் அவர்களின் நன்மகனாராகத் தோன்றினார். இவர்தம் தந்தையார் மாவட்ட நடுவராக நாமக்கல், கும்பகோணம், திருத்தருப்பூண்டி, மதுரை எனப் பல ஊர்களில் பணியாற்றிய காரணத்தால் இவரது கல்விப் பயிற்சியும் அவ்வவ்வூர்களில் தொடரலாயிற்று. திருவாரூரில் பத்தாம் வகுப்புவரை பயின்றார். பின்னர்த் தஞ்சையிலும் மதுரையிலுமாகப் பயின்று 1901-ல் சென்னை வந்து கிறித்துவக் கல்லூரியில் பயின்று பி.ஏ., எம்.ஏ., பட்டங்கள் பெற்றார். அந்நாளில் தமிழ்த்திரு. பரிதிமாற் கலைஞரும், மறைமலையடிகளாரும் இவருக்கு ஆசிரியர்களாக அமைந்து தமிழறிவூட்டினர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர் முதுகலைப்பட்டத்திற்கு ஆங்கிலத்தில் எழுதிய தமிழ் உரைநடை வரலாறு என்னும் ஆராய்ச்சிக் கட்டுரை இன்றும் ஏற்புடைமை உடையதாக கருதப்படுகிறது.

1905-ல் ஆவணப் பதிவுத்துறையில் வேலைக்கமர்ந்து அத்துறையில் மேலதிகாரிகளால் பாராட்டப்பெற்றுப் படிப்படியாக உயர்ந்து, சென்னை ஆவணத்துறையில் தலைமை அதிகாரியின் நேர்முக உதவியாளராக (P.A. to the I.G. of Registration) அமர்வு பெற்றார்.

இவர் தம் அலுவலினின்று ஓய்வு பெற்றபின் திருத்தலங்கள் தோறும் சென்று வருதலையும், நாடோறும் திருப்புகழ், கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், வேல் வகுப்பு ஆகிய சமய நூல்களையும், கல்லாடம், பரிபாடல், குறுந்தொகை ஆகிய சங்க நூல்களையும் மனப்பாடம் செய்தலையும் மேற்கொண்டார்.

இவர் ஆவணப் பதிவுத் துறையில் பணியாற்றிய போது பதிவு முறைகளில் காணப்பட்ட பல்வேறு பிரிவுகளையும், அவை பற்றிய விளக்கக் குறிப்புகளையும் கண்டபோது தாம் பல்லாண்டுகளாக ஈடுபாடு கொண்டிருக்கும் சைவத் திருமுறைகளுக்கு இப்படியொரு விளக்க நூலை எழுதினால் நலமென்று கருதினார். அதன் விளைவாகத் தோன்றியனவே அவர்தம் ஒளிநெறி நூல்களும், ஒளிநெறிக் கட்டுரைகளுமாகும். அவ்வகையில் அவர் இயற்றிய நூல்கள்:

தேவார ஒளிநெறி (மூன்று பகுதிகள்), தேவார ஒளிநெறிக் கட்டுரைகள், திருவாசக ஒளிநெறி, திருவாசக ஒளிநெறிக் கட்டுரை, திருக்கோவையார் ஒளிநெறிக் கட்டுரை மற்றும் திருவிசைப்பா ஒளிநெறி, முதலியன. தணிகைமணி அவர்களின் இத்தகைய அரிய இலக்கியப் பணியினைக் கண்ட கழக ஆட்சியாளர், தாமரை செல்வர் வ.சுப்பையாபிள்ளை அவர்கள், இவருக்குத் தமிழகப் பல்கலைக் கழகங்களுள் ஏதேனும் ஒன்றின்வழி டாக்டர் பட்டம் வழங்கச் செய்தல் வேண்டும் என எண்ணி, அதற்கான முயற்சிகளை மேற்கொண்டனர். அதன் விளைவாக மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் 1-9-69ல் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கப்பெற்றது.

தணிகைமணி அவர்கள் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் ஆராய்ச்சியிலே, அதிலும் சிறப்பாகச் சமய நூல்களை ஆராய்வதில் பேரீடுபாடு கொண்டிருந்தார்கள். இங்ஙனம் வாழ்வாங்கு வாழ்ந்த இப்பெரியார் 1971-ஆம் ஆண்டு ஆகஃச்டு திங்கள் 25-ஆம் நாள் இறைவனடி சேர்ந்தார். அன்னாரின் தமிழ்த் தொண்டு நீடு வாழ்வதாக.

* * *

# உள்ளுறை

# முதற் பதிப்பின் முகவுரை

திருத்தணிகையெம் பெருமான் திருப்புகழ்ச் செல்வத்தை எங்கள் குடும்பத்துக்குத் தந்து அச் செல்வத்தைப் பெருக்கும் வாய்ப்பு ஒன்றையும் இப்போது தந்தனர்.திருப்புகழே அன்றி முருகன் பெரும்புகழ்ப் பெருநூல்கள் அனைத்தையும் பன்னிரு திருமுறைகளாக வகுக்கலாம் என ஓர் எண்ணத்தை உதவினர். சிவபிராற்கு உரிய பன்னிரு திருமுறைகளுக்கு ஒப்பனவாக, முருகவேளுக்கும் உரிய பன்னிரு திருமுறைகளாவன:-

**1 முதல் 7 திருமுறைகள்**

முதல் ஏழு திருமுறைகளாம் 'தேவாரம்' போல திருப்புகழும் முதல் ஏழு திருமுறைகளாம்.(ஆறு படை வீட்டுத் திருப்புகழ்ப் பாக்கள் ஆறு திருமுறைகள்: பிற திருப்பதிகளின் திருப்புகழும் பொதுத் திருப்புகழும் ஏழாந் திருமுறை)

**8ஆந் திருமுறை**

'திருவாசகம்' 'திருக்கோவையார்' எட்டாந் திருமுறை யாமாறு, திருவாசகத்துக்கு இணையாம் **கந்தரலங்காரமும்** அகப் பொருள் கொண்ட திருக்கோவையாருக்கு ஒப்ப அகப் பொருள் அமைந்த **கந்தரந்தாதியும்** எட்டாந் திருமுறையாம்.

**9 ஆந் திருமுறை**

ஒன்பதாம் திருமுறையாகுந் 'திருவிசைப்பா'வுக்கு ஒப்ப, இசைப் பாடலாம் **திருவகுப்பு** ஒன்பதாந் திருமுறையாம்.

**10 ஆந் திருமுறை**

மந்திர நூலாய்ப் பத்தாந் திருமுறையாகும் 'திருமந்திரத்' துக்கு இணையாக, மந்திர நூலாம் **கந்தரநுபூதி** பத்தாந் திருமுறையாகும்.

**11 ஆந் திருமுறை**

அடியார் பலரின் பாடல் தொகுதியாம் பதினோராந் திருமுறைக்கு ஒப்ப, முருகவேளுக்குரிய பழைய அடியார்கள் பலர் பாடினவற்றுள், திரட்டப்பட்ட பகுதிகள் முருகப் பெருமானது பதினோராந் திருமுறையாகும்.

## 12 ஆந் திருமுறை

திருத்தொண்டர் புராணமாம் பெரிய புராணத்துக்கு ஒப்ப, முருகவேள் தொண்டர்களின் புராணம் 'சேய்த்தொண்டர் புராணம்' என்னும் அருமைப் பெயருடன், ஒன்று வெளி வரலாம். அது பன்னிரண்டாந் திருமுறையாம்.

இத் திருமுறைகள், திருப்புகழ் பதிப்பாசிரியர் திரு. வ. த சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் திருந்திய முறைப்படி, அவர்கள் சந்ததியாராம் எங்கள் சார்பிலும் உரிமையிலுமே அச்சிட்டு வெளியிடப்பெறுகின்றன.

முருகவேளின் அடியார்கள் இத் திருமுறைகளை உவந்து ஏற்றுப் பாராயண நூலாகக் கொண்டு, பன்னிருகைப் பெரு மானது திருவருளைப் பெற்று இம்மை மறுமைப் பயன்களை அடைந்து பொலிய விழைகின்றோம்.

சென்னை,
12-4-1951.

வ.சு. செங்கல்வராய பிள்ளை
வ.ச. மயிலேறும்பெருமாள் பிள்ளை

# இரண்டாம் பதிப்பின் முகவுரை

திருப்புகழ் திருமுறையின் இரண்டாம் பகுதி இப்போது வெளிவந்துள்ளது. முதற் பகுதியின் பிரதிகள் கைவசமில்லாத தால், அதன் இரண்டாம் பதிப்பு (விளம்பரத்தில் கண்டபடி) வெளிவருகின்றது.

இந் நன்முயற்சியை மேற்கொண்டவர் **வள்ளிமலை திருப்புகழ் சுவாமியின்** சீடர்களில் ஒருவராகிய **ஸ்ரீ கல்யாணசுந்தரம் அய்யர்** அவர்களின் மனைவியர் திருநிறை **மீனாக்ஷி அம்மையார்**. இவ்வம்மையாருக்கு முருகன் திருவருட் செல்வம் நிறைந்து விளங்குமாறு அவனது பொன்னார் திருவடியைப் போற்றுகின்றோம்.

292, லிங்க செட்டித் தெரு
சென்னை,
6-10-1952.

வ.சு. செங்கல்வராய பிள்ளை
வ.ச. மயிலேறும் பெருமாள் பிள்ளை

# உரை நடைக்கு முகவுரை

" தகப்பன் சாமி எனவரு பெருமாளே! - புவிதனில்
எனக்குண் டாகு பணிவிடை
கணக்குண் டாதல் திருவுளம் அறியாதோ!"

- திருப்புகழ், 1178.

என்று எமது அருணகிரியார் கூறியவாறு, அடியேன் இப்புவியிடை வாழு நாளிற் செய்ய வேண்டிய பணிகளை வகுக்கின்றவர் திருத் தணிகேசரே!

'புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி யொழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
என்னையும் அடிய னாக்கி இருவினை நீக்கி' ஆள்வாய்
பன்னிரு தடந்தோள் கொண்ட பராபர! தணிகைநாத!

என அவரை இடைவிடாது வேண்டினேன்.என் வேண்டுகோளுக்கு இரங்கினார்; இரங்குகின்றார் - என்பது இப்போது வாய்த்துள்ள வாய்ப்பே தெரிவிக்கின்றது.

முருகவேள் நூல்கள் திருமுறை வடிவில் வெளிவரலாம் எனக் குருகுல ஆசிரியர் திரு. இளஅழகனார் முதலில் விரும்பினார்: நன்று எனத் தோன்றிற்று.

பின்னர்த், திருப்புகழ்ப் பாக்களுக்கு நீங்களே பொழிப்புரைப் பொருளும் எழுதுதல் நன்று என்றனர். பொருள் எழுதுங்கள் என்றதும் என் நெஞ்சம் நடுக்குற்றது. என் அறிவின் சிறுமையை உணர்ந்த நான் 'என்னால் முடியாது; பொருள் விளங்காத பகுதிகள் பலவுள' - எனக் கூறி மறுத்தேன். எவ்வளவு மறுத்தும் இளஅழகனார் என்னை விடவில்லை; 'திருப்புகழின் உயர்வெங்கே! சிறியன் இவன் துணிவென்னே!" என உலகோர் நம்மை ஏசுவரே என அஞ்சினேன்.

பின்பு, இறைவரே ஒரு துணிவைத் தந்தனர். 'முன்னவனே முன் நின்றால் முடியாத பொருளுளதோ'- என்னும் சேக்கிழார் திருவாக்கு மனத்தில் ஊன்றிற்று; ஓர் ஊக்கத்தைத் தந்தது

முருகன் திருவருள் துணை நிற்குமாயின் எதுதான் முடியாது எனும் துணிவும் பிறந்தது.உரை எழுதத் துணிந்தேன்.

இறைவன் என் அறியாமையை விலக்கி அருளவேண்டும். பெரியோர் என் துணிவையும் குறைகளையும் பொறுத்தருள வேண்டும். முக்குண வசத்தால் முறை பிறழ்ந்து உரை எழுதின இடங்கள், பொருள் விளங்கா இடங்கள் ஆங்காங்குப் பலவுள. இக் குறைகளை அன்பர்கள் பொறுக்க வேண்டும்; புலவர்கள் எள்ளி நகையாடாது பொறுத்தல் வேண்டும்.

திருப்புகழ்ப் பாடலின் ஒவ்வோரடிக்கு நேராக அதன் உரைநடை அச்சிடப்பட்டுள்ளது, அதனால் இன்ன சொல்லுக்கு இது பொருள் என்பதும் எளிதில் விளங்கும்; எழுதியுள்ள உரைப் பகுதிகள் புலவர்களுக்கு வேண்டா விடினும், ஏனையோர்க்குப் பயன்படுமாயின்,

'இந்நாள் எனக்குப் பயப்பட்ட திப்பிறவி
இந்நாள் எனக்குப் பயப்பட்ட தியான்செய்தவம்
இந்நாள் எனக்குப் பயப்பட்ட தென் அறிவும்'
இந்நாள் இவ் வுரையெழுத இறைவனருள் கூடினதால்

என மகிழ்ந்து அவன் திருவருளையே வியப்பேன்.

சென்னை
3-4-1951.

வ.சு. செங்கல்வராய பிள்ளை

# முருகவேள் திருமுறைக்குப் பாராட்டு

[கி.வா. ஜகந்நாதன்]

மன்னிய அருளும் ஞானமும் அழகும்
வடிவென வளர்திருக் குமரன்
தன்னியல் புணர்ந்து சந்ததம் அவன்றன்
சரணதா மரைகளில் மனத்தைத்
துன்னிய தேனின் சுவைநுகர் வண்டாத்
துளங்கரும் பக்தியிற் சிறந்து
மின்னுற வைத்த செங்கல்வ ராய
வித்தக மற்றிது கேண்மோ. (1)

வருமுறை யறிந்து தமிழியல் போதி
மாட்சிசால் புலமையில் வீறும்
திருவினர் போலா தருளினில் விஞ்சிச்
சிவபரஞ் சுடரொளி தரவே
மருவிய போதச் செருக்கினில் தமிழ்ப்பா
வாரியை வழங்கினார் மூவர்
உருவொளிர் பிறரும் அருளினர் ஈரா
றெனத்திரு முறைகளாய் உயர்ந்த. (2)

அத்தகு மரபை நன்கினி தாய்ந்தே
அழகனெம் ஆண்டவன் முருகன்
பத்தியிற் சிறந்தோர் அன்பினிற் பாடும்
பனுவலைத் திருமுறை யாக
வைத்துணர் வுறவே வகுப்பதற் கெண்ணி
மதிநிறை யாற்றலால் முயற்சி
ஒத்துறப் புரிதல் ஓர்ந்தனை ஐய
உனக்கமை திறத்தொடும் சாலும். (3)

பன்னிரு விழிமா மலரினன் ஈயப்
பன்னிரு திருக்கரங் கொண்டான்
தன்னிரு வனச மலரடி பதித்த
சால்புறு நெஞ்சினை நினக்குப்

பன்னிரு முறைகள் வகுப்பதற் கவன்றன்
பண்ணமை அருள் துணை யிருக்கும்
மன்னிய புகழும் புண்ணியப் பேறும்
வந்துறும் நினக்கிது திண்ணம். (4)

ஓதுறா துணர்ந்த தண்டமிழ் விரகன்
உயரருள் கொழித்ததே வாரக்
காதலும் அதன்பாற் குளித்துயர் முத்தம்
கவினுற எடுத்தணி பெறவே
மேதையின் சிறப்புத் தோற்றவே கோத்து
விடுத்திடுந் திறமும்நான் உணர்ந்தேன்
மேதினி வாழ்வும் மாட்சிசான் றிடுமால்
விளங்குநின் போர்பணி செய்தால். (5)

பணிகையும் பாட்டுப் பாடலும் நினைப்பிற்
பதிதலும் வாழ்தலும் ஒன்றைத்
துணிகையும் துணிந்து செய்தலும் தமிழில்
சூழ்சுவை நுகர்தலும் எல்லாம்
தணிகையில் வேலன் தாமரைப் பதத்தின்,
சார்வினா லெனவுளங் கொண்டு
மணிமணி யாக எழுதியே வாழும்
மாட்சிநிற் கமைந்துள தன்றோ? (6)

பதுமைபோல் பிறர்தம் செயலினிற் பிறங்கும்
பண்பொழிந் தொருதன்சீர் முயல்வால்
முழுமையை மறந்து முருகனைத் தமிழை
முதுமையா நுகர்ந்தத னாலே
புதுமையும் சுவையும் புண்ணியப் பயனும்
பொங்குறத் தங்குறும் திறலோய்
இதுமெயாம் நின்சீர் இமயமா ஓங்கும்
இறைவன் றன் திருவுள்ள மதுவே. (7)

இளமையைப் பெற்றோர் நின்பணி தன்னை
எடுத்துக்காட் டெனக்கொள்ளு வாரேல்
உளமயல் போகப் பெருகிய முயற்சி
ஊன்றலாம் பழம்புண்ணி யத்தால்

வளமைசார் தருவோர் இத்தகு முயற்சி
வளர்வுறச் செய்குவர் எனினே
மளமள வென்ன நாட்டினில் உயர்வு
மல்கிடும் முருகன்றன் அருளால். (8)

வாழ்கநின் வன்மை வாழ்கநின் னலங்கள்
வாழ்கநின் மதிவளச் செல்வம்
வாழ்கநின் தமிழ்ச்செம் புலமையைத் தணிகை
வாழ்வடி வேலவன் மாட்சி
வாழ்தரு நின் றன் உள்ளமும் வாழ்க
மலிதரு நின்றமிழ்த் தொண்டு
வாழ்கநீ நீடு மனமுடல் உரைநன்
மாட்சியுற் றோங்கியே வாழி. (9)

திருமுறை யிவற்றை உரையுடன் பதித்துச்
செந்தமிழ் நாட்டினிற் பரப்ப
மருவிய முயற்சி மேற்கொண்ட அன்னை
வடிவயில் அழகனைப் போற்றும்
திருவினர் எழிற்கல் யாணசுந் தரனார்
தேவியார் அன்புமேன் மேலும்
பெருகுற வாழ்க முருகன்பூம் பாதம்
பேணிய அடியர்கள் வாழ்க! (10)

---

குகமயம்
வெற்றிவே லுற்ற துணை

# திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம்

(இப் பாயிரம் பூர்வத்துள்ள அபியுக்தர்களாற் செய்யப்பட்டுப் புராதன பிரதிகளில் எழுதி வழங்கி வருவது.)

## 1. நூற் சிறப்பு

[1]எல்லாரும் ஞானத் தெளிஞரே? கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ? - பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி? 1

மாணிக்கம் பூண்பார்க்கு மற்றொருகல் வேண்டுமோ?
ஆணிப்பொன் கையுறுவார்க் கையுறவேன்? -பேணிப்பின்
செவ்வேல் விநோதன் திருப்புகழ்சிந் தித்திருப்பார்க்
கெவ்வேலை வேண்டும் இனி? 2

சீராந் திருப்புகழைச் செவ்வேள்மேல் அன்பாக
ஆராய்ந் துரைத்தான் அருணகிரி; - நேராக
அந்தப் புகழை அநுதினமும் ஓதாமல்
எந்தப் புகழோது வீர்? 3

அருணகிரி நாதன் அகிலதலத் துன்னைக்
கருணையினாற் பாடுங் கவிபோற் - பிரியமுற
வேறுமோர் புன்கவிகள், வேலோனே! நின் செவியில்
ஏறுமோ? என்னே இனி? 4

ஆனைமுக வற்கிளைய ஐயா! அருணகிரி
தேனனைய சொல்லான் திருப்புகழை - யானினைந்து
போற்றிடவும் நின்னைப் புகழ்ந்திடவும் பொற்கமலஞ்
சாத்திடவும் ஓதிடவும் தா. 5

---

1. "எல்லாரும் மானிடவராவரோ இப்புவியில் "என்றும் பாடம்.

" ஒருவரை மதியாது... திரிபவன். (சுந். தேவாரம்)

# உரை

## 1

(மக்கள்) எல்லாரும் ஞானத் தெளிஞர்கள் ஆவார்களோ? கேளுங்கள்! கல் என்று சொல்லப்படுவன எல்லாம் மாணிக்கக் கல் ஆகுமோ? - (அதுபோலப் பொல்லாத) கருவின் சம்பந்தமான புகழ் நூல்களைக் கேட்குமோ (காட்டு) மயில் வீரனாம் ( இசைப்பாட்டில் ஆசையுள்ள மயில் வீரனாம்) முருகவேளின் திருப்புகழைக் கேட்கும் செவி. 1

மாணிக்கக் கல்லைப் பூணும் ஒருவருக்கு வேறொரு கல் வேண்டுமோ? ஆணிப் பொன்னைக் கையில் வைத்திருப் பவர்க்குச் சந்தேகம் ஏதுக்கு ?- விருப்பத்துடன் செவ்வேல் (ஏந்தும்) விநோதனாம் முருகவேளின் திருப்புகழைச் சிந்தித்திருப்பவர்க்கு எந்த வேலைதான் இனி வேண்டி யிருக்கும்? 2

சீரான திருப்புகழைச் செவ்வேள்மேல் அன்பாக ஆராய்ந்து உரைத்தான் அருணகிரி. நேராக அந்தத் திருப்புகழை நாள்தோறும் ஓதாமல் வேறு எந்தப் புகழை (நீங்கள்) ஓதுவீர்கள்? 3

அருணகிரிநாதன் இப் பெரிய பூமியில் உன்னை (உயிர்கள் ஈடேற வேண்டும் என்னும்) கருணையன்பினாற் பாடியுள்ள திருப்புகழ்க் கவிபோல - பிரியத்துடன் வேறு புல்லிய கவிகள், வேலனே!, உனது செவியில் ஏறுமா என்ன இனிமேல்! 4

ஆனை முகவனாம் (கணபதிக்கு) இளைய ஐயனே! அருணகிரி என்னும் தேன் போன்ற சொல்லானுடைய திருப்புகழ்ப் பாடல்களை நான் நினைந்து போற்றவும் (அப் பாடல்களால்) உன்னைப் புகழவும், உனது பொன்னார் திருவடியில் அப் புகழ்ப்பாக்களைச் சமர்ப்பிக்கவும் (அல்லது) அழகிய தாமரைகளால் அப் பாடல்களைப் பூசிக்கவும், ஓதவும் (வரம்) தந்தருளுக. 5

அறுபபதறகு அரம ஆகும.

## 2. திருப்புகழ்ச் சிரவணத்தால் வேதார்த்தாதி அனைத்தும் அறியலாம்; ஆதலால் அதனையே கேட்க என்றது

வேதம்வேண் டாம் [1]சகல வித்தைவேண் டாம்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம், - ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம். 6

## 3. நூற் பயன்

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம் - மோனவீ
டேறலாம், யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினார்க் காமேஇக் கூறு. 7

ஆறுமுகந் தோன்றும் அழகியவேல் தோன் றுமவன்
ஏறுமயில் தோன்றும் எழில்தோன்றும் - சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினோர் பால். 8

## 4. அன்பர் வினவ ஆண்டவன் விடையருளியதாக மேலையதை வற்புறுத்தியது

பொருப்பது பொடிப்பட விடுத்திடுகை வேலா
இருப்பிடம் உனக்கெது எனக்கரு ளியம்பாய்;
உருக்கநல் விழுக்குலம் ஒழுக்கமில ரேனும்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினில் இருப்பாம். 9

1. சகல வித்தை - அறுபத்து நான்கு கலைஞானங்கள்.

## 2

வேதம் வேண்டியதில்லை, (அறுபத்து நான்கு) கலை ஞானங்கள் வேண்டியதில்லை, கீதமும் நாதமும் வேண்டியதில்லை, ஞான நூல் வேண்டியதில்லை; ஆதி குரு (ஆதியாம் சிவனுக்கும் குரு) என்னும் (பெரும்) புகழை அடைந்துள்ள வீரனாம் முருகவேளின் திருவடியைப் போற்றிப் புகழும் திருப்புகழைக் கேளுங்கள் தினந்தோறும். 6

## 3

ஞானம் பெறக் கூடும், நலம் பெறக் கூடும், எந்நாளும் வானத்தை அரசாளும் வரத்தைப் பெறக் கூடும்- மோன வீட்டில் ("சும்மா இருத்தல் என்னும் பெருநிலையில்) ஏறக் கூடும்; யானைக்கு இளையவனாம் முருகவேளின் திருப்புகழை ஓதுவார்க்கே ஆகும் இந்த உபதேசச் சொல். 7

ஆறுமுகம் தோன்றும், அழகிய வேல் தோன்றும், அவன் (முருகவேள்) ஏறி (யுலவும்) மயில் தோன்றும், அழகு தோன்றும்,-கோபித்து வந்த சூரனுடைய முடியைத் துணித்தெறிந்தவனாம் முருகவேளின் திருப்புகழை இப் பூமியில் (நியமமாக) ஓதினவரிடத்தே; (ஓதினவரிடத்தே ஆறுமுகம் முதலியன தோன்றும்.) 8

## 4

வினா: *(கிரௌஞ்ச) மலை பொடிபடும்படி ஏவின திருக்கை வேலனே! இருப்பிடம் உனக்கு எது? எனக்குத் தயை செய்து சொல்லியருளுக!*

விடை: *உருக்கம், நல்ல சிறந்த உயர்ந்த குலம், ஒழுக்கம் (இவை) இல்லாதவர்களாயிருந்தாலும் திருப்புகழ் படிப்பவர்களா யிருந்தால் (அவர்கள்) மனத்தினிலே நாம் வீற்றிருப் போம்.* 9

### 5. அங்ஙனம் அருளக் கேட்ட அன்பர் ஆண்டவனை நோக்கிக் கூறியதாகத் திருப்புகழ் படிப்போர் தீரங் கூறியது

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
[1] ஒருத்தரை மதிப்பதிலை உன்றனரு ளாலே
பொருப்புக மிகப்பொருது வென்றுமயில் மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெரு மாளே. 10

### 6. நூலாசிரியர் பெயரோடு நூற்பண்பும் பெயரும் உணர்த்தி அதனைத் துதிப்போர் பேறுங் கூறியது

ஓரா று மாமுகனாம் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
பேரால் அருணகிரி பேருலகில்- சீராருந்
தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவர் ஈடேறு வார். 11

வள்ளிமண வாளன் மயிலேறும் வள்ளல்தனைத்
தெள் ளுதமி ழாற்புனைந்து சீர்பெறவே- உள்ளபடி
வைப்பாம் அருணகிரி வாழ்த்துந் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார். 12

### 7. திருப்புகழ் இன்ன இன்னதற்கு இன்ன இன்னதாம் எனல்

அருணகிரி நாதர்பதி னாறா யிரமென்
றுரைசெய் திருப்புகழை யோதீர்,- பரகதிக்கஃ
தேணி; அருட்கடலுக் கேற்றம்; மனத்தளர்ச்சிக்
காணி; பிறவிக் கரம். 13

---

1. பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத்
தஞ்ச மென்றிறு மாந்திவ ளாரையும்
அஞ்சுவா ளல்லன் ஆவடு தண்டுறை
மஞ்ச னோடிவ ளாடிய மையலே. (அப்பர்)
" ஒருவரை மதியாது... திரிவேன். (சுந். தேவாரம்)

## 5

திருப்புகழ் படிப்பவர்கள் அவர்களுக்கு உண்டாகும் சிந்தைத் திடத்தாலே ஒருவரையும் மதிப்பது இல்லை, திருவருள் துணை அவர்களுக்கு இருப்பதால்;- (கிரௌஞ்ச) மலை சிதறும்படி மிகப் போர் செய்து வெற்றி கொண்டுள்ள மயில்மீது வீற்றிருந்து ஒப்பற்ற திருத்தணிகையில் நிற்கும் பெருமாளே! 10

## 6

ஒப்பற்ற சிறந்த அறுமுகனும் மேன்மை பொருந்திய மெய்ஞ் ஞான குகனுமான (பெருமாள்) பேரால் அருணகிரி (இந்தப்) பெரிய உலகில்,- சீர் நிறைந்த துதிகளாகத் துதித்துள்ள திருப்புகழைப் போற்றுபவர்கள் ஈடேறுவார்கள். 11

வள்ளி மணாளனும் மயிலேறும் வள்ளலுமாகிய (முருக வேளைத்) தெளிவுள்ள தமிழாற் பூசித்துச் சீர்பெற, உண் மையாகவே (எய்ப்பினில்) வைப்பாகி விளங்கும் (இடுக் கண் பட்ட காலையில் உதவும் பொருளாகி இலகும்) அருணகிரி (முருகவேளை) வாழ்த்தி உரைத்த திருப்பு கழைக் கற்பவர்கள் கரையேறுவார்கள். 12

## 7

அருணகிரிநாதர் (உரைத்த) பதினாறாயிரம் என்று சொல்லப் படுகின்ற திருப்புகழை ஓதுங்கள்;- திருப்புகழ் பரகதியை (அடைவதற்கு) ஏணியாகும்; அருட்கடலில் திளைப்ப தற்கு ஏற்ற மரம் ஆகும் ; மனத்தளர்ச்சி யில்லா வகை அழுத்தம் தருதற்கு ஆணியாகும்; பிறவி (வேரை) அறுப்பதற்கு அரம் ஆகும். 13

## 8. திருப்புகழ் வழிபாட்டாற் கூற்றையும் வெல்லலாம் எனக் கெடிபெற உரைத்தது

திருப்புகழைக் கற்கத் திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தஞ் செபிக்கத் -திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே, கூற்றைவென்று
கொர்ச்சிக்க லாமே கெடீ 14

## 9. திருப்புகழின் பிரபாவம்

மடங்கல் நடுங்கும் தனைச்சுடும் ஈதென்று மாதிரத்தோர்
அடங்கி நடுங்குவர் சூலா யுதமென், றசுரர்கடல்
ஒடுங்கி நடுங்குவர் வேலா யுதமென், றுரகனுங்கீழ்க்
கிடங்கில் நடுங்கும், மயிலோன் திருப்பகழ் கேட்டளவே 15

## 10. திருப்புக ழடியார் பெருமை

தருப்புகழ் வல்ல சுரர்மகன் நாயகன், சங்கரற்குக்
குருப்புகழ் வல்ல குமரேசன், சண்முகன்,
குன்றெறிந்தோன்
மருப்புகழ் வல்ல அருண கிரிப்பெயர் வள்ளல்சொன்ன
[1]திருப்புகழ் வல்லவர் சீர்பாதத் தூளிஎன் சென்னியதே.
16

**திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம் முற்றிற்று.**

உ

வேலு மயிலுந் துணை

# முருகக் கடவுள் துதி

### ஆசிரிய விருத்தம்

ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசு முகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன் றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
* ஆதியம ராவதி யமர்ந்தபெரு மாளே!

---

(பா-வே) *'ஆதியரு ணாசலம் அமர்ந்தபெரு மாளே!

1 [illegible] நூளிகொண்டு கூறுமின் [illegible]

## 8

திருப்புகழைக் கற்க, திருப்புகழைக் கேட்க, திருப்புகழைத் தினந்தோறும் செபிக்க, திருப்புகழை அருச்சிக்க முத்தி, எளிதிற் கைகூடும், யமனையும் வென்று வெற்றி முழக்கம் செய்யலாம்; இது திண்ணம் (நிச்சயம்). 14

## 9

வடவைத் தீயும் 'தன்னைச்சுடும் இது' என்று நடுங்கும்; (எந்தத்) திசையில் உள்ளோரும் (யாவரும்) இது சூலாயுதந் தானோ என்று (அச்சமுற்று) அடங்கி நடுங்குவர்; அசுரர்கள் இது வேலாயுதந்தான் என்று பயந்து கடலில் ஒளித்து ஒடுங்கி நடுங்குவர்; ஆதிசேடனும் கீழே அகழியிற் புக்கு நடுங்குவன்; (எப்போது எனில்) மயிலோன் திருப்புகழைக் கேட்டமாத்திரத்தே என்க. 15

## 10

கற்பக மரம் முதலிய மரங்களை உடையவர்கள் என்னும் புகழ் பெற்ற தேவர்களிடையே வளர்ந்த மகளாம் தேவசேனை யின் நாயகன், சங்கரனுக்கே குருமூர்த்தி என்னும் புகழைப் பெற்ற குமரேசன், ஆறுமுகன் கிரௌஞ்ச மலையைப் பிளந்தெறிந்தவன் (எனப் போற்றப்படும்) முருகவேளுக்கு உரிய புகழை ஆய வல்ல அருணகிரி என்னும் பெயரை உடைய வள்ளல் பாடியுள்ள திருப்புகழில் வல்லவர் எவரோ அவருடைய சீர் பாத தூளி என் தலை மேலதாம். 16

ஆண்மயிலில் ஏறித் திருவிளையாடல் செய்யும்
திருமுகம் ஒன்று,
சிவபிரானுக்கு அறிவுமொழியைப் போதிக்கும்
திருமுகம் ஒன்று ,
(தன் திருநாமங்களைக் )கூறி (ப் புகழும்) அடியார்களின்
வினைகளைத் தீர்க்கும் திருமுகம் ஒன்று,
(கிரௌஞ்ச) மலையை (எழுகிரியை) ஊடுருவிச் செல்லும்படி
வேலை ஏவிநின்ற திருமுகம் ஒன்று,
பகைகொண்ட சூராதியரைக் கொல்வித்த திருமுகம் ஒன்று,
வள்ளியைத் திருமணம் செய்வதற்காக வந்த
திருமுகம் ஒன்று, (இங்ஙனம்)
(நீ) ஆறு திருமுகங்களைக் கொண்ட ரகசியப் பொருளை(எனக்கு
இன்னதென) அருளவேண்டும்;

(தேவர்கள் [illegible]) ஆதி [illegible]

உ

கணபதி துணை

திருத்தணிகேசன் துணை

சிவமயம்

# விநாயகர் துதி

## 1. மலர்கொடு பணிய

கைத்தல *நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்-
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ!
கற்பகம் எனவினை கடிதேகும்;

மத்தமு மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை-
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் **மலர்கொடு** **பணிவேனே;**

முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே-
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா;

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி-
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே ! (1)

---

(பாட வேறுபாடு.) *'நிறையவல் முப்பழ மொடுபொரி'

# 1

கையிடம் நிறையப், பழம், அப்பம், அவல், பொரி (இவைகளை) வாரி யுண்ணும் யானைமுகக் கடவுளின் அடியை விரும்பிக்—

'கற்கும் அடியவர்களுடைய புத்தியில் உறைபவனே! கற்பகமே!' என(க் கூறினால்) வினைகள் விரைவில் ஓடிப்போம் (ஆதலால்);

ஊமத்தம்பூ, நிலவு (இவைகளை) அணிந்துள்ள அரனார் மகனும், மற்போருக்குத் தகத் திரண்ட புயத்தையுடைய மதயானையும்—

மத்தள (ம் போன்ற) வயிற்றை உடையவனும், உத்தமி (பார்வதியின்) மகனும் (ஆகிய கணபதியை) வாசனை அவிழ்ந்து (வீசும்) மலர்கொண்டு நான் பணிவேன்;

முத்தமிழை யெல்லாம், (மலைகளில்) முற்பட்டதான (மேரு) மலையில் முதல் முதலிற் பொருந்த எழுதின முதல்வோனே!—

மூன்று புரங்களையும் எரித்த அந்தச் சிவன் எழுந்தருளிய ரதத்தின் அச்சைப் பொடி செய்த மிக்க தீரனே!;

(வள்ளியம்மைபாற் கொண்ட காதலாகிய) அத் துயரத்தொடு (உன் தம்பியாகிய) சுப்பிரமணி நடந்த அந்தப் புனத்திடை யானையாகி (த் தோன்றி)—

அந்தக் குறமகளாம் (வள்ளியுடன்) அந்தச் சிறிய முருக வேளை அப்பொழுதே மணம் புரிவித்த பெருமாளே!

(உன்னை மட்டவிழ் மலர்கொடு பணிவேன்).

முடிபு;- கரிமுகன் அடிபேணி... அடியவர் புத்தியி லுறைபவ! கற்பகம்! என வினை...ஏகும். (ஆதலால், யான்)...அரன்மகன் ...மதயானை (ஆகிய) மத்தள வயிறனை, உத்தமி புதல்வனை...மலர்கொடு பணிவேன். (என் செய்து, எதன் பொருட்டுப் பணிவேன் எனில்), முதல்வோனே!...அதிதீரா!... பெருமாளே! (எனத் துதிசெய்து, எடுத்துக்கொண்ட துதிநூலாகிய இப்பிரபந்தம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டுப் பணிவேன் என்க.)

## 2. அருள் பெற

[1]உம்பர்தருத் தேநுமணிக் கசிவாகி-
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி;
இன்பரசத் தே[2]பருகிப் பலகாலும்-
**என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே;**

தம்பி தனக் காகவனத் தணைவோனே-
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே;
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே-
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே; (2)

## 3. அருள் மறவாமை

[3]பக்கரைவி சித்ரமணி பொற் [4]கலணை யிட்ட நடை
பட்சியெனு முக்ரதுர கமுநீபப்-
பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்;

திக்கதும திக்கவரு குக்குடமும் ரட்சைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்-
[5]செய்ப்பதியும் வைத்துயர் **திருப்புகழ்வி ருப்பமொடு**
**செப்பென எனக்கருள்கை மறவேனே;**

---

1. உம்பர்தரு-சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்னும் ஐவகைத் தெய்வத விருட்சங்கள். தேநு-காமதேனு என்னும் தெய்வப் பசு. மணி-சிந்தாமணி யென்னும் தெய்வத ரத்நம். இம்மூன்றும் தம்மை யடைந்தோர்க்கு அவர்கள் விரும்பிய பொருள்களைத் தரவல்லன.

2. பருகி-பருக, "நோக்கி-நோக்க" என்பது போல சிந்தாமணி 1989.

3. பக்கரை - அங்கவடி.

4. கலணை-கல்லணை; குதிரைச் சேணம்.

5. செய்ப் பதி - வயலூர்.

## 2

விண்ணவர் உலகிலுள்ள (கற்பக மாதிய) மரங்கள், காம தேநு, சிந்தாமணி (இவைகளைப் போல ஈதற்கு என் உள்ளம் நெகிழ்ந்து—

ஒளி (வீசும்) கடலில் (தோன்றிய) இனிய அமுதம் (போன்ற) உணர்வு (என் உள்ளத்தே) ஊறி (அதனாற் பிறக்கும்);

இன்பச் சாற்றினை (நான்) உண்ணும்படி பலமுறையும்— எனது உயிரின்மீது ஆதரவு வைத்து அருள்வாயாக;

தம்பியின் பொருட்டுக் காட்டில் அணைந்தவனே!- தந்தையை வலஞ் செய்ததால் கையில் அருளப் பெற்ற பழத்தை உடையவனே!—

அன்பர்களுக்கு வேண்டிய நிலைத்த பொருளா யுள்ளவனே!- ஐந்து கரங்களையும் ஆனை முகத்தையும் (கொண்ட) பெருமாளே!

(ஆதரவு வைத்து அருள்வாயாக)

## 3

"அங்கவடி, பேரழகான மணி. பொன் (நிறத்த) சேணம் (இவைகளைப் பூண்டு) நடக்கும் பறவையாகிய மிடுக்குள்ள (மயிலாம்) குதிரையையும், கடம்ப (மரத்தின்)—

(மலர-பக்குவமான) தக்க மலர் மாலையையும், அந்த மலை (கிரௌஞ்சம்) அழிந்தொழியும்படி அதன்மேற் பட்டு உருவிச் செல்லும்படி விட்டருளிய (திருக்) கரத்தில் (உள்ள) கூரிய வேலையும்;

திக்குகள் மதிக்கும்படி எழுந்துள்ள சேவலையும், காத்தளிக்கும் சிறிய (திரு) அடிகளையும், திரண்டுள்ள பன்னிரண்டு தோள்களையும் —

வயலூரையும் வைத்து உயர்ந்த திருப்புகழ்ப் (பாக்களை) விருப்பமொடு; சொல்லுக"— எனக் (கூறி) எனக்கு அருள் செய்ததை மறவேன்;

[1]இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை இளநீர் [2]வண்-
டெச்சில்பய றப்ப * வகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்;

மிக்க அடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு
† விக்கிநசமர்த்தனெனும் அருளாழி!-
வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
‡வித்தகம ருப்பு டைய பெருமாளே! (3)

## 4. திருவடி பெற

விடமடைசு வேலை அமரர்படை சூலம்
விசையன் விடு பாண மெனவேதான்-
விழியுமதி பார விதமுமுடை மாதர்
வினையின்விளை வேதும் அறியாதே;

கடியுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனில் மூழ்கி வறிதாய-
கயவனறி வீனன் இவனுமுயர் நீடு
**கழலிணைகள் சேர அருள்வாயே;**

---

1. இக்கு - அவரை; இக்கு - கரும்பு.

2. வண்டு எச்சில் - தேன்.

(பா - வே.) * 'வடை';

† 'விக்கினர் தமக்கிளைய முருகோனே'

‡ 'வித்தக மதிக்கரிய பெருமாளே.'

கரும்பு, அவரை, நல்ல பழங்கள், சர்க்கரை, பருப்பு, அதனுடன் நெய், எள், பொரி, அவல், துவரை, இளநீர், (வண்டின்—

எச்சில் எனப்படும்) தேன், பயறு, அப்ப வகைகள் பச்சரிசி, பிட்டு, வெள்ளரிப் பழம், (இடி) மாவு -- பல வகையன, ஒப்பற்ற (மூலம்) கிழங்குகள்;

சிறந்த உணவு (வகைகள்), கடலை (இவைகளைப்) பட்சணமாகக் கொள்ளும் ஒப்பற்ற 'விக்கின சமர்த்தர்' என்னும் அருட் கடலே!—

(அருள்) மலையே! வளைந்த சடையையும் (பினாகம் என்னும்)வில்லையும் (கொண்ட) பரமராம் அப்பர் பெற்ற திறலோனே! (யானைக்) கொம்பு உடைய பெருமாளே!

(திருப்புகழ்...செப்பென எனக்கு அருளியதை மறவேன்.)

## 4

நஞ்சு பொருந்திய கடல், அமரர் படை, சூலம், அருச்சுனன் விடும் பாணம் எனக் கூறும்படியான—

கண்களையும் மிக்க பாரவிதமான (கொங்கைகளையும்) உடைய மாதர்களின் செயல்களால் வரும் விளைவுகள் ஒன்றையும் (ஆய்ந்து) அறியாமல்;

மணம் வீசும் பாயலில் பகல் இரவு எனப் பாராமல் கலவி (யின்பத்தில்) மூழ்கிப் பயனற்ற—

கீழ்மகனும் அறிவீனனுமாகிய இவனும் (உனது) உயர்ச்சி மிக்க திருவடி யிணைகளைச் சேர அருள் புரிவாயாக;

இடையர் சிறு *பாலை திருடிகொடு போக
†இறைவன் மகள் வாய்மை அறியாதே-
இதயமிக வாடி யுடையபிளை நாத
கணபதியெ னாம முறைகூற;

அடையலவர் ஆவி வெருவ அடி கூர
அசலுமறி யாமல் அவரோட-
அகல்வதென டாசொல் எனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே! (4)

## 5. வழிபாடு மறவாமை

நினது திருவடி [1]சத்திம யிற்கொடி
நினைவு*கருதிடு புத்திகொ டுத்திட
நிறைய† அமுதுசெய் முப்பழ மப்பமு நிகழ்பால்தேன்-

நெடிய வளைமுறி இக்கொடு லட்டுகம்
நிறவில் அரிசிப ருப்பவல் எட்பொரி
நிகரில் இனிகத லிக்கனி வர்க்கமும் இளநீரும்;

மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
[2]மகர சலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக ஒற்றைம ருப்பனை வலமாக-

---

(பா - வே.) * பாவை † இறைவன் மகன் ஆண்மை.

1. சத்தி - முச்சத்தியையும் குறிக்கலாம். வள்ளி - இச்சாசத்தி; தேவசேனை - கிரியாசத்தி, வேல் - ஞானசத்தி.

2. 'திரைபொரு வேலைநீர் ஒன்று பூட்கை நெடுங் கரத் துட்புக நின்றுறிஞ்ச அந்நீரொடும் ஆமை...கொடுங்கரம் புக்கதால' - உபதேச காண்டம்-கூர்மாவதாரச் சருக்கம் (100) 489 பாட்டின் கீழ்க்குறிப்பையும் காண்க.

'குறுமுனிபோற் கடலையெலாம் வாரித்துய்த்து'-சூழியற் புராணம்.

'ஏழ்கடல் உண்ட கை காவிரி தந்த கை'-சூழியல் பிள்ளைத் தமிழ்.

மகர சலநிதி வைத்த துதிக்கரம்-கணபதி கூர்மத்தை அடக்கிய போது அவர் தமது துதிக்கையால் கடல் நீரெல்லாம் உறிஞ்சினர்.

(பா - வே.) *'கருதிர'; 'அமுதொடு';

*இடையர்கள் கொஞ்சம் பாலை (அல்லது இடையர்களின் சிறு பெண்) திருடிக்கொண்டு போக அரசன் மகள் (நடந்த) உண்மை வரலாற்றை அறியாமல்—

நெஞ்சம் மிக வாடி 'என்னை ஆண்டருளும் பிள்ளைப் பெருமானே! கணபதியே!' என்னும் நாமங்களை வரிசைப் படக் கூற, (அவள் முறையீட்டுக்கு இரங்கி அந்தப்)

பகைவர்கள் உயிர்க்கு அஞ்சும்படியாக நீ அடி எடுத்து வர (நீவரும் அடி ஒலியைக் கேட்ட அவர்கள்) அயலார் அறியாமல் ஓட,—

'போவது ஏனடா - சொல்' எனக் கூறி அவர் தம் முடிகளைத் தாக்கி (அவர்களுக்கு) அறிவு ஊட்டிய ஆனைமுகவனே!

(உன் கழலிணைகள் சேர அருள்வாயே.)

## 5

(முருகா!) உன்னுடைய திருவடி, வேல், மயில், (சேவற்) கொடி (இவைகளை) நினைவிற் கருதும் அறிவை (நான் பெற) வேண்டி, நிரம்பச் செய்யப்பட்ட அமுது, முப்பழம், அப்பம், பொருந்திய பால், தேன்—

நீண்டு வளைந்த முறுக்கு, கரும்பு, லட்டு, நிறமும் ஒளியும் உள்ள அரிசி, பருப்பு, அவல், எள், பொரி, ஒப்பற்ற இனிய வாழைப்பழ வகைகள். இளநீர் (இவைகளை)

மனமகிழ்ச்சியுடன் தொடும்(திருக்) கரத்தையும், ஒப்பில்லாத மகர மீன்கள் உள்ள கடலில் வைத்த துதிக்கையையும் உடைய, (புகழ்) வளரும் யானை முகத்து ஒற்றைக் கொம்பனை (விநாயகரை) வலம் வந்து.—

---

*இந்தப் [illegible]

மருவு மலர்புனை தொத்திர [1]சொற்கொடு
வளர்கை குழைபிடி [2]தொப்பண குட்டொடு*
வனச பரிபுர பொற்பத **அர்ச்சனை** **மறவேனே;**

தெனன தெனதென தெத்தென னப்பல
[3]சிறிய அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளும் உறுசதை பித்தநி ணக்குடல் செறிமூளை-

செரும உதரநி ரப்புசெ ருக்குடல்
நிரைய அரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே;

எனவெ துகுதுகு துத்தென ஒத்துகள்
துடிகள் இடிமிக ஒத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவில் எழுமோசை-

இகலி அலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரு நிசிசர ரைப்பெலி யிட்டருள்பெருமானே (5)

---

1. தொத்திர சொற்கொடு - தோத்திரச் சொல் கொண்டு.

2. தொப்பணம் - தோப்பணம்; தோப்புக்கரணம்.

3. சிறிய அறுபதம் - ஈ.

(பா - வே.)

* 'மகர சலநிதி வைத்த துதிக்கையர்
மதியை முடிமிசை வைத்தருள் அப்பனை-வலமாக
வருமு னிகலிய சொற்படி அக்கிரி
வளைய நொடிவரு முற்செல வுற்றிடு'

பொருந்திய பழம் கொண்டு (வழிபட்டும்), சிறப்பித்துக் கூறும் ஸ்தோத்திரச் சொற்கள் கொண்டு (துதித்தும்), தூக்கிய கைகளால் (குழைக்) காதைப் பிடித்துக் கொண்டு தோப்பணம் குட்டு (முதலியன) செய்தும், அவரது தாமரை போன்ற சிலம்பு அணிந்த அழகிய பதங்களில் அர்ச்சனை (செய்வதை) மறவேன்;

தெனன தெனதென தெத்தென-எனப் பல சிறிய ஈக்கள் மொய்க்கும் ரத்த நீர், திரண்டுள்ள சதைகள், பித்த மாமிசக் குடல், நெருங்கிய மூளை,

நிரம்பிய அவ் வயிற்றில் நிறைந்து மிக்க குடல் வரிசைகள், ஒலி-இவை நிறைந்த (போர்க்) களத்திலே திமித திமிதிமி (என ஒலிக்கும்) மத்தளம், இடக்கை என்னும் வாத்தியங்கள் செகசேசே—

என ஒலிக்க, துகு துகு துத் என்னும் ஊது குழலுடன் உடுக்கைப் பறைகள் இடியென மிக ஒத்து முழங்க, டிமுட டிமு டிமு டிட்டிம் என மேள ஓசைகள் எழ—

(ஒன்றோடொன்று) பகைத்த பேய்கள் கைப்பறை கொட்ட, ரண பயிரவி (என்னும் தேவதை போர்க்களத்தில்) சுற்றிக் கூத்தாட, எதிர்த்து வந்த அசுரர்களை அழித்தருளிய பெருமாளே!

(உனது திருவடி முதலானவற்றைக் கருதும் அறிவைப் பெறவேண்டிக் கணபதியை அர்ச்சிக்க மறவேன்)

---

சிவமயம்

## திருப்புகழ்

# நூல்

## 1. காத்தருள

1* முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை! சத்திச் சரவண!
முத்திக்கொரு வித்துக் குருபர! எனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் †திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் அடிபேணப்

---

1. 'முத்தைத் தரு' ; என்னும் இச் செய்யுள் அருணகிரிநாதர் ஆதியில் அருளிச் செய்ததாக ஆன்றோர் வரைந்து வழங்கிவருதலின் முதலில் வைக்கப்பட்டது.

(பா - வே.) * 'முத்தித்'; ' பத்தி தரு முத்திநகை அத்தி இறைவா' என வரும் திருவிரிஞ்சைப் பிள்ளைத் தமிழும், "முத்தித் திருவென்னும் முன்பதினா றாயிரமாம் பத்தித் திருப்புகழைப் பாடுங்காண்" என வரும் தணிகையுலாவும் ஈண்டுக் குறிக்கத்தக்கன; (தேவசேனை 'முத்திதரு மாது' என்பதற்கு 'அமுதத் தெய்வானை திருமுத்தி மாது 'ஆரிய கேவலி' என வரும் திருப்புகழ் (764, 918 ஆதாரமாகும்.)

† 'திடுபொருள்!';'இங்கே பொருள் என்பது விளி; பரமற்குக் கற்பித்திடு பொருளே! பச்சைப்புயல் மெச்சத்தகு பொருளே! நீ [illegible] 'சித்தருள்வதும் ஒருநாளோ?' எனப் பொருள் கொள்ள வேண்டும்.

# 1

[1]முத்துப்போன்ற வரிசையாய் (விளங்கி) முத்திச் செல்வத்தை அளிக்கும் பற்களையுடைய யானைக்கு (தேவசேனைக்கு) இறைவ! சத்திவேல் (ஏந்திய) சரவண! முத்திக்கு ஒரு வித்தே! குருபரனே! என ஓதிநின்ற—

முக்கண் கொண்ட பரமனுக்கு வேதத்தில் முற்பட்டு நிற்கும் பிரணவத்தைக் கற்பித்துப், பிரம விட்ணுக்களாம் இருவரும் முப்பத்து மூன்று வகைத் தேவர்களும் (உனது) திருவடியை(ப் போற்றி) விரும்ப,

(அவுணருடன் போர் செய்ய வல்ல பெருமானே!)

---

*1.* முருகவேள் அடி எடுத்துக் கொடுக்கப் பாடிய பாடல் இது.

"அருணகிரிநாதர் அருணை...வடவாசலிற் பயில-'பத்திதரு முத்தி நகை அத்தியிறைவா' எனப் பாடென்று சொல்லி"- திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்.

"அருணகிரி நாதரையும்...கவி சொல் என்றே அடி எடுத்துக் கொடுத்தவன் கனிவாயின் முத்தம் அருளே" - சேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்.

இப்பாடலின் முற்பாதியின் பொருளும் சொல்லும் 'முத்து நவரத்ன'' என்னும் 971 ஆம் பாடலிலுங் காணக் கிடக்கின்றன.

இப் பாடலின் முதலடியை வெண்பாவில் அமைத்துப் பாடுக என்ற போது **மாம்பழக் கவிச் சிங்கம்** பாடிய வெண்பா;-

"வரமுதவிக் காக்கும் மனமே! வெண் சோதி

பரவியமுத் தைத்தரு பத்தித்-திருநகையத்

திக்கிறை சத்திச் சரவணமுத் திக்கொருவித்

துக்குருப ரனென்னவோ து."

பத்துத்தலை தத்தக் கணை [1]தொடு
ஒற்றைக்[2] கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில் இரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்!
**பட்சத்தொடு ரட்சித் தருள்வதும் ஒருநாளே?**

தித்தித்தெய ஒத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொட்கந டிக்கக் கழுகொடு கழுதாடத்

திக்குப்பரி அட்டப் பயிரவர்[3]
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் த்ரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமாளே! (1)

---

1. 'தொட்டு' எனற்பாலது, "தொடு" எனத் தொகுக்கப்பட்டது.

2. கிரி மத்தைப் பொருது - மந்தரகிரியாகிய மத்தைக் கொண்டு (திருப்பாற்கடலைக்) கடைந்து.

3. அட்ட பயிரவர் - 'அசிதாங்கன், காபாலி, சண்டன், உருரு, குரோதன், சங்காரன், பீடணன், உன்மத்தன்'-சீகாழிப் புராணம், கடவுள் வாழ்த்து. 17.

(இராவணனுடைய) பத்துத் தலைகளும் சிதறும்படி அம்பை ஏவியும் (மந்தரம் என்னும்) ஒரு மலையை மத்தாக நட்டுக் (கடலைக்) கலக்கியும், ஒரு பட்டப் பகலை வட்ட வடிவுள்ள (தனது) சக்கரங் கொண்டு இரவாக்கியும்,

பார்த்தனுடைய (அருச்சுனனுடைய) தேரை நடத்தின பச்சை மேகம் (போன்ற திருமால்) மெச்சத் தகுந்த பொருளே! (நீ என்மீது) அன்பு வைத்து (என்னைக்) காத்தருளும் ஒரு (நல்ல) நாளும் உண்டோ?

'தித்தித்தெய' என்னும் தாளத்துக்கு ஒத்த வகையிற் சிலம்பணிந்த நடனப் பதத்தை வைத்துப் பயிரவி திக்குகளிற் சுழன்று நடிக்கவும், கழுகுடன் பேய்கள் ஆடவும்,

திக்குகளைக் காக்கும் அட்ட பயிரவர்கள் தொக்குத் தொகு என வரும் அழகிய மண்டலக் கூத்தை ஆடித் திரிகடக என ஓதவும்,

கூட்டமாகப் பறைகள் கொட்டவும், (போர்க்) களத்தில் 'குக்குக் குகு' 'குத்திப் புதை' 'புக்குப் பிடி' என்று (ஒலி செய்து) கிழக் கோட்டான்கள்—

வட்டமிட்டெழவும், நட்பை ஒழித்து, அசுரரை வெட்டிப் பலியிட்டுக் குலகிரியாகிய (கிரௌஞ்ச மலையைக்) குத்துப் படத் தாக்கிப் போர் செய்ய வல்ல பெருமாளே!

*(நீ என்னைப் பட்சத்தொடும் ரட்சித்தருளும் ஒருநாளும் உண்டோ ?)*

*முடிபு:- அத்திக் கிறை!...சரவண...குருபர! என ஓதும் பரமற்கு... கற்பித்து, இருவரும் ... அமரரும் அடி பேண, பயிரவி நடிக்க... கழுது ஆட... அட்ட பயிரவர்... ஓத, பறை கொட்ட,... கூகை புக்குப் பிடியென, அவுணரை வெட்டிப் பலியிட்டு...கிரி குத்துப்பட...பொரவல பெருமாளே!...தலை தத்தக் கணைதொட்டு...கிரிமத்தைப் பொருது...பகல்...இரவாக ...இரதத்தைக் கடவிய பச்சைப்புயல் மெச்சத்தகு பொருளே! (நீ எளியேனை) ரட்சித்தருளும் ஒருநாளும் உளதோ?*

# முருகக் கடவுளின் முக்கிய திருப்பதிகள் ஆறனுள்

முதல் திருப்பதி

## திருப்பரங்குன்றம்

(மதுரைக்குத் தென்மேற்கு 4-கல். சம்பந்த சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவர்களுடைய பாடல் பெற்றது. முருகக் கடவுள் தெய்வயானையம்மையை மணந்த தலம். தீர்த்தம் - சரவணப் பொய்கை. மலைவலம் வரலாம். நக்கீரதேவர் பூதத்தாற் குகையில் அடைக்கப்பட, அவர் திருமுருகாற்றுப்படை பாடி வேலாயுதத்தின் உதவியாற் குகையினின்றும் வெளிவந்த அரும்பதி. நிரம்பவழகியர் பாடிய தல புராணம் ஒன்றுளது.

705, 805 ஆம் பாடல்களும் பாட வேற்றுமையின்படி இத்தலத்துக்கு உரியனவாம்.)

## 2. பாவம் ஒழிய

கனகந்திரள் கின்றபெ ருங்கிரி
தனில்வந்துத கன் தகன் என்றிடு
கதிர்மிஞ்சிய செண்டைஎ றிந்திடு கதியோனே!
கடமிஞ்சி அநந்தவி தம்புணர்
கவளந்தனை உண்டுவ ளர்ந்திடு
[1]கரியின் றுணை என்றுபி றந்திடு முருகோனே!

[2]பனகந்துயில் கின்றதி றம்புனை
கடல்முன்பு கடைந்தப ரம்பரர்
படரும்புயல் [3] என்றவர் அன்புகொள் மருகோனே!
பல துன்பம்உ ழன் றுக லங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவமின்று கழிந்திட வந்தருள் புரிவாயே;

---

1. கரி - கணபதி. 2. பனகம் - பன்னகம்; பாம்பு
[illegible]

# 2

பொன் திரண்டுள்ள பெரிய மலையாகிய மேருமலையை 'தகன் தகன்' என்று ஒளி மிக (வீசும்) [1]செண்டை எறிந்து (அடித்த) திறலோனே!

மதம் மிக்குப் பல வகையிற் புணர்வதும், கவளமாக உண்டு வளருவதுமான கரி (உருவங்கொண்ட கணபதி)யின் துணைவராகத் (தம்பியாகப்) பிறந்த முருகோனே!

பாம்பின்மீது துயில்கின்ற திறம் வாய்ந்தவரும் கடலை முன்பு கடைந்தவருமான பரம்பொருளும் பரந்த மேக (நிறத்தவருமான) திருமால் அன்புகொள்ளும் மருகனே!

பல துன்பங்களிற் சுழற்சியுண்டு கலங்கிய சிறியனும், புலையனும், கொலைஞனுமான நான் செய்த பாவமெல்லாம் இன்றோடு கழிய வந்தருள் புரிதி;

---

1. நாட்டில் மழையிலாமையால் உயிர்கள் வருந்துவதைக் கண்டு உக்கிர பாண்டியன் (முருகன் கூறு) வருந்த அவன் மகிழும்படி சொக்கநாதர் அவன் கனவில் தோன்றி "நாம் முன்பு உனக்குத் தந்த செண்டு கொண்டு மேரு மலையை அடித்தால் அது உனக்கு வேண்டிய பொன்னை உதவும்" எனப், பாண்டியன் அவ்வாறே சென்று மேருவைச் செண்டாலடித்துப் பொன் பெற்ற திருவிளையாடல் இங்குக் குறிக்கப்பட்டுள்ளது.

திருவிளையாடற் புராணம் — 15 ஆவது மேருவைச் செண்டால் அடித்த திருவிளையாடல்.

செண்டு - தலைப்பு வளைந்த பிரம்பு போன்ற கருவி; இதன் விவரத்தை டாக்டர் உ.வே. சாமிநாதையர் எழுதியுள்ள நினைவு மஞ்சரி முதற்பாகம் பக்கம் 29-36-ல் பார்க்க

..னகன்பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட இன்புடன்
அழலுந்தந குந்திறல் கொண்டவர் புதல்வோனே!
அடல்வந்துமு ழங்கியி டும்பறை
டுடுடுண்டுடு டுண்டுடு டுண்டென
அதிர்கின்றிட அண்டநெ ரிந்திட வருசூரர்

மனமுந்தழல் சென்றிட அன்றவர்
உடலுங்குட லுங்கிழி கொண்டிட
மயில்[1] வென் றனில் வந்தரு ளுங்கள் பெரியோனே!
மதியுங்கதி ருந்தட வும்படி
உயர்கின்றவ னங்கள்பொ ருந்திய
வளமொன்றுப **ரங்கிரி** வந்தருள் பெருமாளே ! (2)

## 3. திருவடி பெற

சருவும்படி [2]வந்தனன் இங்கித
மதனின் றிட அம்புலி யுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர் கண்களின் வசமாகிச்
சயிலங்கொளு மன்றல்பொ ருந்திய
பொழிலின் பயில் தென்றலும் ஒன்றிய
தடவஞ்சுனை துன்றியெ ழுந்திட திறமாவே

இரவும் பகல் அந்தியு நின்றிடு
குயில்வந்திசை தெந்தன என்றிட
இருகண்கள்து யின்றிட லின் றியும் அயர்வாகி
இவணெஞ்சு[3]ப தன்பதன் எ ன்றிட
மயல்கொண்டுவ ருந்திய வஞ்சகன்
இனியுன் றன்மலர்ந்தில **கும்பதம்** **அடைவேனோ;**

---

1. வென் - முதுகு.

2. வந்தனன் என்பது வந்து என்னும் பொருளைத் தரும் முற்றெச்சம்.

3. பதன்பத னென்றிட - பதைபதைக்க.

*அனகன் (பாவமிலான் - தூயன்) என்னும் பெயர் (வாய்ந்தவனும்), நின்று உருண்டு திரியும் திரி (முப்)புரங்களையும் வெல்லும்படி இன்ப நிலையில் (இருந்தே) தீ வெளிப்படச் சிரித்த திறல் கொண்டவருமான (சிவனின்) புதல்வனே!*

*வலிமையுடன் முழங்குகின்ற பறை டுடுடுண்டென ஒலிக்க, அதிர்ந்த அண்டங்கள் நெரிந்து போமாறு வந்த சூரர் (தம்) —*

*மனத்தில் எரி பாயவும் , அப்போது அவர் உடலும் குடலும் கிழிபடவும் மயில் முதுகினில் (ஏறி) வந்தருளிய பெருமை வாய்ந்த பெரியோனே!*

*திங்களும் ஞாயிறும் (சந்திரனும் சூரியனும்) தடவிச் செல்லும் அளவுக்கு உயர்ந்துள்ள சோலைகள் பொருந்தியுள்ள வளம் பொருந்திய (திருப்)* ***பரங்குன்றத்தில்*** *எழுந்தருளியுள்ள பெருமாளே!*

*(என் பாவம் ஒழிய வந்தருள் புரிதி.)*

## 3

*போராடுங் கருத்துடன் வந்து மன்மதன் நிற்க, நிலவு(ம்) சுடுகின்ற தீயைக் கொள்ள (தீயை வீச) மங்கையர்களின் கண்களில் வசப்பட்டு,*

*மலை(ச் சாரலில்) உள்ள மணம் பொருந்திய பொழிலிற் பயின்றுவரும் தென்றற் காற்று (அங்குள்ள) அகன்ற அழகிய சுனை (நீரிற்) படிந்து வலிவுடனே எழ,*

*இரவும் பகலும் அந்தி வேளையும் உள்ள குயில் வந்து இசையைத் 'தெந்தன' எனப் பாட, (எனது) இரண்டு கண்களும் துயிலுதல் இன்றிக், களைத்துப்போய்,*

*இங்கே நெஞ்சு பதை பதைக்க (மங்கையர்பால்) மயல் கொண்டு வருந்திய வஞ்சகனாகிய (நான்) இனி உனது மலர்ந்து விளங்கும் திருவடியை அடைவேனோ!;*

திருவொன்றிவி ளங்கிய [1]அண்டர்கள்
மனையின் தயிர் உண்டவன் எண்டிசை
திகழும்புகழ் கொண்டவன்[2] வண்டமிழ்பயில்வோர்பின்

திரிகின்றவன் மஞ்சுநி றம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
செயதுங்கமு குந்தன்ம கிழ்ந்தருள் மருகோனே!

மருவுங்கடல் துந்[3]துமியுங்குட
முழவங்கள்கு மின்குமின் என்றிட
வளமொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே!

மதியுங்கதி ரும்புய லுந்தின
மறுகும்படி அண்டம் இலங்கிட
வளர்கின்றப ரங்கிரி வந்தருள் பெருமாளே! (3)

## 4. கலவியில் மகிழ்தல் தவிர

அருக்கு மங்கையர் மலரடி வருடியெ
கருத்த றிந்துபின் அரைதனில் உடைதனை
அவிழ்த்தும் அங்குள அரசிலை தடவியும்
இருதோளுற்

1. அண்டர்கள்-இடையர்கள்.

2. வண்டமிழ் பயில்வோர்பின் திரிகின்றவன் என்றது.
"கணிகண்ணன் செல்கின்றான் காமரூபூங் கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம் - துணிவொன்றிச்
செந்நாப் புலவோன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"

என்ற திருமழிசையாழ்வார் பின் சென்றதை.

3. "துந்துபியொடு [illegible] முழா நீர் மகிழ்வீர்"- தேவாரம்:
[illegible]

செல்வம் பொருந்தி விளங்கிய இடையர்களின் மனையிலிருந்த தயிரை உண்டவனும், எட்டுத் திக்கும் விளங்கும் புகழ் கொண்டவனும், வளவிய தமிழைப் பயில்வோர் பின்னே—

திரிகின்றவனும், மேக நிறம் கொண்டவனும், மிக்க திறல் கொண்டு வெல்லும் வலிமை வாய்ந்தவனும், வெற்றியும் தூய்மையும் கொண்டவனுமான திருமால் மகிழும் மருகனே!

பொருந்திய கடல் (போலத்) துந்துமி(பேரிகை) வாத்தியமும் குடமுழவு (வாத்தியமும்) " குமின் குமின்" என ஒலி செய்ய வளம் பொருந்திய [1]**திருச்செந்தூரில்** வந்தெழுந் தருளியுள்ள முருகனே !

திங்களும் ஞாயிறும் (சந்திரனும் சூரியனும்) மேகமும் நாள் தோறும் (செல்வதற்கு வழி தடைப்பட்டு) மயங்கும்படி, அண்டம் விளங்க, வளர்கின்ற **திருப்பரங்குன்றத்தில்** எழுந்தருளியுள்ள பெருமாளே!

(பதம் அடைவேனோ)

## 4

அருமை வாய்ந்த மங்கையர்களின் மலர் போன்ற அடிகளை வருடியும் (பிடித்தும், அவர்களுடைய) கருத்தை அறிந்த பின்பு அரையில் உள்ள உடையை அவிழ்த்தும் அங்குள்ள அரசிலை (போன்ற உறுப்பைத் தடவியும்) அவர் தம் இரண்டு தோள்களிற் பொருந்தி—

---

1. திருச்செந்தூரில் வந்து எழுந்தருளினது - சூரனை வதைக்க முருகவேள் எழுந்தருளி வந்து திருந்செந்தூரில் தங்கினதைக் குறிக்கும்; "வேலுடைய வள்ளல்... செந்திமா நகரம் புக்கான்" (கந்த புராணம், திருச்செந்திப் படலம் - க). "விசும்பாறாக விரை செலன் முன்னி...சீர் அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே " (திருமுருகாற்றுப்படை ).

றணைத்தும் அங்கையின் அடிதொறும் நகமெழ
உதட்டை மென்றுபல் இடுகுறி களுமிட
அடிக்க ளந்தனில் மயில்குயில் புறவென மிகவாய்விட்

டுருக்கும் அங்கியின் மெழுகென உருகிய
சிரத்தை மிஞ்சிடும் அநுபவம் உறுபலம்
உறக்கை யின்கனி நிகரென இலகிய
முலைமேல்வீழ்ந்

துருக்க லங்கிமெய் உருகிட அமுதுகு
பெருத்த உந்தியின் முழுகிமெ யுணர்வற
உழைத்தி டுங்கன **கலவியை மகிழ்வது தவிர்வேனோ**

இருக்கு மந்திரம் [1]எழுவகை முநிபெற
உரைத்த சம்ப்ரம சரவண பவகுக
இதத்த இங்கிதம் இலகிய அறுமுக எழில்வேளென்

றிலக்க ணங்களும் இயலிசை களுமிக
விரிக்கும் அம்பல மதுரித கவிதனை
இயற்று செந்தமிழ் விதமொடு புயமிசை
புனைவோனே!

செருக்கும் அம்பல மிசைதனில் அசைவுற
நடித்த சங்கரர் வழிவழி அடியவர்
திருக்கு ருந்தடி அருள்பெற அருளிய குருநாதர்

திருக்கு ழந்தையு மெனஅவர் வழிபடு
குருக்க ளின்திற மெனவரு பெரியவ
திருப்ப **ரங்கிரி** தனிலுறை சரவண
பெருமாளே! (4)

---

1. எழுவகை முனி - வசிட்டர் முதலிய சப்த ரிடிகள்.

அணைத்தும், அங்கையின் அடிப்பாகந்தோறும் நகக் குறி எழ,உதட்டை மென்று பற்களால் குறிகள் இட, அடி நெஞ்சில் நின்றும் மயில் குயில் புறாப் போன்று மிக வாய்விட்டு (ஒலி எழ),

உருக்க வல்ல நெருப்பிலிட்ட மெழுகு போல உருகிய ஊக்கம் மிக்க அனுபவத்தால் வருகின்ற பயன்களைப் பெற, கையில் உள்ள பழம் போல விளங்கிய முலைமேல் வீழ்ந்து,

உருவம் கலங்கி, உடல் உருக, அமுதம் பெருகும் பெருத்த உந்தி (த் தடத்தில்) முழுகி, மெய் உணர்வு அற்றுப்போகும் வண்ணம் உழைக்கின்ற பெருத்த கலவி (யின்பத்தில்) மகிழ்வதை விட்டொழியேனோ?

"இருக்கு (வேத) மந்திரத்தை எழுவகை முநிவர்களும், (சப்தரிடிகளும்) அறியும்படி உரைத்த சிறப்பு வாய்ந்தவனே! சரவணபவனே! குகனே! இதம் தருவதும் இங்கிதம் (இனிமை) தருவதுமாய் விளங்கும் அறுமுகங் கொண்ட அழகிய வேளே!" என்று அமைத்து—

இலக்கணங்கள் (பொருந்த) இயற்றமிழாலும் இசைத் தமிழாலும் விரித்துரைக்கும் அழகிய பல மதுரமிக்க கவிகளாக இயற்றப்பட்ட செந்தமிழை வகைவகையாகத் (திருப்)புயத்தில் (மாலையாக) அணிபவனே!

களிப்புடன் (திரு) அம்பலத்தின் மீது அசைந்து (கூத்து) ஆடும் சங்கரரும், (தமக்கு) வழிவழி அடியவராம் (மாணிக்க வாசகருக்குத் திருப்பெருந்துறையில்) திருக்குருந்த மரத்து அடியில் அருள்பெறும் வண்ணம் அருள் செய்த குருநாதரும் (ஆகிய சிவபிரானது)—

திருக்குழந்தை என்ற (நிலையிலும்), அந்தச் சிவபிரானே வழிபட்டு நிற்கும் குருமூர்த்தி என்னும் பெருநிலையிலும் எழுந்தருளியுள்ள பெரியோனே! திருப்பரங்குன்றத்தில் உறைகின்ற சரவண (மூர்த்தியே, பெருமாளே!)

(கலவியில் மகிழ்வது தவிர்வேனோ?)

## 5. காலன் வரும்போது காட்சி பெற

உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடுன் அடியிணை
உறப்ப ணிந்திலன் ஒருதவ மிலனுன தருள்மாறா

உளத்து ளன்பினர் உறைவிடம் அறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும் வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன்
மலைபோலே

கனைத்தெ ழும்பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின மறலிதன் உழையினர்
கதித்த டர்ந்தெறி கயிறடு கதைகொடு பொருபோதே

கலக்கு றுஞ்செயல் ஒழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தில் என் பய மறமயில் முதுகினில் வருவாயே

வினைத்த லந்தனில் அலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெய் உகுதசை கழுகுண
விரித்த குஞ்சியர் எனுமவு ணரை அமர் புரிவேலா!

மிகுத்த பண்பயில் குயில்மொழி அழகிய
கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன ம்ருகமத புயவரை உடையோனே!

## 5

(நான்) உன்னைத் தினந்தோறும் தொழுவதும் இல்லை; உன்னுடைய தன்மைகளை (எடுத்து) உரைப்பதும் இல்லை; பல மலர் கொண்டு உன் அடியிணை பொருந்தப் பணிவதும் இல்லை; ஒரு வகையான தவமும் (செய்தேன்) இல்லை; உன்னுடைய அருள் நீங்காத —

உள்ளத்தை உள்ள அன்பர்கள் உறையும் இடத்தை அறிகின்றதும் இல்லை; விருப்பத்தோடு உன் மலையை வலம் வருகின்றதும் இல்லை; மகிழ்ச்சியுடன் உன் புகழைத் துதிக்க விருப்பங் கொள்வதும் இல்லை; மலைபோலத் (தோன்றிக்) —

கனைத்துக் கொண்டு வருகின்ற எருமையின் கழுத்தின்மீது வருகின்ற கரிய நிறமும், கொடுங்கோபமுமுள்ள யமனிடம் உள்ளவர்கள் (என்முன்) தோன்றி நெருங்கி எறிகின்ற கயிறு கொண்டும் வருத்தும் கதை கொண்டும் (என்னுடன்) போர் செய்கின்ற போது—

கலக்கமுறுஞ் செயலும், ஓய்தலின்றி அழிவுறும் கருத்தும் நைந்துபோய்(நான்) துன்புறும்போது ஒரு கண அளவில், என் பயம் நீங்க மயில் முதுகினில் (நீ) வருவாயாக;

போர்க்களத்தில் பேய்கள் கூத்தாடுவதால் ஊன் (மாமிசம்) உடைந்து (பிணங்களின்) உடலினின்றும் சிதறச் சிதறின மாமிசத்தைக் கழுகுகள் உண்ண, 'விரித்த தலைமயிரை உடையவர்', என்னும் அசுரர்களோடு போர் புரிந்த வேலனே!

மிக்க பண்களைப் பயிலும் குயிலின் மொழி போன்ற மொழியை உடையாளும் அழகிய மலைநிலத்துப் பெண்ணுமாகிய (வள்ளியின்) குங்குமம் அணிந்த முலைமீது அழுந்திப் படும் நறுமணங் கலந்த சந்தனமும் கடப்பமும் (அணிந்த) [illegible] உடைய பெருமாளே!

தினத்தி னஞ்சதுர் மறைமுநி முறைகொடு
புனற்சொரிந்தலர் பொதியவி னவரொடு
சினத்தை நிந்தனை செயுமுநி வரர்தொழ
மகிழ்வோனே

தெனத்தெ னந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (5)

## 6. பொதுமகளிரால் வரும் துயரற

கறுக்கும் அஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கி நெஞ்சற எறிதரு பொழுதொரு
கனிக்குள் இன்சுவை அமுதுகும் ஒருசிறு நகையாலே

[1]களக்கொ ழுங்கலி வலைகொடு விசிறியெ
மனைக்கெ ழுந்திரும் எனமனம் உருகஒர்
கவற்சி கொண்டிட மனைதனில் அழகொடு
கொடுபோகி

நறைத்த பஞ்சணை மிசையினில் மனமுற
அணைத்[2]த கந்தனில் இணைமுலை எதிர்பொர
நகத்த ழுந்திட அமுதிதழ் பருகியு மிடறூடே

நடித்தெ ழுங்குரல் குமுகுமு குமுவென
இசைத்து நன்கொடு மனமது மறுகிட
**நழுப்பு நஞ்சன சிறுமிகள் துயரற அருள்வாயே**

---

1. களக் கொழுங் கலி - வளமான கண்டத் தொனி.

2. ஆகம் என்பது அகம் எனத் திரிந்தது; ஆகம் - மார்பு.

தினந்தோறும் நால்வேதமும் வல்ல [1]முநி (பிரமன்) விதிப்படி நீராட்டிப் பூ நிறைய இட, விண்ணவரும், சினத்தை நிந்தித்து விலக்கின (வெகுளியை வென்ற) [2]முநிவர்களும் தொழ மகிழ்பவனே!

'தெனத் தெனத்தன' என்று கோடுகள் உள்ள (அல்லது இசை பாடும்) வண்டுகள் தேனைத் தெவிட்டுமளவுக்கு ஆசையுடன் உண்ணும் உயர்ந்த பொழில்(கள்) விளங்கும் **திருப்பரங்குன்றத்தில் உறைந்தருளும் சரவண மூர்த்தியே! பெருமாளே!**

*(மறலிதன் உழையினர் பொருபோது என் பயமற மயில் முதுகினில் வருவாயே!)*

## 6

கரிய மை(யிட்ட) விழியிணையாம் வேல் கொண்டு நெருக்கி நெஞ்சம் அழியும்படி எறியும்பொழுது, ஒரு பழச் சுவையையும் அமுதத்தையும் கக்குகின்ற ஒப்பற்ற புன்னகையாலே —

கழுத்தில் (நின்று எழும்) வளமான ஒலியெனும் வலையை வீசியே 'வீட்டுக்கு எழுந்திருங்கள்' — என்று (கூறி) மன முருகும்படியாகவும் ஒரு கவலை கொள்ளும்படியாகவும் வீட்டுக்குள் அழகாக அழைத்துக்கொண்டு போய்,

மணந் தோய்ந்த பஞ்சணையின் மேலே மணம் பொருந்த அணைத்து மார்பில் முலையினை எதிர்பொர, நகம் அழுந்த, இதழமுதைப் பருகியும், கண்டத்தூடே—

நடித்து எழுகின்ற குரல் 'குமு குமு குமு' என ஒலிசெய்து நன்றாக, மனம் கலங்கும்படி பசப்பி, மயக்கும் விடம் போன்ற சிறுமிகளால் (வரும்) துயர் நீங்க அருள்வாயே;

---

1. அருநெறிய மறை வல்ல முனி- தேவாரம்: சம்பந்தர் பிரமபுரம் I - *1*-கக.

2. 'அருமா மறை வல்ல முனிவன்' - தேவாரம்: சம்பந்தர் சிக்கல் II.-*8* - *9*.

நிறைத்த தெண்டிரை மொகுமொகு மொகுவென
உரத்த [1]கஞ்சுகி முடிநெறு நெறுவென
நிறைத்த அண்டமு கடுகிடு கிடுவென வரைபோலும்

நிலத்த திண்கழல் நிசிசர ருரமொடு
சிரக்கொ டுங்குவை மலைபுரை தரஇரு
நிணக்கு ழம்பொடு குருதிகள் சொரிதர அடுதீரா!

திறற்க ருங்குழல் உமையவள் அருளுறு
புழைக்கை தண்கட கயமுக மிகவுள
சிவக்கொ ழுந்தன கணபதி யுடன்வரும்
இளையோனே!

சினத்தொ டுஞ்சமன் உதைபட நிறுவிய
பரற்கு ளன்புறு புதல்வநன் மணியுகு
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (6)

## 7. அருள் பெற

வடத்தை மிஞ்சிய புளகித வனமுலை
தனைத்தி றந்தெதிர் வருமிளை ஞர்களுயிர்
மயக்கி ஐங்கணை மதனனை ஒரு அரு மையினாலே

[2]வருத்தி வஞ்சக நினைவொடு மெலமெல
நகைத்து நண்பொடு [3]வருமிரும் எனஉரை
வழுத்தி அங்கவ ரொடுசரு வியுமுடல் தொடுபோதே

---

1. கஞ்சுகி - பாம்பு; அதாவது, ஆதிசேடன்.

2. [illegible]

நிறைகடல் 'மொகு மொகு மொகு' எனவும்,வலிமை பொருந்திய பாம்பின் (ஆதிசேடனது) முடி 'நெறு நெறு' எனவும், நிறைந்த அண்ட முகடு 'கிடு கிடு' எனவும் மலையை யொத்து —

உயர்ந்த திண்ணிய கழல்களைக் கொண்ட அவுணர் களுடைய மார்பும் தலைகளின் கொடிய கூட்டமும், மலைக்கு ஒப்பாகப் பெரிய மாமிசக் குழம்புடன் ரத்தத்தைச் சொரிய வெட்டித் துணித்த தீரனே!

திறலும் (ஒளியும்) கருமையுங் கொண்ட கூந்தலமைந்த உமையவள் பெற்றருளிய தொளைக் கையையும் குளிர்ந்த மதமுள்ள யானை முகத்தையும் மிகக் கொண்டுள்ள சிவக்கொழுந்து போன்ற கணபதியுடன் வரும் (கணபதிக் குத் தம்பியாக வரும்) இளையோனே!

கோபத்துடன் யமனை உதைபட வைத்த சிவபிரானது உள்ளம் அன்புறும் புதல்வனே! நல்ல மணிகளைச் சிதறும் திருப்பரங்குன்றத்தில் உறைகின்ற சரவண மூர்த்தியே! பெருமாளே!

*(சிறுமிகளால் வரும் துயரற அருள்வாயே.)*

## 7

(அணிந்துள்ள) மணிவடத்தினும் மேலோங்கிப் புளகிதங் கொண்ட அழகிய முலையைத் திறந்து (காட்டி) எதிர் வரும் இளைஞர்களுடைய உயிரை மயக்கி ஐந்துவகை மலர்ப் பாணங்களை உடைய மன்மதனை ஒப்பற்ற அருமை வகையால் —

வருவித்து வஞ்சகமான எண்ணத்துடன் மெல்ல மெல்ல நகைத்து நண்பு காட்டி 'வாரும் இரும்' என உரை பேசி அங்கு அவர்களுடன் கொஞ்சிக் குலவி உடைத்

விடத்தை வென்றிடு படைவிழி கொடுமுள
மருட்டி வண்பொருள் கவர்பொழு தினில்மயல்
விருப்பெ னும்படி மடிமிசை யினில்விழு தொழில்தானே?
விளைத்தி டும்பல கணிகையர் தமது பொய்
மனத்தை நம்பிய சிறியனை வெறியனை
விரைப்ப தந்தனில் **அருள்பெற** நினைகுவ துளதோதான்!

குடத்தை வென் றிரு கிரியென எழில்தள
தளத்த கொங்கைகள் மணிவடம் அணிசிறு
குறக்க ரும்பின்மெய் துவள் புயன் எனவரு வடிவேலா!
குரைக்க ருங்கடல் திருவணை எனமுனம்
அடைத்தி லங்கையின் அதிபதி நிசிசரர்
குலத்தொ டும்பட ஒருகணை விடுமரி மருகோனே!

திடத்தெ திர்ந்திடும் அசுரர்கள் பொடிபட
அயிற்கொ டும்படை விடுசர வணபவ
திறற்கு கன்குரு பரனென வருமொரு முருகோனே!
செழித்த தண்டலை தொறுமில கியகுட
வளைக்கு லந்தரு தரளமு மிகுமுயர்
திருப்ப **ரங்கிரி** வளநகர் மருவிய பெருமாளே ! (7)

## 8. அருள் பெற

[1]கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப் பயின்று
கடையில்வந்து தித்துக்கு ழந்தை வடிவாகிக்

கழுவியங்கெ டுத்துச்சு ரந்த
முலை [2]யருந்து விக்கக்கி டந்து
கதறியங்கை கொட்டித்த வழ்ந்து நடமாடி

1. இப் பாடலின் பிற்பாதி இராமாயண வரலாறு கூறும்.

2. அருந்துவிக்க - அருத்த; ஊட்ட

விடத்தையும் வெல்லும் படை போன்ற விழிகொண்டு, உள்ளத்தை மருட்டி, வளமார்ந்த பொருள் (எல்லாம்) கவரும்போது, உங்கள்மீது எனக்கு மோகம் விருப்பம் என்னும்படியான (ஆசை மொழிகளைக் கூறி) மடிமீது விழுகின்ற தொழில்களையே —

(நடித்து) விளைக்கின்ற பல பொதுமாதர்களின் பொய் மனத்தை நம்பிய சிறியனை, வெறியனை, (உனது) மணம் (வீசும்) பதங்களில் சேரும்படியான திருவருளை நான் பெற நீ நினைக்கும்படியான (நல் ஊழ்) எனக்கு உளதோதான்?

குடத்தை வென்று இருமலை போன்று அழகு தளதளக்கும் கொங்கைகள் மீது மணிமாலை அணிந்த சிறிய குறக்கரும் பாகிய (வள்ளியின்) உடலில் துவளும் புயத்தை உடையவன் என வரு வடிவேலனே!

ஒலிக்கின்ற கரியகடலில் அழகிய அணையென முன்னம் அடைத்து, இலங்கைக்கு அதிபதியாகிய (இராவணன்) அரக்கர் கூட்டத்துடன் அழியும்படி ஓர் அம்பை ஏவிய திருமாலின் மருகனே!

திடத்துடன் எதிர்த்து வந்த அசுரர்கள் (யாவரும்) பொடிபட வேலாகிய உக்கிரப் படையை விட்ட சரவண பவனே! திறல் வாய்ந்த குகன், குருபரன் என்னும் திருப்பெயருடன் வந்துள்ள ஒப்பற்ற முருகனே!

செழிப்புள்ள சோலைகள்தோறும் (கிடந்து) விளங்கும் வளைந்த சங்கின் கூட்டங்கள் ஈன்ற முத்துக்கள் மிக்குப் பொலியும் திருப்பரங்கிரி என்னும் வளப்பமுள்ள நகரில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(சிறியனை வெறியனை, அருள்பெற நினைகுவ துளதோதான்?)*

## 8

கருவிற் சேர்ந்து பத்து மாதம் வயிற்றிலிருந்து முற்றிப் பழகிக் கடைசியில் (பூமியில்) குழந்தை வடிவாக வந்து உதித்து, குழந்தையைக் கழுவி அங்கு எடுத்துச் சுரக்கும் முலைப் பாலை ஊட்டக், கிடந்தும், அழுதும், அங்கை கொட்டியும், தவழ்ந்தும், நடமாடியும்,

அரைவடங்கள் கட்டிச்ச தங்கை
இடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
அவையணிந்து முற்றிக்கி ளர்ந்து வயதேறி -

அரிய பெண்கள் நட்பைப்பு ணர்ந்து
பிணியுழன் றுசுற்றித்தி ரிந்த
தமையுமுன்க்ரு **பைச்சித்தம்** என்று **பெறுவேனோ?**

இரவி இந்த்ரன் வெற்றிக்கு ரங்கி
னரச ரென்றும் ஒப்பற்ற [1]உந்தி
யிறைவன் [2]எண்கி னக்கர்த்த னென்றும் நெடுநீலன்

எரியதென் றும் ருத்ரற்சி றந்த
அநும னென்றும் ஒப்பற்ற அண்டர்
எவரும் இந்த வர்க்கத்தில் வந்து புனமேவ,

அரிய தன் படைக்கர்த்த ரென்று
அசுரர் தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமு குந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே !

[3]அயனை யும்பு டைத்துச்சி னந்து
உலக மும்ப டைத்துப்ப ரிந்து
அருள் **பரங்கிரிக்** குட்சி றந்த பெருமாளே. (8)

## 9. திருவடி பெற

காதட ருங்கயல் கொண்டிசைந் தைம்பொறி
வாளிம யங்கம னம்பயந் தந்திருள்
கால்தர விந்துவி சும்பிலங் கும்பொழு தொருகோடி

---

1. உந்தி யிறைவன் - பிரமன்.

2. எண்கினக் கர்த்தன் - கரடிமுகச் சேனைகட்குத் தளகர்த்தனாகிய [illegible]

அரைநாண் கட்டியும் சதங்கை, இட்ட காதணி, பொன்சுட்டி, தண்டை அவை அணிந்தும் முற்றிச் செழிப்புற்று வயது ஏறி,

அருமையான பெண்களுடைய நட்பைப் பூண்டு, பிணியிற்பட்டு, சுற்றித் திரிந்தது போதும், (இனி முருகா!) உனது கிருபைச் சித்தத்தை என்று பெறுவேனோ?

சூரியன் (கூறான சுக்கிரீவன்) இந்திரன் (கூறான வாலி) இவர்களிருவரும் வெற்றிக் குரங்கரசர்களாகவும், ஒப்பிலாத (திருமால்) உந்தியிற் பிறந்த பிரமன் (கூறு) கரடியினத்துத் தலைவனாம் சாம்புவானாகவும், நெடியநீலன் —

எரியின் கூறென்றும், ருத்திரன் கூறு அநுமன் என்றும் ஒப்பிலாத தேவர்கள் யாவரும் இவ்வகையாக வந்து பூமியிற் சேர;

(இவர்களைத்) தன் அரிய படைகளுக்குத் தலைவராகக் கொண்டு அசுரர்களுடைய சுற்றமென்னும் கூட்டத்தை வென்ற அரிமுகுந்தன் மெச்சுகின்ற குணம் வாய்ந்த மருகனே!

பிரமனையும் தண்டித்துக் கோபித்து, உலகத்தையும் படைத்து அன்புடன் அருள் (பாலிக்கும்) திருப்பரங் குன்றத்திற் சிறந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(உனது கிருபைச் சித்தத்தை என்று பெறுவேனோ?)

## 9

காதளவும் நெருக்கும் கயல் மீன் (போன்ற) கண்களை (மனத்தில்) கொண்டு, (மனம் அப்போது மகளிர்பால்) இசைந்து (ஒருப்பட்டு), ஐம்புலன்களும் (காமன்) அம்புகளால் மயங்க, மனம் அச்சங்கொள்ள, இருள் நீங்கும் படியாக நிலவு விளக்கில் ஒளிதரும் பொழுது ஒரு

காய்கதி ரென்றொளிர் செஞ்சிலம் புங்கணை
யாழியு டன்கட கந்துலங் கும்படி
காமனெ டுஞ்சிலை கொண்டடர்ந் தும்பொரு
மயலாலே

வாதுபு ரிந்தவர் செங்கைதந் திங்கித
மாகந டந்தவர் பின்திரிந் துந்தன
மார்பில ழுந்தஅ ணைந்திடுந் துன்பம துழலாதே;

வாசமி குந்தக டம்பமென் [1]கிண்கிணி
மாலைக ரங்கொளும் அன்பர்வந் தன்பொடு
வாழநி தம்புனை யும்பதந் தந்துன தருள்தாராய்;

போதிலு றைந்தருள் கின்றவன் செஞ்சிர
மீதுத டிந்துவி லங்கிடும் புங்கவ!
போதவ ளஞ்சிவ சங்கரன் கொண்டிட மொழிவோனே!

பூகமு டன்திகழ் [2]சங்கினங் கொண்டகி
ரீவம டந்தைபு ரந்தரன் தந்தருள்
பூவைக ருங்குற மின்கலந் தங்குப ணிருதோளா;

தீதகமொன்றினர் வஞ்சகந் துஞ்சியி
டாதவர் சங்கரர் தந்ததென் பும்பல
சேர்நிரு தன்குலம் அஞ்சமுன் சென்றடு திறலோனே!

சீதள முந்தும ணந்தயங் கும்பொழில்
சூழ்தர விஞ்சைகள் வந்திறைஞ் சும்பதி
தேவர்ப ணிந்தெழு தென்பரங் குன்றுறை
பெருமாளே ! (9)

---

1. கிண்கிணி மாலை - சதங்கை மாலைபோலக் கடப்ப மலராற் புனையப்பட்ட மாலை.

2. சங்கினங் கொண்ட - சங்கின் அம்(அழகு) கொண்ட அல்லது, சங்கு இனம் கொண்ட.

காய்கின்ற சூரியர்கள் போல் ஒளிவீசும் செவ்விய சிலம்பும், கணையாழியும் (மோதிரமும்), கடகமும் விளங்க, மன்மதன்(தனது)நீண்டவில்லைக் கொண்டு அடர்ந்து போர்புரிவதால் (வரும்) மயலால் (மயக்கினால்)

வாது புரிந்தும் (பிணங்கியும்), செங்கை தந்தும் (இணங்கியும்), இனிமையுடன் நடப்பவரான( மாதர்களின்) பின் திரிந்து, (அவரது) தனம் மார்பில் அழுந்த அணையும் துன்ப(ச் செயலில் நான்) உழலாமல்,

மணமிக்க கடம்ப (மலரால் ஆன) மெல்லிய "கிண்கிணி மாலை" களைக் கையில் ஏந்தி வரும் அன்பர்கள் வந்து அன்புடனே (தாம்) வாழ (வேண்டித்) தினமும் (அம் மாலைகளைச்) சூட்டும் திருவடியைத் தந்து உனது அருளைத் தந்தருளுவாய்;

மலரில் உறைந்தருளும் பிரமனது செவ்விய தலைமீது புடைத்து (அவனை) விலங்கிட்ட சிறப்புற்றவனே! ஞான வளப்பத்தை (அறிவொளியைச்) சிவசங்கர (மூர்த்தி) பெறும்படி மொழிந்தவனே!

கமுகு, விளங்கும் சங்கு - இவைதம் அழகைக் கொண்டுள்ள கிரீவம் (கழுத்தை) உடைய பெண் - இந்திரன் பெற்றருளிய பூவை போல்வாள்- தேவசேனை, பசுமை (பெருமை வாய்ந்த)குறமின்னாள் - (ஆகிய இவர்களின்) கலம் (ஆபரணங்கள்) தங்கும்படியான பன்னிரு தோளனே!

தீய உள்ளம் பொருந்தினவர்களும், வஞ்சகம் குறையாதவரும், சங்கரர் தந்த(வரங்களால்)தென்பு(செருக்குகள்)பல கொண்டவர்களுமான அசுரர் கூட்டம் அஞ்சும்படி முன்சென்று (அவர்களை) அழித்த திறல் வாய்ந்தவனே!

குளிர்ச்சியும், முற்பட்டு வீசும் மணமும் விளங்கும் பொழில் சூழ்ந்ததும், விஞ்சையர் (வித்தியாதரர்) வந்து வணங்குவது மான பதி, தேவர்கள் பணிந்தெழுகின்ற அழகிய பதி (ஆகிய) **பரங்குன்றத்தில்** உறைகின்ற பெருமாளே!

(பதந் தந்து உனது அருள் தாராய்)

## 10. அன்பு உற

சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ?

[1]தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன்பங்கிற் சிவைபாலா!
செந்திலங் கண்டிக் கதிர்வேலா!
தென்பரங் குன்றிற் பெருமாளே! (10)

## 11. தொண்டு செய

தடக்கைப் பங்கயங் கொடைக்குக் கொண்டல்தண்
டமிழ்க்குத் தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படுந்
தளர்ச்சிப் பம்பரந் தனையூசற்

கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்
கணத்திற் சென்றிடந் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே;

படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா!

## 10

எப்போதும் பாசத் தொடர்பினாலே - கவலையாற் சோர்ந்து திரியாமல்,

கந்தன் என்று அடிக்கடி கூறி (மனம்) பொருந்தி உன்னை நாளும் —

(உளக்) கண்ணாற் பார்த்து அன்பு கொள்ளேனோ?

யானை வளர்த்த கொம்புபோல்வாளாம் தேவசேனையைச் சேர்பவனே!

சங்கரன் பக்கத்திலுள்ள பார்வதியின் குமரனே!

திருந்செந்தூர், அழகிய கண்டி என்னும் தலங்களில் உறையும்

ஒளிவீசும் வேலாயுதனே!

அழகிய திருப்பரங்குன்றத்துப் பெருமாளே!

(அன்புற்றிடுவேனோ)

## 11

"(உனது) பெரிய கையானது தாமரை (பதுமநிதி)யாகும்; கொடைச் சிறப்பில் (நீ) மேகமே போல்வாய்; தண்ணிய தமிழுக்குத் (தமிழ்ப் புலவர்க்கு நீ) புகலிடமாவாய்" என்று உலகத்தவரிடம் —

தவிப்புடன் சென்று இரந்து உள்ளம் புண்பட்டுத் தளர்ச்சியுறும் (இந்தப் பம்பரத்தை, பதனழியும் -

பாண்டத்தை, துன்பத்துக்கு ஈடாய மண் உடலை, அழிந்துபோம் பாண்டத்தை, ஐம்பொறிகளின் வாழ்வை (அதாவது அடியேனிடம்)—

நொடிப்போதில் வந்து, (என் நெஞ்சமாம்) இடத்தைத் திருத்தித் தண்டை அணிந்த (உன்) அழகிய திருவடிக்குத் தொண்டு செய்யும்படி அருள்வாயாக;

படைப்பதற்குத் தாமரையோன் (பிரமன்), துடைப்பதற்கு (அழிப்பதற்குச்) சங்கரன், காப்பதற்கு இலக்குமியின் நாயகன் (திருமால்) (என அவரவர்) பணி கொள்ளுமாறு,

பணித்து(நியமித்து), அவர்தம் [illegible]

[illegible]

†குடக்குத் தென் பரம் பொருப்பிற் றங்குமங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே!
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே! (11)

## 12. திருவடி பெற

பதித்தசெஞ் சந்தப் பொற்குட நித்தம்
பருத்துயர்ந் தண்டத் திற்றலை முட்டும்
பருப்பதந் தந்தச் செப்பவை ஒக்குந் தனபாரம்
‡படப்புயங் கம்பற் கக்குக டுப்பண்
செருக்குவண் டம்பப் பிற்கயல் ஒக்கும்
பருத்தகண் கொண்டைக் கொக்குமி ருட்டென்
றிளைஞோர்கள்
துதித்துமுன் கும்பிட் டுற்றது ரைத்தன்
புவக்கநெஞ் சஞ்சச் சிற்றிடை சுற்றுந்
துகிற்களைந் தின்பத் துர்க்கம் அளிக்கும்
கொடியார்பால்
துவக்குணும் பங்கப் பித்தன வத்தன்
புவிக்குளென் சிந்தைப் புத்திம யக்கந்
துறக்கநின் தண்டைப் பத்மமெனக்கென் றருள்வாயே
[1]குதித்துவெண் சங்கத் தைச்சுற வெற்றுங்
கடற்கரந் தஞ்சிப் புக்கஅ ரக்கன்
குடற்சரிந் தெஞ்சக் குத்திவி திர்க்குங் கதிர்வேலா!
குலக்கரும் பின்சொற் றத்தையி பப்பெண்
தனக்குவஞ் சஞ்சொற் [2]பொச்சையி டைக்குங்
குகுக்குகுங் குங்குக் குக்குகு குக்குங் குகுகூகூ

† 'கூடற் குடவயின்...குன்று'- திருமுருகாற்றுப்படை.

‡ படப் புயங்கம் பல் கக்கு கடு, பண் செருக்கு வண்டு, அம்பு அப்பிற் கயல் எனப் பிரிக்க.

1. 'சங்குமும் சுறவும் மறிகடல் திரை கொணர்ந் தெற்றிய கரை' சம்பந்தர் தேவாரம், 179-2.

2. பொச்சையிடை-காட்டினிடத்தில்.

(மதுரைக்கு) மேற்கே அழகிய திருப்பரங்குன்றத்தில் வீற்றிருக்கும் அழகிய (உயர்குலக் கங்கையின்) குழந்தையே!

குறக்குலத்து அழகிய கொம்புபோலும் (வள்ளியை) முன் தினைப்புனத்திற் செவ்விய கரங்களைக் கூப்பிக் கும்பிட்ட பெருமாளே!

(உன் கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே,)

## 12

மார்பிற் பதிந்துள்ள செவ்விய அழகிய பொற்குடம், நாள் தோறும் பருத்து, உயர்ந்து, விண்ணிடத்தே தலையை முட்டும் மலை, தந்தச் செப்பு இவைகளை ஒக்கும் தனபாரம்—

படத்தை உடைய பாம்பின் பற்கள் கக்குகின்ற நஞ்சு, பண்களைக் களிப்பிற் பாடும் வண்டு, அம்பு, நீரில் மீன், (இவைகளைப்)போன்ற பருத்த கண், கூந்தலுக்கு ஒப்பான இருட்டு — என்றெல்லாம் இளைஞோர்கள்,

(மாதர் உறுப்புக்களைத்) துதித்து, முன்னதாகக் கும்பிட்டு, நடந்த நிகழ்ச்சிகளை (அவரிடம் உள்ளபடியே) உரைத்து, அன்புக் களிப்புடன், உள்ளம் அஞ்சச், சிற்றிடையைச் சுற்றியுள்ள உடையைக் களைந்து இன்பக் கலக்கத்தை அளிக்கும் (பொது) மகளிரிடத்தே —

கட்டுண்ணும் பாவப் பித்தன், பொய்யன் (ஆகிய நான்) (இப்) பூமியில் என் மனத்திலும் புத்தியிலும் (உள்ள) மயக்கத்தை விட்டொழிக்க (உனது) தண்டை(யணிந்த) தாமரை (யன்ன திருவடி)யை **எனக்கென்று** (சிறப்பாக) அருள்வாயே;

குதித்து வெண்ணிறச் சங்கங்களைச் சுறாமீன்கள் மோதி எறியும். கடலில் ஒளித்து அஞ்சிப் புகுந்த அசுரன் (சூரனது) குடல் சரிந்து குறையக் குத்தி அசைத்த ஒளி வேலனே!

சிறந்த கரும்பு போன்ற மொழியை உடையவளும், கிளி போன்றவளுமான ஆனைமகள் (தேவசேனை) இடம் மறைத்த சொல்லுடன், காட்டினிடையே குங்குகுக் குகும்..கூகூ—

*திதித்திதிந் திந்தித் தித்தியெ னக்கொம்*
*பதிர்த்துவெண் சண்டக் கட்கம்வி திர்த்துந்*
*திரட்குவிந் தங்கட் பொட்டெழ வெட்டுங்கொலைவேடர்*
*தினைப்புனஞ் சென்றிச் சித்தபெ ணைக்கண்*
*டுருக்கரந் தங்குக் கிட்டிய ணைத்தொண்*
**திருப்பரங் குன்றிற்** *புக்குளி ருக்கும் பெருமாளே!* (12)

## 13. அன்பு உற

*பொருப்புறுங் கொங்கையர் பொருட்கவர்ந் தொன்றிய*
*பிணக்கிடுஞ் சண்டிகள் வஞ்சமாதர்*
*[1]புயற்குழன் றங்கமழ் அறற்குலந் தங்கவிர்*
*முருக்குவண் செந்துவர் தந்துபோகம்*

*அருத்திடுஞ் சிங்கியர் தருக்கிடுஞ் செங்கயல்*
*அறச்சிவந் தங் [2]கையில் அன்புமேவும்*
*அவர்க்குழன் றங்கமும் அறத்தளர்ந் தென்பயன்*
**அருட்பதம் பங்கயம் அன்புறாதோ?**

*மிருத்தணும் பங்கயன் அலர்க்கணன் சங்கரர்*
*விதித் [3]தெணுங் கும்பிடு கந்தவேளே!*
*மிகுத்திடும் வன்சம ணரைப்பெருந் திண்கழு*
*மிசைக்கிடுஞ் செந்தமிழ் அங்கவாயா!*

*பெருக்குதண் சண்பக வனத்திடங் கொங்கொடு*
*திறற்செழுஞ் சந்தகில் துன்றிநீடு*
*தினைப்புனம் பைங்கொடி தனத்துடன் சென்றணை*
**திருப்பரங் குன்றுறை** *தம்பிரானே!* (13)

---

1. புயல் குழன்ற அம் கமழ் எனப் பிரிக்க.

2. கையில்-கைப் பொருளில்.

3. என்றும் என்பது எண்ணும் என மரீஇத் தொகுத்தல் விகார முற்றது.

திதித் திதிந் தித்தி என ஊது கொம்புகள் அதிர்ந்தொலிக்க, ஒள்ளிய வலிமை பொருந்திய வாளை வீசித் திரளாகக் குவியும்படி அங்கேயே அழிவுற வெட்டுகின்ற கொலை வேடர்களுடைய—

தினைப்புனத்துக்குப் போய் விரும்பிய பெண்ணை (வள்ளியைப் பார்த்து, (உண்மை) உருவத்தை ஒளித்து, அங்கு நெருங்கிச் சென்று (அவளை) அணைத்து, ஒள்ளிய திருப்பரங்குன்றத்தைப் புக்கிடமாகக் (கொண்டு) இருக்கும் பெருமாளே!

(நின் தண்டைப் பத்மம் எனக்கென்றே அருள்வாயே.)

## 13

மலைபோன்ற தனத்தினர், பொருளைக் கவர்ந்து (அது காரணமாய்) உண்டாகும் பிணக்குஞ் செய்யும் கொடியவர், வஞ்சக மாதர்,—

மேகம் போன்ற கூந்தல் சுருண்டுள்ளதாய், அழகியதாய், மணம் வீசுவதாய்க், கருமணற் கூட்டம்போலத் தங்கி விளங்கி, முருக்கிதழ் போன்று வளங்கொண்டு செவ்விய பவளம் போன்ற இதழைத் தந்து போகத்தை—

ஊட்டுகின்ற விஷமிகள் (நஞ்சு போன்றவர்), வாது செய்யும் செவ்விய கயல் (மீன்) போலுங் கண் மிகச் சிவந்து அழகிய கைப்பொருள்மீது ஆசை வைத்துள்ள (வர்)—

அத்தகையர்பால் (அப் பொதுமகளிர்பால்) (நான்) உழன்று உடலும் மிகத் தளர்வதால் என்ன பயன்? (ஒரு பயனும் இல்லை என்றபடி);அருள் பாலிக்கும் உனது திருவடித் தாமரை (என்மீது) அன்பு கொள்ளாதோ?

இறத்தலோடு (அண்ணும்) கூடிய பிரமன், மலர்க்கண்ணன் (திருமால்), சங்கரர் (இம் மூவரும்) முறைப்படி என்றும் கும்பிடுகின்ற கந்தவேளே!

மிக்குவந்த வலிய சமணர்களைப் பெரிய திண்ணிய கழுவின் மேல் ஏறவைத்த செந்தமிழ் (ஓதிய) வேதாங்க வாயனே!

பெருகிக் குளிர்ந்துள்ள சண்பகக் காட்டில் வாசனையொடு கூடித் திண்ணிதாய்ச் செழித்த சந்தனமும் அகிலும் நெருங்கி நீடியுள்ள—

தினைப்புனத்திற் பசுங்கொடி போன்ற (வள்ளியின்) தனத்தைச் சேர்ந்தணைந்து திருப்பரங்குன்றத்தில் உறைகின்ற தம்பிரானே!

## 14. திருவடி பெற

மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தனென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந் தொண்டையமு துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்

ஒன்றஅம் பொன்று விழி கன்ற அங் கங்குழைய
உந்தியென் கின்றமடு விழுவேனை
உன்சிலம் புங்கனக தண்டையுங் கிண்கிணியும்
ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்;

பன்றியங் கொம்புகம டம்புயங் கஞ்சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே!
பஞ்சரங் கொஞ்சுகிளி வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா!

சென்றுமுன் குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே ! (14)

## 15. திருவடி பெற

வரைத்தடங் கொங்கை யாலும்
வளைப்படுஞ் செங்கை யாலும்
மதர்த்திடுங் கெண்டை யாலும் [1]அனைவோரும்

வடுப்படுந் தொண்டை யாலும்
விரைத்திடுங் கொண்டை யாலும்
மருட்டிடுஞ் சிந்தை மாதர் வசமாகி

எரிப்படும் பஞ்சு போல
மிகக்கெடுந் தொண்ட னேனும்
[2]இனற்படுந் தொந்த வாரி கரையேற

1. அனைவோரும் வடுப்படுந் தொண்டை;- பலராலும் வடுப்படுத் தப்படும் கொவ்வைக்கனி யொத்த இதழ். 2. இனற்படுந் தொந்த வாரி-துன்பப்படுகின்ற வினைத் தொடர்புள்ள பிறவிக் கடல்.

## 14

வாசனையும் அழகுங்கொண்ட பூங்கொத்தின்மேல் தெந்தனந் தெந்தனென வண்டின் கூட்டங்கள் கண்டு தொடர்கின்ற கூந்தலையுடைய மாதர்களின்—

நெருங்கிய கொவ்வைக் கனி (போன்ற) இதழமுதை உண்டு கொண்டு அன்புமிக்குக் கச்சு (ரவிக்கை) இட்டுள்ள குடம் போன்ற பெருத்த தனமானது மார்பிற்—

பொருந்த, அம்புபோன்ற கண்கள் சுருங்க, உடல் குழைய, உந்தி (தொப்புள்) என்கிற மடுவில் விழுகின்ற என்னை-

உனது சிலம்பும், பொன் தண்டையும், கிண்கிணியும், ஒள்ளிய கடம்பும் அணிந்துள்ள திருவடியிற் சேர்த்தருளுக!

பன்றியின் அழகிய கொம்பு, ஆமை (ஓடு) பாம்பு, தேவர்களின் பழைய எலும்பு இவைகளை உடலில் அணிபவராம் (சிவனுடைய) பிள்ளையே!

கூட்டிற் கொஞ்சுகின்ற கிளி வந்து வந்து "ஐந்து கர பண்டிதன் (கணபதியின்) தம்பி" என்கின்ற வயலூரா!

சென்று முன்பு மலை நிலத்தோர் வளர்த்த பெண்ணை (வள்ளியை) அழைத்து வந்து, வளர்கின்ற செண்பகமும் பசும்பொன் மலரும் நெருங்குகின்ற சோலை(யானது)—

திங்களும் (சந்திரனும்), செவ்விய கதிரும் (சூரியனும்) மேகங்களும் தங்கும்படியாக உயர்ந்துள்ள அழகிய **திருப்பரங்குன்றத்தில்** உறைகின்ற பெருமாளே!

(கிண்கிணியும் ஒண்கடம்பும் புனையும் அடிசேராய்).

## 15

மலைபோலப் பரவி அகன்ற கொங்கையாலும், வளைகள் ஒலிக்கும் செங்கையாலும், செழிப்புள்ள மீன் (போலும்) கண்களாலும், பலராலும்—

வடுப்படுத்தப்படும் கொவ்வைக் கனி யொத்த இதழாலும், மணம் வீசுங் கூந்தலாலும் மயக்குகின்ற நெஞ்சங் கொண்ட மாதர் (பொதுமகளிரின்) வசத்திற்பட்டு—

எரியிற் பட்ட பஞ்சுபோல மிகவும் கெட்டுப்போகின்ற அடியனாகிய நானும் துன்பப்படுகின்ற வினைத் தொடர்புள்ள (பிறவிக்) கடலினின்றுங் கரையேற—

இசைத்திடுஞ் சந்த பேதம்
ஒலித்திடுந் தண்டை சூழும்
இணைப்பதம் புண்ட ரீகம் **அருள்வாயே**

சுரர்க்குவஞ் சஞ்செய் சூரன்
இளக்ரவுஞ் சந்த னோடு
துளக்கெழுந் தண்ட கோளம் அளவாகத்

*துரத்தியன் றிந்த்ர லோகம்
அழித்தவன் பொன்று மாறு
சுடப்பருஞ் சண்ட வேலை விடுவோனே!

[1]செருக்கெழுந் தும்பர் சேனை
துளக்கவென் றண்ட மூடு
தெழித்திடுஞ் சங்க பாணி மருகோனே!

தினைப்புனஞ் சென்று லாவு
குறத்தியின் பம்ப ராவு
**திருப்பரங் குன்ற** மேவு பெருமானே! (15)

## முதல் திருமுறை

முற்றும்.

---

1. உம்பர் சேனை மயங்கச் சங்கநாதஞ் செய்து பாரிஜாத மரத்தைக் கண்ணபிரான் பூமிக்குக் கொண்டுவந்த வரலாற்றைக் குறிக்கும். 889. 1279 பாடல்களைப் பார்க்கவும்.

(பா - வே) * 'துரத்தியன் றிந்த்ர லோக
மளித்திடுஞ் சம்ப்ர தாய
சுடப்பருஞ் சண்ட வேலை விடுவோனே'

சொல்லப்படுகின்ற சந்த பேதங்களை (பலவகைய சந்தங்களை) ஒலி செய்யும் தண்டைகள் சூழ்ந்த இணையடித் தாமரைகளைத் (தந்து) அருள்வாயே;

தேவர்களுக்கு வஞ்சனை செய்த சூரன் இளைய [1]கிரௌஞ்சன் என்னும் அசுரனோடு கலங்கி ஓட அண்ட உருண்டை அளவும்—

(அவனைத்) துரத்தி இந்திரலோகத்தைப் பொன்னுலகை) அழித்தவனாகிய (அவன்) அழிந்துபோம்படி சுடுகின்ற மிக உக்ரமான வேலாயுதத்தை விட்டவனே!

ஆண்மையோடெழுந்து (போருக்கு எழுந்து) தேவர் சேனை கலங்கும்படியாக வென்று வானத்தோடு முழக்கம் செய்த சங்கமேந்திய திருக்கையை உடைய கண்ணபிரானின் (திருமாலின்) மருகோனே!

தினைப்புனத்துக்குப் போய் (அங்கு) உலவிநின்ற குறத்தி (வள்ளி)யின் இன்பத்தை (நாடிப்) பரவின **திருப்பரங்குன்றத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

*(உன் இணையடித் தாமரையை அருள்வாயே.)*

1. கிரௌஞ்சன் சூரன் தம்பி தாரகனுடைய [illegible]

உ

இரண்டாவது திருப்பதி; திருச்சீரலைவாய் என்கிற

## திருச்செந்தூர்

*(திருநெல்வேலியிலிருந்து 35-கல். ரெயில்வே நிலையம். இங்குள்ள சமுத்திர தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்து ஐந்து தலைகளில் ஒன்றிழந்த பிரமதேவனுக்கு அற்ற தலை கிடைத்ததாலும், 'பாண்டிய ராஜன் புத்திரியாகிய அங்கசுந்தரி என்பாளுக்குச் சாபத்தால் வந்த குதிரைமுகம் மாறி அழகிய முகம் கிடைத்ததாலும், அத் தீர்த்தத்துக்கு* **வதனாரம்ப தீர்த்தம்** *என்று பெயர். "சிகைத் தோகை" (51) என்னுங் கந்தரந்தாதிச் செய்யுளில் 'மகள் வாசிகைத்தோ" என்பதன் பொருளைக் காண்க. "செந்திலை உணர்ந்துணர்ந் துணர்வுற" (47) "கயிலைமலை யனைய செந்தில்"(51), "மகா புநிதந் தங்குஞ் செந்தில்" (94) என்னுந்திருப்புகழ்த் திருவாக்கால் இத் தலத்துப் பெருமை புலப்படும். "நஞ் செந்தின் மேய வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்" என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் "கந்தர் கலிவெண்பா" பாடின திருப்பதி. இதற்குத் தல புராணம் உண்டு.)*

### 16. தரிசனம் பெற

*தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையுந்*
*தண்கழல்சி லம்புடன் கொஞ்சவே நின்*

*தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்*
*[1]சந்தொடம ணைந்து [2]நின் றன்புபோலக்*

*கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களுங்*
*கஞ்சமலர் செங்கையுஞ் *சிந்துவேலும்*

*கண்களுமு கங்களுஞ் சந்திர [3]நிறங்களுங்*
*கண்குளிர* **என்றன்முன் சந்தியாவோ?**

*புண்டரிகர் அண்டமுங் கொண்டபகி ரண்டமும்*
*பொங்கியெழ வெங்களங் கொண்டபோது*

*[4]பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும்வ ளர்ந்துமுன்*
*புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூரக்*

---

*1. சந்தொடம்-சந்தோஷம். 2. நின்ற அன்பு 3.நிறம்-காந்தி.*

*4. பொன்கிரி என அம் சிறந்து எனப் பிரிக்க; அம்-அழகு.*

** சிந்து-கொடி-கந்தரந்தாதி 21.*

## 16

தண்டை யென்கின்ற அணி, வெண்டையம் (வீரர் அணி காலணி), கிண்கிணி, சதங்கை, [1]அருட் கழல், சிலம்பு (இவையெலாம் ஒன்று பட்டுக்) கொஞ்சி ஒலிக்க உன்—

தந்தையைச் (சிவபிரானை) முன்னர் அன்புடன் [2]வலம் வந்து நல்ல மகிழ்ச்சியுடன் அணைந்து நின்ற (அந்த) அன்பு போலவே,

(இப்போது நான்) உன்னைக் கண்டு மனம் ஒருமைப்பட, கடம்பும், அழகிய மணிமுடிகளும், தாமரை மலர் போன்ற செங்கைகளும் கொடியும் வேலும் அல்லது (சூராதிகளை) அழித்த வேலும்,

(பன்னிரு) கண்களும், (ஆறு திரு) முகங்களும், நிலவொளிகளும் (என்) கண் குளிரும்படியாக என் முன்பு வந்து தோன்றாவோ?

தாமரையான் (பிரமனது) உலகு, மற்றுள்ள வெளியண்டங்கள் (இவையெலாம் மகிழ்ச்சி) பொங்கி எழ, (நீ) கொடிய போர்க்களத்தில் எழுந்தருளியபோது—

பொன்மலை என்னும்படி அழகு சிறந்து எங்கும் [3]நிறைந்து நின்று, முன்பு [4]பிரமன் தந்தையாகிய திருமாலும் (அல்லது திருமாலும் உன் தந்தையாம் சிவனும்) மன மகிழ்ச்சி மிகக் கொள்ள,

---

1. தண் - அருள். 2. பழத்துக்காக வலம் வந்தது.

3. போர்க்களத்தில் விசுவ ரூபங் கொண்டதைக் குறிக்கும். 'புவனம் அண்டம் வானவருயிர்கள் யாவும் ஆறுமா முகத்து வள்ளல் மேனியில் அமைந்ததன்றி வேறிலை யென்ன ஆங்கோர் வியன்பெரு வடிவங் கொண்டான்' - கந்த புராணம் - சூரபன்மன் வதை, 422.

4. புண்டரீகர் - தாமரையாதனத்துப் பிரமன், தாமரைக் கண்ணனாம் திருமால்.

**[1]கொண்டநட னம்பதஞ் செந்திலிலும் என்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே**

*கொங்கைகுற மங்கையின் சந்தமணம் உண்டிடுங்
கும்பமுநி கும்பிடுந் தம்பிரானே! (1)*

## 17. ஈந்து உய்ய

*[2]அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையுமுடை யவன *ரவ தண்டச் சண்டச்
சமனோலை*

*அதுவருகு மளவிலுயி ரங்கிட் டிங்குப்
பறைதிமிலை [3]திமிர்தமிகு [4]தம்பட் டம்பற்
கரையவுற வினரலற உந்திச் சந்தித் தெருவூடே*

*எமதுபொரு ளெனுமருளை யின்றிக் [5]குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட் டுண்கைக்
கிளையுமுது வசைதவிர இன்றைக் கன்றைக்
கெனநாடா*

*திடுககடி தெனுமுணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனவகலு நெறிகருதி நெஞ்சத்* **தஞ்சிப் பகிராதோ?**

---

*1. இது வரலாற்றுக் குறிப்பைத் தருவது.*

*2. அமுதுததி - அமுத உததி; திருப்பாற் கடல்.*

*3. திமிர்தம் - பேரொலி.*

*4. தம்பட்டம் பல் கரைய - தம்பட்டம் முதலிய பல வாத்தியங்கள் ஒலிக்க.*

*5. குன்றி - குண்டுமணி.*

** 'அரவ தண்டத்தில் உய்யலு மாமா'- பெரியாழ்வார் 4-5-3 பாம்பு சுற்றிய தண்டம் - என்பர்.*

கொண்ட [1]நடன பதங்கள் திருச்செந்தூராகிய (இத்தலத்திலும்) என் முன்பே கொஞ்சி நடனத்தைக் கொள்ளும் (கொண்டன); கந்தவேளே!

குறமங்கை (வள்ளி) கொங்கையின் அழகிய மணத்தை நுகர்ந்து சுகிக்கும் (தம்பிரானே)! குடமுநி (அகத்தியர்) கும்பிடும் தம்பிரானே!

*(கண்களும் முகங்களும் என்றன்முன் சந்தியாவோ?)*

## 17

திருப்பாற்கடலில் தோன்றிய நஞ்சைக் கக்கும் சிவந்த கண்களையும். திங்களுடைய (நிலவின்) பிளவு என்னும்படி ஒளி விடுகின்ற வெண்ணிறப் பற்களையுந், தொங்குகின்ற மயிர்த்தலையையும் கொண்டவனும், பேரொலியும், தண்டாயுதமும், கொடுங் கோபமும் கொண்டவனுமான யமனுடைய ஓலை—

அது வரும்போது உயிரானது அங்கும் இங்குமாக (ஊசலாட) பறையும், திமிலையும் (பறை வகை), பேரொலி மிக்க தம்பட்டம் (முதலிய) பல (வாத்தியங்கள்) ஒலிக்க, உறவினர் கதறி அழக் கொண்டுபோம் சந்தி (பல தெருக்கள் கூடும் இடம்) தெரு வழியே—

'எம்முடைய பொருள்' என்னும் பற்று இல்லாமல், ஒரு குண்டு மணியின் பிளவளவு தினையளவு (கூடப்) பங்கிட்டு உண்ணுதற்குச் சோர்வு பட்ட பெரும் பழி நீங்க, இன்றைக்கு (ஆகட்டும்) நாளைக்கு (ஆகட்டும்) என எண்ணாமல்—

'இடுவாயாக உடனே' என்னும் உணர்வு அழிந்து போக, எடுத்துக்கொண்டுபோய் டுடு டுடுடு, டுண்டுட் எனப் போகின்ற விதியை நினைத்து, நெஞ்சத்தே அஞ்சிப் பகிர்ந்து கொடேனோ (ஈதல் புரியேனோ)?

---

1. நடனம் - குடைக் கூத்தும் துடிக் கூத்தும்.

குமுதபதி வகிரமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலசடை பவுரிகொடு தொங்கப் பங்கிற்
கொடியாடக்

குல [1]தடினி அசையஇசை பொங்கப் பொங்கக்
கழலதிர டெகுடெகுட டெங்கட் டெங்கத்
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத்
தொகுதீதோ

[2]திமிதமென முழவொலிமு ழங்கச் செங்கைத்
தமருகம ததிர் சதியொ டன்பர்க் கின்பத்
திறமுதவு பரதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா!

திரளுமணி தரளமுயர் தெங்கிற் றங்கிப்
புரள எறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரசல நிதிதழுவு **செந்திற்**

கந்தப் பெருமாளே ! (2)

## 18. திருவடி பெற

கொடியனைய இடைதுவள அங்கமும் பொங்கஅங்
குமுதஅமு திதழ்பருகி யின்புறுஞ் சங்கையின்
குலவியணை முகிலளக முஞ்சரிந் தன்பினின்
பண்புலாவக்

கொடியவிரல் நகநுதியில் புண்படுஞ் சஞ்சலன்
குனகியவ ருடனினிது சம்ப்ரமங் கொண்டுளங்
குரலழிய அவசமுறு குங்குணன் கொங்கவிழ்ந்
தொன்றுபாய்மேல்

---

1. தடினி - ஆறு; குல தடினி - சிரேஷ்டமான கங்கை யாறு.

2. திமிதம் - பேரொலி.

(தலையிற் சூடியுள்ள) குமுத மலரின் நாயகனாம் திங்களின் (நிலவின்) பிளவு அமுதத்தை மிகச் சிந்தவும், திருவடிச் சிலம்பு வேத மொழிகளை மிகக் கொஞ்சி ஒலிக்கவும், வளைந்த சடைகள் (மண்டலமிட்டுச்)சுழன்று தொங்கவும், பக்கத்திலுள்ள கொடி (போன்ற பார்வதிதேவி) ஆடவும்,

சிறந்த (கங்கை) ஆறு அசையவும், இசையொலி மிகப் பொங்கி எழவும், கழல்கள் அதிர்ந்தொலிக்கவும், டெகுடகுட டெங்கட் டெங்கத் - தொகுதீதோ—

(என்னும்) பேரொலியுடன் முழவு வாத்தியம் முழங்கவும் செங் கையில் தமருகம(உடுக்கை) அதிர்ந்தொலிக்கும் தாள ஒலியுடன் அன்பர்களுக்கு இன்ப நிலையை உதவுகின்ற பரத (நடன) குருவாகிய சிவன் வணங்கும் சற்குரு நாதனே!

திரண்டு மணியும் முத்தும் உயர்ந்துள்ள தென்னை மரங்களில் தங்கிப் புரளும்படி வீசுகின்ற அலைகளையும், மகர மீன்களையும், சங்கங்களையும்,, (உடைய) தூய கருநிறக் கடல் அணைந்துள்ள திருச்செந்தூரிற் கந்தப் பெருமாளே!

*(நெஞ்சத்து அஞ்சிப் பகிரேனோ?)*

## 18

கொடிபோன்ற இடை துவள, அங்கங் கிளர்ச்சி கொள்ள அழகிய குமுதம் போன்ற அமுதளிக்கும் இதழைப் பருகி இன்பங்கொள்ளும் எண்ணத்தை உடையவன் (நான்); (மாதரொடு) குலவி அணைந்து மேகம் போன்ற கூந்தல் சரிந்து அன்பினால் வரும் மனப்பான்மை பரவ—

வளைந்த விரல் நுனியால் (நகக் குறிகளால்) புண்படுகின்ற கவலை கொண்டவன் (நான்); கொஞ்சிப் பேசி அவர்களுடன் இனிய களிப்புக் கொண்டு உள்ளமும் குரலும் ஒடுங்கத் தன் வசமிழந்து முதிரும் குணத்தன் (நான்); மணம் விரிந்து பொருந்தும் பாய்மீது-

விடமனைய விழிமகளிர் கொங்கையின் பன்புறும்
வினையனியல் பரவுமுயிர் வெந்தழிந் தங்கமும்
மிதமொழிய அறிவில்நெறி பண்பிலண் டுஞ்[1]சகன்
செஞ்செநீடும்

வெகுகனக வொளிகுலவும் அந்தமன் [2]**செந்திலென்**
றவிழவுள முருகிவரும் அன்பிலன் [3]தந்திலன்
விரவுமிரு சிறுகமல **பங்கயந் தந்துகந்** தன்புறாதோ?

படமிலகும் அரவினுடல் அங்கமும் பங்கிடந்
துதறுமொரு கலபிமிசை வந்தெழுந் தண்டர்தம்
பகையசுர ரனைவருடல் சந்துசந் துங்கதஞ்
சிந்தும்வேலா!

படியவரும் இமையவரும் நின்றிறைஞ் செண்குணன்
பழையஇறை யுருவமிலி அன்பர்பங் கன்பெரும்
பருவரல்செய் புரமெரிய விண்டிடுஞ் செங்கணன்
கங்கைமான்வாழ்

சடிலமிசை அழகுபுனை கொன்றையும் பண்புறுந்
தருணமதி யினகுறைசெய் துண்டமுஞ் செங்கையொண்
சகலபுவ னமுமொழிக தங்குறங் கங்கியும்
பொங்கிநீடும்

சடமருவு விடையரவர் துங்கஅம் பங்கினின்
றுலகுதரு கவுரியுமை கொங்கைதந் தன்புறுந்
தமிழ்விரக உயர்பரம சங்கரன் கும்பிடுந்
தம்பிரானே! (3)

---

1. சகன் - சகா; தோழன்.

2. நினைத்தால் முத்தியளிக்கும் சிவஸ்தலமாகிய திருண்ணாமலையைப் போலத் திருச்செந்தூரும் தன்னைக் கருதுவார்க்கும் முத்தியளிக்கும். 'செந்திலை யுணர்ந் துணர்ந் துணர்வுற'(47). திருச்செந்திலை உரைத்துய்ந்திட (71). 'செந்தூர என்னத் தெளிதருமே' 'செந்தூர் கருத' (கந். அந். 24, 33) என வருவன காண்க.

3. தந்திலன் - நானொரு சமர்த்தி யில்லாதவன்.

நஞ்சு போன்ற கண்களையுடைய மகளிர் கொங்கை யின்பத்தில் அன்புகொள்ளும் தொழிலன் (நான்) ; தகுதியுடன் பொருந்திய உயிர் வெந்தழிந்து, உடலும் இன்பத்தை இழக்க, அறிவிலாத வழிப்போக்கில் நெருங்கும் தோழன் (நான்); செவ்விதாய் நீடித்துள்ள—

மிக்க பொன்னொளி இலகும் அழகு பொருந்திய செந்தில் (திருந்செந்தூர்) என்று கருதி நெகிழ உள்ளம் உருகி வருகின்ற அன்பு இல்லாதவன் (நான்); நூலாராய்ச்சி இல்லாதவன் (நான்); (அத்தகைய எனக்குப்) பொருந்திய (உன்) இரண்டு பாத தாமரைகளைத் தந்து, மகிழ்ந்து உன் உள்ளம் அன்பு கொள்ளாதோ?

படம் விளங்கும் பாம்பின் உடலையும் அங்கங்களையும் பிளவுபடக்கிழித்து உதறுகின்ற ஒப்பற்ற மயிலின்மீது எழுந்தருளி வந்து தேவர்களுடைய பகையாம் அசுரர் எல்லாருடைய உடல்களும் பிளவுண்டு பிளவுண்டு (போம்படி) கோபத்தை வெளிப்படுத்திய வேலா! (அல்லது) - பிளவுண்டு (உங்கு - ஹதம்) அவ்விடத்தில் கொலைபுரிந்த வேலனே!

மண்ணவரும் விண்ணவரும் நின்று வணங்கும் எண்குணத் தன், பழம் பொருளாம் இறைவன், உருவம் இலாதவன், அன்பர் பங்கில் இருப்பவன், பெரிதும் துன்பம் செய்து வந்த புரங்கள் எரியும்படி திறந்த செங்கண்ணன், கங்கை (மான் போன்ற) மாது வாழ்கின்ற—

சடையின்மீது அழகாகப் புனைந்த கொன்றையும், குணம் கொண்ட இளமதியின் (நிலவின்) குறைத் துண்டத்தையும், செங்கையில் ஒள்ளிய-எல்லா உலகங்-களையும் ஒழிக்கவல்ல பெருங் கோபங் கொண்டுள்ள நெருப்பையும் கிளர்ந்து உயர்ந்த —

உடல் கொண்ட இடபத்தையும் பாம்பையும் கொண்ட-வருடைய தூய அழகிய பக்கத்தில் நின்று உலகெலாம் அளிக்கும் கவுரியுமை கொங்கை (ப் பால்) தந்து அன்பு கொள்ளும் தமிழ் வல்லவனே! உயர்ந்த பரமனாம் சங்கரன் கும்பிடும் தம்பிரானே!

(பாங்கயந் தந்துகந்து அன்பு உறாதோ?)

## 19. அகப்பொருள் (நற்றாய் இரங்கல்)

அம்பொத் தவிழித் தந்தக் கலகத்
தஞ்சிக் கமலக் [1]கணையாலே

அன்றிற் குமனற் றென்றற் குமிளைத்
தந்திப் பொழுதிற் பிறையாலே

எம்பொற் கொடி[2]மற் றுன்பக் கலனற்
றின்பக் கலவித் துயரானாள்

என்பெற் றுலகிற் பெண்பெற் றவருக்
*கின்பப் [3]புலியுற் றிடலாமோ?

கொம்புக் கரிபட் டஞ்சப் பதுமக்
கொங்கைக் குறவிக் கினியோனே

கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே

செம்பொற் சிகரப் பைம்பொற் கிரியைச்
சிந்தக் கறுவிப் பொரும்வேலர்

செஞ்சொற் புலவர்க் கன்புற் றதிருச்
**செந்திற்** குமரப் பெருமானே! (4)

---

1. தாமரைப் பூ - காமன் ஐங் கணைகளுள் ஒன்று. ஐங்கணைகள் - தாமரைப் பூ, மாம் பூ, அசோகம் பூ, முல்லைப் பூ, நீலோற்பலப் பூ. ஐங்கணைகளின் செயல் : தாமரை - நினைப்பு ஊட்டும்; மாம் பூ - பசலை நிறம் தரும்; அசோகு - உணர்வை நீக்கும்; முல்லை - கிடை காட்டும் (படுக்கச் செய்யும்); நீலம் (நீலோற்பலம்) - கொல்லும்

நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணர்வு நீக்கும் அசோகு - வனத்திலுறு
முல்லை கிடைகாட்டும் மாதே - முழுநீலம்
கொல்லுமதன் அம்பின் குணம் - இரத்தினச் சுருக்கம்.

2. மன் துன்ப கலன் அற்று - தரித்திருக்கின்ற துன்பத்தைச் செய்யும் ஆபரணங்களை அறவிடுத்து. 3. புலி - புல்லி.

(பா - வே) * 'இந்தப் பழிவைத் திடலாமோ'

## 19

அம்பு போன்ற கண்களையுடைய பெண்கள் பேசும் கலகச் சொல்லாகிய அலர் மொழிக்கு (புறங்கூறம் மொழிக்கு அஞ்சிக், காமன் எய்த தாமரைப் பூ அம்பினாலும் —

[1]அன்றில் (என்னும்) பறவைக்கும், தீயை வீசும் தென்றற் காற்றுக்கும் இளைத்து அந்திப் பொழுதில் (வந்துள்ள) நிலவாலும் —

எமது பொற்கொடி போன்ற (மகள்) தரித்திருக்கின்ற துன்பத்தைச் செய்யும் அணிகலன்களை அறவே விடுத்து இன்பக் கலவியின் (நினைவாகவே) துயரங் கொண்டுள்ளாள்.

எதைப் பெற்று(ச் சுகம் உண்டு) பெண்ணைப் பெற்றவருக்கு! (உண்மை) இன்பத்தைப் புல்லி (அடைந்து) இருத்தல் வாய்க்குமோ!

கொம்பையுடைய யானை (கணபதி) எதிர் தோன்ற அஞ்சின அந்தத் தாமரை யரும்பு (போன்ற) கொங்கையை உடைய குறத்திக்கு (வள்ளிக்கு) இனியோனே!

கொன்றை சூடிய சடையற்கு (சிவனுக்கு) (ஒப்பற்ற அந்த) ஒரு பொருளைத் தெரியும்படி கொஞ்சித் [2]தமிழிற் கூறியவனே!

செம்பொன் சிகரங்களை உடைய பசிய [3]பொன்கிரி (கிரௌஞ்சம்) குலைந்தழியும்படி கோபித்துப் பொருத வேலனே!

செஞ்சொற் புலவர்கள்பால் அன்பு கொண்ட திருச்செந்தூர்க் குமரப் பெருமாளே!

(இன்பப் புலியுற் றிடலாமோ?)

---

1. அன்றிற் பறவை, தென்றல், நிலவு இவை காமத்தை வளர்ப்பன.

2. சிவபிராற்கு மூலப்பொருளைத் தமிழில் முருகவேள் பகர்ந்தனர் என்கின்றனர். அது, சம்பந்தராய்த் தேவாரம் பாடினதையுங் குறிக்கலாம்; 77ஆம் பாடலையும் பார்க்க.

3. 'குருகுபெயர் பெற்ற கன வட சிகரி' (கனம் - பொன்.) வேடிச்சி காவலன் வகுப்பு; 'வேலெடுத்துப்... பொன்னஞ் சிலம்பு புலம்ப வரும் எங்கோன்' - கந்தரலங்காரம், 89.

## 20. திருவடிச் சுவட்டின் பொறி பெற :

(திருவடித் தீக்ஷை பெற)

கொங்கைப் பணையிற் செம்பொற் செறிவிற்
கொண்டற் குழலிற் கொடிதான

[1]கொன்றைக் கணையொப் பந்தக் கயலிற்
கொஞ்சுக் கிளியுற் றுறவான

[2]சங்கத் தொனியிற் சென்றிற் கடையிற்
சந்திப் பவரைச் சருவாதே

சந்தப் படியுற் [3]றென்றற் **றலையிற்**
**சந்தப் பதம்வைத்** **தருள்வாயே;**

அங்கப் படைவிட் டன்றைப் படுகைக்
[4]கந்திக் கடலிற் கடிதோடா

[5]அந்தப் பொழிலிற் [6]சந்துத் தலையுற்
றஞ்சப் பொருதுற் றொழியாதே

செங்கைக் கதிருற் றொன்றக் கடலிற்
[7]சென்றுற் றவர்தற் பொருளானாய்

சிந்தைக் [8]கனிவைத் தந்தப் பொழிலிற்
**செந்திற்** குமரப் பெருமாளே! (5)

---

1. கொன்றை - கொன்; தை; கொன் - வலிமை. தை - தைக்கின்ற.

2. சங்கம் - சங்கு போன்ற கண்டம்.

3. என்றற்றலை - என்றன் தலை.

4. அந்திக் கடல் - செந்திலுக்கும் மகேந்திரபுரிக்கும் இடைச் சந்தியாக-வுள்ள கடல்.

5. அந்தப் பொழிலில் - அந்தப் பூமியாகிய மகேந்திரத்தில்.

6. சந்துத் தலையுற்று - தூதாகச் சென்று.

7. சென்று உற்றவர் - போய் வந்தவராகிய **வீரவாகுதேவர்**

8. கனி - கனிவு "கனிவொடு கிளவி" சிந்தாமணி, 480

## 20

கொங்கையின் பருமையுடனும் (பருத்த கொங்கையுடனும்) செம்பொன் நிறைவுடன் (நிறைந்த செம்பொன் அணி கலன்களுடனும்) மேகம் போன்ற கூந்தலுடனும் கொடிதான —

வலிமையுடன் தைக்கின்ற அம்புக்கு ஒப்பான அந்தக் கயல் மீன் போன்ற கண்களுடனும் கொஞ்சுகின்ற கிளி போன்ற (அதன் பேச்சுக்கு) உறவான —

சங்கு போன்ற கண்டத் தொனியுடனும் (தொண்டைக் குரலுடனும்) வந்து வீட்டின் (வெளிப்) புறத்தில் (தம்மாட்டு வருபவர்களைச்) சந்திப்பவர்களாம் பொதுமகளிருடன் கொஞ்சிக் குலவாமல்,

(பேரின்பச்) சுகநிலையை (நான்) உற (அடைய) எனது தலையில் ( உனது) அழகிய திருவடியை வைத்து அருள் வாயே;

அங்குத் (தமது) சேனையை விட்டு நீங்கி, அப்பொழுதே நீர்நிலையாம் (செந்திலுக்கும், சூரன் தலைநகராம் மகேந்திரபுரிக்கும் இடைச்) சந்தியாக உள்ள கடலை விரைவாக ஓடி (த் தாண்டி),

அந்தப் பூமியாகிய (மகேந்திரத்தில்) தூதராக நுழைந்து சென்று (அவுணர்கள்) அஞ்சப்பொருது, அவர்களுக்கு (அஞ்சி) நீங்காமல்,

சிவந்த கிரணங்களுடைய ஞாயிற்றை (சூரியனைப்) போலப் பொருந்தி, அக் கடல் (கடந்து) போய் வந்தவரான (வீரவாகு தேவரின்) ஆவிப் பொருளானவனே! ஆன்மார்த்த நாயகன் ஆனவனே!

சிந்தையின் கனிவு (அன்பு) வைத்து அழகிய பொழில் சூழ்ந்த திருச்செந்தூர்க் குமரப் பெருமாளே!

([illegible])

## 21. ஒன்றைப் பெற

[1]புகரப் புங்கப் பகரக் குன்றிற்
புயலிற் றங்கிப் பொலிவோனும்

பொருவிற் றஞ்சச் சுருதிச் சங்கப்
பொருளைப் பண்பிற் [2]புகல்வோனும்

திகிரிச் செங்கட் செவியிற் றுஞ்சத்
திகிரிச் செங்கைத் திருமாலும்

திரியப் பொங்கித் திரையற் றுண்டுட்
டெளிதற் **கொன்றைத்** **தரவேணும்;**

[3]தகரத் தந்தச் சிகரத் தொன்றித்
[4]தடநற் கஞ்சத் துறைவோனே!

தருணக் கொங்கைக் குறவிக் கின்பத்
தையளித் தன்புற் றருள்வோனே!

பகரப் பைம்பொற் சிகரக் குன்றைப்[5]
படியிற் சிந்தத் தொடும்வேலா!

பவளத் துங்கப் புரிசைச் **செந்திற்**
பதியிற் கந்தப் பெருமாளே! (6)

---

1. புகர் - புள்ளி; புங்கம் - உயர்ச்சி; குன்று - வெள்ளை யானை; பொலிவோன் - இந்திரன்.

2. புகல்வோன் - பிரமன்.

3. தகரத் தந்தச் சிகரம் - தகரவித்தை யென்கின்ற வேதசிரோ முடியாகிய ப்ரும்ம ஸ்தானம்.

4. தட நற் கஞ்சம் - இருதய கமலம்.

5. குன்று - கிரௌஞ்சம்;'குருகு பெயர் பெற்ற கன வடசிகரி பட்டுருவ வேல் தொட்ட'- வேடிச்சி காவலன் வகுப்பு; கனம் - பொன்.

# 21

புள்ளிகளை உடையதும், உயர்ந்துள்ளதும், அழகுள்ளது மானமலை (போன்ற [1]வெள்ளை யானை) யின் மீதும் மேகத்தின் மீதும் தங்கி விளங்குபவனும் (இந்திரனும்),

இணையில்லாத பெருமையுள்ள வேதத் தொகுதிகளின் பொருளை முறையுடன் சொல்லுபவனும் (பிரமனும்),

மலைபோலப் [2]பெருமைவாய்ந்த பாம்பின்மீது தூங்குகின்ற அந்தச் சக்கரம் (ஏந்திய) திருக்கையை உடைய திருமாலும்,

(ஆக, இம் மூவரும் நமக்கு அந்த உபதேசப் பொருள் கிடைக்க இல்லையே என மனங் கலங்கிச்) சுழல, (என் உள்ளம்) பொங்கி (மகிழ்ந்து), அலைதல் அற்று, (நீ) சொல்லும் உபதேச (மொழியை) உட்கொண்டு, உள்ளம் தெளிவு பெறுதற்கு (அந்த ஒப்பற்றதான தனிப் பொருளாம்) ஒன்றை(எனக்கு)உபதேசித்தருள வேண்டும்;

[3]தகர வித்தை என்கின்ற வேதசிரோ முடியாகிய ப்ரும்ம ஸ்தானத்திற் பொருந்தி நல்ல இருதயகமலம் என்னும் இடத்தில் உறைவோனே!

இளங்கொங்கை கொண்ட குறத்திக்கு இன்பத்தை அளித்து (அவளிடம்) அன்பு உற்று அருள்வோனே!

ஒளிகொண்ட பைம்பொற் சிகரங்களை உடைய மலையைக் (கிரௌஞ்ச மலையை) இப் பூமியிற் சிதறி மடியச் செலுத்திய வேலாயுதனே!

பவளம்போற் சிவந்த தூய மதில் (சூழும்) திருச்செந்தூர்ப் பதியிற் கந்தப் பெருமாளே!

*(உள் தெளிதற்கு ஒன்றைத் தரவேணும்.)*

---

1. வெள்ளை யானை, மேகம் - இவை இந்திரன் வாகனங்கள்

2 செங் கட்செவி; செம்மை - பெருமை; கட்செவி - பாம்பு.

3. தகரம் - இருதயத்தின் உள்ளிடம்; தகர வித்தை - இறைவனைத் தகராகாசத்தில் வைத்துத் தியானம் செய்யும் முறையை உணர்த்தும் வித்தை.

## 22. திருவடி பெற

அளக பாரம லைந்துகு லைந்திட
வதனம் வேர்வுது லங்கிந லங்கிட
அவச மோகம் விளைந்துத ளைந்திட அணைமீதே

அருண வாய்நகை சிந்திய சம்ப்ரம
அடர்ந காநுதி பங்கவி தஞ்செய்து
அதர பானம ருந்திம ருங்கிற முலைமேல்வீழ்ந்

துளமும் வேறுப டும்படி ஒன்றிடு
மகளிர் தோதக இன்பின்மு யங்குதல்
ஒழியு மாறுதெ ளிந்துளம் அன்பொடு சிவயோகத்

துருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
உபய சீதள பங்கய மென்**கழல்** **தருவாயே**

இளகி டாவளர் சந்தன குங்கும
களப பூரண கொங்கைந லம்புனை
இரதி வேள்பணி தந்தையும் அந்தண மறையோனும்

இனிது றாதெதிர் இந்திரன் அண்டரும்
ஹரஹ ராசிவ சங்கர சங்கர
எனமி காவரு நஞ்சினை யுண்டவர் அருள்பாலா!

வளர்நி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவி ரோதமி டுங்குல சம்ப்ரமன்
மகர வாரிக டைந்தநெ டும்புயல் மருகோனே!

*வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் **செந்திலில்** வந்துறை
பெருமாளே! (7)

---

(பா - வே.) * மதுர வாசக மிஞ்சிய கிஞ்சுக
இதழி மாதுளை மைந்தளி ரம்பொழில்
மகிமையமாநகர் வந்துறை இந்திரர் பெருமாளே'

## 22

கூந்தற்பாரம் அலைந்து குலைய, முகத்தில் வியர்வை தோன்றி நுடக்கம் தர, வசமழியும்படி மோகம் உண்டாகிப் பிணிக்க, அணைமேலே —

சிவந்த வாயினின்றும் சிரிப்பை வெளிப்படுத்தின களிப்புடன் நெருக்கிய நகங்களின் நுனிகொண்டு விகாரமாம்படி செய்து (நகக் குறிகளை யிட்டு), இதழ் (அமுதைக் குடித்து) உண்டு இடையற்றுப் போம்படி முலைமேல் வீழ்ந்து —

உள்ளமும் மாறும்படி சேர்கின்ற மாதர்களின் (பின்னர்) வருத்தந்தருவதான இன்பத்திற்சேர்தல் ஒழியும் வண்ணம், உள்ளம் தெளிந்து அன்புடன் சிவயோக நிலையில் —

உருகுகின்ற ஞான உரிமைத் திறங்கொண்ட அறிஞர்கள் கருதுகின்ற சிலம்பணிந்த (உன்) இரண்டு குளிர்ந்த தாமரை போன்ற மெல்லிய திருவடிகளைத் தருவாயே;

தளராது வளரும் சந்தன குங்குமக் கலவை (பூசியுள்ள) நிறைந்த கொங்கை யழகைக் கொண்ட ரதி தேவியின் (கணவனாம்) காமவேள் பணிகின்ற தந்தையாம் திருமாலும், அந்தண மறையோனும்(பிரமனும்),

இனிமையை இழக்க (துன்புற), அங்கு இருந்த இந்திரனும் தேவர்களும் "ஹர ஹரா! சிவ சங்கர! சங்கர!" என்று முறையிடப் பொங்கி எழுந்து வந்த நஞ்சை (ஆலகால விஷத்தை) உண்டவராம் (சிவபிரான்) அருளிய குழந்தையே!

வளர்ச்சியுற்ற அவுணர்களுடைய தலைகள் பொடிபடும்படி பகைமை காட்டிய நற்சிறப்புற்றவனும், மகர மீன்கள் (வாழும்) கடலைக் கடைந்த நெடிய மேகத்தின் நிறத்தைக் கொண்டவனுமான திருமாலின் மருகனே!

வளர்கின்ற வாழையும் மஞ்சளும் இஞ்சியும் எப்போதும் நெருங்கி ( விளங்கும்) மங்கலமும் மகிமையும் உள்ள சிறந்த நகரமாம் **திருச்செந்தூரில்** வந்து உறைகின்ற பெருமாளே!

(பங்கய மென்கழல் தருவாயே.)

## 23. திருவடி பெற

*கமல மாதுடன் இந்திரை யுஞ்சரி*
*சொலவொ ணாதம டந்தையர் சந்தன*
*களப சீதள கொங்கையில் அங்கையில்*
*இருபோதேய்*

*களவு நூல்தெரி வஞ்சனை அஞ்சன*
*விழியின் மோகித கந்தசு கந்தரு*
*கரிய ஓதியில் இந்துமு கந்தனில் மருளாதே*

*அமல மாகிய சிந்தைய டைந்தகல்*
*தொலைவிலாதஅ றம்பொருள் இன்பமும்*
*அடைய ஓதியு ணர்ந்துத ணந்தபின் அருள்தானே*

*அறியு மாறுபெ றும்படி அன்பினின்*
*இனிய நாதசி லம்புபு லம்பிடும்*
*அருண ஆடக கிண்கிணி தங்கிய* **அடிதாராய்!**

[1]*குமரி காளிப யங்கரி சங்கரி*
*கவுரி நீலிப ரம்பரை அம்பிகை*
*குடிலை யோகினி சண்டினி குண்டலி எமதாயி*

*குறைவி லாள்உமை மந்திரி அந்திரி*
*வெகுவி தாகம சுந்தரி தந்தருள்*
*குமர மூஷிக முந்திய ஐங்கர கணராயன்*

*மமவி நாயகன் நஞ்சுமிழ் கஞ்சுகி*
*அணிக ஜானன விம்பனொர் அம்புலி*
*மவுலி யானுறு சிந்தையு கந்தருள்*
*இளையோனே !*

---

1. தேவி பெயர்களின் பொருள் விளக்கம் பின்னர் வரும் திருப்புகழ் ஆராய்ச்சியிற் காண்க.

## 23

தாமரைப் பிராட்டியும் (கலைமகளும்), இலக்குமியும் (இவர்களுக்கு ஒப்பு என்று) சொல்ல ஒண்ணாத (அழகு வாய்ந்த) மாதர்களின் சந்தனக் கலவை (அணிந்த) குளிர்ந்த கொங்கையினும், அங்கையிலும், இரண்டு மலர் (தாமரை) போன்ற —

களவு நூல்களைக் கற்றறிந்த, வஞ்சங்கொண்ட, மை (பூசின) கண்களிலும், காம மயக்கத்தையும் (நறு) மணச் சுகத்தையும் தரும் கறுத்த கூந்தலிலும், திங்கள் (நிலவு) போன்ற முகத்திலும் மயக்கங் கொள்ளாமல் —

மாசு இல்லாத (தூய) சிந்தையை அடைந்து, பரந்துள்ளதும் அழிவு இல்லாததுமான அறம், பொருள் இன்ப (நூல்கள்) முழுமையும் ஓதி, உணர்ந்து, அடங்கிய பின்னர், (உனது) திருவருள் உண்மையையே —

(நான்) அறியவும், பெறவும், அன்புடனே இனியத் ஒலியை தரும் சிலம்பு ஒலிக்கின்ற, செம்பொன்னாலாய கிண்கிணி அணிந்துள்ள (உனது) திருவடியைத் தந்தருளுக;

குமரி, காளி, பயங்கரி, சங்கரி, கவுரி, நீலி, பரம்பரை, அம்பிகை, குடிலை, யோகினி, சண்டினி, குண்டலி, எமது ஆயி (தாயி) —

குறைவில்லாதவள், உமை, மந்தரி, அந்தரி, வெகு விதமான ஆகம சுந்தரி (எனப்படும் பார்வதி தேவி)தந்தருளிய குமரனே! பெருச்சாளி வாகனத்தைச் செலுத்தும் (அல்லது பெருச்சாளி வாகத்தைக் கொண்டவனும்) (உனக்கு) முன்னவனுமான ஐந்து கரங்களையுடைய கணராஜனும் (கணபதியும்),

எனது விநாயக (மூர்த்தியும்), நஞ்சைக் கக்குகின்ற பாம்பை (அரையில்) அணிந்துள்ள யானைமுக வடிவினனும் (ஒளியினை உடையவனும்), ஒப்பற்ற பிறையை முடியிலணிந்துள்ளவனுமான (கணபதி) சிந்தை மகிழ்ந்தருளும் இளையோனே!

வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாது நெருங்கிய மங்கல
மகிமை மாநகர் **செந்திலில்** வந்துறை
பெருமானே! (8)

## 24. அருள் பெற

[1]அவனிபெ றுந்தோட் டம்பொற்
[2]குழையட ரம்பாற் புண்பட்
டரிவையர் தம்பாற் கொங்கைக் கிடையேசென்

றணைதரு பண்டாட் டங்கற்
றுருகிய கொண்டாட் டம்பெற்
றழிதரு திண்டாட் டஞ்சற் றொழியாதே

பவமற நெஞ்சாற் சிந்தித்
திலகுக டம்பார்த் தண்டைப்
பதயுக ளம்போற் றுங்கொற் றமுநாளும்

பதறிய அங்காப் பும்பத்
தியுமறி வும்போய்ச் சங்கைப்
படுதுயர் கண்பார்த் தன்புற் **றருளாயோ!**

தவநெறி குன்றாப் பண்பிற்
றுறவின ருந்தோற் றஞ்சத்
தனி [3]மல ரஞ்சார்ப் புங்கத் தமராடி

---

1. அவனி பெறும் தோட்டு அம் பொற் குழை - பூமியை விலை மதிக்கும்படியான தோடாகிய அழகிய பொற் குழை.

2. குழை - காது - "மணித் தோடுங் குழையிலாட" (அஷ்டப், சீரங்க நாயகி - ஊச - 3.)

3. மலர் அஞ்சு ஆர் புங்கத்து - ஐவகைப் புஷ்ப பாணத்தால்.

வளர்கின்ற வாழையும் மஞ்சளும் இஞ்சியும் எப்போதும் நெருங்கி (விளங்கும்) மங்கலமும் மகிமையும் கொண்டுள்ள சிறந்த நகரமாம் **திருச்செந்தூரில்** வந்து உறைகின்ற பெருமாளே!

*(கிண் கிணி தங்கிய அடிதாராய்.)*

## 24

பூமியையே விலைமதிக்கும்படியான தோடு விளங்கும் மிக அழகிய காதை நெருங்கிவரும் அம்பு போன்ற கண்ணால் (மனம்) புண்பட்டு, மாதர்களின் கொங்கைக்கு இடையே சென்று —

அணைகின்ற பழைய ஆட்டங்களை (காமலீலைகளை)க் கற்று உருகிய பெருங்களிப்பைப் பெற்றுப் (பின்னர்) அழிவைத் தரும் திண்டாட்டம் கொஞ்சம் ஒழியக் கூடாதோ! (கொஞ்ச மேனும் ஒழியாது எனலுமாம்.)

பிறப்பு ஒழியவேண்டி நெஞ்சாற் சிந்தனைசெய்து, விளங்குகின்ற கடப்பமலர் நிறைந்த, தண்டை சூழ்ந்துள்ள, (உனது) அடியிரண்டையும் போற்றுகின்ற திடவீரமும், நாள்தோறும் —

(உனது திருவருளை நாடிப்) பதறுகின்ற (அருள் கிட்டாதா என்று வாய்திறக்கும்) ஆசைப்பாடும், பக்தியும் அறிவும் இல்லாது போய், அச்சமுறும் துயரில் (நான்) படுதலை (நீ) கண்பார்த்து அன்புற்று அருளமாட்டாயா?

தவநெறி குறையாத குணத்தினராம் துறவிகள் கூடத் தோற்று அஞ்சும்படி (தனது ஒப்பற்ற) மலர்ப்பாணங்கள் ஐந்தின் நிறைந்த குவியல் கொண்டு போர் செய்து —

தமிழினி [1]தென்காற் கன்றிற்
றிரிதரு [2]கஞ்சாக் கன்றைத்
தழலெழ வென்றார்க் கன்றற் புதமாகச்

சிவவடி வங்காட் டுஞ்சற்
குருபர! தென்பாற் சங்கத்
திரள்மணி சிந்தாச் சிந்துக் கரைமோதும்

தினகர திண்டேர்ச் சண்டப்
பரியிட றுங்கோட் டிஞ்சித்
திருவளர்**செந்தூர்**க் கந்தப் பெருமாளே! (9)

## 25. தமிழ் (இயல் – இசை) பாடிப் புகழ

தொடரிய மன்போற் றுங்கப்
படையைவ ளைந்தோட் டீ[3] துட்
டரையிள குந்தோட் கொங்கைக் கிடுமாயத்

துகில்விழ வுஞ்சேர்த் தங்கத்
துளைவிர குஞ்சூழ்த் தண்டித்
துயர்விளை யுஞ்சூட் டின்பத் தொடுபாயற்

கிடைகொடு சென்றீட் டும்பொற்
[4]பணியரை மென்றேற் றங்கற்
றனையென இன்[5]றோட் டென்[6]றற் கிடுமாதர்க்

1. தென்கால் கன்றில் - இளந்தென்றற் காற்றில்.

2. கஞ்சாக் கன்று - மன்மதன்.

3, 4. துட்டரை பணியரை - துட்டர்க்கு, பணியர்க்கு; இவை உருபு மயக்கம்.

5. டீட்டென்று - டீடென்று.

6. அற்கிடும்: அல்கிடும் - அன்பு சுருங்கும்.

தமிழ்போல இனிய இளந்தென்றற் காற்றில் உலவுகின்ற இலக்குமி குமரனை (மன்மதனை) நெருப்பை எழுப்பி வென்ற சிவபிராற்கு அன்று அற்புதமான வகையில்,

சிவ வடிவத்தை (பேரின்ப உண்மை மங்களப் பொருளை)க் காட்டிய சற்குருபரனே! தெற்குப் பக்கத்திலே சங்கின் கூட்டங்கள் மணிகளைச் சிந்தும் கடலானது கரையில் மோதுகின்றதும் —

சூரியனுடைய வலிய தேரிற் (பூட்டியுள்ள) வலிய குதிரைக்குக் (கால்) இடறும் (படியாக உயர்ந்துள்ள) சிகரங்களை உடைய மதில் சூழ்ந்துள்ளதுமான செல்வம் (லட்சுமீகரம்) வளர்கின்ற (திருச்) செந்தூர்க் கந்தப் பெருமாளே!

(கண் பார்த்து அன்புற்று அருளாயோ.)

## 25

தொடர்ந்து வரும் யமன் போலக் (காமனது) வெற்றிப்படைகளை வளைத்துச் செலுத்தும் துட்டர்க்கு (துஷ்ட மாதர்க்கு), தழைத்த தோள் (மீதும்) கொங்கை (மீதும்) இட்டுள்ள (அணிந்துள்ள) மாய —

ஆடை விழவும் (அதை எடுத்து) உடலிற் சேர்த்து, வருத்தந்தரக்கூடிய தந்திர சூழ்ச்சிகளுடன் நெருங்கித் துன்பம் விளைவிக்கும் புதிய இன்பத்துடன் படுக்கை —

இடத்தே கொண்டு சென்று (அதனாற்) சேர்க்கும் பொன் அணிகளை உடைய மாதர்க்கு, மெதுவாகத் தெளிவு கற்று விட்டாயோ (அடைந்து விட்டாயோ) எனக் கூறி, இன்றே ஓடிப்போ என்று (வெருட்டி) அன்பு சுருங்கும் மாதர்க்கு;

கினிமையி லொன்றாய்ச் சென்றுட்
படுமன முன்றாட் கன்புற்
றியலிசை கொண்டேத் **தென்றுட்** டருவாயே;

நெடிதுத வங்கூர்க் குஞ்சற்
புருடரும் நைந்தேக் கம்பெற்
றயர்வுற நின்றார்த் தங்கட் கணையேவும்-

நிகரில்ம தன்தேர்க் குன்றற்
றெரியில்வி ழுந்தேர்ப் பொன்றச்
சிறிதுநி னைந்தாட் டங்கற் றிடுவார்முன்;

திடமுறு அன்பாற் சிந்தைக்
*கறிவிட முஞ்சேர்த் தும்பர்க்
கிடர்களை யும்போர்ச் செங்கைத் திறல்வேலா-

தினவரி வண்டார்த் தின்புற்
றிசைகொடு வந்தேத் திஞ்சித்
திருவளர் **செந்தூர்க்** கந்தப் பெருமாளே(10)

## 26. பாதுகைதீட்சை பெற

அனிச்சங் †கார்முகம் வீசிட மாசறு
துவட்பஞ் சானத டாகம்வி டாமட
அனத்தின் தூவிகு லாவிய சீறடி மடமானார்

அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
அழுத்தும் பாவியை யாவி ‡யிடேறிட நெறிபாரா;

* அறிவிடம் - தெளிவு.

† கார்முகம் - பஞ்சு கொட்டும் வில்.

‡ இடேறிட - ஈடேறிட.

இனிமையில் ஒன்றுபட்டுச் சென்று உட்படுகின்ற (என்) மனம் உனது தாள்மீது அன்பு உற்று இயற்றமிழும் இசைத் தமிழுங் கொண்டு ஏத்துக என்னும் உள்ளப் (பண்பைப் பெற) அருளுவாயாக —

நீண்ட தவம் மேம்பட்டுள்ள உத்தம புருடர்களும் நைந்து ஏக்கங்கொண்டு தளர்ச்சி உறும்படி நின்று, ஆர்ப்பரித்து அவ்விடத்தே (தனது) அம்புகளைச் செலுத்தும் —

(தனக்கு) ஒப்பில்லாத மன்மதன் தன்னுடைய மலைபோன்ற தேரை இழந்து தீயில் விழுந்து அழகு அழியும் வண்ணம் சற்றே நினைந்து ஒரு திருவிளையாடலைச் செய்திட்ட (சிவபிரான்) முன்னிலையில் —

திடங்கொண்ட அன்புடன் (அச் சிவனது) சிந்தையில் தெளிவு தரும் அறிவுப் பொருளைச் சேர்த்து (உபதேசித்து), தேவர்களுடைய துன்பங்களைக் களைந்த போரைச் செய்த செவ்விய திருக்கையில் உள்ள திறல் வாய்ந்த வேலாயுதத்தை உடையவனே!

தினந்தோறும் இசைப் பாட்டுக்களை வண்டுகள் (அல்லது ரேகைகளை உடைய வண்டுகள்) ஒலித்து இன்புற்று இசையுடன் வந்து ஏத்துகின்ற மதில் (சூழ்ந்த) (செந்தூர்க் கந்தப் பெருமாளே) செல்வம் வளரும் செந்தூர்க் கந்தப் பெருமாளே!

*(உன் தாள்மீது அன்புற்று ஏத்தும் உள்ளத்தைத் தந்தருளுக)*

## 26

அனிச்சப் பூப்போல (மென்மை) உடையதும், பஞ்சு கொட்டும் வில் வீசுகின்ற தூயதும் துவளுகின்றதுமான பஞ்சு போன்றதும், நீர் நிலையை விடாது பற்றுவதுமான மெல்லிய அன்னப் பறவையின் இறகுபோல மென்மை வாய்ந்ததுமான சிற்றடிகளை உடைய மடப்பம் பொருந்திய மாதர்களுடைய —

சூரியன்போல ஒளிவீசுகின்ற உயர்ந்த மரகதத்தைக் கொண்டுள்ள அழகிய அணிகலன்களை அணிந்துள்ள (மாதர்களுடைய) முலைமீது முகத்தை அழுத்துகின்ற பாவியை, ஆவி ஈடேறும்படியான வழியைக் காணாத

வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கண் டா்ணவ மானநிர் மூடனை
* விடக்கன் பாய்நுகர் பாழனை யோர்மொழி
பகராதே-

விகற்பங் கூறிடு மோகவி காரனை
அறத்தின் பாலொழு காதமு தேவியை
விளித்துன் பாதுகை நீதர நானருள் பெறுவேனோ;

முனைச்சங் கோலிடு நீலம கோததி
அடைத்தஞ் சாதஇ ராவண னீள்பல
முடிக்கன் றோர்கணை யேவுமி ராகவன் மருகோனே!

முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் கா நதி தாதகி கூவிள
முடிக்குஞ் சேகரர் பேரரு ளால்வரு முருகோனே!

தினைச்செங் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வே †கணி யாகிய
திறற்கந் தாவளி நாயகி காமுறும் எழில்வேலா!

சிறக்குந் தாமரை யோடையில் மேடையில்
நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
திருச் செந் தூர்வரு சேவக னேசுரர் பெருமாளே.(11)

## 27. ஆண்டருள

உருக்கம் பேசிய நீலியர் காசுகள்
பறிக்குந் தோஷிகள் மோகவி காரிகள்
உருட்டும் பார்வையர் மாபழி காரிகள் மதியாதே-

---

* விடக்கு - மாமிசம்.

† கணி - வேங்கை மரம்.

வினை (மிக்க) சண்டாளனை, வீணனை, பெரும் பொருளைப் பெற்றதனால் ஆணவம் கொண்ட முழுமூடனை, மாமிசத்தை ஆசையுடன் உண்ணும் பாழானவனை, (நேர்மையான) ஒரு சொல்லைச் சொல்லாமல் —

மாறுபட்ட பேச்சுக்களையே பேசும் மோக விகாரனை, அற நெறியில் ஒழுகாத மூதேவியாகிய என்னை அழைத்து உனது பாதுகையை (பாதரட்சையை) நீ தர நான் பெறும்படியான அருளைப் பெறுவேனோ!

முனை (மூக்கை) உடைய சங்குகள் ஒலிக்கின்ற நீலக் கடலை அடைத்து, அஞ்சுதலில்லாத இராவணனுடைய நீண்ட பல முடிகளும் (வீழ) அன்று ஓர் அம்பைச் செலுத்திய ராகவனுடைய மருகனே!

முளைக்கும் குளிர்ந்த நிலாவோடு (வளர்பிறைச் சந்திரனோடு) பாம்பு, விரிந்து அலை (மோதும்) கங்கை நதி, ஆத்திப் பூ, வில்வம் (இவைகளைச்) சூடும் திருமுடியை உடையவருடைய பேரருளாலே தோன்றிய முருகோனே!

தினைப்புனத்திருந்த செவ்விய காட்டு வேடர்கள் திகைப்புற்று "ஐயோ! இதென்ன அதிசயம்" என்று கூறும்படியாக வேங்கை மரமாய் நின்ற திறல்வாய்ந்த கந்தா! வள்ளி நாயகியம்மை ஆசைப்படும் அழகு வாய்ந்த வேலனே!

சிறந்த தாமரை ஓடையிலும் மேடையிலும் நிறைசூல் (நிறைந்த கர்ப்பம்) கொண்ட சங்குகள் பால்போலும் வெண்மணிகளை (முத்துக்களை) வீசுகின்ற **திருச்செந்தூரில்** எழுந்தருளியுள்ள பராக்ரமசாலியே! தேவர் பெருமாளே!

(பாதுகை நீ தர நான் அருள் பெறுவேனோ!)

## 27

உருக்கமான மொழிகளைப் பேசும் *நீலியர் (தந்திரம் உள்ளவர்,) காசு பறிக்கும் குற்றம் உள்ளவர், மோக விகாரங் கொண்டவர், உருட்டிப் பார்க்கும் பார்வையர், மிக்க பழிகாரிகள் — மதிக்காமல்

---

*நீலியர் - நீலி போன்றவர்;' உருக்கம் உள்ளவர்போல நடிப்பவர். நீலி - திருவாலங்காட்டுப் பெண் பேய் — **நீலியின் வரலாற்றுச்**

உரைக்கும் வீரிகள் கோளர வாமென
வுடற்றுந் தாதியர் காசள வேமனம்
உறைக்குந் தூரிகள் மீதினி லாசைகள்
புரிவேனோ ;

அருக்கன் போலொளி வீசிய மாமுடி
யனைத்துந் தானழ காய்நல மேதர
அருட்கண் பார்வையி னாலடி யார்தமை
மகிழ்வோடே-
அழைத்துஞ் சேதிகள் பேசிய காரண
வடிப்பந் தானென வேயெனை நாடொறும்
அதிக்கஞ் சேர்தர வேயரு ளாலுட **னினிதாள்வாய்;**

இருக்குங் காரண மீறிய வேதமும்
இசைக்குஞ் சாரமு மேதொழு தேவர்கள்
இடுக்கண் தீர்கன னேயடி யார்தவ முடன்மேவி-
இலக்கந் தானென வேதொழ வேமகிழ்
விருப்பங் கூர்தரு மாதியு மாயுல
கிறுக்குந் தாதகி சூடிய வேணிய னருள்பாலா;

திருக்குந் தாபதர் வேதிய ராதியர்
துதிக்குந் தாளுடை நாயக னாகிய
செகச்செஞ் சோதியு மாகிய மாதவன் மருகோனே-
செழிக்குஞ் சாலியு மேகம ளாவிய
கருப்பஞ் சோலையும் வாழையு மேதிகழ்
**திருச்செந்தூர்**தனில் மேவிய தேவர்கள்
பெருமாளே. (12)

பேசும் வீரமுள்ளவர், கொல்ல வருகின்ற பாம்புபோல எதிர்க்கும் வேசைகள், (கிடைத்த) காசின் அளவுக்குத் தக்கபடி மனத்தை அழுந்தச் செலுத்தும் ஊசற்குணம் உடையோர் (இத்தகையோர்) மேலே ஆசைகள் கொள்வேனோ!

சூரியன்போல ஒளி வீசும் திருமுடிகளெல்லாம் அழகாய் நலமே தர (உனது) அருட்கண் பார்வை கொண்டு அடியார்களை மகிழ்ச்சியுடனே —

அழைத்தும், (அவர்களோடு) விஷயங்களைப் பேசும் மூலப் பொருளே! செப்பம் (திருந்திய குணம்) உள்ளவன்தான் இவன் என்று என்னை நாள்தோறும் ஆதிக்கம் (தலைமைத்தானம்) சேரும் படியாகவே திருவருள் பாலித்து இப்பொழுதே இனிமையுடன் ஆண்டருளு-வாயாக —

இருக்கு வேதமும், காரணங் கடந்த (ஏனைய) வேதங்களும் மொழிகின்ற சாரமான பொருளைத் தொழுது ஒழுகும் தேவர்களுடைய துன்பங்களைத் தீர்க்கின்ற பெருமை வாய்ந்தவனே! அடியார்கள் தவநெறியில் நின்று,

இவரே நமது குறிப்பொருள் என்று தொழ (அல்லது-லட்சக் கணக்காய் நின்றுதொழ) மகிழ்ந்து விருப்பம் மிகக் கொள்ளும் ஆதிப்பிரானாய், உலகை அழிக்கும் மூர்த்தி யாய், ஆத்தி மலர் சூடிய சடைப்பெருமானாய் உள்ள (சிவபிரான்) அருளிய குழந்தையே!

(திரிகாலங்களையும் - சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் மூன்று காலங்களையும்) காணவல்ல தவசிரேட்டர்கள், வேதியர் முதலானோர் துதிக்கும் திருவடிகளை உடைய பெருமானாகிய உலகுக்குப் பேரொளியாய் விளங்குகின்ற திருமாலின் மருகனே!

செழிப்புள்ள செந்நெற்பயிரும், மேகத்தை எட்டும்படி (வளர்ந்துள்ள) கரும்புச் சோலையும், வாழைகளுமே பொலிகின்ற **திருச்செந்தூரில்** வீற்றிருக்கும் தேவர்கள் பெருமாளே!

(அருளால் உடன் இனிது ஆள்வாய்)

---

**சுருக்கம்**: தன் மனைவியின் கற்பிற் சந்தேகங் கொண்ட பிராமணன் ஒருவன் அவளைக் கொன்றுவிட்டான், அடுத்த பிறவி

## 28. ஞானக்கண்ணால் தரிசிக்க.

நிறுக்குஞ் *சூதன மெய்த்தன முண்டைகள்
கருப்பஞ் சாறொட ரைத்துள வுண்டைகள்
நிழற்கண் காண †வு ணக்கிம ணம்பல தடவாமேல்-

நெருக்கும் பாயலில் வெற்றிலை யின்புறம்
ஒளித்தன் பாகஅ ளித்தபி னிங்கெனை
நினைக்கின் றீரிலை மெச்சலி தஞ்சொலி
யெனவோதி:

உறக்கண் டாசைவ லைக்குள ழுந்திட
விடுக்கும் பாவிகள் பொட்டிகள் சிந்தனை
யுருக்குந் தூவைகள் செட்டைகு ணந்தனி
லுழலாமே-

உலப்பின் றாறெனு மக்கர முங்கமழ்
கடப்பந் தாருமு கப்ரபை யுந்தினம்
உளத்தின் பார்வை யிடத்தி னினைந்திட
அருள்வாயே;

கறுக்குந் தூயமி டற்றன ருஞ் ‡சிலை
யெடுக்குந் தோள §னி றத்தம ரெண்கரி
கடக்குந் தானவ னைக்கொல ரும்புயன் மருகோனே-
கனத்தஞ் சாபுரி சிக்கல்வ லஞ்சுழி
திருச்செங் கோடு இடைக்கழி [1]தண்டலை
களர்ச்செங் காடு குறுக்கை புறம்பயம் அமர்வோனே

---

* சூது + அன்ன; † உணக்கி = உலர்த்தி.

‡ சிலை - மலை. § நிறம் - மார்பு.

'திசையானையின் மருப்புலக்க வழங்கிய மார்பினான்'
- கம்ப. ராமா. ராவணன் வதை 189.

1. தண்டலை - தண்டலைநீணெறி.

## 28

நிமிர்ந்து நிற்கும் சூதாடு கருவி போன்ற மார்பிற் கொங்கைகளை உடைய முண்டைகள், கரும்பின் சாற்றோடு அரைத்து வைத்துள்ள (மருந்து) உண்டைகளை நிழலிடத்தே (காய) உலர்த்தி, (அவைகளுக்கு) வாசனை பலவும் தடவிப் பின்பு —

நெருங்கிப் படுக்கையில் (வந்தவனொடு இருந்து) வெற்றிலையின் புறத்தே (அந்த மருந்தை) ஒளித்து அன்பு காட்டி (அவனுக்கு) அளித்துப் பின்னர் 'இங்கு என்னை நீர் நினைப்பதே இல்லை மெச்சும் சொல் இதமான சொல் சொல்லி' என்று ஓதி,

(தனது மாயத்தில் அவன்) விழக் கண்டு ஆசை வலைக்குள் அவன் அமுந்தும்படி விடுக்கின்ற பாவிகள், வேசிகள், எண்ணங்களை உருக்கும் தூவைகள் (இறைச்சி உண்போர்)-(அவரது) உலோப குணத்தில் (சிக்குண்டு நான்) அலையாமல்,

அழிவில்லாத ஆறு என்று சொல்லப்படும் எழுத்துக்களையும் (ஆறெழுத்தையும் - சடாட்சரத்தையும், மணம் வீசும் கடப்ப மாலையையும், (திரு)முக ஒளியையும், நாள் தோறும் (எனது) உள்ளக்கண்ணில் நினைக்கும்படி அருள்புரிவாயே;

கரிய தூய கழுத்தையுடைய (சிவனது) அரிய மலையாம் கயிலையை எடுத்த தோள்களை உடையவனும், (கொம்புகள் தனது) மார்பிற் பொருந்த வந்த எட்டு (த்திக்கு) யானைகளையும் வென்றவனுமான அரக்கனைக் கொன்ற அருமை வாய்ந்த தோள் வலிமை பெற்ற) (மேக நிறமுள்ள) திருமாலின் மருகனே!

பெருமை பொருந்திய தஞ்சாவூர், சிக்கல், திருவலஞ்சுழி, திருச்செங்கோடு, திரு இடைக்கழி, தண்டலை நீணெறி, திருக்களர், திருச்செங்காட்டங்குடி, திருக்குறுக்கை, திருப்புறம்பயம் என்னும் தலங்களில் அமர்ந்திருப்பவனே!

---

யில் அவன் ஒரு செட்டியாகப் பிறந்தான்; தன் குலத்து நங்கை ஒருத்தியை மணந்தான்; அவள் கருப்பமாய்த் தன் தாய் வீட்டில் இருந்தாள். செட்டி அவளை அழைத்துப்போக வந்தான். மாமனார் வீட்டார் பிரசவமான பின்பு

சிறுக்கண் கூர்மத அத்தி [1]சயிந்தவ
நடக்குந் தேரணி கப்படை கொண்டமர்
செலுத்தும் பாதகன் அக்ரமன் வஞ்சனை
யுருவானோன்-

செருக்குஞ் சூரக லத்தை யிடந்துயிர்
குடிக்குங் கூரிய சத்திய மர்ந்தருள்
**திருச்செந் தூர்** நக ரிக்குள் விளங்கிய
பெருமாளே! (13)

## 29. பொது மகளிரால் வருந் துயரற

கரிக்கொம்பந் தனித்தங்கங்
குடத்தின்பந் தனத்தின்கண்
கறுப்புந்தன்சிவப்புஞ்செம் பொறிதோள்சேர்

கணைக்கும்பண் டுழைக்கும்பங்
களிக்கும்பண் பொழிக்குங்கண்
கழுத்துஞ்சங்கொளிக்கும்பொன் குழையாடச்

சரக்குஞ்சம் புடைக்கும்பொன்
றுகிற்றந்தந்தரிக்குந்தன்
சடத்தும் [2]பண் பிலுக்குஞ்சம் பளமாதர்

1. சயிந்தவம் - குதிரை.

2. பண் பிலுக்கல் - தகுதியாகிய வஸ்துக்களைக் கொண்டு ஆடம்பரமாக அலங்கரித்தல்.

சிறிய கண்களையும், மிகுந்த மதத்தையும் உடைய யானை, குதிரை, செலுத்தப்படும் தேர், காலாட்படை (என்னும்) நாற்படையையுங்) கொண்டு போர் புரிந்த பாதகனும், அநீதி புரிந்தவனும், வஞ்சனை உருக்கொண்டவனும் —

அகங்காரம் கொண்டவனுமான சூரனுடைய மார்பைப் பிளந்து (அவன்) உயிரைக் குடித்த கூரிய சக்தி (வேல்) பொருந்தி யிலங்கியருளும் திருச்செந்தூர் நகரத்துள் விளங்குகின்ற பெருமாளே!

(நினைந்திட அருள்வாயே.)

## 29

யானையின் கொம்பு போலவும் ஒப்பற்ற தங்கக் குடம் போலவும் (தோன்றி) இன்பம் (தருகின்ற) கொங்கை, இடத்தே கரு நிறத்தையும் செந்நிறத்தையும் செவ்வரியை யும் உடையதாய்த் தோள் சேர் அளவினதாய் (நீண்டதாய்) —

அம்புக்கும், முன்னதாக மானுக்கும் பங்கு அளிப்பதாய் (அம்பும் மானும் போன்றதாய்), (நற்) குணத்தை அழிக்க வல்லதாயுள்ள கண், சங்கு (வெட்கி) ஒளிக்கும்படியான கழுத்து, பொன்னாலாய குழைகள் (காதணிகள்), ஊசலாடும் அந்த —

மாலைச் சரம் போலத் தொங்கவிட்டுள்ள கொய்சகம் (கொய்சுவனம்) கொண்ட பொன் ஆடையால் (யானைத்) தந்தம் (போன்ற கொங்கையை) மூடத் தரித்துள்ள தமது உடல் (இவையெல்லாம் கொண்டு),(தகுதியான) பொருள்களைக் கொண்டு (ஆடம்பரமாகத்) தம்மை அலங்கரித்துள்ள விலை மாதர்கள் (பொதுமகளிர்).

---

அவளை அனுப்புவதாகச் சொன்னார்கள். செட்டி தன் ஊருக்குத் திரும்பிவந்தான். வருகிற வழியில் முன் சென்மத்திற் கொலையுண்ட மனைவியின் பிரமகத்தி செட்டியின் மனைவிபோல வடிவெடுத்து எதிர்பட்டு 'உங்களைவிட்டு இருக்க மனம் வராமல் நானும் வந்துவிட்டேன்' எனச், செட்டி இது ஏதோ மாயம் எனத் தேர்ந்து 'நீ என் மனைவியல்லள்; என்

சலித்தும்பின்சிரித்துங்கொண்
டழைத்துஞ்[1]சண் பசப்பும்பெண்
தனத் துன்பந் தவிப்புண்டிங் குழல்வேனோ;

சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ்
செழுத்தின்பங் களித் துண்பண்
சுகத்துய் ந்தின் பலர்ச்சிந்தங் கசுராரைத்

துவைத் தும்பந் தடித்துஞ்சங்
கொலித்துங்குன் றிடித்தும்பண்
சுகித்துங்கண் களிப்புங்கொண் டிடும்வேலா;

சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந்தொங்கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே

தினைத்தொந்தங் குறப்பெண்பண்
சசிப்பெண்கொங்கையிற்றுஞ்சுஞ்
செழிக்குஞ் **செந்தி** லிற்றங்கும்
பெருமாளே ! (14)

---

1. 'சண் - சண்ணித்தல்' - சார்ந்திருத்தல் - 'ஆமாத்தூர் சண்ணிப்பானை' - தேவாரம், அப்பர் V - 44 - 8.

முதலில் சலித்தும் பின்னர்ச் சிரித்துக்கொண்டு அழைத்துச் சென்றும், சார்ந்து பசப்புகின்ற பெண்கள், (இத்தகையாரது) கொங்கையால் (வரும்) துன்பத்தால் தவிப்புண்டு இங்கு (மனம்) சுழல்வேனோ!

தேவர்களின் கூட்டம் துதி செய்து அந்த ஐந்தெழுத்தால் (வரும்) இன்பத்தில் மகிழ்ந்து, உண்ணுதல் இசை பாடுதல் ஆகிய சுகத்தில் திளைத்து இன்பம் கூடுதலைச் சிந்தும்படி (அழியும்படி அசுரர்கள்) செய்த காரணத்தால் (தேவர்களைத் துன்புறுத்தியதால்) அங்கு அசுரர்களை —

மிதித்துக் கசக்கியும், பந்தடிப்பதுபோல அடித்தும் சங்க (வெற்றி) ஒலி செய்தும் (கிரௌஞ்ச) மலையைப் பொடி படுத்தியும், இசையொலி (துதி யொலி கேட்டு) மகிழ்ந்தும், கண்களிப்புக் கொண்ட வேலா!

(உன்னை வணங்குவதால்) தலை பயன் பெறுதலையும், (உன்னைக் கைகூப்பித் தொழுவதால்) கைகள் பயன் பெறுதலையும்(உனக்குக்) கடப்பமாலை சூட்டுதலால் பயன் பெறுதலையும், சிவமாந் தன்மை பெறுதலையும், தவநிலை பெறுதலையும் தருவோனே (தந்து அருள்பவனே)!

தினைப்புனத்துத் தொடர்புடைய குறப்பெண் (வள்ளி) சீர் (நிறைந்த) சசிப்பெண் (தேவ சேனை) இவர்தம் கொங்கையில் துயில்கொள்ளும் (பெருமானே)! செழித்து வரும் திருச்செந்தூரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தவிப்புண்டிங் குழல்வேனோ.)

---

மனைவி தாய் வீட்டில் இருக்கிறாள்' என இருவருக்கும் தருக்கம் வரச் செட்டி அடுத்திருந்த திருவாலங் காட்டுப் பழையனூர் வேளாளர்கள் முன்பு முறையிட, செட்டியின் மனைவிபோல வடிவெடுத்து வந்த பிரமசக்தி நான் இவர் மனைவிதான்; கர்ப்பமாயிருக்கிறேன்; இன்று இரவு மாத்திரம் இவருடன் ஓர் அறையிற் படுக்க உத்தரவு இடுங்கள் என, வேளாளர்கள் நீ இவளுடன் படுத்துக்கொள்; உனக்கு ஆபத்து வந்தால் நாங்கள் எழுபது பேரும் எங்கள் உயிரைக் கொடுக்கின்றோம் எனக் கூறி அவனை அவளுடன்

## 30. திருவடி பெற

கருப்பந்தங்கிரத்தம்பொங்
[1]கரைப்புண்கொண் டுருக்கும்பெண்
களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே

கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்
துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறிச்

செருத்தண்டந் தரித்தண்டம்
புகத்தண்டந் தகற்கென்றுந்
திகைத்தந்திண் செகத்தஞ்சுங் கொடுமாயுந்

தியக்கங்கண் டுயக்கொண்டென்
பிறப்பங்கஞ்சிறைப்பங்கஞ்
சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே

அருக்கன்சஞ் சரிக்குந்தெண்
டிரைக்கண்சென் றரக்கன்பண்
பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா !

---

1. அரைப்புண் - அல்குல்.

## 30

கருப்பத்துக்கு இடமாய், இரத்தச் செழிப்புள்ள அல்குல் கொண்டு உருக்கும் பெண்களைக் கண்டு அப்போதே அவர் பின் சென்று அவரோடு —

கூடல் கொண்டும் ஊடல் கொண்டும், ஒற்றுமை கொண்டும், வேற்றுமை கொண்டும், இன்பங் கொண்டும், துன்பம் கொண்டும் தடுமாறினவனாய்,

போருக்கு ஏற்ற தண்டாயுதத்தைத் தரித்துப், பூமியில் வந்து, (உயிர்களை) வருத்தும் யமனுக்கு என்றும் அச்சம் உற்று அழகிய திண்ணிய இப்பூமியில் ஐம்புலன்களுடன் அழிந்துபோகும் —

(என்) சோர்வினைக் கண்டு, (என்னை) உய்யும்படி (ஆட்) கொண்டு, (என்) பிறப்பாகிய இடரையும், சிறையிலிட்டது போன்ற இடரையும் நீக்கி உனது திருவடி யின்பத்தைத் தந்தளுருக;

(சூரியன் உலவுகின்ற கடலிடத்தே போய்ச் சூரனது பெருமையெல்லாம் அழியும்படி கோபித்த ஒளி வேலனே!

---

படுக்கச்செய்தனர், பொழுது விடிந்ததும் அவளைக் காணோம். செட்டி கிழிபட்டுக் கிடந்தான். இதைக் கண்ட எழுபது பேரும் தாம் சொன்னவாறே தத்தம் உயிரைவிட்டனர். இந்தக் கதை மூலயாகத்தான் "நீலிவேடம் ஏன் போடுகின்றாய்? திருவாலங்காட்டு நீலி அழுகை ஏன் அழுகிறாய்? என்ற பழமொழிகள் உலவலாயின. சம்பந்தப்பெருமான் திருவாலங்காட்டுத் தேவாரத்தில்,

"வஞ்சப்படுத் தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே"

என இச் சரித்திரத்தைக் குறித்துள்ளார்.

அணிச்சங்கங் கொழிக்குந்தண்
டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
தளிக்குஞ்செந் திலிற்றங்குங் குமரேசா

[1]புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
கரர்க்குஞ்சங் கரர்க்கின்பம்
புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனானாய் !

புனைக்குன் றந் திளைக்குஞ்செந்
தினைப்பைம்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே! (15)

## 31. திருவடி பெற

குழைக்குஞ்சந் தனச் செங்குங்
குமத்தின்சந் தநற்குன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே-

குழைக்குங்குண் குமிழ்க்குஞ்சென்
றுரைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்கும்பண் தழைக்குஞ்சிங் கியராலே!

---

1. " கங்கைக்கும் நெடியவன் தங்கைக்கும் ஒருமகன்
கனிவாயின் முத்தம் அருளே"
- முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்.

அழகிய சங்குகளை ஒதுக்கி யெறிந்து எழுந்து வீசும் அலையின் (கடலின்) பெருமை எட்டுத் திசையிலும் மேம்பட்டு விளங்கும் திருச்செந்தூரில் வீற்றிருக்கும் குமரேசா!

காத்தளிக்கும் சங்கரிக்கும், சங்கரர்க்கும், சங்கரர்க்கு இன்பம் புதுப்பிக்கும் கங்கைக்கும் பிள்ளையாம் இறைவனே!

கொல்லைகள் விளங்கும் மலையில் (வள்ளிமலையில்) விளையாடிக் கொண்டிருந்த செந்தினை (காத்த) பசும் பொன் அனைய குறவர் மகளின் (வள்ளியின்) குளிர்ந்த கொங்கைப்புறத்தில் துயில்கொள்ளும் பெருமாளே!

(உன் பதத்தின்பந் தருவாயே.)

## 31

குழைத்துக் கலவையான சந்தனம், செங்குங்குமம் (இவைகள் பூசப்பட்டுள்ள) அழகிய நல்ல மலை (போலும் கொங்கைகளைக்) குலுக்கும் பசுங்கொடி (போலத் தோன்றி) இங்குத் தகுதியோடு —

குழை பூண்டுள்ள காதினிடத்தும், [1]நிறமுள்ள குமிழம்பூப் போன்ற மூக்கினிடத்தும் சென்று பேசுவதுபோல (எட்டிப் பார்க்கும்) செவ்விய கயல்மீன் போன்ற கண்களைக் கொண்டு அழைக்கின்ற [2]பண்பு (அல்லது இசைக்குரல்) தழைத்துள்ள விஷமிகள் பொருட்டு (நஞ்சுபோல்பவர்கள் காரணமாக) —

---

1. குண் - குணம் (நிறம்)

2. பண் - பண்பு, கடைக்குறை.

உழைக்குஞ்சங் கடத்துன்பன்
சுகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டுடற்பிண்டம் பருத்தின் றிங் குழலாதே
உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
ப்ரபைக்கொன் றுஞ் சிவக்குந்தண்
டுயர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் **சடிசேராய்;**

தழைக்குங்கொன்றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தரத்தஞ்செம் [1]புயத்தொன் றும் பெருமானார்
தனிப்பங்கின் புறத்தின்செம்
பரத்தின்பங்கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக் கென்றும் பெருவாழ்வே !

கழைக்குங்குஞ் சீரக்கொம்புங்
கலைக்கொம்புங் கதித் தென்றுங்
கயற்கண்பண் பளிக்குந்திண் புயவேளே !
கறுக்குங்கொண் டலிற்பொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ் **செந்**
**திலிற்**கொண்டன் பினிற்றங்கும் பெருமாளே ! (16)

---

1. புயம் - கை.

உழைப்பதால் வரும் சங்கடத் துன்பங்களைக் கொண்டவனாகிய நான், சுகமான பண்டங்களை இனிமை கண்டு உண்டு, உண்டு, உடலாம் பிண்டம் பருத்து இன்று இப் பூமியில் அலையாமல்,

உதிக்கின்ற செஞ்சூரியன் வீசும் ஒளிக்கு ஒப்பானதாய்ச் சிவந்த தண்டையையும், மேலான கிண்கிணியையும் (அணிந்துள்ள) செவ்விய பஞ்சு போன்றதாயுள்ள (உன்) திருவடியிற் சேர்த்தருளுக;

தழைத்துள்ள கொன்றையைச் செம்பொன் போன்ற சடையிற் சேர்த்தும், நெருப்பைத் தங்கும்படியாக அழகிய செவ்விய (தனது) திருக்கையிற் சேர்த்தும் உள்ள பெருமானாருடைய —

ஒப்பற்ற ஒரு பாகத்தின் புறத்திலும், சிறந்த பர மண்டலத்திலும், [2]தாமரை இருப்பிலும் உலவி நிற்கும் சங்கரிக்கு என்றும் (மகிழ்ச்சி தரும்) பெருவாழ்வே! சிறந்த பிள்ளையே!

குத்துக்கோல் (அங்குசம்) கொண்ட யானை (வெள்ளை யானை) வளர்த்த தேவசேனை, மான் (வாயிற்றிற் பிறந்த) வள்ளி இருவரும் எப்போதும் செழிப்புற (அவர்களுடைய) கயல் மீன் போலுங் கண்களுக்கு இன்பம் அளிக்கும் திண்ணிய புயங்களை உடையவனே!

கறுத்த மேகம்போலப் பொங்கி யெழும் கடல் சங்கங்களைக் கொழிக்கின்ற (திருச்) செந்தூரை (இடமாகக்) கொண்டு அன்புடன் (அத் தலத்தில்) வீற்றிருக்கும் பெருமாளே!

(செம்பஞ் சடிசேராய்.)

---

1. 'சதகோடி சூரியர்கள் உதயமென, ஒரு சோதி வீசுவதும்.... மணநாறு சீறடியே' - சீர்பாத வகுப்பு.

2. பார்வதி தாமரையில் வீற்றிருப்பது:

"முக்கண்ணி விரும்பும் வெண் தாமரை" - திருமந்திரம், 1067.

"அம்புய மேல் திருந்திய சுந்தரி" - அபிராமி அந்தாதி, 5

## 32. தமிழ் பாடி (உலகோரை) இரத்தல் ஒழிய

[1]மனத்தின்பங் கென த்தங்கைம்
புலத்தென் றன் குணத்தஞ்சிந்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்

மலர்ச்செங்கண் கனற் பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத் [2]தங்கும் பலவோரும்

எனக்கென்றிங் குனக்கென் றங்
கினத்தின்கண் கணக்கென்றென்
றிளைத்தன்புங் கெடுத்தங்கங் கழிவாமுன்

இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் றொழிற் பங்கங்
கெடத்துன்பங் கழித்தின்பந் தருவாயே;

கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித் [3]தெங்குங்
கலக்கஞ்சிந் திடக்கண்டுஞ் சிடுமாலும்

[4]கதித்தொண்பங் கயத்தன்பண்
பணைத்துங்குன் றிடச்சந்தங்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளீவாய்!

---

1. மனத்தின் பங்கெனத் தங்கு ஐம்புலன் - மனம் செல்வதற்கு வேறு வேறு வாயில்களாகப் பொருந்தி யிருக்கும் ஐம்புலன்.

2. தங்கும் பலவோர் - தத்துவக் கூட்டம்.

3. எங்கும் கலக்கம் சிந்திட கண் துஞ்சிடு மால் - தன் வியாபகத்துக்குட்பட்ட சர்வான்மாக்களும் கலக்கமற்றுச் சுகமுற அனந்தல் கொள்ளுந் திருமால்.

4. கதித்தொண் பங்கயத்தன் - கதித்த ஒண் பங்கயத்தன்; பங்கயத்தன் - பங்கயத்தனும்.

## 32

மனம் செல்வதற்குப் பங்கு (எடுத்துக்கொள்வன) எனத் தங்கியுள்ள ஐம்புலத்தொடு (சம்பந்தப்பட்ட) என்னுடைய குணமும், ஐம்பொறிகளின் கட்டும் (பிணிப்பும்) சிதறிப் போகக் காலன் —

மலர்போலும் (தன்) சிவந்த கண்கள் நெருப்பு மிக்கு எழும் வலிமையுடன் தண்டாயுதத்தை எடுத்து அண்டம் கிழியும் படி (தோன்றி) இங்கு (என்னிடம்) வர, (என்னுடன்) தங்கும் பல சுற்றத்தினரும்,

(இது) எனக்கு என்றும், இங்கு உனக்கு (அது) என்றும் (பாகப் பொருளைப்பற்றிச் சண்டை எழ), அப்போது சுற்றத்தாரிடம் கணக்கு (கணக்கு) என்று பலமுறை கூறி இளைத்து (செய்த பாகக் கணக்கின் காரணமாக உறவினர்களின்) அன்பையும் கெடுத்து, என் உடல் அழிந்து ஒழிக்கப்படுவதற்கு முன்னே,

புகழப்படும் செந்தமிழ் கொண்டு அங்கு (பொருள் உள்ளவரிடம்) இரக்கின்ற இழிதொழிற் குற்றம் நீங்க, (என்) துன்பத்தை ஒழித்து இன்பத்தைத் தந்தருளுக;

ஒலிக்கின்ற குளிர்ந்த கடலிற் சங்கை (பாஞ்சசன்னியம் என்னும் சங்கை)த் (திருக்)கரத்தில் தரித்து, (உலகு) எங்கும் இடர்கள் ஒழிய, அறிதுயில் கொள்ளும் திருமாலும்,

(அவர் உந்தித் தாமரையில்) தோன்றிய (பிரமனும்) (தமது) பெருமை எல்லாம் குலையச், சந்தப் பாடலுக்கு (அல்லது சந்ததமும்-எப்போதும்)மகிழ்ச்சி கொண்டிருக்கும் சிவ பிராற்கும் செம்பொருளை (மூலப் பொருளை) ஈந்தவனே! (உபதேசித்தவனே!)

தினைக்குன் றந் தனிற்றங்குஞ்
சிறுப்பெண்குங் குமக்கும்பந்
திருச்செம்பொன் புயத்தென்றும் புனைவோனே !
செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும்
பெருமாளே ! (17)

## 33. தமிழ் எனக்கென்றே சிறக்க அருள

பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்துந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக்குன்றத் தனமானார்
பரிக்குந்துற் [1]சரக்கொன்றத்
திளைத்தங்குப் பலப்பண்பைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்
[2]துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்புற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனைத்

1. சரக்கு - சரத்துக்கு: அத்துச் சாரியை மறைந்துள்ளது.

2. துரை - வேகம்: 'துரை மாண்டவா பாடித் தோணோக்கம் [illegible] 47

திணை (விளையும்) மலையில் (வள்ளி மலையில்) தங்கியிருந்த சிறிய பெண்ணாம் வள்ளியின் குங்குமங் கொண்டுள்ள குடம் போன்ற கொங்கையை அழகிய செம்பொன் போன்ற திருப்புயங்களில் என்றும் புனைந்தருள்பவனே!

செழித்துள்ள ஆழ்ந்த நீர்நிலை (கடல்) சங்கங்களைக் கொழிக்கும் சந்தனப் பசுஞ்சோலை சூழ்ந்த குளிர்ந்த திருச்செந்தூரில் தங்கும் பெருமாளே!

(துன்பங் கழித்து இன்பம் தருவாயே.)

## 33

பருத்த (யானைத்) தந்தத்தைப்போல இருந்து, அணிந்துள்ள கச்சை அடர்த்துத் தள்ளிப் பருத்து எழும் பொன்னொளி கொண்ட மலைபோலுள்ள கொங்கைகளை உடைய மாதர்கள் —

கொண்டுள்ளதாய், பொல்லாததாய், சரத்துக்கு (அம்புக்கு) ஒத்ததாய் விளங்கி, அங்கு நீலோற்பல மலரின் அழகையும் ஓட்டுவித்துச் சக்கரப்படை போலவும் சத்திவேல் போலவும் —

வேகங்கொண்ட செவ்விய கடைக்கண்களில் (மயக்கம்) பொருந்திப் பேரன்புகொண்டு, இளைத்து, அங்கு அழிபடும் புத்தியின் (நேர்மையைச்) சந்தேகித்து (உண்மையை) அறியாத என்னை —

துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்த[1]திப் படியாள்வாய்;

[2]தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரர்க்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்

சமர்க்கெஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே!

திருக்கஞ்சத் தனைக்கண்டித்
துறக் [3]கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன் றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே

செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே! (18)

---

1. இப் படி- இப் பூமியில் (பழைய உரை).

2. தரு தங்கு அ பொலத்து அண்டத்தினை - கற்பக மரம் தங்கிய அந்தப் பொன்னுலகத்தை.

3. கம் - சிரம்.

(உனது) இரண்டு செம்பொற் பாதங்களில் இன்புறச்செய்து (பிறருக்கு இதுவரையும் கிட்டாததாய்) எனக்கென்றே சிறப்பான வழியில் அப் (பெரும்) பொருள் நிரம்பித் தங்கும்படி தொடுக்கப்படும் தமிழ்ச் சொற்களைத் தந்து [1]இப்பொழுதே (ஓர் ஒப்பற்ற வகையிலே) ஆண்டருளு-வாயாக;

கற்பகமாகிய மரங்கள் உள்ள பொன்னுலகத்தைக் கவர்ந்து அந்தத் தேவர்கள் அஞ்சும்படி பெருந்துன்பங்களை (அவர்களுக்கு)த் தந்து தன்னை எதிர்த்துவந்த சூரன் —

போரில் தாழ்ந்து குறைவுபட்டுப் பூமியில் மடியும்படி ஒளியும் தூய்மையும் கொண்ட வேல்கொண்டு (மடிவித்து) அந்த மேலுலகத்துத் தேவர் தலைவனாம் இந்திரன்மாட்டு அன்புற்று அருள்வோனே!

அழகிய தாமரையில் வீற்றிருக்கும் பிரமனைக் கண்டித்து, அழுந்தும் படி அவன் தலையில் குட்டிவிட்டு, நல்ல சிவனுக்கு அன்று (மூலப்) பொருளை (மழலை மொழியிற்) கொஞ்சி (அன்புடன்) சொன்னவனே!

வெற்றித் தூய்மை, கொடைத் தூய்மை, செல்வம் (இவை யெலாம்) நிலைபெற்று விளங்கும் அழகிய திருச்செந் தூர்ப் பதியிற் கந்தப் பெருமாளே!

(தமிழ் தந்து இப்படி யாள்வாய்.)

---

1. 'இப்படி' 'அப்படி' என்னும் சொற்கள், 'இக்கணமே' 'அக்கணமே' இந்த ஒப்பற்ற வகையில்' 'அந்த ஒப்பற்ற வகையில்' என்னும் பொருள்களில் வருகின்றன:

'ஒப்புடை ஒருவனை உருவழிய, அப்படி அழலெழ விழித்தவனே' தேவாரம் சம்பந்தர் III-4-7. 'இனிது கவி அப்படிப்ரசாதித்த பாவலனும்' -வேடிச்சி காவலன் வகுப்பு. 'மங்கா நற்பொருள் இந்தா அற்புதம் என்றே இப்படி அருள்வாயே' -திருப்புகழ், 861. 'ஒரு பொருள் அப்பர்க்கப்படி ஒப்பித் தர்ச்சனை கொண்டநாதா' - திருப்புகழ், 866.

## 34. தொண்டுற்றுத் தமிழ் பாட

பெருக்கச்சஞ் சலித்துக்கந்
தலுற்றுப்புந் தியற்றுப்பின்
பிழைப்பற்றுங் குறைப்புற்றும் பொதுமாதர்

ப்ரியப்பட்டங் கழைத்துத்தங்
கலைக்குட்டங் கிடப்பட்சம்
பிணித்துத்தந் தனத்தைத்தந் தணையாதே

புரக்கைக்குன் பதத்தைத்தந்
தெனக்குத்தொண் டுறப்பற்றும்
புலத்துக் கண் செழிக்கச்செந் தமிழ்பாடும்

புலப்பட்டங் கொடுத்தற்கும்
கருத்திற்கண் படக்கிட்டும்
புகழ்ச்சிக்குங் க்ருபைச்சித்தம் புரிவாயே;

தருக்கிக்கண் களிக்கத்தெண்
டனிட்டுத்தண் புனத்திற்செங்
குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே-

சலிப்புற்றங் குரத்திற்சம்
ப்ரமித்துக்கொண் டலைத்துத்தன்
சமர்த்திற்சங் கரிக்கத்தண் டியசூரன்

சிரத்தைச்சென் றறுத்துப்பந்
தடித்துத்திண் குவட்டைக்கண்
டிடித்துச்செந் திலிற்புக்கங் குறைவோனே!

## 34

*(நான்) மிகவும் சஞ்சலம் உற்று,* [1] *ஒழுக்கக் கேடு உற்று, நற்புத்தி அற்றுப், பின்னர்ப் பிழைப்பு அற்று, குறை உற்றுப் (போம்படி) பொது மகளிர் (என்னை) —*

*அன்புகொண்டு தங்களிடம் அழைத்துத் தங்களுடைய காமக் கலைக்குள் சிக்கும்படி அன்புகாட்டிப் பிணித்துத் தங்களுடைய கொங்கைகளைத் தந்து அணையாவண்ணம் —*

*(என்னைக்) காத்தற் பொருட்டு உனது திருவடியைத் தந்து நான்தொண்டு செய்து உன்னைப் பற்றும்படியான ஞானக்கண் (அறிவு நிலை) எனக்குச் செழித்தோங்கச் செந்தமிழ் பாடும் —*

*புலவன் என்னும் பட்டத்தை (உலகோர்) கொடுப்பதற்கும் கருத்திலே ஞானக்கண் பெறக் கிட்டும்படியான புகழைப் பெறுதற்கும் (நீ) கிருபைச் சித்தம் புரிவாயே (அருள் மனம் கொண்டு உதவுவாயாக);*

*உள்ளம் பூரித்துக் கண் களிக்கும்படியாகத் தண்டனிட்டு வணங்கிக் குளிர்ந்த (தினைப்) புனத்தில் செவ்விய குறத்தியின்மாட்டு அன்பு பெருக உள்ளம் தளர்ந்தவனே!*

*(தேவர்கள்)சோர்வடையும்படி, அங்குத் தனது வலிமையால் களிப்புற்றெழுந்து (அத் தேவர்களைப்) பிடித்து அலைத்துத் தனது திறமையால் அவர்களை அழித்து வருத்திய சூரனுடைய —*

*சிரத்தைப் போய் அறுத்துப், பந்தடிப்பது போல அடித்து, அந்த வலிய மலையைக் (கிரௌஞ்சத்தைக்) கண்டு அதைப் பொடியாக்கித் திருச்செந்தூரிற் புகுந்து அங்கு உறைபவனே!*

---

1. [illegible] — ஒழுக்கக் (கேடு)

சிறக்கற் [1]கஞ் செழுத்தத்தந்
திருச்சிற்றம் பலத்தத்தன்
செவிக்குப்பண்புறச்செப்பும் பெருமாளே. (19)

## 35. காலன் வருமுன் காட்சி பெற

**காலனார்** வெங்கொடுந் தூதர்பா சங்கொடென்
காலி [2]னார் தந்துடன் கொடுபோகக்

காதலார் மைந்தருந் தாயரா ருஞ்சுடுங்
கானமே பின் தொடர்ந் தலறாமுன்

சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ-தண்டமுஞ்
சூடுதோ ளுந்தடந் திருமார்பும்

தூயதாள் தண்டையுங் காண ஆர் வஞ்செயுந்
தோகைமேல் கொண்டுமுன் **வரவேணும்;**

ஆலகா லம்பரன் பாலதா கஞ்சிடுந்
தேவர்வா ழன்றுகந் தமுதீயும்

ஆரவா ரஞ்செயும் வேலைமேல் கண்வளர்ந்
தாதிமா யன்றனன் மருகோனே!

சாலிசேர் சங்கினம் வாவிசூழ் பங்கயஞ்
சாரலார் **செந்திலம்** பதிவாழ்வே!

தாவுசூ ரஞ்சிமுன் சாயவே கம்பெறுந்
தாரைவே லுந்திடும் பெருமாளே! (20)

---

1. அஞ்செழுத்து அத்தம் - பிரணவ பஞ்சாட்சரப் பொருள்.

2. ஆர்தந்து - கட்டி.

மேம்பாடு உற, ஐந்தெழுத்தின் பொருளைத் திருச்சிற்றம்பலத்தே (திருக்கூத்தாடும்) தந்தையின் செவியில் முறைப்படி ஓதிய பெருமாளே!

(க்ருபைச் சித்தம் புரிவாயே.)

## 35

காலனுடைய மிகக் கொடிய தூதர்கள் பாசக் கயிறு கொண்டு என் காலைக் கட்டித் (தம்முடன்) கொண்டு போக —

அன்புமிக்க பிள்ளைகளும் தாய்மார்களும் சுடுகாட்டுக்குப் பின் தொடர்ந்து அலறி அழுது வருவதற்கு முன்பாகச்,

சூலம், வாள், தண்டாயுதம், செவ்விய சேவல், கோதண்டம் (வில்), இவைகளை ஏந்தியுள்ள திருக்கைகளும் அகன்ற அழகிய மார்பும் —

தூய்மையுள்ள தாளில் அணிந்துள்ள தண்டையும் (நான்) காணும்படி (வெளித் தோன்ற), அன்பு கொண்டுள்ள மயில்மீது ஏறி என் முன்னே (நீ) வந்தருள வேண்டும்;

ஆலகால விடத்தைப் பரமன் ஏற்றுக்கொள்ள, அஞ்சி நின்ற தேவர்கள் வாழும்படி அன்று மகிழ்ச்சியுடன் அமுதத்தை (அவர்களுக்குத்) தந்து,

பேரொலி செய்யும் கடல்மீது துயில் கொள்ளும் ஆதிமாயனாம் (திருமாலின்) நல்ல மருகனே!

செந்நெல் (வயலிற்) சேர்ந்த சங்கின் கூட்டங்களும், குளங்களில் மலர்ந்துள்ள தாமரைகளும் பக்கங்களிற் சார்ந்து நிறைந்துள்ள திருச்செந்திற் பதியில் வாழ்பவனே!

தாவி (எதிர்த்து வந்த) சூரன் அஞ்சி முன் சாய்ந்து அழிய, வேகமும் கூர்மையும் கொண்டுள்ள வேலாயுதத்தைச் செலுத்திய பெருமாளே!

(தோகைமேல் கொண்டு முன் வரவேணும்.)

## 36. பெண்கள் மயக்கற ஆண்டருள

சங்கைதா னொன்றுதா னின்றியே நெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்

சந்தொடே குங்குமா லங்க்ருதா டம்பரா
சம்ப்ரமா நந்தமாயன்

மங்கைமார் கொங்கைசே ரங்கமோ கங்களால்
வம்பிலே துன்புறாமே

வண்குகா நின்சொரூ பம்ப்ரகா சங்கொடே
வந்துநீ **யன்பிலாள்வாய்;**

கங்கைசூ டும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா!

கம்பியா திந்த்ரலோ கங்கள் [1]கா வென்றவா
கண்டலே சன்சொல்வீரா!

செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர் பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா!

செங்கண்மால்[2] பங்கஜா னன்தொழா நந்தவேள்
**செந்தில்வாழ் தம்பிரானே!** (21)

## 37. தொண்டு செய்து (கந்தவேள்) எனக் கூறிப் புகழ

சங்குபோல் மென்கழுத் தந்தவாய் தந்தபற்
சந்தமோ கின்பமுத் தெனவானிற்

1. கா என்று அ ஆகண்டலேசன் எனப் பிரித்துக் கொள்க; ஆகண்டலேசன் - தேவேந்திரன்.

2. பங்கஜாஸனன் என்பது பங்கஜானன் என்றாயிற்று.

## 36

சந்தேகம் கொஞ்சங்கூட இல்லாமல், நெஞ்சில் சஞ்சலத் தொடக்கம் கொண்டுள்ள மாயையிற் பட்டவனும் —

சந்தனம், குங்குமம் இவைகளால் சிங்காரம், ஆடம்பரம், (பரபரப்பு களிப்பு)- ஆனந்தம் கொண்ட மாயையிற்-பட்டவனும் (ஆகிய நான்)

மாதர்களின் கொங்கை முதலிய அங்கங்களின் மேலுள்ள மோகங்களால் வீணாகத் துன்பங் கொள்ளாமல் —

வள்ளன்மை (ஈதற்குணம்) வாய்ந்த குகனே! உனது திருவுருவப் பேரொளியுடனே (நீ) வந்து அன்புடன் (என்னை) ஆண்டருளுக;

கங்கையைச் சூடியுள்ள பிரானாம் சிவன் மைந்தனே! அழகனே! கந்தனே! விஞ்சையர் (வித்தியாதரர்) ஊரில் இருப்பவனே!

(நாங்கள்) நடுக்கங் கொள்ளாதவாறு (எங்களது) இந்திர லோகத்தைக் காத்தருளுக என்று முறையிட்ட இந்திரன் புகழும் வீரனே!

செங்கைவேல், வெற்றிவேல் கொண்டு சூரன் அழியவே சென்று(அவனைத்) தாக்கின கீர்த்திமானே! —

செங்கண் (கொண்ட) திருமாலும் தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும் தொழுகின்ற ஆனந்த வேளே! (திருச்) செந்தூரில் வாழ்கின்ற தம்பிரானே (தலைவனே!)

(வந்து நீ அன்பி லாள்வாய்.)

## 37

சங்கை நிகர்க்கும் மெல்லிய கழுத்து, அந்த வாயிலுள்ள பற்கள்அழகிய மோக இன்பத்தைத் தரும் முத்துக்கள் என்றும், வானத்தில் —

றங்குகார் பைங்குழற் கொங்கைநீள் தண்பொருப்
பென்றுதாழ் வொன்றறுத் துலகோரைத்

துங்கவேள் செங்கைபொற் கொண்டல்நீ யென்றுசொற்
கொண்டு [1]தாய் நின்றுரைத் துழலாதே

துன்பநோய் சிந்தநற் கந்தவே ளென்றுனைத்
தொண்டினா [2]லொன் றுரைக் கருள்வாயே;

வெங்கண் [3]வ்யா ளங்கொதித் தெங்கும்வே மென்றெடுத்
துண்டுமே லண்டருக் கமுதாக

விண்டநா தன்திருக் கொண்டல்பா கன்செருக்
குண்டுபே ரம்பலத் தினிலாடி,

செங்கண்மால் பங்கயக் கண்பெறா தந்தரத்
தின்கணா டுந்திறற் கதிராழித்

திங்கள்வா ழுஞ்சடைத் தம்பிரா னன்புறச்
**செந்தில்வாழ்** செந்தமிழ்ப் பெருமாளே ! (22)

## 38. திருவடி பெற

பங்கமே வும்பிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறிப்

பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்;

---

1. தாய் - தாவி.

2. ஒன் றுரைக் கருள்வாயே - ஒன்ற உரைக்க அருள்வாயே.

3. வ்யாளம் - பாம்பு; இங்கே அதனிடத்திருந்து எழுந்த விடத்தைக் குறித்தது.

தங்கியுள்ள மேகம் கருங்குழல், கொங்கை உயர்ந்த நீண்ட குளிர்ந்த மலை என்றும் (உவமை கூறி) மாதர்களிடம், திரியும் குறைவு ஒன்றை நீக்கியும் , உலகிற் பொருள் உள்ளவர்களிடம் சென்று,

(அழகில்) சிறந்த வேளே (போல்வாய்), உனது செங்கைக் (கொடைத்திறத்தில்) அழகிய மேகத்தையே (நிகர்ப்பாய்) நீ என்று (புகழ்) மொழிகளைக் கூறிக்கொண்டு (அவர்களிடம்) தாவி நின்று (வேகத்துடன் பொய்) சொல்லித் திரியாமலும் —

(எனது) துன்பநோய் ஒழிய, நல்ல கந்தவேளே என்று உன்னை (நான்) தொண்டு வழியில் நின்று பொருந்தி உரைக்க (அல்லது உன்னைத் தொண்டு செய் மனத்-தனாய்த் துதி ஒன்று கூற) அருள்வாயே;

கொடிய கண்களை உடைய (பாம்பின்) (நஞ்சு) கொதித்து எங்கும் வேகச் செய்யும் என்று அந்த நஞ்சை எடுத்து உண்டு, பின்னர்த் தேவர்களுக்கு (ஆகும்படி) அமுதத்தை —

வெளிவரச் செய்த பெருமான், அழகிய மேக வண்ணனாம் திருமாலைத் தனது பாகத்திற் கொண்டவன், ஆனந்தத் துடன் பேரம்பலத்தில் கூத்தாடுபவன்;

சிவந்த கண்களை உடைய திருமால் தனது தாமரைக் கண்ணால்காணக் கூடாத வகையில் வெட்ட வெளியில் ஆடும் வல்லமை கொண்ட (தம்பிரான்), ஒளி பொருந்திய வட்ட வடிவுள்ள (அல்லது கடலிற் பிறந்த) —

நிலவு வாழ்கின்ற சடைத்தம்பிரான் - ஆகிய சிவபிரான் அன்பு கொள்ளும்படி (திருச்) செந்தூரில் வாழ்கின்ற செந்தமிழ்ப்பெருமாளே!

(தொண்டினால் ஒன்று உரைக்க அருள்வாயே.)

## 38

குற்றங்களோடு கூடிய (அல்லது - சேறு போன்ற) பிறப்பு என்னும் பேரிருளில், பந்த பாசங்களில், தடுமாற்றம் அடைந்து —

(மன்மதனது) ஐந்து அம்புகளும் பாயப் புண்பட்டு வஞ்சக முள்ள, நல்லொழுக்கம் இல்லாத ஆடம்பரமுள்ள பொது மாதர்கள்;

---

"காவியங் கண்ண ளாகிக்கடல் **வண்ண** னாகிநின்ற
தேவியைப் **பாகம் வைத்தார்** திருப்பயற் றூரனாரே"-அப்பர்,4-32-7.
'அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே' -அப்பர்,4-40-5.

தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கைமால் கொண்டிளைத் தயராதே

தண்டைசூழ் கிண்கிணிப் **புண்டரீ கந்தனைத்**
தந்து நீ **யன்புவைத்** **தருள்**வாயே;

அங்கைவேல் கொண்டரக் கன்ப்ர தா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவேதான்-

அஞ்சவே திண்டிறற் [1]கோண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே!

திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ் [2]சடா பஞ்சரத் துறுதோகை,

[3]சிந்தையே தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
**செந்தில்வாழ்** செந்தமிழ்ப் பெருமாளே! (23)

## 39. மயில் மீது வந்தருள

சத்தமிகு மேழுகட லைத்தேனை
யுற்றமது தோடுகணை யைப்போர்கொள்
சத்திதனை மாவின்வடு வைக்காவி தனைமீறு-

தக்கமணம் வீசுகம லப்பூவை
மிக்கவிளை வானகடு வைச்[4]சீறு
தத்துகளும் வாளையடு மைப்பாவு விழிமாதர்,

---

1. கொண்டல் ஆகண்டலற்கு - மேகவாகனனாகிய தேவேந்திரனுக்கு.

2. சடா பஞ்சரத் துறு தோகை - சடையாகிய கூட்டிலிருக்கும் கங்கை.

3. சிந்தையே: -சிந்தையில் வீற்றிருக்கும் (அறிவே!)

"மனமே புகுந்து நின்ற சிந்தாய்"
-சுந்தரர் தேவாரம் - VII-21-1, (கச்சி மேற்றளி.)

"சிந்தையாய் நின்ற சிவனே போற்றி"
-அப் - தேவாரம் VI-5-9. (திரு அதிகை.)

4. சீறு உதத்து உகளும் எனப் பிரிக்க;உதத்து - யுத்தத்து. உதம் - உதகம் - நீர் - எனலுமாம்.

தழுவுதலால் (அவர்கள்) கொங்கை உடலிற்பட, அச்சமும் ஆசையும் கொண்டு இளைத்துத் தளராமல்,

தண்டை, சூழ்ந்துள்ள கிண்கிணி (இவை) அணிந்துள்ள தாமரை போன்ற திருவடியைத் தந்து நீ அன்பு வைத்து அருள்வாயே;

அங்கையில் வேல் எடுத்து அரக்கனாம் சூரனது பெருமையைக் கெடுத்து அண்டங்களும் மலைகளும் உட்பட (யாவுமே) —

அஞ்சும்படி, திண்ணிய திறலைக் கொண்டுள்ள மேக வாகனனாம் இந்திரனுக்கு விண்ணுலகத்தைக் கொடுத்து அருள் புரிந்தவனே!

நிலவு, ஆத்தி, கொன்றை, ஊமத்தம், துளசி (இவை) நெருங்கிய அழகிய சிவந்த சடைக் கூட்டில் உள்ள (மயிலன்ன) கங்கை நங்கையின் —

சிந்தைக்குகந்த பெருமாளே! தென் திசையிலிருந்து வரும் தென்றல் வீசும் பொழில் (சூழ்ந்துள்ள) திருச்செந்தூரில் வாழும் செந்தமிழ்ப் பெருமாளே!

(புண்டரீகந்தனை) அன்புவைத் தருள்வாயே.

## 39

ஒலிமிக்க ஏழுகடலை, வண்டை, தேன் நிறைந்த மலரை, அம்பினை, போர் செய்யும் சத்திவேலை, மாவடுவை, கருங்குவளையை, மேம்பட்ட —

தக்கமணம் வீசும் தாமரைப் பூவை, மிக முதிர்ந்த நஞ்சை, சீறிப் போரில் (நீரிற்) பாயும் வாளைமீனை நிகர்ப்பனவாய்க், கொல்லுங் குணங்கொண்ட, மை பரவிய, விழிகளை உடைய மாதர்களின்:

மத்தகிரி போலுமொளிர் வித்தார
முத்துவட மேவுமெழில் மிக்கான
வச்சிரகி ரீடநிகர் செப்பான தனமீதே
வைத்தகொடி தானமயல் விட்டான
பத்திசெய ஏழையடி மைக்காக
வஜ்ரமயில் மீதிலினி யெப்போது வருவாயே
சித்ரவடி வேல்பனிரு கைக்கார
பத்திபுரி வோர்கள் பனு வற்கார
திக்கினு ந டாவுபுர விக்கார குறமாது-
சித்தஅ நு ராககல விக்கார
துட்ட அசு ரேசர்கல கக்கார
சிட்டர்பரி பாலலளி தக்கார அடியார்கள்
முத்திபெற வேசொல்வச னக்கார
தத்தைநிகர் தூயவநி தைக்கார
முச்சர்ப ராவுசர ணக்கார இனிதான-
முத்தமிழை யாயும்வரி சைக்கார
பச்சைமுகில் தாவுபுரி சைக்கார
முத்துலவு **வேலைநகர்** முத்தேவர் பெருமாளே! (24)

## 40. ஆண்டருள

சந்தனச வாதுநிறை கற்பூர
குங்குமப டீரவிரை கத்தூரி
தண்புழுக ளாவுகள பச்சீத வெகுவாச

மதங்கொண்ட மலை (யானை) போல விளங்கி, விரிவுள்ளதாய் முத்துமாலை மேவினதாய், அழகுமிக்க வஜ்ரமுடிக்கு ஒப்பானதாய், சிமிழ் போன்ற கொங்கையின் மீது —

வைத்துள்ள கொடிய மயக்கத்தை விட்டு, கூடிய பக்தியைச் செய்யும்படி ஏழை அடிமையாகிய (என்) பொருட்டு, வஜ்ர மயில் மீதில் இனி எப்போது (நீ) வருவாய்;

அழகிய கூரிய வேலேந்திய பன்னிரு கையனே; பக்தி செய்வோர்களுடைய நூலில் விளங்குபவனே! திசைதோறும் செலுத்தப்படுகின்ற குதிரையாம் (மயில்) வாகனனே! குறமாது (வள்ளி) —

உள்ளன்போடு புணரும் இன்பங் கொண்டவனே! பொல்லாத அசுரர் தலைவரோடு போர் புரிபவனே! நல்லவரைக் காத்தளிக்கும் திருவிளையாடல்களைக் கொண்டவனே! அடியார்கள் —

முத்தி பெறும்படி உபதேசிக்கும் திருவார்த்தைகளை உடையவனே! கிளிக்கு ஒப்பான தூய மாதாம் தேவ சேனைக்கு நாயகனே! மூவுலகத்தினரும் பரவிப் போற்றும் திருவடிகளை உடையவனே! இனிதான —

முத்தமிழை ஆய்ந்த மேம்பாட்டைக் கொண்டவனே! கரிய மேகங்கள் தாவிச் செல்லும் மதில்களைக் கொண்ட (திருக்கோயிலை) உடையவனே! முத்துக்கள் உலவுகின்ற கடல் சூழ்ந்த நகராம் (திருச்செந்தூரிற்) பெருமாளே!) மும்மூர்த்திகளுக்கும் பெருமாளே!

(வஜ்ர மயில் மீதிலினி எப்போது வருவாயே?)

## 40

சந்தனம், சவ்வாது (ஜவ்வாது), நிறைந்த (பச்சைக்) கற்பூரம் செஞ்சாந்து, சந்தனம், மணமுள்ள கஸ்தூரி, குளிர்ச்சியுள்ள புனுகு சட்டம் இவை சேர்ந்துள்ள கலவை (பூசப்பட்ட தாய்), தண்ணிய மிக்க மணமுள்ள

சண்புக்க லாரவகு ளத்தாம
வம்புதுகிலாரவயிரக்கோவை
தங்கியக டோரதர வித்தார பரிதான;

மந்தரம தானதன மிக்காசை
கொண்டுபொருள் தேடுமதி நிட்டூர
வஞ்சகவி சாரஇத யப்பூவை யனையார்கள்-

[2]வந்தியிடு மாயவிர கப்பார்வை
அம்பிலுளம் வாடுமறி வற்றேனை
வந்தடிமை யாளஇனி யெப்போது நினைவாயே;

இந்த்ரபுரி காவல்முதன் மைக்கார
சம்ப்ரமம யூரதுர கக்கார
என்றுமக லாதஇள மைக்கார குறமாதின்-

இன்பஅநு போகசர சக்கார
வந்த அசு ரேசர்கல கக்கார
எங்களுமை சேயெனரு மைக்கார மிகுபாவின்,

செந்தமிழ்சொல் நாலுகவி தைக்கார
குன்றெறியும் வேலின்வலி மைக்கார
செஞ்சொலடி யார்களெளி மைக்கார எழில்மேவும்-

[3]திங்கள்முடி நாதர்சம யக்கார
மந்த்ரவுப தேசமகி மைக்கார
**செந்திநகர் வாழுமரு மைத்தேவர்** பெருமாளே! (25)

---

1. கலாரம் - கல்லாரம் - செங்குவளை.

2. வந்தியிடும் - வருந்தத்தக்கதை உண்டுபண்ணும்.

3. திங்கள்முடி நாதர் சமயம் - சைவ சமயம்.

சண்பகப்பூ செங்கழுநீர்ப்பூ, மகிழம்பூ இவைகளால் ஆய மாலை பூண்டதாய், கச்சு (ரவிக்கை), ஆடை இவைகளின் மேற்கொண்ட முத்துமாலை, வயிரமாலையை உடைய-தாய், கடினமும், விரிவும், பருமையும் உடையதாய்,

மந்தரமலை போன்றதாய் உள்ள கொங்கைகளை உடையவராய், அதிக ஆசைகொண்டு பொருள் தேடும் மிகக் கொடியவர்களாய், வஞ்சக ஆலோசனைகளைக் கொண்ட நெஞ்ச முள்ளவர்களாய், நாகணவாய்ப் புள்ளைப் போன்றவர்களாயுள்ள (பொது மகளிருடைய)

வருத்தத்தை உண்டுபண்ணும் மாயக் காமப் பார்வையாம் அம்பினால் உள்ளம் வாடுகின்ற அறிவிலியாம் என்னிடம் வந்து என்னை அடிமைகொண்டு ஆள (நீ) இனி எப்போது நினைப்பாய்?

இந்திரன் ஊராகிய (பொன்னுலகைக்) காத்த முதன்மை யாளனே! மிகச் சிறந்த மயிலாம் குதிரையை வாகனமாகக் கொண்டவனே! என்றும் நீங்காத இளமை வாய்ந்தவனே!-குறமாதோடு

இன்ப அனுபோக காம லீலைகளை உடையவனே! (எதிர்த்து) வந்த அசுரர் தலைவர்களோடு போர் புரிந்தவனே! எங்கள் உமாதேவியின் குழந்தை எனப் படும் அருமை வாய்ந்தவனே! மிக்க பா இனங்களில் —

செந்தமிழைக்கொண்டு புனைந்த (சம்பந்தராம்) நாற்கவி-யாளனே! (கிரௌஞ்ச) மலையைப் பிளந்தெறிந்த வேல் வலிமை கொண்டவனே! செஞ்சொல்லைக் கொண்ட அடியார்களுக்கு எளிமையாய் இருப்பவனே! அழகு கொண்ட —

நிலவை முடிமேற் கொண்ட நாதருடைய சமயத்தவனே! (அந்தச் சிவபிராற்கு) மந்திர உபதேசம் செய்த பெருமை வாய்ந்தவனே! திருச்செந்தூர் நகரில் வாழ்கின்ற அருமைத் தேவர் பெருமாளே!

(அடிமையை யாள இனி எப்போது நினைவாயே.)

## 41. மயில்மீது வந்தருள

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
[1]முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே-

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே;

திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு நடமாடுஞ்-
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே!

[2]அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ் சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே-

அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
[3]குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம் வெகு வான ரூபக் கார எழிலான;

[4]சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான-

1. முஞ்சர் - செத்துப்போவோர்.

2. "ஒருமுகம், அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே-" திருமுருகு.

3. "வஞ்ச வரை தூள் செய் வேலைக்கார"-என்றும் பாடம்.

4. சிந்துர மின் - தெய்வயானை.

## 41

மொழிகளுக்குள்ளே முற்பட்டதாய் விளங்கும் தமிழ்மொழிப் பாமாலைகளைக் கோடிக் கோடிக் கணக்காக சந்தப் பா வகையில் (அல்லது-அழகான வகையில்) நீண்டனவாய்ப் பாடிப் பாடி, அழிவுறும் மக்கள் தம் மனை வாசல் (எங்குளது என்று) தேடித்தேடி (நான்) திரியாமல்-

பழவினை என்பதே என்னைத் தொடராது (ஓடிப்) போகவும், பெண்ணாசை என்பது தூரத்தே (ஓடிப்) போகவும், (அடிமைத் திறத்தில்) முந்தவேண்டும் (என்னும் ஆசை கொண்ட) அடிமையாகிய என்னை ஆண்டருளும் பொருட்டு (நீ என்) முன்னிலையில்;

'திந் தி திமி தோதி.......செஞ்செணகு சேகு' என வரும் தாளத்துக்கு ஒக்க நடம் செய்யும்-

செவ்விய சிறிய கால்களையும், அகன்ற தோகையையும், தூயதாய், நன்மை புரிவதாய் உள்ள பார்வையையும், தீரத்தையும், செம்பொன் நிறத்தையும் உடைய மயில்மீது எப்போது; வருவாய்!

அழகிய அருள் பாலிக்கும் வேத வேள்விக்குக் காவல் புரியும் பெருமானே! செந்தமிழ்ச் சொற்களால் தொடுக்கப்பட்ட பாமாலைகளை அணிந்துகொள்பவனே! தேவர்களுக்கு உபகாரியே! சேவற்கொடியோனே! முடிமேலே —

(கை) கூப்பித் தொழும் அடியார்களிடம் அன்பு பூண்டுள்ளவனே! (கிரௌஞ்ச) மலை ஊடுருவும்படி! ஏவின வேற் கரத்தோனே! அழகு மிகப் பொலியும் (திரு) வுருவம் கொண்டவனே; அழகுள்ள —

யானை மாது (தேவசேனை) விரும்பும் போகம் வாய்ந்தவனே! அழகிய குறமாது (வள்ளியுடன்) பொழுதுபோக்கும் மெய்க்காவற்காரனே! செஞ்சொற்களால் போற்றும் அடியார்கள் மீது [1]அன்பு கொண்டவனே! எதிர்த்து வரும் —

1. வாரம் - அன்பு.

[1]செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்திநகர் வாழு மாண்மைக் கார
பெருமாளே ! (26)

## 42. திருவடி பெற

தண்டே னுண்டே வண்டார் வஞ்சேர்
[2]தண்டார் மஞ்சுக் குழல்மானார்-
தம்பா லன்பார் நெஞ்சே கொண்டே
சம்பா வஞ்சொற் றடிநாயேன்;
மண்[3]டோ யந் தீமென்கால் விண்டோய்
வண்கா யம்பொய்க் குடில்வே றாய்-
வன்கா னம்போ யண்டா முன்பே
வந்தே நின்பொற் கழல்தாராய்;
கொண்டா டும்பேர் கொண்டா டுஞ்சூர்
கொன்றாய் வென்றிக் குமரேசா !
கொங்கார் வண்டார் பண்பா டுஞ்சீர்
குன்றா மன்றற் கிரியோனே!
[4]கண்டா கும்பா லுண்டா யண்டார்
கண்டா [5]கந்தப் புயவேளே!
[6]கந்தா மைந்தா ரந்தோள் மைந்தா
கந்தா **செந்திற்** **பெருமாளே** ! (27)

---

1. சமரை மாயும் - யுத்தத்திற் பகைவரை மாய்க்கும்.

2. தண்டார் - தண் தார்.

3. தோயம் - நீர்.

4. கண்டாகும் பால் - கற்கண்டு போலும், இனிமையுள்ள பால்; தேவியார் பொற்கிண்ணத்துக் கறந்து ஊட்டிய திருமுலைப்பால்.

5. கந்தப் புயம் - வாசனை தங்கிய புயம்.

6. கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் மைந்தா - கம்பத்துக்குச் சமான மாகிய வலிமை பொருந்திய அழகிய தோள்களையுடைய பராக்கிரமனே!

பெரிய போரிற் (பகைவரை) மாய்க்கும் மாயக்காரனே! பெரும் போரிற் சூரனைச் சூறையாடியவனே! (சூறைக்-காற்று போல அடித்துத் தள்ளியவனே!) திருச்செந்தூர் நகரில் வாழும் ஆட்சித் திறனுள்ள பெருமாளே!

(செம்பொன் மயில் மீதிலே எப்போது வருவாயே!)

## 42

குளிர்ந்த தேனை உண்டு வண்டுகள் ஆசையுடன் மொய்க்கும் குளிர் மாலையை அணிந்த மேகம் போன்ற கூந்தலை உடைய மாதர்கள் —

இடத்தில் அன்பு மிக்க நெஞ்சங் கொண்டு, [1]நிகழ்ச்சிகளை எல்லாம் பேசுகின்ற அடிமை நாயேனாகிய (நான்);

மண், நீர், தீ, மெல்லிய காற்று, விண் (ஆகிய பஞ்சபூதங்கள்) தோய்ந்துள்ள வளங்கொண்ட பொய் உடல் நீங்கி (அதாவது உடலினின்றும் உயிர் நீங்கி ) —

கொடுங்கானம் (சுடுகாட்டுக்குப்) போய் நெருங்கும் முன்பே நீ வந்து உனது அழகிய திருவடியைத் தந்தருளுக; தன்னைக் கொண்டாடுவோர்கள் எல்லாம்(அசுரர் கூட்டங்களெல்லாம்) தன் பேரைக் கொண்டாடின சூரனைக் கொன்றவனே! வெற்றிக் குமரேசனே!

பூந்தாதுக்களில் நிறைந்துள்ள (அல்லது-தேனை நாடுகின்ற) வண்டுகள் பண்ணைப் பாடும் சீர் குறையாத திரு மண [2]மலையாம் வள்ளி மலையோனே!அல்லது- நறுமணங் கொண்ட மலைகளுக்கு உரியவனே!

கற்கண்டு போன்ற (உமை திருமுலைப்) பாலை உண்டவனே! பகைவர்களைக் காயும் வீரனே! மணம் தங்கிய (திருப்) புயங்களை உடையவனே!

கம்பத்துக்கு இணையான வலிமை பொருந்திய அழகிய தோள்களை உடைய வீரனே! கந்த சுவாமியே! திருச்செந்தூர்ப் பெருமாளே!

(வந்தே நின் பொற்கழல் தாராய்.)

---

1. சம்பாவம்- சம்பவம்.

2. மன்றல் கிரி- முருகவேள் வள்ளியை மணஞ் செய்துகொண்ட, மலை "வரை மன்றற் பைம்புனத்தாள்" பூத வேதாள வகுப்பு.

## 43. ஆண்டருள

வெங்கா ளம்பா ணஞ்சேல் கண்பால்
மென்பா கஞ்சொற் குயில் [1]மாலை-
மென்கே சந்தா னென்றே கொண்டார்
மென்றோ ளொன்றப் பொருள்தேடி;
வங்காளஞ் [2]சோ னஞ்சீ னம்போய்
வன்பே துன்பப் படலாமோ?
[3]மைந்தா ருந்தோள் மைந்தா அந்தா
வந்தே யிந்தப் பொழுதாள்வாய்;
கொங்கார் பைந்தே னுண்டே வண்டார்
குன்றாள் கொங்கைக் கினியோனே-
குன்றோ டுஞ்சூ [4]ழம்பே ழுஞ்சூ
ரும்போய் மங்கப்[5] பொருகோபா
கங்கா ளஞ்சேர் மொய்ம்பா ரன்பார்
கன்றே வும்பர்க் கொருநாதா
[6]கம்பூர் சிந்தார் தென்பால் வந்தாய்
கந்தா **செந்திற்** பெருமாளே ! (28)

1. மாலை- இருள்
2. சோனம்- சோனகம் (ஐம்பத்தாறு தேசங்களில் ஒன்று.)
3. மைந்து- வலிமை
4. அம்பேழும் - ஏழு கடலும்.
5. "கடலழக் குன்றழச் சூரழ".- கந். அலங்.5.
6. கம்பு ஊர் சிந்து- சங்குகள் தவழும் சமுத்திரம்.

# 43

கொடிய நஞ்ச, அம்பு, சேல்மீன்- நிகர்க்கும் கண்; பால், மென்மையான பாகு வெல்லம், (போன்ற) அழகிய சொற்கள் குயிலை (நிகர்க்கும்); இருளை (நிகர்க்கும்)

மெல்லிய கூந்தல்தான்-என்று (இவ்வகையாகக்) கொண்-டுள்ள (பொது மாதர்களின்) மெல்லிய தோளைக் கூடுவதற்காகப் பொருள் தேட வேண்டி;

வங்காளம், சோனகம், சீனம் எனப்படும் நாடுகளுக்குப் போய்க் கொடிய துன்பங்கள் படலாமோ !

வலிமை மிக்க தோள்களைக் கொண்ட குமரனே! அழகனே! வந்து இப்போதே ஆண்டருளுவாயாக —

பூந்தாதுக்களில் உள்ள (அல்லது வாசனை மிக்க) பசிய தேனை உண்டே வண்டுகள் நிரம்பும் குன்றத்தாளாகிய (வள்ளி மலைக்கு உரியளாகிய) வள்ளியின் கொங்கைக்கு இனியவனே!

*(ஏழு) மலைகளும், சூழ்ந்துள்ள கடல் ஏழும், சூரனும்பட்டு அழியப் பொருத கோபங் கொண்டவனே!

எலும்பு மாலைபூண்ட தோளினரது (வன்மையுடையவரது) அன்பு நிறைந்த குழந்தையே! தேவர்தம் ஒப்பற்ற தலைவனே!

சங்குகள் தவழும் கடல் தெற்கே இருக்க வந்து அமர்ந்தவனே! கந்தசுவாமியே! திருச்செந்தூர்ப் பெருமாளே!

(வந்தே இந்தப் பொழுது ஆள்வாய்)

---

*ஏழு குன்றோடும், ஏழு அம்போடும் (கடலோடும்) எனக் கொள்ள வேண்டும் —

குன்று- கிரௌஞ்சம் அல்ல; சூரனுக்கு அரணாயிருந்த ஏழு மலைகள். "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்"- பக்கம் 163 பார்க்க, தக்கயாகப் பரணி 5,170, தாழிசை உரைப் பகுதி பார்க்க.

## 44. மாயை அற

விதிபோலு *முந்த விழியாலு மிந்து
நுதலாலு †மொன்றி யிளைஞோர்தம்-
விரிவான சிந்தை யுருவாகி நொந்து
விறல்வேறு சிந்தை வினையாலே;

இதமாகி யின்ப மதுபோத வுண்டு
இனிதாளு மென்று மொழிமாதர்-
இருளாய துன்ப மருள் மாயை வந்து
எனையீர்வ தென்றும் ஒழியாதோ;

மதிசூடி யண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு விடையேறி;
மறவாத சிந்தை யடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு தருபாலா;

அதிமாய மொன்றி வருசூரர் பொன்ற
அயில்வேல்கொ டன்று பொரும்வீரா-
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
**அலைவா யுகந்த** பெருமாளே. (29)

---

*உந்தவிழி- உந்து அ விழி.

† 'ஒன்றி... உருவாகி நொந்து மொழி மாதர்' எனக்கூட்டுக.

# 44.

விதிபோல முற்பட்டு (வேலை செய்யும்) அந்தக் கண்களாலும், பிறைச்சந்திரன் போன்ற நெற்றியாலும், ஈடுபட்ட இளையோர்களுடைய —

விரிந்த சிந்தையில் உருவெளித் தோற்றமாய் நின்று நோவும் படி செய்து, அவ்விளையோரது வன்மையும் மனமும் வேறுபடச் (செய்யும்) செயல்களாலே;

அன்பு பூண்டு இன்பத் தேனை நிரம்ப உண்டு இனிது ஆளும் என்று சொல்லுகின்ற மாதர்களால் வரும் —

இருளான துன்பமும், மருட்சி தரும் மாயையும் வந்து என் நெஞ்சைப் பிளவு செய்தல் எக்காலத்தும் தொலையாதோ!

பிறையைச் சூடினவரும், தேவர்கள் ஊர் வாழும்படி நெருங்கி வந்த நஞ்சை உண்டு, விடையை வாகனமாகக் கொண்ட வரும்,

மறவாத சிந்தை கொண்ட அடியார்கள் பங்கில் வருகின்ற தேவருமான சம்பு (சிவபிரான்) பெற்ற பாலனே !

அதிக விதமான மாயைகளைச் செய்து (எதிர்த்து) வந்த சூரர் அழியக் கூரியவேல் கொண்டு அன்று பொருத வீரனே !

அழகிய செம்பொன் மயில்மேல் அமர்ந்து (கடற்கரைத் தலமான) திருச்செந்தூரில் மகிழ்ந்து (வீற்றிருக்கும்) பெருமாளே!

(மாயை எனைஈர்வது என்றும் ஒழியாதோ !)

## 45. அகப்பொருள்

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய-
*மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற;
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர-
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ!
மறிமா னுகந்த இறையோன் மகிழ்ந்து.
வழிபாடு தந்த மதியாளா-
†மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த அதிதீரா;
அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சு
மடியா ரிடைஞ்சல் களைவோனே-
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
**அலைவா யுகந்த** பெருமாளே ! (30)

## 46. பொதுமகளிரின் மாயவலையில் வீழாதிருக்க

அங்கை மென்குழ லாய்வார் போலே
சந்தி நின்றய லோடே போவா
ரன்பு கொண்டிட நீரோ போறீ ரறியீரோ

---

* "மிகவாடை வந்து சுட வேலை வென்ற
விழிமாதர் தந்த மயலாலே-
உறவாடி மஞ்சம் அதிலே இணங்கி
உடைசோர இன்ப அநுராகம்
ஓடுகூடி அன்பில் உறுபாச நெஞ்சன்
உனைநாட என்று பெறுவேனோ!" என்றும் பாடம்.

† மலை மாவு சிந்த-கிரௌஞ்சகிரியும், அல்லது எழுகிரியும், (சூரனாகிய) மாமரமுஞ் சிந்த.

## 45

வீரனாகிய மன்மதன் *ஐந்து மலர்ப் பாணங்களையும் செலுத்த, அதிகமாக வானத்தில்(விளங்கும்) நிலவு வெயில் போலக் காய,

நிதானமான காற்று (தென்றல்) வந்து தீப்போல வீசிப் பொருந்த, (வீண் பேச்சுத்) தொழில் மாதர் தத்தம் வசை மொழிகளைக் கூற.

குறவர்கள் வாழும் குன்றில் உறைகின்ற (வள்ளி போன்ற) பேதைப் பெண் அடைந்த கொடிய துன்ப மயக்கம் தீர —

குளிர்ந்த மாலைப்பொழுதில் (வந்து) நீ அணிந்துள்ள மாலையைத் தந்து என் குறை தீர வந்து அணுகமாட்டாயா!

இளமானை உகந்து (ஏந்தும்) இறைவன் (சிவபிரான்) (உன் பால் உபதேசம் பெறவேண்டி) மகிழ்ந்து வழிபாடு செயப்பெற்ற அறிஞனே!

(ஏழு) மலையும், மாமரமும் சிந்தவும், அலைகடல் அஞ்சவும் கூரிய வேலைச் செலுத்திய அதி தீரனே!

அறிவுகொண்டு உன்னை அறிந்து உனது இரு தாளையும் வணங்கும் அடியார்களுடைய இடர்களைக் களைபவனே!

அழகிய செம்பொன் மயில்மேல் அமர்ந்து (கடற்கரைத் தலமான திருச்செந்தூரில் மகிழ்ந்து (வீற்றிருக்கும்) பெருமாளே!

(மாலை தந்து குறுகாயோ)

## 46

அங்கைகொண்டு மெல்லிய கூந்தலை ஆய்வார் போல மாலைப் பொழுதில் (மனையின் வெளிப்புறத்தில்) நின்று அயலில் போகும் (ஆண் மக்கள்) அன்பு கொள்ளுமாறு "நீரோ போறீர்: (என்னைத்) தெரியாதா (உமக்கு) —

---

*மன்மதனது ஐந்து மலர்ப் பாணங்கள்: 19 ஆம் பாடலின் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

அன்று வந்தொரு நாள்நீர் போனீர்
பின்பு கண்டறி யோநா மீதே
அன்று மின்றுமொர் போதோ போகா துயில்வாரா;

எங்க ளந்தரம் வேறா ரோர்வார்
பண்டு தந்தது போதா தோமே
லின்று தந்துற வோதா னீதே னிதுபோதா-

திங்கு நின்றதென் வீடே வாரீ
ரென்றி ணங்கிகள் மாயா லீலா
இன்ப **சிங்கி**யில் வீணே வீழா தருள்வாயே;

[1]மங்கு லின்புறு வானாய் வானூ
டன்ற ரும்பிய காலாய் நீள்கால்
மண்டு றும்பகை நீறா வீறா எரிதீயாய்-

வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்
அம்ப ரம்புனை பாராய் பாரேழ்
மண்டலம்புகழ் *நீயாய் நானாய் மலரோனாய்;

உங்கள் சங்கரர் தாமாய் நாமார்
[2]அண்ட பந்திகள் தாமாய் வானாய்
ஒன்றி னுங்கடை தோயா மாயோன் மருகோனே-

ஒண்த டம்பொழில் நீடூர் கோடூர்
**செந்திலம்பதி** வாழ்வே வாழ்வோர்
உண்ட நெஞ்சறி தேனே வானோர்
பெருமாளே ! (31)

---

1. திருமாலின் பெருமையைக்கூறும் அருமைச் செய்யுட் பாகம் இது.

2. அண்டபந்திகள் தாம் ஆய்வான் ஆய் எனப் பிரிக்க.

* 'நீயாகி நானாகி அடிகள்நின்ற வாறே' -அப்பர், 6-94-5.

அன்று வந்து ஒருநாள் நீர் போனீரே (அதன்) பின்பு (உம்மை) நாம் கண்டறியோம்! இது (உண்மையே!) அன்று முதல் இன்றுவரை (ஒருநாள் கூட) பொழுது போகவில்லை; தூக்கமும் வரவில்லை;

எங்கள் உள்ளத்தை (உள்ளத்து எண்ணத்தை) வேறு யார் அறிவார்! (நீர்) முன்பு கொடுத்தது போதாதோ; மேலே இன்று (வேறு) தந்தால்தான் உறவோ? இது என்னத்துக்கு? (பொருள் தந்தது) (மாத்திரம்) போதாது; அல்லது, போதாதா?)

இங்கு (நான் நிற்கும் வீடு) என் வீடுதான்; (உள்ளே) வாரும்" என்று மனம் பொருந்தப் பேசும் (பொது மகளிருடைய) மாயை லீலைகளாம் இன்ப விஷ (வலையில்) வீணாக வீழா வண்ணம் அருள் புரிவாயாக.

மேகங்கள் இன்புற்று உலவும் வானாகவும், வானின் நின்று அன்று வெளிப்பட்ட காற்றாகவும், பெருங் காற்றுடன் கூடி, நெருங்கி வரும் பகைகளை நீராக்கும் வன்மை கொண்டுள்ள எரி நெருப்பாகவும்,

வந்து ஒலித்து எழுகின்ற நீராகவும், நீர் சூழ்ந்த (கடல் என்னும்) ஆடையைப் புனைந்த பூமியாகவும், *ஏழு பாரும், ஏழு மண்டலங்களும் புகழ்கின்ற நீயாகவும், நானாகவும், (தாமரை) மலரில் உறையும் பிரமனாகவும்-

உங்கள் (தந்தையாம்) சங்கர ராகவும், அச்சந்தரும் அண்ட கூட்டங்களாகவும் மூலப்பகுதியாகவும் (தோய்ந்தும்)) எதனிலும் இறுதியில் தோயா திருக்கின்ற மாயனாம் திருமாலின் மருகனே!

தெளிநீர்க் குளங்களும் பொழில்களும் நீடிய ஊரும், †மலை நில ஊரும் ஆன திருச்செந்திற் பதியில் வாழ்பவனே! (உன்னை நினைந்து) வாழ்பவர்கள் அநுபவித்த நெஞ்சம் அறியும் தேனே! தேவர்கள் பெருமாளே!

(மாயா லீலா - சிங்கியில் - வீழா தருள்வாயே.)

---

* ஏழு பார் - பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், மகலோகம், தவலோகம், சனலோகம், சத்தியலோகம்.

ஏழு மண்டலம் - வாயு மண்டலம், வருண மண்டலம், சந்திர மண்டலம், சூரிய மண்டலம், நட்சத்திர மண்டலம், அக்கினி மண்டலம், திரிசங்கு மண்டலம்.

† திருச்செந்தூரில் - மலை நிலம் உண்டு - செந்தின்மா மலை யுறும் செங்கல்வ ராயா" - கந்தர் சட்டிக் கவசம்.

## 47.* காட்சி பெற

அந்தகன்வ ருத்தினம் பிறகிடச்
சந்ததமும் வந்துகண் டரிவையர்க்
கன்புருகு சங்கதந் தவிரமுக் குணமாள-

[1]அந்திபக லென்றிரண் டையுமொழித்
திந்திரிய சஞ்சலங் களையறுத்
தம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடிச்;

[2]**செந்திலை** யுணர்ந்துணர்ந் துணர்வுறக்
[3]கந்தனை யறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெரு குந்தடந் தெளிதரத் தணியாத-

சிந்தையு மவிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
[4]சிந்தைவர என்று நின் **தெரிசனைப் படுவேனோ;**

கொந்தவிழ் சரண்சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்-

குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்;

தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான-

---

1. அந்திபகல் - கேவலசகலம்.
2. செந்திலை உணர்தல் - 18-ஆம் பாடலின் கீழ்க்குறிப்பைப் பார்க்க. (பக்கம் 58)
3. கந்தனை - கந்தனாகிய நின்னை; இஃது இடவழுவமைதி.
4. சிந்தை - அறிவு

* மனப்பாடஞ் செய்ய வேண்டிய அருமைப் பாடல்களுள் இஃது ஒன்று.

# 47

யமன் வரும் தினம் பின்னிட்டு ஓட (விலக), எப்போதும் போவதும் காண்பதுமாய்ப் பெண்கள்மாட்டு அன்பு உருகும் நட்பு விலக, (சத்துவம், இராசதம், தாமதம் என்ற) முக்குணங்களும் அழிய-

இரவு பகல் (ஆன்மா செயலற்றுக் கிடக்கும் நிலை - ஆன்மா உழலும் நிலை - அதாவது தேகமெடுத்துப் பிறப்பு இறப்புக்கு உட்படும் நிலை) - எனப்படும் இரண்டு நிலை-களையும் ஒழித்து, ஐம்பொறிகளால் வரும் துன்பங்-களையும் அறுத்து, தாமரை போன்ற (உனது) திருவடி-களின் பெருமையைக் கவியில் அமைத்துப் பாடி —

திருச்செந்தூரைக் கருதி யுணர்ந்து ஞானம் பிறக்க, கந்த-வேளாம் உன்னை அறிந்து அறிந்து அந்த அறிவுன் வழியே போய் நுழைந்து முடிகின்ற இடம் தெளிவு பெற, அடங்காத —

மனமும் நெகிழ்ந்து நெகிழ்ந்து, உரையும் ஒழிந்து, என் செயலும் அழிந்து அழிந்து - அடியோடு அற்றுப் போக, உண்மை அறிவு வர,- எப்பொழுது உன்னைக் காணப் பெறுவேனோ!

பூங்கொத்துக்கள் மலர்ந்து கிடக்கும் திருவடிகளே சரணம் சரணம் என்று கும்பிட்ட இந்திரன் தனது ஊரை (அமராவதியைப்) பெற, (யானை வளர்த்த மகளாம்) தேவசேனையின் கொங்கை (உனது) திருப்புயங்களைப் பெற, அரக்கர்கள் மாண்டழிய —

கிரவுஞ்சம் பொடிபட்டு விழ, அழகிய பொன்னாலாகிய திருவரைக் கிண்கிணி கிணின் கிணின் கிணின் என்று ஒலிக்க, (காதில் அணிந்துள்ள) குண்டலங்கள் அசைதலால் சிறிய குழைகளில் (காதணிகளில்) ஒளி வீச;

'தந்தன தனந்தனந் தன' என்று செவ்விய சிறிய சதங்கைகள் சிற்றொலி செய்ய, மணித் தண்டைகள் கலின் கலின் கலினென்று ஒலிக்க, அழகிய —

சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததிச கந்தொழுஞ் சரவணப் பெருமாளே. (32)

## 48. பாடி வாழச் செஞ் சொற்களைப் பெற

அருணமணி மேவு பூஷித ம்ருகமத படீர லேபன
அபிநவ விசால பூரண
அம்பொற் கும்பத் தனமோதி-
அளிகுலவு மாதர் லீலையின் முழுகியபி ஷேக மீதென
அறவுமுற வாடி நீடிய
அங்கைக் கொங்கைக் கிதமாகி;
*இருணிறைய மோதி மாலிகை சருவி யுற வான வேளையி
லிழைகலைய மாத ரார்வழி
யின்புற் றன்புற் றழியாநீள்-
இரவுபகல் மோகனாகியெ படியில்மடி யாமல் யானுமுன்
இணையடிகள் பாடி வாழவெ
னெஞ்சிற் **செஞ்சொற்** றருவாயே;
தருணமணி யாட ராவணி குடிலசடி லாதி யோதிய
சதுர்மறையி னாதி யாகிய
சங்கத் துங்கக் குழையாளர்
தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரி யேயமு
துண்டிட் டண்டர்க் கருள்கூரும்;

* இருள் நிறை அம் ஓதி; ஓதி - கூந்தல்.

சங்கரி மனங்குழைந்து உருக, முத்தம் தர எழுந்தருளும் செழுவிய தளர்ந்த நடைப் பிள்ளையே! உலகு தொழும் சரவணப் பெருமாளே!

(என்றுநின் தெரிசனைப் படுவேனோ)

# 48

செம்மணிகளால் ஆகிய அலங்காரம் கொண்டதாய்க் கஸ்தூரி, சந்தனம் இவைகளின் கலவை பூசினதும், புதுமை வாய்ந்ததும், அகன்றதும், நிறைந்ததுமான, அழகிய பொற்குடம் போன்ற கொங்கையிற்பட்டு,

ஆசை (மொழியுடன்) குலவுகின்ற மாதர்களின் லீலைகளில் (ஆடல்களில்) திருமஞ்சனம் இதுவே என்று முழுகி அவர்களுடன் மிகவும் உறவாடி (பொழுது) நீட்டித்து அவர்களுடைய அங்கைக்கும் கொங்கைக்கும் இன்பம் பூண்டவனாய்;

இருள் நிறைந்த (கருமை நிறைந்த) அழகிய கூந்தலில் உள்ள மாலை, கொஞ்சிக் குலவி உறவுகொள்ளும் வேளையில், ஆபரணங்களுடன் கலைய (அங்ஙனம்) மாதர்களின் வசத்தே இன்புற்றும் அன்புற்றும் அழிந்து நெடும்போது,

இரவும் பகலும் மோகங்கொண்டவனாய் இப்பூமியில் இறவாமல், யானுமுன் இணையடிகளைப் பாடி வாழ என்னுடைய நெஞ்சிற் செஞ்சொற்களைத் தந்தருளு-வாயாக;

இளமையையும், மணிகளையும், ஆடலையும் உடைய பாம்புகளை அணிந்த வளைந்த சடையை உடைய ஆதியும், ஓதியுள்ள நான்மறையின் ஆதிப்பொருளும், ஆகிய, சங்கினாலாய தூய குழையினராகிய சிவபிரான்,

தந்தருளிய முருக! மேக வண்ணத்தரும், ஒலிக்கின்றதும், மகரமீன் நிறைந்ததுமான கடல் சூழ்ந்த இப் புவி முழுமையும் வாரி அமுதென உண்டு தேவர்களுக்கு அருள் பாலித்த,

செருமுதலி மேவு மாவலி யதிமதக போல மாமலை
தெளிவினுடன் மூல மேயென
முந்தச் சிந்தித் தருள்மாயன்-
திருமருக சூரன் மார்பொடு சிலையுருவ வேலை யேவிய
ஜெயசரவ ணாம னோகர
**செந்திற்** கந்தப் பெருமாளே.(33)

## 49. திருவடியைப் பெற

அறிவழிய மயல்பெருக வுரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே;
அனையுமனை யருகிலுற வெருவியழ வுறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே;

செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
**திருவடியி லணுகவர** மருள்வாயே-
சிவனைநிகர் பொதியவரை முநிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே;

நெறிதவறி யலரிமதி நடுவன்மக பதி [1]முளரி
நிருதிநிதிபதிகரிய வனமாலி
நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே;

---

1. முளரி - அக்கினி.

போரில் முதன்மையாளரும், விரும்பிய, மிக்க வலிமையையும் அதிக மதத்தைக் கொண்ட கன்னத்தையும் கொண்ட, பெரிய மலை போன்ற கஜேந்திரன் (யானை) தெளிந்த அறிவுடன் "மூலமே" என்றழைக்க, முன்னதாக (உதவ வேண்டும் என்னும்) சிந்தனையுடன் வந்தருளிய-வருமான திருமாலின் —

திருமருகனே! சூரனது மார்புடன் (ஏழு) மலைகளும் உருவிச் செல்லும்படி வேலாயுதத்தைச் செலுத்திய ஜெய சரவணனே! மனோகரனே! (மனதுக்கு) இன்பம் தருபவனே! **செந்தூர்க்** கந்தப் பெருமாளே!

(பாடி வாழ என் நெஞ்சில் செஞ்சொல் தருவாயே.)

## 49.

அறிவு அழியவும், மயக்கம் பெருகவும், பேச்சு அடங்கவும், கண்கள் சுழலவும், (உடற்) சூடு தணியவும், மலம் ஒழுகவும், நீங்காமலே —

தாயும், மனைவியும் பக்கத்திலேயே இருந்து அச்சமுற்று அழ, உறவினரும் அழ, நெருப்புக்கு ஒப்பான யமன் என்னை அழையாதபடி;

நெருங்கியுள்ள இருவினைகளும், மனமும், பொருந்திய ஐம்புலன்களும் ஒழிந்து நீங்க, உயர்ந்த (உனது) திருவடியில் அணுக (எனக்கு) வரம் தந்தருளுவாயாக;

சிவனுக்கு ஒப்பான பொதியமலை முநிவனாம் அகத்தியனுக்கு உள்ளம் மகிழ, இரு செவிகளும் குளிர, இனிய தமிழை ஓதினவனே!

தாம்தாம் போகும் ஒழுக்கமான வழி தவறிச் சூரியன், சந்திரன், யமன், இந்திரன், அக்கினி, நிருதி, குபேரன் கருநிறமுள்ள துளவமாலை அணிந்த திருமால் —

பொருந்திய பிரமன் ஆகிய இவர்கள் யாவரும் அலையும்படி அரசாட்சி செய்த அவுணனது (சூரனது) மார்பு பிளவு படும்படி வேலைச் செலுத்தினவனே !

மறிபரசு கரமிலகு பரமனுமை யிருவிழியு
மகிழமடி மிசைவளரு மிளையோனே;
[1]மதலைதவ ழுததியிடை வருதரள மணிபுளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே. (34)

## 50. திருவடியை வணங்க

அனைவரு மருண்ட ருண்டு கடிதென வெகுண்டி யம்ப
[2]அமரஅடி பின் தொடர்ந்து பிணநாறும்
அழுகுபிணி கொண்டு விண்டு புழுவுட னெலும் பலம்பு
மவலவுட லஞ்சு மந்து தடுமாறி-
மனைதொறு மிதம்ப கர்ந்து வரவர விருந்த ருந்தி
மனவழி திரிந்து மங்கும் வசைதீர-
மறைசதுர் விதந்தெ ரிந்து வகைசிறு சதங்கை கொஞ்சு
மலரடி வணங்க என்று பெறுவேனோ;
தினைமிசை சுகங்க டிந்த புனமயி லிளங்கு ரும்பை
திகழிரு தனம்பு ணர்ந்த திருமார்பா-
ஜெகமுழுது முன்பு தும்பி முகவனொடு தந்தை முன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா;

---

1. மதலை - மரக்கலம்.

2. அமர - நெருங்க. 'அமரப்புல்லும்' - திருக்கோவையார்.372.

மான், மழு (இவை) திருக்கையில் விளங்கும் பரமன், உமை இவர்தம் இருவிழிகளும் மகிழ்ச்சிகொள்ள அவர்தம் மடியில் வளரும் இளையோனே!

மரக்கலங்கள் தவழும் கடலிடையே வருகின்ற முத்து மணிகள் மணல் மேட்டில் மறையும்படி உயர்ந்த திருச்செந்தூர்க் (கடற்) கரையில் வீற்றிருக்கும் பெருமாளே.

(திருவடியில் அணுக வரம் அருள்வாயே.)

# 50

(உற்ற பெரு நோயைக் கண்டு) யாவரும் அச்சங் கொண்டும் மனக்குழப்பங்கொண்டும், (எம்மிடம் அணுகாதே) விரைவில் (அகலுக) எனக் கோபித்துக் கூறி (வெருட்டவும்) (விடாது) நெருங்கி அவர்கள் அடிப் பின்னேயே தொடர்ந்து, பிணம்போல் நாறுகின்றதும்

அழுகிப்போம் நிலையைத் தருவதுமான நோய்கொண்டு, வெளிவரும் புழுவுடன் எலும்புகள் நிலைகுலையும் துன்ப உடலைச் சுமந்து தடுமாற்றம் அடைந்து

வீடுகள்தோறும் (போய்) இதமான மொழிகளைச் சொல்லி, நாள் செல்லச் செல்ல புதிய (இடங்களில்) உண்டு மனம் போன வழியில் திரிந்து அழிகின்ற பழிப்பு நீங்க —

மறை நான்கின் வகைகளை அறிந்து முறைப்படி சிறிய சதங்கைகள் கொஞ்சுகின்ற மலர் போன்ற திருவடியை வணங்கும் (பாக்கியத்தை) என்று பெறுவேனோ!

தினைமீதிருந்த கிளிகளை ஓட்டிய புனத்திலிருந்த மயிலுடைய (வள்ளியம்மையுடைய) இளங்குரும்பை (தென்னங் குரும்பை) போல விளங்கும் இரண்டு கொங்கைகளை அணைந்த அழகிய மார்பனே!

உலகம் முழுமையையும் முன்பு யானைமுகவனோடு (கணபதியோடு போட்டியிட்டுத் தந்தை (சிவபிரானது) முன்னிலையில் வட்டமாகச் (சக்ரவாளகிரியை) வலம்வந்த செம்பொன் மயில்வீரனே!

*இனியகனி மந்தி சிந்து மலைகிழவ **செந்தில்** வந்த
இறைவகுக கந்த என்று மிளையோனே-
எழுகடலு மெண்சி லம்பும் நிசிசரரும் அஞ்ச அஞ்சு
மிமையவரை யஞ்ச லென்ற பெருமாளே ! (35)

## 51. அன்பு பெற

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி-
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே;

உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி;
உனையெனது ளறியு **மன்பைத்** **தருவாயே**-

[1]மயில் தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்-
வனசகுற மகளை வந்தித் தணைவோனே;

கயிலைமலை யனைய **செந்திற்** **பதிவாழ்வே**
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே! (36)

---

1. மயில் தகர் கல் இடையர் - மயிலும் ஆடும் நிறைந்த குன்றினிடத்தில் வசிக்கும் வேடுவர்.

(பா -வே.) * "இனியகனி சிந்திமந்தி உலவு பொங்கிலஞ்சி".

இனிமையான பழங்களைக் குரங்குகள் சிந்துகின்ற மலைகளுக்கு உரிமை கொண்டவனே! திருச்செந்தூரில் வந்து அமர்ந்துள்ள இறைவனே! குகனே! கந்தனே! என்றும் இளையவனே!

ஏழு கடலும், அஷ்டகிரியும் (எண் மலைகளும்) அசுரர்களும் அஞ்சும்படி, அஞ்சிநின்ற (பயங்கொண்டிருந்த) தேவர்களை அஞ்சாதீர்கள் என்று (அபயம் அளித்த) பெருமாளே!

(உன் மலரடி வணங்க என்று பெறுவேனோ!)

## 51.

இயற்றமிழுடன் கூடிய இசைஞானத்தில் (அல்லது நடையிலும் சொல்லிலும்) தகுதிகொண்ட மாதர்கள் காரணமாய்த் தளர்வு அடைந்து-

இரவும் பகலும் மனது (அவர்களையே) சிந்தனை செய்து (நான்) அலையாமல்

(உனது) உயர்ந்த கருணையால் வரும் இன்பக் கடலில் மூழ்கி உன்னை எனது உள்ளத்திலே அறியும் அன்பைத் தந்தருளுவாயாக;

மயிலும் ஆடும் (நிறைந்த) மலையிடையே (வசிக்கும்) வேடர்களுடைய அந்தத் தினை (ப்புனக்) காவலைப் பூண்டிருந்த

வனசமகள் (இலக்குமி) போன்ற குறத்தியை (வள்ளியை) வணங்கி அணைந்தவனே!

(திருக்)கயிலை மலைபோலப் (புனிதமான) திருச்செந்தூர்ப் பதியில் வாழ்பவனே!

யானை முகவனுக்கு (கணபதிக்கு) இளைய கந்தப் பெருமாளே!

(உனை எனதுள் அறியும் அன்பைத் தருவாயே.)

## 52. நலம் பிறக்க

இருகுழை யெறிந்த கெண்டைகள் ஒருகுமி ழடர்ந்து வந்திட
இணைசிலைநெ ரிந்தெழுந்திட அணைமீதே-
இருளளக பந்தி வஞ்சியி லிருகலையுடன்கு லைந்திட
இதழமுத ருந்து சிங்கியின் மனமாய;

முருகொடுக லந்த சந்தன அளறுபடு குங்கு மங்கமழ்
முலைமுகடு கொண்டெ ழுந்தொறு முருகார-
முழுமதிபு ரிந்த சிந்துர அரிவையரு டன்க லந்திடு
[1]முகடியு **நலம்பி றந்திட** அருள்வாயே;

[2]எரிவிட நிமிர்ந்த குஞ்சியினிலவொடு மெழுந்த கங்கையு
மிதழியொட ணிந்த சங்கரர் களிகூரும்-
இமவரைத ருங்க ருங்குயில் மரகதநி றந்த ருங்கிளி
யெனதுயிரெ னுந்த்ரி யம்பகி பெருவாழ்வே;

அரைவட மலம்பு கிண்கிணி பரிபுர நெருங்கு தண்டைக
ளணிமணிச தங்கை கொஞ்சிட மயில்மேலே-
அகமகிழ்வு கொண்டு சந்ததம் வருகுமர முன்றி
லின்புறம்
அலைபொருத **செந்தில்** தங்கிய பெருமாளே ! (37)

---

1. *முகடியும் - முகடிக்கும். முகடி - மூதேவி.*

2. *'எரிதரு சடை' -சம்பந்தர் தேவாரம், 1-122-1.*

## 52

இரண்டு குழைகளையும் (காதுகளையும்) வந்து தாக்கும் கெண்டைமீன் போன்ற (கண்கள்) ஒப்பற்ற குமிழம் பூப் போன்ற மூக்கை நெருங்கி வந்திடவும், இரண்டு வில் போன்ற புருவங்களும் நெரிந்து மேலெழுந்திடவும் படுக்கையின்மீது —

இருண்ட குழற் கற்றை (கூந்தற்கட்டு), வஞ்சிக் கொடி போன்ற இடையிலுள்ள பெரிய ஆடையுடனே குலைந்து போம்படி இதழ் அமுதத்தை உண்ணும் நஞ்சில் (விஷத்தில்) (என்) மனம் (அழுந்தி) அழிய

நறுமணத்துடன் கலந்த சந்தனச் சேற்றுடன் பட்ட குங்குமம் மணக்கும் முலையுச்சி பூரித்து எழுந்தோறும் அழகு நிரம்ப

முழுநிலாப் போன்ற திலகம் (கொண்டுள்ள) மாதர்களுடன் கலந்திடும் (இந்த) மூதேவிக்கும் நன்மை பிறக்க அருள் புரிவாயே!

எரிவிட்டு நிமிர்ந்த சடையில் நிலாவுடன் (பொங்கி) எழுந்த கங்கையையும், கொன்றையையும் அணிந்த சங்கரர் மகிழ்ச்சி மிகக் கொள்ளும் —

இமயமலை பெற்ற கரிய குயில், பச்சை நிறங்கொண்ட கிளி, எனது உயிர் என யான் போற்றும் முக்கண்ணி (பெற்ற) பெருவாழ்வே!

அரையிற்கட்டிய சதங்கை, ஒலிக்கின்ற கிண்கிணி, சிலம்பு, நெருங்கியுள்ள தண்டைகள், அழகிய மணியாலாகிய (காற்) சதங்கை, இவையெலாம் கொஞ்ச மயில் மேலே-

உள்ளம் மகிழ்ச்சி பூண்டு எப்போதும் வருகின்ற குமரனே! (திருக்கோயிலின்) முற்புறத்திலே அலைகள் வந்து பொருகின்ற திருச்செந்தூரிலே தங்கியுள்ள பெருமாளே!

(நலம் பிறந்திட அருள்வாயே.)

## 53. திருவடியைப் போற்ற

இருள்விரி குழலை விரித்துத் தூற்றவு
மிறுகிய துகிலை நெகிழ்த்துக் காட்டவு
மிருகடை விழியு முறுக்கிப் பார்க்கவு
மைந்தரோடே-
இலைபிள வதனை நடித்துக் கேட்கவு
மறுமொழி பலவு மிசைத்துச் சாற்றவு
மிடையிடை சிறிது நகைத்துக் காட்டவு
மெங்கள் வீடே,
வருகென வொருசொ லுரைத்துப் பூட்டவும்
விரிமல ரமளி யணைத்துச் சேர்க்கவும்
வருபொரு ளளவி லுருக்கித் தேற்றவு நிந்தையாலே
வனைமனை புகுதி லடித்துப் போக்கவு
மொருதலை மருவு புணர்ச்சித் தூர்த்தர்கள்
வசைவிட நினது **பதத்தைப் போற்றுவ**
தெந்தநாளோ;
குருமணி வயிர மிழித்துக் கோட்டிய
கழைமட வுருவு வெளுத்துத் தோற்றிய
*குளிறிசை யருவி கொழித்துத் தூற்றிய
மண்டுநீ† ரூர்-
குழிபடு §கலுழி வயிற்றைத் தூர்த்தெழு
திடர்மண லிறுகு ‡துருத்திக் காப்பொதி
குளிர்நிழ லருவி கலக்கிப் பூப்புனை
வண்டலாடா;
முருகவிழ் துணர்க ளுகுத்துக் காய்த்திணை
விளைநடு விதணி லிருப்பைக் காட்டிய
முகிழ்முலை யிளைய குறத்திக் காட்படு
**செந்தில்வாழ்வே-**

---

* குளிறு இசை;குளிறு - சப்திக்கின்ற.

† ஊர் - செல்லுகின்ற. § கலுழி - கான்யாறு.

‡ துருத்தி கா - திட்டினிடத்துள்ள சோலை.

# 53

இருண்ட விரிந்த கூந்தலை விரித்து ஆற்றவும், அழுத்தமாகக் கட்டியிருந்த உடையைத் தளர்த்திக் காட்டவும், இரண்டு விழிக் கடைகளைச் சுழற்றிச் செருக்குடன் பார்க்கவும் ஆண் மக்களோடு —

வெற்றிலையையும் வெட்டுப்பாக்கையும் நடிப்புடன் கேட்கவும், மறுமொழி பலபல சொல்லிச் சொல்லி இடையிடையே சற்று நகை புரிந்தும், (இது) எங்கள் வீடே

வருக என்று ஒரு சொல் சொல்லி மாட்டுவித்தும், விரிந்த மலர்ப்படுக்கையில் அணைத்துச் சேர்க்கவும், வந்த பொருள் அளவுக்கு தக்கபடி உருக்கங் காட்டித் தெளிவித்தும், (பின்னர்) நிந்தை மொழி கூறி

அலங்கரித்துள்ள (வீட்டில்) நுழைந்தால் அடித்து வெருட்டவும், (இங்ஙனம்) ஒரு தலைக் காமத்தராய்ப் புணரும் கொடியோர்களால் வரும் பழிப்பு நீங்க உனது திருவடிகளைப் போற்றுவது எந்த நாளோ!

நிறமுள்ள வயிரமணிகளை அடித்துத் தள்ளி, வளைந்த இளமூங்கிலின் உருவும் வெளுத்துத் தோற்றுப் போம்படியான (வெண்மையையும்), ஒலிக்கின்ற இசையையும் உடைய அருவி கொழித்து இறைக்கப் பெருகிய நீர் செல்லுகின்ற —

ஆழம் படுகின்ற காட்டாற்றின் நடுவு அடைபட்டு எழுந்த மேட்டு மணலால் இறுகி நிற்கும் திட்டினிடத்தே உள்ள சோலையில் அடர்ந்த குளிர் நிழலில் அருவியைக் கலக்கியும், பூப்புனைந்தும், வண்டல் (மகளிர் விளையாட்டு வகை) விளையாடியும் —

மணம் வீசும் பூங்கொத்துக்களை விட்டுக் கதிர்விடும் தினைவிளை புனத்தின் நடுவில் (உள்ள) பரண்மீது தான் இருத்தலைக் காட்டிய அரும்பும் கொங்கைகளை (உடைய) இளைய குறத்திக்கு ஆட்பட்ட திருச்செந்தூர்ப் பெருமாளே!

முளையிள மதியை யெடுத்துச் சாத்திய
சடைமுடி யிறைவர் தமக்குச் சாத்திர
முறையருள் முருக தவத்தைக் காப்பவர்
தம்பிரானே. (38)

## 54.

'இன்பமும் துன்பமும்' - இது திருச்செந்தூர்க் கலம்பகத்துப் பாடல்; ஆதலால் விடப்பட்டது. *(39)*

## 55. அன்பு பெருக

உததியறல் மொண்டு சூல்கொள்கரு
முகிலெனஇ ருண்ட நீலமிக
வொளிதிகழு மன்றல் ஓதிநரை பஞ்சுபோலாய்-
உதிரமெழு துங்க வேல்விழி
மிடைகடையொ துங்கு பீளைகளு
முடைதயிர்பி திர்ந்த தோஇதென வெம்புலாலாய்
மதகரட தந்தி வாயினிடை
சொருகுபிறை தந்த சூதுகளின்
வடிவுதரு கும்ப மோதிவளர் கொங்கைதோலாய்-
வனமழியு மங்கை மாதர்களின்
நிலைதனையு ணர்ந்து தாளிலுறு
வழியடிமை **யன்புகூருமது** சிந்தியேனோ;
இதழ்பொதிய விழ்ந்த தாமரையின்
மணவறைபு குந்த நான் முகனும்
எறிதிரைய லம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழிது யின்ற நாரணனும்
உமைமருவு சந்த்ர சேகரனும்
இமையவர்வ ணங்கு வாசவனும் நின்றுதாழும்;

முளைக்கின்ற இளம்பிறையை எடுத்துச் சூடிய சடைமுடியை உடைய இறைவருக்கு (சிவபிரானுக்கு)ச் சாத்திர முறையை ஓதியருளிய முருகனே! தவநிலையைக் காக்கும் முநிவர்கள் தம் பெருமாளே!

(நினது பதத்தைப் போற்றுவது எந்த நாளோ)

## 54

(இது விடப்பட்டது)

## 55

கடலின் கருமணல் போலக் கருநிறங்கொண்டு, கருக்கொண்ட கரியமேகம் போல இருண்ட கருமை மிக்க ஒளி விளக்கத்துடன் மணம் வீசுகின்ற கூந்தல் நரைத்துப் பஞ்சுபோல வெளுத்ததாய் —

ரத்தம் கொழுத்துயர்ந்த வேல் போன்ற விழிக்கடையில் நெருங்கி ஒதுங்கும் பீளைகள் துர்நாற்றங் கொண்ட தயிர்த் (துளிகள்) சிதறினவோ என்று சொல்லும்படி கொடிய புலால்நாற்றத்ததாய்;

மதம்பாயும் சுவடுகொண்ட யானையின் வாயிற் செருகப்பட்டு, பிறை போன்ற தந்தங்கள் என்னும்படி வெளிப்பட்டுச் சூதாடு கருவிகளின் வடிவுகொண்டனவாய்க், குடங்களை மோதி வளர்கின்ற கொங்கைகள் வெறும் தோலாய்; (இங்ஙனம்)

அழகு குலைந்து போகின்ற மங்கை மாதர்களுடைய (உண்மை) நிலையை உணர்ந்து (உனது) திருவடியையே சிந்தனை செய்யும் வழியடிமையாகிய நான் அன்புமிக்கு வளரும் அந்த (வழியையே) நினைக்க மாட்டேனோ!

இதழ்களின் கட்டுவிரிந்த தாமரை மலரின் நறுமண வீட்டிற் புகுந்து வீற்றிருக்கும் பிரமனும், வீசுகின்ற அலைமோதுகின்ற பாற்கடலில் நஞ்சு உடைய பாம்பின் (ஆதிசேடன்) மேலே —

இருகண்களும் துயில்கொள்ளும் திருமாலும், உமையம்மை சேர்ந்துள்ள சந்திரசேகரமூர்த்தியும் (நிலவு அணியும் சிவனும்), தேவர்கள் வணங்கும் இந்திரனும் நின்று வணங்குகின்ற-,

முதல்வசுக [1]மைந்த பீடிகையில்
அகிலசக அண்ட நாயகிதன்
முகிழ்முலைசு ரந்த பாலமுத முண்டவேளே-
முளைமுருகு சங்கு வீசியலை
முடுகி [2]மைத வழ்ந்த வாய்பெருகி
[3]முதலிவரு செந்தில் வாழ்வுதரு தம்பிரானே(40)

## 56. வாழ்வு உற

ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணா-
ஈனனை வீணனை ஏடெழு தாமுழு
ஏழையை மோழையை அகலா நீள்;
மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மையி லாதனை யிகழாதே-
மாமணி நூபுர சீதள தாள்தனி
வாழ்வுற ஈவது மொருநாளே;
நாவலர் பாடிய நூலிசை யால்வரு
நாரத னார்புகல் குறமாதை
நாடியெ கானிடை கூடிய சேவக
நாயக மாமயி லுடையோனே;
தேவிம நோமணி ஆயிப ராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே
சேணுயர் சோலையி னீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே. (41)

---

1. மைந்து - அழகு . சுகமைந்த - சுகமும் அழகும் கொண்ட; சுகமும் வலிமையும் கொண்டவனே! எனலுமாம். 2. மை தவழ்ந்தவாய் - மேகம் தவழ்ந்தது போல. 3. முதல் இவரு - இவர்தல் - ஏறுதல், உயர்தல்.

முதல்வனே! சுகமும் அழகும் கொண்ட இருக்கையில் அமர்ந்துள்ள எல்லா உலகங்களுக்கும், அண்டங்களுக்கும் தலைவியாம் நாயகிதன் அரும்பு போன்ற முலைசுரந்த பால் அமுதத்தை உண்ட வேளே!-

வெளித்தோன்றி முதிர்ந்துள்ள சங்குகளை வீசி அலைகள் விரைந்து நெருங்கி மேகம் தவழ்ந்தது போலப் பெருகி முற்பட்டு உயர்ந்து (கரை) ஏறும் திருச்செந்தூரில் (வீற்றிருந்து) (அடியார்களுக்கு) வாழ்வைத் தருகின்ற தம்பிரானே!

(வழியடிமை அன்பு கூருமது சிந்தியேனோ!)

## 56

அம்பை நிகர்க்கும் கண்களை உடைய மாதர்களை விரும்பும் கேடனை, மூடனை, நல்லொழுக்கத்தை விரும்பாத —

இழிந்தோனை, வீணனை, படிப்பு இல்லாத முழு ஏழையை மடையனை, விட்டு நீங்காத நீண்ட

பெருவினை மூடியுள்ள, நோயும் பிணியுங் கொண்டவனை, உண்மை இல்லாதவனை - இகழ்ந்து (ஒதுக்காமல்) —

சிறந்த மணிகளாலாய சிலம்பணிந்துள்ள (பாதகிண்கிணி அணிந்துள்ள) குளிர்ந்த (உன்) திருவடிகளை ஒப்பற்ற (பெரு) வாழ்வை (முத்தி யின்பத்தை) நான் பெற (எனக்குத்) தந்துதவும் ஒரு நாளும் உண்டோ!

புலவர்கள் பாடியுள்ள நூல்களிற் புகழப்பட்டுள்ள நாரத முநிவர் எடுத்துரைத்த குறமகளை (வள்ளியை) —

நாடிச் சென்று காட்டிடையே (அவளைக்) கூடிய வீரனே! தலைவனே! சிறந்த மயில் வாகனனே!

தேவி, மனோமணி, ஆயி, பராபரை, தேன்போலும் மொழியாள் (ஆகிய பார்வதி) பெற்ற சிறியவனே!

விண்ணளவும் உயர்கின்ற சோலைகளின் நிழலிலே விளங்-கும் (சிறந்த கடற்கரைத்தலமாம்) திருச்செந்தூரிலே எழுந்தருளியுள்ள பெருமாளே!

(தாள் வாழ்வுற ஈவதும் ஒருநாளே.)

## 57. சொல் விளங்க

ஓரா தொன்றைப் பாரா தந்தத்
தோடே வந்திட் டுயிர்சோர-
ஊடா நன்றற் றார்போல் நின்றெட்
டாமால் தந்திட் டுழல்மாதர்;
கூரா வன்பிற் சோரா நின்[1]றக்
கோயா நின்றுட் குலையாதே-
கோடார் செம்பொற் றோளா [2]**நின்சொற்**
கோடா **தென்கைக்** கருள்தாராய்;
தோரா வென்றிப் போரா மன்றற்
றோளா குன்றைத் தொளையாடீ-
சூதா யெண்டிக் கேயா வஞ்சச்
சூர்மா அஞ்சப் பொரும்வேலா;
[3]சீரார் கொன்றைத் தார்மார் பொன்றச்
சேவே றெந்தைக் கினியோனே-
தேனே யன்பர்க் கேயா மின்சொற்
சேயே **செந்திற்** பெருமானே. (42)

---

1. அக்கு- எலும்போடு கூடிய சரீரம்.

2. "நின்சொல்"-என்பது முருகவேள் சம்பந்தராய் அருளிய தேவாரத்தையும் குறிக்கலாம். "பல்லூர்ப் பெருமணம் பாட்டு மெய்யாய்த்தில 'சொல்லூர்ப் பெருமணம் சூடலரே தொண்டர்' என்னும் (சம்பந்தர்) [illegible] '[illegible] சொல் - புகழ் - எனவும் கொள்ளலாம்.

# 57

(உண்மை நெறியாகிய) ஒன்றை ஆராய்ந்தறியாமலும் பாராமலும், அழகுடன் வந்து(ஆண் மக்களின்)உயிர் சோர்ந்து போம்படி

ஊடி, நல்லதே கிடைக்காதவர் போல நின்று, அளவு கடந்த ஆசை மயக்கத்தைத் தந்து திரியும் மாதர்களின்;

விருப்பமில்லாத (வெளி) அன்பிற் சோர்வுற்று நின்று எலும்போடு கூடிய (இச்) சரீரம் ஓய்ந்து நின்று உள்ளங் குலைந்து போகாதபடி- —

மலைபோன்ற செவ்விய அழகிய தோளனே! (அல்லது செம்பொன்மலை போன்ற தோளனே!) நினது சொல் (நினது திருப்புகழ்) நேர்நின் றுதவும் என்று (உலகோர்) கூறுமாறு அருள்பாலிப்பாயாக.

தோல்வியே அறியாத வெற்றிப் போர் செய்பவனே! மணம் வீசும் தோளனே! கிரௌஞ்ச மலையைத் தொளை செய்தவனே!

சூதாக எட்டுத் திக்கிலும் சென்று பொருந்தி வஞ்சம் (செய்த) சூரனாகிய மாமரத்தை அஞ்சும்படி பொருத வேலனே!

சீர்நிறைந்த கொன்றை மாலை (அல்லது, சீரான ஆத்தி, கொன்ற மாலைகள்) மார்பில் திகழும் அந்த விடையேறியாம் எந்தைக்கு (சிவபிராற்கு) இனியவனே!

தேன்போல இனிப்பவனே! அன்பர்க்கே ஆம் இன்சொல் (அன்பர்க்கென்றே பொருந்திய இன்சொல்) கொண்ட சேயே! திருச்செந்தூர்ப் பெருமாளே!

(நின்சொற் கோடா தென்கைக் கருள்தாராய்)

## 58. திருவடி உற

கட்டழகு விட்டுத் தளர்ந்தங் கிருந்துமுனம்
இட்டபொறி தப்பிப் பிணங்கொண்ட தின்சிலர்கள்
கட்டணமெ டுத்துச் சுமந்தும் பெரும்பறைகள்
முறையோடே-

வெட்டவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சமென
மக்களொரு மிக்கத் தொடர்ந்தும் புரண்டும்வழி
விட்டுவரு [1]மித்தைத் தவிர்ந்துன் **பதங்களுற**
வுணர்வேனோ;

பட்டுருவி நெட்டைக் க்ரவுஞ்சம் பிளந்துகடல்
முற்றுமலை வற்றிக் குழம்புங் குழம்பமுனை
பட்டஅயில் தொட்டுத் திடங்கொண் டெதிர்ந்தவுணர்
முடிசாயத்

தட்டழிய வெட்டிக் [2]கவந்தம் பெருங்கழுகு
நிர்த்தமிட ரத்தக் குளங்கண் டுமிழ்ந்துமணி
சற்சமய வித்தைப் பலன் கண்டு **செந்திலுறை**
பெருமாளே. (43)

## 59. அடியார்களுடன் இணங்க

கண்டுமொழி [3]கொம்பு கொங்கை வஞ்சியிடை அம்பு
நஞ்சு

கண்கள் குழல் கொண்டல் என்று பலகாலும்-
கண்டுளம்வ ருந்தி நொந்து மங்கையர்வ சம்பு ரிந்து
கங்குல்பகல் என்று நின்று விதியாலே;

---

1. வருமித்தை - வரும்இத்தை - வரும்இதை; வரும் மித்தை - மித்தை - பொய். 2. "அநேகமாயிரம் பேர் படக் கவந்த மொன்றாடும்" என்பர். கவந்தம் - 'சிறிது தொழிலுடன் கூடிய தலையற்ற உடல்' 3. கொம்பு - யானைக்கொம்பு "மாகயானை மருப்பேர் முலையினர்"- அப்பர் 5-45-9.

# 58

இறுகிக் கட்டுக்கோப்பாய் இருந்த அழகு நீங்கித் தளர்ந்து, அங்கு இருந்து, முன்பு உதவிபுரிந்து வந்த ஐம்பொறிகளும் கலங் கிச் சிதறிப் போய்ப் பிணம் என்னும் நிலையை அடை ந்தவுடனே சிலர் வந்து பல்லக்கில் (பாடையில்) (பிண த்தை) எடுத்து (அல்லது பிணத்தைக் கூலிக்கு எடுத்துச்) சுமந்துபோகப், பெரிய பறைகள் முறைப்படி—

வெட்டவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சமென்ற ஒலியை எழுப்ப, மக்கள் ஒன் றுகூடிப் (பிணத்தைத்) தொடர்ந்தும், புரண்டும் வழி விடுகினற இந்தப் பொய் (வாழ்வை) விட்டு உன் திருவடிகளை அடையும் வழியை உணர மாட்டேனோ?

பட்டு உருவும்படியாக (வேலாயுதத்தைச்)செலுத்தி ஆணவங்கொண்டிருந்த கிரௌஞ்ச மலையைப் பிளந்தெறிந்து, கடல் முழுமையும் அலைவற்றி குழம்பு குழம்பாய்ப் போகும்படி கூர்மை கொண்ட வேலாயுதத்தைச் செலுத்திப் பலமாய் எதிர்த்து வந்த அசுரர்களின் முடிசாயும்படியாக,

அடியுடன் அழியும்படியாக, வெட்டித் தலையற்ற உடல்களும் பெரிய கழுகுகளும் நடனமிடவும், ரத்தக்குளம் பெருக வைத்தும், (அவுணர் கிரீடங்களினின் றும்) மணிகள் சிதறி விழ வைத்தும், (தேவர் முநிவர்களுக்கு) நல்ல காலம் வருவதற்கு வேண்டிய விதையைப் பலன் காட்டும்படி வைத்துத் திருச்செந்தூரில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(உன் பதங்களுற உணர்வேனோ.)*

# 59

கற்கண்டு சொல், யானையின் தந்தம் கொங்கை, வஞ்சிக் கொடி இடை, அம்பும் நஞ்சும் கண்கள், கூந்தல் மேகம் என இவ்வா று பலமுறையும்-

(உலவமை) கண்டு, உள்ளம் வருந்தி, நொந்து, மாதர்களின் வசப்பட்டு இரவும் பகலுமாக நின் று (அல்லது இரவும் பகல் எந்நாளும் நின் று) விதியின் பயனாய்;

பண்டைவினை கொண்டு ழன்று வெந்துவிழுகின்றல் கண்டு
பங்கயப தங்கள் தந்து புகழோதும்-
பண்புடைய சிந்தை யன்பர் தங்களினு டன்கலந்து
பண்புபெற அஞ்ச லஞ்ச லெனவாராய்
வண்டுபடு கின்றதொங்கல் கொண்டறநெ ருங்கி [1]யிண்டு
வம்பினைய டைந்து [2]சந்தின் மிகமூழ்கி
[3]வஞ்சியை முனிந்த கொங்கை மென்குறம டந்தை செங்கை
வந்தழகு டன்க லந்த மணிமார்பா;
திண்டிறல்பு னைந்த அண்டர் தங்களப யங்கள் கண்டு
செஞ்[4]சமர்பு னைந்து துங்க மயில்மீதே-
சென்றசுரர் அஞ்சவென்று குன்றிடை மணம்பு ணர்ந்து
**செந்தில்**நகர் வந்த மர்ந்த பெருமாளே. (44)

## 60. பொது மகளிர் உறவு அற

களபம் ஒழுகிய புளகித முலையினர்
[5]கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலினர் எவரோடுங்-
கலகம் இடுகயல் எறிகுழை விரகியர்
பொருளில் இளைஞரை வழிகொடு மொழிகொடு
தளர விடுபவர் தெருவினில் எவரையும் நகையாடிப்;

---

1. இண்டு - ஈண்டு என்பதன் விகாரம்; ஈண்டு - நெருங்கிய.
2. சந்து - சந்தனம்.
3. வஞ்சியை முனிந்த - கொடிபோலும் இடையை வருத்துகின்ற
4. சமர் புனைந்து - போர்க்கோலங் கொண்டு.
5. 'இருநோக் கிவளுண்கண் உள்ள தொரு நோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து'- திருக்குறள் 1091.

பழவினை தாக்கத் திரிந்து (நான்) (மனம்) வெந்து விழுவதைக் கண்டு (உனது) தாமரை யன்ன திருவடிகளைத் தந்து (உனது) புகழை ஓதும் —

பண்பு கொண்ட மனத்தினராம் அன்பர்களுடன் கலந்து (நான்) குணம் அடைய வேண்டி (நீ) அஞ்சல் அஞ்சல் எனக் கூறி வந்தருளுவாயாக;

வண்டு ஒலிக்கின்ற மாலையைப் பூண்டு, மிக நெருங்கிய, (அழுத்தமான) கச்சு (ரவிக்கையைப்) பூண்டதாய், சந்தனக் (குழம்பில்) மிக முழுகி —

வஞ்சிக்கொடி போலும் இடையை வருத்துகின்ற கொங்கை- களை உடைய மெல்லிய குறப்பெண்ணின் (வள்ளியின்) செங்கைகளை - (அவளிக்கும் வள்ளிமலைக்குக்கு) வந்து அழகுடன் (தொட்டுக்) கலந்த மணி மார்பனே!

திண்ணிய வலிமை கொண்ட தேவர்கள் தம்மாட்டு அபயம் புகுவதைக் கண்டு செவ்விய போர்க் கோலம் பூண்டு தூய மயிலின் மீதே

சென்று அசுரர்களை அஞ்சும்படி வென்று (திருப்பரங்- குன்றில் வள்ளிமலையில்) மணம் செய்து, திருச்செந்- தூர்ப் பதியில் வந்து அமர்ந்த பெருமாளே.

(அஞ்சல் அஞ்சல் என வாராய்.)

## 60

(சந்தனம் - கஸ்தூரி இவைகளின் கலவை ஒழுகுகின்ற, புளகங்கொண்ட கொங்கையை உடையவர், நஞ்சும் அமுதமும் கலந்த கண்ணினர், கழுவியெடுத்த பொருத்தமான வாசனை எண்ணெய் ஒழுகும் கூந்தலை உடையவர், எல்லாரோடும்

கலகம் செய்கின்ற கயல்மீன் போன்ற கண்கள் பரந்து எட்டும் குழைகளை அணிந்துள்ள தந்திர வாதிகள், பொருள் இல்லாத இளைஞோரைத் (தமது) நடவடிக்கையாலும், பேச்சுக்களாலும் தளர்ச்சி அடையச் செய்பவர், தெருவில் யாரோடும் சிரித்துப் பேசி —

பிளவு பெறிலதி லளவள வொழுகியர்
நடையில் உடையினில் அழகொடு திரிபவர்
பெருகு பொருள் பெறல் அமளியில் இதமொடு
குழைவோடே-

பிணமும் அணைபவர் [1]வெறிதரு புனலுணும்
அவச வனிதையர் [2]முடுகொடும் அணைபவர்
பெருமை **யுடையவர்** உறவினை விடஅருள்
புரிவாயே;

[3]அளையில் உறைபுலி பெறு [4]மக வயில்தரு
பசுவின் நிரைமுலை யமுதுண [5]நிரைமகள்
[6]வசவ னொடுபுலி முலையுண மலையுடன்
உருகா நீள்-

அடவி தனிலுள [7]உலவைகள் தளிர்விட
மருள மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளியுயர் பறவைகள் நிலம்வர விரல்சேரேழ்;

தொளைகள் விடுகழை விரல்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்[8]
சுருதி யுடையவன் நெடியவன் மனமகிழ்
மருகோனே-

துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளரறு முககுக
துறையில் **அலையெறி திருநகர்** உறைதரு
பெருமாளே. (45)

---

1. வெறிதருபுனல் - கள். 'ஆவேச நீர்' - 362,877.

2. முடுகு - துர்நாற்றம். 'முடுகு நாறிய வடுகர்' தேவாரம். சுந்தரர். 7-49-1.

3. அளை - மலைக்குகை.

4. மக வயிறரு - மகவு அயில்தரு: அயில்தரல் - குடித்தல்.

5. நிரை மகள் - பசுவின் பெண்கன்று.

6. வசவன் - ஆண்கன்று.

7. உலவைகள் - மரங்கள்.

8. கண்ணபிரானது புல்லாங் குழலின் இனிய ஒலியை மிக அருமையாக உரைத்துள்ள இடம் இது.

பிரிவுக்குக் காரணம் ஏற்பட்டால் அதற்குத் தக்கபடி தக்கபடி நடந்து கொள்பவர், நடை (அழகினொடும்) உடை அழகினொடும் திரிபவர், மிக்க பொருள் கிடைத்தால் படுக்கையில் இன்பத்துடனும் உருக்கத்துடனும்

பிணத்தையும் அணைபவர், கலக்கத்தைத் தரும் நீரை (கள்ளை) உண்டு தம் வசம் இழுக்கும் மாதர்கள், அந்தக் (கள்) நாற்றத்தோடும் அணைபவர் (அல்லது விரைந்து நெருங்கி அணைபவர்), அகந்தை உடையவர், (இத்தகையோரது) உறவைவிட்டு நீங்கும்படி அருள்புரி-வாயாக;

மலைக்குகையில் இருக்கின்ற புலி பெற்ற குட்டி குடிப்பதற்குப் பசுக்கூட்டங்களின் முலைப்பால் அமுதை உண்ணவும், பசுவின் (பெண்) கன்று ஆண் கன்றுடன் புலி முலைப்பாலை உண்ணவும் மலை அப்படியே உருகவும், நீண்ட —

காட்டில் உள்ள மரங்கள் தளிர்விடவும், மயல் கொண்ட மதங்கொண்ட ஆண் யானைகள் பெண் யானையோடு (ஒரு புறம்) செல்ல, ஆகாயத்தில் உயரத்தில் உள்ள பறவைகள் நிலத்தில் வந்து சேரவும், (தன்) விரல்கள் தடவுகின்ற ஏழு;

தொளைகள் விட்டுள்ள மூங்கில் (புல்லாங் குழலில்) (தனது) விரலை முறைப்படி தடவினதால் (எழுகின்ற) இசைகளால் பல பல நாதங்களை எழுப்பும் கரியமேகம் போன்றவன் (கண்ணபிரான்), வேதப் பொருளோன், நெடியவன், மனம் மகிழும் மருகனே!

துணை நிற்பவனே! குணவானே! சரவணபவனே! வணங்கத்தக்கவனே! முருகனே! குருபரனே! (புகழ் வளரும்) அறுமுகனே! குகனே! கரையில் அலை வீசுகின்ற திருநகரமாம் (திருச்செந்தூரில்) உறையும் பெருமாளே!

(புனலுண்ணும் அவச வனிதையர் உறவினைவிட
அருள்புரிவாயே !)

## 61. பொதுமகளிர் உறவு அற

கனங்கள் கொண்ட குந்த ளங்க ளுங்கு லைந்த லைந்து விஞ்சு
கண்க ளுஞ்சி வந்த யர்ந்து களிகூரக்-
கரங்க ளுங்கு விந்து நெஞ்ச கங்க ளுங்க சிந்தி டுங்க
றங்கு பெண் களும்பி றந்து விலைகூறிப்;
பொனின்கு டங்க ளஞ்சு மென் தனங்க ளும்பு யங்களும்பெ
ருந்தி யன்பு நண்பு பண்பு முடனாகப்-
புணர்ந்து டன்பு லர்ந்து பின்க லந்த கங்கு ழைந்த வம்பு
ரிந்து சந்த தந்திரிந்து படுவேனோ
அனங்கனொந்து நைந்து வெந்து குந்து சிந்த அன்று கண்தி
றந்தி ருண்ட கண்டர் தந்த அயில்வேலா-
அடர்ந்த டர்ந்தெ திர்ந்து வந்த வஞ்ச ரஞ்ச
வெஞ்ச மம்பு
ரிந்த அன்ப ரின்ப நண்ப உரவோனே,.
சினங்கள் கொண்டிலங்கை மன்சிரங்கள் சிந்தவெஞ்சரந்தெ
ரிந்த வன்பரிந்த இன்ப மருகோனே-
[1]சிவந்த செஞ்ச தங்கையுஞ்சி லம்பு தண்டை
யும்பு னைந்து
செந்தில் வந்த கந்த எங்கள் பெருமாளே. (46)

## 62. அருள் பெற

கன்றிலுறு மானை வென்றவிழி யாலே
கஞ்சமுகை மேவு முலையாலே-
கங்குல்செறி கேச மங்குல்குலை யாமை
கந்தமலர் சூடு மதனாலே;

1. திருச்செந்தூரில் பாலசுப்ரமண்யராய் எழுந்தருளினாராதலின் - சதங்கை, சிலம்பு, தண்டை, கிண்கிணி, அணிந்தவை கூறப்பட்டது. செய்யுள் 16,47,52 - ம் பார்க்க.

* சிவபிரான் முருகருக்கு வேல் கொடுத்ததையும் குறிக்கும்

## 61

மேகம் போன்ற கூந்தல் குலைந்து அலைந்து, விளங்கும் கண்கள் சிவந்து சோர்வுற்று, மகிழ்ச்சி மிக்கு —

கைகளைக் கூப்பி, நெஞ்சத்தினுள்ளே இரக்கங் கொண்டு திரியும் பெண்களும் ஏற்பட்டு, (பெண்கள் மயலும் உண்டாகி) விலைபேசி (அவர்களுடைய )

பொற்குடங்களும் அஞ்சும் என்று கூறத் தக்க (அல்லது அஞ்சும் மெல்லிய ) கொங்கைகளையும், தோள்களையும் சேர்ந்து அன்பும், நட்பும், குணமும் ஒன்றுகூட —

கூடியும் உடனே ஊடியும், பின்பு கலந்து மனம் குழைந்து கேடு விளைவித்து எப்போதும் திரிந்து அழிவேனோ!

மன்மதன் நொந்து நைந்து, வெந்து, அழிந்து, சிதற அன்று (நெற்றிக்) கண்ணை விழித்த கரிய கழுத்தை உடைய சிவபிரான் தந்த கூரிய வேலனே!

கூட்டங் கூட்டமாய் நெருங்கி எதிர்த்து வந்த வஞ்சர்கள் (அசுரர்கள்) அஞ்சும்படி கொடிய போர் செய்த (திறலோனே!) அன்பர்களுக்கு இன்பந்தரும் நண்பனே - திறலோனே!

கோபங்கொண்டு இலங்கை மன்னன் (ராவணனுடைய) தலைகள் சிதறக் கொடிய அம்பை ஏவினவனாம் (திருமால்) அன்பு கொள்ளும் இன்ப மருகனே!

சிவந்த செவ்விய சதங்கையும், சிலம்பும், தண்டையும் அணிந்து திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள கந்தனே! எங்கள் பெருமாளே!

(அவம் புரிந்து சந்ததம் திரிந்து படுவேனோ.)

## 62

மான் கன்றை வென்ற கண்களாலும், தாமரைமொட்டுப் போன்ற கொங்கையாலும் —

இருள் (கருநிறம்) அடர்ந்த கூந்தல் மேகம் (கருமேகம்) போன்ற கூந்தல் குலையாத (கலையாத) வண்ணம் மணமுள்ள மலர் சூடும் அந்த வகையாலும்;

நன்றுபொருள் தீர வென்றுவிலை பேசி
நம்பவிடு மாத ருடனாடி-
[1]நஞ்சுபுசி தேரை யங்கமது வாக
நைந்துவிடு வேனை யருள்பாராய்;
குன்றிமணி போல்வ செங்கண்வரி [2]போகி
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்-
கொண்ட மயிலேறி அன்றசுரர் சேனை
கொன்றகும ரேச குருநாதா
மன்றல்கமழ் பூக தெங்கு திரள்சோலை
வண்டுபடு வாவி புடைசூழ-
மந்தி நடமாடு **செந்திநகர்** மேவு
[3]மைந்தஅம ரேசர் பெருமாளே (47)

## 63. திருவடி பெற

குகர மேவுமெய்த் துறவினின் மறவாக்
கும்பிட் டுந்தித் தடமுழ்கிக்-
குமுத வாயின்முற் றமுதினை நுகராக்
கொண்டற் கொண்டைக் குழலாரோ;
டகரு தூளிகர்ப் புரதன இருகோட்
டன்புற் றின்பக் கடலூடே-
அமிழு வேனைமெத் தெனவொரு கரைசேர்த்
தம்பொற் **றண்டைக்** கழல்தாராய்;

---

1. நஞ்சு - நஞ்சையுடைய பாம்பு. இஃது ஆகுபெயர்.

2. போகி - பாம்பு.

3. மைந்தன் - வீரன்.

நல்லபடியே பொருள் முழுதும் வரும்படி வெற்றியுடன் விலை பேசித் (தம்மை) நம்பும்படி செய்கின்ற மாதர்களுடன் விளையாடி —

பாம்பு உண்ணும் தேரை (என்னும்படி) உடல் அத் தன்மையதாகி நைந்து போகின்ற என்னை அருட்(கண்) பார்த்தருளுக —

குண்டுமணி போலச் சிவந்த கண்ணையும் கோடுகளையும் உடைய பாம்பு படத்தை வீசும்படி (தனது) அழகிய கூரிய வாயில் —

(அப் பாம்பைக்) கொண்ட மயிலில் ஏறி அன்று அசுரர் சேனைகளைக் கொன்ற குமரேசனே! குருநாதனே!

மணங் கமழும் கமுகு, தெங்கு (இவை) நெருங்கு சோலைகளும், வண்டுகள் ஒலிக்கும் குளங்களும் பக்கங்களிற் சூழ —

குரங்குகள் நடனம் செய்யும் **செந்தூர்** நகரில் வீற்றிருக்கும் வீரனே! தேவேந்திரர்களுக்குப் பெருமாளே!

(நைந்து விடுவேனை அருள் பாராய்.)

## 63

மலைக் குகைகளில் இருக்கும் உண்மைத் துறவிகள்போல, மறவா (மனத்துடன்) கும்பிட்டு (மாதர்களின்) கொப்பூழ்க் குளத்தில் முழுகி —

(அவர்களது) குமுத மலர் போன்ற வாயிற் பெருகும் அமுதத்தைப் பருகி, மேகம் போன்ற கொண்டையிட்ட கூந்தலாருடைய;

அகிற்பொடி, கற்பூரம் அணிந்துள்ள கொங்கைகளாகிய இரு மலைகளில் அன்பு பூண்டு இன்பக் கடலிடையே-

அமிழுகின்ற என்னைப் பக்குவமாக ஒப்பற்ற (முத்திக்) கரையிற் சேர்த்து (உனது) அழகிய பொன்னாலாய தண்டை சூழ்ந்த கழல்களைத் தந்தருளுக:,

ககன கோளகைக் கணவிரு மளவாக்
கங்கைத் துங்கப் புனலாடும்-
கமல வாதனற் களவிட முடியாக்
கம்பர்க் [1]கொன்றைப் புகல்வோனே;
சிகர கோபுரத் தினுமதி ளினுமேற்
செம்பொற் கம்பத் தளமீதும்-
[2]தெருவி லேயுநித் திலமெறி யலைவாய்ச்
**செந்திற்** கந்தப் பெருமாளே.(48)

## 64. ஆண்டருள

குடர்நிண மென்பு சலமல மண்டு
குருதிந ரம்பு சீயூன் பொதிதோல்-
குலவு குரம்பை முருடு சுமந்து
குனகிம கிழ்ந்து நாயேன் தளரா;
அடர்மத னம்பை யனையசு ருங்க
ணரிவையர் தங்கள் தோடோய்ந் தயரா-
அறிவழி கின்ற குணமற வுன்றன்
அடியிணை தந்து **நீயாண் டருள்வாய்;**
தடவியல் **செந்தில்** இறையவ நண்பு
தருகுற மங்கை வாழ்வாம் புயனே-
சரவண கந்த முருகக டம்ப
தனிமயில் கொண்டு பார்சூழ்ந் தவனே;

---

1. ஒன்று - ஒப்பற்ற பிரணவப் பொருள் - திருப்புகழ் 19, 21, பார்க்கவும்.

2. தெருவத்தில் வந்து செழுமுத் தலைக்கொள் திருமுல்லைவாயில் இதுவே. சம்பந்தர் II-88-2.

ஆகாய முகட்டில் விளங்கும் அளவுக்கு அடங்காத கங்கையாம் புனிதநீர் (சடா மகுடத்தில்) அசைந்தாடும் —

(கம்பர்க்கு), தாமரைப் பீடத்தில் அமர்ந்துள்ள பிரமனால் அளவிட முடியாத கம்பர்க்கு (சிவபிராற்கு), ஒன்றைப் (ஒப்பற்ற பிரணவப் பொருளைப்) போதித்தவனே!

சிகரங்களையுடைய கோபுரத்தின் மீதும், மதில் மேலும், செம்பொற் கம்பங்களின் மேல் அமைந்துள்ள தளத்தின் மீதும் —

தெருவிலும் முத்துக்களை எறிகின்ற அலைகளின் கரையில் (உள்ள) **திருச்செந்தூர்க் கந்தப் பெருமாளே!**

(அம்பொன் தண்டைக் கழல் தாராய்.)

## 64

குடல், கொழுப்பு, எலும்பு, ஜலம், மலம், நிரம்பியுள்ள ரத்தம், நரம்பு, சீ(ழ்) மாமிசம், மூடும் தோல் —

(இவையுடன்) விளங்குகின்ற கூடாகிய (மரக்) கட்டையைச் சுமந்து, கொஞ்சிப் பேசியும் மகிழ்ந்தும் நாயேன் தளர்ந்து (ம்),

நெருங்கிவரும் மன்மதனது அம்பு போன்ற கரிய கண்களையுடைய மாதர்தம் தோள்களில் தோய்ந்தும், சோர்ந்தும்,

அறிவுஅழிந்து போகின்ற (துர்க்) குணம் தொலைய உனது (திரு) அடியிணைகளைத் தந்துநீ (என்னை) ஆண்டருளுவாயாக.

பெருமை பொருந்திய (திருச்) செந்தூர் இறைவனே ! அன்பு விளங்கிய குறமங்கை (வள்ளிக்கு) வாழ்வாகின்ற திருப்புயங்களை உடையவனே !

சரவண ! கந்த ! முருக ! கடம்ப ! ஒப்பற்ற மயில் மீதேறி உலகை வலம் வந்தவனே !

சுடர்படர் குன்று தொளைபட அண்டர்
தொழவொரு செங்கை வேல்வாங் கியவா-

துரிதப தங்க இரதப்ர சண்ட
சொரிகடல் நின்ற சூராந் தகனே. (49)

## 65. திருவடி பெற

கொங்கைகள்கு லுங்கவளை செங்கையில்வி ளங்கஇருள்
கொண்டலைய டைந்தகுழல் வண்டுபாடக்-

கொஞ்சிய [2]வனங்குயில்கள் [3]பஞ்சநல்வ னங்கிளிகள்
கொஞ்சியதெ னுங்குரல்கள் கெந்துபாயும்-

வெங்கயல் மிரண்டவிழி அம்புலிய டைந்தநுதல்
விஞ்சையர்கள் தங்கள்மயல் கொண்டுமேலாய்-

வெம்பிணியு ழன்ற [4]பவ சிந்தனைநி னைந்துனது
மின்சரண பைங்**கழலொ டண்டஆளாய்;**

சங்கமுர சந்திமிலை துந்துமித தும்பவளை
தந்தனத னந்தவென வந்தசூரர்-

சங்கைகெட மண்டிதிகை யெங்கிலும டிந்துவிழ
தண் கடல்கொ ளுந்தநகை கொண்டவேலா!

சங்கரனு கந்தபரி வின்குருவெ னுஞ்சுருதி
தங்களின்ம கிழ்ந்துருகு மெங்கள்கோவே-

சந்திரமு கஞ்செயல்கொள் சுந்தரகு றம்பெணொடு
சம்புபுகழ் **செந்தில்மகிழ்** தம்பிரானே. (50)

---

1. துரித பதங்க இரத ப்ரசண்ட - வேகத்தோடு செல்லும் மயிலாகிய இரதத்தையுடைய பிரசண்டனே.

2. வன அம் குயில்கள் - சோலையில் வசிக்கும் அழகிய குயில்கள்.

3. பஞ்ச நல் வனம் கிளிகள் - நல்ல பஞ்ச வர்ணக் கிளிகள்.

4. பவ சிந்தனை - பிறவிக்கடலில் அலைபவனை. பவம் - பிறப்பு, சிந்து - கடல்.

ஒளி பரந்த குன்றம் (பொன்னொளி சேர் கிரவுஞ்சம்) தொளை படவும், தேவர்கள் தொழவும் ஒப்பற்ற திருக்கரத்தி-னின்றும் வேலாயுதத்தைச் செலுத்தியவனே!

வேகத்தொடு செல்லும் பக்ஷியாம் மயிலை ரதமாகக் கொண்ட பெருத்த வீரனே! அலை வீசுகின்ற கடலில் நின்ற சூரனுக்குக் காலனா யிருந்தவனே!

(அடியிணை தந்து நீயாண் டருள்வாய்.)

## 65

கொங்கைகள் குலுங்க, வளையல்கள் செங்கையில் விளங்க, இருளும் மேகமும் போன்ற கூந்தலில் வண்டு பாடக்

கொஞ்சுகின்ற சோலைக் குயில்களும், நல்ல பஞ்ச வர்ணக் கிளிகளும் கொஞ்சுகின்றனவோ என்னும்படியான குரல், தத்திப் பாயும் —

விரும்பத்தக்க கயல்மீன் போல மிரளும் கண், பிறைபோன்ற நெற்றி இவைகளைக் கொண்டுள்ள மாயவித்தை வல்லவரான பொது மகளிரின் மேல் மோகங் கொண்டு - பின்னர் —

கொடிய பிணியில் வேதனைப்பட்ட பிறவிக் கடலில் அலைபடுகிற (என்னைநீ) குறிக்கொண்டு உனது ஒளிவீசும் திருவடிப் பைங்கழலில் அண்டும்படி (சேரும்படி) ஆண்டருளுக;

கூட்டமான முரசு வாத்தியம், திமிலை என்னும் பறை, பேரிகை இவை ஒலிப்பச் சங்குகள் தந்தன தனந்த என்று ஒலிக்க வந்த சூரர்களின் —

எண்கள் (தொகை) அழியும்படியாக நெருங்கிச் சென்று திசை எல்லாவற்றிலும்(அவர்கள்) இறந்துவிழ, குளிர்ந்த கடல் தீப்படும்படி கோப நகை கொண்ட வேலனே!;

சங்கரனார் மகிழ்ந்து அன்புடன் கொண்ட குருமூர்த்தி (நீ) என்று (உன்னைச்) சொல்லும் வேதங்கள் தம்முள்ளே மகிழ்ந்து மனங்குழையும் எங்கள் தலைவனே!

சந்திரன் போலத் திருமுகத்தையும், (பத்திச்) செயலையும் (தொண்டுகளையும்) கொண்ட அழகிய குறப் பெண்ணோடு (வள்ளியோடு) ஈசன் புகழும்படியாகத் (திருச்) செந்தூரில் மகிழ்ந்து வீற்றிருக்கும் தம்பிரானே!

(சரண பைங்கழலொடு அண்ட ஆளாய்.)

## 66. வீணாள்படாத வகை

கொம்பனை யார்காது மோதிரு
கண்களி லாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு

கொங்கையி [1]னீராவி மேல்வளர்
செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி [2]லாதார சோலையில் மருளாதே;

உம்பர்கள் ஸ்வாமீ நமோநம
எம்பெரு மானே நமோநம
ஒண்டொடி மோகா நமோநம எனநாளும்

உன்புக ழேபாடி நானினி
அன்புட னாசார பூசைசெய்
துய்ந்திட **வீணாள்படாதருள்** புரிவாயே;

பம்பர மேபோல ஆடிய
சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி-

பங்கமி லாநீலி மோடிப
யங்கரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்;

[3]டெம்புதல் வாவாழி வாழியெ
னும்படி வீறான வேல்தர
என்று முளானேம நோகர வயலூரா-

---

1. நீ ராவி - நீர்த் தடாகம்.

2. ஆதாரம் - உடல்.

3. சூரனை வதைக்கத் தேவி முருகருக்கு வேல் கொடுத்ததை,

அழியாப் பேரளி உமைக்க ணின்று
தற்பெயர் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த
அமையா வென்றி அரத்த நெடுவேலோய்!"-

எனவரும் கல்லாடத்திற் காண்க.

## 66

(பூங்) கொம்பு போன்ற மாதரது காதளவும் நீண்டு அதை மோதும் இரண்டு கண்களிலும், மகிழ்ச்சி தரக் கூடியதும் (அல்லது மிக்க வாசனை கொண்டுள்ளதும்) குளிர்ந்த செஞ்சாந்து, சந்தனம், அணிகலன்கள் கொண்டுள்ளதும் மலை போன்றதுமான (நகக் குறிக்கு உற்றதுமான) ----

கொங்கையிலும், நீர்த் தடாகத்தின் மேலே வளர்ந்துள்ள செங்கழுநீர்ப்பூ மாலையைச் சூடிய கூந்தலிலும், உடலின் அழகிலும், மருட்சி கொள்ளாமல்,

தேவர்களுடைய சுவாமியே (நமோ நம) உன்னை வணங்குகின்றேன் வணங்குகின்றேன், எம்பெருமானே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், ஒளி பொருந்திய (கை-தோள்) வளையணிந்த வள்ளியின் மேல் மோகங்கொண்டவனே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன் என்று நாள்தோறும் —

உன் புகழையே பாடி நான் இனி அன்புடனே ஆசாரமான பூஜையைச் செய்து பிழைத்திடவும் என் வாழ்நாள் வீணாண நாளாகப் போகாதபடியும் அருள் புரிவாயாக;

பம்பரம் சுழல்வதுபோல ஆடின சங்கரி, வேதாளங்களுக்குத் தலைவி, தாமரை போன்ற திரு நிறைந்த பாதங்களிற் சிலம்பு அணிந்தவள், திருக்கரத்திற் சூலத்தை ஏந்தினவள் —

குற்றமிலாத கருநிறத்தவள், காடுகாள் (துர்க்கை), பயத்தைத் தருபவள் (பயஹாரி பயத்தைப் போக்குபவள்) மகாகாளி, யோகினி, முன்பு மதுபானஞ் செய்திருந்த சூரனொடு எதிர்த்து (நீ) போர் செய்ய வேண்டியதைக் குறித்து —

எம் மகனே நீ வாழ்க வாழ்க என்று ஆசி கூறும் வகையில் வெற்றியைத் தரும் வேலாயுதத்தைத் தரப்பெற்ற என்றும் அழியாதுள்ள மூர்த்தியே! மனதுக்கு இன்பம் தருபவனே! வயலூர்ப் பெருமானே!

இன்சொல்வி சாகா க்ருபாகர
செந்திலில் வாழ்வாகி யேயடி
யென்றனை யீடேற வாழ்வருள் பெருமாளே. (51)

## 67. திருவடிப்பற்று உற

கொலைமத கரியன் ம்ருகமத தனகிரி
கும்பத் தனமானார்;-
குமுதஅ முதஇதழ் பருகியு ருகிமயல்
கொண்டுற் றிடுநாயேன்;
நிலையழி கவலைகள் கெடவுன தருள்விழி
நின்றுற் றிடவேதான்-
நின திரு வடிமல ரிணைமன தினிலுற
[1] நின்பற் றடை வேனோ;
சிலையென வடமலை யுடையவர் அருளிய
செஞ்சொற் சிறுபாலா-
திரைகட லிடைவரும் அசுரனை வதைசெய்த
செந்திற் பதிவேலா;
[2]விலைநிகர் நுதலிப மயில்குற மகளும்வி
ரும்பிப் புணர்வோனே-
விருதணி மரகத மயில்வரு குமர[3] வி
டங்கப் பெருமாளே. (52)

---

1. பற்றுக பற்றற்றான் பற்றினை - திருக்குறள்.350.
பற்றற்றான் பற்றும் பவள அடி - அப்பர் VI. 6,9.

2. விலை - வில்லை.

3. விடங்கர் - உளியினாற் செதுக்கப்படாதவர் - சுயம்பு.

டங்கம் - உளி.

இனிய சொற்களை உடைய விசாகனே! கிருபாகரனே (திருச்) செந்தூரில் வீற்றிருந்தருள்பவனாகி அடியேன் ஈடேறும் வண்ணம் (நல்) வாழ்வை எனக்கு அருளும் பெருமாளே.

(வீணாள் படாதருள் புரிவாயே!)

# 67.

கொலை செய்யும் மதயானைக்கு ஒப்பானதும், கஸ்தூரி அணிந்துள்ளதுமான கொங்கையாம் மலையை (மலை போன்ற கொங்கையை), குடம்போன்ற கொங்கையை உடைய மாதர்களின் —

குமுதமலர் போன்றதும்,அமுதம் தருவதுமான இதழ்களை (வாயூறலைப்) பருகியும், உருகியும் மோக மயக்கம் கொண்டுள்ள நாயேனுடைய;

தன்மையை அழிக்கின்ற (நன்னிலையை அழிக்கின்ற) கவலைகள் (எல்லாம்) கெட உனது அருட்பார்வையில் நின்ற நிலை பெறுதற்கு

உனது திருவடி மலரிணை என் மனத்தில் நிலைபெற்றிருக்க உன்மீது பற்றைப் பெறுவேனோ;

வில்லாக வடக்கிருக்கும் மலையாம் மேருவைக் கொண்ட-வராகிய (சிவபிரான்) அருளிய, செவ்விய சொற்களை உடைய சிறு குழந்தையே —

அலைகடலின் நடுவே நின்ற அசுரனை (சூரனை) வதைத்த திருச்செந்தூர் நகர்வேலனே!

வில்லை நிகர்த்த நெற்றியை உடைய - யானை போற்றி வளர்த்த (ஐராவதம் வளர்த்த) மயிலன்ன தேவ சேனையும், குறமகளாம் வள்ளியும் விரும்பிச் சேர்பவனே!

வெற்றிச் சின்னம் அணிந்த மரகத (பச்சை) மயிலில் (ஏறி) வரும் குமரனே! விடங்கப் பெருமாளே! (சுயம்பு மூர்த்தியே!)

(நின்பற் றடைவேனோ.)

## 68. உலகோர்க்கு இரங்குதல்

சேமக் கோமள பாதத் தாமரை
சேர்தற் கோதும நந்தவேதா-
தீதத் தேயவி ரோதத் தேகுண
சீலத் தேமிக அன்புறாதே;
காமக் ரோதவு லோபப் பூதவி
காரத் தேயழி கின்றமாயா-
காயத் தேபசு பாசத் தேசிலர்
[1]காமுற்றேயும தென்கொலோதான்;
[2]நேமிச் சூரொடு மேருத் தூளெழ
நீளக் காளபு யங்க கால-
நீலக் ரீபக லாபத் தேர்விடு
நீபச் சேவக செந்தில்வாழ்வே;
ஓமத் தீவழு வார்கட் கூர்சிவ
லோகத் தேதரு மங்கைபாலா-
யோகத் தாறுப தேசத் தேசிக
வூமைத் தேவர்கள் தம்பிரானே. (53)

---

1. இங்ஙனம் உலகோர் பொருட்டு அருணகிரியார் இரங்கும் பிறிதொரு பாடல் "களவு கொண்டு" எனத் துவக்கும் பாடல் - (1230).

2. நேமி - கடல்: 'கடலழக் குன்றழச் சூரழ' -கந். அலங்-5

வேல் பட்டழிந்தது வேலையும், சூரனும், வெற்பும் - வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனும் மேருவுமே - கந் அலங் 49,62.

## 68

இன்பந் தருவதும் (அல்லது காவலாய் அமைந்துள்ளதும்) அழகுள்ளதுமான (உனது) பாத தாமரையைச் சேர்வதற்கு (உண்டான) வழியைச் சொல்லுகின்ற எண்ணில்லாத வேதங்களைக்

கடந்த (நிலையின் மீதும்), மாறுபாடு - பகை - என்பதே அறியாத (உயர்ந்த) நிலையின்மீதும், நற்குண சீல நன்னெறியின் மீதும் மிக்க அன்பைக் கொள்ளாமல்,

காமத்தாலும், குரோதத்தாலும் (கோபத்தாலும்), ஈதற்குணமே இல்லாமையாலும், ஐம்பூதங்களின் சேஷ்டையாலும் (கலக்கத்தாலும்) அழிகின்ற மாயமான —

(இந்த) உடலின் மீதும், (இந்த ஜீவாத்மா இச்சைப்படும் உலகப் பற்றுக்களின் மீதும்) சிலர் ஆசைகொண்டு இருக்கின்ற அந்நிலை ஏன்தானோ! தெரிவில்லையே!

கடலும், சூரனும், மேருவும் தூளாகும்படி நெடிய விஷமுள்ள பாம்பைக் காலிற் கொண்ட —

நீலக் கழுத்தையும் தோகையையும்கொண்ட தேராகிய (வாகனமாகிய) மயிலைச் செலுத்திய கடம்பணிந்த வீரனே! திருச்செந்தூரில் வாழ்பவனே !

வேள்வித் தீயைத் தவறின்றி வளர்ப்பவர்க்கு இருப்பிடத்தைச் சிவலோகத்திலே தருகின்ற தேவி (பார்வதி குமரனே)!

யோகவழிகளை உபதேசித்த குருமூர்த்தியே! (சகல கலா வல்லவனாகிய உன் முன்னே வாயிலிகளாகிய) ஊமைகளாம் - (எல்லாத்) தேவர்களுக்கும் தம்பிரானே (தலைவனே) !

(பசு பாசத்தே சிலர் காமுறுதல் என்கொலோ!)

## 69. திருவடியை வந்திக்க

[1]தகர நறை பூண்ட விந்தைக்
குழலியர்கள் தேய்ந்த இன்பத்
தளருமிடை யேந்து தங்கத் தனமானார்-

தமைமனதில் வாஞ்சை பொங்கக்
கலவியொடு சேர்ந்து மந்த்ரச்
சமய ஜெப நீங்கி யிந்தப் படிநாளும்;

[2]புகலரிய தாந்த்ரி சங்கத்
தமிழ்பனு லாய்ந்து கொஞ்சிப்
புவியதனில் வாழ்ந்து வஞ்சித் துழல்மூடர்-

புநிதமிலி மாந்தர் தங்கட்
புகழ்பகர்தல் நீங்கி நின்பொற்
புளகமலர் பூண்டு வந்தித் திடுவேனோ;

தகுடதகு தாந்த தந்தத்
திகுடதிகு தீந்த மிந்தித்
தகுகணக தாங்க ணங்கத் தனதான-

தனனதன தாந்த னந்தத்
தெனநடன மார்ந்த துங்கத்
தனிமயிலை யூர்ந்த சந்தத் திருமார்பா;

திசையசுரர் மாண்ட ழுந்தத்
திறலயிலை வாங்கு செங்கைச்
சிமையவரை யீன்ற மங்கைக் கொருபாலா-

திகழ்வயிர மேந்து கொங்கைக்
குறவனிதை காந்த சந்த்ரச்
சிகரமுகி லோங்கு செந்திற் பெருமாளே. (54)

---

1. தகரம் - வாசனைப் பொருள்களுள் ஒன்று, 'வேரியும் தகரமும் விரையும் உரிஞ்சி' - பெருங்கதை 4. 16-6.

2. புகலரியதாம் + திரிசங்கத் தமிழ் - எனப் பிரிக்க.

## 69

மயிர்ச் சாந்தின் நறுமணங் கொண்ட அழகிய கூந்தலை உடையவர்களும், மெலிந்துள்ளதும், இன்பந்தருவதும், தளர்ந்துள்ளதுமான இடை தாங்குகின்ற பொன்னிறத்த கொங்கையை உடையவர்களுமான மாதர்களை —

மனத்தில் காமஆசை மேலெழக் கலவி இன்பத்திற் கூடி, மந்திரம், மதம், ஜெபம் இவை தமைக் கைவிட்டு, இவ்வாறாக நாள்தோறும்

சொல்லுதற்கு அரியதான முச்சங்கத்துத் தமிழ் நூல்களை ஆய்ந்தும், இனிய சொற்களைப் பேசியும், பூமியில் வாழ்வு செலுத்தும் நாள் (பலரை) வஞ்சித்துத் திரிகின்ற மூடர்களும் —

பரிசுத்த மில்லாதவர்களுமான மக்களிடம் (போய் அவர்களைப்) புகழ்ந்து பேசுதலை விடுத்து, உனது அழகிய இன்பந்தரும் (திருவடி) மலர்களை (மனத்திலும் சிரசிலும்) கொண்டு துதிக்க மாட்டேனோ!

தகுடதகு தாந்த தந்தத் ** ** **
தகு கணக தாங்க ணந்தத் தனதான

தனனதன தாந்த னந்தத் தென்கின்ற நடனம் நிறைந்த உயர்ந்த ஒப்பிலாத மயிலை வாகனமாகக் கொண்ட - சந்தனம் அணிந்த - அழகிய மார்பனே!

திசைகளில் உள்ள அசுரர்கள் இறந்து அடங்க வெற்றிவேலைச் செலுத்தின செவ்விய திருக்கைக் (குழந்தையே!) இமய மலை பெற்ற மகளாம் பார்வதியின் ஒப்பற்ற பாலனே (குழந்தையே!)

விளங்குகின்ற வயிர மாலையை அணிந்த (அல்லது திண்மை வலிமை பூண்ட) கொங்கையை உடைய குறப்பெண் (வள்ளியின்) கணவனே! சந்திரன் (தவழும்) கோபுரத்தின் மேல் மேகங்கள் விளங்கும் திருச்செந்தூர்ப் பெருமாளே!

(நின்பொற் புளக மலர் பூண்டு வந்தித் திடுவேனோ)

## 70. காலன் வரும்போது காட்சி பெற

தந்த பசிதனைய றிந்து முலையமுது
தந்து முதுகுதட வியதாயார்-

தம்பி பணிவிடைசெய்தொண்டர் பிரியமுள
தங்கை மருகருயி ரெனவேசார்;

மைந்தர் மனைவியர்*கடும்பு கடனுதவு
மந்த வரிசைமொழி பகர்கேடா-

வந்து †தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க வொருமகிட மிசையேறி;

அந்த கனு மெனைய டர்ந்து **வருகையினி**
லஞ்ச லெனவலிய மயில்மேல்நீ-

அந்த மறலியொடு கந்த மனிதனம
தன்ப னெனமொழிய **வருவாயே;**

சிந்தை மகிழமலை மங்கை நகிலிணைகள்
சிந்து ‡பயமயிலு மயில்வீரா-

திங்க ளரவுநதி துன்று சடிலரருள்
செந்தி னகரிலுறை பெருமாளே. (55)

## 71. செந்திலை உரைத்து உய்ய

தரிக்குங்கலை நெகிழ்க்கும்பர
தவிக்குங்கொடி மத§னேவிற்-

றகைக்குந்தனி திகைக்குஞ்சிறு
தமிழ்த்தென்றலி னுடனேநின்;

* கடும்பு - சுற்றம். † தலைநவிர் - தலை மயிர்.
‡ பயம் - பால். § ஏ- அம்பு.

## 70

உண்டான பசியை அறிந்து, முலைப்பால் தந்து முதுகைத் தடவின தாயார்-

தம்பி, ஏவல் செய்து வந்த அடிமை ஆள்கள், பிரியம் கொண்டுள்ள தங்கை, மருகர், தம் உயிரென்றே அன்பு பூண்டு சார்ந்திருந்த;

பிள்ளைகள், மனைவியர், சுற்றத்தார் (ஆகிய இவர்கள் யாவரும் தத்தம்) கடமைக்கு உரிய அந்த (உறவு) முறை மொழி-களைச் சொல்லிக்கொண்டு - குறையுடன்

வந்து தலைமயிர் அவிழ்ந்து தரையில் விழவும் மயங்கவும் ஒரு எருமைக் கடாவின் மேல் ஏறி,

யமன் என்னை நெருங்கி வரும்போது, அஞ்சாதே என்று கூறி வலிய மயில் மேல் நீ-

அந்த யமனிடம் (இவன் நமக்கு) உகந்த மனிதன் (வேண்டியவன்), நம்முடைய அன்பன் என்று சொல்ல வந்தருளுவாயாக.

சிந்தை மகிழும்படி மலைமங்கை(பார்வதி)யின்கொங்கைகள் இரண்டும் தந்த பாலை உண்ட மயில் வீரனே! (அல்லது வேல் வீரனே!)

நிலவும், பாம்பும், கங்கைநதியும் நெருங்கிப் பொதிந்துள்ள சடைப் பெருமான் அருளிய பெருமாளே! திருச்செந்தூர் நகரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அந்தகன் வருகையினில் அன்பனென மொழிய வருவாயே!)

## 71

அணிந்துள்ள ஆடை நெகிழ்ந்து போம், வேதனைப்படும்; கொடி போன்ற (இப்பெண்) மன்மதனது பாணத்தி-னால் —

தடையுண்ணும், தனியாக நின்று திகைப்புண்ணும், மெல்லிய தமிழ்(த் திசை)த் (தெற்குத்) திசைத் தென்றற் காற்றினுடனே வந்து நின்று;

றெரிக்கும்பிறை யெனப்புண்படு
மெனப்புன்கவி சிலபாடி-
இருக்குஞ்சிலர் திருச்செந்திலை
**யுரைத்துய்ந்திட** அறியாரே;

அரிக்குஞ்சதுர் மறைக்கும்பிர
மனுக்குந்தெரி வரிதான-
அடிச்செஞ்சடை முடிக்கொண்டிடு
மரற்கும்புரி தவபாரக்;

கிரிக்கும்பநன் முநிக்குங் க்ருபை
வரிக்குங் குரு பரவாழ்வே-
கிளைக்குந்திற லரக்கன்கிளை
கெடக்கன் றிய பெருமாளே. (56)

## 72. தொண்டு செய்ய

துன்பங்கொண் டங்க மெலிந்தற
நொந்தன்பும் பண்பு மறந்தொளி
துஞ்சும்பெண் சஞ்சல மென்பதி லணுகாதே-
இன்பந்தந் தும்பர் தொழும்பத
கஞ்சந்தந் தஞ்ச மெனும்படி
யென் றென்றுந் **தொண்டு செயும்படி** யருள்வாயே-

நின்பங்கொன் றுங்குற மின்சர
ணங்கண்டுந் தஞ்ச மெனும்படி
நின்றன்பின் றன்படி கும்பிடு மிளையோனே,

எரிக்கும் (இப்பிறை நிலா) - என்று கூறி மனம் புண்படும் என்றெல்லாம்(அகப்பொருள் துறையில் பொய்ம்மை-யாளராம் மக்கள் மீது) புன்கவிகள் சிலவற்றைப் பாடிக்கொண்டு —

இருக்கின்ற சிலர் (ஐயோ) திருச்செந்தூரை உரைத்துப் பிழைக்க அறிய மாட்டாரோ! (அல்லது - உரைத்துப் பிழைக்க அறியாதிருக்கின்றாரே - இதென்ன பாவம்!)

திருமாலுக்கும்,நான்மறைக்கும், பிரமனுக்கும் தெரிதற்கு அரிதான —

திருவடியையும் செஞ்சடை முடியையும் கொண்டுள்ள சிவபிரானுக்கும், செய்துள்ள தவபாரம் (நிறைந்த)

(பொதிய) மலையில் (வாசஞ் செய்யும்) கும்பத்தில் தோன்றிய நல்ல அகத்திய முநிவர்க்கும் அருள் பாலித்த குருபர மூர்த்தியே! —

பெருகிவந்த வீரமுள்ள அசுரன் (சூரன்) அவன் சுற்றத்தாருடன் அழியக் கோபித்த பெருமாளே!

(திருச்செந்திலை உரைத்து உய்ந்திட அருள்வாயே.)

## 72

துன்பங்கொண்டு, தேகம் மெலிந்து, மிகவும் நொந்து அன்பையும் நற்குணங்களையும் மறந்து, (தேக) ஒளி குறைந்து போகும்படி செய்யும் பெண் மயக்கம் என்பதில் நான் அணுகிச் சிக்கிக் கொள்ளாமல் —

இன்பம் கொடுத்துத் தேவர்கள் தொழுகின்ற (உனது) பாத தாமரையே நமது தஞ்சமென்று (புகலிடம் என்று ) கொண்டு எஞ்ஞான்றும் (உனக்குத்) தொண்டு செய்யும்படி அருள்புரிவாயாக;

உன் பக்கத்திற் பொருந்தி நிற்கும் (அல்லது உன்மீது மனம் ஒன்றியுள்ள) குறக்குலத்து மின் போன்ற வள்ளியின் திருவடியைக் கண்டு தஞ்சமென்று (இதுவே எனக்குப் புகலிடம் என்று விளங்கும்படி) நின்று அன்பின் முறைப்படி கும்பிட்ட இளையோனே!

பைம்பொன்சிந் தின்றுறை தங்கிய
குன்றெங்குஞ் சங்கு வலம்புரி
பம்புந்தென் **செந்திலில்** வந்தருள்
பெருமாளே. (57)

## 73. பொதுமகளிர் இணக்கம் அற

தெருப்பு றத்துத் துவக்கியாய்
முலைக்கு வட்டைக் குலுக்கியாய்
சிரித்து ருக்கித் தருக்கியே பண்டைகூள மெனவாழ்-

சிறுக்கி ரட்சைக் கிதக்கியாய்
மனத்தை வைத்துக் கனத்த பேர்
தியக்க முற்றுத் தவிக்கவே
கண்டு பேசி யுடனே;

இருப்ப கத்துத் தளத்துமேல்
விளக்கெ டுத்துப் படுத்துமே
லிருத்தி வைத்துப் பசப்பியே
கொண்டு காசு தணியா-

திதுக்க துக்குக் [1]கடப்படா
மெனக்கை கக்கக் கழற்றியே
இளைக்க விட்டுத் **துரத்துவார்**
தங்கள் **சேர்வை தவிராய்;**

பொருப்பை யொக்கப் பணைத்ததோ
ரிரட்டி பத்துப் புயத்தினால்
பொறுத்த பத்துச் சிரத்தினால்
மண்டு கோபமுடனே-

பொரப்பொ ருப்பிற் கதித்தபோ
ரரக்கர் பட்டுப் பதைக்கவே
புடைத்து முட்டத் துணித்தமா
லன்புகூரு மருகா;

---

1. கடபடமெனல் - சப்த சாலத்தால் மருட்டிப் பேசுதல்.

கற்றதுங் கேட்டதுந்தா னேதுக்காக கடபட என் றுருட்டுதற்கோ, (தாயு - நின்ற நிலை, 3)

பசுமைப் பொலிவுள்ள கடற்கரையில் உள்ள குன்றின் இடமெல்லாம் சங்கும் வலம்புரியும் நிரம்பிக் கிடக்கும் அழகிய திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள பெருமாளே!

(என்றென்றும் தொண்டு செய்யும்படி அருள்வாயே.)

# 73.

தெருவின் வெளிப்புறத்திலேயே கட்டுண்டவராய் (எப்போதும் நிற்பவராய்), கொங்கை என்கின்ற மலையைக் குலுக்குபவராய், சிரித்தும், (காண்போர் மனத்தை) உருக்கியும், அகங்கரித்தும் பழைய குப்பை என வாழ்கின்ற —

இளம்பெண்கள் (வேசியர் குலத்துப் பெண்கள்) காத்தளிப்பவர் போல இதமான மொழிகளைக் கூறுபவராய், மனம் வைத்து (செல்வத்தில்) பலமான பேர்வழிகள் (தம்மேல்) மயக்கங்கொண்டு தவிக்குமாறு அவர்களைக் கண்டும் பேசியும், உடனே

(தங்கள்) இருப்பிடத்தின் உள்ளே, தளத்தின்மேலே, விளக்கை எடுத்துவிட்டுப், படுத்து மேலே இருக்க வைத்துப் பசப்பு நடிப்புக்களை நடித்துக்கொண்டு, (கொடுத்த) காசு போதாது

இதற்கு வேண்டும், அதற்கு வேண்டும் என்று ஜாலப் பேச்சுக் களைப் பேசி கை (யில் உள்ள பொருள்களை யெல்லாம்) கக்கும் படி செய்து பிடுங்கியே (பின்னர்ச்) சோர்வடைந்து போகும் படி (வெருட்டித்) துரத்துகின்ற (பொது) மகளிர்களுடனே சேருவதை நீக்கியருளுக.

மலைபோலப் பருத்தனவாம் (இரட்டை பத்து) இருபது புயங்களாலும், தாங்கியுள்ள பத்துத் தலைகளாலும் மூண்ட கோபத்துடன் (இராவணன்) —

சண்டை செய்ய, மலைபோலக் கொதித்தெழுந்த போர் அரக்கர்கள் (யாவரும்) சிதைவுண்டு பதைக்கவே (அவர்களை) அடி அடித்து (அவர்கள்) எல்லாரையும் வெட்டி யொழித்த திருமால் அன்புமிக வைத்துள்ள மருகனே!

வரப்பை யெட்டிக் குதித்துமே
லிடத்தில் வட்டத் தளத்திலே
மதர்த்த முத்தைக் குவட்டியே
நின்றுசேலி னினம்வாழ்-

வயற்பு றத்துப் புவிக்குள்நீள்
திருத்த ணிக்குட் சிறப்பில்வாழ்
வயத்த நித்தத் துவத்தனே
**செந்தில்** மேவு குகனே. (58)

## 74. உயிர் போம்பொழுது மயில்மேற் காட்சி பெற

தொந்தி சரிய மயிரே வெளிறநிரை
தந்த மசைய முதுகே வளையஇதழ்
தொங்க வொருகை தடிமேல் வரமகளிர் நகையாடி-

தொண்டு கிழவ னிவனா ரென இருமல்
கிண்க ணெனமு னுரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடுபடு செவியாகி;

வந்த பிணியு மதிலே மிடையுமொரு
பண்டி தனுமெ யுறுவே தனையுமிள
மைந்த ருடைமை கடனே தெனமுடுக துயர்மேவி-

மங்கை யழுது விழவே யமபடர்கள்
நின்று சருவ மலமே யொழுகவுயிர்
மங்கு பொழுது கடிதே **மயிலின்மிசை வரவேணும்**;

எந்தை வருக ரகுநா யகவருக
மைந்த வருக மகனே யினிவருக
என்கண் வருக எனதா ருயிர்வருக அபிராம-

(வயலின்) வரப்பின் மேல் எட்டிக் குதித்து மேலிடத்தில் உள்ள வட்டமான நிலப்பரப்பிலே செழிப்புடன் கிடக்கும் முத்துக்களைக் குவியக் கூட்டி நின்று சேல்மீன் கூட்டங்கள் வாழும்-

வயற்புறங்களைக் கொண்ட பூமியில் (புகழ்) ஓங்கிய திருத்தணிகையிற் சிறப்புடன் வாழ்கின்ற வெற்றியாளனே! என்றும் உள்ளவனே! திருச்செந்தூரில் வீற்றிருக்கும் குகனே!

(பொதுமகளிர் தங்கள் சேர்வை தவிராய்.)

## 74

வயிறு சரியவும், மயிர் வெளுத்துப் போகவும், வரிசையாயிருந்த பற்கள் அசைவு பெறவும், முதுகு வளையவும், உதடு தொங்கிப் போகவும், ஒரு கை தடியின் மேல் வரவும், பெண்கள் பரிகாசச் சிரிப்புச் சிரித்து —

பெருங்கிழவன் இவன் ஆர் என்று பேசவும், இருமல் கிண்கிண் என முன்னே (ஒலிக்கப்) பின்னே சொற்கள் குழறவும், கண் (ஒளி) சோர்வுபட்டு குருட்டுத் தன்மை அடையவும், செவிட்டுத் தன்மையை செவிகள் அடையவும்,

வந்த பிணிகளும் அது சம்பந்தமாக அடிக்கடி வரும் வயித்தியனும் உடல்படுகின்ற வேதனையும் (ஒருபுறம் இருக்க- மற்றொருபுறத்தே)-சிறு பிள்ளைகள் (அப்பா) ஆஸ்தி எவ்வளவு)? கடன் எது எது? என்று விடாது கேட்கத்- துயரங் கொண்டு —

மனைவி அழுது விழவும் யமதூதர்கள் வந்து நின்று போராடவும், மலம் ஒழுகவும், உயிர் மங்கும் பொழுது (ஒடுங்கிப் போம் பொழுது,) (முருகா! நீ) விரைவில் மயில்மேல் வரவேணும்.

என் அப்பாவே வா! ரகுநாயகனே வா! குழந்தாய் வா!மகனே! இதோ வா! என் கண்ணே வா! என் ஆருயிரே வா! அழகனே!

இங்கு வருக அரசே வருகமுலை
யுண்க வருக மலர்சூ டிடவருக
என்று பரிவி னொடுகோ சலைபுகல வருமாயன்

சிந்தை மகிழு மருகா குறவரிள
வஞ்சி மருவு மழகா அமரர்சிறை
சிந்த அசுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா-

திங்க ளரவு நதிசூ டியபரமர்
தந்தகுமர அலையே கரைபொருத
**செந்தினகரி** லினிதே மருவிவளர்
பெருமாளே.(59)

## 75. மெய்ஞ்ஞானம் பெற

தோலொடு மூடிய கூரையை நம்பிப்
பாவையர் தோதக லீலைநி ரம்பிச்
சூழ்பொருள் தேடிட வோடிவ ருந்திப் புதிதான-

தூதொடு நான்மணி மாலைப்ர பந்தக
கோவையு லாமடல் கூறிய ழுந்தித்
தோமுறு காளையர் வாசல்தொ றும்புக்
கலமாருங்;

காலனை வீணனை நீதிகெ டும்பொய்க்
கோளனை மானமி லாவழி நெஞ்சக்
காதக லோபவ்ரு தாவனை நிந்தைப்
புலையேனைக்-

காரண காரிய வோகப்ர பஞ்சச்
சோகமெ லாமற வாழ்வுற [1]நம்பிற்
காசறு [2]வாரி**மெய்ஞ் ஞான** தவஞ்சற் **றருளாதோ;**

---

1. நம்பில் - விருப்பத்தினால் . நம்பு - விருப்பம்.

2. வாரி - செல்வம்.

இங்கே வா! அரசே! வா! பால் குடிக்க வா! பூ முடித்துக் கொள்ளவா!-என்றெல்லாம் அன்புடனே கௌசலை (இராமபிரானுடைய தாய்) கூறவந்த மாயன் (திருமால்)

சிந்தை மகிழும் மருகனே! குறவர் குலத்து இளங் கொடியாம் வள்ளி அணையும் அழகனே! தேவர் சிறை ஒழிய, அசுரர் கூட்டங்கள் வேரோடு மடிய அழித்த தீரனே!

நிலவையும், பாம்பையும், நதியையும் சூடியுள்ள பரமர் தந்த குமரனே! (கடல்) அலை கரையில் மோதுகின்ற திருச்செந்தூர் நகரில் இன்புற்று வீற்றிருக்கும் பெருமாளே!

(உயிர் மங்கு பொழுது கடிதே மயிலின் மிசை வரவேணும்.)

## 75

தோல்கொண்டு மூடப்பட்ட இவ்வுடலை நம்பி, மாதர்களுடைய வஞ்சக லீலை நிரம்புவதால் (அவர்கள்) கருதிய (அவர்களுக்கு வேண்டிய) பொருளைத் தேட வேண்டி ஓடியும், வருந்தியும், புதுவிதமான-

தூது, நான்மணிமாலை, பிரபந்தங்கள், கோவை, உலா, மடல் முதலிய (நூல் வகைகளைப்) பாடி (அவைகளி-லேயே) ஈடுபட்டுக், குற்றம் உள்ள மக்களுடையவாசல் தோறும் புகுந்து வருந்துகின்ற

கால்களைக் கொண்டவனை, வீணனை, நீதி தவறிய பொய்யைக் கொண்டவனை, மானம் இல்லாத வழியிற் செல்லும் நெஞ்சம் கொண்டவனை (அல்லது) மானம் இல்லாது அழிந்து ஒடுங்கும் நெஞ்சம் கொண்டவனை; பிறரைப் பீடித்து வருத்தும் (பேராசை) லோபியைப், பயனற்றவனை, நிந்திக்கப்படும் கீழ்மகனை —

காரணம், காரியம் (இவை தொடர்புடன்) வரும் இந்த உலக (பிரபஞ்ச) வாழ்வில் வரும் துன்பங்கள் எல்லாம் நீங்கவும், (நல்) வாழ்வு சேரவும், (காத்து) விருப்பத்து-டனே குற்றமற்ற செல்வமான மெய்ஞ்ஞான தவநி-லையைச் சற்று அருளலாகாதோ!

(தந்தருளுக - என்றபடி.)

[1]பாலன மீதும னான்முக செம்பொற்
பாலனை மோதப ராதன பண்டப்
பாரிய மாருதி தோள்மிசை கொண்டுற் றமராடிப்-

பாவியி ராவண னார்தலை சிந்திச்
சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்
பாவையர் தோள்புணர் மாதுலர் சிந்தைக்
கினியோனே;

சீலமு லாவிய நாரதர் வந்துற்
றீதவள் வாழ்புன மாமென முந்தித்
தேமொழி பாளித கோமள இன்பக் கிரிதோய்வாய்-

சேலொடு வாளைவ ரால்கள் கிளம்பித்
தாறுகொள் பூகம ளாவிய இன்பச்
**சீரலை வாய் நகர்** மேவிய கந்தப்
பெருமாளே. (60)

## 76. நோய் அற: ஞான நூல் ஓத

நாலு மைந்து வாசல் கீறு தூறுடம்பு கால்கை யாகி
நாரி [2]யென்பி லாகு மாக மதனூடே-

நாதமொன்ற ஆதி வாயில் நாட கங்க ளான ஆடி
நாட றிந்தி டாம லேக வளராமுன்;

---

1. பால் அன்னம் மீது மன் நான்முக.

2. என்பு - உடம்பு: "ஆருயிர்க் கென்போ டியைந்த தொடர்பு"
- திருக்குறள் 73.

பால் நிறமுள்ள அன்னத்தின் மீது (வீற்றிருக்கும்) நான்கு முகங்களையும் செம்பொன் நிறத்தையும் கொண்ட (படைத்தல் தொழில் பாலகனாம் - பாதுகாப்பவனாம்) பிரமனை மோதித் தண்டனை விதித்தவனே! முன்பு அந்தப் பெரிய அநுமாரின் தோள்மேலே வீற்றிருந்து போர்செய்து —

பாவியாம் ராவணனுடைய தலைகள் சிதறவும், உத்தமராம் விபீஷணர் வாழ்வுறவும் (வைத்து), மணந்த பாவையாம் சீதா பிராட்டியாரின் தோளைச் சேர்ந்த மாமனாம் திருமாலின் சிந்தைக்கு இனியவனே!

நல்லுணர்வுள்ள நாரதர் (உன்னிடம்) வந்து இது அவள் (வள்ளி) வாழ்கின்ற (தினைப் புனமாம் என்று குறிப்பிட்டுச் சொல்ல, உடனே (நீ) முடுகிச் சென்று தேன்போலு மொழியை உடைய (வள்ளியின்) பச்சைக் கற்பூரக் கலவை அணிந்து, அழகு பொருந்திய, இன்பம் தருவதான மலை போன்ற கொங்கைகளில் தோய்ந்தவனே!

சேல்மீன், வாளைமீன், வரால்மீன் இவை கிளம்பித் துள்ளிப் பாய்ந்து, குலை விட்டுள்ள கமுக மரத்தில் (பாக்கு) மரத்தில்) கலக்கும் இன்பகரமான (திருச்)**செந்தூர்** நகரில் வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

(உன் திருவருள் - மெய்ஞ்ஞான தவஞ்சற் றருளாதோ!)

## 76

நாலும் ஐந்தும் (ஆக ஒன்பது) வாயில்கள் வகுக்கப்பட்ட, பழிச் சொல்லுக்கு இடமாகிய-உடம்பு காலும் கையும் கொண்டு (ஒரு) பெண்ணினுடைய உடலில் இடம் பெற்று வந்த உடம்பு இத்தகைய உடம்பின் உள்ளே - (அல்லது - நரம்பு, எலும்பு இவையோடு கூடிய உடம்பின் உள்ளே) —

இந்திரியம் பொருந்த - முதலிருந்தே (ஐம்பொறிகளின் வழியே) (பலவித) கூத்துக்களை ஆடி, ஊராரும் அறிந்திடாதபடி போவதற்கென்றே (மாய்வதற்கென்றே) வளர்வதற்கு முன்னே;

நூல நந்த கோடி தேடி மால்மி குந்து பாரு ளோரை
நூறு செஞ்சொல் கூறி மாறி விளை தீமை-

நோய்க லந்த வாழ்வு றாமல் நீக லந்து ளாகு ஞான
நூல டங்க வோத வாழ்வு தருவாயே;

காலன் வந்து பால னாவி காய வென்று பாசம் வீசு
காலம் வந்து வோல மோல மெனுமாதி-

காம னைந்து பாண மோடு வேமி னென்று காணு மோனர்
காள கண்ட ரோடு வேத மொழிவோனே;

ஆல மொன்று வேலை யாகி யானை யஞ்சல் தீருமூல
ஆழி யங்கை ஆயன் மாயன் மருகோனே-

ஆரணங்கள் தாளை நாட [1]வார ணங்கை மேவு மாதி
யான செந்தில் வாழ்வ தான
பெருமாளே. (61)

## 77. திருவடி பெற

நிதிக்குப் [2]பிங்கலன் பதத்துக் கிந்திரன்
நிறத்திற் கந்தனென் றினைவோரை-

---

1. வாரணம் - கோழிக் கொடி. ஆரணங்கை - வள்ளியை; மேவும்- விரும்பும் எனலுமாம்.

2. பிங்கலன் - குபேரன்.

நூல்கள் எண்ணில்லாதன கோடிக் கணக்காகத் தேடிப் (பொருள்) ஆசை மிக்கு, பூமியில் உள்ளவரை நூற்றுக் கணக்கான செஞ்சொற்களால் புகழ்ந்து, (அவர்களால் பயன் அடையாமல் முகம்) மாறி (சோர்வுற்று) அதனால் விளைந்த தீமைகளும் (கெடுதல்களும்) —

நோயும் கலந்த (இந்த) வாழ்வை (இனி நான்) அடையாமல், நீ (என் உள்ளத்திற்) கலந்து என்னுள்ளேயே வீற்றிருக்கும் படிச் செய்யவல்ல ஞான நூல்கள் முழுமையும் ஓதும்படியான வாழ்வைத் தந்தருளுவாயாக.

காலன் வந்து பாலனாம் (மார்க்கண்டனுடைய) உயிரைக் காய்ந்து (கவர்வதற்காக) பாசக் கயிற்றை வீசின சமயத்தில் வெளி வந்து அபயம் , (தந்தோம்) அபயந் (தந்தோம்) என்ற முதல்வர், (அல்லது) கயிற்றை வீசின காலம் வந்தபோது அபயம், அபயம் என்று கூறி அழைக்கப்பட்ட முதல்வர்

மன்மதன் தனது ஐந்து பாணங்களோடு வெந்து போம்படி கண்ட மௌன மூர்த்தி, கறுத்த கழுத்தை உடையவர்,- ஆன- சிவபிராற்கு வேதப் பொருளை உரைத்தவனே!

ஆலகால விஷம் தோன்றிய கடலிலே பள்ளி கொண்டவராகி, கஜேந்திரனுடைய பயத்தைத் தீர்த்த மூல மூர்த்தி, சக்கரம் ஏந்திய அழகிய திருக்கையை உடையவர், இடையர் குலத்து வந்தவர், ஆகிய மாயோனுக்கு மருகனே!

வேதங்கள் திருவடிகளைத் தேடக் கோழிக் கொடியைத் திருக்கரத்திற் கொண்ட முதல்வரான பெருமானே! திருச்செந்தூரில் வாழ்ந்தருளும் பெருமாளே!

(ஞான நூல் அடங்க ஓத வாழ்வு தருவாயே.)

## 77

செல்வத்துக்குக் குபேரன், பதவிக்கு இந்திரன், புகழொளிக்குக் கந்தன் - என்றெல்லாம் நான் கூறி (ஈதற்கு) வருந்துவோரிடம் (போய்) —

நிலத்திற் றன் பெரும் பசிக்குத் தஞ்சமென்
றரற்றித் துன்பநெஞ் சினில்நாளும்;

புதுச் சொற் சங்கமொன் றிசைத்துச் சங்கடம்
புகட்டிக் கொண்டுடம் பழிமாயும்

புலத்திற் சஞ்சலங் குலைத்திட் டுன்பதம்
**புணர்க்கைக் கன்புதந்** தந்தருள்வாயே;

மதித்துத் திண்புரஞ் சிரித்துக் கொன்றிடும்
மறத்திற் றந்தைமன் றினிலாடி-

மழுக்கைக் கொண்டசங் கரர்க்குச் சென்றுவண்
[1] டமிழ்ச்சொற் சந்தமொன் றருள்வோனே;

குதித்துக் குன்றிடந் தலைத்துச் செம்பொனுங்
கொழித்துக் கொண்ட **செந் திலின்**வாழ்வே-

குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமானே (62)

## 78. திருவடி பெற

நிலையாப் பொருளை [2]யுடலாக் கருதி
நெடுநாட் பொழுது மவமேபோய்-

நிறைபோய்ச் செவிடு குருடாய்ப் பிணிகள்
நிறைவாய்ப் பொறிகள் தடுமாறி;

---

1. தமிழ்ச்சொற் சந்தம் - இது தேவாரத்தைக் குறிக்கலாம் சந்தம் - வேதம். 19 ஆம் பாடலைப் பார்க்க.

2. உடல் - பொன்.

(நீங்களே) இப்பூமியில் (என்) பெரும் பசிக்குப் புகல் அளிப்பவர் என்று முறையிட்டுத், துன்பமே (குடிகொண்ட) நெஞ்சில் நாள்தோறும்;

புதிதாகச் சொற் கூட்டத்தால் (பாடல்) ஒன்றை அமைத்துச் சொல்லும் சங்கடத்தில் நானே மாட்டிக் கொண்டு, உடம்பை அழித்து மாய்கின்ற —

புலன்களால் (வரும்) சஞ்சலங்களை ஒழித்துத் தொலைத்து உன் திருவடியைச் சேர்வதற்கு வேண்டிய அன்பைத் தந்து அருள்புரிவாயாக;

மனத்திற் கருதி வலிய புரங்களைச் சிரித்து அழித்த வீரமுள்ள தந்தையும், அம்பலத்தில் ஆடியும்,

மழுவாயுதத்தைக் கையிற் கொண்டவருமான சங்கரற்கு (சிவபிரானுக்கு) (தலந்தோறுஞ்) சென்று, வளப்பம் பொருந்திய தமிழ்ச் சொற் சந்தம் ஒன்றை (சந்தம் நிறைந்த தேவாரப் பாடலைச்) சமர்ப்பித்தவனே!- (அல்லது சிவபிரானிடத்திற் போய் வளவிய தமிழ்ச் சொல்லால் வேதப் பொருளை அருளியவனே!

(அலைகள்) குதித்தெழுந்து (எதிரில் உள்ள) குன்றுகளைத் தோண்டி அலைத்துச் செம்பொன்னையும் கொழித்துத் தள்ளும் திருச்செந்தூரில் வாழ்பவனே!

குறக்குலத்து அழகிய (கொம்பு போன்ற) வள்ளியை முன்பு (தினைப்) புனத்தில் உன் செங்கரங்களைக் கூப்பிக் கும்பிட்ட பெருமாளே.

(உன்பதம் புணர்க்கைக் கன்பு தந்தருள்வாயே.)

# 78

நிலையிலாத பொருளைப் பொன்னாக நினைத்து (அதன் பொருட்டு) நெடுநாட் பொழுதெல்லாம் வீணாகச் செலவழித்து —

(மனத்தின்) திண்மை போய்ச், செவிடாகி, குருடாகி, பிணிகள் நிறைந்து ஐம்பொறிகளும் தடுமாற்றம் அடைந்து,

மலநீர்ச் சயன மிசையாப் பெருகி
மடிவேற் குரிய [1]நெறியாக-
மறைபோற் றரிய வொளியாய்ப் பரவு
மலர்தாட் கமல மருள்வாயே;

கொலைகாட் டவுணர் கெடமாச் சலதி
குளமாய்ச் சுவற முதுசூதம்-
குறிபோய்ப் பிளவு படமேற் கதுவு
கொதிவேற் படையை விடுவோனே;

அலைவாய்க் கரையின் மகிழ்சீர்க் குமர
அழியாப் புநித வடிவாகும்
அரனார்க் கதித பொருள் காட் டதிப
அடியார்க் கெளிய பெருமாளே. (63)

## 79. யமன் வரும்போது மயில்மேற் காட்சி பெற

பஞ்ச பாதக முறுபிறை யெயிறெரி
குஞ்சி கூர்விட மதர்விழி பிலவக
பங்க வாண்முக முடுகிய நெடுகிய திரிசூலம்-
பந்த பாசமு மருவிய கரதல
மிஞ்சி நீடிய கருமுகி லுருவொடு
பண்பி லாதொரு பகடது முதுகினில் யமராஜன்;

---

1. நெறி - முத்தி.

மலமும் நீரும் படுக்கை மேலேயே பெருகி இறந்து படுவேனுக்கு உரிய விதியாக (முத்தி நெறியாக) —

மறைகள் போற்றுதற்கு அரிதான ஒளியாக விரிந்துள்ள மலரடித் தாமரையைத் தந்தருளுவாயாக;

கொலையே செய்து வருகின்ற அசுரர்கள் கெடவும், பெரிய கடல் குளம்போல வற்றவும், முதிர்ந்த மாமரம் —

குறியின்படியே பட்டுப், பிளவுபட, மேலே பற்றும்படியாக எரிவீசும் வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

அலைவாய் (திருச்செந்தூர்க்) கடற்கரையில் மகிழ்கின்ற சீர்க் குமரனே! அழியாத பரிசுத்த வடிவாகும் —

சிவபிராற்கு - எல்லாம் கடந்த பொருளை விளக்கிக் காட்டிய தலைவனே! அடியார்க்கு எளிய பெருமாளே!

(மலர்தாட் கமலம் அருள்வாயே.)

# 79

(கொலை, களவு, பொய், கள்ளருந்தல், குருநிந்தை எனப்படும்) ஐம்பெரும் பாதகமும் குடிகொண்ட (மாதிரி பயங்கரமாயுள்ள ) பிறைச்சந்திரன் போல (வெளுப்பும் வளைவும் உள்ள) பற்கள், நெருப்புப் போன்ற தலைமயிர், கொடிய விஷம் ததும்புகின்ற கண்கள், குரங்கு போன்ற பயங்கரமான ஒளி வீசும் முகம், (அல்லது) பிலம் - குகை போன்ற, அகம் - (இருள்) (மனம், ஒளி வீசும் முகம்), விரைந்து செல்ல வல்லது, நீண்டுள்ளதுமான முத்தலைச் சூலம் —

கட்டுதற்கு வைத்துள்ள (பாசக்) கயிற்றைக் கொண்டுள்ள கை, மிகுத்து நீண்ட கரிய மேகம் போன்ற உருவம் - (இவ்விதமான கோலத்துடனே) அழகு இல்லாத ஓர் எருமையின் (அல்லது குணமில்லாமல் ஓர் எருமையின்) முதுகின் மேல் யமராஜன்.

அஞ்ச வேவரு மவதர மதிலொரு
தஞ்ச மாகிய வழி வழி யருள் பெறும்
அன்பி னாலுன தடிபுக ழடிமையெ னெதிரேநீ-
அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்த மோகர **மயிலினி** லியலுடன் **வரவேணும்;**
மஞ்சு போல் வள ரளகமு மிளகிய
ரஞ்சி தாம்ருத வசனமு நிலவென
வந்த தூயவெண் முறுவலு மிரு[1] குழையளவோடும்;
மன்றல் வாரிச நயனமு மழகிய
குன்ற வாணர்த மடமகள் தடமுலை
மந்த ராசல மிசைதுயி லழகிய மணவாளா;
[2]செஞ்சொல் மாதிசை வடதிசை குடதிசை
விஞ்சு கீழ்திசை சகலமு மிகல்செய்து
திங்கள் வேணியர் பலதளி தொழுதுயர் [3]மகமேரு-
[4]செண்டு மோதின ரரசரு ளதிபதி
தொண்ட ராதியும் வழிவழி [5]நெறிபெறு
**செந்தில்** மாநக ரினிதுறை யமரர்கள்
பெருமாளே. (64)

---

1. குழை - காது, (திருப்புகழ் 24 - உரை)

2. செஞ் சொல் மாதிசை - தமிழ்த் - திசை - தெற்கு.
'சென்று மோதின நரபதி யுலவிய
தொண்டை நாடினி லறநெறி முறைபயில்
செஞ்சி மாநக ரினிதுறை யமரர்கள் பெருமாளே.'
- என்றும் பாடம்.

3. மேரு - இமயம் எனக்கொண்டால் இமயம் தன் செலவைத் தடுத்தால் சோழன் கரிகாலன் சினந்து அதைச் சாத்தனார் தனக்குக் கொடுத்த செண்டு என்னும் ஆயுதத்தால் அடித்துப் புலிக் கொடியை அதன்மீது பொறித்த வரலாறு குறிக்கப்பட்டுள்ளது எனக்கொள்ளவும்.

"செண்டு கொண்டு கரிகாலன் ஒரு காலி னிமயச் சிமய மால்வரை திரித்தருளி மீள அதனைப் பண்டு நின்றபடி நிற்க இது என்று முதுகிற் பாய் புலிக்குறி பொறித்ததும்" -கலிங்கத்துப்பரணி.

4. செண்டு - திருப்புகழ் (2) எண்ணின் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

5. நெறி - முத்தி.

(நான்) அஞ்சும்படியாக வருகின்ற அந்தச் சமயத்தில் ஒப்பற்ற உனக்கே அடைகலமாய் (உன்னையே) புகல் அடைந்து, தலைமுறை தலைமுறையாக உனது திருவருளைப் பெறவே விரும்பும் அன்பு கொண்டு உனது திருவடியைப் புகழும் அடிமையாகிய என் எதிரில் நீ —

அண்ட முகடு வெடிபடவும் இடிபடவும், எட்டுத் திக்குப் பக்கங்களும் மடமட என்னும்படி நடனம் செய்கின்ற அந்த உக்ரமயில் மீது அன்புடன் வரவேணும் —

(கரிய) மேகம் போல வளர்ந்துள்ள கூந்தலும், மெல்லிய இன்பகரமான, அமிருதம் போன்ற பேச்சும், நிலவு போல விளங்கும் சுத்தமான வெண்ணிறமுள்ள பற்களும், இரண்டு குழையளவும் (காதளவும்) ஓடுகின்ற —

நறுமணம் உள்ள தாமரை போன்ற கண்களும் அழகு வீசும்- (வள்ளிமலைக்) குன்றில் வாழ்பவரான (வேடர்-களுடைய) மடமகளாம் - (வள்ளியின்) பருத்த கொங்கை-களாகிய மந்தர மலைமீது தூங்கும் அழகிய மணவாளனே!

தெற்கு, வடக்கு, மேற்கு, மேலான கிழக்கு (முதலிய) திசைகள் எல்லாவற்றிலும் போர் செய்து, நிலவை அணிந்த சடை முடியராம் சிவபிரானுடைய பல கோயில்களையும் தொழுது, உயர்ந்த மகாமேரு மலையின்மீது —

* செண்டை எறிந்த அரச அதிபதியே! தொண்டர் முதலானோர் வழிவழி அடிமையா யிருந்து முத்தி பெற (அருளிய) திருச்செந்தூர் மாநகரில் இனிது வீற்றிருக்கும் தேவர்கள் பெருமாளே.

(யமராஜன் வரும் அவதரமதில் மயிலினில் வரவேணும்.)

---

* முருகர் (உக்கிர குமாரனாய் அரசாண்டபொழுது) பொன் பெறவேண்டி மேருமலையாம் பொன் மலையைச் செண்டாலடித்த திருவிளையாடலைக் குறிக்கும். திருப்புகழ் 2ல் பார்க்க.

## 80. அகந்தை தவிர

படர்புவியின் மீது மீறி வஞ்சர்கள்
வியனினுரை பானு வாய்வி யந்துரை
பழுதில்பெரு சீல நூல்க ளுந்தெரி
சங்கபாடல்-

பனுவல்கதை காவ்ய மாமெ ணெண் கலை
திருவளுவ தேவர் வாய்மை யென்கிற
பழமொழியை யோதி யேயு ணர்ந்துபல்
சந்தமாலை;

மடல்பரணி கோவை யார்க லம்பக
முதலுளது கோடி கோள்ப்ர பந்தமும்
வகை வகையி லாசு சேர்பெ ருங்கவி சண்டவாயு-

மதுரகவி ராஜ 1னானென் வெண்குடை
விருதுகொடி தாள மேள தண்டிகை
வரிசையொ டுலாவு மால கத்தைத
விர்ந்திடாதோ;

அடல்பொருத பூச லேவி ளைந்திட
எதிர்பொரவொ ணாம லேக சங்கர
அரஹர சிவாம ஹாதெ வென்றுனி
அன்றுசேவித்-

தவனிவெகு கால மாய்வ ணங்கியு
ளுருகிவெகு பாச கோச சம்ப்ரம
அதிபெல கடோர மாச லந்தர னொந்துவீழ

---

1. நானென் - நானென.

## 80

பரந்துள்ள இப்பூமியில் அளவுக்கு மிஞ்சி வஞ்சனையுள்ள லோபியர்களிடம் (பொருள் பெற வேண்டி அவர்களைச்) சிறப்புடன் சொல்லப்பட்ட சூரியமூர்த்தியே (நீங்கள்) என்று வியந்து உரைத்தும், குற்றம் இல்லாத பெரிய உயரிய நூல்களையும் கிடைத்துள்ள சங்க நூற் பாடல்களையும் —

(வேறு) நூல்களையும், கதைகளையும், காப்பியங்களையும், அறுபத்துநான்கு கலை நூல்களையும், "திருவள்ளுவ தேவர் வாய்மை" எனப்படும் பழமொழி நூலையும் (திருக்குறளையும்) ஓதியும் உணர்ந்தும், பலவகையான சந்தமாலைச் செய்யுள்கள்,

மடல், பரணி, கோவை, கலம்பகம் முதலான கோடிக்கணக்கைக் கொண்ட பிரபந்த வகைகளைப் பாடியும், வகை வகையாக 'ஆசுப் பெருங்கவி', 'சண்டவாயு',

'மதுரகவிராஜன்' நான் என்று (ஆடம்பரமாகப் பட்டப்பெயர் களை வைத்துக்கொண்டும்), வெண்குடை, விருது (வெற்றிச் சின்னம்), கொடி, தாளம் , மேளம், பல்லக்கு முதலான சிறப்புச் சின்னங்களோடு உலவிவரும் மயக்க அறிவும், அகங்காரமும் தவிராவோ?

(சலந்தராசுரனுடன்) வலிமையுடன் போர் செய்து பெரிய ஆரவாரம் உண்டாக, அவனுடன் எதிர் போர் செய்ய முடியாமல் "ஏகனே! சங்கர! ஹரஹர! சிவா! மஹா தேவா!" என்று தியானித்த அன்று சேவித்து —

பூமியில் வெகு காலம் (தவஞ் செய்து) வணங்கி, உள்ளம் உருகி, கொடிய பாசக் கயிறு முதலிய ஆயுதத் தொகுதிகள், டாம்பிகம், மிக்க பலம் , கொடுமை இவையெலாம் உள்ள (அந்த) மஹா சலந்தராசுரன் வருந்தி வீழ;

உடல்தடியு மாழி [1]தாவெ னம்புய
மலர்கள் தச நூறு தாளி டும்பக
லொருமலரி லாது [2]கோவ ணிந்திடு [3]செங்கண்மாலுக்

குதவியம கேசர் பால இந்திரன்
மகளை மண மேவி வீறு செந்திலி
லுரிய அடி யேனை யாள வந்தருள்
தம்பிரானே. (65)

## 81. பொது மகளிர் மேல் அன்பு தவிர

பதும இருசரண் கும்பிட் டின்பக்
கலவி நலமிகுந் துங்கக் கொங்கைப்
பகடு புளகிதந் துன்றக் கன்றிக் கயல்போலும்

பரிய கரியகண் செம்பொற் கம்பிக்
குழைகள் பொரமருண் டின்சொற் கொஞ்சிப்
பதற விதமுறுங் கந்துக் கொந்துக் குழல்சாயப்;

---

1. தா வெ னம்புய - தா என அம்புய. 2. கோ - கண்.

3. திருமால் ஆதிய தேவர்களை வென்றபின், சலந்தராசுரன் சிவபிரானொடு போர் செய்யக் கயிலைக்குப் போகும்பொழுது, சிவபிரான் ஒரு மறையவர்போல எதிர்வந்து, காலால் ஒரு சக்கரத்தைக் கீறி அமைத்து, இதை நீ எடு; பின்பு கயிலைக்குப் போகலாம் எனச், சலந்தராசுரன் அதை எடுக்க, அச் சக்கரத்தால் அவன் கழுத்து அறுபட்டு மாய்ந்தான். சலந்தராசுரனைத் தடிந்த சக்கரத்தைப் பெறவேண்டித் திருமால் சிவபிரானை நிதமும் ஆயிரம் பூக்கொண்டு திருவீழிமிழலை என்னும் தலத்தில் வழிபட்டபோது, ஒருநாள் ஒரு பூ குறைபடத் தமது கண்ணையே இடந்து சாத்தி அச் சக்கரத்தைத் திருமால் பெற்ற வரலாறு இங்குக் குறிக்கப்பட்டுள்ளது.

"சலந்தரன் உடலம் தடிந்தசக் கிரமெனக் கருளென்
றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத் திறையவன்
பிறையணி சடையன்" (சம்பந்தர் - திருவீழிமிழலை - III - 119-7.)

"நீற்றினை நிறையப் பூசி நித்தல் ஆயிரம் பூக்கொண்டு
ஏற்றுழி யொருநா ளொன்று குறையக்கண் ணிறைய விட்ட
ஆற்றலுக் காழி நல்கி யவன் கொணர்ந் திழிச்சுங் கோயில்
வீற்றிருந் தளிப்பர் வீழி மிழலையுள் விகிர்த னாரே."
-(அப்பர் - திருவீழிமிழலை - IV-64-8.)

(அவனது) உடலைத் தறித்த (அந்த) சக்கரத்தைத் தந்தருள் என்று தாமரை மலர்கள் பத்து நூறு (ஆயிரம்) கொண்டு (சிவனது) தாளிற் பூசித்து வந்த நாள்களில் (ஒருநாள்) ஒரு மலர் இல்லாது குறைய (அதற்கு ஈடாகத்) தனது கண்ணையே அணிந்திட்ட செங்கண் மாலுக்குச் —

*(சக்கரத்தைத்) தந்தருளிய மகாதேவருடைய குழந்தையே! இந்திரன் மகளைத் திருமணஞ் செய்துகொண்டு. விளங்கும் **திருச்செந்தூரில்,** (உன்னிடம்) உரிமை பூண்ட அடியேனை ஆளவந்தருளும் தம்பிரானே!*

*(மால் - அகந்தை தவிர்ந்திடாதோ.)*

## 81

தாமரை மலர் போன்ற இரண்டு பாதங்களையும் கும்பிட்டு இன்பமான கலவிச் சுகம் மிக்குள்ள உயரிய கொங்கைப் பரப்பு புளகங்கொள்ளச். சினக் குறிப்புள்ள கயல்மீன் போன்ற —

பெரிய கரிய கண்கள் (காதிலுள்ள) செம்பொன் கம்பியிற் பொருத்தப்பட்டுள்ள குழைகளைத் தாக்க, மருட்சியுடன் இனிய மொழிகள் கொஞ்சிப் பதற. விதம் விதமாகப் பிணைக்கப்பட்ட பூங்கொத்துக் கொண்ட கூந்தல் சரிய

புதுமை நுதிநகம் பங்கத் தங்கத்
தினிது வரையவெண் சந்தத் திந்துப்
புருவ வெயர்வுடன் பொங்கக் கங்கைச்
சடைதாரி-

பொடிசெய் தருள் [1]மதன் தந்த்ரப் பந்திக்
கறிவை யிழவிடும் பண்புத் துன்பப்
**பொருளின் மகளிர்தம் மண்புப்** பண்பைத் தவிரேனோ;

திதிதி தததந் திந்திந் தந்தட்
டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத்
தெனன தனதனந் தெந்தத் தந்தத் தெனனானா-

திகுர்தி தகிர்ததிந் திந்தித் திந்தித்
திரிரி தாரவென் றென்றொப் பின்றித்
திமிலை பறையறைந் தெண்டிக் கண்டச் சுவர்சோரச்;

சதியில் வருபெருஞ் சங்கத் தொங்கற்
புயவ சுரர்வெகுண் டஞ்சிக் குஞ்சித்
தலைகொ டடிபணிந் தெங்கட் குன்கட்
க்ருபைதாவென்-

சமர குமரகஞ் சஞ்சுற் றுஞ்செய்ப்
பதியில் முருகமுன் பொங்கித் தங்கிச்
சலதி யலை பொருஞ் செந்திற் கந்தப்
பெருமாளே. (66)

## 82. அருள் பெற

பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானார்-

படையம படையென [2]அந்திக் குங்கட் கடையாலே;

1. மதன் - மன்மதன்; தந்திரம் - படை; பந்தி-கூட்டம்; மன்மதனது படைக்கூட்டம் - மகளிர். "படை மங்கையர்" - ,இரத்தினச் சுருக்கம்.

2. அந்திக்கும் - சந்திக்கும்.

புதிய வகையில் நுனி நகத்தால் விகாரப்படும்படி உடலில் இனிதாக அடையாளங்களைச் செய்ய(நகக் குறியிட), மதிக்கத்தக்க,அழகிய,பிறை போன்ற புருவவெயர்வு (வேர்வை) மேலெழும்படியாகக் கங்கையைச் சடையில் தரித்த பெருமான் (சிவன்) —

பொடியாக்கிய காமனுடைய படையாகிய மகளிர் கூட்டத்துக்கு (அல்லது)காம சாத்திர நூல் தொகுதிக்கு (எனது) அறிவைத் தொலைக்கும் மனப்பான்மையையும் துன்பந்தரும் பொருட் பெண்டிர் (வேசியர்) மேல் அன்புகொள்ளும் மனப்பான்மையையும் விடமாட்டேனோ?

திதிதி தத ததந் திந்தித் தந்தட்....தந்தத் தெனனானா-திகுர்தி திகிர்ததிந்....திரிரி தார என்று பலமுறை ஒப்பிலா வகையில் திமிலை யென்னும் பறையை ஒலித்து எட்டுத்திக்குகளும், அண்டத்தின் சுவர்களும் சோர்ந்து போகும்படி-

வஞ்சனை எண்ணத்துடன் வந்த பெருங் கூட்டமான, மாலையணிந்த புயங்கள் உடைய அசுரர்கள் (முதலில்) கோபித்தும்(பின்பு) பயந்தும் (அதன்பின்) மயிர்த் தலையுடன் (உனது) திருவடியிற் பணிந்து எங்களுக்கு உனது கிருபையைத் தந்தருள் என்று கேட்கும் படிக்கும்-

போர் செய்தவனே!குமரனே! தாமரைத் தடாகங்கள் சுற்றியுள்ள வயலூர் முருகனே! எதிரே பொங்கியும் தங்கியும் கடலின் அலைகள் (கரையில்) தாக்குகின்ற **திருச்செந்தூர்க் கந்தப்** பெருமாளே!

(பொருளின் மகளிர் தம் அன்புப் பண்பைத் தவிரேனோ.)

## 82

மணமுள்ள கலவைகளினின்றும் நறுமணம் வீசுகின்ற அழகிய கொங்கைகளை உடைய மாதர்களின்—

படைகளுள் யமபடை என்று சொல்லும்படியாகச் சந்திக்கும் கட்கடையாலும்(கடைக்கண்ணாலும்);

வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே-
மறுகிடு மருளனை யின்புற் றன்புற் றருள்வாயே;
அரிதிரு மருகக டம்பத் தொங்கற் றிருமார்பா-
[1]அலைகுழ குழுவென வெம்பக் கண்டித் தெறிவேலா;
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா-
ஜெயஜெய ஹரஹர செந்திற் கந்தப்
பெருமாளே. (67)

## 83. பொது மகளிர் இணக்கம் அற

பாத நூபுரம் பாடகஞ் சீர்கொள் நடை
யோதி மோகுலம் போலசம் போகமொடு
[2]பாடி பாளிதங் காருகம் [3]பாவையிடை
வஞ்சிபோலப்-
[4]பாகு பால்குடம் போலிரண் டானகுவ
டாட நீள்வடஞ் சேரலங் காரகுழல்
பாவ மேகபொன் சாபமிந் தேபொருவ ரந்தமீதே;
மாதர் கோகிலம் போல்கரும் பானமொழி
தோகை வாகர்கண் டாரைகொண் டாடிதகை
வாரும் வீடெயென் றோதிதம் பாயல்மிசை
யன்பு ளார்போல்-

1. கடலில் மாமரமாய் நின்ற சூரனைப் பிளக்க வேல் வந்தபோது கடலும் கொதிப்பு உற்றது. மதுரையை அழிக்க வந்த கடல்மீது (உக்கிர பாண்டியர் - முருகர்) வேலைச் செலுத்திக் கடலைச் சுவற வைத்த திருவிளையாடலையும் இது குறிக்கலாம்.

2. பாடி - இது படி என்பதன் விகாரம்; படி - குணம். - பாளிதம் பட்டாடை, காருகம் - நெய்யுந் தொழில்.

3. பாவை - பாவு ஐ.

4. பாகு - அழகு - 'பாகா ரிஞ்சிப் பொன்மதில்' கம்பராமாயணம், ஊர்தேடு-82.

கோடுள்ள வண்டுகளின் வரிசை ஒலிக்கின்ற வாசனையுள்ள இருட் கூந்தலாலும் —

மனக் கவலை கொண்டு அறிவு மயங்கும் என்னை இன்பத்துடனும் அன்புடனும் (ஆண்டு) அருளுவாயாக;

திருமாலின் திருமகனே! கடப்ப மாலை அணிந்த அழகிய மார்பனே!

அலை குமுகுமு என்று கொதிப்புக் கொள்ளக் கடலைக் கண்டித்து எறிந்த வேலாயுதனே!

முப்புரம் எரித்த பெருமானும் வணங்கும் சற்குருநாதனே! ஜெய ஜெய! ஹரஹர! திருச்செந்தூர்க் கந்தப் பெருமாளே!

(மருளனை இன்புற் றன்புற் றருள்வாயே!)

## 83

பாதச் சிலம்பு, பாடகம் இவையுடன் சீர்கொண்ட நடை, அன்னப் பறவைகளின் கூட்டம் (நடப்பது) போல, (விளங்கவும்), சேர்க்கை இன்பங் கொண்டு, நல்ல அமைப்புள்ள பட்டாடை நெய்யப்பட்டது (நேர்த்தியாக நெய்யப்பட்ட பட்டாடை) சூழ்ந்துள்ள அழகிய இடை வஞ்சிக் கொடிபோல (விளங்கவும்) —

அழகிய பால் குடம் போன்ற இரண்டு மலை போன்ற (கொங்கைகள்) ஆடவும், நீண்ட (மணி) வடம் சேரவும், அலங்காரமான கூந்தல் பரந்த அம் மேகத்தை (நிகர்க்கவும்), அழகிய வில் (புருவத்தையும்) பிறை (நெற்றியையும்) ஒப்பென்று சொல்ல இருப்பவரும்; (பின்னும்) அழகை இவ்வாறு கொண்டு;

அழகிய குயில் போலவும் கரும்பு போலவும் மொழியையும் , மயில் போன்றஅழகையும் கொண்டவரும்; கண்டவர்களைக் கொண்டாடி (அவர்களை) மறித்து நிறுத்தி, வாருங்கள் ( எங்கள்) வீட்டுக்கே என்று சொல்லி இதமான பேச்சுக்களைப் பேசி, படுக்கையின்மீது, அன்புள்ளவர்போல் (நடித்து) —

வாச [1]பாசகஞ் சூதுபந் தாடஇழி
வேர்வை பாயசிந் தாகுகொஞ் சாரவிழி
வாகு தோள்கரஞ் சேர்வைதந் தாடுமவர்

[2] சந்தமாமோ;

தீத தோதகந் தீததிந் தோதிதிமி
டூடு டூடுடுண் டூடுடுண் டூடுடுடு
டீகு டீகுகம் போலவொண் பேரிமுர சங்கள்வீறச்-

சேடன் மேருவுஞ் சூரனுந் தாருகனும்
வீழ [3] ஏழ்தடந் தூளிகொண் டாடமரர்
சேசெ சேசெயென் றாடநின் றாடிவிடு மங்கிவேலா;

தாதை காதிலங் கோதுசிங் காரமுக
மாறும் வாகுவுங் கூரசந் தானசுக
தாரி மார்பலங் காரியென் பாவைவளி

யெங்கள் மாதைத்-

[4]தாரு பாளிதஞ் சோரசிந் தாமணிக
ளாட வேபுணர்ந் தாடி[5] வங் காரமொடு
[6]தாழை வானுயர்ந் தாடுசெந் தூரிலுறை

தம்பிரானே. (68)

---

1. பாசகஞ் சூது - சூதாடு கருவியை யொத்த கொங்கை. பாசு-பசுமை. அகம் - மார்பு.

2. சந்தம் - ஆசை; சுகம்.

3. தடம் - மலை. முருகவேள் வேலால் ஏழுமலையைப் பொடி செய்தார். "ஏழுமலை பொடித்த கதிரிலை நெடுவேல்"- கல்லாடம்-3.

4. தாரு - மரம். (மரச்சோலை)

5. வங்காரம் - செப்பம்.

6. தாழை - தென்னை - " தாழை யிளநீர்" தேவாரம் - சம்பந்தர். 3-71-1; திருமுருகாற்றுப்படை.

மணத்தையும் பசுமையையும் கொண்டுள்ள மார்பில், சூதாடு கருவி ஒத்ததான (கொங்கைகள்) பந்துபோல ஆட, இழிகின்ற வேர்வை (உடலிற்) பாயக், கடல் போன்றதும் கொஞ்சுதல் நிறைந்ததுமான கண்ணும், தோளும், கையும் (ஒன்றுபடச்) சேரத் தந்து (காமலீலை) ஆடுபவருமான (வேசையர்கள் மீது) ஆசை (உறவு) கொள்ளுதல் ஆமா? (கூடாது) என்றபடி;

தீததோதகம்... டீகு டீகுகம் போல ஒள்ளிய பேரிகைகளும் முரசங்களும் பேரொலி செய்ய —

ஆதிசேடனும், மேரு மலையும், சூரனும், தாருகனும் விழவும், ஏழு மலைகளும் தூள் தூளாகவும், தேவர்கள் ஜேஜெ ஜேஜெ என்று ஆடவும் விளங்கி நின்று, கூத்து ஆடிச் செலுத்திய, நெருப்பன்ன வேற் படையை உடையவனே!

தந்தை காதில் அங்கே ஓதின அழகிய (திரு) முகங்கள் ஆறும், தோள்கள் (பன்னிரண்டும்) பூரிக்க, வழி வழி யின்பம் தரும் சுகத்தைக் கொண்டவளும், மார்பில் அலங்காரம் கொண்டவளும், எனது (அருமைப்) பதுமை போன்றவளுமான வள்ளிநாயகியாம் எங்கள் மாதை —

மரச்சோலையினிடையே, பட்டாடை சோர, அணிந்துள்ள கோக்கப்பட்ட மணிவடங்கள் ஆடப் புணர்ந்து, (அவளுடன்) விளையாடிச் செப்பத்துடனே (வளர்ந்த) தென்னைகள் வான் அளாவி ஓங்கும் (திருச்) செந்தூரில் வீற்றிருக்கும் தம்பிரானே!

[1](பொது மகளிர்) சந்தம் ஆமோ.

---

1. மரச்சோலையிடையே வள்ளியொடு அண்ணல் தங்கினார்.

"காமன் படை பெற்றுக் குலவுமாங்கோர்
பசுமரக் காவுட் சேர்ந்தான்
...செழுமலர்க் காவிற் புக்கு வஞ்சியோ டிருந்த காலை"

- கந்த புராணம் - வள்ளி திருமணம் - 169-170.

## 84. தவயோகியாய் விளங்க

பூரண வார கும்ப சீதப டீர கொங்கை
மாதர் விகார வஞ்ச லீலையி லேயு ழன்று
போதவ மேயி ழந்து போனது மான மென்ப
தறியாத-

பூரிய னாகி நெஞ்சு காவல்ப டாத பஞ்ச
பாதக னாய றஞ்செ யாதடி யோடி றந்து
போனவர் வாழ்வு கண்டு மாசையி லேய ழுந்து
மயல்தீரக்;

காரண காரி யங்க ளானதெ லாமொ ழிந்து
யானெனு மேதை விண்டு பாவக மாயி ருந்து
காலுட லூடி யங்கி நாசியின் மீதி ரண்டு
விழிபாயக்-

காயமு நாவு நெஞ்சு மோர்வழி யாக அன்பு
காயம் விடாம லுன்ற னீடிய தாள்நி னைந்து
காணுதல் கூர்த வஞ்செய் **யோகிக ளாய்வி ளங்க**
**அருள்வாயே;**

## 84

நிறைந்து கச்சொடு (ரவிக்கையோடு) கூடிய, கும்பம் போன்ற, குளிர்ந்த, சந்தனக் கலவை அணிந்த கொங்கைகளை உடைய (பொது) மகளிருடைய அவலக்ஷணமான வஞ்சகம் உள்ள ஆடல்களிலே அலைப்புண்டு, பொழுதை வீணாக இழந்து, போய்விட்டது மானம் என்பதை அறியாத —

கீழ்மகனாகி, மனது கட்டுக்கு அடங்காத ஐம்(பெரும்) பாதகங்களைச் செய்தவனாய், தருமமே செய்யாமல், அடியோடு இறந்து போனவர்களுடைய வாழ்வைக் கண்டு(ம்) ஆசையில் அழுந்துகின்ற (எனது) மயக்கம் தீரும்படி;

காரணம், காரியம் என (நிகழ்கின்ற) நிகழ்ச்சிகளில் (உள்ள ஆராய்ச்சிகள்) எல்லாம் ஒழிந்து, 'நான்' ('நான்') என வரும் (ஆணவக்) கொழுப்பு நீங்கித், தியானத்துடன் இருந்து, (பிராண) வாயு உடலூடே இயங்கி (ஓடி), மூக்கின் மீது இரண்டு விழி (முனைகளும்) பாய —

காயம், வாக்கு, மனம் (மனம், வாக்குக், காயம்) என்னும் மூன்றும் ஒரு வழிப்பட, அன்பை உடலுள்ள அளவும் விடாமல், உனது அழிவற்ற திருத்தாள்களை நினைந்து (அத்திருவடிகளின்) காட்சியைப் பெறுவதற்கு மிக்க தவத்தைச் செய்கின்ற யோகிகள் என்ன (நான்) விளங்கும்படி அருள்புரிவாயே;

ஆரண சார மந்த்ர வேதமெ லாம்வி ளங்க
[1]ஆதிரை யானை நின்று தாழ்வனெ னாவ ணங்கு
மாதர வால்வி ளங்கு பூரண ஞான மிஞ்சு
முரவோனே-

ஆர்கலி யூடெ ழுந்து மாவடி வாகி நின்ற
சூரனை மாள வென்று வானுல காளு மண்ட
ரானவர் கூர ரந்தை தீரமு னாள்ம கிழ்ந்த
முருகேசா;

வாரண மூல மென்ற போதினி லாழி கொண்டு
வாவியின் மாடி டங்கர் பாழ்பட வேயெ றிந்த
மாமுகில் போலி ருண்ட மேனிய னாமு குந்தன்
மருகோனே-

வாலுக மீது வண்ட லோடிய காலில் வந்து
சூல்நிறை வான சங்கு மாமணி யீன வுந்து
வாரிதி நீர்ப ரந்த சீரலை வாயு கந்த
பெருமாளே. (69)

---

1. ஆதிரையான் - சிவன் 'ஆதிரையன் ஆருரமர்ந்தானே'
- தேவாரம் - சம்பந்தர். I - 105 -1.

வேதசாரமான மந்திரங்களும், வேதங்கள் எல்லாமும் விளங்கும் படியாகத் (திருநெறித் தமிழ் என்னும் தேவாரப் பாக்களால்) திருவாதிரை நாளை உகந்துள்ள சிவபிரானை எதிர் நின்று 'தாழுவேன் (வணங்கு வேன்') என்று (உலகுக்குக் காட்டி) வணங்கும் அன்பினால் மேம்பட்ட பூரணமான ஞானம் மிக்க வல்லவனே! (ஞானசம்பந்தப் பெருமானே!)

கடலூடே எழுந்து மாமர வடியுடன் நின்ற சூரனை மாளும் படி வென்று வானுலகை ஆளுகின்ற தேவர்களுக்கு உண்டான பெருந் துன்பம் ஒழியும்படி முன்பொரு நாள் (உதவி செய்து) மகிழ்ச்சிகொண்ட முருகேசனே!

யானை (கஜேந்திரன்) (ஆதி) மூலம் என்று (அழைத்தபோது) சக்கரத்தை எடுத்துக் கொண்டு (வந்து) மடுவில் இருந்த முதலை பாழ்படும்படி எறிந்த, கரிய மேகம் போல இருண்ட திருமேனியை உடையவனாம் திருமாலின் மருகோனே —

வெண்மணலின்மீது வண்டல் ஓடிய வாய்க்கால் வழியாக வந்து கருப்பம் நிறைந்த சங்குகள் சிறந்த முத்து மணிகளைப் பெறும்படியாக (அலை) வீசுகின்ற கடல் நீர் பரந்துள்ள திருச்சீரலைவாயில் (திருச்செந்தூரில்) மகிழ்ந்திருக்கும் பெருமாளே.

(தவஞ்செய் யோகிகளாய் விளங்க அருள்வாயே.)

---

1. சிவனே முருகனாதலால், முருகவேள் சம்பந்தராய்ப் பாடினது உலகுக்கு எடுத்துக் காட்டு; ஆதலால் "தாழ்வ னெனா வணங்கும் ஆதரவு" என்றார். பின்னும் இக் கருத்தையே 'பத்தி மிக இனிய ஞானப் பாடல், பற்று மரபுநிலை யாகப் பாடித் திரிவோனே' - என்றார்; (திருப்புகழ் 1025). சம்பந்தர் "என துரை தன துரையாக" (I - 76 - 1 - 10) என்றும்,' கருக்குடி மைந்தன் தன்னொளியான மெய்ஞ்ஞான சம்பந்தன்" (III - 21 - 11) என்றும் கூறின அறியற்பாலன.

## 85. யமன் வரும்போது ஆண்டவனது காட்சியைப் பெற

[1]மங்கை சிறுவர் தங்கள் கிளைஞர்
வந்து கதற வுடல்தீயின்-

மண்டி யெரிய விண்டு புனலில்
வஞ்ச மொழிய விழஆவி;

வெங்கண் மறலி தன்கை மருவ
வெம்பி யிடறு மொருபாச-

விஞ்சை விளையு மன்று னடிமை
வென்றி யடிகள் தொழவாராய்;

சிங்க முழுவை தங்கு மடவி
சென்று மறமி னுடன்வாழ்வாய்-

சிந்தை மகிழ அன்பர் புகழு
**செந்தி** லுறையு முருகோனே;

எங்கு மிலகு திங்கள் கமல
மென்று புகலு முகமாதர்-

இன்பம் விளைய அன்பி னணையு
மென்று மிளைய பெருமாளே. (70)

## 86. பொது மகளிரை நம்புதல் அற

மஞ்செ னுங்குழ லும்பிறை யம்புரு
வங்க ளென்சிலை யுங்கணை யங்கயல்
வண்டு புண்டரி கங்களை யும்பழி சிந்துபார்வை-

1. மங்கை - மனைவி என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. 'மங்கை யழுது விழவே' - திருப்புகழ் 74.

மனைவி, மக்கள், தம் உறவினர் வந்து கதறி (அழ), உடலானது நெருப்பிற் —

சுடர்விட்டு எரிந்து கொண்டிருக்க (அந்த உறவினர் சுடு காட்டை விட்டு) நீங்கி, நீரில் (பந்தம் என்கின்ற) மாயம் ஒழியப் படிந்து குளிக்க, உயிர்

கொடிய கண்களை உடைய யமனது கையிற்சிக்கிக்கொள்ள மனம் புழுங்கித் துன்பப்படும் ஒரு பாசமாகிய (பற்று எனப்படும்)

மாயக் (கூத்து) நிகழ்கின்ற அந்த நாளில் உனது அடிமையாகிய நான் வெற்றி பொருந்தும் (உன்) திருவடிகளைத் தொழ வந்தருளுவாயாக.

சிங்கம், புலி தங்குகின்ற காட்டுக்குச் சென்று வேடப் பெண் (வள்ளியுடன்) வாழ்ந்தவனே!

சிந்தை மகிழ அன்பர்கள் புகழுகின்ற திருச்செந்தூரில் உறைகின்ற முருகனே!

எவ்விடத்திலும் விளங்குகின்ற நிலவு (போன்றிருக்கின்றது), தாமரை (போன்றிருக்கின்றது) என்று (உவமை) சொல்லப் படும் முகத்தையுடைய மாதர்கள் (வள்ளியும் தேவசேனையும்)

இன்பம் பெருக அன்போடு அணைகின்ற (பெருமாளே)! என்றும் இளமை விளங்க இருக்கும் பெருமாளே!

(வென்றி அடிகள் தொழ வாராய்)

## 86

மேகம் என்னும்படியான கூந்தல், பிறைபோன்ற அழகிய புருவங்கள் எனப்படும் வில், அம்பு, அழகிய கயல் மீன், வண்டு, தாமரை இவைகளைப் பழித்துத் தமது சிறப்பை வெளிக்காட்ட வல்ல கண்கள் —

---

1. 'நீரிற் படிந்துவிடு பாசம்' - திருப்புகழ் 162. பிணத்தை எரியவிட்டுச்சுடுகாட்டை விட்டகன்று நீரிற் குளித்தவுடன் பந்த பாசம் விலகுகின்றது - "நல்ல கிளை குளத்து நீரளவே" - ஷேத்திரத் திருவந்தாதி.

மண்ட லஞ்சுழ லுஞ்செவி யங்குழை
தங்க வெண்டர ளம்பதி யும்பலு
* மண்ட லந்திக ழுங்கமு கஞ்சிறு கண்டமாதர்;

கஞ்சு கங்குர லுங்கழை யம்புய
கொங்கை செங்கிரி யும்பவ ளம்பொறி
கந்த சந்தன மும்பொலி யுந்துகில் வஞ்சிசேருங்

கஞ்ச மண்டுளி னின் றிர சம்புகு
கண்ப டர்ந்திட ரம்பையெ னுந்தொடை
கண்கை யஞ்சர ணஞ்செயல் **வஞ்சரை நம்புவேனோ;**

சஞ்ச சஞ்சக ணஞ்சக டுண்டுடு
டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு
தந்த னந்தன திந்திமி சங்குகள் பொங்குதாரை

சம்பு வின்கும ரன்புல வன்பொரு
கந்த னென்றிடு துந்துமி யுந்துவ
சங்க ளங்கொளி ருங்கடை யுந்திசை விஞ்சவேகண்;

டஞ்சு வஞ்சசுரன்திர ளுங்குவ
டன்ற டங்கலும் வெந்துபொ ரிந்திட
அண்ட ரிந்திர னுஞ்சர ணம்புக வென்றவேளே-

† அம்பு யந்தண ரம்பைகு றிஞ்சியின்
மங்கை யங் ‡ குடில் மங்கையொ டன்புடன்
அண்ட ருந்தொழு **செந்திலி** லின்புறு

தம்பிரானே. (71)

---

* மண்டலம் - மண் தலம்.

† அம்புய அம் தண் அரம்பை எனப் பிரித்துக் கொள்க.

‡ குடில் - ஆகாயம்; விண்ணுலகம். குடில் மங்கை - தெய்வயானை.

நாட்டிலுள்ளார் கலங்கும்படியான செவியில் உள்ள அழகிய குழைகள், பொருந்தியுள்ள அந்த வெளுத்த முத்துக்கள் பதித்தாற் போன்ற பற்கள், மண் தலத்தில் (பூமியில்) விளங்கும் கமுகு போன்ற அழகிய சிறிய கழுத்து, அழகு,

கம் (பேரின்பம்), சுகம் (கிளி) என்னும்படியான குரலாம் புல்லாங்குழல், தாமரை போன்ற கொங்கையாம் செவ்விய மலை, பவளமாலை, தேமல், நறுமணச் சந்தனம், விளங்குகின்ற ஆடை, வஞ்சிக் கொடி போன்ற இடை, பொருந்திய

கஞ்சம் (அமிர்தம்) நிறைந்த உள்ளில் நின்று உட்புறத்திலிருந்து வெளிப்பட்ட (காம) ரசம் (இன்பம்) புகுந்துள்ள இடம், பரந்த வாழை போன்ற தொடை, கண், கை, அழகிய கால்கள், செயல்கள் - கூடிய வஞ்சரை (பொது மகளிரை) நம்புவேனோ;

சஞ்ச சஞ்சக.. தந்தனந்தன திந்திமி என்று சங்கங்களும், ஒலித்து எழுகின்ற தாரைகளும் (காளங்களாம் ஊதுங்குழல் வாத்தியங்களும்)

சம்பு குமாரன், புலவன், போர்வல்ல கந்தன் என்றெல்லாம் ஒலிக்கும் பேரிகை, கொடிகள், அவ்விடத்திற் பிரகாசிக்கும் குடைகள் ( இவை யெல்லாம்) திசைகளில் மிகுந்து பொலியவே, (அக் காட்சியைக்) கண்டு —

அஞ்சும்படியாக, வஞ்சகம் உள்ள அசுரன் (சூரனுடைய) சேனையும், (கிரௌஞ்ச) மலையும் - ஆக அன்று எல்லாமும் வெந்து பொரிந்திட (கரியாகத்), தேவர்களும் இந்திரனும் (தஞ்சமென்று) உனது திருவடியிற் சார, வெற்றி கொண்ட வேளே!

தாமரையும், குளிர்ந்த வாழையும் (உள்ள) மலை நிலத்து மங்கை (வள்ளி), அழகிய விண்ணுலக மங்கை (தேவசே-னை)- ஆகிய இவர்கள் இருவரொடும் (இன்பம் - உறு-கின்ற தம்பிரானே!) அன்புடனே தேவர்களும் தொழு-கின்ற திருச்செந்தூரில் இன்புறுகின்ற தம்பிரானே!

(அல்லது - வள்ளி - தேவசேனை இவர்கள் இருவரோடும், அன்புடனே அண்டரும் தொழுகின்ற திருச்செந்தூரில் இன்புறுகின்ற தம்பிரானே!

(வஞ்சரை நம்புவேனோ!)

## 87. கருவில் விழாதிருக்க

மனைகனக மைந்தர் தமதழகு பெண்டிர்
வலிமைகுல நின்ற நிலையூர்பேர்-

வளரிளமை தஞ்ச முனைபுனைவ ளங்கள்
வரிசைதம ரென்று வருமாயக்;

கனவுநிலை யின்ப மதனையென தென்று
கருதிவிழி யின்ப மடவார்தம்-

கலவிமயல் கொண்டு பலவுடல்பு ணர்ந்து
**கருவில் விழுகின்ற தியல்போ**தான்;

நினையுநின தன்பர் பழவினைக ளைந்து
நெடுவரைபி ளந்த கதிர்வேலா-

நிலமுதல் விளங்கு நலமருவு **செந்தில்**
[1] நிலைபெறஇ ருந்த முருகோனே!

புனைமலர்பு னைந்த புனமறம டந்தை
புளகஇரு கொங்கை புணர்மார்பா-

பொருதுடனெ திர்ந்த நிருதர்மகு டங்கள்
பொடிபடந டந்த பெருமாளே. (72)

---

1. 'அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே'- திருமுருகாற்றுப்படை.

# 87

வீடு, பொன், மக்கள் தம்முடைய அழகிய பெண்டிர் (மனைவி முதலானோர்), (தமது) வலிமை, குலம், (தாம்) இருக்கும் நிலை, (தமது ) ஊர், (தமது) பேர் —

வளர்ச்சியுறும் இளமை, தமக்குள்ள சார்பு (பற்றுக்கோடு), துணிவு, ஆபரணம் ஆதிய செல்வங்கள், மேம்பாடுகள், சுற்றத்தார்-என்றெல்லாம் சொல்லப்படுகின்ற மாயமான,

கனவு நிலை கொண்ட (நிலையில்லாத) இன்பத்தை 'எனது' என்று நினைத்து, கண்ணினால் இன்பம் ஊட்டும் மாதர்களுடைய —

கலவி மயக்கத்தைப் பூண்டு, பல உடல்களை (பலபேரைப்) புணர்ந்து கருப்பப் பையில் விழுகிறது (பல பிறவிகள் எடுப்பது) தக்கது ஆகுமா? (ஆகாது என்றபடி);

நினைக்கின்ற உனது அன்பர்களுடைய பழவினைகளை நீக்கி, நீண்ட மலையை (கிரௌஞ்சத்தை)ப் பிளந்த ஒளி வீசும் வேலனே!

பூமியில் ஏற்றத்துடன் (சிறப்புடன், முதல் இடமாக) விளங்குகின்ற அழகைப் பெற்ற (உயர்வைப் பெற்ற) திருச்செந்தூரில் நிலைபெற வீற்றிருந்த முருகனே!;

அலங்காரத்துக்குத் தக்க மலர்களை அணிந்த (தினைப்) புனத்திலிருந்த வேடப் பெண்ணின் (வள்ளியின்) புளகிதம் கொண்ட இரு கொங்கைகளையும் அணைந்த மார்பனே!

சண்டை செய்து எதிர்த்து வந்த அசுரர்களுடைய மணி முடிகள் பொடிபடும்படி(போர்க்கு) நடந்த பெருமாளே!

(கருவில் விழுகின்ற தியல்போ தான்!)

## 88. பொது மகளிர் உறவு அற

மாய வாடைதி மிர்ந்திடு கொங்கையில்
மூடு சீலைதி றந்தம ழுங்கிகள்
வாசல் தோறுந டந்துசி ணுங்கிகள்பழையோர்மேல்-

வால நேசநி னைந்தழு வம்பிகள்
ஆசை நோய்கொள்ம ருந்திடு சண்டிகள்
[1]வாற பேர்பொருள் கண்டுவி ரும்பிகளெவரேனும்;

நேய மேகவி கொண்டுசொல் மிண்டிகள்
காசி லாதவர் தங்களை யன்பற
நீதி போலநெ கிழ்ந்தப றம்பிக ளவர்தாய்மார்-

[2]நீலி நாடக மும்பயில் மண்டைகள்
பாளை யூறுக ளுண்டிடு தொண்டிகள்
நீச ரோடுமி ணங்குக டம்பிக ளுறவாமோ;

பாயு மாமத தந்திமு கம்பெறு
மாதி பாரத மென்ற பெருங்கதை
பார மேருவி லன்று வரைந்தவ னிளையோனே;

*பாவை யாள்குற மங்கை செழுந்தன
பார மீதில ணைந்து முயங்கிய
பாக மாகிய சந்தன குங்கும மணிமார்பா;

சீய மாயுரு வங்கொடு வந் †தசு
ரேசன் மார்பையி டந்து பசுங்குடர்
சேர வாரிய ணிந்த நெடும்புயன் மருகோனே-

---

1. 'வருகிற' என்பது 'வாற' என மருவிற்று,
2. நீலி நாடகம் - பாடல் 27 ன் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

* 'பாலை நேர்மொழி வஞ்சி யிளம்பிடி
தேவயானை செழுந்தன குங்கும
பார மார்பி லணைந்து முயங்கிய எழில்மார்பா' (பா - வே.)
'பார மான்மத சந்தன முங்கிய மணிமார்பா' (பா - வே.)

† அசுரேசன் - இரணியன்.

# 88

மாய வாசனைகள் பூசப்பட்ட கொங்கைகளை மூடுகின்ற புடைவையைத் திறக்கும் நாணம் அற்றவர்கள், (பலர் வீட்டு) வாசல்கள்தோறும் நடந்து சிணுக்கம் (மூக்கால் அழுகை) கொள்பவர்கள், பழைய நேசர்கள் மீது —

பாலியத்தில் தாம் வைத்த நேசத்தை நினைத்து அழுகின்ற வம்புக்காரிகள், ஆசை நோயைத் தரக்கூடிய மருந்தைக் (கலந்து) இடுகின்ற கொடியோர்கள், வருகின்ற பேர்வழிகளிடம் உள்ள பொருளைக் கண்டு விருப்பம் கொள்பவர்கள், யாரா யிருந்தாலும்,

நேசத்தைப் பாடல் மூலமாய்ப் (பாடிச்) சொல்கின்ற திண்ணிய மனத்தினர், காசு இல்லாதவர்களை இரக்கம் இல்லாமல் நீதியுடன் பேசுவதுபோலப் பேசி நழுவவிட்டு விலக்கும் மோசக்காரிகள் , அவர்களுடைய தாய்மார் —

நீலி நாடகம் நடிக்கின்ற (பொய் வேடம் போடுகின்ற) வேசைகள் , தென்னம் பாளையில் ஊறும் கள்ளை உண்ணும் தேவடியாள்கள், இழிந்தவர்களோடும் கூடுகின்ற கெட்ட வர்கள் - (இத்தன்மையருடைய) உறவு ஆமோ? (ஆகாது என்றபடி).

பாய்கின்ற மிக்க மதங்கொண்ட யானையின் முகத்தைக் கொண்ட முதல்வரும், பாரதம் என்ற பெரிய கதையைக் கனங்கொண்ட மேருமலையில் அந்நாள் எழுதின-வருமான (கணபதிக்கு) இளையவனே!

பதுமை போன்றவளாம் குறமங்கை (வள்ளியின்) செழுவிய கொங்கைப் பாரத்தின்மேலே அணைந்து தழுவினதால் (தனது பங்காகக் கிடைத்த) சந்தன குங்குமங்கள் உள்ள அழகிய மார்பனே!

சிங்கத்தின் உருவத்தைப் பூண்டு வந்து அசுரர் தலைவனாம் இரணியனுடைய மார்பைப் பிளந்து பசிய குடலை ஒருசேர வாரி அணிந்துகொண்ட நெடிய மேகம் போன்ற திருமாலின் மருகனே!

தேனு லாவுக டம்ப மணிந்தகி
ரீட சேகர சங்கரர் தந்தருள்
தேவ நாயக **செந்திலு** கந்தருள்

பெருமாளே. (73)

## 89. பொது மகளிர் உறவு அற

மான்போற்கண் பார்வை பெற்றிடு
*மூஞ்சாற்பண் பாடு மக்களை
வாய்ந்தாற்பொன் கோடு செப்பெனு முலைமாதர்-

வாங்காத்திண் டாடு சித்திர
நீங்காச்சங் கேத முக்கிய
வாஞ்சாற்செஞ் சாரு மெய்த்திடு மொழியாலே;

† ஏன்காற்பங் காக ‡ நற்புறு
§ பூங்காற்கொங் காரு மெத்தையில்
ஏய்ந்தாற்பொன் சாரு பொற்பண முதல்நீதா-

ஈந்தாற்கன் றோர மிப்பென
ஆன்பாற் $ றென் போல செப்பிடும்
ஈண்டாச்சம் போக மட்டிக ளுறவாமோ;

கான்பாற்சந் தாடு பொற்கிரி
தூம்பாற் ¶ பைந் தோளி கட்கடை
காண்பாற்றுஞ் சாமல் நத்திடும் அசுரேசன்-

---

* மூஞ்சி மூஞ்செனத் திரிந்தது; ஆகுபெயராய் வாயை உணர்த்தி நின்றது.

† ஏன் - என். ‡ நற்பு - நன்மை.

§ கால் - பூவின் தாள், காற்று.

$ தென் - தேன். ¶ பைந்தோளி: சீதை.

தேன் ஒழுகும் கடப்ப மலர் மாலை அணிந்த கீரிடத்தை முடி மீது கொண்டவனே! சங்கரர் தந்தருளிய தேவநாயகனே! திருச்செந்தூரில் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் பெருமாளே!

(கடம்பிகள் உறவாமோ?)

## 89

மான்போலக் கண் பார்வை பெற்றுள்ள முகத்தால் முக அழகால், (முக ஜாடையால்) பண்பு (தரம்) வாய்ந்த ஆண் மக்கள் கிடைக்கப்பெற்றால், தங்கமலை, (தங்கச்) சிமிழ் என்னும் படியான கொங்கைகளை உடைய மாதர்கள் —

(அம்மக்களை வசீகரித்துப்) பிடித்துத் திண்டாட்டம் தரக் கூடியதும், விசித்திரம் நீங்காததும், ஒரு குறி (ஒரு நோக்கம்) கொண்டுள்ளதும், முக்கியமானதும், வாஞ்சை (ஆசை) எழுப்புவதும் ஆன, (செவ்விய) இனிப்பான ரசம் நிரம்பிய உண்மை கலந்தது போன்ற பேச்சுக்களாலே,

என்னிடத்தில் பங்கு ஆக (என் பக்கமாக என்று அழைத்துச் சென்று) நன்மை (இன்பம்) தரும், பூவின் தாளின் வாசனை (காம்போடு கூடிய மலரின் மணம்) அல்லது - (அழகிய காற்று வீசும் நறுமணம்) நிறைந்த மெத்தைப் படுக்கையிற் சோர்ந்தவுடன், பொன்னாலாகிய அழகிய காசு முதலில் நீ கொடு —

கொடுத்தவர்க்குத்தானே இன்பக் கூட்டுறவு (கிடைக்கும்) என்று பசும்பாலும், தேனும் (கலந்தது) போலச் சொல்லிக் கிட்ட நெருங்காத போக மங்கையர் - ஆகும், அந்த மட்டிகளுடைய உறவு இருக்கலாமா (இருத்தல் ஆகாது - என்றபடி).

காட்டிடையே, சந்தனம் பூசப்பட்ட அழகிய மலைபோன்ற (கொங்கைகளையும்), மூங்கில் போன்ற பசிய தோள்களையும் உடைய (சீதையின்) கண்கடை (கடைக்கண்) காட்சி பெற விரும்பித் தூக்கங்கொள்ளாது ஆசைகொண்டிருந்த அரக்கர் தலைவன் (இராவணனுடைய)

*காம்பேய்ப்பந் தாட விக்ரம
வான்றோய்க்கெம் பீர விற்கணை
†காண்டேர்க்கொண் டேவு மச்சுதன் மருகோனே;

தீம்பாற்கும் பாகு சர்க்கரை
‡காம்பாற்செந் தேற லொத்துரை
தீர்ந்தார்க் §கங்காளி பெற்றருள் புதல்வோனே-

தீண்பார்க்குன் போத முற்றுற
மாண்டார்க்கொண் டோது முக்கிய
தேன்போற் செந்தூரில் மொய்த்தருள்

பெருமாளே. (74)

## 90. பொது மகளிர்மேல் மயல் (அற)

முகிலாமெனு மளகங் காட்டி
மதிபோலுயர் நுதலுங் காட்டி
முகிழாகிய நகையுங் காட்டி அமுதூறு-

மொழியாகிய மதுரங் காட்டி
விழியாகிய கணையுங் காட்டி
[1] முகமாகிய கமலங் காட்டி மலைபோலே;

வகையாமிள முலையுங் காட்டி
யிடையாகிய கொடியுங் காட்டி
வளமானகை வளையுங் காட்டி யிதமான-

மணிசேர்கடி தடமுங் காட்டி
மிகவேதொழி லதிகங் காட்டு
மட மாதர்கள் மயலின் சேற்றி லுழல்வேனோ;

---

* காம் - கம் - தலை. † காண் - அழகு.

‡ காம்பாற் செந்தேறல் - "நீடு அமை விளைந்த தேன்கள் தேறல்" - திருமுருகாற்றுப்படை.

§ கங்காளி - பார்வதி. 'தீண்பார்' - திண் பார்.

1. வண் கமலம் முகங்காட்ட - தேவாரம் - சம்பந்தர் I-129-1.

தலைகள் பேய்ப்பந்து (எறிபந்து) போல எறியப்பட்டுருள, வீரமுள்ளதாய், வானினும் தோயவல்லதாய், வீறு அமைந்த தாய் உள்ள வலி அம்பை அழகிய தேர்மீது இருந்து செலுத்திய திருமாலின் மருகனே!

இனிய பால், காய்ச்சின வெல்லம், சர்க்கரை, மூங்கிலிலேயிருந்து முற்றிய நறுந்தேன் - இவைகளை ஒத்துள்ளவரும் உரைக்கு எட்டாதவருமான சிவபிரானும் பார்வதியும் ஈன்றருளிய புதல்வனே!

திண்ணிய (இப்) பூமியில் உன் (திருவடித் தியான) அறிவு முழுமையாக வாய்க்கப்பெற்று மேம்பட்டவர்களைக் கொண்டு ஓதப்படும் (போற்றப்படும், பூசிக்கப்படும்) விசேடங் கொண்டவனே! வண்டுகள் (மலரில் மொய்ப்பது) போலத் திருச்செந்தூரில் (அடியார் கூட்டங்களை) நெருங்க வைத்தருளும் பெருமாளே!

(சம்போக மட்டிகள் உறவாமோ?)

## 90

மேகம்போன்ற கூந்தலைக் காட்டி, பிறைபோலச் சிறந்த நெற்றியைக் காட்டி, (முல்லை) அரும்பு போன்ற பற்களைக் காட்டி அமுதம் ஊறுகின்ற —

மொழியாகிய இனிமையைக் காட்டி, கண்ணாகிய அம்பைக் காட்டி, முகமாகிய தாமரையைக் காட்டி மலைபோல;

ஒழுங்குள்ள இளமுலையைக் காட்டி, இடை என்கின்ற (வஞ்சிக்) கொடியைக் காட்டி, வளப்பம் பொருந்திய கை வளையல்களைக் காட்டி, இன்பம் தருவதான —

அழகு வாய்ந்த (அல்லது மணிமேகலை பூண்ட) அல்குலைக் காட்டி, மிகவே (தங்கள்) தொழிலை அதிகமாகக் காட்டும் அழகிய மாதர்களின் மயக்கச் சேற்றில் அலைவேனோ?

நகையால்மத னுருவந் தீத்த
சிவனாரருள் சுதனென் றார்க்கு
நலனேயரு ளமர் **செந்தூர்க்கு** ளுறைவோனே-

நவமாமணி வடமும் பூத்த
தனமாதெனு மிபமின் சேர்க்கை
நழுவாவகை பிரியங் காட்டு முருகோனே;

அகமேவிய நிருதன் போர்க்கு
வரவேசமர் புரியுந் தோற்ற
மறியாமலு மபயங் காட்டி முறைகூறி-

அயிராவத முதுகின் தோற்றி
யடையாமென இனிதன் பேத்து
மமரேசனை முழுதுங் காத்த பெருமாளே. (75)

## 91. பொது மகளிர் உறவு அற

முலைமு கந்தி மிர்ந்த கலவை யுந்து லங்கு
முறுவ லுஞ்சி வந்த கனிவாயும்-

முருக விழ்ந்து திர்ந்த மலர்க ளுஞ்ச ரிந்த
முகிலு [1] மின்ப சிங்கி விழிவேலும்;

[2] சிலைமு கங்க லந்த திலத முங்கு ளிர்ந்த
திருமு கந்த தும்பு குறுவேர்வும்-

தெரிய வந்து நின்ற மகளிர் பின்சு ழன்று
செயல ழிந்து ழன்று திரிவேனோ;

[3] மலைமு கஞ்சு மந்த புலவர் செஞ்சொல் கொண்டு
வழிதி றந்த செங்கை வடிவேலா-

1. இன்ப சிங்க விழி - "இருநோக்கிவளுண்கண்" - திருக்குறள் 1091.

2. சிலை - வில்போன்ற நெற்றி - முகம் - இடம்.

3. மலை முகம் சுமந்த புலவர் - மலைக்குகையில் அடைக்கப்பட்ட நக்கீரர். செஞ்சொல் - (அவரால் துதிக்கப்பட்ட) திருமுருகாற்றுப்படை. இவ்வரலாறு பின்வருமாறு:-

சிவபிரானையே பாடி முருகனைப் பாடாதிருந்தார் நக்கீரர் என்னும் சங்கத் தலைமைத் தமிழ்ப் புலவர். இவர் திருப்பரங்குன்றத்திற் பொய்கைக்

தொடர்ச்சி பக்கம் 214

(புன்) சிரிப்பால் மன்மதனுடைய உருவத்தை எரித்து அழித்த சிவபெருமான் அருளிய பிள்ளை என விளங்கி, யார்க்கும் நன்மையே அருள் செய்து (திருச்) செந்தூர்க்குள் உறைபவனே!

ஒன்பது சிறந்த மணிகளால் ஆகிய மாலை (சிறந்த நவரத்ன மாலை) விளங்கித் தோன்றும் கொங்கையை உடைய மாது (ஆகிய) யானை மகளின் (தேவ சேனையின்) சேர்க்கையை நழுவ விடாமல் (அந்தத் தேவியிடம்) அன்பு காட்டும் முருகனே!

அகங்காரங் கொண்ட அசுரன் (சூரன்) சண்டைக்கு வர சண்டை செய்யும் எண்ணம் உதிக்கு முன்னே, அஞ்ச வேண்டாம் என அபயம் தந்து, (தம்மிடம்) முறையிட்டு வந்தவனும் —

அயிராவதம் (வெள்ளை யானையின்) முதுகின்மேல் விளங்குபவனும், அடைக்கலம் நாங்கள் எனக் கூறி இனிமையுடனும் அன்புடனும் போற்றினவனுமான அமரேசனை (தேவேந்திரனை) முழுமையுங் காத்த (பூரணமாகக் காத்த) பெருமாளே!

*(மாதர்கள் மயலின் சேற்றில் உழல்வேனோ!)*

## 91

கொங்கையின்மேல் பூசப்பட்ட கலவைச் சந்தனமும், விளங்கும் பற்களும், சிவந்த (கொவ்வைக்கனி, வீழிக்கனி) போன்றவாயும் —

மணம் அவிழ்ந்து உதிர்ந்த மலர்கள் சரிந்துள்ள மேகம் போன்ற கூந்தலும், இன்பமும் நஞ்சும் (ஒருங்கே) கொண்ட கண் என்கின்ற வேலும்,

வில் போன்ற (நெற்றியிற்) கூடிய பொட்டும், குளிர்ந்த, அழகிய முகத்தில் நிரம்பி வெளிப்பட்ட சிறு வியர்வையும் —

தெரியும்படி வந்து நின்ற மாதர்களின் பின்னே சுழன்று (என்) செயல் அழிந்து அலைந்து திரிவேனோ?

மலை(க்குகை) யிடத்தே அடைக்கப்பட்டிருந்த புலவர் (நக்கீரரது) செவ்விய பாடலை (திருமுருகாற்றுப் படையை)ச் (செவி) கொண்டு (கேட்டு மகிழ்ந்து), அந்தக் குகையின் வழியைத் திறந்துவிட்ட செங்கை வடிவேலனே!

வளர்பு னம்ப யின்ற குறம டந்தை கொங்கை
மணிவ டம்பு தைந்த புயவேளே;

அலைமு கந்த வழ்ந்து சினைமு திர்ந்த சங்க
மலறி வந்து கஞ்ச மலர்மீதே-

அளிக லந்தி ரங்க இசையு டன்து யின்ற
அரிய **செந்தில்** வந்த பெருமாளே. (76)

## 92. காலன் வரா வகை: கழல் பெற

மூப்புற் றுச்செவி கேட்பற் றுப்பெரு
மூச்சுற் றுச்செயல் தடுமாறி-

மூர்க்கச் சொற்குரல் காட்டிக் கக்கிட
மூக்குக் குட்சளி [1]யிளையோடும்;

---

கரையில் ஜெபம் செய்துகொண்டிருந்தபோது அங்கிருந்த அரசமரத்தின் இலை ஒன்று பொய்கை நீரில் விழ, அந்த இலை உருமாறி ஒரு பாதி மீனாகவும் ஒரு பாதி பறவையாகவும் மாறி ஒன்றை ஒன்று இழுத்துப் பூசலிட, அதைக் கண்ட நக்கீரர் தமது ஜெபத்தைவிட்டு மீன்-பறவை இவைகளின் பூசலை விலக்கவேண்டி அவைகளை இணைத்திருந்த மெல்லிய சதையைக் கிள்ள, மீனும் பறவையும் உடனே துடிதுடித்து இறந்தன. இந்தப் பாதகத்தை ஏன் செய்தனை என்று முருகவேளின் பூதகணத் தலைவர் நக்கீரரைக் கொண்டு போய் ஒரு மலைக்குகையில் அடைத்தனர். அந்தக் குகையில் கற்கிமுகி என்னும் குதிரைமுகப் பெண் பூதம், ஆயிரம்பேர் நிறைந்தவுடன் உண்ண வைத்திருந்த 999 பேர்களோடு நக்கீரரும் அடைபட்டனர். இந்த இடர்ப்பாட்டை அறிந்த நக்கீரர் தாம் முருகவேளைப் பாடாதிருந்தது பிழையென்றுணர்ந்து அவரைப் பாடி உய்யலாம் எனத் தேர்ந்து பாட முயன்றபோது முருகவேளே "உலகம் உவப்ப" என்று அடி எடுத்துக் கொடுக்க, நக்கீரரும் "திருமுருகாற்றுப்படை" என்னும் அருமைப் பாடலைப் பாடினர். தமிழ் முருகன் அப்பாடலைக் கேட்டு மிக உவந்து தமது திருக்கை வேலால் குகையைப் பிளந்து அந்தப் பெண் பூதத்தைக் கொல்வித்துப் புலவரைக் குகையினின்றும் மீட்டனர். இவ்வரலாற்றின் விரிவைத் திருப்பரங்குன்றத்துப் புராணத்திற் காண்க.

வளர்கின்ற (தினைப்) புனத்தில் காவலிருந்த குற மங்கையின் (வள்ளியின்) கொங்கை மீதிருந்த மணிமாலை புதைத்த புயங்கள் (விளங்கும்) வேளே!

அலைகளிலே தவழ்ந்து சூல் (கருப்பம்) நிறைந்த சங்கங்கள் மிக ஒலித்து வந்து தாமரை மலர் மேலே-

வண்டுகள் மொய்த்து ஒலிக்க (அந்த) இசையைக் கேட்டுக் கொண்டே துயில்கொள்ளும் அருமை நகராம் **திருச்செந்தூரில் வந்து அமர்ந்துள்ள பெருமாளே!**

*(நான் செயலழிந்து உழன்று திரிவேனோ!)*

## 92

வயது முதிர்ந்து (மூத்து), காது கேட்குஞ் சத்தியை இழந்து, (செவிடாகி), பெருமூச்சு விட்டுக்கொண்டு, செயல்கள் தடுமாறி —

கொடிய கோபச் சொல்கள் வரும் குரலைக்காட்டி, வெளிப்படுகின்ற மூக்குச்சளியும் (நெஞ்சுக்) கோழையும்;

---

திருப்புகழ் *156, 203, 805* எண்ணுள்ள பாடல்களிலும், வேல் வகுப்பு, பூதவேதாள வகுப்பு, வேடிச்சி காவலன் வகுப்பு, புய வகுப்பு என்னும் வகுப்புக்களிலும், கந்தரந்தாதி *51* ஆம் பாடலிலும் காணலாம். திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் செங்கீரைப் பருவம் *3* ஆம் செய்யுளிலும், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் சிறு தேர்ப்பருவம் *2* ஆம் செய்யுளிலும், தணிகைப் பிள்ளைத்தமிழ் முத்தப்பருவம் *10* ஆம் செய்யுளிலும், 'முருகரும் தமிழும்' என்னும் எனது நூலிலும் காணலாம்.

*1. பக்கம் 214:-* இளை - ஈளை: கோழை.

கோப்புக் கட்டி[1]யி னாப்பிச் செற்றிடு
கூட்டிற் [2]புக்குயி ரலையாமுன்-

[3]கூற்றத் தத்துவ நீக்கிப் பொற்கழல்
கூட்டிச் சற்றருள் புரிவாயே

[4]காப்புப் பொற்கிரி கோட்டிப் பற்றலர்
காப்பைக் [5]கட்டவர் குருநாதா-

காட்டுக் குட்குற வாட்டிக் குப்பல
காப்புக் குத்திர மொழிவோனே-

வாய்ப்புற் றத்தமிழ் [6]மார்க்கத் திட்பொருள்
[7]வாய்க்குச் [8]சித்திர முருகோனே-

வார்த்தைச் சிற்பர தீர்த்தச் சுற்றலை
வாய்க்குட் பொற்பமர் பெருமாளே. (77)

---

1. இனா பிச்சு ஏற்றிடு கூட்டில் - துன்பம் சிதைந்து வருத்தும் உடலில்.இனாப்பி செற்றிடு - துன்பம் உண்டாக்கி வருத்தம் என்லுமாம்.

2. புக்கு உயிர் அலையாமுன் - புகுந்து உயிரை வதைப்பதற்கு முன்.

3. கூற்றத் தத்துவம் - உடல் வேறு உயிர் வேறாகக் கூறுபடுத்தும் யமவேதனைத் தன்மை.

4. காப்புப் பொற்கிரி - மேரு. இது பூமிக்கு இருசு எனப்படும். " மேருத் தூணென்று நடு நட்டு" - மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்: செங்கீரை - 3.

5. கட்டவர் - களைந்தவர்.

6. மார்க்கம் - அகப்பொருட்டுறை. (இலக். விளக்கம் 583 உரை)

7. வாய் - வாய்மை (மெய்ம்மை).

8. சித்திரம் - இரகசியம் " பகைவெல் சித்திரம்" பெருங்கதை, உஞ்சை 37-43.

கோத்ததுபோல ஒன்று சேர்ந்து, துன்பம் உண்டாக்கி வருத்தும் இவ்வுடலிற் புகுந்து (என்) உயிர் அலைவதற்கு முன்னம்-

கூற்றுவன் (என் உயிரை விடுவிக்கும்) செயலமைப்பை நீக்கி, (உனது) அழகிய திருவடியில் (என்னைச்) சேர்த்துச் சற்று அருள் புரிவாயே;

(பூமி நிலைத்து நிற்கச்) காவலா யிருக்கின்ற பொன்மலையை (மேருவை) வளைத்துப், பகைவர்களுடைய அரணைக் (காப்பு மதிலை) அழித்தவராம் சிவபிரானுக்குக் குரு நாதனே! —

காட்டுக்குள் குறவாட்டியாம் வள்ளியிடம் பலவாறாகக், காத்துப் புரப்பதைக் குறிக்கும் [1] (என்னை நீ காத்தருள் என்னும்) வஞ்சகச் சொற்களைச் சொன்னவனே!

[2] செழிப்புற்ற தமிழ் அகப்பொருள் துறையின் திண்ணிய (உறுதியான) பொருளின் வாய்மைக்கு (அகப்பொருள் துறையின் உண்மை விளக்கத்துக்கு), (உருத்திர சன்மராய் உதவிய) ரகசிய (அல்லது அழகிய) முருகனே!

சொல்லுக்கும் அறிவுக்கும் எட்டாத கடவுளே! (புனித) தீர்த்தமாய்ச் சுற்றியுள்ள கடலின் கரையில் (திருச்செந்தூரில்) அழகுடன் அமர்ந்துள்ள பெருமாளே!

(கூற்றத் தத்துவம் நீக்கிக் கழல் கூட்டி அருள் புரிவாயே!)

---

1. வள்ளியிடம் இங்ஙனம் முருகவேள் கூறியதை "ஆவிஉய அருள் பாராய்" எனவரும் 209 ஆம் பாடலையும் "மனம் பரதவிக்க மால் தரலாமோ" என வரும் 1154 ஆம் பாடலையும் பார்க்க.

2. இறையனாரகப் பொருளுக்கு உரை கண்டு, தாம்தாம் கண்ட பொருளே சரியான பொருள் என்று சங்கப் புலவர்கள் கலகமிட, முருகவேள் சிவபிரானது மொழிப்படி உருத்திர சன்மர் என்னும் பெயருடன் ஊமைப்-பிள்ளையாய் வணிகர் குலத்தில் தோன்றி,சங்கத்தில் வீற்றிருந்து, புலவர்களின் உரையைத் தனித்தனியே கேட்டு, (நக்கீரர்) உரையை வியந்து தெளிவித்த வரலாறு இங்குக் குறித்துளது போலும். இவ் வரலாற்றின் விரிவை 'சங்கத்தார் கலகந் தீர்த்த திருவிளையாடலிலும், 'குறிப்பைத் திருப்புகழ் 126, 350, 991 1055 எண்ணுள்ள பாடல்களிலும் காணலாம்.

## 93. இறைவனுடன் ஒன்றாகி நிற்றல்

மூளும்வினை சேர மேல்கொண்டி டாஐந்து
பூதவெகு வாய மாயங்கள் தானெஞ்சில்
மூடிநெறி நீதி யேதுஞ்செ யாவஞ்சி யதி[1] பார-

மோகநினை வான போகஞ்செய் வேனண்டர்
தேடஅரி தாய [2]ஞேயங்க ளாய்நின்ற
மூலபர யோக மேல்கொண் டிடாநின்ற துளதாகி;

நாளுமதி வேக கால்கொண்டு தீமண்ட
[3]வாசியன லூடு போயொன்றி வானின்க
[4]ணாமமதி மீதி லூறுங்க லாஇன்ப அமுதூறல்-

நாடியதன் மீது போய்நின்ற ஆநந்த
மேலைவெளி யேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே;

காளவிட மூணி [5]மாதங்கி வேதஞ்சொல்
பேதைநெடு நீலி பாதங்க ளால்வந்த
காலன்விழ மோது சாமுண்டி பாரம்பொ டனல்வாயு-

---

1. அதிபாரம் - கொங்கையைக் குறிக்கும். "அதிபாரவிதமுமுடை மாதர்" -கணபதி துதி 4 ஆம்பாடல்.

2. ஞேயம் - ஞானத்தினால் அறியப்படு பொருள்.

3. வாசி - சுவாசம்.

4. நாமம் - நிறைவு 'நாமவெள்ளத்து நடுவட் டோன்றிய' = பரிபாடல் 3-92.

5. மாதங்கி - மதங்க முனிவர் தவஞ் செய்து சத்தியைப் பெண்ணாகப் பெற்று மாதங்கி எனப் பெயரிட்டு வளர்த்தார் என்ப (மதங்கர்) பாணர் குலத்தில் தோன்றியவள் எனலுமாம். " மதங்கர் குலப் பெண்களிற் றோன்றிய எம்பெருமாட்டி" அபிராமி. யந்தாதி 70. 11.

# 93

மூண்டு வருகின்ற வினைகள் சேர்ந்து மேல்கொண்டு (என்னைப் பீடிக்க) (நிலம், நீர், தீ, காற்று, விசும்பு எனப்படும்) ஐந்து பூதங்களாற் பலவகையான மாயங்கள் (என்) உள்ளத்திற் குவிய, நெறியான செயல், நீதியான செயல் என்பன (நான்) செய்யாமல், வஞ்சிக்கொடி போன்ற (மாதர்களின்) அதிபாரமான (கொங்கைகளின் மீது) —

மோகங் கொண்ட நினைவு உள்ளவனாய் (அவர்களுடன்) போகத்தை அனுபவிப்பேன்; (அத்தகைய நான்) தேவர்கள் தேடுதற்கு அரிதானதும், ஞானத்தினால் அறியப்படும் பொருளாய் நின்றுள்ளதும், (பிராணவாயு) மூலாதாரத்தினின்று மேலே உள்ள ஆதாரங்களிற் செலுத்தப்படும் யோக நெறியை மேற்கொண்டு, அந்நிலையிலேயே இருந்து;

நாள்தோறும் மிக்க வேகமாகச் செல்லும் (அப் பிராண) வாயுவின் சேர்க்கையால் எழுகின்ற சிவாக்கினிச் சுவாலை வீச, அந்தப் பிராண வாயுவுடனும் சிவாக்கினியுடனும் (ஆறு ஆதாரங்களின் வழியே) (கபாலம் வரையில்) போய்ச் சேர்ந்து (தியானத்தில் ஒன்றி) வானிடத்தே மேலைச் சிவ வீதியிலே) நிறைந்த சந்திரமண்டலத்தின் மீதிருந்து ஊறுகின்ற கலை இன்ப அமுத ஊறலை —

நாடி யாய்ந்து, அந்நிலைக்கும் மேலே போய் நிற்கின்ற ஆனந்த மயமான பர ஆகாச வெளியில் ஏறிச் சேர்ந்து, நீ-நான் என்னும் வேற்றுமை யில்லாததும் நாடிப் பார்க்கின் இன்னும் வேறு எதுவும் இல்லாததுமான (சூனிய) நிலையில் (எல்லா மிழந்த நிலையில்) வாழும் படியான (பாக்கிய) நிலையைப் பெறுகின்ற ஒருநாளும் உண்டோ!

கரிய விடத்தை உண்டவள், மாதங்கி, வேதத்திற் சொல்லப்பட்ட பேதை, பெருமை வாய்ந்த நீலி (நீலநிறம் உடையவள்), கிரகபாதங்களின்படி (கோள் முறைப்படி) ஆயுள் நாள் முடிந்தமையால்) வந்த காலன் விழும்படி உதைத்து மோதிய துர்க்கை, நிலம், (அம்பு) நீர், அவையுடன் நெருப்பு, காற்று, —

*காதிமுதிர் வான மேதங்கி வாழ்வஞ்சி*
*[1]ஆடல்விடை யேறி பாகங்கு லாமங்கை*
*காளிநட மாடி நாளன்பர் தாம்வந்து தொழுமாது;*

*வாளமுழு தாளு மோர்தண்டு ழாய்தங்கு*
*சோதிமணி மார்ப மாலின்பி னாளின்சொல்*
*வாழுமுமைமாத ராள்மைந்த னேயெந்தை*
*யிளையோனே-*

*மாசிலடி யார்கள் வாழ்கின்ற வூர்சென்று*
*தேடிவிளை யாடி யேயங்ங னேநின்று*
*வாழுமயில் வீர னே**செந்தில்** வாழ்கின்ற*
*பெருமாளே.* (78)

## 94. வீடு பெற (இராம இராவண யுத்தம்)

*[2]வஞ்சங்கொண் டுந்திட ராவண*
*னும்பந்தென் திண்பரி தேர்கரி*
*மஞ்சின்பண் புஞ்சரி யாமென வெகுசேனை-*

*வந்தம்பும் பொங்கிய தாகள*
*திர்ந்துந்தன் சம்பிர தாயமும்*
*வம்புந்தும் பும்பல பேசியு மெதிரே[3]கை:*

*மிஞ்சென் றுஞ் சண்டைசெய் போதுகு*
*ரங்குந்துஞ் சுங்கனல் போலவே*
*குண்டுங்குன் றுங்கர டார்மர மதும்வீசி-*

---

1. 'ஆடலேறுடை அண்ணல்' - தேவாரம் - சம்பந்தர் II - 107 - 11.
2. வஞ்சம் கொண்டும் திட ராவணனும் எனப் பிரித்துக் கொள்க.
3. கை - சேனை. " கை வகுத்து" தணிகைப்புரா - சீபரி - 467.

(யாவையும்) அழித்து முற்படும் வானம் - (ஆதிய இப் பஞ்ச பூதங்களிலே) தங்கி வாழ்கின்ற வஞ்சிக்கொடி போன்றவள், ஆடல் புரியவல்ல விடையின் மேல் வரும் சிவபிரானுடைய பாகத்தில் விளங்குகின்ற மங்கை, காளி, நடனி, நாள் தோறும் அன்பர்கள் வந்து தொழுகின்ற மாது;

சக்ரவாளகிரியால் சூழப்பட்ட பூவுலகம் முழுமையும் (காத்து) ஆளும், ஒப்பற்ற, குளிர்ந்த, துழாய் மாலை தங்கும் (மார்பனும்), சோதி மணியாகிய கவுத்துவமணி அணிந்த மார்பனும் ஆகிய திருமாலின் பின்னாள்(தங்கை), இனிய சொல்லே வழங்கும் உமை மாது - (அத்தகைய தேவியின்) மைந்தனே! எந்தையே! இளையோனே —

குற்றமற்ற அடியார்கள் வாழ்கின்ற ஊர்களுக்குப் போய் (அவர்கள் இருக்கும் இடத்தைத்) தேடி, (அவர்களுடன்) விளையாடி அங்கேயே நின்று, வாழ்கின்ற மயில்வீரனே! திருச்செந்தூரில் வாழ்கின்ற பெருமாளே!

(வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே)

# 94

வஞ்சக எண்ணங் கொண்டவனாய், வலிமை வாய்ந்த ராவணன், பந்துபோல (வேகமாகச் செல்லும்) வலிய குதிரை, தேர், யானை, மேக ஒழுங்குக்குச் சரியான அனேகம் சேனை இவைகளுடன் —

வந்து, அம்பின் (கூட்டங்கள்) நிறைந்து எழ, எதிர்த்துத் தனது சாமர்த்தியப் பெருமைப் பேச்சும், வீண்பேச்சும், இழிவான பேச்சும் பல பேசி, எதிரில் உள்ள சேனை (யுடன்) —

மிகவும், நாள்முழுதும், சண்டை செய்தபோது, (எதிரில் உள்ள) குரங்குச் (சேனைகள்) நிலைபெற்ற நெருப்புப் போலக் கோபங்கொண்டு, மலைகளையும், கரடு முரடான மரங்களையும் (பிடுங்கி) வீசி —

மிண்டுந் [1] துங் கங்களி னாலெத
கர்ந்தங் கங்கள் மார்பொடு
மின்சந்துஞ் சிந்தநி சாசரர் வகைசேர;

வுஞ்சண்டன் தென்றிசை நாடிவி
ழுந்தங்குஞ் சென்றெம தூதர்க
ளுந்துந்துந் தென்றிட வேதசை நிணமூளை-

உண்டுங்கண் டுஞ்சில கூளிகள்
டிண்டிண்டென் றுங்குதி போடவு
யர்ந்தம்புங் கொண்டுவெல் மாதவன் மருகோனே;

தஞ்சந்தஞ் சஞ்சிறி யேன்மதி
கொஞ்சங்கொஞ் சந்துரை யேயருள்
தந்தென்றின் பந்தரு வீடது தருவாயே-

சங்கங்கஞ் சங்கயல் சூழ்தட
மெங்கெங்கும் பொங்க [2]ம காபுநி
தந்தங்குஞ் **செந்திலில்** வாழ்வுயர் பெருமாளே. (79)

## 95. காலன் வரும் தினத்தில் திருவடியைப் பெற

வஞ்சத் துடனொரு நெஞ்சிற் பல நினை
வஞ்சிக் கொடியிடை மடவாரும்-

[3]வந்திப் புதல்வரும் [4]அந்திக் கிளைஞரு
மண்டிக் கதறிடு வகைகூர;

[5]அஞ்சக் கலைபடு பஞ்சிப் புழுவுடல்
அங்கிக் கிரையென வுடன்மேவ-

அண்டிப் பயமுற வென்றிச் சமன்வரும்
**அன்றைக் கடியிணை தரவேணும்;**

---

1. துங்கங்கள் - மலைகள்.

2. இன்றும் இப் புனிதத்தைத் திருச்செந்தூர் ஆலயத்தில் அருச்சகர் "இலை விபூதியை" ஆசாரமாகக் கொடுப்பதிற் காணலாம்.

3. வந்தி - வணங்கும். 4. அந்தி - நெருங்கிய.

5. அஞ்சக் கலைபடு - அம்சம் கலைபடு - தத்துவப் பகுதிகள் [illegible]

பேர்த்து எடுக்கப்பட்ட மலைகளினாலே நொறுக்கி, அங்கம் (உடம்பு), கம்(தலை), கரம் (கை) மார்பு இவைகளுடன் ஒளிவிடும் உடற் பொருத்தங்களையும் சிதற அடித்து அரக்கர்களுடைய இனம் முழுமையும்;

யமனுடைய தெற்குத் திசையை நாடி விழவும், அங்குப் போயும், எமதூதர்கள் தள்ளு, தள்ளு, தள்ளு என்று கூறும்படியாக, மாமிசம், கொழுப்பு, மூளை (இவைகளை) —

உண்டும், பார்த்தும், சிலபேய்கள் டிண்டிண்டென்று குதித்துக் கூத்தாடவும், சிறந்த அம்புகளைக் கொண்டு வென்ற திருமாலின் மருகனே!

(பெருமானே!) அடைக்கலம், அடைக்கலம், சிறியேனுடைய அளிவு, அற்பம், அற்பம், துரையே! அருள்பாலித்து எப்போதும் இன்பம் தருகின்ற (மோக்ஷ) வீட்டைத் தருவாய்!

சங்கும், தாமரையும், மீன்களும் உள்ள குளங்கள் பல இடங்களிலும் பொலிய, மகா பரிசுத்தம் துலங்கும் (திருச்) செந்தூரில் வாழ்ந்து ஓங்கும் பெருமாளே!

(என்று இன்பந்தரு வீடது தருவாய்.)

## 95

வஞ்சகத்தையும் அதனுடன் ஒப்பற்ற நெஞ்சிற் பலவித எண்ணங்களையும் (கொண்ட) வஞ்சிக் கொடி போன்ற இடையை உடைய மாதர்களும் —

வணங்கும் புதல்வர்களும், நெருங்கிய சுற்றத்தாரும் ஒன்று கூடிக் கதறுகின்ற செய்கை மிகுதியாக,

(உடலின்) அம்சங்கள் (தத்துவப் பகுதிகள்) கலைந்து பிரிபட்டுப் போகின்ற பஞ்சு போன்ற புழுவுடல் நெருப்புக்கு இரை யென உடனே செல்லும்படி —

நெருங்கிப் பயப்படும்படி வெற்றி பொருந்திய யமன் வரும் அந்த நாளில் (உனது) திருவடியிணையைத் தரவேணும்:

கஞ்சப் பிரமனை அஞ்சத் துயர்செய்து
கன்றச் சிறையிடு [1] மயில்வீரா-

கண்டொத் தனமொழி அண்டத் திருமயில்
[2] கண்டத் தழகிய திருமார்பா;

செஞ் [3] சொற் ழ்லவர்கள் சங்கத் தமிழ்தெரி
**செந்திற் பதி**நக ருறைவோனே-

செம்பொற் குலவட குன்றைக் கடலிடை
சிந்தப் பொரவல பெருமாளே. (80)

## 96. திருவடியைப் பெற

வந்து வந்து முன்த வழ்ந்து
[4] வெஞ்சு கந்த யங்க நின்று

[5] மொஞ்சி மொஞ்சி யென்ற ழுங்கு ழந்தையோடு-

---

1. சிறையிடும் அயில்வீரா - எனப் பிரிக்க, பிரமனை முருகன் கைவேலே சிறையிலிட்டது - "விடவசனஞ்சில பறையும் விரிஞ்சன் விலங்கது கால்பூண்டு தன் மேல்தீர்ந்தனன் வேல்வாங்கவே" - வேல்வாங்கு வகுப்பு. "தலராசி தந்தானைச் சிறையிட்டவேல்"கந்தரந்தாதி 14.

2. கண்டத்து - கண் தத்து.

3. திருச்செந்தூர் சங்கத்தமிழ் கண்டது - உதாரணம்;

"உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீரலைவாய்"

-நக்கீரர், திருமுருகாற்றுப்படை.

"திருமணி விளக்கி னலைவாய்ச் செருமிகு சேஎய்"

-பரணர், அகநானூறு 266.

"வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவேள் நிலைஇய காமர்வியன் துறை" -மதுரை மருதன் இளநாகனார், புறநானூறு 55.

"நெடுவேல் திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்"

-தொல். களவு - சூ. 23-ந:பையுண்மாலை.

"சீர்கெழு செந்திலும்...நீங்கா இறைவன்" - சிலப். 24.

4. வெஞ் சுகம் - விருப்பமாகிய இன்பம்.

5. மொஞ்சி - முலை.

தாமரையில் (வீற்றிருக்கும்) பிரமன் அஞ்சும்படி அவனுக்குத் துயர் உண்டாக்கி (அவனது) மனம் நோவ (அவனைச்) சிறையிலிட்ட வேல்வீரனே!

கற்கண்டுக்கு ஒப்பான மொழியை உடைய தேவர் குலத்து அழகிய மயில் போன்ற தேவசேனையின் பார்வை பாய்கின்ற அழகிய திருமார்பனே!

செஞ்சொற் புலவர்களுடைய சங்க காலத்துத் தமிழைப் பெற்ற திருச் செந்தூர்ப்பதி யென்னும் நகரில் உறைபவனே!

செம்பொன்னாய்ச், சிறந்து, வடக்கே இருந்த கிரௌஞ்ச மலையைக் கடலிடையே சிதறும்படி போர் செய்ய வல்ல பெருமாளே!

(சமன்வரும் அன்றைக் கடியிணை தரவேணும்)

## 96.

அடிக்கடி வந்து, முன்னே தவழ்ந்து, விரும்பத்தக்க இன்பம் விளங்க நின்று, பாச்சி பாச்சி என்று அழுகின்ற குழந்தையும் —

மண்ட லங்கு லுங்க அண்டர்
விண்ட லம்பி ளந்தெ ழுந்த
செம்பொன் மண்ட பங்க ளும்ப யின்றவீடு;

கொந்த ளைந்த குந்த ளந்த
ழைந்து குங்கு மந்த யங்கு
கொங்கை வஞ்சி தஞ்ச மென்று மங்குகாலம்-

[1]கொங் [2]கடம்பு [3]கொங்கு பொங்கு
பைங்க டம்பு தண்டை கொஞ்சு
செஞ்ச தங்கை தங்கு பங்க **யங்கள்தாராய்;**

சந்த டர்ந்தெ ழுந்த ரும்பு
[4]மந்த ரஞ்செ ழுங்க ரும்பு
[5]கந்த ரம்பை [6]செண்ப தங்கொள் **செந்தில்**வாழ்வே-

தண்க டங்க டந்து சென்று
[7]பண்க டங்க டர்ந்த [8]இன்சொல்
திண்பு னம்பு குந்து கண்டி றைஞ்சுகோவே

---

1. கொங்கு - கோங்கு
2. அடம்பு - ஒருவிதக் கொடிப்பூ.
3. கொங்கு பொங்கு - வாசனை மிகுந்த.
4. மந்தரம் - மந்தாரம்.
5. கந்த ரம்பை - கந்த அரம்பை - கிழங்கோடு கூடிய வாழை.
6. செண் - சேண்.
7. பண்க டங் கடர்ந்த - பண்கள் - தங்கு - அடர்ந்த.
8. இன்சொல் - இன்சொலுடைய வள்ளியம்மை.

பூதலமே (தாங்க முடியாது) குலுங்க, தேவர்கள் வாழும் விண்ணுலகம் வரையும் அளாவி எழுந்த செம்பொன் மண்டபங்களுடன் கூடிய வீடு;

பூங்கொத்துகள் கூடிய கூந்தல் தழைந்து, குங்குமம் விளங்கும் கொங்கையையுடைய வஞ்சிக்கொடி (போன்ற மனையாளுமே) (நமக்கு) ஆதரவு (பற்றுக்கோடு) என்றிருந்த (அறிவு) மங்குகின்ற சமயத்தில் (இறக்கும்போது)

கோங்கு, அடம்பு என்னும் கொடிப்பூ, மணம் மிக்க பசிய கடம்பு, தண்டை, கொஞ்சுவதுபோல ஒலிக்கின்ற செவ்விய சதங்கை இவைகள் தங்கும் தாமரை மலர் போன்ற (உன்) திருவடிகளைத் தந்தருளுவாயாக;

சந்தனமரம், அடர்த்தியாய்த் தோன்றி அரும்புவிடும் மந்தாரம், செழிப்புள்ள கரும்பு, கிழங்கோடு கூடிய வாழை (இவைகள்) வான் இடத்தை அளாவும் திருச்செந்தூரில் வாழ்பவனே!

குளிர்ந்த காட்டைக் கடந்துபோய்ப், பலவிதப் பண்இசைகள் தங்கி நெருங்கியன போன்ற இனிய சொற்களை உடைய (வள்ளியம்மை யிருந்த) திண்ணிய (தினைப்) புனத்திற் சென்று (அந்த அம்மையாரைக்) கண்டு வணங்கிய தலைவனே!

அந்த கன்க லங்க வந்து
[1] கந்த ரங்க லந்த [2] சிந்து
ரஞ்சி றந்து வந்[3]த லம்பு ரிந்தமார்பா-

அம்[4] பு னம்பு குந்த நண்பர்
சம்பு நன்பு ரந்த ரன்[5] த
ரம்ப லும்பர் [6] கும்பர் நம்பு தம்பிரானே(81)

## 97. அன்பு உற

வரியார் கருங்கண் மடமாதர்-
மகவாசை தொந்த மதுவாகி-
இருபோது நைந்து மெலியாதே;
இருதாளி **னன்பு** **தருவாயே-**
பரிபாலு னஞ்செய் தருள்வோனே;
பரமேசு ரன்ற னருள்பாலா-
அரிகேச வன்றன் மருகோனே-
**அலைவா** யமர்ந்த பெருமாளே.(82)

---

1. கந்தரம் - (அன்பர்களுடைய இருதயமாகிய) குகை.

2. சிந்துரம் - தெய்வயானை யம்மை.

3. அலம்-திருப்தி.

4. புனம் புகுந்த நண்பர் - அரண்யவாசிகளாகிய தபோதனர்கள்: நாரதர் எனலும் பொருந்தும். 56, 75, 152, 1261 எண்ணுள்ள பாடல்களைப் பார்க்கவும்.

5. தரம் பலும்பர் - தரம் பல் உம்பர் - தரம் பெற்ற பல வும்பர்கள்.

6. கும்பர் - கும்பமுநி.

யமன் (கிட்ட நெருங்குவதற்குக்) கலங்கி அஞ்சும்படியாக, (அருள் கூர்ந்து) வந்து (அன்பர்களுடைய இருதய) குகையிற் கலந்து (வீற்றிருந்தருளும்) தெய்வயானை-யம்மை சிறப்புடன் மகிழ்ந்து திருப்தியுடன் பொருந்தும் திருமார்பனே!

அழகிய (தினைப்) புனத்தில் (உன் பொருட்டுப்) புகுந்த உனது நண்பராம் (நாரதரும்), சிவனும், நல்ல இந்திரன் முதலான சிறப்புற்ற பல தேவர்களும், கும்ப முநிவராம் (அகத்தியரும்) விரும்புகின்ற தம்பிரானே!

(சதங்கை தங்கு பங்கயங்கள் தாராய்.)

# 97

ரேகைகள் உள்ள கரிய கண்களை உடைய மடப்பம் பொருந்திய மாதர்கள்,

குழந்தைகள் (என்கின்ற) ஆசையாகிய பந்தத்திலே (கட்டிலே) பட்டவனாகி;

(பகல் - இரவு) என்கின்ற இரண்டு பொழுதுகளிலும் மனம் நைந்துபோய் மெலிவு அடையாமல் —

(உனது) இரண்டு திருவடிகளின்மீது அன்பைத் தந்தருளு-வாயாக;

காத்து அளித்து அருள்வோனே!

பரமசிவன் தந்தருளிய குழந்தையே!

ஹரிகேசவராம் திருமாலின் மருகனே!

அலைவாய் (என்கின்ற) திருச்செந்தூரில் வீற்றிருந்தருளும் பெருமாளே!

(உன் இருதாளின் அன்பு தருவாயே.)

## 98. திருவடியைப் பெற

விந்ததி னூறி வந்தது காயம்
வெந்தது கோடி யினிமேலோ-

விண்டுவி டாம லுன்பத மேவு
விஞ்சையர் போல அடியேனும்;

வந்துவி நாச முன்கலி தீர
வண்சிவ ஞான வடிவாகி-

வன்பத மேறி யென்களை யாற
வந்தருள் பாத மலர்தாராய்;

எந்தனு ளேக செஞ்சுட ராகி
[1] யென்கணி லாடு தழல்வேணி-

எந்தையர் தேடு மன்பர்ச காய
ரெங்கள் சுவாமி யருள்பாலா;

[2] சுந்தர ஞான மென்குற மாது
தன்றிரு மார்பி லணைவோனே-

சுந்தர மான செந்திலில் மேவு
கந்தசு ரேசர் பெருமாளே. (83)

---

1. " ஆறு திரு எழுத்தும் கூறு நிலைகண்டு
நின்தாள் புகழுநர் கண்ணுட் பொலிந்தோய்" - கல்லாடம்.
"கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்
"அப்பர் - VI -47 - 1.

"கண்ணின் மிசை நண்ணி" - சம்பந்தர் 3 - 73 - 4.

2. 'சுந்தர...மாது' என்றதனால் வள்ளியின் பழைய நிலைப் பெயராகின்ற 'சுந்தரவல்லி' என்பது நினைவூட்டப்பட்டது. ஞானமென் குறமாது - '"ஞான குறமாதை' - திருப்புகழ் 987.

## 98

சுக்கிலத்தில் ஊறிவந்த உடல் (கோடி), வெந்த (உடல்) கோடி இனி மேலாவது —

(உன்னை விட்டு) நீங்காமலிருப்பதற்கு உன்னுடைய திருவடியை விரும்புகின்ற கற்றோர் (புலவர்) போல அடியேனும்;

(நல்வழிக்கு) வந்து, நாசமும் பழைய வினை என்கின்ற கேடும் தீரும்படி வளப்பம் பொருந்திய சிவஞான வடிவை அடைந்து —

நிலையான பதவியை அடைந்து (பிறப்பு - இறப்பு) என்னும் எனது களைப்பு நீங்க (நீ) வந்து திருவருளைப் பாலிக்கும் உனது திருவடி மலரைத் தந்தருளுவாயாக;

எனது உள்ளத்து உள்ளே ஒப்பற்ற ஒரு செஞ்சோதியாக விளங்கி, என் கண்களிற் பொலிந்து திகழும், நெருப்பு நிறமான சடைகளையுடைய,

என் தந்தையும், (தம்மைத்) தேடுகின்ற அன்பர்களுக்கு உதவுபவரும், எங்கள் சுவாமியுமான சிவபிரான் அருளிய குழந்தையே!

அழகும், ஞானமும், மென்மையும் உடைய குறமாது (வள்ளியின்) திருமார்பில் அணைபவனே!

அழகு திருச்செந்தூரில் வீற்றிருக்கும் கந்தனே! தேவேந்திரர்களுக்குப் பெருமானே!

(பாதமலர் தாராய்.)

# 99. திருவடியைப் பெற

வெஞ்ச ரோருக மோகடு நஞ்ச மோகய லோநெடு
வின்ப சாகர மோவடு வகிரோமுன்-

வெந்து போன புராதன [1] சம்ப ராரி புராரியை
வென்ற சாயக மோ [2] கரு விளையோகண்;

தஞ்ச மோயம தூதுவர் நெஞ்ச மோவெனு மாமத
சங்க மாதர் பயோதர மதில்மூழ்கு-

சங்கை யோவிரு கூதள கந்த மாலிகை தோய்தரு
தண்டை சேர்கழ லீவது மொருநாளே;

பஞ்ச பாதக தாருக தண்ட னீறெழ வானவர்
பண்டு போலம ராவதி குடியேறப்-

பங்க யாசனர் கேசவ ரஞ்ச லேயென மால்வரை
பங்க நீறெழ வேல்விடு மிளையோனே;

செஞ்ச டாடவி மீமிசை கங்கை மாதவி தாதகி
திங்கள் சூடிய நாயகர் பெருவாழ்வே-

சென்ப காடவி நீடிய துங்க மாமதிள் சூழ்தரு
* செந்தில் மாநகர் மேவிய பெருமாளே. (84)

---

1. சம்பரன் - மன்மதனாற் கொல்லப்பட்ட அசுரன். சம்பரனுக்கு அரி (பகைவன்) சம்பராரி (காமன்), புராரி-திரிபுரங்களுக்குப் பகைவன் (சிவன்).

2. "கண்ணெனக் கருவிளை மலர்"- ஐங்குறுநூறு: 464.

3. ஓவிரு - ஓவ இரு : ஓவ - நீங்க.

* 'சிங்கை மாநகர்' (பா - வே). சிங்கை என்பது காங்கேயம் -941 - 942 பாடல்களைப் பார்க்க.

## 99

விரும்பத் தக்க தாமரை மலரோ, கொடிய நஞ்சமோ, கயல்மீனோ, பெரிய இன்பக் கடலோ, மாவடுவின் பிளவோ, முன்னே —

வெந்து போன பழைய மன்மதன் சிவபிரான்மீது விட்டு வென்ற அம்போ, காக்கணம் (காக்கட்டான்) மலரோ - (அக்) கண்கள்

(யாரும்) அடைக்கலம் புகும் இடமோ! யமதூதுவர்களுடைய நெஞ்சமோ; என்னும்படியான அழகிய, பெருமை தரக் கூடிய, சேர்க்கையையே (நாடும் பொது) மகளிருடைய கொங்கைகளில் மூழ்குகின்ற

எண்ணங்கள் அழிய, (உனது) இரண்டு கூதள மலர்களின் நறுமண மாலை தோய்ந்துள்ள தண்டைகள் விளங்கும் திருக்கழலை (நீ) அளிப்பதாகிய ஒரு நாளும் (அடியேனுக்குக்) கிடைக்குமா?

(கொலை, பொய், களவு, கள்ளுண், குரு நிந்தை எனப்படும்) ஐந்து பெரும் பாதகங்களையும் செய்தவனாகிய தாரகாசுரன் என்னும் யமன் பொடியாம் படியும், தேவர்கள் தாம் முன்பு இருந்த படியே அமராவதி என்னும் தங்கள் ஊரில் குடியேறவும் —

தாமரை ஆசனத்துப் பிரமனும், திருமாலும் (முருகவேள் நமக்குத் துணை செய்வார்) அஞ்சாதீர்கள் என்று (தேவர்களுக்குத் துணிவு)கூற, மாயையில் வல்ல மலையாம் கிரௌஞ்சம் பங்கப்பட்டு (கேடு அடைந்து) பொடியாகும் படி வேலைச் செலுத்திய இளையோனே!—

செவ்விய சடைக் காட்டின் மேலே கங்கை, குருக்கத்தி, ஆத்தி, நிலா, இவைகளைச் சூடிய தலைவர் (சிவபிரான்) அருளிய பெருமை வாய்ந்த குழந்தையே!

செண்பக வனங்கள் நிறைந்துள்ளதும், உயர்ந்த சிறந்த மதில்கள் சூழ்ந்துள்ளதுமான (திருச்) செந்தூர் மாநகரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தண்டை சேர் கழலீவதும் ஒரு நாளே!)

---

உ

மூன்றாவது திருப்பதி

# திருவாவினன்குடி - பழநி

(ரெயில்வே ஸ்டேஷன். மதுரை ஜில்லா திண்டுக்கல்லிலிருந்து 35 மைல். வையாபுரி, ஷண்முக நதி, முதலிய தீர்த்தங்கள் உள. திருவாவினன்குடி கோயில் மலையடிவாரத்தில் இருக்கின்றது. பழநியாண்டவர் கோயில் மலைமேலிருக்கின்றது. பழநி ஊரிலும் சுப்பிரமணிய ஸ்வாமி கோயில் இருக்கின்றது. பழநிக்குச் சிவகிரி, சிவமலை எனவுந் திருநாமங்கள் உண்டு. "படிக்கின்றிலை பழநித் திருநாமம் படிப்பவர்தாள் முடிக்கின்றிலை" (கந்தரலங்காரம் - 75), "சிவமயமாம் நின் பழநி" (156), "பதினாலுலகோர் புகழ் பழநி" (170), "காசியின் மீறிய பழநியங்கிரி" (194), "அதிசய மநேகமுற்ற பழநிமலை" (214) என்பவற்றால் இத்தலத்துப் பெருமை விளங்கும். கிரிப்பிரதக்ஷணம் வரலாம். ஸ்தல புராண முண்டு.

## 1. திருவாவினன்குடி

### 100. அருள் பெற

*நாத விந்துக லாதீ நமோநம*
*வேத மந்த்ரசொ ரூபா நமோநம*
*ஞான பண்டித ஸாமீ நமோநம* வெகுகோடி-

நாம சம்பு குமாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
*நாக பந்தம யூரா நமோநம பரசூரர்;

*சேத தண்டவி நோதா நமோநம*
*கீத கிண்கிணி பாதா நமோநம*
*தீர சம்ப்ரம வீரா நமோநம* [1]கிரிராஜ

---

* 'நாக மஞ்சு மயூரா நமோநம' - (பா - வே)

1. கிரி ராஜன் - குறிஞ்சி வேந்தன்.

# 100

*நாதம் விந்து எனப்படும் கலைகளுக்கு மூலப் பொருளே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வேதங்கள், மந்திரங்கள் இவைகளின் வடிவாய் விளங்குபவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; ஞானபண்டித சாமியே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; †பலகோடிக் கணக்கான

திருநாமங்களை உடைய சிவபிரானின் மைந்தனே! உன்னை வணங்குகின்றேன்,வணங்குகின்றேன்; (உயிர்களுக்குப்) ‡போகத்தை ஊட்டும் பராகாச வடிவியாம் தேவி பார்வதியின் பாலனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்-பாம்பைக் காலில் அடக்கிக் கட்டியுள்ள மயில் வாகனனே! உன்னை வணங்குகின் றேன், வணங்குகின்றேன்-அன்னியராம் சூராதிகளைச்—

ப்சதித்து (அழித்துத்) தண்டித்த திருவிளையாடலைப் புரிந்தவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்கு-கின்றேன்; இசை யொலி காட்டும் கிண்கிணியை அணிந்த திருப் பாதங்களை உடையவனே! உன்னை வணங்கு-கின்றேன், வணங்குகின்றேன்; ஆண்மை நிறைந்த வீரனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; மலைகளுக்கு வேந்தனே!

---

*நாதம் - லிங்கம், விந்து-பீடம். நாதவிந்துகலாதி - என்பது இறைவன் பஞ்ச மூர்த்தியாய்ப் பஞ்ச கிருத்தியத் தலைவராய்த் திகழ்வதைக் குறிக்கின்றது.

"விந்துவும் நாதமும் மேவும் இலிங்கமாம்
விந்துவதே பீடம்; நாதம் இலிங்கமாம்,
அந்த இரண்டையும் ஆதார தெய்வமாய்
வந்த கருவைந்துஞ் செய்யும் மவையைந்தே"

- திருமந்திரம் 1757 -

†"ஈறிலா ஞானப் பேராயிரம் பேரினான்" - சம்பந்தர் III-26-5.

'எண்ணாயிரங்கோடி பேரார் போலும்'- அப்பர் VI-21-8.

‡"போகமே அரும்போகஞ் செய்யும் அருளே"-அபிராமி அந்தாதி 36.

தீப மங்கள ஜோதீ நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவ குஞ்சரி பாகா நமோ நம அருள்தாராய்;

ஈத லும்பல [1]கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு மறவாத-

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மநோகர
[2]ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா;

[3]ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி-

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்கு[4]வை காவூர் நனாடதில்
**ஆவினன் குடி** வாழ்வான தேவர்கள் பெருமாளே. (1)

---

1.கோலாகலம் என்பது கோலாலம் என்றாயிற்று; கோலாகலம் - சம்ப்ரமம்.

2. ராஜகெம்பிர நாடு - பாடல் 390 பார்க்க. இந்நாடு சோழ நாட்டின் ஒரு பகுதி - தக்க யாகப் பரணி - பக்கம் 381.

3. இங்குக் குறித்துள்ள வரலாறு:

ஆயிரத்து நூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவரும், தேவாரம் பாடினவருமான ஸ்ரீ சுந்தரமூர்த்திப் பெருமானுக்கு மிக உகந்த நண்பர் சேரமான் பெருமாள் என்னும் சேர அரசர். குடிகள் கழறுவன (சொல்வன) எல்லாம் தாம் இருந்த இடத்தே தமக்குத் தெரியும்படியான வரத்தை இவர் பெற்றிருந்ததால் இவருக்குக் "கழறிற்றறிவார் நாயனார்" என்றும் பெயர். இறைவன் அனுப்பின வெள்ளை யானையின் மீது சுந்தரர் கயிலைக்குச் சென்ற பொழுது தமது நண்பராம் சேரனை அவர் நினைத்தார். இதை அறிந்த சேரமான் உடனே ஒரு குதிரையின் மீதேறிச் சுந்தரர் ஏறிச் செல்லும் யானையை வலம்செய்து, சுந்தரருக்கு முன்னே கயிலையை அடைந்தார். இறைவனது ஆணையின்றிச் சென்றபடியாற் சேரமான் கயிலை வாயிலில் தடைபட்டு நிற்க வேண்டி வந்தது. அங்ஙனம் தடை பட்டு நின்ற

திரு விளக்குகள் காட்டும் மங்களகரமான ஜோதியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; பரிசுத்தமான பரவெளியில் விளையாடுபவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், தேவயானையைப் பக்கத்திற் கொண்டவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (உனது) திருவருளைத் தந்தருளுக.

(இரப்போர்க்கு) ஈதல் (கொடுத்தல்), பலவித விசேட பூசைகள், (நூல்களை)ஓதல்,(நல்ல) குணம், ஆசாரம், நீதி, கருணை, குருவின் அழகிய பாதசேவை - ஆகிய இவைகளை மறவாத (சோழ மண்டலத்தில்) உள்ளதும்,

ஏழு பூமியில் உள்ளோரும் புகழ்கின்ற காவேரி நதியால் செழிப்புற்று வளம் பெருகும் சோழமண்டலத்தில் உள்ளதுமான மனதுக்கு இன்பகரமான ராச கெம்பீரம் என்னும் நாட்டுப் பகுதியை ஆண்டருளும் நாயகனே! வயலூர் (அண்ணலே)!

(தம்மாட்டு) அன்புவைத்த திருவாரூரர் என்னும் (சுந்தரமூர்த்திப் பெருமானது) நட்பைக் கூடினவராய், அவருடன் *முன்பொருநாள், ஆடலில் வல்ல, விரும்பத்தக்க குதிரை மீதேறி மகா கயிலைக்குப் போய் (அங்கே) —

'ஆதி உலா' என்னும் அழகிய (கயிலாய ஞான) உலாவை ஆசுகவியாகப் பாடின சேரர் பெருமானாம் சேரமான் பெருமாளுக்கு உரித்தான கொங்கு மண்டலத்து வைகாவூர் என்னும் நாட்டுப் பகுதியில் இருக்கும் (திரு) **ஆவினன்குடி** என்னும் தலத்தில் வாழ்வு கொண்டிருக்கும் தேவர்கள் பெருமாளே!

(அருள்தாராய்.)

---

*கி.பி. 825 ல் என்ப.

## 101. அருள் பெற

போத கந்தரு கோவே நமோ நம
நீதி தங்கிய தேவா நமோ நம
பூத லந்தனை யாள்வாய் நமோ நம பணியாவும்-

பூணுகின்றபி ரானே நமோ நம
வேடர் தங்கொடி மாலா நமோ நம
போத வன்புகழ் ஸாமீ நமோ நம அரிதான;

வேத மந்திர ரூபா நமோ நம
ஞான பண்டித நாதா நமோ நம
வீர கண்டைகொள் தாளா நமோ நம அழகான-

மேனி தங்கிய வேளே நமோ நம
வான பைந்தொடி வாழ்வே நமோ நம
வீறு கொண்டவி சாகா நமோ நம **அருள்தாராய்;**

பாத கஞ்செறி சூராதி மாளவெ
கூர்மை கொண்டயி லாலே பொராடியெ
பார அண்டர்கள் வானாடு சேர்தர அருள்வோனே-

பாதி சந்திர னேசூடும் வேணியர்
சூல சங்கர னார்கீத நாயகர்
பார திண்புய மேசேரு சோதியர் கயிலாயர்;

---

காலத்தை வீணாக்காது, " திருக் கயிலாய ஞான உலா" என்னும் ஒரு பிரபந்தத்தை ஆசுகவியாகப் பாடிச், சுந்தரர் வந்தபின் அவர் உதவியால் இறைவனுடைய சந்நிதியை அடைந்து, அங்கே அந்த உலாவை அரங்கேற்றினார். இவ்வரலாற்றின் விரிவைப் பெரிய புராணத்திற் பார்க்க. தமிழ்மொழியில் உள்ள உலாக்களில் இதுவே காலத்தில் முந்தியதால், 'ஆதி உலா' என்றும், கயிலாயத்திற் பாடப்பட்டபடியாலும், கயிலை வள்ளலின் உலாவைக் கூறின படியாலும் 'கயிலாய ஞான உலாவைக் கூறினபடியாலும் 'கயிலாய ஞான உலா' என்றும் இவ்வுலா பெயர் பெறும்.

4. (வைகாவூர்) ஆவினன்குடி நாடு கொங்கு நாட்டெல்லைக்
[illegible] கொங்கு [illegible] சதகம், பக்கம் - 6.

# 101

ஞானோபதேசத்தைத் தந்த தலைவனே! உன்னை வணங்கு கின்றேன், வணங்குகின்றேன்; நீதிக்கு இருப்பிடமாகும் தேவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; பூமண்டலத்தை ஆள்பவனே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்- அணிகலங்கள் யாவையும் —

அணிகின்ற பெருமானே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வேடர் குலக் கொடியாம் வள்ளியிடம் ஆசை பூண்டவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (தாமரை) மலரில் வீற்றிருப்பவனாம் பிரமன் புகழ்கின்ற சாமியே! உன்னை வணங்கு கின்றேன், வணங்குகின்றேன்; அருமையான;

வேத மந்திரங்களின் வடிவு கொண்டவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; ஞான பண்டித நாதனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வீரக்கழலை அணிந்த திருவடியாய்! உன்னை வணங்கு கின்றேன், வணங்குகின்றேன்; அழகான —

திருமேனி விளங்கும் வேளே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; தேவருலகில் வளர்ந்த அழகிய தோள் வளை அணிந்த தேவசேனைக்கு நாயகனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வெற்றிப் பொலிவுகொண்ட விசாகனே! உன்னை வணங்கு கின்றேன், வணங்குகின்றேன்; உனது திருவருளைத் தந்தருளுக

பாதகம் நிறைந்த சூரனாதியர் இறந்து படும்படி கூரிய வேலா யுதத்தாலே போர் செய்து பெருமை பொருந்திய தேவர்கள் வானுலகிற் சேரும்படி அருள் புரிந்தவனே!

பாதி நிலவை அணிந்த சடையினர், சூலப்படை ஏந்திய சங்கரனார், இசைத் தலைவர், கனத்த திண்ணிய புயங்களைக் கொண்ட ஒளியினர்; கயிலாய மலையினர்;

ஆதி சங்கர னார்பாக மாதுமை
கோல அம்பிகை மாதா மநோமணி
ஆயி சுந்தரி தாயான நாரணி அபிராமி-

ஆவல் கொண்டு *விறாலே சிராடவெ
கோம ளம்பல சூழ்கோ யில்மீறிய
**ஆவினன்குடி** வாழ்வான தேவர்கள் பெருமாளே. (2)

## 102. பெண் மாயை விலக

வார ணந்தனை நேரான மாமுலை
மீத ணிந்திடு பூணார மாரொளி
வால சந்திர னேராக மாமுக மெழில்கூர-

வார ணங்கிடு சேலான நீள்விழி
யோலை தங்கிய வார்காது வாவிட
வான இன்சுதை மேலான வாயித ழமுதூறத்;

தோர ணஞ்செறி தார்வாழை யேய்தொடை
மீதில் நின்றிடை நூல்போலு லாவியெ
தோகையென்றிட வாகாக வூரன நடைமானார் -

தோத கந்தனை மாமாயை யேவடி
வாக நின்றதெ னாஆய வோர்வது
தோணி டும்படி நாயேனுள் நீயருள் தருவாயே;

கார ணந்தனை யோராநி சாசரர்
தாம டங்கலு மீறாக வானவர்
காவ லிந்திர னாடாள வேயயில் விடும்வீரா-

*விறாலே - வீறாலே.

ஆதி சங்கரனார் (எனப்படும் சிவபிரானது) பாகத்தில் விளங்கும் மாது, உமையம்மை, அழகிய அம்பிகை, மாதா, மனோன்மணி, ஆயி, சுந்தரி, (உயிர்கட்குத்) தாயான நாரணி, அழகி- (ஆகிய பார்வதிதேவி)

ஆசை பூண்டு பெருமையுடனே(உன்னைச்)சீராட்ட,அழகு பல கொண்ட திருக்கோயில் சிறந்து விளங்கும் திருவாவினன்குடியில் வாழ்வு கொண்டிருக்கும் தேவர்கள் பெருமாளே!

(அருள் தாராய்.)

## 102

யானைக்கு ஒப்பான பெரிய கொங்கைகளின் மேலே அணிந்துள்ள அணிகலனாம் முத்து மாலையின் பேரொளியும், இளநிலாவுக்கு ஒப்பான சிறந்த முகமும் அழகு மிக்குப் பொலியவும்,

நீண்ட, (காண்போர்க்கு) வருத்தம் தரவல்ல, சேல்மீன் போன்ற பெரிய கண்கள் ஓலை பூண்டுள்ள நீண்ட காதுகளைத் தாவி நிற்கவும், தேவரது இனிய அமுதத்தினும் மேலான வாயிதழ்கள் அமுதூறவும்;

(அலங்கார) தோரணத்துக்குப் பயன்படும் குலை தள்ளிய வாழையை நிகர்க்கும் தொடை மேலே விளங்கும் இடையானது நூலுக்கு ஒப்பாக விளங்கவும் - உலாவி, மயில் என்று சொல்லும்படி, அழகாக ஊர்ந்து செல்லும் அன்னத்துக்கு ஒப்பான நடையுடன் விளங்கும் மாதர்களின் —

வஞ்சகச் செயலை மகா மாயையே வடிவுகொண்டு நிற்கின்றதென ஆய்ந்து அறியும் அறிவு (எனக்கு) விளங்கும்படி அடியேனுடைய உள்ளத்தில் நீ அருள் பாலிப்பாயாக;

(ஏன் நம்மீது முருகவேள் படையெடுத்து வந்துள்ளார் என்னும்) காரணத்தை ஆய்ந்து அறியாத அசுரர்கள் எல்லாரும் முடிந்தழிய, தேவர்களுக்குக் காவலாய் நிற்கும் இந்திரன் தனது நாட்டை ஆள வேலைச் செலுத்திய வீரனே —

கார்வி டந்தனை யூணாக வானவர்
வாழ்த ரும்படி மேனாளி லேமிசை
காள கண்டம காதேவ னார்தரு முருகோனே

ஆர ணன்றனை வாதாடி யோருரை
ஓது கின்றென வாராதெ னாவவ
னாண வங்கெட வேகாவ லாமதி லிடும்வேலா-

ஆத வன்கதி ரோவாது லாவிய
கோபு ரங்கிளர் மாமாது மேவிய
**ஆவினன்குடி** யோனேசு ராதிபர் பெருமாளே.(3)

## 103. ஞானிகளோடு இணங்க

மூல மந்திர மோத லிங்கிலை
யீவ திங்கிலை நேய மிங்கிலை
மோன மிங்கிலை ஞான மிங்கிலை மடவார்கள்-

மோக முண்டதி தாக முண்டப
சார முண்டப ராத முண்டிடு
மூக னென்றொரு பேரு முண்டருள் பயிலாத !

கரிய நஞ்சை உணவாகத்,தேவர்கள் வாழும்படி முன்னாளில் உண்ட கரிய கழுத்தை உடைய மகா தேவனார் தந்தருளிய முருகனே!

(வேதம் படித்த) பிரமனொடு வாதாடி, ஒரு சொல்லுக்குப் (பிரணவத்துக்கு) உரை ஓதுக என்று (அவனைக்) கேட்க, அவன் பொருள் வாராது என்று கூறி (விழித்து நிற்க), அவனது ஆணவம் (நான் என்னும் செருக்கு) அழிய அவனைச் சிறையிலிட்ட வேலனே!

சூரியனின் கிரணங்கள் நீங்காது (எப்போதும்) வீசுகின்ற கோபுரம் விளங்குவதும் , லட்சுமி தேவி விரும்பி வாசம் செய்வதுமான (திரு) **ஆவினன்குடி**யில் வீற்றிருப்பவனே! தேவர் தலைவர்களின் பெருமாளே!

(மானார் மாயைவடிவெனத் தோணிடும்படி
நீ அருள் தருவாயே!);

## 103

மூல மந்திரமாகிய (ஆறெழுத்தை) ஓதுவது என்பது இங்கே (என்னிடத்தில் கிடையாது) ; ஈதல் (கொடுத்தல்) என்பது இங்கே (என்னிடத்தில்)கிடையாது; அன்பு என்பது இங்கே (என்னிடத்தில்) கிடையாது; (மனத்தை அடக்கும்) மௌன நிலை என்பது இங்கே (என்னிடத்தில்) கிடையாது; ஞானம் என்பது இங்கே (என்னிடத்தில்) கிடையாது; மாதர்கள் மீது.

மோகம் என்பது உண்டு; அதில் மிக்க தாகம் (வேட்கை) உண்டு; அதனால் செய்த அபசாரம் உண்டு; அதனால் வந்த அபராதம் உண்டு; (எல்லாரும்) இட்ட பேர் 'மூகன்' (கீழ்மகன்) என்று ஒரு பேரும் உண்டு (அல்லது பன்றி உருக்கொண்டு வந்த *மூகன் என்னும் அசுரன் இவன் என்கின்ற பேரும் உண்டு); (உனது) திருவருளிற் பயிலாத —

*அருச்சுனனது தவத்தைச் சோதிக்க வந்த வேட உருக்கொண்ட சிவபிரானாலும் அருச்சுனனாலும் கொல்லப்பட்ட (பன்றி உருவங்கொண்ட) அசுரன் மூகன் (மூகாசுரன்.)

கோல முங்குண வீன துன்பர்கள்
[1]வார்மை யும்பல வாகி வெந்தெழு
கோர கும்பியி லேவி ழுந்திட நினைவாகிக்-

கூடு கொண்டுழல் வேனை யன்பொடு
ஞான நெஞ்சினர் பாலி ணங்கிடு
கூர்மை தந்தினி யான வந்தருள் புரிவாயே;

பீலி வெந்துய [2]ராலி வெந்தவ
சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை
பீதி கொண்டிட வாது கொண்டரு ளெழுதேடு-

பேணி யங்கெதி ராறு சென்றிட
மாற னும்பிணி தீர வஞ்சகர்
பீறு வெங்கழு வேற வென்றிடு முருகோனே;

ஆல முண்டவர் சோதி யங்கணர்
பாக மொன்றிய வாலை யந்தரி
ஆதி யந்தமு மான சங்கரி குமரேசா-

ஆர ணம்பயில் ஞான புங்கவ
சேவ லங்கொடி யான பைங்கர
**ஆவினன்குடி** வாழ்வு கொண்டருள் பெருமாளே. (4)

---

1. வார்மை -ஒழுக்கம்.

2. ஆலி- குண்டிகை நீர்.

விளையாட்டுக் கோலமும், குணம் இழிவான துன்பச் செயலாளர்களின் ஒழுக்கமும் பலகூடி, வெந்து எழுகின்ற கோரமான [1]கும்பி பாகம் என்னும் நரகத்திலே விழுவதற்கே நினைவு கொண்டு —

இந்தக் கூடாகிய உடலைச் சுமந்து கொண்டு திரிகின்ற என்மீது அன்புவைத்து, ஞான நெஞ்சங் கொண்ட (பெரியோர்களுடன்) சேரும்படியான நுண்ணறிவை (எனக்குத்) தந்து இனி (என்னை) ஆளவந்து அருள்புரிவாயாக;

[2]மயிற் பீலியும் வெந்து, உயர்ந்துள்ள குண்டிகை நீரும் வெந்து கொதித்து, அசோகந் தளிர்களும் வெந்து (அந்த அவமானத்தால்) அமணர்கள் ஊமர்களாய் நெஞ்சிலே பயம் கொள்ளுமாறு வாது செய்து திருவருட் பெருக்கால் (பாசுரம்) எழுதின ஏடு —

[3]யாவரும் விரும்பும்படி அங்கு எதிர் ஏறி (வைகை) ஆற்றிற் செல்லவும், பாண்டியனும் நோய் தீர்ந்து குணம் பெறவும், (சமண) வஞ்சகர்கள் (உடலைக்) கிழிக்கின்ற கொடிய கழுமரத்தில் ஏறவும் வெற்றிகொண்ட முருகனே!

நஞ்சை உண்டவரும், முச்சுடர்களையும் அழகிய முக்கண்களிற் கொண்டவருமான சிவபிரானது பாகத்திற் பொருந்திய குமரி, பராகாச வடிவி, முதலும் ஈறுமாய் நிற்கும் சங்கரியின் குமரனாம் ஈசனே!

வேதங்கள் (போற்றிப்)பயில்கின்ற ஞான குருவே! சேவற்கொடி கொண்ட திருக்கரத்தனே! **திருஆவினன் குடியில்** வாழ்வு கொண்டருளும் பெருமாளே !

(ஞான நெஞ்சினர் பாலிணங்கிட அருள் புரிவாயே.)

---

1. கும்பி - கும்பிபாகம். இது ஏழு நரகங்களுள் ஒன்று; பாபம் செய்தவர்களைக் குயவனது சூளையிற் சுடுவதுபோல வாட்டுகின்ற நரகம்.

2. பாண்டியனுக்கு உற்ற சுரத்தின் வெப்பத்தால் அவன் அருகில் இருந்த சமணர்களின் மயிற்பீலி, குண்டிகை நீர், அசோகந்தளிர் யாவும் வெந்துபோயின என்பர்.

" பிண்டியும் தண்டும் பாயும் பீலியுங் குடையும் வெந்து ... கையிற்
குண்டிகை நீரும் நின்று கொதித்திடக் கண்டார் குண்டர்"

-திருவாலவாயுடையார் புராணம்.37-63.

"ஆலி வெந்து, பீலி வெந்து பாயும் வெந்து பிண்டியேற மண்டவே"

- தக்கயாகப் பரணி, 176.

3. பக்கம் 247 பார்க்க.

## 104. பூசைசெய்ய

வேயி சைந்தெழு தோள்கள் தங்கிய
மாதர் கொங்கையி லேமு யங்கிட
வீணி லுஞ்சில பாத கஞ்செய அவமேதான்-

வீறு கொண்டுட னேவ ருந்தியு
மேயு லைந்தவ மேதி ரிந்துள
மேக வன்றறி வேக லங்கிட வெகுதூரம்

போய லைந்துழ லாகி நொந்துபின்
வாடி நைந்தென தாவி வெம்பியெ
பூத லந்தனி லேம யங்கிய மதிபோகப்-

[1]போது கங்கையி னீர்சொ ரிந்திரு
பாத பங்கய மேவ ணங்கியெ
பூசை யுஞ்சில வேபு ரிந்திட அருள்வாயே;

தீயி சைந்தெழ வேயி லங்கையில்
ராவணன்சிர மேய ரிந்[2]தவர்
சேனை யுஞ்செல மாள வென்றவன் மருகோனே-

தேச மெங்கணு மேபு ரந்திடு
சூர்ம டிந்திட வேலின் வென்றவ
தேவர் தம்பதி யாள அன்புசெய் திடுவோனே;

ஆயி சுந்தரி நீலி பிங்கலை
போக அந்தரி சூலி குண்டலி
ஆதி யம்பிகை வேத தந்திரி யிடமாகும்-

---

1. " இட்டுக் கொள்வன பூவுள நீருள " - அப்பர் V -91-6.

2. அவர்- இஃது ஒருமையிற் பன்மை.

# 104

மூங்கிலுக்கு ஒத்ததாய் எழுந்துள்ள தோள்களைக் கொண்ட மாதர்களுடைய கொங்கையைத் தழுவவேண்டி, வீணாகச் சில பாதகச் செயல்களைச் செய்ய, பயனொன்றும் இல்லாமலே —

செருக்கு அடைந்து, வருந்தி, நிலை குலைந்து, வீணாகத் திரிந்து நெஞ்சம் கவலைகொண்டு, அறிவு கலங்க, வெகுதூரம் —

போய் அலைந்து, திரிந்து,மனம் நொந்து, பின்பு வாடி, நைந்து என்னுடைய ஆவி கொதித்து வாட (இப்) பூமியிலே ஆசை மயக்கம் கொண்ட புத்தி (என்னைவிட்டு) விலகிப்போய் —

மலரையும் கங்கை நீரையும் நிரம்பப் பெய்து (உனது) இரண்டு பாத தாமரைகளை வணங்கியே பூசை சில (நான்) செய்யும்படி அருள் புரிவாயே ;

நெருப்புப் பற்றி எழும்படி இலங்கையில் ராவணனுடைய தலைகளை அரிந்து அவனுடைய சேனைகள் தொலைந்து அழிய வென்ற திருமாலின் மருகனே!

அண்டம் எல்லாவற்றையும் ஆண்டுவந்த சூரன் மாளவேல் கொண்டு வென்றவனே! தேவர்கள் தங்களுடைய ஊரை ஆளும்படி (அல்லது தேவர்களின் தலைவனாம் இந்திரன் ஆளும்படி) அன்பு கொண்டவனே!

ஆயி(தாய்),சுந்தரி (அழகி), நீலி (நீல நிறம் படைத்த காளி), பிங்கலை (பொன்னிறம் படைத்தவள்), (உயிர்களுக்குப்) போகத்தை ஊட்டும் பராகாச வடிவினள், திரிசூலத்தைத் தரித்தவள், சுத்தமாயையாம் சத்தி, ஆதி, அம்பிகை, வேதநாற் பொருளானவள், (ஆகிய பார்வதி) இடது பாகத்தில் அமரும் —

---

செ. 103. 3. சமணரொடு வாது செய்து, சம்பந்தப் பெருமான் "வாழ்க அந்தணர் " என்னும் திருப்பாசுரம் எழுதின ஏடு வைகையாற்றில் எதிரேறி வெற்றி பெற்ற லீலையும், பாண்டியனது வெப்பு நோயும் கூனும் தீர்ந்த வகையும், சமணர் கழு ஏறினதுமான விவரங்கள் இங்குக் குறிக்கப்பட்டன. இதன் விரிவைப் பெரிய புராணத்திலும் திருவிளையாடற் புராணத்திலுங் காண்க.

ஆல முண்டர னாரி றைஞ்சவொர்
போத கந்தனை யேயு கந்தருள்
**ஆவினன் குடி** மீதி லங்கிய பெருமாளே. (5)

## 104-1. ஆண்டருள

*நாலி லங்கதின் மேல்வி நாயகன்
மூவி ரண்டினில் மேவு பூமக
னாத னுந்† தச மீது மாலிரு சடமீதே

நாம சங்கர னார்து வாதச
நாலி லங்கதி சேரனா **
** கண்டமி லாட மாயதி நெறிபோய;

** ** **

மூது ணர்ந்ததி யான பூரண
ஞான முண்டக மீதி லேறிய
மோன சுந்தர யோக நாயக **எனையாள்வாய்;**

கால கண்டக லோக பாரண
தாரு கன்பொடி யாக மால்வரை
‡கால வந்திட வீறு மாகள முதுபேய்கள்-

காக ளங்கள் தடாரி பேரிகை
தாரை பம்பை மலாரி யாகுளி
காய வண்ட மெலா முலாவிட விளையாடி;

---

* 'நாலு கங்களின்'- (பா-வே)

† "சத மீது" - (பா- வே)

‡ 'காலறுந்திட'- (பா- வே)

நஞ்சு உண்ட சிவபிரான் வணங்க ஒரு ஞானோபதேசத்தை மகிழ்ந்து அவருக்கு உபதேசித் தருளிய (பெருமாளே!) திருவாவினன்குடி என்னும் தலத்தில் விளங்குகின்ற பெருமாளே!

*(பூசையும் சிலவே புரிந்திட அருள்வாயே!)*

## 104-1

(குய்யத்துக்கும் குதத்துக்கும் மத்தியில் உள்ள) நான்கிதழ்த் தாமரையான மூலாதாரத்தில் வீற்றிருக்கும் விநாயக மூர்த்தியும், (மூலாதாரத்துக்கும் நாபிக்கும் இடையே) ஆறு இதழ்த் தாமரையான **சுவாதிஷ்டானத்தில்** வீற்றிருக்கும் பிரமதேவனும் (சுவாதிஷ்டானத்துக்கு மேலே நாபிப் பிரதேசத்தில்) பத்து இதழ்த் தாமரையாம் **மணி பூரகத்தில்** வீற்றிருக்கும் திருமாலும் - (அதற்கு மேலே) இரண்டு ஆறு (அதாவது பன்னிரண்டு) இதழ்த் தாமரையாம் —

[அனாகதமாம் (இருதய ஸ்தானத்தில்) வீற்றிருக்கும்] புகழ் கொண்ட ருத்திரனும், அனாகதத்துக்கு மேலே (12+4) பதினாறு இதழ்த் தாமரை வடிவதாய் அடி நாவில் (விசுத்தியில்) இருக்கும் மகேசுரனும் (இரண்டு இதழ்த் தாமரையாம் ஆஞ்ஞையில் இருக்கும் சதாசிவனுமாக). ஆறு ஆதார வழியே போய்

முற்றும் உணர்ந்த தியான மூர்த்தியான நிலையில் ஞான தாமரை யாசனத்தின் மீதே விளங்குகின்ற மௌன சுந்தர ரூபியான யோக நாயகனே ! எனை ஆண்டருளுவாயாக;

காலத்தை வென்றவனே! லோகங்களைத் திருப்தி செய்பவனே! தாரகாசுரன் அழியவும் , மாயைகள் செய்ய வல்ல (கிரௌஞ்ச) மலை தன் மாயைகள் வெளிப்பட்டு அழிய வந்திடவும், ஓங்கி யெழும் பெரும் போர்க்களத்தில் பழைய பேய்கள்,

எக்காளங்கள், உடுக்கை, முரசு, நீண்ட ஊதுகுழல், பறை, மல்லரிப் பறை, சிறுபறை, இவையெலாம் பொங்கி எழ, அண்ட மெல்லாம் உலாவி விளையாடி- அல்லது- ஆகாய அண்ட மெல்லாம் முழங்க விளையாடி

ஆல சுந்தரி காளி யோகினி
பூத சங்கமொ டாட மாதிரை
ஆழி வெந்திட நீடு வேல்விடு முருகோனே-

ஆசை கொண்டொரு வேட மோகினி
பாத பங்கய மீது வீழ்திரு
**ஆவினன் குடி** மேவு தேவர்கள் பெருமாளே (6)

## 105. நன்றி பாராட்டல்

கோல குங்கும கற்புர மெட்டொன்
றான சந்தன வித்துரு மத்தின்
கோவை செண்பக தட்பம கிழ்ச்செங் கழுநீரின்-

கோதை சங்கிலி யுற்றக ழுத்தும்
பூஷ ணம்பல வொப்பனை மெச்சுங்
கூறு கொண்டப ணைத்தனம் விற்கும் பொதுமாதர்;

பாலு டன்கனி சர்க்கரை சுத்தந்
தேனெ னும்படி மெத்தரு சிக்கும்
பாத கம்பகர் சொற்களி லிட்டம் பயிலாமே-

பாத பங்கய முற்றிட வுட்கொண்
டோது கின்றதி ருப்புகழ் நித்தம்
**பாடு மன்பது செய்ப்பதி யிற்றந்** **தவனீயே;**

தால முன்புப டைத்தப்ர புச்சந்
தேக மின்றிம திக்கவ திர்க்குஞ்
சாக ரஞ்சுவ றக்கிரி யெட்டுந் தலைசாயச்

நஞ்சை உண்ட சுந்தரி, காளி,யோகினி (எனப்படும் துர்கை) பூத கூட்டங்களொடு ஆட, பெரிய அலை வீசும் கடல் வெந்து போம்படி நீண்ட வேலாயுதத்தைச் செலுத்திய முருகனே!

ஆசை கொண்டு ஒப்பற்ற வேடர் குலத்து (மயக்கவல்ல அழகியாம்) வள்ளியின் பாத தாமரைகளின் மீது வீழ்ந்து வணங்கிய (பெருமாளே)! திரு ஆவினன்குடியில் வீற்றிருக்கும் (திரு **ஆவினன்குடியை** விரும்பும்) தேவர்கள் பெருமாளே!

(எனை ஆள்வாய்).

# 105

அழகிய குங்குமம், பச்சைக் கற்பூரம், நவமணிகள், தக்க சந்தனம், பவள வடங்கள், செண்பகப் பூ, குளிர்ந்த மகிழம் பூ, செங்கழுநீர்ப் பூ, (இவைகளால் ஆய)-

மாலை, சங்கிலி இவைகள் விளங்கும் கழுத்தொடு கூடியவராய், அணிகலன்களையும், பலவித அலங்காரங்களையும் மெச்சும் படியான தன்மையிற் கொண்ட (தமது) பருத்த கொங்கைகளை விற்கின்ற பொதுமகளிருடைய-

பால், பழம், சர்க்கரை, பரிசுத்தமான தேன் என்று சொல்லும் படியாக அதிகமாக ருசிக்கின்றவையும், பெரும் பாவமே தருகின்றவையுமான சொற்களில் (நான்) விருப்பங்-கொள்ளாமல் —

*(உனது) பாத தாமரைகளை (என் நெஞ்சிற்) பொருந்த உட்கொண்டு, (நான்) கூறிவரும் திருப்புகழ்ப் பாடல்களைத் தினந்தோறும் (தவறாமல்) பாடவேண்டும் என்ற அன்பை **வயலூரில்** (எனக்குத்) தந்தவன் நீயே!

உலகத்தை முன்பு படைத்த பிரபுவாகிய பிரமன் (தனது ஐயம் தீர்ந்து உண்மைப் பொருளை இவரால் அறிந்தேன் என்று உன்னை) மதிக்கவும், முழங்குகின்ற கடல் வற்றிப்போகவும் மலைகள் எட்டும் (எட்டுத் திசைகளில் உள்ள மலைகள் நிலைகுலையவும் —

---

*இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும்.

சாடு குன்றது பொட்டெழ மற்றுஞ்
சூர னும்பொடி பட்டிட யுத்தஞ்
சாத கஞ்செய்தி ருக்கைவி திர்க்குந் தனிவேலா;

ஆல முண்டக ழுத்தினி லக்குந்
தேவ ரென்புநி ரைத்தெரி யிற்சென்
றாடு கின்றத கப்பனு கக்குங் குருநாதா-

ஆட கம்புனை பொற்குடம் வைக்குங்
கோபு ரங்களி னுச்சியு டுத்தங்
**காவினன்குடி** வெற்பினி னிற்கும் பெருமாளே.

## 106. அருள் பெற

அபகார நிந்தைபட் டுழலாதே-
அறியாத வஞ்சரைக் குறியாதே;

உபதேச மந்திரப் பொருளாலே-
உனை நானினைந் தருட் பெறுவேனோ;

இபமாமுகன் தனக் கிளையோனே-
இமவான்மடந்தையுந் தமிபாலா;

ஜெபமாலை தந்த சற் குருநாதா-
**திருவாவினன்குடிப்** பெருமாளே. (7)

---

1. 'அபசார நிந்தை' என்ற சில பிரதிகளிலிருந்த போதிலும், 'அபகார நிந்தை ' என்றே பழம் பிரதிகள் பலவற்றிலும் உள்ளது.

(யாவரையும் சூழ்ச்சியிற்)கொன்ற கிரவுஞ்ச மலை தூளாகவும், சூரன் பொடிபடவும், போரிற் பயிற்சி கொண்ட திருக்கையை அசைத்துச் செலுத்திய ஒப்பற்ற வேலனே!

நஞ்சம் உண்ட கழுத்தில் ருத்ராக்க மாலைகளையும், தேவர்களுடைய எலும்பு மாலைகளையும் வரிசையாக அணிந்து, (சுடுகாட்டு) எரியிடையே சென்று ஆடுகின்ற தந்தையாம் சிவபிரான் மகிழுங் குருநாதனே !

பொன்னால் அலங்கரிக்கப்பட்ட அழகிய கலசங்கள் வைத்துள்ள கோபுரங்களின் உச்சியில் நட்சத்திரங்கள் தங்குகின்ற **திருஆவினன்குடி** மலையினில் நின்று விளங்கும் பெருமாளே!

(திருப்புகழ் நித்தம் பாடும் அன்பு தந்தவன் நீயே.)

# 106

(தீமைகள் செய்ததனால் நிந்தனைகளுக்கு ஆளாகி அலையாமலும்,)

(நன்னெறியை) அறியாத (கைக்கொள்ளாத) வஞ்சகர்களுடன் இணங்குவதைக் கருதாமலும்,

(நீ எனக்கு அருளிய) உபதேச மந்திரப் பொருளையே துணையாகக் கொண்டு,

உன்னை நான் நினைந்து (உனது திரு) அருளைப் பெற மாட்டேனோ!

யானையின் சிறந்த முகத்தையுடைய கணபதிக்குத் தம்பியே !

இமய ராஜன் மகளாம் (பார்வதி என்கின்ற) உத்தமியின் பிள்ளையே!

*ஜெபமாலை (ஒன்றை எனக்குத்) தந்த சற்குரு நாதனே! **திரு ஆவினன்குடி**ப் பெருமாளே!

(உனை நான் நினைந்து அருள் பெறுவேனோ!)

---

* இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும்.

## 107. புகழ்

கனமா யெழுந்துவெற் பெனவே யுயர்ந்துகற்
புர[1] மா ரணந்துளுத் திடுமானார்-

கனிவா யுகந்துசிக் கெனவே யணைந்துகைப்
பொருளேயிழந்துவிட் டயர்வாயே;

மனமே தளர்ந்துவிக் கலுமே யெழுந்துமட்
டறவே யுலந்துசுக் கதுபோலே-

வசமே யழிந்துவுக் கிடுநோய் துறந்துவைப்
பெனவே நினைந்துனைப் **புகழ்வேனோ;**

புனவேடர் தந்தபொற் குறமாது இன்புறப்
புணர்காதல் கொண்டஅக் கிழவோனே-

புனலேழு மங்கவெற் பொடுசூர் சிரங்கள்பொட்
டெழவே லெறிந்தவுக் கிரவீரா;

தினமேவு குங்குமப் புயவாச கிண்கிணிச்
சிறுகீத செம் பதத் தருளாளா-

சிவலோக சங்கரிக் கிறைபால பைங்கயத்
**திருவா வினன்குடிப்** பெருமாளே. (8)

---

*1.* மாரணம் -மந்திர வித்தையால் மரணத்தை உண்டுபண்ண எழும் கொலைக்கருவி; அஃதாவது இங்கே கொங்கை.

## 107

கனத்துடன் (பாரமாய்) எழுந்து, மலைபோல உயர்ந்து, பச்சைக் கற்பூரம் முதலிய அணிந்து , மரணத்தைத் தரவல்ல மந்திர வித்தை கொண்டது போலச் செழிப்புடன் வளரும் கொங்கைகளை உடைய மாதர்களின் —

(கொவ்வைக்) கனிபோன்ற (செவ்) வாயை மகிழ்ந்து, (அவர்களை) விடாது உறுதியாக அணைந்து, கைப்பொருள் எல்லாவற்றையும் இழந்துவிட்டுத், தளர்வடைந்து;

மனம் தளர்ந்து, விக்கல் எழுந்து, அளவின்றி (உடல்) அழிவுற்றுச், சுக்கு போலாகி,

என்வசம் அழிந்து (மயக்க அறிவு கொண்டு), மெலிவு தரும் நோயை (நான்) விலக்கி, (எனக்கு உள்ள) சேமநிதி (நீயே) என உணர்ந்து உன்னைப் புகழ மாட்டேனோ!

திணைப்புனத்து வேடர் தந்த அழகிய குறமகளாம் (வள்ளி) இன்பங் கொள்ளும்படி அவளைச் சேர்வதற்குக் காதல் கொண்ட அந்தக் கிழவனே! (அந்தக் கிழவேடம் பூண்டவனே! அல்லது அந்த உரிமை கொண்டவனே!)

கடலேழும் மங்கிப்போக, மலையொடு (ஏழு கிரியோடு) சூரனுடைய தலைகள் பொடிபட வேலாயுதத்தைச் செலுத்திய பெருங் கோப வீரனே!

நித்தமும் விரும்பத்தக்க குங்குமம் ஆதிய பூசப்பட்ட தோள் மணங் கொண்டவனே! கிண்கிணிகள் மெல்லிய இசைகளைக் காட்டும் செவ்விய திருவடிகளை உடைய அருளாளனே (கிருபாகர மூர்த்தியே!)

சிவலோகத்தில் உள்ள சங்கரிக்கு இறைவனாம் சிவனுடைய பிள்ளையே! பசிய நீர்நிலைகளையுடைய திருவாவினன்குடிப் பெருமாளே!

(வைப்பெனவே நினைந்து உனைப் புகழ்வேனோ!)

## 108. பெண்கள் மயக்கு அற

கார ணிந்தவரைப் பார டர்ந்துவினைக்
காதல் நெஞ்சயரத் தடுமாறிக்-

கான ரம்புதிரத் தோல்வ ழும்புறுபொய்க்
காய மொன்றுபொ றுத் தடியேனும்;

தாரி ணங்கு குழற் கூர ணிந்தவிழிச்
சாப மொன்றுநுதற் கொடியார்தம்-

தான்ப ணிந்தவர்பொற் றோள்வி ரும்பிமிகத்
தாழ்வ டைந்துலையத் **தகுமோதான்;**

சூர னங்கம் விழத் தேவர் நின்று தொழத்
தோய முஞ்சுவறப் பொரும்வேலா

தூய்மை கொண்டகுறத் தோகை நின்றபுனச்
சூழ்பெ ருங்கிரியிற் றிரிவோனே-

ஆரணன்கருடக் கேத னன் தொழமுற்
றால முண்டவருக் குரியோனே-

ஆலை யும்பழனச் சோலை யும்புடைசூற்
**முவி னன்குடியிற்** பெருமாளே.(9)

# 108

மேகங்களை அணிந்த மலைகள் உள்ள (இப்) பூமியில் மேல் மேலும் செறிவுற்றுப் பொருந்தி (அடிக்கடி பிறந்து) வினையைப் பெருக்கும் காதல் கொண்ட நெஞ்சச் சோர்ந்து தடுமாறி —

வாயு, நரம்பு, ரத்தம், தோல், கொழுப்பு (இவைகளொடு கூடிய) பொய்யான (இந்த) உடல் ஒன்றைச் சுமந்து, அடியேனாகிய நான்,

மாலை சேர்ந்த கூந்தலையும், கூர்மைகொண்ட கண்களையும், வில்லுக்கு ஒப்பான நெற்றியையும் உடையகொடி போன்ற மகளிருடைய (அல்லது பொல்லாராம் மகளிருடைய) —

தாள்களை வணங்கி, அவர்களுடைய அழகிய தோள்களை விரும்பி, மிகவும் கீழான நிலையை அடைந்து அழிந்து போவது தக்கதாமோ!

சூரனுடைய உடல் அழிந்து போகவும், தேவர்கள் நின்று தொழவும், (கடல்) நீர் வற்றவும் போர் செய்த வேலனே!

பரிசுத்தம் கொண்ட குற மயிலாம் வள்ளி நின்ற (தினைப்) புனங்கள் சூழ்ந்த பெரிய மலையாம் **(வள்ளி மலையில்)** திரிந்தவனே!

(வேதப்) பிரமனும், கருடக் கொடியோனாம் (திருமாலும்) தொழ, முழு நஞ்சை உண்ட சிவபிரானுக்கு உரியவனே !

வேள்விச் சாலைகளும், வயல்களும், சோலைகளும் பக்கங்களிற் சூழ்ந்துள்ள **திரு ஆவினன்குடியிற்** பெருமாளே !

(நான் தாழ்வடைந்து உலையத் தகுமோ!)

## 109. ஞானம் பெற

சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநாத-

சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலேவி ரும்பியுளம் நினையாமல்;

அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலு
மடியேனை அஞ்சலென வரவேணும்-

அறி[1]வாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே;

நவநீத முந்திருடி உரலோடெ யொன் றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே -

நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே;

[2]தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா -

1. ஆகம்- மனம். 2. தெவயானை- தேவயானை.

# 109

சிவபிரானது மனங் குளிரும்படியாக உபதேச மந்திரத்தை அவரது இரு செவிகளிலும் (அல்லது - *அவரது பெருமை பொருந்திய செவியில்) சொன்ன குருநாதனே!

சிவகாம சுந்தரியாம் (பார்வதியின்) மேன்மை பொருந்திய பிள்ளையே! கந்தனே! உனக்கு (அடிமை செய்யும்) தொண்டையே விரும்பி உள்ளத்தில் நினையாமல் —

கேடுதரக் கூடிய மாயையிற் பட்டு உலகிலே வீணாக அலைந்து திரியும் அடியேனை, 'அஞ்சாதே' எனக் கூறியருள (நீ) வரவேணும்;

அறிவு மனத்திற் பெருகி வரவும், இடர்களானவை தொலையவும், உனது திரு அருளாற் பெறக்கூடிய ஞான இன்பத்தைத் தந்து உதவியருளுக;

வெண்ணெயைத் திருடி உடலுடன் கட்டுப்பட்ட அரி, ரகுராம ராம் திருமால் உள்ளம் மகிழும் மருகனே!

[1]நவகண்ட பூமியில் உள்ளவர்கள் யாவரும் கைதொழுது வணங்கும் உண்மைத் தெய்வமே! அலங்காரமான நலம் தருவதான மாய வித்தையால் பிறப்புத் தோற்றங்கள் (பலவற்றைத்) தோற்றுவிக்கும் தலைவனே!

தேவயானை, அழகிய குறமின்னாள் (வள்ளி) இவ்விருவருக்கும் மணவாளனே! நிறைவு உற்ற திறல் வாய்ந்த வீரனே! மிக்க ஒளிவீசும் கூரிய வேலாயுதனே!

---

*இரு செவி- இருமை+ செவி, இருமை-பெருமை, 'பரமன திருசெவி களிகூர உரை செயும் ஒரு மொழி'- திருப்புகழ்-270; (பாடல் 702-ம் பார்க்க)

'குருபர நாதனாகி யானொரு காதில் ஓது- முருகோனே,-திருப்புகழ் *1276.*

(ஒரு-ஒப்பற்ற) 'தெக்ஷண செவிதனிலே போதனை யருள் குருநாதா'- திருப்புகழ் *1146.*

*தெக்ஷண செவி- வலது காது, உபதேசம் பெறுபவர் கிழக்கு முகமாக இருப்பாராதலின் - தெக்ஷண செவி- வலது காது ஆயிற்று.

*1.* நவலோகம்- பூமியின் பிரிவாய் அமைந்துள்ள ஒன்பது கண்டங் கள்; அவைதாம்- வடபால் விதேகம், தென்பால் விதேகம், கீழ்பால் விதேகம், மேல்பால் விதேகம், வடபா லிரேவதம், தென்பா லிரேவதம், வடபாற் பரதம், தென்பாற் பரதம், மத்திம கண்டம்- எனப் பிங்கல நிகண்டு கூறும்.

" நவகண்ட பூமிப் பரப்பை வலமாக வந்தும்"

- தாயுமானவர் -சின்மயா-*11.*

**திருவாவினன்குடியில்** வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே (10)

## 110. மயில்மீது காட்சி பெற

[1]பகர்தற்கரி தான செந்தமி ழிசையிற்சில பாட
லன்பொடு
பயிலப்பல காவி யங்களை யுணராதே-
பவளத்தினை [2]வீழியின்
கனியதனைப்பொருவாய்மடந்தையர்
[3]பசலைத்தன மேபெ றும்படி விரகாலே;
[4]சகரக்கடல் சூழு மம்புவி மிசையிப்படி யேதி ரிந்துழல்
சருகொத்துள மேய யர்ந்துடல மெலியாமுன்-
தகதித்திமி தாகிணங்கிண எனவுற்றெழு **தோகையம்பரி**
தனிலற்புத மாக **வந்தருள் புரிவாயே**,
[5]நுகர்வித்தகமாகு மென்றுமை மொழியிற்பொழி
பாலையுண்டிடு
நுவல்மெய்ப்புள பால னென்றிடு மிளையோனே-

---

1. " செப்பரிய தண்தமிழ்"- தேவாரம்- சம்பந்தர் - II-54-11.
2. " வீழியின் கனிவாயொரு மெல்லியல் "
-கம்ப ராமாயணம் - நீர் விளையாட்டு-28.
3. பசலை- தேமல்" பசலைசேர் முலை மங்கையர்"
-கந்தபுராணம்- இரணியன் யுத்தம் -56.
4. சகரக் கடல் - சாகரம் " சகரர் தொட்டலாற் சாகரம் எனப் பெயர் தழைப்ப " - கம்ப ராமா.- அகலிகை - 43.

சகரர்- அறுபதினாயிரவர்- பூமியைத் தோண்டிக் கபிலரது கோபத் தீயால் இறந்து பகீரதனால் நற்கதி பெற்றவர்கள்.

5. ஞானசம்பந்தர் உமை முலைப் பாலுண்ட வரலாற்றைப் பெரிய புராணத்திற் காண்க.

" எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
'உண்ணடிசில்' என ஊட்ட உமையம்மை"
-பெரிய புரா, திருஞான- 68.

சம்பந்தர் ஞானமும் வாய்மையும் புகழும் உடையார், "மெய்ப்புள-பாலன்"- என்பதற்குச் சான்று : -

"ஞானமார் ஞான சம்பந்தன்" - தேவார ம்பந்தர் -3-35-11.
"நீடு புகழ் ஞான சம்பந்தன்" - ஷெ- 5-69-11.
"சம்பந்தன் வாய்மைத்து இவை சொல்ல" -ஷெ-1-82-11.
" ஞானசம்பந்தன் வாய்மை பண்ணிய அருந்தமிழ்" - 3-3-11.
"ஞானசம்பந்தன் பொய்யிலி " - 3-104-11.

திரு ஆவினன்குடியில் எழுந்தருளியுள்ள வேளே! அழகனே! [1]உலகில் உண்மைப்பொருளைக் கண்டு தெரிவித்த திறம் வாய்ந்த பெருமாளே!

(அருள் ஞான இன்பமது புரிவாயே.)

## 110

சொல்லுதற்கு அருமையான செந்தமிழ் இசையிலே சில பாடல் களை அன்பொடு பயிலுதற்கு வேண்டிப் பல நூல் களையும் படித்து உணராமல் —

பவளத்தையும் வீழிப் பழத்தையும் நிகர்க்கும் வாயையுடைய மாதர்களின் தேமல் பரந்த கொங்கையைப் பெற விரும்பி ஊக்கத்துடனே;

சகர புத்திரர்களால் ஏற்பட்ட கடல் சூழ்ந்த அழகிய (இப்) பூமியில் இவ்வாறு நான் திரிந்து, அலைந்து, சருகு போன்று உள்ளம் சோர்வுற்று உடல் மெலிவதற்கு முன்னே —

'தக தித்திமி தா கிணங்கிண' என்னும் ஒலியுடன் வருகின்ற கலாபங் கொண்ட குதிரையாம் மயில்மீது அற்புதமாக எழுந்தருளி வந்து அருள்புரிவாயே!

'உண்ணுக, இது ஞானத்தைத் தரும்' என்று உமையம்மை மொழிந்து (பொற் கிண்ணத்திற்) பொழிந்து தந்த பாலை உண்டவனும், சொல்லப்படும் மெய்ப்பு (வாய்மை, புகழ்ச்சி) நிறைந்தவனுமான குழந்தை என்று பாராட்டப்படும் இளையோனே!

---

1. இது உருத்திர சன்மராய் முருகவேள் சங்கத்தார் கலகம் தீர்த்த திருவிளையாடலைக் குறிக்கலாம். 92 ஆம் பாடலைப் பார்க்கவும்.

[1]நுதிவைத்தக ராம லைந்திடு களிறுக்கரு ளேபுரிந்திட
நொடியிற்பரி வாக வந்தவன் மருகோனே;
[2]அகரப்பொருளாதி யொன்றிடு முதலக்கரமானதின் பொருள்
அரனுக்கினி தாமொ ழிந்திடு குருநாதா-
அமரர்க்கிறை யேவ ணங்கிய பழநித்திரு **வாவி னன்குடி**
அதனிற்குடி யாயி ருந்தருள் பெருமாளே. (11).

## 111. பொதுமகளிர்மேல் மயக்கம் அற

வஞ்சனை மிஞ்சிய மாய வம்பிகள்
வந்தவர் தங்களை வாதை கண்டவர்
வங்கண முந்தெரி யாம லன்புகள் பலபேசி-

மஞ்சமி ருந்தநு ராக விந்தைகள்
தந்தக டம்பி களூற லுண்டிடு
மண்டைகள் கண்டித மாய்மொ ழிந்திடு முரையாலே;

சஞ்சல முந்தரு மோக லண்டிகள்
இன்சொல்பு ரிந்துரு காத *தொண்டிகள்
சங்கம மென்பதை யேபு ரிந்தவ னயராதே-

தங்களில் நெஞ்சக மேம கிழ்ந்தவர்
கொஞ்சிந டம்பயில் வேசை முண்டைகள்
தந்தசு கந்தனை யேயு **கந்துடல் மெலிவேனோ;**

---

1. முதலை, இடங்கர்- கரா (ம்) - இவை மூன்றும் (முதலையின்) சாதி விசேடம். " கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்"- குறிஞ்சிப் பாட்டு 257. கரா- ஆண்முதலை (பிங்கலம்).

இந்திரத்துய்மன் அகத்தியர் இட்ட சாபத்தால் கஜேந்திரன் என்னும் யானையாயினவன். சாபத்தால் வேற்றுருக்கொண்டிருந்த முதலையின் வாயிற் கஜேந்திரன் சிக்கிக்கொண்டு, திருமாலை எண்ணி ஓலமிட, அவர் உடனே வந்து சக்கரத்தை ஏவி முதலையைக் கொல்வித்து யானையை மீட்ட வரலாறு இங்குக் குறிக்கப்பட்டுள்ளது.

2. அகரப்பொருளாதி ஒன்றிடு முதலக்கரம்- அகார உகார மகாராதிகள் அடங்கிய பிரணவம்.

* தொண்டியர்கள் - தாயுமானவர் -எந்நாட். 14.

நுனிக் கூர்மை கொண்ட (வாயை உடைய) ஆண் முதலை வலித்துப் போரிட்ட யானைக்கு (கஜேந்திரனுக்கு) அருள் புரிதற்பொருட்டு ஒரு நொடிப் பொழுதில் அன்புடனே வந்த திருமாலின் மருகனே!

அகார, உகார, மகாராதிகள் அடங்கிய முதலெழுத்தாம் (ஓம் என்னும்) பிரணவத்தின் பொருளைச் சிவபிரானுக்கு இனிமையாக உபதேசித்த குருநாதனே!

தேவர்களுக்குத் தலைவனாம் இந்திரன் வணங்கிப் (பூசித்த) பழநித் திருவாவினன்குடியிற் குடியாக வீற்றிருந்தருளும் பெருமாளே!

(தோகையம் பரிதனில் அற்புதமாக வந்தருள் புரிவாயே.)

## 111

வஞ்சனை மிகுந்த மாய வம்பு செய்வோர், (தம்மிடம்) வந்தவர்களைத் துன்புறுத்துவோர், (உண்மைக்) காதல் இல்லாமல் அன்பு வார்த்தைகள் பலபேசிக் —

கட்டிலில் அமர்ந்து கலவி வேடிக்கைகளைத் தந்த பொல்லார்கள், இதழ் ஊறலை உண்ணும் வேசையர், கண்டிப்புடன் பேசுகின்ற வார்த்தைகளால்;

கவலையைத் தருகின்ற மோகத் துர்நடத்தையர், இனிமையான சொற்களை (வெளியிற்) பேசி, உள்ளத்தில் உருக்கம் இல்லாத வேசையர்- (இத்தன்மையரது) இணக்கத்தையே விரும்பினவனாய் நான் மறவாமல் (எப்போதும்)

அவர்களிடத்தேயே, உள்ளம் களிப்புக் கொண்டவனாய், அவர்கள் கொஞ்சியும், நடம் புரிந்தும் வேசை முண்டைகளாய்த் தந்த சுகத்தையே விரும்பி உடல் மெலிந்து போவேனோ!

[1]கஞ்சன்வி டுஞ்சக டாசு ரன்பட
வென்றுகு் ருந்தினி லேறி மங்கையர்
கண்கள்சி வந்திட வேகலந்தரு முறையாலே-

கண்டும கிழ்ந்தழ காயி ருந்திசை
கொண்டுவி ளங்கிய நாளி லன்பொடு
கண்குளி ருந்திரு மால்ம கிழ்ந்தருள் மருகோனே;

குஞ்சர வஞ்சியு மான்ம டந்தையு
மின்பமி குந்திட வேய ணைந்தருள்
குன்றென வந்தருள் நீப முந்திய மணிமார்பா-

கொந்தவி ழுந்தட மேநி ரம்பிய
பண்பு தருந்திரு வாவி னன்குடி
குன்றுக ளெங்கினு மேவளர் ந்தருள் பெருமாளே.
(12)

# 2. சிவகிரி

## 112. பொதுமகளிர் உறவு அற

கறுத்த குழலணி மலரணி பொங்கப்
பதித்த சிலைநுத லணி[3] திலதம்பொற்
கணைக்கு நிகர்விழி சுழலெழு கஞ்சச் [4]சிரமான-

1. நந்தகோபாலரது வீட்டில் ஒரு சகடத்தின் (வண்டியின்) கீழ்க் கோடியிற் கிருஷ்ண பகவான் பள்ளிகொண்டிருந்தபோது கம்சனால் ஏவப்பட்ட அசுரன் ஒருவன் அந்த வண்டியிற் புகுந்து அவரைக் கொல்ல வர அவர் பாலுக்கு அழுகிற பாவனையில் அவ் வண்டியை உதைத்த மாத்திரத்தில் அது கவிழ அசுரன் மாண்டான் என்பது வரலாறு.

2. நீராடியிருந்த கோபிகாஸ்திரீகளின் ஆடையுடன் கண்ணபிரான் குருந்த மரத்தில் ஏறிய திருவிளையாடல்.

3. திலகம் - சுட்டி, பொட்டு.

4. சிரம் - கமுகு.

கம்ஸன் விட்ட சகடாசுரன் மாளும்படி வென்று, குருந்த மரத்தில் ஏறி, கோபிகாஸ்திரீகளின் கண்கள் சிவக்கும் படி அவர்களுடன் ஊடாடி அரிய வகைகளால்—

(அவர்களைப்) பார்த்தும், மகிழ்ந்தும், அழகாய் (உடன்) இருந்தும், இசைபாடி (அல்லது புகழுடன்) விளங்கின நாள்களில் அவர்கள்மீது அன்புடன் கண் குளிர்ந்த திருமால் மகிழ்ந்தருளும் மருகனே!

யானை (ஐராவதம் வளர்த்த) வஞ்சிக் கொடி போன்ற தேவ சேனையையும், மான் (பெற்ற) மடந்தையாம் வள்ளியையும் இன்பம் பெருகவே அணைந்தருளும் மலைபோல வந்தருளிய, கடப்ப மாலை முற்பட்டு விளங்கும், அழகிய மார்பனே!

பூங்கொத்துக்கள் மலரும் நீர்நிலைகள் நிரம்பிய அழகு விளங்கும் திரு. **ஆவினன்குடியில்** (உள்ள) குன்று-களின் எல்லா இடத்திலுமே விளங்கி வீற்றருளும் பெருமாளே!

(வேசை)கள்... சுகந்தனையே யுகந்து உடல் மெலிவேனோ.

## 112

கரிய கூந்தலில் அணியப்பட்ட மலர் வரிசை விளங்க, வில்லைப் போன்ற நெற்றியிற் பதித்துள்ள அழகிய பொட்டும் ஒளி பொருந்திய அம்புக்கு ஒத்துச் சுழற்சி கொண்டெழும் தாமரைக் கண்களும் கமுகுக்கு ஒத்த —

கழுத்தி லுறுமணி வளைகுழை மின்னக்
குவட்டு முலையசை படஇடை யண்மைக்
கமைத்த கலையிறு குறுதுவள் வஞ்சிக்
கொடிபோலச்;

சிறுத்த களமிகு மதமொழு கின்சொற்
குயிற்க ளெனமட மயிலெகி னங்கட்
டிருக்கு நடைபழ கிகள்கள பங்கச் சுடைமாதர்

[1]திகைத்த தனமொடு பொருள்பறி யொண்கட்
[2]குவட்டி யவர்வலை யழலுறு பங்கத்
திடக்கு தலைபுலை யவர்வழி யின்பைத் **தவிர்வேனோ;**

பறித்த [3]விழிதலை மழுவுழை செங்கைச்
செழித்த சிவபர னிதழிநல் தும்பைப்
[4]படித்த மதியற லரவணி சம்புக் குருநாதா-

பருத்த அசுரர்க ளுடன்மலை துஞ்சக்
கொதித்த அலைகட லெரிபட செம்பொற்
[4]படைக்கை மணியயில் விடுநட னங்கொட் கதிர்வேலா

தெறித்து விழியர வுடல்நிமி ரம்பொற்
[5]குவட்டொ டிகைகிரி பொடிபட சண்டச்
சிறப்பு மயில்மிசை பவுரிகொ ளும்பொற் றிருபாதா-

சிறக்கு மழகிய திருமகள் வஞ்சிக்
குறத்தி மகளுமை மருமகள் கொங்கைச்
சிலைக்கு ளணைகுக [6]**சிவமலை** கந்தப்
பெருமாளே (13)

---

1. திகைத்த தனமொடு - (ஆடவரைத்) திகைப்பித்த தன்மையோடு.

2. குவட்டி - இது கோட்டி என்பதன் மரூஉ.

3. விழி தலை - விழிகளோடு கூடிய பிரமகபாலம்.

4. படித்த - படிந்த: அஃதாவது அமைந்த. அறல் - நீர் (கங்கை).

5. குவட்டொ டிகைகிரி - குவட்டு ஒள் திகைகிரி.

6. சிவமலை - இடும்பன் காவடியாகக் கொண்டு வந்த சிவமலை சத்திமலைகளுள் - முருகன் வீற்றிருக்கும் பழநிமலை - சிவமலை.

கழுத்தில் உள்ள மணியும், வளைகளும், குழைகளும் ஒளி வீச, மலையன்ன கொங்கைகள் அசைய, இடையானது அதன் அருகில் உள்ள பாம்பின் படம் போன்ற அல்குலுக்கு அமைத்த சேலை இறுகக் கட்டப்பட்டதால் நெளிகின்ற வஞ்சிக்கொடி போலத் (துவள) —

மெல்லிய கழுத்திலிருந்து பொங்கி எழும் (காம) மதம் ஒழுகும் இன்சொற்கள் குயிலின் குரல்போல் ஒலிக்க, அழகிய மயில், அன்னம் இவைகளின் நடைபோலக் காணப்படும் நடையைப் பழகுபவரும், கலவைச் சாந்து படும் ரவிக்கை (முலைக் கச்சு) அணிந்தவருமான மாதர்கள் —

ஆடவரைத் திகைப்பிக்கும் ஆற்றலோடு (அவர்களுடைய) பொருளைப் பறிக்கும் ஒளி பொருந்திய கண்களை வளைத்துத் தம்முடைய வலையாகிய நெருப்பு ஒத்த இடரில் திடமாக வீழ்தலைப் புரியவல்ல இழிந்த தன்மையருமான மாதர்கள் - (ஆகிய இவருடைய) வழியிற் (செல்வதாற்) கிடைக்கும் இன்பத்தை ஒழியேனோ!

பறிக்கப்பட்ட விழியொடு கூடிய பிரம கபாலம், மழு, மான் (இவைகளை ஏந்திய) திருக்கைகள் விளங்கும் சிவபிரானுக்கு - கொன்றை, நல்ல தும்பை, பொருந்திய நிலா, நீர், (கங்கை) பாம்பு இவைகளை அணிந்த சம்புவுக்குக் - குருநாதனே!

பருத்த அசுரர்களுடன் (கிரௌஞ்சம், எழுகிரி ஆகிய) மலைகள் மடியவும், கொதித்த அலைவீசும் கடல் எரியவும், செவ்விய அழகிய படைகளை ஏந்தும் திருக்கர த்தினின்று மணிகட்டிய வேலாயுதத்தைச் செலுத்தி (வெற்றி) நடனங்கொண்ட கதிர்வேலனே!

(கண்) தெறித்து ஆதிசேடனது உடல் நிமிரவும், அழகிய ஒளி பொருந்திய சிகரங்களை உடைய ஒள்ளிய திசைக் கிரிகளும் பொடிபடும்படியாக வேகமாகச் செல்லும் சிறப்பு வாய்ந்த மயில் மீதேறி (உலகை) வலம் வந்த அழகிய திருப் பாதனே!

சிறந்த அழகு பொருந்திய லக்குமியின் மகள், வஞ்சிக்கொடி போன்ற குறமகள், உமையின் மருமகள் ஆகின்ற வள்ளியின் கொங்கை மலையை அணையுங் குகனே! **சிவமலையில்** வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

(புலையவர் வழி இன்பத்தைத் தவிர்வேனோ.)

## 113. நன்றி பாராட்டல்

தனந்த தனதன தனதன தனதன
தனந்த தனதன தனதன தனதன
தனந்த தனதன தனதன தனதன தனதான

குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல் [1]நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலக்-

[2]குடின்பு குதுமவ ரவர்கடு கொடுமையர்
இடும்ப ரொருவழி யிணையிலர் கசடர்கள்
குரங்க ரறிவிலர் நெறியிலர் மிருகணை விறலான;

சரம்ப ருறவனை நரகனை துரகனை
இரங்கு கலியனை பரிவுறு சடலனை
சவுந்த ரிகமுக சரவண பதமொடு மயிலேறித்-

[3]தழைந்த சிவசுடர் தனையென மனதினில்
அழுந்த வுரைசெய வருமுக நகையொளி
தழைந்த நயனமு **மிருமலர் சரணமு மறவேனே;**

[4]இரும்பை வகுளமொ டியைபல முகில்பொழி
லுறைந்த குயிலளி யொலிபர விடமயி
லிசைந்து நடமிடு மிணையிலி புலிநகர் வளநாடா-

இருண்ட குவடிடி பொடிபட வெகுமுக
டெரிந்து [5]மகர [6]மொ டிசைகரி [7]குமுறுக
இரைந்த அசுரரொ டிபபரி யமபுரம் விடும்வேளே;

---

1. நெதி - நேதி. இது நியதி என்பதன் மரூஉ. நியதி - முறைமை.

2. குடின் புகுதும் - குடி புகுதும்.

3. இது அருணகிரியார் வரலாற்றைக் கூறும்.

4. இரும்பை - இருப்பை; அஃதாவது இலுப்பை மரம்.

5. மகரம் - மகரமீனுக் கிடமாகிய கடல் - இஃது ஆகுபெயர்.

6. ஒடிசை - ஒள்திசை. 7. குமுறுக - குமுற.

## 113

கூடாகிய உடல் (அதில்) மலம், சலம், கெட்ட வழுக்குந் தன்மை உடைய கொழுப்புடன் எலும்பு, பொருந்திய சரிகின்ற சதை, ஈரல், குடல், முறை குலைந்த நோய்வாய்ப்பட்ட மயிர், ரத்தம் இவையொடு பல ஆபாசங்களிலும் —

குடி புகுந்துள்ள அவரவர் (ஐவர்) பொல்லாத கொடுமை யாளர்கள், அகந்தை கொண்டவர்கள், ஒரு வழியிற் பொருந்திப் போகாதவர்கள், குற்றமுள்ளவர்கள், குரங்குபோலச் சேட்டை செய்பவர்கள், அறிவில்லாத வர்கள், ஒழுக்கம் இல்லாதவர்கள், மிருகத்துக்கு ஒத்த வலிமை வாய்ந்த —

விட குணங் கொண்டவர்களோடு உறவு கொண்டவனும், நரகத்துக்கு வாய்த்தவனும், மனம் போனவழி குதிரைபோல ஓடுபவனும், அழுது ஏங்கும் வறியவனும், உடலின்மேல் மிக்க அன்பு கொண்டவனும் (ஆகிய என்பொருட்டு) அழகிய முகத்தவனே! சரவணனே! (நீ) அழகொடு மயிலில் ஏறி —

செழிப்புடன் பூரித்த சிவ ஒளியை எனது மனத்தினில் அழுந்தும்படியாக உபதேசிக்க வந்த (திரு) முக நகைபூத்த ஒளியையும், குளிர்ந்த திருக் கண்களையும், இணைமலர்த் திருவடிகளையும் (நான்) மறவேன்.

இலுப்பை மரம், மகிழமரம் இவையொடு கூடிய மேகம் தங்கும்பல சோலைகளிலும் உறைகின்ற குயிலும் வண்டும் (பாட்டு) ஒலியைப் பரப்ப அதற்குத்தக மயில்கள் ஒத்து நடமிடுகின்ற இணையில்லாத புலி நகர் (சிதம்பரம்) உள்ள வளப்பம் பொருந்திய நாட்டுக்கு உரியவனே!

இருள் சூழ்ந்த மலையாம் கிரௌஞ்சம் இடிந்து பல சிகரங்களும் பொடியாக, மகர மீன் நிறைந்த கடல் தீக்கொள்ள, ஒள்ளிய திசைகளில் உள்ள (அஷ்ட) கஜங்களும் கலங்கிப் பிளிற, ஆர்ப்பரித்து வந்த அசுரர்களோடு அவர்கள் தம் யானைப் படைகளையும், குதிரைப்படைகளையும் யமலோகத்துக்கு அனுப்பின வேளே!

சிரம்பொ னயனொடு முநிவர்க ளமரர்கள்
அரம்பை மகளிரொ டரகர சிவசிவ
செயம்பு வெனநட மிடுபத மழகியர் குருநாதா-

செழும்ப வளவொளி நகைமுக மதிநகு
சிறந்த குறமக ளிணைமுலை புதைபட
செயங்கொ டணைகுக **சிவமலை** மருவிய
பெருமாளே. (14)

## 114. பொதுமகளிர் மேல் மயல் அற

தனதனன தத்த தந்த தனதனன தத்த தந்த
தனதனன தத்த தந்த தனதான

களபமுலை யைத்தி றந்து தளவநகை யைக்கொ ணர்ந்து
கயலொடுப கைத்த கண்கள் குழைதாவக்-

கரியகுழ லைப்ப கிர்ந்து மலர்சொருகு[1]கொப்ப விழ்ந்து
கடியிருளு டுக்கு லங்க ளெனவீழ;

முழுமதி யெனச்சி றந்த நகைமுக மினுக்கி யின்ப
முருகிதழ்சி வப்ப நின்று விலைகூறி-

முதலுளது கைப்பு குந்து அழகுதுகி லைத்தி றந்து
முடுகுமவ **ருக்கி ரங்கி** **மெலிவேனோ;**

இளமதி கடுக்கை தும்பை அரவணி பவர்க்கி சைந்து
இனியபொரு ளைப்ப கர்ந்த குருநாதா-

இபமுகவ னுக்கு கந்த இளையவ மருக்க டம்ப
**[2]எனதுதலை யிற்பதங்க** **ளருள்வோனே;**

---

1. கொப்பு - கோப்பு.

2. இது அருணகிரியார் வரலாற்றைக் கூறும்.

உயர்ந்த பொன் நிறங்கொண்ட பிரமனும், முநிவர்களும், தேவர்களும், அரம்பை மகளிரும் ஹரஹர சிவசிவ! சுயம்பு மூர்த்தியே! எனப் புகழத் (திரு) நடனம் செய்கின்ற திருவடி அழகராம் சிவனுக்குக் குருநாதனே!

செழித்த பவள ஒளியும், நிலவைப் (பழித்துச்) சிரிக்கும் சிரித்த முகமும் சிறப்புடன் அமைந்த குறமகளாம் வள்ளியின் இணை முலைகள் (மார்பில்) அழுந்தும் வண்ணம் வெற்றிகொண்டு அவளை அணைந்த குகனே! **சிவமலை** மருவிய பெருமாளே!

(தழைந்த நயனமும் இருமலர் சரணமும் மறவேனே!)

## 114

கலவைச் சாந்து அணிந்த கொங்கையைத் திறந்து, முல்லை மலர்ஒத்த பற்களைக் காட்டி, கயல்மீனோடு மாறுபட்டு (விளங்கும்) கண்கள் (காதுகளில் உள்ள) குழைகளைத் தாவி எட்ட —

கறுத்த கூந்தலை வாரி ஒழுங்குபடுத்தி, மலர்கள் சொருகப்பட்ட கட்டு கலைவதால் - இருளை நீக்கும் நட்சத்திரக் கூட்டங்களைப்போலச் சிந்த,

பூரண சந்திரன்போலச் சிறந்த ஒளி பொருந்திய முகத்தை மினுக்கி இன்பம் தரும் வாசனையுள்ள இதழ்கள் சிவக்கும்படி நின்று விலை பேசி —

(வந்தவனது) மூலதனமெல்லாம் தனது கையிற் புக வைத்த பின்னர் அழகிய புடைவையைத் திறந்து நெருங்கும் அவ்வேசையருக்கு ஈடுபட்டிரங்கி மெலிந்து நிற்பேனோ!

இளம்பிறை, கொன்றை, தும்பை, பாம்பு அணியும் சிவபிரானுக்கு இணங்கி (அவருக்கு) இனிமை வாய்ந்த (மூலப்) பொருளை உபதேசித்த குருநாதனே!

யானைமுகக் கணபதிக்குப் பிரியமான தம்பியே! வாசனையுள்ள கடப்ப மாலை அணிபவனே! எனது தலையில் திருவடியைச் சூட்டியவனே!

[1]குழகென எடுத்து கந்த உமைமுலை பிடித்த ருந்து
குமர [2]சிவ வெற்ப மர்ந்த குகவேலா-
குடிலொடு மிகச்செ றிந்த இதணுள புனத்தி ருந்த
குறவர்ம களைப்பு ணர்ந்த பெருமாளே (15)

## 115. அருள் பெற

தந்தம் தந்தம் தந்தம் தந்தம்
தனதன தனதன தனதன தனதன
....... ....... ....... தனதான

[3]குன்றுங் குன்றுஞ் செண்டுங் கன்றும்
படிவளர் முலையினில் ம்ருகமத மெழுகியர்
இந்துஞ் சந்தத் தங்குந் தண்செங்
கமலமு மெனவொளிர் தருமுக வநிதையர்
கொஞ்சுங் கெஞ்சுஞ் [4]செஞ்சும் வஞ்சஞ்
சமரச முறவொரு தொழில்வினை புரிபவர் விரகாலும்-
கும்பும் பம்புஞ் சொம்புந் தெம்புங்
குடியென வளர்தரு கொடியவர் கடியவர்
எங்கெங் கெம்பங் கென்றென் றென்றுந்
தனதுரி மையதென நலமுட னணைபவர்
கொஞ்சந் தங்கின் பந்தந் தெந்தன்
பொருளுள தெவைகளு நயமொடு கவர்பவர் மயலாலும்;
என்றென் றுங்கன்[5]றுந்துன் புங்கொண்
டுனதிரு மலரடி பரவிட மனதினில்
நன்றென் றுங்கொண் டென்றுஞ் சென்றுந்
தொழுமகி மையினிலை யுணர்வினி னருள்பெற
இன்பும் பண்புந் தெம்புஞ் சம்பந்
தமுமிக வருள்பெற விடைதரு விதமுன மருள்வாயே;

---

1. குழகு - குழந்தை. 2. சிவவெற்பு என்பது பழநி.

3. குன்றுங் குன்றும்படி, செண்டுங் கன்றும்படி எனத் தனித்தனி இயைக்க.

4. செஞ்சும் - செய்தும் என்பதன் மரூஉ.

5. கன்றுதலையுந் துன்பத்தையுங் கொண்டேன். கொண்டு - கொண்டேன்.

குழந்தை என்று எடுத்து மகிழ்ந்த உமையின் திருமுலைகளைப் பற்றி (ப்பால்) உண்ட குமரனே! சிவமலையில் அமர்ந்த குகனே! வேலனே!

சிறு குடிசைக்கு (அயலே) மிகவும் நெருங்கி நின்ற பரண் அமைந்த (தினைப்) புனத்திலிருந்த குறவர் மகள் (வள்ளியைப்) புணர்ந்த பெருமாளே.

(வேசையர்க்கு இரங்கி மெலிவேனோ!)

# 115

குன்றும் குன்றும்படியும் செண்டும் கன்றும்படியும் வளர்கின்ற முலையில் கஸ்தூரிக் கலவை பூண்பவர்; நிலாப் போலவும் அழகு தங்கும் குளிர்ந்த செந்தாமரை போலவும் விளங்குகின்ற முகத்தை உடைய மாதர்கள்; கொஞ்சுதல், கெஞ்சுதல் செய்து வஞ்சகமாக ஒற்றுமை வரும்படியான ஒப்பற்ற செயல்களைப் புரிபவர் - (ஆகிய வேசையர் தம்) சூழ்ச்சியாலும் —

கும்பல் கூடியிருத்தல், வேடிக்கை, அழகு, அகம்பாவம் (இவ்விலக்கணங்கள்) தம்முட் குடியாக வளர்ந்துள்ள பொல்லார்கள், கடுமையுள்ளவர்கள், எங்கே எங்கே எமக்கு (உரிய பங்கு என்று அடிக்கடி கூறி எப்போதும் தமக்குச் சொந்த மென நலம்பேசி அணைபவர்; கொஞ்சமே உள்ள இன்பத்தைத் தந்து எனக்குள்ள பொருள்கள் அனைத்தையும் நய (வஞ்சனையால்) கவர்ந்துகொள்பவர்கள் (ஆகிய வேசையர்மீதுள்ள) காம இச்சையாலும் —

எஞ்ஞான்றும் மனம் கன்றி நொந்து போதலையும் துன்பத்தையும் கொண்டு(ள்ள) நான் உனது அழகிய இணைமலரடிகளைப் பரவுதல் நல்லதென்று மனத்தினில் அறிந்து, என்றும் (உனது திருக்கோயிலுக்குச்) சென்று தொழுகின்ற பெருமையின் பண்பை என் அறிவினில்நின் அருளால் நான் பெறவும், (அங்ஙனம் உணர்வதால்) இன்பமும், நற்பண்பும், உற்சாகமும் சேர்ந்து நிரம்பும் படியான அருளைப் பெறவும், நீ அனுமதிக்கும்படியான வழியை முன்னதாக அருள்புரிவாயாக;

[1]எங்குங் கஞ்சன் வஞ்சன் கொஞ்சன்
அவன்விடு மதிசய வினையுறு [2]மலகையை
வென்றுங் கொன்றுந் துண்டந் துண்டஞ்
செயுமரி யொருமுறை யிரணிய வலனுயிர்
நுங்குஞ் சிங்கம் [3]வங்கந் தன்கண்
துயில்பவ [4]னெகினனை யுதவிய கருமுகில் மருகோனே;

[5]ஒன்றெ ன் றென்றுந் துன்றுங் குன்றுந்
தொளைபட மதகரி முகனுடல் நெரிபட
டுண்டுண் டுண்டுண் டிண்டிண் டிண்டிண்
டிடியென விழுமெழு படிகளு மதிர்பட
ஒண்சங் கஞ்சஞ் சஞ்சஞ் சஞ்சென்
றொலிசெய மகபதி துதிசெய அசுரரை யடுவோனே;

உந்தன் தஞ்சந் தஞ்சந் தஞ்சஞ்
சிவனருள் குருப்ர வெனமுநி வரர்பணி
யுந்தொந் தந்தொந் தந்தொந் தந்தென்
றொலிபட நடமிடு பரனரு ளறுமுக
உண்கண் வண்டுங் கொண்டுந் தங்கும்
விரைபடு குரவல ரலர்தரு மெழில்புனை புயவீரா;

[6]அன்றென் றொன்றுங் கொண்டன் பின்றங்
கடியவர் தமையிகழ் சமணர்கள் கழுவினில்
அங்கஞ் சிந்தும் பங்கந் துஞ்சும்
படியொரு தொகுதியி னுரைநதி யெதிர்பட
அன்பின் பண்பெங் குங்கண் டென்பின்
அரிவையை யெதிர்வர விடுகவி புகல்தரு திறலோனே-

---

1. ஏங்கும் என்பது குறுகிற்று.

2. விஷப்பால் ஊட்டிக் கண்ணபிரானைக் கொல்லும்படி கம்சனால் அனுப்பப்பட்ட பேய் (அரக்கி): 'பேய் மகள் கொங்கை நஞ்சுண்ட பிள்ளை' பெரிய திருமொழி 3-3-2.

3. தோணிபோற் கடலிற் கண்வளர்பவன்; வங்கம் - தோணி.

4. எகினன் - அன்னவூர்தியாகிய பிரமன்.

5. ஒன்றென்ற என்றுந் துன்றுங் குன்று - ஒன்றாகிய சூரிய மண்டலத்தை யளாவுங் கிரவுஞ்ச கிரி: என்று - சூரியன்.

6. அன்றென்ற ஒன்றுங்கொண்டு அன்பின்று - பிற பதங்கள் முத்திவழியன்று என்ற ஒன்றை மாத்திரங்கொண்டு அன்பில்லாமல்: அத்திநாத்தியென்ற ஒன்றையே கொண் டென்றாலும் பொருந்தும்.

கவலைகொண்டு ஏங்கியிருந்த கம்சனாம் வஞ்சகன், அற்பன்- அனுப்பின அதிசயச் செயலை உடைய (பூதனை என்னும்) பேயை வென்று, கொன்று, துண்டம் துண்டமாகச் செய்த ஹரி; ஒரு காலத்தில் இரணியன் என்னும் வலியவனுடைய உயிரை உண்ட (நர) சிம்ம வடிவினர், (ஆதிசேடனாம்) தோணிமீது (கடலில்) துயில் கொள்பவர், அன்னவாகனம் கொண்ட பிரமனை ஈன்ற கரிய மேகம் போன்றவர் - ஆன - திருமாலின் மருகனே!

ஒன்றாகிய சூரிய மண்டலத்தை அளாவும் கிரவுஞ்ச மலை தொளைபட, யானை முகத்தைக் கொண்ட தாரகாசுரனது உடல் நெரிபட்டழிய, டுண்டுண் டுண்டுண்...டிடி என்று விழும் படியான நிலையில் ஏழு புவனங்களும் அதிர்ச்சி கொள்ள, ஒள்ளிய சங்கம் சஞ்சஞ் சஞ்சஞ் என்று ஒலிக்க, வேள்வித் தலைவனான இந்திரன் துதிசெய்ய - அசுரரை அட்டவனே!

நீயே தஞ்சம் - தஞ்சம் தஞ்சம் (முக்காலும் தஞ்சம்) சிவன் அருளிய குருமூர்த்தியே! என்று முநிவர்கள் பணியும் - தொம்தம் தொம்தம் என்னும் ஒலிபரவ நடம் செயும் சிவன் அருளிய அறுமுகனே! (தேன்) உண்ணும் இடத்தில் வண்டுகளைக் கொண்டு விளங்கும் வாசனை வீசும் குராமலர்கள் மலரும் அழகு கொண்ட புயங்களை உடைய வீரனே!

பிற மதங்கள் முத்திவழி அன்று என்ற ஒன்றை மாத்திரம் கொண்டு (அல்லது - *அத்திநாத்தி என்ற ஒன்றையே கொண்டு,) அன்பில்லாமல் அங்கு அடியவர்களை இகழ்ந்த சமணர்களைக் கழுவினில் (அவர்தம்) உடல் சிந்தும்படியும், குறைபட்டு அவர்கள் இறந்து போம் படியும் செய்தும், ஒரே வெள்ளமாய் நுரைத்து வந்த (வைகை) ஆற்றில் (ஏடு) எதிரேறவும் செய்து, அத்தகைய செயல்களால் அன்பின் (சிவத்தின்) தன்மையை எங்கும் பரவச்செய்து எலும்பினின்றும் (பூம்பாவை என்னும் பேருடைய) பெண் எதிர் தோன்றச் செய்த ("மட்டிட்ட புன்னை" என்ற)திருப்பதிகத்தைத் திருவாய் மலர்ந்த சமர்த்தனே!

---

*இது அமணர்களது மூல மந்திரம். இதன் பொருள் - உள்ளது உண்டு - இல்லாதது இல்லை.

சம்பந்தரோடு செய்த வாதில் சமணர்கள் வையை யாற்றில் எழுதி இட்ட மந்திரம். பெரியபுராணம் - சம்பந்தர், 814.

அண்டங் கண்டும் பண்டுண் டும்பொங்
கமர்தனில் விஜயவ னிரதமை நடவிய
துங்கன் வஞ்சன் சங்கன் மைந்தன்
தருமகன் [1]முநிதழல் வருதக [2]ரிவர்வல
அங்கங் கஞ்சஞ் சங்கம் பொங்குங்
கயநிறை வளமுறு **சிவகிரி** மருவிய பெருமாளே.(16)

## 116. ஆண்டருள

தனனத் தனதன தானன தானன
தனனத் தனதன தானன தானன
தனனத் தனதன தானன தானன தனதான

கலகக் கயல்விழி போர்செய [3]வேள்படை
நடுவிற் புடைவரு பாபிகள் கோபிகள்
கனியக் கனியவு மேமொழி பேசிய விலைமாதர்-

கலவித் தொழிலல மேயினி தாமென
மனமிப் படிதின மேயுழ லாவகை
கருணைப் படியெனை **யாளவு மேயருள்** **தரவேணும்;**

[4]இலவுக் கிளையெனும் வாய்வளி நாயகி
குழையத் தழுவிய மேன்மையி னாலுயர்
இசைபெற் றருளிய காமுக னாகிய வடிவோனே-

இதமிக் கருமறை வேதிய ரானவர்
புகலத் தயவுட னேயருள் மேன்மைகள்
இசையத் தருமது கூலவ சீகர முதல்வோனே;

நிலவைச் சடைமிசை யேபுனை காரணர்
செவியிற் பிரணவ மோதிய தேசிக
நிருதர்க் கொருபகை யாளியு மாகிய சுடர்வேலா-

1. முநி - நாரதமுநி. 2. இவர் வல - ஏறி நடத்தவல்ல.

3. வேள்படை - மகளிர்.

4. இலவுக் கிளையெனும் - இலவ மலருக்கு உறவு (ஒப்பு) ஆகிய.

அண்டங்களை(ப் புரத்தல்) கண்டும் முன்பு ஒருகால் அவைகளை உண்டும், முடுகிவந்த போரில் அருச்சுனனது தேரைப் (பாகனாக இருந்து) நடத்திய பரிசுத்த மூர்த்தி, (வஞ்சர்க்கு) வஞ்சன், சங்க பாணி (ஆகிய) திருமாலின் மைந்தனாகிய பிரமன் ஈன்ற மைந்தனாகிய நாரதமுநிவர் (செய்த) (வேள்வித்) தீயில் எழுந்த ஆட்டுக்கடாவை ஏறி நடத்த வல்ல (பெருமாளே)! (தன் இடத்தே) (அல்லது அடையாள உறுப்பாக) தாமரையும் சங்கும் பொலிந்து விளங்கும் தடாகங்கள் நிறைந்த வளப்பதைப் பெற்ற **சிவகிரியில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(அருள்பெற .......அருள்வாயே)

# 116

கலகத்தைத் தரும் கயல்மீன் போன்ற விழி போர் செய்ய மகளிர் கூட்டத்தின் மத்தியிலும் பக்கத்திலும் வருகின்ற பாவிகள், கோபக்காரிகள், இனிக்கப் பேச்சுக்களைப் பேசும் விலை மாதர்களுடைய (பொது மகளிருடைய)

கலவிச் செயல்களின் இன்பமே இனிமையானதென்று மனம் இப்படி நாள்தோறும் அலையாதபடி, (உனது) கருணை வழியே என்னை ஆண்டருள அருள்புரிவாயாக;

இலவ மலருக்கு ஒப்பு ஆகிய வாயிதழை உடைய வள்ளி நாயகி மனம் உருகத் தழுவிய சிறப்பினால் உயர்ந்த புகழைப் பெற்ற காமுகன் என வேடங்கொண்ட அழகனே!

இன்ப மிகுந்த அரிய வேதங்களைக் கற்ற மறையோர்கள் (வேதங்களைச்) சொல்ல அன்புடனே (அவர்களுக்கு) அருட் செல்வங்களை இசைந்து தருகின்ற அநுகூலனே! மனதைக் கவர்பவனே! முதல்வோனே!

நிலவைச் சடையின்மேல் அணிந்துள்ள மூலப்பொருளாம் (சிவனது) செவியிற் பிரணவப் பொருளை ஓதிய குருமூர்த்தியே! அசுரர்களுக்கு ஒரு பகையாளியாய் வந்த ஒளி வேலனே!

நிமலக் குருபர ஆறிரு பார்வையும்
அருளைத் தரஅடி யார்தமை நாடொறும்
நிகரற் றவரென வேமகிழ் கூர்தரு முரியோனே;
பலவிற் கனிபணை மீறிய மாமர
[1]முருகிற் கனியுட னேநெடு வாளைகள்
பரவித் தனியுதிர் சோலைகள் மேவிய வகையாலே-
பழனத் துழவர்க ளேரிட வேவிளை
கழனிப் புரவுகள் போதவு மீறிய
**பழநிச் சிவகிரி** மீதினி லேவளர் பெருமாளே.(17)

## 117. துதிப் பாட்டு

தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத் தனதான

புடவிக் கணிதுகி லெனவள ரந்தக்
[2]கடலெட் டையுமற குடிமுநி யெண்கட்
புநிதச் சததள நிலைகொள்ச யம்புச் சதுர்வேதன்-
புரமட் டெரியெழ விழிகனல் சிந்திக்
கடினத் தொடுசில சிறுநகை கொண்டற்
புதகர்த் தரகர பரசிவ னிந்தத் தனிமுவ
ரிடசித் தமுநிறை தெளிவுற வும்பொற்
செவியுட் பிரணவ ரகசிய மன்புற்
றிடவுற் பனமொழி யுரைசெய் குழந்தைக் குருநாதா
எதிருற் றசுரர்கள் படைகொடு சண்டைக்
கிடம்வைத் திட அவர் குலமுழு தும்பட்
டிடவுக் கிரமொடு வெகுளிகள் பொங்கக் கிரியாவும்;
பொடிபட் டுதிரவும் விரிவுறு மண்டச்
சுவர்விட் டதிரவு முகடுகி ழிந்தப்
புறமப் பரவெளி கிடுகிடெ னுஞ்சத் தமுமாகப்-

1. முருகு - வாசனை.
2. கடல் எட்டு - எட்டுத் திக்கிலுமுள்ள கடல்.

பரிசுத்த குருபரனே! பன்னிரு திருக்கண்களும் அருளையே பாலிக்க அடியார்களை நாள்தோறும் ஒப்பிலாதவரெனவே (ஆக்கி) மகிழ்ச்சி மிகக் கொள்ளும் உரிமை வாய்ந்தவனே!

பலாப்பழங்கள், கொம்புகள் பெரிதாய் வளர்ந்த மாமரங்களின் நறுமணக் கனிகளுடனே, நீண்ட வாளை மீன்கள் பரவிப் (பாய்தலால்) தனித்தனி உதிர்கின்ற சோலைகள் பொருந்தி உள்ள தன்மையாலே —

வயலில் உழவர்கள் ஏரிட்டு விளைகின்ற கழனிகளின் செழுமைகள் மிக்கு மேம்படும் **பழநிச் சிவகிரியின்** மீதே வீற்றிருந்தருளும் பெருமாளே!

(ஆளவுமே அருள் தரவேணும்)

# 117

பூமிக்கு உடுக்கப்படும் ஆடையென (அல்லது - பூமியின் அழகிய ஆடையென)ப் பரந்துள்ள அந்த எட்டுத் திக்கிலும் உள்ள கடலை ஓட்டக் குடித்த முநி (அகத்தியர்), எட்டுக் கண்களை உடையவரும் சுத்தமான நூற்றிதழ்த் தாமரையில் நிலையாக இருப்பவருமான பிரமனாம் நான்கு வேதத்தோன் —

(திரி) புரங்கள் அழிந்து எரி கொள்ளும்படி (திருக்) கண் தீயை வீசி வன்மையுடன் சற்று அற்பப் புன்னகையைக் கொண்ட அற்புதத்தலைவரும் ஹரஹர மூர்த்தியுமாய பரமசிவன்- ஆக இந்த ஒப்பற்ற மூவர்.

தமது சித்தம் நிறைந்து தெளிவுறும் வண்ணம் அவர்களது அழகிய செவிகளில் பிரணவ ரகசியப் பொருளை அன்பு கொள்ளும்படி (உனது திருவாயினின்றும்) தோன்றிய (உபதேச) மொழிகளை உரைத்த குழந்தைக் குருநாதனே!

எதிர்த்து வந்து அசுரர்கள் தமது படை கொண்டு சண்டைக்கு இடம் தந்ததால், அவர்களது குலம் முழுதும் அழிதர, உக்கிரமாகக் கோபம் பொங்க மலைகள் யாவும் -

பொடிபட்டு உதிர, விரிந்த அண்டச் சுவர்கள் பிளவு விட்டு அதிர்ச்சி கொள்ள, அண்டத்து உச்சி கிழிபட்டு அதற்கு அப்பாலுள்ள ஆகாய வெளியெலாம் கிடுகிடு என்று சத்தப் படும்படி —

பொருதுக் கையிலுள அயில்நிண முண்கக்
குருதிப் புனலெழு கடலினு மிஞ்சப்
புரவிக் கனமயில் நடவிடும் விந்தைக் குமரேசா;

படியிற் பெருமித தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வர அர னந்தப்
[1]பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனாலே-

பரன்வெட் கிடவுள மிகவும்வெ குண்டக்
கனியைத் தரவிலை யென அருள் செந்திற்
**பழநிச் சிவகிரி** தனிலுறை கந்தப் பெருமாளே. (18)

# 3. வீரை நகர்[2]

## 118. பொது மகளிர் மயல் அற

தானா தனதன தானா தனதன
தானா தனதன தனதான

ஆதா ளிகள்புரி கோலா கலவிழி
யாலே யமுதெனு மொழியாலே-

ஆழ்சீ ரிள நகை யாலே துடியிடை
யாலே மணமலி குழலாலே;

சூதா ரிளமுலை யாலே யழகிய
தோடா ரிரு [3]குழை யதனாலே-

சோரா மயல்தரு மானா ருறவிடர்
சூழா வகையருள் புரிவாயே;

சோதா ரிருகழல் சூழா தது தொழில்
பூணா தெதிருற மதியாதே-

போரா டிய அதி சூரா பொறு பொறு
போகா தென அடு திறலோனே;

---

1. பலன் - பழம்.

2. வீரை - வீரையூர் என்னும் பேருள்ள சிவஸ்தலம் ஒன்று திருப்பெருந்துறைக்கு மேற்கே 10 நாழிகை தூரத்தில் உளது. (பார்த்திபனூருக்கு அருகில்) (இராமநாதபுரம் மாவட்டம்).

3. குழை - செவி. திருப்புகழ்24-ன் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

சண்டை செய்து, கையில் உள்ள வேல் (பகைவர்தம்) கொழுப்பை உண்ண, ரத்த நீர் ஏழு கடலினும் அதிகமாகப் (புரண்டு ஓட), குதிரையாம் பருத்த மயிலை நடத்திச் செலுத்தின அற்புத குமரேசனே!

பூமியில் மேன்மையும் தகுதியும் மிக்க செம்பொன்மலையாம் மேருவைத் தனித்து (நீ) வலம்வர, சிவன் அந்தப் பழத்தை யானைமுகன் (கணபதி) வசம் தந்த தன்மையாலே-

(அந்த) சிவனார் வெட்கங்கொள்ள, உள்ளத்தில் மிகக் கோபங்கொண்டு அந்தப் பழத்தைத் தரவில்லையென்று, அருள்பாலிக்கும் திருச்செந்தூரிலும் பழநிச் சிவகிரியிலும் (வந்து) வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

## 118

டம்பப் பேச்சுப் பேசும் (பொது மகளிர்) காட்டும் ஆடம்பரக் கண்களாலும், (அவரது) அமுதம் போன்ற மொழியாலும் —

ஆழ்ந்த அழகிய இள நகையாலும், துடி போன்ற இடையாலும், வாசனை நிறைந்த கூந்தலாலும் —

சூதாடு கருவிபோன்ற இள முலையாலும், அழகிய தோடணிந்த இரு செவிகளாலும்-

சோரா வகைக்கும், மயக்கம் தரும் மாதர் தம் உறவால் வரும் இடர் சூழா வகைக்கும் (அல்லது - சோர்ந்து, மயக்கம் தரும் மாதர் தம் உறவால் வரும் இடர் என்னைச் சூழா வகைக்கு) அருள்புரிவாயாக.

மலர் நிறைந்த இணையடிகளைச் சிந்தியாமலும், (சிந்திக்கும் அந்தப் பணியை மேற்கொள்ளாமலும் எதிரே வர யோசியாமலே —

போர் செய்ய வந்த அதி சூரனே! பொறு, பொறு, போகாதே எனக் கூறி (அவனை) அழித்த திறமை வாய்ந்தவனே!

வேதா வுடனெடு மாலா னவனறி
யாதா ரருளிய குமரேசா-

வீரா புரிவரு கோவே பழநியுள்
வேலா இமையவர் பெருமாளே (19)

## 119. திருவடியை மறவேன் என்பது

தான தனதனன தான தனதனன
தான தனதனன தான தனதனன
தான தனதனன தான தனதனன தனதான

கோல மதிவதனம் வேர்வு தர அளக
பாரம் நெகிழவிழி வேல்கள் சுழல நுவல்
கோவை யிதழ்வெளிற [1]வாய்மைபதறியிள முகையான-

கோக னகவுபய மேரு முலையசைய
நூலி னிடைதுவள வீறு பறவைவகை
கூற யினியகள மோல மிடவளைகள் கரமீதே;

காலி னணிகனக நூபு ரமுமொலிக
ளோல மிடஅதிக போக மதுமருவு
காலை வெகுசரச லீலை யளவு செயு மடமானார்-

காதல் புரியுமநு போக நதியினிடை
வீழு கினுமடிமை மோச மறவுனது
காமர் **கழலிணைகளான** தொருசிறிது மறவேனே;

ஞால முழுதுமம ரோர்கள் புரியுமிக
லாக வருமவுணர் சேர வுததியிடை
நாச முற அமர்செய் வீர தரகுமர முருகோனே-

நாடி யொருகுறமின் மேவு தினைசெய்புன
மீதி லியலகல்கல் நீழ லிடை நிலவி
நாணம் வரவிரக மோது மொரு [2]சதுர புரிவேலா;

---

1. வாய்மை - சொல்.

2. சதுரபுரி - சதுரகிரி என்றால் கொல்லிமலையாகும்.

பிரமனும், நீண்ட திருமாலும் அறியாதவராகிய சிவபிரான் அருளிய குமரேசனே!

**வீராபுரியில்** எழுந்தருளியுள்ள தலைவனே! பழநியுள் வேலனே! தேவர் பெருமாளே!

(இடர் சூழா வகை அருள் புரிவாயே)

# 119

அழகிய நிலாப் போன்ற முகம் வேர்வை உற, கூந்தற் பாரம் நெகிழ, விழியாம் வேல்கள் சுழல, உவமை கூறப்படும் கொவ்வைக்கனி போன்ற இதழ் வெளுக்க, சொற்கள் பதற, இளமையுள்ள மொட்டு நிலையில் இருக்கும்.

தாமரை போன்ற இரண்டு மேரு (போன்ற) முலைகள் அசைய, நூல் போன்ற இடை துவள, விளங்கும் (புறா, கிளி, முதலிய) பறவை வகைக் குரல்களை (புட் குரலை) இனிமை காட்டும் கண்டம் (தொண்டை) வெளிவிட, வளையல்கள் கைம் மேலே ஒலி செய்ய:

காலில் அணிந்துள்ள பொற் சிலம்பின் ஒலிகள் சப்திக்க, அதிக போகத்தை அனுபவிக்கும்போது, பலவித காம லீலைகளைப் (பெற்ற பொருளுக்குத் தக்கவாறு) அளந்து காட்டும் அழகிய (பொது) மகளிர் மீது —

காதல் புரிகின்ற அநுபோகம் என்னும் ஆற்று வெள்ளத் திடையே (நான்) வீழ்ந்தாலும் அடிமை ஏமாறாது உனது அழகிய (விரும்பத்தக்க கழலிணைகளை) ஒரு சிறிதுகூட மறவேன்:

பூமி முழுமையும் தேவர்களோடு செய்யும் போர் நிறையும்படி வந்த அவுணர் யாவரும் ஒருமிக்கக் கடலிடையே அழியும் படி போர் புரிந்த வீரத்தை உடையவனே! குமரனே! முருகோனே!

தேடிச்சென்று ஒரு குறப்பெண் இருந்த தினை வளரும் புனமீது ஒழுங்கு மிக்க மலைக்கல்லின் நீழலிலே இருந்து நாணம் எழக் காமதாபத்தை (வள்ளிபாற்) சொன்ன ஒப்பற்ற சாமர்த்தியச் செயலைப் புரிந்த வேலனே! (அல்லது - ஒப்பற்ற சமர்த்தனே! விளங்கும் வேலனே! அல்லது சதுரகிரி வேலனே!)

மேலை யமரர்தொழு மானை முகரரனை
யோடி வலம்வருமுன் மோது திரைமகர
வேலை யுலகைவல மாக வருதுரக மயில்வீரா-

வீறு [1]கலிசைவரு சேவகனதிதய
மேவு முதல்வவயல் வாவி புடைமருவு
வீரை வருபழநி ஞான மலையில்வளர் பெருமாளே.(20)

## 120. அன்புபெற

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தானதன தந்த தனதான

சீயுதிர மெங்கு மேய்புழுநி ரம்பு
மாயமல பிண்ட நோயிடுகு ரம்பை
தீநரிகள் [2]கங்கு காகமிவை தின்ப தொழியாதே-

தீதுளகு ணங்க ளேபெருகு தொந்த
மாயையில்வ ளர்ந்த தோல்தசையெ லும்பு
சேரிடுந ரம்பு தானிவைபொ திந்து நிலைகாணா;

ஆயதுந மன்கை போகவுயி ரந்த
நாழிகையில் விஞ்ச ஊசிடுமி டும்பை
யாகியவு டம்பு பேணிநிலை யென்று மடவார்பால்-

ஆசையைவி ரும்பி யேவிரக சிங்கி
தானுமிக வந்து மேவிடம யங்கு
மாழ்துயர்வி ழுந்து மாளுமெனை யன்பு புரிவாயே;

மாயைவல கஞ்ச னால்விடவெ குண்டு
பார்முழுது மண்ட கோள முந டுங்க
வாய்பிளிறி நின்று மேகநிகர் தன்கை யதனாலே-

1. கலிசைவரு சேவகன் என்பதும் காவேரி சேவகன் என்று பின்வரும் செய்யுட்களில் வருவனவும் கலிசை யென்னும் பதியில் அக்காலத்து அதிபனா யிருந்த ஓ ரன்பன்.

2. கங்கு - கழுகு.

மேலுலகத்துத் தேவர்கள் தொழும் ஆனைமுகக்கடவுள் சிவனை ஓடி வலம் வரும் முன்பே, மோதுகின்ற அலைகளையும் மகர மீன்களையும் உடைய கடல் சூழ்ந்த உலகை வலம் வந்த குதிரையாம் மயில் வீரனே!

விளங்குகின்ற கலிசை என்னும் பதியில் வாழும் பராக்ரம சாலியின் (கலிசைச் சேவகனது) நெஞ்சத்தில் வீற்றிருக்கும் முதல்வனே! வயல்களும், நீர் நிலைகளும் பக்கங்களிற் பொருந்தியுள்ள வீரை என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள பழநியாம் ஞானமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(கழலிணைகள்... ஒரு சிறிதும் மறவேனே.)

## 120

சீ(ழ்) ரத்தம் எங்கும் பொருந்தி வரும் புழுக்கள் நிரம்பிய மாயமல பிண்டம், நோய்க்கு இருப்பிடமாம் கூடு ஆகிய இவ்வுடலைத் தீயும், நரிகளும், கழுகுகளும், காகங்களும் ஆய இவை தின்பது நீங்காது.

தீமை உள்ள குணங்களே பெருகும் சம்பந்தம் உள்ள மாயையில் வளர்ந்த தோல், சதை, எலும்பு சேர்ந்துள்ள நரம்பு ஆகிய இவைகள் நிறைந்து நிலைகாண முடியாதது

ஆன இந்த (உடம்பு)-யமனது கையில் உயிர் போய்ச் சேர அந்த வேளையில் மிக ஊசிப் போகும் துன்பஞ் சேர்ந்த உடம்பு இத்தகைய உடம்பை விரும்பி அது நிலையுள்ள தென்று (கருதி) மாதர்களிடத்தே —

ஆசையை வைத்து விரும்பி, காம விஷம் மிக ஏறிச் சேர்வதால் மயக்கங்கொண்டு ஆழ்ந்த துயர்க் (கடலில்) விழுந்து மாண்டு போகின்ற என்மீது அன்பு புரிந்தருளுவாயாக;

மாயைவல்ல கம்சனால் விடப்பட்டு, கோபமுடன் வந்து, உலக முழுவதும், அண்ட கோளமும் நடுங்கும்படியாய், வாய் பிளிறி வந்து, மேகம் போன்ற கறுத்த தன் துதிக்கையால்

வாரியுற அண்டி வீறொடுமு ழங்கு
நீரை நுகர் கின்ற கோபமொடெ திர்ந்த
[1]வாரண இரண்டு கோடொடிய வென்றநெடியோனாம்;
வேயினிசை கொண்டு கோநிரைபு ரந்து
மேயல்புரி செங்கண் மால்மருக துங்க
வேலகிர வுஞ்ச மால்வரையி டிந்து பொடியாக-
வேலைவிடு கந்த காவிரிவி ளங்கு
[2]கார்கலிசை வந்த சேவகன்வ ணங்க
வீரைநகர் வந்து வாழ்பழநி யண்டர் பெருமாளே.(21)

## 121. அடியரொடு கூட

தான தனதனன தான தனதனன
தான தனதனன தனதான

சீற லசடன்வினை காரன் முறைமையிலி
தீமை புரிகபடி பவநோயே-
தேடு பரிசிகன நீதி நெறிமுறைமை
சீர்மை சிறிதுமிலி எவரோடுங்;
கூறு மொழியது பொய் யான கொடுமையுள
கோள னறிவிலியு னடிபேணாக்-
கூள னெனினுமெனை நீயு [3]னடியரொடு
**கூடும் வகைமையருள் புரிவாயே;**
மாறு படுமவுணர் மாள அமர்பொருது
வாகை யுளமவுலி புனைவோனே-
மாக முகடதிர வீசி சிறைமயிலை
வாசி யெனவுடைய முருகோனே;
வீறு **கலிசைவருசேவகன**திதய
மேவு மொருபெருமை யுடையோனே!

---

1. கம்சன் அனுப்பின யானையின் கொம்பைக் கண்ணபிரான் முறித்தலீலை - 'கேசவன்... வேழ மருப்பை ஒசித்தான்" திருவாய்மொழி 1-9-2, 'கான ஆனையின் கொம்பினைப் பீழ்ந்த கள்ளப்பிள்ளை'சுந்தரர் தேவாரம்- வாளொளி புற்றூர்.

2. கார் - நீர், அழகு.

3. இவ்வேண்டுகோள் அருணகிரியார்க்குப் பலித்தது என்பது 'போதமிலேனை அன்பாற் கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா!" எனவரும் கந்தரலங்காரத்தால் (100)- அறிகின்றோம்.

(எல்லாவற்றையும்) வாரும்படியாக நெருங்கி, கர்வத்துடன் முழக்கமிட்டு நீரை உண்ணும் கோபத்தோ டெதிர்ந்த (குவலயா பீடம் என்னும்) யானையின் இரண்டு கொம்புகள் ஓடிய வென்ற நெடியோனாகிய திருமாலின்—

புல்லாங் குழலின் இன்னிசை கொண்டு பசுக் கூட்டங்களைக் காத்து மேயவிட்ட செங்கண் மாலின் மருகனே! பரிசுத்த மான வேலனே! கிரவுஞ்சம் என்னும் பெரிய மலை (மாயம் வல்ல மலை) இடிந்து பொடியாகும்படி —

வேலை ஏவிய கந்தனே! காவிரியாற்றின் பொலிவுள்ள நீர் (சூழ்ந்த) கலிசை என்னும் ஊரில் வந்த சேவகன் (பராக்ரமன்) வணங்க **வீரை** நகரில் எழுந்தருளியுள்ள **பழநிப்** பெருமானே! தேவர் பெருமாளே!

(எனை அன்பு புரிவாயே)

## 121

சீறிவிழும் (பெருங்கோபக்) குணமுடைய அசடன், தீவினை புரிபவன், ஒழுக்கம் இல்லாதவன், தீமை புரியும் வஞ்சகன், பிறவி நோயையே (அல்லது பாவ நோயையே)

தேடும் தன்மையுடையவன், பெருமை, நீதி, நெறி, நேர்மை, சிறப்பு (இவை) சிறிதேனும் இல்லாதவன் - எவரோடும்

பேசும் பேச்சிற் பொய் என்னும் கொடுமையைக் கொண்ட தீயோன், அறிவில்லாதவன், உன் திருவடியைப் போற்றி விரும்பாத

குப்பை (பயனற்றவன்) - என நான் இருந்தபோதிலும் என்னை நீ (பொருட்படுத்தி) உன் அடியார் கூட்டத்துடன் கூட்டிவைக்கும் வழியை (எனக்குத்) தந்து அருள் புரிவாயாக.

எதிர்த்து (விரோதித்து) வரும் அசுரர்கள் மாளும்படி போர் செய்து வெற்றிக் கிரீடம் அணிந்தவனே!

ஆகாயத்தின் உச்சி (அண்டமுகடு) அதிரும்படி வீசும் சிறகுகளைக் கொண்ட மயிலைக் குதிரையாக உடைய முருகனே!

விளங்கும் **கலிசை** ஊரில் வாழும் சேவகனது (கலிசைச் சேவகனது) உள்ளத்தில் வீற்றிருக்கும் ஒப்பற்ற பெருமையை உடையவனே!

வீரை யுறைகுமர தீர தரபழநி
வேல இமையவர்கள் பெருமாளே. (22)

## 122. ஈடேற

தானதன தானதன தானான தானதன
தானதன தானதன தானான தானதன
தானதன தானதன தானான தானதன தனதான

தோகைமயி லேகமல மானேயு லாசமிகு
காமதுரை யானமத வேள்பூவை யேயினிமை
தோயுமநு போகசுக லீலாவி நோதமுழு துணர்தேனே-

சூதனைய சீதஇள நீரான பாரமுலை
மீதணைய வாருமிதழ் தாரீரெ னாணைமொழி
சோர்வதிலை யானடிமை யாவேனு மாணைமிக
மயலானேன்;

ஆகமுற வேநகம தாலேவி டாதஅடை
யாளமிட வாருமென வேமாத ரார்களுட
னாசைசொலி யேயுழலு மாபாத னீதியிலி
யுனையோதேன்-

ஆமுனது நேயஅடி யாரோடு கூடுகில
னீறுநுதல் மீதிடலி லாமூட னேதுமிலி
யாயினுமி யானடிமை யீடேறவேகழல்கள் தருவாயே;

மாகமுக டோடகில பாதாள மேருவுட
னேசுழல வாரியது வேதாழி யாவமரர்
[1]வாலிமுத லானவர்க ளேனோர்க ளாலமுது
கடைநாளில்-

---

1. வாலியுங் கடல் கடைந்தான்...918, 956 - திருப்புகழ் பார்க்க."அமுதம் இன்னங் கடைந்திட ஒரு வாலிக்கு வாலில்லையோ" - செந்தூர் பிள்ளைத்தமிழ் - 68

வீரை என்னும் தலத்தில் வீற்றிருக்கும் குமரனே! தீரம் (தைரியம்) கொண்டவனே! பழநி வேலனே! தேவர்கள் பெருமாளே!

(அடியரொடு கூடும் வகையை யருள்புரிவாயே.)

## 122

கலாப மயிலே! தாமரையில் வீற்றிருக்கும் மானே (இலக்குமியே)! உல்லாசம் மிகுந்த காம துரையாம் மன்மத வேளுக்கு உகந்த நாகணவாய்ப் புள்ளைப் போன்ற பாவையே! இனிமை நிரம்பிய அநுபோக சுக (காம) லீலை விநோதங்கள் முழுமையும் அறிந்துள்ள தேன் என இனிப்பவளே!

சூதாடு கருவி போன்ற குளிர்ந்த இளநீர் போன்ற பார முலைகளின்மீது (நான்) அணையும்படி வாரும்; வாயிதழை உண்ணத் தாரும், இது என் ஆணை மொழியாகும்; சோர்வே இல்லாமல் நான் உமக்கு அடிமையாவேன்; உம்மீது ஆணை; (உம்மீது) மிகவும் காம மயக்கம் கொண்டுள்ளேன்;

(எனது) தேகத்தில அழுந்திப் படியும்படியாக (உமது) நகத்தால் என்றும் அழியாத அடையாளத்தை இடவாரும் என்றெல்லாம் மாதர்களுடன் ஆசை மொழிகளைக் கூறித் திரிகின்ற மகா பாதகன், நீதியில்லாதவன் ஆகிய (நான்) உன்னை ஓதுவதில்லை;

உனக்கு ஆன, அன்பு பூண்டவராம் அடியாரோடு கூடுவதில்லை; திருநீற்றை நெற்றிமீது இடுதல் இல்லாத மூடன் - எவ்வித நற்குணமும் இல்லாதவன் நான் ஆயினும் அடியேன் ஈடேறுமாறு உனது திருவடியைத் தந்தருளுவாயாக:

அண்ட முகடுமுதல் அகில பாதாளம் வரையும் மேருமலை அங்ஙனே சுழலக் கடலே தாழியாக (கடையும் பானையாக)த் தேவர்கள் வாலி முதலானவருடனும், மற்றவர்களுடனும் அமுது கடைந்த நாளில் —

*வாருமென வேயொருவர் நோகாம லாலவிட*
*மீசர்பெறு மாறுதவி யேதேவர் யாவர்களும்*
*வாழஅமு தேபகிரு மாமாய னாரினிய மருகோனே;*

*மேகநிக ரானகொடை மானாய காதிபதி*
*[1]வாரி [2]கலி மாருதக ரோ [3]பாரி மாமதன*
*வேள் கலிசை வாழவரு* **காவேரிசேவகன** *துளமேவும்-*

*வீர அதி சூரர்கிளை வேர்மாள வேபொருத*
*தீரகும ராகுவளை சேரோடை சூழ்கழனி*
**வீரைநகர் வாழ்பழநி** *வேலாயு தாவமரர்*
*பெருமாளே.* (23)

## 123. வீணர் உறவு அற

*தான தானதனத் தந்த தானன*
*தான தானதனத் தந்த தானன*
*தான தானதனத் தந்த தானன தனதான*

*பாரி யானகொடைக் கொண்ட லேதிரு*
*வாழ்வி சாலதொடைத் திண்பு யா எழு*
*பாரு மேறுபுகழ்க் கொண்ட நாயக அபிராம-*

*பாவ லோர்கள்கிளைக் கென்றும் வாழ்வருள்*
*சீல ஞாலவிளக் கின்ப [4]சீவக*
*பாக சாதனவுத் துங்க மானத எனவோதிச்;*

*சீர தாகஎடுத் தொன்று மாகவி*
*பாடி னாலுமிரக் கஞ்செ யாதுரை*
*சீறு வார் கடையிற் சென்று தாமயர் வுறவீணே-*

---

1. வாரி - செல்வம்.

2. கவி - தழைப்பு, கடல்.

3. பாரி... கடை எழுவள்ளல்களில் ஒருவன். முல்லைக் கொடி தன் தேரைத் தடுக்க அது வேண்டிற்றாகக் கருதித் தனது பெரிய தேரை அதற்குக் கொடுத்தவன்; *(சிறுபாணாற்றுப்படை - 89 -91)* "கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினும் கொடுப்பாரிலை" *(சுந்தரர் தேவாரம் திருப்புகலூர்)*

4. *சீவகன் - சீவக சிந்தாமணிக் கதாநாயகன்.*

வாருங்கள் எனக் கூறி ஒருவரும் மனம் நோகாத வண்ணம் ஆலகால விடத்தைச் சிவபிரான் பெறும்படி தந்து, தேவர்கள் யாவரும் வாழ அமுதை அத் தேவர்களுக்குப் பகிர்ந்தளித்த மஹாமாய மூர்த்தியாம் (திருமாலுக்கு) இனிமைதரும் மருகோனே!

மேகத்துக்கு ஒப்பான கொடைப்பெருமை வாய்ந்த நாயகத் தலைவனும், தனது செல்வத் தழைப்பை (நிறைவை) (அல்லது செல்வக் கடலை), வாயு வீசுவதுபோல விரைந்தளிக்கும் கொடைத்திறங் கொண்ட கரங்களை உடைய பாரிவள்ளல் போன்றவனும், சிறந்த மன்மதவேள் போன்ற அழகனுமான கலிசையில் வாழும் **காவேரி சேவகனுடைய** உள்ளத்தில் வீற்றிருக்கும் —

வீரனே! பெருஞ்சூரர் சுற்றத்தையெல்லாம் வேரோடு மாளப்போர் செய்த தீரனே! குமரனே! குவளை மலர்கள் மலரும் ஓடை சூழ்ந்த கழனிகளை உடைய **வீரை நகரில்** வாழ்கின்ற **பழநி** வேலாயுதனே! தேவர் பெருமானே!

(அடிமை ஈடேறவே கழல்கள் தருவாயே.)

## 123

பாரி வள்ளல் போன்ற கொடை மேகமே! இலக்குமி வாசம் செய்யும் பெரிய மாலையைப் புனைந்த திண்ணிய புயங்களை உடையவனே! ஏழு லோகங்களிலும் எட்டியுள்ள புகழைக் கொண்ட நாயகனே! அழகனே!

பாடவல்ல புலவர் கூட்டத்துக்கு என்றும் வாழ்வை அருளும் சீல ஞால விளக்கே (நல்லொழுக்கம் வாய்ந்த பூ மண்டல விளக்கே!) இன்பம் தரும் ஜீவகனே! இந்திரன்போல உயர்ந்த அரசே! என்றெல்லாம் கூறி —

சீராக எடுத்தமைத்து ஓர் அருமையான பாடலைப் பாடினாலும் இரங்காமல் மொழிகளைச் சீறி உரைப்போரது கடைவாயிலிற்சென்று தாம் சோர்வு அடையும்படி வீணாக —

சேய பாவகையைக் கொண்டு போயறி
யாம லேகமரிற் சிந்து வார்சிலர்
[1]சேய னார்மனதிற் சிந்தி யாரரு குறலாமோ;

ஆரு நீர்மைமடுக் கண்க ராநெடு
வாயி னேர்படவுற் றன்று மூலமெ
னார வாரமதத் தந்தி தானுய அருள்மாயன்-

ஆதி நாராணனற் சங்க பாணிய
னோது வார்களுளத் தன்பன் மாதவ
னான நான்முகனற் றந்தை சீதரன் மருகோனே;

வீர சேவகவுத் தண்ட தேவகு
மார ஆறிருபொற் செங்கை நாயக
வீசு தோகைமயிற் றுங்க வாகன முடையோனே-

வீறு காவிரியுட் கொண்ட சேகர
னான சேவகனற் சிந்தை மேவிய
வீரை வாழ்பழநித் துங்க வானவர் பெருமாளே(24)

# 4. பழநி

## 124. நற்கதி பெற

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

அணிபட் டணுகித் திணிபட் டமனத்
தவர்விட் டவிழிக் கணையாலும்-

அரிசுற் றுகழைத் [2]தவர்பெற் றவளத்
தவன்விட் டமலர்க் கணையாலும்;

---

1. சேயனார் - குழந்தை அறிவினர், தூரநிற்பவர் எனவும், சேயை - முருகவேளை (மனதிற் சிந்தியாதவர்) எனவும் பொருள் கொள்ளலாம். 'வணங்கித் துதிக்க அறியா மனிதர்' கந்தரலங்காரம்,88.

2. தவர் - வில்.

செம்மை வாய்ந்த பாமாலை வகைகளைக் கொண்டுபோய், அறியாமலே, நிலப் பிளப்பிற் கொட்டுவதுபோலக் கொட்டி இறைந்து வீணாகச் சிந்திவிடுவோர் சிலர் - (இரப்போர்க்குத்) தூரநிற்பவரும், இரப்போரிடம் இரக்கம் சிறிதும் மனத்திற் சிந்திக்காதவர்களுமான மாக்களுக்கு அருகே சேரலாமோ! (சேரக்கூடாது - என்றபடி).

நிறைந்த நீருள்ளதான கரிய மடுவின் முதலையின் பெரிய வாயில் நேராக அகப்பட்டு அன்று 'மூலமே' என்று பேரொலி செய்த மத யானை (கஜேந்திரன் பிழைக்கும் வண்ணம் அருளிய மாயவன் —

ஆதி நாராயணன், நல்ல (பாஞ்ச சன்னியம் என்னும்) சங்கத்தை ஏந்திய கையன், துதிப்போரது உள்ளத்தில் வீற்றிருக்கும் அன்பன், மாதவன், யாவர்க்கும் இனிய பிரமனது நல்ல தந்தை, (அல்லது) மகா தவனாகிய பிரமனின் தந்தை இலக்குமியை (மார்பகத்தே) கொண்டவன் - ஆகிய திருமாலின் மருகனே!

வீரம், பராக்ரமம், உக்கிரம் உள்ள தெய்வக் குமாரனே! பன்னிரு அழகிய செங்கை நாயகனே! வீசுங் கலாப மயிலாம் பெருமை வாய்ந்த வாகனத்தை உடையவனே!

விளங்கும் காவிரியைத் தன்னிடத்தே கொண்ட (கலிசையூர்த்) தலைவனான பராக்ரமனுடைய (கலிசைக் காவேரி சேவகனுடைய) நல்ல மனத்தில் வீற்றிருக்கும் (பெருமாளே)! **வீரையில்** வீற்றிருக்கும் பழநிப் (பெருமாளே)! சிறந்த தேவர் பெருமாளே!

(மனதிற் சிந்தியார் அருகு உறலாமோ!)

## 124

வரிசையாய் நின்று, சமீபித்து, திண்ணிய மனத்தினராம் (பொது மகளிர்) செலுத்தின பார்வையாகின்ற அம்பினாலும், வண்டுகள் மொய்த்துச் சுற்றும் கரும்பு வில்லைப் பெற்ற செல்வத்தனாம் காமன் செலுத்திய மலர்ப் பாணங்களாலும் —

பிணிபட் டுணர்வற் றவமுற் றியமற்
பெறுமக் குணமுற் றுயிர்மாளும்-

பிறவிக் கடல்விட் டுயர்நற் கதியைப்
பெறுதற் கருளைத் தரவேணும்!

கணிநற் சொருபத் தையெடுத் துமலைக்
கனியைக் [1]கணியுற் றிடுவோனே-

கமலத் தயனைப் ப்ரணவத் துரையைக்
கருதிச் சிறைவைத் திடுவோனே;

[2]பணியப் பணியப் பரமர்ப் பரவப்
பரிவுற் றொருசொற் பகர்வோனே-

பவளத் தவளக் கனகப் புரிசைப்
பழநிக் குமரப் பெருமாளே.(25)

## 125. பெண்களின் இணக்கம் அற

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

இருசெப் பெனவெற் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் திடுமாதர்-

[3]இடையைச் சுமையைப் பெறுதற் குறவுற்
றிறுகக் குறுகிக் குழல்சோரத்;

தருமெய்ச் சுவையுற் றிதழைப் பருகித்
தழுவிக் கடிசுற் றணைமீதே

[4]சருவிச் சருவிக் குனகித் தனகித்
தவமற் றுழலக் கடவேனோ;

1. கணி-கண்ணி-கருதி.

2. பணி அப்பு அணி அப் பரமர்.

3. இடையைச் சுமை- இடைக்கு அழகிய சுமையாகவுள்ள ஸ்தனம்.

4. சருவி- சரசஞ் செய்து.

மனநோய் அடைந்து, அறிவு போய், கேடு உற்று இயமனை அடையச் செய்யும் அத் (தீய) குணங்களையே அடைந்து (இவ்) வுயிரானது மாண்டு போம் (இவ்வாறு வரும்.)

பிறவிக் கடலினின்றும் நீங்கி உயர்ந்த நல்ல கதியை (நான்) பெறுவதற்கு (உனது) திருவருளைத் தந்தருள வேண்டும்.

வேங்கை மரத்தின் நல்ல உருவை எடுத்து மலைக் கன்னியாகிய வள்ளியை (அடைய) நினைத்து (அவளிடம்) நின்றவனே!

தாமரையில் வீற்றிருக்கும் பிரமனை - அவன் பிரணவப் பொருளுக்கு உரை சொல்ல மாட்டாமைக்காகச் சிறையில் வைத்தவனே!

பாம்பையும், (கங்கை) நீரையும் அணிந்துள்ள அந்தப் பரமசிவன் பரவித் துதிக்க, (அவரிடம்) அன்பு பூண்டு ஒப்பற்ற (உபதேசச்) சொல்லைச் சொன்னவனே!

பவள நிறம், வெண்ணிறம், பொன் நிறம் உள்ள மதில்கள் சூழ்ந்த பழநியிற் குமரப் பெருமாளே!

(நற்கதியைப் பெறுதற் கருளைத் தரவேணும்)

## 125

இரண்டு சிமிழ் போலவும் மலை போலவும் (தோன்றி) வட்ட வடிவினதாய் இளகிப் புளகங் கொள்ளும் பெண்களுடைய (அல்லது-அழகிய)

இடைக்கு அழகிய சுமையாக உள்ள (அல்லது இடையின் சுமையாக உள்ள மாதர்களிடம்) நட்புப் பூண்டு நெருங்கி அணுகி, அவர்களுடைய கூந்தல் சோர்ந்து விழ —

(அவர்கள்) தருகின்ற உடல் இன்பத்தை அடைந்து (அவர்தம்) இதழ் நீரை உண்டு (அவர்களைத்) தழுவி, மணங்கமழும் பாயலின் மேலே —

சரச லீலைகளைச் செய்து செய்து, கொஞ்சிப் பேசி, உள்ளம் களித்துத் தவநிலையை விட்டொழிந்து திரியக் கடவேனோ?

அரிபுத் திரசித் தஜனுக் கருமைக்
குரியத் [1]திருமைத் துனவேளே-

அடல்குக் குடநற் கொடிபெற் றெதிருற்
றசுரக் கிளையைப் பொருவோனே;

பரிவுற் றரனுக் கருணற். பொருளைப்
பயனுற் றறியப் பகர்வோனே-

[2]பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே. (26)

## 126. பெண்கள் மீதுள்ள மயக்கு அற

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத் தனதான

[3]கடலைச் சிறைவைத் துமலர்ப் பொழிலிற்
ப்ரமரத் தையுடற் பொறியிட் டுமடுக்
கமலத் தைமலர்த் திவிடத் தையிரப் பவனூணாக்-

கருதிச் சருவிக் கயலைக் கயமுட்
படுவித் துழையைக் கவனத் தடைசிக்
கணையைக் கடைவித் துவடுத் தனையுப் பினின்மேவி;

அடலைச் செயல்சத் தியையக் கினியிற்
புகுவித் துயமப் ப்ரபுவைத் துகைவித
தரிகட் கம்விதிர்த் துமுறித் துமதித் தசகோரம்-

அலறப் பணிரத் நமணிக் குழையைச்
சிலுகிட் டுமையிற் றொளிவிட் டுமருட்
டுதலுற் றபொறிச் சியர்கட் கடையிற் படுவேனோ;

---

1. " மதனனுக்கும் சதுமுகற்கும் மைத்துனன்காண் -அம்மே!"
- திருமலையாண்டவர் குறவஞ்சி, 52 (2)

2. பவனப் புவனம்- வாயு மண்டலம்.

3. அருமையான " கண் வர்ணனைப் பாடல் " இது.

திருமாலின் மகனான காமனுக்கு அருமையான அழகிய மைத்துன வேளே!

வெற்றியுள்ள கோழியின் நல்ல கொடியை ஏந்தி, எதிர்த்து வந்த அசுரர் கூட்டத்தைப் பொருதவனே!

அன்பு பூண்டு சிவனுக்கு அருள் பாலிக்கும் நல்ல பிரணவப் பொருளை-அதன் பயனை உணர்ந்தறியும் வகையில்- உபதேசித்தவனே!

வாயு மண்டலம் வரையும் நிறைந்து (புகழால்) உயர்ந்த மெய்ம்மை விளங்கும் பழநிக் குமரப் பெருமாளே!

(தவம் அற்று உழலக் கடவேனோ!)

## 126

(குறிப்பு: கண்ணுக்கு உவமையாகக் கூறப்படும் -கடல், வண்டு, தாமரை, விஷம், கயல் மீன், அம்பு, மாவடு, வேல், யமன், வாள் - சகோரப் பறவை என்பன எங்ஙனம் கண்ணுக்கு உவமை ஆகா, ஒவ்வோர் உவமைக்கும் யாது குறையுளது என்பதை இப் பாடலின் முதல் நான்கு அடிகள் விளக்குகின்றன.)

கடலை ஓர் எல்லையைத் தாண்டாதவாறு சிறைப்படுத்தி நிறுத்தி, மலர்ச் சோலையில் உள்ள வண்டுகளின் உடலில் (தண்டனையிற் பெற்ற தழும்புகள் போல) வரி ரேகைகளை அமைத்து, மடுவில் உள்ள தாமரையை மலரச் செய்து வாட வைத்து, விஷத்தைப் பலியேந்தி உண்ணும் சிவபிரானுக்கு ஊணாகக் —

கருதிவைத்து, போராடுங் கயல் மீனைக் குளத்திற் புக வைத்து, மானைக் காட்டில் அடையச்செய்து, பாணத்தை (உலையிற்) கடைய வைத்து, மாவடுவை உப்பினில் ஊறவைத்து —

வெற்றிச் செயல் கொண்ட வேற்படையை நெருப்பிற் புக வைத்துக் காய்ச்சி, யமப் ப்ரபுவை உதைபட்டு நசுங்க வைத்து, ஒளி வீசும் வாளை ஆட்டமுற்று முறிய வைத்து மதிக்கப்படும் சகோரப் பக்ஷியை (நிலா முகிப்புள்ளை).

அலறும்படி, பண்ணி, (இங்ஙனம் இவைகளை ஜெயித்து அடக்கி) ரத்ன மணிக்குழையொடு சண்டையிட்டு, மை அணிந்தும் ஒளி வீசியும், மருட்டுதல் செய்யும் மனத்தினராம் (மாதர்களின்) கடைக்கண்ணிற் படுவேனோ!

[1]சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர்செப் பியிடப் பரிவாலே;

[2]சநகர்க் குமகஸ்த் யபுலஸ்த் யபுலஸ்த் யசநற்
'குமரர்க் குமநுக் க்ரக [3]மெய்ப் பலகைச்
[4]சதுபத் துநவப் புலவர்க் கும் [5]விபத் தியில்ஞான;

படலத் துறுலக் கணலக் ய[6] தமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ்ருத் தியிலைப்
[7]பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா-

பவளக் கொடிசுற் றியபொற் கமுகிற்
றலையிற் குலையிற் பலமுற் றுதிர்செய்ப்
பழநிப் பதிவெற் பினில்நிற் குமரப் பெருமாளே.

---

1. இறைவன் ஆணைப்படி முருகவேள் மதுரையில் வணிகர் குலத்தில் ருத்ர ஜன்மர் என்னும் பெயருடன் ஊமைப் பிள்ளையாய் உதித்து 'இறையனார் அகப்பொருள்' என்னும் நூலின் உண்மைப் பொருளைச் சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதிமரும் உணரும்படி வைத்து, அவர்களுடைய கலகத்தைப் போக்கின திருவிளையாடல் இங்குக் குறிக்கப்பட்டுள்ளது. இதன் விரிவைத் திருவிளையாடற் புராணத்திற் 'சங்கத்தார் கலகந் தீர்த்த திருவிளையாடலிற் காண்க.

2. சநகர்க்கும் என்பது முதலாகக் கூறிய இவர்களே சநகாதி நால்வர்.

3. மெய்ப்பலகை - சங்கப் பலகை.

4. சது பத்து நவப் புலவர்- சங்கத்தார் நாற்பத்தொன்பதின்மர்.

5. விபத்தி யில் -வேற்றுமை யில்லாத.

6. தமிழ்த் த்ரய மத்தில்- தமிழ்த்திரயம் அதில் (முத்தமிழில்.)

7. பழுதற்று- பழுதற.

குறிப்பு : விநாயகர் துதியில் விநாயகரை " முத்தமி ழடை வினை...முற்பட எழுதிய முதல்வன்" என்றார்; இங்கே முருகக் கடவுளை "தமிழ்த் த்ரயத்து அகப்பொருள் வ்ருத்தியினை உணர் வித்தருள் வித்தக சற்குருநாதன்" என்றார். இவற்றால் தமிழ் மற்ற மொழிகள் போலாகாது ஆதியாவுள்ள தெய்வமொழி யென்பதும், அது கடவுளரெல்லாம் பயின்றுள்ளது என்பதும் வெளியாகின்றன.‡

(தொடர்ச்சி பக்கம் 299, 300,301-ல் பார்க்க.)

சடா மகுடத்தவனாகிய சிவபிரான் ஆணையிட்டபடி மேன்மையுற்ற குலத்தில் ஒரு செட்டி யிடத்தே தோன்றி, அருளும் ஞானமும் கொண்ட ருத்ர **ஜன்மன்** என்னும் பெயருடன் அன்புடனே —

சனகர், அகஸ்தியர், புலஸ்தியர், சநற்குமரர் என்னும் முநிவர்களுக்கு அருள் பாலித்தவனே! உண்மைப் புலமையைத் தெரிவிக்கும் சங்கப் பலகையில் வீற்றிருந்த (நான்குபத்து ஒன்பது) நாற்பத் தொன்பது புலவர்களுக்கும் - வேறுபாடு இல்லாத வழியில்* ஞானப்

பகுதியின் வழியே உள்ள இலக்கண இலக்கிய முத்தமிழில் அகப்பொருள் விளக்கத்தைக் குற்றம் அற உணர்வித் தருளிய ஞான மூர்த்தியே! சற்குரு நாதனே!

பவளக்கொடி சுற்றிய அழகிய கமுக மரத்தின் உச்சிக் குலையினின்றும் பல முத்துக்கள் (உதிருவதுபோல அரும்புகள்) உதிர்கின்ற பழநிப் பதி மலையில் வீற்றிருக்கும் குமரப் பெருமாளே!

*(பொறிச்சியர் கட்கடையிற் படுவேனோ!)*

---

*இதனால் தமிழ் அகப்பொருளுக்கு ஞானார்த்தமும் உண்டு என்னும் அருமை விஷயம் அறியக் கிடக்கின்றது.

---

‡ஆரியமும் தமிழுமே ஆதியிற் கடவுளால் உண்டாக்கப்பட்ட மொழிகள் அவ்விரு மொழிகளிலும் எல்லாப் பொருள்களும் உண்டு என்பதற்கு மேற்கோள்:-

## திருமூலர் திருமந்திரம்

" ஆரியமுந் தமிழும் முடனே சொலிக்
காரிகை யார்க்குங் கருணைசெய் தானே"

எனவும்,

"அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் எனுமிவ் விரண்டும்
உணர்த்தும் அவனை யுணரலு மாமே "

எனவும் கூறியிருத்தல் காண்க. இவ்வுண்மை யுணராதார் தமிழ் அகஸ்தியரா லுண்டாக்கப்பட்டதென்றும் அது வடமொழிபோற் சிறந்ததன் றென்றுங் கூறுவர். அகஸ்தியர் ஆதிகாலத்தில் தாம் சிவபெருமானால் உணர்ந்த

## 127. அகப்பொருள் (நற்றாயிரங்கல்)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

தகைமைத் தனியிற் பகைகற் றுறுகைத்
தநுமுட் டவளைப் பவனாலே-
தரளத் திரளிற் புரளக் கரளத்
தமரத் திமிரக் கடலாலே;
[1]உகைமுத் தமிகுத் ததெனப் பகல்புக்
கொளிமட் குமிகைப் பொழுதாலே-
உரையற் றுணர்வற் றுயிரெய்த் ததொடிக்
குனநற் [2]பிணையற் றரவேணும்;
[3]திகைபத் துமுகக் கமலத் தனைமுற்
சிறையிட் டபகைத் திறல்வீரா;
திகழ்கற் பகமிட் டவனக் கனகத்
திருவுக் குருகிக் குழைமார்பா;
பகலக் கிரணப் [4]பரணச் சடிலப்
பரமற்கொருசொற் பகர்வோனே-
[5]பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே. (28)

---

1. உற்கை யென்பது உகையென்றாயிற்று; உற்கை -நட்சத்திரம்.

2. பிணையல்-மலை. 3. திகை பத்து முக -திகை பத்தும் உக- பத்துத் திக்கும் கலங்கும்படி . 4.'பவளச்'- என்றும் பாடம். 5. 'பழனப் பொழில்சுற் றுறுபொற் றணிகைப் -பதியிற் குமரப் பெருமாளே'- என்றும் பாடம்.

---

(சிவ பெருமானால் உணர்ந்த) தமிழைத் தமது மாணாக்கர் வாயிலாக உலகத்திற் பரவச்செய்தவரே யன்றித் தமிழை உண்டாக்கினவரல்லர் என்பதை,

" ஆதியிற் றமிழ் நூல் அகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்து தூஉம்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே"

என்னும் தொல்காப்பியப் பாயிர முகத்தா லுணர்க. 'அசல மேந்தி பெருந்தமிழ் ' என்பர் பழநிப் புராணமுடையார் நூற் பெயர்ச் செய்யுளில், அசலமேந்தி- மேருவை வில்லாக ஏந்தின சிவபிரான்.

## 127

தக்க தனி நிலையில் அவள் மீது பகைமை பூண்டு தன் கையில் உள்ள வில்லை நன்றாக வளைக்கும் மன்மதனாலும் —

முத்தின் குவைகள் புரள்கின்றதும், நஞ்சின் பிறப்புக்கு இடமானதும், ஒலிப்பதும், இருள் நிறத்ததுமான கடலாலும் —

நட்சத்திரங்கள் முத்துக்கள் நிறைந்தது போல நிரம்பித் தோன்ற, பகற்பொழுது போய், ஒளிமங்கி, மிஞ்சி நிற்கும் (இரவுப்) பொழுதாலும் —

உரையற்றும், உணர்வு அற்றும், உயிர் இளைத்து நிற்கும் கொடி போன்ற (என்) மகளுக்கு உனது நல்ல மாலையைத் தந்தருள வேணும்.

திசை பத்துங் கலங்கும்படி அல்லது திசை பத்தையும் (பார்க்க வல்ல) முகங்களைக் கொண்ட பிரமனை முன்பு சிறையிட்ட பகைமைத் திறத்தைக் கொண்ட வீரனே!

விளங்கும் கற்பக மரங்கள் நிறைந்த சோலையுள்ள பொன்னுலகத்து இலக்குமி (தேவசேனை) மீது (மனம்) உருகிக் குழைந்தணைத்த மார்பனே!

ஞாயிறுபோல ஒளி கொண்ட பாரச் சடையினனாம் பரமனுக்கு ஒப்பற்ற உபதேசச் சொல்லைச் சொன்னவனே!

வாயு மண்டலம் வரையும் நிறைந்து (புகழால்) உயர்ந்த மெய்ம்மை விளங்கும் பழநிக் குமரப் பெருமாளே!

(உன் நற் பிணையல் தரவேணும்)

## 128. உபதேசம் பெற

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

புடைசெப் பெனமுத் தணிகச் சறவுட்
பொருமிக் கலசத் திணையாய

புளகக் களபக் கெருவத் தனமெய்ப்
புணரத் தலையிட் டமரேசெய்;

அடைவிற் றினமுற் றவசப் படுமெற்
கறிவிற் பதடிக் கவமான-

அசடற் குயர்வொப் பதில்நற் க்ருபையுற்
**றடிமைக் கொருசொற் புகல்வாயே;**

குடமொத் தகடக் கரடக் கலுழிக்
குணமெய்க் களிறுக் கிளையோனே-

குடிபுக் கிடமிட் டசுரப் படையைக்
குறுகித் தகரப் பொரும்வேலா;

படலைச் செறிநற் கதலிக் குலையிற்
பழமுற் றொழுகப் புனல்சேர் நீள்-

பழனக் கரையிற் கழைமுத் துகுநற்
**பழநிக்** குமரப் பெருமாளே. (29)

## 129. திருவடியைப் பெற

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

கரிய பெரிய எருமை கடவு
கடிய கொடிய திரிசூலன்-

கறுவி யிறுகு கயிறொ டுயிர்கள்
கழிய முடுகி யெழுகாலந்;

திரியு நரியு மெரியு முரிமை
தெரிய விரவி யணுகாதே

## 128

பருத்துள்ள சிமிழ் போன்று, முத்து (மாலை) அணிந்த ரவிக்கை கிழியும்படி உள்ளே விம்மி, கலசத்துக்கு ஒப்பாகிப் —

புளகங் கொண்டு, (சந்தனக்) கலவை பூண்டு. செருக்குற்ற கொங்கை சேர் உடலைப் புணர முனைந்து நின்று, (கலவைப்) போர் புரிகின்ற —

ஒழுக்க முறையைத் தினமுங்கொண்டு மயக்கம் பூணும் என் மீது, அறிவு இல்லாத பயனிலியான (என்மீது), வீணான —

அசடனாகிய (என்மீது),- உயர்வு ஒப்பு இல்லாத (உனது) கிருபையைக் காட்டி - அடிமையாம் எனக்கு ஓர் உபதேசச் சொல்லைப் புகன்றருளுவாயாக.

குடம் போன்ற மத்தகக் கதுப்பினின்றும் மதநீர் கலங்கல் நீர் போல ஒழுகும் (யானை முகக் கடவுளுக்குத் தம்பியே!) குணமும் மெய்ம்மையும் கொண்டயானைமுகக் கடவுளுக்குத் தம்பியே!

(தேவர்கள் பொன்னுலகிற்) குடி புக, மிண்டு (நெருங்கி வந்த) அசுரர் படைகளை நெருங்கி அப் படைகள் நொறுங்கி ஒழியப் போர் புரிந்த வேலனே!

பரந்து அடர்ந்துள்ள நல்ல வாழைக் குலையில் பழங்கள் முதிர்ந்து (தேன்) ஒழுக, நீர் சேர்ந்த நீண்ட —

வயற் கரையில் மூங்கில்களின் முத்து உதிரும் நல்ல பழநிக் குமரப் பெருமாளே.

(அடிமைக் கொரு சொற் புகல்வாயே).

## 129

கறுத்த பெரிய எருமையைச் செலுத்தும் கடுமையும் கொடுமை யுங் கொண்ட முத்தலைச் சூலம் ஏந்திய யமன் —

கோபித்து, நெருக்கி அழுத்தும் பாசக்கயிறு கொண்டு உயிர் நீங்கும்படியாக முடுகி எழுந்து வரும்போது —

திரிகின்ற நரியும் எரியும் உரிமை காட்டி நெருங்கி அணுகாமல்

செறிவு மறிவு முறவு மனைய
திகழு மடிகள் தரவேணும்;
பரிய வரையி னரிவை மருவு
பரம ரருளு முருகோனே;
பழன முழவர் கொழுவி லெழுது
பழைய பழநி யமர்வோனே;
அரியு மயனும் வெருவ வுருவ
அரிய கிரியை யெறிவோனே-
அயிலு மயிலு மறமு நிறமும்
அழகு முடைய பெருமாளே(30)

## 130. அறிவைப் பெற

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

தமரு மமரு மனையு மினிய
தனமு மரசும் அயலாகத்-
தறுகண் மறலி முறுகு கயிறு
தலையை வளைய எறியாதே;
கமல விமல மரக தமணி
கனக மருவு மிருபாதங்-
கருத அருளி யெனது தனிமை
கழிய **அறிவு** தரவேணும்;
குமர [1]சமர முருக பரம
குலவு **பழநி** மலையோனே-
[2]கொடிய பகடு முடிய முடுகு
குறவர் சிறுமி மணவாளா;

---

1. 'சமர புரியின் முருக' என்றும் பாடம். 'செருமிகு சேஎய்' 'பகைவர் ஓடு கழற் கம்பலை கண்ட செருவெஞ் சேஎய்' - புறநானூறு. 14. 120

2. கொடிய பகடு -மதயானை.

என் நிறைவும் அறிவும் உறவும் போன்ற (உனது) விளக்கம் உற்ற திருவடிகளைத் தந்தருள வேண்டும்.

பருத்த மலையாம் (இமகிரியின்) பெண்ணை (பார்வதியை) மணந்த பரமசிவன் அருளிய முருகோனே (குழந்தையே!)

வயலில் உழவர்கள் ஏர்க்கால் கொண்டு அழுந்திப் பதிய உழுகின்ற பழைய பழநியில் வீற்றிருப்பவனே!

திருமாலும் பிரமனும் அஞ்சி நிற்க, உருவிச் செல்லும்படி அருமை வாய்ந்த கிரௌஞ்ச மலைமீது (வேலாயு-தத்தைச்) செலுத்தியவனே!

வேலும், மயிலும், அறமும், நிறமும் (ஒளியும்), அழகும் கொண்ட பெருமானே!

(திகழும் அடிகள் தரவேணும்)

## 130

சுற்றத்தாரும் உள்ள இல்வாழ்க்கையும் இனிமை தரும் செல்வமும் ஆட்சியும் (என்னை) விட்டு விலகும்படி —

கடுமை- கொண்ட யமன் திண்மை கொண்ட (பாசக்) கயிற்றை (என்) தலையைச் சுற்றி எறியாதவாறு —

தாமரை போன்றதும், சுத்தமானதும், மரகதம் போலவும், மணி போலவும், பொன் போலவும் அருமை வாய்ந்த (உனது) இரண்டு திருவடிகளைத் —

தியானிக்கும் கருத்தை (எனக்கு) அருளி என்னுடைய தனிமை (திக்கற்ற நிலை) நீங்கும் வண்ணம் அறிவைத் தந்தருள வேண்டுகின்றேன்;

குமரனே! போர் வல்ல முருகனே! பரமனே! விளங்கும் பழநி மலையோனே!

கொடிய மத யானையை (வள்ளி தன்னை அணைய வேண்டும் என்னும் கருத்து நிறைவேற) முடுகி எதிர் வரும்படி செய்த (குறச் சிறுமி) மணவாளனே!

அமர ரிடரு மவுண ருடலு
மழிய அமர்செய் தருள்வோனே-
அறமு நிறமு மயிலு மயிலு
மழகு முடைய பெருமாளே. (31)

## 131. அடிமை யாக

தனன தனன தனன தனன
தனன தனன தனதான

திமிர வுததி யனைய நரக
செனன மதனில் விடுவாயேல்-
செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியு மணுகாதே;
அமரர் வடிவு மதிக குலமு
மறிவு நிறையும் வரவே நின்-
அருள தருளி யெனையு மனதொ
டடிமை கொளவும் வரவேணும்;
சமர முகவெ லசுரர் தமது
தலைக ளுருள மிகவே நீள்-
சலதி யலற நெடிய பதலை
தகர அயிலை விடுவோனே;
[1]வெமர வணையி லினிது துயிலும்
விழிகள் நளினன் மருகோனே-
மிடறு கரியர் குமர பழநி
விரவு மமரர் பெருமாளே.(32)

## 131-1. பெண்கள் மயல் அற

தனன தனன தனன தனன தனன தனன
தனன தனன தனதான

குழல்கள் சரிய மொழிகள் பதற விழிக ளுலவ
கொலைகள் செயவெ களவோடே-

1. வெம் அரவணை;

தேவர் வருத்தமும் அசுரர் உடலும் அழியும்படி போர் செய் தருளியவனே!

அறமும் நிறமும் வேலும் மயிலும் அழகும் உடைய பெருமாளே!

(அறிவு தரவேணும்.)

## 131

இருண்ட கடல் போன்றதும் , நரகத்துக்கு ஒப்பானதும் ஆன பிறப்பு என்பதில் நீ (என்னை) விழும்படி செய்தால்

செவிடு, குருடு, உறுப்புக் குறைவு, சிறிதேனும் வறுமை என்பன (என்னை) அணுகாதபடியும் —

தேவர்களுக்கு உள்ள உருவ லட்சணமும், உயர்ந்த குடிப்பிறப்பும், அறிவும், நீதி ஒழுக்கமும் எனக்கு வருமாறு உனது —

திருவருளைப் பாலித்து, என்னையும் (நீ) உனது மனம் வைத்து அடிமை கொள்ள வந்தருளவேணும்; (அல்லது) என்னையும் (ஒரு நிலையில் இல்லாத என்) மனத்தையும் (உன் வசப்படுமாறு) அடிமை கொள்ள வந்தருள வேணும்;

போர் முகத்தில் வெல்லப்பட்ட அசுரர்களின் தலைகள் உருள, மிகவும் பெரிய

கடல் அலறும்படி, நீண்ட (கிரௌஞ்ச) மலை பொடியாகும் படி வேலைச் செலுத்தியவனே!

கொடிய (அல்லது விரும்பத்தக்க) பாம்பணையில் இனிமை யுடன் துயில் கொள்ளும் தாமரைக் கண்ணனது (திருமாலின்) மருகனே!

கண்டங் கறுத்த சிவபிரானின் குமரனே! பழநியில் வந்து பரவும் தேவர் தம் பெருமாளே!

(அடிமை கொளவும் வரவேணும்.)

## 131-1

கூந்தல் சரிய, மொழிகள் பதற, கண்கள் உலவிக் கொலைத் தொழிலைக் காட்டக், களவு எண்ணத்துடன்

குலவு கிகிகி கிகிகி எனவு மிடறி லொலிகள்
குமுற வளையி னொலிமீற;

இளநி ரெனவு முலைக ளசைய உபய தொடையும்
இடையு மசைய மயில்போலே;

இனிய அமுத ரசமும் வடிய உபரி புரிவர்
இடரில் மயலில் உளர்வேனோ.

மிளிரு மதுர கவிதை யொளிரும் [1]அருண கிரிசொல்
விஜய கிரி சொல் அணிவோனே;

விமலி அமலி நிமலி குமரி கவுரிதருணி
[2]விபின கெமனி யருள்பாலா;

பழைய மறையின் முடிவி லகர மகர உகர
படிவ வடிவு முடையோனே.

பழன வயல்கள் கமுகு கதலி [3]பனசை யுலவ
பழநி மருவு பெருமாளே. (32)

## 132. மயில்மேற் காட்சி பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

தகர நறுமலர் பொதுளிய குழலியர்
கலக கெருவித விழிவலை படவிதி
தலையி லெழுதியு மனைவயி னுறவிடு வதனாலே-

தனயர் அனைதமர் மனைவியர் சினெகிதர்
சுரபி விரவிய வகையென நினைவுறு
[4]தவன சலதியின் முழுகியெ யிடர்படு துயர்தீர;

---

1. அருணகிரியார் வாக்கு என்பதில் இந்த அடி ஐயத்தை எழுப்புகின்றது.

2. 'புறங்காட்டிடை நேரிழையோடும்-ஆடி' சம்பந்தர் தேவாரம். தென் குரங்காடுதுறை.

3. பனசம்- பலா.

4. தவனம்- ஆசை.

குலவுதல் செய்து, கிகிகி கிகிகி எனக் கண்டத்து ஒலிகள் (புட்குரல்கள்) குமுறி எழ, வளையல்களின் ஒலி மேலெழ-

இளநீர் போன்ற முலைகள் அசைய, இரண்டு தொடைகளும் இடையும் அசைய, மயில்போல நடித்து,

இனிய அமுத ரசம் (இதழ்களினின்றும்) வடிய மேலே கலவிகளைப் புரிபவராம் (வேசையர்களால் வரும்) இடரிலும் மயக்கிலும் பட்டு அழிவேனோ!

விளங்கும் சுவை நிரம்பிய பாடல்கள் பொலிவுறும் அருணகிரி சொன்ன வெற்றிமலையன்ன புகழ் (மாலையை) அணிவோனே!

விமலி, அமலி, நிமலி, குமரி, கவுரி, இளமை உடையாள், சுடுகாட்டில் ஆடுபவள் அருளிய குமரனே!

பழைமையான வேத முடிவில் அகர, மகர, உகர (ஓம் என்னும் பிரணவ) ரூபவடிவை உடையவனே!

கழனி வயல்களும், கமுகும், வாழையும், பலாவும் விளங்கும் பழநியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(வேசையரால் வரும் -இடரில் மயலில் உளர்வேனோ.)

## 132

மயிர்ச் சாந்தும், மணமுள்ள மலர்களும் நிறைந்த கூந்தலையுடைய (பொது) மகளிரின் குழப்பந்தரும், செருக்கு உற்ற கண் வலையிற்பட, விதி தலையில் எழுதப்பட்டு, இல்வாழ்க்கையில் இருக்க வேண்டி அமைந்தபடியால்,

மக்கள், தாய், சுற்றத்தார், மனைவியர் நண்பர், பசு முதலாய பலவகைய சிந்தனை வர, ஆசைக் கடலில் முழுகி இடர் உறுகின்ற துயரம் நீங்க —

அகர முதலுள பொருளினை யருளிட
இருகை குவிசெய்து ளுருகிட வுருகியெ
அரக ரெனவல னிடமுற எழிலுன திருபாதம்-
அருள அருளுடன் மருளற இருளற
கிரண அயிர்கொடு [1]குருகணி கொடியொடு
அழகு பெறமர கதமயில் மிசைவர இசைவாயே;
சிகர குடையினி னிரைவர இசைதெரி
சதுரன் [2]விதுரனில் வருபவ னளையது
திருடி யடிபடு சிறியவ னெடியவன் மதுசூதன்-
திகிரி வளைகதை வசிதநு வுடையவ
னெழிலி வடிவின னரவுபொன் முடிமிசை
திமித திமிதிமி யெனநட மிடுமரி மருகோனே;
பகர புகர்முக மதகரி [3]யுழைதரு
வனிதை வெருவமுன் வரஅருள் புரிகுக
பரம குருபர இமகிரி தருமயில் புதல்வோனே-
பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய
நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்
பழநி மலைவரு புரவல அமரர்கள் பெருமாளே.(32)

## 133. திருவடியைப் பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

முருகு செறிகுழல் முகிலென நகில்நறு
முளரி முகையென இயலென மயிலென
முறுவல் தளவென நடைமட வனமென இருபார்வை-

---

1. குருகு- கோழி.

2. விதுரன்- (இவர்) திருதராட்டிரன் பாண்டு இவர்கட்குத் தம்பி. துரியோதனனிடம் தூது சென்றபோது கண்ணபிரான் விதுரன் வீட்டில் தங்கினார்.

3. உழை தரு வனிதை : வள்ளியம்மை.

அகர எழுத்தை முதலாகக் கொண்ட (பிரணவப்) பொருளை(நீ) உபதேசித்தருளவும், இரு கைகளையும் குவித்து உள்ளம் உருக உருகி, ஹரஹர எனக் கூறி (உனது) வலப்புறத்தும் இடப்புறத்தும் (இருபுறமும் இருந்து) போற்றுவதால் அழகிய (உனது) இரண்டு திருவடிகளை

(நீ) தந்தருளவும், அங்ஙனம் பெற்ற அருட்பேற்றால் எனது மயக்கமும் அஞ்ஞானமும் நீங்க ஒளி வீசும் வேலும் கோழிக் கொடியும் விளங்க, அழகாக மரகத மயில் மீது வர (நீ) இசைந்தருளுக;

(கோவர்த்தன) கிரியாம் குடையின் கீழே பசுக்கூட்டம் வந்து சேரக் (குழல்) இசையைக் காட்டிய சமர்த்தன்! விதுரனுடைய வீட்டுக்கு (உகந்து) வந்தவன், வெண்ணெய் திருடி அடிபட்ட சிறியவன், (திரிவிக்ரம ரூபங்கொண்ட) பெரியவன், மது என்னும் அசுரனைக் கொன்றவன் —

சக்கரம், சங்கு, கதை, வாள், வில் என்னும் பஞ்சாயுதங்களை உடைய மேகவடிவினன், (காளிங்கன் என்னும்) பாம்பின் அழகிய முடியின்மீது திமித திமி என நடனம் செய்தவன் -ஆகிய திருமாலின் மருகனே!

அழகிய புள்ளியைக் கொண்ட (திரு) முகத்தை உடைய மதகரியாக வந்த (கணபதியை) மான் பெற்ற மங்கையாம் வள்ளி அஞ்சும்படி முன்னே வரச் செய்தருளிய குகனே! பரமனே! குருபரனே! இமயமலை தந்த மயில் போன்ற பார்வதியின் புதல்வனே!

பலாவின் பழுத்த பழத்தினின்றும் கனிந்து ஒழுகிய தேன் நிறைந்த வயல்களும், கமுகமரங்களும் அடர்ந்த சோலைகள் விளங்கும் பழநிமலையில் எழுந்தருளியுள்ள அரசே! தேவர்களின் பெருமாளே!

(மயில் மிசைவர இசைவாயே.)

# 133

வாசனை நிறைந்த கூந்தல் மேகம் எனவும், கொங்கை மணமுள்ள தாமரை எனவும், சாயல் மயில் எனவும், பற்கள் முல்லை எனவும் , நடை மடப்பம் பொருந்திய அன்னத்தின் நடை எனவும், இரு கண்களும் —

முளரி மடலென இடைதுடி யதுவென
அதர மிலவென அடியிணை மலரென
மொழியு மமுதென முகமெழில் மதியென மடமாதர்;

உருவ மினையன எனவரு முருவக
வுரைசெய் தவர்தரு கலவியி னிலவிய
வுலையின் மெழுகென வுருகிய கசடனை
யொழியாமல்-

உவகை தருகலை பலவுணர் பிறவியி
னுவரி தனிலுறு மவலனை யசடனை
உனது பரிபுர **கழலிணை** பெற அருள் புரிவாயே;

அரவ மலிகடல் விடமமு துடனெழ
அரிய யனு [1]நரை யிபன்முத லனைவரும்
அபய மிகவென அதையயி லிமையவ னருள்பாலா-

அமர்செய் நிசிசர ருடலவை துணிபட
அவனி யிடிபட அலைகடல் பொடிபட
அமரர் சிறைவிட அடலயில் நொடியினில்
விடுவோனே;

பரவு புனமிசை யுறைதரு குறமகள்
பணைகொ ளணிமுலை முழுகுப னிருபுய
பணில சரவணை தனில்முள ரியின்வரு முருகோனே-

பரம குருபர எனுமுரை பரசொடு
பரவி யடியவர் துதிசெய மதிதவழ்
**பழநி** மலைதனி லினிதுறை யமரர்கள்
பெருமாளே.(34)

---

1. நரை யிபன் - வெள்ளையானையை யுடைய தேவேந்திரன்.

தாமரை இதழ்கள் எனவும், இடை துடி எனவும், வாய் இதழ் இலவ மலர் எனவும் , அடியிணைகள் மலர் எனவும், மொழி அமுதெனவும், முகம் அழகிய திங்கள் எனவும்- இவ்வாறு அழகிய மாதர்களின் —

உருவங்களை இவை இவை என்று உருவகப்படுத்திப் புகழ்ந்து அவர்கள் தரும் கலவி இன்பத்திற் பொருந்தி உலையில் அகப்பட்ட மெழுகுபோல உருகிய குற்றமுள்ளவனுக்கு, எப்போதும் —

இன்பம் தரும் கலைகள் பலவற்றையும் உணருதற்கு இடமான பிறவிக்கடலிற் கிடக்கும் குற்றமுள்ளவனுக்கு, மூடனுக்கு,- உன்னுடைய சிலம்பணிந்த கழலிணைகளைப் பெறுமாறு- அருள்புரிவாயாக;

ஒலி மிகுந்த கடலில் விடம் அமுதுடன் தோன்ற, திருமால்-பிரமன், வெள்ளை யானையை உடைய தேவேந்திரன் முதலான எல்லோரும் அபயம் என மிகவும் ஓலமிட, அந்த விடத்தை உண்ட தேவர் அருளிய பாலனே!

போர் செய்த அசுரர்களின் உடல்கள் துணிபட்டு விழ, பூமி இடியுண்ண, அலைகடல் பொடிபட, தேவர்கள் சிறையினின்றும் மீள, சத்திவேலை ஒரு நொடியிற் செலுத்தியவனே!

போற்றிச் சென்ற திருப்புனத்தின் மீது இருந்த குறப் பெண்ணின் (வள்ளியின் ) பருத்த அழகிய முலைகளில் முழுகிய பன்னிரு தோளனே! சங்குகள் விளங்கும் சரவண மடுவில் தாமரையில் எழுந்தருளிய முருகனே! (குழந்தையே)!

பரம! குருபர! என்னும் புகழ்மொழிகளால் போற்றி செய்து அடியார்கள் துதிசெய்யத், திங்கள் தவழும் பழநி மலையில் இனிதாக உறைகின்ற தேவர் பெருமாளே!

(கழலிணை பெற அருள் புரிவாயே.)

## 134 . மாதர் மீது மையலற

தனத்த தனத் தனத்த தனத்
தனத்த தனத் தனத்த தனத்
தனத்த தனத் தனத்த தனத் தனதான

கனத்திறுகிப் பெருத்திளகிப்
பணைத்துமணத் திதத்துமுகக்
கறுப்புமிகுத் தடர்த்து நிகர்த் தலமேராய்-

கவட்டையுமெத் தடக்கிமதர்த்
தறக்கெருவித் திதத்திடுநற்
கலைச்சவுளித் தலைக்குலவிக் களிகூருந்;

தனத்தியர்கட் கிதத்துமிகுத்
தனற்குண்மெழுக் கெனப்புவியிற்
றவித்திழிசொற் பவக்கடலுற் றயர்வாலே;

சலித்தவெறித் துடக்குமனத்
திடக்கனெனச் சிரிக்கமயற்
சலத்தின் வசைக் **கிணக்கமுறக்** **கடவேனோ;**

புனத்தின்மலைக் குறத்தியுயர்த்
திருக்குதனக் குடத்தினறைப்
புயத்தவநற் கருத்தையுடைக் குகவீரா-

பொருப்பரசற்கிரக்கமொடுற்
றறற்சடிலத் தவச்சிவனிற்
*புலச்சிதனக் கிதத்தைமிகுத் திடுநாதா;

சினத்தெதிர் துட் டரக்கர்தமைத்
திகைத்து விழக் கணப்பொழுதிற்
சிதைத்திடுநற் கதிர்க்கைபடைத் துடையோனே-

செருக்கொடுநற் றவக்கமலத
தயற்குமரிக் கருட்புரிசைத்
**திருப்பழநிக்** கிரிக்குமரப் பெருமானே (35)

---

*புலச்சி - ஞானமயமானவள்.

# 134

பாரமுள்ளதாய், அழுத்தமுள்ளதாய், பெருத்ததாய், நெகிழ்ச்சியுள்ளதாய், எழுச்சி உள்ளதாய், மணங்கொண்டதாய், இதம் தருவதாய், நுனி கருப்பு நிறம் மிகுத்ததாய், பரப்புள்ளதாய், மேரு (மலை) இடத்தை ஒப்பதாய் அல்லது ஒளி கொண்ட இடம் அழகுள்ளதாய்)

கபடத்தை மிகவும் உள்ளடக்கியதாய், செழிப்புள்ளதாய், மிக்க ஆடம்பரமுள்ளதாய், இன்பம் தருமாறு அணியப் பட்ட நல்ல ஆடையையும், கழுத்து அணியையும் (சங்கிலியையும்) மேற் பூண்டதாய் - இன்பமிகும் —

கொங்கைகளை உடைய பொதுமகளிர் தம் கண்களுக்கு (மகளிர்க்கு) இன்பத்துடன் ஈடுபட்டு, நெருப்பிற்பட்ட மெழுகு போலப் பூமியில் தவிப்புண்டு இழிவான சொல்லுக்கு இடமான பிறவிக் கடலிற் பட்ட சோர்வினால் —

அலுப்புற்ற வெறியிற் கட்டுண்ட மனங்கொண்ட இடக்கன் (இவன்) என்று (உலகோர்) சிரிக்க (வேசையர் தம்) மயக்குக்கும், கோபத்திற்கும், பழிப்புக்கும் இணக்கம் உற்றவனாகக் கடவேனோ!

தினைப்புனத்திலிருந்த (வள்ளி) மலைக் குறத்தியாம் (வள்ளியின்) சிறந்த கண்களும் கொங்கைக் குடங்களும் படும் மணங் கொண்ட புயத்தனே! நல்ல எண்ணத்தை உடைய குகவீரனே!

மலையரசனாம் இமவானிடத்தில் அன்புடன் சென்ற (அல்லது மலையரசனாம் நம்பிராசன் மீது கிருபை பூண்டு) (கங்கை) நீர் அணிந்த சடையினனாம் அந்தச் சிவன்போல - ஞானமயத்தளாம் வள்ளியின்பால் இன்ப இச்சை மிகவும் கொண்ட நாதனே! அல்லது, சிவனிடத் துள்ளஞான மயத்தளாம் பார்வதிக்கு இன்பம் மிகத் தரும் நாதனே!

கோபத்துடன் எதிர்த்த துஷ்ட அரக்கர்கள் திகைப்புண்டு விழ,ஒரு கணப் போதில் அவர்களை அழித்திட்ட நல்ல ஒளி வீசும் கைப் படையாம் (வேலை) உடையவனே!

களிப்புடன் நல்ல தவம் நிறைந்த தாமரைப் (பீடத்துப்) பிரமனுக்கும் திருமாலுக்கும் அருள் பாலித்த பெருமாளே! மதில் சூழ்ந்த திருப் பழநி மலைக் குமரப் பெருமாளே!

(மயலுக்கு இணக்க முறக் கடவேனோ.)

## 135. பிரசித்தம் உற

தனத்த தனத் தனத்த தனத்
தனத்த தனத் தனத்த தனத்
தனத்த தனத் தனத்த தனத் தனதான

குறித்தமணிப் பணித்துகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச்சுருளைப் பிளவோடே-

[1]குதட்டியதுப் புதட்டைமடித்
தயிற்பயிலிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வைக் கெடுத்துநகக் குறியாலே;

பொறித்ததனத் தணைத்துமனச்
செருக்கினர்கைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனிற் பிணிப்படுவித் திடுமாதர்-

புலத்தலையிற் செலுத்துமனப்
ப்ரமத்தையறப் **ப்ரசித்தமுறப்**
புரித்தருளித் திருக்கழலைத் தருவாயே;

[2]பறித்ததலைத் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள் புகத் திருநீறு-

பரப்பிய [3]தத் திருப்பதிபுக்
கனற்புனலிற் கனத்தசொலைப்
பதித்தெழுதிப் [4]புகட்டதிறற் [5]கவிராசா;

---

1.குதட்டிய துப்பு உதட்டை எனப் பிரித்துக் கொள்க.

2. சமணக் குருக்கள்மார் தமது தலைமயிரைப் பறித்துவிடுதல் வழக்கம்-'முகடூர் மயிர் கடிந்த செய்கையார்'-தேவாரம் - சம்பந்தர் I - 59 - 10.

3. தத் திருப்பதி - அந்தத் திருப்பதி; மதுரை.

4. புகட்ட - புகவிட்ட.

5. கவிராசர் - சம்பந்தர் சமணரைக் கழுவிலேற்றிய திருவிளையாடல் இங்குக் குறிக்கப்பட்டுளது. சமணரொடு செய்த வாதத்தில் நெருப்பில்

# 135

கருதிய ரத்னாபரணங்களையும் ஆடைகளையும் (முறையே) சரிப் படுத்தி உடுத்து, இருண்ட கூந்தலைக் கலைத்து, முடித்து, வெற்றிலைப் பாக்குப் பிளவுடன் —

மெல்லுகின்ற பவளம் போன்ற உதட்டை மடித்து, வேல் போன்ற கண்ணால் நெருக்கி அழைத்து, (காம) மயக்கைக் கொடுத்து, நல்லுணர்வைக் கெடுத்து, நகக் குறியாலே,

அடையாளம் இடப்பட்ட கொங்கையில் அணைத்து மனம் கர்வங் கொண்டவராய், (தம்மிடம் வந்தவர்களிடம் உள்ள) கைப் பொருளைக் கவரும் பொருட்டுக் கலவிச் சேர்க்கையிற் கட்டுப் படுத்துகின்ற (பொது) மகளிர் —

இடத்தே செலுத்துகின்ற மன மயக்கம் ஒழியவும், கீர்த்தி உறவும், அன்பு கூர்ந்தருளி (உனது) அழகிய திருவடியைத் தந்தருளுக!

(தமது) தலைமயிரைப் பறித்து விடும் கள்ள நெஞ்சுடைய சமணக் குருக்களாம் அசட்டுப் பேர்வழிகளுடைய விலா எலும்புகள் முறிந்து விழக் கழுமரங்களில் ஏறும்படி திருநீற்றை (விபூதியை).

பரவ வைத்த அந்தத் திருப்பதியாம் மதுரையில் நெருப்பிலும் நீரிலும் பெருமை வாய்ந்த திருப்பதிகம் பொறித்தெழுதப் பட்ட (ஏடுகளைப்) புகவிட்ட திறமை வாய்ந்த கவிராசனே!

---

இட்ட ஏடு வேகாமலும், ஓடுகின்ற நீரில் இட்ட ஏடு ஓடு நீரை எதிர்த்துச் செல்லவும் வைத்த திருஞான சம்பந்தப் பெருமானின் திருப்பதிகங்களின் மேன்மை இங்குப் பாராட்டப்பட்டுளது. சம்பந்தர் முருகவேளின் கூறு என்பது அருணகிரியாரது கொள்கை.

செறித்தசடைச்சசித்தரியத்
தகப்பன் [1]மதித் துகப்பனெனச்
[2]சிறக்கவெழுத் தருட்கருணைப் பெருவாழ்வே!

[3]திகழ்ப்படு [4]செய்ப் பதிக்கு ளெனைத்
தடுத்தடிமைப் படுத்தஅருட்
டிருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே(36)

## 136. மயல் அற

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தந்ததான

கலவியி லிச்சித் திரங்கி நின்றிரு
கனதனம் விற்கச் சமைந்த மங்கையர்
கயல்கள் சிவப்பப் பரிந்து நண்பொடு மின்பமுறிக்-

கனியித ழுற்றுற் றருந்தி யங்குறு
மவச மிகுத்துப் பொருந்தி யின்புறு
கலகம் விளைத்துக் கலந்து மண்டனை [5]யங்கமீதே;

குலவிய நற்கைத் தலங்கொ டங்கணை
கொடியிடை மெத்தத் துவண்டு தண்புயல்
குழலள கக்கட் டவிழ்ந்து பண்டையி லங்கம்வேறாய்க்-

---

1. மதித்து உகப்பன் என என்று பிரித்துக்கொள்க.

2. சிறக்க எழுத்து அருள் - சிறப்புறும்படி பிரணவத்தை யுபதேசஞ் செய்த.

3. 'திசைக்கருணைப் பதிக்கு ளெனைத்' என்றும் பாடம்.

4. செய்ப்பதி - வயலூர்.

5. அங்கம் - கட்டில்.

நெருங்கி அடர்ந்த சடையில் நிலவை அணிந்த அந்தத் தந்தை (சிவபிரான்) பாராட்டி மகிழ்வான் என்று சிறப்புறும் வகையில் பிரணவத்தை அவருக்கு உபதேசம் செய்த கருணைப் பெருமாளே!

விளக்கமுறும் வயலூரில் என்னைத் தடுத்தாட்கொண்டு அடிமை ஆக்கிய அருட் பெருமாளே! திருப் பழநிமலைக் குமரப் பெருமாளே!

(பிரசித்த முறத் திருக்கழலைத் தருவாயே.)

## 136

கலவி இன்பத்தில் ஆசைப்பட்டு, பரிந்து நின்று இரண்டு பருத்த கொங்கைகளை விற்பதற்கு ஒருப்பட்டு நிற்கும் வேசையராம் (மங்கையர்களின்) கயல் மீன் போலும் கண்கள் சிவக்கும்படி (அவர்கள்மீது) அன்பு பூண்டு நட்புடன் இன்பத்தில் அழுந்தி —

(கொவ்வைக்) கனி போலும் இதழ் (அமுதத்தை) பருகிப் பருகி (அடிக்கடி உண்டு), அச்செயல்களால் வரும் தன் வசம் இழத்தல் அதிகப்பட்டு (காம லீலைகளிலேயே) பொருந்தி இன்புறுகின்ற குழப்பங்களை உண்டுபண்ணிக் கூடி நெருங்கி அணைகின்ற கட்டிலின் மேல் —

குலவுகின்ற நல்ல கைகளோடும் அங்கு அணைந்து கொடி போலும் இடை துவள, குளிர்ந்த மேகம் போன்ற கூந்தற்கட்டு அவிழ, முன்பிருந்த உடற் பொலிவு வேறுபட —

குறிதரு வட்டத் தடர்ந்த சிந்துர
முகதல முத்துப் பொலிந்தி லங்கிட
கொடிய **மயற்**செய்ப் பெருந்த டந்தனில் **மங்கலாமோ;**

இலகிய சித்ரப் புனந்த னிந்துறை
குறமகள் கச்சுக் கிடந்த கொங்கைமி
னினிதுறு பத்மப் பதம்ப ணிந்தருள் கந்தவேளே-

எழுகடல் வற்றப் பெருங்கொ டுங்கிரி
யிடிபட மிக்கப் ப்ரசண்டம் விண்டுறு
மிகலர்ப தைக்கத் தடிந்தி லங்கிய செங்கைவேலா;

பலவித நற்கற்படர்ந்தசுந்தரி
பயில்தருவெற்புத் தருஞ்செழுங்கொடி
பணைமுலைமெத்தப்பொதிந்துபண்புறு கின்றபாலைப்-

பலதிசை மெச்சத் தெரிந்த செந்தமிழ்
பகரென இச்சித் துகந்து கொண்டருள்
**பழநி**யில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள்
தம்பிரானே. (37)

## 137. மாதர் நட்பு அற

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தந்ததான

முகிலள கத்திற் கமழ்ந்த வண்பரி
மளஅலர் துற்றக் கலந்தி டந்தரு
முகிழ்நுதி தைத்துத் துயர்ந்த மங்கைய ரங்கமீதே-

குறியாக, வட்டமாக, நெருக்கமாக இட்ட குங்குமப் பொட்டுள்ள முகத்தில் முத்துக்கள் போல (வேர்வைத்துளிகள்) பொலிந்து விளங்கத், தீய (காம) மயக்கை உண்டு பண்ணும் பெருங் குளத்தில் (அல்லது பெரிய வழியில்) (இடத்தில்) மழுங்கிப் போகலாமா!

விளங்கும் அழகிய (தினைப்) புனத்தில் தனித்திருந்த குறமகள், ரவிக்கை அணிந்த கொங்கைகளை உடைய மின்னொளி போன்றவள் (ஆகிய) வள்ளியின் இனிமையுள்ள தாமரை (யொத்த) பாதங்களிற் பணிந்தருளிய (கந்தவேளே)

ஏழு கடலும் வற்ற, பெரிய பொல்லாத கிரவுஞ்ச மலை இடிபட, மிகுந்த வேகத்துடன் வெளிப்பட்டு வந்த பகைவர்களாம் அசுரர்கள் பதைக்க, அழிவு செய்து விளக்கமுற்ற செங்கை வேலனே!

பல விதமான சிறந்த கற்புக் குணங்கள் நிறைந்த அழகியும், நெருக்கமுள்ள (இமய) மலை யீன்ற செழிப்புள்ள கொடி போன்ற வளுமான (பார்வதி தேவி) பருத்த கொங்கையில் மிக்கு நிறைந்த குணமுள்ள பாலை —

பல திசையில் உள்ளவர்களும் மெச்சிப் புகழும்படியாகச் செந்தமிழ்ப் பாமாலைகளைப் பாடுக என்று கூறிக் கொடுக்க - அந்தப் பாலை விருப்பமுடனும் மகிழ்ச்சி யுடனும் உட்கொண்டருளிய (தம்பிரானே!) பழநியில் மலைமீது விளங்கி நின்றருளும் தம்பிரானே!

(மயல் தடந்தனில் மங்கலாமோ!)

## 137

மேகம் போன்ற கூந்தலில் உள்ள வாசனை வீசும் நல்ல மணமலர்கள் நெருங்கும்படி சேர்ந்து, இடம் பெறும்படி விளங்கும் நக நுனியால் (குறிகளை) அழுந்தப் பதித்துத் தான் தொடர்ந்துள்ள மங்கையர்களின் உடலின் மேலே (உடலின் மேலே நகக் குறியைப் பதித்து) —

முகம்வெயர் வுற்றுப் பரந்து செங்கயல்
விழியிணை செக்கச் சிவந்து குங்கும
ம்ருகமத மத்தத் தனங்க ளின்மிசை யெங்குமேவி;

உகவுயி ரொத்துப் புயங்க ளின்புற
வுறவினை யுற்றுத் திரண்டு கொங்கள
வுறுமனை யுற்றுத் திரங்கு மஞ்சமி லொன்றிமேவி-

ஒளிதிகழ் பத்மக் கரங்க ளின்புற
முறுவளை யொக்கக் கலின்க லென்கவு
முயர் மயலுற்றுற் றிரங்கு மன்பதொ ழிந்திடாதோ;

செகமுழு தொக்கப் பயந்த சங்கரி
அடியவர் சித்தத் துறைந்த சம்ப்ரம
சிவனொரு பக்கத் துறைந்த மங்கைசு மங்கைநீடு-

திகழ்வன பச்சைப் பசங்கி *யம்பண
கரதலி கச்சுற் றிலங்கு கொங்கையள்
திருவரு ணற்பொற் பரந்தி டும்பரை யண்டமீதே;

பகலிர வற்றிட் டுயர்ந்த அம்பிகை
திரிபுரை முற்றிட் டிரண்டொ டொன்றலர்
பரிவுற வொக்கச் செயும்ப ரம்ப்ரமி யன்புகூரும்-

பதிவ்ரதை மிக்கச் சிரந்தெ ரிந்தருள்
பகிரதி வெற்பிற் பிறந்த பெண்தரு
பழநியில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள்
தம்பிரானே. (38)

---

*அம்பணம் - ஒருவகை யாழ்.

முகத்தில் வெயர்வு உற்றுப் பரவ, செங்கயல் மீன்போன்ற கண் இணைகள் செக்கச் சிவக்க, குங்குமம், கஸ்தூரி அணிந்து செருக்குள்ள கொங்கைகளின் மேலெல்லாம் பொருந்தி —

வெளிப்பட்டுத் தோன்றும் உயிரே போலும் (இவர்கள் எனக் கருதி, அவ் வேசையரோடு) புயங்கள் இன்புறும்படியாகச் சம்பந்தம் செய்து, திரண்டுள்ளதும் வாசனை கலந்துள்ளதுமான படுக்கையில் அமர்ந்து சுருக்கங் கொள்ளும் கட்டிற் படுக்கையிற் பொருந்தி யிருந்து —

ஒளி விளங்கும் தாமரை யன்ன கரங்களின் மேலுள்ள வளைகள் ஒருங்கே கலின்கல் என்று ஒலி செய்ய, மிக்க மோகம் கொண்டு அவர்களுக்காக இரக்கம் காட்டும் அன்பு ஒழியாதோ!

உலகம் முழுதும் ஒரு சேர ஈன்ற சங்கரி, அடியார்களுடைய உள்ளத்தில் உறைகின்ற சிறப்பு வாய்ந்துள்ள சிவபிரானது ஒரு புறத்தே இடங் கொண்டுள்ள மங்கை, நல்ல மங்கை, பெரிதும் —

விளங்கும் அழகிய பச்சைப் பசேல் என்ற நிறம் உடையவள், யாழ் ஏந்திய கரத்தினள், ரவிக்கை பொருந்தி விளங்கும் கொங்கையை உடையவள், திருவருள் என்கிற நல்ல செல்வத்தைப் பரப்பிப் பாலிக்கும் பராசக்தி, அண்டங்களுக்கு அப்பால் —

பகலும் இரவும் அற்றுப் போன உயர்ந்த (இடத்தில் உள்ள) அம்பிகை, திரிபுரை (மும்மூர்த்திகளுக்கும் உயர்ந்தவள்), அங்ஙனம் உயர்ந்தவளாய், மூவரும் அல்லரான (அவர்களுக்கு மேம்பட்ட மூர்த்தியான) சிவபிரான் அன்பு கொள்ளும்படி பொருந்தித் (தவம்) செய்த (அல்லது யாவும் செயும்) பரதேவதை, அன்பு மிக்க —

பதிவ்ரதை, சிறந்த (சிவபிரானது) சிரசில் விளக்க முற்றருளும் கங்கா நதி (உற்பத்தியாகும்) மலையில் (இமயமலையில்) உதித்த பெண்ணாகிய பார்வதி தந்தருளிய தம்பிரானே! பழநி மலைமீது விளங்கி நின்றருளும் தம்பிரானே! பகிரதி - கங்கையும், வெற்பிற் பிறந்த - மலைமகள் பார்வதியும், எனவும் பொருள் காணலாம்.

(மயலுற் றிரங்கும் அன்பதொழிந்திடாதோ)

## 138. திருவடி பெற

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான

அவனிதனி லேபி றந்து மதலையென வேத வழ்ந்து
அழகுபெற வேநடந்து இளைஞோனாய்-

அருமழலை யேமி குந்து குதலைமொழி யேபு கன்று
அதிவிதம தாய்வ ளர்ந்து பதினாறாய்;

சிவகலைக ளாக மங்கள் மிகவுமறை யோது மன்பர்
திருவடிக ளேநி னைந்து துதியாமல்-

தெரிவையர்க ளாசை மிஞ்சி வெகுகவலை யாயு ழன்று
திரியுமடி யேனை யுன்ற னடிசேராய்;

மவுனவுப தேச சம்பு மதிய றுகு வேணி தும்பை
மணிமுடியின் மீத ணிந்த மகதேவர்-

மனமகிழ வேய ணைந்து ஒருபுறம தாக வந்த
மலைமகள்கு மார துங்க வடிவேலா;

பவனிவர வேயு கந்து மயிலின்மிசை யேதி கழ்ந்து
படியதிர வேந டந்த கழல்வீரா-

பரமபத மேசெ றிந்த முருகனென வேயு கந்து
பழநிமலை மேல மர்ந்த பெருமாளே. (36)

## 139. மதிகெடாதிருக்க

தனதனன தான தந்த தனதான

உலகபசு பாச தொந்த மதுவான-
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்;

பூமியிலே பிறந்து, குழந்தை எனத் தவழ்ந்து, அழகு பெறும் வகையில் நடை பழகி, இளைஞனாய் —

அரிய மழலைச் சொல்லே மிகுந்துவர, மழலை மொழிகளையே பேசி, அதிக விதமாக (வயதுக்கு ஒப்ப) வளர்ந்து (வயதும்) பதினாறு ஆக —

சைவ நூல்கள், ஆகமங்கங்கள், மிக்க வேதங்கள் இவைகளை ஓதுகின்ற அன்பர்களுடைய திருவடிகளையே நினைந்து போற்றாமல் —

மாதர்கள் மீது ஆசை மிக்கு, (அதனால்) மிக்க கவலையுடன் அலைந்து திரிகின்ற அடியேனை உனது (திரு) வடிகளிற் சேர்த்தருளுக;

"சும்மா இரு" என்னும் மவுன உபதேசத்தை (சனகாதி நால்வர்க்குச்) செய்த சம்பு, திங்கள் - அறுகு - (கங்கை) நீர் - தும்பை இவைகளை அழகிய முடியின்மேல் அணிந்துள்ள மகாதேவர் —

மனம் மகிழும்படியாக அவரை அணைந்து அவரது ஒரு புறத்தில் (இடது புறத்தில்) இடங் கொண்டுள்ள மலை மகளாம் (பார்வதியின்) குமாரனே! பரிசுத்தமான கூர் வேலனே!

திருவுலா வர விரும்பி மயிலின் மேல் ஏறி விளங்கி உலகு அதிர வலம் வந்த கழல் வீரனே!

மோக்ஷ வீட்டிற் பொருந்தி விளங்கும் முருகன் என அமர்ந்து, மகிழ்ச்சியுடன் பழநிமலை மேல் அமர்ந்த பெருமாளே!

(அடியேனை உன்றன் அடி சேராய்)

## 139

உலகத்தில் உயிர், பாசம், சம்பந்தப்பட்டதான - உறவினராம் சுற்றத்தார், தாய், தந்தை, மனைவி, மக்கள் —

மலசலசு வாச சஞ்ச லமதாலென்-
மதிநிலைகெ டாம லுன்ற னருள்தாராய்;

சலமறுகு பூளை தும்பை யணிசேயே-
சரவணப வாமு குந்தன் மருகோனே;

பலகலைசி வாக மங்கள் பயில்வோனே-
பழநிமலை வாழ வந்த பெருமாளே. (40)

## 140. அரகர சிவாய எனக் கூற

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான

கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
கலைகள்பல வேதெ ரிந்து மதனாலே-

கரியகுழல் மாதர் தங்க ளடிசுவடு மார்பு தைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி;

அரகரசி வாய வென்று தினமுநினை யாமல் நின்று
*அறுசமய நீதி யொன்று மறியாமல்-

அசனமிடு வார்கள் தங்கள் மனைகள் தலை வாசல் நின்று
அநுதினமு **நாண மின்றி** **யழிவேனோ;**

உரகபட வேல்வ ளர்ந்த பெரியபெரு மாள ரங்கர்
உலகளவு மால்மகிழ்ந்த மருகோனே-

உபயகுல தீப துங்க விருதுகவி ராஜ சிங்க
உறை †புகலி யூரி லன்று வருவோனே;

---

*சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணாபத்தியம், கௌமாரம் என்பன ஆறு சமயங்கள். சைவம் - சிவனைப் பர தெய்வமாகக் கொள்ளும்;வைணவம்-திருமாலைப் பரம்பொருளாகக்கொள்ளும் சாக்தம் சத்தியைப் பரதேவதையாகக் கொள்ளும்; சௌரம் சூரியனை வழிபடும் சமயம்; காணா பத்தியம் - கணபதியை முதற் கடவுளாக வழிபடும் சமயம்; கௌமாரம் - முருகக்கடவுளைப் பரம்பொருள் என்று வழிபடும் சமயம்.

†புகலியூர் - சீகாழி.

மலம், கலம், மூச்சு (முதலிய) சஞ்சலங்களால் எனது —
புத்தி நிலை கெடாதவாறு உனது திரு அருளைத் தந்தருளுக

கங்கை நீர், அறுகம்புல், பூளை என்கிற செடிப் பூ, தும்பை - இவைகளை அணியும் சிவபிரானின் குமாரனே!

சரவண பவனே! திருமால் மருகனே!

பல கலைகளாலும், சிவாகமங்களாலும் போற்றப் படுபவனே!

பழநிமலையில் வாழ வந்து (வீற்றிருக்கும்) பெருமாளே.

(மதி நிலை கெடாமல் உன்றன் அருள் தாராய்)

## 140

கருவில் உருவாகி வந்து தோன்றி, வயதுக்கு ஒத்தபடி வளர்ந்து, கலைகள் பலவும் அறிந்து மன்மதனது சேட்டையால் —

கறுத்த கூந்தலை உடைய பெண்களின் அடிச் சுவடு மார்பில் புதைய அழுந்தி, கவலைகள் அதிகமாகி நொந்து மிகவும் வாடி —

"ஹர ஹர சிவாய" என நாள்தோறும் நினையாது நின்று ஆறு சமயங்களின் உண்மை ஒன்றும் அறியாதவனாய் —

உணவு தருவோரது மனைகளின் முன் வாயிலில் நின்று நாள்தோறும் வெட்கமின்றி அழிந்து போவேனோ;

பாம்பின் படத்தின்மேல் (கண் வளரும்) துயிலும் பெருமை வாய்ந்த பெருமாள், சீரங்கத்தில் இருப்பவர், உலகை அளந்தவர் ஆகிய திருமால் மகிழும் மருகனே!

(தாய், தந்தை எனும்) இரண்டு குலத்து வழியிலும் விளக்க முற்ற பரிசுத்தனே! வெற்றிக் கவிராஜ சிங்கமே!உறை விடமாகச் சீகாழியில் அன்று (சம்பந்த மூர்த்தியாக) வந்து தோன்றியவனே!

பரவைமனை மீதி லன்று ஒருபொழுது தூது சென்ற
பரமனரு ளால்வ ளர்ந்த குமரேசா-

பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே. (41)

## 141. ஞானம் பெற

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான

சுருளளக பார கொங்கை மகளிர்வச மாயி சைந்து
சுரதக்ரியை யால்வி ளங்கு மதனாலே-

சுருதியென வேநி னைந்து அறிவிலிக ளோடி ணங்கு
தொழிலுடைய யானு மிங்கு னடியார்போல்;

அருமறைக ளேநி னைந்து மநுநெறியி லேநடந்து
அறிவையறி வால றிந்து நிறைவாகி-

அகிலபுவ னாதி யெங்கும் வெளியுற மெய்ஞ் ஞான
இன்ப

அமுதையொழி யாத ருந்த அருள்வாயே;

பருதிமகன் வாசல் மந்த்ரி அநுமனொடு நேர்ப ணிந்து
*பரிதகழை யாமுன் வந்து பரிவாலே-

பரவியவி பீஷணன்பொன் மகுடமுடி சூட நின்ற
படைஞரொடி ராவ ணன்ற னுறவோடே;

எரிபுகுத மாறி லண்டர் குடிபுகுத மாறு கொண்ட
ரகுபதியி ராம சந்த்ரன் மருகோனே-

இளையகுற மாது பங்க பழநிமலை நாத கந்த
இமையவள்த னால்ம கிழ்ந்த பெருமாளே. (42)

---

* பரித கழையா முன் - பரிவு தக அழையாமுன் - அன்புடன் - அழைக்குமுன்.

பரவை நாச்சியாரின் மனைவாசலில் அன்று ஒரு காலத்தில் தூது நடந்த பரமன் திருவருளால் வளர்ந்த குமரேசனே!

பகையாய் நின்ற அசுரர்களுடைய சேனைகளை மடிவித்துத் தேவர்கள் சிறையினின்றும் மீளும்படி வென்று பழநிமலை மீதில் (வந்து) நின்ற பெருமாளே!

(நாணமின்றி அழிவேனோ)

## 141

சுருண்ட கூந்தற் பாரத்தையும் கொங்கையையும் கொண்ட மகளிர் வசமாக மனம் ஒருப்பட்டு, காம லீலைகளை விளக்கும் காம சாஸ்திரத்தையே —

வேதமெனப் (பாராட்டி) நினைத்து, அறிவில்லாதவர் களோடு இணங்கும் செய்கைகளை உடைய நானும் இங்கு உன் அடியார் போல —

அரிய வேதங்களையே (உண்மையாக) நினைத்து, மநுதர்ம சாஸ்திர வழியிலேயே நடந்து, அறிவு இன்னது என்பதை அறிவு கொண்டு, அறிந்து, பூரணமாய்,

சகல புவனங்கள் ஆதிய தலங்கள் எங்கும் வெளிப்பட்டு விளக்கம் உற மெய்ஞ்ஞான இன்ப அமுதத்தை ஓய்வின்றிப் பருக அருள்வாயாக.

சூரியன் மகனான சுக்கிரீவனுடைய அரண்மனை வாயில் மந்திரியாகிய அநுமனுதவியுடன் வந்து தன்னை நேராகப் பணிந்து தான் அன்புடன் அழைக்கு முன்னமே பத்தியுடனே —

(தன்னைப்) போற்றின வீபிஷணன் பொன் மகுடம் முடியிற் சூட, பகைத்து நின்ற சேனையுடன் இராவணனும் அவன் உறவினர்களும் —

எரிபட்டு அழிய, (அன்பு) மாறுதல் இல்லாத தேவர்கள் (தமது பொன்னுலகிற்) குடிபுக - மாறு (பகைமை) பூண்ட ரகுபதி (ரகு குலத்தில் வந்த தலைவன்) இராமச்சந்திர மூர்த்தியினுடைய மருகனே!

இளைய குறமகள் வள்ளியின் பங்கனே! பழநிமலை நாதனே! கந்தனே! இமையவள் (பார்வதி) மகிழ்கின்ற பெருமாளே!

(ஞான அமுதை அருந்த அருள்வாயே.)

## 142. ஆண்டருள

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான-

வனிதையுடல் காய நின்று வுதிரமதி லேயு ருண்டு
வயி றில்நெடு நாள லைந்து புவிமீதே-

மனிதருரு வாகி வந்து அநுதினமு மேவ ளர்ந்து
வயது பதினாறு சென்று வடிவாகிக்;

கனகமுலை மாதர் தங்கள் வழியில்மிக வேயு ழன்று
கனிவதுட னேய ணைந்து பொருள்தேடிக்-

கனபொருளெ லாமி ழந்து மயலில்மிக வேய லைந்த
கசடனெனை யாள வுன்ற னருள்தாராய்;

புனமதனில் வாழு கின்ற வநிதைரகு நாதர் தந்த
புதல்வியிதழூற லுண்ட புலவோனே-

பொருமதனை நீறு கண்ட அரியசிவ னாரு கந்த
புதியமயி லேறு கந்த வடிவேலா;

பனகமணி மாம தங்கி குமரிவெகு நீலி சண்டி
பரமகலி யாணி தந்த பெருவாழ்வே-

பகையசுரர் மாள வென்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதி னின்ற பெருமாளே. (43)

## 143. பிறப்பு இறப்பு அற

தனதனன தந்த தந்த தனதனன தந்த தந்த
தனதனன தந்த தந்த தனதான

மருமலரி னன்து ரந்து விடவினைய ருந்த அந்தி
[1]மதியொடுபி றந்து முன்பெய் வதையாலே-

1. மதியொடு - மதிபோல.

## 142

பெண்ணின் உடலம் காய நின்ற ரத்தத்திலே உருண்டு. (அவள்) வயிற்றில் நெடுநாள் அலைபட்டுப் (பின்னர்) பூமியில் —

மனித உருவுடன் வந்து நாளுக்கு நாள் வளர்ந்து வயது பதினாறு முடிந்து அழகனாகி —

பொன்னிறத்த கொங்கைகளை உடைய (பொது) மகளிரின் வலையில் மிகவும் அலைப்புண்டு, அன்புடனே (அவர்களை) அணைந்து (அவர் பொருட்டுப்) பொருள் தேடிப்-

பெரும் பொருள் எல்லாவற்றையும் இழந்து காம மயக்கில் மிகவும் அலைந்த குற்றமுள்ளவனாம் என்னை ஆள உனது திருவருளைத் தந்தருளுக.

தினைப்புனத்தில் வாழ்கின்ற மங்கை, ரகு நாதர் (திருமால்) தந்த புதல்வி - வள்ளி - இதழ் ஊறலை உண்ட அறிஞனே (அல்லது தேவனே)!

(புட்ப பாணத்தோடு) போர் செய்த காமனைச் சாம்பராகச் செய்த அருமை வாய்ந்த சிவனார் மகிழ்ந்த புதுமயில் ஏறும் கந்தனே! வடிவேலனே!

பாம்பணி பூண்ட சிறந்த பார்வதி (மதங்க முநிவரின் புதல்வி - மாதங்கி) குமரி, மிக்க நீலி, சண்டி (துர்க்கை), பரம கல்யாணி தந்த பெருவாழ்வே!

பகையாய் நின்ற அசுரர்களின் சேனைகளை மடிவித்து, தேவர்கள் சிறையினின்றும் மீளும்படி வென்று பழநிமலை மீதில் வந்து நின்ற பெருமாளே!

(எனை ஆள உன்றன் அருள்தாராய்)

## 143

வாசனையுள்ள தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் அனுப்ப, செய்த வினையின் பயனை அனுபவிக்க, முடிவான (பத்தாவது) மாதத்திற் பிறந்து (அல்லது மாலை மதிபோன்ற வடிவுடன் பிறந்து) முன்செய்த கொடுவினைகளால் —

வகைதனைம றந்தெ ழுந்து முலைதனைய ருந்தி யந்த
மதலையென வந்து குன்றின் வடிவாகி;

இருமயல்கொ டுந்து வண்டு பொதுவையர கம்பு குந்து
இரவுபகல் கொண்டொ டுங்கி யசடாகும்-

இருவினைபொ திந்த இந்த ஜனனமர ணந்து றந்து
னிணையடிவ ணங்க என்று பெறுவேனோ;

திருவொடுபெ யர்ந்தி ருண்ட வனமிசைந டந்தி லங்கை
திகழெரியி டுங்கு ரங்கை [1]நெகிழாத-

திடமுளமு குந்தர் கஞ்சன் வரவிடுமெல் வஞ்ச கங்கள்
செறிவுடன றிந்து வென்ற பொறியாளர்;

[2]பரிவொடும கிழ்ந்தி றைஞ்சு மருதிடைத வழ்ந்து நின்ற
பரமபத நண்ப ரன்பின் மருகோனே-

பதுமமிசை வண்ட லம்பு சுனை பலவி ளங்கு துங்க
பழநிமலை வந்த மர்ந்த பெருமாளே. (44)

## 144. அழுது புகழ் சொல்லும் அருளைப் பெற

தனதனன தனன தந்த தனதனன தனன தந்த
தனதனன தனன தந்த தனதான

விரைமருவு மலர ணிந்த கரியபுரி குழல்ச ரிந்து
விழவதன மதிவி ளங்க அதிமோக-

விழிபுரள முலைகு லுங்க மொழிகுழற அணைபு குந்து
விரகமயல் புரிய மின்ப மடவார்பால்;

---

1. நெகிழா - நெகிழவிடாத.

2. நளகூபரன், மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவரும் மதுபானஞ் செய்து ஜலக்ரீடை செய்து ஆடையின்றி நாரதர் முன்னிலையில் இருந்ததால் மரம்போல நிற்கும் நீங்கள் மரங்களாவீர் என அவரால் சபிக்கப்பெற்றனர் - அவர்களும் மருத மரமாயினர். உரலிற் கட்டப்பட்ட கண்ணன் அவ்வுரலை இழுத்துக் கொண்டு தவழ்ந்து இந்த இரட்டை மருத மரத்தின் நடுவிலே செல்ல, மரங்கள் இரண்டும் முறிந்து விழுந்தவுடன் இருவரும் சாபம் தீர்ந்து, கண்ணனைப் பரிவொடு மகிழ்ந்து இறைஞ்சிச் சென்றனர் - என்பது வரலாறு.

வந்த வகையை மறந்து, எழுந்து, முலையுண்டு அழகிய குழந்தையாக வளர்ந்து, மலைபோன்ற பருத்த வடிவை அடைந்து,

பெருத்த (காம) மயக்குடன் வாடி, பொது மகளிருடைய வீடுகளிற் புகுந்து இரவும் பகலும் (அதே வேலையாயிருந்து) ஒடுங்கி மூடனாகும்-

நல்வினை தீவினை இரண்டும் மூடிய இந்தப் பிறப்பு இறப்பு என்பவற்றை விட்டு உன் இணையடிகளை வணங்கும் பேற்றை என்று பெறுவேனோ!

இலக்குமியாம் சீதையுடன் (அயோத்தி நகரை விட்டு) நீங்கி, இருள் சூழ்ந்த காட்டில் நடந்து, இலங்கையை விளங்கும் எரிக்கு (இரை) இட்ட குரங்காம் அநுமனைக் கைவிடாத -

தீரமுள்ள ஸ்ரீராமர், கஞ்சன் அனுப்பிய நய வஞ்சகச் சூழ்ச்சிகளைக் கூர்மையாக உணர்ந்து (அவைகளை) வென்ற அறிவாளர்,

அன்புடன் மகிழ்ந்து வணங்கும் மருத மரங்களின் இடையே தவழ்ந்து நின்றவரும் பரம பதத்திலிருக்கும் நண்பருமான திருமாலின் மருகனே!

தாமரையின்மீது வண்டுகள் ஒலிக்கின்ற சுனைகள் பல விளங்கும் பரிசுத்தமான பழநிமலை மீது அமர்ந்த பெருமாளே!

(ஜனன மரணம் துறந்து...வணங்க என்று பெறுவேனோ.)

## 144

மணங் கமழும் மலர்களை அணிந்த கரிய, சுருள் உள்ள கூந்தல் சரிந்து விழ, முகம் திங்கள் போல விளங்க, அதிக காம மயக்கத்தைத் தரவல்ல —

கண்புரள, முலை குலுங்க, மொழி குழற, படுக்கையிற் புக்கு காம மோகச் செயல்களைச் செய்யும் இன்ப மாதர்களிடத்து,

இரவுபக லணுகி நெஞ்ச மறிவழிய வுருகு மந்த
இருளகல வுனது தண்டை யணிபாதம்-
எனது தலை மிசைய ணிந்து *அழுதழுது னருள்வி ரும்பி
யினியபுகழ் தனை விளம்ப அருள்தாராய்;
அரவில்விழி துயில்மு குந்த னலர்கமல மலர்ம டந்தை
அழகினொடு தழுவு கொண்டல் மருகோனே-
அடலசுர ருடல்பி ளந்து நிணமதனில் முழுகி யண்ட
அமரர்சிறை விடுப்ர சண்ட வடிவேலா;
பரவைவரு விடம ருந்து மிடறுடைய கடவுள் கங்கை
படர்சடையர் விடைய ரன்ப ருளமேவும்-
பரமரரு ளியக டம்ப முருக அறு முகவ கந்த
பழநிமலை தனில மர்ந்த பெருமாளே (45)

## 145. அகப்பொருள் - நற்றாயிரங்கல்

தனதனன தனதனன தானான தனதனன
தனதனன தனதனன தானான தனதனன
தனதனன தனதனன தானான தனதனன தனதான

இரவியென வடவையென ஆலால விடமதென
உருவுகொடு ககனமிசை மீதேகி மதியும்வர
இரதிபதி கணைக [1]ளொரு நாலேவ விருதுகுயி
லதுகூவ-
எழுகடலின் முரசினிசை வேயோசை விடையின்மணி
யிசைகுறுகி யிருசெவியி னாராச முறுவதென
இகல்புரிய மதன [2]குரு வோராத அனையர்கொடு
வசைபேச;

---

*'அழுதால் உன்னைப் பெறலாமே' - திருவாசகம் - சதகம் - 90.

1. கொல்லும் குணமுடைய ஐந்தாவது பாணம் தவிர, ஏனைய பாணங்கள் நான்கு. பாடல் 19ன் கீழ்க் குறிப்பைப் பார்க்க. 'நீல அம்பொான்' றாழிய நின்ற நாலம்பு செயும் சீலமுங்கண் டெவ்வெவர்க்கும் செப்புவாள் பூவண நாதர் உலா - 424.

2. குரு - பாரம்.

இரவும் பகலும் நெருங்கிச் சென்று, நெஞ்சு அறிவு அழிந்து போகும்படி உருகும் அந்த அஞ்ஞானம் நீங்க உனது தண்டை அணிந்த திருவடியை —

என்னுடைய தலைமீது அணிந்து, அழுது அழுது உனது திருவருளையே விரும்பி, இனிமையான உனது திருப்புகழைச் சொல்லத் திருவருளைத் தந்தருளுக.

பாம்பிற் கண்துயில் கொள்ளும் திருமால், மலர்ந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் (லக்குமி) தேவி அழகுடன் தழுவும் மேக நிறத்தினர் - (அவரின்) மருகனே!

வலிமை பொருந்திய அசுரர்களுடைய உடல்களைப் பிளந்து அவ்வுடற் கொழுப்பில் முழுகி விண்ணுலகத்துத் தேவர்களின் சிறையை ஒழித்த வீரம் வாய்ந்த கூரிய வேலனே!

கடலில் தோன்றிய விஷத்தை உண்ட கண்டத்தை உடைய கடவுள், கங்கை படர்ந்த சடையர், இடப வாகனத்தர், அன்பர்கள் உள்ளத்தில் வீற்றிருக்கும்

பரமர் - (அவர்) அருளிய கடம்ப! முருக! அறுமுகவ! கந்த! பழநிமலையில் அமர்ந்தருளும் பெருமாளே!

(அழுதழுது - புகழ் விளம்ப - அருள்வாயே)

## 145

சூரியன் என்று கூறும்படியும், வடவாக்கினி என்று சொல்லும் படியும், ஆலகால விஷம் இது என்னும்படியும் உருவு எடுத்துக் கொண்டு, ஆகாயத்தின் மேலே செல்வதாய் நிலவும் வர, இரதி கணவனாம் காமம் (தன்) பாணங் களில் (முதல்) நாலு பாணங்களையும் பிரயோகிக்க, (அவனது) வெற்றிச் சின்னமாம் (எக்காளமாகிய) குயில் கூவ —

ஏழு கடலாகிய (அவனது) முரச வாத்தியத்தின் இசையும், புல்லாங் குழலின் இசையும், விடையின் (மாடுகளுடைய) (கழுத்திற் கட்டி யிருக்கும்) மணிகளின் ஓசையும் குறுகி இரு செவிகளிலும் இருப்புச் சலாகை பாய்வது போலப் பகைமைப் போர்காட்ட, (இந்தக்) காமவேதனைப் பாரத்தை உணராத தாய்மார் பொல்லாத வசைச் சொற்களைப் பேசிக் கொள்ள —

அரஹரென வநிதைபடு பாடோத அரிதரிது
அமுதமயி லதுகருதி யாரோடு மிகல்புரிவள்
அவசமுற அவசமுற [1]ஆரோமல் தரவுமிக
[2]மெலிவானாள்-

[3]அகுதியிவள் தலையில்விதி யானாலும் விலகரிது
அடிமைகொள வுனதுபரம் ஆறாத வொருதனிமை
யவளையணை தரஇனிதி [4]னோகார பரியின்மிசை
வருவாயே;

நிரைபரவி வரவரையுளோர்சீத [5]மருதினொடு
பொருசகடு வுதையதுசெய் தாமாய [6]மழைசொரிதல்
நிலைகுலைய மலைகுடைய தாவேகொள் கரகமலன்
மருகோனே-

திருமலிய திரிநயனி [7]வாள்வீசவருகுமரி
கவுரிபயி ரவியரவ பூணாரி திரிபுவனி
நிபுடமலை யரசனருள் வாழ்வான புரணவுமை
யருள்பாலா;

பரவைகிரி யசுரர்திரள் மாசேனை தவிடுபொடி
படஅமரர் துயரகல வேலேவி யமர்பொருத
பதுமகர தலமுருக நால்வேத கரரணிக மயில்வீரா-

---

1. ஓமல் - ஊர்ப் பேச்சு.

2. சந்திரன் - காமன் - குயில் - கடல் ஓசை, புல்லாங்குழல் ஓசை, விடையின் (மாட்டின்) மணி ஓசை, மகளிர் வசைப்பேச்சு - இவை காம மிக்கார்க்கு வேதனை விளைப்பன - கந்தபுராணம் - குமாரபுரிப் படலம். 26-53 செய்யுள்களைப் பார்க்க.

3. அகுதி - திக்கற்றவள்.

4. ஓகாரம் -குறி அறிதற்கு உரியனவாம் பஞ்ச பட்சிகளின் எழுத்துக்களுள் ஓகாரம் மயிலைக் குறிக்கும்; அ-ஆ; இ-ஈ; உ-ஊ; எ-ஏ; ஒ-ஓ; என்ற எழுத்துக்களால் முறையே குறிக்கப்படுவன - வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் என்ற ஐந்து புட்கள்.

5. மருதிடைத் தவழ்ந்தது - சகடு உதைத்தது - பாடல் 143, 111-கீழ்க் குறிப்பைப் பார்க்க.

6. ஆயர்கள் மழை வேண்டி இந்திரனை ஆராதிக்க, இந்திரனது செருக்கை அடக்கவேண்டிக் கண்ணபிரான் அந்த ஆராதனையைத் தடுக்க, இந்திரன் கோபித்து எல்லா மேகங்களையும் ஏவிக் கண்ணபிரான் மேய்க்கும் பசுக்களுக்கு இடையூறு செய்யக், கண்ணபிரான் கோவர்த்தனம் என்னும் மலையை எடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லா உயிர்களையும் காத்தருளினர் - என்பது வரலாறு.

7. வாள் - ஒளி.

ஹரஹர என்று (உன்னையே நினைந்து) இப் பெண் படுகின்றபாடு சொல்லும் தரமல்ல (சொல்வது மிகக்கஷ்டம், கஷ்டம்); அமுதமும் மயிலும் போன்ற (என் மகள்) இந்த நிலை யெல்லாம் கருதி, எல்லாரோடும் பகைமைப் போர் புரிவாள்; மயக்கம் ஏற, மயக்கம் ஏற,நிறைய ஊர்ப் பேச்சுக்களும் பிறக்க, (இவள் மிகவும்) மெலிந்து போனாள்.

(இவள்) திக்கற்றவள், (இவள்) தலைவிதி இங்ஙனம் இருந்த போதிலும் (இவள்) உன்னை விட்டு விலகல் அரிது (விலகமாட்டாள்); (அல்லது இவளை நீ விலக்கல் அரிதாகும்.)-; (இவளை) அடிமை கொள்வது உனது பாரம்; பொறுக்க முடியாத (ஒரு) தன்னந் தனியளாம் இவளை அணைய (முருகா! நீ) இனிமையுடன் ஓகார உருவமுள்ள மயில் என்னுங் குதிரைமீது வந்தருளுக.

பசுக்கள் கூட்டமாய் வர மலை நிழலிலே ஒப்பற்ற குளிர்ச்சி தரும் மருத மரத்தோடு பொருதற்கு வந்த சகடு (வண்டியை) உதை செய்து, மாயமாகத் (திடீரென வந்த) மழை பொழிதல் நிலை குலையும்படி (கோவர்த்தனர்) மலையைக் குடையாகவே எடுத்துப் பிடித்த தாமரை யன்ன திருக்கரங்களை உடையவனாகிய கண்ணபிரானது (திருமாலின்) மருகனே!

நிர்மலி, முக்கண்ணி, ஒளி வீச எழுந்தருளும் குமரி, கவுரி, பயிரவி, பாம்பை ஆபரணமாகப் பூண்டுள்ள நாரி (தேவி), மூவுலகங்களுக்கும் தலைவி, நெருக்க முள்ள (இமய) மலையரசன் வளர்த்தருளிய மகளாம் ஒளி நிறைந்த உமையாள் அருளிய பாலனே!

கடலும், மலையும், அசுரர் கூட்டமாம் பெரிய சேனைகளும் தவிடு பொடியாகவும், தேவர்களுடைய துயரம் நீங்கவும், வேலா யுதத்தைச் செலுத்திப் போர் செய்த தாமரை போன்ற கைகளை உடைய முருக! நான்கு வேதங்களையும் வல்ல (ஞான) ஒளியினருக்கு அணிகலமாக விளங்குபவனே! மயில் வீரனே!

பளிதம்ருக மதகளப சேறார வளருமுலை
வநிதைகுற மகள்மகிழும் லீலாவி தரமதுர
பநுவல்தரு **பழநி**வரு கோலாக லவவமரர்
பெருமாளே. (46)

## 146. பிறவியற

தனதனன தானான தானதன தந்த
தனதனன தானான தானதன தந்த
தனதனன தானான தானதன தந்த தனதான

இருகனக மாமேரு வோகளப துங்க
கடிகடின பாடீர வாரமுத கும்ப
மிணைசொலிள நீரோக ராசல இரண்டு குவடேயோ-

இலகுமல ரேவாளி யாகிய அநங்க
னணிமகுட மோதானெ னாமிகவ ளர்ந்த
இள்முலைமி னார்மோக மாயையில்வி ழுந்து தணியாமல்;

பெருகியொரு காசேகொ டாதவரை [1]யைந்து
தருவைநிக ரேயாக வேயெதிர்பு கழ்ந்து
பெரியதமி ழேபாடி நாடொறுமி ரந்து நிலைகாணாப்-

பிணியினக மேயான பாழுடலை நம்பி
உயிரையவ மாய்நாடி யேபவ நிரம்பு
**பிறவிதனி** லேபோக மீளவுமு ழன்று **திரிவேனோ;**

கருணையுமை மாதேவி காரணி நந்த
சயனகளி கூராரி சோதரி [2]பு ரந்த
கடவுளுடன் வாதாடு காளிமலை மங்கை யருள்பாலா-

---

1. ஐந்து தரு - கற்பக விருக்ஷங்கள் ஐந்து - (விநாயகர் துதி 2ன் கீழ்க் குறிப்பைப் பார்க்க).

2. புராந்தகக் கடவுள் என்பது புரந்த கடவுள் என்றாயிற்று.

பச்சைக் கற்பூரம், கஸ்தூரி இவைகளின் கலவைச் சேறு நிரம்பவளர்கின்ற கொங்கையை உடைய மங்கை - குற மகளாம் (வள்ளி) மகிழும் லீலைகளைச் செய்தவனே! விதரணமான (வாக்கு வல்லமை நிறைந்த), சுவை நிரம்பிய, திருநெறித் தமிழாம் நூலை (தேவாரத்தை) (உலகுக்குத்) தந்த (பெருமாளே)! பழநியில் எழுந்தருளி யுள்ள (பெருங்) கோலப் பெருமாளே! தேவர் பெருமாளே!

(ஓகார பரியின் மிசை வருவாயே.)

## 146

இரண்டு பொன் மயமான பெரிய மேரு மலையோ! கலவை பூசியுள்ள உயர்ந்த குடமோ! வன்மை வாய்ந்ததாய், பச்சைக் கற்பூரம் அணிந்ததாய், கச்சு (ரவிக்கை) அணிந்ததாய் உள்ள அமுத குடமோ; (அல்லது நிறைந்த அமுத குடமோ)! இணையெனக் கூறப்படும் இளநீரோ! துதிக்கையை உடைய மலை எனப்படும் யானைபோன்ற இரண்டு குன்றுகளோ! (அல்லது யானையோ! இரண்டு குன்றமோ)!

விளங்கும் மலர்களையே பாணங்களாகக் கொண்ட மன்மத னுடைய அழகிய கிரீடமோ தான் என்று சொல்லும்படி மிக வளர்ந்துள்ள இள முலைகளை உடைய மின்னார் (பொது மகளிரின்) மோக மாயையில் விழுந்து (அம் மோகம்) குறைவு படாமல் (பொது மகளிர்களுக்குப் பின்னும் கொடுக்கப் பொருள் வேண்டி) —

தாராள மனத்துடன் ஒரு காசு கூட கொடாத லோபிகளை (நீங்கள்) (கொடையிலே) - பஞ்ச தருக்களையும் (கற்பக விருக்ஷங்கள் ஐந்தையும்) நிகர்ப்பீர்கள் என்று எதிரிலே புகழ்ந்து, பெரிய தமிழ்ப் பாக்களையே (அவர் மீது) பாடி நாள் தோறும் இங்ஙனம் இரந்து நிலை காண முடியாத —

பிணிக்கு உள்ளாகிப் பாழான இவ்வுடலை நம்பி உயிரைப் பயனிலதாகக் கருதிப், பாவ வினை நிரம்பியுள்ள பிறவியிற் சேரவே பின்னும் அலைந்து திரிவேனோ!

கருணை (நிறைந்த) உமை, மகாதேவி, எவைக்கும் காரண மானவள், ஆதிசேடன் மேல் துயில் மகிழ்ச்சியுடன் கொள்ளும் அரியின் (திருமாலின்) சகோதரி, திரிபுரத்தை எரித்த கடவுளுடன் வாதாடிய காளி, (இமய) மலையின் குமாரி அருளிய பாலனே!

கருடனுடன் வீறான கேதனம்வி ளங்கு
மதிலினொடு மாமாட மேடைகள்து லங்கு
கலிசைவரு [1]காவேரி சேவகனொ டன்பு புரிவோனே;

பரவையிடை யே [2]பாத காசுரர் விழுந்து
கதறியிட வேபாக சாதனனு நெஞ்சு
பலிதமென வேயேக வேமயிலில் வந்த குமரேசா-

பலமலர்க ளே தூவி யாரணந வின்று
பரவியிமை யோர்சூழ நாடொறுமி சைந்து
பழநிமலை மீதோர்ப ராபரனி றைஞ்சு
பெருமானே.(47)

## 147. உபதேசம் பெற

தனதனன தனனதன தத்தத் தனத்ததன
தனதனன தனனதன தத்தத் தனத்ததன
தனதனன தனனதன தத்தத் தனத்ததன தனதான

சிறுபறையு முரசுதுடி சத்தக் [3]கணப்பறையு
மொகுமொகென அதிரவுட னெட்டிப் பிடித்துமுடி
சிறுகயிறு நெடிதுகொடு கட்டிட் டிழுக்கஇனி
யணுகாதே-

சிலதமர்க ளுறவுகிளை கத்திப் பிதற்றியெடு
சுடலைதனி லிடுகனலை யிட்டுக் கொளுத்துபுனல்
திரைகடலில் முழுகெனவு ரைக்கப் படிக்குடிலை
யொழியாதே;

மறைமுறையி னிறுதிநிலை முத்திக் கிசைத்தபடி
உடலுயிர்கள் கரணவெளி பட்டுக் குணத்திரயம்
வழிபடவும் நினதடிமை யிச்சைப் படுத்துவது
மொருநாளே-

வருதுரக மயில்மணிகள் சத்திக்க நிர்த்தமிட
ஒருபதுட னிருபுயமு மட்டுத் தொடைக்கிசைய
மனமகிழ இனியமொழி செப்பிச் சிவத்தபத
மருள்வாயே;

1. காவேரி சேவகன் - 119 -ஆம் பாடலைப் பார்க்க.

2. பாதகாசுரர் - பாதக அசுரர்.

3. கணப்பறை - அதமக் கருவி (புறமுழவு) - சிலப்பதிகார உரை.

கருடனுடன் போட்டியிடுவது போல உயரத்திற் பறக்கும் கொடிகள் பிரகாசிக்கும் மதிலும், பெரிய மாட மேடைகளும், விளங்குகின்ற கலிசை என்னும் ஊரில் உள்ள காவேரி சேவகனோடு அன்பு பூண்டவனே!

கடலிடையே இருந்த பாதக அசுரர்கள் விழுந்து கதறவும், இந்திரன் தனது உள்ளத்து எண்ணம் பலித்த தென்றே செல்லவும், மயில்மேல் எழுந்தருளி வந்த குமரேசனே!

பல மலர்களைத் தூவி, வேதங்களை ஓதித் துதித்து, தேவர்கள் சூழ நாள்தோறும் மகிழ்ந்து பழநிமலை மேலே ஒப்பற்ற பராபரன் (சிவபிரான்) வணங்குகின்ற பெருமாளே!

(பிறவிதனிலே - உழன்று திரிவேனோ)

## 147

சிறு பறையும், முரசும், துடியும், சத்தம் செய்கின்ற பறையும், மொகுமொகென்று பேரொலி செய்யும்படி, உடனே (யமதூதர்கள்) எட்டிப் பிடித்துத் (தலை) முடியைச் சிறிய (பாசக்) கயிற்றால் நெடுநேரம் கட்டி இழுக்க, இனிப் (பிழைப்பது அரிது - பயனில்லை என்று கருதி) தூரத்தி லிருந்தே —

சில உறவினர்கள் - சுற்றத்தார்கள் கூச்சலிட்டுப் பிதற்றி (உடலை) எடுத்துக் கொண்டுபோய்ச் சுடலையில், வைக்க வேண்டிய தீயை வைத்துக் கொளுத்திய (பின்பு), நீரில் - அலை வீசும் கடலில் முழுகுங்கள் எனச் சொல்லும் படிக்குள்ள இவ்வுடல் எடுத்தல் நீங்காதோ!

வேதநூல்களில் முடிவாகச் சொல்லப்பட்ட நிலையாம் முத்தி பெறுதற்குச் சொல்லிய வழிப்படி, உடலும்-உயிர்களும், இந்திரியங்களும் பரவெளியிற் சம்பந்தப்பட்டு, (அதனால்) முக்குணங்களும் வழிப்பட்டு ஒழுக, உனது அடிமையாகிய எனக்கு (உன்மீது) இச்சை வரும்படி (நீ) என்னை ஆண்டருளும் ஒரு நாளுங் கிடைக்குமோ!

நீ ஏறி வரும் குதிரையாம் மயில், மணிகள் சத்தம் செய்யும்படிநடனம் செய்ய, ஒரு பத்துடன் இரண்டு (பன்னிரண்டு) புயங்களும் மணம் கமழும் மாலைக்குப் பொருந்தி விளங்க, மனம் மகிழ, இனிய மொழியைக் கூறி, (உனது) சிவந்த பாதங்களை அருள்வாயே!

நறையிதழி யறுகுபல புட்பத் திரட்களொடு
சிறுபிறையு மரவுமெழி லப்புத் திருத்தலையி
னளினமுற அணிசடையர் மெச்சிப் ப்ரியப்படவு
மயிலேறி

[1]நவநதிகள் குமுகுமென வெற்புத் திரட்சுழல
[2]அகிலமுத லெழுபுவன மெத்தத் திடுக்கிடவும்
[3]நவமணிகள் உரகனுடல் கக்கத் துரத்திவரு
முருகோனே;

குறவர்முனை கெடமனது வெட்கப் படக்குடிலில்
மலையிலெழு தினையிதணில் வைத்துச் சிறுக்கியிரு
குவிமுலையு மணியிடையு மெச்சிப் புணர்ச்சிசெயு
மணவாளா-

குறுமுநிவ னிருபொழுதும் அர்ச்சித்து முத்திபெற
அறிவுநெறி தவநிலைகள் செப்புத் தமிழ்க்கினிய
குருகுமர **பழநி**வளர் வெற்புத் தனிற்றிகழு
பெருமாளே. (48)

## 148. ஆண்டருள

தனதனன தானந்த தத்ததன தானதன
தனதனன தானந்த தத்ததன தானதன
தனதனன தானந்த தத்ததன தானதன தனதான

சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்துவித மானபர
சுடரொளிய தாய்நின்ற நிட்களசொ ரூபமுத
லொருவாழ்வே-

துரியநிலை யேகண்ட முத்தரித யாகமல
மதனில்விளை யாநின்ற அற்புதசு போதசுக
சுயபடிக மாவின்ப பத்மபத மே அடைய உணராதே;

---

1. நவநதிகள் - கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, சிந்து, காவேரி, கோதாவரி, சோணை, துங்கபத்திரை; சோணை -பாடலி புத்திரத்துக்கு அருகில் கங்கையோடு கலக்கும் ஒரு நதி.

2. ஏழுலகம் - பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம்.

3. நவமணிகள் - கோமேதகம், நீலம். பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம்.

மணமுள்ள கொன்றை, அறுகு, பல மலர்க் குவியல்களோடு சிறு பிறை, பாம்பு, அழகிய (கங்கை) நீர்-இவை (தமது) சிறந்த சிரசில் இனிது விளங்க அணிந்துள்ள சடையராம் (சிவபிரான்) மெச்சிப் பிரியப்பட, மயிலில் ஏறி.

(அந்த மயில்) நவ நதிகளும் குமுகுமு என்று கலங்க, மலைக் கூட்டங்கள் சுழற்சியுற, பூலோகம் முதலான ஏழு உலகங்களும் மிகவும் திடுக்கிட நவமணிகளையும் பாம்பு தனது உடலினின்றும் கக்கத் துரத்தி வரும் முருகனே!

குறவர்களுடைய துணிவு அழிய, மனது வெட்கப்பட, குடிசையிலும், மலையில் உள்ள தினைப்புனத்துப் பரணிலும் இருந்த (வள்ளிப்) பெண்ணின் இரண்டு குவிந்த கொங்கைகளையும் அழகிய இடையையும் பாராட்டிப் புணர்ந்த மணவாளனே!

அகத்திய முநிவர் (காலை மாலை) இரு போதிலும் அருச்சித்து முத்தி அடையும்படி (அவருக்கு) அறிவு வழியையும் (ஞான மார்க்கத்தையும்) தவ நிலைகளையும் சொல்லிய - தமிழுக்கு இனிய குருவே! குமரனே! பழநியில் உள்ள மலையிலே விளங்கும் பெருமாளே!

(இனிய மொழி செப்பிச் சிவந்த பதம் அருள்வாயே.)

## 148.

வேத முடிவாய் மோன நிலையைக் காட்டுகின்ற அறிவு மயமாம் பரம ஞான சிவ சமய வடிவாய் விளங்கி எழுந்தருளும் இரண்டற்ற, பரஞ்சுடர் ஒளியாய் நிற்கின்ற களங்கமில்லாத சொரூபமுள்ள, முதன்மையான ஒப்பற்ற வாழ்வே!

தன் மயமாய் நிற்கும் உயர்ந்த யோக நிலையைக் கண்ட முத்திக்கு உரிய பெரியோரது உள்ளத் தாமரையில் உண்டாகின்ற அற்புதமான மெய்ஞ்ஞான சுகமதாய், சுயஞ் சோதியாய், ஸ்படிகம் போல (மாசற்ற) பேரின்ப நிலையாயுள்ள, (உனது) தாமரை யன்ன பாதங்களைச் சேர அறியாது —

கருவிலுரு வேதங்கு சுக்கிலநி தானவளி
பொரும அதி லேகொண்ட முக்குணவி பாகநிலை
கருதவரி யாவஞ்ச சக்கபட மூடியுடல் வினைதானே-

கலகமிட வேபொங்கு குப்பைமல வாழ்வுநிஜ
மெனவுழலு மாயஞ்செ னித்தகுகை யேஉறுதி
கரு [1]தசுழ மாமிந்த மட்டைதனை யாள உன
தருள்தாராய்;

ஒரு நியம மேவிண்ட சட்சமய வேதஅடி
முடிநடுவு மாயண்ட முட்டைவெளி யாகியுயி
ருடலுணர்வ தாயெங்கு [2]முற்பனம தாக அம
ருளவோனே-

[3]உததரிச மாமின்ப புத்தமிர்த போகசுக
முதவுமம லாநந்த சத்திகர [4]மேவுணர
வுருபிரண வாமந்த்ர கர்த்தவிய மாகவரு குருநாதா;

பருதிகதி ரேகொஞ்சு நற்சரண நூபுரம
தசையநிறை பேரண்ட மொக்கநட மாடுகன
பதகெருவி தாதுங்க வெற்றிமயி லேறுமொரு
திறலோனே-

பணியுமடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
[5]சரவணப வாவொன்று வற்கரமு மாகிவளர்
பழநிமலை மேனின்ற சுப்ரமணி யாவமரர்
பெருமானே. (49)

---

1. அசுழம் - நாய்.

2. உற்பனம் - தோற்றம்.

3. உத தரிச மாம் - ஜலத்தோற்றம் போல ஊறுகின்றதாகிய.

4. மேவு உணர் அ உரு பிரணவ மந்த்ரம் -பொருந்திய அறிவுருவ மாகிய அந்தப் பிரணவ மந்திரம்.

5. பழநிமலை - 'சரவணபவா' என்னும் ஆறெழுத்து ஒன்றும் மலை-அஃதாவது பழநிமலை சடாக்ஷர மலையாம்; ஆதலினன்றோ 'சிவமயமாம் நின் பழநி'எனத் திருப்புகழிலும் (156) -'படிக்கின்றிலை பழநித் திருநாமம்' எனக் கந்தரலங்காரத்திலும் சுவாமிகள் பாராட்டியுள்ளார். சடாக்ஷரத்தை ஓதும் பலன் பழநித் திருநாமத்தை ஓதுவதால் கிட்டும் என்க.

கருவில் உருவாய்த் தங்கியுள்ள சுக்கிலத்தொடு ஆதி காரணமாயுள்ள (பிராண) வாயு வந்து பூரிக்க - அத்தகைய சேர்க்கையால் வந்த - (சத்துவ, ராஜஸ, தாமதம் எனப்பட்ட) மூன்று குணங்களின் வேறுபட்ட நிலையும், எண்ணுதற்கு அரிதான வஞ்சகமும், சூதும், மூடி, உடலில் வினைகள்

கலகப் போர் செய்ய, மேலெழுந்து வரும் குப்பைபோல, மாசு உள்ள, (இவ்) வாழ்வை மெய்யென்று திரிபவனும், மாயத்தின் பிறப்பிடமாம் குகைபோன்ற (இவ்வுடல்) நிலையுள்ளதென்று எண்ணுகின்ற நாயுமாகிய இந்த மூடனை ஆண்டருள நீ அருள்புரிவாயாக!

ஒப்பற்ற விதி முறைகளை வெளியிடுகின்ற ஆறு சமயங்களுக்கும். வேதங்களுக்கும் அடியும், முடியும், நடுவுமாய் விளங்கி, அண்டமாகிய முட்டையினின்றும் வெளிப்பட்டு உயிரென்றும், உடல் என்றும், உணர்வு என்றும் வகைப்பட்டு எங்கும் தோற்றமதாய் அமர்தல் உள்ளவனே!

ஜலத்தோற்றம் போல ஊறுகின்றதாகிய இன்பகரமான, புதிய அமுத போக சுகத்தைத் தருகின்ற மாசற்ற ஆனந்தனே! சக்தி வேலைக் கையிலேந்தியவனே! பொருந்திய அறிவுருவமாகிய அந்தப் பிரணவ மந்திரத்துக்குத் தலைமைப் பொருளாக எழுந்தருளியுள்ள குருநாதனே!

சூரியனது ஒளி கொஞ்சுவது போல ஒளி வீசும் அழகிய காலின் பாத கிண்கிணி அசைய, நிறைந்த பெரிய அண்டங்களில் எல்லாம் நடனம் செய்கின்ற பெருமை தங்கிய திருவடிகளை உடையவனே! செருக்கும், உயர்ச்சியும், ஜெயமும் கொண்டுள்ள மயிலேறும் ஒப்பற்ற ஆற்றல் உடையவனே!

பணிகின்ற அடியார் தமது உள்ளத்தில் மெய்ப் பொருளாகக் கருதிப் போற்றி செய்யும் சரவணபவா என்னும் ஆறெழுத்துக்கள் பொருந்திய வலிய பேரொளியாகி வளர்கின்ற **பழநிமலை** மேல் வீற்றிருக்கின்ற சுப்பிரமணியனே! தேவர் பெருமாளே!

(இந்த மட்டைதனை ஆள உனதருள் தாராய்.)

## 149. மயில்மீது வருக

*தனதனன தத்தான தானான தானதன*
*தனதனன தத்தான தானான தானதன*
*தனதனன தத்தான தானான தானதன தனதான*

தலைவலி [1]மருத்தீடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி யணுகாதே-

[2]தலமிசை யதற்கான பேரோடு கூறியிது
பரிகரி யெனக்காது கேளாது போலுமவர்
சரியும்வய துக்கேது தாரீர்சொ லீரெனவும் விதியாதே;

உலைவறவி ருப்பாக நீள்காவின் வாசமலர்
வகைவகை யெடுத்தேதொ டாமாலி காபரண
முனதடியி னிற்சூட வேநாடு மாதவர்க ளிருபாதம்-

உளமது தரித்தேவி னாவோடு பாடியருள்
வழிபட எனக்கேத யாவோடு தாளுதவ
உரகம தெடுத்தாடு [3]**மேகார மீதின்மிசை வரவேணும்;**

அலைகட லடைத்தேம காகோர ராவணனை
மணிமுடி துணித்தாவி யேயான ஜானகியை
அடலுட னழைத்தேகொள் மாயோனை மாமனெனு
மருகோனே-

---

1. மருத்தீடு - 296 ஆம் செய்யுளைப் பார்க்க.

2. 'தவிர்வகை யதற்கான' 'பரிகரியெனிற்' 'தானீர் சொலீர்' -எனவும் பாடம்.

3. மேகாரம் - மயில். 'மேகார வாசி மிசை வருவாயே' என்றும் பாடம்.

## 149

தலைவலி, வசிய மருந்திடுதலால் வரும் நோய், காமாலை, சோகை (ரத்தமின்மை), சுரம், கண்ணோய், வறட் சூலை வலிப்பு வறள் வலிப்பு எனப்படும் வயிற்றுவலி, காசம் (ஈளைநோய்)- அதன் காரணமான மூச்சு வேதனை - நீர் சம்பந்தமான மிக்க நீர் கோத்தல் - நீரிழிவு - என்னும் நோய்கள், கொடிய விஷ சம்பந்தமான நோய்கள், பிரபஞ்ச மாயையால் வரும் விகாரமான பிணிகள் (என்னை) அணுகாத படிக்கும் —

பூமியில் அந் நோய் போகவேண்டி அதற்கான பேர்களோடு(நோய் வேதனையைச்)கூறி, இது நீங்குதற்கு வழி யாது என்று கேட்க, (அவர்கள்) காது கேளாது போலப் போகின்றவர்கள் (சிலர்), மிக மூத்த வயதாய் விட்டதே (உங்களுக்கு), என்னதான் கொடுப்பீர்கள், சொல்லுங்கள் (என்பவர் சிலர்) - என்றெல்லாம் பிறர் கூறும்படியான விதியை என் தலையில் எழுதிவிடாத படிக்கும் - (நான்)

ஊக்கக் குறைவு இன்றி (ஊக்கத்தடன்), விருப்புடன், பெரிய பூந்தோட்டத்தில் உள்ள மணமுள்ள மலர்களை வகை வகையாக எடுத்துத் தொடுத்து மாலை வகைகளில் ஆபரணங்கள் போல அமைத்து உனது திருவடியிற் சூடுதற்கே மனம் நாடுகின்ற சிறந்த தவ சிரேஷ்டர்களுடைய இரண்டு பாதங்களையும் —

உள்ளத்தில் தரித்தே, ஆய்ந்த அறிவுடன் பாடி, (உனது) திரு அருளால் (உன்னை) வழிபடுதற்கு என்மீது அன்பு கூர்ந்து (உனது) தாளை உதவ - பாம்பை எடுத்து (உதறி) ஆடும் மயில்மீது வந்தருள வேணும்.

அலைகடலை அடைத்து மகா கோரமான ராவணனுடைய மணி முடிகளை அறுத்துத் தள்ளி, உயிருக்கு ஒப்பான சீதாபிராட்டியைத் தனது (புய) வலியால் அழைத்துக் கொண்ட மாயவனை (திருமாலை) மாமன் என அழைக்கும் மருகனே!

அறுகினை முடித்தோனை யாதார மானவனை
மழுவுழை பிடித்தோனை [1]மாகாளி நாணமுனம்
அவைதனில் நடித்தோனை மாதாதை யேஎனவும்
வருவோனே;

பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை
யிருசரண வித்தார வேலாயு தாவுயர்செய்
பரண்மிசை குறப்பாவை தோள்மேவ மோகமுறு
மணவாளா-

பதுமவய லிற்பூக மீதேவ ரால்கள் துயில்
வருபுனல் பெருக்காறு காவேரி சூழவளர்
பழநிவரு கற்பூர கோலாக லாவமரர்
பெருமாளே. (50)

## 150. வாழ்வு பெற

தனன தானன தானா தானா
தனன தானன தானா தானா
தனன தானன தானா தானா தனதான

கலக வாள்விழி வேலோ சேலோ
மதுர வாய்மொழி தேனோ பாலோ
கரிய வார் குழல் காரோ கானோ துவரோவாய்-

களமு நீள்கமு கோதோள் வேயோ
உதர மானது மாலேர் பாயோ
களப வார்முலை மேரோ கோடோ இடைதானும்;

இழைய தோமலர் வேதா வானோ
னெழுதி னானிலை யோவாய் பேசீ
ரிதென மோனமி னாரே பாரீ ரெனமாதர்-

1. "கொடிய வெஞ்சினக் காளி இக் குவலயம் முழுதும் முடிவு செய்வனென் றெழுந்த நாள்... அவள் செருக்கு அழிவுற, அழியாக் கடவுள் ஆடலால் வென்றதோர் வடவனம்" (வடவனம் - திருவாலங்காடு) - கந்த புராணம் - வழிநடைப் படலம்.

அறுகம் புல்லை முடித்தவனும், உயிர்களுக்கெல்லாம் ஆதார மானவனும், மழு, மான் இவைகளை ஏந்தியவனும், மஹா காளி வெட்கப்படும்படி முன்பு சபையில் (திருவாலங் காட்டில்) நடித்தவனும் ஆகிய சிவபிரானைச் சிறப்புற்ற தந்தையே என்றழைக்க வந்தவனே!

பல கலைகளைப் படித்து ஓதும் கவிகளுடைய நாவில் உறைகின்ற இரண்டு திருவடிகளை (அல்லது பெருமை வாய்ந்த திருவடிகளை) உடைய புலவரேறே! வேலாயுதனே! உயரத்திற் கட்டப்பட்ட பரண்மீதிருந்த குறப்பெண் (வள்ளியின்) தோளைச் சேர்வதற்கு ஆசை கொண்ட மணவாளனே!

தாமரை மலர்கின்ற வயலிலும், கமுக மரத்தின் மீதும் வரால் மீன்கள் துயிலும்படி வருகின்ற நீர்ப் பெருக்கை உடைய ஆறாகிய காவேரி சூழ விளங்கும் பழநியில் எழுந்தருளியுள்ள பச்சைக்கற்பூரம் ஆகிய மணங்கள் கமழும் அலங்கார ஆடம்பரனே! தேவர் பெருமாளே!

(மேகார மீதின் மிசை வரவேணும்.)

## 150

கலக்கம் தரும் வாள் போன்ற விழி வேலோ அல்லது சேல் மீனோ! இனிய வாய்ச்சொல் தேனோ பாலோ! கறுத்த நீண்ட கூந்தல் (கரிய) மேகமோ! (இருண்ட) காடோ! பவளமோ வாய் —

கழுத்து நீண்ட கமுகோ! தோள் மூங்கிலோ! வயிறானது திருமால் பள்ளிகொள்ளும் அழகிய பாயாகிய ஆலிலையோ! கலவை பூசின கச்சணிந்த கொங்கை மேரு மலையோ! யானையின் தந்தமோ - இடைதான்

நூலோ! மலரில் வீற்றிருக்கும் பிரமன் (இடையை) எழுதினானோ இல்லையோ! வாய் திறந்து பேசுங்கள்! இதென்ன மௌனம் சாதிக்கிறீர்களே! மின் போன்ற பெண்மணிகளே பாருங்கள் - என்றெல்லாம் மாதர்களுடைய —

இருகண் மாயையி லேமுழ் காதே
யுனது காவிய நூலா ராய்வே
னிடர்ப டாதருள் **வாழ்வே நீயே** **தரவேணும்;**

அலைவிலா துயர் வானோ ரானோர்
நிலைமை யேகுறி வேலா சீலா
அடியர் பாலரு ளீவாய் [1]நீபார் மணிமார்பா-

அழகு லாவுவி சாகா வாகா
ரிபமி னாள்மகிழ் கேள்வா தாழ்வா
ரயலு லாவிய சீலா கோலா கலவீரா;

வலபை கேள்வர்பி னானாய் கானார்
குறவர் மாதும ணாளா நாளார்
[2]வனச மேல்வரு தேவா மூவா மயில்வாழ்வே-

மதுர ஞானவி நோதா நாதா
பழநிமேவுகு மாரா தீரா
மயுர வாகன தேவா வானோர் பெருமாளே. (51)

## 151. திருவடியைச் சிந்திக்க

தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா தனதான

கொந்துத் தருகுழ லிருளோ புயலோ
விந்தைத் தருநுதல் சிலையோ பிறையோ
கொஞ்சிப் பயில்மொழி அமுதோ கனியோ
விழிவேலோ-

கொங்கைக் குடமிரு கரியோ கிரியோ
வஞ்சிக் கொடியிடை துடியோ [3]பிடியோ
கொங்குற் றுயரல்கு லரவோ ரதமோ எனுமாதர்;

திந்தித் திமிதிமி திமிதா திமிதோ
தந்தித் திரிகிட கிடதா எனவே
சிந்திப் படிபயில் நடமா டியபா விகள்பாலே-

---

1. நீபார் - நீபம் ஆர்.

2. வனசம் - சரவணப் பொய்கையிலுள்ள பதுமப் பாயல். "தாமரை...தோன்றிய அண்ணல்" -சிந்தாமணி 994.

3. 'ஒரு பிடி நுசுப்பினாளை' -சிந்தாமணி 613. 'ஒரு பிடி நுசுப்பினள்' -பெருங்கதை 2-3-216.

இரண்டு கண்ணெனும் மாயையில் (நான்) முழுகாமல் உன்னுடைய பிரபந்த நூல்களை ஆராய்வேன் இடர்கள் எவையும் என்னைப் பீடியாத வகைக்கு (திரு) அருள் (நிறைந்த) வாழ்வை நீயே (தயை புரிந்து - எனக்குத்) தர வேணும்.

அலைச்சல் இல்லாதபடி உயர்ந்த தேவர்களுடைய நிலைமையைக் கவனித்துப் பரிபாலிக்கும் வேலனே! சீலனே! அடியார் மாட்டுத் திருவருள் பாலிப்பவனே! கடப்ப மாலை அணிந்த அழகிய மார்பனே!

அழகு பொலியும் விசாகனே! அழகு நிறைந்துள்ள யானையால் வளர்க்கப்பட்ட தேவசேனை மகிழ்கின்ற கணவனே! (உன்னைப்) பணிந்து தாழ்பவர்களுடைய அருகிலே உலவும் சீலனே! ஆடம்பர வீரனே!

வல்லபையின் கணவனான கணபதிக்குப் பின் வந்தவனே (தம்பியே)! காட்டில் வளர்ந்த குறப்பெண் (வள்ளியின்) மணவாளனே! புதிய தாமரை மலர் மீது எழுந்தருளின தேவனே! முதுமை அறியாத மயில் வாழ்வே!

இனிய ஞான விநோதனே! நாதனே! பழநிமலையில் வீற்றிருக்கும் குமரனே! தீரனே! மயில்வாகனக் கடவுளே! தேவர் பெருமாளே!

(இடர்படா தருள் வாழ்வே நீயே தரவேணும்.)

## 151

பூங்கொத்துக்கள் உள்ள கூந்தல் இருளோ மேகமோ! விசித்திரமான நெற்றி வில்லோ பிறையோ! கொஞ்சிப் பேசும் மொழி அமுதமோ பழமோ! கண் வேலாயுதமோ —

கொங்கைக் குடங்கள் இரண்டு யானையோ மலையோ, வஞ்சிக் கொடி போன்ற இடை துடியோ (உடுக்கையோ), ஒரு பிடியில் அடங்கும் அளவினதோ! வாசனை கொண்டு உயர்ந்த அல்குல் பாம்போ, தேரோ! என உவமை கூறத் தக்க மாதர்கள் —

'திந்தித் திமிதிமி......திரிகிட கிடதா' என்று "சிந்து" எனப் படும்இசைப் பாவை இவ்வண்ணம் பயின்று அதற்குத் தக்கபடி நடமாடும் பாவியராம் வேசையரிடத்தே —

சிந்தைத் தயவுகள் புரிவே னுனையே
வந்தித் தருள்தரு மிருசே வடியே
சிந்தித் திடமிகு மறையா கியசீ ரருள்வாயே;

[1]வெந்திப் புடன்வரு மவுணே சனையே
துண்டித் திடுமொரு கதிர்வே லுடையாய்
வென்றிக் கொருமலை யெனவாழ் மலையே தவவாழ்வே-

விஞ்சைக் குடையவர் தொழவே வருவாய்
கஞ்சத் தயனுட னமரே சனுமே
விந்தைப் பணிவிடை புரிபோ தவர்மே லருள் கூர்வாய்;

தொந்திக் கணபதி மகிழ்சோ தரனே
செங்கட் கருமுகில் மருகா குகனே
சொந்தக் குறமகள் கணவா திறல்சேர் கதிர்காமா-

சொம்பிற் பலவன முதிர்சோ லைகள்சூழ்
இஞ்சித் திருமதிள் புடைசூ ழருள்சேர்
துங்கப் பழநியில் முருகா இமையோர் பெருமாளே.(52)

## 152. திருவடியைச் சிந்திக்க

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன தனதான

ஆல காலமெ னக்கொலை முற்றிய
வேல தாமென மிக்கவி ழிக்கடை
யாலு மோகம்வி ளைத்துவி தத்துட னிளைஞோரை-

ஆர வாணைமெ யிட்டும றித்துவி
கார மோகமெ ழுப்பிய தற்குற
வான பேரைய கப்படு வித்ததி விதமாகச்;

1. வெந்திப்பு - பெந்திப்பு: கட்டு.

மனம் அன்பு கூர்ந்த செயல்களைச் செய்யும் நான் உன்னையே வணங்கித் திருவருளைப் பாலிக்கும் உனது இரண்டு சேவடிகளையும் தியானிக்க விசேடித்துள்ள ரகசியமான சிறப்புப் பொருளை உபதேசித் தருள்-வாயாக.

மனக்கொதிப்புடன் வந்த (அல்லது உறவினராம் கட்டுடன் வந்த) அசுரேசனாம் சூரனைத் துண்டித்த ஒப்பற்ற ஒளி வீசும் வேலாயுதத்தை உடையவனே! வெற்றிக்கே ஒரு மலை இவர் எனச் சொல்லும்படி வாழ்கின்ற மலையே! தவத்தினர்க்கு வாழ்வே!

மாய வித்தை வல்ல (திருமால்) - பதினென் கணத்தருள ஒருவராம் விஞ்சையர் - வித்தியாதரர்; அல்லது ஞானிகள்) தொழ வருபவனே! தாமரை மலரில் உள்ள பிரமனும் தேவர் தலைவனாம் இந்திரனும் அழகிய பணி விடைகளைச் செய்யும்போது அவர்பால் அருள் மிகக் கொள்பவனே!

தொந்திக் கணபதி மகிழும் சகோதரனே! சிவந்த கண்களை உடையவரும் கரிய மேகம் போன்றவருமான திருமாலின் மருகனே! குகனே! உனக்குச் சொந்தமாம் குறமகள் வள்ளியின் கணவனே! திறமை வாய்ந்த கதிர்காம வாசனே!

அழகு வாய்ந்த பல வளங்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்ததும், கோட்டைத் திருமதில் ஆதிய மதில்கள் சுற்றி யுள்ளதும், அருள் பாலிப்பதும், பெருமை வாய்ந்தது மான பழநியில் வீற்றிருக்கின்ற முருகனே! தேவர் பெருமாளே!

(சேவடியே சிந்தித்திட மறையாகிய சீர் அருள்வாயே.)

## 152

ஆலகால விஷம் எனவும், கொலைத்தொழில் முற்றிய வேற்படை எனவும், கூறத்தக்க மிகக் கொடிய கண்ணின் கடையாலும் (கடைக் கண்ணாலும்), காம இன்பத்தை விளைவித்து பலவித வகையில் இளைஞர்களை —

நிரம்ப ஆணைகளை உண்மைபோல உரைத்து, (வழி) மறித்துப், பொல்லாத மோகத்தை உண்டுபண்ணி, அதற்கு வசப்பட்ட பேர்வழிகளைத் (தங்கள்) கைவசப் படுத்திப் பலவிதமாக,

சால மாலைய ளித்தவர் கைப்பொருள்
மாளவே சிலு கிட்டு மருட்டியெ
சாதி பேதம றத்தழு வித்திரி மடமாதர்-

தாக போகமொ ழித்துஉ னக் [1]கடி
யானென் வேள்விமு கத்தவ முற்றிரு
தாளை நாளும்வ ழுத்திநி னைத்திட அருள்வாயே;

வால மாமதி மத்தமெ ருக்கறு
காறு பூளைத ரித்தச டைத்திரு
வால வாயன ளித்தரு ளற்புத முருகோனே-

மாய மானொட ரக்கரை வெற்றிகொள்
வாலி மார்புதொ ளைத்திட விற்கொடு
வாளி யேவிய மற்புய னச்சுதன் மருகோனே;

நாலு-வேதநவிற்றுமுறைப்பயில்
வீணை நாதனு ரைத்தவ னத்திடை
நாடி யோடிகு றத்தித னைக்கொடு வருவோனே-

நாளி கேரம்வ ருக்கைப ழுத்துதிர்
சோலை சூழ்பழ நிப்பதி யிற்றிரு
ஞான பூரண சத்தித ரித்தருள் பெருமாளே. (53)

## 153. பொது மகளிர் உறவு அற

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன தனதான

ஓடி யோடி யழைத்துவ ரச்சில
சேடி மார்கள் பசப்பஅ தற்குமு
னோதி கோதி முடித்தவி லைச்சுரு ளதுகோதி-

நீடு வாச நிறைத்த அ கிற்புழு
கோட மீது திமிர்த்தத னத்தினில்
நேச மாகி யணைத்தசி றுக்கிக ளுறவாமோ;

1. அடியா னென் - அடியா னென. 2. வேள்வி - ஆராதனை.

நிரம்பக் காம மயக்கத்தைத் தந்து, அவர்களுடைய கையில் உள்ள பொருள் அத்தனையும் வற்றிப் போம்படி, சண்டையிட்டும் மயக்கியும் சாதிபேதமின்றித் தழுவித் திரிகின்ற பேதைமை கொண்ட மாதர்களின் மீதுள்ள

காம ஆசையை ஒழித்து உனக்கு அடியானென ஆராதனை ஆகிய தவ ஒழுக்கத்தை மேற்கொண்டு (உனது) இருதாளை நாள்தோறும் போற்றி நினைக்கும் வண்ணம் அருள் புரிவாயாக!

முற்றாத சிறந்த திங்களையும் (இளம் பிறையையும்), ஊமத்தம், எருக்கு, அறுகு, (கங்கை) ஆறு, பூளைப்பூ - இவைதமைச் சூடியுள்ள சடையைக் கொண்ட மதுரைப் பிரான் சொக்கேசர்) அளித்தருளிய அற்புத முருகனே!

மாய மானாக வந்த மாரீசனாகிய அரக்கர்களை வெற்றி கொண்டவரும், வாலியின் மார்பைத் தொளைக்கும் வண்ணம் வில் ஏந்தி அம்பை எய்தியவரும், மற்போருக்குப் பொருந்திய புயத்தை உடையவருமான திருமாலின் மருகனே!

நான்கு வேதங்களிற் சொல்லப்பட்ட முறையின்படி பயிலும் வீணை நாதனாகிய நாரதர் குறிப்பிட்டுரைத்த காட்டினிடையே (வள்ளிமலைக் காட்டில்) தேடி ஓடி (வள்ளிக்) குறத்தியைக் கொண்டு வந்தவனே!

தென்னையும் பலாவும் பழுத்து உதிர்க்கும் சோலை சூழ்ந்த பழநிப் பதியில் அழகிய ஞான பூரண சத்தியாம் வேற்படையைத் தரித்தருளும் பெருமாளே!

(தாளை நாளும் வழுத்தி நினைத்திட அருள்வாயே)

## 153

ஓடி ஓடி அழைத்து வரவும், சில சேடியர்கள் பசப்பவும் (இன்முகம் காட்டி ஏய்க்கவும், அதற்கு முன்னே கூந்தலைச் சிக்கெடுத்து வாரி முடித்தும், வெற்றிலைச் சுருளை ஒழுங்கு படுத்தியும்

மிக்க மணம் நிறைத்துச் சேர்க்கப்பட்ட அகில், புனுகு சட்டம்ஆதிய வாசனைப் பண்டங்கள் கலந்து வழிய மேலே அடரப் பூசப்பட்ட (தமது) கொங்கைகளின் மீது ஆசையுடன் அணைத்த பொதுமகளிருடைய உறவு ஆமோ (ஆகாது என்றபடி).

நாடி வாயும் வயற்றலை யிற்புன
லோடை மீதி னிலத்ததி வட்கையி
னாத கீத மலர்த்துளி பெற்றளி யிசைபாடுங்-
கோடு லாவிய முத்துநி ரைத்தவை
காவுர் நாடத னிற்பழ நிப்பதி
கோதி லாதகு றத்திய ணைத்தருள் பெருமாளே.(54)

## 154. பிறவி அற

தனனத்தத் தனனத் தத்தத்
தனனத்தத் தனனத் தத்தத்
** ** ** தனதான

சகடத்திற் குழையிட் டெற்றிக்
குழலுக்குச் சரம்வைத் தெற்றிப்
புளகித்துக் குவளைக் கட்பொற்
கணையொத்திட் டுழலச் சுத்தித்
தரளப்பற் பவளத் தொட்டக்
[1]களபப் பொட் டுதலிட் டத்திக் குவடான-
தனதுத்திப் படிகப் பொற்பிட்
டசையப் [2]பெட் பசளைத் துப்புக்
கொடியொத்திட் டிடையிற் பட்டைத்
தகையிற்றொட் [3]டுகளப் பச்சைச்
சரணத்துக் கியலச் சுற்றிச்
சுழலிட்டுக் கடனைப் பற்றிக் கொளுமாதர்;
சுகமுற்றுக் கவலைப் பட்டுப்
பொருள் கெட்டுக் கடைகெட் டுச்சொற்
குளறிட்டுத் தடிதொட் டெற்றிப்
பிணியுற்றுக் [4]கசதிப் பட்டுச்
சுகதுக்கத் திடர்கெட் டுற்றுத்
தளர்பட்டுக் கிடைபட் டுப்பிக் கிடைநாளிற்-

---

1. களப அப்பு ஓட்டுதல் இட்ட அத்திக் குவடான எனப் பிரிக்க.

2. பெள் - விரும்பத்தக்க. 3. உகளம் - இரண்டு.

4. கசதி - கஸ்தி: வருத்தம்.

தேடி வாய்த்த (கிடைத்த) வயலிடத்தும், நீரோடை மீதும், நிலத்தில் திளைத்து இன்புறத்தக்க இடத்தும், நாத கீதம் செய்து மலரில் உள்ள சிறிதளவுத் (தேனை) உண்டு வண்டுகள் இசை பாடும் —

(வைகாவூர் நாட்டில்), சங்குகளில் (அல்லது நீர்க்கரையில்) கிடந்து அசையும் முத்து வரிசைகளைக் கொண்ட வைகா-வூர் நாட்டில், உள்ள **பழநிப் பதியில்**, குற்றமில்லாத குறத்தி (வள்ளியை) அணைத்தருளிய பெருமானே!

(சிறுக்கிகள் உறவாமோ.)

## 154

சக்கரம் போல வட்ட வடிவுள்ள குழையைப் பூண்டு (கண்டோர் மனத்தைத்) தாக்கியும் கூந்தலிற் பூமாலை வைத்துக் (கண்டோர் மனத்தைத்) தாக்கியும், புளகாங்கிதம் கொண்டு, குவளை மலர் போன்ற கண்கள் அழகிய அம்புக்கு ஒப்பெனும்படி சுழல, மாசு இல்லாத (அல்லது சங்கு போல வெண்மை பூண்ட) முத்துக்கள் போன்ற பற்கள் பவளத்தை ஒத்த இதழுக்கு அணித்தாக விளங்க, (சந்தனக்) கலவை அப்பி ஒட்டுதலுற்ற (அப்பப் பட்ட) யானை போன்றதும் மலைபோன்றதுமான

கொங்கை தேமலுடன் ஸ்படிகத்தின் அழகைப் பூண்டு அசைய, விரும்பத்தக்க பசளைக் கொடியையும் பவளக் கொடியையும் நிகர்க்கும் இடையிற் பட்டாடையைத் தக்கபடி எடுத்து, இரண்டு பசிய பாதங்கள் வரையிற் பொருந்தச் சுற்றி வளைய உடுத்துத் தங்கள் கடனை (தாங்கள் பெறவேண்டிய பொருளை)க் கைப்பற்றிக் கொள்ளும் (பொது) மகளிரின் —

சுகத்தைப் பெற்றுப், (பின்னர்) கவலைப்பட்டு, (இருந்த) பொருளெல்லாம் அழிந்துபோக, முட்ட முடியக் கெட்டு, மொழியுங் குளறிப்போய், தடி கொண்டு நடக்க வேண்டி வந்து, தத்தித் தத்தி நடந்து, நோயுற்று, வேதனைப்பட்டு, சுக துக்கமாகிய குப்பைமேடு (அல்லது சுக துக்கங்களால் வரும்சஞ்சலங்கள்) குலைந்து போன நிலையை அடைந்து (அஃதாவது பிரக்ஞை -(உணர்ச்சி) அற்றுத் தளர்ச்சி அடைந்து (படுக்கை) இடமாய், உடல் வீக்கங் கொண்டு கிடக்கும் நாளிலே —

சுழலர்ச்சக் கிரியைச் சுற்றிட்
டிறுகக்கட் டுயிரைப் பற்றிக்
கொளுகப் [1]பற் பலரைக் கட்டிக்
கரம்வைத்துத் தலையிற் குத்திச்
சுடுகட்டைச் சுடலைக் கட்டைக்
கிரையிட்டுப் பொடிபட் டுட்கிச் சடமாமோ;

திகுடத்திக் குகுடட் டுட்டுட்
டமடட்டட் டமடட் டிக்குட்
டிமிடிட்டிட் டிமிடிட் டிக்குத்
தொகுதொக்குத் தொகுதத் தொக்குச்
செகணக்கச் செகணச் செக்குத்
தகுடத்தத் தகுடத் தட்டுட் டிடிபேரி-

திமிலைக்கைத் துடிதட் டெக்கைப்
பகடிட்டுப் பறையொத் தக் [2]கட்
டிகையெட்டுக் கடல்வற் றித் [3]தித்
தரவுக்கக் கிரியெட் டுத்தைத்
தியருக்குச் சிரமிற் றுட்கச்
சுரர் [4]பொற்புச் சொரியக் கைத்தொட் டிடும்வேலா;

பகலைப்பற் சொரியத் தக்கற்
பதிபுக்கட் டழலிட் டுத்திட்
புரமட்கிக் கழைவிற் புட்பச்
சரனைச்சுட் டயனைக் கொத்திப்
பவுரிக்கொட் பரமர்க் குச்சற்
குருவொத்துப் பொருளைக் கற்பித் தருள்வோனே-

---

1. பற்பலரை - பற்பலர்: ஐ: சாரியை.

2. கண் திகை யெட்டு - இட மகன்ற எட்டுத் திக்கும்.

3. தித் தரா - தீத் தரா: தீயைத் தர.

4. [illegible]

கழன்று திரிந்து வரும் (கால தூதர்கள்) சக்கிரியால் (பாம்பு போன்ற பாசக் கயிற்றால்) சுற்றிட்டு, அழுத்தமாகக் கட்டி (என்) உயிரைப் பற்றிக் கொண்டு போகும்போது, பற்பலர் (உற்றார் - உறவினர்) (உயிர் பிரிந்த ) என் உடலைக் கட்டி அணைத்தும், கைகளால் தலையில் அடித்துக் கொண்டும் (துன்பத்தைக் காட்டிச்,) சுடவேண்டிய என் உடற் கட்டையைச் சுடலையில் (அடுக்கி வைத்துள்ள) விறகுக் கட்டைகளுக்கு இரையாக ஆக்கி (ஈற்றில்) பொடிபட்டுச் சாம்பலாய் ஒழிந்து போகும் என அஞ்சத்தக்க இந்த உடல் விரும்பத் தக்கது ஆமா? (விருப்பத் தகாது என்றபடி).

திகுடத்திக் குகுடட் டுட்டுட் - தகுடத் தட்டுட் என இடி போல முழங்கும் பேரி வாத்தியம்

திமிலை என்னும் பறை, சிறிய உடுக்கை, தட்டி எழுகின்ற ஒலி வன்மை கொண்ட பறை - இவையெலாம் முழங்க, இடம் அகன்ற திசைகள் எட்டிலும் உள்ள கடல் வற்றித் தீயைத் தர (தீயைக் கக்க) தளர்ந்து அஷ்ட பர்வதங்களும் (எண் கிரிகளும் நிலைகுலைய), அசுரர்கள் தலை முறிந்து அஞ்சத், தேவர்கள் கற்பகப் பூமாரி சொரியத் திருக்கரத்தில் எடுத்த வேலாயுதனே;

சூரியனுடைய பற்களைத் தகர்த்தும், தக்கனது தலைநகரில் (வேள்விச் சாலையிற்) புகுந்து, அங்கே அவனைக் கொன்று, (அவன் தலையை) நெருப்பில் இட்டும், திண்ணிய திரிபுரத்தை அழித்தும், கரும்பு வில்லையும் மலர்ப் பாணத்தையும் கொண்ட மன்மதனைச் சுட்டெரித்தும், பிரமனது தலையைக் கொத்தி (அரிந்தும்), நடனம் கொண்ட பரமேசனுக்குச் சற்குருவாய் அமைந்து (பிரணவப்) பொருளை அவருக்கு உபதேசித் தருளியவனே!

பவளப்பொற் கிரிதுத் திப்பொற்
றனகொச்சைக் கிளிசொற் பற்றிப்
பரிவுற்றுக் கமலப் புட்பத்
திதழ்பற்றிப் புணர்சித் ரப்பொற்
படிகத்துப் பவளப் பச்சைப்
பதமுத்துப் பழநிச் சொக்கப் பெருமாளே. (55)

## 155. ஞானம் பெற

தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன தனதான

முத்துக்குச் சிட்டுக் குப்பிமு
டித்துச் [1]சுக் கைப்பிற் சுற்றியு
முற்பக்கத் திற்பொற் புற்றிட நுதல்மீதே-

முக்யப்பச் சைப்பொட் டிட்டணி
ரத்நச்சுட் டிப்பொற் பட்டிவை
முச்சட்டைச் சித்ரக் கட்டழ கெழிலாடத்;

தித்திக்கச் சொற்சொற் றுப்பிதழ்
நச்சுக்கட் [2]கற்புச் சொக்கியர்
செப்புக்கொக் கக்கச் சுப்பெறு தனமேருத்-

திட்டத்தைப் பற்றிப் பற்பல
லச்சைக்குட் பட்டுத் தொட்டுயிர்
சிக்கிச்சொக் கிக்கெட் டிப்படி யுழல்வேனோ;

[3]மெத்தத்துக் கத்தைத் தித்தியி
னிச்சித்தத் திற்பத் தத்தொடு
மெச்சிச்சொர்க் கத்திற் சிற்பர மருள்வாயே-

---

1. சுக்கை - பூமாலை. 2. கற்பு - கற்பனை.

3. மெத்த துக்கத்தை தித்தி யினி சித்தத்தில் பத்தத்தொடு என்று பிரித்துக் கொள்க.

பவளப் பொன்மலை போலத் தேமலுடன் அழகிய கொங்கைகளையும், கொச்சை மொழியையும் (திருந்தாப் பேச்சையும் உடைய கிளி போன்ற வள்ளியின் சொற்களில் ஆசை வைத்துப் பற்றி, அன்பு பூண்டு, அவளது தாமரைப் பூப்போன்ற இதழமுதைப் பற்றி உண்டு, சேர்ந்து, களித்த (பெருமாளே!) (அல்லது களித்த அழகனே!) (அழகிய) பொன்னும், பளிங்கும், பவளமும், மரகதமும், இன்பமுத்தும் (போல மனதுக்கு இனிய) பழநிச் சொக்கப் பெருமாளே!

(இச் சடம் ஆமோ!)

# 155

முத்துக் குச்சு அணிந்து, அதில் குப்பி என்ற ஆபரணத்தைத் (திருகு பில்லை போன்ற) சடை யணியை முடித்துப், பூமாலையைப் பின்னர்ச் சுற்றி, முன்புறத்தில் அழகு விளங்க நெற்றியின் மேல் —

சிறந்த பச்சை நிறப் பொட்டை இட்டு அணிகலமாம் ரத்னச் சுட்டி, அழகிய பட்டுச் சேலை ஆகிய இவைகளை ஒழுங்காகவும், விசித்திரமாகவும் அணிந்து நல்ல பேரழகு பொலிய —

இனிமை தரும்படி சொல்லும் சொல், பவளம் போன்ற இதழ், விஷத்தைக் கக்கும் கண், கற்பனை உரைகள் இவை தமைக்கொண்டு மயக்குவிப்போரது சிமிழை ஒத்ததும், ரவிக்கை அணிந்ததுமான கொங்கையாகிய மேரு மலையைத் —

திடமாக (செவ்வையாக)ப் பற்றிப் பல விதமான நாணம் கொள்ளத்தக்க (வெட்கப் படும்படியான) செயல்களுக்கு உட்பட்டு மேற்கொண்டு, உயிர் சிக்கி (மாட்டிக் கொண்டு) மயங்கிக் கேடுற்று இவ்வண்ணம் திரிவேனோ!-

(இங்ஙனம்) அதிகமான துக்கத்தை அநுபவித்த நான் இனி மேல் மனத்தில் உண்மையுடன் (நன்றி யறிவுடன்) உன்னை மெச்சிப் புகழ்ந்து சொர்க்கத்திலும் (தேவ ருலகினும்) மேம்பட்ட ஞான வீட்டைப் (பெறுமாறு) அருள்வாயாக-

வித்தைக்குக் கர்த்ருத் தற்பர
முக்கட்சித் தர்க்குப் புத்திர
விச்சித்ரச் செச்சைக் *கத்திகை புனைவோனே;

நித்யக்கற்பத்திற்சித்தர்க
ளெட்டுத்திக் குக்குட் பட்டவர்
நிஷ்டைக்கற் புற்றப் பத்தர்கள் அமரோரும்-

நெட்டுக்குப் புட்பத் தைக்கொடு
முற்றத்துற் றர்ச்சிக் கப்பழ
நிக்குட்பட் டத்துக் குற்றுறை பெருமாளே.(56)

## 156. பழநியைத் தரிசிக்க

தனதன தத்தா தத்தன தனதன தத்தா தத்தன
தனதன தத்தா தத்தன தனதான

அகல்வினை யுட்சார் [1]சட்சம யிகளொடு [2]வெட்கா தட்கிடு
மறிவிலி வித்தா ரத்தன மவிகார-

அகில்கமழ் கத்தூ ரித்தணி யணைமிசை கைக்கா சுக்கள
வருள்பவர் நட்பே கொட்புறு மொருபோதன்;

பகலிர விற்போ திற்[3]பணி பணியற விட்டா ரெட்டிய
பரமம யச்சோ திச்சிவ மயமா நின்-

**பழநிதனிற்போ** யுற்பவ வினை [4]விள கட்சேர் வெட்சிகு
ரவுபயில் நற்றாள் பற்றுவ தொருநாளே;

---

*கத்திகை - பூமாலை.

1. சட்சமயம் - உட்சமயம் (6): வைரவம், வாமம், காளா முகம், மாவிரதம், பாசுபதம், சைவம். புறச் சமயம் (6): உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்ச ராத்திரம், பாட்டா சாரி யம்.

2. வெட்கா தட்கிடும் - அஞ்சாது தடுத்து வாதஞ்செய்யும்.

3. பணி பணி - பணி பண்ணி - பணி செய்து "என் கடன் பணி செய்து கிடப்பதே" அப்பர். அறவிட்டார் அடியோடு பற்றுக்களை விட்டவர். அங்ஙனம் விட்டவரே திருவுடையார் - "விட்டோரை விடாஅள் திருவே விடாஅதோரிவள் விடப்பட்டோரே." புறநானூறு - 358.

4 விள விளா நீங்க

கல்விக்குத் தலைவனே! பரம்பொருளே! சிவனுக்குப் புத்திரனே! விசித்திரமான வெட்சிப் பூமாலையை அணிபவனே!

நித்ய பூமியில் உள்ள சித்தர்களும் (நித்ய சூரிகளும்), எட்டுத் திக்குகளின் எல்லைக்கு உட்பட்டவர்களும், தியானத்தில் சீலம் (அல்லது அன்பு) பூண்ட பக்தர்களும், தேவர்களும் —

நெடுந் தூரத்திலிருந்தும் மலர்களைக் கொண்டு வந்து சந்நிதானத்தில் (திரு முன்பில்) அடைந்து அருச்சனை செய்து துதித்து நிற்கப் பழநிப் பதியில் ஆட்சி பூண்டு உறைகின்ற பெருமாளே!

*(சிற்பரம் அருள்வாயே!)*

## 156

பரந்த வினை (வசத்திற்கு) உட்பட்ட ஆறு சமயத்தவரோடும் கூச்சமின்றி (அஞ்சாது) தடுத்து வாதம் செய்யும் அறிவிலியும், விரிந்து பரந்துள்ள கொங்கையை விகாரமற்ற (அழகிய) —

அகில், மணமுள்ள கஸ்தூரி, இவையுள்ள ஒப்பற்ற அணையில் (படுக்கையில்,) தாம் கையிற் பெற்ற பொருளின் அளவுக்குத் தக்கபடி அன்பு காட்டும் (இன்பம் தரும்) - வேசையருடைய நட்பிலே சுழற்சியுறும் ஓர் அறிவுடையவனுமான நான் —

பகற்போதிலும், இராப் போதிலும் (எப்போதும்) பணியைப் (பற்றுக்கள் எல்லாவற்றையும்) முற்ற விட்டவர் எட்டிக் கண்ட பரமசொரூபமாய்ச், சோதி சொரூபமாய்ச், சிவசொரூபமாயுள்ள உனது —

பழநிக்குப் போய்ப் பிறவி என்கின்ற வினை நீங்க, மது நிறைந்த வெட்சி, குரா என்னும் மலர்கள் நிரம்பியுள்ள (உனது) நல்ல திருவடியைப் பற்றும்படியான ஒரு நாள் [illegible]

[1]புகலிவ னப்பே றப்புகல் மதுரைமன் வெப்பா றத்திகழ்
[2]பொடிகொடு புற்பாய் சுற்றிகள் கழுவேறப்-
பொருதச மர்த்தா குத்திர [3]துரகமு கக்கோ தைக்கிடை
புலவரில் நக்கீ ரர்க்குத வியவேளே;
இகல்படு நெட்டூர் பொட்டெழ இளநகை யிட்டே சுட்டருள்
எழுபுவி துய்த்தார் மைத்துனர் மதலாய்வென்-
றிடரற [4]முப்பால் செப்பிய கவிதையின் [5]மிக்கா ரத்தினை
யெழுதி [6]வனத்தே யெற்றிய பெருமாளே. (57)

## 157. உன்னையே நம்புவேன் எனல்

தனன தனதனன தந்தத்த தந்ததன
தனன தனதனன தந்தத்த தந்ததன
தனன தனதனன தந்தத்த தந்ததன தந்ததான

அதல விதல *முத லந்தத்த லங்களென
அவனி யென அமரர் அண்டத்த கண்டமென
அகில சலதியென எண்டிக்குள் விண்டுவென
அங்கிபாநு-
அமுத கதிர்களென அந்தித்த மந்த்ரமென
அறையு மறையெனஅ ருந்†தத்து வங்களென
அணுவி லணுவெனநி றைந்திட்டு நின்றதொரு
சம்ப்ரதாயம்;

---

1. புகலி - சீகாழி. சம்பந்தர் அவதரித்த தலம். 2.பொடி - திருநீறு.

3. துரக முகக் கோதை - கற்கிமுகி என்கின்ற ஒரு பூதம். (பாடல் 91 பார்க்க).

4. முப்பால் செப்பிய கவிதை - திருக்குறள்.

5. மிக்க ஆரத்தினை - மேலாகிய தேவாரத்தை.

6. வனத்தே யெற்றிய -ஜலத்தில் எதிரேற விட்ட. இது "சமணரைக் கழுவேற்றிய திருவிளையாடல்". பாடல் 181 பார்க்க.

சம்பந்தர் "முருகன் கூறு" என்பது அருணகிரியார் கொள்கை: கவிச் சக்ரவர்த்தி ஒட்டக் கூத்தருக்கும் இதுவே கொள்கை. தக்கயாகப் பரணி- 169 - 221.

யாவராலும் பாராட்டப்படும் திருக்குறளினும் சம்பந்தப் பெருமான் அருளிய தேவாரம் மேம்பட்டது என்னும் அருமை விஷயத்தை இப் பாடல் தெரிவிக்கின்றது.

* அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம் - இவை கீழேழ் உலகங்கள்:

சீகாழி என்னும் தலத்துக்கு அழகும் பெருமையும் பெருகவும், சரண் அடைந்த மதுரை மன்னன் (கூன்பாண்டியனது) சுரம் தணியவும், விளங்கும் திருநீற்றைக் கொண்டு புல்லாகிய பாய்களை உடுத்திருந்த சமணர்கள் கழுவில் ஏறவும்

வாதம் செய்து, வெற்றிபெற்ற சமர்த்தனே! வஞ்சனை எண்ணம் கொண்ட குதிரை முகம் கொண்ட பெண்(பூதத்தின்) வசத்தே அகப்பட்ட புலவராம் நக்கீரருக்கு உதவி புரிந்த வேளே!

பகைமை பூண்ட பெரிய ஊர்களாகிய திரிபுரங்கள் பொடியாகப் புன்னகை பூத்துச் சுட்டெரித்த சிவபிரானது - ஏழுலகங்களையும் உண்ட திருமாலின் மைத்துனருமான சிவபிரானது -குழந்தையே! வென்று,

(எழுந்த) இடர்கள் நீங்கும்படி- (அறம், பொருள், இன்பம் என்னும்) முப்பால் கூறும் திருக்குறளினும் மேலாகிய தேவாரத்தை ("வாழ்க அந்தணர்" என்னும் திருப்பாசுரத்தை) (ஏட்டில்) எழுதி, (வைகையாற்று வெள்ள) நீரில் எதிரேறவிட்ட பெருமாளே!

(பழநிதனிற்போய்....நற்றாள் பற்றுவ தொருநாளே.)

## 157

அதலம், விதலம் முதலான அந்தக் (கீழ்) உலகங்கள் எனவும், (இப்) பூமி எனவும், தேவர் அண்டங்களான *(மேல்) உலகங்கள் எனவும், சகல கடல்கள் எனவும், எட்டுத் திசைகளிலுள்ள மலைகள் எனவும், அக்கினி, சூரியன்,

அமுதம் போலக் குளிர்ந்த கிரணங்களைக் கொண்ட சந்திரன், எனும் முச்சுடர்கள் எனவும், ஒன்றோடொன்று சந்தித்து ஒற்றுமைப்பட மந்திரங்கள் எனவும், விசேடித்துச் சொல்லப்படும் மறை (வேதம் எனவும், அரிய †தத்துவங்கள் (உண்மைப் பொருள்கள்) எனவும், அணுவுக்குள் அணு எனவும், (இவ்வகையாய் எங்கும்) நிறை பொருளாய் நின்றுள்ள ஒரு பேருண்மை —

---

*பூலோகம், புவ லோகம் சுவ லோகம், சன லோகம், தபோ லோகம், மகா லோகம்' சத்திய லோகம் - இவைமேலேழ் உலகங்கள்.

† தத்துவங்கள்96: (1) மூலப் பொருள்கள் 36: - அசுத்த தத்துவம் 24, சுத்தா சுத்த தத்துவம் 7, சுத்த தத்துவம் 5.

உதய மெழஇருள்வி டிந்தக்க ணந்தனிலி
ருதய கமலமுகி ழங்கட்ட விழ்ந்துணர்வி
லுணரு மநுபவமனம்பெற்றிடும்படியை வந்து நீ முன்-

உதவ இயலினியல் செஞ்சொற்ப்ர பந்தமென
மதுர கவிகளில்ம னம்பற்றி ருந்துபுகழ்
உரிய அடிமை **யுனையன்றிப்ப்ரபஞ்சமதை நம்புவேனோ;**

ததத தததத தந்தத்த தந்ததத
திதிதி திதிதிதி திந்தித்தி திந்திதிதி
தகுகு தகுதகுகு தந்தத்த தந்தகுகு திந்திதோதி-

சகக சககெணக தந்தத்த குங்கெணக
டிடிடி டிடிடிடி டிண்டிட்டி டிண்டிடிடி
தகக தகதகக தந்தத்த தந்தகக என்றுதாளம்;

பதலை திமிலை துடி தம் பட்ட மும்பெருக
அகில நிசிசரர் நடுங்கக்கொ டுங்கழுகு
பரிய குடர்பழுவெ லும்பைப் பிடுங்கரண துங்ககாளி-

பவுரி யிடநரிபு லம்பப்ப ருந்திறகு
கவரி யிட இகலை வென்றுச்சி கண்டிதனில்
**பழநி** மலையின் மிசை வந்துற்ற இந்திரர்கள்
தம்பிரானே. (58)

## 158. பொதுமகளிர் மீதுள்ள ஆசை அற திருவடியைப் பெற

தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத் தனதான

அரிசன வாடைச் சேர்வை குளித்துப்
பலவித கோலச் சேலை யுடுத்திட்
டலர்குழ லோதிக் கோதி முடித்துச் சுருளோடே-

(2) புற நிலைக் கருவி - 60:- பிருதிவியின் கூறு 5, அப்புவின் கூறு 5, தேயுவின் கூறு 5, வாயுவின் கூறு 5, ஆகாயத்தின் கூறு 5, வாயு -10 (தசவாயு), நாடி 10, வசனாதி 5, வாக்கு 4, குணம் 3, அகங்காரத் திரயம் [illegible]

உள்ளத்தில் தோன்றி விளங்க, அஞ்ஞானம் என்கின்ற இருள் ஒழிந்து, அந்த க்ஷணமே, இதய தாமரை எனப்படும் மொட்டு அங்கே கட்டு நீங்கி மலர்ந்து உணர்விலே உணரப்படும்படியான அநுபவஞானத்தை (என்) மனம் பெற்றிடும் வகையை (எதிர்தோன்றி) வந்து நீ முன்பு

(எனக்கு) உதவியருள, உழுவலன்பால் அமையும் செஞ்சொற்களாலாய இசையுருப் பாக்களாம் மதுர கவிகளில் மனம் ஆசை வைத்து உன்னைத் (திருப்புகழ் என்னும் சந்தப்பாவால்) புகழும் உரிமைப் பாக்கியத்தைப் பெற்ற அடிமையாகும் நான் *உன்னை விட்டு உலக வாழ்வினை நம்புவேனோ (நம்பமாட்டேன் என்றபடி).

தகத தகதகத தந்தத்த...தந்தகுகு திந்தி தோதி

சகக சகெணக தந்தத்த தந்தகக என்று தாளம், பதலை (ஒருகட் பகுவாய்ப் பறை), திமிலை (ஒருவகைப்பறை), உடுக்கை, தம்பட்டம் (ஒருவகைப் பறை) - இவையெலாம் பேரொலி செய்ய, எவ்விடத்துள்ள அசுரர்களும் நடுக்கங்கொள்ள, கொடிய கழுகுகள் பருத்த குடல்களையும், விலா எலும்புகளையும், பிடுங்க, ரணவெற்றிக் காளி —

மண்டலக் கூத்து ஆட, நரிகள் ஊளையிட, பருந்துகளின் சிறகுகள் கவ[illegible] (சாமரம் வீசப், போரை வென்று, மயில் மேல், **பழநிமலை** மீது வந்து அமர்ந்துள்ள தம்பிரானே! இந்திரர்கள் தம்பிரானே!

†(உனையன்றிப் ப்ரபஞ்சமதை நம்புவேனோ!)

## 158

மஞ்சள் வாசனைக் கலவை (நீரிற்) குளித்துப் பலவித அலங்காரமான (அழகிய) புடவைகளை உடுத்து, மலரணிந்த கூந்தல் மயிரைச் சிக்கெடுத்து வகைப்படுத்தி முடித்து, சுருண்டுள்ள (அம்) மயிருடன் —

---

36 (ஆத்ம தத்துவம் 24, வித்தியாதத்துவம் 7, சிவ தத்துவம் 5:) புற நிலைக் கருவிகள் 60; (பூத காரியம் 25, நாடி 10 வசனாதி 10 வாக்கு 4, குணம் 3, அகங்காரம்3 அவத்தை 5) -எனவும் கூறுவர்

*"உன்னை யொழிய ஒருவரையும் நம்புகிலேன்" -நக்கீரர்.

† இப் பாடல் அருணகிரியார் தமது சரிதம் கூறும் பாடல்.

அமர்பொரு காதுக் கோலை திருத்தித்
திருநுதல் நீவிப் பாளித பொட்டிட்
டகில்புழு காரச் சேறு தனத்திட் டலர்வேளின்;

சுரதவிநோதப் பார்வைமையிட்டுத்
தருணக லாரத் *தோடைதரித்துத்
தொழிலிடுதோளுக்கேறவரித்திட் டிளைஞோர்மார்-

துறவினர் சோரச் சோர நகைத்துப்
பொருள்கவர் மாதர்க் காசைய ளித்தற்
றுயரற வேபொற் பாதமெனக்குத் தருவாயே;

கிரியலை வாரிச் சூரரி ரத்தப்
புணரியின் மூழ்கிக் கூளிக ளிக்கக்
கிரணவை வேல்புத் தேளிர்பி ழைக்கத்
தொடுவோனே-

கெருவித கோலப் பாரத னத்தக்
குறமகள் பாதச் சேகர சொர்க்கக்
கிளிதெய்வ யானைக் கேபுய வெற்பைத் தருவோனே;

பரிமள நீபத் தாரொடுவெட்சித்
தொடைபுனை சேவற் கேதன துத்திப்
பணியகல் பீடத் தோகைம யிற்பொற் பரியோனே-

பனிமல ரோடைச் சேலுக ளித்துக்
ககனமளாவிப் போய்வரு வெற்றிப்
‡பழநியில் வாழ்பொற் கோமள சத்திப் பெருமாளே. (59)

---

*தோடை - தொடை: மாலை.

† 'முநிவோரும் மாலாகி வாட நகைத்து' (362)

'நீத்து இலங்கு வரரும் திகைத்திரங்க' (607)

'முநிவரும் மனவலி கரையும்' (921)

'துறந்தோர் உளத்தைப்... பதைக்கப் பதைக்க வதைக்கும் கண்ணார்' -கந் - அலங்-32.

‡ இந்தத் திருப்புகழ்ப் பாடலில் வேல், மயில், சேவல், தேவ சேனை, வள்ளி யம்மை, கடம்பு, வெட்சி, திருவடி யாவும் வருகின்றன.

(நெருங்கிப்) பொருகின்ற காதுக்கு ஓலை (காதணியை) த் திருத்தி அணிந்து, அழகிய நெற்றியைச் சீர்பெறத் துடைத்துப் பச்சைக் கற்பூரம் (சந்தனம்) கலந்த பொட்டையிட்டு, அகில், புனுகு சட்டம் இவை நிரம்பிய குழம்பைக் கொங்கையிற் பூசி (அப்பி), மலர்ப்பாணம் ஏந்திய காமனுடைய

(காம சாத்திரத்திற் கூறியுள்ளபடி (காமத்தை எழுப்பும்) விநோதங்காட்டும் கண்களில் மையைப் பூசி, அப்போது மலர்ந்த செங்கழுநீர்ப் பூமாலையைச் சூடிக் (கலவித்) தொழில் செய்யும் தோள்களுக்குப் பொருந்தும் வகையில் நிரம்ப அலங்கரித்து, இளைஞர்கள் (முதல்) —

துறவினர் (வரையும்) உள்ளம் தளரத் தளர நகை புரிந்து, பொருளைக் கவர்கின்ற (பொது) மாதர்மேல் ஆசை வைத்தலாகிய துன்பம் நீங்குவதற்கே (உனது) அழகிய திருவடியை எனக்குத் தந்தருளுக.

மலைகளிலும், அலைகடலிலும் இருந்த சூரர்களுடைய (அவுண வீரர்களுடைய) ரத்தக் கடலில் முழுகிய பேய்கள் களி கொள்ளுமாறு, ஒளிவீசும் கூரிய வேலாயுதத்தைத் தேவர்கள் பிழைத்து உய்யுமாறு செலுத்தினவனே!

செருக்கு (அடையத்தக்க) அழகிய. கனத்த கொங்கைகளை உடைய குறமகளின் பாத சேகர! (அடிகளைத் தலை மேற் சூடியுள்ளவனே) தேவலோகத்துக் கிளி போன்ற தேவ சேனைக்கே (உனது) புயமலையைத் தருபவனே!

நறுமணம் உள்ள கடப்ப மாலையோடு வெட்சி மாலையை அணிந்துள்ள சேவலங் கொடியனே! படத்திற் பொறிகளை உடைய பாம்பு அஞ்சி விலகும் ஆசன மாகிய 'கலாபமயில்' என்கின்ற அழகிய வாகனத்தைக் கொண்டவனே!

குளிர்ந்த மலர் ஓடையிற் சேல்மீன்கள் களிப்புக் கொண்டு ஆகாயம் வரையில் எட்டிப்பாய்ந்து திரும்பிவரும் **பழநியில்** வாழுகின்ற ஒளியும் அழகும் பூண்ட *(ஞான) சக்தி (தரப்) பெருமாளே!

(மாதர் - ஆசை - அறப் பாத மெனக்குத் தருவாயே.)

---

*'ஞான பூரண சத்தி தரித்தருள் பெருமாளே' என்றார் பிறிதோரிடத்து (152)

## 159. வழிபட

தனத்த தானன தனதன தனதன தனதான

அருத்தி வாழ்வொடு *தனகிய மனைவியு முறவோரும்-
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்;

தரித்த வூரு †மெ யெனமன நினைவது நினையாதுன்-
தனைப்ப ராவியும் **வழிபடு தொழிலது தருவாயே;**

எருத்தி லேறிய இறையவர் செவிபுக வுபதேசம்-
இசைத்த நாவின இதணுறு குறமக ளிருபாதம்;

பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை-
பதிக்கொ ளாறிரு புயபழ நியிலுறை பெருமாளே (60)

## 160. முத்தி பெற

தனதனா தனதத்த தனதனா தனதத்த
தனதனா தனதத்த தனதான

அறமிலா நிலைகற்று கொடியவேல் விழிவிட்டு
ளறிஞுதா னறவைத்து விலைபேசி-

அமளிமீ தினில்வைத்து பவளவா யமுதத்தை
யதிகமா வுதவிக்கை வளையாலே;

உறவினா லுடலத்தை யிறுகவே தழுவிக்கொ
ளுலையிலே மெழுகொத்த மடவாரோ-

டுருகியே வருபெற்றி மதனநா டகபித்து
ஒழியுமா றொருமுத்தி **தரவேணும்;**

---

*தனகல் - சிணுங்கிப் பேசுதல்.

†மெ யெனா - மெய் யென.

ஆசை பூண்ட வாழ்க்கையும். உளக் களிப்பைத் தரும் (அல்லது சிணுங்கிப் பேசும்) மனைவியும், சுற்றத்தாரும் —

(தம்மை) அடுத்து நட்புப் பூண்டவர்களும், இன்பம் தரும் குழந்தையும், வளப்பமுள்ள நாடும்,

(தாம்) இருப்பிடமாகக் கொண்ட ஊரும் - ஆகிய இவையெல்லாம் மெய்யென்று என் மனம் எண்ணுவது அங்ஙனம் எண்ணங் கொள்ளாமல், உன்னைப்

போற்றி வழிபடும் பணியைத் தந்தருளுக.

இடப வாகனத்தில் ஏறும் (சிவபிரானது) செவியிற் புகும்படி உபதேசப் (பொருளை)ச் —

சொன்ன (திரு) நாவை உடையவனே! காவற் பரண் மீதிருந்த குறமகள் வள்ளியின் இரண்டு பாதங்களையும்

தாங்கும் திருமுடியை உடையவனே! (வேள்வி நாயகனான) இந்திரன் தர வந்த தேவசேனையின்

நாயகனே! கொண்ட பன்னிரு புயனே (பன்னிரண்டு புயங்களைக் கொண்டவனே)! பழநியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(வழிபடு தொழிலது தருவாயே.)

## 160

அறவழி யல்லாத தொழில் (நிற்கும் நிலையை)க் கற்று, கொடுமை பூண்ட வேல் போன்ற கண்ணைச் செலுத்தி, உள்ளத்தில் அறிவு என்பதை நீக்கி - விலை பேசி —

(வந்தவரைப்) படுக்கையிற் சேர்த்துத், தமது பவளம் போன்ற சிவந்த வாய் அமுதத்தை அதிகமாகத் தந்து உதவி, (கை வளையாலே - வளைக் கையாலே) வளையல் அணிந்த கையாலே —

உறவு கூறி உடலை இறுகத் தழுவிக் கொண்டு உலையில் இட்டமெழுகுபோல (உருக்கம் காட்டும்) மாதர்களோடு (கூடி)

உருகி வருகின்ற ஒழுக்கம் - காம நாடகம் என்கின்ற பித்த மயக்கம் - (என்னை விட்டுத் தொலையுமாறு) நீ எனக்கு ஒப்பற்ற முத்தி யின்பத்தைத் தந்தருள வேண்டும்.

மறவர்மா தொருரத்ந விமலகோ கநகத்தி
மயிலனாள் புணர்செச்சை மணிமார்பா-

மருள் நிசா சரன்வெற்பி லுருகிவீ ழ் வுறமிக்க
மயிலிலே றியவுக்ர வடிவேலா;

பறைகள்பே ணியருத்ரி கரியகா ரளகத்தி
பரமர்பா லுறைசத்தி யெமதாயி-

பழையபார் வதிகொற்றி பெரியநா யகிபெற்ற
பழநிமா மலையுற்ற பெருமாளே. (61)

## 161. உனை ஏவர் புகழ்வார்?

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தந்ததான

ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி-

ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்;

ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மானமுன தென்றுமோதும்-

ஏழைகள் வியாகுலமி தேதெனவி னாவிலுனை
யேவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ;

நீறுபடு மாழைபொரு மேனியவ வேல அணி
நீலமயில் வாகவுமை தந்தவேளே-

வேடர் குலத்து மாது, ஒப்பற்ற ரத்னம் போன்ற பரிசுத்தமான இலக்குமி, மயில் போன்றவள் - ஆகிய - வள்ளி சேர்கின்ற வெட்சி மாலை புனைந்த அழகிய மார்பனே!

திகைத்து மயங்கி நின்ற அசுரன் (கிரெளஞ்சன், தாரகன் அல்லது சிங்க முகன்( மலைபோல உருகி விழச் சிறந்த மயில் வாகனத்தில் ஏறிய உக்ர வடிவேலனே!

போர்ப் பறையை விரும்பும் ருத்ரி, கரிய மேகம் போன்ற கூந்தலை உடையவள், பரமர் பக்கத்தில் உறைகின்ற சத்தி, எமது தாய் —

பழைய பார்வதி, துர்க்கை, *பெரியநாயகி (என்னும் திரு நாமத்தை உடையவள்) பெற்ற பெருமாளே! பழநி மாமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(ஒரு முத்தி தரவேணும்.)

## 161

ஆறுமுகம், ஆறுமுகம், ஆறுமுகம், ஆறுமுகம், ஆறுமுகம், ஆறுமுகம் என்று (ஆறுமுறை) கூறித் திருநீற்றை

உடலிற் பூசி அணியும் பெரிய தவசிகளுடைய பாத மலரைச் சூடுகின்ற அடியார்களின் திருவடியே துணையாம் என்று கடைப் பிடித்தும், நாள்தோறும்

ஏறுதற் கமைந்த மயில் வாகனனே! குகனே! சரவணனே! எனது ஈசனே! என்மானம் உனது மானமாம் (எனக்கு உற்ற பெருமை உனக்கு உற்ற, பெருமையாம்) என்று கூறியும்; உன்னை ஓதிப் புகழ்கின்ற-

ஏழை (அடியார்)கள் இறைவனே! (இந்த) வியாகுலம் (மனத்துயர்) இதேது (எனக்கு ஏன் இப்போது வந்தது) என்று(உன்னிடம்)முறையிட்டுக் கேட்டால் - பின்னர் - உன்னை யார்தாம் புகழ்வார்கள்; மறை (வேதம்) தான் உன்னை என்ன சொல்லாது! (வேதந்தான் உன்னைப் புகழுமா?)

திருநீறு விளங்கும் பொன்போன்ற மேனியை உடையவனே! வேலனே! அழகிய நீலமயில் வாகனனே! உமை பெற்ற வேளே!

---

*பழநி ஊரின் மேற்குப் பாகத்தில் விளங்குவது (பார்வதி தேவி) பெரியநாயகி அம்மையின் திருக்கோயில்.

*நீசர்கட மோடெனது தீவினையெ லாமடிய
நீடுதனிவேல்விடும டங்கல்வேலா;

சீறிவரு மாறவுண னாவியுணு மானைமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடஞ்-

சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே (62)

## 162. பாசம் அகல; தமிழ்க்கவி கூறிப்பணிய

தத்தா தனத்ததன தத்தா தனத்ததன
தானத் தனந்ததன தானத் தனந்ததன
** ** ** ** தன தன தான

இத்தா ரணிக்குள்மநு வித்தாய் முளைத்தழுது
கேவிக் கிடந்துமடி மீதிற் றவழ்ந்தடிகள்
தத்தா தனத்ததன இட்டே தெருத்தலையில்
ஓடித் திரிந்து நவ கோடிப் ப்ரபந்தகலை
யிச்சீர் பயிற்றவய தெட்டோடு மெட்டுவர
வாலக் குணங்கள் பயில் கோலப் பெதும்பையர்க
ளுடனுறவாகி-

இக்கார் சரத்துமத னுக்கே இளைத்துவெகு
வாகக் கலம்பவகை பாடிப் புகழ்ந்துபல
திக்கோடு திக்குவரை மட்டோடி மிக்கபொருள்
தேடிச் சுகந்த அணை மீதிற் றுயின்றுசுக
மிட்டா தரத்துருகி வட்டார் முலைக்குளிடை
மூழ்கிக் கிடந்துமய லாகித் துளைந்துசில
பிணியதுமூடிச்;

*நீசர்கட மோடு நீசர்கள் தம்மோடு

அசுரர்கள் தம்மோடு - எனது தீவினை யாவும் - மடிந்தொழிய நீண்ட ஒப்பற்ற வேலாயுதத்தைச் செலுத்திய மடங்கல் (வடவைத் தீ அனைய) வேலை உடையவனே!

சீறிக் (கோபித்து வந்த) பகைவனான (கஜமுகாசுரன் என்னும்) அவுணனுடைய ஆவியை உண்ட ஆனைமுக தேவர் (விநாயக மூர்த்தியின்) சகோதரனே! மலை உச்சி ஆகாய முகட்டை —

எட்டும் அழகு நிறைந்த **பழநியில்** வாழும் குமரனே! பிரம தேவருக்கு வரம் அருளிய மூர்த்தியே! முருகனே! தம்பிரானே!

*(வியாகுலம் இதேதென வினாவில் உனை ஏவர் புகழ்வார்?)*

## 162

இந்தத் தரணியில் (பூமியில்) மநுவின் வித்தாக (மனிதனாக)ப் பிறந்து, அழுது, பெருமூச்சு விட்டுத் திணறி, கிடந்து (தாயின்) மடிமேல், தவழ்ந்து, அடிகளைத் தத்தித் தத்தி நடந்து, தெருவில் ஓடி, ஒன்பது கோடிக்கணக் கான(அதாவது மிகப் பல) அல்லது புதிதாய்க் கோடிக்கணக்கில் நூற்கலைகளில் இங்குச் சீராகப் பயிற்சி தரப்பெற, வயதும் எட்டுடன் எட்டு (பதினாறு) வர, பாலி யத்துக்கு (இளமைக்கு) உரிய குணங்களிற் பயின்ற அழகிய இளம் பெண்களுடன் (பொதுமகளி-ருடன்) உறவுபூண்டு —

கரும்பு வில்லும், நிரம்ப (மலர்)ப் பாணங்களும் கொண்ட மன்மத சேஷ்டையால் சோர்வடைந்து (அல்லது காமனுக்குத் தோற்று), மிகவும் (நிரம்ப) கலம்பக வகையில் (பல திறப்பட்ட) பாடல் வகைகளிற் பாடிப் (பொருள் உள்ளவரைப்) புகழ்ந்து, பல திக்குகளிலும் (ஒரு திக்கிலிருந்து மற்றொரு திக்கு வரையும்) ஓடி, அதிகமாகப் பொருள் தேடி, நறுமணம் வீசும் படுக்கைமீது துயில்கொண்டு, சுகத்தைத் தந்து, ஆசையில் உருகி, வட்டவடிவுள்ள கொங்கைகளின் இடையே முழுகிக் கிடந்து, காம மயக்கத்தில் அழுந்தி வலிபிறந்து சோர்வுற்றுச், சில பிணிகள் (வந்து) புகு

சத்தான புத்தியது கெட்டே கிடக்கநம
னேடித் தொடர்ந்துகயி றாடிக் கொளும்பொழுது
பெற்றோர்கள் சுற்றியழ வுற்றார்கள் மெத்த அழ
ஊருக் கடங்கலிலர் காலற் கடங்கவுயிர்
தக்கா திவர்க்குமய னிட்டான் விதிப்படியி
னோலைப் பழம்படியி னாலிற் றிறந்ததென
எடுமெனவோடிச்-

சட்டா நவப்பறைகள் கொட்டா வரிச்சுடலை
யேகிச் சடம்பெரிது வேகப் புடஞ்சமைய
இட்டே யனற்குளெரி பட்டா ரெனத்தழுவி
[1]நீரிற் படிந்துவிடு **பாசத் தகன்றுனது**
சற்போ தகப்பதும முற்றே **தமிழ்க்கவிதை**
**பேசிப் பணிந்துருகு நேசத்தை** யின்றுதர
**இனிவரவேணும்;**

தித்தா திரித்திகுட தத்தா தனத்தகுத
தாதத் தனந்ததன தானத் தனந்ததன
செச்சே செகுச் செகுகு தித்தா திமித்ததிகு
தாதத்த செந்திகுத தீதத்த செந்தரிக
தித்தா கிடக்கணக டக்கா குகுக்குகுகு
தோதக் கணங்கணக கூகுக் கிணங்கிணெனெ[2]
ஒருமயிலேறித்-

---

1. நீரிற் படிந்து - பாசம் விடுதற்கு-

"ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே"

-திருமந்திரம் 145; திருப்புகழ் 85 ஆம் பாடலின்
குறிப்பையும் பார்க்க (பக்கம் 201).

2. இச் சந்த ஒலி மயிலின் நடன ஒலியைக் குறிக்கும் - திருப்புகழ் 41, 69, 110, 147, 148 பார்க்க

நல்லறிவு கெட்டுக்கிடக்கும்பொழுது யமன் ஓடிவந்து (என்னைத்) தொடர்ந்து பாசக்கயிற்றை ஆட்டி வீசி (என் உயிரைக்) கொண்டு போம்பொழுது, என்னைப் பெற்றவர்கள் என்னைச் சுற்றியழ, எனக்கு உற்றவர்கள் (வேண்டியவர்கள்) மிக அழ, ஊராரின் (நல்ல வழியில் இரு என்று) சொன்ன) சொல்லுக்கு அடங்காத இவர், (இப்போது) காலனுக்கு அடங்கும்படி இவர் உயிர் போய்விடும்; இவருக்குப் பிரமன் இட்ட விதிப்படியே - ஓலையில் முன் எழுதின எழுத்தின்படி - இன்று இறந்தது - எனக் கூறி, எடுங்கள் (பிணத்தை) எனக் கூற - (அயல் நின்றார்) ஓடிச்சென்று —

நன்றாகப் பல (அல்லது புதிய) பறைகளைக் கொட்டி அரிச்சுடலை (நெருப்பு எரியும் சுடுகாட்டுக்குப்) போய், உடல் நன்றாக வேகும்படி (எரிமுட்டைகளால்) மூடும்படி பிணத்தைச் சேர்த்து, நெருப்பில் எரிபட்டார் எனத் (துயருடன்) கூறி ஒன்றுகூடி நீரில் முழுகி (அதனுடன்) விடுபட்டுப் போகும் பாசத்தினின்றும் விலகி, உனது நல்ல ஞானத் (திருவடித்) தாமரைமலரை அடைந்து, தமிழ்க் கவிகளை ஓதிப் பணிந்து உருகும்படியான அன்பை இன்று (அடியேனுக்குத்) தர, இனி வந்தருள வேண்டும்!

தித்தா திரித்திகுட தத்தா தனத்த குக

* * * *

தோதக் கணங் கண்க கூகுக் கிணங் கிணென (ஒலிக்கும்படி) ஒப்பற்ற மயில்மீது ஏறி —

[1]திட்டே ரதத்தசுரர் பட்டே விழப்பொருது
வேலைத் தொளைந்து [2]வரை யேழைப் பிளந்துவரு
சித்தா பரத்தமரர் கத்தா குறத்திமுலை
மீதிற் புணர்ந்துசுக லீலைக் கதம்பமணி
சுத்தா வுமைக்குமொரு முத்தாய் முளைத்த குரு
நாதக் குழந்தையென வோடிக் கடம்பமலர்
அணிதிருமார்பா!

[3]மத்தா மதக்களிறு பிற்றா னுதித்தகுக
னேதத் திலங்கையினி லாதிக்க முண்டதொரு
முட்டா ளரக்கர்தலை யிற்றே விழக்கணைக
ளேதொட்ட கொண்டலுரு வாகிச் சுமந்ததிக
மட்டார் மலர்க்கமல முற்றா சனத்திருவை
மார்பிற் புணர்ந்தரகு ராமற்கு மன்புடைய
மருமகனாகி-

வற்றா மதுக்கருணை யுற்றே மறைக்கலைக
ளோதித் தெரிந்துதமிழ் சோதித் தலங்கலணி
யத்தா பரத்தையறி வித்தாவி சுற்றுமொளி
யாகிப் ப்ரபந்தமணி வேல்தொட்ட மைந்தபுய
வர்க்கா மருப்புழுகு முட்டா திருப்பழநி
வாழ்வுக் குகந்தடிய [4]ராவிக்குள் நின்றுலவி
வருபெருமாளே. (63)

## 163. பொது மகளிர் இணக்கம் அற

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தனதான

இலகிய களபசு கந்த வாடையின்
ம்ருகமத மதனைம கிழ்ந்து பூசியெ
இலைசுருள் பிளவைய ருந்தி யேயதை யிதமாகக்-

1. திட்டே ரதம் - திண் தேர் ரதம்.

2. வரை ஏழை - பக்கம் 117 குறிப்பைப் பார்க்க. 3. மத்தா - மத்த.

4. "[illegible] பிரானை விரும்பி வழிபட்டால் ஆவியுள் நீங்கலன் [illegible]" [illegible] III 105. 3.

திண்ணிய தேர்களாகிய ரதங்களில் இருந்த அசுரர்கள் இறந்து விழச் சண்டைசெய்து, கடலைச் சுவறச் செய்து, மலை ஏழையும் பிளந்து நின்ற சித்தமூர்த்தியே! மேலுலகத்துத் தேவர்களுக்குத் தலைவனே! குறத்தி வள்ளியின் முலைமேற்சேர்ந்து சுக லீலைகளை (ஆடி) நறுமணம் அணிந்துள்ள பரிசுத்த மூர்த்தியே! உமையம்மைக்கு ஒரு முத்தென்ன முளைத்தும், குருநாதக் குழந்தையெனப் பேர் பெற்றும், ஓடி விளையாடிக் கடப்பமலரை அணிந்துள்ள திருமார்பனே!

களிப்பு மதங்கொண்ட களிற்றின் (கஜமுகக் கடவுள் கணபதியின்) பின்பு உதித்த குகனே! குற்றச்செயல்கள் (நிறைந்த) இலங்கையில் தலைமை (உரிமை) கொண்ட ஒப்பில்லாத முட்டாள்களான அரக்கர்களின் தலைகள் அற்று விழ அம்புகளைச் செலுத்திய மேகநிறத்தை உடையவரும், தாங்கி நிரம்ப மணங்கொண்ட மார்பில் அணைத்த ரகுராமருக்கு அன்புடைய மருமகனாகி –

(உலகோர் மாட்டு) வற்றாத தேன் போன்ற கருணையைப் பூண்டு, வேத நூல்களை (ஓதாமல்) ஓதித் தெரிந்து, தமிழை ஆய்ந்து, மாலைகளைத் (தேவாரப் பாமாலை களைத் தந்தைக்குச்) சூட்டிய அத்தனே! பரம்பொருளை இஃதென (உலகோர்க்கு) அறிவித்து, (அடியார்) ஆவியைச் சுற்றியுள்ள பேரொளியாய் அமைந்து, துதி நூல்களைப் பெற்றணிந்த வேலாயுதத்தை ஏந்தி விளங்கும் புயக் கூட்டத்தை உடையவனே,வாசனையுள்ள புனுகு சட்டம் (அல்லது வாசனைப் பண்டங்கள்) தடைப்படுதல் இல்லாத (முட்டுப்பாடு இல்லாது எப்போதும் கமழும்) திருப் பழநியில் வீற்றிருப்பதில் மகிழ்ந்து அடியார்களின் ஆவிக்குள் நின்று உலவிவரும் பெருமாளே!

(தமிழ்க் கவிதை பேசிப் பணிந்துருகு நேசத்தைத் கா
வரவேணும்.)

## 163

விளங்கும் கலவைகளின் நறுமணம் வீசக், கஸ்தூரியை மகிழ்ச்சியுடன் பூசியும், வெற்றிலைச் சுருளையும், பாக்கின் பிளவையும் (வெட்டுப் பாக்கையும்) உண்டும், அதை இன்பகரமான பேச்சுடன் —

கலவியி லவரவர் தங்கள் வாய்தனி
லிடுபவர் பலபல சிந்தை **மாதர்கள்**
கசனையை **விடுவது** மெந்த நாளது பகர்வாயே;

சிலைதரு குறவர்ம டந்தை நாயகி
தினைவன மதனிலு கந்த நாயகி
திரள்தன மதனில ணைந்த நாயக சிவலோகா

கொலைபுரி யசுரர்கு லங்கள் மாளவெ
அயிலயி லதனையு கந்த நாயக
குருபர **பழநி**யி லென்று மேவிய பெருமாளே.(64)

## 164. அகப்பொருள் (நற்றாயிரங்கல்)

தனதனன தந்த தனதனன தந்த
தனதனன தந்த தனதான

இலகுகனி மிஞ்சு மொழியிரவு துஞ்சு
மிருவிழியெ னஞ்சு முகமீதே

இசைமுரல்சு ரும்பு மிளமுலைய ரும்பு
மிலகியக ரும்பு மயலாலே;

நிலவிலுடல் வெந்து கரியஅல மந்து
நெகிழுமுயிர் நொந்து மதவேளால்-

நிலையழியு நெஞ்சி *லவர்குடிபு குந்த
**நினைவொடுமி** றந்து **படலாமோ;**

*அவர் - கிளவித் தலைவராகிய நாயகர்.

காமலீலை செய்யும்பொழுதில் (தம்மிடம் வந்துள்ள) அவரவருடைய வாயில் இடுபவரும், பலபல எண்ணங்களை உடையவருமான (பொது) மகளிர்மீதுள்ள பற்றை (நான்) விடும் நாள் எந்தநாள் என்று சொல்லியருளுக.

(வள்ளிமலை) தந்த குறவர் மகளாம் நாயகி, தினைப்புனத்தில் விருப்பங்கொண்ட நாயகி - (ஆகிய) வள்ளிநாயகியின் திரண்ட கொங்கையை அணைந்த நாயகனே! சிவலோகனே!

கொலைத்தொழிலே புரியும் அசுரர் குலங்கள் மாண்டழியவே கூரிய வேலை மகிழ்ந்து ஏந்தும் நாயகனே! குருபரனே! **பழநியில்** என்றும் விரும்பி வீற்றிருக்கும் பெருமாளே!

*(மாதர்கள் கசனையை விடுவதும் எந்தநாள் அது பகர்வாயே.)*

# 164

விளங்கும் பழத்தின் சுவைக்கும் மேம்பட்ட மொழியும், இரவில் தூங்கும் இரு கண்களென்னும் நஞ்சும், முகத் (தாமரையின்) மேலே —

இசை ஒலிக்கும் வண்டும், இள முலையாகிய அரும்பும், விளங்கும் கரும்பு (போன்ற தோளும்) (கொண்ட என் மகள்) (அல்லது கரும்பு அன்ன என் மகள்) (தலைமகன் மாட்டுக்கொண்ட) மோகத்தால் —

நிலவின் குளிர்ச்சியும் சூடாக எரிக்க, உடல் வெந்து கரிந்து போம்படி வேதனைப்பட்டும், நெகிழ்ச்சியுறும் உயிர் நொந்தும்-காமத்தை ஊட்டும் மன்மதனால் —

(தனது) நிலை அழிந்துபோகும் நெஞ்சில் தலைமகன் (நாயகன்) வந்து குடிபுகுந்த அந்த நினைவு (ஒன்றையே) கொண்டு இறந்துபடுதல் நீதியா? (நாயகனாகிய நீ வந்து உன்னையே நினைந்து நையும் இவளுக்கு அருள்புரிய வேண்டும்- என்றபடி).

புலவினைய ளைந்து படுமணிக லந்து
புதுமலர ணிந்த கதிர்வேலா-

புழுகெழம ணந்த குறமகள்கு ரும்பை
பொரமுலையு டைந்த தொடைமார்பா;

பலநிற மிடைந்த விழுசிறைய லர்ந்த
பருமயில டைந்த குகவீரா-

[1]பணைபணிசி றந்த தரளமணி சிந்து
பழநிமலை வந்த பெருமாளே. (65)

## 165. பொதுமகளிர் இணக்கம் அற ஆண்டருள

தனத்தான தனதனன தனத்தான தனதனன
தனத்தான தனதனன தனதான

உயிர்க்கூடு விடுமளவும் உமைக்கூடி மருவுதொழில்
ஒருக்காலு நெகிழ்வதிலை யெனவேசூள்-

உரைத்தேமுன் மருவினரை வெறுத்தேம திரவியம
துடைத்தாய்பின் வருகுமவ ரெதிரேபோய்ப்;

[2]பயிற்பேசி யிரவுபகல் அவர்க்கான [3]பதமைபல
படப்பேசி யுறுபொருள்கொள் விலைமாதர்-

[4]படப்பார வலைபடுதல் தவிர்த் தாள [5]மணிபொருவு
பதத்தான மயிலின்மிசை வரவேணும்;

---

1. பணை - மூங்கில்.

2. 'பயில் பலவும் பேசி' - பதினோராந் திருமுறை; ஆளுடை திருவுலா 112.

3. பதமை - பதங்களை: வார்த்தைகளை.

4. படம்- பாம்பின் படம், சீலை; பாரம் - கொங்கை - விநாயகர் துதி - 4 - பார்க்க.

5. மணி பொருவு பதத்தான மயில் - மயிலின் கால்களில் மணி கட்டி யிருத்தல் -"மயில் மணிகள் சத்திக்க நிர்த்தமிட" (147.)

புலாலை (மாமிசத்தை)க் கலந்து, ஒலிக்கின்ற மணியுடனே, புது மலர்களைச் சூடியுள்ள ஒளி செய்யும் வேலை ஏந்தினவனே!

புனுகு நறுமணம் வீச மணந்துகொண்ட குறமகள் வள்ளியின் தென்னங் குரும்பை போன்ற கொங்கைகள் தாக்குதலால் மொட்டு விரிந்த மாலை மார்பனே!

பல நிறங்கள் நெருங்கியதாய், விழுந்துபோகும் தன்மையை உடைய சிறகுகள் பரந்து ஒளிரும் பருத்த மயிலை அடைந்துள்ள குக வீரனே!

மூங்கில்கள் வேலைப்பாட்டுக்குத் தக்கதான சிறந்த முத்து மணிகளை உதிர்க்கும் பழநி மலையில் வந்து அமர்ந்துள்ள பெருமாளே!

(அவர் குடிபுகுந்த நினைவொடும் இறந்து படலாமோ!)

## 165

உயிர் (இவ் வுடம்பெனும்) கூட்டை விடும் வரையில் (உயிர் உள்ள அளவும்) உம்மைக் கூடியிருக்கும் தொழிலை ஒரு போதும் நழுவ விடுவதில்லை என்று சபத மொழியைக்—

கூறி, முன்பு தாம் சேர்ந்திருந்தவரை வெறுத்து (விலக்கி), (எனது) பொன் முதலிய திரவியங்களை (சேமநிதிப் பொருளை எல்லாம்) அடையப் பெற்று, பின்னர் வருபவர்களின் எதிரே போய் —

இரகசியப் பேச்சுக்களை (ஜாடைப் பேச்சுக்களைப்) பேசி இரவும் பகலும் அவர்களுக்கு இஷ்டமான வார்த்தை களைப் பலவிதமாகப் பேசி, அவர்களிடம் உள்ள பொருள்களைக் (கொள்ளை) கொள்ளும் விலைமாதர்-களுடைய —

படவலையிலும் (பாம்பின் படம்போன்ற அல்குல் வலையிலும்) பார வலையிலும் (கொங்கை வலையிலும்) - (அல்லது சீலை அல்லது சட்டையணிந்த கொங்கை வலையிலும்) படுதலைத் தவிர்த்து என்னை ஆண்டருள மணிபுனைந்துள்ள பதங்களைக் (கால்களைக்) கொண்ட (அல்லது கால்களையும் ஊக்கத்தையும் உடைய) மயிலின் மேல் வந்தருள வேண்டும்.

தயிர்ச்சோர னெனுமவுரை வசைக் [1]கோவ வனிதையர்கள்
தரத்தாடல் புரியுமரி மருகோனே-

தமிழ்க்காழி மருதவன மறைக்காடு [2]திருமருகல்
தநுக்கோடி வருகுழகர் தருவாழ்வே;

[3]செயிற்சேல்விணுடுவினொடுபொரப்போய்[4]விமமர்பொருது
செயித்தோடி வருபழநி யமர்வோனே-

தினைக்காவல் புரியவல குறப்பாவை முலைதழுவு
திருத்தோள அமரர்பணி பெருமாளே. (66)

## 166. ஆசை அற

தனதனன தனதனன தானத் தானத் தனதான

ஒருபெழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே-
உனதுபழநிமலையெனு மூரைச் சேவித் தறியேனே:

பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே-
பிறவியற நினைகுவனெ னாசைப் பாடைத் தவிரேனோ;

---

1. கோவ வனிதையர் - கோபிகா ஸ்திரிகள். கண்ணபிரான் மாதர்கள் ஆடையைக் கவர்ந்த திருவிளையாடல் முதலிய:

"இடை மகளிர் குவிந்து தடங் குடைவார் பூந்துகில் வார் பூம்புயல்" வேல் வாங்கு வகுப்பு.

"இடையர் மாதுடன் கூடி விளையாடு சம்போக திருமார்பகன்" திருப்புகழ் 374).

"வட குல கோபாலர்தமொரு பதினாறாயிரம் வனிதையர் தோள் தோய் தரும்... நாராயணன் (திருப்புகழ் 583).

2. திருமருகல் - நன்னிலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து $7\frac{1}{2}$ மைல் (வழியில் 4 மைலில் திருப்புகலூர் இருக்கிறது):தேவாரம் பெற்ற ஸ்தலம், விஷந் தீண்டி இறந்த செட்டிப் பிள்ளையைச் சம்பந்தர் உயிர்ப்பித்தருளிய ஸ்தலம்.

தநுக்கோடி - ராமேசுரத்திலிருந்து 12 மைல் - ஸ்நாந கட்டம் இது தநுக்கோடி ரெயில் ஸ்டேஷனிலிருந்து 2மைல்.

"நீடு தநுக்கோடியினை நினைந்தாலும் புகழ்ந்தாலும் நேர் கண்டாலும் வீடு பெறல் எளிதாகும்" - (சேது புராணம் தநுக்கோடிச் சருக்கம்2.)

குழகர் - வேதாரணியத்திற்குத் தெற்கே 6 மைலில் உள்ள தலம் கோடி. இது 'குழகர் கோயில்' என வழங்கும்.

3. செய்யில் சேல் - வயல்களி லிருக்குங் கெண்டை மீன்கள்.

4. விமமர் - விம்மு அமர்.

தயிரைத் திருடினவன் என்னும் மொழி நிந்தையை (நிந்தை மொழியை)ச் சொன்ன கோபிகாஸ்திரீகளிடம் விளையாடல் புரிந்த கண்ணபிரானின் மருகனே!

தமிழ்க்காழி (சம்பந்தரது திருநெறித் தமிழ் எனப்படும் செந்தமிழ்த் தேவாரத்துக்குப் பிறப்பிடமாய சீகாழி) திருவிடைமருதூர், வேதாரணியம், திருமருகல், தநுக்கோடி இத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபிரான் தந்த வாழ்வே (குமரனே!).

வயல்களிலிருக்கும் சேல்மீன்கள் வானத்தில் உள்ள நக்ஷத்திரங்களோடு போர் செய்யச் சென்று மிக்கு எழும் போரைப் புரிந்து வெற்றிபெற்றுத் திரும்பி ஓடிவரும் பழநித் தலத்தில் வீற்றிருப்பவனே!

தினைப்புனத்தைக் காவல் புரியவல்ல குறப்பாவையாம் வள்ளியின் கொங்கையைத் தழுவும் திருத்தோளனே! தேவர்கள் வணங்கும் பெருமாளே!

(ஆள மயிலின் மிசை வரவேணும்)

## 166

ஒருவேளைகூட உனது இரண்டு திருவடிகளில் அன்பு வைத்து அறிய மாட்டேன் —

உனது பழநிமலை என்னும் ஊரை வணங்கி அறியேன்;

பெரிய (இப்) பூமியில் உயர்வுள்ளதும் அருமை வாய்ந்ததுமான வாழ்க்கையை முற்றும் குறிக்கொள்கின்றேனில்லை;

(இவ்வாறு குறைகள் இருந்தும்) பிறவி ஒழியவேண்டுமென நினைக்கின்றேன் (அந்த நினைப்புள்ள நான்) என் ஆசைப் பாடுகளை (ஆசைகளை) விட்டொழிக்க மாட்டேனோ;

துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே-
தொழுதுவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே;

விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே-
விறன் மறவர் சிறுமிதிரு வேளைக்காரப்
பெருமாளே. (67)

## 167. சிவகதி பெற

தனதன தனன தான தனதன தனன தான
தனதன தனன தான தனதான

ஒருவரை யொருவர் தேறி யறிகிலர் மதவி சாரர்
ஒருகுண வழியுறாத பொறியாளர்-

உடலது *சதமெ னாடி களவுபொய் கொலைக ளாடி
உறநம னரகில் வீழ்வ ரதுபோய்பின்;

வருமொரு வடிவ மேவி யிருவினை கடலு ளாடி
மறைவரி னனைய கோல மதுவாக-

மருவிய பரம ஞான **சிவகதி †பெறுக நீறு**
வடிவுற அருளி பாத மருள்வாயே;

---

*சத மெ னாடி - சதம் என நாடி. +பெறுக - பெற.

†சிவகதி, திருநீறு, திருவடி - இம்மூன்றையும் தாம் இங்கு வேண்டியவாறே அருணகிரியார் பெற்றனர் என்பதற்குச் சான்று:-

"சிவப்பேறுக்குக் கடையேன் வந்துட்புகச், சீர்வைத்துக் கொள்(ள்)ளும்..பெருமாளே" (திருப்புகழ் 587)

"அடியேன் துயர் தீர்ந்திட வெண்தழல் மாபொடி அருள்வோர்"(திருப்புகழ் 568)

"எனது தலையிற் பதங்கள் அருள்வோனே" (திருப்புகழ் 289, 513, 515, 814 - பாடல்களையும் பார்க்க.

கலக்கந்தரும் தொழில்களை (அல்லது பாவத் தொழில்களை)ச் செய்த அசுரருடைய ஊர்களைச் சூறையாடின (சுழற் காற்றுப்போல வீசி யழித்த) பெருமாளே!

தொழுது வழிபடுகின்ற அடியார்களுக்குக் காவற்காரனா யிருந்தும் உதவும் பெருமாளே!

வெற்றிக்கவிகளை (உலகுக்கு) உதவிய அற்புத மூர்த்தியாகிய (சம்பந்தப்)பெருமாளே!

வீரம் வாய்ந்த குறவர் சிறுமியாம் வள்ளிக்குக் *காவலா யிருந்து அவளுடன் பொழுதுபோக்கிய பெருமாளே!

(என் ஆசைப்பாட்டைத் தவிரேனோ)

## 167

ஒருவர் (சொல்வதை) மற்றொருவர் இன்னதென்று தேர்ந்து அறியமாட்டாதவர்களாகிய மத விசாரர்களும் ஒரு கொள்கை வழியில் நிலைத்து மனத்தினை உடையோர்களுமான (மக்கள்)-

(இவ்) வுடல் என்றும் நிலைத்து நிற்குமென எண்ணி. களவும், பொய்யும், கொலையும் செய்துகொண்டே வந்து (ஈற்றில்) யம (லோகத்து) நரகத்தில் வீழ்வர்; அந்த நிலை போன பின்னர் —

ஏற்படும் ஓர் உருவத்தை அடைந்து, நல்வினை - தீவினை என்னும் இருவினைகளாம் கடலில் உளைந்து மறைந்து போவர்! இத்தகையரது கோலம் அவ்வாறாக, (அடியேன் அங்ஙனம் எல்லாம் அலையாமல்)

பொருந்திய பரமஞான மயமான சிவகதியைப் பெறத் திருநீற்றை நல்ல நிலையை நான் பெற எனக்கு அருளி, (உனது) திருவடியைத் தந்தருளுவாயாக.

---

*வேளைக்காரன் -வேளை என்னும் சொல் 'பொழுது' 'தக்க சமயம்' என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. "குருவி ஓச்சிய.... திருமானை தொழுது என்றும் பொழுது போக்கிய பெருமாளே" -திருப்புகழ் 1181. "வேடர் சிறுக்கிக்கு நட்பொடு வேளை எனப்புக்கு நிற்கும் வித்தக" திருப்புகழ் 1186. பின்னும் - 198, 624, 1000, 1003, 1025, 1026, 1029, 1179, 1241, 1245 எண்ணுள்ள பாடல்களையும் காண்க. அருணகிரிநாதர் நூலாராய்ச்சி -பக்கம் 185 பார்க்க.

திரிபுர மெரிய *வேழ சிலைமத னெரிய மூரல்
திருவிழி யருள்மெய்ஞ் ஞான குருநாதன்-

திருசரஸ் வதிம யேசு வரியிவர் தலைவ ரோத
திருநட மருளு நாத னருள்பாலா;

சுரர்பதி யயனு மாலு முறையிட அசுரர் கோடி
துகளெழ விடுமெய்ஞ் ஞான அயிலோனே-

சுககுற மகள்ம ணாள னெனமறை பலவு மோதி
தொழமுது பழநி மேவு பெருமாளே. (68)

## 168. துதி

தனன தனதனன தனன தனதனன
தனன தனதனன தனதான

கடலை பொரியவரை பலகனி கழைநுகர்
கடின குடவுதர விபரீத

கரட தடமுமத நளின சிறுநயன
கரிணி முகவரது துணைவோனே;

†வட வரையின்முகடு அதிர வொருநொடியில்
வலம்வரு மரகத மயில்வீரா-

மகபதி தருசுதை குறமினொ டிருவரு
மருவு சரசவித மணவாளா;

அட லசுரர்கள்குல முழுது மடியவுய
ரமரர் சிறையைவிட எழில்மீறும்-

---

*வேழ சிலை மதன் -கரும்பாகிய வில்லையுடைய மன்மதன்.

†'பார்திசை வான முற்றும் பரியென நடாத்தலுற்றான்; மேருத்
தடவரை இடிய கலாபம் வீசி ஏகிற்றுத் தோகை மஞ்ஞை,'
கந்தபுராணம், சூரபன்மன் வதைப் படலம் 499, 500.

திரிபுரம் எரிந்து வீழவும், கரும்பு வில்லைக் கொண்ட மன்மதன் எரிந்து வீழவும், புன்சிரிப்பாலும் திருக்கண்களாலும் அருள்புரிந்த மெய்ஞ்ஞான குருநாதனும் —

இலக்குமி, சரஸ்வதி, மகேசுரி ஆகிய இவர்களது தலைவர்களாகிய திருமால், பிரமா, ருத்திரன் என்பவர்கள் ஓதிப் போற்ற திருநடனம் புரியும் நாதனும் - ஆன - சிவபிரான் அருளிய குழந்தையே!

தேவர் தலைவனும், பிரமனும், மாலும் ஓலமிட அசுர கோடிகள் தூளாமாறு செலுத்திய மெய்ஞ்ஞான வேலாயுதனே!

சுகம் பாலிக்கும் குறமகள் வள்ளியின் மணவாளன் என்று வேதங்கள் பலவும் போற்றி செய்து புகழ, பழைமை வாய்ந்த பழநியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சிவகதி பெற பாதம் அருள்வாயே)

## 168

கடலை, பொரி, அவரை, பலவகைப் பழங்கள், கரும்பு இவைகளை உண்ணும் வலிய வளைவு உள்ள தொப்பையையும் அதிசயமான —

மதம் பாய் சுவடு உள்ள இடங்கொண்ட மும்மதத்தையும், தாமரையிதழ் போன்ற சிறிய கண்களையும், யானை முகத்தையும் கொண்ட கணபதியின் சகோதரனே!

வடமலையாம் மேருவின் சிகரங்கள் அதிரும்படி ஒரு நொடிப் போதில் (உலகை) வலம்வந்த மரகத (பச்சை) மயில் வீரனே!

வேள்விக்குத் தலைவனான இந்திரன் தந்த மகளாம் தேவசேனை, குறமின்னாளாம் வள்ளி - என்னும் இருவருடனும் பொருந்திய (காம) லீலைகளைக் கொள்ளும் மணவாளனே!

வலிமை கொண்ட (அல்லது போர்செய்த) அசுரர்களுடைய குலம் முழுதும் மடியவும், சிறந்த தேவர்களுடைய சிறை நீங்கவும் அழகு மிகுந்த —

அருண கிரணவொளி யொளிரு மயிலைவிடு
மரகர சரவண பவலோலா;
படல வுடுபதியை யிதழி யணிசடில
பசுபதி வரநதி அழகான-
பழ நிமலையருள் செய் மழலை மொழிமதலை
பழநி மலையில்வரு பெருமாளே (69)

## 169. திருவுருவத்தை மறவாமை

தனன தனத்த தானன தனன தனத்த தானன
தனன தனத்த தானன தனதான

கதியை விலக்கு மாதர்கள் புதிய இரத்ன பூஷண
கனதன வெற்பு மேல்மிகு மயலான-
கவலை மனத்த னாகிலும் உனது ப்ரசித்த மாகிய
*கனதன மொத்த மேனியு முகமாறும்;
அதிபல வஜ்ர வாகுவும் அயில்நுனை வெற்றி வேலதும்
அரவு பிடித்த தோகையு முலகேழும்-
அதிர வரற்று கோழியும் அடியர் வழுத்தி வாழ்வுறும்
அபிநவ பத்ம பாதமு மறவேனே;
†இரவி குலத்தி ராசத மருவி யெதிர்த்து வீழ்கடு
ரணமுக சுத்த வீரிய குணமான-
இளைய வனுக்கு நீண்முடி அரசது பெற்று வாழ்வுற
இதமொ டளித்த ராகவன் மருகோனே;

---

*கனகம் தொத்த' என்றும் பாடம்.

+இர என்பது கதி, அதி, பதி என்னும் முன் பின் அடிகளுக்கு மாறாக உற்றிருத்தலால் அது எதுகை வழு அன்றோ எனின், அன்று; இந்நூல் ஆரிடத்தை ஒத்தது; ஆதலால் தண்டி யலங்கார ஒழிபியலிற் கூறிய வழுவஃமைதியாம் என்க. ஆரிடம் என்பது இருடிகள் வாக்கு.

" இதய கவட்டு வாலிதன் உரமற விட்ட வாளிய
ரணமுக சுத்த வீரிய குணமான
இளையவனுக்கு நீண்முடி உதவியொர் சத்ய வாசிதன்
இரத நடத்து சாரதி மருகோனே"

என்றும் பாடம்.

† இரவி - சூரியன். கூறு-சுக்கிரீவன். திருப்புகழ், 8 பார்க்க.

சிவந்த கதிரொளி வீசும் வேலாயுதத்தைச் செலுத்திய சிவ சரவணபவனே! திருவிளையாடல்கள் புரிபவனே!

கூட்டமான நக்ஷத்திரங்களுக்கு நாயகனான சந்திரனையும் கொன்றைமலரையும், அணிந்த சடையை உடைய சிவனும், கங்கையும், அழகிய —

பழைய நிர்மலியாம் பார்வதியும் அளித்தருளிய (பெற்ற) மழலை மொழியை உடைய குழந்தையே! பழநி மலையில் எழுந்தருளியிருக்கும் பெருமாளே!

## 169

நற்கதியை அடையமுடியாத வண்ணம் தடுக்கின்ற (பொது) மகளிரின் புதிய ரத்னாபரணங்கள் அணிந்துள்ள கனத்த கொங்கை மலைமேல் மிகுதியாக வைத்த மயக்க அறிவால் உண்டான —

கவலைகொண்ட மனத்தை(நான்) உடையவனாயிருந்த போதிலும், உனது பேர்பெற்ற தங்க நிதி போன்ற திருமேனியையும், முகங்கள் ஆறினையும்-

அதிக பலங்கொண்ட வைரமணி போலத் திண்ணிதான திருப்புயங்களையும், கூரிய நுனியை உடைய வெற்றிவேலையும், பாம்பைப் பிடித்துள்ள கலாப மயிலையும், உலகு ஏழும் —

அதிரும்படியாகக் கூச்சலிடும் கோழியையும்,அடியார்கள் போற்றி நல்வாழ்வைப் பெறும் (என்றும்) புதிய தாமரை மலரன்ன திருவடியையும் மறக்கமாட்டேன்;

சூரிய சம்பந்தமுள்ளவனாய், ரஜோ குணம் கொண்டவனாய் (அண்ணன் வாலியுடன்) எதிர்த்துத் தோற்று நின்ற கொடிய போர்க்களத்தில் சுத்த வீரம் வாய்ந்த குணத்தினனான —

தம்பியாகிய சுக்கிரீவனுக்குப் பெரிய அரசாட்சியைப் பெற்று வாழுமாறு அன்புடன் உதவிபுரிந்த ராகவன் (ஸ்ரீ ராம பிரானின்) மருமகனே!

*பதினொரு ருத்தி ராதிகள் தபனம் விளக்கு மாளிகை
பரிவொடு நிற்கு மீசுர சுரலோக-

பரிமள கற்ப காடவி அரியளி சுற்று பூவுதிர்
**பழநி** மலைக்குள் மேவிய பெருமாளே. (70)

## 170. திருவடி பெற

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான

கரிய மேகம தோ இரு ளோகுழல்
அரிய பூரண மாமதி யோமுகம்
கணைகொ லோஅயில் வேலது வோவிழி யிதழ்பாகோ-

கமுகு தானிக ரோவளை யோகளம்
அரிய மாமல ரோதுளி ரோகரம்
கனக மேரது வோகுட மோமுலை மொழிதேனோ;

கருணை மால்துயி லாலிலை யோவயி
றிடைய தீரொரு நூலது வோவென
கனக மாமயில் போல்மட வாருடன் மிகநாடி-

கசட னாய்வய தாயொரு நூறுசெல்
வதனின் மேலென தாவியை நீயிரு
**கமல மீதினி லேவர வேயருள் புரிவாயே;**

---

*பதினொரு ருத்திரர்:- மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீல லோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன் (பிங்கலம்).

பதினொரு ருத்திராதிகளின் ஒளி விளங்கும் திருக்கோயிலில் அன்புடன் எழுந்தருளியிருக்கும் ஈசுரனே! தேவ லோகத்தில் உள்ள —

நறுமணம்வீசும் கற்பகக் காட்டில், வரி பொருந்திய வண்டுகள் சூழ்ந்து மொய்ப்பதால் (அக்கற்பக விருக்ஷத்தின்) மலர்கள் உதிரப் பெற்ற பழநி மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(*மேனியும், முகமாறும், வாகுவும், வேலதும்,
தோகையும், கோழியும், பாதமும் மறவேனே.)

# 170

கரிய மேகமோ அல்லது இருளோ கூந்தல்; அருமையான பூரணமான சிறந்த நிலவோ முகம்; அம்போ, கூரிய வேலோ கண்; இதழானது சர்க்கரையோ;

கமுகுக்குத் தான் ஒப்பாகுமோ, (அல்லது) சங்கோ கழுத்து; அரிய சிறந்த தாமரை மலரோ, தளிரோ கரம்; பொன் மலையாம் மேருவோ குடமோ கொங்கை; (பேசும்) பேச்சு தேனோ;

கருணை வடிவினனாம் திருமால் துயில் கொள்ளும் ஆலிலையோ வயிறு; இடையென்பது ஈர்க்குப்போல (நுண்ணியதோ அல்லது) ஒரு நூல் அளவினதோ (அல்லது, இரண்டொரு நூல் அளவினதோ)- என்றெல்லாம் கூறிப் - பொன் நிறத்த அழகிய மயில்போன்ற மாதர்களை மிகவும் விரும்பிக் —

குற்றமுள்ளவனாய், வயதேறி, ஒரு நூறு ஆவதிலும் மேலானதாகும் (சிறப்புற்றதாகும்) - (அதுதான் - இப்பொழுதே) என்னுடைய ஆவியை நீ உனது இரு தாமரையன்ன திருவடிகளிற் சேரும்படி அருள்புரிவாயாக; (அல்லது - வயதேறி) வயது ஒரு நூறு ஆவதின் (மேலாவது) பின்னராவது என்னுடைய உயிரை நீ உனது இரு தாமரைத் திருவடிகளின்மீது சேர அருள்புரிவாயாக —

---

*இப்பாடல் அருமையானது. முருகவேளுக்கு உரிய பன்னிரு உறுப்புக்களை (அங்கங்களை) (1. திருமேனி, 2-7. ஆறு திருமுகங்கள், 8. தோள், 9.வேல், 10.மயில், 11. கோழி, 12. திருவடி) மறவேன் எனக் கூறுகின்றது.

திரிபு ராதிகள் நீறெழவேமிக
மதனையேவிழியால்விழவேசெயும்
சிவசொ ரூபம கேசுர னீடிய தனயோனே-

சினம தாய்வரு சூரர்கள் வேரற
*அமரர் வானவர் வாடிடு தேவர்கள்
சிறைகள் மீளவு மேவடி வேல்விடு முருகோனே;

பரிவு சேர்கம லாலய சீதன
மருவு வார்திரு மாலரி நாரணர்
பழைய மாயவர் மாதவ னார்திரு மருகோனே-

பனக மாமணி தேவிக்ரு பாகரி
குமர னேபதி னாலுல கோர்புகழ்
பழநி மாமலை மீதினி லேயுறை பெருமாளே (71)

## 171. சிவபதம் பெற

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் தனதான

கரியிணைக்கோடெனத் தனமசைத் தாடிநற்
கயல்விழிப்பார்வையிற் பொருள்பேசிக்-

கலையிழுத் தேகுலுக் கெனநகைத் தேமயற்
கலதியிட் டேயழைத் தணையூடே

---

*அமரர் - வானவர், தேவர்: வானவர் அமரர் - தேவர்தும் பொதுப்பெயர் (பிங்கலம்); எனினும் மூவரும் வெவ்வேறு வகையினர் போலும்: அமுதம் உண்டு இறத்தலைக் கடந்தவர் அமரர்: வானில் உறைபவர் வானவர்; தேவர் என்பார் அஷ்ட (8) வசுக்கள், துவாதச (12) ஆதித்தர், ஏகாதச (11) ருத்திரர், அச்சுவினிகள் (2), ஆக முப்பத்து முத்தேவர்: தேவாரத்திலும் இவ்வேறுபாடு காணலாகும்-

'தேவரும் அமரர்களும்......யாவரும் அறியாததோர்......தழலுருவினார்' சம்பந்தர் *214 - 6.*

'அண்ட வானவர்களும் அமரரும் ...பணிய' - சம்பந்தர் *347 - 7*

'[illegible] ....அமரர்கள் போற்ற' சம்பந்தர்*376 - 4.*

திரிபுரத்திலுள்ளோர் தூளா மாறும், மிக்கு வந்த அந்த மன்மதனைக் கண்ணால் (விழித் தீயால்) (இறந்து) விழுமாறும், செய்த சிவ சொரூப மகேசுரனுடைய (பெருமை) மிக்க குமரனே! —

கோபத்துடன் வந்த சூரர்கள் வேர் அறும்படியும், அமரரும், வானவரும், வாட்டமுற்றிருந்த தேவர்களும் சிறையி னின்று விடுபடும்படியும், கூரிய வேலைச் செலுத்திய முருகோனே!

அன்பு பூண்டவளாய், தாமரையே இருப்பிடமாகக் கொண்டுள்ள இலக்குமியின் கொங்கையைக் கூடுபவராம் திருமால், ஹரி நாராயணர், பழைய மாயவர் - ஆகிய மாதவமூர்த்தியின் அழகிய மருகனே!

பாம்பாகும் அணியைப் பூண்ட (அல்லது பாம்பின் சிறந்த மணியைப் புண்ட) தேவி, கிருபாகரி (ஆகிய பார்வதி)யின் குமரனே! பதினான்கு உலகத்தவரும் புகழ் கின்ற பழநி மாமலை மேல் உறைகின்ற பெருமாளே!

(இருகமல மீதினிலே வரவே அருள் புரிவாயே.)

## 171

யானையின் இரு மருப்பென்னும்படி கொங்கைகளை அசைத்து, ஆடி, நல்ல கயல்மீன் போன்ற கண் பார்வை கொண்டே (தமக்கு அளிக்க வேண்டிய) பொருள் அளவைப் பேசி —

ஆடையை யிழுத்தும், குலுக்கென நகைத்தும், மயக்கக் கேட்டைக் கொடுத்தழைத்துப், படுக்கையிலே —

செருமிவித் தாரசிற் றிடைதுடித் தாடமற்
றிறமளித் தேபொருட் பறிமாதர்-

செயலிழுக் காமலிக் கலியுகத் தேபுகழ்ச்
**சிவபதத் தேபதித்** **தருள்வாயே;**

திரிபுரக் கோலவெற் பழல்கொளச் சீர் நகைச்
சிறிதருட்டேவருட் புதல்வோனே -

திரைகடற் கோவெனக் குவடுகட் டூள்படத்
திருடர்கெட் டோடவிட் டிடும்வேலா;

பரிமளப் †பாகலிற்கனிகளைப்பீறிநற்
படியினிட் டேகுரக் கினமாடும்-

**பழநி**யிற் சீருறப் புகழ்குறப் பாவையைப்
பரிவுறச் சேர்மணப் பெருமாளே.(72)

## 172. திருவடி பெற

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான

*கருகி யகன்று வரிசெறி கண்கள்
கயல்நிக ரென்று துதிபேசிக்-

கலைசுரு ளொன்று மிடைபடு கின்ற
கடிவிட முண்டு பலநாளும்;

விரகுறு சண்ட வினையுடல் கொண்டு
விதிவழி நின்று தளராதே-

விரைகமழ் தொங்கல் மருவிய துங்க
விகபத **மென்று** பெறுவேனோ;

---

*நகை சிறிதருள் தேவு - புன்னகை செய்த சிவபிரான்.

பாகல் -பலா: பழநிமலைப்படிகளிற் குரங்குகள் விளையாடுவதை இன்றும் காணலாகும், பலாப்பழத்தைக் குரங்குகள் கீறி உண்பதைப் 'பலவின் இருஞ்சுளைகளும் கீறி நாளும் முசுக்கிளையோடு உண்டு உகளும் கேதாரமே' - எனவரும் தேவாரத்திலும் காண்க - (சம்பந்தர் -250 -6).

†'கருமுகில் கொண்டை' எனவும் பாடம்.

நெருங்கி விந்தையான சிற்றிடை அசைந்து ஆட நிரம்பத் (தங்கள்) உபாயங்களைக் காட்டி (அல்லது - உடம்பைத் தந்து) பொருளைப் பறிக்கின்ற (வேசை) மகளிர் தம் —

(சூழ்ச்சிச்) செயல்கள் (என்னை) இழுக்காத வண்ணம் இந்தக் கலியுகத்தே புகழப்படுகின்ற சிவபதவியில் (என்னை) பொருந்தவைத் தருள்புரிவாயாக.

திரிபுரம் எனப்படும் விசித்ர மலையன்ன புரங்கள் தீப்பற்றும் படி அருமை வாய்ந்த நகையைச் சிறிது அருளிய தேவராம் (சிவபிரான்) அருளிய புதல்வனே!

அலைகடல் கோ என்று அலறவும், மலைகள் (கிரவுஞ்சமும் *எழு கிரியும்) தூள் படவும், (அம் மலைகளில் இருந்த) திருட்டு அசுரர்கள் ஓடி மாளவும் செலுத்திய வேலனே! —

நறுமணமுள்ள பலாப்பழங்களைக் கீறி (அவைகளை) அழகிய (மலைப்) படிகளிற் போட்டுக் குரங்கின் கூட்டங்கள் விளையாடும் —

பழநியிற் கீர்த்தி விளங்க, புகழப்படும் குறப் பாவையை (வள்ளியை) அன்புடன் அணைந்த மணவாளப் பெருமாளே!

(சிவ பதத்தே பதித்து அருள்வாயே.)

## 172

கருநிறங் கொண்டு, அகன்று, ரேகைகள் நிறைந்துள்ள கண்கள் கயல்மீனுக்கு ஒப்பென்று தோத்திரப் பேச்சுக்களைப் பேசி —

ஆடையின் சுருள் பொருந்தி நெருங்கிச் சேருதல் உற்ற காவல்கொண்ட விஷத்தை (கடிதட விஷத்தை -அல்குல் விஷத்தை) உண்டு (அனுபவித்து) பல நாள்கள்-

(கலக்கம் தரும்) உபாயங்கொண்ட கொடிய வினைக்கு ஈடான உடலைச் சுமந்து விதி போகின்ற வழியே நின்று (நான்) தளராமல் —.

நறுமணம் கமழும் பூமாலை பொருந்திய பரிசுத்தவிதமான (உனது) திருவடியை என்று பெறுவேனோ.

---

*எழுகிரி - பக்கம் 177 அடிக்குறிப்பைப் பார்க்க.

முருக கடம்ப குறமகள் பங்க
முறையென அண்டர் முறைபேச-
முதுதிரை யொன்ற வருதிறல் வஞ்ச
முரணசுர் வென்ற வடிவேலா;
பரிமள இன்ப மரகத துங்க
பகடித வென்றி மயில்வீரா-
*பறிதலை குண்டர் கழுநிரை கண்டு
பழநி யமர்ந்த பெருமாளே (73)

## 173. உபதேசம் பெற

தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன
தனத்தனா தனதன தனதான

கருப்புவிலில் மருப்பகழி தொடுத்துமதன் விடுத்தனைய
கடைக்கணொடு சிரித்தணுகு
கருத்தினால் விரகுசெய் மடமாதர்-
கதக்களிறு திடுக்கமுற மதர்த்துமிக வெதிர்த்துமலை
கனத்தவிரு தனத்தின்மிசை
கலக்குமோ கனமதில் மருளாமே;
ஒருப்படுதல் விருப்புடைமை மனத்தில்வர நினைத்தருளி
யுனைப்புகழுமெனைப்புவியில்
†ஒருத்தனாம் வகைதிரு அருளாலே-

---

*பறிதலை குண்டர் - சமணர். "சமணர் குருவாக ஒருவனை ஆக்கும்போது "இப்துக் பிற்சுக் (இப்போது துக்கம் - பின்பு சுகம்) என்ற சொற்களை மந்திரமாகக் கூறிக்கொண்டு குருமார் பலரும் அவனைச் சூழ்ந்து அவனது தலையின் மயிர்களை ஒவ்வொன்றாகப் பறித்தல் அவர்களுள் ஒரு வழக்கென்ப."(பெரியபுராண விரிவுரை - திரு. C. K. S. அவர்கள் நாவுக்கரசர் புராணம் பக்கம் *61*). சிந்தாமணி *2637*. "தங்குஞ்சி வண்கையாற் .. பறித்தலில்" *2820*.

†உலகத் தொரு நீ யாகத் தோன்ற, விழுமிய பெறலரும் பரிசில்' திருமுருகாற்றுப்படை.

" என்னையும் ஒருவ னாக்கி - இருங்கழல் சென்னியில் வைத்த சேவக போற்றி" திருவாசகம் - போற்றி அகவல்

முருகனே! கடம்பனே! குறமகள் பங்கனே! ஓலமென்று தேவர்கள் ஓலமிட —

பழமையான கடல் போலப் பரந்து வந்த - வலிமையும் வஞ்சகமும் பகைமையும் பூண்ட அசுரர்களை வென்ற கூரிய வேலனே!

நறுமணம் போல இன்பத்தைத் தருவதும், பச்சை நிறங் கொண்டதும், பரிசுத்தமும், வலிமையும், நன்மையும், வெற்றியும் கொண்டதுமான மயில் வீரனே!

தலைமயிரைப் பறிக்கின்ற இழிந்தோராம் (சமணரை) கழுமுனை வரிசையில் ஏறச் செய்து பழநியில் வீற்றிருக்கும் பெருமாளே.

(துங்க வித பதம் என்று பெறுவேனோ!)

## 173

கரும்பு வில்லில் மணம் வீசும் அம்புகளைத் தொடுத்து மன்மதன் செலுத்தினதுபோலக் கடைக்கண் நோக்குடன் சிரித்து, நெருங்கிக் கருத்துடன் உபாயச் செயல்கள் செய்கின்ற அழகிய மாதர்களின் —

கோபமுள்ள யானையும் திடுக்கிடும்படி செருக்குடன் செழித்து மிகவும் எதிர்த்து மலைபோலக் கனத்துள்ள இரண்டு கொங்கைகளின் மீது கலக்கங் கொள்ளும் மோக வெறியில் மயக்கங் கொள்ளாமல் —

ஒருமை அடைதலில் (ஒருவரிப் படுதலில்) விருப்ப உணர்ச்சி (என்) மனத்தில் உண்டாகும்படி (உனது) திருவுள்ளத்தில் நினைத்தருளி உன்னைப் புகழ்ந்து பாடும் என்னை இப் பூமியில் ஒருவனாம் படியான வகையை உனது திருவருளாலே —

உருத்திரனும் விருத்திபெற அநுக்கிரகி யெனக்குறுகி
*யுரைக்கமறை யடுத்து பொருள்
உணர்த்துநா ளடிமையு முடையேனோ;

பருப்பதமு முருப்பெரிய அரக்கர்களு மிரைக்குமெழு
படிக்கடலு மலைக்கவல
பருத்ததோ கையில்வரு முருகோனே-

பதித்தமர கதத்தினுட னிரத்னமணி நிரைத்தபல
பணிப்பணிருபுயச்சயில
பரக்கவே இயல்தெரி வயலூரா;

†திருப்புகழை யுரைப்பவர்கள் படிப்பவர்கள் மிடிப்பகைமை
செயித்தருளு ‡மிசைப்பிரிய
திருத்தமா தவர்புகழ் குருநாதா-

சிலைக்குறவ ரிலைக்குடிலில் புகைக்களக முகிற்புடைசெல்
திருப் பழநி மலைக்குளுறை
திருக்கைவே லழகிய பெருமாளே.(74)

குறிப்பு:- இப்பாடலில் ஒவ்வோ ரடியிலும் இறுதியிலுள்ள பாகத்தை எடுத்தமைக்க அடியில் வருமாறு ஒருபாடலாமாறும் .எஞ்சியவையும் பிறிதொரு பாடலாமாறுங் காண்க. இந்தப் பாட்டு 'கரந்துறை பாடலுக்கு' எடுத்துக் காட்டாகும்.

கருத்தினால் விரகுசெய் மடமாதர்-
கலக்குமோ கனமதில் மருளாமே;

---

*அரனுக்கு உபதேசித்த மறையை அடியேனுக்கு உணர்த்து என அருணகிரியார் வேண்டுகின்றனர் - 397, 723, 1127, 1251 (திருப்புகழ்), 36 (கந்தரநுபூதி) - காண்க. இவ்விருப்பம் கைகூடினதைக் கந்தலங்காரம் 9, 24 பாடல்களிற் காண்க.

† "திருப்புகழை உரைத்தவரை அடுத்தபகை அறுத்தெறிய உறுக்கி எழும் அறத்தை நிலை காணும்" - வேல் வகுப்பு.

‡முருகவேள் இசைப்பிரியர் - 'ராகவிநோத' கந் - அந்தாதி - 98 'எழீஇப் பாடும் பாட்டமர்ந்தோயே' - பரிபாடல் 14.

ருத்ர மூர்த்தியும் விளக்கம்பெற வேண்டி (எனக்கு உபதேசித்தருளுக என உன்னை) அணுகிக் கேட்க, (அவருக்கு நீ உரைத்த) இரகசியங்கொண்ட அப்பொருளை (அடியேனுக்கும்) நீ உணர்த்தும் படியான நாளொன்றை அடிமை பெறலாகுமோ (அத்தகைய நாள் அடியேனுக்குக் கிட்டுமா?)

மலையையும், உருவிற் பெரியராம், அரக்கர்களையும், ஒலிக்கின்ற ஏழு பூமியையும், (அல்லது ஏழு வகையான) கடல்களையும் அலைத்துக் கலக்க வல்ல பருமையுள்ள மயில்மீது வரும் முருகனே!

பதிக்கப்பெற்ற மரகதத்தினுடன் ரத்ன மணிகள் வரிசையில் அமைக்கப்பெற்ற பல ஆபரணங்களை அணிந்துள்ள பன்னிருபுய மலைகளை உடையவனே! விரிவாக இயற்றமிழ் உணர்ந்த வயலூர் முருகனே!

*திருப்புகழை உரைப்பவர்களுடையவும், படிப்பவர் களுடையவும் வறுமையையும், பகையையும் தொலைத்து வெற்றி தந்தருளும் இசைப்பிரியனே! திருந்திய ஒழுக்கத்தை உடைய சிறந்த தவத்தினர் புகழ்கின்ற குருநாதனே!

வில்லை ஏந்திய குறவர்களுடைய ஓலைக் குடிசையிலும் (தழை வேய்ந்த குடிசைகளிலும்), புகைகளின் கருமைபோற் கரிய (அல்லது புகைகளின் கருமையைத் தன்னகத்தே கொண்ட) மேகங்கள் பக்கங்களில் தவழ்ந்து செல்லும் **திருப் பழநி மலையிலும்** வீற்றிருக்கும், திருக்கையில் வேல் ஏந்தும், அழகிய பெருமாளே!

(பொருள் உணர்த்துநாள் அடிமையும் உடையேனோ.)

(கரந்துறை பாடலின் பொருள்)

கருத்தொடு உபாயச்சொல் செய்கின்ற மடமாதர்களால் கலக்கம் அடையும் மோக மயக்கில் மயங்காமல்,

*திருப்புகழை உரைப்பவர், படிப்பவர் தம் வறுமை, பகை தொலைக்கும் முருகனே என்னாத இசைப் பிரியனே என்றதால் திருப்புகழை இசையின்றி ஓதுதலைக் காட்டிலும் திருப்புகழை இசையுடன் ஓதல் முருக வேலனுக்குப் பன்மடங்கு இன்பம் தரும் என்று தெரிகின்றது.

[1]ஒருத்தனாம் வகைதிரு வருளாலே-
உணர்த்து நா ளடிமையு முடையேனோ;
பருத்ததோ கையில்வரு முருகோனே-
பரக்கவே யியல்தெரி வயலூரா;
திருத்தமா தவர்புகழ் குருநாதா-
திருக்கைவே லழகிய பெருமாளே

## 174. திருவடி பெற

தனதனன தத்த தான தன தனன தத்த தான
தனதனன தத்த தான தனதான

கலைகொடு பவுத்தர் [2]காம கருமிகள் துருக்கர் [3]மாய
[4]கபிலர்பக ரக் [5]கணாதர் [6]உலகாயர்-
கலகமிடு தர்க்கர் [7]வாம [8]பயிரவர் விருத்த ரோடு
கலகலென மிக்க நூல்க ளதனாலே;

1. இவ்வேண்டுகோளை 413,563 - பாடல்களிலும் காண்க. முருகன் கடைக்கண் இயலையும், அயிலையும், மயிலையும் நினைத்திருந்தால் "ஒருவன்" - ஆகலாம். (கடைக்கணியல் வகுப்பு)

2. கருமி - " தன் சாதி கருமமே பற்றி முத்தனாமவன் கருமி." (வேதா.சூ.14)

3. மாயா வாதத்தினர் - பிரபஞ்சம் யாவும் மாயையே யென்று கூறுங் கொள்கையர் - (உதாரணம்: அத்துவைத மதம்).

4. கபிலர் - கபிலரால் தாபிக்கப்பட்ட சாங்கிய மதத்தினர். சாங்கிய மதம்-தத்துவங்கள் இருபத்தைந்து எனக் கணக்கிடுவதான ஒரு சமயம் மணிமேகலை -27-202.)

5. கணாதர்- கணாதன் என்னும் முநிவரால் தாபிக்கப்பட்ட வைசேடிக மதத்தினர் (மணிமேகலை 27-79.)

6. உலகாயர் - இவர் சார்வாக மதத்தினர்; சார்வாகம் காட்சியே அளவை யாவதென்றும், நிலம், நீர், தீ, வெளி எனப் பூதம் நான்கே என்றும், அவற்றின் சேர்க்கையால் தோன்றிப், பிரிவதால் மாய்வதாய், அறிவு வெளிப்பட்டழியு மென்றும், மறுமையென்பது இல்லை என்றும் சரீரமே ஆன்மா என்றும், கடவுள் இல்லை என்றும், இன்பமும் பொருளுமே புருஷார்த்தங்களென்றும் சொல்லும் உலோகாயத மதம்.

7, 8, பக்கம் 403 பார்க்க

ஒருத்தனாகும்படி (உனது) திருவருளினால்

உணர்ச்சிகூடும் நாள் - அடிமைக்கும் கிடைக்குமோ!

பருத்த மயில்மீது வரும் முருகனே!

விரிவாக இயற்றமிழை உணர்ந்த வயலூரனே!

திருந்திய பெரிய தவத்தினர் புகழ்கின்ற குருநாதனே!

திருக்கையில் வேல் ஏந்தும் அழகிய பெருமாளே!

(*ஒருத்தனாம் வகை அடிமையும் உடையேனோ.)

## 174

தாம் கற்ற கலை கொண்டு பௌத்தர்களும், விரும்பிய தன் சாதிக்கு உரியனவாய்ச் சாஸ்திரம் விதித்த கிரியைகளைச் செய்வதே நியதி என்பவர்களும், முகமதியர்களும், மாயா வாதத்தினரும், கபிலரும், சொல்லப்பட்ட அந்தக் கணாதர்களும், உலகாயதர்களும் —

கலக்கத்துடன் தருக்கம் புரிபவரும், வாம மதத்தினரும், பயிரவரும், தம்மோடு மாறுபட்ட கொள்கையரோடு கலகல என்னுங் கூச்சலுடன் அதிக விதமான நூல்களின் மேற்கோள்களுடன் —

---

*ஒருவனாதல் - "தான் ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரியனாய்க் கேடின்றி" ஆதல் - (திருமுருகாற்றுப்படை நச்சினார்க் கினியர் உரை).

7. வாமம் - அனைத்துலகும் சத்தியின் பரிணாமமே என்றும், சத்தியுடன் லயித்தலே முத்தி யென்றும் கூறும் மதம்.

8. பைரவம் - சைவசமய வகைகளுள் ஒன்று. பைரவர் அவ்வகையை மேற்கொண்டவர்.

வாமமும் பைரவமும் உட்சமயம் ஆறினுட் சேர்ந்தவை. அவைதாம்-வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம், புறச்சமயம் ஆறு:- உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டா சாரியம்.

சிலுகி யெதிர் குத்தி வாது செயவுமொரு வர்க்கு நீதி
தெரிவரிய சித்தி யான வுபதேசந்-

தெரிதர விளக்கி ஞான தரிசந மளித்து வீறு
திருவடி யெனக்கு *நேர்வ தொருநாளே;

கொலையுற எதிர்த்த கோர இபமுக அரக்க னோடு
குரகத முகத்தர் சீய முகவீரர்-

குறையுட லெடுத்து வீசி யலகையொடு பத்ர காளி
குலவியிட வெற்றி வேலை விடுவோனே;

பலமிகு புனத்து லாவு குறவநிதை சித்ர பார
பரிமள தனத்தில் மேவு மணிமார்பா-

படைபொருது மிக்க †யூக மழைமுகிலை யொட்டி யேறு
பழநிமலை யுற்ற தேவர் பெருமாளே.(75)

## 175 . அருள் பெற

தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன தந்ததான

கனக கும்பமி ரண்டு நேர்மலை
யெனநெ ருங்கு குரும்பை மாமணி
கதிர்சி றந்தவ டங்கு லாவிய முந்துசூதம்-

‡கடையில் நின்றுப ரந்து நாடொறு
மிளகி விஞ்சியெ ழுந்த கோமள
களப குங்கும கொங்கை யானையை யின்பமாக;

* நேர்தல் - கொடுத்தல். "கரவாளை நேர்ந்தான் இடம் போலும்" -சம்பந்தர் - I 81-8.

† "மழையென் றஞ்சி......மந்தி.... மரமேறி முகில்பார்க்கும்
திருவை யாறே" - சம்பந்தர் - I - 130 - 1.

‡கடை - வாயில்.

சண்டையிட்டு, எதிர்தாக்கி, வாது செய்தும், ஒருவர்க்குமே உண்மை இதுதான் என்று தெரிதற்கு அரிதான சித்தி (வீடு) தரும் பொருளான உபதேசத்தை —

(யான்) அறியும்படி விளக்கி ஞான தரிசனத்தையும் அருளி மேம்பட்ட உனது திருவடியை எனக்குத் தந்தருளும் நாளும் ஒன்று உண்டோ —

கொலைகள் நேரும்படியாக எதிர்த்து வந்த கோரமான யானை முகங்கொண்ட அரக்கனாம் தாரகனுடன், குதிரை முகத்தர், சிங்க முகத்தர் ஆய (பல) வீரர்களின் —

குறைபட்ட உடலை எடுத்து வீசிப் பேயும், பத்ரகாளியும் மகிழ்ந்து களிக்க வெற்றி வேலைச் செலுத்தினவனே!

நல்ல விளைவுகொண்ட (தினைப்) புனத்தில் உலவி நின்ற குறப்பெண் (வள்ளியின்) அழகிய, கனத்த, நறுமண முள்ள கொங்கையிற் பொருந்திய அழகிய மார்பனே!

ஒன்றோடொன்று) போரிட்டு மிக்கெழுந்த பெண் குரங்குகள் (அல்லது கருங் குரங்குகள்) மழையைத் தரும் மேகத்தின் பொருட்டு (அஞ்சி) ஏறி (ஒளிக்கும்) பழநிமலையில் வீற்றிருக்கும் (பெருமாளே!) தேவர் பெருமாளே!

(திருவடி எனக்கு நேர்வதொரு நாளே!)

## 175

பொற்குடம் இரண்டுக்கு ஒப்பான மலையென்று சொல்லும்படி, நெருங்கியுள்ள குரும்பை (தெங்கின் இளங்காய்) போன்று, அழகிய மணிகளின் ஒளி சிறந்த மாலைகள் விளங்கினவாய், முற்பட்ட சூதான எண்ணத்துடன் (அல்லது முற்பட்டுச் சூதாடு கருவிபோன்ற கொங்கையுடன்),

(வீட்டு) வாயிலில் நின்று, பரந்தும், நாள்தோறும் நெகிழ்ந்தும், மேம்பட்டு எழுந்து விளங்கும் அழகிய கலவை யணிந்த குங்குமம் (தயங்கும்) கொங்கை யானையை இன்பத்துடன் —

அனைவ ருங்கொளு மென்று மேவிலை
யிடும டந்தையர் தங்கள் தோதக
மதின்ம ருண்டு *துவண்ட வாசையில் நைந்துபாயல்-

அவச மன்கொளு மின்ப சாகர
முழுகும் வஞ்சக நெஞ்சை யேயொழி
தருப தங்கதி யெம்பி ரானருள் தந்திடாயோ;

தனத னந்தன தந்த னாவென
டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை
தகுதி திந்திகு திந்த தோவென வுந்துதாளந்-

தமர சஞ்சலி சஞ்ச லாவென
முழவு டுண்டுடு டுண்டு டூவென
தருண கிண்கிணி கிண்கி ணாரமு முந்தவோதும்;

பணிப தங்கய மெண்டி சாமுக
†கரிய டங்கலு மண்ட கோளகை
பதறி நின்றிட நின்று தோதக என்றுதோகை-

பவுரி கொண்டிட மண்டி யேவரு
நிசிச ரன்கிளை கொன்ற வேலவ
‡பழநி யங்கிரி யின்கண் மேவிய தம்பிரானே(76)

---

* துவண்ட வாசையில் - துவண்டு அவ் ஆசையில்.

† 'கிரி' என்றும் பாடம்.

‡ பழநி யங்கிரி யெங்கு மேவிய என்றும் பாடம்.

எல்லாரும் கொள்ளுங்கள் என்று கூறி விலைக்கு விற்கும் மாதர்களின் வஞ்சகச் செயல்களில் மருட்சியுற்றுத் துவட்சி (வாடுதல்) அடைந்து அந்த ஆசையால் (உடல்) நைந்து, படுக்கையில் —

(மோக) மயக்கத்தை அதிகமாகக் கொள்ளும் இன்பக்கடலில் முழுகும் (எனது) வஞ்சக மனத்தைத் தொலைக்கவல்ல (உனது) திருவடியாகிய புகலை (நான் பெறுதற்கு) எம்பிரானே! நீ அருள்பாலிக்க மாட்டாயா?

தனத னந்தன தந்தனா என்றும், டிகுகு டிங்குகு டிங்கு என்றும் பேரிகை வாத்தியமானது தகுதி திந்திகு திந்ததோ என்றும் ஒலிக்க, பெருகி எழும் தாளமானது —

பேரொலியுடன் சஞ்சலி சஞ்சல எனச் சப்திக்க, முழவு (முரசு) வாத்தியம் டுண்டுடு டுண்டுடு என ஆரவாரிக்க, சிறிய கிண்கிணியானது கிண் என ஒலிக்கும் கிண்ணாரம் (சிறிய யாழ்) போல முற்பட்டொலிக்க —

பாம்பைத் தனது பாதத்திற் பூண்டதாய்ப், பெருமை பொருந்திய எட்டுத் திக்கிலுமுள்ள யானைகள் எல்லாமும், அண்ட உருண்டையும், அதிர்ச்சிகொண்டு கலங்கி நிற்கும்படி, எதிர்நின்று தோ - தக - என்று மயிலானது —

மண்டலமாய்க் கூத்தாட, நெருங்கிவந்த அசுரனது (சூரனது) கூட்டத்தைக் கொன்ற வேலவனே! பழநியங்கிரியில் வீற்றிருக்கும் தம்பிரானே!

(அருள் தந்திடாயோ!)

## 176. திருவடி தீக்ஷை பெற

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன தனதான

குருதி மலசல மொழுகு நரகுட
லரிய புழுவது நெளியு முடல்மத
குருபி நிணசதை விளையு முளைசளி யுடலூடே-

குடிக ளெனபல குடிகை வலிகொடு
குமர வலிதலை வயிறு வலியென
கொடுமை யெனபிணி கலக மிடுமிதை யடல்பேணி;

மருவி மதனனுள் கரிய புளகித
மணிய சலபல கவடி மலர்புனை
மதன கலைகொடு குவடு மலைதனில் மயலாகா-

மனது துயரற வினைகள் சிதறிட
மதன பிணியொடு கலைகள் சிதறிட
மனது பதமுற வெனது தலைபத மருள்வாயே;

நிருதர் பொடிபட அமரர் பதிபெற
நிசித அரவளை முடிகள் சிதறிட
நெறிய கிரிகட லெரிய வுருவிய கதிர்வேலா-

நிறைய மலர்பொழி யமரர் முநிவரும்
நிருப குருபர குமர சரணென
நெடிய முகிலுடல் கிழிய வருபரி மயிலோனே;

# 176

ரத்தம், மலம், சலம் இவை ஒழுகுகின்ற மனிதக் குடலையும் சிறிய புழுக்கள் நெளியும் உடலையும் கொண்டு, மதம் கொண்ட விகார ரூபங்கொண்டவனாய், கொழுப்பு, சதை, ஊறி எழும் சேறுபோன்ற சளி இவையெல்லாம் உடலினுள்ளே —

குடியிருப்பவர்கள் போலப் பலவும் குடிகொண்டு, பலமான குமர (கண்ட) வலி (ஒருவகை வலிப்பு நோய்), தலைவலி, வயிற்றுவலி எனப் பெயர் பூண்டு, கொடுமை என்னும்படி நோய்களெல்லாம் வேதனை செய்யும் இவ்வுடலைப் பலமாக விரும்பியவனாய் உள்ள நான் —

(மாதர்களுடன்) கலந்து, காமனுடைய உள்ளமும் (பொறாமையாற்) கரிந்துபோகப், புளகாங்கிதமும், மணிகளும் பூண்ட மலைபோன்றதும், பலகறை (யன்ன நகைகளும்), மலரும் புனைந்து காமசாத்திரத்திற் கூறியபடி, திரட்சி கொண்ட மலைபோன்றதுமான கொங்கைகளில் மயக்கம் கொள்ளாமல் —

மனது துயர் ஒழிய, வினைகள் சிதறுண்டு போக, காம நோயும், (கற்ற) (வீணான - காம) கலைகளும் (என்னை விட்டு) விலக, (என்) மனம் பக்குவநிலையை (சாந்த நிலையை) அடைய, என்னுடைய தலையில் (உனது) திருவடியைச் (சூட்டி) அருளுவாயாக.

அசுரர் பொடிபடும்படியும், தேவர்கள் (தங்கள்) ஊரைப் பெறும்படியும், கூரிய நாகாஸ்திரம், சக்ராயுதம் (ஆதிய எதிர்த்து வரும் படைகளின் உச்சிகள் சிதறுண்ணவும். (அல்லது அளையில் (புற்றில்) பாம்பு இருப்பதுபோல மலைக்குகைகளில் ஒளித்திருந்த) நிசிதர் (அசுரர்களின்) முடிகள் சிதறுண்ணவும் மலைகள் நெறுங்கிப் பொடிபடவும், கடல் எரியுண்ணவும் செலுத்தின ஒளி வேலனே!

நிரம்ப மலர்களைப் பொழிந்து தேவர்களும் முநிவர்களும் அரசே! குருபரனே! குமரனே! சரணம் எனப் பணிய, பெரிய மேகபடலம் கிழிபட்டு (பிரிந்து) தோன்றக் களித்தெழும் வாகனமாம் மயிலை உடையவனே!

பருதி மதிகனல் விழிய சிவனிட
மருவு மொருமலை யரையர் திருமகள்
படிவ முகிலென அரியி னிளையவ ளருள்பாலா-

பரம கணபதி யயலின் மதகரி
வடிவு கொடுவர விரவு குறமக
ளபய மெனவணை பழநி மருவிய பெருமாளே(77)

## 177. பெண்கள் மயக்கம் அற

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான

குழல டவிமுகில் பொழில்[1] வி ரவில்நுதல்
குமுத வதரமு றுவலாரம்-

குழைம கரம்[2]வளை மொழிகு யிலமுது
குயமு ளரிமுகை கிரிசூது;

விழிக யலயில்ப கழி[3]வ ருணிகரு
விளைகு வளைவிட மெனநாயேன்-

மிகவ ரிவையரை அவநெ றிகள் சொலி
வெறிது ளம்விதன முறலாமோ;

[4]கழல்ப ணியவினை [5]கழல்ப ணியையணி
கழல்ப ணியவருள் மயில்வீரா-

கமலை திருமரு க[6]மலை நிருதரு
கமலை தொளைசெய்த கதிர்வேலா;

---

1. விர வில் - வீர வில்.

2. வளை - வள்ளை : ஒருவித தண்டு.

3. வருணி - கடல்.

4. கழல் பணிய வினை - பண்ணிய வினை கழல.

5. கழல் பணியை யணி - வீரக்கழலையும், தண்டை, சிலம்பு முதலிய ஆபரணங்களையு மணிந்த.

6. மலை நிருத ருக - எதிர்த்த அசுரர் உதிர்ந்துபோக.

சூரியன், சந்திரன், அக்னி - என்னும் முச்சுடர்களையும் (மூன்று) கண்களாகக் கொண்ட சிவனுடைய இடது பாகத்தில் உள்ள ஒப்பற்ற பர்வத ராஜனது அழகிய மகள், (தனது) வடிவம் மேகம்போன்ற திருமாலின் தங்கை - அருளிய குமரனே!

பரம்பொருளான கணபதி (தனது) அருகே மதயானை உருவு கொண்டு வர, உடனிருந்த குறமகள் (வள்ளி) (நீயே) அபயமென்று உன்னை அணையப்பெற்ற பெருமாளே! பழநியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(எனது தலை பதம் அருள்வாயே!)

## 177

கூந்தலானது - காடு மேகம், பொழில்; வீரம் வாய்ந்த வில்- நெற்றி; குமுதமலர் (செவ்வாம்பல்) - வாயிதழ்; பற்கள்- முத்து;

மகர மீன்போன்ற குழையை அணிந்த செவி - வள்ளைக் கொடித் தண்டு; மொழி - குயிலும் அமுதமும்; கொங்கை - தாமரை மொட்டும், மலையும், சூதாடு கருவியும்;

கண்கள் - கயல் மீன்,வேல், அம்பு, கடல், கருவிகளை (காக்கணம், காக்கட்டான் பூ), குவளை மலர், விஷம்; -என்றெல்லாம் உவமை கூறி நாயடியேனாகிய நான் —

மிகவும் பெண்களைப் பயனற்ற வழிகளிற் புகழ்ந்து வீணாக உள்ளம் துக்கப்படலாமா!

பண்ணின வினைகள் கழல (நீங்கி ஒழிய), வீரக் கழல் ஆதிய பணிகளை (ஆபரணங்களை) அணிந்துள்ள (உனது) திரு வடியைப் பணிய அருள்புரிவாயாக, மயில் வீரனே! (அல்லது - உனது திருவடியைப் பணிய அருளின மயில் வீரனே!)

இலக்குமியின் திருமருகனே! (கிரௌஞ்சம், எழுகிரி என்னும்) மலைகளில் இருந்த அசுரர்கள் உக (அழிய) அந்த மலைகளைத் தொளை செய்த ஒளி வேலனே!

[1]பழனி [2]மலைவரு பழநி மலைதரு
பழநி மலைமுரு கவிசாகா-
[3]பரவு பரவை கொல் [4]பரவை வண அரி
பரவு மிமையவர் பெருமாளே.(78)

## 178. பொதுமகளிரின்மேலுள்ள ஆசை அற, திருவடி பெற

தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன தனதான

சிந்துர கூரம ருப்புச் செஞ்சரி
செங்கைகு லாவந டித்துத் தென்புற
செண்பக மாலை முடித்துப் பண்புள தெருவூடே-
சிந்துகள் பாடிமு ழக்கிச் செங்கய
லம்புகள் போல்வி ழித்துச் [5]சிங்கியில்
செம்பவ ளாடைது லக்கிப் பொன்பறி விலைமாதர்;
வந்தவ ராரென ழைத்துக் கொங்கையை
யன்புற மூடிநெ கிழ்த்திக் கண்பட
[6]மஞ்சணி ராடிமி னுக்கிப் பஞ்சணை தனிலேறி-
மந்திர மோகமெ ழுப்பிக் கெஞ்சிட
முன்றலை வாயி லடைத்துச் சிங்கிகொள்
மங்கைய ராசைவி லக்கிப் பொன்பத மருள்வாயே;

---

1. பழனி - கனியை யொத்தவள்.

2. மலைவரு பழ நிமலை - மலையரசனுக்குப் புத்திரியாக வந்த பழைய நிர்மலி.

3. பரவு பரவை கொல் - பரவிய சமுத்திரத்தின் மீது பாணப் பிரயோகஞ் செய்த. " இலங்காபுரிக்குப் போகைக்கு நீ வழிகாட்டென்று போய்க் கடல் தீக் கொளுந்த வாகைச் சிலை வளைத்தோன்" - (கந். அலங்காரம் 54). கடல் கடக்க அணைகட்ட வேண்டி ஸ்ரீராமபிரான் வருணன் வரவை எதிர்பார்க்க, அவன் வராததனால் கோபித்துக் கடல்மீது அத்திரத்தை எடுக்க வருணன் பயந்து வந்து ஸ்ரீராமரைச் சரணடைந்த வரலாறு இது.

4. பரவை வண அரி - கடல் வர்ணத்தையுடைய விஷ்ணு.

5. சிங்கி - சிங்கத்தின் இடைபோன்ற இடை.

6. மஞ்சள் நீராடி.

பழத்தை ஒத்தவளும், இமயமலையில் தோன்றியவளுமான (மலையரசன் புத்திரியாய் வந்த) பழைய நிர்மலியாகிய பார்வதி பெற்ற பழநிமலை முருகனே! விசாகனே!

பரந்துள்ள கடலின்மீது பாண ப்ரயோகஞ் செய்து அடக்கிய கடல் வர்ணத்தையுடைய திருமால் போற்றிப் பரவும் தேவர் பெருமாளே!

(உள்ளம் விதனம் உறலாமோ,)

## 178

யானையின் கூரிய தந்தம் (போன்ற கொங்கைகளும்) செவ்விய சரி (வளைகள்) உள்ள அழகிய கைகளும் விளங்க நடித்து,உற்சாகத்துடன் செண்பகப் பூமாலை முடித்து, அழகிய தெரு வழியில் —

சிந்து என்னும் இசைப்பா வகையிற் பாடல்கள் பாடி முழக்கம் செய்து, செவ்விய கயல்மீனும் அம்புபோலக் கண்களை விழித்து, இடையிற் சிவந்த பவளம்போன்ற ஆடையை விளக்கமுறப் புனைந்து, பொன்னைப் பறிக்கின்ற விலை மாதர்கள் —

வந்தவர்கள் ஆர் என (விசாரித்து) அழைத்துத் தங்கள் கொங்கைகளை அன்புடன் மூடியும், (கச்சுக்கட்டைத்) தளர்த்தியும், கண்ணில் தெரியும்படி மஞ்சள் நீராடி மினுக்கியும், பஞ்சு மெத்தை மீதிலேறி —

மந்திரம் போட்டதுபோல மோகத்தைக் கிளப்பிக், கெஞ்சும் படி வைத்து, முன்புறத்தில் உள்ள வாயிற் கதவை மூடி, நாணமின்மை கொண்ட (அல்லது - கூத்தாடுதலைக் கொண்ட) மங்கையர்மீது எனக்கு உள்ள ஆசையை விலக்கி (உனது) அழகிய திருவடியை அருள்வாயாக.

[1]இந்திர நீலவ னத்திற் செம்புவி
யண்டக டாகம ளித்திட் [2]டண்டர்க
ளெண்படு [3]சூரைய ழித்துக் கொண்டரு ளொருபேடி[4]-

இன்கன தேரைந டத்திச் செங்குரு
மண்டல நாடும ளித்துப் பஞ்சவ
ரின்புறு [5]தோழ்மையு டைக்கத் தன்திரு மருகோனே;

சந்திர சூரியர் திக்கெட் டும்புக
ழந்தமில் வாழ்வது பெற்றுத் தங்கிய
சங்கர னார்செவி புக்கப் பண்பருள் குருநாதா-

சம்ப்ரம மானகு றத்திக் கின்புறு
கொங்கையின் மேவுச மர்த்தச் சுந்தர
தண்டமிழ் சேர்பழநிக்குட் டங்கிய பெருமாளே.(79)

## 179. ஞானங் கூட

தானந்த தனன தான தானந்த தனன தான
தானந்த தனன தான தனதான

ஞானங்கொள் பொறிகள் கூடி [6]வானிந்து கதிரி லாத
நாடண்டி நமசி வாய வரையேறி-

1. இந்திர நீல வனம் - இவ்வனம் இந்திரனுக்குப் பிரியமானதும் அவனது காவல் பூண்டதுமான காடு. இது 'காண்டவம்' எனப்படும். இவ்வனத்தில் அரக்கர் பலர் இருந்தனர். இவ்வனத்தைத் தனக்கு உணவாகத் தரும்படி அக்கினிதேவன் வேண்ட அருச்சுனன் அங்ஙனமே அவ்வனம் அக்கினிக்கு இரையாக உதவினன். பாரதத்திற் காண்டவ தகனச் சருக்கம் பார்க்க.

2. நிவாத கவசர் முதலிய அவுணர்களைச் சிவாஸ்திரத்தால் வென்று தேவர்களுடைய துன்பத்தைத் தீர்த்தவன் அருச்சுனன் - பாரதத்தில் 'நிவாத கவச காலகேயர் வதைச் சருக்கம்'பார்க்க.

3. சூர் - துன்பம்.

4. பேடி - அருச்சுனன்; தன்னை விரும்பாது தாயென மதித்ததால் ஊர்வசி அருச்சுனனைப் பேடியாகுக எனச் சபித்தனள்.

5. தோழ்மை - தோழமை.

6. இந்து கதிர் இலாத நாடு -'கதிரிலி பொற் பூமி' - திருப்புகழ் 238. ஓர் கதிர் அணுகொணாத பொன் இடம்' - திருப்புகழ் 637. 'சூரியனுடன் சோமனீ மூலிவை அண்டாத சோதி மருவும் பூமி' - திருப்புகழ் 1114.

இந்திர நீலவனத்தில் (இந்திரனது காவலுள்ள இருண்ட காட்டில்) (இருந்த அரக்கர் முதலானோரை எரிக்கு ஊட்டியும்), செவ்விய பூமி முதல் அண்ட கோளத்தின் மேலோடு வரையும் இருந்த (மண்ணுலகிலும் விண்ணுலகிலும் இருந்த) அவுணர்களின் துன்புறுத்தலினின்றும் காப்பாற்றித் தேவர்களுடைய எண்ணத்தக்க (எண்ணி வருந்தத்தக்க) துன்பத்தை அகற்றி உதவிய ஒரு பேடியாகிய அருச்சுனனுடைய —

அழகிய தேரைச் (சாரதியாய்) நடத்திச், செவ்விய குருமண்டல நாட்டைப் (பாண்டவர்க்கு) அளித்து, அப்பாண்டவ ஐவரின் தோழமையை (நட்பை)ப் பூண்டிருந்த தலைவனாம் திருமாலின் மருகனே!

சந்திரன், சூரியர், திக்கு எட்டு இவை யாவும் புகழும் முடிவிலா வாழ்வையுற்று விளங்கும் சிவனாரது செவியிற் புகும்படி செம்பை (உபதேசத்தை) அருளிய குருநாதனே!

சிறப்புற்ற குறத்தியின் (வள்ளியின்) இன்பம் பொலியும் கொங்கையை விரும்பி மேவும் சாமர்த்திய அழகனே! தண்ணிய தமிழ் வழங்கும் பழநியில் தங்கி வீற்றிருக்கும் பெருமாளே!

(சிங்கிகொள் மங்கைய ராசை விலக்கிப் பொன்
பதம் அருள்வாயே.)

## 179

ஞான நிலையை மெய்,வாய்,கண்,மூக்கு,செவி என்றும் பொறிகள் (இந்திரியங்கள்) கூடப்பெற்று - ஐம்புலன்களும் ஞான நிலையை நாடி நிற்பதாய் - வானில் உள்ள சந்திர சூரியர்கள் இல்லாத தேஜோ மண்டல பூமியை அடைந்து (உள்ளொளியாகிய *ஸ்ரீ நந்தி ஒளியைக் காணப்பெற்று), 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்தை ஓதுவதால் அடையக் கூடிய உச்சி நிலையை அடைந்து —

*நந்தி ஒளி - திருப்புகழ் 439 குறிப்புரை பார்க்க. " சுடரிலகு மூலக ஒளி" என்பது இது - திருப்புகழ 637.

[1]நாவின்ப ரசம தான் ஆநந்த அருவி பாய
[2]நாதங்க ளொடுகு லாவி விளையாடி-

[3]ஊனங்க ளுயிர்கள் மோக நானென்ப தறிவி லாம
[4]லோமங்கி யுருவ மாகி யிருவோரும்-

ஓரந்த மருவி [5]ஞான மாவிஞ்சை முதுகி னேறி
லோகங்கள் வலம தாட அருள்தாராய்;

தேனங்கொ ளிதழி [6]தாகி தாரிந்து சலில வேணி
[7]சீரங்க னெனது தாதை ஒருமாது-

சேர் [8]பஞ்ச வடிவி மோகி யோகங்கொள் மவுன ஜோதி
சேர்பங்கி னமல நாத னருள்பாலா;

---

1. 'அருவிபாய இன்னமுதம் ஊற' திருப்புகழ் 637.

2. நாதங்கள் - தச நாதங்கள்: கிண்கிணி, சிலம்பு, மணிசங்கம், யாழ், தாளம், வேய்ங்குழல், பேரி, மத்தளம், முகில் - இவை யோகிகளால் உணரப்படுவன. திருப்புகழ் 439 இன் குறிப்புரையைப் பார்க்க.

'கோ என முழங்கு சங்கொலி' - திருப்புகழ் 647.

'ஞான சதாசிவம் அதின் மேவிப் பாடுந்தொனி நாதம்' திருப்புகழ் 190.

'விந்து நாதம் ஓல மென்று பலதாள சந்தமிடு சேவை' திருப்புகழ் 766.

3. ஊனங்கள் - ஊன்கள் - செய்யுள் விகாரம் - நன்னூல் சூ. 155.

4. ஓம் - அங்கி உருவம் - ஓம் என்னும் அங்கத்தை (அடையாளத்தை) உடைய உருவம்: அங்கி உருவம் - அக்கினி சொரூபம் (வடிவம்) எனவும் கூறுவர்.

5. ஞான மா - "சிவஞானக் கடாக் களிறு" - கந்தர் கலிவெண்பா." திருஞான வேழ வகுப்பு" என்னும் திருவகுப்பையும் பார்க்க.

6. தாகி - தாதகி - ஆத்தி - இடைக்குறை - நன்னூல் சூ.156.

7. சீரங்கன் - சீரிய அங்கத்தை உடையவன்.

8. பஞ்சவடிவி - அம்பிகை பஞ்ச வர்ணங்களை உடையவள். பிங்கலை - நீலி - செய்யாள் - வெளியாள் - பசும் - பெண்கொடியே" - அபிராமி அந்தாதி 21.**

நாவில் இன்ப ரசத்தைத் தரும் ஆனந்தம் என்னும் அருவி (உட்புறத்தே) பாய, (அப்போது) தச நாதங்களும் கேட்க மகிழ்ந்து விளையாடி —

ஊன் உயிர் ஆசை, நான் என்னும் ஆசை (உடலாசை உயிராசை, நானென்னும் ஆசை; அல்லது - " ஊனே உடம்பே) நான், உயிரே நான்" என்னும் மயக்க அறிவாசை என்னை விட்டு அகல 'ஓம்' என்னும் பிரணவாகாரனாய், சிவோக நிலை கொண்டவனாய் சிவனே நான் என்று பாவிக்கும் நிலை பெற்றவனாய் - ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஆகிய நாம்) இருவரும் —

ஒன்றுசேரும் முடிவை அடைந்து, (சிவ) ஞானம் என்னும் களிற்றின் (யானையின்) மேல் ஏறி (சிவமயத் திருஞான வேழத்தின்மேலேறி அதாவது அற்புத (மவுன) நிற்குண நிலையைப் பெற்றுச்) *சகல லோகங்களும் (அந்த ஞான ஒளியிற்) சுற்றி விளக்கந் தந்து (முழு விளக்கம் தந்து) பொலிவுதர - அருள்புரிவாயாக.

மது நிறைந்த கொன்றை மாலை, ஆத்தி மாலை, பிறைச் சந்திரன், (கங்கை) நீர் இவைகளைக் கொண்ட சடைமுடியை உடைய அழகிய அங்கத்தை உடையவனும், என் தந்தையும், ஒப்பற்ற மாது —

சேர்ந்துள்ள ஐந்து வடிவத்தினள், ஆசை தருபவள், யோக நிலை பூண்ட மவுன ஜோதி - (ஆகிய பார்வதி தேவி) சேர்ந்துள்ள (இடது பாகத்தை உடைய குற்றமற்ற நாதனுமான சிவன் அருளிய பாலனே!

---

பிங்கலை - பொன்னிறம் படைத்தவள்.

நீலி - நீல நிறம் படைத்த காளி.

செய்யாள் - செந்நிறம் படைத்தவள்: திருமகள் என்று பாடம்.

வெளியாள்- வெண்ணிறம் பெற்றாள், கலைமகள் எனலுமாம்.

பசும்பெண் - பச்சை நிறத்து உமை.

இனி, பஞ்ச வடிவி என்பதற்குப் பஞ்ச பூத வடிவி என்றும் கொள்ளலாம் -"வெளியே வெளி முதற் பூதங்களாகி விரிந்த அம்மே" - அபிராமி அந்தாதி - 16.

*ஞான ஒளியில் சகலலோகங்களும் விளக்கம்தரும் என்பது "அகில புவனாதி யெங்கும் வெளியுற மெய்ஞ்ஞான இன்ப அமுது" என வரும் 141 - ஆவது திருப்புகழாலும் அறிதலாகும்.

*கானங்கள் வரைகள் தீவு ஓதங்கள் பொடிய நீல*
*[1]காடந்த மயிலி லேறு முருகோனே-*
*[2]காமன்கை மலர்கள் நாண வேடம்பெ ணமளி சேர்வை*
*காணெங்கள் **பழநி** மேவு பெருமாளே.(80)*

## 180. கதி பெற

*தனதனனத் தனதனனத் தனதனனத் தனதான*

*திடமிலிசற் குணமிலிநற் றிறமிலியற் புதமான-*
*செயலிலிமெய்த் தவமிலிநற் செபமிலி*சொர்க் கமுமீதே;*
*இடமிலிகைக் கொடையிலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட-*
*இருபதமுற் றிருவினையற் றியல்**கதியைப் பெறவேணும்;***
*கெடுமதியுற் றிடுமசுரக் கிளைமடியப் பொரும்வேலா-*
*கிரணகுறைப் பிறையறுகக் கிதழ்மலர்†கொக்கிறகோடே;*
*படர்சடையிற் புனை நடனப் பரமர்தமக் கொருபாலா-*
*பலவயலிற் றரளநிறைப் **பழநி**மலைப் பெருமாளே.(81)*

---

*1. காடு - மிகுதி நெருக்கம்.*

*2. காமனது ஐந்தாவது பாணம் - முழு நீலம் முருகவேளைக் கொல்ல மாட்டாமையால் "மலர்கள் நாண" என்றார் (திருப்புகழ் 19 கீழ்க் குறிப்பைப் பார்க்க.)*

*சொர்க்கம் உம் மீதே இடம் இலி - சொர்க்க மீதும் இடமிலி.

†கொக்கிறகு - கொக்குருவம் கொண்டு தேவர்களைத் துன்புறுத்திய குரண்டாசுரன் என்னும் அசுரனைக் கொன்று, அக்கொக்கின் இறகைச் சிவபிரான் அணிந்தனர். (குரண்டம் கொக்கு)

'ஏங்கி அமரர் இரிந்தோட வே துரந்த
ஓங்கு குரண்டத் துருக்கொண்ட தானவனைத்
தீங்கு பெறத்தடிந்து சின்னமா வோர் சிறையை
வாங்கி யணிந்த அருள் இங்கென்பால் வைத்திலையே'
கந்தபுராணம் - III 9-*64.*

'குலம்பாடிக் கொக்கிறகும்பாடி' - திருவாசகம் (தெள்ளேணம்),'கொக்கிறகு சென்னி உடையான் கண்டாய்' - அப்பர் - VI *39 - 2.*

காடுகள், மலைகள், தீவுகள், கடல்கள் இவையெலாம் பொடிபடவும், கலங்கவும், நீல நிறம் மிகுந்த அழகிய மயிலில் ஏறும் முருகனே!

மன்மதனுடைய கைம் மலர்ப் பாணங்கள் வெட்கிக் குலைய, வேடுவப் பெண் (வள்ளியின்) படுக்கைச் சேர்க்கையைக் கண்ட எங்கள் பழநி மேவும் பெருமாளே.

(மா விஞ்சை முதுகினேறி லோகங்கள் வலமதாட அருள்வாயே.)

## 180

(பக்தித்) திடமில்லாதவன், உத்தம குணமில்லாதவன், நல்ல திறமையில்லாதவன், அற்புதமான

செயல் ஒன்றுமில்லாதவன், உண்மைத் தவம் இல்லாதவன், திருந்திய செபம் செய்தல் இல்லாதவன். சொர்க்கத்திலும்

இடமில்லாதவன். கையாற் கொடுத்தல் அறியாதவன், சொல் வன்மை இல்லாதவன் நல்ல தமிழைப் பாடுவதற்கு, (இத்தகைய குறைபாடுகளை உடைய நான் உனது)

இரு பதங்களை அடைந்து, இருவினைகளும் அற்று, தகுதி யுள்ள நல்ல கதியைப் பெறவேணும்;

கெட்ட புத்தியைக் கொண்டுள்ள அசுரர் கூட்டங்கள் இறந்து போம்படி போர்செய்த வேலனே!

கிரணங்கள் (ஒளிகள்) குறைந்துள்ள இளம்பிறையையும், அறுகம்புல்லையும், எலும்புகளையும், (அல்லது ருத்ராக்ஷ மாலையையும்), கொன்றை மலரையும், கொக்கின் இறகுடனே

பரந்துள்ள சடையிற் புனைந்துள்ள - நடனம் செய்கின்ற - பரம ருடைய ஒப்பற்ற பாலனே!

பல வயல்களிலும் (அல்லது பலன் தரும் வயல்களில்) முத்து நிறைந்துள்ள பழநி மலைப் பெருமாளே!

(கதியைப் பெறவேணும்.)

## 181. செஞ்சொற் பெற

*தனதனன தந்த தத்த தானன*
*தனதனன தந்த தத்த தானன*
*தனதனன தந்த தத்த தானன தனதான*

[1]நிகமமெனி லொன்று மற்று நாடொறு
நெருடுகவி கொண்டு வித்தை பேசிய
நிழலர்சிறு புன்சொல் கற்று வீறுள பெயர்கூறா-

நெளியமுது [2]தண்டு சத்ர சாமர
[3]நிபிடமிட வந்து கைக்கு மோதிர
நெடுகியதி குண்ட லப்ர தாபமு முடையோராய்;

[4]முகமுமொரு [5]சம்பு மிக்க நூல்களு
[6]முதுமொழியும் வந்தி ருக்கு மோவெனில்
முடிவிலவை யொன்று மற்று வேறொரு நிறமாகி-

முறியுமவர் தங்கள் வித்தை தானிது
முடியவுனை நின்று பத்தி யால்மிக
மொழியும்வளர் செஞ்சொல் வர்க்க மேவர அருள்வாயே;

[7]திகுதிகென மண்ட விட்ட தீயொரு
செழியனுடல் சென்று பற்றி ஊருகர்
திகையினமண் வந்து விட்ட போதினு மமையாது-

---

1. நிகமம் - வேதம்.

2. தண்டு - சிவிகை.

3. நிபிட மிட - நெருங்க.

4. முகமும் - வேறொரு நிறமாகி எனக் கூட்டுக.

5. சம்பு - செய்யுளும் வசனமும் விரவிவரும் பிரபந்தவகை. உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் நூல்கள்.

6. முதுமொழி - சான்றோர் செய்யுட்கள், வேதம், திருக்குறள், பழமொழி.

7. சம்பந்தப் பெருமானது மடத்திற் சமணர்கள் இட்ட தீ, அவர்திருவாக்கின்படி, பாண்டியனைச் சுரமாய் வந்து பிடிக்க, சமணர்கள் அச்சுரப் பிணியைத் தீர்க்க மாட்டாது திகைக்கச், சம்பந்தப் பெருமான்" மந்திரமாவது நீறு" என்னும் திருப்பதிகத்தைப் பாடி, பாண்டியனது உடலில் திருநீற்றைப் பூசச், சுரம் நீங்கிப் பாண்டியன் சுகம் உற்றான்; பின்னர், சமணர் சம்பந்தரொடு செய்த வாதில் - சமணர்கள் தீயிலிட்ட ஏடு சாம்பராக, சம்பந்தர் 'போக மார்த்த பூண் முலையாள்" எனத் தொடங்கும் திருநள்ளாற்றுப் பதிக ஏட்டை த் தீயில் இட, அந்த ஏடு வேவாது பச்சையாய்த் தீயில் விளங்கிற்று; அதன்பின்

# 181

வேதப்பொருள் என்றால் ஒரு சிறிதும் தெரியாது, நாள்தோறும் (அங்குமிங்கும் கற்ற) மொழிகளைத் திரித்து இயற்றிய பாடல்களைக் கொண்டு, தனது வித்தைப் பெருக்கைப் பற்றிப் பெருமிதம் பேசும் போலிக் கவிகள், சில அற்பச் சொற்களைக் கற்று ஆடம்பரமான பட்டப்பெயர்களை வைத்துக்கொண்டு —

(தூக்குவோரது) முதுகு நெளியத்தக்க கனத்த பல்லக்கு, குடை சாமரம் (இவை) நெருங்கும்படியாக உலவிக் கையில் மோதிரங்கள், (காதில்) நீண்டு தொங்கும் (ஒளி) மிக்க குண்டலங்கள் தாங்கிய சிறப்பை உடையவர்களா யிருப்பார்கள்; (ஆனால்)

(அவர்கள்) முகமானது - "செய்யுளும் வசனமும் கலந்த நூல்களும், திருக்குறள் போன்ற பழைய நூல்களும் கற்றுள்ளீரோ, விளக்கக் கூடுமோ" எனில் முடிவில் அவை ஒன்றும் தெரியாததால் வேறொரு நிறமாக மாறி - (வெட்கத்தால் முகம் வெளுத்து) —

மனம் குலைந்து போகின்றவர்களுடைய வித்தைதான் இக்கல்வி எல்லாம்; ஆதலால் இத்தகைய கல்வி (போதும் போதும்; இது) முடிவதாக; (இனியேனும்) உன்னை மனம் ஒருவழியில் நின்ற பத்தியுடன் நிரம்பத் துதிப்பதற்கு மேலும் மேலும் எழுகின்ற செஞ்சொற்களின் பெருக்கே (என் நெஞ்சிற்) பெருகிவர அருளுவாயாக; (அல்லது - மனம் குலைந்து நாணமுறச் செய்யும் கல்விதான் இது; ஆதலால் - என் வாழ்நாள் முழுவதும் உன்னை ஒருமைப்பட்ட பத்தியுடன் - நிரம்பத் துதிப்பதற்கு அருளுவாயாக- எனலுமாம்.)

திகுதிகென மண்டி எரியவிட்ட தீயானது (சுரப்பிணியாய்) அந்தப் பாண்டியனுடைய உடலைச் சென்று பற்ற, சமணர்களிற் - (பல) திசைச் சமணக் குருக்கள்மாரும் வந்து முயன்று பார்த்தபோதும் -(அந்தச் சுரம்) தணியாமல்

---

சமணர்கள் வைகையாற்றில் விட்ட ஏடு ஆற்று வெள்ளத்துடன் அடித்துக்கொண்டு போக, சம்பந்தப்பெருமான் " வாழ்க அந்தணர்" என்னும்

சிறியகர பங்க யத்து நீறொரு
தினையளவு சென்று பட்ட போதினில்
தெளியஇனி வென்றி விட்ட மோழைகள் கழுவேற;
மகிதலம ணைந்த [1]அத்த! யோனியை
வரைவறம ணைந்து நித்த நீடருள்
வகைதனைய கன்றி ருக்கு மூடனை மலரூபம்-
வரவரம னந்தி கைத்த பாவியை
வழியடிமை கொண்டு மிக்க மாதவர்
வளர்பழநி வந்த கொற்ற வேலவ பெருமாளே.(82)

## 182. பக்தி உற

தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன தனதான

நெற்றிவெ யர்த்துளி துளிக்க வேயிரு
குத்துமு லைக்குட மசைத்து வீதியி
னிற்பவர் மைப்படர் விழிக்[2]க லாபியர் மொழியாலே-
நித்தம யக்கிகள் மணத்த பூமலர்
மெத்தையில் வைத்ததி விதத்தி லேயுட
னெட்டுவ ரத்தொழில் கொடுத்து மேவியு முறவாடி;
உற்றவ கைப்படி பொருட்கள் யாவையு
மெத்தவு நட்பொடு பறித்து நாடொறு
முற்பன வித்தைகள் தொடுக்கு மாதர்க ளுறவாமோ-

1. அத்த - அத்தனே.

2. கலாபம் - பதினாறு கோவையுள்ள மாதரிடையணி.

திருப்பாசுரத்தை எழுதிவிட்ட ஏடு அந்த வெள்ளத்தில் எதிரேறிச் சென்றது; இங்ஙனம், மும்முறை தோல்வியுற்ற சமணர்கள், 'தோல்வியுற்றால் நாங்கள் கழுவிலேறுவோம்" என்று தாமே சொன்ன சொற்படி கழுவிலேறினார்கள். இவ் வரலாற்றின் விரிவைப் பெரிய புராணத்திலும் திருவிளையாடற் புராணத்திலும் காணலாம். 'வாழ்க அந்தணர்' என ஓதிய பதிகத்தில் 'வேந்தனும் ஓங்குக' என வாழ்த்தியதால் 'கூன் பாண்டியன்' தனக்கு முன்னும் பின்னும் இருந்த இருகூனும் நீங்கி 'நெடுமாறன்' ஆயினன். இங்ஙனம் பாண்டியனது சுரத்தையும் கூனையும் போக்கித் தீயிலும் நீரிலும் சம்பந்தர் வென்றதையும், சமணர் கழுவிலேறினதையும் அருணகிரியார் பல இடங்களிற் பாராட்டுகின்றனர். (எங்கள் திருப்புகழ் பதிப்பில் மூன்றாம் பாகத்தில் - திருப்புகழ் ஆராய்ச்சி-தலைப்பு 28, பக்கம் 26

(உனது) சிறிய திருக்கரமாம் தாமரையினின்றும் திருநீறு ஒரு தினையளவு (பாண்டியன்மேற்) போய்ப் பட்டவுடனே (அந்தச் சுரம் நீங்க அரசன்) தெளிவு உற, பின்பு வெற்றியை இழந்த அந்த அறிவிலிகள் கழுவில் ஏற —

(இப்) பூமியில் அவதரித்த அத்தனே! பெண்களது குறியையே, கணக்கின்றிச் சேர்ந்து, நாள்தோறும் (உனது) பேரருளின். திறங்களை உணராது விலகி நிற்கும் மூடனாகிய என்னை, ஆணவமலத்தின் உருவாகவே (நின்று) —

நாளுக்கு நாள் மனம் கலங்கும் பாவியாகிய என்னை வழியடிமையாக ஆட்கொண்டு, சிறந்த மகாதவசிகள் வாழும் பழநியில் வந்து அமர்ந்துள்ள வீரவேலவனே! பெருமாளே!

(உனை மொழியும் செஞ்சொல் வர்க்கமே வர அருள்வாயே!)

## 182

நெற்றியிலே வெயர்வுத் துளிகள் துளிக்க, இரண்டு குத்து முலைக் குடங்களையும் அசைத்து வீதியில் நிற்பவர், மை பரந்துள்ள கண்களையுடைய மயில் போன்றவர் (அல்லது கலாபம் என்னும் இடையணியைக் கொண்டவர்கள்) தங்கள் பேச்சுகளால் —

நாள்தோறும் மயக்குபவர், நறுமணமுள்ள அழகிய மலர்கள் விரிக்கப்பட்ட மெத்தையிற் சேர்ப்பித்து பல வகையிலே உடலில் திமிர் ஏறும்படியான தொழில்களைக் காட்டிக் கொடுத்தும் நெருங்கியும் உறவாடி —

(அவர்களுக்கு) உள்ள வழக்கப்படி (தம்மிடம் வந்தவர் களுடைய) பொருள் முழுமையும் மிகுந்த நட்பினைக் காட்டிப் பறித்து நாள்தோறும் (புதிது புதிதாகத்) தோன்றுகின்ற வித்தைகளைச் (சாமர்த்தியச் செயல்களை) உபயோகப்படுத்தும் (பொது) மகளிருடைய சம்பந்தம் ஆமோ! (ஆகாது என்றபடி).

---

பார்க்க; கந்தரந்தாதி செய்யுள் 56 பார்க்க; அருணகிரிநாதர் வரலாறும், நூலாராய்ச்சியும் என்ற நூலில் பக்கம் 154 பார்க்க.)

உச்சித மெய்ப்புற அனைத்த யாவுடன்
மெய்ப்படு பத்தியி னிணக்க மேபெற
வுட்குளிர் புத்தியை யெனக்கு நீதர வருவாயே;

*கற்றத மிழ்ப்புல வனுக்கு மேமகிழ்
வுற்றொரு †பொற்கொடி களிக்க வேபொரு
கற்பனை நெற்பல அளித்த காரண னருள்பாலா-

கற்பந கர்க்களி றளித்த மாதனை
பொற்புய மைப்புயல் நிறத்த வானவர்
கட்கிறை யுட்கிட அருட்க்ரு பாகர என நாளும்;

நற்றவ ரர்ச்சனை யிடத்த யாபர
வஸ்துவெ னப்புவி யிடத்தி லேவளர்
நத்தணி செக்கரன் மகிழ்ச்சி கூர்தரு மருகோனே-

நட்டுவர் மத்தள முழக்க மாமென
மைக்குல மெத்தவு முழக்க மேதரு
நற்பழ நிப்பதி செழிக்க மேவிய பெருமாளே. (83)

---

*கற்ற தமிழ்ப் புலவன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள். இவர் ஆதி சைவ குலத்திற் (சிவப் பிராமண குலத்திற்) பிறந்தும் நரசிங்முனை அரசரால் வளர்க்கப்பட்டாராதலின், திருக்குறள் ஆதிய பழைய தமிழ் நூல்களில் நல்ல பயிற்சி யடைந்திருந்தார். (இவரது திருநெல்வாயில் அரத்துறைப் பதிகத்தைப் பார்க்கவும் தேவாரம் - vii - *3 -2. 3. 4. 7.)*

†பொற்கொடி - பரவை நாச்சியார்: சுந்தரர் திருவாரூரில் பரவையாரொடு வாழ்ந்திருக்குங் காலத்தில் குண்டையூர்க் கிழவர் என்பவர் சுந்தரருக்கு நெல் தவறாது அளித்து வந்தார். ஒரு போது மழையின்றி வளம் சுருங்க, சுந்தரருக்கு அனுப்புதற்குப் போதிய நெல் இல்லையே எனக் குண்டையூர்க் கிழவர் வருத்தமுற்றார். அவர் வருத்தம் நீங்க இறைவன் குண்டையூர் முழுதிலும் நெல் மலையை அளித்தார். இந்த நெல்மலை எங்ஙனம் திருவாரூருக்குச் சுந்தரர் வீட்டுக்குப் போய்ச் சேருவது என அவர் வருந்திச் சுந்தரரிடம் சென்று தமது இயலாமையைத் தெரிவிக்க, சுந்தரர் கோளிலி என்னும் தலத்திற்குப் போய் "நீள நினைந்தடியேன்" என்னும் திருப்பதிகம் பாடி " குண்டையூர்ச் சில நெல்லுப் பெற்றேன், ஆளிலை யெம் பெருமான் அவை அட்டித் தரப்பணியே" - எனத் துதித்தார். இறைவன் ஆணையால் அந்த நெல் மலை பூதங்களால் திருவாரூரிற் சேர்க்கப்பட்டன பரவையர் மிக மகிழ்ந்து அவ்வூராரெல்லாரும் தங்கள் தங்கள் வீட்டின் எல்லையைச் சேர்ந்த நெற்குவியலை எடுத்துக் கொள்ளலாம் என்று பறை யறைவித்தனர் - என்பது பெரியபுராண வரலாறு.

மேலான உண்மை உடையதான தாயின் அன்புடன் மெய்யான பக்தியின் சேர்க்கையையே நான் பெறுமாறு என் உள்ளம் குளிரும் புத்தியை எனக்கு நீ தர வந்து அருள்புரிவாயாக —

கற்ற தமிழ்ப் புலவனாகிய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தில் மகிழ்ச்சி பூண்டு, ஒரு பொற்கொடி போன்ற அவர் மனைவி பரவையார் களிப்புற, தாம் இட்ட கட்டளைப்படி வந்து குவிந்த நெல்மலையை அளித்த (மூல) காரணராம் சிவபிரான் அருளிய பாலனே!

கற்பகமரங்கள் நிறைந்த நகராம் (பொன்னுலகத்துத் தலை நகர்) அமராவதியில் உள்ள வெள்ளையானை (ஐராவதம்) போற்றி வளர்த்த மாது தேவசேனையை அணைந்த அழகிய திருப்புயங்களை உடையவனே! *கரிய மேகநிறமுடைய தேவர் தலைவனாம் இந்திரன் பயப்-பட்ட பொழுது (அவனுக்குத்) திரு அருள் பாலித்த கருணைக்கு உறைவிடமே! என்று நாள்தோறும்-

நல்ல தவசிகள் அருச்சனை செய்ய, கிருபாகர மூர்த்தி என்று பூமியிலே புகழ் வளர்ந்திருக்கின்ற சங்கேந்திய திருக்கரத்தவனாம் திருமால் மகிழ்ச்சி மிகக்கொள்ளும் மருகனே!

நட்டுவர் முழக்கும் †மத்தளத்தின் முழக்கந்தானோ என்று ஐயுறும் படி, கருமேகக் கூட்டங்கள் மிகவும் ஒலியைப் பெருக்கும் நல்ல பழநிப் பதியிற் செழிப்புற வீற்றிருக்கும் பெருமாளே!

(பத்தியின் இணக்கமே பெற... புத்தியை எனக்கு
நீ தர வருவாயே.)

---

*மைப்புயல் (கரியமேக) நிறத்தனன் இந்திரன் - இந்திரனுக்குக் "கரியவன்" என்று ஒரு பெயர் - மணிமேகலை - 25 - 55. சூராதியர் பொருட்டு இந்திரன் அஞ்ச அவனுக்கு அருளினர் எனவும், முருகவேள் திருவிளையாடல் இயற்றியபொழுது அவரை இறைவரென அறியாது அவருடன் பொருது மாய்ந்து பின்பு அவரால் எழுப்பப்பட்டபொழுது, தான் செய்த பிழையை எண்ணி இந்திரன் அஞ்ச, முருகவேள் அவனது பிழையைப் பொறுத்து அருளினர் எனவும் கொள்ளலாம்.

† மேக முழக்கம் மத்தள முழக்கத்துக்கு உவமை கூறப் பட்டது.'முழவதிர மழையென்றஞ்சி, சிலமந்தி அலமந்து முகில் பார்க்கும்'சம்பந்தர் தேவாரம் I - 130 - 1.

## 183. சிவலோகம் பெற

தந்த தானனந் தானதன தானதன
தந்த தானனந் தானதன தானதன
தந்த தானனந் தானதன தானதன தனதான

*பஞ்ச பாதகன் பாவிமுழு மூடன் வெகு
வஞ்ச லோபியன் சூதுகொலை காரன்மதி
†பண்கொ ளாதவன் பாவகட லூடுநுழை பவுஷாசை-

பங்கன் மோதியம் பாழ்நரகில் வீணின் விழ
பெண்டிர் வீடுபொன் தேடிநொடி மீதில்மறை
பஞ்ச மாமலம் பாசமொடு கூடிவெகு சதிகாரர்;

அஞ்சு பூதமுண் டாகடிய காரரிவர்
தங்கள் வாணிபங் காரியம லாமலரு
ளன்பர் பாலுடன் கூடியறி யாதபுக ‡அடியேனை-

அண்டர் மாலயன் தேடியறி யாதவொளி
சந்த்ர சேகரன் பாவைவிளை யாடு §படி
கந்த நாடுடன் கூடிவிளை யாடஅருள் புரிவாயே;

வஞ்ச மாசுரன் சேனைகட லோடுகுவ
டுங்க வேயினன் போலவொளிர் வேலைவிடு
வண்கை யாகடம் பேடுதொடை யாடுமுடி முருகோனே

---

*பஞ்ச பாதகம் - செய்யுள் 79 பார்க்க.

† பண் - பண்பு

‡அடியேனை - அடியேன்; ஐ: சாரியை.

§படிக அந்த நாடு - படிகம்போல் தாவள்ளியமான நாடு.

# 183

பஞ்சபாதங்களும் செய்தவன், பாவி, முழு மூடன், மிக்க வஞ்சகத்தொடு, கூடிய பேராசைக்காரன் (அல்லது வஞ்சகன், ஈதற் குணமே இலாதவன்), சூது, கொலை இவை செய்யும் பேர்வழி, அறிவில் நல்ல பண்பையே கொள்ளாதவன், பாவமாகிய கடலுள் நுழைகின்ற செருக்கிலும் ஆசையிலும் —

பங்குகொண்டவன் (அல்லது, செருக்கு, ஆசை என்னும் குற்றம் உடையவன்) ஆகிய நான், தாக்குண்டு அந்தப் பாழ்நரகில் வீணாக விழும்படி - பெண்டிர், வீடு, பொன் (பெண், மண், பொன்) என்னும் மூவாசை கொண்டு தேடியும், ஒரு நொடிப்பொழுதிலே, மறைந்துகிடக்கும் ஐம்பெரு மலங்களுடனும் (ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என்னும் ஐவகை மலங் களுடனும்) பாசங்களுடனும் கூடி, மிக்க மோசக்காரராம்—

ஐந்து பூதங்களாகிய அந்தப் பொல்லாங்கு செய்பவர்களாகிய அவர்களுடைய வியாபார காரியங்களல்லாமல் (வியா-பார காரியங்களிற் கலவாமல்) அருள்பெற்ற அன்பர்-களிடத்தே கூடி யறியாத புகழையே கொண்டுள்ள அடியேனாகிய நான் —

தேவர்களும், திருமாலும், பிரமனும் தேடியும் காணாத ஜோதியாம் சந்திரசேகரமூர்த்தியும், பாவையாம் தேவி பார்ப்பதியும் கூடி விளையாடுகின்ற ஸ்படிகம் போலத் தாவள்ளியமான நாடாகிய சிவலோகத்தில் (உள்ளவர்-களுடன்) கூடிவிளையாட அருள்புரிவாயாக;

வஞ்சநிறைந்த பெரிய சூரனும், அவனது சேனையும், கடலும், கிரௌஞ்சகிரியும் ஒடுங்கவே, சூரியன்போல் ஒளிவிடு-கின்ற வேலாயுதத்தைச் செலுத்தின அழகிய கையனே! கடப்பமலர் மாலை விளங்கும் திருமுடியை உடைய முருகனே!

மங்கை மோகசிங் காரரகு ராமரிட
தங்கை சூலியங் காளியெமை [1]யீணபுகழ்
மங்க ளாயி[2]சந் தானசிவ காமியுமை யருள்பாலா;

கொஞ்சு மா[3]சுகம் போலமொழி நீலகடை
பெண்கள் நாயகந்தோகை மயில் போலிரச
கொங்கை மால்குறம் பாவை [4]யவல் தீரவர
அணைவோனே-

கொண்டல் சூழுமஞ் சோலைமலர் வாவிகயல்
கந்து பாயநின் றாடு [5]துவர் பாகையுதிர்
[6]கந்தி யோடகஞ் சேர்பழநி வாழ்குமர
பெருமாளே.(84)

## 184. ஞானம் பெற

தனதனா தனதன தந்த தானன
தனதனா தனதன தந்த தானன
தனதனா தனதன தந்த தானன தனதான

பெரியதோர் கரியிரு கொம்பு போலவே
வடிவமார் புளகித கும்ப மாமுலை
பெருகியே யொளிசெறி தங்க வாரமு மணியான-

பிறையதோ வெனுநுதல் துங்க மீறுவை
அயிலதோ வெனுமிரு கண்க ளாரவெ
பிறகெலாம் விழுகுழல் கங்கு லாரவெ வருமானார்;

உரியதோர் பொருள்கொடு வந்த பேர்களை
மனையிலே வினவியெ கொண்டு போகியு
யுளவிலே மருவிய வஞ்ச மாதர்கள் மயலாலே-

---

1. ஈண - ஈன்ற.

2. சந்தானம் - தேவலோக விருக்ஷங்கள் ஐந்தனுள் ஒன்று. விநாயகர் பாடல் 2இன் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

3. சுகம் - கிளி.

4. அவல் - ஆவல்,

5. துவர் பாகு - துவர்த்த பாக்கு.

6. கந்தி - கமுகமரம்.

மங்கை, வசீகரமும் அழகும் கொண்ட ரகுராமருடைய தங்கை, சூலமேந்தினவள், அழகிய காளி, எம்மைஈன்ற புகழ்நிறைந்த மங்களகரமான தாய், (தேவலோக விருக்ஷங்களுள் ஒன்றாகிய) சந்தான (விருக்ஷம் போல வேண்டுவோர்க்கு வேண்டியதை அளிக்கும்) சிவகாமி, உமாதேவி அருளிய பாலனே!

கொஞ்சுகின்ற அழகிய கிளிபோல மொழியும், கரிய கடைக் கண்ணனும், பெண்களுக்குள் தலைமையும், கலாபமயில் போலச் (சாயலும்), இன்பம் நிறைந்த கொங்கையும், பெருமையும் கொண்ட குறப்பாவையாகிய வள்ளியின் ஆவல் (ஆசை) தீர வந்து அணைந்தவனே!

மேகங்கள் சூழும் அழகிய சோலைகளும், மலர்கள் நிறைந்த குளங்களும், கயல்மீன் குதிரையின் முழுப் பாய்ச்சல் போலப் பாய்வதால் அசைவுற்றுத் துவர்த்த பாக்குகள் வியப்புண்டாகும் படி உதிருகின்ற கமுக மரங்களையும் தன்னகத்தே கொண்ட பழநி மலையில் வாழ்கின்ற குமரனே! பெருமாளே!

(படிக நாடுடன் கூடி விளையாட அருள் புரிவாயே.)

## 184

பெரிய ஒரு யானையின் இரண்டு கொம்புகள் போலவே வடிவம் கொண்டதாய், புளகம் பூண்டதாய், குடம் போன்ற பெரிய முலைமேல் நிறைந்து தோன்றும் ஒளிமிக்க தங்க ஹாரமும் அழகான —

பிறைச் சந்திரனோ எனத் தோன்றும் நெற்றியும், உயர்ச்சிமிக்க கூரிய வேலோ என்னும்படியான இரண்டு கண்களும், நிறைந்து முதுகெலாம் விழுகின்ற கூந்தலானது இரவு போல இருள் மிக்கதாய்த் தோற்றந்தந்து வருகின்ற மாதர்கள் —

தமக்குச் சேருதற்கு உரிய பொருளைப் பெற்றுக்கொண்டு தம்மிடம் வந்த பேர்வழிகளை வீட்டுக்குள் ஆய்ந்து பேசி விசாரித்து அழைத்துக்கொண்டு போகும் இரகசிய உபாய எண்ணம் பொருந்திய வஞ்சக மாதர்கள் - (இத்தகைய மாதர்கள் மீதுள்ள) மோக மயக்கால் —

உருகியே யுடலற வெம்பி வாடியெ
வினையிலே மறுகியெ நொந்த பாதக
னுனதுதாள்தொழுதிட இன்பஞானம தருள்வாயே;

அரியதோ ரமரர்க ளண்ட மேறவெ
கொடியதோ ரசுரர்க ளங்க மாளவெ
அடலதோ டமர்புரி கின்ற சூரிய வடிவேலா-

அரகரா வெனமிக அன்பர் சூழவெ
கடியதோர் மயில்மிசை யன்றை யேறியெ
அவனியோர் நொடிவரு கின்ற காரண முருகோனே;

பரியதோர் கயிறனை கொண்டு வீசவெ
உறியதோய் தயிர்தனை யுண்டு நாடியெ
பசியதோ கெடவருள் கொண்ட மாயவன் மருகோனே-

பரமமா நதிபுடை கொண்ட ணாவவெ
வனசமா மலரினில் வண்டு லாவவெ
பழநிமா மலைதனி லென்று மேவிய பெருமாளே (85)

---

முருகவேள் பூமியை வலம் வந்தது: ஒருமுறை சிவபிரானும் தேவியும் விநாயகரையும் முருகவேளையும் நோக்கி 'இவ்வுலகினை முதலில் வலம்வருபவர்க்கு இம் மாதுளங்கனியை (மாம்பழம் எனவுங் கூறுவர்) தருவேன்' என, முருகவேள் மயில்மீதேறி உலகை ஒரு நொடியில் வலம் வந்தார். அங்ஙனம் அவர் வருவதற்குள், விநாயகர் உலகெலாம் தம் பெற்றோருள் அடக்கம் என அறிந்து தாய்தந்தையரை வலம் வந்து அவர்களிடம் பழத்தைப் பெற்று நின்றார்; இதைக் கண்ட முருகவேள் கோபங்கொண்டு பூமியில் திருவாவினன்குடிக்கு வர, இறைவனும் தேவியும் அங்கு வந்து " பழம் நீயே ஆதலின் உனக்கு வேறு பழமும் வேண்டுமோ?" என அவருக்கு ஆறுதல் கூறினார், - "பழம் நீ" என்பது"பழநி" ஆயிற்று (திருப்புகழ் 117, 1210 பார்க்க), (திருப்புகழ் ஆராய்ச்சி மூன்றாம் பாகம் - தலைப்பு 17, 68 பார்க்க). இதன் விரிவைப் பழநிப் புராணத்திலும், வலம் வந்து இறைவன் எங்கும் உள்ளனர் என முருகவேள் காட்டிய உண்மைப் பொருளைச் சுப்பிரமணிய பராக்ரமத்திலும் காண்க.

முருகவேள் (பூமிக்கு) வந்த வரலாறு: (பழநி - சிவகிரி என்பது அகத்தியர் தம்மை வணங்கிய இடும்பாசுரனை நோக்கி வடக்கே திருக்கேதாரத்துக்கு அருகே இருந்த சிவகிரி, சத்திகிரி என்னும் இரண்டு மலைகளையும் கொண்டு வரும்படி கட்டளை

உருகி, உடலெலாம் மெத்தக் கொதித்து வாடி,(அதனால் வரும்) வினைக்குட் கலங்கி நொந்த பாதகனாகிய எனக்கு உன் திருவடிகளைத் தொழும்படியான ஞான இன்பத்தைத் தந்தருளுவாயாக;

அருமை வாய்ந்த தேவர்கள் பொன்னுலகிற் குடியேறவும், கொடியவர்களான அசுரர்களின் உடல்கள் அழியவும், வெற்றியுடன் போர் புரிந்த மிகக் கூரிய வேலாயுதனே!

அரகரா என்னும் பேரொலியுடன் அன்பர்கள்! சூழக் கடுமை வாய்ந்த ஒப்பற்ற மயில்மேல் அன்று நீ ஏறிப் பூமியை ஒரு நொடியில் வலம் வந்த காரணனே (அல்லது) பூமிக்கு ஒரு நொடியில் வந்த காரணனே! (காரணமாய் வந்த முருகனே!)

பருத்த கயிறுகொண்டு அன்னை (தாயான அசோதை) வீசிக் (கட்ட) உறியில் தோய்ந்திருந்த தயிரை உண்டு விரும்பி (விரும்பியுண்டு) பசியது கெட அருள் பூத்த கண்ணனின் (திருமாலின்) மருகனே!

மிகச் சிரேஷ்டமான (ஷண்முக) நதி பக்கத்திற் சூழ்ந்து நெருங்கத் தாமரையின் அழகிய மலர்களில் வண்டுகள் உலாவ - (விளங்குகின்ற) பழநி மாமலையில் எப்பொழுதும் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(உனதுதாள் தொழுதிட இன்ப ஞானம் தருள்வாயே.)

---

யிட்டனர். இடும்பன் அப்படியே வடக்கே சென்றான். அகத்தியர் உணர்த்திய மந்திர சக்தியால் பிரமதண்டம் தோளுக்குத் தடியாகவும் அஷ்ட நாகங்களும் கயிறாகவும் இடும்பன் முன்னிலையில் தோன்ற அவன் அகத்தியர் குறித்த அந்த இரண்டு மலைகளையும் காவடிபோலக் கட்டித் தூக்கித் தெற்கு நோக்கி வந்தான். வரும்போது ஆவினன் குடியில் அவன் அந்த மலை இரண்டையும் இறக்கி இளைப்பாறினான். பின்னர் எடுக்க முயன்றபோது அவனால் எடுக்க முடியவில்லை. ஏனென்று அவன் பார்த்தபோது சிவகிரியின்மீது அழகு பொலியும் ஒரு சிறுவன் இருக்கக் கண்டான். இடும்பன் அவனை அம்மலையை விட்டுப் போகச் சொன்னான். சிறுவன் (முருகவேள்) இஃது எமது இருக்கை; 'யாம் போகோம்' என மறுத்தனன். இடும்பன் கோபித்து அந்தச் சிறுவன்மேற் பாய்ந்தான் பாய்ந்தவன் தடால் என விழுந்து மூர்ச்சையானான்.

## 185. ஆண்டருள

தந்ததன தனனா தனந்த
தந்ததன தனனா தனந்த
தந்ததன தனனா தனந்த தனதான

மந்தரம தெனவே சிறந்த
கும்பமுலை தனிலே புனைந்த
மஞ்சள் மண மதுவே துலங்க வகைபேசி-

மன்றுகமழ் தெருவீதி வந்து
நின்றவரை விழியால் வளைந்து
வந்தவரை யருகே யணைந்து தொழில்கூறி;

எந்தளவு மினிதாக நம்பு
தந்துபொருள் தனையே பிடுங்கி
யின்பமருள் விலைமாதர் தங்கள் மனைதேடி-

*எஞ்சிமன முழலாம லுன்றன்
அன்புடைமை மிகவே வழங்கி
என்றனையு மினி தாள இன்று வரவேணும்

†விந்தையெனு முமைமாது தந்த
கந்த குரு பரதேவ ‡வங்க
மென்றவரை தனில்மேவு மெந்தை புதல்வோனே-

மிஞ்சுமழ கினிலே சிறந்த
மங்கைகுற மடமாது கொங்கை
மென்கிரியி லிதமா யணைந்த முருகோனே;

சிந்தைமகிழ் புலவோர்கள் வந்து
வந்தனைசெய் சரணார விந்த
§செந்தமிழி லுனையே வணங்கு குருநாதர்-

---

இந்நிகழ்ச்சியை அறிந்த அகத்தியர் வந்து ஆண்டவனை வணங்கினர். ஆண்டவன் இடும்பனை எழுப்பினர். அவனுக்குக் காட்சி அளித்தார். தன்னைப்போலக் காவடி கொண்டுவரும் அடியவர்களுக்கு அவர்கள் வேண்டிய வரங்களை அளித்தருள வேண்டும் என இடும்பன் இறைவனிடம் விண்ணப்பித்தான். 'அங்ஙனே ஆகுக' என அண்ணல் அருள்புரிந்தார். பழநிமலையில் இடும்பன் சந்நிதி உளது. இதுவே காவடியின் வரலாறு: (விரிவைப் பழநிப் புராணத்திலும் சுப்பிரமணிய பராக்ரமத்திலும் காண்க.)

*† ‡ § - பக்கம் 433 பார்க்க.

## 185

மந்தரமலையே என்னும்படி சிறந்த குடம்போன்ற முலைமேற் பூசிய மஞ்சளின் நறுமணம் வீசிப் பொலியத் தந்திர வார்த்தைகளைப் பேசி —

மணங்கமழும் தெருவீதியில் வந்து (அங்கு) நின்றவரைத் (தங்கள்) கண்களால் வளைத்தி ழுத்து, வந்தவரை அருகில் நெருங்கித் (தங்கள் வியாபாரத்) தொழிலை விளக்கிக் கூறி —

எந்த அளவும் (எல்லா அளவும் - முழுமையும்) இனிமையாகத் (தம்மை) நம்புதலைச் செய்து (நம்பும்படி செய்து) பொருளைப் பறித்துச் சிற்றின்பத்தைத் தருகின்ற விலை மாதர்களுடைய வீடுகளைத் தேடிக் —

கெட்டு என் மனது திரியா வகைக்கு உனது அன்புச் செல்வத்தை நிரம்ப எனக்குக் கொடுத்து என்னையும் இனிமையுடன் ஆண்டருள இன்று வரவேணும்.

பார்வதி என்கின்ற உமை மாது தந்த கந்தனே! குருபரதேவனே! வெள்ளி எனப்பட்ட மலையில் (வெள்ளியங்கிரியில் - கயிலையில்) வீற்றிருக்கும் எந்தை சிவபிரான் அருளிய புதல்வனே!

மேம்பட்டு விளங்கும் அழகிற் சிறந்த மங்கை, குறவர்மட மாதாகிய வள்ளியின் கொங்கை என்கிற மென்மை வாய்ந்த மலையை இன்பத்துடனே அணைந்த முருகனே!

உள்ளம் மகிழ்ந்த தேவர்கள் (அல்லது ஞானிகள்) வந்து வந்தனைசெய்கின்ற திருவடித் தாமரைகளை உடையவனே! செந்தமிழ் மொழியால் உன்னையே வணங்கு குருநாதாராகிய —

---

*எஞ்சுதல் - கெடுதல், 'எழில் வனப்பு எஞ்ச' - கலித்தொகை 17 - 13.

† விந்தை - துர்க்கை, இல்க்குமி, பார்வதி.

‡ வங்கம் - வெள்ளி.

§திரு ஆவினன் குடியில் அகத்தியர் தவஞ்செய்ய, முருகவேள் தமிழின் ஐந்திலக்கணங்களையும் அவருக்கு விளக்கினர்- "திருவாவினன் குடியினிற் சார் தமிழ் முநி மேவி... தமிழதன் கூற்றை... விரித்தருளுதி என்றலும்.... நீடதிகாரம் கோதிலைந்தென வரன் முறை உணர்த்தி வேற் குழகன் எகினன் கோயில்." (பழநிப் புராணம் - அகத்தியச் சருக்கம்.)

தென்றல்வரைமுநிநாதரன்று
கும்பிடந லருளே பொழிந்த
தென்பழநி மலைமே லுகந்த பெருமாளே(86)

## 186 . காமம் அற

தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன தனதான

மலரணி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி யின்பச் செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கி லேமுக மதியாலே

மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி வலையாலே;

நிலவெறி யங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கி லேகன
நிதிபறி யந்தப் பிலுக்கி லேசெயு மொயிலாலே

நிதமிய லுந்துர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிஷமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்;

அலையநி னைந் *துற் பநத்தி லேயநு
தினமிகு மென்சொற் பனத்தி லேவர
அறிவும ழிந் †தற் பனத்தி லேநிதம் உலைவேனோ-

அசடனை வஞ்சச் சமர்த்த னாகிய
கசடனை யுன்சிற் கடைக்க ணாடிய
மலர்கொடு நின்பொற் பதத்தை யேதொழ
அருள்தாராய்;

---

*உற்பநம் - தோற்றம்.

† அற்ப னத்திலே - அற்பன் அதிலே ; அதிலே என்பது அத்திலே யென்றாயிற்று.

(தென்றல் எழும் மலையாகிய) பொதியமலை முநிநாதர் (அகத்தியர்) அன்று கும்பிட நல்ல அருளைப் பொழிந்த (நிரம்ப அருளிய) அழகிய பழநி மலைமேல் (இருக்கையை) மகிழ்ந்த பெருமாளே!

(என்றனையும் இனிதாள இன்று வரவேணும்.)

## 186

மலர்களை அணிந்துள்ள கொண்டை முடியிலும், அவளது (பொது மகளின்) பேசும் பேச்சின் இன்பச் செல்வத்திலும், கொடுமை நிரம்பியுள்ள மன முறுக்கிலும், முகமாகிய நிலவிலும் —

பொருந்திய அல்குலிடத்திலும், நிறைந்துள்ள நறுமணம் வீசும் கொங்கைக் குடத்திலும், நன்றாக வலிய வந்து கூடிய சந்தர்ப்பங்களிலும் (நிலைகளிலும்), கண் நிலையிலும் —

நிலவொளி போலக் குளிர்ந்த ஒளிவீசும் (அவளது) உடம்பின் குலுக்கிலும், அழகிய வளையல்களை அணிந்த செங்கையில் 'கிலுக் என்னும் ஒலியிலும், பருத்த தனத்தைப் (பொருள்களைப்) பறிக்கின்ற அந்தப்பிலுக் கிலும் (பகட்டிலும்), செய்கின்ற ஒய்யாரச் செயலிலும் —

தினமும் காட்டப்படும் கெட்ட குணத்திலும், வசப்பட்டு (என் வசம் அழிந்து) அன்பு பூண்டு சேரும் சேர்க்கையில், ஒரு நிமிஷம் கூடி அந்த க்ஷணப் பொழுதிலே மிகவும் புத்திகெட்டு

அலைய நினைந்து அதே தோற்றமாய் (நினைவாய்)த் தினந்தோறும் அதிகமாக என் கனவிலே (அந் நினைவுகளே) வர (அதனால்) என் அறிவு அழிந்து அற்பனாகிய நான் அந் நினைவுகளிலேயே தினமும் அழிவேனோ!

அசடனை, வஞ்சகத்திற் சாமர்த்தியமுள்ள குற்றவாளியை, உனது ஞானமயமாம் கடைக்கண்ணால் விரும்பி நோக்கி மலர்கொண்டு உனது அழகிய திருவடிகளையே (நான்) தொழுமாறு திருவருள் புரிவாயாக.

பலபல பைம்பொற் பதக்க மாரமு
மடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையு மணிவோனே-

பதியினில் *மங்கைக் கதித்த மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழநியி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே (87)

## 186 - A . வணங்க

தனத்ததன தான தந்த தனத்ததன தான தந்த
தனத்ததன தான தந்த தனதான

மனக்கவலை யேது மின்றி உனக்கடிமை யேபு ரிந்து
வகைக்குமநு நூல்விதங்கள் தவறாதே-

வகைப்படிம னோரதங்கள் தொகைப்படியி னாலி லங்கி
மயக்கமற வேத முங்கொள் பொருள்நாடி;

வினைக்குரிய பாத கங்கள் துகைத்துவகை யால்நி னைந்து
மிகுத்தபொரு ளாக மங்கள் முறையாலே-

வெகுட்சிதனை யேது ரந்து களிப்பினுட னே நடந்து
மிகுக்குமுனை யேவணங்க வரவேணும்;

மனத்தில்வரு வோனெ என்று னடைக்கலம தாக வந்து
மலர்ப்பதம தேப ணிந்த முநிவோர்கள்-

வரர்க்குமிமை யோர்க ளென்பர் தமக்குமன மேயிரங்கி
மருட்டிவரு சூரை வென்ற முனைவேலா-

---

*மங்கை கதித்த மா மலை - வள்ளி மலை. 'கதித்தமலை' என்னும் பெயரை உடைய முருகர் கோயில் கோயமுத்தூர் ஜில்லா ஊற்றுக்குழி ரெயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் உள்ளது. மங்கை யென்பது 'விஜயமங்கலம்' என்னும் தலத்தைக் குறிக்கும் என்பர். விஜயமங்கலம் ஈரோட்டுக்கும் திருப்பூருக்கும் மத்தியில் உள்ள ரெயில் ஸ்டேஷன். ஸ்டேஷனுக்கு வடக்கே 2 மைலில் ஊர். திருப்புகழ் 940 ஆம் பாடலையும் பார்க்க.(விஜயமங்கலம் கதித்தமலை இவைதம் விளக்கத்தைச் செந்தமிழ் செல்வி சிலம்பு 13, பக்கம் 237 - 239 பார்க்க.)

பலபல விதமான அழகிய பொற்பதக்கங்களையும், ஹாரங்களையும், அடிமையாகிய நான் சொல்லுகின்ற திருப்புகழ் என்னும் தமிழ்ப் பன்னீரையும், நறுமணம் மிக்கு வீசும் அந்தக் கடப்ப மாலையையும் அணிவோனே!

தலங்களில் விஜய மங்கையிலும் கதித்த மலை என்னும் குன்றுடன் (வேறு) சில குன்றுகளிலும் பொருந்தி வீற்றிருந்து வாழ்வு சிறந்துள்ள பழநித் தலத்தில் அன்புற்றிருக்கும் பெருமாளே! தேவர் பெருமாளே!

(மதிகேடாய் உலைவேனோ!)

குறிப்பு: இப்பாடலின் முதல் ஆறு அடிகளின் ஈற்று மொழிகளைச் சேர்க்க - முகமதியாலே, விழி வலையாலே, செயும் ஒயிலாலே, வெகு மதிகேடாய், நிதம் உலைவேனோ, தொழ அருள் தாராய் எனப் பொருளுடன் கூடுவது கண்டு மகிழத்தக்கது.

## 186 A

மனக்கவலை சிறிதேனும் இல்லாமல் உனக்கு அடிமை செய்யும் பணியையே பூண்டு, வகையாய் அமைந்துள்ள (மநு நூல்) நீதி நூல் முறைகளில் தவறாமல் —

நல்ல முறையில் மன விருப்பங்கள் (எண்ணிய) கணக்கின் படியே (கூடுதலுற்று) விளங்கி, ஐயந்திரிபு இல்லாமல் வேதத்திற் சொல்லப்பட்ட பொருளை ஆய்ந்து விரும்பி,

வினைக்கு ஈடான பாதகச் செயல்களைக் கடிந்து விலக்கி, முறைப்படி தியானித்து, மேலான பொருள்களைக் கொண்ட ஆகமங்களிற் சொன்ன முறையின்படி —

கோபம் என்பதை விலக்கி, மகிழ்ச்சியுடன் நடந்து (கடமைகளைச் செய்து), மேம்பட்டு விளங்கும் உன்னையே (நான்) வணங்குதற்கு (வேண்டிய அருளைத்தர) (நீ) வரவேணும்.

(தியானிக்க) மனத்தில் வருபவனே என்று உன்னிடம் அடைக்கலப் பொருளாய் வந்து சேர்ந்து (உனது) மலர்ப் பாதங்களையே பணிந்த முநிவர்கள் பொருட்டும் —

(பிற) சிரேஷ்டர்கள் பொருட்டும் (அல்லது வானோர் பொருட்டும்), தேவர்கள் பொருட்டும் மனம் இரங்கி யாவரையும் பயமுறுத்தி வந்த சூரனை வென்ற கூரிய வேலனே!

தினைப்புனமு னேந டந்து குறக்கொடியை யே மணந்து
செகத்தைமுழு தாள வந்த பெரியோனே-

செழித்தவள மேசி றந்த மலர்ப்பொழில்க ளேநி றைந்த
**திருப்பழநி** வாழ வந்த பெருமாளே. (87A)

## 187. ஞானம் பெற

தனதனன தனதான தனதனன தனதான
தனதனன தனதான தனதான

முலைமுளரி ப்ரபைவீசு மெழில்கனக மலைபோலு
முதிர்விலிள தனபார மடவார்தோள்-

முழுகியமி ழநுபோக விழல னென வுலகோர்கள்
மொழியுமது மதியாமல் தலைகீழ்வீழ்ந்;

தகமகிழ விதமான நகையமுத மெனவூற
லசடரக மெழவாகி மிகவேயுண்-

டழியுமொரு தமியேனு மொழியுமுன திருதாளி
னமுதுபரு கிட**ஞான மருளாயோ;**

மகரமெறி திரைமோது பகரகடல் தடவாரி
மறுகுபுனல் கெடவேலை விடுவோனே-

வரிசையவுண் மகசேனை யுகமுடிய மயிலேறி
வருபனிரு கரதீர முருகோனே;

திணைப்புனத்தின் மாட்டு (திணைப்புனத்துக்கு முன்பொருகால்) நடந்து குறவர் கொடியாகிய (வள்ளியை) மணஞ்செய்து ஜெகமுழுதும் ஆளவந்த பெரியோனே!

செழிப்புற்ற வளம்பொலிந்த மலர்ச்சோலைகள் நிறைந்துள்ள திருப்பழநியில் வீற்றிருக்க வந்த பெருமாளே!

(உனையே வணங்க வரவேணும்)

## 187

மொட்டு நிலையில் உள்ள தாமரை மலர் போலவும், ஒளி வீசுகின்ற அழகிய பொன்மலை போலவும், முதிர்ச்சி அடையாத இளமைத் தன்மையில் உள்ள கொங்கைப் பாரங்களை உடைய மாதர்களின் தோள்களில் —

முழுகி அமிழ்கின்ற (சிற்றின்ப) அநுபோக வீணன் என (இரங்கி)ப் பெரியோர்கள் சொல்லுகின்ற நன்மொழி-களைப் பொருட்படுத்தாமல் தலைகீழாகச் (செருக்கி) விழுந்து,

உள்ளங் களிப்புறப் பலவகையான இன்பத்தைத் தரும் அமுதமே என்னும்படியான இதழூறலைத் தரும் கீழ்மக்களாம் (மூடராம்) பொதுமகளிருடைய வீடுகளுக்குப் போய்- (அவர் தரும் இதழூறலை) மிகவே உண்டு —

அழிகின்ற இந்தத் தனியனேனும் யாவராலும் - போற்றப்படுகின்ற உன்னுடைய இரண்டு திருவடி அமுதையும் உண்ணும்படியான ஞானத்தை அருள்புரிய மாட்டாயோ (அருளுதி - என்றபடி-)

மகர மீன்களை எறிகின்ற திரைகள் மோதுகின்ற ஒளி பொருந்திய கடலில் உள்ள விசாலமான நீர், கலங்கும் நீராகிக் கெட, வேலைச் செலுத்தியவனே!

நிரை நிரையாக வந்த அசுரர்களுடைய மகா (பெரிய) சேனைகளின் கால அளவு முடியும்படி மயிலில் ஏறிவந்த பன்னிரு கரங்களைக் கொண்ட தீரனே! முருகனே!

*பகர்வரிய ரெனலாகு முமைகொழுந ருளமேவு*
*பரமகுரு வெனநாடு மிளையோனே-*
*பணிலமணி வெயில்வீசு மணிசிகர மதிசூடு*
**பழநி**மலை *தனில்மேவு பெருமாளே.* (88)

## 188. திருவடி பெற

*தனன தனன தனத்த தனன தனன தனத்த*
*தனன தனன தனத்த தனதான*

*முதிர வுழையை வனத்தில் *முடுகி வடுவை யழித்து*
*முதிய கயல்கள் கயத்தி னிடையோடி-*
*முரண வளரும் †விழிக்குள் மதன விறகு பயிற்றி*
*முறைமை கெடவு மயக்கி வருமாதர்;*
*மதுர அமுத மொழிக்கு மகுட களப முலைக்கு*
*வலிய அடிமை புகுத்தி விடுமாய-*
*மனதை யுடைய அசட்டு மனிதன் முழுது புரட்டன்*
*மகிழ வுனது* **பதத்தை யருள்வாயே;**
*சதுரன் ‡வரையை யெடுத்த நிருத னுடலை வதைத்து*
*§சகடு மருத முதைத்த தகவோடே-*
*தழையு மரமு நிலத்தில் மடிய அமரை விளைத்த*
*தநுவை யுடைய சமர்த்தன் மருகோனே;*
*அதிர முடுகி யெதிர்த்த அசுர ருடலை வதைத்து*
*அமரர் சிறையை விடுத்து வருவோனே;*

---

*முடுகி - முடுக்கி, துரத்தி.

† விழிக்குள் - விழியினால்; வேற்றுமை மயக்கம்.

‡ *ராவணன் வரை யெடுத்த வரலாறு :-* ராவணன் திக்கு விசயம் செய்து வந்தபோது அவனுடைய புஷ்பக விமானம் கயிலை மலையைக்கடக்க முடியாது தடைப்பட்டு நிற்க, இந்த மலையை வேரோடு பறித்து எறிவேன் என்று அவன் இறங்கி, மலையைத் தன் கைகளால் பெயர்த்து அசைக்க, சிவபிரான் தமது கால் விரலின் நக நுனியால் அம்மலையை அழுத்த, ராவணன் நசுக்குண்டு அழுது இன்னிசை பாடி இறைவனை மகிழ்வித்து உய்ந்தனன் என்பது வரலாறு: " முந்திமா விலங்கலன்றெடுத்தவன் முடிகள் தோள் நெரிதரவே. உந்திமா மலரடி ஒரு விரல் உகிர் நுதியால் அடர்த்தார்" - சம்பந்தர் III - *92 - 8.* ''இலங்கையர் கோன்.......எழு நரம்பின் இன்னிசை கேட்டின்புற்றான்" அப்பர் VI - *51 - 10.*

§ *சகடு மருதம் உதைத்த வரலாறு:-111, 143,* பாடல்களின் கீழ்க் குறிப்பைப் பார்க்க *(பக்கம் 264, 332),*

சொல்லுதற்கு அரியர் எனச் சொல்லத்தக்க உமை கணவராம் சிவபிரான் தமது உள்ளத்தில் வீற்றிருக்கும் பரமகுரு நீ என்று (உன்னை) விரும்பும் இளையவனே!

சங்கு மணிகள் ஒளிவீசும் (பழநிமலையில்),அழகிய மலை உச்சி (அல்லது ஒளிவீசும் மலை உச்சி) திங்களைத் தீண்டும் பழநி மலையில் - வீற்றிருக்கும் பெருமாளே!

(ஞானம் அருளாயோ.)

## 188

நன்றாக மானைக் காட்டுக்குள் துரத்தி, ஓட்டி, மாவடுவை (உப்பிலிட்டு) அழித்து, பெரிய கயல் மீன்களைக் குளத்திடையே புகும்படி ஓட்டி,

(இவ்வாறு இவைகளுடன்) மாறுபட்டு வளர்கின்ற கண்களால் காமலீலைத் தந்திரங்களைச் செய்து (எனது) ஒழுக்கம் கெடும்படி மயக்கி வருகின்ற பொது மகளிருடைய

இனிமை நிறைந்த அமுதச் சொற்களுக்கும், அணிமுடி (கிரீடம்) போன்றதும், வாசனைக் கலவைச் சாந்து அணிந்ததுமான முலைக்கும், வலிய இழுத்து (என்னை) அடிமைப் புகுத்தி விடுகின்ற மாயம் நிறைந்த —

மனதை உடைய அசட்டு மனிதனாகிய நான், முழுப் புரட்டனாகிய நான், மகிழும்படி உனது திருவடியை அருள்வாயே.

திறமை வாய்ந்தவனும், (கயிலை)மலையை அசைத்து எடுத்த அரக்கனுமாகிய ராவணனுடைய உடலை அழித்தும், சகடு (வண்டியை) உதைத்தும், மருதமரத்தைத் தள்ளிய பக்குவத்தால்.

இலைகளுடனும் மரம் பூமியிற் பட்டு அழியவும் - போர்புரிந்த் - வில்ஏந்திய சமர்த்தனுமான திருமாலின் மருகனே!

(பூமி) அதிரும்படியாக விரைந்து நெருங்கிவந்து எதிர்த்த அசுரர்களுடைய உடலை வதைத்துத் தேவர்களைச் சிறையினின்றும் மீளவைத்து எழுந்தருளியவனே!

அரிய புகழை யமைத்த பெரிய **பழநி** மலைக்கு
ளழகு மயிலை நடத்து பெருமாளே (89)

## 189. திருவடி மறவாமை

தனதனன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன தனதான

முருகுசெறி குழலவிழ முலைபுளக மெழநிலவு
முறுவல்தர விரகமெழ அநுராகம்-

முதிரவச மறவிதரி யெழுகைவளை கலகலென
முகநிலவு குறுவெயர்வு துளிவீச;

அருமதுர மொழிபதற இதழமுது பருகிமிக
அகமகிழ இருகயல்கள் குழையேற-

அமளிபடு மமளிமல ரணையின் மிசை துயிலுகினும்
அலர்கமல **மலரடியை** **மறவேனே;**

நிருதனொடு வருபரியு மடுகரியும் ரதநிரையும்
நெறுநெறென முறியவிடும் வடிவேலா-

நிக *ழகள சகளகுரு நிருபகுரு பரகுமர
நெடியநெடு ககனமுக டுறைவோனே;

வருமருவி நவமணிகள் மலர்கமுகின் மிசைசிதற
மதுவினிரை பெருகு †வளி மலைமீதே-

வளர்குறவர் சிறுமியிரு வளர்தனமு மிருபுயமு
மருவிமகிழ் **பழநி**வரு பெருமாளே. (90)

---

* அகள சகள குரு நிருப - அருவ மாகியும் உருவ மாகியும் உள்ள குரு ராஜனே.

† வளிமலை - வள்ளிமலை.

அருமை வாய்ந்த புகழைக் கொண்டுள்ள பெருமையை உடைய பழநி மலையில் அழகு மயிலை நடத்தும் பெருமாளே!

(உனது பதத்தை அருள்வாயே)

## 189

மணம் நிறைந்த கூந்தல் அவிழ்ந்து விழ, கொங்கை புளகங் கொள்ள, நிலவொளியைப் பற்கள் வீச, காம உணர்ச்சி உண்டாக, காம இச்சை —

வளர்ந்து பெருக, தன்வசம் அழிய, அசைந்து நிலைபெயரும் கைவளையல்கள் கலகல என்று ஒலிக்க, முகமாகிய திங்கள் (நிலவு) சிறு வெயர்வுத் துளிகளை வீசி —

அருமையான இனிய சொற்கள் (வாயினின்றும்) குலை குலைந்து வர, இதழ் அமுதத்தை உண்டு மிகவும் உள்ளம் களி கொள்ள, இரு கயல் மீன் போலுங் கண்கள் காதளவும் பாய —

அமர்க்களப்படும் (ஆரவாரம் படும்) படுக்கை மலரணையின் மேல் (நான்) துயில்கொண்டாலும், விரிந்த தாமரை மலரை ஒத்த (உனது) திருவடியை மறவேன்.

அசுர (சூர) னோடு வந்த குதிரைகளும், கொல்லுந் தன்மையை உடைய யானைகளும், தேர் வரிசைகளும், நெறு நெறென்று அழியும்படி செய்த கூரிய வேலாயுதனே!

அமைந்துள்ள அருவமாகியும் உருவமாகியும் உள்ள குரு ராஜனே! குருபரனே! குமரனே! நீண்ட பெரிய வானத்து உச்சியில் உறைபவனே!

வருகின்ற அருவிகளில் அடித்துவரும் நவமணிகளும் மலர்களும் கமுக மரத்தின்மேற் சிதறத் தேன் ஒழுக்கம் பெருகும் வள்ளிமலை மேல்

வாழும் குறவர் மகள் வள்ளியின் இரண்டு பூரிக்கும் கொங்கைகளையும் (அல்லது பெரிதாய் வளர்ந்துள்ள கொங்கைகளையும்) இரண்டு புயங்களையும் அணைந்து மகிழ்கின்ற பெருமாளே! பழநியில் எழுந்தருளியுள்ள பெருமாளே!

(மலரடியை மறவேனே)

## 190. யோக நிலை பெற

தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன தனதான

மூலங்கிள ரோருரு வாய் [1]நடு
நாலங்குல [2]மேனடு வேரிடை
மூள்பிங்கலை நாடியொ டாடிய முதல்வேர்கள்-

[3]மூணும்பிர காசம தாயொரு
[4]சூலம்பெற வோடிய வாயுவை
[5]மூலந்திகழ் தூண்வழி யேயள விடவோடிப்;

[6]பாலங்கிள ராறுசி காரமொ
டாருஞ்சுட ராடுப ராபர
பாதம்பெற ஞானச தாசிவ மதின்மேவிப்-

பாடுந் [7]தொனி நாதமு நூபுர
மாடுங்கழ **லோசையி லேபரி**
**வாகும்படி** யேயடி யேனையும் **அருள்வாயே;**

சூலங்கலை மான்மழு வோர்துடி
தேவன் தலை யோடும ராவிரி
தோடுங்குழை சேர்பர னார்தரு முருகோனே-

சூரன்கர மார்சிலை வாளணி
தோளுந்தலை தூள்பட வே அவர்
சூளுங்கெட வேல்விடு சேவக மயில்வீரா;

காலின்கழ லோசையு நூபுர
வார்வெண்டைய வோசையு மேயுக
காலங்களி னோசைய தாநட மிடுவோனே-

---

1. நடு - சரீர மத்தியஸ்தானம். 2. மேல் நடுவேர் - சுழுமுனை.

3. இடைகலை - தச நாடியுள் ஒன்று. இடது நாசியால் விடும் சுவாசம் (மூச்சு); பிங்கலை - தச நாடியுள் ஒன்று. வலது நாசி வழியாய் விடும் மூச்சு : சுழுமுனை - தச நாடியுள் ஒன்று; இடைகலைக்கும் பிங்கலைக்கும் இடையிலுள்ளது. சுழுமுனை - ஆதாரம் ஆறினும் ஊடுருவி நிற்பது. இடையும் பிங்கலையும் கத்திரிக்கைகால் போற் பின்னி நிற்பன.

4. சூலம் பெற ஓடிய வாயு - "சூலமென ஓடு சர்ப்ப வாயு" - திருப்புகழ் 790.

5. மூலந் திகழ் தூண் வழி - சுழுமுனா மார்க்கம்.

6. பாலங் கிள ராறு - நெருப்பாறு. மயிர்ப்பால மென்பன: பாலம் - நெற்றி.

7. தொனி - திருப்புகழ் 179 குறிப்புரை காண்க.

மூலாதாரத்தினின்றும் மேற்பட்டு எழுகின்ற ஓர் உருவாகச் சென்று, சரீரத்தின் மத்திய ஸ்தானத்தில் நான்கு அங்குல அளவின்மேல், சுழுமுனை, இடைகலை, தோன்றும் பிங்கலை என்னும் நாடிகளுடன் கலந்து, முதல் வேர்களாகிய —

(இம்) மூன்று நாடிகளும் ஒளிவிட்டு, ஒப்பற்ற சூலாயுதம் போல ஓடுகின்ற பிராண வாயுவை (முதுகு தண்டிலுள்ள) சுழுமுனை வழியிற் கணக்காக ஓடச்செய்து —

(நெருப்பாறு, மயிர்பாலம் என்கின்ற) நெற்றி (புருவ) மத்தியில் விளங்குகின்ற ஆறாவது ஆதாரமாகிய ஆஞ்ஞை ஸ்தானத்தில் "சி" கார அக்ஷரத்தொடு பொருந்தி நிறைந்து ஒளிவீசுகின்ற பரம்பொருளின் பாதத்தைப் பெறுதற் பொருட்டு ஞான சதாசிவ நிலையை அடைந்து —

(அவ்விடத்திற் கேட்கப்படும்) பாடலொலி நாதத்திலும், சிலம்பொலியுடன் கழலொலியிலும் அன்பு பெருகும் படியாக அடியேனுக்கு அருள்வாயே!

சூலம், கலைமான், மழு, ஒப்பற்ற துடி, பிரமனது தலை ஓடு, பாம்பு, விளங்கும் தோடு, குழை இவை சேர்ந்துள்ள சிவபிரான் தந்த முருகனே!

சூரனது கை, மார்பு, வில், வாள், அழகிய தோள், தலை (இவை யாவும்) தூள்படவும், (தேவர்களைச் சிறையினின்றும் விடுவதில்லை என) அவன் கொண்ட சபதம் பாழாகவும், வேலை ஏவிய பராக்ரம மயில் வீரனே!

காலில் அணிந்துள்ள கழலின் ஒலி, சிலம்பொலி, ஒழுங்கான வீரக் காலணியின் ஒலி - ஆக - இவ்வொலிகளே யுக முடிவைக் காட்டும் ஓசைகளாகத் திகழும்படி நடனம்புரிபவனே!

கானங்கலை மான்மக ளார்தமை
நாணங்கெட வேயணை வேள்பிர
காசம்பழனாபுரி மேவிய பெருமாளே (91)

## 191. சுகம் பெற

தனதனன தாத்த தனதான

*வசனமிக வேற்றி மறவாதே-
மனதுதுய ராற்றி லுழலாதே;

இசைபயில்ஷ டாஷ ரமதாலே-
இகபரசௌ பாக்ய மருள்வாயே;

†பசுபதிசி வாக்ய முணர்வோனே-
பழநிமலை வீற்ற ருளும்வேலா;

அசுரர்கிளை வாட்டி மிகவாழ-
அமரர்சிறை மீட்ட பெருமாளே (92)

## 192. துதித்தலால் வரும் பேறு

தனனா தனனா தனதான

வரதா மணிநீ யென வோரில்-
$வருகா தெதுதா னதில்வாரா-

திரதா திகளால் நவலோக

---

*வசனமேற்றல் - உருவேறச் செபித்தல். "உருவேறவே ஜெபித்து" - திருப்புகழ் 355.

†பசுபதி வாக்கியம் - வேத சிவாகமங்கள்.

‡சி ஸ்ரீ என்பது சீ - என்றாகிக் குறுகியது,

$ஓர்தல் - ஆராய்ந்தறிதல்.

வருகா(த)து எது? எதுதான் அதில் வராது எனப் பிரிக்க. எது இடை-நிலைத் தீவகமாய் முன்னும் பின்னும் சேரும்.

காட்டில் (வந்த) கலைமான் மகளாகிய வள்ளியை அவளது கூச்சம் அழிய அணைந்த வேளே! ஒளிவீசும் பழனாபுரியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(கழலோசையிலே பரிவாகும்படி ....அருள்வாயே.)

## 191

உருவேற ஏற மிகச் செபித்து - அங்ஙனம் செபித்தலால் - உன்னை மறவாமலிருக்கவும் —

மனம் துயரந்தருகின்ற மார்க்கங்களில் திரியாதிருக்கவும்-

சொல்லிச் சொல்லிப் பயில்கின்ற ஆறெழுத்து மந்திரத்தின் அருட்பயனாக

இம்மை மறுமைச் சுகங்களை (நல்வாழ்வை) (அடியேனுக்கு) அருள்புரிவாயாக.

சிவபிரானது திருமொழிகளான வேத சிவாகமங்களை அறிந்தவனே!

பழநி மலையில் வீற்றிருந்தருளும் வேலனே!

அசுரர் கூட்டங்களை ஒடுக்கியும், நன்றாக வாழுமாறு

தேவர்களைச் சிறையினின்று மீட்டும் - (அருளிய) பெருமாளே!

(இகபர செளபாக்யம் அருள்வாயே.)

## 192

வரதனே!( வேண்டுவோர் வேண்டுகின்ற வரங்களை அளிப்பவனே!) மணியே! (கண்மணியே! கேட்டதைக் கொடுக்கும் சிந்தாமணியே!) நீ என்று துதிப்போமானால், ஆய்ந்து பார்த்தால் —

கைகூடாதது எது உண்டு? (எல்லாம் கைகூடும் என்றபடி); எது தான் அதில் வாராது - (எந்தக் காரியம்தான் அங்ஙனம் துதித்தலாற் கைகூடாது! எல்லாம் கைகூடும் என்றபடி.)

இரசவாதம் முதலியவைகளால் (பாதரசம் முதலியவற்றால்) பொன், இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி, பித்தளை, தரா, துத்தநாகம், வெண்கலம் ஆகிய ஒன்பது லோகங்களை,

மிடவே கரியா மிதிலேது;

சரதா மறையோ தயன்மாலும்-
சகலா கமநூ லறியாத;

பரதே வதையாள் தருசேயே-
பழனா புரிவாழ் பெருமாளே. (93)

## 193. அடியாரோ டிணங்க

தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன தனதான

வாதம் பித்தமி டாவயி றீளைகள்
சீதம் பற்சனி சூலைம கோதர
*மாசங் கட்பெரு மூலவி யாதிகள் குளிர்காசம்-

மாறுங் கக்கலொ டேசில நோய்பிணி
யோடுந் †தத்துவ காரர்தொ ணூறறு
வாருஞ் சுற்றினில் வாழ்சதி காரர்கள் வெகுமோகர்;

சூழ்துன் சித்ர‡க பாயைமு வாசைகொ
டேதுஞ் சற்றுண ராமலெ மாயைசெய்
சோரம் பொய்க்குடி லேசுகமாமென இதின்மேவித்-

---

*'மாசங்கண்' என்பதை, 'அங்கண்மாசு' எனத் திருப்புக; அங்கண் மாசு என்பது நேத்திர ரோகம்.

†தத்துவம் 96 - திருப்புகழ் 157-ன் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

‡கபாய் - கவசம் : தேகம்.

இட்ட கூட்டுறவால் (ஈற்றில்) கரியாவதன்றி இந்த ரசவாதத்தால் வரும் பயன் ஏது? (ஒன்றுமில்லை என்றபடி).

மெய்யனே! வேதத்தை ஓதுகின்ற பிரமனும், திருமாலும், சகல ஆகமங்களும், நூல்களும் கண்டறியாத

பரதேவதையாகிய பார்வதி அருளிய குழந்தையே!

**பழனாபுரியில் வாழ்கின்ற பெருமாளே!**

*(வரதா! மணி நீ என, வருகாதது எது?)*

## 193

வாதம் (உடலில் வாயு மிகுதலாலாகிய நோய் வகை), பித்தத்தால் வரும் பிணி வகை (ஈரலினின்றும் தோன்றும் நீர் - பித்தம்) மிடா (பெரிய பானை) போன்ற வயிறு, கோழையால் வரும் க்ஷயநோய் வகைகள், சீதமல நோய், பல்நோயால் வரும் சன்னி, சூலைநோய், (வயிற்றுளைவு முதலிய நோய்), மகோதரம் (பெரு வயிற்று நோய்), நேத்திர ரோகம் (அழகிய கண்களில் உண்டாகும் நோய்கள்), பெரிய மூலநோய்கள் (ஆசனத் துவாரத் திற் காணும்; நோய்கள்), (சுரக்) குளிர் கோழையால் வரும் இழுப்பு (சுவாசகாசம்) —

அடுத்தடுத்து வரும் வாந்தி முதலிய சில நோய் பிணி வகைகளுடன், தொண்ணூற்றாறு தத்துவக் கூட்டத்தாரின் சூழலில் வாழ்கின்ற வஞ்சகர்களும், பேராசைக்காரரும் (ஆய ஐம்புல வேடர்களால்) —

சூழ்ந்துள்ள. பொல்லாத, விசித்திரமான தேக ஆசையால், மண் - பெண் - பொன் என்னும் மூவாசையுங் கொண்டு எந்த (நல்ல) பொருளையும் சற்றேனும் உணராமல் மாயையே விளைக்கின்ற கள்ளத்தனமும் பொய்ம்மையுமே கொண்ட இந்த உடலே சுகமெனக் கருதி இவ்வுடலைப் போற்றி விரும்பி —

தூசின் பொற்சர மோடுகு லாயுல
கேழும் பிற்பட வோடிடு மூடனை
*தூவஞ் சுத்தடி யாரடி சேரநி னருள்தாராய்

தீதந் தித்திமி தீதக தோதிமி
டூடுண் டுட்டுடு டூடுடு டூடுடு
சேசெஞ் செக்கெண தோதக தீகுட வெனபேரி-

சேடன் சொக்கிட வேலைக டாகமெ
லாமஞ் சுற்றிட வேயக ரார்கிரி
தீவும் பொட்டெழ வேயனல் வேல்விடு மயில்வீரா;

வேதன் பொற்சிர மீது †கடாவிந
லீசன் சற்குரு வாயவர் காதினில்
மேவும் ‡பற்றிலர் பேறரு ளோதிய முருகோனே-

§வேஷங் கட்டிபி னேகிம காவளி
மாலின் பித்துற வாகிவி ணோர்பணி
வீரங் கொட்பழ னாபுரி மேவிய பெருமாளே. (94)

## 194. ஆண்டருள

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தனதான

விதமி சைந்தினி தாமலர் மாலைகள்
குழல ணிந்தநு ராகமு மேசொலி
வீதர ணஞ்சொலி வீறுக ளேசொலி யழகாக-

---

*தூவஞ் சுத் தடியார் - தூ அம் சுத்த அடியார் - தூய்மை வாய்ந்த அழகிய சுத்த அடியார்.

†கடாவி - பிரயோகித்து; குட்டி; பிரணவப் பொருள் தெரியாத பிரமனை முருகவேள் குட்டிச் சிறையிலிட்டுப் பின் சிவபிரான் விடும்படி சொல்ல அவனைச் சிறைவிட்டதும், பிரணவப் பொருள் யாது என்று சிவபிரான் கேட்க அவருக்கு அதை முருகவேள் உபதேசித்ததும் - கந்தபுராணத்தில் விரிவாகக் காணலாம். இங்ஙனம் உபதேசித்த இடம் குருமலை எனப்படும். சுவாமி மலை. திருத்தணிகையில் உபதேசித்ததாகத் தணிகைப் புராணம் கூறும். தணிகையில் நந்தியாற்றங் கரையில் உள்ள முருகவேளுக்கும் "சாமிநாதன்" எனப் பெயர்.

‡பற்றிலர் பேறருள்-பற்றற்றவர் பெறத்தக்க அருளாகிய பிரணவப் பொருள்.

§வேஷங்கட்டி - விருத்தாப்பிய வேஷங்கொண்டு.

(நல்ல) ஆடையாலும், தங்கச் சரங்களாலும் (பொன் வடங்களாலும்) (இவ்வுடலை) அலங்கரித்து மகிழ்ந்து, அம்மகிழ்ச்சியால் ஏழுலகமுமே எனக்குப் பிற்படும்படி முந்தி ஓடுகின்ற மூடனாகிய நான் (உலகெலாம் எனக்கு மதிப்பில்லை என்று ஆணவங்கொண்டு துள்ளி ஓடும் மூடனாகிய நான்,) தூய்மை வாய்ந்த அழகிய சுத்த அடியார்களின் திருவடியைச் சேரும் பாக்கியத்தைப் பெற உனது திருவருளைத் தந்தருள்க.

தீதந் தித்திமி....... தோதக தீகுட என்று பேரி வாத்தியம், ஆதிசேடன் மயக்கமுறவும், கடல், அண்ட கோளகை இவை முற்றும் அச்சங்கொள்ளவே, அசுரர்கள் (புக்கிருந்த) மலைகளும் தீவுகளும் பொடிபட்டு நாசமுறவும், நெருப்பை வீசும் வேலைச் செலுத்திய மயில் வீரனே!

பிரமனது அழகிய தலையிற் குட்டி, நல்ல ஈசனுக்குச் சற்குருவாய் அமைந்து, அவர் திருச்செவிகளில் - நாடுகின்ற பற்றற்றவர் பெறத்தக்க அருளாகிய பிரணவப் பொருளை உபதேசித்த முருகனே!

(வேட்டுவக் கோலம், செட்டி வடிவு, வேங்கை மரக்கோலம், கிழவர் வேடம் ஆகிய) வேஷங்களைப் பூண்டு, பின் (தினைப் புனத்துக்குச்) சென்று, சிறந்த வள்ளியின்மீது மோகப் பித்துக்கொண்டவனாகி, தேவர்கள் வந்து வணங்கும் பராக்ரமம் வாய்ந்த பழனாபுரியில் வீற்றிருக்கும் பெருமாளே! (பித்துக் கொண்டவனாகி மேவிய பெருமாளே! விண்ணோர் பணி பெருமாளே! வீரங்கொள் பெருமாளே!) பழனாபுரி மேவிய பெருமாளே - எனத் தனித்தனி இயைக்கவும்.

(அடியார் அடிசேர நின் அருள்தாராய்.)

## 194

பல விதங்களில் ஆசைப்பட்டு (அல்லது பலவித உபாயங்களை மேற்கொண்டு),இனிதாக, மலர் மாலைகளைக் கூந்தலில் அணிந்து, காமப் பற்றான பேச்சுக்களைப் பேசித் தமது விவேகத்தைச் சொல்லியும், சிறப்புக்களைச் சொல்லியும், அழகாக

விரிகு ரும்பைக ளாமென வீறிய
கனக சம்ப்ரம மேருவ தாமதி
விரக *மொங்கிய மாமுலை யாலெதி ரமர் நாடி;

இதமி சைந்தன மாமென வே†யின
நடை நடந்தனர் வீதியி லேவர
எவர்களுஞ் ‡சிதமால்கொளு மாதர்கள் வலையாலே-

எனது சிந்தையும் வாடிவி டாவகை
அருள்பு ரிந்தழ காகிய தாமரை
இரு பதங்களி னாலெனை **யாள்வது** **மொருநாளே;**

மதமி சைந்தெதி ரேபொரு சூரனை
யுடலி ரண்டு§கு றாய்விழ வேசின
வடிவு தங்கிய வேலினை யேவிய அதிதீரா-

மதுர இன்சொலி மாதுமை நாரணி
கவுரி யம்பிகை யாமளை பார்வதி
மவுந சுந்தரி காரணி யோகினி சிறுவோனே;

பதமி சைந்தெழு லோகமு மேவலம்
நொடியில் வந்திடு மாமயில் மீதொரு
பவனி வந்தக்ரு பாகர சேவக விறல்வீரா-

பருதி யின்ப்ரபை கோடிய தாமெனும்
வடிவு கொண்டருள் **காசியின் மீறிய**
**பழநி**யங்கிரி மீதினில் மேவிய பெருமாளே.(95)

---

*ஒங்கிய - ஓங்கிய.

†இன நடை - விதம் விதமான நடை.

‡சிதம் - சித்தம்.

§கூறாய் என்பது குறாய் என்றாயிற்று.

விரிந்து வளர்ந்த தென்னங் குரும்பைகள் (இளநீர்) என்னும் படி ஓங்கி விளங்கும் பொன்மயமாய் நிரம்பும் மேருமலை போல அதிகக் காமம் பொதிந்து ஓங்கின அழகிய கொங்கை கொண்டு, முன்னுள்ள (ஒரு) விருப்பத்தை நிறைவேற்ற விரும்பி (அல்லது எதிர்க்கும் காமப்போரை விரும்பி)

இன்பத்துடனே, அன்னப் பறவைபோல, விதம்விதமான நடை நடப்பவராய்த், தெருவிலே வந்து எல்லோருடைய உள்ளத்துக் காம மயக்கையும் (கொள்ளை) கொள்ளும் (பொது) மகளிரின், கண் என்னும் வலையால் —

என்னுடைய மனமும் வாடிப் போகாத வகைக்கு (நீ) திருவருள் புரிந்து அழகான (உனது) தாமரை போன்ற இரண்டு திருவடிகளால் என்னை ஆண்டருளும் ஒரு நாளும் உண்டோ!

ஆணவம் மிக்கு எதிரில் வந்து சண்டை செய்த சூரனுடைய உடல் இரண்டு கூறாக விழும்படி கோபாவேச ரூபத்தைக் கொண்ட வேலாயுதத்தைச் செலுத்தின அதிதீரனே!

மிக இனிமை வாய்ந்த சொல்லை உடையவள், உமை மாது, நாரணி, கவுரி, அம்பிகை, யாமளை (சியாமள நிறத்தை ஒருவகைப் பச்சை நிறத்தை உடையவள்), பார்வதி, மௌன சுந்தரி, காரணி, யோகினி - (எனும் திரு நாமங்கள் வாய்ந்த தேவியின்) பிள்ளையே!

ஏற்ற சமயத்தில் (சமயங் கண்டு) ஏழு லோகங்களையும் வலம் ஒரு நொடிப் பொழுதில் வந்த, அழகிய மயிலின்மேல் ஒப்பற்ற திருவுலா வந்த, கிருபாகரனே! பராக்ரமனே! வெற்றி வீரனே!

சூரியனது ஒளி கோடிக் கணக்கதாமெனும் திருவுருவத்தைக் கொண்டருளும் (பெருமாளே)! காசித் தலத்தினும் சிறந்த பழநியங்கிரிமீது வீற்றிருக்கும் பெருமாளே!

(எனை ஆள்வதும் ஒரு நாளே!)

---

# பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை

# உள்ளுறை

## பாகம் - 2

உ

# முருகவேள் பன்னிரு திருமுறை

## நான்காம் திருமுறை

— ———

நான்காம் திருப்பதி

### திருவேரகம் என்கின்ற சுவாமிமலை

(ரெயில்வே ஸ்டேஷன், கும்பகோணத்திற்கு மேற்கு 4-மைல். காவேரியின் வடகரை. முருகக் கடவுள் சிவபெருமானுக்குப் பிரணவோபதேசஞ் செய்த திருப்பதி. இதனால் ஸ்வாமிக்கு ஸ்வாமிநாதன், தகப்பன்சாமி, புத்ரகுருக்கள் என்னுந் திருநாமங்களுண்டு. "பரம ருக்கொரு குருக்களென முத்தர் புகழ் தம்பிரானே"- *215*, " மாற்கரி யார்க்குபதேசஞ்செய்த திகிரி."- *(கந்தரந்தாதி - 91)*, என்பன ஸ்வாமிகள் திருவாக்கு. "பெரிதுவந் தேரகத் துறைதலும் உரியன்" என்பர் நக்கீரனார். அருணகிரியார் பாததரிசநம் பெற்ற ஸ்தலம் *(199)*. இதற்கு ஸ்தல புராணம் இருக்கின்றது.)

## 195. திருவடியைப் போற்ற

தனதனன தனதனன தனனா தனத்ததன
தனதனன தனதனன தனனா தனத்ததன
தனதனன தனதனன தனனா தனத்ததன தனதான

குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனந லுரையுதவு மயிலா எனத்தினமு
முருகாதே-

குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலந வரதமன மெனவே நடப்பர்நகை
கொளுமவர்க ளுடை மைமன முடனே பறிப்பவர்க
ளனைவோரும்;

தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய நழுவா வுழப்பியர்கண்
வலையாலே-

சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமாத ரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியே வழுத்த அருள்
தருவாயே.

சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருநொடியி லவர்கள்படை கெடவே லெடுத்தவனி
தனில்நிருதர் சிரமுருள ரணதூள் படுத்திவிடு
செருமீதே-

* தவனமொடு மலகைநட மிடவீர பத்திரர்க
ளதிரநிண மொடுகுருதி குடிகாளி கொக்கரிசெய்
தசையுணவு தனின்மகிழ விடுபேய் நிரைத்திரள்கள்
பலகோடி

* தவனம் - தாகம்.

## 195

குமரனே! குருபரனே! முருகனே! குகனே! குறச்சிறுமி (வள்ளி) கணவனே! சரவணனே! அசுரர்களைக் கலக்கியவனே! பிறையைச் சடையிற் சூடியுள்ள சிவனாரின் குருபோல அமைந்து சிறந்த உபதேச மொழியைப் போதித்த மயிலனே (அல்லது வேலனே)! எனக் கூறி நாள்தோறும் உருகாமல்-

குயில்போலும் பேச்சுக்களை உடைய நல்ல மகளிர், கண்பார்வையால் உருக்குபவர், தெருவில் எப்போதும் அன்னம் போல நடப்பவர், தம்மைப் பார்த்து மகிழ்பவர்களுடைய பொருளையும் மனத்தையும் உடனே பறிப்பவர், எவரும்

தமது வசத்தில் அகப்படும்படி வசீகரணம் செய்யும் முகத்தை மினுக்குபவர், கொங்கை மீதுள்ள புடைவை சரிய நடுத் தெருவில் நிற்பவர், பொருள் இல்லாது தம்மிடம் வருபவர்களுடைய மனம் முறியும்படி நழுவியும் மழுப்பியும் கண்வலையால்-

(அவர்களுக்கு) வஞ்சனை செய்தும், அவரவர் (கொடுத்த பொருளுக்குத் தக்கபடி) மகிழ்ச்சியுற படுக்கையில் உருக்குபவர் (ஆகிய பொது மகளிரின்) வசத்தே ஒழுகி, அவர்களுக்கு அடிமையாகி (அம்மகளிர்) இட்ட வேலைகளில் திரிந்தலையும் மூடனுக்கு, உனது திருவடியையே போற்றும்படியான திருவருளைத் தந்தருளுவாயாக;

போர் செயக்கருதி அசுரர்களுடைய படை போர்க்களத்தில் எதிர்த்த பொழுது, ஒரு நொடிப் பொழுதில் அந்த அசுரர்களுடைய படைகள் அழிய வேலைச் செலுத்திப், பூமியில் அசுரர்களுடைய தலைகள் உருளும்படி - போரில் தூள்படுத்திவிட்ட போர்க் களத்தில்-

தாகத்தோடு பேய்கள் நடனம் செய்ய, வீர பத்திரர்கள் கர்ச்சனை செய்ய, மாமிசத்தை உண்டும் ரத்தத்தைக் குடித்தும் காளி கொக்கரிக்க, சதை உணவில் மகிழ்ச்சி கொள்ளும்படி பேயின் வரிசைக் கூட்டங்கள் பல கோடிக் கணக்காகப்-

திமிதமிட நரிகொடிகள் கழுகா டரத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதிந கரஅமரர் பதிவாழ்வு பெற்றுலவு
முருகோனே-

திருமருவு புயனயனொ டயிரா வதக்குரிசி
லடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர்
* சிவசமய அறுமுகவ திருவேர கத்திலுறை
பெருமாளே. (1)

## 196. முறையீடு

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான

† குமர குருபர முருக சரவண
குகசண் முககரி பிறகான-

குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு மணியேயென்;

றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதின முனையோதும்-

அமலை அடியவர் கொடிய வினைகொடு
மபய மிடுகுர லறியாயோ;

திமிர எழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்-

சிகர முடியுடல் புவியில் விழவுயிர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா;

---

* சதாசிவகோத்திரன்

† இடை வெளியின்றி முருகவேளின் திரு நாமங்கள் ஆறு வருவன

பேரொலி செய்ய, நரி, காகங்கள், கழுகு இவைகள் (அங்கு) ஆடித் திரிய, ரத்தவெறியால் பயிரவர்கள்(அங்குச்) சுழன்று திரிய, ஒப்பற்ற ஒரு வேலாயுதத்தைச் செலுத்தின (சூரியனே!); அஞ்ஞான இருளைப் போக்கும் சூரியனே! தேவர் தலைவனாம் இந்திரன் தனது வாழ்வைப் பெற்று உலவ (உதவிய) முருகனே! (உலவும்படி வைத்த முருகனே;) (அமராவதியில் வீற்றிருந்துலவு முருகோனே.

இலக்குமி மருவும் புயத்தனாம் திருமாலும், பிரமனும், ஐராவதம் என்னும் வெள்ளை யானை மீது ஏறும் பிரபுவாம் இந்திரனும் வந்து வணங்குகின்ற பழநிமலை, கதிர்காமம் என்னும் தலங்களில் மேவி விளங்கும் சைவ சமயத்தவனே! அறுமுகவனே! திரு ஏரகம் என்னும் சாமிமலையில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(உன் அடியே வழுத்த அருள் தருவாயே)

## 196

குமரனே; குருபரனே; முருகனே, சரவணனே, குகனே, சண்முகனே, யானை முகத்தையுடைய கணபதிக்குப் பின் பிறந்த

இளையவனே. சிவகுமாரனே, "சிவாயநம" என்னும் ஐந்தெழுத்துக்குக் குருவாகிய சிவபிரான் அளித்த குருமணியே என்று,

அமுதத்தைத் தேவர்கள் பேரொலியுடன் கடைந்த கடலொலியோ என்று சொல்லும்படி நாள்தோறும் உன்னை ஓதுகின்ற,

ஆரவாரங் கொண்ட அடியவர்கள் தமது கொடிய வினை ஒழியவேண்டி அபயமென்று ஓலமிடுகின்ற குரலொலியை (நீ) உணர்ந்திலையோ!

இருண்ட ஏழு கடல்களும் உலகங்களும் அழிபடவும் திசைகள் பொடிபடவும், (போர்க்கு) எழுந்து வந்த சூரர்களுடைய

உச்சி முடியும் உடலும் பூமியில் விழும்படி (அவர்களுடைய) உயிரைக் கவர்ந்துகொண்டு போரைப் புரிந்த வேல் வீரனே! ([illegible] வீரனே)!

நமனை யுயிர்கொளு மழலி னிணை * கழல்
நதிகொள் சடையினர் குருநாதா-

நளின குருமலை மருவி யமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே. (2)

## 197. பொதுமகளிர் நட்பு அற

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன தனதான

கோமள வெற்பினை யொத்தத னத்தியர்
காமனை யொப்பவர் சித்தமு ருக்கிகள்
கோவை யிதழ்க்கனி நித்தமும் விற்பவர் † மயில்காடை

கோகில நற்புற வத்தொடு குக்குட
ஆரணி யப்புள்வ கைக்குரல் கற்றிகல்
கோலவி ழிக்கடை யிட்டும ருட்டிகள் விரகாலே;

தூம மலர்ப்பளி மெத்தைப டுப்பவர்
யாரையு மெத்திம னைக்குள ழைப்பவர்
சோலை வணக்கிளி யொத்த மொழிச்சியர் நெறிகூடா

---

* கழலணிந்தது சிவனது தாளுக்கு வெற்றிக் குறியாகும்:-

"புரத்தை வென்ற நகைக்கும் மென் போதினோன்
சிரத்தை வென்ற செங்கைக் குஞ் சிலை மதன்
எரித்த கண்ணிற்கும் இன்றெனக் கூற்றடூஉத்
தரித்த வீரக்கழ லொடு தாளுற" என வரும் பிரபுலிங்க லீலைச் செய்யுளும் (கைலாச.15) "கருமால் வனப்பின் நமனாவியுண்டு கழல் கொண்டு" என வரும் வில்லைப் புராணச் செய்யுள் 262-ம், ஈண்டு உணர்தற்பாலன.

† மயில், காடை, குயில், புறா, கோழி இவைதம் குரல் எண்வகைப் புட்குரலுட் சேர்ந்தது. புட்குரல் என்பது சுரத மாதர் கண்டத்திலுண்டாகும் எண் வகை ஒலிகள்; அவை மயில், புறா, அன்னம், காடை, வண்டானம் (நாரை வகை) என்னும் பறவை, குயில், கோழி, வண்டு; (சுரதம் - சையோகம்)

யமனுடைய உயிரைக் கவர்ந்த நெருப்பு ஒத்த இணையடி-யையும் (கங்கை) ஆற்றினைக் கொண்ட சடையினையுங் கொண்ட சிவனுக்குக் குருநாதனே!

நீர் சூழ்ந்த (அல்லது தாமரை போலக் கண்ணுக்கு இனிய) குருமலை (**சுவாமிமலை**)யிற் பொருந்தி வீற்றிருக்கும் பெருமாளே! சொல்லப்படுகின்ற வேதங்கள் புகழ்கின்ற பெருமாளே!

*(அபயமிடு குரல் அறியாயோ!)*

# 197

அழகிய மலைபோன்ற கொங்கைகளை யுடையவர், காம இச்சை எழுப்புவதில் மன்மதனைப் போன்றவர், (ஆடவர்-களுடைய) மனத்தை உருக்குபவர், அல்லது [காமனை ஒத்த (அழகு நிறைந்த) ஆடவர்களின் சித்தத்தை உருக்குபவர்]; கொவ்வைக்கனி போன்ற வாயிதழைத் தினந்தோறும் விற்பவர்,** "மயில், காடையென்னும் பறவை,

குயில், அழகிய புறா, கோழி முதலிய காட்டுப் பறவை-களின் வகை வகையான குரல்களைக் கற்றுப் பகைமையைக் காட்டும் (அல்லது போரிடுங் குறியைக் காட்டும்) அழகிய விழிமுனையைச் செலுத்தி (உள்ளத்தை) மயக்குபவர்கள், தந்திரத்துடன்

நறும் புகைமணங் கொண்ட மலர்ப் படுக்கையில் மெத்தையில் படுப்பவர், யாரையும் (ஏத்தி), வஞ்சனை செய்து (தமது) வீட்டுக்குள் அழைப்பவர். சோலையிலுள்ள அழகிய கிளி போன்ற பேச்சினை உடையவர், நன்னெறி பொருந்தாத வகையில்,

---

** *"எட்டுக் குரலில் ஒரு குரல் கூவும் புறாவே"*

*"எட்டுப் பறவை குமுறுங் கழுகிலே*

*பத்தெட்டுப் பாம்பேதடி சிங்கி!*

*குட்டத்து நாட்டாரும் காயங் குளத்தாரும்*

*இட்ட சவடியடா சிங்கா!" (குற்றாலக்குறவஞ்சி 93,115)*

தூசுநெ கிழ்த்தரை சுற்றியு டுப்பவர்
காசுப றிக்கம றித்தமு யக்கிகள்
**தோதக வித்தைப டித்து ந டிப்பவ ருறவாமோ**

மாமர மொத்துவ ரிக்கு ணெருக்கிய
சூரனை வெட்டிநி ணக்குட லைக்† கொடி
வாரண மெச்சஅளித்தஅ யிற்குக கதிர்காம-

மாமலை யிற்பழ நிப்பதி யிற்‡ றனி
மாகிரி யிற்றணி கைக்கிரி யிற்பர
மாகிரி யிற்றிரை சுற்றிவ ளைத்திடும் அலைவாயில்

ஏமவெ யிற்பல வெற்பினி னற்பதி
னாலுல கத்தினி லுற்றுறு பத்தர்கள்
ஏதுநி னைத்தது மெத்த அளித்தரு ளிளையோனே-

§ ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
**வாமிம லைப்பதி** மெச்சிய சித்தஇ
ராஜத லக்ஷண லக்ஷுமி பெற்றருள் பெருமாளே. (3)

---

* மாமரம் ஒத்து உவரிக்குள் நெருக்கிய எனப் பிரிக்க; உவரி - சமுத்திரம்.

† கொடி வாரணம் - அக்நி பகவான் முருகவேளின் தேர்க் கொடியாய் அமைந்தானாதலின், சூரன் ஒழிந்தான் என்று அவன் மெச்ச அளித்தவேல் என்றும் நிணக் குடல் நெருப்புக்கு இரையாயிற்று எனவும் பொருள்படும்.

"எரி தழற் பண்ணவன் வாவு குக்குட மாண் கொடியாகியே
தேவதேவன் திரு நெடுந் தேர் மிசை மேவி யார்த்தனன்
அண்டம் பொடிபட"- கந்தபுராணம் - சூரன் வதை 206.

‡ தனி மாகிரி என்பது "தனிச் சயம்" (திருப்புகழ் 958-959 பார்க்க ) தனி-சையம்; சையம்-கிரி, மலை.

§ சுவாமி மலையில் முருகவேள் மிக்க மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கின்றார் என்பது "பெரிதுகந்து ஏரகத்து உறைதலும் உரியன்" என்னும் திருமுருகாற்றுப்படைக் கருத்தைத் தழுவியது.

"ஏரகம் மலை நாட்டகத் தொரு திருப்பதி" என்பது நச்சினார்க்கினியர் உரையிற்கண்டது. அருணகிரியார் அருளிய இத் திருப்புகழ்ப் பாடலால் தான், ஏரகம் சுவாமிமலை என்று தெளிவு பெரும் விளக்கத்தைக் காண்கிறோம்.

(தமது) ஆடையைத் தளர்த்தியும், அரையில் சுற்றியும் உடுப்பவர், காசு பறிக்கவேண்டி (தம்மிடம் வருபவரைப் பல விதத்தில்) தடுத்துச் சேர்பவர்கள், வஞ்சக வித்தைகளைக் கற்று நடிப்பவர் (இத்தகைய விலை மாதர்களின்) உறவு ஆமோ! (ஆகாது என்றபடி)

மாமரம் போன்ற உருவத்துடன் கடலுள் நெருக்கி நின்ற சூரனைச் சங்கரித்து, அவனது மாமிசக் குடலைக் கொடிவாரணம் (கோழிக் கொடி) மகிழும்படி கொடுத்த) (அல்லது காக்கைகளும் கோழிகளும் மகிழும்படி கொடுத்த) வேலாயுதத்தை ஏந்திய குகனே! கதிர்காமம் எனப்படும்.

சிறந்த மலையிலும், பழநிப் பதியிலும். தனிச்சயம் என்னும் தலத்திலும், தணிகை மலையிலும், (திருப்) பரங்குன்றம் என்னும் சிறந்த மலையிலும், கடல் சூழ்ந்து வளைந்துள்ள அலைவாய் என்கின்ற திருச்செந்தூரிலும்,

இன்பந்தரும் ஒளி வீசும் பல மலைகளிலும் (குன்று தோறாடல்களிலும்), நல்ல பதினாலுலகங்களிலும், பொருந்தி யிருக்கின்ற பக்தர்கள் எது நினைத்தாலும் அதை (நினைத்த வரங்களையெல்லாம்) நிரம்பக் கொடுத்தருளும் இளையவனே -

ஏரகமலை யென்று சொல்லப்படும், அற்புதம் நிறைந்த சுவாமிமலை என்னும் ஊரில் பிரியப்பட்டு இருக்கின்ற சித்த மூர்த்தியே! * ராஜத லக்ஷணம் நிறைந்தவளாயுள்ள லட்சுமி (பார்வதி) பெற்றருளிய பெருமாளே!

(தோதக வித்தை படித்து நடிப்பவ ருறவாமோ?)

---

* சத்துவம், இராசதம், தாமதம் எனப்படும் முக் குணத்திலொன்று ராஜதம், அது ஊக்கம், ஞானம், வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வி என்னும் எட்டுக் குணம் உடையது.

## 198. பொது மகளிர் இணக்கம் அற

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன தந்ததான

வார்குழலைச் சொரு கிக்* கரு † விற்குழை
காதொடி ணைத்தசை யக்கதிர் பற்கொடு
வாயிதழ் ‡ பொற்கம லர்க்குமி ழொத்துள துண்டக்ரீவ-

வார்கமு கிற்புய நற்கழை பொற்குவ
டாடிள நிர்ச்சுரர் பொற்குட மொத்திணை
மார்பழ கிற்பொறி முத்தொளிர் சித்திர ரம்பைமாதர்-

காருறும் § வித்திடை யிற்கத லித்தொடை
சேரல்குல் நற்பிர சத்தட முட்கொடு
கால்மறை யத்துவ ளச்செறி பொற்கலை யொண்குலாவக்-

கார்குயி லைக்குர லைக்கொடு நற்றெரு
மீதில்நெ ளித்துந கைத்துந டிப்பவர்
காமனு கப்பம ளிச்சுழல் குத்திரர் சந்தமாமோ!

சூரர் ** பதைக்கர வுட்கிநெ ளித்துய
ராழியி ரைப்பநி ணக்குட லைக்கழு
சூழந ரிக்கெரு டக் †† கொடி பற்பல சங்கமாகச்-

சூழ்கிரி யைக்கைத டித்தும லைத்திகை
யானையு ழற்றிந டுக்கிம தப்பொறி
சோரநகைத்தயி லைக்கொடு விட்டருள் செங்கைவேலா;

---

* கரு-பெரிய

† வில்-பிரகாசம் பொருந்திய

‡ பொற்க - அழகு செய்ய § வித்து - மின்னல்

** பதைக் கரவுட்கி பதைக்க அரவு உட்கி

†† கொடி - நாகம்.

## 198

நீண்ட கூந்தலைச் சொருகி, (அக்கூந்தலைப்) பெரிய, பிரகாசம் பொருந்திய குழை யணிந்துள்ள காதுடன் பொருத்தி அசையும்படி விட்டும், ஒளிவிடும் பற்கள் கொண்டும், வாய் இதழ் அழகு செய்ய, குமிழமலர் போன்றுள்ள மூக்கு (கொண்டும்). கழுத்தாகிய

நீண்ட கமுகு கொண்டும், புஜங்களாகிய பசிய மூங்கில் (அல்லது கரும்பு) கொண்டும், பொன் மலை (மேரு) போன்றும் ஆடும் இளநீர் போன்றும், தேவர் (அமுதைக் கொண்ட) அழகிய குடம் போன்றும் இணைந்துள்ள இரண்டு கொங்கைகள் கொண்டும், மார்பில் அழகான தேமல், முத்துமாலை கொண்டும் விளங்கும் அழகிய ரம்பை போன்ற (விலை) மாதர்கள்-

மேகத்திற் காணப்படும் மின்னல் போன்ற இடையும், வாழை போன்ற துடையும் (அங்குச்) சேர்ந்துள்ள அல்குலாகிய தேன் பொதிந்துள்ள இடமும், உள்ளிருக்கக், கால்வரையும் மறையும்படி தொங்கி நெருங்கும் அழகிய புடைவை நன்கு விளங்க-

கரிய குயிலின் குரல் போன்ற குரலுடன் அழகிய தெருவீதியில் உடலை நெளித்தும், நகை புரிந்தும், நடிப்பவர்கள், மன்மதனும் மகிழும்படி படுக்கையிற் புரளும் வஞ்சகர்கள் - (ஆகிய பொது மகளிரின்) அழகில் ஈடுபடுதல் ஆமோ? (ஆகாது என்றபடி).

சூரர்கள்(அசுரர்கள்) பதைக்கவும், ஆதிசேடன் பயந்து நெளியவும் (உடல் வளையவும்), பெரிய கடல் ஒலிக்கவும், மாமிசக் குடலைக் கழுகுகள் சூழவும், நரி, கருடன், காக்கை இவை பல பல கூட்டமாய் நெருங்க-

வஞ்சனை எண்ணங் கொண்ட (கிரௌஞ்ச) மலையின் ஆற்றலை அழித்து (எட்டுத் திக்கில் உள்ள) மலைகளையும், (திசை) யானைகளையும் (அல்லது கடலையும் திசை யானைகளையும்) அலையுண்ணச் செய்து நடுங்க வைத்து, அவைகளின் மதம் பூண்ட அறிவு குலையும் வண்ணம் நகைத்து, வேல்கொண்டு செலுத்தி அருளின செங்கை வேலனே!

ஏரணி நற்குழ லைக்கக னச்சசி
மோகினி யைப்புணர் *சித்தொரு அற்புத
வேட† மு த ச்சொரு பத்தகு றத்திம ணங்கொள்வோனே-

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி நிற்குமி லக்ஷண
ராஜத லக்ஷண லக்ஷுமி பெற்றருள் தம்பிரானே(4)

## 199. முத்தம் பெற

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான

செகமாயை யுற்றெ னகவாழ்வில் வைத்த
திருமாது கெர்ப்ப முடலூறித்-

தெசமாத முற்றி வடிவாய்நி லத்தில்
திரமாய ளித்த பொருளாகி;

‡ மகவாவி னுச்சி விழியாந நத்தில்
மலைநேர்பு யத்தி லுறவாடி-

மடிமீத டுத்து விளையாடி நித்த
மணிவாயின் $ முத்தி தரவேணும்;

§ முகமாய மிட்ட குறமாதி னுக்கு
முலைமேல ணைக்க வருநீதா-

---

* சித்த ஒரு எனப் பிரிக்க.

† அமுதா சனத்தி குறமடவாள் - திருப் -582 அமிர்துகுறமாது - திருப் -

‡ மகவாவின் - மக அவாவின் $ முத்தி - முத்தம்

பரமாத்மாவைக் குழந்தையாகப் பாவித்து அதன் மீதுள்ள காதலைத் தெரிவிக்கின்ற பாடல்கள் " பிள்ளைத்தமிழ்" என்னும் நூலின் பாற்படும். இந்தப் பாடல் முருகவேளைப் 'பிள்ளை முருகா! முத்தம் தா'என வேண்டும் பிள்ளைத்தமிழ் முத்தப்பருவ இயல்பில் ஆண்டவனைப் பரவினதாகும். (அருணகிரிநாதர் நூலாராய்ச்சி பக்கம் 47, 48 பார்க்க)

§ முக மாயம் - முக அழகில் உண்டாகும் வசீகரம் என்பர். மாயா சக்தியால் முகம் மாறுபட்டதே ஒழிய மூலப் பொருள் மூலப் பொருளே என்க. முருகவேளை 'வாவியில் உதித்த முகமாயக் காரன்' என்றார் (வேளைக்காரன் வகுப்பு)

அழகுள்ள சிறந்த கூந்தலை உடையவளும் விண்ணுலகத்துச் சசி (இந்திராணி) பெற்ற பேரழகியுமாகிய தேவசேனையைக் கூடுதலுற்ற சித்தனே! ஒப்பற்ற அற்புதமான வேடர் குலத்து உதித்த அமுத சொரூபியான குறத்தி வள்ளியைத் (திரு) மணங் கொண்டவனே!

(திரு) ஏரக மலையெனும் அற்புத மிக்க சுவாமி மலைப்பதியில் நின்றருளும் அழகனே 'அல்லது' அழகும், ராஜதகுண லட்சணங்களும் உள்ள லட்சுமியாம் பார்வதி பெற்றருளிய தம்பிரானே!

(குத்திரர் சந்தம் ஆமோ)

# 199

உலக மாயையில் உற்று என் இல்லற வாழ்வில் ஏற்பட்ட அழகிய மனையாளின் கர்ப்பத்தில் உடலில் ஊறி-

பத்து மாதம் நிறைய, வடிவுடன் பூமியில் நன்கு தோன்றிய பொருளாகி (என் மனைவி வயிற்றிற் பிறந்த குழந்தை போல நீ தோன்றி)

(நான் உன்னை) மிகவும் ஆசைப்பெருக்குடன் உச்சிமோந்து களிக்கும்படியும், கண்ணில் ஒற்றிக் களிக்கும்-படியும், முகமொடு முகம் வைத்து களிக்கும்படியும் எனது மலையன்ன புயங்களில் நீ உறவாடி

(என்) மடிமீது அணைந்து விளையாடி, நாள்தோறும் உனது அழகிய திருவாயால் முத்தம் அளித்தருள வேண்டும்.

முக வசீகரங் கொண்ட குறமாது (வள்ளியின்) கொங்கையை அணைய வந்த* நீதிமானே!.

---

* யான் எனது அற்ற அடியார்களிடத்து ஓடிவந்து அவர்களை அணைதலே கடவுளின் பேரருள் நீதி (கடன்). அத்தகைய நிலை வாய்ந்தவள் வள்ளி யாதலின் முருகவேள் தாமே வந்து அணைதல் நீதி(கடனென) எண்ணி வந்து அணைந்தார். "சிறுமிதனை... குறிச்சியிற் சென்று கல்யாணம் முயன்றவனே" (கந்.அலங்.24);'குறமாதுடன் மால் கடனாம் எனவே அணைமார்பா" (திருப்புகழ் 563) எனவருவன காண்க. வள்ளி அநுட்டித்த தருமநெறி 'வள்ளிச் சன்மார்க்கம்' எனப்பட்டது (திருப்புகழ் 317) (அருணகிரிநாதர் நூலாராய்ச்சி பக்கம் 302)

முதுமாம றைக்கு ளொருமாபொ ருட்குள்
* மொழியேயு ரைத்த குருநாதா;

தகையாதெ னக்கு னடிகாண வைத்த
தனியேர கத்தின் முருகோனே-

தருகாவி ரிக்கு வடபாரி சத்தில்
சமர்வேலெ டுத்த பெருமாளே. (5)

## 200. வீடு பெற

தனனா தனத்த தனனா தனத்த
தனனா தனத்த தனதான

மருவே செறித்த குழலார் மயக்கி
மதனா கமத்தின் விரகாலே

மயலே யெழுப்பி யிதழே யருத்த
மலைபோல் முலைக்கு ளுறவாகிப்;

பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாது பட்ச மறவாதே-

பிழையே பொறுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற அருள்வாயே;

குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா-

---

* மொழி - பொருள்; பிரணவச் சொற்பொருள்.

* பழைய சிறந்த வேதத்தில் ஒப்பற்ற பெரும் பொருள்களுக்கு உள்ளே உள்ள (பிரணவப்) பொருளைச் சிவபிராற்கு விளக்கின குருநாதனே!

† தடையொன்று மின்றி அடியேனுக்கு உன் திருவடி தரிசனத்தைத் தந்த ஒப்பற்ற திருவேரகத் தலத்து முருகனே!

‡ (அகத்தியர் கமண்டலம்) தந்த காவிரியாற்றுக்கு (அல்லது - கரையில் மரங்கள் நிறைந்த) காவிரியாற்றுக்கு வடக்குப் பக்கத்தில் போர் வேல் விளங்க நிற்கும் பெருமாளே!

(மணி வாயில் முத்தி தரவேணும்)

## 200

மருக் கொழுந்து ஆகிய வாசனைகள் நிரம்பிய கூந்தலை உடைய மாதர்கள் (என்னை) மயக்கிக், காம சாத்திரத்திற் கூறியுள்ள தந்திர வகைகளாலே-

மோகத்தை எழுப்பித் தமது வாயிதழ் (ஊறலை) ஊட்டுவிக்க அதனால் மலைபோன்ற அவர் தம் கொங்கை-களில் விருப்பங் கொண்டு

மிக்க ஆசை பூண்ட தமியேனை (நீ) நிதமும் பிரியா-மலும், என்மாட்டு அன்பு மறவாமலும்-

(எனது) பிழையைப் பொறுத்து உனது இரண்டு திருவடிகளிலும் பொருந்தியுள்ளதான பெருவாழ்வான பேரின்-பத்தை நான் பற்றுமாறு அருள் புரிவாயாக.

குரு மூர்த்தியாய்ச் சிவபிரானுக்கும் உபதேசம் செய்த குகனே! குறத்தி (வள்ளியின்) மணவாளனே!

---

* இது தல வரவாற்றை விளக்குகின்றது. இதனால் 'குருமலை' எனப் பெயர் வந்தது, முருகவேள் 'தகப்பன் சாமி' ஆயினர் (திருப்புகழ் 1178 ஈற்றடி)

† இது 'அருணகிரியாரின் வரலாறு' கூறும்.

‡ சிவபிரான் அகத்தியர்க்குத் தந்த பொன்னிப் புனல் காவிரி; அதை அவர் குண்டிகையில் நின்றும் கணபதி கவிழ்க்க - காவிரி ஆறாகப் பெருகிற்று. கந்த புராணம் - காவிரி நீங்கு படலம் - 36.

குளிர்கா மிகுத்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபாலார்;

திருவே ரகத்தி லுறைவா யுமைக்கொர்
சிறுவா கரிக்கு மிளையோனே-

திருமால் தனக்கு மருகா வரக்கர்
சிரமே துணித்த பெருமாளே. (6)

## 201. ஞானம் பெற

தனாதனன தானம் தனாதனன தானம்
தனாதனன தானம் தனதான

இராவினிருள் போலும் பராவுகுழ லாலும்
இராமசர மாகும் விழியாலும்-

இராகமொழி யாலும் பொறாத முலை யாலும்
இராதஇடை யாலும் இளைஞோர்நெஞ்;

சராவியிரு போதும் பராவிவிழ வேவந்
தடாதவிலை கூறும் மடவாரன்-

படாமலடி யேனுஞ் சுவாமியடி தேடும்
அநாதிமொழி ஞானந் தருவாயே;

* குராவினிழல் மேவுங் குமாரனென நாளுங்
குலாவியினி தோதன் பினர்வாழ்வே

† குணாலமிடு சூரன் பணாமுடிக டோறுங்
குடாவியிட் வேலங் கெறிவோனே;

---

* திருவிடைக்கழிக் குமரனே "குராமர" நீழலில் இருப்பவர்.

"திருவிடைக் கழியில் திருக் குரா நீழற் கீழ்நின்ற வேலுலாந் தடக்கை வேந்தன்"- திருவிசைப்பா. "கொந்து வார்குர அடியினும்" (திருப்புகழ் 289); "குரவம் உற்ற பொற் றிருவிடைக் கழிப் பெருமாளே"(திருப்புகழ் 798,801, 802)

† குணாலம் - குணாலை; வீராவேசத்தாற் கொக்கரித்தல்.

குளிர்ந்த சோலைகளால் நிறைந்து வளர்ந்தோங்கு கமுக மரங்கள் நிறைந்துள்ள மேற்கிலிருந்து வரும் காவிரி ஆற்றுக்கு வட பக்கத்துள்ள

**திருவேரகம்** என்னும் தலத்தில் உறைபவனே! உமையம்மைக்கு ஒப்பற்ற குழந்தையே! யானை முகக் கணபதிக்குத் தம்பியே!

திருமாலுக்கு மருமகனே! அசுரர்களுடைய சிரங்களை வெட்டி எறிந்த பெருமாளே!

(பெரு வாழ்வு பற்ற அருள்வாயே)

## 201

இரவின் இருட்டுப் போன்றது என்று சொல்லப்படுகின்ற கூந்தலாலும், ராமபிரானது அம்பே இது ஆகும் என்று கூறத்தக்க கண்களாலும்-

இசைநிரம்பிய பேச்சுக்களாலும், (பாரம்) தாங்கமுடியாத கொங்கையாலும், இல்லை என்று சொல்லும்படியாய் (அவ்வளவு நுணுகிய) இடையாலும், இளைஞர்களுடைய நெஞ்சை

அரம் அறுப்பதுபோல அறுத்து, காலை மாலை இரண்டு வேளைகளிலும் (அவர்கள் தம்மைப்) போற்றி விழுமாறு (எதிரே) வந்து, நியாயத்துக்கு மேற்பட்ட விலையைக் கூறுகின்ற விலைமாதர்களுடைய ஆசை-

(என்னைப்) பீடியாது, அடியேனுக்கும் கடவுளின் திருவடியைத் தேடும் தனிப் பொருளான ஞானத்தைத் தருவாயே;

'குராமரத்தின் நீழலில் (திருவிடைக்கழி என்னும் தலத்தில்) வீற்றிருக்கும் குமரனே!' என்று நாள்தோறும் குலவி இன்புற்று ஓதுகின்ற அன்பர்களின் வாழ்வே!

வீராவேசத்தாற் கொக்கரித்த சூரனுடைய பருத்த முடிகள் எல்லாம் தொளைபட்டு வளையுமாறு வேலை அன்று செலுத்தியவனே!

துராலுமிகு தீமுன் பிராதவகை போலுந்
தொடாமல்வினை யோடும் படிநூ றுஞ்

† சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே. (7)

## 202. சதா ஓத

தனாதனன தானம் தனாதனன தானம்
தனாதனன தானம் தனதான

கடாவினிடை வீரங் கெடாமலினி தேறுங்
கடாவினிக ராகுஞ் சமனாருங்-

கடாவிவிடு தூதன் கெடாதவழி போலுங்
கனாவில்விளை யாடுங் கதைபோலும்;

இடாதுபல தேடுங் கிராதர்பொருள் போலிங்
கிராமலுயிர் கோலிங் கிதமாகும்-

இதாமெனிரு போதுஞ் சதாவின்மொழி யாலின்
றியானுமுனை யோதும் படிபாராய்;

விடாதுநட நாளும் பிடாரியுட னாடும்
வியாகரண ஈசன் பெருவாழ்வே-

விகாரமுறு சூரன் ‡ பகாரமுயிர் வாழ்வும்
விநாசமுற வேலங் கெறிவோனே;

தொடாது நெடு தூரந் தடாதுமிக வோடுஞ்
§ சுவாச மதுதானைம் புலனோடுஞ்

சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே. (8)

---

* துரால் - துரும்பு. † சுபானம் - நன்மையாக உட்கொளல்.

‡ பகாரம் - பகரம்; அலங்காரம்

§ 'மூச்சை யுள்ளே ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமற் சாதிக்கும் யோகிகளே' - கந். அலங்.85.

செத்தையானது மிகுந்தெரியும் தீயின் முன்பு இல்லாது (எரிந்து) போமாறு, அணுகமாட்டாது வினை ஓடிப்-போம்படி அதைப், பொடிபடச் செய்யும்-

நன்மையே உட் தோயும் ஞானத் தவசீலர்கள் சேர்ந்துள்ள **சுவாமி மலையில்** வாழும் பெருமாளே!

*(ஞானந் தருவாயே)*

## 202

எருமைக் கடாவின் மீது தனது வீரம் குன்றாமல் இனிதாக ஏறும் கடாப் போன்ற யமனார் -

தூண்டி அனுப்பிய தூதன் தவறாத வழியில் வருவது போல வந்து, கனாவில் விளையாடுகின்ற கதை போலவும்

ஒருவருக்கு ஈயாது பல தேடிச் சேகரிக்கும் கொடியோர்தம் பொருள் போலவும் இங்கு நிலைத்து இருக்க முடியாத வண்ணம் உயிரைக் கவர்ந்து போம் சுகந்தான் -

இது (இவ் வாழ்க்கை) என்று உணர்ந்து, காலை மாலை இரு போதும், எப்போதும் இனிய மொழிகளால் இன்றுயானும் உன்னை ஓதும்படி கண் பார்த்தருளுவாயாக.

விட்டுக் கொடுக்காது நடனத்தை நாளும் காளியுடன் ஆடுகின்ற (நாடக) இலக்கணம் அறிந்த ஈசனார் அளித்த பெரு வாழ்வே (குழந்தையே)!

துர்க்குணம் கொண்ட சூரனுடைய அலங்கார உயிரும் வாழ்வும் அழியும்படி வேலை அன்று செலுத்தியவனே!

தொட முடியாமல் நீண்ட தூரம் தடை படாமல் அதிகமாக ஓடுகின்ற மூச்சையும், ஐம்புலன்களையும் -

நல்ல படி உள்ளே அடக்குகின்ற ஞானதவ சீலர்கள் சேர்கின்ற **சுவாமிமலை** வாழும் பெருமாளே!

*(சதா... உனை ஓதும்படி பாராய்)*

## 203. காட்சிதர; பிறவியற;

*தனனா தனத்த தந்த தனனா தனத்த தந்த*
*தனனா தனத்த தந்த தனதான*

*கடிமா மலர்க்கு ளின்ப முளவேரி கக்கு நண்பு*
*தருமா* கடப்ப மைந்த தொடைமாலை*

*கனமேரு வொத்தி டும்ப னிருமாபு யத்த ணிந்த*
*கருணா கரப்ர சண்ட கதிர்வேலா;*

† *வடிவார் குறத்தி தன்பொ னடிமீது நித்த முந்தண்*
*முடியான துற்று கந்து பணிவோனே-*

‡ *வளவாய்மை சொற்ப்ர பந்த முளகீர னுக்கு கந்து*
*மலர்வாயி லக்க ணங்க ளியல்போதி;*

§ *அடிமோனை சொற்கி ணங்க வுலகாமு வப்ப என்று*
*னருளா †† ல ளிக்கு கந்த பெரியோனே*

*அடியேனு ரைத்த புன்சொ லதுமீது நித்த முந்த*
*ணருளே தழைத்து . கந்து* **வரவேணும்**

---

* முருகவேள் ஆறு திருவுருவுடன் குழந்தைப் பருவத்தில் குளிர்ந்த கடப்ப மரநிழலில் படுத்துறங்கினராதலின் கடப்ப மலர் அவருக்கு மகிழ்ச்சி தருவதாயிற்று. "அறுவராகும் ஒரு பெரு முதல்வன் தன்னைத் தண் தழை பொதுளும் நீபத் தண்ணிழல் ... பள்ளி சேர்த்திக் கண் துயில் செய்வித் தேத்த" - கந்தபுராணம் - திரு அவதாரம் *118* - (நீபம்-கடம்பு)

† இது முருகவேள் 'அடியார்க்கு எளியன்' என்னும் தத்துவத்தை விளக்குகின்றது. 'குறமின் பதசேகரனே!' 'பணியா என வள்ளி பதம் பணியும் தணியா அதி மோக தயாபரனே! - (கந். அநுபூதி *36, 6*)

‡ நக்கீரருக்கு அகத்தியரைக் கொண்டு இலக்கணம் ஓதுவித்ததை, "கீரனுக்கு இலக்கணம் உபதேசித்த திருவிளையாடலிற்" காண்க.

§ 'உலகம் உவப்ப' என்று முருகவேள் அடி எடுத்துக் கொடுத்தது -

"புவியில் நக்கீரரையும்..புகழ்கொண்ட
அருணகிரி நாதரையும் ......... .கவிசொல் என்றே
அடி எடுத்துக் கொடுத்தவன் கனி வாயின்
முத்தம் அருளே" க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ் **

†† அளிக்க உ கந்த எனப் பிரித்துக் கொள்க.

## 203

வாசனை பொருந்திய மலருள் இன்பம் உள்ள தேனைச் சொட்டுகின்றதும், அன்பைப் பெருக்குகின்றதுமான சிறந்த கடம்பால் (கடம்ப மலரால்) அமைக்கப்பட்ட பூமாலையைத்

தங்க மயமான மேருமலை போன்ற பன்னிரு சிறந்த புயங்களில் அணிந்துள்ள கருணாகரனே! கடுமையும் ஒளியுங் கொண்ட வேலனே!

அழகு நிறைந்த குறத்தி (வள்ளி) யின் அழகிய அடிமிசை தினந்தோறும் குளிர்ந்த (உனது) முடியானது பொருந்தும்படி மகிழ்ந்து பணிபவனே!

வளப்பமும் மெய்ம்மையும் வாய்ந்த சொற்கள் அமைந்த நூல்களைப் பாட வல்ல நக்கீரர் (என்னும் புலவருக்கு) உனது மலர் வாயால் இலக்கண நயங்களை ஓதி -

அடி, மோனை சொல்லுக்குப் பொருந்த* 'உலகம் உவப்ப' என்று உனது அருள்வாக்கால் எடுத்து மகிழ்ந்து கூறிய பெரியவனே!

அடியேன் சொல்லுகின்ற இந்தப் புல்லிய (இழிந்த) சொற்கள் மீதும் தினமும் குளிர்ந்த உனது திருவருளைப் பாலித்து மகிழ்ந்து வரவேணும்;

---

* உலகம் என்பது உலகாம் என்றாயிற்று. "உலகம் உவப்ப என்று உன் அருளால் அளிக்க" என்றது. நக்கீரதேவர் முருகக் கடவுளின் அருள் பெறு நிமித்தம், 'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு' என்றெடுத்து அருளிச் செய்த திருமுருகாற்றுப் படையைக் குறித்தது.

செடிநேரு டற்கு டம்பை தனின்மேவி* யுற்றி டிந்த
படிதான லக்க ணிங்க ணுறலாமோ -

திறமாத வர்க்க னிந்து னிருபாத பத்ம முய்ந்த
திருவேர கத்த மர்ந்த பெருமாளே.(9)

## 204. திருவடி பெற

தனனா தனத்த தந்த தனனா தனத்த தந்த
தனனா தனத்த தந்த தனதான

விழியால் மருட்டி நின்று முலைதூ சகற்றி மண்டு
† விரகான லத்த ழுந்த நகையாடி

விலையாக மிக்க செம்பொன் வரவே பரப்பி வஞ்ச
விளையாட லுக்கி சைந்து சிலநாள்மேல்;

மொழியாத சொற்கள் வந்து சிலுகாகி விட்ட தொந்த
முழுமாயை யிற்பி ணங்கள் வசமாகி

முடியாது பொற்ச தங்கை தருகீத வெட்சி துன்று
முதிராத நற்ப தங்கள் தருவாயே;

பொழிகார்மு கிற்கி ணைந்த யமராஜ னுட்க அன்று
‡ பொருதாளெ டுத்த தந்தை மகிழ்வோனே

புருகூத னுட்கு ளிர்ந்த கனகாபு ரிப்ர சண்ட
புனிதா § ம்ரு கக்க ரும்பு புணர்மார்பா;

---

* உற்றிடு - இந்த படி தான் அலக்கண் - எனப் பிரிக்க; உற்று - இடிந்த - படிதான் எனவும் பிரிப்பர்.

† விரக அனலம் - விரகாக்கினி.

‡ தம்மைப் பூசை செய்திருந்த மார்க்கண்டேயரைப் பிடிக்க வந்த கூற்றைச் சிவபிரான் மாளும்படி உதைத்தனர். கந்தபுராணம் மார்க்கண்டேயப் படலம் - பார்க்க.

§ ம்ருகக் கரும்பு - மான்மகளாகிய வள்ளி யம்மை.

பாவச் செயல்களே நிறைந்த இந்த உடல் என்னும் கூட்டிற் பொருந்தி யிருக்கின்ற இந்த வகையிலேயே துன்பங்களை இங்கே நான் அநுபவித்தல் ஆமோ (ஆகாது என்றபடி); உடல் என்னும் முட்டையிற் பொருந்தி இருந்து அது உடைந்து போம் படியான துன்பத்துக்கு இங்கு ஆளாகுதல் ஆமா - என்றுமாம்.

திறம் வாய்ந்த மகா தவசிகள் உள்ளம் கனிந்து உனது இரண்டு பாத தாமரைகளால் உய்திபெற்ற (ஈடேறப்பெற்ற) திருவேரகம் என்னும் தலத்தில் வீற்றிருந்தருளும் பெருமாளே!

(அலக்கண் இங்கண் உறலாமோ)

## 204

கண்ணால் மருட்டி நின்றும், கொங்கை மேல் உள்ள புடைவையை நீக்கியும், மூண்டு எழும் காமாக்கினியில் தம்மைக் கண்டவர் அழுந்தும்படி நகை புரிந்து

விலையாக நிரம்பச் செம்பொன் வரவே (தமது சூழ்ச்சியைப்) பரப்பி, வஞ்சகம் நிறைந்த லீலைகள் செய்வதற்கு ஒருப்பட்டு, சில நாள் சென்றபின்

சொல்லாத சொற்களைச் (சொன்னதாகச்) சொல்லிவந்து, (பின்னர்) சண்டையும் கூச்சலுமாகி ஏற்படுகின்ற பகைமை பூணும் முழு மாயக்காரிகளாகிய பிணங்களாம் பொது மகளிரின் வசத்தில் அகப்பட்டு (நான்)

முடிவுறாமல், (உனது) பொற் சதங்கைகள் (கிண்கிணிகள்) செய்யும் கீதமும், வெட்சி மலரும் சேர்ந்துள்ள என்றும் இளைய உனது நற்பதங்களைத் தந்தருளுக;

பொழிகின்ற கரிய மேகத்தை நிகர்க்கும் யமராஜன் அஞ்சும்படி அன்று போர் வல்ல திருத்தாளை நீட்டிய தந்தையாம் சிவபிரான் மகிழ்ச்சி கொள்ளும் முருகனே !

இந்திரனது உள்ளங் குளிர்ந்த பொன்னுலகைப் (புரந்த) வல்லமை வாய்ந்தவனே! சுத்தனே! மான் ஈன்ற கரும்பன்ன வள்ளியை அணைக்கும் மார்பனே!

செழுவாரி சத்தி லொன்று முதுவேதன் வெட்க அன்று
திருவாய்மை செப்பி நின்ற முருகோனே-

திரளாம ணிக்கு லங்கள் அருணோத யத்தை வென்ற
**திருவேர கத்த** மர்ந்த பெருமாளே! (10)

## 205. ஐக்கிய நிலை பெற

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான

*இருவினை புனைந்து ஞான விழி†முனைதிறந்து நோயி
‡னிருவினை யிடைந்து போக மலமுட-

விருளற விளங்கி யாறு முகமொடு கலந்து § பேத
மிலையென இரண்டு பேரு மழகான;

** பரிமள சுகந்த வீத மயமென மகிழ்ந்து தேவர்
பணியவின் மடந்தை பாத மலர்தூவப்-

பரிவுகொ டநந்த கோடி முநிவர்கள் புகழ்ந்து பாட
**பருமயி லுடன்கு லாவி வரவேணும்;**

அரியய னறிந்தி டாத அடியிணை சிவந்த பாதம்
அடியென விளங்கி யாடு நடராஜன்-

அழலுரு மிரும்பின் மேனி மகிழ்மர கதம்பெ ணாகம்
அயலணி சிவன்பு ராரி யருள்சேயே;

மருவலர் கள்திண்ப ணார முடியுடல் நடுங்க ஆவி
மறலியுண வென்ற வேலை யுடையோனே-

---

* இரு வினை - பெருஞ் செயல்; சிவயோகம்.

† முனை- லலாட நந்திச்சுழி.

‡ இருவினை - புண்ணிய பாவ கன்மங்கள்.

§ "நீயான ஞான வினோதந் தனை என்று நீ யருள்வாய் " ( கந்.அலங். 46) என்னும் கருத்தைத் தழுவும் இவ் வேண்டுகோளைத் திருப்புகழ் 209,220, 238, 1218-ற் பார்க்க.

** பரிமள சுகந்த வீதம் மயமென - மலரும் அதன் மணமும் கலந்திருக்குந் தன்மையதென்று சொல்லும்படி வீதம் மயமென [illegible].

செழுமை வாய்ந்த தாமரையில் வீற்றிருக்கும்† கிழப்-பிரமன் நாணும்படி அன்று நிறைசெல்வப் பேருண்மையைப் (பிரணவப் பொருளைச்) சொல்லி அருளிய முருகனே!

கூட்டமான மணி (ரத்னக்) குவியல்கள் சூரியோதய ஒளியை வென்ற திருவேரகத் தலத்து அமர்ந்த பெருமாளே !

(நற்பதங்கள் தருவாயே)

## 205.

பெருஞ் செயலாகிய சிவ யோக நிலையைப் பூண்டு, ஞானக் கண் முனையைத் திறந்து, நோயாக வரும் புண்ணிய பாவ கன்மங்கள் பின் வாங்கி விலகிப் போக (ஆணவ) மலம் மூடுகின்ற அந்த

அஞ்ஞான இருள் அற்று விலக, (நான்) விளக்கமுற்று (உனது) ஆறுமுகங்களோடு கலந்து (உன்னோடு) பேதம் (வேற்றுமை) இல்லை என்று சொல்லும்படி நீயும் நானும் (இருவரும்) அழகான

மலரும் அதன் மிகுந்த நறுமணமும் கலந்திருக்கும் தன்மை என்று சொல்லும்படி மகிழ்வுற்றுத், தேவர்கள் பணியவும், தேவலோக மங்கையர் திருவடிகளில் மலர் தூவவும்

அன்புடன் எண்ணிலாத கோடிக் கணக்கான முனிவர்-கள் புகழ்ந்து பாடவும், (நீ) பருத்த மயில் மிசை ஏறி விளங்கி-வர வேணும்;

திருமாலும் பிரமனும் அறிந்துணராத அடியிணையாம் சிவந்த பாதங்களை அளவாக வைத்து விளங்க ஆடுகின்ற (*பஞ்ச கிருத்தியங்களுக்கு எல்லாம் ஆதிகாரணமாக விளங்கி ஆடுகின்ற) நடராஜப் பெருமான்,

நெருப்பிலிட்ட இரும்பு போல ஒளி விடும் திருமேனி-யையும், மகிழ்ச்சி கொண்ட பச்சை நிறப் பெண்ணாம் பார்வதியைத் தமது தேகத்திற் பாகமாக அயலில் வைத்துள்ள திருக்கோலத்தையும் உடைய சிவன், திரிபுரங்களின் பகைவனாம் (ஈசன்)- அருளிய குழந்தையே !

பகைவர்களாம் அசுரர்களுடைய வலிய, அலங்கரித்த முத்துக்கள் விளங்கும் கிரீட முடிகளும் உடலும் நடுங்க, அவர்களது உயிரை யமன் உண்ணும்படி வென்ற வேலை உடையவனே!

---

† முழுகும் அருமறை முகத்துப் பாட்டி கொழுநர்- திருப். 446.

* இது கொழும்பு திரு.மு. திருவிளங்கம் அவர்களின் அருமையான உரை.

வளைகுல *மலங்கு காவி ரியின்வட புறஞ்சுவாமி
மலைமிசை விளங்கு தேவர் பெருமாளே.(11)

## 206. ஈயாத லோபியரை அணுகாதிருக்க

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான

கதிரவனெ ழுந்து லாவு திசையளவு கண்டு மோது
கடலளவு கண்டு மாய மருளாலே-

கணபணபு யங்க ராஜன் முடியளவு கண்டு தாள்கள்
கவினறந டந்து தேயும் வகையேபோய்;

இதமிதமி தென்று நாளு மருகருகி ருந்து கூடு
மிடமிடமி தென்று சோர்வு படையாதே

இசையொடுபு கழ்ந்த போது நழுவியப்ர சண்டர் வாச
லிரவுபகல் சென்று வாடி யுழல்வேனோ;

மதுகரமி டைந்து வேரி தருநறவ முண்டு பூக
மலர்வளநி றைந்த பாளை மலருடே

வகைவகையெ ழுந்த சாம வதிமறை § வியந்து பாட
மதி† நிழலி டுஞ்சு வாமி மலைவாழ்வே;

அதிரவரு சண்ட வாயு வெனவருக ருங்க லாப
அணிமயில்வி ரும்பி யேறு மிளையோனே-

‡ அடைவொடுல கங்கள் யாவு முதவிநிலை கண்டபாவை
அருள்புதல்வ அண்ட ராஜர் பெருமாளே. (12)

---

* அலங்குதல், மலங்குதல், அடைதல், மலங்கு - ஒருவகை மீன்.
வியந்து -வியக்க. ‡ நிழ லிடும்- குளிர்ச்சியைத் தரும்.
: தேவி உலகங்களைப் படைத்துக் காத்தலுக்கு -
" பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்த வண்ணம்
காத்தவளே'- அபிராமி அந்தாதி (13) காண்க.
" அதல முதலெழு தலமிவை முறை முறை
அடைய அருளிய பழையவள் - திருப்.

சங்கின் கூட்டங்கள் அசைந்து செல்லும் காவிரி ஆற்றின் வட புறத்தில் விளங்கும் **சுவாமிமலை** மீது விளங்கும் பெருமாளே! தேவர் பெருமாளே!

(பருமயி லுடன் குலாவி வரவேணும்)

## 206.

சூரியன் உதித்துச் செல்லும் திசைகளின் (எல்லை அளவைச் சென்று கண்டும்.) மோதும் திரைகளை உடைய கடலின்(அல்லது சொல்லப் படுகின்ற கடலின்) எல்லை அளவைப் போய்க் கண்டும், உலகமாயை என்னும் மயக்கத்தால்

கூட்டமான படங்களை உடைய பாம்பரசனாகிய ஆதிசேடன் முடி எல்லை அளவைப் போய் (பாதாளம் வரையும் போய்க்) கண்டும், இங்ஙனம் எல்லாம் எங்கெங்கும் அலைந்து, என் அழகுகுலைய நடந்து, (கால்) தேயுமாறு (அங்கங்கே) போய்-

இது நல்ல இடம், இது நல்ல இடம் என்று (நினைத்து) நாள்தோறும் (லோபிகளுடைய சமீபத்திற் சமீபத்தில் அணுகி இருந்து, சேர்ந்து அணுகத் தக்க இடம் இதுதான், இடம் இது தான் என்று (எண்ணி), தளர்ச்சி (சிறிதும்) கொள்ளாமல்

இசைப் பாட்டுக்களாலும் உரையாலும் (அவர்களைப்) புகழ்ந்து நின்றபோது, (மெல்ல) நழுவும் பெரிய பேர் வழிகளாம் (அந்த லோபியர்களின்) வீட்டு வாசலில் இரவும் பகலும் சென்று வாடி நான் திரியலாமா? (திரிய லாகாது என்றபடி)

வண்டுகள் நிறைந்து கூடி வாசனையுள்ள தேனை உண்டு கமுக மரத்தில் பூவின் வளப்பம் உள்ள பாளை மலர்களின் இடையே-

இனம் இனமாக எழுந்து சாமம் என்னும் சிறந்த வேதத்தை (சாம வேதத்தை)- (சாம வேத கானமோ என்று) வியக்கத்தக்க முறையில் பாட (ஒலி செய்ய)- திங்கள் (சந்திரன்) குளிர்ச்சியைத் தரும் **சுவாமிமலையை** வாழ்விடமாகக் கொண்டவனே!

(உலகெலாம்) அதிர்ச்சி கொள்ள வருகின்ற பெருங்காற்றென வரும் நீலக் கலாப அழகு மயிலில் விரும்பி ஏறும் இளையோனே!

முறையாக உலகங்கள் எல்லாவற்றையும், படைத்து அவைதமை (நிலைத்திருக்கக்) காக்கும் பாவை (தேவி) அருளிய புதல்வனே! தேவேந்திரர்களின் பெருமாளே!

(வாடி உழல்வேனோ)

## 207. திருவடி பெற

*தனாதன தனாதன தனாதன தனாதன*
*தனாதனன தானந் தனதானா*

*அவாமரு வினா வசு* தைகாணும டவாரெனு*
*மவார்கனலில் வாழ்வென் றுணராதே-*

*† அராநுக ரவாதையு றுதேரைக திநாடும*
*றிவாகியுள மால்கொண் டதனாலே;*

*‡ சிவாயவெ னுநாமமொ ருகாலுநி னையாததி*
*மிராகரனை வாவென் றருள்வாயே-*

*திரோதம லமாறும டியார்கள ருமாதவர்*
*தியானமுறு* **பாதந் தருவாயே;**

*§ உவாவினி யகானுவி னிலாவும யில்வாகன*
*முலாசமுட னேறுங் கழலோனே-*

---

* வசுதை- பூமி

† 'பாம்பின் வாய்த் தேரை'- சம்பந்தர் தேவாரம் (ஆரூர்)
நஞ்சு புசிதேரை - திருப்.
" பாம்பின் வாய்த் தேரைபோலப் பலபல
நினைக்கின்றேனை"- அப்பர் தேவாரம் (ஒற்றியூர்)

‡ சிவாய - என்பது 'முத்தி பஞ்சாக்ஷரம் ' என்ப. இது தமிழ் வேத மாகிய மூவர் தேவாரங்களுள் மத்தியில் உள்ள அப்பர் தேவாரத்தின் மத்தியுள் உள்ள திருப்பாலைத் துறைப் பதிகத்தின் மத்தியில் உள்ள மந்திரம் என ஆன்றோர் வியப்பர்- (ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம் பக்கம் 3)."அரகரசிவாய என்று தினமும் நினையாமல் = திருப்புகழ் -140 " நானேயோ தவஞ் செய்தேன் 'சிவாய' நம எனப் பெற்றேன்" - திருவாசகம்- திருவேசறவு. "மறவாது 'சிவாய' என்றெண்ணி னார்க்கு இடமா எழில் வானகம் பண்ணினார் " - அப்பர் v 51-6.

§ முருகவேளுக்கு யானையும் மயிலும் வாகனங்களாம்.
"உயர் பிணிமுகம் ஊர்ந்து அமர் உழக்கி" -
பிணிமுகம் - முருகர்க்கு உரித்தாகிய யானை - பரிபாடல் 5.
[illegible]

## 207

ஆசையும் அதனால் வரும் இன்னாவும் (துன்பமும்) உள்ள இந்தப்பூமியிற் காணப்படுகின்ற மாதர்கள் என்கின்ற அவர்களுடன் வாழ்வு நெருப்பில் வாழ்வதை ஒக்கும் என்று உணராமல்-

பாம்பால் உண்ணப்படுகின்ற அந்த வேதனையைக் கொண்ட தேரையின் கதியை அடைகின்ற அறிவைக் கொண்டவனாகி, உள்ளத்தில் ஆசை கொண்ட அக்காரணத்தினாலே-

'சிவாய' என்கின்ற திருநாமத்தை ஒரு போதும் நினையாத (இருளுக்கு இடமானவனை) அஞ்ஞானம் பூண்டவனை (என்னிடம்) வா என்று (அழைத்து) அருள்புரிவாயாக.

(உன்னை) மறத்தல் என்கின்ற குற்றத்தை நீக்குகின்ற அடியார்களும், அருமை வாய்ந்த மகா தவசிகளும் தியானஞ் செய்கின்ற திருவடியைத் தந்தருளுக.

§ (பிணிமுகம் எனப்படும்) யானையையும், இனிய காட்டில் உலவும் மயிலையும் வாகனமாகக் கொண்டு உல்லாசத்துடன் அவை மீது ஏறும் திருவடியை உடையவனே!

---

§ முருகவேள் " தன்னை வழிபடுவாரிடத்து வருங்கால் யானை மேல் வந்து அருள் செய்தல் இயல்பு" - திருமுருகாற்றுப்படை நச்சினார்க்கினியர் உரை- "சிந்தை சந்தொஷித்து ஆளு கொண்டருள வந்து சிந்துரத்து ஏறி"- திருப்புகழ் 598.

மயில்- " கான மயில் மேல் தரித்த பெருமாளே" திருப்புகழ் 790

உவா- இளமை எனப் பொருள் கொண்டு - இளமையும் இனிமையும் கொண்ட மயில் எனவும் பொருள் காணலாம்.

உலாவுத யபாநுச தகோடியு ருவானவொ
ளிவாகுமயில் வேலங் கையிலோனே;

துவாதச புயாசல ஷடாநந வராசிவ
சுதாஎயினர் மானன் புடையோனே-

சுராதிப திமாலய* னுமாலொடு† சலாமிடு
**சுவாமிமலை** வாழும் பெருமாளே. (13)

## 208. ஆண்டருள

தானதன தந்த தானன, தானதன தந்த தானன
தானதன தந்த தானன தனதான

ஆனனமு கந்து தோளொடு தோளிணைக லந்து பாலன
ஆரமுது கண்டு தேனென இதழூறல்-

ஆதரவி னுண்டு வேல்விழி பூசலிட நன்று காணென
ஆனையுர மெங்கு மோதிட அபிராம;

மானனைய மங்கை மார்மடு நாபியில்வி ழுந்து கீடமில்
மாயுமனு வின்ப வாசைய தறவேயுன்-

வாரிஜப தங்கள் நாயடி யேன்முடிபு னைந்து போதக
வாசகம்வ ழங்கி **யாள்வது மொருநாளே;**

ஈனவதி பஞ்ச பாதக தானவர்ப்ர சண்ட சேனைகள்
ஈடழிய வென்று வானவர் குலசேனை-

---

* மால்-ஆசை " மாலொடுந் தொழுவார் வினை வாடுமே" அப்பர் 5-34-9

† சலாம் என்னும் சொல்லாட்சியால் அருணகிரியார் காலத்தில் மகமதிய ஆட்சி பரந்திருந்தது என்பது புலப்படும்.

உலவிவரும் உதய சூரியர்கள் நூறு கோடியருடைய உரு சேர்ந்தது போல ஒளி விடும் அழகையும் கூர்மையையுங் கொண்ட வேலை அங்கையில் ஏந்தியவனே!

பன்னிரண்டு புய மலைகளையும் ஆறு திருமுகங்-களையும் கொண்ட சிரேஷ்டனே ! சிவ குமாரனே! வேடர் குலமானாம் (வள்ளி)யின் அன்பை உடையவனே !

தேவர்களின் அதிபதி (தலைவன்) ஆகிய இந்திரனும், திருமாலும், பிரமனும் காதலுடன் சலாம் செய்து வணங்குகின்ற பெருமாளே! **சுவாமிமலையில்** வாழும் பெருமாளே!

(வா என்றருள்வாயே! பாதந் தருவாயே)

## 208.

( மாதர்களின்) முகத்தைக் கண்டு மகிழ்ந்து தோளோடு தோள்கள் சேரக் கலந்து, பால் (போன்றதும்), நிறை அமுதம், கற்கண்டு, தேன் என்னும் படியானதுமான வாய் இதழ் ஊறலை-

அன்புடன் உண்டு, வேல் போலும் கண்கள் போர்புரிய, நன்று பார் என்னும் படியாக கொங்கை மார்பில் எங்கும் மோத-அழகிய

மான் போன்ற மாதர்களின் மடுப்போன்ற உந்தி (தொப்புள்) குழியில் விழுந்து, புழுப்போல மாயும் (இறந்துபடும்) இம்மனித இன்ப ஆசையானது அற்று ஒழிய உனது-

தாமரைப் பதங்களை அடிநாயேனாகிய (என்) தலையிற் சூட்டி, ஞானோபதேசஞ் செய்து என்னை ஆண்டருளும் ஒரு நாளும் உண்டோ - (அப்படிப் பட்ட நாள் கிடைக்குமா)

இழிவான மிக்க பஞ்சபாதகங்களையும் (கொலை, பொய், களவு, கள்ளுண் , குருநிந்தை என்ற ஐவகைக் கொடுஞ்-செயல்களையும்) செய்து வந்த அசுரர்களுடைய கொடிய சேனைகளின் வலிமை தொலைய வென்று, தேவர்களின் சிறந்த சேனையை (அல்லது தேவர் குலச் சேனையை)-

ஏவல்கொளு மிந்த்ர லோகவ சீகரவ லங்க்ரு தாகர
ராசதம றிந்த கோமள வடிவோனே
சோனைசொரி குன்ற வேடுவர் பேதைபயில் கின்ற ஆறிரு
தோளுடைய கந்த னே* வய லியில்வாழ்வே
சூளிகையு யர்ந்த கோபுர மாளிகைபொ னிஞ்சி சூழ்தரு
**ஸ்வாமிமலை** நின்று லாவிய பெருமாளே. (14)

## 209. ஐக்கிய நிலை பெற

தானான தனதனத் தான தனதன
தானான தனதனத் தான தனதன
தானான தனதனத் தான தனதன தந்ததான

ஆனாத பிருதிவிப் பாச நிகளமும்
மாமாய விருளுமற் றேகி பவமென
வாகாச பரமசிற் சோதி பரையைய டைந்துளாமே
ஆறாறி னதிகமக் க்ராய மநுதினம்
யோகீச ரெவருமெட் டாத பர‡துரி
யாதீத மகளமெப் போது முதயம நந்தமோகம்;
வானாதி சகலவிஸ்த் தார விபவரம்
லோகாதி முடிவுமெய்ப் போத மலரயன்
மாலீச ரெனுமவற் கேது விபுலம சங்கையால்நீள்-
மாளாத தனிசமுற் றாய தரியநி
ராதார முலைவில்சற் சோதி நிருபமு
மாறாத சுகவெளத் தாணு வுடனினி
தென்றுசேர்வேன்;

---

* வயலூர் - திரிசிராப்பள்ளிக்கு அருகில் உள்ள முருகவேள் தலம்.

† தத்துவங்கள் - 36: திருப்புகழ் 157 - கீழ்க்குறிப்பைப் பார்க்க - பக்கம் 365-67.

‡ துரியம் - ஆன்மா உந்திப் பிரதேசத்தில் பிராணனோடு லயித்து நிற்கத் தன்னையே விஷயீகரிக்கும் நான்காம் ஆன்ம நிலை (பிராணன் - தசவாயுக்களுள் சுவாசத்தை நிகழ்விப்பது) துரியம் யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர் நிலை. துரியா தீதம் - மூலாதாரத்தில் ஆன்மா தங்கி அவிச்சை மாத்திரையை விஷயீகரிக்கும் ஐந்தாம் ஆன்ம நிலை என்பர். இதுவே ஆன்மா சிவத் தன்மையமாய் நிற்கும் நிலை

ஏவல் கொண்டு (ஆட்கொண்டு) இந்திரலோகத்தாரின் மனத்தைக் கவர்ந்த வசீகர சக்தி வாய்ந்தவனே! அழகு, அலங்காரத்துக்கு இருப்பிடமானவனே! * ராஜத குணங்களின் தன்மையை உணர்ந்த அழகிய வடிவுள்ளவனே!

கார் மேக (மழை) சொரிகின்ற (வள்ளி) மலை வேடர் மகளாம் வள்ளி அணைந்து விளையாடும் பன்னிரு தோள்களை உடைய கந்தனே! வயலூரில் வாழ்பவனே;

நிலா முற்றங்களும், உயர்ந்த கோபுரங்களும் மாளிகைகளும் அழகிய மதில்களும் சூழ்ந்து விளங்கும் **சுவாமிமலையில்** எழுந்தருளி உலவும் பெருமாளே!

(ஆள்வதும் ஒருநாளே!)

## 209

நீங்குதற் கரிய மண்ணாசை என்கின்ற விலங்கும், மகா மாய அஞ்ஞான இருளும் ஒழிந்து, ஒன்றுபட்ட தன்மை என்று கூறும்படி, ஆகாச பரம அறிவுச் சோதியான பராசக்தியை அடைந்து, நினைப்பை விட்டு

முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேற்பட்டதாய், முற்பட்டதாய், என்றும் யோகீசர் எவரும் எட்டாததான மேலான துரியநிலைக்கு மேற்பட்ட நிலையினதாய், நிஷ்களமாய் (உருவம் இல்லாததாய்), எப்போதும் தோன்றி நிற்பதாய், அளவற்ற வசீகரம் வாய்ந்ததாய் —

வான்முதலான சகல விரிவுள்ள வாழ்வுப் பொருளாய், லோகத்தின் ஆதியாயும் முடிவாயும் நிற்பதாய் உண்மை அறிவாய், (தாமரை) மலரில் வீற்றிருக்கும் பிரமன், மால், ஈசன் என்பவர்க்கு மூல காரணமாய் நிற்கும் பெருமை கொண்டதாய், ஐயம் - அச்சம் இல்லாது நீடித்து —

இறத்தலின்றித் தானே மெய்யாந் தன்மை உற்றதாய், அரியதாய், சார் பொன்றும் இல்லாததாய், அழிவிலாத தாய் நிலையான சோதியாய், ரூபம் அற்றதாய், ஒப்பு (இலாததாய்) மாறுதல் இல்லாததான சுக வெள்ள நிலைப்பொருளாம் சிவத்துடன் இனி (நான்) என்றுசேர்வேன்!

---

* ராஜத குணங்கள் — திருப்புகழ் 107 உரைக் குறிப்பைப் பார்க்க

நானாவி தகருவிச் சேனை வகைவகை
சூழ்போது பிரபலச் சூரர் கொடுநெடு
நாவாய்செல் கடலடைத் தேறி நிலைமைமி லங்கைசாய-

நாலாறு மணிமுடிப் பாவி தனையடு
சீராமன் மருக! மைக் காவில் பரிமள
* நாவீசு வயலியக் கீசர் குமரக டம்பவேலா;

கானாளு மெயினர்தற் சாதி வளர்குற
மானோடு மகிழ்கருத் தாகி மருடரு
காதாடு முனதுகட் பாண மெனதுடை நெஞ்சுபாய்தல்-

காணாது மமதைவிட் டாவி யுயவருள்
பாராயெ னுரைவெகுப் ப்ரீதி யிளையவ
காவேரி வடகரைச் சாமி மலையுறை தம்பிரானே. (15)

## 210. சபையில் இறைவன் வர

தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன தனதான

எந்தத் திகையினு மலையினு முவரியி
னெந்தப் படியினு முகடினு முளபல
எந்தச் சடலமு † முயிரியை பிறவியி னுழலாதே-

இந்தச் சடமுட னுயிர்நிலை பெறநளி
னம்பொற் கழலிணை களில்மரு மலர்கொடு
என்சித் தமுமன முருகிநல் சுருதியின் முறையோடே;

---

* நா - பொலிவு; அயல்.

† உயிரியை பிறவி - எண்பத்து நான்கு லட்சம் வகை என்ப. 'உரை சேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதம்"- சம்பந்தர் தேவாரம் - 1-132-4.

"ஈரிரண்டு தோற்றத் தெழு பிறப்புள் யோனி எண்பான் ஆரவந்த நான்கு நூறாயிரத்துள்.. சென்மித்து உழல"- கந்தர் கலிவெண்பா.

பலவிதமான ஆயுதங்களைக் கொண்டசேனை விதம்-விதமாகச் சூழ்ந்துவர, கீர்த்திபெற்ற வீரர்களுடன்பெரிய கப்பல்கள் செல்கின்ற கடலை அணையிட்டு அடைத்துக் கரையேறி இலங்கையின் நிலைமை (வாழ்வுநிலை) தொலைய —

பத்து மணிமுடிகளைக் கொண்ட பாவியாம் ராவணனைக் கொன்ற ஸ்ரீராம பிரானது மருகனே! இருண்ட சோலையின் நறுமணமும் பொலிவும் மிக்குள்ள (அல்லது பரிமளம் அயலில் வீசுகின்ற) **வயலூரில்** எழுந்தருளியுள்ள **அக்னீசுரர்** என்னும் திருநாமத்தையுடைய சிவபிரானது குமரனே! கடம்பனே! வேலனே!

காட்டை ஆளும் வேடர் சாதியில் வளர்ந்த குறமான் (வள்ளியுடன்) மகிழ்ச்சி பூண்ட கருத்தை உடையவனாகி, "மருட்சியை (மோக மயக்கத்தைத்) தந்து, காது வரைக்கும் எட்டிப் பாயும் உன்னுடைய கண்ணாகிய பாணம் என்னுடைய நெஞ்சுக்குள் பாய்கின்றதை-(நீ)

காணாமலிருக்கின்றாய்! அந்தச் செருக்கைவிட்டு என்னு-டைய ஆவி உய்ய அருள் பாலிப்பாயாக" என்று (வள்ளியிடம்) உரைத்த வெகுப்ரீதி கொண்ட இளையவனே! காவேரி-யாற்றின் வட கரையில் உள்ள **சாமிமலையில்** உறைகின்ற தம்பிரானே!

(சுகவெளத் தாணுவுடன்... என்றுசேர்வேன்)

## 210

எந்தத் திசையினும், மலையினும், கடல் சூழ்ந்த எந்தப் பூமியிலும் (அல்லது கடலினும், எந்தப் பூமியினும்), வீட்டின் உச்சி, மலை உச்சி முதலிய உச்சிகளிலும் வசிக்கின்ற பல வகையான எந்த உடலில் வாழும் உயிர் சேர் பிறப்புக்களிலும் (நான்) உழன்று திரியாமல் —

இந்த உடலில் இருக்கும் பொழுதே (என்) உயிர் நிலைபெறுவதற்காக (உனது) தாமரையன்ன அழகிய அடியிணைகளில் மணமுள்ள மலர் கொண்டு, என்சித்தமும் மனமும் உருகி, சிறந்த வேதங்களிற் சொல்லப்பட்ட வழியே, (உன்னைச்)

சந்தித் தரஹர சிவசிவ சரணென
கும்பிட் டிணையடி யவையென தலைமிசை
தங்கப் புளகித மெழஇரு விழிபுனல் குதிபாயச்-
*சம்பைக் கொடியிடை† விபுதையி னழகுமு
‡னந்தத் திருநட மிடுசர ணழகுற
**சந்தச் சபைதனி லெனதுள முருகவும் வருவாயே;**

தொந்தத் திகுகுட தகுகுட டிமிடிமி
தந்தத் தனதன டுடுடுடு டமடம
துங்கத் திசைமலை யுவரியு மறுகச§ லரிபேரி-
துன்றச் சிலைமணி கலகல கலினென
சிந்தச் சுரர்மல ரயன்மறை புகழ்தர
துன்புற் றவுணர்கள் நமனுல குறவிடு மயில்வேலா;
கந்தச் சடைமுடி கனல்வடி வடலணி
யெந்தைக் குயிரெனு மலைமகள் மரகத
கந்தப் பரிமள தனகிரி யுமையரு ளிளையோனே-
கஞ்சப் பதமிவர் திருமகள் குலமகள்
அம்பொற் கொடியிடை புணரரி மருகநல்
கந்தப் பொழில்திகழ் குருமலை மருவிய
பெருமாளே. (16)

## 211. ஆண்டருள

தனதனன தனதனன தான தந்தனம்
தனதனன தனதனன தான தந்தனம்
தனதனன தனதனன தான தந்தனம் தனதான

ஒருவரையு மொருவரறி யாம லுந்திரிந்
திருவினையி னிடர்கலியொ டாடி நொந்துநொந்
துலையிலிடு மெழுகதென வாடி முன்செய்வஞ்
சனையாலே-

---

* சம்பை - மின்னல்; † விபுதை - தேவதை. இங்குத் தேவசேனை என்றே கொள்ளலாம் - "சம்பைக் கொடியிடை ரம்பைக்கரசி யெனும்பற் றருமகள்" (திருப்புகழ் 585) என வரும் இடத்தைக் காண்க.

‡ (முன் - நந்த - (நந்த-விளங்க) § சல்லரி - பறை(பொது); கைத்தாளம்

சந்தித்தும் "ஹரஹர, சிவசிவ, சரணம்" என்று நான் கும்பிட்டும் வழிபட, (நீ) உன் இணையடிகள் என் தலைமிசை பொருந்த, என் உடல் புளகிதம் கொள்ள, (என்) இரு கண்களிலும் (ஆனந்தக்) கண்ணீர் (அருவி) நீர் போலக் குதித்துப் பாய - (முருகா! நீ)

மின்னற் கொடி போன்ற இடையை உடைய தேவசேனையின் அழகு முன்னே விளங்க, திரு நடம் இடும் உனது திருவடி அழகுடன் பொலிய, இந்த அழகிய சபையில் எனது உள்ளம் உருகவும் வந்தருளுவாயாக.

தொந்தத் திகு குட... டுடுடுடு டம டம என்று உயர்ந்த திசைகளும், மலைகளும், கடல்களும் கலங்கும்படி, சல்லரி, பேரி என்னும் வாத்தியங்கள் —

நெருங்கி ஒலிக்க, முழங்கும் மணி கல கல கலினெனச் சப்திக்க, தேவர்கள் பூமலர் சிந்த, பிரமன் வேதத்தைச் சொல்லிப் புகழத், துன்பம் அடைந்து அசுரர்கள் யமன் உலகை அடையச், செலுத்திய கூரிய வேலாயுதனே!

மணம் பொருந்திய ·சடை முடியையும் நெருப்புப் போன்ற திருவுருவத்தையும், வெற்றியையும் கொண்ட (என் தந்தையாம்) சிவபிரானுக்கு உயிர் போன்ற மலைமகள் பச்சை நிறத்தி, சந்தனமாதிய நறுமணத்த கொங்கைமலைகளை உடையவள் - ஆகிய உமாதேவி அருளிய இளையவனே!

தாமரை என்னும் பீடத்தில் ஏறி அமர்ந்துள்ள திருமகள், குலமகள் அழகிய பொற்கொடி போன்ற இடையை உடையவளாம் இலக்குமி தேவி மணந்துள்ள திருமாலின் மருகனே! நல்ல மணம் வீசும் சோலைகள் விளங்கும் குருமலை எனப்படும் சுவாமி மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சபைதனில் எனதுளம் உருகவும் வருவாயே)

## 211

ஒருவர் போவது ஒருவர்க்குத் தெரியாத வண்ணம் (பொது மகளிர் வீட்டைத் தேடித்) திரிந்து, *நல்வினை தீவினை என்னும் இருவினை காரணமாய்த் துன்பமும் கலக்கமும் (அல்லது தாழ்வு உயர்வுகளை) அடைந்து (மனம்) மிக வேதனைப்பட்டு, நெருப்படுப்பில் இட்ட மெழுகுபோல வாடி, முற்பிறப்பிற் செய்த வஞ்சனைகளின் பயனாக —

---

* இக்கருத்தை " ஒருவரைச் சிறுமனை" என்னும் திருப்புகழ் 672ஆம் பாடலிலும் காணலாம். முற்பிறப்பின் உணர்ச்சி இலாததால்- ஒருவரை [illegible]

ஒளிபெறவெ யெழுபு *மர பாவை துன்றிடுங்
கயிறுவித மெனமருவி யாடி விண்பறிந்
தொளிருமின லுருவதென வோடி யங்கம்வெந்
திடுவேனைக்;

கருதியொரு பரமபொரு ளீது என்றுஎன்
செவியிணையி னருளியுரு வாகி வந்தஎன்
கருவினையொ டருமலமு நீறு கண்டுதண் டருமாமென்-
கருணைபொழி கமலமுகமாறு † மிந்துளந்
தொடைமகுட முடியுமொளிர் நூபு ரஞ்சரண்
கலகலென **மயிலின்மிசை யேறி வந்துகந்**
**தெனையாள்வாய்;**

திரிபுரமு மதனுடலு நீறு கண்டவன்
‡ தருணமழ விடையனட ராஜ னெங்கணுந்
திகழருண கிரிசொருப னாதி யந்தமங் கறியாத-
§சிவயநம நமசிவய கார ணன்சுரந்
** தமுதமதை யருளியெமை யாளு மெந்தைதன்
திருவுருவின் மகிழெனது தாய்ப யந்திடும்
புதல்வோனே;

குருகுகொடி யுடன்மயிலி லேறி மந்தரம்
புவனகிரி சுழலமறை யாயி ரங்களுங்
குமரகுரு வெனவலிய சேட னஞ்சவந் திடுவோனே-

---

* "ஐயா மரப்பாவை ஆடுவதும் சூத்திரிதன்
கைவாசி யோபாவை கற்றதோ - வெய்யவினை
என்னிச்சை யோ அருணை ஈசா படைத்தளிக்கும்
உன்னிச்சை அன்றோ உரை"
- என்னும் அருணகிரி அந்தாதி ஈண்டு உணரற் பாலது.

† இந்துளம் - கடம்பு. ‡ தருணம் - இளமை.

§ ஸ்தூல பஞ்சாட்சரம் - நமசிவாய; சூக்ஷ்ம பஞ்சாட்சரம்-சிவாயநம; காரண பஞ்சாட்சரம் - சிவாயசிவ; முத்தி பஞ்சாட்சரம் - சிவாய- என்பர்.

** சிவபிரானும் அருணகிரியார்க்கு அருளினர் என்பது "எனை அடிமை கொண்ட சுவாமி சதாசிவ கடவுள்" "சடையார் அடியேன் துயர் தீர்ந்திட வெண்தழல் மாபொடி அருள்வோர்"- எனவரும் திருவாக்கால் (திருப்புகழ் 856,568) அறிதலாகும்.

பிரதாபத்துடன் விளங்கி எழுந்து (பொம்மலாட்டத்தில்) மரப்பாவையைக் கட்டியுள்ள கயிறு போலப் பொருந்தி (ஆட்டங்களை) ஆடி, வானத்தில் வெளிப்பட்டு ஒளி வீசும் மின்னலின் உருவு போல ஓடி, (ஈற்றில்) உடல் வெந்து போய் மறைகின்ற என்னையும்

குறிக்கொண்டு கருதி, ஒப்பற்ற பரம்பொருள் இது என்று என் இருசெவியிலும் உபதேசித்து, இம் மனித உரு எடுத்து வந்துள்ள என் பிறப்பு வினையையும், அரிய மும்மலங்களையும், பொடிபடுத்தி, குளிர்ச்சியைத் தருவதும், சிறந்ததும், மேன்மை வாய்ந்ததுமான —

கருணையைப் பொழிகின்ற தாமரை யன்ன உன் முகங்கள் ஆறும், கடப்ப மாலையும் கிரீடம் அணிந்துள்ள திருமுடிகளும், விளங்கும் சிலம்பணிந்த திருவடிகளும் விளங்கக் கல கல என்னும் ஒலியுடன் மயில் மீது ஏறி வந்து, மகிழ்ச்சியுடன் என்னை ஆண்டருள்வாயாக.

திரிபுரங்களையும் மன்மதன் உடலையும் எரித்துச் சாம்பற் பொடியாக்கியவரும் மிக இளமை வாய்ந்த விடை வாகனத்தை உடையவரும், நடன ராஜரும், எவ்விடத்தும் விளங்கும் அருணகிரி சிவந்தமலை (நெருப்பு மலையின்) சொரூபம் கொண்டவரும், தோற்றமும் முடிவும், அந்த அருணகிரியில் திருமாலும் பிரமனும் அறிய முடியாத —

சிவாய நம-நமசிவாய என்னும் ஐந்தெழுத்தின் மூல காரணப் பொருளானவரும் கருணை சுரந்து (ஞான) அமுதத்தைத் தந்தருளி என்னை யாண்டவருமான எந்தை சிவபிரானது திரு உருவத்தில் (இடது பாகத்தில்) இருந்து மகிழும் என் தாய் (உமை யம்மை) அருளிய புதல்வனே!

கோழிக் கொடியுடன் மயில்மீது ஏறி மந்தர மலை முதலாகப் பூமியில் உள்ள (எல்லா) மலைகளும் சுழலவும்; மறை ஆயிரக்கணக்கானவைகளும் (எண்ணிலா வேதங்களும்) "குமர குருவே" என்று ஒலிக்கவும்; வலிய ஆதி சேடன் அஞ்சவும் வருபவனே!

குறமகளி னிடைதுவள பாத செஞ்சிலம்
பொலிய * வொரு சசிமகளொ டேக லந்துதிண்
குருமலையின் மருவுகுரு நாத வும்பர்தம்
பெருமாளே. (17)

## 212. திருவடியை உணர

தனதனன தந்த தானனத்
தனதனன தந்த தானனத்
தனதனன தந்த தானனத் தனதான

கறைபடுமு டம்பி ராதெனக்
கருதுதலொ ழிந்து வாயுவைக்
† கருமவச னங்க ளால்மறித் ‡ தனலூதிக்-

கவலைபடு கின்ற § யோககற்
பனைமருவு சிந்தை போய்விடக்
கலகமிடு மஞ்சும் வேரறச் செயல்மாளக்;

குறைவறநி றைந்த மோனநிர்க்
குணமதுபொ ருந்தி வீடுறக்
குருமலைவி ளங்கு ஞானசற் குருநாதா-

குமரசர ணென்று கூதளப்
புதுமலர்சொ ரிந்து கோமளப்
பதயுகள புண்ட ரீகமுற் றுணர்வேனோ;

சிறைதளைவி ளங்கு பேர் ** முடிப்
புயலுடன டங்க வேபிழைத்
திமையவர்கள் தங்க ளூர்புகச் சமராடித்-

---

* இங்கே 'அவளோடு கலந்ததன்றியும்' என்பதை இசையெச்சமாகக் கொள்ளவேண்டும்.

† கரும வசனம் - ஆகருஷண ஸ்தம்பநாதி மந்திரங்கள். இவை கரும யோகிகள் கொள்வன.

‡ அனலூதல் - வாயுவால் மூலாக்கினியை யெழுப்பல்.

§ அசட்டு யோகத்தை அருணகிரியார் கண்டிக்கும் பிற இடங்கள் - கந்தர் அலங்காரம்-85 "காட்டிற் குறத்தி.... யோகிகளே"; திருப்புகழ் 497- "அசட்டு யோகி ஆகாமல்"; 1047- " அருள்பெறா அனாசார கருமயோகி ஆகாமல்."

** முடிப் புயல் - இந்திரன்

குறமகள் (வள்ளியின்) இடை துவளவும் அவள் பாதத்தில் அணிந்துள்ள செம்மை வாய்ந்த சிலம்பு ஒலிக்கவும் அவளோடு (கலந்த தன்றியும்) ஒப்பற்ற இந்திராணியின் மகளாம் தேவ சேனையுடனும் கலந்து திண்ணிய குருமலை (சாமி மலை)யில் வீற்றிருக்கின்ற குருநாதனே! தேவர் தம் பெருமாளே!

*(மயிலின் மிசை ஏறி வந்துகந்து எனை ஆள்வாய்)*

## 212

குற்றங்களுக்கு இடமாம் இவ்வுடம்பு நிலைத்து நிற்காது என்று எண்ணுதலைவிட்டு, உடம்பை நிலைத்து நிற்கும்படி செய்ய விரும்பி வாயுவை (ஆகருஷண ஸ்தம்பநாதி) தொழில் மந்திரங்களால் தடைசெய்து, (அந்த) வாயுவால் மூலாக்கினி-யை எழுப்பிக் —

கவலைக்கு இடந்தருகின்ற யோக மார்க்கப் பயிற்சிகளைப் பற்றி எண்ணுகின்ற சிந்தை (எண்ணுகின்ற சிந்தனைகள் எல்லாம்) தொலையவும், கலக்கத்தைத் தரும் ஐம்புலன்களும் ஒடுங்கி வேரற்றுப் போகவும், (என்) செயல்கள் யாவும் ஓய்வுற்று அழியவும்

குறைவின்றி நிறைந்ததான *மவுன நிலையை, குணங்-களற்ற நிலையை (நான்) அடைந்து, வீட்டின்பத்தை அடைந்து (உய்தி பெறவும்) குருமலையில் (சாமிமலையில்) விளங்கி வீற்றிருக்கும் ஞான சற்குரு நாதனே!

குமர சரணம் என்று கூறிக் கூதளச்செடியின் புது மலரைச் சொரிந்து (உனது) அழகிய இரண்டு திருவடித் தாமரைகளைச் சார்ந்து (சிந்தித்து) (உன்னை) உணர்வேனோ!

சிறையும் விலங்குமாய்க் கிடந்து விளங்கின பேர்களாகிய தேவர்கள், இந்திரன் முதலான யாவரும் பிழைக்கவும், தேவர்கள் தங்கள் ஊர் (பொன்னுலகிற்) குடிபுகவும் - போரைப் புரிந்து,

---

* அருணகிரியார் மோனநிர்க்குண நிலையை அடைய விரும்பு வதைத் திருப்புகழில் 'சட்ட வாக்கழிவ தொரு நாளே' *(264)*, 'மநோலய சமாதி யநுபூதி பெற நினைவாயே' *(352)* மனோலயம் என்று சேர்வேன் *(506)*, மவுன சிவ சுக சலதியில் முழுகுவ தொரு நாளே *(512)*, மோனமெய் ஞா(னா) நந்தம் உற்றிடு இன்பமுத்தி யொன்று தந்திடாயோ*(610)*, மவுன எல்லை குறிப்பதொன்று புகல்வாயே *(660)* 'எனதுயிர் மவுன பரம

*(பக்கம் 43- பார்க்க.)*

திமிரமிகு சிந்து வாய்விடச்
சிகரிகளும் வெந்து நீறெழத்
திகிரிகொள *நந்த சூடிகைத் திருமாலும்;

பிறைமவுலி மைந்த †கோவெனப்
‡பிரமனைமு னிந்து காவலிட்
டொருநொடியில் மண்டு சூரனைப் பொருதேறிப்

பெருகுமத கும்ப §லாளிதக்
கரியெனப்ர சண்ட வாரணப்
பிடிதனைம ணந்த சேவகப் பெருமாளே. (18)

## 213. மோன முத்தி பெற

தானனத் தனந்த தனதான

**காமியத் தழுந்தி யிளையாதே

காலர்கைப் படிந்து மடியாதே

††ஓமெழுத்தி லன்பு மிகவூறி-

---

* அனந்தம் - பொன்.

† 'கோ' இரங்கற் குறிப்பு: அகோ - ஆச்சரியம், துக்கம் இவற்றை உணர்த்தும்.

‡ "படைப்போன் அகந்தை உரைப்ப, மறையாதி எழுத்தொன் றுகந்த பிரணவத்தின் உண்மை புகன் றிலையாற் சிட்டித் தொழிலதனைச் செய்வ தெங்ஙன் என்று முனங் குட்டிச்சிறை யிருத்துங் கோமானே!"- கந்தர் கலி வெண்பா. " நான்மறை விதியை நடுங்கு சிறை வைத்து" - கல்லாடம்.

§ லாளிதம் - லளிதம், அழகு.

** ' காமியஞ் செய்து காலங் கழியாதே'- அப்பர் V-22-8.
'காம வினை யகற்றி'- சம்பந்தர் I-50-1.

†† 'ஓம்' எழுத்தின் சிறப்பு :- 'ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே'- திருமந்திரம் 2676.

இருள் மிக்க கடல் ஒலிட, மலைகள் வெந்து பொடியாகச் சக்கரத்தை ஏந்தியவரும் பொன் முடியைத் தரித்தவருமான திருமாலும்

'சந்திரனை முடியிற் சூடிய சிவன் மைந்தனே, சூரனை அழித்தருளுக' எனத் துக்கத்துடன் இரங்கி வேண்ட (ஆணவத்துடன் தன்னை வணங்காமலும், பிரணவத்துக்குப் பொருள் கூற மாட்டாதும் நின்ற) பிரமனைக் கோபித்துச் சிறையில் வைத்து, ஒரு நொடிப் பொழுதில் நெருங்கி எதிர்த்த சூரனுடன் பொருது ஜெயித்து —

பெருகி வரும் மதநீருள்ள மத்தகத்தையும் அழகையும் கொண்ட யானை எனப்படும் வீரங் கொண்ட ஐராவதம் என்னும் வெள்ளை யானையால் போற்றி வளர்க்கப்பட்ட (பெண்யானையன்ன நடையைக் கொண்ட) தேவசேனையை மணந்த, பராக்ரமம் வாய்ந்த பெருமாளே!

(பதயுகளம்... உற்று உணர்வேனோ)

## 213

ஆசைப்படும் பொருள்களில் அழுந்தி ஈடுபட்டு மெலியாமல் —

கால தூதர்களின் கையிற் சிக்கி இறந்து போகாமல்-

ஓம் என்னும் பிரணவப் பொருளில் அன்பு மிகவும் ஊறி —

---

சுகோம கோததி படியாதோ (795). 'மவுன பஞ்சர மனோலய சுகந்தருவாயே' (1110) எனவரும் இடங்களிலும், "மௌனத்தை யுற்று நின்னையுணர்ந்து ணர்ந்து எல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு என்னை மறந்திருந்தேன்" எனவரும் (19) கந்தரலங்காரத்திலும் காண்க.

* ஓவியத்தி லந்த மருள்வாயே;

தூமமெய்க் கணிந்த சுகலீலா-

சூரனைக் கடிந்த கதிர்வேலா

† ஏமவெற் புயர்ந்த மயில்வீரா-

ஏரகத் தமர்ந்த பெருமாளே. (19)

## 214. சகல யோக வாழ்வு பெற

தனதனன தான தத்த, தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான

சரணகம லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத-

சடகசட மூட மட்டி பவவினையி லேச னித்த
தமியன்மிடி யால்ம யக்க முறுவேனோ;

கருணைபுரி யாதி ருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே-

கடகபுய மீதி ரத்ந மணியணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்க டப்ப மணிவோனே;

---

* 'பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே' -(1459).
'ஓவிய மான உணர்வை அறிமின்கள்' (751).

எனவரும் திருமந்திரச் செய்யுள்கள் ஈண்டு உணரற்பாலன.

† ஏமவெற்பு - மேருமலை அல்லது கநககிரி எனினுமாம்.

1. பொன்மலை போன்ற உயர்ந்த திருமேனியை யுடைய மயில் வீரனே. 2. பொன்மலைபோன்ற உயர்ந்த (தோள்களை யுடைய) மயில் வீரனே 3. இன்பமான குன்றுகள் தோறும் ஆடல் செய்யும் உயர்ந்த மயில் வீரனே. 4. கனககிரிவாழ் உயர்ந்த மயில் வீரனே. 5. மேருமலையில் வீற்றிருப்பவனே. 6. ஏம கூடம் முதலிய அட்டகுலமலைகட்கும் மேலாகப் பறந்து திரியும் மயில் ஏறும்வீரனே.

(நான்) சித்திரம் போன்ற (மோனநிலை) முடிவை (மோனநிலை ஞான உணர்வை) (அடைய) அருள்வாயே.

நறும்புகை மணம் ஆதிய மணங்களை உடலில் அணிந்துள்ள சுகலீலைப் பெருமானே!

சூரனைச் சங்கரித்த ஒளி வேலனே!

பொன்மலை போலச் சிறந்தோங்கும் மயிலில் ஏறும் வீரனே!

(திரு) வேரகம் என்னும் சுவாமி மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(ஓவியத்தில் அந்தம் அருள்வாயே)

## 214

உனது தாமரையன்ன திருவடிக் கோயிலை அரை நிமிஷ அளவுக்காவது தவ நிலைத் தியானத்தில் வைக்க அறியாத-

பொய்யும் குற்றமும் கொண்ட மூடன், மட்டி, பிறப்பதே தொழிலாகக் கொண்டு (அல்லது பாபவினையின் பயனாகப்) பிறந்துள்ள தமியேன் - வறுமையால் மயக்கம் அடையலாமா! (அடைதல் நன்றோ!) (நீ)

கருணை புரியாமல் இருப்பதற்குக் (காரணம் என் மாட்டு) யாது குறையைக் கண்டு? இப்பொழுது சொல்லி அருள வேண்டும்! கயிலைமலை நாதராம் சிவன் பெற்ற குமரனே!

வீர கங்கணம் அணிந்த திருப்புயத்தின் மேலே, ரத்னா பரணம், பொன்மாலை, வெட்சிமாலை, மணம் வீசும் வாசனை நிறைந்த கடப்பமாலை இவைகளை அணிந்தவனே!

* தருணமிதை யாமி குத்த கனமதுறு நீள்ச வுக்ய
சகல செல்வ யோக மிக்க பெருவாழ்வு-
தகைமைசிவ ஞான முத்தி **பரகதியு நீ கொடுத்து**
**தவிபுரிய வேணு** நெய்த்த வடிவேலா;
அருணதள பாத பத்ம மதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தான ளித்த மயில்வீரா-
அதிசயம நேக முற்ற பழநிமலை மீது தித்த
அழகதிரு **வேரகத்தின்** முருகோனே. (20)

## 215. பிறப்பு இறப்பு அற

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தத்ததன தத்ததன தந்ததான

† சுத்தியந ரப்புடனெ லுப்புறுத சைக்குடலொ
டப்புடனி ணச்சளிவ லிப்புடனி ரத்தகுகை
சுக்கிலம்வி ளைப்புழுவொ டக்கையும ழுக்குமயிர்
சங்குழளை-
துக்கம்விளை வித்தபிணை யற்கறைமு னைப்பெருகு
குட்டமொடு விப்புருதி புற்றெழுதல் முட்டுவலி
துச்சிபிள வைப்பொருமல் பித்தமொடு றக்கமிக
வங்கமுடே;
எத்தனைநி னைப்பையும்வி ளைப்பையும யக்கமுற
லெத்தனைச லிப்பொடுக லிப்பையுமி டற்பெருமை
எத்தனைக சத்தையும லத்தையும டைத்தகுடில்
பஞ்சபூதம்
எத்தனைகு லுக்கையுமி னுக்கையும னக்கவலை
யெத்தனைக வட்டையுந டக்கையுமு யிர்க்குழுமல்
**எத்தனைபி றப்பையுமி றப்பையுமெ டுத்துலகில்**
**மங்குவேனோ;**

---

* தருண மிதையா - தருணம் இது ஐயா.

† சுத்திய - இது சுற்றிய என்பதன் மரூஉ.

தக்க சமயம் இது ஐயா! மிக்க பெருமையைத் தரும் நீடித்த சுகம், எல்லாவித செல்வம், அதிருஷ்டம் நிறைந்த பெருவாழ்வு —

நன்மதிப்பு, சிவஞானம், முத்தியாம் மேலான கதி, (இவை தமை) நீ கொடுத்து உதவி புரிய வேண்டுகின்றேன்! பளபளப்புள்ள (அல்லது நெய்பூசிய) கூரிய வேலனே! (உனது)

சிவந்த பத்மதள பாதத்தை (தாமரை இதழ் போன்ற பாதத்தை)த் தினந்தோறும் துதிப்பதற்கு (அடியேனுக்கு) அருமையான தமிழ் (ஞானத்தைத்) தந்த மயில் வீரனே!

அதிசயக் கோலங்கள் பலநிறைந்த பழநிமலை மீது விளங்கித் தோன்றும் அழகனே! **திருவேரகத்து** (சுவாமி மலை) முருகனே!

(பரகதியும் நீ கொடுத்து உதவி புரியவேணும்)

## 215

சுற்றப்பட்டுள்ள நரம்புகள், எலும்புகளைப் பொருத்தும் மாமிசம், குடல், நீர், கொழுப்பு, (மூக்குச்) சளி, இழுப்பு நோய், இரத்தம் சேரும் இடம் (இரத்தாசயம்), இந்திரியம், விளைகின்ற புழுக்கள் (கிருமிகள்), எலும்புகள், அழுக்குகள், மயிர், சங்குபோல வெளுத்த மூளை-

துக்கத்தை விளைவிக்கின்ற சேர்க்கை (நோய்), மாத விடாய் முதலிய மாசு, அவயவ நுனிகளில் விருத்தியாகும் குட்ட நோய், சிலந்தி (கிரந்திப்புண்), புற்றுவைத்தல், (புண் புரை வைத்தல்), சூதகவலி, (சதையைப்) புசிக்கின்ற (ராஜ) கட்டிப்புண், வயிறு வாயுவினால் உப்புகின்ற நோய், பித்தம், தூக்கம், மிகுந்துவர சரீரத்தினுள்ளே

எத்தனை எண்ணங்கள், செய்கைகள், மயக்கங்கள், எத்தனை வெறுப்பு, எத்தனை பொலிவு (மகிழ்ச்சி), (எத்தனை) வலிமைப்பெருமை, எத்தனை க்ஷய நோய், மலம் அடைத்-துள்ள குடிசை; பஞ்ச பூதத்தாலாய குடிசை.

எத்தனை குலுக்கு, மினுக்கு, மனக்கவலை, எத்தனை கபடம் (வஞ்சனை), நடவடிக்கை, உயிரின் சேர்க்கை, எத்தனை பிறப்பு இறப்பு - எடுத்து (நான்) உலகில் வாட்ட முற்று அழிவேனோ!

*தத்தனத னத்தனத னத்தனவெ னத்திமிலை*
*யொத்தமுர சத்துடியி டக்கைமுழ வுப்பறைகள்*
*சத்தமறை யத்தொகுதி யொத்தசெனி ரத்தவெள*
*மண்டியோடச்-*

*சக்கிரிநெ ளிப்பஅவு ணப்பிணமி தப்பமரர்*
*கைத்தலம்வி ரித்தரஹ ரச்சிவபி ழைத்தொமென*
*சக்கிரகி ரிச்சுவர்கள் அக்கணமெ பக்குவிட*
*வென்றவேலா;*

** சித்தமதி லெத்தனைசெ கத்தலம்வி தித்துடன*
*ழித்துகம லத்தனைம ணிக்குடுமி பற்றிமலர்*
*சித்திரக ரத்தலம்வ லிப்பபல குட்டிநட*
*னங்கொள்வேளே-*

*† செட்டிவடி வைக்கொடுதி னைப்புனம திற்சிறுகு*
*றப்பெணம ளிக்குள்மகிழ் செட்டிகுரு வெற்பிலுறை*
*சிற்பரம ருக்கொருகு ருக்களென முத்தர்புகழ்*
*தம்பிரானே.* (21)

## 216. காமம் அற

*தானதன தந்த தத்த தானதன தந்த தத்த*
*தானதன தந்த தத்த தனதான*

*சேலுமயி லுந்த ரித்த வாளையட ருங்க டைக்கண்*
*மாதரைவ சம்ப டைத்த வசமாகிச்-*

---

* பிரமனைச் சிறையிலிட்டு முருகவேள் தாமே சிருஷ்டித் தொழிலை நடத்தினர்-

"கந்தமால் வரைதனில் ஏகிப் பல்லுயிர்த் தொகை படைப்பது நினைத்தனன் பரிவால்... ஆதியாய் வைகிய செவ்வேள் அயனெனப் படைக்கின்றதும் அற்புதம் ஆமோ"- கந்த புராணம்..I-16-18

† செட்டி வடிவுடன் வள்ளியிடம் சென்றதை-

"பட்டி வள்ளி கை வளையல் ஏற்றி, இரு காலில் வளைந்தேற்றி, மை வளைவு நெஞ்ச மய லேற்றி - வெய்ய இருட்டு விடியாமுன் இனத்தவர் காணாமல் திருட்டு வியாபாரஞ் செய் செட்டி... மூவர் வணங்கு முருகப்ப செட்டி, பாவனைக்கும் அப்பாலுக் கப்பாலாம் ஆறுமுக செட்டி யிவன்" எனவரும் தணிகை உலாவிற்காண்க. செட்டி முருகவேளுக்கு ஒரு பெயர். கடற் சூர் தடிந்திட்ட செட்டி யப்பனை"- சுந்தரர் - திருவாரூர் - VII-59-10

தத்தன தனத்தன தனத்தன என்று பறைகள் ஒலிக்க, முரசு (ஒரு வகைப் பறை), துடி (உடுக்கை), இடக்கை (இடக்கையாற் கொட்டும் ஒரு தோற்கருவி), முழவுப் பறைகள் (தம்பட்டம் பறைகள்) இவைகள் சத்தம் அறைய (பேரொலி செய்யவும்), கூட்டமாய் வருவதை ஒத்துச் செனித்து (தோன்றி)ரத்த வெள்ளம் நிரம்பி ஓட —

பாம்பு (ஆதிசேடன்) நெளிய, அசுரர் பிணங்கள் மிதப்ப தேவர்கள் தம் கைகளைத் தூக்கி "ஹர ஹர! சிவ! பிழைத்தோம்" என்று முழங்க, சக்ரவாளகிரியின் சுவர்களும் அந்த க்ஷணமே பிளவுபட வென்ற வேலனே!

உனது திருவுள்ளத்தில் (நினைத்த மாத்திரையில்) எத்தனை உலகங்களைப் படைத்து உடனே அழித்து, (நடங்கொள்வேளே)! பிரமனது அழகிய குடுமியைப் பிடித்து உனது மலர் போன்ற அழகிய திருக்கரம் வருந்த பலமுறை (அவனைக்) குட்டி நடனம் கொண்ட வேளே!

செட்டி வேடம் பூண்டு தினைப்புனத்தில் சிறிய குறப்பெண் வள்ளியின் படுக்கையில் மகிழ்ந்த செட்டியே! குருமலை (சுவாமி மலையில்) வீற்றிருக்கும் ஞானமயச் சிவபிரானுக்கு ஒப்பற்ற குருமூர்த்தி என்று முத்திநிலை பெற்ற பெரியோர் புகழ்கின்ற தம்பிரானே!

(பிறப்பையும் இறப்பையும் எடுத்து உலகில் மங்குவேனோ)

## 216

சேல் மீன்,வேல் இவை போன்றதும், வாளாயுதத்தைத் தாக்கி வருத்த வல்லதுமான கடைக் கண்ணை உடைய மாதருடைய வசத்திற்பட்ட ஆளாகி —

சீலமறை யும்ப ணத்தி லாசையிலை யென்ற வத்தை
காலமுமு டன்கி டக்கு மவர்போலே;

காலுமயி ரும்பி டித்து மேவுசிலு கும்பி ணக்கு
நாளுமிக நின்ற லைத்த விதமாய-

காமகல கம்பி ணித்ததோதகமெ னுந்து வக்கி
லேயடிமை யுங்க லக்க முறலாமோ-

ஏலமில வங்க வர்க்க நாகம்வ குளம்ப டப்பை
பூகமரு தந்த ழைத்த கரவீரம்-

யாவுமலை கொண்டு கைத்த* காவிரிபு றம்புசுற்றும்
ஏரகம மர்ந்த பச்சை மயில்வீரா;

சோலைமடல் கொண்டு † சக்ர மால்வரைய ரிந்த வஜ்ர
பாணியர்தொ ழுந்தி ருக்கை வடிவேலா-

‡ சூர்முதிர்க்ர வுஞ்ச வெற்பும் வேலைநில மும்ப கைத்த
சூரனுட லுந்து ணித்த பெருமாளே. (22)

---

$ அவத்தை காலமும் - நித்திரைப்போதும்.

* காவிரி இங்ஙனம் பல பொருள்களை அடித்து வருதலை

" இலவஞாழலும் ஈஞ்சொடு சுரபுன்னை இளமரு
திலவங்கம் கலவி நீர்வரு காவிரி"

என வரும் சம்பந்தர் திருமாந்துறைப் பதிகப் பாடல்களிற் பரக்கக் காணலாம் (II-*110*)

"ஏலமோ டிலையிலவங்கமே இஞ்சியே மஞ்சளுந்தி ஆலியா
வருபுனல்" சம்பந்தர் (III-*91-8*)

† **இந்திரன் மலைகளின் சிறகரிந்த வரலாறு:-**

முன்பு ஒரு காலத்தில் மலைகளெல்லாம் பறவைகள் போல இறகு உடையவனவாயிருந்து, எங்கும் பரந்து, தங்கி, உயிர்களுக்குத் தீங்கு செய்ததனால், இந்திரன் கோபித்துத் தனது வஜ்ராயுதத்தால் மலைகளின் இறகுகளை அறுத்துத் தள்ளினான்.

" திசைக் கிரியை முதற் குலிசன் அறுத்த சிறை" (வேல் வகுப்பு). 'கிரி முற்றும் அரிவ தொரு கிளர் வச்ர னென" (வில்லிபாரதம் -12 ஆம் போர்-57) " கிரியின் சிறகையரி படையாய்" (வில்லி-கிருட். தூது 232)

‡ சூர் - அச்சம்.

"நல்லொழுக்கத்தை மறைக்கும் பணம், (ஆதலால்) பணத்தில் ஆசையில்லை" என்று சொல்லி நித்திரை செய்யும் போதும் கூடப்படுத்துக் கிடக்கும் அன்புடையவர் போல நடித்து —

(முதலிற்) காலையும் (பின்னர் குடுமி) மயிரையும் பிடித்துச் சண்டையும் ஊடலும் நாளுக்கு நாள் அதிகப்படுமாறு ஒழுகி வருத்துகின்ற வகைக்கு வந்து சேரும் —

(மாதர் தம்) காம கலகத்திற் சிக்குதலால் ஏற்படும் வருத்தமாகிய ஒரு தொடர்பில் (உன் அடிமையாகிய நானும் கலக்கம் அடையலாமா! (அடையலாகாது என்றபடி.)

ஏலம், இலவங்கம்(கிராம்பு) வகை, சுரபுன்னை, மகிழமரம், தோட்டங்கள், கமுக மரம், மருதமரம், செழிப்புள்ள அலரி (இவை)

யாவையும் தனது அலையில் அடித்துத் தள்ளி வருகின்ற காவிரி (அயலிலே) வெளிப்புறத்தே சூழ்ந்து செல்லும் திரு **ஏரகம்** (சாமிமலை) என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பச்சை மயில் வீரனே!

(பூஞ்) சோலையில் உள்ள பூ இதழால், சக்ரவாள கிரி ஆகிய பெரிய மலைகளின் (சிறகுகளை) அரிந்த குலிசாயுதம் கொண்ட கரத்தனாம் இந்திரன், வணங்கும் திருக்கை வடிவேலனே!

அச்சத்தை நிரம்பத் தரும் கிரவுஞ்ச மலையையும் கடலிடத்தையும், பகைத்து வந்த சூரன் உடலையும் அழித்த பெருமாளே!

(காம ... துவக்கிலே அடிமையும் கலக்கம் உறலாமோ)

## 217. லோபியரைப் பாடாது இறைவனை நாட

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான

தருவரிவ ராகு மென்று பொருணசையி னாடி * வண்டு
தனைவிடுசொல் தூது தண்ட முதலான-

சரசகவி மாலை சிந்து கலிதுறைக ளேச லின்ப
தருமுதல தான செஞ்சொல் வகைபாடி-

மருவுகையு மோதி நொந்து அடிகள் முடியேதெ ரிந்து
வரினுமிவர் † வீத மெங்க ளிடமாக-

வருமதுவொ போது மென்று வொருபணமு தாசி னஞ்சொல்
மடையரிட மேநடந்து மனம்வேறாய்;

உருகிமிக வாக வெந்து கவிதை சொலி யேதி ரிந்து
உழல்வதுவு மேத விர்ந்து விடவே நல்-

உபயபத ‡ மால்வி ளங்கி யிகபரமு மேவ இன்ப
முதவியெனை யாள அன்பு தருவாயே;

§ குருகினொடு நாரை யன்றில் இரைகளது நாடி டங்கள்
குதிகொளிள வாளை கண்டு பயமாகக்-

---

* **வண்டு விடு தூது** - வண்டைத் தூதாக அனுப்பித் தன் கருத்தைத் தெரிவிக்க வேண்டியவரிடத்திற் சொல்லச் சொல்லும் நூல்வகை. அன்னம், மயில், கிளி, மேகம், பூவை, பாங்கி (தோழி,) குயில், நெஞ்சு, தென்றல், வண்டு - இவை பத்தும் தூதுக்கு உரிய பொருள்களாம். உதாரணம்:-

கச்சி ஆனந்தருத்ரேசர் வண்டு விடு தூது; தண்டம் - தண்டகம்; தண்டகம் - ஒரு வகை ஆரியச் செய்யுள் - உதாரணம் - சியாமளா தண்டகம்; சிந்து - இசைப்பாவகை - உதாரணம் - காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து; ஏசல் - ஏசிக் கூறும் பாட்டு வகை. (உதாரணம் - அரங்கேசர் ஏசல்)

(53 பக்கம் பார்க்க)

## 217

தருவார் இவர் தாம் என்று பொருளாசையினால் ஒருவரை விரும்பித் தேடி, வண்டு விடுதூது, தண்டகம் முதலான

இனிமையான கவிமாலைகள், சிந்து, கலித்துறைகள், ஏசல், இன்பமான தரு முதலான செஞ்சொற் (பா) வகைகளை (அவர்மேற்) பாடி —

(அடிக்கடி) வந்து போதலையும் சொல்லித் தெரிவித்து, மனம் நொந்து, அவருடை அடி முதல் முடி வரையும் (முழு வரலாற்றையும்) தெரிந்து (புகழ்ந்து) வந்தாலும், (அவர்) அமைதியாக- (தம்மிடம் வரும்) எங்களிடத்தில் (எங்களைப் பார்த்து)

(நீங்கள்) "வருவது போதும்" என்று கூறி ஒரு பணம் (தருதற்குக் கூட) அலட்சிய வார்த்தை பேசுவார்கள், (அத்தகைய) மடையரிடம் (நான்) நடந்து மனம் (உடைந்து) வேறுபட்டு —

உருகி, மிகவும் வெந்து, (இங்ஙனம்) பாடல்களைச் சொல்லியே திரிந்து அலைதலானது தவிர்ந்து ஒழியவே, (உனது) நல்ல

இரண்டு திருவடிகளிலும் (எனக்கு) ஆசை மேலிட்டு இம்மையிலும் மறுமையிலும் பொருந்தும் இன்பத்தை (நான் பெற) உதவி என்னை ஆள அன்பு தந்தருளுவாயாக.

குருகு, நாரை, அன்றில் எனப்படும் நீர்ப்பறவைகள் இரைகள் தேடி நாடுகின்ற (நீர்நிலை) இடங்களைக் குதிக்கின்ற இள வாளை மீன்கள் கண்டு பயங்கொள்ள —

---

மாலை-இரட்டை மணி மாலை மும்மணி மாலை - மாலை போல்வன; கலித்துறை - கட்டளைக் கலித்துறை முதலிய; தரு -இசைப்பாட்டு வகை, சுந்தர விலாசம் முதலிய நூல்களிற் காணலாகும்.

† வீதம் அமைதி ‡ மால் - ஆசை

§ குருகு - நாரை அன்றில் (நீர்ப் பறவை வகைகள்)

* குரைகடல்க ளேய திர்ந்து வருவதென வேவி ளங்கு
குருமலையின் மேல மர்ந்த பெருமாளே. (23)

## 218. அகப்பொருள் (நாயகி நாயக பாவம்)

தனதன தனனா தனனா
தனந்த தத்தம் தனதான

தெருவினில் நடவா மடவார்
திரண்டொ றுக்கும் வசையாலே-

தினகர னெனவே லையிலே
சிவந்து திக்கும் மதியாலே,

பொருசிலை வளையா இளையா
மதன்தொ டுக்குங் கணையாலே-

புளகித முலையா ளலையா
மனஞ் சலித்தும் விடலாமோ;

ஒருமலை யிருகூ றெழவே
யுரம்பு குத்தும் வடிவேலா-

ஒளிவளர் திருவே ரகமே
† யுகந்து நிற்கும் முருகோனே;

---

* கடல் போல் வருவது காவேரி-
" குடதிசை வாராழி போலும் படர் நதி காவேரி,"
"திரை கடற் பொரு காவிரி மாநதி'- திருப்புகழ் 904, 923
" கடல் போற் காவேரி". சம்பந்தர் I-67-5

† 'பெரிது உவந்து (பெரிது வந்து) ஏரகத் துறைதலும் உரியன்' - திருமுருகாற்றுப்படை.

ஒலிக்கும் கடல்களே அதிர்ந்து வருவது போலக் (காவிரியாறு வந்து)- விளங்கும் குருமலையின் (சாமிமலை-யின்) மீது வீற்றிருக்கும் பெருமாளே.

(ஆள அன்பு தருவாயே)

## 218

தெருவில் நடக்கும் மாதர்கள் ஒன்றுகூடி மகிழ்ந்து பேசும் பழிப்புச் சொல்லாலும் —

சூரியன் என்னும்படி கடலிற் சிவந்த நிறத்துடன் உதிக்கின்ற நிலவாலும் —

பொருதற்குச் (சண்டை செய்ய) வில்லை வளைத்துச் சோர்வு இல்லாமல் மன்மதன் செலுத்துகின்ற பாணங்-களாலும் —

§ புளகாங்கிதம் கொள்ளும் கொங்கையையுடைய இவள் (நாயகி) வருந்தி மனம் சோர்வு அடையலாமா!

ஒப்பற்ற (கிரவுஞ்ச) கிரி இரண்டு கூறுபட (அதன்) வலிமையான பாகத்திற் புகவிட்ட கூரிய வேலனே!

புகழ் மிகுந்தோங்கும் திருவேரகத்தில் (சாமிமலையில்) மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் முருகனே!

---

* விரக தாபங் கொண்டாரை - காம நோய் கொண்டாரை வருத்துவன. (1) நிலவு - (சந்திரனை வெறுத்துப் பழித்தல் - சந்திரோபாலம்பனம்) (2) மன்மதன் (மன்மதனைப் பழித்தல் - மன்மதோபாலம்பனம்) (3) தென்றல் (4) குயில் கூவுதல் (5) கோழி கூவாதிருத்தல் (கோழிகூவினால் பொழுது விடியும்- காம நோய் குறையும்) (6) சூரியன் உதியாமை (7) அன்றிலின் ஒலி (8) கடல் ஒலி (9) விடைகளின் மணி ஓசை (10) நாரியர் (ஊர்) வசை (மொழி) (11) குழல் ஓசை முதலிய, நிலவு, மன்மதன், குயில், கடலொலி, குழலொலி, விடையின் (சேயின்) மணி, ஊர்ப்பேச்சு, தாயர் வசை - இவை வருத்தும் என்பதைத் திருப்புகழ் 145-ஆம் பாடலிற் காண்க.

" செழுந்தென்றல் அன்றில் இத் திங்கள் கங்குல
திரை வீரை தீங்குழல் சேவின் மணி
எழுந்தின் றென் மேல் பகை யாட வாடும்
எனை நீ நலிவ தென்னே என்னும்," திருவிசைப்பா.
(வீரை - கடல்; சே - விடை)

*அருமறை தமிழ்நூ லடைவே
தெரிந்து ரைக்கும் புலவோனே -
† அரியரி பிரமா தியர்கால்
விலங்க விழ்க்கும் பெருமாளே. (24)

## 219. திருவடியைத் தொழ

தானனந் தனதனன தனதனா தத்த தந்த தனதான

நாசர்தங் கடையதனில் விரவிநான் மெத்த நொந்து
தடுமாறி-
ஞானமுங் கெடஅடைய வழுவியா ழத்த ழுந்தி
மெலியாதே;
மாசகந் தொழுமுனது புகழினோர் சொற்ப கர்ந்து
சுகமேவி-
மாமணங் கமழுமிரு கமலபா தத்தை நின்று
பணிவேனோ;
வாசகம் புகலவொரு பரமர்தா மெச்சு கின்ற
குருநாதா-
வாசவன் தரு திருவை யொருதெய்வா
னைக்கிரங்கு மணவாளா;
கீசகஞ் சுரர்தருவு மகிழுமா வத்தி சந்து
புடைசூழுங்
கேசவன் பரவுகுரு மலையில்யோ கத்த மர்ந்த
பெருமாளே. (25)

---

* இது ரிக் (இருக்கு) வேத சாரமாக முருகவேளின் கூறான சம்பந்தர் தேவாரப் பாக்களாக அருளியதைக் குறிக்கும். 'தென்னூல் சிவபத்தி ருக்கு ஐயம் போக உரைத்தேன்". எனக் கந்தரந்தாதி (96) யிலும் அருணகிரியார் இக்கருத்தைத் தெரிவித்துள்ளார்.

† அரி - தேவேந்திரன்

‡ திருவை-திரு; ஐ-சாரியை.

§ கீசகம் - மூங்கில். சுரர் தரு-தேவலோகக் கற்பக விருக்ஷம்; கற்பகம் -
[illegible]

அருமறையான வேதப் பொருளைத் தமிழ் நூல் முறையிலே உணர்ந்து உரைத்த புலவனே!

இந்திரன், திருமால், பிரமன் ஆகியோர் தம் கால் விலங்கை அவிழ்த்து (உதவின) பெருமாளே!

(மனம் சலித்தும் விடலாமோ)

## 219

கேடு செய்பவருடைய (கேடு செய்யுங் கீழ் மக்களுடைய) இடங்களிற் சென்று (அவருடன்) கலந்து, (அதனால்) மிகவும் நொந்து, தடுமாற்றம் அடைந்து,

(நல்ல) அறிவு கெட, முழுமையும் தவறான (நெறியில்) விழுந்து, ஆழமாக (த் தீ நெறியில்) அழுந்தி, (நான்) மெலிவு உறாமல் —

சிறந்த உலகு (எலாம்) தொழுகின்ற உனது புகழ் (வெள்ளத்தில்) ஒரு சொல் அளவுப் பகுதியையாவது கூறி (அந்நற்பணியின் பயனாய்) சுகநிலையை அடைந்து

நல்ல மணம் வீசும் (உனது) இரு தாமரைத் திருவடிகளை (மனம் ஒருப்பட்டு) நின்று பணிய மாட்டேனோ!

உபதேச வாசகத்தை (மொழியை) நீ சொல்ல, சிவபிரான் மெச்சிப் புகழ்ந்த குருமூர்த்தியே!

இந்திரன் போற்றி வளர்த்த லட்சுமியாம் ஒப்பற்ற தெய்வயானையின்பால் அன்பு காட்டி இரங்கிய மணவாளனே!

மூங்கில், தேவதாரு அல்லது கற்பகம் (தென்னை), மகிழ மரம், மாமரம், அத்திமரம், சந்தனமரம் இவை பக்கங்களிற் சூழ்ந்துள்ளதும்,

திருமால் போற்றிப் பரவுகின்றதுமான குருமலையில் (சாமிமலையில்) *யோக நிலையில் அமர்ந்தருளும் பெருமாளே!

(இரு கமல பாதத்தை நின்று பணிவேனோ)

---

* மகேசுர குரு ஆதலின் யோக நிலை.

## 220. ஐக்கிய நிலை

தானான தான தத்த தானான தான தத்த
தானான தான தத்த தனதான

நாவேறு பாம ணத்த *பாதார மேநி னைத்து
†நாலாறு நாலு பற்று வகையான-

‡நாலாரு மாக மத்தி னூலாய ஞான முத்தி
நாடோறு நானு ரைத்த நெறியாக;

நீவேறெ னாதி ருக்க நான்வேறெ னாதி ருக்க
நேராக வாழ்வ தற்கு னருள்கூர-

நீடார் §ஷடாத ரத்தின் மீதேப ராப ரத்தை
நீகாணெ னாவ னைச்சொ லருள்வாயே;

சேவேறு மீசர் சுற்ற மாஞான போத புத்தி
சீராக வேயு ரைத்த குருநாதா-

தேரார்கள் நாடு சுட்ட சூரார்கள் மாள வெட்டு
தீராகு காகு றத்தி மணவாளா;

---

* பாதாரம்- பாதாரவிந்தம்; இது கடைக்குறை. † நாலாறு நாலு பற்று வகையான -ஆகமம், 28- சிவாகமங்கள். ‡ நாலாரும்-சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாலு பாதங்கள் பொருந்திய.

§ ஷடாதரம்- மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை எனப்படும் ஆறு ஆதாரம்.

குய்யத்துக்கும் குதத்துக்கும் மத்தியில் நான்கிதழ்த் தாமரை போலுள்ள சக்கரம்- **மூலாதாரம்**; மூலாதாரத்துக்கும் நாபிக்கும் இடையே ஆறிதழ்த் தாமரை வடிவாயுள்ள தானம் **சுவாதிட்டானம்**. நாபிப் பிரவேசத்தில் சுவாதிட்டானத்தின் மேலாகப் பத்திதழ்த் தாமரை வடிவுள்ள தானம் **மணிபூரகம்**, இருதயஸ்தானத்தில் பன்னிரண்டு இதழ்த் தாமரை வடிவுள்ளது அனாகதம்; அடி நாவின் தானத்தில் பதினாறு இதழ்த் தாமரை வடிவினது விசுத்தி; புருவ மத்தியில் இரண்டு இதழ்த் தாமரை வடிவினது ஆஞ்ஞை; துவாத சாந்தம் என்பது உச்சிக்கு மேல் பன்னிரண்டு

## 220.

(சிறந்த அன்பர்களுடைய)நாவில் ஊறிய பாடல்களின் மணம் வீசுகின்ற (உனது) பாதார விந்தத்தையே நினைத்து நாலாறும் (இருபத்து நான்கும்) ஒரு நாலும் கூடிய (ஆக இருபத்தெட்டு) வகையானவையும் —

(சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும்) நாலுபாதங்கள் பொருந்தினவையுமாயுள்ள ஆகம நூல்களிற் கூறப்பட்டுள்ள ஞான முத்தி நெறியே நாள்தோறும் நான் அநுட்டிக்கும் நெறியாகவும் —

நீவேறு நான்வேறு என்னும் பிரிவு இல்லாது (சீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றுபட்ட நிலையாகி) நேர்பட்டு வாழ்வதற்கு உனது திருவருள் பெருகிமிக —

பரந்துள்ள ஆறாதாரங்களின் மேற்பட்ட நிலையிலே பராபரப் பொருளை நீ காண்பாயாக என்ற * அந்த (ஐக்கிய) வசனத்தைச் சொல்லை (உபதேசித்து) அருளுக.

இடபத்தின் மேலேறும் சிவபிரான் வலம் வந்து நிற்க சிறந்த ஞான அறிவு உபதேசத்தை செம்மையாகவே சொன்ன குருநாதனே!

பகைவர்களின் நாடுகளைச் சுட்டழித்த சூரர்களை இறக்கும்படி வெட்டின தீரனே! குகனே! குறத்தி (வள்ளியின்) மணவாளனே!

---

அங்குலத்தில் உள்ளதாகக் கருதப்படும் யோக ஸ்தானம். பிரமரந்திரம் என்பது உச்சித் துவாரம்.

| *ஆதாரம் | ஆதாரத்தலம் | ஆதாரக்கடவுள் |
|---|---|---|
| மூலாதாரம்- | திருவாரூர்.(தியாகேசர் தலம்) | விநாயகர் |
| சுவாதிட்டானம்- | திருவானைக்கா-(ஜம்புநாதர் தலம்) | பிரமன் |
| மணிபூரகம்- | அண்ணாமலை(அருணாசலேசர்தலம்) | திருமால் |
| அனாகதம்- | சிதம்பரம் (சபாபதி தலம்) | ருத்திரன் |
| விசுத்தி- | காளத்தி (காளத்தீசர் தலம்) | மகேசுரன் |
| ஆஞ்ஞை- | காசி (விசுவேசர் தலம்) | சதாசிவன் |

பிரமரந்திரம்- கைலை; துவாத சாந்தத் தலம்- மதுரை

காவேரி நேர்வ டக்கி லேவாவி பூம ணத்த
காவார் சுவாமி வெற்பின் முருகோனே-
கார்போலு மேனி பெற்ற மாகாளி வாலை சத்தி
காமாரி வாமி பெற்ற பெருமாளே. (26)

## 221. ஆண்டருள

தனதன தான தந்த தனதன தான தந்த
தனதன தான தந்த தனதான

நிலவினி லேயி ருந்து வகைமல ரேதெ ரிந்து
நிறைகுழல் மீத ணிந்து குழைதாவும்-
நிகரறு வேலி னங்கள் வரிதர வாச கங்கள்
நினைவற வேமொ ழிந்து மதனூலின்;
கலபம னோக ரங்க ளளவற வேபு ரிந்து
கனியித ழேய ருந்தி யநுராகக்-
கலவியி லேமு யங்கி வனிதையர் பால்ம யங்கு
கபடனை யாள வுன்ற னருள்கூராய்;
* உலகமொ ரேழு மண்ட ருலகமு மீசர் தங்கு
முயர்கயி லாய மும்பொன் வரைதானும்-
உயிரொடு பூத மைந்து மொருமுத லாகி நின்ற
உமையரு ளால்வ ளர்ந்த குமரேசா;
† குலைபடு சூர னங்க மழிபட வேலெ றிந்த
குமரக டோர வெங்கண் மயில்வாழ்வே-
‡ கொடுமுடி யாய்வ ளர்ந்து புயனிலை போலு யர்ந்த
குருமலை மீத மர்ந்த பெருமாளே (27)

---

* தேவியின் வியாபகம்- " வெளி முதற் பூதங்களாகி விரிந்த அம்மே" அபிராமி அந்தாதி (16). † குலைபடு - குலைபட்டு. ‡ கைலை மலையின் கொடுமுடிகளிலொன்று திருவேரகம் என்று திருவேரக மான்மிய சங்கிரகத்திற் சொல்லப்பட்டுள்ளது.

காவேரி ஆற்றின் நேர் வடக்கே தடாகங்களில் (தாமரை ஆதிய) பூக்களின் மணம் வீசும் சோலைகள் நிறைந்த சுவாமிமலை முருகனே!

கரிய மேகம் போன்ற மேனியை உடைய பெருமை வாய்ந்த காளி, (பாலப்பருவத்தினள்) என்றும் இளையாள், சத்தி, மன்மதனை எரித்தவள், அழகி (அல்லது காமனை எரித்த சிவனது இடது பாகத்தில் இருப்பவள்) பெற்ற பெருமாளே!

(பராபரத்தை நீ காண் எனா* - அனைச்சொல் அருள்வாயே)

## 221.

நிலவில் இருந்து, வகைவகையான மலர்களைத் தெரிந்தெடுத்து, நிறைந்துள்ள கூந்தல் மேல் அணிந்து, காதின் குழை அளவும் பாய்கின்ற-

ஒப்பற்ற வேல்கள் போன்ற கண்களின் ரேகைகள் விளங்க, மொழிகள்- (இன்னது பேசுகின்றோம் என்னும்) நினைவு இல்லாமலே மொழிந்து, காம சாத்திரத்திற் (சொல்லியுள்ள)

கலப்பான, (பலவித) மனோரஞ்சிதமான (செய்கைகள்) கணக்கில்லாத வகையிற் செய்து, (கொவ்வைக்) கனி போன்ற வாயிதழ் ஊறலை உண்டு காமப் பற்றுப்

புணர்ச்சியில் ஈடுபட்டுப் பொருந்தி மாதர்களிடத்தே மோக மயக்கங்கொள்ளும் வஞ்சகனாகிய என்னை ஆண்டருள உனது திருவருளைப் பாலிப்பாயாக.

உலகம் ஏழும், தேவர் உலகமும், சிவபிரான் தங்கும் உயரிய கயிலாயமும், பொன்மலையாம் மேருவும்,

உயிர்களும், (பிருதுவி-அப்பு-தேயு-வாயு-ஆகாசம் எனப்படும்) ஐந்து பூதங்களும் - ஆக எல்லாமாகி, ஒரு முதற்பொருளாகி நின்ற உமாதேவியின் திருவருளால் வளர்ந்த குமரேசனே!

பதறுதல் அடைந்த சூரனது உடல் அழியும்படி வேலாயுதத்தை எறிந்த குமரனே! மிகக் கடுமை வாய்ந்த மயிலில் வாழ்பவனே! விரும்பத்தக்க தோகைக் கண்களைக் கொண்ட (அல்லது- எங்கள்) மயில் வாழ்வே! (அல்லது) கடுமை வாய்ந்தவனே! மயில் வாழ்வே!

கொடு முடியாய் (மலைச் சிகரமாய்) விளங்கி, மேகங்கள் தங்கும் இடம்போல உயர்ந்த குருமலைமேல் அமர்ந்த பெருமாளே!

(கபடனை ஆள உன்றன் அருள்தாராய்)

---

* அனைச்சொல்- ஐக்கிய பதம்; அனை- அந்த, 'அனை நால்வகையும்' -தொல். பொருள் -245.

## 222. திருவடி பெற

தனதன தனதன தனதான

நிறைமதி முகமெனு மொளியாலே-
நெறிவிழி கணையெனு * நிகராலே;
உறவுகொள் மடவர்க ளுறவாமோ-
உனதிரு வடியினி யருள்வாயே;
மறைபயி லரிதிரு மருகோனே-
மருவல ரசுரர்கள் குலகாலா;
குறமகள் தனைமண மருள்வோனே-
**குருமலை** மருவிய பெருமாளே. (28)

## 223. மயலற

தனதன தானன, தனதன தானன
தனதன தானன தனதான

பரவரி தாகிய வரையென நீடிய
பணைமுலை மீதினி லுருவான-
பணிகளு லாவிட இழையிடை சாய்தரு
பயிலிகள் வாள்விழி அயிலாலே;
நிரவரி யோடியல் குழல்களி னாண்மலர்
நிரைதரு மூரலி னகைமீது-
நிலவியல் சேர்முக மதிலுயிர் மாமயல்
நிலையெழ வேயலை வதுவாமோ;

---

* நிகர்-போர்

## 222

பூரண சந்திரன் போன்ற முகத்தின் ஒளியினாலும்

வழிகாட்டியாயுள்ள கண் அம்பு செய்யும் போரினாலும்

உறவு பூண்கின்ற மாதர்களின் உறவு ஆமோ! (கூடாது என்றபடி)

உன்னுடைய திருவடிகளை உனது இருஅடி (இரண்டு பாதங்களை) இனித் தந்தருளுக;

வேதங்களிற் சொல்லப்பட்ட திருமாலின் அழகிய மருகனே! (அல்லது திருமால் -இலக்குமி இவர்களின் மருகனே!)

பகைவர்களாம் அசுரர் குலத்துக்கு (குலத்தை அழித்த) காலனே!

குறமகள் (வள்ளியை) மணஞ்செய்து அருளியவனே!

**குருமலை** (சாமிமலையில்) வீற்றிருக்கும் பெருமாளே

(கிருவடி யினி அருள்வாயே)

## 223

பரவிப் போற்றுதற்கு அரிய மலை யென்னும்படி பரந்துள்ள பெரிய கொங்கைகளின்மேல் அலங்காரமான

ஆபரணங்கள் விளங்க, நூல் போலும் இடை சாயும்படி ஒழுகுபவருடைய, வாள் போன்ற (ஒளி விளங்கும்) கண் எனும் வேல் மீதும்,

பரந்து வண்டுகளோடு கூடியதாயுள்ள கூந்தல்களின் புது மலர் மீதும், வரிசையாய் விளங்கிப் புன்சிரிப்பைக் காட்டும் பற்கள் மீதும்,

சந்திரனைப்போன்ற முகத்திலும், எழுகின்ற அதிக மோகம் நிலை பெற்று என் மனத்தில் தோன்றுவதால் (நான்) அலைச்சல் படலாமோ!

* அரவணை யார்குழை பரசிவ ஆரண
அரனிட பாகம துறைசோதி-
அமையுமை † டாகினி திரிபுரை நாரணி
அழகிய மாதருள் புதல்வோனே;
குரவணி பூஷண சரவண தேசிக
குக கரு ணாநிதி அமரேசா-
குறமக ளானைமின் மருவிய பூரண
**குருகிரி** மேவிய பெருமாளே. (29)

## 224. பொது மகளிர் இணக்கம் அற

தனதான தத்தன தனதான தத்தன
தனதான தத்தன தனதான

பலகாதல் பெற்றிடவு மொருநாழி கைக்குளொரு
பலனேபெ றப்பரவு கயவாலே
பலபேரை மெச்சிவரு தொழிலேசெ லுத்தியுடல்
பதறாமல் வெட்கமறு வகைகூறி;
விலகாத லச்சைதணி மலையாமு லைச்சியர்கள்
வினையேமி குத்தவர்கள் தொழிலாலே-

---

* அரவணையார் குழை - விஷ்ணுவானவர் மனங்குழைந்து அன்பு செய்யப்பட்ட அரவு (பாம்பு). சிவபிரானுக்கு குழை யாபரணம்: "படந்தாங்கிய அரவக் குழைப் பரமேட்டி" "அரவக் குழையார்" (சம்பந்தர் I-*9-3*; II-*122-4*) - என வருவன காண்க.

† டாகினி, காகினி, லாகினி, ஹாகினி, ராகினி - சாகினி என்பன தேவியைக் குறிக்கும். சுவாதிஷ்டானத்தில் அமர்ந்திருப்பவள் **காகினி**; திருமேனி பொன்னிறம்;) மூலாதாரத்தில் அமர்ந்திருப்பவள் **சாகினி** (திருமேனி கரிய நிறம்); ஆக்ஞை ஆதாரத்தில் இருப்பவள் **ஹாகினி** (திரு மேனி வெண்ணிறம்); அனாகதத்தில் - **ராகினி** (பசுமை நிறம்) - திரிபுரை

பாம்பை அணையாகக் கொண்ட திருமால் மனங்குழைந்து அன்பு செய்யும்(அல்லது பாம்பைப் பொருந்திய குழையாக உடைய) பரசிவன்,வேதம் (போற்றும்) அரன், (எனப்படும் பெருமானுடைய) இடது பாகத்தில் உறைகின்ற சோதி —

அம்மை, உமை, டாகினி, திரிபுரை (திரிபுரத்தை எரித்தவள்) நாரணி, அழகிய மாது (பார்வதி) அருளிய புதல்வனே!

குராமலரை அணிகின்ற அணிகலமாகக் கொண்டவனே! சரவணனே! குரு மூர்த்தியே! குகனே! கருணாநிதியே! தேவர்களுக்கு ஈசனே!

குறமகள் (வள்ளி), ஆனை (ஐராவதம் வளர்த்த) மின் போன்ற தேவசேனை (இருவரும்) சேர்ந்துள்ள முழுப்பொருளே! குருகிரி சாமிமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மயல் நிலையெழ அலைவது ஆமோ)

## 224

பல பேர்களுடைய காதலைப் பெற்றிருந்தும், ஒரு நாழிகைப் பொழுதுக்குள் ஒரு பலனைப் பெறவேண்டி (அதற்காகச்) சூழ்ச்சி செய்யும் களவுச் செயலால்

பல பேர்களை மெச்சி வருகின்ற தொழில்களையே நடத்தி, உடல் பதறுதலில்லாமல், வெட்கம் அற்ற வகையிற் பேசி —

(இயற்கையில்) நீங்காத லஜ்ஜை (நாணம்) தணிந்த (குறை பட்ட) மலைபோன்ற கொங்கையை உடைய பொது மகளிர் - தங்கள் தொழிற் சாமர்த்தியங்கள் மிகவும் செய்பவர்கள்- தங்கள் (சூழ்ச்சித்) தொழில்களால்

---

- மும்மூர்த்திகளுக்கும் மூத்தவள், மூன்று நாடிகளிலும் இருப்பவள் எனப் பலவாறு பொருள் கொள்வர். (அபிராமி அந்தாதி - வித்வான் பிரம்மஸ்ரீ கி. வா. ஜகந்நாத ஐயரவர்கள் உரை - பக்கம் 5, 17 - பார்க்க)

விடமேகொ டுத்து வெகு பொருளேப றித்தருளும்
விலைமாதர் பொய்க்கலவி யினிதாமோ;

மலையையெ டுத்தருளு *மொருவாள ரக்கனுடல்
வடமேரெ னத்தரையில் விழவேதான்

வகையாவி டுத்தகணை யுடையான்ம கிழ்ச்சிபெறு
மருகாக டப்பமல ரணிமார்பா;

† சிலகாவி யத்துறைக ளுணர்வோர்ப டித்ததமிழ்
செவியார வைத்தருளு முருகோனே-

சிவனார்த மக்குரிய ‡ வுபதேச வித்தையருள்
திருவேர கத்தில்வரு பெருமாளே. (30)

## 225. யம பயம் அற

தான தனதன தான தனதன
தான தனதன தனதான

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா-

பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா;

---

* வாள் - சிவபிரான் தந்தவாள் ஒன்று இராவணனுக்கு உண்டு. "தன் தோள் கொட்டித் தடவரையை இருபது தோள் தலையினாலும் எடுத்தானைத் தாள் விரலால் ஊன்றி இசை பாடல் இனிது கேட்டுக் கொடுத்தானைப் பேரோடும் கூர் **வாள்** தன்னை" - அப்பர் VI 69 - 10.

† நூல்கள் சில கற்றோரிடத்தில் மதிப்பு வைக்கவேண்டும் என்பதற்-குத் திருப்புகழ் 205-ம் பார்க்க.

‡ உபதேச வித்து - " ஓம் என்னும் பிரணவப் பொருள்" ஓம் எனும் உபதேச வித்து' திருப்புகழ் 790; "ஞான வித்து" திருப்புகழ் 226

விடத்தையே கொடுத்து மிக்க பொருளையே பறித்துதவுகின்ற விலை மாதர்களின் பொய்யான கலவி இன்பம் இனிய தாகுமோ! (ஆகாது என்றபடி),

(கயிலை) மலையை எடுத்த ஒப்பற்ற வாளை ஏந்தின அரக்கன் (ராவணனுடைய) உடல் வடக்கே உள்ள மேருவே விழுந்ததென்னும்படி தரையில் விழும்படியாகத் —

தக்க விதத்திற் செலுத்திய அம்பை உடையவனாகிய (ஸ்ரீராமபிரான்) - திருமால் மகிழும் மருகனே! கடப்பமலர் அணிந்துள்ள மார்பனே!

சில காவிய நூல்களின் உண்மைப் பொருள் வழிகளை அறிந்த அறிஞர்கள் ஓதின தமிழைச் செவி குளிர ஏற்றருளும் முருகனே!

சிவபிரானுக்கு உரிய உபதேச மூலப்பொருளை (ஓம் என்னும் பிரணவப் பொருளை) அருளிய பெருமாளே! திருவேரகத்தில் (சுவாமிமலையில்) எழுந்தருளியிருக்கும் பெருமாளே!

(விலைமாதர் பொய்க்கலவி இனிதாமோ)

## 225

பாதி மதியையும் (பிறைச் சந்திரனையும்), கங்கை ஆற்றையும், மலர்களையும் அணிந்துள்ள சடைப்பெருமான் (சிவபிரான்) அருளிய குமரேசனே!

சர்க்கரை வெல்லத்தையும் கனியையும் போன்ற மொழிகளை உடைய மாது குறமகள் (வள்ளி)யின் பாதத்தை பிடித்துத் தடவும் மணவாளனே!

காது *மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே-

கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே;

ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா-

ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வரவருமிளையோனே;

சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனி லுறைவோனே-

சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே. (31)

## 226. பிறவி அற

தனன தான தத்த தனன தான தத்த
தனன தான தத்த தனதான

மகர கேத னத்த னுருவி லானெ டுத்து
மதுர நாணி யிட்டு நெறிசேர்வார்-

மலைய வேவ ளைத்த சிலையி னூடொ ளித்த
வலிய சாய கக்கண் மடமாதர்;

---

* சீதையின் ஆகத்தைத் தன் உகிரினாற் கொத்தின காகத்தின் மீது புல்லையே படையாக்கி ஸ்ரீராமர் செலுத்த - அப்படைக்கு அஞ்சி அக் காகம் எங்கும் காப்பவரின்றி ஸ்ரீராமரையே சரண் அடைய அவர் அக் காகத்துக்கு உயிர்ப் பிச்சை அளித்துக் கண்களுக்கு ஊனம் வருக என்றுரைத்துக் காக்கையின் ஒரு கண் போய், இரு கண்ணிற்கும் ஒரு கண்மணியே பொருந்த அருளினர். இங்ஙனம் காக்கை உருக்கொண்டு காகாசுரனாக வந்தது இந்திரகுமாரன் சயந்தன் என்பர்.

"காகத் திருகண்ணிற் கொன்றே மணி கலந்தாங்கு" - திருக்கோவையார் செய். 71; - "சரணமுஞ் சரணா என்று அவன் அஞ்சி...

[illegible]

பிரிவு செய்யப்பட்ட ஒரு விழியைக் (காகாசுரன் என்னும் காகம்) அடையும்படி அருளிய ஸ்ரீராமர்-மாயவன், அரி (திருமாலின்) அழகிய மருகனே! அல்லது அரி, இலக்குமி இவர் தம் மருகனே!

காலன் என்னை அணுகாத வகைக்கு உன்னுடைய இரண்டு திருவடிகளில் வழிபடும் (புத்தியை) அருள்வாயே.

ஆதிப் பிரமனோடு தேவர் தேவலோகத்தை ஆளும்படி அவர்களிருந்த சிறையினின்றும் அவர்களை மீட்டு

ஆடு மயிலினில் ஏறி, அமரர்கள் சூழ்ந்து வர வந்த இளையவனே!

மாமரங்கள் அதிகமாக வளர்ந்துள்ள சோலைகள் பொருந்தி யுள்ள சுவாமிமலையில் உறைபவனே!

சூரன் உடல் துணிபட, கடல் வற்றிப்போக வேலாயுதத்தைப் பிரயோகிக்க வல்ல பெருமாளே!

*(காலன் எனை அணுகாமல்... உனதிரு காலில் வழிபட அருள்வாயே)*

## 226

மீன் கொடியை உடையவனும், உருவில்லாதவனுமான மன்மதன் கையிலெடுத்து, இனிமை தரும் (கரும்பு) வில்லில் நாண் இட்டு, நல்ல நெறியில் இருப்பவர்களும் —

மயங்கித் திகைக்கும்படியாக வளைத்த வில்லின் உள்ளே ஒளித்த வலிய அம்பு போன்ற (மன்மதனது அம்பு போன்ற) கண்களை உடைய அழகிய மாதர்கள் —

---

வணங்கிட வள்ளல் மகிழ்ந்தே வெய்யவன் கண் இரண்டொடு போகெனவிட்ட தெய்வ வெம்படை" ; கொடித் திரள் கண்கள் தமக்கே வந்தொர் நன் மணி நிற்கென வைத்ததும் - " வேகம் விண்டு சயந்தன் வணங்கி விசும்பிற் போக" - கம்பராமாயணம் சூளாமணிப் படலம் 77 - 82.

இகழ வாச முற்ற தலையெ லாம்வெ ளுத்து
இளமை போயொ ளித்து விடுமாறு-

இடைவி டாதெ டுத்த **பிறவி வேர றுத்து**
னினிய தாள ளிப்ப தொருநாளே;

அகில மேழு *மெட்டு வரையின் மீது முட்ட
அதிர வேந டத்து மயில்வீரா-

அசுரர் சேனை கெட்டு முறிய வான வர்க்கு
அடைய வாழ்வ ளிக்கு மிளையோனே;

† மிகநி லாவெ றித்த ‡ அமுத வேணி நிற்க
விழை **சுவாமி வெற்பி** லுறைவோனே-

§ விரைய ஞான வித்தை யருள்செய் தாதை கற்க
வினவ வோது வித்த பெருமாளே. (32)

## 227. அடியாருடன் கூடி அடிமை யாக

தனன தான தனன தந்த தனன
தான தனன தந்த
தனன தான தனன தந்த
தனதான

முறுகு காள விடம யின்ற இருகண் வேலி னுளம யங்கி
முளரி வேரி முகைய டர்ந்த முலைமீதே-

முழுகு காதல் தனைம றந்து பரம ஞான வொளிசி றந்து
முகமொ ராறு மிகவி ரும்பி அயராதே;

---

* " அடியிட எண் திசை வரை தூள்பட்ட" கந். அலங்காரம் -11.

† " வெண்ணிலா மிகு விரிசடை" சம்பந்தர் - II- 105 - 3

‡ அமுத வேணி - சிவபெருமான். "அமுதன் - சம்பந்தர் I-111 - 1 சிவபிரான் நிற்க முருகவேள் வீற்றிருத்தல் இந்த உபதேச நிலையில் மாத்திரம் அல்ல; பின்பு ஒரு கால் சங்கப் புலவர்கள் (நக்கீர ராதியோர்) முன்பு சிவபிரான் தன் கவிக்குக் குற்றம் கூறி எவர்யார் என்று வினவி நின்று பேச வேண்டி வந்தது. முருக வேளோ சங்கப் புலவர்கள் நிற்கத் தாம் சாரதா பீடத்தமர்ந்து அவர்கள் கலகத்தைத் தீர்த்தருளினார் - அதனால் " மூவர்கட் கரியான் நிற்ப முத்தமிழ்ச் சங்கத் தெய்வப் பாவலர் வீற்றிருக்கும் பாண்டி

இகழும்படியாக, (ஒரு காலத்தில்) மணம் இருந்த தலை முழுமையும் வெளுத்து (அல்லது இகழ்தற்கிடம் நிறைய ஏற்பட்டுத் தலையெலாம் வெளுத்து), இளமை என்பது போய் ஒளித்து விடும்படி

இடைவிடாமல் நான் எடுத்து வந்த பிறவி என்பதின் வேரை அறுத்து உன்னுடைய இனிய திருவடியைத் தருவதான ஒரு நாள் (எனக்குக் கிடைக்குமா?)

உலகங்கள் ஏழின் மீதும், அஷ்டகிரிகளின் மீதும் முட்டும் படியாக (அல்லது - முழுவதும்) அதிரும்படியாகவே செலுத்துகின்ற மயில் வீரனே!

அசுரர்களுடைய சேனை கெட்டு முறிய (வைத்துத்) தேவர்களுக்கு முழுவாழ்வை அளித்த இளையோனே!

மிகவும் நிலவொளியை வீசுகின்ற அமுதச் சடையார் (சிவபிரான்) நின்று கேட்க, விரும்புகின்ற சுவாமி மலையில் வீற்றிருந்து (உபதேசித்தவனே!)

விரைவில், ஞான மூலப்பொருளை (பிரணவப் பொருளை) (அடியார்க்கு) அருள் செய்கின்ற பிதா (சிவபிரான்) அறிய வேண்டிக் கேட்க, அதை அவருக்கு உபதேசித்த பெருமாளே! (விரைவில் ஓதுவித்த பெருமாளே!)

(இனிய தாள் அளிப்ப தொருநாளே!)

# 227

கடுமையாய் விரைந்தெழுந்த கரிய விடத்தை உண்ட (விடம் போன்ற) இரண்டு கண்களாகிய வேலினால் உள்ளம், மயங்கித் தாமரையின் மணமுள மொட்டுப் போன்ற முலைமேல் —

முழுகுகின்ற காதலை மறந்து பரம ஞான ஒளி மிகுந்து (உனது) முகங்கள் ஆறினையும் மிகவும் விரும்பிச், சோர்வு இன்றி,

---

நன்னாடு போற்றி", "முருகன் சங்கத் திருப்பவன் நம் முக்கட் கடவுள் நிற்பவன்" எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் போற்றுகின்றது.

§ சிவபிரான் ஒரு (க்ஷணநேரம்) தியானத்திருக்க முருகவேள் அவருக்குப் பிரணவப் பொருளைத் திருத்தணிகையில் உபதேசித் தனரென்றும் அதனால் தணிகைக்கு "க்ஷணிகாசலம்" எனப் பெயர் போந்ததென்றும் தணிகைப் புராணம் கூறும்.

அறுகு தாளி நறைய விழ்ந்த குவளை வாச மலர்க ரந்தை
அடைய வாரி மிசைபொ ழிந்து னடிபேணி-

அவச மாகி யுருகு தொண்ட ருடன தாகி விளையு மன்பி
னடிமை யாகு முறைமை யொன்றை அருள்வாயே;

தறுகண் வீரர் தலைய ரிந்து பொருத சூர னுடல்பி ளந்து
தமர வேலை சுவற வென்ற வடிவேலா-

தரள மூர லுமை மடந்தை முலையி லார அமுத முண்டு
தரணி யேழும் வலம்வ ருந்திண் மயில்வீரா;

மறுவி லாத தினை விளைந்த புனம்வி டாம லிதணி ருந்து
வலிய காவல் புனைய ணங்கின் மணவாளா-

மருவு ஞாழ லணிசெ ருந்தி யடவி சூத வனநெ ருங்கி
வளர்சுவாமி மலைய மர்ந்த பெருமாளே.. (33)

## 228. ஆண்டருள

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான

வாதமொடு சூலை கண்ட மாலைகுலை நோவு சந்து
மாவலிவி யாதி குன்ம மொடுகாசம்-

அறுகு தாளி (தாளி அறுகு), மணம் வீசும் குவளை, மண மலராம் கரந்தை (திரு நீற்றுப் பச்சை) இவைகளையெல்லாம் நிரம்ப வாரி - (உன் திருவடியின்) மேலே சொரிந்து உனது திருவடியை விரும்பித் —

தன்வசம் அழிந்து உருகுகின்ற *தொண்டருடன் கலந்து கூடி அதனால் விளையும் அன்பினால் அடிமை என்னும் ஒழுக்க முறைமையாகிய ஒரு பேற்றை (அடைய) அருள்வாயே.

அஞ்சாமை கொண்ட வீரர்களின் தலைகளை அரிந்து போர் செய்த சூரன் உடலை (இரு கூறாகப்) பிளந்து, ஒலிக்கும் கடலை வற்றும்படி செய்து வென்ற கூரிய வேலனே!

முத்துப் போன்ற பற்களை உடைய உமை மாதின் கொங்கைகளில் நிரம்பப் பால் அமுதம் உண்டு, உலகு ஏழையும் வலம் வந்த வலிய மயில் வீரனே!

குற்றமில்லாத தினை விளைந்த புனத்தை நீங்காது பரண் மீதிருந்து பலமான காவல் காத்த அணங்கு (வள்ளியின்) மணவாளனே!

பொருந்திய புலி நகக் கொன்றை, அழகிய செருந்தி இவையுள்ள நந்தவனமும், மாமரக் காடும் நெருங்கி வளரும் சுவாமி மலையில் அமர்ந்துள்ள பெருமாளே!

(அடிமையாகு முறைமை யொன்றை அருள்வாயே)

## 228

வாத நோய் (உடலில் வாயு மிகுதலால் வரும் நோய்), சூலை (வயிற்றுளைவு நோய்), கண்டமாலை (கழுத்தைச் சுற்றி உண்டாகும் புண் கட்டி), குலைநோவு (மார்பு எரிச்சல் நோய்), சந்து (எலும்பு கூடும் இடங்களில் நோய்), பெரிய இழுப்பு நோய்கள் (அமர கண்ட வலி, குமர கண்ட வலி,பிரம கண்ட வலி, காக்கை வலி, முயல் (முயலகன்) வலி என்னும் ஐவகை வலிகள்), குன்மம் (அஜீரணப் வயிற்று வலி முதலியன காணும் வயிற்று நோய்), காசம் (ஈளை, கோழை நோய்)

---

* இங்குக் கேட்ட வரத்தை அருணகிரியார் பெற்றனர் என்பது "இடுதலைச் சற்றுங் கருதேனை... அன்பாற் கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா" என்னும் கந்தரலங்காரத்தால் (100) விளங்குகின்றது. "சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் தொண்டர் குழாம் சாரிற் கதியன்றி வேறிலை காண்"- கந். அலங். (49) என வருவதும் ஈண்டுக் காண்க.

வாயுவுட னேப ரந்த தாமரைகள் பீன சம்பின்
மாதர்தரு பூஷ ணங்க ளெனவாகும்;
பாதகவி யாதி புண்க ளானதுட னேதொ டர்ந்து
பாயலைவி டாது மங்க இவையால்நின்-
பாதமல ரான திங்க ணேயமற வேம றந்து
பாவ* மது பான முண்டு வெறிமூடி;
ஏதமுறு பாச பந்த மானவலை யோடு ழன்று
ஈனமிகு சாதி யின்க ணதிலேயான்-
ஈடழித லான தின்பின் மூடனென வோது முன்புன்
ஈர **அருள் கூர வந்து எனையாள்வாய்;**
சூதமகிழ் பாலை கொன்றை தாதுவளர் சோலை துன்றி
சூழுமதில் தாவி மஞ்சி னளவாகத்-
தோரணநன் மாட மெங்கு நீடுகொடி யேத ழைந்த
**சுவாமிமலை** வாழ வந்த பெருமாளே.(34)

## 229. காமத்தால் திரிதல் அற

தான தத்த தந்த தான தத்த தந்த
தான தத்த தந்த தனதான

வார முற்ற பண்பின் மாத முற்ற நஉ்பி
னீடு மெய்த்† து யர்ந்து வயதாகி-

---

* வேசைய ரொடு கூடி மது பானஞ் செய்தல் - வேசையர் மது பானஞ் செய்தனர் என்பது-

"வெறிதரு புனலுணும் அவச வனிதையர்"
"பாளை யூறுகள் உண்டிடு தொண்டிகள்"
"ஆவேச நீருண் மதப் பொறிச்சிகள்"

(திருப்புகழ் 60, 88, 362) - என வருவனவற்றால் அறியக் கிடக்கின்றது.

† துயர்தல் - தொடர்தல் - திருப்புகழ் 137 பார்க்க.

வாயுவினால் உடம்பில் பரவுகின்ற தாமரை போன்ற சொறி படை நோய்,மூக்கடைப்பு நோய், பின்னும் (ஒழுக்கங்கெட்ட) மாதர்களுடன் இணங்குவதால் கிடைத்த ஆபரணங்கள் என்று சொல்லத்தக்க பறங்கிப் புண், கிரந்திப் புண் ஆகிய மேக நோய் வகைகளாகும்

பாவ நோய்ப் புண்கள் ஆய இவை உடனே எனைப் பீடிப்பதால். பாயிலே விடாது படுத்துக் கிடந்து (உடல் நலம்) குறைந்து அக்காரணத்தால் நினது

பாத மலர்களில் (நேயம்) அன்பு என்பதை முற்றும் மறந்து, பாவம் என்கின்ற கள்ளைக் குடித்து (அல்லது பாவச் செயல்களுக்கு இடம் தரும் கள்ளைக் குடித்து) அதனால் வெறி மயக்கம் மிகுந்து

குற்றந் தரும் பாசக் கட்டுகளான வலைகளில் அகப்பட்டு அலைந்து , இழிவான சாதித் தொழில்களிலே நான்,

வலிமை யற்று அழிந்த பின், மூடன் எனப் (பிறர்) (என்னைச்) சொல்வார். அங்ஙனம் பிறர் சொல்வதற்கு முன்பு உனது கருணை நிறைந்த திருவருள் மிக்கு வந்து என்னை ஆண்டருளுக.

மாமரம், மகிழமரம் (வகுளம்), பாலைமரம், கொன்றை மரம் இவைதம் பூந்தாது நிறைந்துள்ள சோலைகள் நெருங்கியுள்ளதும், சூழ்ந்துள்ள மதில் உயர்ந்து மேகத்தை அளாவி நிற்பதும்,

தோரணங்களும் நல்ல வீடுகளில் எங்கும் உயர்கொடிகளும் தழைந் துள்ளதுமான சுவாமிமலையில் வாழ வந்த பெருமாளே!

(அருள் கூர வந்து எனை ஆள்வாய்)

## 229

அன்பு பூண்ட தன்மையில், மாதங்கள் செல்ல (வளர்ந்து), அந்த அன்பினால் வளரும் உடலானது தொடர்ச்சியால் (வளர) வயது நிரம்பி

வாலை யிற்றி ரிந்து கோல மைக்கண் மங்கை
மார்க ளுக்கி சைந்து பொருள்தேடி;
ஆர மிக்க பொன்க ளால மைத்த மர்ந்த
மாப ணிக்கள் விந்தை யதுவான-
ஆட கொப்ப மைந்த வோலை முத்த முங்கொ
டாவி மெத்த நொந்து திரிவேனோ;
சூரனைத்து ரந்து வேர றப்பி ளந்து
சூழ்சு ரர்க்க ணன்பு செயும்வீரா-
*சூக ரத்தொ டம்பு தானெ டுத்து வந்த
† சூத னுக்கி சைந்த மருகோனே;
ஏரெ திர்த்து வந்து நீர்கள் கட்டி யன்று
தானி றைக்க வந்த தொருசாலி-
யேமி குத்து யர்ந்த மாவ யற்கள் மிஞ்சு
மேர கத்த மர்ந்த பெருமானே (35)

## 230. பொது மகளிர் உறவு அற

தானன தனத்தத் தாத்த தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த தனதான

வார்குழல் விரித்துத் தூக்கி வேல்விழி சுழற்றிப் பார்த்து
வாவென நகைத்துத் தோட்டு குழையாட-

---

* சூகரம் - பன்றி, அம்பு - அழகிய பூமியை; பூ என்பது பு எனக் குறுகிற்று. † சூதன் - தந்திரம் நிறைந்தவன்; தேர்ப்பாகன் எனலுமாம்; பாரதப் போரிற் பார்த்தனுக்கு (அருச்சுனனுக்குத்) தேர்ச்சாரதியாய்க் கண்ணபிரான் உதவினர். அதனால் அவருக்குப் 'பார்த்தசாரதி' எனப் பெயர் போந்தது.

**திருமால் வராகமாய்ப் பூமியை எடுத்து வந்த வரலாறு :**

இரணியாக்ஷன் என்னும் அசுரன் பூமியைப் பாய் போலச் சுருட்டி எடுத்துக் கொண்டு பாதளத்திற் சென்று ஒளித்துக் கொண்டான். திருமால்

பால்ய பருவத்தில் திரிதலுற்று, அழகிய மை பூசப்பட்ட கண்களை உடைய மங்கைமார்களிடத்தே நேசம் பூண்டு, (அவர்களுக்குத் தருவதற்காகப்) பொருள் தேடி

மாலைகள், நல்ல பொன்னாற் செய்யப்பட்டு விளங்கும் சிறந்த ஆபரணங்கள், விசித்தரமான

பொன்னால் வேலைப்பாடு அமைந்த ஓலை (கம்மல்-காதணி) (இவைதமைப் பூண்ட பெண்களை) முத்தங் கொடுத்து (என்) ஆவி மிகவும் நொந்து திரிவேனோ!

சூரனை வெருட்டி ஓட்டி அவனை அடியோடு (வேர் அறும்படியாகப்) பிளந்து சூழ்ந்துள்ள தேவர்களிடத்தே அன்பு காட்டின வீரனே!

பன்றியின் உருக் கொண்டு அழகிய பூமியை மேலே எடுத்து வந்த தந்திரம் நிறைந்த (அல்லது அருச்சுனனுக்குத் தேர்ப்பாகனாய் இருந்த) திருமாலுக்கு மருகனே!

ஏர் எதிர்த்து வர நீரைப் பாய்ச்சிக் கட்டி அப்போதைக்கப்போது இறைக்க வந்த பயனாய் விளைந்த ஒப்பற்ற (சாலியே) செந்நெல்களே

பெருகி உயர்ந்து வளர்ந்த சிறந்த வயல்கள் நிரம்ப உள்ள திரு ஏரகத்தில் (சுவாமிமலையில்) வீற்றிருக்கும் பெருமாளே!

(ஆவி மெத்த நொந்து திரிவேனோ)

## 230

நீண்ட கூந்தலை விரித்தும். தூக்கியும், வேல் போலும் விழியைச் சுழற்றிப் பார்த்து, வா என்று அழைத்துச் சிரித்து, (காதில் உள்ள) தோடும் குழைகளும் ஆட —

---

பன்றி உருவங் கொண்டு பாதாளத்திற்குச் சென்று தன் கொம்பினால் அவனைக் கொன்று பூமியைத் தனது கொம்பில் தாங்கி மேலே கொண்டு வந்து பழையபடி வைத்தார். "எயிறதன் நுதி மிசை இதமமர் புவி யது நிறுவிய எழிலர்"-சம்பந்தர் I-21-7.

வாசக முரைத்துச் சூத்ர பாவையெ னுறுப்பைக் காட்டி
வாசனை முலைக்கச் சாட்டி யழகாகச்;
சீர்கலை நெகிழ்த்துப் போர்த்து நூலிடை நெளித்துக்காட்டி
தீதெய நடித்துப் பாட்டு குயில்போலச்-
சேருற அழைத்துப் பார்த்து சார்வுற *மருத்திட் டாட்டி
சீர்பொருள் பறிப்பொய்க் கூத்த ருறவாமோ;
சூரர்கள் பதைக்கத் தேர்க்க ளானைக ளழித்துத் தாக்கி
சூர்கிரி கொளுத்திக் † கூற்று ரிடும்வேலா-
தூமொழி நகைத்துக் கூற்றை மாளிட வுதைத்துக் ‡கோத்த
தோலுடை § யெனப்பர்க் கேற்றி ** திரிவோனே;
ஏரணி சடைச்சிப் பாற்சொ லாரணி சிறக்கப் போற்று
†† மேரெழி னிறத்துக் கூர்த்த மகவோனே

---

* மருத்திட்டு - மருந்திடுதல் தமது வசப்படுத்துவதற்காக வேசையர் வாய் நீர். சிறு நீர்.. நாத நீர் ஆகிய மூன்று நீர் சம்பந்தப்பட்ட சொக்கு மருந்தைக் கரும்பின் சாற்றிற் கலந்து சோறிடும் போதோ படுக்கையிலோ ஆடவர்க்குத் தருதல். இதை முச்சலீலிகை என்பர். திருப்புகழ் 654-ன் குறிப்புரை பார்க்க. 28, 88, 296, 580, 603, 886, 894, 963-பாடல்களைப் பார்க்க. † கூற்றூர்: இயம லோகம்.

‡ கோத்த-உடுத்த-'கோத்த கல்லாடையும் கோவணமும்" சம்பந்தர் -வலம்புரம்-III-103-2.

§ என் அப்பர்க்கு எனப் பிரிக்க. ** திரிதல்-போதல்.

†† முருகவேளின் நிற விசேடத்தை "நிறத்திற் கந்தன்" என 77-ஆம் பாடலிற் சிறப்பித்ததைக் காண்க. நிறம் புகழ்-(புகழொளி). முருகன் புகழ் மிக்கவன் என்பதை "பலர் புகழ் நன்மொழிப் புலவரேறே" என்னும் திருமுருகாற்றுப்படையிலும். 'தொன் முதிர் மரபின் நின் புகழினும் பலவே' என்னும் பரிபாடலிலும் (14) காணலாம். நிறம்-ஒளி "பலர்புகழ் ஞாயிறு கடற் கண்டா அங்கு ஓவற இமைக்கும் சேண் விளங் கவிரொளி (திருமுருகாற்றுப்படை)- "சதகோடி சூரியர்கள் உதயமென -- ஒருசோதி வீசுவதும்" (சீர்பாத வகுப்பு).

பேச்சுக்கள் பேசி எந்திரப் பொம்மை என்று சொல்லும்படி (எந்திரப் பாவைபோல) பல அங்கங்களையும் காட்டி. மணமுள்ள கொங்கை ரவிக்கையை ஆட்டி. அழகாக —

சீரான ஆடையைத் தளர்த்திப் போர்த்து நூல் போல் நுண்ணிய இடையை நெளித்துக் காட்டி, "தீ-தெய" என்று (அல்லது-தீது ஏய பொருந்த) நடித்து நடனஞ் செய்து பாடல்களைக் குயில் போலப் பாடித்

தம்மைச்சேரும்படி அழைத்துப், பார்த்துத் தம்மிடத்தேயே சார்ந்திருக்கும்படி மருந்து வகையைத் தந்து தம் (இஷ்டப்படி) ஆட்டி வைத்துச் சீரான பொருள்களைப் பறிக்கின்ற பொய்க்கூத்தராம் (வேசையரது) உறவு ஆமோ (உறவு கூடாது என்றபடி)

சூரர்கள் பதைப்புறவும். தேர்கள், ஆனைகள் இவை அழியும்படி தாக்கியும், சூரனையும், எழு கிரியையும் (அல்லது. கிரௌஞ்ச கிரியையும்)சுட்டெரித்து (அச்சத்தைத் தந்த கிரௌஞ்ச கிரியைச் சுட்டெரித்து) (அப் பகைவர்களை) யமலோகத்துக்கு அனுப்பின வேலாயுதனே!

தூ* (பரிசுத்த) மொழியுடன் நகைசெய்து (மார்க்கண்டருக்காக) யமனை இறக்கும்படி உதைத்து, உரித்தெடுத்த தோலை உடையாகக்கொண்ட என் அப்பராம் சிவபிரானுக்கு உபதேச மொழியை ஏற்றிப் போந்தவனே!

அழகியசடையை உடையவள், பால் போல் இனிய சொல்லை உடையவளாம் தேவி பார்வதி விசேடமாகப் போற்றுகின்ற மிக்க அழகியநிறம் விளங்குகின்ற குழந்தையே !

---

* தூமொழி 'என் அடியான் உயிரை வௌவேல்' என்னும் தூமொழி; "என் அடியான் உயிரை வௌவேல்" என்று அடற் கூற்றுதைத்த பொன்னடி-சம்பந்தர் I-52-3.

தூமொழி-தேவி எனக்கொண்டு தேவி உதைக்க-எனவும் பொருள் கொள்ளக் கிடக்கின்றது, யமனை உதைத்தது தேவி- "சிவ பத்தினி கூற்றினை மோதிய பத சத்தினி' (திருப்புகழ் 751) கூற்றுவனைக் காய்ந்த அபிராமி' - (திருப்புகழ் 760)

ஏடணி குழைச்சித் தூர்த்த வாடகி குறத்திக் கேற்ற
ஏரக பொருப்பிற் பூத்த பெருமாளே. (36)

## 231. மாதர் கலவி யற

தனதனன தான தனதன தந்தன
தனதனன தான தனதன தந்தன
தனதனன தான தனதன தந்தன தனதான

விடமும்வடி வேலு மதனச ரங்களும்
வடுவுநிகரான மகரநெ டுங்குழை
விரவியுடன் மீளும் விழிகளு மென்புழு
கதுதோயும்-

ம்ருகமத படீர பரிமள குங்கும
மணியுமிள நீரும் வடகுல குன்றமும்
வெருவுவன பார புளகத னங்களும் வெகுகாம;

நடனபத நூபு ரமுமுகில் கெஞ்சிட
மலர்சொருகு கேச பரமுமி லங்கிய
நளினமலர் சோதி மதிமுக விம்பமும்
அனநேராம்-

நடையுநளிர் *மாதர் † நிலவுதொ ழுந்தனு
முழுதுமபி ராம அரிவய கிண்கிணெ
ணகையுமுள **மாதர் கலவியி னைந்துரு** **கிடலாமோ;**

---

* மாதர்-அழகிய.

† நிலவு தொழில் - நல்ல நாயகன் கிடைக்க வேண்டுமென்று சந்திரனைத் தொழுதல்.

பிறை தொழு கென்றல் என அகப்பொருள் துறை ஒன்றுளது. "[illegible] [illegible] செங்கராங் [illegible]... [illegible] வெள்ளைச் சிறு [illegible]"

பனை ஓலை இதழைக் குழையாகக் கொண்டவள், மறைபட்ட பொன் போன்றவள், திருமாலின் மகள் சுந்திரவல்லி குறவர்மகள் ஆனமையால் (மண் மூடின பொன் போன்றவள்) ஆகிய வள்ளிக்கு ஏற்ற (பொருந்திய) பெருமாளே! திரு ஏரகமலையில் (சாமிமலையில்) விளங்கும் பெருமாளே!

(பொருள்பறி பொய்க் கூத்தர் உறவாமே)

## 231

விஷமும். கூரிய வேலும் மன்மதனுடைய பாணங்களும், மாவடுவும் ஒப்பானவையாய், மகர மீன் போன்ற நீண்ட குழைகளுடன் கலந்து மீளும் கண்களையும், மென்மை வாய்ந்த புழுகு (புனுகு சட்டம்) கலந்த —

கஸ்தூரி, சந்தனம், மணமுள்ள செஞ்சாந்து இவை அணிந்துள்ள இளநீர் போன்றனவும் வடக்கே உள்ள சிறந்த மலையாம் மேரு போன்றனவும், அச்சந் தரத்தக்கனவும், பாரமுள்ளனவும், புளகம் பூண்டுள்ளனவுமான கொங்கைகளையும், மிக்க காமத்தை எழுப்பும்

நடனம் செய்கின்ற பாதங்களில் அணிந்துள்ள சிலம்பையும், மேகமும் (இதன் கரு நிறத்துக்கு முன்பு எனது கரு நிறம் எந்த மூலை என்று) கெஞ்சும்படி கறுத்தும், மலர் செருகப்பட்டதுமான கூந்தற் பாரத்தையும், விளங்கும் தாமரை மலர் போன்று ஒளி நிலா வீசும் முகச் சோதியையும், அன்னப் பறவைக்கு நேரான

நடை (அழகையும்), குளிர்ந்த அழகிய சந்திரனைத் தொழுகின்ற தேகம் முழுமையும் (அல்லது குளிர்ந்த அழகிய சந்திரன் இந்தத் தேகத்தின் அழகுக்கு முன்பு நமது அழகெங்கே என்று வணங்கத் தக்கதுமான) தேகம் முழுமையும் அழகு, ஒளியையும், அரி (சிலம்பின் உட்பரலின் பருக்கை மணிகளின்) ஒலியைத் தன்வசத்தே கொண்ட கிண்கிண் எனஒலிசெயும் சிரிப்பையும் கொண்ட மாதர்களுடைய சேர்க்கையை நினைந்து நான் (உள்ளம்) உருகுதல் ஆமா. உருகுதல் நன்றா! (உருகுதல் கூடாது என்றபடி)

வடிவுடைய மானு †மிகல்கர னுந்திக
‡ழெழுவகைம ராம ரமுநிக ரொன்றுமில்
வலியதிறல் §வாலி யுரமுநெ டுங் $ கட
லவையேழும்

மறநிருதர் சேனை முழுதுமி லங்கைமன்
வகையிரவி போலு மணியும லங்க்ருத
மணிமவுலி யான வொருபதும் விஞ்சிரு
பதுதோளும்;

அடைவலமு மாள விடுசர அம்புடை
தசரதகு மார ரகுகுல புங்கவன்
அருள்புனை ¶மு ராரி மருகவி ளங்கிய
மயிலேறி-

அடையலர்கள் மாள வொருநிமி டந்தினி
x லுலகைவல மாக நொடியினில் வந்துயர்
அழகியசு **வாமி மலை**யில மர்ந்தருள்
பெருமாளே (37)

## 232. பொது மகளிர் மயக்கு அற

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான

விரித்த பைங்குழ லொளிர்மல ரளிதன
தனத்த னந்தன தனதன வெனவொலி
விரிப்ப வண்கயல் விழியுறை குழையொடு
மலைபாய-

---

* மான் - மாரீசன் - சீதையை அபகரிக்க எண்ணங்கொண்ட இராவணன் ஏவலால் பொன்மான் உருக்கொண்டு வந்த அரக்கன் இவன். ராமர் அம்பினால் மாண்டான்.

† கரன் - இராமரால் தண்டகாரணியத்திற் கொல்லப்பட்ட ஓர் அரக்கன்.

‡ மரா மரங்கள் - இவை கிட்கிந்தைக்கு அருகில் இருந்த ஏழு ஆச்சா மரங்கள். இவற்றை இராமர் ஒரு பாணத்தாற் பிளந்தார்.

(அடுத்த பக்கம் பார்க்க)

அழகுடைய மானும் (மாரீசன் என்னும் அரக்கனும்) பகைத்து வந்த கரன் என்னும் அரக்கனும், விளங்கின ஏழு வகையான மரா மரங்களும். ஒப்பு எதுவும் இல்லாத வலிய பராக்ரமம் வாய்ந்த வாலி என்னும் குரங்கு வேந்தின் வலிமையும் (அல்லது மார்பும்), பெரிய கடல் ஏழும் —

வீரம் வாய்ந்த அரக்கர் சேனை முழுதும், இலங்கை அரசன் இராவணனுடைய சிறப்புற்ற சூரியன் போல ஒளி விடுவதாய் அணியப்பட்ட அலங்காரமான ரத்ன கிரீடம் விளங்கும் தலைகள் பத்தும், மேம்பட்டு விளங்கும் இருபது தோள்களும், (அவன்)

அடைந்திருந்த வலிமையும், (இவை யெலாம்) மாண்டு ஒடுங்க ஏவின போர் அம்பைக் கொண்ட தசரத ராஜ குமாரனும், ரகு வம்ச சிரேஷ்டனும், அருள் பாலிக்கும் மூர்த்தியுமான முராரியின் (முரன் என்னும் அசுரனுக்குப் பகையாய் அவனை அழித்த திருமாலின்) மருகனே! விளங்குகின்ற மயிலில் ஏறி —

ஒரு நிமிஷ நேரத்தில் பகைவர்கள் மாள உலகை வலமாக நொடிப்பொழுதில் வந்து, சிறந்த அழகிய சுவாமிமலையில் அமர்ந்தருளும் பெருமாளே!

(மாதர் கலவியில் நைந்து உருகிடல் ஆமோ)

## 232

விரிந்த செழுமை வாய்ந்த, கூந்தலில் விளங்குகின்ற மலர்களில் உள்ள வண்டுகள் "தன தனத்த னந்தன தனதன" என்னும் ஒலியை விரித்து எழுப்ப, வளமை வாய்ந்த மீன் போன்ற கண்கள் பொருந்தியுள்ள (காதிலுள்ள) குழைகளோ-டும் அலைபாய (பாய்ந்து அலைச்சலுற)

---

§ வாலி-இந்திரன் குமாரன். இவன் தம்பி சுக்கிரீவன் இராமரைத் துணை கொண்டு அவரால் இவனைக் கொல்வித்தான்.

$ கடல் மீது ராமர் அம்பை ஏவினது பாட்டு 177 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

¶ முரன்-நரகாசுரனுடைய சேநாபதியும் மந்திரியும்; கண்ண பிரானாற் கொல்லப்பட்டான். முரன்-அரி (பகைவன்) முராரி.

X உலகை வலம் வந்தது பாட்டு 184 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

மிகுத்த வண்சிலை நுதல்மிசை திலதமொ
டசைத்த பொன்குழை யழகெழ முகவொளி
வெயிற்ப ரந்திட * நகையிதழ் முருகலர் வரிபோதத்;

தரித்த தந்திரி மறிபுய மிசைபல
பணிக்கி லங்கிய பரிமள குவடிணை
தனக்கொ ழுந்துகள் ததைபட கொடியிடை படுசேலை-

தரித்து சுந்தர மெனஅடர் பரிபுர
பதச்சி லம்பொடு நடமிடு கணிகையர்
சழக்கர் விஞ்சையர் மயல்களின் முழுகுவ தொழியாதோ;

உரித்த வெங்கய மறியொடு புலிகலை
தரித்த சங்கரர் மதிநதி சடையினர்
ஒருத்தி பங்கின ரவர்பணி குருபர முருகோனே-

உவட்டி வந்திடு மவுணரொ டெழுகடல்
குவட்டை யும்பொடி பட † சத முடிவுற
வுழைத்த இந்திரர் பிரமனு மகிழ்வுற விடும்வேலா;

வரித்த ரந்துள வணிதிரு மருவிய
‡ வுரத்த பங்கயர் மரகத மழகிய
வணத்த § ரம்பர முறவிடு கணையினர் மருகோனே-

வனத்தில் வந்தொரு பழையவ னெனவொரு
குறத்தி மென்புன மருவிய கிளிதனை
மயக்கி மந்திர குருமலை தனிலமர் பெருமாளே. (38)

---

* நகை இதழ் முருகு அலர் வரி போத - தந்தங்களையுடைய இதழோடு கூடிய வாசனையுள்ள செங்குமுத மலரை யொத்த வாயினின்றும் இசைப்பாட்டுக்கள் எழ: வரி இசைப்பாட்டு.

† சதம் முடிவுற - நூறு அசுவமேதயாக முடிய. நூறு அசுவமேத யாகம் செய்து முடித்தவருக்கே இந்திர பதவி கிடைக்கும்.

"சுகுடஞ் சேர் பரி மக நூ றியற்றி வான் அரசு கன்னற் சுவை போற் பெற்றான்" (திருக்குற்றாலப் புராணம்.)

‡ உரத்த பங்கயர் - மார்பின் கண் தாமரையை உடையவர்.

§ கடல்மீது பாணம் செலுத்தினது-177-ஆம் பாடலின் கீழ்க் குறிப்பைப் பார்க்க.

மேம்பட்டு விளங்கும் வளமை பொருந்திய வில்லை நிகர்க்கும் நெற்றியின் மேல் உள்ள பொட்டும், அசைவுறும் பொற்குழையும் அழகு வீச, முகத்தின் ஒளியின் சோதி பரந்து விளங்க, பற்களொடும் இதழொடும் கூடிய வாசனையுள்ள (செங்குமுத) மலரை யொத்த வாயினின்றும் இசைப்-பாட்டுக்கள் எழ

ஏந்தியுள்ள (தந்திகளுடன் கூடிய) வீணை சார்ந்துள்ள புயங்களின் மீது பலவித ஆபரணங்களுடன் விளங்கும் மணமுள்ள மலைக்கு நிகரான கொங்கைகளின் மீது செழுமையுள்ள வாசனைப் பொடிகள் நெருங்கி அமைய, கொடி போல இடையிற்படுகின்ற புடைவையை

அணிந்து, அழகாயுளது என்று கூறும்படி பொருத்த மாயுள்ள பாத கிண்கிணியுடனும் பாதச் சிலம்புடனும் நடமிடு கின்ற பொதுமகளிராம் தீயர்களின் - வித்தைக்காரர்களின் மோக மயக்கங்களில் முழுகுவது (முழுகும் குணமும் பழக்கமும் என்னை விட்டு) விலகாதோ!

உரித்த கொடிய யானை, மான், புலி இவைகளின் தோலா டையைத் தரித்த சங்கரர், திங்கள், கங்கை இவை தலைச் சூடிய சடையினர், ஒப்பற்ற (பார்வதியை)ஒரு பாகத்திற் கொண்டவர் ஆகிய சிவபிரான் வணங்கிய குருபரனே! முருகனே!

வெறுப்புற்றுப் (பகைத்து) வந்த அசுரர்களும், ஏழு கடல்களும், (கிரௌஞ்ச) கிரியும் பொடி படும்படியும், நூறு அசுவமேத யாகம் முடியும்படி உழைத்து இந்திர பதவியைப் பெற்ற இந்திரர்களும், பிரமனும் மகிழ்வுறும் படியும் செலுத்திய வேலாயுதனே!

வண்டுகளின் வரிசையுள்ள துளவமாலை அணிந்தவரும், இலக்குமி பொருந்திய மார்பில் தாமரை மலரை உடையவரும், மரகதத்தின் (பச்சையின்) அழகிய நிறத்தினரும், கடல் மீது செலுத்திய பாணத்தை உடையவரும் ஆகிய திருமாலின் மருகனே!

(வள்ளிமலைக்) காட்டில் வந்து ஒரு கிழவனென (வேடம் பூண்டு) ஒப்பற்ற குறத்தி, (அழகிய தினைப்) புனத்திலிருந்த கிளி - ஆகிய வள்ளியை - மயக்கி மந்திர உபதேசத் தலமாகிய குருமலை (சாமிமலை)யில் அமர்ந்தருளும் பெருமாளே!

(கணிகையர் ... மயல்களில் முழுகுவ தொழியாதோ)

ஐந்தாவது திருப்பதிகள்

## குன்றுதோறாடல்

('குன்றுதோறாடல்' என்பது பல மலைகளுக்கும் பொதுவாக வழங்குஞ் சொல். முருகக்கடவுள் மலைக்கடவுளாதலின், 'மலைகிழவோன்', 'கிரிராஜன்', 'குறிஞ்சி வேந்தன்' எனப் பெயர் பெறுவர்.)

### 233. இடர் அற

தன்னந் தனன தந்த தனதான

அதிருங் கழல்ப ணிந்து னடியேனுன்-
அபயம் புகுவ தென்று நிலைகாண;
இதயந் தனிலி ருந்து க்ருபையாகி-
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே
எதிரங் கொருவ ரின்றி நடமாடும்-
இறைவன் தனது பங்கி லுமைபாலா;
பதியெங் கிலுமி ருந்து விளையாடிப்-
பலகுன் றிலும மர்ந்த பெருமாளே. (1)

### 234. அகப்பொருள்

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான

*எழுதிகழ் புவன நொடியள வதனி
லியல்பெற மயிலில் வருவோனே-
இமையவர் பரவி யடிதொழ அவுணர்
மடிவுற விடுவ தொருவேலா;

---

* புவனம் ஏழு - பாட்டு 157 - பார்க்க.

## 233

ஒலிக்கின்ற கழலணிந்த திருவடியைப் பணிந்து அடியேன் உன்னிடம்

சரணாகதி அடைவது எப்போது - நிலை காண்பதற்கு - (இந்த நிலையாத சமுத்திரமான சமுசாரத்தில் பிழைத்திருக்கும் நிலையைக் காண்பதற்கு நீயே தஞ்சமென உன்னிடம் நான் என்று சரண் புகுவேன்) —

(என்னுடைய) உள்ளத்தில் நீ வீற்றிருந்து அருள் கூர்ந்து

(எனக்கு நேரும்) இடையூறுகளும் (துன்பங்களும்) கலக்கங்களும் அஞ்சி என்னைவிட்டு அகல அருள் புரிவாயாக;

நிகர்ப்பவர் ஒருவர் இல்லாது நடனம் செய்கின்ற

இறைவனுடைய (சிவனுடைய) (ஒரு) பாகத்தில் (உறையும்) உமாதேவியின் குழந்தையே!

தலங்கள் எல்லா இடத்திலும் வீற்றிருந்து விளையாடிப் பலமலைகளிலும் வீற்றிருக்கும் பெருமாளே!

(இடர், சங்கைகள் கலங்க அருள்வாயே!)

## 234

ஏழு என விளங்கும் பூமிகளை ஒரு நொடிப் போதில் அழகு விளங்க மயிலில் வலம் வந்தவனே!

தேவர்கள் போற்றி செய்து (உனது) திருவடியைத் தொழ, அசுரர்கள் மாளும்படிக்குச் செலுத்திய ஒப்பற்ற வேலாயுதனே!

*வழுதியர் தமிழி †னொருபொரு ளதனை
வழிபட மொழியு முருகேசா-

மலரடி பணியு மடமகள் ‡பசலை
**மயல்கொடு தளர்வ** **தழகோதான்;**

முழுகிய புனலி லினமணி தரள
முறுகிடு பவள மிகவாரி-

§முறையொடு குறவர் மடமகள் சொரியு
முதுமலை யழக குருநாதா;

பழகிய வினைகள் பொடிபட அருளில்
படிபவ ரிதய முறுகோவே-

பருவரை துணிய வொருகணை $தெரிவ
**பலமலை** யுடைய பெருமாளே(2)

---

* வழுதியர் தமிழ் - பாண்டியர்களால் விருத்தி செய்யப்பட்ட தமிழ்.

† 'ஒருபொரு ளதனை வழிபட மொழியும் முருகேசன்' என்றது இறையனார் அகப்பொருளுக்குச் சங்கப்புலவர் பலரும் செய்துவந்த உரைகளை யெல்லாந் தனித்தனியே கேட்டு ஒவ்வோரிடங்களிற் சிரக்கம்பஞ் செய்து, நக்கீரர் செய்த உரையை முழுதும் வியந்து சிரக்கம்பஞ் செய்து ஸ்தாபித்தருளிய உருத்திரசன்மரை.(126 திருப்புகழ்-கீழ்க்குறிப்பைப் பார்க்க.)

‡ பசலை - காமநோயால் உண்டாகும் நிற வேறுபாடு.

§ முதுகிரியில் குறப்பெண்கள் மணியையும் தரளங்களையும் வாருதல்:-"மணித் தரளங்கள் வரத் திரண்டங் கெழிற் குறவர் சிறுமிமார்கள் முறங்களினாற் கொழித்து மணி செல விலக்கி முத்துலைப் பெய் முதுகுன்றமே" - சம்பந்தர் I-131-7. இது அருணகிரியார் சம்பந்தர் தேவாரத்தைப் படித்துள்ளார் என்பதற்குச் சான்று ஆகும். முதுகிரி-விருத்தாசலம்.

$ "தெரிகை பலபல வுடைய பெருமாளே" என்றும் பாடம்.

பாண்டியர்கள் போற்றி வளர்த்த தமிழில் ஒப்பற்ற (அகப்)பொருள் இலக்கணத்தைச், (சங்கப் புலவர்கள்) வழிபட (வணங்கி வேண்டி நிற்க) ஆய்ந்து உரைத்த (விளக்கிய) முருகேசனே!

(உனது) மலரடியைப் பணியும் (இந்த) மடமகள் (மடப்பம்-அறியாமை கொண்ட மகள்) காமத்தால் உற்ற நிறவேறுபாட்டுடன் மோக மயக்கத்தால் தளர்வது (இளைத்துப் போவது) அழகோ (நியாயமோ)!

முழுகிய நீரில் (நீரில் முழுகி) கூட்டமான மணிகளையும் முத்துக்களையும் கொடிபோற் பின்னிய பவளங்களையும் நிரம்ப வாரி —

(வாங்குங்கள் என்னும்) முறையீட்டோடு குறப்பெண்கள் சொரிகின்ற முதுகிரியில் (விருத்தாசலத்தில் உறைகின்ற) அழகனே! குருநாதனே!

(என்னுடன் ) கூடவே பழகி வருகின்ற வினைகள் (எல்லாம்) பொடிபடும்படி, (உனது) திருஅருளில் (மனம்) தோய்பவருடைய (அல்லது திரு அருளுக்குப் பாத்திரமானவர்களுடைய) உள்ளத்தில் வீற்றிருக்கும் தலைவனே!

பருத்த (கிரௌஞ்ச) மலை துணிபடும்படி ஒப்பற்ற ஆயுதத்தை தெரிந்தெடுத்துச் செலுத்தினவனே! பல மலைகளுக்கும் அதிபனாயுள்ள பெருமாளே!

(மயல் கொடு தளர்வது அழகோ தான்)

## 235. மனோலயம் பெற

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தந்ததான

தறையின் மானுட ராசையி னால்* மட
லெழுது மாலருள் மாதர்கள் தோதக
சரசர் மாமல ரோதியி னாலிரு கொங்கையாலுந்-

தளர்மி னேரிடை யாலுடை யால்நடை
யழகி னால்மொழி யால்விழி யால்மருள்
சவலை நாயடி யேன்மிக வாடிம யங்கலாமோ;

† பறவை யானமெய்ஞ் ஞானிகள் மோனிக
ளணுகொ ணாவகை நீடு ‡ மி ராசிய
பவன § பூரக வேகிக மாகிய விந்துநாதம்

பகரொ ணாதது சேரவொணாதது
நினையொ ணாதது வானத யாபர
பதிய தானச மாதிம னோலயம் வந்துதாராய்;

சிறைவி டாதநி சாசரர் சேனைகள்
மடிய நீலக லாபம தேறிய
திறல்வி நோத $ ச மௌத யாபர

** அம்புராசித்-

---

* மடல் எழுதுதல்:- மடல் ஏறுதல் - (மடல் - பனங்கருக்கு) தான் காதலித்த தலைவியைப் பெறாவிடத்துத் தலைவன் ஏறுதற் பொருட்டுப் பனங் கருக்காற் குதிரைபோற் செய்த ஊர்தி மேல் ஏறுதல். " ஏறிய மடற் றிறம்" (தொல்காப் . பொருள்51). மடல் எழுதுதல் - தலைவியின் படத்தை எழுதிக் கையிற் பிடித்துக் கொண்டு மடல் ஏறுதல். (இதன் விரிவை உசித சூடாமணி நிகண்டிற் காண்க) " எருக்கும் அணிந்து ஓர் கிழி பிடித்துப் பாய்சின மா என ஏறுவர் சீறூர்ப் பனை மடலே" - திருக்கோவையார் - 74.

(91-ம் பக்கம் பார்க்க)

# 235

(இப்) பூமியில் ஆண் மக்கள் (காம) ஆசை காரணத்தால் மடல் எழுதும் அளவு க்கு (அவர்களுக்கு) மயக்கத்தைத் தருகின்ற மாதர்கள், வஞ்சனையுடன் காம லீலை செய்பவர்கள் - ஆகிய இவர்களுடைய நல்ல மலர்கள் விளங்கும் கூந்தலாலும், இரண்டு கொங்கைகளாலும்

தளர்ச்சியைக் காட்டும் மின்னலுக்கு ஒப்பான இடையாலும், (உடுத்துள்ள) உடையாலும், நடை அழகினாலும், பேச்சாலும், கண்ணாலும், மோக மயக்கம் கொள்கின்ற சவலைப் பிள்ளை போல ஆதரவற்ற (அல்லது மனக்குழப்பம் உள்ள) நாய் போல் அடிமைப் பட்ட அடியேன் மிகவும் வாடி மயக்கங் கொள்ளலாமா!

ஓரிடத்தில் தங்காது பறவை போல எங்கும் திரிந்துலவும் மெய்ஞ் ஞானிகளும், மவுன நிலை கண்டோரும், அணுகுதற்குக் கூடாததாய் விலகி விளங்கும் ரகசியமானதும், வாயுவை (மூச்சை) அடக்குதலால் (பிராணாயாமத்தால்) ஒன்று படக் கூடிய சிவதத்துவ ஒலியாய் விளங்குவதும் —

சொல்ல ஒண்ணாததும், சேர ஒண்ணாததும், நினைக்க ஒண்ணாததுமான - கிருபைப் பரம்பொருளாய் - பதிப் பொருளான (இறைமை பூண்டதான) சமாதி நிலை மன ஒடுக்கத்தை (லயத்தை) மனம் ஒடுங்கும் பேற்றை (நீ) வந்து தந்தருளுக.

(தேவர்களுடைய) சிறையை விடாத அசுரர் சேனைகள் மாளும்படி நீலத்தோகை மயில் மேல் ஏறி வரும் சாமர்த்திய விநோதனே! கருணை கலந்த மூர்த்தியே! (தயை வாய்ந்த பரனே)! கடலின் —

---

† பறவையான மெய்ஞ்ஞானிகள்: யாரும் தம்மிடம் சேராத வகையிற் பறவைபோல எங்கும் திரிபவர்கள். "சேரொணா வகை வெளியே திரியு மெய்ஞ் ஞான யோகிகள்" என்றார் பிறி தோரிடத்து (திருப்புகழ்741). பராவுசிவர் நடமாடும் சிவமாயிருப்பவர். சித்தாந்தம் P. 154. April 1956. மலர் 29. இதழ் 4. ‡ இராசியம் - இரகசியம். § பூரகம் - பிராணாயாமத்துக்கு உறுப்பானதும் வாயுவை உள்ளே இழுப்பதுமான செயல் $ சமேளம் - சமேளனம்: கலப்பு. ** காவிரி கடல்போல அலை வீசும். "கடல் போற் காவேரி" - சம்பந்தர் I- 67 - 5.

திரைகள் போலலை மோதிய சீதள
குடக காவிரி நீளலை சூடிய
திரிசி ராமலை மேலுறை வீரகு றிஞ்சிவாழும்;
மறவர் நாயக ஆதிவி நாயக
ரிளைய நாயக காவிரி நாயக
வடிவி னாயக ஆனைத னாயக எங்கள்மானின்-
மகிழு நாயக தேவர்கள் நாயக
கவுரி நாயக னார்குரு நாயக
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே. (3)

## 236. உபதேசம் பெற

தந்தன தான தான தந்தன தான தான
தந்தன தான தான தனதான

வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்-
வண்புகழ் *பாரி காரி யென்றிசை வாது கூறி
†வந்தியர் போல வீணி லழியாதே;
செஞ்சர ணாத கீத கிண்கிணி நீப மாலை
திண்டிறல் வேல்ம யூர முகமாறும்-

---

* பாரி, காரி - கடையெழு வள்ளல்களிலிருவர்.

பாரி - முல்லைக் கொடிக்குத் தேர் கொடுத்த வள்ளல் - "சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய... பாரி" (சிறுபாணாற்றுப் படை 89-91). "கொடுக்கிலா தானைப் பாரியே என்று கூறினுங் கொடுப் பாரிலை" சுந்தரர் - புகலூர்த் தேவாரம்.

காரி -" ஈர நன்மொழி இரவலர்க்கு ஈந்த ** நெடுவேற் கழ றொடித் தடக்கைக் காரி" - (சிறுபாணாற்றுப்படை 93 - 95).

† வந்தியர் - புகழ்ந்து கூறுவோர்.

திரைகள் போலப் (பெரிய) அலைகளை மோதி வருவதும், குளிர்ந்ததும், குடக நாட்டிலிருந்து (மேற்கிலிருந்து) வருவது மான காவிரியாற்றின் பெரிய அலைகளை அணைந்துள்ள (அலைகளுக்கு அண்மையில் உள்ள) திரிசிராமலை மேல் வீற்றிருக்கும் வீரனே! மலை நிலத்தில் வாழும் —

வேடர்களுக்கு நாயகனே! ஆதிக் கணபதிக்குத் தம்பியாகிய நாயகனே! காவிரிக்கு நாயகனே! அழகுக்கு ஒரு நாயகனே! ஆனை (ஆனை வளர்த்த தேவ சேனைக்கு) நாயகனே! எங்கள் மான் போன்ற விழிகளை உடைய வள்ளியிடத்தே

மகிழும் நாயகனே! தேவர்களுக்கு நாயகனே! கவுரி (பார்வதி) யின் நாயகனாராம் சிவபிரானுக்குக் குரு நாயகனே (குரு மூர்த்தியே)! அழகிய **மலை எல்லாவற்றிலும்** வீற்றிருந்தருளும் தம்பிரானே!

(மனோலயம் வந்து தாராய்)

## 236

வஞ்சகமும் ஈயாத குணமும் கொண்ட மூடர்களுடைய பொருளையும் ஊர்களையும் தேடி, மஞ்சரி (பாக்களின் கொத்து - மஞ்சரிப் பா - என்னும் பாவகை) கோவை, தூது எனப்பட்ட பலவகைப் பா இனங்களால் - (பாடல் நூல் இனங்களால்) - அவர்களை

வண்மை (ஈதற் குணம் நிறைந்த) புகழ் வாய்ந்த பாரியே நீங்கள், காரியே நீங்கள் என்று புகழ்ச் சபதப் பேச்சுக்களைப் பேசி, புகழ்ந்து கூறுதற்கு என்றே (ராஜ சபையில்) ஏற்பட்ட தொழிலர் போல, வீணாக, (என் காலத்தை நான்) அழிவு செய்யாமல் - (உனது)

செம்மை வாய்ந்த திருவடியையும், ஒலி இசை செயும் கிண்கிணியையும், கடப்ப மாலையையும், வலிய திறமை வாய்ந்த வேலையும், மயிலையும், முகங்கள் ஆறினையும்,

செந்தமிழ் நாளு மோதி உய்ந்திட ஞான மூறு
செங்கனி வாயி லோர்சொ லருள்வாயே;

*பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாப மோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்-

பண்பறு பீலி யோடு வெங்கழு வேற வோது
பண்டித ஞான நீறு தருவோனே;

குஞ்சரம் யாளி மேவு பைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்-

கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ றாடல் மேவு பெருமாளே. (4)

## 237. திருவடி பெற

தந்தனா தான தானன, தந்தனா தான தானன
தந்தனா தான தானன தனதான

வஞ்சமே கோடி கோடிகள் நெஞ்சமே சேர மேவிய
வண்கணா ரார வாரமு மருள்வோராய்-

வம்பிலே வாது கூறிகள் கொஞ்சியே காம லீலைகள்
†வந்தியா ஆசை யேதரு விலைமாதர்;

பஞ்சமா பாவ மேதரு கொங்கைமேல் நேச மாய்வெகு
பஞ்சியே பேசி நாடொறு மெலியாதே-

---

*பஞ்சவன் - பாண்டியன்; அவனுடைய கூனையும் சுரத்தையும் தீர்த்தது, சமணரைக் கழுவேற்றியது பாட்டு 181 பார்க்க.

† வந்தியா - வந்தித்து; புகழ்ந்து.

செந்தமிழால் நாள் தோறும் ஓதி (நான்) உய்ந்திட, (நீ) உனது ஞானம் ஊறுகின்ற செம்மை சேர்ந்த கனி போன்ற வாயினால் (திருவாக்கால்) ஒப்பற்ற (உபதேசச்) சொல்லைப் போதித்து அருள்வாயாக.

பாண்டியனுடைய பெரிய (நெடு நாளாயிருந்த) கூனும், வந்து சேர்ந்த சுரமும், பஞ்சாய்ப் பறந்தோடும்படியும் வாது பேசி, சமண ஊமைகள்

மேன்மை அழிந்து அவர்களுடைய மயிற் பீலியுடனே கொடிய கழுவில் ஏறும் வகைக்குத் (திருப்பதிகங்களை) ஓதின பண்டித மூர்த்தியே! ஞானத் திருநீற்றைப் (பாண்டியனுக்குத்) தந்தவனே!

யானை, யாளி இவை இருந்த பசுமை வாய்ந்த தினைப் புனத்திலே உலவின மலை வேட்டுவருடைய சாதியார் ஒன்றுகூடி வெறியாட் டயர்ந்து (உன்னைக்)

கும்பிட்ட பயனாக (அவர்களிடம் வளர்ந்த வள்ளியை மணந்து அதனால்) அவர்களுக்கு நல்வாழ்வை அளித்து, அவர்களுடனே விளங்குகின்ற **மலைகள் தோறும்** விளையாடல் செய்யும் பெருமாளே!

(செங்கனி வாயிலோர் சொல் அருள்வாயே)

## 237

வஞ்சமே கோடி கோடிக் கணக்காய் உள்ளத்திற் பொருந்த வைத்துள்ள வன்கண்ணர் (கொடியர்), ஆரவாரத்துடன் அருள் புரிபவர்கள் போல-

வீண் வாது பேசுபவர்கள், கொஞ்சிப் பேசிக் காம லீலைகளைப் (பற்றிப்பேசிப்) புகழ்ந்து ஆசையை வளர்க்கின்ற விலை மாதர்களுடைய-

ஐம்பெரும் பாவங்களுக்கும் இடமாகும் கொங்கைகளின் மேல் அன்பு வைத்து, மிக வருத்தம் காட்டிப் பேசி, நாள் தோறும் நான் மெலிவு உறாமல்-

பந்தியாய் வானு ளோர்தொழ நின்றசீ ரேகு லாவிய
பண்புசேர் **பாத தாமரை** **யருள்வாயே;**

அஞ்சவே சூர னானவ னுய்ஞ்சுபோகாம லேயயில்
அன்றுதா னேவி வானவர் சிறைமீள-

அன்பினோ டேம னோரத மிஞ்சமே லான வாழ்வருள்
அண்டர்கோ வேப ராபர முதல்வோனே;

கொஞ்சவே காலின் மேவுச தங்கைதா னாட ஆடிய
கொன்றையா னாளு மேமகிழ் புதல்வோனே-

கொந்துசேர் *சோலை மேவிய குன்றுசூழ் வாக வேவரு
**குன்றுதோ றாடல்** மேவிய பெருமாளே.(5)

## கயிலை மலை

(இதனைத் தேவாரத்தில் நொடித்தான்மலை என்பர். வெள்ளியங்கிரி என்பதும் இதுவே.)

## 238. காயம் நிலை பெற

தனதன தனனத் தான, தனதன தனனத் தான
தனதன தனனத் தான தனதான

†திருநில மருவிக் காலி ‡ னிருவழி யடைபட் டோடி
சிவவழி யுடனுற் றேக பரமீதே-

சிவசுட ரதனைப் §பாவை மணமென மருவிக் கோல
$திரிபுர மெரியத் தீயி னகைமேவி;

---

*சோலை மேவிய குன்று - சோலை மலை (பழமுதிர் சோலை) எனலுமாம்.

†திருநிலம் - இதை நாரணபுரம் என்றார் - திருப்புகழ் 647 அல்லது "சுடர் பட்டி மண்டபம் (திருப்புகழ் 612) எனக் கொள்ளலாம். ‡இருவழி - இடைகலை பிங்கலை மார்க்கம்.

ஒழுங்கு பெற நின்று (தேவர்கள்) தொழ நின்ற பெருமை விளங்கும் சீர் பொருந்திய (உனது) பாத தாமரையை அருள்வாயே;

(சூரன்) அஞ்சும்படியும், சூரன் பிழைத்திராதபடியும் வேலை அன்றே செலுத்தித் தேவர்கள் சிறையினின்றும் மீள-

அன்பினுடனே, அவர் தம் விருப்பம் நிறைவேற, மேலான வாழ்வை (அவர்களுக்கு) அளித்த தேவநாயகனே! பராபர முதல்வனே!

கொஞ்சுதல் போலக் காலில் மேவு சதங்கைகள் ஒலிக்க நடனம்செய்த கொன்றை சூடியாம் சிவபிரான் நாள் தோறும் மகிழ்கின்ற புதல்வனே!

பூங்கொத்துக்கள் சேர்ந்த சோலைகள் பொருந்திய **குன்றுகளின்** சூழல் உள்ள மலைகளில் **எல்லாம்** (அல்லது சோலைமலை - (பழமுதிர் சோலை) ஆகிய குன்றுகளில் எல்லாம்) விளையாடல் கொண்ட பெருமாளே!

(பாத தாமரை அருள்வாயே)

## 238

ஒளி வீசும் (சோதி) இடத்தைப் பொருந்திப், பிராணவாயு செல்லும் இடைகலை பிங்கலை மார்க்கங்கள் அடைபடும்படி ஒட்டி, சிவ நெறியில் நின்று, தனித்து நிற்கும் மேலிடத்தே

சிவச் சோதியை - பொம்மைக் கலியாணம் போலக் கூடி, விளங்கி நிற்கும் (காமம், வெகுளி, மயக்கம் என்னும்) மும்மலங்களும் எரிபட்டழியத் தீயைச் செலுத்தும் நகை புரிந்து

---

§பாவை மணம் என மருவல் - பிரதிமை விவாகம் போலப் பாவித்தல்.

$திரிபுரம் - "மும்மலம். முப்புரமாவது மும்மல காரியம்" திருமந்திரம்.

இருவினை பொரியக் கோல திருவரு ளுருவத் தேகி
யிருள்*கதி ரிலிபொற் பூமி தவசூடே;

இருவரு முருகிக் காய நிலையென மருவித் †தேவ
**ரிளையவ னெனவித் தார மருள்வாயே-**

பரிபுர கழ‡லெட் டாசை செவிடுகள் படமுத் தேவர்
பழமறை பணியச் சூல மழுமானும்-

பரிவொடு சுழலச் சேடன் முடிநெறு நெறெனக் §கோவு
பரியினை மலர்விட் டாடி அடியோர்கள்;

$அரஹர உருகிச் சேசெ யெனதிரு நடனக் கோல
மருள்செயு முமையிற் பாக ரருள்பாலா-

அலரணி குழல்பொற் பாவை ¶திருமக ளமளிப் போரொ
டடியவர் **கயிலைக்** கான பெருமாளே(1)

## 239. ஞானம் பெற

தானந் தனத்ததன தானந் தனத்ததன
தானந் தனத்ததன தனதான

தேனுந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநிர்
சீரும் பழித்தசிவ மருளூறத்-

---

*இருள் கதிர் இலி பூமி - " வானிந்து கதிரிலாத நாடு" (திருப்புகழ் 179. பக்கம் 414.)

† "அமரோர் இளையோ னெனவே... அருள்வாயே" (திருப்புகழ் 563).
‡ எட் டாசை - அஷ்ட திக்கு.

§கோவு பரியினை மலர் விட்டு - இடபமாகிய பரியைப் பூமியில் விட்டு; கோ- பசு. " பசு வேறும் எங்கள் பரமன்" - சம்பந்தர் II -85-9. $அரஹர உருகி - $அரஹர என உருகி.

¶ திருமகள் - இலக்குமியின் புத்திரி.

X திரு அருளின் சுவை: "பரமானந்தந் தித்தித் தறிந்தவன்றே கரும்புந் துவர்த்துச் செந்தேனும் புளித்தறக் கைத்ததுவே"- கந். அலங்காரம் -6

"விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்ட பின், கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே" - திருமந்திரம்.2976.

(எனது) (நல்வினை - தீவினை என்னும்) இருவினைகளும் பொரிந்து சாம்பலாக, அழகிய (உனது) திரு அருளாம் உருவத்தே ஈடுபட்டு, இருளும் ஒளியும் இல்லாத அழகிய பூமியில் (இடத்தே) - தவநெறிப் பயனாய்-

இருவரும் உருகி (நீயும் நானும் ஒன்றுபட்டுக் கலந்து) - (அத்தகைய கலப்பால்) இவ்வுடல் நிலைபட்ட தெனப் பொருந்தித், தேவர்கள் (யாவரும்) (இவன்) இளையோன் என்று என்னை வியந்து கூறும்படியான விசித்திரப் பெரும்பேற்றை அருள்வாயாக;

சிலம்பின் (ஒலியும்) கழலின் (ஒலியும்) எட்டுத் திக்குகளும் செவிடுபட, பிரமன் - திருமால் - ருத்திரன் எனும் முத்தேவர்களும், பழைமையான வேதமும் பணிந்து போற்ற, சூலம், மழு, மான் (இவை மூன்றும்)

பக்குவமாய்ச் சுழல, ஆதிசேடனது முடிகள் நெறு நெறு என்று முறிய பசுவாகிய வாகனத்தில் (திருவடி) மலரை வைத்திருத்தலை விட்டு - நடனம் செய்து, அடியார்கள்-

அரஹர என உருகி, ஜெய ஜெய என்று போற்றத் திருநடனக் காட்சியைத் தந்தருளும் உமை பாகனாம் பரமேசர் அருளிய பாலனே!

மலர் அணிந்த கூந்தலையுடைய அழகிய பாவையும், இலக்குமியின் மகளுமான (வள்ளி)யின் படுக்கை (கலவிப்) போருக்கும், அடியாரிடத்தும், அல்லது அடியார்கள் வாழும் **கயிலைமலையிடத்தும்** - விருப்பங் காட்டும் பெருமாளே!

(இளையவன் என வித்தாரம் அருள்வாயே)

## 239

தேனைப் பெருக்கும் முப்பழங்கள் (வாழை, மா, பலா), பால், செவ்விய கரும்பு, இளநீர் இவைகளின் (சுவை) இன்பத்தைப் பழித்த சிவ அருள் (திருஅருள்) ஊறுவதால் (நன்கு பெருகுவதால்)

தீதும் பிடித்தவினை யேதும் பொடித்துவிழ
*சீவன் சிவச்சொருப மெனதேறி;

நானென்ப தற்றுயிரொ டூனென்ப தற்றுவெளி
நாதம் பரப்பிரம வொளிமீதே-

ஞானஞ் சுரப்பமகி ழாநந்த சித்தியொடெ
நாளும் களிக்கபத மருள்வாயே;

வானந் தழைக்கஅடி யேனுஞ் செழிக்க அயன்
மாலும் பிழைக்க அலை விடமாள-

வாருங் கரத்தனெமை யாளுந் தகப்பன்மழு
மானின் கரத்தனருள் முருகோனே;

தானந் தனத்ததன னாவண்டு சுற்றிமது
தானுண் கடப்பமல ரணிமார்பா-

தானங் குறித்துஎமை யாளுந் திருக்கயிலை
சாலுங் குறத்திமகிழ் பெருமாளே. (2)

## 240. பொது மகளிர் மயலற

தனத்த தனத்த தனத்த தனத்த
தனத்த தனத்த தனதான

நகைத்து வுருக்கி விழித்து மிரட்டி
நடித்து விதத்தி லதிமோகம்-

நடத்து சமத்தி முகத்தை மினுக்கி
நலத்தி லணைத்து மொழியாலுந்;

---

* சீவன் சிவச் சொரூபம்:-

'சீவனெனச் சிவனென்ன வேறில்லை' - திருமந்திரம் 2017.

'கருவெலா மாயவன்' - சம்பந்தர்,, III - 35 - 3.

தீமைகளும், தொடர்ந்துள்ள வினைகள் எல்லாமும் பொடிபட்டு அழிய ஜீவாத்மா ஆனது பரமாத்மாவாம் சிவனது சொரூபமே என்னும் உண்மையை உணர்ந்து - (அவ் வுணர்ச்சியின் பயனாய்)

நான் என்னும் அகங்காரம் தொலைந்து, உயிர், ஊன் என்னும் உணர்ச்சியும் (பற்றும்) அழிந்து, பரவெளி ஒலியாம் பரப்பிரம ஒளியிடத்தே

ஞானம் பெருகி எழ மகிழ்ச்சி தரும் ஆனந்த சித்தியை அடைந்து நாள் தோறும் நான் மகிழ உனது திருவடியை அருள்வாயே

பொன்னுலகம் தழைக்க, அடியேனும் செழிப்புற, பிரமனும் மாலும் பிழைக்க, கடல் விஷத்தை (ஆலகால விஷத்தை) ஒடுங்கும்படி ஆள - (தான் ஆண்டு உண்ண)

வாரிய கரங்களை உடையவன், எம்மை ஆள்கின்ற தகப்பன், மழு மான் (ஏந்திய) கரத்தன் ஈன்ற முருகனே! (பெற்ற குழந்தையே!)

தானந் தனத்த தனனா - என்று வண்டு சுற்றி மொய்த்து தேனை உண்கின்ற கடப்ப மலரை அணிந்துள்ள மார்பனே;

(எனது) நிலைமையைக் (கண்டு) குறித்து எம்மை ஆள்கின்ற பெருமாளே! திருக்கயிலைப் பெருமாளே! மிக்க அன்பு காட்டின குறத்தி (வள்ளி) மகிழ்கின்ற (அல்லது குறத்தியை மகிழ்ந்த) பெருமாளே!

(பதம் அருள்வாயே)

## 240

சிரித்து, (மனத்தை) உருக்கி, விழி விழித்து, அச்சத்தைத் தந்து, நடித்து, விதம் விதமாக (பலவிதமாக) அதிக மோக மயக்கத்தை

ஊட்டுகின்ற சமர்த்தைக் காட்டி, முகத்தை மினுக்கி, நல்லபடியே அணைத்து, பேச்சினாலும்-

திகைத்த வரத்தி லடுத்த பொருட்கை
திரட்டி யெடுத்து வரவேசெய்-

திருட்டு முலைப்பெண் மருட்டு வலைக்குள்
தெவிட்டு கலைக்குள் விழுவேனோ;

பகைத்த அரக்கர் சிரத்தை யறுத்து
படர்ச்சி கறுத்த மயிலேறிப்-

*பணைத்த கரத்த குணத்த †மணத்த
பதத்த ‡கனத்த தனமாதை;

மிகைத்த புனத்தி லிருத்தி யணைத்து
§வெளுத்த பொருப்பி லுறைநாதா-

விரித்த சடைக்கு ளொருத்தி யிருக்க
$ம்ருகத்தை யெடுத்தொர் பெருமாளே. (3)

## 241. திருவடி பெற

தனன தந்தன தானனா தனதனன
தனன தந்தன தானனா தனதனன
தனன தந்தன தானனா தனதனன தனதான

பனியின் ¶விந்துளி போலவே கருவினுறு
மளவி லங்கொரு ×சூசமாய் மிளகு ○துவர்
பனைதெ னங்கனி போலவே **பலகனியின் வயிறாகிப்-

---

*பணைத்தகரம் - மூங்கில் தன்மைத்த புயம் எனலுமாம்.

†மணத்தபதம் - மலர் மணம் மிக்க பாதங்கள் எனலுமாம்.

‡கனத்ததனம் - பருத்தமுலை என்க.

§ வெளுத்த பொருப்பு - வெள்ளி மலை: கயிலை.

$ம்ருகத்தை யெடுத்தோர் - மானேந்தி யாகிய சிவபெருமான்.

¶ விந்துளி - விந்து - துளி. " அறுகு நுனி பனியனைய சிறிய துளி பெரிய தொரு ஆகமாகி " - திருப்புகழ் - 862-

திகைப்பு உண்ட நிலையில் (அவர்கள் கேட்டபடி கொடுத்த) வரத்தின்படி கிடைத்த பொருளைக் கையிற்சேகரித்து எடுத்து வரும்படிச் செய்கின்ற-

திருட்டுப் (பெண்களுடைய), கொங்கையைக் கொண்ட பெண்களுடைய மருட்சி தரும் (காம) வலையில், நிறைந்த காம கலைக்குள் (சாஸ்திரங்களில்) (அல்லது) மறைவு தரும் சேலைக்குள் விழுவேனோ!

பகைத்து வந்த அரக்கர்களின் தலைகளை அறுத்து படர்ந்துள்ள கரு நிறம் (நீல நிறம்) கொண்ட மயிலில் ஏறி-

பருமைத் தன்மை வாய்ந்ததும், குணமான நன்மணங்கொண்ட பக்குவ நிலையும் பெருமையும் கொண்டதுமான கொங்கையை உடைய மாது வள்ளியை

சிறப்புமிக்க (தினைப்) புனத்தில் வைத்து அணைத்து வெள்ளி மலையில் **(கயிலைமலையில் - கந்தகிரியில்)** உறைகின்ற நாதனே!

விரித்துள்ள சடையில் ஒருத்தி (கங்கை) இருக்க, மானைக் கரத்தில் ஏந்தியவராகிய சிவபிரானுக்கு (உரிய) பெருமாளே!

(மருட்டு வலைக்குள்....விழுவேனோ)

## 241

பனி போலச் சுக்கிலம் துளி யளவுக்குக் கருவிற் சேர்ந்த அளவில் அவ்விடத்தே ஒரு அறிகுறியாய்ப், (பின்பு) மிளகு (அளவாய்), (பின்பு) பாக்கு (அளவாய்), அதன்பின் பனை, முற்றின தேங்காய் போலவும் ஆய், பின்னர், பலாப் பழ அளவுக்கு வயிறாகி-

---

முன் பக்கத் தொடர்ச்சி

X சூசம் - சூசகம் - அறிகுறி.

O துவர் - பாக்கு.

** பல கனி - பலாக் கனி.

பருவ முந்தலை கீழதாய் நழுவிநில
மருவி யொன்பது வாசல்சே ருருவமுள
பதுமை யின்செயல் போலவே வளிகயிறி னுடனாடி;

*மனைவி தந்தெரி யாமலே மலசலமொ
டுடல்ந கர்ந்தழு தாறியே அனைமுலையின்
மயம யின்றொரு பாலனா யிகமுடைய செயல்மேவி-

வடிவ முன்செய்த தீமையா †லெயுமுனையும்
அறம றந்‡தக மீதுபோய் தினதினமு
மனம ழிந்துடல் நாறினே னினியுனது கழல்தாராய்;

தனன தந்தன தானனா தனதனன
தினன திந்தன தீததோ திகுததிகு
தகுத குந்ததி தாகுதோ வெனமுழவு வளைபேரி-

தவில்க ணம்பறை காளமோ டிமிலைதொனி
யினமு ழங்கெழு வேலைபோ லதிரபொரு
சமர்மு கங்களின் மேவியே விருதுசொலு
மவு ணோர்கள்;

சினம ழிந்திட தேர்கள் §தோலரிபரிகள்
குருதி யெண்டிசை மூடவே அலகைநரி
$சிறையி னங்களி கூரவே நகையருளி விடும்வேலா-

சிவன்மகிழ்ந்தருளானைமா முகன்மருவி
மனமகிழ்ந்தருள் கூரவோர் கயிலைமகிழ்
திகழ்கு றிஞ்சியின் மாதுமால் மருவுபுகழ்
பெருமாளே. (4)

---

* மன - மன்ன.

† எயு முனையும் - ஏயும் உனையும். ‡அகம் - பாவம்.

§ தோல் - யானை. $சிறை யினம் - பறவை இனம். சிறையிட்ட தேவர் கூட்டம் எனவும் தொனிக்கும்.

(பூமிக்கு வர வேண்டிய) பருவ காலம் வந்தவுடன் தலை கீழாக நழுவி, (இப்) பூமியை அடைந்து, ஒன்பது துவாரங்கள் கொண்ட உருவ முள்ள ஒரு பதுமை (பொம்மை) போல, பிராணவாயு என்னும் கயிற்றின் உதவியாற் (செயல் உடன்) ஆடி -

(இப்பூமியில்) மன்ன (பொருந்தி யிருக்க). இப்படிப் போகின்றது என்னும் உணர்ச்சி இல்லாமலே மல சலம்பட்ட உடலுடன் தவழ்ந்தும், அழுதும், அழுகை ஓய்ந்தும், தாய் முலைமயமாம் பாலை உண்டு ஒரு பாலகனாய் (குழந்தையாய்), இப்பிறப்பிற் செயும்படி விதிக்கப்பட்ட செயல்களைச் செய்து-

உருவம் முற்பிறப்பிற் செய்த தீமை காரணமாகப் பொருந்தும்; அங்ஙனம் பொருந்தி உன்னையும் அடியோடு மறந்து, பாவம் மேல் மேல் வளர, நாள்தோறும் மனம் உடைந்தழிபட்டு, உடல் (உருக்குலைவு தோன்றிக்) கெடு கின்றேன்; இனி உனது திருவடியைத் தந்தருளுவாயாக;

தனன தந்தன தானனா தனதனன ** ** ** தாகுதோ என்று முழவு (முரசு), சங்கு, பேரி-

தவில் (மேள வகை), கணப்பறை (அதமக்கருவியான புற முழவு), எக்காளம் இவை ஒலிக்கும் ஒலி வகைகள் முழக்கஞ் செய்து ஏழு கடல்களின் ஒலிபோலப் பேரொலியைக் கிளப்ப, போர் நடக்கும் போர் முனைகளில் நின்று (தமது) பிரதாபங்களைப் பேசும் அசுரர்களின்

கோபங் குலைந்து அழிபட, தேர்கள் (அழிபட), யானைகள், வலிமை உடைய குதிரைகள் (இவைகளின்) ரத்தம்எட்டுத்திசையளவும் மூட, பேய்கள், நரிகள், பறவைகள் மகிழ்ச்சி கொள்ளச் சிரித்தருளிச் செலுத்திய வேலாயுதனே!

சிவன் மகிழ்ந்தருளிய ஆனையின் அழகிய முகங்கொண்ட கணபதி கூட இருந்து மனம் மகிழ்ந்து அருள்பாலிக்க, ஒப்பற்ற கயிலைமலையில் மகிழும் பெருமாளே! விளங்கும் மலை நிலத்து (வள்ளிமலை) மாது (வள்ளி)யானவள் காதல் கொள்ளும் புகழ் வாய்ந்த பெருமாளே! (அல்லது வள்ளியின் மீது காதல் கொள்ளும் புகழ் வாய்ந்த பெருமாளே!)

(உனது கழல் தாராய்)

## 242. கவி பாட

தனதனனத் தனதான

*புமியதனிற் ப்ரபுவான -
புகலியில்வித் தகர்போல;

†அமிர்தகவித் தொடைபாட-
அடிமைதனக் கருள்வாயே;

சமரி ‡லெதிர்த் தசுர்மாளத்-
தனியயில்விட் டருள்வோனே;

நமசிவயப் பொருளானே-
§ ரசதகிரிப் பெருமாளே.(5)

## 243. பொது மகளிர் மயல் அற

தனத்தத் தனத்த தத்த, தனத்தத் தனத்த தத்த
தனத்தத் தனத்த தத்த தனதான

முகத்தைப் பிலுக்கி மெத்த மினுக்கித் தொடைத்து ரத்ந
முலைக்கச் சவிழ்த்த சைத்து முசியாதே-

முழுக்கக் கழப்பி யெத்தி மழுப்பிப் பொருட்ப றித்து
மொழிக்குட் படுத்த ழைத்த மளிமீதே;

நகைத்திட் டழுத்தி முத்த மளித்துக் களித்து மெத்த
நயத்திற் கழுத்தி றுக்கி யணைவார்பால்-

---

*பூமி என்பது புமி என்றாயிற்று.

‡ "அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும் பெருமை முயற்சி தரும்" - என்னும் வள்ளுவர் வாக்குக்கு ஒப்ப அருணகிரியாரின் வேண்டுகோள்கள் எல்லாம் அருமையானவையாய் இருக்கும் என்பதற்கு இவ்வேண்டுகோள் ஒரு சான்று. உன் தந்தைக்கு 'உணர்த்திய உபதேசத்தை எனக்கு உணர்த்தி அருளுக என முருகவேளை வேண்டின பெரியாரல்லவா அருணகிரியார். (கந்தர் அநுபூதி-36, திருப்புகழ் - 173,

## 242

இந்தப் பூமியிற் ப்ரபுவாக (அரசாக)த் தோன்றிய

சீகாழித் தலத்து ஞான சம்பந்தப் பெருமான் போல

அமுதமே இது என்று சொல்லத் தக்க கவிமாலையைப் பாடுதற்கு

அடிமையாகிய எனக்கு அருள் பாலிப்பாயாக.

போரில் எதிர்த்து வந்த அசுரர்கள் மாளும்படி

ஒப்பற்ற வேலாயுதத்தைச் செலுத்தி அருள்வோனே!

"நமசிவய" என்னும் ஐந்தெழுத்தின் மூலப்பொருளா யுள்ளவனே!

வெள்ளியங்கிரி **(கயிலைமலைப்)** பெருமாளே!

*(அமர்தகவி பாட அருள்வாயே)*

## 243

முகத்தை நன்றாக ஒழுங்கு செய்து அலங்கரித்து, மிகவும் மினுக்கித் தொடைத்து, ரத்னமயமான கொங்கைக் கச்சை (ரவிக்கையை) அவிழ்த்து, அசைத்து, சற்றேனும் பின் வாங்காமல் (சற்றேனும் மனம் சலிக்காமல்)

முழுமையும் (நன்றாகக்) கழப்பியும் (காலம் போக்கியும்), வஞ்சித்தும், மழுப்பியும் (தாமதப்படுத்தியும், ஏமாற்றியும்), (வந்தவர்களிடம்) பொருளைப் பறித்து, (அவர்களைத்) தங்களுடைய பேச்சில் மயக்கி உட்படவைத்து, அழைத்துக் கொண்டு போய்ப் படுக்கையின் மேலே-

சிரிப்புடனே அணைத்து முத்தமிட்டு மகிழ்ந்து மிகுந்த பக்குவத்துடனே கழுத்தை அழுந்த அணைந்து கொள்ளும் மாதர்களுக்கு

---

முன் பக்கத் தொடர்ச்சி

பக்கம்-400) ‡எதிர்த்த சுர்-எதிர்த்த சூர்; சூர்-சூரன் § ரசதகிரி வெள்ளியங்கிரி.

நடுக்குற் றவர்க்கு மெத்த மனத்தைப் பெருக்க வைத்து
நயத்துத் தியக்கி நித்த மழிவேனோ;

செகக்கச் செகக்க செக்க தரிக்கத் தரிக்க தக்க
திமித்தித் திமித்தி தித்தி யெனஆடும்-

செகத்துக் கொருத்தர் புத்ர நினைத்துத் துதித்த பத்த
ஜெனத்துக் கினித்த சித்தி யருள்வோனே;

மிகைத்துத் திடத்தொ டுற்று அசைத்துப் பொறுத்தரக்கன்*
மிகுத்துப் பெயர்த்தெ டுத்த கயிலாய-

மிசைக்குற் றடுத்து மற்ற பொருப்பைப் பொடித்தி டித்து
மிதித்துத் துகைத்து விட்ட பெருமாளே. (6)

---

## ஸ்ரீசைலம் (திருமலை)

(இதனைத் திருமலை எனவும் திருப்பருப்பதம் எனவும் மல்லிகார்ச்சுனபுரம் எனவுங் கூறுவர். மூவர் தேவாரமும் பெற்ற ஸ்தலம். கர்நூல் மாவட்ட நந்தியாற்றிலிருந்து 60-மைல். இங்குச் சிவராத்திரி தரிசனம் விசேஷம்.)

## 244. தரிசனம் பெற

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான

†ஒருபது மிருபது மறுபது முடனறு
முணர்வுற இருபத முளநாடி-

உருகிட ‡முழுமதி தழலென வொளி திகழ்
வெளியொடு வொளிபெற விரவாதே;

---

*ராவணன் கயிலை வரை எடுத்த வரலாறு:-பாட்டு 188 பார்க்க.

†(10+20+60+6)96 தத்துவங்கள்-பாடல் 151.

அஞ்சி நடுங்கி, மிகவும் மனதை அவர்கள் பால் பெருகிப் பாய வைத்து, அவர்களை நயந்து வேண்டியும், அவர்களால் கலக்கம் உற்றும், தினந்தோறும் அழிவேனோ!

செகக்கச் செகக்க செக்க ...திமித்தித் திமித்தி தித்தி என்று கூத்தாடுகின்ற

உலகுக்கு ஒருத்தராய் (ஒப்பற்றவராய்) நிற்கும் சிவபிரானுடைய குமரனே! நினைத்துத் துதிக்கின்ற பக்த ஜனங்களுக்கு (அடியார் கூட்டத்துக்கு) இனிமையான பேற்றை அருள்பவனே!

மேற் சென்று திடத்துடனே பொருந்தி, அசைத்து, மலையின் பாரத்தைப் பொறுத்து, அரக்கன் (ராவணன்) தருக்கு (ஆணவம்) மிக்குப் பெயர்த்து எடுத்த கயிலாய (மலையின்)

மீதே வீற்றிருந்து அந்தக் கயிலை மலைக்கு அடுத்திருந்த பிறிதொரு மலையான கிரௌஞ்சத்தை பொடியாம்படித் தூள் செய்து அடக்கித் தொகையல் செய்துவிட்ட பெருமாளே!

(அணைவார்பால்...மனத்தை...அழிவேனோ!)

## 244

ஒரு பத்தும், இருபதும், அறுபதும் (அவையுடன்) ஆறும் (ஆகத்) தொண்ணூற்றாறு தத்துவங்களின் தன்மையை உணர்ந்து, (உனது) இரண்டு திருவடிகளையும் உள்ளத்தில் விரும்பி நாடி-(மனம்)

உருக, முழுமதியின் ‡ போன்ற ஒளி வீசும் பரவெளியின் ஒளிபெறக் கலவாது (சேருதற்கு முயற்சி செய்யாமல்),

---

முன் பக்கத் தொடர்ச்சி

‡ முழுமதி வெளி-இதனையே "(தவத்துணர்வு தந்து அடிமை முத்தி பெற) சந்திர வெளிக்கு வழி அருள்வாயே" - என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 398).

*தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து*
*திரிதொழிலவமது புரியாதே-*

*திருமகள் மருவிய திரள்புய அறுமுக*
**தெரிசனை பெறஅருள் புரிவாயே;**

*பரிவுட னழகிய பழமொடு கடலைகள்*
*பயறொடு சிலவகை பணியாரம்-*

*பருகிடு பெருவயி றுடையவர் *பழமொழி*
*எழுதிய கணபதி யிளையோனே;*

*பெருமலை யுருவிட அடியவ ருருகிட*
*பிணிகெட அருள்தரு குமரேசா-*

*பிடியொடு களிறுகள் நடையிட கலைதிரள்*
*பிணையமர்* **திருமலை** *பெருமாளே.* (1)

---

## திருவேங்கடம்

(திருவேங்கடம், வடமலை என்பன திருப்பதி. சித்தூர் மாவட்டத்தில் உள்ளது, புகைவண்டி நிலையம் பிரபல விட்ணு தலம். ஸ்வாமிகள் காலத்தில் விட்ணு ஆலையம் முருகர் ஆலையம் இரண்டும் இத்தலத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்பது இத்தலத்துக்குத் திருப்புகழ் இருப்பதாலும், ஸ்வாமிகளே "உலகீன்ற பச்சை யுமை யணன் வடவேங் கடத்தி லுறைபவன்" எனத் திருவாஞ்சியத்துத் திருப்புகழிற் *(816)* கூறுதலாலும் பெறப்படுகின்து)

---

*பழமொழி எழுதிய கணபதி-'முத்தமிழ் அடைவினை...எழுதிய *(விநா.1)*; பாரதத்தை எழுதின வரலாற்றைத் திருப்புகழ் *88, 441, 960,1019. 1098* பாடல்களிலும் காண்க.

தெருவில் மரம்போல நின்று யாரோடும் பேசிப் பேசித் திரிகின்ற தொழிலை நான் வீணாக மேற் கொண்டுள்ளேன்; அங்ஙனம் மேற்கொள்ளாமல்

*இலக்குமியின் மகளாம் வள்ளி அணைகின்ற திரண்ட புயங்களை உடைய ஆறுமுகனே! (அல்லது திரண்ட புயங்களை உடையவனே! ஆறுமுகனே!) உனது தரிசனையைப் பெற அருள்புரிவாயே! (அல்லது) ஆறுமுகங்களின் தரிசனை-யைக் (காட்சியை) ப் பெற அருள்வாயே;

அன்புடனே நல்ல பழங்களுடன், கடலை வகைகள், பயறுடனே சில வகைப்பட்ட பணியாரங்கள் (பலகாரங்கள்) (இவைகளை)

உண்ணும் பெரு வயிற்றினை உடையவர், பழமொழியாம் தமிழில் (பாரதத்தை மேருமலையில்) எழுதிய கணபதிக்குத் தம்பியே!

பெரிய கிரௌஞ்ச கிரி ஊடுருவ (அங்ஙனம் வேல் ஊடுருவினதால் அழிபட), அடியார்கள் (நெஞ்சம் நெக்கு) உருக, அவர்களுடைய பிணி நோய்கள் தொலைய அருள்பாலிக்கும் குமரேசனே!

பெண் யானைகளுடன் ஆண் யானைகள் உலவ, கலை மான்களின் கூட்டம் பெண்மான்களுடன் இருக்கின்ற †திருமலை (யில் வீற்றிருக்கும்) பெருமாளே!

(தெரிசனை பெற அருள் புரிவாயே)

---

*(வீர) இலக்குமி மருவிய திரண்ட புயத்தனே!

†திருமலை என்றே ஒரு பிரபல சுப்ரமணியத்தலம் தென்காசி. குற்றாலத்துக்குச் சமீபத்திற் செங்கோட்டை புகைவண்டி நிலையத்துக்கு வடமேற்கு 5-மைல் தூரத்திலுள்ளது.

## 245. தொண்டருக்குத் தொண்டு செய்ய

தனத்ததன தனன தனந்த
தனத்ததன தனன தனந்த
தனத்ததன தனன தனந்த தனதான

கறுத்ததலை வெளிறு மிகுந்து
மதர்த்த இணை விழிகள் குழிந்து
கதுப்பிலுறு தசைகள் வறண்டு செவிதோலாய்க்-

கழுத்தடியு மடைய வளைந்து
கனத்தநெடு முதுகு குனிந்து
கதுப்புறுப லடைய விழுந்து தடுநீர்சோர்;

உறக்கம்வரு மளவி லெலும்பு
குலுக்கிவிடு மிருமல் தொடங்கி
உரத்தகன குரலு நெரிந்து தடிகாலாய்-

உரைத்த நடை தளரு முடம்பு
பழுத்திடுமுன் மிகவும் விரும்பி
**உனக்கடிமை படுமவர் *தொண்டு புரிவேனோ;**

சிறுத்த† செலு வதனு ளிருந்து
பெருத்ததிரை யுததி கரந்து
செறித்தமறை கொணர நிவந்த ஜெயமா‡லே-

செறித்தவளை கடலில் வரம்பு
புதுக்கியிளை யவனொ டறிந்து
செயிர்த்தஅநு மனையு முகந்து படையோடி;

---

*அடியார்க்கு அடியராதலின் சிறப்பை அப்பர் சுவாமிகள் "நமக்கு உண்டு கொலோ தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" (IV-10) என விளக்கித் திருப்பதிகம் பாடியுள்ளார். † செலு-மீன்சிறை.

‡ திருமால் வேதங்களை மீட்டது: -- சோமுகன் என்னும் அசுரன் பிரமனிடத்திருந்த மறை நூல்களை (வேத புத்தகங்களைப்) பிடுங்கி எடுத்துக் கொண்டு போய்க் கடலுள் மறைந்தான். திருமால் பெரிய சேல் மீனாகிக் கடல் நீருட் புக்கு அச் சோமுகனைக் கொன்று வேத

# 245

கறுப்பு (மயிருடன்) இருந்த தலை வெள்ளை நிறத்தை மிகுதியாக அடைந்து, செழிப்புற்று இருந்த இரண்டு கண்களும் குழி விழுந்து ஒடுங்கி, கன்னத்தில் இருந்த சதைகள் (எல்லாம்) வற்றிப்போய் செவிகள் (வெறுந்) தோலாய் மெலிய-

கழுத்தின் அடிப்பாகம் முழுமையும் வளைந்து, கனத்திருந்த நீண்ட முதுகு குனிந்து குறுக, தாடையிலிருந்த பல் எல்லாம் விழுந்து ஒழிய, *உதடுகள் நீர் (சொள்ளு) சோர (ஒழுக)

தூக்கம் வரும் சமயத்தில் எலும்புகளை (அப்படியே) குலுக்கித் தள்ளும் இருமல் தொடங்க, அழுத்தமான பலமான குரல் நெரிபட்டு அடக்கம் கொள்ள, தடியே கால் போல் உதவ

பலத்த நடை தளர்ந்து போகும் (இந்த) உடம்பு பழுத்திடும் முன்பு (மூப்பு முதிர்வதின் முன்பு) மிக்க நேசம் வைத்து உனக்கு அடிமை பூண்டுள்ள தொண்டர்களுக்குத் தொண்டு புரிய மாட்டேனோ!

சிறுத்த மீன் சிறையிலிருந்து-மீனுருவம் கொண்டு பெருத்த அலைகளை வீசும் கடலிற் பதுங்கி மறைத்து வைத்த மறையை (வேதங்களை) மீட்டுவரத் தோன்றி வெற்றி பெற்ற திருமால், பாணத்தைப்

பிரயோகஞ்செய்து அந்த வளைந்த கடலில் அணையைப் புதிதாக அமைத்து, இளையவனாம் இலக்குமணனோடும், (ராவணனது நிலைமையை) அறிந்து கோபித்த (இலங்கையில் தீ மூட்டி வந்த) அநுமாருடன் மகிழ்ந்து படையைச் செலுத்தி

---

முன் பக்கத் தொடர்ச்சி

புத்தகங்களைக் கைப்பற்றி மீண்டனர். ‡ ஏ செறித்து அவளை கடலில் - பாணம் பிரயோகஞ் செய்து அந்த வளைந்த கடலில்.

*உதடு நீர் சோர் உறக்கம் வருமளவில் எனப் பிரிக்க.

மறப்புரிசை வளையு மிலங்கை
யரக்கனொரு பதுமுடி சிந்த
வளைத்தசிலை விஜய முகுந்தன் மருகோனே-

மலர்க்கமல வடிவுள செங்கை
அயிற்குமர *குகைவழி வந்த
மலைச்சிகர வடமலை நின்ற பெருமாளே. (1)

## 245-1. கதிபெற

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதன தனதன தனதான

சரவண பவநிதி யறுமுக குருபர
சரவண பவநிதி யறுமுக குருபர
சரவண பவநிதி யறுமுக குருபர எனவோதித்-

தமிழினி லுருகிய வடியவ ரிடமுறு
சனன மரணமதை யொழிவுற சிவமுற
தருபிணி துளவர மெமதுயிர் சுகமுற வருள்வாயே;

கருணைய விழிபொழி யொருதனி முதலென
வருகரி திருமுகர் துணைகொளு மிளையவ
கவிதை யமுதமொழி தருபவ ருயிர்பெற வருள்நேயா

கடலுல கினில்வரு முயிர்படு ‡மவதிகள்
கலகமி னையதுள கழியவும் நிலைபெற
**கதியு முனதுதிரு வடிநிழல் தருவது மொருநாளே.**

---

*பார்வதியுடன் மாறுபட்டு முருகவேள் கந்தகிரியை விட்டு பாதாளத்துக்குச் சென்று அங்கிருந்து ஒரு குகை வழியாக வந்து திருவேங்கட மலையில் எழுந்தருளினார் என்று ஒரு வரலாறு: இதனை

" அண்ட மன்னுயி ரீன்றவ ளுடன்முனி வாகித்
தொண்ட கங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்."

வெற்றி மதில்கள் வளைந்துள்ள இலங்கை அரக்கனாம் இராவணனுடைய ஒரு பத்து முடிகளும் அறுபட்டு விழும்படி வளைத்த வில் ஏந்திய வெற்றி முகுந்தன் ஆகிய திருமாலின் மருகனே!

மலர்ந்த தாமரையின் வடிவு கொண்டுள்ள செங்கையில் வேல் ஏந்திய குமரனே! (முன்பு ஒருகாலத்தில்) நீ குகை வழியாக வந்து வெளிநின்ற மலையாகிய சிகரங்களைக் கொண்ட **வடமலையில்** (வடவேங்கட மலையில்) நிற்கும் பெருமாளே!

*(உனக் கடிமை படுமவர் தொண்டு புரிவேனோ)*

## 245-1

சரவண பவனே! (என்) நிதியே! அறுமுகனே! குருபரனே! சரவண பவனே!(என்)நிதியே ! அறுமுகனே! குருபரனே! சரவண பவனே! (என்) நிதியே! அறுமுகனே! குருபரனே! என்று (பலமுறை) ஓதித்

தமிழ்ப் பாடல்களிலும் வசனங்களிலும் உருகிய அடியார்களுக்கு உற்ற பிறப்பு இறப்பு நீங்குதல் உற்று சிவப்பேறு உற, வருகின்ற பிணிகள் துள்ள (குதித்து ஓட), வரம் எமதுயிர் சுகமுற (எமது உயிர் சுகம் உற ) வரம் அருள்வாயே!

கருணைய விழி பொழி (விழி பொழி கருணைய- கண்கள் பொழிகின்ற கருணையைக் கொண்டவனே) ஒப்பற்ற தனி முதல்வன் என வந்த ஆனையின் திருமுகத்துக் கணபதியைத் துணைவனாகச் (சகோதரனாகக்) கொண்டுள்ள இளையவனே! பாடல்களை அமுதம் போன்ற மொழிகளில் அமைப்பவர் களுடைய உயிர் (நற்கதி) பெற அருளுகின்ற நேசனே! (அன்பு பூண்டவனே!)

கடல் சூழ்ந்த இவ்வுலகில் தோன்றும் உயிர்கள் படுகின்ற துன்பங்களும் கலக்கங்களும் இன்னும் இத்தகையனவாய் அவ்வுயிர்க்கு உள்ளளவும் (உள்ள வேதனைகளும்) கழிந்து நீங்குதலையும், நிலை பெறும்படியான நற்கதியைப் பெறுதலையும், உனது திருவடி நிழல் தருகின்ற ஒரு நாள் (எனக்குக்) கிடைக்குமா!

---

முன் பக்கத் தொடர்ச்சி

என்று கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் கந்தபுராணத்தில் வழி நடைப் படலத்திற் கூறியிருத்தலையுங் காண்க.

†என ஓது ‡அதிகன என பாட பேதம் சமாகப் பதிப்பில்-பாடம் 647

திரிபுர மெரிசெயு மிறையவ ரருளிய
குமரச மரபுரி தணிகையு மிகுமுயர்
சிவகிரி யிலும்வட மலையிலு முலவிய வடிவேலா-

தினமு முனதுதுதி பரவிய அடியவர்
மனது குடியுமிரு பொருளிலு மிலகுவ
திமிர மலமொழிய தினகர னெனவரு பெருவாழ்வே;

அரவணை மிசைதுயில் *நரகரிநெடியவர்
மருக னெனவெவரு மதிசய முடையவ
அமலி விமலிபரை உமையவ ளருளிய முருகோனே-

அதல விதல முதல் கிடுகிடு கிடுவென
வருமயி லினிதொளிர் ஷடுமையில் நடுவுற
அழகி னுடனமரு மரகர சிவசிவ பெருமாளே. (1A)

## 245-2. அருள்பெற

தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தத்தத் தத்தத் தனதான
தனத்த தனத்த தனத்த தனத்தன
தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான

நெச்சுப் பிச்சிப் புட்பத் தட்பக்
கச்சிக் கச்சுற் றறன்மேவி
நெறித்து வெறித்து இருட்டை வெருட்டிய
நிரைதரு மருமலர் செருகிடு பரிமள
நிறையுறை மதுகர நெடிதாடி-

---

*நரகரி-நரகாசுரனைக் கொன்றவன்; நரசிம்ம உருவங் கொண்டு இரணியகசிபைக் கொன்ற திருமால்; தேகம்- நர (மனித) உருவம், சிரம்- சிங்க உருவம்; நரகாசுரன் அதிதியின் காதணியையும், வருணன் குடையினையும் கவர்ந்தமையால் கண்ணபிரான் இவனைக் கொன்று காதணி முதலியவற்றைக் கொணர்ந்தனர்.

*திரிபுரங்களை எரித்த இறையவர் (சிவபிரான்) அளித்த குமரனே! திருப்போரூரிலும், தணிகையிலும், மிகவும் உயர்ந்த சிவகிரி (பழநி) யிலும்,* **வடமலை** *(வடவேங்கடமலை ) யிலும் உலவுகின்ற கூரிய வேலனே!*

*தினந்தோறும் உனது புகழ்த் துதிகளைக் கூறிப் பரவுகின்ற அடியவர் மனங்களிற் குடி கொண்டும், சத்தி-சிவம் என்ற இரண்டு பொருள்களிலும் (அல்லது பெரிய பொருளாம் பிரணவத்திலும், அல்லது கல்விப் பொருள், செல்வப் பொருள் இரண்டிலும்) விளங்குபவனே! இருண்ட (ஆணவ) மலம் நீங்க (ஞான) சூரியன் என்னும்படி வருகின்ற பெருவாழ்வே!*

*ஆதிசேடன் என்னும் பாம்பணையின்மேல் துயில் கொள்ளும் நரகரி (நரகாசுரனைப் பகைத்துக் கொன்றவர்), நெடியவர் (திருவிக்ரம ரூபங் கொண்டவர் ) ஆகிய திருமாலின் மருகன் எனக் கூறும்படி வந்துள்ள அதிசய மூர்த்தியே! (அற்புதங் கொண்ட மூர்த்தியே ) அமலி, விமலி (மல மற்றவள்), பரை, உமையவள் அருளிய முருகோனே (குழந்தையே)!*

*அதலம், விதலம் முதலான ஏழு உலகுகளும் கிடு கிடு என்று நடுங்க வருகின்ற மயிலில் இனிதாக ஒளிர்கின்ற (பெருமாளே)! ஆறெழுத்து மந்திரத்தில் மத்தியிலே அழகுடன் பொருந்தியுள்ள ஹரஹர சிவசிவ பெருமாளே!*

*(கதியும் உனது திருவடி நிழல் தருவதும் ஒரு நாளே!)*

## 245-2

*தேன் நெய் பொருந்தியுள்ள பிச்சி மலரின் குளிர்ச்சியைக் கொண்டதாய், கச்சிதமாய் (ஒழுங்காய்)க் கட்டப்பட்டதாய், கருமணலை ஒத்ததாய், சுருள் உற்றும், நறுமணம் உற்றும், இருளைத் (தனது கரு நிறத்தால்) வெருட்டி ஓட்டியுள்ளதும், வரிசையாய் அமைக்கப்பட்ட வாசனை மலர்கள் செருகப்பட்டுள்ள, நறுமணத்தில் நிரம்ப உறைகின்ற வண்டுகள் நெடுநேரம் மொய்த்துத் திளைக்கவும்,*

நிச்சிக் கச்சப் பட்டுச் சிக்கற
றொப்புக் கொப்புக் குயர்வாகி
நெளித்த சுளித்த விழைக்கு ளழைத்துமை
நிகரென வகருவு முகுபுகை தொகுமிகு
நிகழ்புழு கொழுகிய குழன்மேலும்;

வச்ரப் பச்சைப் பொட்டிட் டப்பொட்
டுக்குட் செக்கர்ப் ப்ரபைபோல
வளைத்த தழைத்த பிறைக்கு முறைக்குமன்
மதசிலை யதுவென மகபதி தனுவென
மதிதில தமும்வதி நுதன்மேலும்

மச்சச் செச்சைச் சித்ரச் சத்ரப்
பொற்பக் கத்திச் சையனாகி
*மனத்தி னனைத்து மணைத்த துணைப்பத
மலரல திலைநிலை யென மொழி தழியமெய்
வழிபடலொழிவனை யருள்வாயே;

†நச்சுத் துச்சொப் பிச்சுக் ‡குட்டத்
துட்டக் கட்டத் தசிகாண
நடத்தி §விடத்தை யுடைத்த படத்தினில்
நடநவில் $கடலிடை யடுபடை தொடுமுகில்
நகைமுக திருவுறை மணிமார்பன்

---

*'மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய் நீயே' அப்பர் VI-38-3.
†பீமனுக்குத் துரியோதனன் விடம் ஊட்டிய வரலாறு இங்குக் குறிக்கப்பட்டுள்ளது, "பின்னரும் ஒரு பகல் பெற்றம் பெற்றவன் தன்னை, அம் மகீபதி தனயன் ஆதரித்து இன்னமு தருத்துவான் போல யாவையுந் துன்னிய விடங்களால் துய்ப்பித்தானரோ." (பெற்றம்- வாயு; பெற்றம் பெற்றவன்- பீமன்) (வில்லி பாரதம்- வாரணாவத 12) ‡ஆற்றிற் கழுமுனைகளை மறைவாக நிறுத்தி அங்கே வீமனைக் குதித்து விளையாட ஏவினன் துரியோதனன்; அந்த ஆபத்தான இடத்தை வண்டுகளாற் காட்டிப் பீமனைக் காப்பாற்றினர் கண்ணபிரான்.

"வேறொரு பகற்கழு நிரைத்து வீமனோ
டாறுபாய்ந் திருவரும் ஆடும் வேலையில்

நிச்சிக்கு (நிசிக்கு -இரவுக்கு ) அச்சப்பட்டு (அச்சத்தைப் படுத்தி-இதன் கருமை முன் நாம் எவ்வளவு என்னும் பயத்தை ஊட்டி), சிக்கு இல்லாமல் வாரி, அலங்காரம் மேலுக்கு மேல் உயர்வாகும்படி- நெளிவு சுளிவு (வளைவு,சுருளுதல்) உற்றதாய், விருப்பத்தைத் தந்து அழைப்பதாய், மை (அஞ்சனத்துக்கு) ஒப்பு என்னும்படி, அகில் தருகின்ற புகையின் தொகுதி மிகுந்து, விளங்கும் புனுகு சட்டம் கமழ்கின்ற கூந்தலின் மேலும்-

வச்சிரம் போல ஒளி தரும் பச்சைப் பொட்டை (நெற்றியில்) இட்டு, அந்தப் பொட்டுக்கு உள்ளே (பொட்டின் மத்தியில்) சிவந்த பிரபை போல வளைந்த செழிப்புள்ள பிறைக்கு ஒப்பாக உறைவதாய், மன்மதனது வில்லென்னும் படியும், இந்திர வில் (வான வில்) என்னும்படியும் வளைவாய் விளங்க வைத்த பிறை போன்ற திலதம் (குறி) அமைந்துள்ள நெற்றியின் மேலும்-

(தேகத்திலுள்ள) மச்சங்களின் மீதும், சிவந்த விசித்திரமான, அதிசயிக்கத்தக்க அழகிய உடற் பக்கங்களிலும் இச்சை கொண்டவனாய், மனத்தில் (நினைத்தவை) எல்லா வற்றையும் அறிந்து உதவவல்ல இணையடி மலரல்லாமல், இலை நிலையென (நிலையான பொருள் வேறு இல்லையென்னும்) மொழிகளைத் தழுவின் உண்மையான வழிபாடு செய்வதை ஒழித்த எனக்கு (வழிபாடு செய்யாத எனக்கு ) அருள் புரிவாயாக.

நச்சு (விடத்தை), து- உண்ட பீமன் சொப்பிச்சு (சோபிச்சு சோபித்து) (அந்த விடம் தாக்காது) விளங்கவும், குட்டத்துள் (நீர் நிலையுள்) தக்கு- (தங்கும்படி) அட்டத்து (குறுக்கே வைத்திருந்த) அசி- வாள் முனைகள், காண் (இருக்கும் இடம்) தெரியும்படி நடத்தி- (அந்த பீமனுக்குக்) காட்டியும், விடம் உடையதாயிருந்த (அல்லது) விடம் உடைபடும்படி (கக்கப் பட்டு வெளியாகும்படி) காளிங்கன் என்னும் பாம்பின் படத்தின் மீது நின்று நிர்த்தனம் செய்தும் (ஆடல் புரிந்தும்), கடல் மீது கொல்லத் தக்க தமது பாணத்தைச் செலுத்தியும் (ஆடல்கள் புரிந்த) மேக நிறத்துத் திருமால், சிரித்த முகத்தை உடைய (மகிழ் முகங் கொண்ட) இலக்குமி உறையும் அழகிய மார்பன்-

---

தேறலான் வஞ்சகம் தேறி வண்டினால்
ஏறினான் கடந்தரி யேறு போன்றுளான் "
(வில்லிபாரதம் வாரணாவத-10)

§இது யமுனை நதியில் இருந்த காளிங்கன் என்னும் துஷ்ட சர்ப்பத்தைக் கண்ணபிரான் அடக்கி அதன் மீது நடித்ததைக் குறிக்கின்றது.
$கடல் மீது பாணம் விட்டது ஸ்ரீ ராமாவதாரத்தில் பாடல் 177 பார்க்க.

நத்தத் தைச்சக் ரத்தைப் பத்மத்
தைக்கைப் பற்றிப் பொருமாய
னரிக்கு மரிக்கு மெரிக்கும் விருப்புற
நசிதரு நிசிசர ருடகுட லிடல்செய்த
நரகரி யொருதிரு மருகோனே;

கச்சுத் தச்சுப் பொற்கட் டிட்டுப்
பட்டுக் குட்பட் டமுதாலுங்
கருப்பி ரசத்து முருச்செய் துவைச்சிடு
கனதன பரிமள முழுகுப னிருபுய
கனகதி வியமணி யணிமார்பா-

கைச்சத் திக்குக் கெற்சித் தொக்கப்
பட்சிக் கக்கொட் டசுராதி
கறுத்த நிறத்த அரக்கர் குலத்தொடு
கறுவிய சிறியவ கடவைகள் புடைபடு
**கடவட மலையுறை** பெருமாளே. (1-B)

## 246. நரகில் விழாதிருக்க

தாந்தன தானதன தாந்தன தானதன
தாந்தன தானதன தனதான

கோங்கிள நீரிளக வீங்குப யோதரமும்
*வாங்கிய வேல்விழியும் இருள்கூருங்

கூந்தலு நீள்வளைகொள் †காந்தளு நூலிடையும்
மாந்தளிர் போல் வடிவும் மிகநாடிப்;

---

*வாங்குதல்-செலுத்தல்-பிரயோகித்தல்- உதாரணம். " வேல் வாங்கு வகுப்பு", " வாங்கினார் மதில் மேற்கணை"- II-26-2.

†காந்தள்-காந்தள் மலர் போன்ற கை -"கைபோற் பூத்த மழ் குலைக் காந்தள்" - பரிபாடல் 9-76; " கை விரிந்தன காந்தளும் " சூளாமணி- நாட்டு -11 " காந்தட் கரவளை " திருப்புகழ் 937. "மென் காந்தள் கையேற்கும் " -சம்பந்தர் -I -132-4

சங்கையும், சக்கரத்தையும், தாமரை போன்ற கையிற் பற்றிப் போர் புரியும் மாயன் (திருமால்) -நரிக்கும் வாளுக்கும் எரிக்கும் விருப்பம் உண்டாகும்படி அழிந்து போகின்ற அரக்கர்களுடைய குடலை உணவாக இடுதலைச் செய்த (உணவாகத் தந்த) திருமால் (நரகாசுரனுக்குப் பகைவன்)- அத்தகைய திருமாலுக்கும் ஒப்பற்ற திருமகளுக்கும் (அல்லது -அத்தகைய திருமாலின் ஒப்பற்ற அழகிய) மருமகனே!

ரவிக்கை (தைத்து) கட்டி அழகாக முடிபோட்டு பட்டுத் துணிக்குட் பட்டதாய் (பட்டு ரவிக்கை யிட்டதாய்) அமுதம் பொதிந்து அசைவதாய், கரும்பின் ரசத்தையே உருச் செய்து வைத்திட்டதாய், பருத்த கொங்கைகளின் நறுமணத்தில் முழுகும் பன்னிரு புயனே! கனக -திவ்விய- மணி- (பொன்னாலாய- திவ்யமான- ) (மேன்மையான) ரத்தினங்களை அணிந்த மார்பனே!

கையில் (விளங்கும் ) சத்தி வேல் ஆரவாரஞ் செய்து நன்றாக (முழுமையும்) பட்சிக்க (உண்ணும்படி), வாத்திய முழக்குடன் வந்த அசுரர் தலைவனாம் சூரனைக், கறுநிறமுடைய அரக்கர் குலத்துடன், கோபித்து (அழித்த) இளையவனே! வழிகள் பக்கங்களில் உள்ள காடுகள் சூழும் **வடமலை** (வட வேங்கடமலையில்) உறைகின்ற பெருமாளே!

(வழிபடல் ஒழிவனை அருள்வாயே)

## 246

கோங்கின் முகை, இளநீர் இவை யிரண்டும் தோற்கும் படிப் பெருகி வளரும் கொங்கையும், செலுத்தப்பட்ட வேல் போன்ற விழியும்இருள் மிகுந்த

கூந்தலும், பெரிய வளையல்களை அணிந்துள்ள காந்தள் மலர் போன்ற கைகளும், நூல் (போல நுண்ணிய) இடையும், மாந்தளிர் போன்ற மேனியும் (ஆகிய இவை தமை) மிகவும் விரும்பிப்-

*பூங்கொடி யார்கலவி நீங்கரி தாகிமிகு*
*தீங்குடனேயுழலும் உயிர்வாழ்வு-*

*பூண்டடி யேனெறியில் மாண்டிங னேநரகில்*
**வீழ்ந்தலை யாமலருள் புரிவாயே**

*பாங்கியும் வேடுவரும் ஏங்கிட மாமுநியும்*
*வேங்கையு மாய்மறமி னுடன்வாழ்வாய்-*

*பாண்டவர் தேர்கடவும் *நீண்டபிரான்மருக*
*†பாண்டியனீறணிய மொழிவோனே-*

*வேங்கையும் வாரணமும் வேங்கையு மானும்வளர்*
**வேங்கட மாமலையி** *லுறைவோனே-*

*வேண்டிய போதடியர் வேண்டிய போகமது*
*வேண்டவெ றாதுதவு பெருமாளே.* (2)

## 247. காலன் அணுகா வகை

*தாந்தன தானதன தாந்தன தானதன*
*தாந்தன தானதன தனதான*

*சாந்தமில் மோகவெரி காந்திய வாவனில*
*மூண்டவி யாதசம யவிரோத-*

*சாங்கலை வாரிதியை நீந்தவொ ணாதுலகர்*
*தாந்துணை யாவரென மடவார்மேல்;*

*ஏந்திள வார்முளரி சாந்தணி மார்பினொடு*
*தோய்ந்துரு காவறிவு தடுமாறி-*

---

* "படி மாவலிபால் மூவடி கேட்டு அன்று மூதண்ட கூட முகடு முட்டச் சேவடி நீட்டும் பெருமான் " (கந்- அலங்-15) " மாபலியை வலிய" "சிறையிட வெளியில் முகடு கிழிபட முடிய வளரு முகில் " (சீர்பாத வகுப்பு )

†பாண்டியன் நீறணிந்தது (பாட்டு 181)

பூங்கொடி போன்ற (மாதர்களின்) சேர்க்கையை விடுதற்கு முடியாமல், மிக்க தீமைச் செயல்களுடன் திரிகின்ற உயிர் வாழ்க்கையை

மேற்கொண்டு, அடியேன் அந்த (இழிந்த) வழியிலேயே நின்று இறந்து (அல்லது) நன்னெறியில்லாதவனாய் இறந்து) இங்ஙனம் நரகத்தில் விழுந்து அலையாமல் இருக்க (உனது) திருவருளைத் தந்தருளுக.

தோழியும், வேடர்களும் திகைக்கும்படியாகச், சிறந்த தவமுநி (க்கிழவர்) போலவும், வேங்கை மரம் போலவும் வேடங் கொண்டு, வேட்டுவர் மின்னுடன் (மின் போன்ற மாது வள்ளியுடன் ) வாழ்பவனே !

பாண்டவர்களில் (அருச்சுனனுடைய) தேரைச் செலுத்தியும், (மாவலிச் சக்கரவர்த்தியின் முன்) நீண்ட உருவை எடுத்தும் (திரிவிக்ரமனாய் நின்றும் விளையாடிய) பிரானாம் திருமாலின் மருகனே! (கூன்) பாண்டியன் திருநீறு அணியும் படி "மந்திரமாவது நீறு" என்னும் தேவாரப் பாவை மொழிந்தவனே!

புலியும், யானையும் (அல்லது கோழியும்), வேங்கை மரமும், மானும் வளர்கின்ற (திரு) **வேங்கடமலையில்** உறைபவனே!

தங்களுக்குக் குறைகள் உண்டான பொழுது அடியார்கள் தங்களுக்கு வேண்டியுள்ள (தாங்கள் விரும்பிய) போகத்தைச் (சுகத்தை) சொல்லி முறையிட, (சற்றேனும்) வெறுப்பு இல்லாமல் அதை உதவுகின்ற பெருமாளே!

(நரகில் வீழ்ந்தலையாமல் அருள்புரிவாயே)

## 247

சாந்தம் (மன அமைதி) யில்லாத காமம் என்னும் நெருப்பின்ஒளியையும், அவா (ஆசை) என்னும் அனிலம் (காற்றையும்), மூண்டு (மும்மரமாய்த் தோன்றிப்) பின்பு அடங்காத சமயப் (போராட்டப்) பகை சம்பந்தமான

அழிந்து போகின்ற கலை நூற் கடலையும் நீந்த முடியாமல் (கடக்க முடியாமல்), உலகத்து மக்களே துணை யாவர் (எனக் கருதி), மாதர்கள் மீது- (மயக்கம் கொண்டு)

(அவர்கள்) தாங்கும் இளமையுள்ளதும், ரவிக்கை அணிந்ததும், தாமரை மொட்டுப் போன்றதுமான, கொங்கையிலும், சந்தனம் அணிந்த மார்பிலும் படிந்து, உருகி, அறிவு தடுமாறி (நான்)

ஏங்கிட ஆருயிரை வாங்கிய **காலன்வசம்**
யான் *தனி **போய்விடுவ** தியல்போதான்;

காந்தளி னானகர மான்தரு கானமயில்
காந்தவி சாகசர வணவேளே-

காண்டகு தேவர்பதி யாண்டவ னேசுருதி
யாண்டகை யேயிபமின் மணவாளா;

வேந்தகு மாரகுக சேந்தம யூரவட
**வேங்கட மாமலையி** லுறைவோனே-

வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டவெ றாதுதவு பெருமானே(3)

## 248. திருவடி பெற

தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன தனதான

வரிசேர்ந்திடு சேல்கய லோவெனு
முழை வார்ந்திடு வேலையு நீலமும்
வடுவாங்கிடு வாள்விழி மாதர்கள் வலையாலே-

வளர்கோங்கிள மாமுகை யாகிய
தனவாஞ்சையி லேமுக மாயையில்
வளமாந்தளிர் போல்நிற மாகிய வடிவாலே;

இருள்போன்றிடு வார்குழல் நீழலில்
மயல்சேர்ந்திடு பாயலின் மீதுற
இனிதாங்கனி வாயமு தூறல்கள் பருகாமே-

*"உயிர் போம் அத் தனி வழிக்கே" கந்தர்-அலங்-59.

திகைக்க, (என்) அரிய உயிரை வாங்கவரும் காலன் கையிற்பட்டு நான் தனியே (துணையின்றிச்) செல்வது இயல்போ தான். (நீதியோ தான், தகுதியோ தான்);

காந்தள் மலர் போன்ற திருக்கரங்களை உடையவளும், மான் பெற்ற காட்டு மயில் அனையவளுமான, (வள்ளியின்) மணவாளனே! விசாகனே ! சரவணனே! (செவ்) வேளே!

அழகிய தேவர் தலைநகரை (அமராவதியை) ஆண்டவனே! வேதப் பொருளாம் நம்பியே! இபம் (யானை) போற்றி வளர்த்தமின் போன்ற தேவசேனையின் மணவாளனே!

வேந்தனே! குமரனே! குகனே! சேந்தனே! மயிலனே! (மயில் வாகனனே)! வடவேங்கட மாமலையில் உறைபவனே!

வேண்டும் போதெல்லாம், அடியார்கள் (தங்களுக்கு) வேண்டியுள்ள போகத்தைச் (சுகத்தை) உன்னிடம் விண்ணப் பித்துவேண்ட, (சற்றேனும்) வெறுப்புக் காட்டாமல் (வேண்டிய அந்த போகத்தை அவர்களுக்குத் தந்து) உதவும் பெருமாளே!

(காலன் வசம் யான் .. போய்விடுவ தியல்போ தான்)

## 248

ரேகைகள் சேர்ந்துள்ள சேல் மீனோ, கயல் மீனோ, என்று சொல்லத் தக்கதும், மான் போன்றதும், நீண்ட பெரிய கடல் போன்றதும், நீலோற்பலம், மாவடு, செலுத்தத் தயாராயிருக்கும் வாள் இவைகளுக்கு ஒப்பானதும் ஆன கண்ணை உடைய மாதர்களின் வலையாலும், (சூழ்ச்சிச் செயலாலும்)-

வளர்கின்றதும், கோங்கின் இள மொட்டு போன்றதுமான கொங்கை மீதுள்ள ஆசையாலும், அவர்கள் முகத்தின் மாயையாலும், வளப்பமுள்ள மாந்தளிர் (மாமரத்தின் தளிர்) போல நிறங் கொண்ட (அவர்களது) வடிவத்தாலும்,

இருள் போன்ற நீண்ட கூந்தல் நிழலாலும் (ஒளியாலும்) மோகங் கொண்டு, விரித்திட்ட படுக்கையின் மீது சேர்ந்து இனிப்புள்ளதும், கொவ்வைக் கனி போன்றதுமான வாயிதழ் ஊறல்களை உண்ணாமல்-

எனதாந் *தன தானவை போயற
மலமாங்கடு மோக விகாரமு
மிவை நீங்கிடவேயிரு தாளினை யருள்வாயே;

கரிவாம்பரி தேர்திரள் சேனையு
முடனாந்துரி யோதன னாதிகள்
களமாண்டிட வேயொரு பாரத மதிலேகிக்-

கனபாண்டவர் தேர்தனி லேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாமரி ரகுராமன்;

திரைநீண்டிரை வாரியும் வாலியும்
நெடிதோங்கும ராமர மேழொடு
தெசமாஞ்சிர ராவண னார்முடி பொடியாகச்-

சிலைவாங்கிய நாரண னார்மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
**திருவேங்கட மாமலை** மேவிய பெருமாளே.(4)

---

## திருத்தணிகை

(இது செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ளது, - புகை வண்டி நிலையம்,

முருகக்கடவுள் வள்ளியம்மை பொருட்டு வேடரோடு செய்த கலாங் காரணமான கோபமும், முன்னஞ் சூரனொடு செய்த போர்க் காரணமான கோபமுந் **தணிந்து,** ஸ்ரீவள்ளி தெய்வயானை சமேதராய் வீற்றிருக்குந் திருப்பதி யாதலின் இது **தணிகை, செருத்தணி** எனப் பெயர்பெறும். மலையின் கண் நீலோற்பலச் சுனை யிருப்பதால் இதனை **உற்பலகிரி, கல்லாரகிரி** யெனவுங் கூறுவர். புறும்பயத்துத் தேவாரத்தில் அப்பர் சுவாமிகள் "கன்மலிந்த கழுநீர்க்குன்றம்" என்றது கவனிக்கற்பாலது. ஆசிரியர் ஈண்டு நிர்த்த தரிசனத்தை விசேடித்துக் கூறுகின்றனர்-(285, 308).

---

*தனது- சிநேகம்.

*எனது தனது என்னும் ஆசைகளானவை என்னை விட்டு விலகி அற்றுப் போக, காமம், வெகுளி, மயக்கம் என்னும் (மும்) மலங்கள் தோன்றுகின்ற கடிய மோக சேஷ்டைகள் -ஆகிய இவை நீங்கிடவே, உனது இரண்டு தாள்களை அருள்வாயே!*

*யானை, வாவும் (தாவும்) குதிரை, தேர், திரண்ட சேனை இவைகளைக் கொண்டவனாம் துரியோதனன் முதலானோர் போர்க்களத்தில் இறந்து போமாறு ஒரு பாரத யுத்தத்தில் உலகை அழிப்பதில் (பார்+அதம்+அதில்) அதாவது பூபாரம் குறைப்பதில் ஈடுபட்டு*

*பெருமை வாய்ந்த பாண்டவர் தேரில் (அருச்சுனனுடைய தேரில்) பூட்டிய ஏழு குதிரைகளைத் தூண்டிச் செலுத்திய சாரதி, ஒளி வீசும் சக்கரத்தை உடைய ஹரி, ரகுராமர்,*

*அலை நீண்டதாய் ஒலிக்கும் கடல், வாலி என்னும் குரங்கரசு, நீண்டு ஓங்கி நின்ற மராமரங்கள் ஏழு (இவைகள் மீதும்), பத்துத் தலைகளைக் கொண்ட ராவணனாருடைய முடி பொடியாகும் படியும்*

*வில்லை வளைத்த நாரணனார்- ஆகிய திருமாலின் மருமகனாம் குகனே! சோலைகள் சூழ்ந்துள்ள திருவேங்கட மாமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!*

*(இரு தாளினை அருள்வாயே)*

---

*தீர்த்தம் -சரவணப் பொய்கை; மிக விசேடமானது; "திருக்குள நாளும் பலத்திசை மூசுஞ் சிறப்பு" (258) இன்றும் பிரத்தியட்சமாய்க் காணலாகும். "புவிக்குயிராகுந் திருத்தணி" (258) என்பதால் இத்தலத்துப் பெருமை விளங்கும்.*

*மிகவும் உயரிய நடையிற் கச்சியப்ப முனிவர் பாடியருளிய தல புராணமும், தணிகை ஆற்றுப்படையும், ஸ்ரீ கந்தப்ப தேசிகர் பாடிய தணிகாசல புராணமும்" தணிகைச் சந்நிதி முறையும்" அச்சேறி உள்ளன. 127,791 எண்ணுள்ள பாடல்களும் இத்தலத்துக்கு உரியனவாகக் கொள்ளலாம்; பாட வேறுபாட்டைப் பார்க்க.*

## 249. பசியுற்றவருக்கு அன்னமிட

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

அமைவுற் றடையப் பசியுற் றவருக்
கமுதைப் பகிர்தற் கிசையாதே-

அடையப் பொருள்கைக் கிளமைக் கெனவைத்
தருள்தப் பிமதத் தயராதே;

தமர்சுற் றியழப் பறைகொட் டியிடச்
சம்*னெட் டுயிரைக் கொடுபோகுஞ்-

சரிரத் தினைநிற் குமெனக் கருதித்
தளர்வுற் றொழியக் கடவேனோ!

இமயத் துமயிற் கொருபக் கமளித்
தவருக் கிசையப் புகல்வோனே-

†இரணத் தினிலெற் றுவரைக் கழுகுக்
கிரையிட் டிடுவிக் ரமவேலா;

‡சமயச் சிலுகிட் டவுரைத் தவறித்
தவமுற் றவருட் புகநாடும்-

சடுபத் மமுகக் குகபுக் ககனத்
தணியிற் குமரப் பெருமாளே. (1)

---

*உயிர் நெடுந்தூரம் கொண்டு போகப்படும்- " விடாய்ப் படக் கூற்றுவன் ஊர்க்குச் செல்லும் வழியும் துயரும் "- கந்- அலங்.56

† இரணம்- யுத்தம்.‡ சமயச் சிலுகு- மதப் போராட்டம்.

# 249

(அடையப் பசி யுற்றவருக்கு) முற்றப் பசியுடன் வந்தவருக்கு(அமைவுற்று) மன அமைதியுடன்- (அமுதை) அன்னத்தைப்-பகிர்வதற்கு (ஒரு பங்கு எடுத்துக் கொடுக்க)- (இசையாதே) மனம் வராமல்-

வைத்துள்ள எல்லாப் பொருளையும் கைவசத்தே (தாம் வரவர இளமை அடைவது போல) தமது இளமைப் பருவத்துக்கு எனச் (சேகரித்து) வைத்து , அருள்நெறியில் நின்றும் தவறிப் போய், ஆணவக் கொழுப்பால் தளர்ச்சி யடையாமல்-

சுற்றத்தார் சுற்றியழ, பறை கொட்ட, யமன் நெடுந்தூரம் உயிரைக் கொண்டு போகின்ற (அல்லது-யமன் தள்ளிக் கொண்டு உயிரைக் கொண்டு போகும்)

(இந்த) உடலை (நிலைத்து) நிற்கும் என்று எண்ணி (அதற்காகப் பாடுபட்டுத்) தளர்ந்து ஒழிவதா என்தலைவிதி!

இமயமலையில் வளர்ந்த (பர்வத ராஜனிடத்தில் வளர்ந்த) மயிலன்ன பார்வதிக்குத் தனது ஒரு பாகத்தை (இடது பாகத்தை) தந்தவராகிய சிவபிரானுக்கு - மனம் பொருந்த உபதேசித்தவனே! (அல்லது மனம் உவக்கச் (சம்பந்தராய்ப்) பதிகங்கள் சொன்னவனே!)

போரில் வந்து மோதி எதிர்ப்பவரைக் கழுகுக்கு (இரையாக அளிக்கும்) உணவாக்குகின்ற வீரங்கொண்ட வேலாயுதத்தை உடையவனே!

மதப் போராட்டம் செய்பவர் ( கூட்டத்தினின்றும்) விலகி, என் தவம் நிறைவுறவும், (உனது) திரு அருளில் (நான்) புகவும் (திருவருளை அடையவும்), நான் விரும்புகின்ற

ஆறு தாமரை யன்ன (திரு) முகங்களை உடைய குகனே! (சூரனொடு போர் முடிந்த பின்- (வள்ளியை மணந்தபின்)- நீ) புக்கு அமர்ந்துள்ள பெருமை வாய்ந்த **தணிகையிற்** குமரப் பெருமாளே!

(தளர்வுற் றொழியக் கடவேனோ)

## 250. அகப்பொருள் - (மாலையை விரும்புதல்)

*தனனத் தனனத் தனனத் தனனத்*
*தனனத் தனனத் தனதான*

*குவளைக் கணைதொட் டவனுக் குமுடிக்
†குடையிட் டகுறைப் பிறையாலே-

குறுகுற் றஅலர்த் தெரிவைக் குமொழிக்
குயிலுக் குமினித் தளராதே;

இவளைத் துவளக் கலவிக் குநயத்
திறுகத் தழுவிப் புயமீதே-

இணையற் றழகிற் புனையக் கருணைக்
கினிமைத் தொடையைத் தரவேணும்;

கவளக் கரடக் கரியெட் டலறக்
கனகக் கிரியைப் பொரும்வேலா-

கருதிச் ‡செயலைப் புயனுக் குருகிக்
கலவிக் கணயத் தெழுமார்பா,

பவளத் தரளத் திரளக் குவைவெற்
பவையொப் புவயற் றிறமீதே

பணிலத் திரள்மொய்த் ததிருத் தணிகைப்
பதியிற் குமரப் பெருமாளே.(2)

---

*குவளைக் கணை -காமனது ஐந்தாவது கணை (தொகுதி I பாட்டு-19)

†மன்மதனுக்குக் குடை - திங்கள்; காம நோயுற்றாரை வருத்துவன - பிறையும் அலர் மொழியும்.

‡ செயலைப் புயன்- அசோகமலர்க் கணையைக் கையிலுடைய மன் மதன்; செயலை- அசோகு.

# 250

(ஐந்தாவது பாணமாகிய) நீலோற்பல பாணத்தைச் செலுத்தத் தொட்டுள்ள மன்மதனது முடியின் மீது குடையாக அமைந்த குறையை உடைய திங்களின் (வெப்பத்துக்கும்), (அல்லது - பிறை நிலவாலும், பிறை நிலவு காயும் கொடுமைக்கும்),

நெருங்கிவரும் பழிச்சொல் பேசுகின்ற மங்கையர்க்கும், இனிய குரலுடன் கூவும் குயிலுக்கும் இனி (இவள்) தளராதவாறு

இவளை (உன் மீது காதல் கொண்ட இந்தப் பேதைப் பெண்ணை-நாயகியைத்) துவள்கின்ற அந்தச் சேர்க்கைக்கு விரும்பி (இறுக) அழுத்தமாகத் தழுவி உன் புயங்களின் மீதே- (உன் புயங்களின் மீது இறுக அணைத்து)

ஒப்பு இல்லாத அழகுடன் இவள் அணிந்து கொள்ள (உனது) கருணைக்கு (அடையாளமாக) இனிமை தரும் (உனது) மாலையைத் தந்தருள வேண்டுகிறேன்.

கவளம் (உணவு உண்டை) உண்பனவும், மதம் பாயும் சுவடு கொண்டனவுமான யானைகள் எட்டும் (திக் கஜங்கள் எட்டும்) அலறிப் பயப்படப், பொன் மலையாம் கிரெளஞ் சத்துடன் சண்டை செய்த வேலனே!

(வள்ளியைத் தழுவ) நினைத்து, அசோக மலர்க் கணையைக் கையிலுடைய மன்மத சேஷ்டையால் உருகி, (அந்த அம்மையுடன்) சேருதற்கு விரும்பி எழுகின்ற மார்பை யுடையவனே! (கலவிக்கண் நயத்து எழும் மார்பா)

பவளம், முத்து இவை திரண்டுள்ள குவியல்கள் மலைபோலக் கிடக்கும் வயற் புறங்களின் மேல்-

சங்கின் கூட்டங்கள் நெருங்கும் **திருத்தணிகைப்** பதியில் (வீற்றிருக்கும்) குமரப் பெருமாளே!

(தொடையைத் தரவேணும்)

## 251. அகப்பொருள் - (நல்லுணர்வு பெற)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

பொரியப் பொரியப் பொலிமுத் துவடத்
துகளிற் புதையத் தனமீதே-

புரளப் புரளக் கறுவித் தறுகட்
பொருவிற் சுறவக் கொடி வேள்*தோள்;

தெரிவைக் †கரிவைப் பரவைக் குருகிச்
செயலற் றனள்கற் பழியாதே-

செறிவுற் றணையிற் றுயிலுற் றருமைத்
தெரிவைக் **குணர்வைத் தரவேணும்;**

சொரிகற் பகநற் பதியைத் தொழுகைச்
சுரருக் குரிமைப் புரிவோனே-

சுடர்பொற் கயிலைக் கடவுட் கிசையைச்
சுருதிப் பொருளைப் பகர்வோனே;

தரிகெட் டசுரப் படைகெட் டொழியத்
தனிநெட் டயிலைத் தொடும்வீரா-

தவளப் பணிலத் தரளப் பழனத்
**தணிகைக்** குமரப் பெருமாளே (3)

## 252. பிறப்பு அற

தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
தனத்தனத் தனத்தனத் - தனதான

அருக்கிமெத் தெனச்சிரித் துருக்கியிட் டுளக்கருத்
தழித்தறக் கறுத்தகட் பயிலாலே-

அழைத்தகப் படுத்தியொட் டறப்பொருட் பறிப்பவர்க்
கடுத்தபத் தமுற்றுவித் தகர்போலத்;

---

*தோள் - தெரி - வை - கை தெரிந் தெய்யுங் கூர்மையான பாணம்.
†அரிவை - அலர் தூற்று மகளிர்.

## 251

(காமாக்கினியால்) பொரிபட்டுப் பொரிபட்டு, விளங்கும் முத்துமாலையானது தூள் பட்டுப் புதைபடும் அந்த கொங்கையின் மேலே

(நான் படுக்கையிற்) புரண்டு புரண்டு (வேதனைப் படுமாறு என் மீது) கோபித்துக் கொடுமையுடன் போர் செய்யும் (கரும்பு) வில்லையும், சுறா மீன் கொடியையும் உடைய மன்மதன் கை-

தெரிந்து பிரயோகிக்கும் கூர்மை கொண்ட பாணத்துக்கும், அலர் தூற்றும் மகளிர்க்கும், (ஒலிக்கும்) கடலுக்கும் உருகினவளாய், (செய்ய வேண்டிய) செயல்கள் அற்றவளாய், (உள்ள இவளது) கற்பு அழியாதவாறு

(நீ) இவளை நெருங்கி, (இவளுடன்) படுக்கையில் துயில் கொண்டு, இந்த அருமையான மாதுக்கு (மயக்கை நீக்கி) நல்லுணர்வைத் தரவேணும்.

சொரியும் (மலர்களை உடைய) கற்பக மரங்கள் உள்ள சிறந்த அமராவதிப் பட்டணத்தைத், தொழுகின்ற கையுடன் நின்ற தேவர்களுக்கு உரிமையாகும்படி உதவினவனே!

ஒளிவீசும் அழகிய கயிலைமலைத் தேவாம் சிவபிரானுக்கு உள்ளம் உவந்து பொருந்தும்படி வேதப்பொருளைப் போதித்தவனே!

நிலை கெட்டு அசுர சேனைகள் கெட்டுத் தொலையும்படி ஒப்பற்ற நெடிய வேலைச் செலுத்திய வீரனே!

வெண்ணிறச் சங்குகளும் முத்துக்களும் (கிடக்கும்) வயல்கள் உள்ள (திருத்) தணிகைக் குமரப் பெருமாளே!

(தெரிவைக்கு உணர்வைத் தரவேணும்)

## 252

சுருக்கமாகவும், அமைதியுடனும், சிரித்து, உள்ளத்தை உருக்கி, உள்ளக் கருத்தை அழித்து, மிகவும் கருநிறங் கொண்ட கண்களின் குறிப்புக்களால் (ஜாடைகளால்)

அழைத்து, (தமது வலைக்குள்) அகப்பட வைத்து, (அடியோடு ஒன்றையும் விடாமல்) பொருளைப் பறிக்கும் (வேசையர்) பாற் செல்கின்ற (பத்தம்) கட்டு (பாசத்தைப்) பூண்டு, (அல்லது பொருளைப் பறிப்பவரை அடுத்து, அபத்தம் உற்று (பொய்யுற்று), அறிவாளி போல

தரிக்கும்வித் தரிக்குமிக் கதத்துவப் ப்ரசித்தியெத்
தலத்துமற் றிலைப்பிறர்க் கெனஞானம்-

சமைத்துரைத் திமைப்பினிற் சடக்கெனப் படுத்தெழச்
சறுக்குமிப் பிறப்புபெற் றிடலாமோ;

பொருக்கெழக் கடற்பரப் பரக்கர்கொத் திறப்புறப்
பொருப்பினிற் பெருக்கவுற் றிடுமாயம்-

புடைத்திடித் தடற்கரத் துறப்பிடித் தகற்பகப்
புரிக்கிரக் கம்வைத்தபொற் கதிர்வேலா;

திருத்தமுத் தமிழ்க்கவிக் கொருத்தமைக் குறத்தியைத்
தினைப்புனக் கிரித்தலத் திடைதோயுஞ்-

சிவத்தகுக் குடக்கொடிச் செருக்கவுற் பலச்சுனைச்
சிறப்புடைத்திருத்தணிப் பெருமாளே. (4)

## 253. பொது மகளிர் மீது நட்பு அற

தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
தனத்தனத் தனத்தனத் தனதான

கடற்செகத் தடக்கிமற் றடுத்தவர்க் கிடுக்கணைக்
கடைக்கணிற் கொடுத்தழைத் தியல்காமக்-

கலைக்கதற் றுரைத்து †புட் குரற்கள்விட் டுளத்தினைக்
கரைத்துடுத் தபட்டவிழ்த் தணைமீதே;

---

*கண்களின் அகலத்தையும் நீளத்தையும் - "ஈசற்கு யான் வைத்த அன்பின் அகன்று... அவன் பூங்கழல் யாம் பேசத் திருவார்த்தையிற் பெருநீளம் பெருங்கண்களே" என்றார் மணிவாசகர் (திருக்கோவையார் - 109). "கடலினும் பெரிய கண்கள்" என்றார் கம்பர். (கம்பராமா - மாரீசன் வதை - 70)

† புட்குரல் -197 ஆம் பாடலைப் பார்க்க (தொகுதி 2)

நடித்தும், விஸ்தாரமாக (விரிவாகப்) பேசியும், மேலான உண்மைகளை எடுத்து ஓதும் கீர்த்தி (தன்னைப்போல) எந்த ஊரிலும் இல்லை வேறு யார்க்கும் என்று சொல்லும்படி ஞானப் பேச்சுக்களைப்

(புதிதாகப் படைத்துப் பேசி) உண்டு பண்ணிப் பேசி, ஓரிமைப் பொழுதில் வேகத்துடன் படுத்து எழுதல் போல, நழுவி ஒழியும் இந்த - (மானிடப்) பிறப்பைப் பெற்றிடல் நன்றோ! (நன்றல்ல) என்றபடி,

வற்றி உலர்ந்த காட்சி எழும்படிக் கடற்பரப்பையும் (கடல் வற்றவும்), அரக்கர் கூட்டம் - மடிதலை உற்று ஒழியவும், (கிரௌஞ்ச) மலையில் நிரம்ப இருந்த மாயம்

உடைந்து ஒழியவும் - மோதித்தாக்கின (கதிர்வேலனே!) வலிமையுள்ள (திருக்) கரத்தில் தங்கும்படி பிடித்த - (கதிர் வேலனே)! கற்பக ஊரின் மீது இரக்கம் வைத்த அழகிய கதிர் வேலனே!

செப்பமுள்ள முத்தமிழ்ப் பாடலுக்கு ஒப்பற்றவனாய் நிற்பவனே! அல்லது - செப்பமுள்ளவனே! முத்தமிழ்ப் பாடலுக்கு உரிய ஒருத்தனே) ! பச்சைக் குறத்தியை, கண்ணுக்கு - மை (அஞ்சனம்) இட்ட குறத்தி வள்ளியை, தினைப்புனம் உள்ள (வள்ளி) மலைப் பிரதேசத்தில் அணைந்த (பெருமாளே!)

சிவப்பு நிறங் கொண்ட கோழிக் கொடி பெருமிதம் உற (களிக்க)ச் (சிறப்புடைய திருத்தணியில் வீற்றிருக்கும் பெருமாளே)! நீலோற்பலம் மலரும் சுனையை உடைய சிறப்புள்ள **திருத்தணிகைப்** பெருமாளே!

(இப்பிறப்பு பெற்றிடலாமோ)

# 253

கடலையும், உலகையும் (தன் பரப்பின் கீழ் அடங்கும் படியாக) அடக்கி, தம்மை நாடி வந்தவர்க்குத் துன்பத்தைத் தமது கடைக் கண்ணாற் கொடுத்து (அவர்களை) அழைத்து,

கலைகள் (சாத்திரங்கள்) கதறுதலை (முழங்கி உரைப் பதை) எடுத்து உரைத்து, புட்குரல்களைக் காட்டி, உள்ளத்தைக் கரைத்து, உடுத்துள்ள பட்டுப் புடவையை அவிழ்த்துப் படுக்கை மேலே

சடக்கெனப் புகத்தனத் தணைத்திதழ்க் கொடுத்துமுத்
தமிட்டிருட் குழற்பிணித் துகிரேகை-

சளப்படப் புதைத்தடித் *திலைக்குணக் கடித்தடத்
தலத்தில்வைப் பவர்க்கிதப் **படுவேனோ;**

இடக்கடக் குமெய்ப் பொருட் டிருப்புகழ்க் குயிர்ப்பளித்
தெழிற்றினைக் கிரிப்புறத் துறைவேலா-

இகற்செருக் கரக்கரைத் தகர்த்தொலித் துரத்தபச்
சிறைச்சியைப் பசித்திரைக் கிசைகூவும்;

பெடைத்திரட் களித்தகுக் குடக்கொடிக் கரத்தபொய்ப்
பிதற்றறப் படுத்துசற் குருவாய்முன்-

†பிறப்பிலிக் குணர்த்துசித் தவுற்றநெற் பெருக்குவைப்
பெருக்கு ‡மெய்த் **திருத்தணிப்** பெருமாளே. (5)

---

*இலைக் குணம் - அரசிலையின் தன்மையை யொத்த.

†சிவபிரான் பிறப்பு இறப்பு இலாதவர்:-

"எல்லா பிறப்பும் இறப்புமியற் பாவலர்தம்
சொல்லால் தெளிந்தேம் நம் சோணேசர் - இல்லிற்
பிறந்த கதையுங் கேளேம் பேருலகில் வாழ்ந்துண்
டிறந்த கதையங் கேட்டி லேம்"

அருணகிரி அந்தாதி. "பிறவா யாக்கைப் பெரியோன்". சிலப்பதி-காரம் - 5-169.

‡'செய்ப் பதிப்பிளைப் பெருமாளே' என்றும் பாடம்.

வேகமாகச் சேர்ந்து, கொங்கைமீது அணைத்து, இதழூறலை அளித்து, முத்தம் தந்து, இருண்ட (கரிய) கூந்தலைக், கட்டி முடித்து, நகக் குறியை

மூர்க்கத்துடன் புதைய அழுத்தி, அரசிலையின் தன்மையை ஒத்த அல்குற் ப்ரதேசத்திற் சேர்ப்பவர் பால் இன்பம் காட்டு வேனோ (இன்பங் காட்டுதல் கூடாது என்றபடி).

(ஐம்புலச்) சேட்டை முதலான முரண்களை அடக்கும் சத்திய வாசகப் பொருளைக் கொண்ட *உனது மேன்மைப் புகழுக்கு உயிர் நிலை போன்ற பெரிய பலத்தைத்தந்து, தினைப்புனம் உள்ள (வள்ளி) மலைப் பிரதேசத்தில் உறைகின்ற வேலனே!

போரிற் கர்வத்துடன் வந்த அரக்கர்களை அழித்து, ஒலியுடன், திண்ணிய பசிய மாமிசத்தை, பசியுடன் இரை வேண்டுமென்று சொல்லும் குரலுடன் கூவுகின்ற

பெட்டைக் கோழிக் கூட்டங்களுக்குக் கொடுத்த ஆண் கோழியைக் கொடியாகக் கரத்தில் ஏந்தினவனே! பொய்யான பிதற்றல் மொழிகளை அடியுடன் களைந்து, சற்குரு மூர்த்தியாய் முன்பு ஒருநாள்-

பிறப்பு இல்லாத சிவனுக்குப் போதித்து உணர்த்திய சித்த மூர்த்தியே! சேர்ந்துள்ள நெல்லின் பெருங் குவியல்களை மேலும் பெருகவைக்கும் உண்மை வாய்ந்த திருத்தணிப் பெருமாளே!

(பொது மகளிர்க்கு - இதப்படுவேனோ)

---

*இயற்கையாகவே முருகன் புகழ் பெரிது, வலியது; அவர் அடியார்க்கு எளியனாய்த் தணிகையை விட்டு வள்ளிமலைக்கு ஓடி "யான் எனது" அற்ற வள்ளியை மணந்து 'அடியார்க்கு எளியன்' தான் எனக் காட்டியதால் முருகன் புகழ் மிகப் பெரிதாய் இன்றும் விளங்குகின்றது: திருப்புகழ் 116 பார்க்க.

"துன்னித் துன்னி வழிபடு வதன்பயம்
இன்னும் இன்னும் அவை யாகுக
தொன் முதிர் மரபினின் புகழினும் பலவே"

எனப் பரிபாடலிற் (14) கூறியபடி வள்ளியின் வழிபாட்டின் அளவு முருகன் புகழ் அளவினும் மேற்பட்டது: ஆகவேதான், முருகன் 'வள்ளிபதம் பணியும் தணியா அதிமோக தயாபரன்' ஆயினான்; அவன் திருப்புகழும் உயிர்ப்பு (பலம்) அடைந்தது. திருப்புகழ் 199-ன் குறிப்பைப் பார்க்க - தொகுதி -2.

## 254. முத்தி பெற

தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
தனத்தனத் தனத்தனத் தனதான

கனத்தறப் பணைத்தபொற் கழைப்புயத் தனக்கிரிக்
*கனத்தையொத் துமொய்த்தமைக் குழலார்தங்-

கறுத்தமைக் கயற்கணிற் கருத்துவைத் தொருத்தநிற்
கழற்பதத் தடுத்திடற் கறியாதே;

இனப்பிணிக் கணத்தினுக் கிருப்பெனத் துருத்தியொத்
திசைத்தசைத் தசுக்கிலத் தசைதோலால்;

எடுத்தபொய்க் கடத்தினைப் பொறுக்குமிப் பிறப்பறுத்
தெனக்குநித் தமுத்தியைத் தரவேணும்;

† பணைக்கரச் சினத்திபத் தனைத்துரத் தரக்கனைப்
‡ பயத்தினிற் பயப்படப் பொரும்வேலா -

பருப்பதச் செருக்கறத் துகைக்கு § முட் பதத்தினைப்
படைத்தகுக் குடக்கொடிக் குமரேசா-

தினைப்புனப் பருப்பதத் தினிற்குடிக் குறத்தியைச்
செருக்குறத் திருப்புயத் தணைவோனே-

---

* கனம் - மேகம்.

கனத்து அறப் பணைத்தைப் புயத்துக்கும் தனத்துக்கும் (கொங்கைக்கும்) கூட்டலாம்.

"அகலல்குல் தோள் கண்ணென மூவழிப் பெருகி, நுதலடி நுசுப்பெனமூ வழிச் சிறுகி" கலித்தொகை - முல்லை - 8 "வீங்கு முலையாகத்து வாங்கமைப் பணைத்தோள் பெருங்கதை 14 - 7 - 218.

† பணைக்கரச் சினத் திபத்தன் - தேவேந்திரன். யானையின் துதிக்கை பனைக்கு ஒப்பு - "பனைக்கை மும்மத வேழம்"- அப்பர் V -2-1. பனைக்கை... கஜக்கடவுள் - வேல் வகுப்பு.

‡ பயம் - (சமுத்திரமாகிய) ஜலம்.

§ முள் போன்ற நுனிகளை உடைய காலே ஆயுதமாகக் கோழி சண்டை செய்வதால் - கோழிக்குக் காலாயுதம் என்ற ஒரு பெயர். சேவலின் ஆற்றலைச் " சேவல் சிறகடிக் கொள்ள குன்றமும் மா மேரு வெற்பும் இடிபட்டவே" (கந் - அலங் - 12) என்றார். அடுத்த பக்கம் பார்க்க.

## 254

திண்ணிதாய் மிகப் பருமையுடைய அழகிய மூங்கில் போலும் தோள்களும், கொங்கையாம் மலைகளும் மேகத்தை ஒத்து நெருங்கும் கருநிறக் கூந்தலுங் கொண்ட மாதர்களுடைய-

கறுத்த மை பூசிய கயல் மீன் போன்ற கண்களில் (எனது) எண்ணங்களை வைத்து, ஒப்பற்ற உனது கழல் அணிந்த திருவடிகளைச் சேருதற்கு அறியாமல்-

தொகுதியான பிணிகளின் கூட்டத்திற்கு இருப்பிடம் என்று சொல்லும்படி இருந்து, உலை ஊது கருவி போல (மேலும் மேலும் பெரு மூச்சுவிட்டு) ஒலி செய்து, கட்டுண்ணும் சுக்கிலம், ஊன், தோல் இவைகளால்

எடுக்கப்பட்ட நிலையில்லாத உடம்பைச் சுமக்கின்ற இந்தப் பிறப்பை ஒழித்து எனக்கு அழியா முத்தியைத் தந்தருள வேணும். பனை (மரம்) போலும் துதிக்கையையும், கோபத்தையுங் கொண்ட வெள்ளை யானை ஐராவதத்தை உடைய தேவேந்திரனைத் துரத்தி ஓட்டிய சூரனை கடல் நீரில் பயப்பட்டு ஓடும்படி போர் செய்த வேலனே!

*மலைகளின் கர்வம் அடங்கி ஒழியும்படி மிதித்துழக்கும் முள் உள்ள கால்களைக் கொண்ட கோழிக் கொடி கொண்ட குமரேசனே!

தினைப்புனத்தை உடைய (வள்ளி) மலையிற் குடிகொண்டிருந்த குறத்தி வள்ளியை மகிழ்ச்சியுடன் அழகிய புயங்களில் அணைந்தவனே!

---

*பருப்பதச் செருக்கறத் துகைக்கும் குமரேசா! முட்பதத்தினைப் படைத்த குக்குடக் கொடிக் குமரேசா! எனவும் இயைக்கலாம். பருப்பதம் - (கிரௌஞ்சகிரியின்) மமதையை ஒழித்த குமரேசா எனப் பொருள்படும்.

திருப்புரப் புறத்தியற் றிருத்தகுத் *துநித்திலத்
†திருத்திசைத் திருத்தணிப் பெருமாளே (6)

## 255. பிறப்பற

தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
தனத்தனத் தனத்தனத் தனதான

பருத்தபற் சிரத்தினைக் குருத்திறற் கரத்தினைப்
பரித்தவப் பதத்தினைப் பரிவோடே-

படைத்தபொய்க் குடத்தினைப் பழிப்பவத் திடத்தினைப்
பசிக்குடற் கடத்தினைப் பயமேவும்;

பெருத்தபித் துருத்தனைக் கிருத்திமத் துருத்தியைப்
பிணித்த ‡முக் குறத்தொடைப் புலனாலும்-

பிணித்தவிப் பிணிப்பையைப் பொறுத்தமிழ்ப் பிறப்பறக்
குறிக்கருத் தெனக்களித் தருள்வாயே;

§கருத்திலுற் றுரைத்தபத் தரைத்தொறுத் திருக்கரைக்
கழித்தமெய்ப் பதத்தில்வைத் திடுவீரா-

கதித்தநற் றினைப்புனக் கதித்தநற் குறத்தியைக்
கதித்தநற் றிருப்புயத் தணைவோனே;

செருத்தெறுத் தெதிர்த்தமுப் புரத்துரத் தரக்கரைச்
சிரித்தெரித் தநித்தர்பொற் குமரேசா-

---

*து - தூ: பரிசுத்தமாகிய.

†திருத்திசை - புண்ணிய திசை - வட திசை - "புண்ணிய திசை முகம் போகிய அந்நாள்" சிலப்-5-94. திருத்தணி - தமிழ் நாட்டின் (தமிழ் மொழியின்) வட எல்லையில் உள்ளது எனத் திருப்புகழ் 255, 257, 301-பாடல்களிலும் அருணகிரியார் கூறியுள்ளார்.

‡முக்குறத் தொடைப்புல னாலும் - முக்குற்றத்தொடு ஐம்புலனாலும்.

§"வாரமதாம் அடியார்க்கு வாரமாகி வஞ்சனை செய்வார்க் கென்றும் வஞ்சனாகும் சீரரசை" - அப்பர் VI-86-4.

அழகிய ஊரின் வெளிப்புறப் பகுதிகளில் புறத்தே (உள்ள வயல்களில்) லட்சுமீகரம் பொருந்தும், பரிசுத்தமான முத்துக்கள் விளங்கும் திருத்தணிப் பெருமாளே! புண்ணிய திசையாகிய வடக்கில் (தமிழ் எல்லையின் வடஎல்லையில் உள்ளதிருத்தணிப் பெருமாளே!

(எனக்கு நித்த முத்தியைத் தரவேணும்)

## 255

பருமை உடைய பல்லொடு கூடிய தலையையும், நிறமும் ஒளியும் கொண்ட கைகளையும், தாங்குகின்ற அந்தக் கால்களையும், அன்புடனே-

கொண்ட பொய்யான குடமாம் (உடலை), பழிக்கும் பாவத்துக்கும் இடமாம் (உடலை), பசிக்கு இருப்பிடமாய் குடலொடு கூடிய உடலை, பயத்தொடுங் கூடிய

பெரிய பித்த உருவத்தை, தோலாலாய உலை ஊது கருவியை (அல்லது பொய்யான மாயையான துருத்திப் பையை) பொருத்தப்பட்டுள்ள (காமம், வெகுளி மயக்கம் என்னும்) முக்குற்றங்களொடும், (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும்) ஐம்புலன்களொடும்

கட்டுப்பட்ட இந்த நோய்ப் பையைத் தாங்குவதும் ஆழ்த்துவதுமான பிறப்பை ஒழிக்குங் குறியை (நோக்கத்தைக்) கொண்ட கருத்தை எனக்குத் தந்தருளுவாயாக;

(தமது) கருத்தில் வைத்து (உன்னைப்) புகழ்ந்த அடியார்களை நிரம்ப வஞ்சமுடையவர்களை ஒதுக்கித் தள்ளுகின்ற (உனது) மெய் அடியிற் சேர்த்துக் கொள்ளும் வீரனே!

மிகுந்த நல்ல தினைப்புனத்தில் (தினை மிகுந்த நல்ல புனத்தில்) இருந்த நல்ல குறத்தியை (வள்ளியை) எழுந்தோங்கும் நல்ல திருப்புயத்தில் அணைந்தவனே!

போரிற் குவிந்து வந்து எதிர்த்த முப்புரத்து வலிய அரக்கர்களைச் சிரித்து எரித்துச் (சாம்பலாக்கிய) அழிவிலாப் பெருமானாம் சிவபிரானது அழகிய குமரேசனே!

சிறப்புறப் பிரித்தறத் திறத்தமிழ்க் குயர்த்திசைச்
சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே (7)

## 256. திருவடியைத் தொழ

தனத்தன தானம் தனத்தன தானம்
தனத்தன தானம் தனதான

எனக்கென யாவும் படைத்திட நாளும்
இளைப்பொடு காலந் தனிலோயா-

எடுத்திடு காயந் தனைக்கொடு மாயும்
இலச்சையி லாதென் பவமாற;

உனைப்பல நாளுந் திருப்புக ழாலும்
உரைத்திடு வார்தங் குளிமேவி-

உணர்த்திய போதந் தனைப்பிரி யாதொண்
பொலச்சர ணானுந் தொழுவேனோ;

வினைத்திற மோடன் றெதிர்த்திடும் வீரன்
விழக்கொடு வேள்கொன் றவனீயே-

விளப்பென மேலென் றிடக்கய னாரும்
விருப்புற வேதம் புகல்வோனே;

சினத்தொடு சூரன் தனைக்கொடு வேலின்
சிரத்தினை மாறும் முருகோனே-

தினைப்புன மேவுங் குறக்கொடி யோடுந்
திருத்தணி மேவும் பெருமாளே. (8)

சிறப்புறும்படி தனி நின்று (மேம்பட்டு) அறநெறி கூறும் தமிழின் (எல்லையில்) உயர்ந்த (வட) திசையிலிருக்கும் சிறப்பைப் பெற்றுள்ள **திருத்தணிப்** பெருமாளே!

(பிறப்பறக் குறிக் கருத்து எனக்களித் தருள்வாயே)

## 256

எனக்கென்றே எல்லாம் சேகரிக்க வேண்டி நாள்தோறும் இளைப்புஉண்டாகும்படி (உழைத்து), காலக்கணக்கில் ஓய்வு இல்லாமல் - (அல்லது ஓய்ந்து போய்)-

எடுக்கின்ற தேகங்களைக் கொண்டு (தேகங்களை அடைந்து) பின்னர் இறந்துபோம் லஜ்ஜை (வெட்கம்) அழிய, என் பிறப்பு ஓய்வு உற (பிறப்பு அற)

உன்னைப் பல நாளும் திருப்புகழ் கூறிப் புகழ்வோர்கள் இருக்கும் இடத்துக்குச் சென்று (அங்கு)

(அவ்வடியார்கள்) விளக்கும் அறிவுரைகளை (ஞான வாசகங்களை) ஒட்டி ஒழுகி (அந் நன்னெறியில் நின்றும்) விலகாது, (அல்லது, நீ எனக்கு உபதேசித்த ஞானோபதேசத்தினின்றும் விலகாது), ஒளி வீசும் அழகிய (உனது) திருவடியை நானும் தொழுவேனோ (தொழும் பாக்கியம் எனக்கும் கிட்டுமா!)

தொழிலில் திறமையுடன் அன்று எதிர்த்து அம்பு எய்த வீரனாம் மன்மதன் (வெந்து) விழும்படி அந்தக் கொடிய மன்மதனைக் - கொன்று எரித்தவனாகிய சிவபிரான் - (உன்னை நோக்கிக் - குழந்தாய்!) நீயே

(பிரணவப் பொருளை) விளம்புவாயாக (உரைப்பாயாக) இனி, என்று கூற, (முதலில் உன்னை வணங்காது), இடக்கு (முரண்) செய்த பிரமனும் விரும்பி மகிழ வேதப் பொருளை உரைத்தவனே!

கோபத்துடன் சூரனைக் கடுமை கொண்ட வேல் கொண்டு (அவனுடைய) சிரத்தைத் தள்ளி ஒதுக்கின முருகோனே!

தினைப் புனத்தில் வாசஞ் செய்த குறப் பெண் (வள்ளியுடன்) **திருத்தணிகையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(ஒண் பொலச் சரண் நானுந் தொழுவேனோ!)

## 257. திருவடியைப் பெற

தனத்தன தானம் தனத்தன தானம்
தனத்தன தானம் தனதான

பெருக்கவு பாயங் கருத்துடை யோர்தம்
ப்ரபுத்தன பாரங் களிலேசம்-

ப்ரமத்துட னாளும் ப்ரமித்திருள் கூரும்
ப்ரியக்கட லூடுந் தணியாத;

கருக்கட லூடுங் *கதற்றும நேகங்
கலைக்கட லூடுஞ் சுழலாதே-

கடப்பலர் சேர்கிண் கிணிப்ரபை வீசுங்
**கழற்புணை நீதந் தருள்வாயே;**

தருக்கிய வேதன் சிறைப்பட நாளுஞ்
சதுர்த்தச லோகங் களும்வாழச்-

சமுத்திர மேழுங் குலக்†கிரி யேழுஞ்
சளப்பட மாவுந் தனிவீழத்;

திருக்கையில் வேலொன் றெடுத்தம ராடுஞ்
செருக்கு மயூரந் தனில்வாழ்வே-

சிறப்பொடுஞான ந்‡தமிழ்த்ரய நீடுந்
**திருத்தணி** மேவும் பெருமாளே. (9)

---

*" கலையே பதறிக் கதறித் தலையூ

டலையே படுமா றதுவாய் விடவோ" - என்னும் கந்தர் அநுபூதி (32)ச் செய்யுளின் கருத்து. ‡ தமிழ்த்ரயம் - முத்தமிழ்,

†இவை சூரனுக்கு அரணாயிருந்த எழுகிரிகள். (பாடல் 43) சூருடன் கிரி என வந்தால் கிரி என்பது எழுகிரியே; கிரவுஞ்சமலை அல்ல; கிரவுஞ்சம் தாரகனுக்கு உதவியாயிருந்து அவனுடன் வேலால் அழிபட்ட மலை; சூரனுக்கு உதவியாயிருந்து வேலால் தொளைபட்ட கிரி - எழுகிரி, ஏழுகிரி -எனப்படும். சூரனுக்குக் காவலாகி எழுகிரிகள் எப்பொழுதும் மறைந்திருந்து துணை செய்தன என்றும், சூரனையும் அம்மலைகளையும் ஒரே காலத்தில் வேலால் முருகவேள் அழித்தனர் என்றும் கூறுவர்.

"கிளை பட்டெழு சூர் உரமும் கிரியுந் தொளைபட்டுருவத் தொடு வேலவனே" - கந் - அநு - 4. அடுத்த பக்கம் பார்க்க.

## 257

விரிவான தந்திரக் கருத்துடையவராம் (பொது மகளிருடைய) மேன்மை விளங்கும் கொங்கைப் பாரங்களிற்-

(சம்ப்ரமத்துடனே) சிறப்புடனே நாள்தோறும் நான் மயங்கித் திகைத்து இருள் மிக்க (அஞ்ஞானம் மிக்க) ஆசைக் கடலுள்ளும், ஓய்வு அடையாத-

பிறவிக் கடலுள்ளும், கதறிப்படிக்கும் பல கலைக் கடலுள்ளும் (நூற்கடலுள்ளும்) நான் சுழற்சி அடைந்து (வேதனை உறாமல்)

கடப்ப மலர் சேர்ந்துள்ள கிண்கிணியின் ஒளி வீசும் கழலணிந்த திருவடியாம் தெப்பத்தை நீ கொடுத்து அருள் புரிவாயாக.

செருக்கு மிக்க பிரமன் சிறையில் அழுந்தவும், நாளும் (4 + 10) பதினாலுலகங்களும் வாழ்வுறவும்,

கடல் ஏழும், சிறந்த மலை ஏழும் துன்பப் படவும், (சூரனாம்) மாமரம் தனித்து வீழவும்,

திருக்கையில் வேல் ஒன்றை (ஒப்பற்ற வேலாயுதத்தை) எடுத்துச் (செலுத்திப், போர் செய்த (வாழ்வே) செல்வனே! களிப்புற்ற மயிலேறும் செல்வனே!

சிறப்புற்ற நிலையில் ஞானமும் முத்தமிழும் விஸ்தாரமாய் விளங்கும் திருத்தணியில் வீற்றிருக்கும் பெருமாளே!

---

"கிளைத்துப் புறப்பட்ட சூர் மார்புடன் கிரியூடுருவத் தொளைத்துப் புறப்பட்ட வேல்' கந் - அலங் - 32

" உழல் சூரும் மலைமார்பும் உடனூடுற" தக்க பரணி. தாழிசை 5. "எழுமலை கொல்லும் அசனி... வள்ளிகணவன்" தக்க பரணி-170.

"எழுமலை பொடித்த கதிரிலை நெடுவேல் - கல்லாடம்3; (திருப்புகழ் 374, 387, 548, 581, 613, 681, 725, 819, 842, 990, 1008, 1119, 1145, 1162, 1257 எண்ணுள்ள திருப்புகழ்ப் பாக்களையும் பார்க்க.)

## 258. அடியார் சபையிற் சேர

தனத்தன தானம் தனத்தன தானம்
தனத்தன தானம் தனதான

மருக்குல மேவுங் குழற்கனி வாய்வெண்
மதிப்பிள வாகும் நுதலார்தம்-

மயக்கினி லேநண் புறப்படு வேனுன்
மலர்க்கழல் பாடுந் திறநாடாத்;

தருக்கனு தாரந் துணுக்கிலி லோபன்
சமத்தறி யாவன் பிலிமூகன்-

தலத்தினி லேவந் துறப்*பணி யாதன்
தனக்கினி யார்தஞ் †சபைதாராய்;

குருக்குல ராஜன் தனக்கொரு தூதன்
குறட்பெல மாயன் நவநீதங்-

குறித்தயில் நேயன் திருப்பயில் மார்பன்
குணத்ரய நாதன் மருகோனே;

‡திருக்குள நாளும் பலத்திசை மூசும்
சிறப்பது றாளண் டிசையோடும்-

---

*பணியாதன் - பணியாதவன். (இடைக்குறை) " இசை பாடலும், பரித்தனைப் பணிவார் வினைபாறுமே (பரிந்த (வ)னைப் பணிவார்)" என்புழிப் போல (அப்பர் V. 34 - 10)

"† உன் அடியார் வாழ்சபையின் ஏற்றி" என்றார் பிறிதோரிடத்து - திருப்புகழ் 1168. அடியார் சபையில் இருந்தால் நமது வினை ஒழியும் என்பது மறை நூல் துணிபு. "விண்டொழிந்தன நம்முடைய வல்வினை** நாதன் மெய்த் தொழில்புரிதொண்டரோ டினிதிருந் தமையாலே"- சம்பந்தர்-II-106 -2.

‡ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்த அருணகிரியார் காலத்திலேயே - தணிகை மலையின் அடிவாரத்தில்உள்ள சரவணப் பொய்கைமிக விசேட தீர்த்தமாக விளங்கிற்று என்பது இதனால் தெரிகின்றது. இச்சரவணப்பொய்கை குமாரதீர்த்தம் எனவும் பெயர் பெறும். திருத்தணிகைக்குச் செல்பவர் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்வதுதான் விசேடம்: நூற்றெழுபது ஆண்டுகளுக்கு முன்பிருந்த கச்சியப்பமுநிவர்-

## 258

வாசனைக் கூட்டம் நிறைந்த கூந்தலையும், கொவ்வைக் கனி போன்ற வாயையும், வெண் பிறைப் பிளவு போன்ற நெற்றியையும் உடைய (மாதர்களின்)

மோக மயக்கில் நட்புப் பூணும் நான் உனது மலரடியைப் பாடும்வழிவகையை நாடாத

ஆணவங் கொண்டவன்; கொடைக் குணம் - (தாராள குணம்)-அச்சம் இல்லாதவன், உலோப குணம் உள்ளவன் (ஈயாமைக் குணம் உள்ளவன்), திறமை இல்லாதவன், அன்பு இல்லாதவன், ஊமையன் (அல்லது மூகாசுரன் போன்றவன்)-

உனது (திருத்தணிகைத் தலத்துக்கு) வந்து (வாக்கு, மனம்) காயம் மூன்றும்) பொருந்தப் பணியாதவன், இத்தகைய எனக்கு-உனக்கு இனியாருடைய (உனக்கு உகந்த அடியார்களுடைய), திருக் கூட்டத்திற் சேரும் பேற்றைத் தந்தருளுவாயாக.

குருகுலத்து அரசனாம் தருமருக்கு ஒரு தூதனாய்ச் சென்றவன், மாவலிச் சக்கரவர்த்தியிடம்) வாமனனாய் (குறளனாய்)ச் சென்றவன், பலத்த மாயை வல்லவன், வெண்ணெய் (இருக்கும் இடத்தைக்)

குறித்தறிந்து உண்ணும் நேசன், இலட்சுமி வாசம் செய்யும் மார்பன், சாத்துவிகம், இராசதம், தாமதம் - என்னும் மூவகைய மூல குணங்களுக்குத் தலைவன் - ஆகிய திருமாலின் மருமகனே!

குமாரதீர்த்தம் - சரவணப் பொய்கை - எனப்படும் திருக்குளத்தில் நாள்தோறும் பல திசைகளில் இருந்து வரும் அடியார்கள் நெருங்கிக் குளிக்கும் சிறப்பைப் பெற்றதும், எட்டுத்திக்குகளும்-

---

"எத்துயர்த் திரளும் அத்தினத் தகற்றுஞ்
சரவணப் பொய்கைத் தடம்புனல் துளைந்து
மென்மெலக் குன்றம் மீமிசை யிவர்ந்து"

(எத்தகைய துயரத்தையும் மூழ்கின அத்தினத்திலேயே தீர்த்திட வல்ல சரவணப் பொய்கை)- எனத் தணிகை ஆற்றுப் படையிற் கூறியுள்ளார்; இந்தத் தீர்த்தத்திற் குளித்த பின்னரே மெதுவாக மலை ஏறுதல் வேண்டும் என்பதும் அறிகின்றோம்.

திரைக்கடல் சூழும் புவிக்குயி ராகுந்
திருத்தணி மேவும் பெருமாளே. (10)

## 259. திருவடியை ஓத

தனத்தன தானம் தனத்தன தானம்
தனத்தன தானம் தனதான

வினைக்கின மாகுந் தனத்தினர் வேளம்
பினுக்கெதி ராகும் விழிமாதர்-

மிகப்பல மானந் தனிற்புகு தா*வெஞ்
சமத்திடை போய் வெந் துயர்மூழ்கிக்;

கனத்தவி சாரம் பிறப்படி தோயுங்
கருக்குழி தோறுங் கவிழாதே-

கலைப்புல வோர்பண் படைத்திட வோதுங்
**கழற்புக ழோதுங்** **கலைதாராய்;**

புனத்திடை போய்வெஞ் சிலைக்குற வோர்வஞ்
சியைப்புணர் வாகம் புயவேளே;

பொருப்பிரு கூறும் படக்கடல் தானும்
பொருக்கெழவானும் புகைமூளச்;

சினத்தொடு சூரன் கனத்திணி மார்பந்
திறக்கம ராடுந் திறல்வேலா-

†திருப்புக ழோதுங் கருத்தினர் சேருந்
**திருத்தணி** மேவும் பெருமாளே. (11)

---

*வெஞ் சமம் - வெம்மையாகிய போர்.

†ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் அருணகிரியார் கூறிய இக் கருத்தை பொய்யாகாதபடி ஆண்டு தோறும் டிசம்பர் 31-ஆம்தேதியில் திருப்புகழ் அடியார்கள் பெருங் கூட்டமாகத் திருத்தணிகையிற் கூடித் திருப்புகழ் ஓதித் தணிகேசனைப் பணிகின்றார்கள்.

அலைகடலும் சூழ்ந்த இப் பூமிக்கு **உயிர்நிலை ஸ்தானமுமாகிய திருத்தணியில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(இனியார் தம் சபை தாராய்)

## 259

வினையைப் பெருக்குவதற்கு (அநுகூலச்) சம்பந்தமுள்ள கொங்கையை உடையவர், மன்மதனுடைய அம்புக்கு (அல்லது பாணமாம் குவளைமலருக்கு) ஒப்பாகும் கண்களை உடையவர்- (ஆகிய) பொதுமகளிர் (மேல் வைத்த ஆசை காரணமாக)

மிகவும் பலவான அவமானச் (செயல்களில்) நுழைந்து, விரும்பின கலவிப் போர்களில் ஈடுபட்டு (அல்லது - கொடிய சண்டைச் செயல்களில் ஈடுபட்டு), கொடிதான துன்பங்களில் முழுகி அநுபவித்து,

தாங்குதற்கு அரிய கவலை யடைந்து, பிறப்புக்கு அடி- கோலும் கருக்குழிகள் தோறும் (நான்) கவிழாமல் (பலயோனி பேதங்களிற் கருவாய் விழாமல்) -

கலை வல்ல புலவர்கள் சீராக ஓதியுள்ள (உனது) திருவடித் (திருப்)புகழை ஓதும்படியான கலை ஞானத்தைக் (கல்வியை) தந்தருளுக.

(வள்ளிமலையில் உள்ள) தினைப்புனத்துக்குப் போய் கொடிய வில்லேந்திய குறவர் கொடி - வள்ளியைப் - புணர்ந்த அழகிய திருப்புயம் (பேரழகு) வாய்ந்த வேளே!

கிரெளஞ்ச கிரி இருகூறுபட, கடலும் வற்றிப்போக, வானமும் புகை கொள்ள-

கோபத்துடன் சூரனுடைய கனத்த, திண்ணிய மார்பு (பிளவுபட்டுத்) திறக்கப் போர் செய்த வீர வேலாயுதனே!

திருப்புகழ் ஓதுங் கருத்துள்ள அடியார்கள் கூடுகின்ற **திருத்தணிகையில் வீற்றிருக்கும்** பெருமாளே!

(கழற்புகழ் ஓதுங் கலை தாராய்)

## 260. நோய் அற

தனதன தான தனதன தான
தனதன தான தனதான

*இருமலு ரோக முயலகன் வாத
மெரிகுண நாசி விடமேநீ-
ரிழிவுவி டாத தலைவலி சோகை
யெழுகள மாலை யிவையோடே;
பெருவயி றீளை †யெரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்-
பிறவிகள் தோறு மெனைநலி யாத
‡படியுன தாள்கள் அருள்வாயே;
வருமொரு கோடி யசுரர்ப தாதி
மடியஅ நேக§ இசைபாடி-
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே;
தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
0தருதிரு மாதின் மணவாளா-
சலமிடை பூவி னடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே.(12)

## 261. அகப்பொருள் - மாலை பெற

தனதன தானம் தனதன தானம்
தனதன தானம் தனதான

கலைமட வார்தஞ் **சிலையத னாலுங்
கனவளை யாலுங் கரைமேலே-

---

*இந்தத் திருப்புகழ் நோய் தீர்க்கும் திருமந்திரத் திருப்பதிகம் என்று ஆன்றோர் அநுபவ ஞானத்தாற் கூறுவர்; நித்திய பாரயணத்துக்கு உரியது.

†முகபரு சூலை - என்றும் பாடம்; ‡'பெருமையை நாளு மருள்வாயே' என்றும் பாடம்.

§அனேகர் இசைபாட - என்றும் பாடம்.

0'தருபிடி' என்றும் பாடம். **சிலை - (வசை) ஒலி.

## 260

இருமல் எனப்படும் உரோகம் (நோய்), முயலகன் எனப்படும் வலிப்பு நோய் - முசல் வலிப்பு, காக்கை வலி எனவும் வழங்கும் நோய், வாத நோய் (வாயு சம்பந்தமான நோய்கள்,) எரியுங் குணங் கொண்ட மூக்கு நோய், விட நோய்கள் - நீர்

நிரம்பப் போகும் நோய், நீங்காத தலைவலி, சோகை (ரத்தக் குறைவால் முகம் வெளுத்து ஊதுமாறு செய்யும் நோய்வகை), கிளைத்துப் புறப்படும் கண்டமாலை (கழுத்தைச் சுற்றி உண்டாகும் புண்கட்டி) இவைகளும், பின்னும்

பெருத்த வயிறு (மகோதரம் என்னும் நோய்), ஈளை (கோழை - இழுப்பு), எரிகின்ற குலைநோய் (மார் பெரிச்சல்), சூலை (வயிற்றுளைவு நோய்), குமரகண்ட வலியாதிய பெரிய வலி நோய்கள், பின்னும் உள்ள வேறு பல நோய்களும்

பிறவிகள் தோறும் என்னைப் பிடித்து வருத்தாத வண்ணம் (எந்தப் பிறவியிலும் என்னைப் பீடியாத வண்ணம்) உன்னுடைய திருத்தாள்களை உதவி அருளுக.

வந்த ஒரு கோடிக் கணக்கான அசுரர்களின் காலாட்படை (சேனை) இறந்துபடவும், அனேக (வீர) கீதப் பாட்டுக்களைப் பாடிக் கொண்டு

வந்த நிகரற்ற கால பயிரவர் (போர்க்களத்தில்) நடிக்கவும், (உனது) கூரிய ஒளி வீசும் வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

கற்பக விருட்சங்களின் நிழலில் உறைகின்ற மேக வாகனனாம் இந்திரன் வளர்த்த அழகிய மாது தேவசேனையின் மணவாளனே!

(கடல்) நீராற் சூழப்பட்ட (இந்தப்) பூமியின் மத்தியில் (நடு இடத்தில்) சிறப்புற்றோங்கும் **தணிகைமலையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(நோய்கள் நலியாதபடி உன்தாள்கள் அருள்வாயே)

## 261

மேகலை யாதிய இடையணிகள் பூணும் பெண்களின் வசைப் பேச்சின் ஒலியாலும், திரண்ட சங்கின் ஒலியாலும், கரைமேல் (இருந்து கூவும்)-

கருகிய காளம் பெருகிய தோயங்
கருதலை யாலுஞ் *சிலையாலுங்;

கொலைதரு காமன் பலகணை யாலுங்
கொடியிடை யாள்நின் றழியாதே-

குரவணி நீடும் புயமணி நீபங்
குளிர்தொடை நீதந் தருள்வாயே;

†சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
திருமகள் நாயன் தொழும்வேலா-

தினைவன மானுங் ‡கநவன மானுஞ்
செறிவுடன் மேவுந் திருமார்பா;

தலமகள் மீ§தெண் புலவரு லாவுந்
தணிகையில் வாழ்செங் கதிர்வேலா

---

*சிலை ஆலும் - வில்லினிடத்து அசைகின்ற

†திருத்தணிகையில் (1) சிவன் முருகரைத் தியானித்து உபதேசம் பெற்றனர்... (திருப்புகழ் 264); அவரது ஆலயம் (வீராட்ட காசர் ஆலயம்,) தணிகையில் நந்தியாற்றுக்கு வட கரையில் உள்ளது. அபராசிதவர்மன் (திருத்தணி கோயில் About 890 A. D:) கோயிலைக் கட்டினவன் - நம்பி அப்பி. Inscriptions 433 of 1905. "திருந்து திருத்தணியிற் செஞ் சடையீசற்குக், கருங்கல்லாற் கற்றளியா நிற்க, விரும்பியே நற்கலைகளெல்லாம் நவின்றசீர், நம்பியப்பி பொற்பமையச் செய்தான் புரிந்து" உபதேசித்த சாமிநாதர் ஆலயம் (ஆறுமுக சுவாமி கோயில் என வழங்கும் ஆலயம்) நந்தியாற்றுக்குத் தென் கரையில் உள்ளது (2) திருமால் முருகரை வழிபட்டுத் தாரகா சுரனாற் கவரப்பட்ட தமது சக்கரம், சங்கு முதலியவற்றைப் பெற்றார். விட்டுணு தீர்த்தம் மலைமேல் கோயிலுக்கு மேற்கே குருக்கள்மார் வீடுகளின் எதிரில் உள்ளது. (3) பிரமன் முருகரை வழிபட்டு சிருட்டித்தொழில் செய்யும் ஆற்றலைப் பெற்றனன். மலைமேல் ஏறிப்போகும் வழியில் பாதி தூரத்திற் பிரமசுனையும் பிரமேசர் ஆலயமும் உள்ளன. இங்ஙனம் மும்மூர்த்திகளும் திருத்தணிகையில் வழி பட்டதை இங்கு அருண கிரியார் குறித்துள்ளார். (அடுத்தபக்கம் பார்க்க)

கரிய காளத்தாலும் (மன்மதனது எக்காளமாகிய குயிலின் ஒலியாலும்), பெருகியுள்ள நீராலும் (கடலொலியாலும்), எண்ணி எண்ணிக் கருதும் சிந்தனையாலும், வில்லினிடத்தே அசைகின்ற-

கொலையே செய்யவல்ல மன்மதனது பல பாணங்களாலும், கொடி போன்ற இடையை உடைய இவள் (தலைவி) கவலைப்பட்டு நின்று அழிவு படாமல்

குராமல ரலங்காரம் கொண்டு விளங்கும் (உனது) திருப்புயத்தில் அணிந்துள்ள கடப்பமலரின் குளிர்ந்த மாலையை நீ கொடுத்து அருள்புரிவாயாக.

பர்வதராச புத்திரியின் தலைவனான சிவன், கலைமகளின் (சரசுவதியின்) தலைவனான பிரமன், திருமகளின் (இலக்குமியின்) தலைவனான திருமால் மூவரும் தொழும் வேலனே!

தினைப்புனத்தில் இருந்த மான் போன்ற வள்ளியும், விண்ணுலகத்துள்ள மேன்மை பொருந்திய ‡கற்பக வனத்தில் வளர்ந்த தேவசேனையும் நெருங்கி அணையும் திருமார்பனே!

தலமகள் மீது (தலமகளாம் பூமியின் மீது) §மதிக்கப்படும் தேவர்கள் (வந்து) உலவும் (திருத்) **தணிகையில்** வாழும் செவ்விய ஒளி வாய்ந்த வேலனே!

‡கந வன மான் - தெய்வானை. கநவனம் = கம்+ந+வனம் = விண்ணுலகத்துள்ள மேன்மை பொருந்திய கற்பகவனம்; கனம் வனம் எனப்பிரித்துப் பொன்மயமாகிய கற்பக வனம் என்றும் பொருள் கொள்ளலாம்.

§எண்புலவர் மதிக்கப்படுந் தேவர்.

*தனியவர் கூருந் தனிகெட நாளுந்
தனிமயி லேறும் பெருமாளே.(13)

## 262. தணிகையில் வாசம் செய்ய

தனத்தன தனத்தம் தனத்தன தனத்தம்
தனத்தன தனத்தம் தனதான

கரிக்குழல் விரித்தும் புறக்கயல் விழித்துங்
கரிக்குவ டிணைக்குந் தனபாரக்-

கரத்திடு வளைச்சங் கிலிச்சர மொலித்துங்
கலைத்துகில் மினுக்யும் பணிவாரைத்;

தரித்துள மழிக்குங் கவட்டர்க ளிணக்கந்
தவிர்த்துனது சித்தங் களிகூரத்-

தவக்கடல் குளித்திங் குனக்கடி மையுற் †றுன்
தலத்தினி லிருக்கும் படிபாராய்;

புரத்தையு மெரித்தங் கயத்தையு முரித்தொண்
‡ பொடிப்பணி யெனப்பன்§ குருநாதா!

---

*தனித்து நின்று நின்னையே போற்றுபவரின் துயர் கெடுப்பவன் நீ ஆதலின், இந்தத் தலைவி உன்னையே நினைந்து தனித்திருந்து துயர் உறுகின்றாள். ஆகவே, உனது குளிர் மாலையை இவளுக்குத் தரத்தகும்; தந்தருளுக - என அகப்பொருள் துறை கொண்ட நான்காம் அடிக்கு ஏற்ற கருத்துள்ள இந்த ஈற்றடியைச் சுவாமிகள் ஆண்டுள்ளார்.

†இங்கு அருணகிரியார் வேண்டிக் கொண்டபடியே அவர் கிளியான பின்னர்த் திருத்தணிகைக்கு வந்து தணிகேசர் திருக்கரத்து அமர்ந்து சீர்பாத வகுப்பு ஆதிய பாடினரோ - என்றும் தோன்றுகின்றது. திருத்தணிகை முருகனைத் திருவகுப்பிற் பல வகுப்புக்களிற் கூறி யுள்ளதும் உணர்தற் பாலது. (அருணகிரி நாதர் வரலாறு - பக்கம் 147, 178, 179.)

‡பொடி பணி என் அப்பன் எனப்பிரித்து, திருநீற்றினையும் பாம்பினையும் அணிந்த என் அப்பன் எனப் பொருள்கொள்க.

§திருத்தணிகையில் தந்தைக்கு முருகவேள் உபதேசம் செய்ததாக வரலாறு உளதாதலின் சிவனுக்குக் குருநாதனே என்றார்.

சுற்றமும் பற்றும் ஒழித்துத் தனிமையை விரும்பித் தனித்தவம் மிகச் செய்யும் தன்மையாளரின் தனிமை நீங்க (அல்லது - திக்கற்ற அடியார்களின் திக்கற்ற தன்மை நீங்க) நாள்தோறும் ஒப்பற்ற மயிலில் ஏறிவந்து அவர்களுக்கு (உதவும்) பெருமாளே! (ஐம்புலச் சுற்றங்களை ஒழித்த தனியார்க்கு நாளும் பிரசன்னமாயிருக்கும் மயிலேறும் பெருமாளே! எனலுமாம்); (திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை என்னும் பழமொழியின் உட்பொருளும் ஈண்டு உணரற்பாலது.)

*(மயிலேறும் பெருமாளே! குளிர் தொடை நீ தந்து அருள்வாயே!)*

## 262

கரிய கூந்தலை விரித்தும், வெளித்தோன்றும் கயல்மீன் போன்ற கண்களை விழித்தும், யானை போன்றும் மலைபோன்றுமுள்ள கொங்கைப் பாரத்தை உடையவராய்-

கையில் அணிந்துள்ள வளையல்களும் (கழுத்தில் அணிந்துள்ள) (பொற்) சங்கிலி மாலைகளும் ஒலி செயச் செய்தும், மேகலை அணிந்துள்ள புடைவையைப் பள பளப்புடன் உடுத்தும், (தம்மைப்) பணிந்தொழுகும் (ஆடவர்களை)

ஏற்று (அங்கீகரித்து), அவர்களது உள்ளத்தை அழிக்கும் வஞ்சகர்களாம் (பொது மகளிரின்) இணக்கத்தை (சகவாசத்தை தொடர்பை) நீக்கி, உனது உள்ளம் மகிழ்ச்சி மிகக் கொள்ளும்படி (நான்)

தவக் கடலில் குளித்து, இப்பொழுதே உனக்கு அடிமை பூண்டு, உன் தலத்தில் (தணிகையில்) இருக்கும் படியான பாக்கியத்தை நான் பெறும்படியாகக் (கண்) பார்த்தருளுக.

திரிபுரத்தை எரித்து, அழகிய யானையை உரித்து, ஒளி வீசும் திருநீற்றையே ஆபரணமாகக் கொண்ட (அல்லது திரு நீற்றையும் பாம்பையும் கொண்ட) என் அப்பன் சிவபெருமானுக்குக் குருநாதனே!

புயப்பணி கடப்பந் தொடைச்*சி கரமுற்றின்
புகழ்ச்சிய முதத்திண் †புலவோனே;

திரட்பரி கரிக்கும் பொடிப்பட வுணர்க்குந்
தெறிப்புற விடுக்குங் கதிர்வேலா-

சிறப்பொடு குறப்பெண் களிக்கும்வி சயத்தென்
திருத்தணி யிருக்கும் பெருமாளே. (14)

## 263. திருப்புகழின் பெருமை: திருப்புகழ் ஓத

தனத்தன தனத்தம் தனத்தன தனத்தம்
தனத்தன தனத்தம் தனதான

சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்குஞ்
செகுத்தவ ருயிர்க்குஞ் சினமாகச்-

சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்;

நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்-

‡நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் செயல்தாராய்;

---

*சிகரம் - உயர்ச்சி; ஸ்தூல பஞ்சாக்ஷரம் - நமசிவாய; சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் - சிவாய நம; காரண பஞ்சாக்ஷரம்- சிவாய சிவ; மஹா பஞ்சாக்ஷரம் - "சிவ"; மஹாபநு - 'சி' காரம் என்பர். (ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம் - பக்கம் 11 - திருப்புகழ் 207 பக்கம் 28 - பார்க்க. சிவாயநம - என்பதில் 'சி' காரம் சிவத்தையும், வகாரம் அருட்சத்தியையும். யகாரம் ஆன்மாவையும், நகாரம் திரோதானத்தையும். மகாரம் ஆணவ மலத்தையும் உணர்த்துவனவாம். சிகார வகாரங்கள் பதியையும், யகாரம் பசு வையும், நகார மகாரங்கள் பாசத்தையும் விளக்குவனவாம். (ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம் பக்கம். (13) இதனால் தான் 'சிகரம் அருந்த வாழ்வது சிவஞானம்' என்றார் (திருப்புகழ் 658).

†புலவோன் - இது சம்பந்தரையும் குறிக்கலாம்.

‡இறைவன் திருப்புகழ் நெருப்பையும் எரிக்கும் - (உதாரணம்) 'ஞால நின்புகழே மிக வேண்டுந் தென் ஆலவாயில் உறையும் எம் ஆதியே'- எனச் பக்கம் 157 பார்க்க.

புயத்தில் ஆபரணமாகக் கடப்பமாலை அணிந்த புலவனே! உயர்ச்சியை உற்று (மேலான தன்மையை உற்று) (அல்லது *"சி" என்னும் மகாமனுவின் உட்பொருளாய் உற்று) (அல்லது *சிவநிலை பதிநிலையை அடைந்து) இனிய புகழ் அமுதைக் கொண்ட திண்ணிய புலவனே!

கூட்டமான குதிரைகளும் யானைகளும் பொடிபடவும், அசுரர்கள் சிதறுண்ணவும் செலுத்தின ஒளிவேலனே!

சிறப்புடனே குறப்பெண் மகிழும் ... பெருமாளே! வெற்றியும் அழகும் கொண்ட **திருத்தணியில்** வீற்றிருக்கும் பெருமாளே!

*(உன் தலத்தினில் இருக்கும்படி பாராய்)*

## 263

(முருகவேளின் புகழை ஓதும் அடியார்களிடம்) கோபங் கொண்டவர்களின் முடிக்கும் (தலைக்கும்), அவர்களொடு பகை பூண்டவர்களுடைய குடிக்கும், கொல்பவர்களுடைய உயிர்க்கும், கோபத்துடன் (நோக்கிச்)-

சிரிப்பவர்க்கும், பழிப்பவர்க்கும், திருப்புகழ் நெருப்பாம் என்னும் (உண்மையை) யாம் அறிவோம்.

(முருகன் திருப்புகழ்) அடியார் கருதினதைத் தரும்; மனத்தை உருக்கும், இருண்ட கருவை அறுக்கும் இனிப் பிறவாதவாறு (இனிப் பிறவாதவாறு அறுக்கும்),

நெருப்பையும் எரித்தழிக்கும், மலையையும் பொடி படுத்தும்; (ஆதலால்) உனது நிறை புகழை உரைத்து ஓதும் திருப்பணியை எனக்குப் பணித்திடுவாயாக.

---

சம்பந்தர் இறைவன் திருப்புகழை உரைக்க - பாண்டியனுக்கு உற்ற சுர நெருப்பு ஒடுங்கி ஓடிற்று. தீயிலிட்ட ஏடு வேகாது பச்சையா யிருந்தது; பொருப்பையும் இடிக்கும் திருப்புகழ் என்பதற்குச் சான்று:-

**முருகன் புகழை ஓதி முருகாற்றுப்படை பாடின நக்கீரரை அவர் அடைபட்டிருந்த மலையை உடைத்து அவரை மீள் வித்தது.

"கவிப்புலவன் இசைக்குருகி வரைக் குகையை இடித்து வழி காணும்" வேல் வகுப்பு.

*தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்*
*தகுத்தகு தகுத்தந் தனபேரி-*

*தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழக்குந்*
*தளத்துட னடக்குங் கொடுசூரர்;*

*சினத்தையு முடற் சங் கரித்தம லைமுற்றுஞ்*
*சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா-*

*திணைக்கிரி குறப்பெண் தனத்தினில் சுகித்தெண்*
**திருத்தணி** *யிருக்கும் பெருமாளே.** (15)

---

*'சினத்தவர் முடிக்கும்' என்னும் இந்தத் திருப்புகழ் - முருகன் திருப்புகழின் ஆற்றலையும் பெருமையையும் விளக்கும்; முதல் இரண்டடி திருப்புகழ் துஷ்ட நிக்ரகம் செய்யும் என்பதையும், பின் இரண்டடி திருப்புகழ் சிஷ்ட பரிபாலனம் செய்யும் என்பதையும், ஈற்று இரண்டடி அங்ஙனம் செய்ததற்கு உதாரணத்தையும் எடுத்துக் காட்டுகின்றன. ஏழாவது அடியில் துஷ்டர்களாம் அசுரர்களைச் சங்கரித்ததையும், எட்டாம் அடியில் புனித வள்ளியை மணந்ததையும் எடுத்துக் காட்டுகின்றார்.

சித்தி விரும்புவோர் - இந்தத் திருப்புகழின் உண்மையை உணர்ந்து முருகன் திருப்புகழ் ஓதி வெற்றி பெறுவார்களாக; இருமலு ரோகம் - என்னும் 260- ஆம் திருப்புகழ் நோய் தீர்க்கும் "மந்திரத் திருப்புகழ்" என்றால் இந்தத் திருப்புகழ் சித்தி தரும் "தந்திரத் திருப்புகழாம்" - இதனை "வீர ஜயத் திருப்புகழ்" என்றும் கூறுவோம். (அருணகிரி நாதர் வரலாறு - பக்கம் 128 பார்க்க)

இந்தத் திருப்புகழின் கருத்தை:-

"சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்த பகை அறுத்தெறிய உறுக்கி
எழும் அறத்தை நிலை காணும் - என

வேல் வகுப்பிலும் எடுத்து உரைத்துள்ளார். (தொடர்ச்சி பக்கம் 159)

தனத்தன தனத்தம் ... தகுத்தகு தகுத்தம் - தன - என்ற பேரி (முரசு) வாத்தியமுழக்கத்துடனும்

தடுட்டுடு டுடுட்டுண்டு - என்ற உடுக்கைப் பறையின் முழக்கத்துடனும் வந்த படையுடன் (போர்க்கு வந்த) கொடிய சூரர்களையும் (அசுர வீரர்களையும்), அவர்கள்

கோபத்தையும் ஒரு நொடிப்போதில் அழித்து - அங்ஙனம் அழிபட்டுக் கிடந்த †அவர்தம் (பிண) மலை முழுமையையும் (உனது) சிரிப்பினால் எரி கொளுத்திச் சாம்பலாக்கிய ஒளி வேலனே!

தினை விளைந்த மலையில் (வள்ளிமலையில்) வாசஞ் செய்த குறப்பெண் (வள்ளியின்) கொங்கையிற் சுகித்து (இன்பம் பூண்டு) (யாவரும்) மதிக்கும் **திருத்தணியில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(நிறைப்புகழ் உரைக்கும் செயல் தாராய்)

'திருப்புகழை உரைப்பவர்கள் படிப்பவர்கள் மிடிப் பகையை செயித்தருளும் இசைப்பிரிய' என்னும் திருப்புகழும் (173), 'இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர் இடுக்கினை அறுத்திடும்' என்னும் திருப்புகழும் (271) ஈண்டு உணர்தற் பாலன.

† சங்கரித்து அம் மலை முற்றும் எனப் பிரிக்க. சங்கரிக்கப் பட்ட அசுரர் பிணக் குவியலை எரித்துச் சாம்பராக்கியது:- "பன்னிரு விழிகளும் பிறங்கு வெஞ்சுடர் வடவை போலாக்கி, அக்கணத்தில் உற்று நோக்கினன், எரிந்தன களேவரத்தோங்கல்; வெந்து துண்டுகள் பட்டன" "அழலெழ விழித்த லோடும் அடலையின் உருவாய் அழித்த" "அத்தனோர் உங்காரத் தால் வெந்துகளாக" (அடலை - சாம்பல்)

- கந்த புராணம் - சூரன்வதை - 148, 149, 256, 260

## 264. வாக்கழிய

தத்தனாத் தனன தத்தனாத் தனன
தத்தனாத் தனன தனதான

தொக்கறாக் குடில சுத்தமேற் றசுக
துக்கமாற் கடமு மலமாயை-
துற்றகாற் பதலை சொற்படாக் குதலை
துப்பிலாப் பலச மயநூலைக்;
கைக்கொளாக் கதறு கைக்கொளாக் கையவ
லப்புலாற் றசைகு ருதியாலே
கட்டுகூட் டருவ ருப்புவேட் டுழல
சட்டவாக் கழிவ தொருநாளே;
அக்கராப் பொடியின் மெய்க்கிடாக் குரவர்
*அர்ச்சியாத் தொழுமு நிவனாய-
அப்பபோர்ப் பனிரு வெற்பபூத் தணியல்
வெற்பபார்ப் பதிந திகுமாரா;
இக்கணோக் குறில்நி ருத்தநோக் குறுத
வத்தினோர்க் குதவு மிளையோனே-
†எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
‡டெத்தினார்க் கெளிய பெருமாளே.(16)

---

*இது சிவபிரான் தணிகையில் முருகவேளிடம் உபதேசம் பெற்றதைக் குறிக்கும். திருப்புகழ் 261-கீழ்குறிப்பைப் பார்க்க.

† எத்திடார்க்கு - ஏத்திடார்க்கு. ‡ எத்தினார்க்கு - ஏத்தினார்க்கு.

## 264

தோல் நீங்காத குடிசை (இருப்பிடம்), அசுத்தத்தை (அழுக்கை) ஏற்றதும், சுகம், துக்கம், ஆசை கொண்டதுமான குடம், மும்மலம், மாயை (இவை)

நெருங்கவைத்த, காற்று அடங்கும் தாழி (பானை), சொல்லும் சொல் சொல்லாக விளங்காத மழலைச் சொல் போன்ற, அறிவுக்குப் பொருந்தாத பல சமய நூல்களைக்

கைக்கொண்டு, கதறுகையை (வீண் கூச்சலை) மேற்கொண்ட ஆக்கை (உடம்பு), துன்பத்துக்கு இடமாம் மாமிசத் தொகுதி, சதை, ரத்தம் இவற்றால்-

கட்டப்பட்ட கலப்பு, மிக வெறுக்கத்தக்க (பொருளான) (இந்த சரீரத்தை) விரும்பித் திரிகின்ற எனக்கு நன்றாக வாக்கு அழியவும் (மவுன நிலை கூடவும்) ஒருநாள் கிடைக்குமா? (அல்லது) கட்டப்பட்ட கலப்பு ஆன இந்த உடல் மீது வெறுப்பை விரும்பி (வெறுப்பை மேற்கொண்டு) திரியவும், நன்றாக மவுன நிலை கூடவும் ஒரு நாள் கூடுமா!

எலும்பு (அல்லது ருத்ராக்ஷ மாலை), பாம்பு, திருநீறு இவை தமை உடம்பில் அணிந்துள்ள பெரியராம் (சிவபிரான்) அருச்சித்துத் தொழுத ஞானியாம் (கடவுளாம்).

அப்பனே! போருக்குத் தக்க பன்னிரண்டு மலைபோன்ற தோளனே! குவளை மலர் மலர்கின்ற (அல்லது அழகிய) தணிகை மலை (வாழ்வே)! பார்வதிக்கும், (கங்கை) நதிக்கும் குமரனே!

இந்தப் பூமியில் நோக்கம் என்பது இருந்தால் அது உன்னுடைய நடனத்தை நோக்கும் நோக்கு ஒன்றே; அத்தகைய நோக்கு ஒன்றையே கொண்ட தவசீலர்களுக்கு உதவும் இளையவனே! என்றும் இளையோய்!

உன்னை ஏத்தாதார்க்கு அரியவனே (ஏத்தாதவர் கிட்டுதற்கு அரியவனே)! முத்தனே (பாசங்களில் நீங்கியவனே)! பாடல்களைத் தமிழ் கொண்டு (தமிழ்ப் பாக்களால்) உன்னை எத்தினவர்க்கு (புகழ்ந்தவருக்கு) எளிய பெருமாளே!

(வாக்கழிவ தொரு நாளே)

## 265. திருவடி பெற

தத்தனாத் தனன தத்தனாத் தனன
தத்தனாத் தனன தனதான

வட்டவாட் டனம னைச்சிபாற் குதலை
மக்கள் தாய்க் கிழவி பதிநாடு-

வைத்ததோட் டமனை யத்தமீட் டுபொருள்
மற்றகூட்ட *மறி வயலாக;

முட்டவோட் டிமிக வெட்டுமோட் டெருமை
முட்டர்பூட் டியெனை யழையாமுன்-

முத்திவீட் டணுக முத்தராக் கசுரு
திக்குராக் கொளிரு கழல்தாராய்;

பட்ட †நாற் பெரும ருப்பினாற் கரஇ
பத்தின்வாட் பிடியின் மணவாளா-

பச்சைவேய்ப் ‡பணவை கொச்சைவேட் டுவர்ப
திச்சிதோட் புணர்த ணியில்வேளே;

எட்டுநாற் கர§வொ ருத்தல்மாத் திகிரி
யெட்டுமாக் குலைய எறிவேலா-

எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
டெத்தினார்க் கெளிய பெருமாளே. (17)

---

*அறிவு அயலாக - "புலனைந்தும் பொறி கலங்கி நெறி மயங்கி அறிவு அழிந்திட்டு" - சம்பந்தர் - I-130-1.

ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்' அப்பர் VI-99-1.

†நாற்பெரு மருப்பு - இந்திரனது யானை. ஐராவதத்துக்கு நான்கு தந்தங்கள் உண்டு.

'மருப்பிணை இரட்டை வேழம்'... 'தந்தம் நான்கும் சடசட ஆர்ப்பொடு சிந்தல் உற்றன' - கந்தபுராணம் 2-43-29, 83.

‡பணவை - பரண். §ஒருத்தல் - யானை.

# 265

வட்டவடிவும், ஒளியும் உள்ள கொங்கையைக் கொண்ட மனைவி, (அவள் பாற் பெற்ற) அவளிடத்திற் பெற்ற மழலைச் சொல் பேசும் குழந்தைகள் (அல்லது, பாலுண்ணும் மழலை மொழி பேசும் குழந்தைகள்), தாய் என்னும் கிழவி, (எனது) ஊர், (எனது) நாடு,

(எனக்குள்ள) தோட்டம், (எனக்குள்ள) வீடு, (எனக்குள்ள) அத்தம் (செல்வம்), நான் ஈட்டிய (சம்பாதித்த) பொருள், மற்று (என்னைச் சார்ந்த) உற்றார் உறவினர் (தம்) கூட்டம், என் (அறிவு) இவை யெலாம் அயலாக (என்னை விட்டு நீங்க) -

நன்றாக ஓட்டி மிகவும் கிட்டி வரும் பெரிய எருமை மேல் வரும் (கால தூதராம்) மூடர்கள் (ஆள்கள்), (பாசக் கயிற்றினைப்) பூட்டி என்னை அழைப்பதற்கு முன்பாக (நீ) (அடியேன்)

முத்தி வீட்டை அணுகிச் சேரவும், (எல்லாம் விட்ட) ஞானியர் போல (என்னை) ஆக்கவும், வேதத்தினுள்ளும், குராமலர்களினுள்ளும் ஒளிர்கின்ற (விளங்குகின்ற) (உனது) கழலணிந்த சேவடியைத் தந்தருளுக.

நெற்றிப் பட்டமும், நான்கு பெரிய தந்தங்களும், தொங்கு கின்ற துதிக்கையையும் உடைய யானை ஐராவதம் (வளர்த்த) ஒளி பொருந்திய பெண் யானை அனைய நடையை உடைய தேவசேனையின் மணவாளனே!

பசிய மூங்கிலாலாய பரண் மீதிருந்த - இழிகுல வேடரின் ஊரிலிருந்த வள்ளியின் தோளை அணைந்த தணிகை வேளே!

எட்டு - தொங்கும் துதிக்கையை உடைய - யானைகளும் (அஷ்டகஜங்களும்), பெரிய மலைகள் எட்டுடனே (அஷ்ட பர்வதங்களுடனே) நடுங்கும்படிச் செலுத்திய வேலனே!

ஏத்தித் துதிக்காதவர்க்கு அரிய முத்தனே (பாசங்களில் நீங்கியவனே)!, பாடல்களைத் தமிழிற் பாடி (தமிழ் பாக்களால்) உன்னைப் போற்றுபவர்க்கு எளிய பெருமாளே!

(கழல் தாராய்)

## 266. திருவடியில் உருக

தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன தனதான

*சினத்தி லத்தினை சிறுமண லளவுடர்
செறித்த தெத்தனை சிலைகட லினிலுயிர்
செனித்த தெத்தனை திரள்கய லெனபல வதுபோதா-

†செமித்த தெத்தனை மலைசுனை யுலகிடை
செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு
செடத்தி லெத்தனை நமனுயிர் பறிகொள்வ தளவேதோ;

மனத்தி லெத்தனை நினைகவ டுகள்குடி
கெடுத்த தெத்தனை மிருகம தெனவுயிர்
வதைத்த தெத்தனை யளவிலை விதிகர மொழியாமல்-

வகுத்த தெத்தனை மசகனை முருடனை
மடைக்கு லத்தனை மதியழி விரகனை
மலர்ப்ப தத்தினிலுருகவு மினியருள் புரிவாயே;

தனத்த னத்தன தனதன தனதன
திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
தகுத்த குத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ-

தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி
தடுட்டு டுட்டுடு டடுடுடு டுடுடுடு
தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போலச்;

சினத்த மர்க்கள செருதிகழ் குருதிய
திமிழ்த்தி டக்கரி யசுரர்கள் பரிசிலை
தெறித்தி டக்கழு நரிதின நிணமிசை பொரும்வேலா-

---

*சின திலம் தினை - சின்ன எள்ளு, தினை.

† செமித்தது - சென்மித்தது.

## 266

சின்ன எள்ளு, திணை, சிறு மணல் இவைகளின் அளவுள்ள உடல்களிற் பொருந்தின (பிறவி) எத்தனை! முழங்கும் கடலில் உயிர் பெற்று வாழ்ந்த (பிறவி), எத்தனை, திரண்ட கயல் மீன் எனப் பல வகைபனவாய்! அது போதாமல்

சென்மித்த (பிறந்த) பிறப்பு எத்தனை! மலையிலும் சுனையிலும்! உலகில் (பிறந்து) செழிப்புற்ற (பிறவி) எத்தனை! அற்பமான கொங்கை மீது மோகங் கொண்டு உடம்பெடுத்த (பிறவி) எத்தனை! (இங்ஙனம் தோன்றி) யமன் உயிர் பறித்துப் போவதற்கு ஒரு அளவு (கணக்கு) உண்டோ!

(மா நுடப் பிறவியில்) மனத்தில் எத்தனை எண்ணங்கள் வஞ்சகமானவை! குடி கெடுத்தது எத்தனை; மிருகம் போலப் பிற உயிர்களை வதைத்தது எத்தனை, (இதற்கெல்லாம்) அளவே இல்லை(கணக்கே இல்லை); விதியின் போக்கு தவறாதபடி-

உண்டான நிகழ்ச்சி எத்தனை! (இங்ஙனம் எல்லாம் தோன்றி இளைத்த இந்த) கொசு போன்றவன், மூடன், (அல்லது பிடிவாதம் உள்ளவன்), மடையர் கூட்டத்திற் சேர்ந்தவன், அறிவழிந்த காமம் (ஆசை) கொண்டவன் - ஆகிய நான் (உனது) மலரடியில் உருகும்படி இனி அருள் புரிவாயாக.

தனத்த னத்தன தனதன தனதன.... .... .... .... ... ... ...
... தகுத்த குத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ

தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி ... ... ... டடுடு டுடுடு (என்று) தனித் தொலிக்கும் மத்தளம், உடுக்கை இவைகளின் வெற்றி ஒலி கடல் போல முழங்க-

கோபத்துடன் நடக்கும் போர்க்களப் போரில் தோன்றி யெழும் ரத்தம் ஒலியுடன் பெருக, யானைகளும், அசுரர்களும், குதிரைகளும், வில்லுகளும் குலைந்து முறிபட, கழுகும் நரியும் தின்ன (உண்ண), மாமிசங்கள் மீதிருந்து சண்டை செய்த வேலனே!

செழிக்கு முத்தம சிவசர ணர்கள்தவ
முநிக்க ணத்தவர் மதுமலர் கொடுபணி
திருத்தணிப்பதி மருவிய குறமகள் பெருமாளே. (18)

## 267. திருவடி பெற

தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன தனதான

தொடத்து ளக்கிகள் அபகட நினைவிகள்
குருட்டு மட்டைகள் குமரிகள் கமரிகள்
சுதைச்சி றுக்கிகள்*குசலிக †ளிசலிகள் முழுமோசந்-

துறுத்த மட்டைகள் அசடிகள் கசடிகள்
முழுப்பு ரட்டிகள் நழுவிகள் ‡மழுவிகள்
§துமித்த மித்திரர் விலைமுலை யினவலை புகுதாமல்;

அடைத்**த வர்க்கியல் சரசிகள் விரசிகள்
தரித்த வித்ரும நிறமென வரவுட
ணழைத்து சக்கிர கிரிவளை படிகொடு விளையாடி-

---

*குசலிகள் - தந்திரவாதிகள். †இசலிகள் - பிணங்கிகள்.

‡மழுவிகள் - (தங்கள் சூது வெளியாகாமல்) மழுப்புவோர்.

§துமித்த - (பொருள்) அறுக்கின்ற.

**அவர்க்கியல் விளையாடி- அப்பொது மாதர்கட்குச் சமானமாக இயல்கின்ற சரசிகளும் விரசிகளும் ஆகிய அணிமாதி அஷ்ட சித்திகளும் பவளம்போலுஞ் சிவந்த நிறத்துடன் வரும்படியாக உடனே அழைப்பித்து (அவர்களோடு) சக்கிரவாள கிரியாற் சூழப்பட்ட இப்பூமியில் விளையாடச் செய்து, பொது மகளிரின் இணக்கம் பயனற்றது போலப் பயனற்றன கரும யோகிகள் காட்டும் (ரசவாதம் முதலிய பலவித) சித்து விளையாடல்கள்;

(அடுத்த பக்கம் பார்க்க)

செழிப்புள்ள உத்தம குணத்தரான சிவனடியார்களும், தவமுநிவர் கூட்டத்தினரும், தேன் நிறைந்த மலர் கொண்டு பணிகின்ற **திருத்தணிப்** பதியில் வீற்றிருக்கும் பெருமாளே! குறமகள் (வள்ளியின்) பெருமாளே!

(மலர்ப் பதத்தினில் உருகவும் இனியருள் புரிவாயே)

## 267

தொட்டால் (கூச்சப்பட்டவர் போல) அசைபவர்கள், வஞ்சக நினைவு கொண்டவர்கள், (அறிவுக்)கண் இல்லாத மூடர்கள், குமரிகள் (இள மகளிர்கள்), நிலப் பிளப்பு அனையவர் (பிளப்பில் ஆபத்தில் வீழ்த்துபவர்கள்), இன்பச் சுவையைச் சிறுகச் செய்பவர்கள் (இன்பத்தைக் குறுக்குபவர்), தந்திர வாதிகள், பிணக்கம் கொள்பவர்கள், முழு மோசம்,

அடைக்கப்பட்டுள்ள பயனிலிகள், மூடர்கள், குற்றம் உள்ளவர்கள், முழுதும் மாறுபட்ட பேச்சுக்காரிகள், பிடிகொடாது நழுவுகிறவர்கள், (தங்கள் சூது வெளியாகாமல்) மழுப்பு வோர்கள், (பொருள்) அறுக்கின்ற நண்பர்கள், விலைக்குக் கொங்கையை (விற்பவர்கள்) ஆகிய பொது மகளிரின் வலையில் (நான்) புகாமல்,

(நற்கதிக்கு போகும் வழியை) அடைத்த அந்தப் பொது மகளிர்களுக்குச் சமானமாக நடக்கின்ற (அவர்கள் போன்ற)- விருப்பை (இன்பத்தைக்) காட்டுபவர்களும் வெறுப்பை (துன்பத்தை ஊட்டுவர்களும்) ஆகிய சித்துக்களைக் காட்டும் கருமயோகிகளை, அணிந்துள்ள பவளத்தின் ஒளி போலப் (பெரிதும் மதித்து), அவர்களை வரும்படி வரவழைத்து, சக்ரவாள கிரியாற் சூழப்பட்ட இப்பூமியில் அவர்களுடன் விளையாடி (வீண்பொழுது போக்கும் என்னுடைய)-

---

ஆதலால், அவர்களுடன் கூடி விளையாடும் இணக்கம் விலக்கத்தக்கது என்றபடி. கருமயோக சித்துக்களை அருணகிரியார் கண்டிப்பதைச் சித்து வகுப்பிலும், "கவலைபடுகின்ற யோக கற்பனை மருவு சிந்தை போய்விட" எனத் திருப்புகழ் (212) பாடலிலும் கூறியிருத்தல் காண்க.

*அவத்தை தத்துவ மழிபட †இருளறை
விலக்கு வித்தொரு சுடரொளி பரவந
லருட்பு கட்டியு **னடியிணை யருளுவ** **தொருநாளே;**

‡படைத்த னைத்தையும் வினையுற நடனொடு
துடைத்த பத்தினி மரகத சொருபியொர்
பரத்தி னுச்சியி னடநவி லுமையரு ளிளையோனே-

பகைத்த ரக்கர்கள் யமனுல குறஅமர்
தொடுத்த சக்கிர வளைகர மழகியர்
§படிக்க டத்தையும் வயிறடை நெடியவர் மருகோனே;

திடுக்கி டக்கட லசுரர்கள் முறிபட
கொளுத்தி சைக்கிரி பொடிபட **சுடரயில்
திருத்தி விட்டொரு நொடியினில் வலம்வரு
மயில்வீரா-

திணைப்பு னத்திரு தனகிரி குமரிநல்
குறத்தி முத்தொடு சசிமக ளொடுபுகழ்
**திருத்தணி**ப்பதி மலைமிசை நிலைபெறு
பெருமாளே.(19)

---

*அவத்தை தத்துவம் அழிபட - (பின்) ஜாக்கிராதி மலாவஸ்தைகளும், தத்துவ சேஷ்டைகளும் ஒடுங்க.

†இரு ளறை... ஆணவ மலம்.

‡தேவி உலகங்களைப் படைத்தலும் - அழித்தலும்: - " பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்த வண்ணம் காத்தவளே பின் கரந்தவளே" - அபிராமி அந்தாதி 13. (திருப்புகழ் 206.)

§தெருவில் மற்றக் குழந்தைகள் போல் மண் தின்றதைக் கண்ட தாய்க்குத் தமது வாயைத் திறந்து தம் (வயிற்றில்) அடங்கிய அண்டங்கள் அனைத்தையும் கண்ணபிரான் காட்டினர் என்ப. "உலகம் உண்ட பெரு வாயா" -திருவாய் மொழி 6-10-1; "பண்டேமுல குண்டான்" - சம்பந்தர் -1-11-9.

**வேல் கொண்டு சூரனைச் சங்கரித்தவுடன், மயிலான சூரன் தம்மைச் சுமக்க முருகவேள் உலகெலாம் வலம் வந்தனர்: "சூர்திகழ் மஞ்ஞை யேறிச் சுமக்குதி யெம்மை யென்னாப் பார் திசை வான முற்றும் பரியென நடாத்த லுற்றான்"

கந்த புராணம் - சூரன்வதை - 499

ஜாக்கிராதி மலா வஸ்தைகளும் தத்துவ சேஷ்டைகளும் ஒடுங்க, (எனது) ஆணவ மலத்தை நீக்கி, என் உள்ளே (ஞானப்) பேரொளி பரவ, நல்ல உனது திருவருளை ஊட்டி, உனது அடியிணைகளை அருளுகின்ற ஒரு நாள் எனக்குக் கிடைக்குமா!

படைத்து எல்லாவற்றையும் வினையுற - செயற்படச் செய்து காப்பாற்றி - அல்லது வினை வழியே நடராசப் பெருமானுடனிருந்து அவைகளை அழித்த கற்புடையாள், மரகத நிறத்தினள், ஒப்பற்ற பரவெளிக்கு மேலே நடனம் புரிகின்ற உமாதேவி அருளிய இளையோனே!

பகைத்து வந்த அசுரர்கள் யமலோகத்தை அடையும் படிப் போர் செய்த சக்கரம், சங்கு ஏந்திய திருக்கரத்து அழகர் பூமியாகிய பாண்டத்தை வயிற்றில் அடக்கிய பெரியோர் ஆகிய திருமாலின் மருகனே!

திடுக்கிடக் கடல் (கடல் திடுக்கிடவும்), அசுரர்கள் முறி பட்டோடவும், சேர்ந்துள்ள திசைக் கிரிகள் (அஷ்டதி சைக்கிரிகளும்) பொடிபடவும், ஒளிவேலைச் சீராகச் செலுத்திவிட்டு, ஒரு நொடிப்போதில் (உலகை) வலம் வந்த மயில் வீரனே!

தினைப்புனத்திலிருந்த இரண்டு கொங்கை மலைகளைக் கொண்ட குமரி (அல்லது - தினைப்புன லட்சுமி, கொங்கை மலைகளைக் கொண்ட குமரி), நல்ல குறச்சாதி முத்து (வள்ளியுடனும்), சசி (இந்திராணியின்) மகள் தேவசேனையுடனும் (யாவரும்) புகழும் (புகழ்கொண்ட) திருத்தணிகைப் பதியில் மலைமேல் நிலை பெற்றிருக்கும் பெருமாளே!

(உன் அடியிணை அருளுவ தொருநாளே).

## 268. அலைச்சல் அற

தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன தனதான

எலுப்பு நாடிக ளப்பொ டிரத்தமொ
டழுக்கு மூளைகள் மச்சொடு கொட்புழு
விருக்கும் வீடதி லெத்தனை தத்துவ சதிகாரர்-

இறப்பர் சூதக வர்ச்சுத ரப்பதி
யுழப்பர் பூமித ரிப்பர்பி றப்புட
னிருப்பர் வீடுகள் கட்டிய லட்டுறு சமுசாரம்;

கெலிப்பர் மால்வலை பட்டுறு துட்டர்கள்
அழிப்பர் மாதவ முற்று நினைக்கிலர்
கெடுப்பர் யாரையு மித்திர குத்திரர் கொலைகாரர்-

*கிருத்தர் கோளகர் பெற்றுதி ரிக்கள
வரிப்பர் சூடக ரெத்தனை வெப்பிணி
கெலிக்கும் வீடதை நத்தியெடுத்திவ ணுழல்வேனோ;

ஒலிப்பல் பேரிகை யுக்ரவ மர்க்கள
மெதிர்த்த சூரரை வெட்டி†யி ருட்கிரி
யுடைத்து வானவர் சித்தர்து தித்திட விடும்வேலா-

உலுத்த ராவண னைச்சிர மிற்றிட
வதைத்து ‡மாபலி யைச்சிறை வைத்தவன்
§உலக்கை ராவிந டுக்கடல் விட்டவன் மருகோனே;

---

*கிருத்தர் - செருக்குள்ளவர்.

†இருள் கிரி - இருள் மாயை செய்த கிரவுஞ்ச கிரி. "அன்ன தோர் வரை அகமெலாம் ஆயிரங் கதிரின், மன்னன் ஏகுறா இருள் நிலம் போன்றுவை கியதே" - கந்தபுராணம் தாரகன் வதை - 89.

‡மாவலியைச் சிறை வைத்தது:

திருமால் காசிபரிடத்து வாமனராய் அவதரித்து அசுர சக்ரவர்த்தி மாபலியிடம் மூன்றடி மண் யாசித்தார். இது விஷ்ணுவின் மாயை என்று

(171-ம் பக்கம் பார்க்க)

# 268

எலும்பு, நாடிகள், அப்பு (நீர்), இரத்தம், அழுக்கு, மூளைகள், அநுசிதத்தை (தகுதியின்மையைக்) கொண்ட புழு இவை இருக்கும் வீடு; அத்தகைய வீட்டில் எத்தனை குணத்து மோசக்காரர்கள்-

அதிக்கிரமம் (அநீதி) செய்பவர்கள், சூதான உள்ளத்து மக்கள், தமது ஊரிற் போலிவாதம் செய்பவர்கள் (அல்லது ஊரில் தமது பேச்சால் மழுப்புபவர்கள்), பூமியில் தோன்றுவர். (பிறந்த) பிறப்புடன் இருப்பர், வீடுகள் கட்டி அலைச்சலுறும் சமுசாரத்தில்-

வெற்றி பெறுவார்கள், மோக வலையிற் பட்டுக்கிடக்கும் துஷ்டர்கள் (பொல்லார்கள்), அழிப்பார்கள் பெரிய தவ நிலையை, அந்தப் பெரிய தவ நிலையைச் சற்றேனும் நினைக்க மாட்டாதவர்கள், கெடுப்பார்கள் யாவதையும், நட்பாளருக்கு வஞ்சனை செய்வார்கள், கொலைகாரர்கள்,

செருக்குள்ளவர்கள் கோள்சொல்லும் குணத்தவருடன் சேர்ந்து திரிந்து களவுத் தொழிலில் (அரிப்பு) தினைவு கொள்பவர்கள், கோப உள்ளத்தினர், - எத்தனை கொடியபிணி - இவைகளை எல்லாம் வெற்றி பெறும் இவ்வுடல் வீடு - இத்தகைய வீட்டை நான் ஆசையுடன் எடுத்து இவ்வுலகில் திரிவேனோ,

ஒலிக்கின்ற பல பேரிகைகள் (முரசு வாத்தியங்களுடன்) கடுமையான போர்க்களத்தில் எதிர்த்து வந்த அசுர வீரர்களை வெட்டியழித்து, இருள் மாயை செய்து வந்த கிரௌஞ்ச மலையைப் பிளந்தெறிந்து, வானவரும், சித்தரும், துதித்தேத்தச் செலுத்திய *வேலனே!*

ஆசைக்காரனாம் ராவணனுடைய சிரம் அற்று விழ அவனை வதைத்து, மாவலியைச் சிறை வைத்தவன் உலக்கையை தாவி (அரத்தாற் பொடி செய்து) நடுக்கடலில் எறிந்தவன் - ஆகிய *திருமாலின் மருகனே!*

---

அசுரப் புரோகிதன் சுக்கிரன் தடுத்தான்; தடுத்தும் வாமனர் யாசித்தபடி மாவலி மூன்றடி மண்கொடுத்தேன் என, வாமனர் ஈரடியால் மூவுலகளந்து ஓரடி வைக்க இடம் பெறாமலிருக்க, மாவலி தன் சிரத்தைக் காட்டினான். திருமால் மூன்றாவது அடியால் மாவலியைப் பாதாளத்தில் அழுத்திச் சிறையிட்டனர் என்பது வரலாறு.

§உலக்கையை ராவி நடுக்கடலில் விட்ட வரலாறு:-
*(173-ம் பக்கம் பார்க்க)*

வலிக்க வேதனை குட்டிநடித்தொரு
‡செகத்தை யீனவள் பச்சைநி றத்தியை
மணத்த தாதைப ரப்ரம ருக்கருள் குருநாதா-

வனத்தில் வாழும யிற்குல மொத்திடு
குறத்தி யாரைம யக்கிய ணைத்§துள
மகிழ்ச்சி யோடுதி ருத்தணி பற்றிய பெருமாளே (20)

## 269. காமம் அற

தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன தனதான

திருட்டு நாரிகள் ✕பப்பர மட்டைகள்
வறட்டு மோடியி னித்தந டிப்பவர்
சிறக்க மேனியு லுக்கிம டக்குகண் வலையாலே-

---

*பிரமனைக் குட்டியது - பாடல் 212 பார்க்க.

† நடித்த - சிவபெருமானுக்குக் குருநாதர் போல ஆடல் காட்டி அருள் - உபதேசித் தருளிய எனினுமாம்.

‡'பெற்றாள் சக தண்டங்கள் அனைத்தும்' - வில்லிபாரதம் அருச்சுனன் தீர்த்தயாத்திரை -5.

§உலகில் உள்ள பல் வேறு மலைகளில் - திருத்தணிகை மலையில் தான் தமக்கு அதிக மகிழ்ச்சி என்று முருகவேளே வள்ளிக்குக் கூறுகின்றனர்-

"சுந்த ரக்கிரி தொல் புவி தனிற்பல எனினும்
இந்த வெற் பினில் ஆற்றவும் மகிழ்ச்சி உண்டெமக்கே"
- கந்தபுராணம் - வள்ளியம்மை திருமணம்- 220.

✕பப்பரப் பெண்டு-வரிக் கூத்து வகை (சிலப்பதிகாரம் - 3 உரை) பப்பற மட்டைகள் எனக் கொள்ளின் நிகரற்ற பயனிலிகள் எனப் பொருள்படும். (பப்பு ஒப்பு)

வலி உண்டாகும்படிப் பிரமனைக் குட்டி, நடனஞ் செய்து ஒப்பற்ற உலகங்களை ஈன்ற பச்சை நிறத்துப் பார்வதி தேவியை மணந்த தந்தை பரப்பிரமப் பொருளாம் சிவபிரானுக்கு (உபதேசம்) அருளிய குருநாதனே!

(வள்ளிமலைக்) காட்டில் வாழும் மயிலினம் போன்ற, குறத்தி (வள்ளியை) மயக்கி அணைத்து உள்ளத்தில் மகிழ்ச்சியோடு **திருத்தணிகையிற்** பற்று வைத்து வீற்றிருக்கும் பெருமாளே!

(இவண் உழல்வேனோ)

# 269

திருட்டுப் பெண்கள், கூத்தாடும் பயனிலிகள், பசையற்ற செருக்குடன் (அல்லது - வனத்துக் காளிபோல) நாள் தோறும் நடிப்பவர்கள், சிறப்புடன் தேகத்தைக் குலுக்கி, (அப்படி இப்படித்) திருப்பும் கண் வலையாலே-

---

யாதவர்கள் தங்களுள் சாம்பன் என்பவனுக்குக் கர்ப்பிணி வேஷம் போட்டு, இவளுக்குப் பிறப்பது ஆணோ, பெண்ணோ என்ற தூர்வாசர் முதலிய ருஷிகளைக் கேட்கத், தூர்வாசர் உண்மையை உணர்ந்து, வயிற்றிற் பிறப்பது ஆணுமல்ல, பெண்ணுமல்ல; ஓர் இரும்பு உலக்கை பிறக்கும். அது உங்கள் குலம் முழுவதையும் ஒழிக்கும் என உரைத்தனர்; அவ்வாறே இரும்புலக்கையைச் சாம்பன் பெற்றான். இதை அறிந்த கண்ணபிரான் அந்த உலக்கையைத் தூளாக நன்றாய் ராவி நடுக்கடலிற் போட்டு விடும்படிக் கூறினர். யாதவர்கள் அப்படியே செய்தார்கள். ராவின பொடிகள் சம்பங்கோரைகளாகக் கடற் கரையிலே முளைத்தன. கடற்கரைக்கு விளையாடவந்த கோபால குமாரர்கள் தங்களுக்குள் கலாம் ஏற்பட இந்த முட் கோரைப் புல்லைப்பிடுங்கி ஒருவரை ஒருவர் குத்தி மாண்டனர். ராவின பொடியில் வேப்பம் விதையளவுள்ள இரும்புத்துண்டை ஒரு மீன் விழுங்கிற்று; அந்த மீன் ஒரு வேடன் கையில் அகப்பட, அந்த மீன் வயிற்றில் இருந்த இரும்புத் துண்டை அவன் தன் அம்புத் தலையிலே வைத்தான். கிருஷ்ண பிரான் யோகா சனமாக ஒரு காட்டில் பாதத்தைத் தூக்கி அமர்ந்திருக்கையில் அந்தவேடன் தூக்கியிருந்த பாதத்தை ஒரு செம்பருந்தாகப் பாவித்து அந்த அம்பை எய்தான். அந்த அம்பு படக் கண்ணபிரான் இறுதி கூடிப் பரமபதம் எய்தினர்.

திகைத்து ளாவிக ரைத்தும னத்தினில்
இதத்தை யோடவி டுத்தும யக்கிடு
சிமிட்டு **காமவி தத்திலு முட்பட** **அலைவேனோ;**

தரித்து நீறுபி தற்றிடு* பித்தனு
மிதத்து மாகுடி லைப்பொருள் சொற்றிடு
சமர்த்த பாலஎ னப்புகழ் பெற்றிடு முருகோனே-

†சமப்ர வீணம தித்திடு புத்தியில்
இரக்க மாய்வரு தற்பர சிற்பர
சகத்ர யோகவி தக்ஷண ‡தெக்ஷிண குருநாதா;

வெருட்டு சூரனை வெட்டிர ணப்பெலி
களத்தி லேகழு துக்கிரை யிட்டிடர்
விடுத்த கூளிகள் தித்திகு தித்தென விளையாட-

விதித்த வீரச மர்க்கள ரத்தமு
§ மிரற்றி யோடவெ குப்ரள யத்தினில்
விலக்கி வேல்செரு கிட்டுயிர் மொக்கிய மறவோனே;

பெருக்க மோடுச ரித்திடு மச்சமு
முளத்தின் மாமகிழ் பெற்றிட வற்றிடு
பிளப்பு வாயிடை முப்பொழு தத்துமொர் கழுநீரின்-

---

*பித்தன் - சிவன். "பித்தா! பிறை சூடி" - சுந்தரர் -7-1-1.

† சமப்ரவீண - நிபுண.

‡தணிகையிற் சிவபிரானுக்குக் குருநாதனாய் முருகவேள் யோக நிலையில் இருந்து உபதேசித்தனராதலின் முருகவேள் தட்சிணாமூர்த்தி யாயினர். சிவனே முருகவேள் ஆதலின் தனக்குத் தானே குருமூர்த்தி யாயினர்.

"தனக்குத் தானே மகனாகிய தத்துவன்
தனக்குத் தானே ஒரு தாவருங் குருவுமாய்த்
தனக்குத் தானே யருள் தத்துவம் கேட்டலும்
தனக்குத் தா னிகரினான் தழங்கிநின் றாடினான்"

(தணிகைப் புராணம் - வீராட்டகாச-118.) பாடல் 261-ன் குறிப்புரையைக் காண்க. உபதேச குரு (தட்சிணா மூர்த்தி) மவுன யோகத் திருப்பர் என்பது

திகைப்பித்து (மயக்குவித்து), உயிரைக் கரைத்து, மனத்தில் உள்ள இன்பத்தை ஓடிப்போம்படிச் செய்து, மயக்கத்தைத் தருகின்ற கண் சிமிட்டலால் (கண் இமைப்பினால்) காமவழியில் உட்படும்படி அலைவேனோ;

தரித்து நீறு (திருநீற்றினைத் தரித்து) (மறை மொழிகளைப் பிதற்றுகின்ற பித்தனாகிய (சிவன்)நன்மை பெருக (இன்பத்துடனே)" பெரிய பிரணவப் பொருளை உபதேசிப் பாயாக, சமர்த்தனே! குழந்தையே!" என்று (உன்னைக்) கேட்கும் படியான புகழைப் பெற்றுள்ள முருகனே!

நிபுணனே! போற்றுகின்ற (அடியார்களின்) புத்தியில் இரக்கத்துடன் எழுந்தருளும் பரம்பொருளே! அறிவுக்கு எட்டாத கடவுளே! ஆயிரக்கணக்கான (பல) யோகங்களுள் சிறப்புற்றதான (மவுன) யோக நிலையைக் கொண்ட தக்ஷிணா மூர்த்தியான குருநாதனே!

(தேவர்களை) வெருட்டின சூரனைச் சங்கரித்து, போரிற் கொலைபட்ட இடங்களில் பேய் வகைகளுக்குப் (பிணக் குவியல்களை) இரையாகக் கொடுத்து, (அந்த இரைகிடைத்த காரணத்தால் பசித்) துன்பம் நீங்கின பேய்கள் தித்திகு தித்தென்று விளையாடும்படிச்

செய்த வீரனே! போர்க்களத்தில் ரத்தம் வெகு ப்ரளயத்தினில் இரற்றி ஓட (பெரிய பிரளய வெள்ளம் போல) ஒலித்து ஓட, ஒழித்து, வேலாயுதத்தை நுழைவித்து உயிரை உண்ட வீரனே!

நிறை வளர்ச்சியோடு வசிக்கின்ற மீன்கள் உள்ளத்தில் மிகுந்த மகிழ்ச்சி பெறத், தமது பிளப்புள்ள வாயில் (காலை, உச்சி, மாலை எனப்படும்) மூன்று வேளைகளிலும் ஒப்பற்ற செங்குவளையின்

---

'மவுன உபதேச சம்பு' (திருப்புகழ் 138); " மோன முத்திரையைக் காட்டி யோகுசெய்வாரி லுற்றான்" (கந்தபுரா - மேருப் - 12) என வருவன வற்றால் அறியலாகும்.

§இரற்றல் - ஒலித்தல்.

பிணித்த போதுவெ டித்துர சத்துளி
கொடுக்கு மோடைமி குத்ததிருத்தணி
பிறக்க மேவுற அத்தல முற்றுறை பெருமாளே. (21)

## 270. துதி

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான

அரகர சிவனரி அயனிவர் பரவிமு
னறுமுக சரவண பவனேயென்-

றநுதின மொழிதர அசுரர்கள் கெடஅயில்
அனலென எழவிடு மதிவீரா;

பரிபுர கமலம தடியிணை யடியவர்
உளமதி லுறவருள் முருகேசா-

பகவதி வரைமகள் உமைதர வருகுக
பரமன *திருசெவி களிகூர;

உரைசெயு மொருமொழி பிரணவ முடிவதை
உரைதரு குருபர வுயர்வாய-

உலகம னலகில வுயிர்களு மிமையவ
ரவர்களு †முறுவர முநிவோரும்;

---

*இருசெவி குளிர உபதேசித்ததை - 'சிவனார் மனங் குளிர உபதேச மந்தர மிருசெவி மீதிலும் பகர் செய் குருநாத' (திருப்புகழ் 109) என்ற இடத்தும் காண்க.

† வழிபாட்டில் தாம் முந்துதற் கில்லையே என்று முணு முணுத்தல் இக்கருத்தை" அறுகெடுப்பார் அயனும் அரியும், அன்றிமற் றிந்திரனோ டமரர், நறுமுறு தேவர் கணங்க ளெல்லாம் நம்மிற் பின்பல்ல தெடுக்க ஒட்டோம்" எனவரும் திரு வாசகத்தும் (திருப்பொற் சுண்ணம் 5) காணலாம். உறுவரம் முநிவோர் - வரம் உறு முநிவோர் எனவும் கொள்வர்.

கட்டுள்ள மொட்டுகள் வாய்விரிந்து ரசத்துளிகளைக் கொடுக்கும் சுனை (செங்கழுநீர்ச் சுனை) பிரபலமாயிருக்கும் **திருத்தணி**கையில், விளக்கம் பொருந்த அந்த ஸ்தலத்தில், பொருந்தி வீற்றிருக்கும் பெருமாளே!

*(காம விதத்திலும் உட்பட அலைவேனோ)*

# 270

*'அரகர'* என்னும் அருமை மொழிக்கு உரியவராம் சிவனும், திருமாலும், பிரமனும் ஆக இம் மூவரும் போற்றி நின்று உனது முன்னிலையில் *"ஆறுமுகனே! சரவணபவனே"* -என்று

நாள்தோறும் துதிக்க, அசுரர்கள் அழியும்படி வேலாயுதத்தை அக்கினி கிளம்பினது போலச் செல்ல விட்ட மகாவீரனே!

சிலம்பணிந்த தாமரையன்ன அடியிணைகளை அடியாருடைய உள்ளத்திற் பொருந்த அருளும் முருகேசனே!

பகவதி, மலைமகள், உமை அருள வந்த குகனே! பரசிவனுடைய இரண்டு செவிகளும் மகிழ்ச்சி கொள்ள-

(யாவராலும்) போற்றப்படும் ஒப்பற்ற மொழியாம் பிரணவத்தின் முடிவுப் பொருளை எடுத்துரைத்த குருபர மூர்த்தியே! சிறப்புப் பொருந்திய

உலகத்தில் உள்ள கணக்கற்ற உயிர்களும், தேவர்களும் முணுமுணுக்கும்படி (நாம் முன்பு சென்று வழிபடுவதற்கு இல்லையே என்று மனம் சலித்து முணுமுணுக்கும்படி) முநிவர்களும்-

பரவி முனநுதின மனமகிழ் வுறவணி
*பணிதிகழ் தணிகையி லுறைவோனே-

பகர்தரு குறமகள் தருவமை வநிதையு
மிருபுடை யுறவரு பெருமாளே. (22)

## 271. திருப்புகழ் அடியார்களைப் போற்ற

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனதான

†இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை யறுத்திடு ‡மெனவோதும்-

---

*திருப்பாற்கடல் கடைந்தபோது மத்தாகிய மந்தர மலையிற் கயிறாக அமைந்து இழுக்கப்பட்ட படியால் வாசுகி என்னும் பாம்பின் உடல் புண்ணாயிற்று. வாசுகி தணிகைக்கு வந்து தணிகேசரைப் - பூசித்து நோய் நீங்கிச் சுகப்பட்டது. (தணிகைப் புராணம்) இங்ஙனம் ஆதிசேடன் பூசித்தான் எனத் தணிகாசல புராணம் கூறும். நாகம் தணிகையிற் பூசித்ததை "விஷ ஐந்து தலை அரவு தொழுகின்ற தணிமலை" எனவரும் திருப்புகழிலும் *(307)* காண்க.

†இருப்பவல் திருப்புகழ் - இரும்பு அவல் திருப்புகழ் எனக் கொண்டால் - அது திருப்புகழின் உரத்தை (பெரு வன்மையைக்) காட்டும்; அவ்வன்மையைச் 'சினத்தவர் முடிக்கும்' என்னும் *263* - ஆம் பாடலிற் காண்கின்றோம். அவல் போல உண்ணலாம், உண்டபின் "உண்ட நெஞ்சறி தேனை" (திருப்புகழ் *46*) காணலாம். இரும்புபோல உரம் (மனோ திடம்) பெறலாம். "அந்தகா வந்து பார் சற்றென் கைக் கெட்டவே" *(கந் - அலங் 25)* என யமனையும் அறை கூவி அழைக்கும் திடத்தைப் பெறலாம்.

இனி 'இருப்பவல் திருப்புகழ்' என்பதை இருப்பு அவல் எனக் கொண்டே-

"திருப்புகழ் கையிருப்பிலே உள்ள அவலைப் போன்றது; காலன் ஊர்க்குச் செல்லும் நெடுவழிப் பிரயாணத்தில் உபயோகப்படும் அவல் அது; அருணகிரிநாதர் கந்தனுக்கு ஒரு வகை அவல் கொடுத்தார். குசேலர் அளித்தது நெல் அவல், அருணகிரிநாதர் கொடுத்தது சொல் அவல்."

-என அருமையாகப் பொருள் காண்பர் பிரம ஸ்ரீ கி.வா. ஜகந்நாதையர் அவர்கள். (பெரும்பெயர் முருகன் - பக்கம் *147 - 149.)* இப்பொருள் " இருப்பு வல்திருப்புகழ்" என்ற பாடபேதம் ஒன்றாலும் வலி பெறுகின்றது.

*(179 - பக்கம் பார்க்க)*

பரவி முன் நின்று நாள்தோறும் மனமகிழ்ச்சி அடைய அழகிய தணிகையில் உறைபவனே! நாகம் விளங்கும் தணிகையில் உறைபவனே!

*(யாவராலும் புகழப்படும்) குறமகள் (வள்ளியும்) கற்பக விருக்ஷங்களின் நிழலில் வீற்றிருந்த மாது தேவசேனையும் இருபுறத்தும் பொருந்த எழுந்தருளியிருக்கும் பெருமாளே.

## 271

(உயிர்போம் அத்தனி வழிக்கு - தொலையா வழிக்கு) இருப்பாக இருக்கும் (உற்ற துணையாயிருக்கும்) அவல் (உணவு) போன்ற (உனது) திருப்புகழானது (தன்னை) விருப்பத்துடன் படிப்பவர்களுடைய சங்கடங்களை அறுத்து ஒழிக்கும் (என்னும் உண்மையை) எடுத்துக் கூறுகின்ற

---

*முருகவேள் இருதேவிமாரொடும் கலியாண கோலமாய் மிக மகிழ்ச்சியுடன் வீற்றிருந்து அடியார்களுக்கு அருள் பாலிப்பதே தணிகையின் பெருமையாகும் (திருப்புகழ் 265, 267, 274, 284, 285, 293 பார்க்க.)

"மின்போலும் இடைமடவார் இருமருங்கும் வீற்றிருப்ப வேல் கைக் கொண்டே

அன்பே ஓர் உருவாகத் தணிகையில்நின் றருள் சுரக்கும் அமரர் கோவே" - எனப் பாடி மகிழ்ந்தனர் எந்தையார்.

(178 ம் பக்கத் தொடர்ச்சி)

உயிர் போகும் கடைவழி - தனிவழி, தொலையா வழி ஆதலால் அந்த வழிக்கு, அவலோ 'பொதிசோறோ' இருப்பு வேண்டும் என்பது - நும்மை நேடி வரும் தொலையா வழிக்குப் பொதி சோறும் உற்ற துணையுங் கண்டீர்" எனவரும் கந்தரலங்காரத்தாலும் (51) அறியக்கிடக்கின்றது. "உயிர்போம் அத்தனி வழிக்கே" -கந் - அலங் - 59.

இனியும் 'இருப்பவல் திருப்புகழ்' என்னுமிடத்து 'இருக்கன திருப்புகழ்' என்று ஒரு பாட பேதம் கிடைத்தது. இது இருக்கு - ருக்வேதம் - அன்ன - போன்ற - திருப்புகழ் எனப் பொருள்படும். திருப்புகழ் வேத சாரம் ஆகும் என்பதைச் "சிவாகம வகையும் சதுமறையும் - வடித்த திருப்புகழின் தண்டமிழின் *தொனி தருதிரு மலையா தாலோ தாலேலோ" எனவரும் திருமலை முருகன் பிள்ளைத் தமிழிற் காண்கின்றோம்.

வேறுபாட பேதங்கள்:-

‡'எனவே சொல் - இயற்றமிழ் இசைத்தமிழ் நடத்தமிழ் எழுத்தொடும் இலக்கண'-

*இசைத்தமிழ் நடத்தமி ழெனத்துறை விருப்புட*
*னிலக்கண இலக்கிய கவிநாலுந்;*

*தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் *மிகச்சக*
*தலத்தினில் நவிற்றுத லறியாதே-*

*தனத்தினில் முகத்தினில் மனத்தினி லுருக்கிடு*
*சமர்த்திகள் மயக்கினில் †விழலாமோ;*

*கருப்புவில் ‡வளைத்தணி மலர்க்கணை §தொடுத்தியல்*
*களிப்புட னொளித்தெய்த மதவேளைக் -*

*கருத்தினில் நினைத்தவ னெருப்பெழ நுதற்படு*
*கனற்கணி **லெரித்தவர் கயிலாயப்;*

*பொருப்பினி லிருப்பவர் பருப்பத வுமைக்கொரு*
*புறத்தினை ††யளித்தவர் தருசேயே-*

*‡‡புயற்பொழில் வயற்பதி நயப்படு **திருத்தணி***
*பொருப்பினில் §§விருப்புறு பெருமாளே (23)*

## 272. சிவரூபம் பெற

*தனன தான தானான தனன தான தானான*
*தனன தான தானான தனதான*

*உடலி னூடு போய்மீளு முயிரி னூடு மாயாத*
*உணர்வி னூடு வானூடு முதுதீயூ-*

---

பாடபேதங்கள் :- *'தமைச்சக'

† 'விழுவேனோ' ‡'வளைத்தடல்'

§ 'தொடுத்திகல்'

**கனற்கணில் எரித்திர சதமாகும் (இரசதம் - வெள்ளி)

†† அளிப்பவர் பெறு சேயே.

‡‡ "புயற் பொழில் வயற்பதி நலப்படு ப்ரியத்தொடு புலப்பட எனக்கருள் பெருமாளே"-

(181-ம் பக்கம் பார்க்க)

இசைத்தமிழ், நாடகத்தமிழ், (அகப்பொருள்) துறைப் பாக்கள் என்னும் வகையில் - விருப்பத்துடன் இலக்கணம் பொருந்திய இலக்கியத்தின் பாற்படும் (ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனப்படும்) நால்வகைக் கவிகளையும் உள்ளத்தில்,

தரிப்பவர்கள், உரைப்பவர்கள், நினைப்பவர்கள் (ஆகிய அடியார்களை) (நான்) மிகவும் இவ்வுலகில் சொல்லிப் போற்றுதல் அறியாமலே (அவர்களைப் புகழாமல்)

கொங்கையாலும், முகத்தாலும், மனத்தில் உருகச்செய்யும் சாமர்த்தியம் வாய்ந்த பொதுமகளிருடைய மோக மயக்கினில் நான் விழலாமோ (விழக்கூடாது என்றபடி)

(தனது) கரும்பு வில்லை வளைத்து (அதில்) அழகிய மலர்ப் பாணங்களைத் தொடுத்துப், பொருந்திய செருக்குடன், ஒளித் திருந்து செலுத்தின வலிமை கொண்ட மன்மதனை

மனத்தினில் நினைத்த மாத்திரையில் அவன் தீயில் வேகும் படித் தமது நெற்றியில் உள்ள நெருப்புக் கண்ணால் எரித்தவரும், கயிலாய

மலையில் வீற்றிருப்பவரும், இமய மலையில் வளர்ந்த உமா தேவிக்கு ஒரு புறத்தை (இடப்புறத்தை)த் தந்தவருமாகிய சிவபிரான் தந்த குழந்தையே!

மேகங்கள் தங்கும் பொழில்களும் வயல்களும் உள்ள ஊராகிய இனிமை வாய்ந்த **திருத்தணி** மலையில் விருப்பங் கொள்ளும் பெருமாளே!

(சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ)

## 272

உடலுள்ளும், அந்த உடலில் போய் மீண்டு வருகின்ற உயிரினுள்ளும், அழிவிலாத உணர்ச்சியுள்ளும், ஆகாயத் துள்ளும், முற்றின தீயினுள்ளும்

---

'வயற்பதி யினிற் பொருள் பிரியத்தொடு புலப்பட எனக்கருள் பெருமாளே" - வயற்பதி - வயலூர்.

§§தணிகை மலையில் முருகன் விருப்புறுதல் - 268 பாடற் குறிப்பைப் பார்க்க.

டுலவை யூடு நீரூடு புவியு னூடு வாதாடு
மொருவ ரோடு மேவாத தனிஞானச்;

சுடரி னூடு நால்வேத முடியி னூடு மூடாடு
துரிய வாகு லாதீத சிவரூபம்-

தொலைவி லாத பேராசை துரிச றாத வோர்பேதை
தொடுமு பாய மேதோசொ லருள்வாயே;

*மடல றாத வாரீச் அடவி சாடி மாறான
வரிவ ரால்†கு வால்சாய அமராடி-

மதகு தாவி மீதோடி யுழவ ரால டாதோடி
மடையை மோதி யாறூடு தடமாகக்;

கடல்பு காம காமீனை முடுகி வாளை தான்மேவு
கமல வாவி மேல்வீழு மலர்வாவிக்-

---

*இப்பாடலின் 5.6.7. அடிகள் திருத்தணிகையின் செழிப்பான நிலையைக் காட்டி, அந்தப் பதியில் இருந்த தாமரைத் தடாகத்து வாளை மீனுடைய கொழுமையையும் ஆற்றலையும் விளக்குகின்றன. இங்ஙனம் வாளைமீன் தணிகையிற் புறப்பட்டு கடல் வரையும் சென்று கடல் மீனையும் கலக்கி இடையில் நேர்ந்த பல தடைகளையும் வென்று - தணிகையில் தான் இருந்த தாமரைத் தடாகத்துக்கு மீண்டு வந்து சேர்ந்தது - வீரவாகுதேவர் செந்தூரில் குமரவேளிடத்தினின்றும் தூதராக வீரமகேந்திரத்துக்குப் போய் அங்கே சூரனையும் கலங்கச் செய்து - வழியில் பலரையும் தாக்கி வென்று முருக வேளிடம் மீண்டு வந்ததை ஒக்கும் என்று ஸ்ரீ வள்ளிமலை திருப்புகழ் சுவாமி சச்சிதானந்தா ஒருமுறை கூறி மகிழ்ந்தார்.

†குவால் - கூட்டம்.

காற்றினுள்ளும், நீரினுள்ளும், மண்ணுள்ளும், (சமய) வாதம் செய்கின்ற எவரிடத்தும் காணக் கிடையாத ஒப்பற்ற ஞான

ஒளியினுள்ளும், நான்கு வேதங்களின் உச்சியினுள்ளும், ஊடாடுகின்றதும், யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர் நிலையில் உள்ளதும், துன்பங்கள் கடந்த நிலையில் உள்ளதுமான சிவரூபத்தை-

முடிவு இல்லாத பேராசையும், குற்றமும் நீங்காத ஒரு பேதையாகிய நான் - அடைதற்குரிய உபாயவழி எதுவோ அந்த (உபதேசச்) சொல்லைச் சொல்லி அருள்வாயாக. (உபாயவழியைச் சொல்லியருளுக)

இதழ்கள் நீங்காத தாமரைக் காட்டைத் துகைத்துத் தாவிக் குதித்து, (அங்கே) தனக்குப் பகையாயிருந்த ரேகைகள் உள்ள வரால் மீன் கூட்டங்கள் தோல்வியுற்று பின் வாங்கி ஓடும்படி போர் புரிந்து - பின்பு -

(தான் போகும் வழியிலிருந்த) மதகை (நீர் பாயும் மடை) யைத் தாவித் தாண்டி மேலே ஓடி, (அங்குள்ள) உழவர்கள் (வயலில் உழுபவர்கள்) தன்னை வருத்தாதபடி விலகி ஓடி, (வழியிலுள்ள) நீர் மடைகளைத் தாக்கித் தாவி (அல்லது ஓடைகளில் மோதிச் சென்று), பின்னர் (அந்த ஓடைகள் சேரும்) ஆற்றின் வழியே (வழியாகச் சென்று)

கடலிற் புகுந்து அங்கே உள்ள பெரிய மீனை விரைந்து ஓடும்படிச் செய்து - வாளை மீனானது - தான் முதலில் இருந்த தாமரைக் குளத்தில் வந்து விழும் (தணிகை); மலர் பூக்கும் சுனையில்

*கடவுள் நீல மாறாத **தணிகை** காவ லாவீர
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (24)

## 273. திருவடி பெற

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதான

உடையவர்க ளேவ ரெவர்களென நாடி
யுளமகிழ †ஆசு கவிபாடி-
உமதுபுகழ் ‡மேரு கிரியளவு மான
தெனவுரமு மான மொழிபேசி;

---

*கடவுள் நீல மாறாத தணிகை :- தணிகையில் மலைமேல் ரத வீதிக்குத் தெற்குப் பக்கத்தில் உள்ளது இந்திர நீல சுனை. அந்தச் சுனையில் தேவலோகத்து நீலோற்பலக் கொடியை இந்திரன் வைத்து வளர்த்ததாகவும், காலை, உச்சி, மாலை என்னும் மூன்று வேளைகளிலும் நீலோற்பலம் மலர அம்மலர்களால் இந்திரன் தணிகை வேலரை முப்போதும் பூசித்த தாகவும் புராணம் கூறும். ஏழாம் நூற்றாண்டிலிருந்த அப்பர் சுவாமிகள் " சுன்மலிந்த சுழுநீர்க் குன்றம்" என இத்தலத்தைக் குறிப்பிட்டார். நீலோற்பலம் மலர்வதால் "நீலகிரி" என்று சீர்பாத வகுப்பிலும், 'அனவரதம் நீலமலர் முத்தெறி சுனைப் புனலில் அருவி குதிபாய்தரு செருத்தணி' எனப் பூத வேதாள வகுப்பிலும், ' நீள் சுனை தினமும் உற்பலம் மலர் திருத்தணி' என ஞானவேழ வகுப்பிலும், "இந்திர நீலச் சிலம்பினன்" எனப் புய வகுப்பிலும், 'சேர்ப் பது மாலய, நீலோற்பலகிரி' என்று கந்தரந்தாதியிலும் அருணகிரியார் போற்றியுள்ளார். மூன்று வேளையிலும் இம்மலர் மலரும், இது தவறாது என்று முருக வேளே வள்ளியம்மைக்கு உரைத்ததாகக் கந்த புராணம் கூறும்-

" வாசவன் வைகலும் சாத்துதற் பொருட்டால் மூன்று
சுனைதனில் எமக்கு முன் வைத்தான்" (காவியிச்)
" காலைப் போதினில் ஒருமலர்; கதிர் முதிர் உச்சி
வேலைப் போதினில் ஒருமலர்; விண்ணெலாம் இருள் சூழ்

(185ம் பக்கம் பார்க்க)

தெய்வமணமுள்ள நீலோற்பலம் மலர்வது என்றும் தவறாத **தணிகை** அரசே! வீரனே! கருணை மேருவே! தேவர் பெருமாளே!

(சிவரூபம் அருள்வாயே)

# 273

பொருள் உள்ளவர்கள் எவர் எவர் என்று தேடிச்சென்று உள்ளம் மகிழ அவர்கள் மீது ஆசு கவிகளைப் பாடியும்,

உமது புகழ் மேருகிரியின் அளவுபோல உயர்ந்தது என்று மிகப் பலமான (துதி) மொழிகளைப் பேசியும்

---

மாலைப் போதினில் ஒருமலர் - ஆகஇவ் வரை மேல்
நீலப் போது மூன்று ஒழிவின்றி *நிற்றலு மலரும்"
" ஊழி பேரினும் ஒருபகற் குற்பல மூன்றாய்த்
தாழிருஞ் சுனை தன்னிடை மலர்ந்திடுந் தவிரா!"

(வள்ளியம்மை திருமணப்படலம் 221 - 3.)

(*நிற்றலும் - நித்தலும்)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் இம்மலர் பூத்து வந்ததாக எந்தையார் கூறக் கேட்டிருக்கின்றேன். இந்தச் சுனையின் தீர்த்தம் தான் இன்றும் சுவாமிக்கு அபிஷேகத்துக்கு உபயோகப் படுத்துகின்றார்கள் - ஆதலால் இந்தச் சுனையைத் தொழுது செல்லலாமே ஒழிய சுனையில் நீராடக் கூடாது. 150 ஆண்டுகளுக்கு முன்பிருந்த கச்சியப்ப முநிவர் - " காலை நண்பகல் மாலை முப்போதும் வைகல் வைகல் மலர் மூன்று தெரிக்கும். நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது" என்றார் தணிகை ஆற்றுப் படையில்; "நீரும் பூவும் திருமுடி என்றும் ஏறும்" என்றார் தணிகைப் புராணத்தில். இந்தச் சுனையில் நீலோற்பலக் கொடியை வைத்து மலர வைத்தால் அது 'சிவ புண்ணியமாகும்.'

†ஆசுகவி - கொடுத்த பொருளை - (நினைத்த கருத்தை) அடுத்த பொழுதில் (உடனே) அமைத்துப் பாடும் பாட்டு.

‡மேருகிரி - உயர்ச்சியைக் காட்டும். " மேருவரையின் மேம்பட்ட தவத்தான்" - பெரிய புராணம் - ஏயர் கோன் - 239.

நடைபழகி மீள வறியவர்கள் நாளை
*நடவுமென வாடி முகம்வேறாய்-

நலியுமுன மேயு னருணவொளி வீசு
நளினஇரு **பாத** **மருள்வாயே;**

விடைகொளுவு பாகர் விமலர்திரி சூலர்
விகிர்தர்†பர யோகர் நிலவோடே-

விளவுசிறு‡ பூளை §நகுதலையொ டாறு
விடவரவு சூடு மதிபாரச்;

சடையிறைவர் காண உமைமகிழ ஞான
தளர்நடையி டாமுன் வருவோனே-

**தவமலரு நீல மலர்சுனைய நாதி
**தணிமலையு** லாவு பெருமாளே. (25)

---

*சம்பந்தர் காலத்திலேயே (ஏழாம் நூற்றாண்டிலேயே) செல்வர்களிடம் கொடையை விரும்பிச் செல்பவர்கள் "நாளை வாரும்" என்னும் பேச்சைக் கேட்டு வாடுதல் உண்டு போலும்.

"நச்சிநீர் பிறன்கடை நடந்து செல்ல நாளையும்

உச்சி வம் எனும் உரை உணர்ந்து கேட்பதன் முனம்

.. எம்பிரான் எழில் கொள் காழி சேர்மினே" II - 97-4. என்னும் தேவாரக் கருத்து இத்திருப்புகழ் கருத்துடன் ஒத்திருத்தல் காண்க.

† "பரமனே பரமயோகீ" அப்பர்-IV-23-1. 'மறைபாடும் பரமயோகி' -சம்பந்தர் I - 119 -3

‡ பூளைப்பூ - சிவபிரானுக்கு உரியது 'பூளைசூடிதன் நகையினில் எயில் பொடித்தன போல்' கம்பராம -அகலிகை - 39.

§ பல்லொடு கூடிய கபாலம் - 'பல்லார் பகுவாய நகு வெண்டலை சூடி' -சம்பந்தர் I - 46 -8

**தவ - மிகுதி; " சால வுறுதவ நனி கூர் கழி மிகல்'- நன்னூல் சூ. 456.

நடந்து நடந்து (பலநாள் போய்ப்) பழகியும், தரித்திரர் களாகவே மீளும்படி, நாளைக்கு வா - நாளைக்கு வா என்றே அவர்கள் கூற நான் வாட்டமடைந்து முகம் (வெட்கத்தாலும் துக்கத்தாலும்) களை மாறிச் சோர்வு கொண்டு

வருந்தும் முன்னரே உன்னுடைய செவ்விய ஒளிவீசும் தாமரையன்ன இரண்டு திருவடிகளையும் அருள்புரிவாயாக.

இடப வாகனத்தை உடையவர், விமலர் (பரிசுத்த மானவர்), முத்தலைச் சூலத்தை ஏந்தினவர், விகிர்தர் (கடவுள்), †மேலான யோகத்தினர், நிலவுடனே

விளா (கூவிளம் - வில்வம்), சிறிய ‡பூளைச்செடியின் பூ, §பல்லொடு கூடிய வெண்டலை, கங்கையாறு, விஷப்பாம்பு இவைகளைச் சூடியுள்ள அதிக பாரமுள்ள

சடைப் பெருமான் காணவும், உமாதேவி மகிழவும், ஞானத் தளர்நடை (குழந்தை நடை)யிட்டு அவர்கள் முன்பு வருபவனே!

**மிகுதியாக மலரும் நீலோற்பலச் சுனையை உடைய தணிமலை, அநாதி (ஆதி - தொடக்கம் அற்ற) மிகப்பழைய தணிமலை (அல்லது - அதிகமாக மலர்கின்ற நீலோற்பலம் மலரும் சுனைக்குரிய அனாதி மூர்த்தியே! **தணிமலை**) யதனில் உலவுகின்ற பெருமாளே.

(இருபாதம் அருள்வாயே)

## 274. பூஜை செய்ய

*தய்யனா தத்ததன தய்யனா தத்ததன*
*தய்யனா தத்ததன தனதான*

*உய்யஞா னத்துநெறி கைவிடா தெப்பொழுது*
*முள்ளவே தத்துறைகொ டுணர்வோதி-*

*உள்ளமோ கத்திருளை விள்ளமோ கப்* பொருளை*
*யுள்ளமோ கத்தருளி யுறவாகி;*

*வையமே ழுக்குநிலை செய்யுநீ திப்பழைய*
*†வல்லமீ ‡துற்பலச யிலமேவும்-*

*வள்ளியா நிற்புதிய வெள்ளில்தோய் முத்தமுறி*
*கிள்ளிவீ சுற்றுமலர் பணிவேனோ;*

*பையரா வைப்புனையு மையர்பா கத்தலைவி*
*துய்யவே ணிப்பகிர திகுமாரா*

*பையமால் பற்றிவளர் சையமேல் வைக்குமுது*
*§நெய்யனே சுற்றியகு றவர்கோவே;*

*செய்யுமால் வெற்புருவ வெய்யவேல் சுற்றிவிடு*
*கையமால் வைத்ததிரு மருகோனே-*

---

*பொருள் - வீட்டின்பம் -'புகலூர் புகழப் பொருளாகுமே"
- சம்பந்தர் - II - 15 -8.

†வல்லம் - திருவல்லம் என்னும் சிவஸ்தலம் - வேலூருக்குக் கிழக்கு 8 -மைல். தேவாரம், திருப்புகழ் பெற்ற தலம் - திருப்புகழ் 669 - பார்க்க. கந்தரந்தாதி -91 பார்க்க.

‡உற்பலசயிலம் - திருத்தணிகை.

§நெய்யனே நேயனே

# 274

(பிறவித் துயரினின்றும்) உய்யும் பொருட்டு (நான்) ஞான மார்க்கத்தைக் கைவிடாது எப்பொழுதும் (எப்பொழுதும் கைவிடாது பற்றி), உள்ள வேத சாஸ்திரங்களைக் கொண்டு அறிவு தெளிவுற ஓதி-

(எனக்குள்ள) மயக்க இருள் நீங்க, ஆசை வைக்க வேண்டிய பொருளை (வீட்டின்பத்தை) க் கருதும்படியான ஆசை (உன்) அருளுதவியாற் கிடைத்து (உன்மீது) விருப்பம் பெருகி

உலகு ஏழினையும் நிலை நிறுத்திக் காக்கும் நீதிகொண்ட.... வள்ளியா (கருணையனே)! பழைய (திருவல்லம் என்னும்) தலத்திலும், நீலோற்பலகிரியிலும் (**திருத்தணிகையிலும்**), வீற்றிருக்கும்

வள்ளியா (கருணையனே)! உன்னைப் புதிய வில்வ மரத்திலுள்ள மகிழ்ச்சிதரும் கொழுந்து இலைகளைக் கிள்ளி வீசிப் பூசித்து உன் மலரடிகளைப் பணியமாட்டேனோ!

படத்தை உடைய பாம்பை அணியும் பெரியார், அவரது (இடது) பாகத்தில் உள்ள பிராட்டி (பார்வதி), பரிசுத்தமான சடையில் உள்ள கங்கை - (இவர்கள் மூவர்க்கும்) குமரனே!

மெதுவாக (உனக்கு) மோகம் பற்றி வளர்ந்த மலையாகிய வள்ளிமலைமேல் வைத்த முற்றின நேயம் கொண்டவனே (வள்ளி மலைமீது காதல் முற்றிய நேயனே)! உனக்குச் சுற்றமாய் அமைந்த (அல்லது உன்னைச் சூழ்ந்த) குறவர்களுக்கு அரசே!

செய்யுமால் வெற்பு (மால் - செய்யும் - வெற்பு) - மயக்க இருளைத்தந்த கிரௌஞ்ச கிரியை உருவிச் செல்லும்படி கடுங் கோபங்கொண்ட வேலாயுதத்தைத் திரித்துவிட்ட கையனே! திருமாலுக்கு வாய்த்த அழகிய மருமகனே! (அல்லது - திருமால் தனது மார்பில் வைத்துள்ள இலக்குமியின் மருகனே!)

*தெய்வயா னைக்கிளைய †வெள்ளையா னைத்தலைவ
தெய்வயா னைக்கினிய பெருமாளே. (26)

## 275. திருவடியைப் பெற

தத்ததன தான தத்தம் தத்ததன தான தத்தம்
தத்ததன தான தத்தம் தனதான

எத்தனை‡ க லாதி சித்தங் கெத்தனைவி யாதி பித்தங்
கெத்தனைச ராச ரத்தின் செடமான-

எத்தனைவிடா வெருட்டங் கெத்தனைவ லாண்மை பற்றங்
கெத்தனைகொ லூனை நித்தம் பசியாறல்;

பித்தனைய னான கட்டுண் டிப்படிகெ டாமல் முத்தம்
பெற்றிடநி னாச னத்தின் செயலான-

பெற்றியுமொ ராது நிற்குந் தத்த§ குரு தார நிற்கும்
பெத்தமுமொ ராது நிற்குங் **கழல்தாராய்;**

தத்தனத னாத னத்தந் தத்தனத னாத னத்தந்
தத்தனத னாத னத்தந் தகுதீதோ-

---

*இந்த அடி - " களிற்றினைச் செகுத்த களிற்றினுக் கிளைய
களிறு வான் களிற்றினை மணந்து" எனவரும் பரங்கிரிப் புராணத்தை ஒக்கும்.

†முருகருக்கு இந்திரன் வெள்ளை யானையைத் தந்த காரணத்தால் முருகரும் 'வெள்ளை யானைத் தலைவ ராயினர்.'" பெண்கரி யுடன்நிலை பெறுகென் றிந்திரன்.வெண்கரி தன்னையும் விசாகற் கீந்து" (தணிகாசல புராணம் - இந்திரன் பூசை -26.) (பெண்கரி - தேவசேனை; வெண்கரி - வெள்ளை யானை - ஐராவதம்).

‡கலாதி - கலகம்.

§குரு - ஒளி; தாரம் - பிரணவம் - "தாரத்தி னுள்ளே தயங்கிய சோதியை" - திருமந்திரம் - 1405.

தெய்வயானையாகிய கணபதிக்கு இளைய பெருமாளே! வெள்ளையானை ஐராவதத்துக்குத் தலைவனே! தெய்வயானை (தேவசேனைக்கு) இனிய (இனிமை தரும்) பெருமாளே! (அல்லது) (வெள்ளையானை) ஐராவதத்துக்குத் தலைமை கொண்டுள்ள தெய்வயானைக்கு இனிய பெருமாளே!

(முறி கிள்ளி வீசுற்று மலர் பணிவேனோ)

## 275

எத்தனை கலகச் சண்டைகள், (எத்தனை) மாய வித்தைகள், எத்தனை நோய்கள், எத்தனை பைத்தியச் செயல்கள், எத்தனை இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கொண்ட இப்பிரபஞ்சத்தில் எடுத்த உடல்கள்,

எத்தனை நீங்காத அச்சம் உறுத்தும் செயல்கள்; எத்தனை பேராற்றலான செய்கைகள். (எத்தனை) ஆசைகள், எத்தனை மாமிசத்தை உண்டு பசியைப் போக்கும் செயல்கள் (இவைகளுக்கு எல்லாம் ஆளான நான்)

பித்தம் பிடித்தவன் போன்ற நான் - வயிற்றில் உண்டு- இவ்வண்ணம் கெடாமல், (பிறவியினின்றும்) விடுதலையைப் பெற்றிட, நினது (பக்த) ஜனங்களின் (அடியார் கூட்டத்தின்) செயல்களான

தன்மையையும், (யாரும்) உணர்தற்கரிதாக நிற்பதும், (அல்லது,) உன்னால் படைக்கப்பட்ட சனத்தொகுதியில் (மக்கள் தொகுதியின்) (செயல்களான) முயற்சிகளால் அறியப்படாமல் நிற்பதும், (அல்லது,) உனது ஆசனம் மயில் (மயில் - ஆணவம் - மனம் திரோதானசத்தி - என்பாராதலின்) ஆணவ நிலையில் உணர்தற் கரிதாய் நிற்பதும், (பரவிப் பிரகாசிக்கின்ற) ஒளிமயமான பிரணவப் பொருளாய் நிற்பதும், பாசபந்தத்தால் அறிதற்கரிதாய் நிற்பதுமான (உனது) கழலை(யும்) தந்தருளுக.

தத்தனத னாத தத்தம்....தகுதீதோ

தக்குகுகு டூடு டுட்டுண் டிக்குகுகு டீகு தத்தந்
தத்தனத னாத னுர்த்துஞ் சதபேரி;

சித்தர்கள்நி டாதர் வெற்பின் கொற்றவர்சு வாமி பத்தர்
திக்குகளொர் நாலி ரட்டின் கிரிசூழச்-

செக்கணரி மாக னைக்குஞ் சித்தணிகை வாழ்*சி வப்பின்
செக்கர்நிற மாயி ருக்கும் பெருமாளே.(27)

## 276. முத்தி பெற

தனன தந்த தத்த தனன தந்த தத்த
தனன தந்த தத்த தனதான

†எனைய டைந்த குட்டம் வினைமி குந்த பித்த
மெரிவ ழங்கு வெப்பு வலிபேசா-

இகலி நின்ற லைக்கு முயல கன்‡கு லைப்பொ
டிரும லென்று ரைக்கு மிவையோடே;

மனைகள் பெண்டிர் மக்கள் தமைநி னைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாதே-

மருவி யின்றெ னக்கு மரக தஞ்சி றக்கு
மயிலில் வந்து **முத்தி** **தரவேணும்;**

நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நெறியில் நின்ற வெற்றி முனைவேலா-

---

*முருகன் நிறம் - சிவப்பு -'செய்யன் சிவந்த ஆடையன்' (திருமுருகாற்றுப்படை)

†எனையடைந்த குட்டம் - அருணகிரியார் இளமையில் (இறைவன் ஆட்கொள்வதற்கு முன்னர்) வேசையர் மயலால் பெரிய நோய்வாய்ப் பட்டு வருந்தினர் போலும்: " வேசையர் மயல்மேலாய் வெடுக் கெடுத்து மகா பிணி மேவிட முடக்கி வேட்கு மதாமத வீணனை" என்று தம்மையே நொந்து கொள்கின்றார். (திருப்புகழ் - 850)

‡குலைப்பு - நடுக்கம்

தக்கு குகு டூடு டுட்டுண்... தத்தன தனான -என்று ஒலிக்கும் நூற்றுக்கணக்கான முரச வாத்தியங்களின் ஒலியுடன்

சித்தர்களும், (வெற்பின் நிடாதர்) மலைவேடர்களும், அரசர்களும், கடவுளடியார்களும், திக்குகள் ஓர் நாலிரட்டின் (எட்டுத் திக்குகளிலும்) மலையை வலம் வர,

சிவந்த கண்களையுடைய சிங்கம் ஒலி செய்யும் ஞானத் தணிகை (மலையில்) வாழ்கின்ற பெருமாளே! மிகச் சிவந்த நிறத்துடன் விளங்கும் பெருமாளே!

(கழல் தாராய்)

## 276

எனக்கு வந்த குட்டநோய், வினைக்கு ஈடாக மிக்கு வரும் பித்தம், கொதிப்பைத் தரும் வெப்பு நோய் (சுரம்), வலி சொல்ல முடியாவண்ணம்,

மாறுபட்டு வேதனை தந்து நின்று வருத்தும் முயலகன் என்னும் இழுப்பு (முசல்வலிப்பு) நோய், நடுக்கந் தரும் நோய், இருமல் என்று சொல்லப்படும் இந்நோய்களுடனே (ஊடாடி)

வீடுகள், பெண்கள், மக்கள் - என்பவற்றை நினைந்து நல்ல அறிவானது மயக்கம் அடைந்து, (நான்) இறவாமல்-

(நீ) தோன்றி இன்று எனக்கு மரகதம் போலப் (பச்சை ஒளி வீசும்) மயில்மீது வந்து முத்திதர வேண்டுகின்றேன்.

உன்னை வணங்கும் பக்தர் எல்லாரும் சுகத்துடன் வாழ, (அவர்களுக்கு அருள் பாலிக்கும்) வழியில் நிற்கும் வெற்றி பெறும் கூரிய வேலனே!

நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
*நெடிய குன்றில் நிற்கு முருகோனே;

தினைவி ளங்க லுற்ற புனஇ ளங்கு றத்தி
செயல றிந்த ணைக்கு மணிமார்பா-

திசைமு கன்தி கைக்க அசுர ரன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட பெருமாளே. (28)

## 277. திருவடி பெற

தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன தந்ததான

ஏது புத்திஐ யாஎ னக்கினி
யாரை நத்திடு வேன வத்தினி
லேயி றத்தல்கொ லோஎ னக்குநி தந்தைதாயென்-

றேயி ருக்கவு நானு மிப்படி
யேத வித்திட வோச கத்தவ
ரேச லிற்பட வோந கைத்தவர் கண்கள்காணப்;

†பாதம் வைத்திடை ‡யாதெ ரித்தெனை
தாளில் வைக்கநி யேம றுத்திடில்
பார்ந கைக்குமை யாத கப்பன்முன் மைந்தனோடிப்-

---

*நெடிய குன்றில் - என்பதற்கு நெடியம் என்னும் குன்றத்தில் எனவும் கூறுவர். நெடியம் திருத்தணிகைக்கு அருகில் உள்ள ஒரு முருகர் மலை.

†திருவடி தீட்சையை விரும்பினர் அருணகிரியார்; " கூற்றம் வருவதன் முன் பூவாரடிச் சுவடு என் மேற் பொறித்து வை" என வேண்டினர் அப்பரும். அப்பரைப் போலவே, அருணகிரியார் திருவடி தீட்சை, வேண்டிய வண்ணமே, பெற்றனர் என்பது-

"எனது தலையிற் பதங்கள் அருள்வோனே", "பதயுக மலர் தந்த பேரருள்" " முன் அளித்த பாதம்", " காமுகன் அகப்பட்ட ஆசையை

(அழியாது) நிலைபெற்று விளங்கும் **திருத்தணியில்** விளங்குகின்ற அழகிய பெருமை வாய்ந்த மலையில் நிற்கும் முருகனே!

தினை செழித்து விளங்கும் புனத்தில் (மலைக் கொல்லையில்) இருந்த இளைய குறத்தி (வள்ளியின்) (பத்திச்) செயலை அறிந்து (அவளை) அணைத்த அழகிய மார்பனே!

பிரமன் திகைத்து நிற்கும்படி அசுரர்கள் அன்று (தேவர்களை) அடைத்த சிறையைத் திறந்து விட்ட பெருமாளே!

(மயிலில் வந்து முத்தி தரவேணும்)

## 277

ஏது புத்தி ஐயா எனக்கு, இனி (யான்) யாரை விரும்பி நாடுவேன்; வீணாக (பயனிலியாக) இறப்பது தானோ (என் தலைவிதி); எனக்கு நீயே தந்தை தாய் என்று-

இருந்தும் நான் இப்படித் தவித்திடலாமா! உலகத்தவரின் இகழ்ச்சி மொழிக்கு ஆளாகலாமா! (என்னை) இகழ்ந்து சிரிப்பவர்கள் கண் முன்னே (கண் காணும்படி) (உனது)

திருவடியை வைப்பாயாக, (திருவடி தீக்ஷை செய்தருளுக) ஐயனே! (அல்லது, என்னை உன் திருவடியில் வைப்பாயாக!) (என்நிலை) தெரிந்து என்னை (உனது) திருத்தாளிற் சேர்க்க நீயே மறுப்பாயானால் உலகோர் நகைப்பர், ஐயனே! தந்தையின் முன் குழந்தை ஓடிச்சென்று -

---

மறப்பித்த கால்கள்" "தலை நாளிற் பதம் ஏத்தி" எனவரும் திருப்புகழ்ப் பாக்களால் (114, 289, 392, 426, 814) அறியக் கிடக்கின்றன.

‡"பவப்பிணி பாற ரட்சை செயா திருத்திடில், பார் நகைக்குமையா, தகப்பனை மைந்தனோடிப் பாலினுக்கொருதாள் சிதைத்திடு பாலனுக்கிரு தாளளித்திடு பாதபத்தி மெஞ்ஞான முத்திகள் தந்திடாதோ"

- (பாடபேதம்) மு. அருணாசலம் ஓலை ஏடு - 71.

பால்மொ ழிக்குர லோல மிட்டிடில்
யாரெ டுப்பதெ னாவெ றுத்தழ
பார்வி டுப்பர்க ளோஎ னக்கிது சிந்தியாதோ;

ஓத முற்றெழு பால்கொ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
யோட வெட்டிய பாநு சத்திகை யெங்கள்கோவே-

ஓத மொய்ச்சடை யாட வுற்றமர்
மான்ம ழுக்கர மாட பொற்கழ
லோசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே;

மாதி னைப்புன மீதி ருக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தம யூர அற்புத கந்தவேளே-

மாரன் வெற்றிகொள் பூமு டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ் **திருத்தணி** மாம லைப்பதி தம்பிரானே (29)

## 278. பொது மகளிர் மேலுள்ள ஆசை அற

தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன தனதான

ஓலை யிட்டகு ழைச்சிகள் சித்திர
ரூப மொத்தநி றத்திகள் விற்கணை
யோடி ணைத்தவி ழிச்சிகள் சர்க்கரை யமுதோடே-

ஊறி யொத்தமொ ழிச்சிகள் *புட்குர
லோடு வைத்துமி ழற்று மிடற்றிகள்
ஓசை பெற்றதுடிக் கொளிடைச்சிகள் மணம்வீசும்;

*புட்குரல் - 197 - ஆம் பாடற் குறிப்பைப் பார்க்க.

பால் வேண்டுங் குறிப்பு மொழிக் குரலுடன் அழுதால் யார் (இந்தக் குழந்தையை) எடுப்பதென்று வெறுத்து, அழும்படி (இப்) பூமியில் விட்டு விடுவார்களோ! எனக்கு இந்த (உண்மை) தோன்றலாகாதா! (இந்த உண்மை என் சிந்தனையிற் படலாகாதா!)

வெள்ளமாய்ப் பெருகியெழும் பால் கொதித்தது போல (பாற்கடல் பொங்கி எழுவது போல) எட்டுத்திசைகளிலும் உள்ள இழிந்த மூடர்களான (அசுரர்கள்) (பின்னிட்டு) ஓடும் படி வெட்டி யழித்த சூரிய ஒளி கொண்ட சத்திவேலைக் கையிற் கொண்ட எங்கள் அரசே!

கங்கை வெள்ளம் நெருங்கும் சடை யாடவும், பொருந்தி யிருக்கும் மான், மழு ஏந்திய (திருக்) கரங்கள் ஆடவும், அழகிய காலின் கழல் ஒலி செய்யவும் நடனம் புரிந்தவர் அளித்த செல்வமே!

பெரிய தினைப்புனத்தின் மீதிருந்தவளும், மை பூசிய ஒளி பொருந்திய கண்களை உடையவளுமாகிய மாது (வள்ளியை) அழகிய மார்பில் அணைத்த மயில் வாகனனே! அற்புத (மூர்த்தியாம்) கந்தவேளே!

மன்மதன் வெற்றி பெறும்படியான (அழகு வாய்ந்த) பூ முடித்த கூந்தலை உடைய மாதர்கள் ஆச்சரியப்படும்படியான பெரிய உண்மைத் தவசிகள் வாழும் திருத்தணி மாமலைப் பதித் தம்பிரானே!

(உன் திருவருள் எனக்குச் சிந்தியாதோ)

## 278

காதணியாக அணிந்துள்ள குழைகளைப் பூண்டவர், அழகிய உருவம் வாய்ந்த நிறத்தினர், வில் அம்பு போன்ற கண்களை உடையவர், சர்க்கரை, அமுதுடன்-

ஊறின சுவை என்னத்தக்க பேச்சினை உடையவர், புட்குரல் ஒலிக்கும் கண்டத்தினர், ஒலி செய்யும் துடி (உடுக்கை) போன்ற (மேகலை அணிந்த) இடையை உடையவர்கள் - நறுமணம் வீசும்-

*மாலை யிட்டக ழுத்திகள் முத்தணி*
*வார ழுத்துத னத்திகள் குத்திர*
*மால்வி ளைத்தும னத்தை யழித்திடு மடமாதர்-*

*மார்ப சைத்தும ருட்டியி ருட்டறை*
*வாவெ னப்பொருள் பற்றிமு யக்கிடு*
**மாத ருக்குவ ருத்தமி ருப்பது தணியாதோ;**

*வேலை வற்றிட நற்கணை தொட்டலை*
*மீத டைத்துத னிப்படை விட்டுற*
*வீற ரக்கன்மு டித்தலை பத்தையு †மலைபோலே-*

*மீத றுத்துநி லத்தில டித்துமெய்*
*வேத லக்ஷுமி யைச்சிறை விட்டருள்*
*வீர அச்சுத னுக்குந லற்புத மருகோனே;*

*‡நீலி நிட்களி நிர்க்குணி §நித்தில*
*வாரி முத்துந கைக்கொடி சித்திர*
*நீல ரத்தின மிக்க**அ றக்கிளி புதல்வோனே-*

---

*மாதருக்கு என்பதில் கு-என்னும் நான்காம் வேற்றுமை உருபு "பொருட்டு" என்னும் பொருளில் வந்து மாதர் பொருட்டு வருத்தம் எனப் பொருள் தரும், "முநிவர்க்கு அருங்கூற்றைக் குமைத்த" - சுந்தரர் 63-4. "கூழிற்குக் குற்றேவல் செய்யும்" என்புழிப் போல -நன்னூல் சூத்திரம் -29.

'மாதருக்கு வசப்படு புத்திகள் தவிரேனோ' என்றும் பாடம்.

†ராவணன் தலை - மலை போன்றது . "பாத மொர் விரலுற மலையடர் பலதலை நெரிதர " சம்பந்தர் - III - 85-8.

‡நீலி - சாகினி - பாட்டு (223 பார்க்க.)

§இங்குத் தேவியைக் கடல் முத்துக்கு ஒப்பிட்டார். முத்து எட்டு இடங்களிற் பிறக்கும் என்பதும், எட்டிடத்திலும் சிறப்புடையது கடல் என்பதும் தக்கயாகப் பரணி உரையால் விளங்கும் (தாழிசை. 181, 340-உரை) முத்த நகைக் கொடி - முத்துப் போன்ற பல் வரிசையுடைய கொடி (யிடையாள்) எனினுமாம். முத்து - இதை இடைநிலைத் தீபகமாகக் கொள்க.

(அடுத்த பக்கம் பார்க்க)

பூமாலையை அணிந்த கழுத்தை உடையவர்கள், முத்து அலங்காரம் வாய்ந்த ரவிக்கை அழுந்துகின்ற கொங்கையை உடையவர்கள், வஞ்சகம், மோகமயக்கம் இவைகளைச் செலுத்தி மனத்தைப் பாழாக்கும் மடமாதர்கள்-

மார்பை அசைத்து, மோகமயக்கத்தை உண்டு பண்ணி, இருட்டறைக்குள் வா என்று அழைத்துப் போய், (என்னிடமுள்ள) பொருளைக் கவர்ந்து சம்பந்தம் செய்யும் (தழுவும்) (பொது) மகளிர் பொருட்டு நான் வேதனைப் படுவது தவிராதோ.

கடல் வற்றும்படி சிறந்த பாணத்தைச் செலுத்திக் கடலின் மீது அணையிட்டு அடைத்து, ஒப்பற்ற படையைப் பிரயோகித்துப் படும்படி செய்து கர்வங் கொண்டிருந்த அரக்கன் (ராவணனுடைய) தலை பத்தையும் மலை விழுவது போல-

மேலே அறுத்து நிலத்தில் விழ அடித்துத் தள்ளி, சத்திய சொரூபியான வேத லட்சுமியாம் சீதையைச் சிறையினின்றும் விடுவித்தருளிய வீரம் பொருந்திய அச்சுத ராமருக்குச் சிறந்த அற்புதம் வாய்ந்த மருகனே!

நீலி (கருநிறங் கொண்டவள்), மாசு அற்றவள், குணங்கடந்தவள், முத்துக்களுள் கடல் முத்துப் போன்றவள், ஒளி வீசும் (பொற்) கொடி போன்றவள், அழகிய நீல ரத்தின (அணியைக்) கொண்ட அறக்கிளி (தருமக்கிளி) - ஆகிய பார்வதியின் குமரனே!

---

**கச்சியில் முப்பத்திரண்டு அறங்களையும் புரிந்த கிளியன்ன காமாக்ஷி. "அறம் இரண்டெட்டெட் டெட்டும் வளர்க்கும் தலைவி" திருப்புகழ் - 460. "இச்சைப்படி தன்பேரறம் எண்ணான்கும் வளர்க்கும் பச்சைக் கொடி" (வில்லி பாரதம் - அருச்சுனன் தீர்த்த யாத்திரை - 13). "ஜகத்தில் முப்பத்திரண்டறம் வளர்த்தவள்" - க்ஷே .கோ-பி.தமிழ்.

நீற திட்டுநி னைப்பவர் புத்தியில்
நேச மெத்தஅ ளித்தருள் சற்குரு
நீல முற்றதிருத்தணி வெற்புறை பெருமாளே.(30)

## 279. திருவடி சேர

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான

கச்சணி யிளமுலை முத்தணி பலவகை
கைச்சரி சொலிவர மயல்கூறிக்-

கைப்பொருள் கவர்தரு மைப்பயில் விழியினர்
கட்செவி நிகரல்குல் மடமாதர்;

இச்சையி னுருகிய கச்சைய னறிவிலி
யெச்சமி லொருபொரு ளறியேனுக்-

கிப்புவி மிசைகமழ் பொற்பத **மலரிணை**
யிப்பொழு**தணுகவு** **னருள்தாராய்;**

கொச்சையர் மனையிலி டைச்சியர் தயிர்தனை
நச்சியெ திருடிய குறையால்வீழ்-

*குற்கிர வினியொடு †நற்றிறவகையறி
கொற்றவு வணமிசை வருகேசன்;

---

*குற்கிரவினி யொடு - உர லோடு.

†நற்றி றவகை - மருத மரங்களாய் நின்றவர்களுடைய சாபத்தைப் போக்கிய திறம் (திருப்புகழ் -143-கீழ்க்குறிப்பு).

†திரு நீறு இட்டு நினைக்கின்றவர்களின் புத்தியில் அன்பை நிரம்ப அளித்தருளும் சற்குருவே! நீலோற்பலம் மலர்கின்ற திருத்தணி மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மாதருக்கு வருத்தம் இருப்பது தணியாதோ)

## 279

ரவிக்கை யணிந்த இள முலை, முத்தாபரணம், பல வகையான கை வளையல்கள் இவையெல்லாம் ஜொலிக்க (பிரகாசிக்கத்) (தங்கள்) காம இச்சையைக் கூறி-

(வந்த ஆடவர்களின்) கையில் உள்ள பொருளைக் கவரும் மை நிறைந்த கண்ணினர் - பாம்பின் படம் ஒத்த அல்குலை உடைய மட மாதர் (மீதுள்ள)

ஆசையினால் (உடலும் உள்ளமும்) உருகின தழும்பினன், அறிவில்லாதன், குறைவிலா நிறைவான ஒப்பற்ற பொருளை, அறியாதவனாகிய எனக்கு

இந்தப் பூமியில், (உனது) மணநாறு சீரடி மலரிணைகளை இப்பொழுதே நான் அணுகும்படியாக உனது திருவருளைத் தந்தருளுக.

இடையர் மனையில் இடைச்சியர் தயிரை விரும்பித் திருடின குறைபாட்டினாற் கிடந்திருந்த

உரலோடு சென்று (உரலை இழுத்துச் சென்று) நல்லதொரு பாக்கியச் செய்கையை அறிந்து செய்த (மருதிடைத் தவழ்ந்து, சாபத்தால் மருத மரங்களாய் இருந்த இருவர் சாபத்தைப் போக்கிய) கேசவன். வீரமுள்ள கருடவாகனத்தில் வரும் கேசவன் (திருமால்)-

---

†திருநீறிட்டு நினைப்பவர் புத்தியில் இறைவன் விளங்குவர்; அருள்பாலிப்பர். " நீற்றாரு மேனியராய் நினைவார்தம் உள்ளத்தே நிறைந்து தோன்றும் காற்றானை" சுந்தரர். VII - 30-2. "தூய வெண்ணீற்றினராகி உன்னி நைபவர்க் கல்லால் ஒன்றும் கை கூடுவதன்றால்" - சம்பந்தர் - II 90-4. திருநீறிட்டவர் எதிரிலும் செல்லாதீர் என நமன் தூதுவர்க்கு அப்பர் எச்சரிக்கை செய்கின்றார். "நமன் தூதுவீர்...:நிறைய நீறணிவார் எதிர் செல்லலே" -அப்பர்-V-92-5.

அச்*சுதை நிறைகடல் நச்சர வணைதுயில்
அச்சுதன் மகிழ்திரு மருகோனே-

அப்பணி †சடையரன் மெச்சிய ‡தணிமலை
யப்பனெ யழகிய பெருமாளே. (31)

## 280. திருவடியின் பெருமையை உணர

தனனத்த தத்தனத் தனனத்த தத்தனத்
தனனத்த தத்தனத் தனதான

§கவடுற்ற சித்தர்சட் சமயப்ர மத்தர்நற்
கடவுட்ப்ர திஷ்டைபற் பலவாகக்-

கருதிப்பெ யர்க்குறித் துருவர்க்க மிட்டிடர்க்
கருவிற்பு கப்பகுத் துழல்வானேன்;

**சவடிக்கி லச்சினைக் கிருகைச்ச ரிக்குமிக்
கசரப்ப ளிக்கெனப் பொருள்தேடி-

சகலத்து ‡மொற்றைபட் டயல்பட்டு நிற்குநிற்
சரணப்ர சித்திசற் றுணராரோ;

---

* சுதை - பால்.

†அரன் மெச்சிய தணிமலை அப்பன் - மகனார் செய்த உபதேசத்தைக் கேட்டு சிவன் மகிழ்ந்து ஆரவாரித்து நட்டம் ஆடினதைக் குறிக்கும். "தத்துவங் கேட்டலும் தழங்கிநின் றாடினான்" 'தழங்கி நட்டநின்றியற்றும் வீராட்ட காச நாதனார்' (தணிகைப் புராணம் - வீராட்ட - 118, 128 ) உபதேசித்த வரலாறு:- திருப்புகழ் 256, 261, 269 பார்க்க.

‡ "திருமலை " என்றும் பாடம்; 244-ஆம் பாடலைப்பார்க்க.

§இந்தத் திருப்புகழால் வஞ்சக சித்தர்களையும் (சித்து விளையாடுபவர்களையும்) தேவப்திரஷ்டை என்று ஆடம்பர பூஜை செய்பவர்களையும் ஆசிரியர் கண்டிக்கிறார் - திருப்புகழ் 1130 (ஆராதனராடம்பரத்து) - என்புழிப் போல.

**சவடி - ஒருவித ஆபரணம்.

*அந்த பால் நிறைந்த கடலில் (பாற்கடலில்) விஷமுள்ள அரவு (ஆதிசேடன்) ஆகிய அணையின் மேல் துயில் கொள்ளும் அச்சுதன் (திருமால்) மகிழும் அழகிய மருமகனே! (அல்லது இலக்குமியின் மருமகனே!)*

*(கங்கை) நீரை அணிந்துள்ள சடை அரன் (சிவன்) மெச்சிய* **தணிமலை** *அப்பனே! அழகிய பெருமாளே!*

*(பத மலரிணை இப்பொழு தணுகவுன் அருள் தாராய்)*

## 280

*கவடு (வஞ்சகம்) கொண்ட சித்தர்களும், ஆறு சமயங்களை மேற்கொண்ட (வாதஞ் செய்யும்) வெறியர்களும் சிறந்த கடவுளர்களின் (திருவுருவப்) ப்ரதிஷ்டை என்று (நிலை பெறுத்துகை) என்று, பலபல வகையாக-*

*யோசித்து நியமித்து (அக்கடவுளர்க்குப்) பெயர் குறிப்பிட்டு வைத்து, உருவ அமைப்பு ஏற்படுத்தி (இங்ஙனம் எல்லாம்) இடர் (துன்பத்துக்குக்) காரணமான உட்பொருளிற் புகுதற்கு வேண்டிய பங்கீட்டினை (திட்டத்தைச்) செய்து (ஏன்) - அலைய வேண்டும்!*

*சவடிக்கு - பொற்சரடுகளிற் கொத்தாக அமைந்த (கழுத்தணிவகை)க்கும், முத்திரை மோதிரத்துக்கும், இரண்டு கைகளிலும் அணியப்படும் சரிக்கும் (வளையல் வகைக்கும்) மிக்க (மேலான)- சரப்பளிக்கும், (வயிரம் அழுத்தின) கழுத்தணி வகைக்கும் கண்டசரத்துக்கும், (பொதுமகளிர்க்குக் கொடுக்க வேண்டிப்) பொருள் தேடிகளாகிய மாக்கள்*

*எல்லாவற்றிலும் ஒன்றுபட்டும் (ஏகிபாவமாக வியாபித்திருந்தும்) (அவைகளிற் கலவாது) புறம்பாய் அயலாகி நிற்கும் உனது திருவடியின் கீர்த்தியைச் சற்றேனும் உணர மாட்டார்களா (ஐயோ! பாவம்!) ,*

---

*202 -ம்பக்கத் தொடர்ச்சி*

**ஒற்றை பட்டு ஏகிபாவமாக வியாபித்து ஒற்றைபட்டு அயல்பட்டு நிற்றல் - "இந்திர ஜாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தந்திரத்திற் சாராது சார்வது போல்" என்றது போல - கந்தர் கலி வெண்பா.

குவடெட்டு மட்டுநெட் டுவரிக்க ணத்தினைக்
குமுறக்க லக்கிவிக் ரமசூரன்-

*குடலைப்பு யத்திலிட் டுடலைத்த றித்துருத்
துதிரத்தி னிற்குளித் தெழும்வேலா;

சுவடுற்ற அற்புதக் †கவலைப்பு னத்தினிற்
றுவலைச்சி மிழ்த்துநிற் பவள்நாணத்-

தொழுதெத்து முத்தபொற் புரிசைச்செ ருத்தணிச்
‡சுருதித் தமிழ்க்கவிப் பெருமாளே.(32)

## 281. அகப்பொருள்

தனத்த தத்தனத் தந்த தாத்தன தந்ததான

கனைத்த திர்க்குமிப் பொங்கு கார்க்கட லொன்றினாலே-

கறுத்த றச்சிவத் தங்கி வாய்த்தெழு திங்களாலே;

தனிக்க ருப்புவிற் கொண்டு வீழ்த்தச ரங்களாலே-

தகைத்தொ ருத்தியெய்த் திங்கு §யாக்கைச ழங்கலாமோ;

---

*"சலத்து வரும் அரக்கர் உடல் கொழுத்து வளர் பெருத்த குடர் சிவத்த தொடையெனச் சிகையில் விருப்பமொடு சூடும்... திருத்தணியில் உதித்தருளும்... குகன் வேலே" (வேல்வகுப்பு)

†கவலை - செந்தினை.

‡சுருதித் தமிழ் - தமிழ் வேதமாகிய தேவாரம்.

§சழங்குதல் - சோர்வு அடைதல்: 'சரிந்தது தருக்கு; உடல் சழங்கல் உற்றதால்' காஞ்சிப்புரா - தழுவக்-93.

மலைகள் எட்டையும் வருத்தி, பெரியகடல் திரட்சியை ஒலிசெயக் கலக்கி, பராக்ரமம் வாய்ந்த சூரனுடைய-

குடலைத் தனது புயத்தில் (மாலையாக) அணிந்து, (அவனது) உடலைத் துண்டஞ் செய்து, கோபித்து, (அவனது) ரத்தத்தில் குளித்து எழுந்த வேலாயுதத்தை உடையவனே!

(வள்ளி, அல்லது வள்ளி, முருகவேள் இருவர்) பாதச் சுவடுகள் (அடையாளங்கள்) உள்ள செந்தினைக் கொல்லையில் உதிரிப்பூக்களை (மாலையாகக்) கட்டி நின்ற வள்ளியம்மை நாணங்கொள்ளும்படி (வெட்கும்படி)-

(அவளைத்) தொழுது ஏத்தி நின்ற (போற்றி நின்ற) முத்தனே (பாசங்களில் நீங்கியவனே)! அழகிய மதில் சூழ்ந்த திருத்தணிப் பெருமாளே! (சம்பந்தராகத்) தமிழ் வேதமாகிய தேவாரப்பாக்களைப் பாடிய பெருமாளே!

*(மக்கள் நின் சரணப் ப்ரசித்திசற் றுணராரோ)*

## 281

ஒலித்து அதிரும் இந்தப் பொங்குகின்ற கரிய கடல் ஒன்றாலும் (அல்லது கரிய கடல் ஒன்றினதாலும் என்னை வருத்துவதில் கூடிக் கலந்து வேலை செய்வதாலும்)-

கோபித்து, மிகச் சிவந்து, நெருப்புத் தன்மையைப் பூண்டு, உதித்தெழுந்துள்ள நிலவாலும்-

ஒப்பற்ற (தனது) கரும்பு வில்லை ஏந்தி (மன்மதன்) செலுத்தின அம்புகளாலும்-

வாட்டுதலுற்றுத் தனித்த ஒருத்தியாம் இவள் (தலைவி நாயகி) இளைப்புற்று இங்கு உடல் சோர்வு அடையலாமா!

தினைப்பு னத்தினைப் பண்டு காத்தம டந்தைகேள்வா-

திருத்த ணிப்பதிக் குன்றின் மேற்றிகழ் கந்தவேளே;

பனைக்க ரக்கயத் தண்டர் போற்றிய *மங்கைபாகா-

படைத்த ளித்தழிக் குந்த்ரி மூர்த்திகள் தம்பிரானே. (33)

## 282. கதிதர - மயில்மிசை வர

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தனதான

கிரி†யு லாவிய முலைமிசை துகிலிடு
கபட நாடக விரகிக ளசடிகள்
கெடுவி யாதிக ளடைவுடை யுடலினர் விரகாலே-

க்ருபையி னாரொடு மணமிசை நழுவிகள்
முழுது நாறிக ளிதமொழி வசனிகள்
கிடையின் மேல்மன முருகிட தழுவிகள் பொருளாலே;

பரிவி லாமயல் கொடுசமர் புரிபவர்
அதிக மாவொரு பொருள்தரு பவரொடு
பழைய பேரென இதமுற அணைபவர் விழியாலே-

பகழி போல்விடு வினைகவர் திருடிகள்
தமையெ ணாவகை யறுகதி பெறும்வகை
பகர மாமயில் மிசைவர நினைவது மொருநாளே;

---

*'மங்கை கோவே' என்றும் பாடம்.

†உலாவிய - போன்ற.

தினைப்புனத்தை முன்பு காவல் செய்த மங்கை (வள்ளியின்) கணவனே!

திருத்தணிப்பதி மலையின் மேல் விளங்கும் கந்தவேளே!

பனைமரம் போன்ற கையைக் கொண்ட வெள்ளை யானையை உடைய தேவர்கள் போற்றி வளர்த்த மங்கை (தேவசேனை)யின் கணவனே!

படைத்து, அளித்து, அழிக்கின்ற (முத்தொழில்களை உடைய) மும்மூர்த்திகளுக்கும் தம்பிரானே!

(யாக்கை சழங்கலாமா)

## 282

மலைபோன்ற கொங்கையின் மீது ஆடையை அணிந்துள்ள கபட நாடகம் ஆடும் உபாயக்காரிகளாகிய முட்டாள்கள், கெட்ட வியாதிகள் இடங் கொண்டுள்ள தேகத்தை உடையவர்கள் -(தங்கள்) சாமர்த்தியத்தாலே-

(தங்கள் மீது) அன்பு வைத்தவர்களோடு மணம் செய்து கொள்வேன் என்று கூறி (மணத்துக்கு ஒத்துக் கொண்டு) பின்பு (சொன்ன சொல்லினின்றும்) நழுவுகிறவர்கள், முழுதும் துர்நாற்றம் வீசுபவர், இன்பம் உண்டாகும்படி பேசுபவர்கள், படுக்கை மீது மனம் உருகும்படி தழுவுகிறவர்கள் பொருள் காரணமாக-

அன்பு கலவாத ஆசையுடன் சண்டை செய்பவர்கள், (யார்) அதிகமாக ஒரு பொருளைத் தருகின்றார்களோ அவர்களோடு பழைய உறவினர் போல இன்பம் பிறக்க அணைபவர்கள், கண்களை

அம்பு செலுத்துவது போலச் செலுத்திக் காரியத்தை ஜெயித்துக் கொள்கின்ற திருடிகள் - (அத்தகைய பொதுமாதர் களை) நான் எண்ணாதபடிக்கு, அடையக் கூடிய நற்கதியைப் பெறும் வழியை (எனக்கு) நீ பகர (போதிக்கச்) சிறந்த மயில் மேல் வர (வந்து காட்சிதர) நீ நினைக்கும் நாள் ஒன்று வருமா! அல்லது நற்கதியைப் பெறுமாறு, பகரம் (அழகுள்ள) மாமயில் மிசை வர நீ நினைக்கும்படியான ஒரு நாள் உண்டா!

அரிய ராதிபர் மலரய னிமையவர்
நிலைபெ றாதிடர் படவுடன் முடுகியெ
அசுரர் தூள்பட அயில்தொடு மறுமுக இளையோனே-

அரிய கானக முறைகுற மகளிட
கணவ னாகிய அறிவுள விதரண
அமரர் நாயக சரவண பவதிற லுடையோனே;

தரும நீதியர் மறையுளர் பொறையுளர்
சரிவு றாநிலை பெறுதவ முடையவர்
தளர்வி லாமன முடையவ ரறிவினர் பரராஜர்-

சகல லோகமு முடையவர் நினைபவர்
பரவு தாமரை மலரடி யினிதுற
**தணிகை** மாமலை மணிமுடி யழகியல்
பெருமாளே.(34)

## 283. திருவடி பெற

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதான

கிறிமொழிக் கிருதரைப் பொறிவழிச் செறிஞரைக்
கெடுபிறப் பறவிழிக் கிறபார்வைக்-

கெடுமடக் குருடரைத் திருடரைச் சமயதர்க்
கிகள்தமைச் செறிதலுற் றறிவேதும்;

அறிதலற் றயர்தலுற் றவிழ்தலற் றருகலுற்
றறவுநெக் கழிகீருக் கடலூடே-

அமிழ்தலற் றெழுதலுற் றுணர்நலத் துயர்தலுற்
**றடியிணைக் கணுகிடப் பெறுவேனோ;**

அரி (திருமால்), அரன் (ருத்திரன்) என்னும் மேலோர், மலரில் வீற்றிருக்கும் பிரமன், தேவர்கள் - இவர்கள் - (தத்தம் தொழிலில்) நிலை பெற ஒட்டாமல் (அசுரர்களால்) துன்பப் பட, (அவர்கள் துன்பம் நீங்குமாறு) உடனே விரைந்து சென்று அசுரர்கள் தூளாமாறு (அல்லது நிலைபெற மாட்டாமல் துன்பப்படும்படி எதிர்த்து வந்த அசுரர்கள் தூளாமாறு) வேலாயுதத்தைச் செலுத்தின அறுமுக இளையவனே!

அருமையான (வள்ளிமலைக்) காட்டகத்தே உறைகின்ற குறமகள் (வள்ளியின்) கணவனாகிய அறிவுள்ள தயாள குணத்தவனே! தேவர்களுக்குத் தலைவனே! சரவணபவனே! வெற்றியை உடையவனே!

தரும நீதி வாய்ந்தவர்களும், வேதம் கற்றவர்களும், பொறுமை வாய்ந்தவர்களும், தவறுதல் இல்லாத நிலைத்த வகையில் தவம் புரிபவர்களும், நெகிழ்வு - சோர்வு இல்லாத மனத்தை உடையவர்களும், அறிஞர்களும். மேலான அரசர்களும்-

சகல லோகங்களுக்கும் அதிபதியானவர்களும், நினைந்து போற்றும் அடியவர்களும், போற்றுகின்ற தாமரை மலர் போன்ற திருவடி இனிது பொருந்தத் **தணிகை** மாமலையின் அழகிய உச்சியில் அழகு விளங்க வீற்றிருக்கும் பெருமாளே!

(மயில் மிசை வர நினைவதும் ஒரு நாளே)

# 283

பொய்ம்மொழி பேசும் செருக்கு உள்ளவர்களை, ஐம்புலன் வழியே செல்லுபவர்களை, கெட்ட இப்பிறப்பு நற்பிறப்பு ஆகாமல் தொலையும்படி விழிக்கின்ற விழியை உடைய

கெட்ட அறிவில்லாத குருடர்களை, திருடர்களை, சமய வாதிகளை (நான்) நெருங்குதலுற்று, அறிவு சற்றும்

அறிதல் இல்லாமல், தளர்ச்சி உற்று, நெஞ்சம்(பத்தியால்) நெகிழ்தல் இல்லாமல், குறைபாடு அடைந்து, மிகவும் கெட்டு, அழிவுதரும் பிறவிக் கடலுள்ளே-

அமிழ்ந்து போதல் நீங்கி, மேல்எழுதல் உற்று, நல்லுணர்வு பெறும் நலமான வழியில் மேம்பாடு அடைந்து (உன்) அடியிணையை அணுகப் பெறுவேனோ!

பொறியுடைச் செழியன்வெப் பொழிதரப்* பறிதலைப்
பொறியிலச் சமணரத் தனைபேரும்

பொடிபடச் †சிவமணப் பொடிபரப் பியதிருப்
‡புகலியிற் §கவுணியப் புலவோனே;

தறிவளைத் துறநகைப் பொறியெழப் புரமெரித்
தவர்திருப் புதல்வநற் சுனைமேவு ந்-

தனிமணக் குவளைநித் தமுமலர்த் தருசெருத்
தணியினிற் சரவணப் பெருமாளே. (35)

## 284. (அகப்பொருள்) - புயம் அணைய

தனனந் தனனத் தனனந் தனனத்
தனனந் தனனத் தனதான

குயிலொன் று**மொழிக் குயினின் ††றலையக்
கொலையின் பமலர்க் கணையாலே-

குளிருந் தவளக் குலசந்த் ரவொளிக்
கொடிகொங் கையின்முத் தனலாலே;

புயல்வந் தெறியக் கடனின் றலறப்
பொருமங் கைய‡‡ருக் கலராலே-

---

*பறிதலை:- பாட்டு 172 குறிப்பைப் பார்க்க.

'குஞ்சிவேர் பறித்த குண்டர்' -தக்கயா - 372

குஞ்சி - ஆண்மக்கள் தலைமயிர் வேர் பறித்தலாவது மயிரைப் பறி த்தல் அல்லது அலங்காரத்தைப் பறித்தல் எனில் குஞ்சி முதலான அலங்காரம் களைந்தா ரென்க.

†திருநீற்றை மதுரையிற் பரப்பினது -"மன்னன் நீறணிந்தான் என்று மற்றவன் மதுரை வாழ்வார், துன்னி நின்றார்களெல்லாம் தூயநீ றணிந்து கொண்டார்" - (பெரியபுரா - ஞானசம் - 857)

‡புகலி - சீகாழிக்கு உரிய பன்னிரண்டு பெயர்களுள் ஒன்று. ஏனைய பெயர்கள்: "பிரமபுரம், வேணுபுரம், தோணிபுரம், பூந்தராய், சிரபுரம்,

அறிவுள்ள பாண்டியனுடைய (கூன்பாண்டியனுடைய) சுரநோய் நீங்கவும், மயிர் பறிபடும் தலையராம் அறிவிலிகளாகிய அந்த சமணர்கள் அத்தனை பேரும்-

அழியவும், சிவமணத் திருநீற்றை (மதுரையிற்) பரப்பின- சீகாழிப் புலவனே! - கவுணியர் குலப் புலவனே!

தறிபடுதல் சூழும்படி - அறுபட்டு (அழிவு உண்டாகும் படி), புன்சிரிப் பினின்றும் நெருப்புப் பொறியை எழுப்பிச் செலுத்தித் திரிபுரத்தை எரித்தவருடைய அழகிய புதல்வனே! சிறந்த சுனையில் உள்ள

ஒப்பற்ற நறுமணம் வீசும் குவளை நாள்தோறும் மலரைத்தருகின்ற திருத்தணிகையிற் சரவணப் பெருமாளே!

(அடியிணைக் கணுகிடப் பெறுவேனோ)

## 284

குயில்போன்ற மொழியை உடையாளாகிய இவள் (தலைவி), குயில் (ஒருபால்) நின்று அலைக்கக், கொலையே புரியவல்ல இன்ப மலரான (நீல) மலராகிய (மன்மதனது) ஐந்தாவது பாணத்தாலும்,

குளிர்ந்துள்ள, வெண்ணிறமுள்ள, சிறந்த சுந்தர ஒளியானது, கொடி யன்ன இவள் கொங்கை மீதுள்ள முத்து (மாலை) (பொரிபடுமாறு வீசும்) நெருப்பாலும்,

புயல் காற்று வந்து வீசும் அந்தக் கடல் விடாது நின்று (ஓய்வின்றி) ஒலிக்கும் பேரொலியாலும், கூடி நின்ற மாதர்கள் தூற்றுகின்ற வசைமொழியாலும், (மிகத் தளர்கின்ற தனித்த இவளுக்கு,

---

புறவம், சண்பை, கொச்சைவயம், வெங்குரு, கழுமலம்.

§சம்பந்தர் கவுணிய குலத்தினர் -'கழுமல வூரிற் கவுணியன் ஞானசம்பந்தன்' -சம்பந்தன் - I-98-11.

**மொழி - மொழியையுடையாள். ‡அலைய - அலைக்க.

‡‡உக்க அலராலே - தூற்றிய அலர் மொழியினாலே

புயமொன் றமிகத் *தளர்கின் றதனிப்
புயம்வந் தணையக் கிடையாதோ;

சயிலங் குலையத் தடமுந் தகரச்
சமனின் றலையப் பொரும்வீரா-

தருமங் கைவனக் குறமங் கையர்மெய்த்
தனமொன் றுமணித் திருமார்பா;

பயிலுங் ககனப் பிறைதண் பொழிலிற்
பணியுந் தணிகைப் பதிவாழ்வே-

பரமன் பணியப் பொருளன் றருளிற்
பகர்செங் கழநிப் பெருமாளே. (36)

## 285. திருப்புகழ் கூற

தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன தனதான

குருவி யெனப்பல கழுகு நரித்திரள்
அரிய வனத்திடை மிருக மெனப்புழு
குறவை யெனக்கரி மரமு மெனத்திரி யுறவாகா-

---

*காமம் மிக்கார்க்கு : - குயில் கூவி வேதனை தருவது: " கோகிலப் பறவையும் கொல்லுமோ" - (கந்தபுரா - குமாரபுரி -48)

மன்மத பாணங்கள் நலிவு செய்வது:- 'துங்கவேள் படையுடன் பிற ருஞ் சூழ்ந்திட', 'மதியம் போக்கிய தீ நுழை புண்ணில் வேல் செறித்த தென்ன வேள் கோல் நுழைகின்றன. (கந்தபுரா - குமாரபுரி-37, 46)

நிலவின் குளிர்ச்சியும் வெப்பம் தருவது:- "காமநோய் எரியின் துப்பினால் காந்திய உளத்தினன், கனலும் யாக்கையன்" 'தீந்தழல் வெங்கதிர் திளைத்த வாறென நீந்தருங் கங்குலில் நிலவு தீப்பட... வெம்மை செய்ததே' , "திங்களும் வெங்கனல் சிதறிக்காய்ந்திட" 'சுட்டிடு கிற்றியால் தூய திங்கள் நீ' (கந்தபுரா - குமாரபுரி 33, 35, 37, 38.)

அடுத்த பக்கம் பார்க்க.

உனது புயத்தைக் கூட (விரும்பி) மிகவும் தளர்கின்ற தனித்த (இவளுக்கு) உன்புயம் வந்து அணைப்பதற்குக் கிட்டாதோ!

(கிரௌஞ்ச) கிரி அழிய, தடமும் (ஏழு கிரியும்) அழிய, யமன் நின்று (அங்கும் இங்கும்) அலையும்படிச் சண்டை செய்த வீரனே!

கற்பக விருட்சங்களின் நீழலிலிருந்த மங்கை (தேவசேனை), (வள்ளிமலைக்) காட்டில் வசித்த குறமங்கை (வள்ளி) இருவர் தேகத்துக் கொங்கைககள் பொருந்தும் பேரழகுள்ள மார்பனே!

பயிலுங் ககனப் பிறை (ஆகாயத்திற் பொருந்திய நிலவு) குளிர்ந்த சோலைகளுக்குக் கீழாக விளங்கும் (நிலவும் கீழுற உயர்ந்த மரங்கள் உள்ள சோலைகள் உள்ள) தணிகைப்பதிச் செல்வனே!

*பரமன் வணங்கப் (பிரணவப்) பொருளை அன்று அருளுடன் போதித்த செங் கழுநீர் (மலரும்) தணிகைமலைப் பெருமாளே!

(புயம் வந்தணையக் கிடையாதோ!)

## 285

குருவி போலவும், பல கழுகு, நரிக் கூட்டம் போலவும், அரிய காட்டினிடையே உள்ள மிருகங்கள் போலவும், (புழு, குறவை மீன் (வரால் மீன் வகை) போலவும், யானை போலவும்), மரம் போலவும், திரிபவர்களுடைய உறவு (சம்பந்தம் ) கூடாது;

---

*தணிகையில் முருகவேள் சிவபிரானுக்கு உபதேசித்தது பாடல் -269 - பார்க்க.

**கழநி - இது கழுநீர் என்பதன் மரூஉ.

முன் பக்கத் தொடர்ச்சி

கடல் ஒலி வேதனை தருவது:- "இன்று ஆவி கொள்ளவும் உன்னியதோ கடல் உறங்கலாது" (கந்தபுரா - குமாரபுரி -52)

**ஊர் மங்கையர் வசைப்பேச்சு வேதனை தருவது:-**

'தெருவினில்... மடவார் திரண்டொறுக்கும் வசையாலே' (திருப்புகழ் 218); சிலை மதனம் படு காட்டுவர் கேளிரும்' (கந் - அந்தாதி -9)

குமரி கலித்துறை முழுகி மனத்துயர்
கொடுமை யெனப்பிணி கலக மிடத்திரி
குலைய னெனப்புலை கலிய னெனப்பலர் நகையாமல்;

மருவு புயத்திடை பணிக ளணப்பல
கரிபரி சுற்றிட கலைகள் தரித்தொரு
மதன சரக்கென கனக பலக்குட னதுதேடேன்;

வரிய பதத்தினி னருவி யிருப்பிடம்
அமையு மெனக்கிட முனது பதச்சரண்
மருவு திருப்புகழருள எனக்கினி யருள்வாயே;

விருது தனத்தன த்னன தனத்தன
விதமி திமித்திமி திமித திமித்திமி
விகிர்த டடுட்டுடு ரிரிரி யெனக்குகு வெகுதாளம்

வெருவ முகிழ்த்திசை யுரகன் முடித்தலை
நெறுநெ றெனத்திசை யதிர அடைத்திட
மிகுதி கெடப்பொரு அசுரர் தெறித்திட விடும்வேலா;

*அரிய திரிப்புர மெரிய விழித்தவன்
†அயனை முடித்தலை யரியு மழுக்கையன்
‡அகில மனைத்தையு முயிரு மளித்தவ னருள்சேயே!

---

***திரிபுரம் எரித்த வரலாறு:-** வித்யுன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் என்னும் அசுரர் மூவர் தவஞ்செய்து, பொன், வெள்ளி, இரும்பு இவைகளால் ஆய மூன்று பட்டணங்கள் (புரங்கள்) ஆகாய வழியாகச் செல்லக் கூடியவைகளைப் பெற்றுப் பறந்து பல இடங்களையும் பாழாக்கி வந்தனர். அவர்கள் செய்யும் கொடுமையைப் பொறுக்க முடியாத தேவர்கள் சிவபிரானை வேண்டச் சிவபிரான், தேவர்களே தேராகவும், பிரமன் தேர்ச் சாரதியாகவும், நான்குமறைகளும் குதிரைகளாகவும், மேருமலை வில்லாகவும், வாசுகி (பாம்பு) நாணாகவும், சந்திர சூரியர் தேர்ச் சக்கரங்களாகவும், திருமால் அம்பாகவும், அக்கினி அம்பின் நுனியாகவும், வாயு அம்பின் சிறகாகவும் அமையப் போருக்கு எழுந்தனர். சிவபிரான் தேரின் மேல் மலரடியை வைத்தலும் தேர் புவியில் அழுந்தியது. அப்போது திருமால்

*215ம் பக்கம் பார்க்க*

குமரிப் பெண்களால் வரும் மனத்துளக்கம் (மனக்கவலை) தரும் மார்க்கங்களிற் படிந்து, மனத்துயரும், கொடுமைகளும் பிணிகளும் வருத்தத் திரிகின்ற நிலை கெட்டவன் இவன் என்றும், இழிந்த தரித்திரன் இவன் என்றும் என்னைப் பலரும் பரிகசித்துச் சிரிக்கலாகாது;

பொருந்திய புயங்களில் நகைகள் (ஆபரணங்கள்) அண்ண (நெருங்கி விளங்கவும்), பல யானைகள், குதிரைகள் சூழ்ந்துவர, (உயர்ந்த) ஆடைகளைத் தரித்து, ஒப்பற்ற மன்மதனது சரக்கு இவன் என(வியாபாரப் பண்டம்) இவன் என்று கண்டோர் வியக்க), தங்கப் பல்லக்கிற் செல்லும் அத்தகைய பெருமையை நான் தேடேன்

எழுத்துக்களோடு கூடிய என் சொற்களின் ஊற்றுப்பெருக்கு போய்ச் சேரும் இடமாக எனக்கு, அமைய வேண்டிய இடம் உனது திருவடியாகிய அடைக்கல ஸ்தானமே. (ஆதலால்), (அத்திருவடியைச்) சேருதற்குரிய திருப்புகழ்ப் பாக்களை நான் சமர்ப்பிக்க எனக்கு இனி நீ அருள்தர வேண்டும்.

வெற்றி முழக்கமாக, தனத்தன தனன தனத்தன... டடுட்டுடு ரிரிரி எனவும், குகு எனவும் பல தாளங்கள்

அச்சந் தந்து ஒலித்து, கீர்த்தியுற்ற (உலகைத் தாங்கும்) ஆதிசேடனுடைய மணிமுடித் தலைகள் நெறுநெறு என்று (இடிபட) திசைகள் அதிர்ச்சி கொள்ளும்படி நெருங்கி அடைபட, தங்கள் திரள் (கூட்டம்) அழிய (அல்லது தங்கள் வீறு அழியப்) பொருத (சண்டை செய்த) அசுரர்கள் சிதறுண்டு முறியச் செலுத்தின வேலாயுதனே!

அருமை வாய்ந்த திரிபுரங்கள் எரிந்து வீழ விழித்தவனும், †பிரமனது முடித்தலையை அரிந்த மழு ஏந்திய கையனும், ‡உலகங்கள், எல்லாவற்றையும், உயிர்களையும் காப்பவனும் - ஆன - சிவபிரான் அருளிய குழந்தையே!

---

விடையாகி (ரிஷபமாகி) இறைவன் தந்த வரத்தால் பலம் பெற்றுத் தேரை முன்போல நிறுவி சிவபிரானைத் தாங்கி நின்றனர். சிவபிரான் திரிபுரத்தைக் கடைக்கண்ணால் நோக்கிச் சிறிது புன்முறுவல் செய்தார். அப்போது அவரது சிரிப்பில் தோன்றிய நெருப்பு மூன்று புரங்களையும் அப்புரங்களில் இருந்த அசுரர் கூட்டங்களையும் அழித்தது. சிவ வழிபாட்டில் வழுவாதிருந்த மூவர் தவிர ஏனைய அசுரர்கள்

(217-ம் பக்கம் பார்க்க)

*அமண ருடற்கெட †வசியி லழுத்திவி
ணமரர் கொடுத்திடு மரிவை குறத்தியொ
‡டழகு திருத்தணி மலையில் நடித்தருள்
பெருமாளே. (37)

**இதன் கருத்து ;** குருவி முதலியன போலத் திரிபவர் உறவு ஆகாது. ஆதலால் அதனைக் கொள்ளேன். கனகச் சிவிகை முதலியவற்றைத் தேடேன்; அக்ஷரங்களோடு கூடிய பதங்கள் ஊற்றுக்கண் போலச் சுரந்து பெருகும் வாக்கு சித்திகிடைத்தல் எனக்கு அமையும்; அதனைப் பிரயோகிக்குமிடம் உனது பதச்சரண்; ஆதலால் அவ்வாக்கு சித்தியை யளித்துத் திருப்புகழ் ஓத எனக்கு அருள் செய்ய வேண்டும்.

## 286. பொது மாதர் உறவு அற

தனத்த தனத் தனத்த தனத்
தனத்த தனத் தனத்த தனத்
தனத்த தனத் தனத்த தனத் தனதான

குலைத்துமயிர்க் கலைத்துவளைக்
கழுத்துமணித் தனப்புரளக்
குவித்தவிழிக் கயற்சுழலப் பிறைபோலக்-

குனித்தநுதற் புரட்டிநகைத்
துருக்கிமயற் கொளுத்தியிணைக்
குழைச் செவியிற் றழைப்பபொறித் தனபாரப்;

---

*இது சம்பந்தராய்ச் சமணரைக் கழுவேற்றின திருவிளையாடல் - (பாட்டு 181) † வசி - கழு.

‡திருத்தணிகை மலையும் அழகு - தணிகேசரும் அழகர். "அழகான திருத்தணிகைமலை" (திருப்புகழ் 310) "தணிமலை அப்பனே அழகிய பெருமாளே" (திருப்புகழ் 279) "தணிகை மலையைச் சாரேனோ சாமி அழகைப் பாரேனோ" (அருட்பா)

சமணர்களின் உடல் நாசமாக அவர்களைக் கழுவில் அழுத்தி, விண்ணுலகத்து அமரர் போற்றி வளர்த்த மங்கை(தேவசேனை) யுடனும் குறத்தி வள்ளியுடனும் அழகு வாய்ந்த திருத்தணி மலையில் நடனம் புரிந்தருளும் பெருமாளே!

(திருப்புகழ் அருள எனக்கினி அருள்வாயே)

## 286

அவிழ்ந்து மயிர் கலைபட, சங்கு போன்ற கழுத்தில் உள்ள மணிமாலை கொங்கை மேற் புரள, குவிந்த கண்கள் கயல் மீன் போலச் சுழலப், பிறை நிலவு போல-

வளைவுள்ள நெற்றியை நெறித்து உருட்டி, சிரித்து, (கண்டவர் தம் மனத்தை) உருக்கி, மோகத்தை ஊட்டி (பற்ற வைத்து), இணையான குழைகள் செவிகளில் விளங்க, தேமல் கொண்ட கொங்கைப் பாரம்

---

*திருத்தணிகையில் முருகவேளின் நடன தரிசனத்தை அருணகிரியார் கண்டு மகிழ்ந்தனர் போலும். திருப்புகழ் 308-ஆம் பாடலிலும் - "தணிகைமலை தனில் மயிலில் நிர்த்தத்தில் நிற்கவல பெருமாளே" என்றார்.

---

215 பக்கத் தொடர்ச்சி

தீயிற் பட்டு மடிந்தனர். (இதன் விரிவை உபதேச காண்டத்திற் காண்க). சிரித்து எரித்த போது சிவபிரான் சிறிது விழித்துச் சிரித்தனர். "வாலிய புரத்திலவர் வேவ விழி செய்த.... ஒருத்தர்" சம்பந்தர் - II 34-3.

†அயன்தலை அரிந்தது: - தானே பரம்பொருள் என்று கூறிச் சிவபிரானை இகழ்ந்த காரணத்தால் பிரமனுடைய ஐந்து தலைகளில் ஒன்று வைரவரால் அறுக்கப்பட்டது. "வயிரப் புத்தேள் பழித்திடும் அஞ்சாம் சிரத்தினை உகிரினாற் கொய்தான்" (காஞ்சிப் புராணம் - வயிரவீச - 19) "இகழ்ந்த உனைச் சென்னித்தலை கொண்டது தேர்கிலையோ' -கந்தபுரா-காமதகன -28.

‡சிவனே பிரமனாய் உலகைப் படைத்தும், திருமாலாய் உலகைக் காத்தும், உருத்திரனாய் அழித்தும் விளையாடுபவர் - "உயிரவை ..பவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய சிவன்" "உலகுகள் நிலைபெறு வகை நினைவொடு மிகும்... அரி உரு வியல் பரன்" "உயிரவை அழிவகை நினைவொடு முதலுருவியல் பரன்"-சம்பந்தர் - I - 21-1-3.

*பொலித்துமதத் தரித்தகரிக்
குவட்டுமுலைப் பளப்பளெனப்
புனைத்ததுகிற் பிடித்தஇடைப் பொதுமாதர்-

புயத்தில்வளைப் பிலுக்கில்நடைக்
குலுக்கிலறப் பசப்பிமயற்
புகட்டிதவத் தழிப்பவருக் குறவாமோ;

†தலத்தநுவைக் குனித்தொருமுப்
புரத்தைவிழக் கொளுத்தி‡ மழுத்
தரித்துபுலிக் கரித்துகிலைப் §பரமாகத்-

தரித்துதவச் சுரர்க்கண்முதற்
பிழைக்கமிடற் **றடக்குவிடச்
சடைக்கடவுட் சிறக்கபொருட் பகர்வோனே;

---

*பொலித்து மதத் தரித்த - பொலிந்து மதந் தரித்த.

† தலம் - பூமியின் நடுவில் உள்ள மேரு எனக் கொள்க. தலத்தநு மேரு வில். மேருமலை - சத்த தீவுகளின் மத்திய பாகத்தில் உள்ளதும் கிரகங்கள் சுற்றி வருவதாகக் கருதப் படுவதுமான பொன் மலை. " மாநிலத் திடைநின் றோங்கிய நெடு நிலை மேரு" (சிலப்பதி - 28-48).

‡ மழுதரித்தது, புலித்தோல் பூண்டது, முதலிய :-

தாருக வனத்து முநிவர்கள், சிவனை வெறுத்து வேள்வி செய்தனர். சிவபிரான், பலியேற்க முநிவர்களின் இருக்கைக்குச் செல்ல, முநிவர்களின் பத்தினிகள் அவர் அழகைக் கண்டு மோகங் கொண்டனர்; தங்கள் மங்கையரின் கற்பைக் குலைத்தார் சிவன் என்று முநிவர்கள் கோபித்து அவரைக் கொல்லக் கருதி ஒரு கொடிய வேள்வியை ஆற்றினர். அந்த வேள்வியில் எழுந்த புலியை அவர் மேல் ஏவினர்; பரமன் அந்தப் புலியை அட்டு அதன் தோலை ஆடையாக உடுத்துக் கொண்டார். பின்பு அந்த வேள்வித் தீயினின்று எழுந்த மழு, மான், பாம்பு, பூதங்கள், வெண்டலை, துடி, முயலகன், தீ இவைகளை ஒன்றன் பின் ஒன்றாக அனுப்பச் சிவபிரான் மழுவையும், மானையும் கையிற் பற்றி ஏந்தினார்; பாம்பை அணிந் தார்; பூதகணங்களைத் தமது சேனையாக ஆக்கிக் கொண்டார்; வெண்டலையையும், துடியையும், தீயையும் கையிற் பற்றினர்; முயலகனைத் தன்னடிக்கீழ்த் தள்ளி மிதித்து நடனம் ஆடினர்.

அடுத்த பக்கம் பார்க்க.

பொலிவுற்று மதம் கொண்ட யானை போன்றும், மலை போன்றும் அக் கொங்கை-பளபள என்று பிரகாசிக்க - உடுத்த ஆடையைக் கொண்ட இடையை உடைய பொதுமகளிர் (தங்கள்)

புயத்தாலும், வளைப் பிலுக்காலும் (பகட்டாலும்), நடைக் குலுக்காலும், மிகவும் பசப்பி (இன்முகம் காட்டி ஏய்த்து), மோகத்தை ஊட்டித், தவத்தை அழிப்பார்கள் - அத்தகைய அப்பொது மகளிருடைய சம்பந்தம் ஆமா! (சம்பந்தம் கூடாது என்றபடி);

பூமியின் மத்தியில் விளங்கும் மேரு மலையை வில்லாக வளைத்து (அல்லது, பூமியில் தனுவை- (மேரு எனும்) வில்லை வளைத்து) ஒப்பற்ற முப்புரங்களைப் பொடிபட்டு விழும்படி எரித்து, மழு ஆயுதத்தைத் தரித்து, புலி, யானை இவைகளின் தோலை உடையாக

அணிந்து, தவநிறைந்த தேவர்கள் முதலானோர் பிழைக்கத்** தனது கண்டத்தில் அடக்கின விஷத்தை உடைய சடைப் பெருமானாம் சிவனுக்கு மகிழ்ச்சி உண்டாகும்படி (பிரணவப்) பொருளைக் கூறியவனே!

---

**யானைத் தோலைப் போர்த்தது :-**

கயாசுரன் என்பவன் பிரமனிடம் வரம் பெற்றுப் பேராற்றல் பெற்று மண்ணவர், விண்ணவர் யாவரையும் வருத்தினன். யானை முகம் கொண்ட அந்த அசுரனைச் சிவபிரான் உதைத்துத் தள்ளித், தேவியுங் கலங்க, அந்த யானையின் ரத்தம் ஒழுகும் ஈரத் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டார் - (விரிவைக் கந்த புராணம்- ததீசி உத்தரப் படலத்திற் காண்க).

§ பரமாக -'அம்பரமாக' (ஆடையாக) - அம்பரம் - முதற் குறைந்து பரம்' என்றாயிற்று.

** விடம் மிடற்றில் அடக்குதல் :-

திருப்பாற் கடலைக் கடைந்த பொழுது, மந்தர மலை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பு கயிறாகவும் அமைய, கடைந்த வேகத்தில், வாசுகி ஆலகால விடத்தைக் கக்கிற்று; அந்த விடாக்கினியைத் தாங்கமாட்டாது திருமால் ஆதிய தேவர்கள் சிவபிரானைச் சரணம் அடைய, அவர் அந்த விடத்தைப் பற்றி உண்டு தேவர்களின் பயத்தை ஒழித்தனர் - அங்ஙனம் காத்ததற்கு என்றும் அடையாளமாக அந்த விடத்தைக் கண்டத்திலேயே விளங்க வைத்தனர்.

221ம் பக்கம் பார்க்க

சிலுத்தசுரர்க் கெலித்துமிகக்
கொளுத்திமறைத் துதிக்கஅதிற்
செழிக்கஅருட் கொடுத்தமணிக் கதிர்வேலா-

தினைப்புனமிற் குறத்திமகட்
டனத்தின்மயற் குளித்துமகிழ்த்
திருத்தணியிற் றரித்தபுகழ்ப் பெருமாளே (38)

## 287. கதி பெற

தாந்தன தத்தன தத்தன தத்தன
தாந்தன தத்தன தத்தன தத்தன
தாந்தன தத்தன தத்தன தத்தன தனதான

கூந்தல விழ்த்துமு டித்துமி னுக்கிகள்
பாய்ந்தவி ழிக்குமை யிட்டுமி ரட்டிகள்
*கோம்புப டைத்தமொ ழிச்சொல்ப ரத்தையர் புயமீதே-

கோங்குப டைத்தத னத்தைய ழுத்திகள்
வாஞ்சையு றத்தழு விச்†சிலு கிட்டவர்
கூன்பிறை யொத்தந கக்குறி வைப்பவர் பலநாளும்;

ஈந்தபொ ருட்பெற இச்சையு ரைப்பவ
ராந்துணை யற்றழு கைக்குர லிட்டவ
‡ரீங்கிசை §யுற்றவ லக்குண மட்டைகள் பொருள்தீரில்-

ஏங்கியி டக்கடை யிற்றளி வைப்பவர்
பாங்கக லக்கரு ணைக்கழல் பெற்றிட
ஈந்திலை யெப்படி நற்கதி புக்கிட லருள்வாயே;

---

* கோம்பு - சினக்குறிப்பு.

† சிலுகு - துன்பம்.

‡ ஈங்கிசை - இம்சை

§ உற்றவலக் குணம் - உற்ற அவலம் குணம்.

சண்டையிட்ட அசுரர்களைச் செயித்து, அவர்களை நிரம்ப எரியிட்டு அழித்து, வேதம் துதி செய்ய, அதனால் (தேவர்கள்) செழிப்புற அருள் பாலித்த மணி கட்டிய (அல்லது அழகிய), ஒளி வேலனே!

தினப்புனத்தில் குறத்தி மகள் வள்ளியின் கொங்கை மோகத்திற் குளித்து மகிழும் பெருமாளே! திருத்தணியில் நிலைத்து வீற்றிருக்கும் புகழ் வாய்ந்த பெருமாளே!

(தவத் தழிப்பவருக்கு உறவாமோ)

## 287

கூந்தலை அவிழ்த்தும் முடித்தும் மினுக்குபவர்கள் பாய்கின்ற கண்களுக்கு மை இட்டு மிரட்டுபவர்கள், கோபக் குறிப்பான மொழிகளைச் சொல்லும்போது மாதர்கள் (தம்மிடம் வந்தவர்களின்) புயங்கள் மீது-

(தங்களுடைய) கோங்க முகை போன்ற கொங்கைகளை, அழுத்துபவர்கள், விருப்பத்துடன் (முன்னர்த்) தழுவிப் (பின்னர்த் துன்பம் ஊட்டும்) சண்டை யிடுபவர்கள், வளைந்த பிறை போன்ற நகக் குறியை வைப்பவர்கள் - பலநாளும்

கொடுத்து வந்த பொருளைப் (பின்னும் பின்னும்) பெறுதற்கு வேண்டித்தங்கள் விருப்பத்தை எடுத்துக் கூறுபவர்கள், அங்ஙனம் தங்கள் விருப்பம் நிறைவேறும் வழி அற்ற போது அழுகைக் குரலைக் காட்டுபவர்கள், இம்சை (தீங்கு) (தொந்தரவு) செய்யும் குற்றமான (துன்பந் தருவதான) குணத்தைக் கொண்ட பயனற்றவர்கள், (தம்மிடம் வந்து சேர்ந்தவர்கள், கையில் தமக்குக் கொடுப்பதற்குப்) பொருள் இல்லாது போனால் (வந்தவர்கள்)

மனம் வாடுமாறு வீட்டின் வெளிப்புறத்தில் தள்ளி வைப்பவர்கள் -ஆகிய பொது மகளிருடைய நட்பு (தோழமை) ஒழிந்து நீங்கவும், உனது கருணைக் கழலை நான் பெற்றிடவும் (நீ) அருள் பாலிக்கவில்லையே! எப்படி நான் நல்ல கதியிற் புகுதல் (நல்ல கதி பெறுதல்) - அருள்புரிவாயாக.

---

"விடம் உட்கொள்ள சென்றது மிடற்றில், அன்ன திறத்தினை யாரு நோக்கி, யின்றெமதுயிர் நீர் காத்தற் கிங்கிது சான்றா யங்கண், நின்றிட அருடி யென்றே நிமலனைப் போற்றலுற்றார்" - (கந்த புராணம் - ததீசி - உத்தர - 358)

'நஞ்சு எம்மான் திருமிடற்றினுக்' கழகு செய்து அமரர் சேயிழையார் அரு மிடற்று நூல் காத்தது காண்' (காஞ்சிப் புராணம் மணி கண்டேச-52)

*காந்தள்ம லர்த்தொடை யிட்டெதிர் விட்டொரு
†வேந்துகு ரக்கர ணத்தொடு மட்டிடு
காண்டிப அச்சுத னுத்தம சற்குணன் மருகோனே-

‡காங்கிசை மிக்கம றக்கொடி வெற்றியில்
§வாங்கிய முக்கனி சர்க்கரை மொக்கிய
கான்**கனி முற்கியல் கற்பக மைக்கரி யிளையோனே;

††தேந்திணை வித்தின ருற்றிட வெற்றிலை
வேங்கைம ரத்தெழி லைக்கொடு நிற்பவ
தேன்சொலி யைப்புண ரப்புன முற்‡‡றுறை
குவைவானந்-

தீண்டுக ழைத்திர ளுற்றது துற்றிடு
வேங்கைத னிற்குவ ளைச்சுனை சுற்றலர்
சேர்ந்ததி ருத்தணி கைப்பதி வெற்புறை
பெருமாளே.(39)

* போரிடும் சுக்கிரீவன் - வாலி இவர்களுள் இன்னார் வாலி என்று அடையாளம் தெரிந்து வாலியைக் கொல்வதற்காக ஸ்ரீ ராமபிரான் சுக்கிரீவனை மாலை அணிந்து போருக்குப் போ என்று கட்டளையிட்டார். "உமை வேற்றுமை தெரிந்திலம் கொடிப் பூ மிலைந்து செல்கென விடுத்தனன் எதிர்த்தனன் மீட்டும்" (கம்ப. ராமா - வாலி வதை -52)

† வேந்து குரக்கு - குரங்கரசாகிய வாலி.

✓ ‡ காங்கிசை - விருப்பம்.

§ வாங்கிய - ஏற்றுக்கொண்ட "வருகஎன் றென்னை நின் பால் வாங்கிட வேண்டும்" (திருவாசகம் 5-68).

** கனி - க(ன்)னி.

†† வள்ளியொடு லீலைப் பேச்சுக்கள் பேசி நின்ற முருகவேள் வேடர்கள் வருவது கண்டு வேங்கை மரமாய் உருவெடுத்து நின்றார். "செய்யவள் குமரி முன்னம் திருநெடுங் குமரன் நின்று ... .... மையலின் மிகுதி காட்டி... பகரும் எல்லை ... .... எயினர் சூழ ஒருதனித் தாதை வந்தான் - ஆங்கது காலை தன்னில் ... தானோர் வேங்கையின் உருவமாகி வேற்படை வீரன் நின்றான்" (கந்த புரா - வள்ளியம்மை - 74, 75.)

‡‡ உறைகுவை - உறைபவனே!

(சுக்கிரீவனை) காந்தள் மலர் மாலையை அணியச் செய்து (வாலியின்) எதிரே போருக்கு அனுப்பி ஒப்பற்ற அந்த வாலி என்னும் குரங்கரசை அவன் கவசத்துடன் அழியக் கொன்ற காண்டிபம் என்னும் வில்லை ஏந்திய அச்சுதன், உத்தமமான நற்குணம் வாய்ந்தவன் ஆகிய ஸ்ரீராமபிரானுடைய (திரு-மாலின்) மருகனே!

(உன்மீது) விருப்பம் வைத்த வேட்டுவப் பெண்ணை (மயக்கி) வெற்றி பெற்று ஏற்றருளிய (அடைந்த) இளையோனே! மா, பலா, வாழை என்னும் மூவகைப் பழங்களையும், சர்க்கரை-யையும் மொக்குபவரும் (வாரி உண்பவரும்), வள்ளிமலைக் கானில் (காட்டில்), கனி க(ன்)னி யாகிய வள்ளியின் முற்கு (முன்னர்) வந்த (வேண்டுவார்க்கு வேண்டியதை அளிக்கும்) கற்பக விருட்சம் போன்றவரும், கருநிறங் கொண்ட கரி (ஆனை முகவருமான) விநாயகமூர்த்திக்கு இளையவனே!

இனிமையுள்ள தினையை விதைத்த வேடர்கள் வருவதை அறிந்து, தனி வேங்கை மரத்தின், இலை கொண்ட வேங்கை மரத்தின், அழகு விளங்க நின்றவனே! தேன் போல இனிக்கும் சொற்களை உடைய வள்ளியைச் சேர்வதற்காக (அவளிருந்த) அந்தத் தினைப்புனத்தைச் சேர்ந்து அங்கு இருந்தவனே! ஆகாயத்தைத்

தொடும்படி உயர்ந்த மூங்கிலின் கூட்டத்துக்கு அருகே நெருங்கி நிற்பனவும், பொன்போல ஒளிர்கின்றனவுமான குவளை மலர்கள் சுனையிற் சுற்றிலும் (எங்கும்) மலர்தலைக் கொண்ட திருத்தணிகை ஊரில் உள்ள மலைமீது வீற்றிருக்கும் பெருமாளே!

(எப்படி நற்கதி புக்கிடல் அருள்வாயே)

## 288. பொது மகளிர் நட்பு அற

*தானா தனத்ததன தானா தனத்ததன*
*தானா தனத்ததன தனதான*

*கூர்வேல் பழித்தவிழி யாலே மருட்டிமுலை*
*கோடா லழைத்துமல ரணைமீதே-*

**கோபா விதழ்ப்பருக மார்போ டணைத்து†கணை*
*கோல்போல் சுழற்றியிடை யுடைநாணக்;*

*கார்போல் குழற்சரிய வேவா யதட்டியிரு*
*காதோலை யிற்றுவிழ விளையாடுங்-*

*காமா மயக்கியர்க ளூடே களித்துநம*
*கானூ ருறைக்கலக* **மொழியாதோ;**

*‡வீராணம் வெற்றிமுர சோடே தவிற்றிமிலை*
*வேதா கமத்தொலிகள் கடல்போல-*

*வீறாய் முழக்கவரு சூரா ரிறக்கவிடும்*
*வேலா* **திருத்தணியி** *லுறைவோனே;*

*§மாரோ னிறக்கநகை தாதா திருச்செவியில்*
*மாபோ தகத்தையருள் குருநாதா-*

*மாலோ னளித்தவளி யார்மால் களிப்பவெகு*
*மாலோ டணைத்துமகிழ் பெருமாளே.* (40)

---

* கோபம் - இந்திரகோபம்: தம்பலப்பூச்சி.

† கணை -கண்ணை.

‡ வீராணம் என்பது ஒருவித வாத்தியம்.

§ மன்மதனை விழித்து எரித்தார்; திரிபுரத்தைச் சிரித்து எரித்தார் சிவபிரான் என்பது புராண வழக்கு; அங்ஙனம் இருக்கத் திரிபுரத்தை விழித்து எரித்தார் என்றும் (திருப்புகழ் 285) மன்மதனைச் சிரித்து எரித்தார் என்று இப்பாடலிலும், அருணகிரியார் கூறினது கவனிக்கற்பாலது; திரிபுரத்தை விழித்துச் சிரித்தார் என்றும், மன்மதனைச் சிரித்து விழித்தார் என்றும் கொள்வதே பொருந்தும், தேவாரத்திலும் 'வாலிய புரத்திலவர் வேவ விழி செய்த' (சம்பந்தர் II-34-3), 'புரங்கள் தீயெழ விழித்தனர்'

## 288

கூரிய வேலாயுதத்தைப் பழித்து (வென்ற) கண்ணாலே மயக்குவித்து, கொங்கை யென்னும் மலையால் வரவழைத்து மலர்ப் படுக்கை மேலே

இந்திர கோபம் (தம்பலப்பூச்சி) போலச் சிவந்த தம் வாயிதழ் (ஊறலை) உண்ணும்படி மார்போடு சேர்த்த-ணைத்துக், க(ண்)ணை அம்பு போலச் சுழற்றி, இடையில் (இடுப்பில்) உள்ள ஆடை நெகிழவும்-

மேகம் போன்ற கூந்தல் சரியவும், வாய் அதட்டும் சொற்களைக் கூறவும், இரண்டு காது ஓலைகளும் கழன்று விழவும் லீலை செய்கின்ற

காம மயக்கத்தை ஊட்டுகின்ற பொது மகளிருடன் (நான்) களிப்புற்று, (ஈற்றில்) நமனுடைய (யமனுடைய) காடுபோல் அச்சந்தரும் ஊரில் (நரகிற்) சேர்ந்து இருக்கும்படியான குழப்பம் (என்னை விட்டு) அகலாதா!

வீராணம் என்கின்ற பெரிய பறை, வெற்றி முரசு (ஜய பேரிகை), தவில் (மேள வகை), திமிலை (ஒருவகைப்பறை), வேத, ஆகம ஒலிகள் இவை யெலாம் கடல் போல

மிகச் சிறப்புடன் முழக்கம் செய்ய, எதிர்த்து வந்த சூரர்கள் இறக்குமாறு செலுத்தின வேலாயுதனே, திருத்தணிகையில் வீற்றிருப்பவனே!

மன்மதன் இறக்கும்படிச் சிரித்த தந்தையின் திருச்செவியில் சிறந்த ஞானோபதேசத்தை அருளிய குருநாதனே!

திருமால் பெற்ற வள்ளியம்மையார் ஆசையுடன் மகிழ்ச்சி கொள்ள மிக்க ப்ரீதியுடன் (அந்த அம்மையாரை) அணைத்து மகிழ்ந்த பெருமாளே!

(கலகம் ஒழியாதோ)

---

(சம்பந்தர் I-79-4) என்றும், 'கொம்புநல் வேனிலவனைக் குழைய முறுவல் செய்தானும்... எயில் மூன்றும் தீயெழக் கண் சிவந்தானும்' (அப்பர் IV -4-4), "அனங்கனுடல் பொடியாய் வீழ்ந்து மங்க; நகத் தான் வல்ல மருந்து" (VI-84-2) என வருவன காண்க. 'சிரித்திட் டம்புரமே, மதனாருடல் எரித்துக் கண்ட கபாலியர்' (திருப்புகழ் 600) 'அங்கசன் புரம் எரிதர நகைத்து' (திருப்புகழ் 663) 'திரிபுர மங்க மதனுடல் மங்க திகழ் நகை கொண்ட' (திருப்புகழ் 543)- என வருவனவும் ஈண்டுக் காண்க.

## 289. நன்றி மறவாமை

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன தனதான

கொந்துவார்*குர வடியினு† மடியவர்
சிந்தை வாரிஜ நடுவினு ‡நெறிபல
கொண்ட வேதநன் முடியினு மருவிய குருநாதா!

§கொங்கி லேர்தரு பழநியி லறுமுக
செந்தில் காவல **தணிகை**யி லிணையிலி!
**கொந்து காவென மொழிதர வருசம யவிரோத;

தந்த்ர வாதிகள் பெறவரி யதுபிறர்
சந்தி யாதது தனதென வருமொரு
சம்ப்ர தாயமு மிதுவென வுரைசெய்து விரைநீபச்-

---

* முருகன் விளங்கும் இடத்தைக் கூறுகின்றார்:- குர வடி - திருவிடைக் கழியிற் குராமரத்தினடி. (திருப்புகழ் 201 பார்க்க).

† அடியார் உள்ளம் :- "அன்பினராய்... புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்" -சம்பந்தர் I-132-6.

‡ வேத முடிவு:- நெறி பல கொண்ட வேதம் - "சாகை ஆயிரம் உடையார்" சம்பந்தர் II -94-1; சாகை - வேதத்தின் உட்பிரிவு. 'ஆதியாகிய குடிலையும் ... ... வேதம் யாவையும்.... குமரவேள் பொருவிலா உருமம் - கந்தபுரா - அவைபுகு - 132. 'சுருதியின் முடிவு தெளிதரு பரம'- போரூர்ச் சந்நிதிமுறை - பெருங்கழி 1. பாடல் 21 அடி 5 பார்க்க.

§ "ஆறுமுகம் ஆறுமுகம்" என ஆறு முறை கூறும் 161 ஆம் பாடல் பழநிக்கு உரியதாயிருத்தலால் பழநியில் ஆறுமுக' தரிசனம் இவருக்குக் கிடைக்கப் பெற்றுப் 'பழநியில் அறுமுக' என்றும், திருச்செந்தூரில் தேவசேனாபதியாய் விளங்கின ராதலின் 'செந்தில் காவல' என்றும், தணிகையில் அழகராய் விளங்குகின்றாராதலின் 'தணிகையில் இணையிலி' என்றும் முருகனை அழைக்கின்றார் போலும். 'புரமெய்த இணையிலி'- சம்பந்தர் I-125-6.

செந்தில், பழநி, தணிகை - இம் மூன்றுமே முருகன் தலங்களுள் பிர பலமாய் அருணகிரியார் காலத்திலும் விளங்கின போலும். இம் மூன்று

## 289

பூங் கொத்துக்களைக் கொண்ட நெடிய குராமரத்தின் அடியிலும், அடியார்களுடைய இதய தாமரையின் நடுவிலும், துறைகள் பல கொண்ட வேதத்தின் சிறந்த உச்சியிலும் வீற்றிருக்கும் குருநாதனே!

கொங்கு நாட்டில் உள்ள அழகு தரும் பழநியில் ஆறுமுகனே! திருச்செந்தூரில் தேவசேனாபதியே! தணி-கையில் இணையிலாதவனே! ஒன்றோடொன்று கொத்திக் 'கா' எனக் கூவும் (காக்கைகள் போல) ஒருவரோ டொருவர் எதிர்த்துப் பேசும்படி வருகின்ற சமய மாறுபாடு கொண்ட

தந்திர மிக்க வாக்கு வாதத்தினர் பெறுதற்கு அரிதானதும், பிறர் எவராலும் சந்திக்க முடியாததும், தனக்கு வேறு ஒப்பானதில்லை எனக் கூறும் தகைமையதாய் வருகின்ற ஒரு குரு பரம்பரையாக வந்த உபதேசம் இது என்று மொழிந்தருளி நறுமணமுள்ள கடம்ப மலர் விளங்குவதும்

---

தலங்கள் கந்தரலங்காரத்திலும், அந்தாதியிலும் பாராட்டப்பட்டுள. [திருப்புகழ்ப் பாடல்கள் *439, 540, 844, 845* பார்க்க] மனம், வாக்கு, காயம் மூன்றாலும் முருகனைப் பணிவதற்கு, **மனத்தால்** திருச்செந்தூரையும் ["செந்தூர் கருது" *(கந்தரந்தாதி - 33)*, செந்திலை உணர்ந் துணர்ந் துணர்வுற *(திருப்புகழ்47)*] **வாக்கால்** பழநியையும் ["படிக்கின்றலை பழநித் திருநாமம் *(கந்தரலங்காரம் - 75)*], **காயத்தால்** தணிகையையும் ['தணிகைக் குமர! நின் தண்டையந்தாள் சூடாத சென்னியும், நாடாத கண்ணும், தொழாதகையும், பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே' - *(கந்தரலங்காரம்-76)*] வணங்குதல் நன்றென உபதேசித்துள்ளார்.

**கொண்டு தானென மொழிதரு அறுசம யவிரோத' என்றும் பாடம். அருணகிரியார் காலத்தில் சமய வாதங்கள் பலமாய் நிகழ்ந்தன போலும்: சமயவாதிகள் செய்யும் கூச்சலை-

"கொந்துகா என மொழிதர வரு சமய விரோத தந்த்ர வாதிகள்" என்ற இப்பாடலிலும், "சாகரம் என முழங்கு வாதிகள்" (திருப்புகழ் *674*) என்றும், "சங்கைக் கத்தோடு (சந்தேகக் கூச்சலோடு), சிலிகிடு... சட்கோல சமயிகள்" *(945)* என்றும், 'கல கல கலெனக் கண்ட பேரொடு சிலுகிடு சமயப் பங்க வாதிகள் கதறிய வெகுசொல்' *(960)* என்றும், பல இடங்களிற் கூறி,

229ம் பக்கம் பார்க்க

சஞ்ச ரீகரி கரமுரல் தமனிய
கிண்கி ணீமுக வித*பத யுகமலர்
தந்த பேரருள் **கனவிலு நனவிலு** **மறவேனே;**

†சிந்து வாரமு மிதழியு மிளநவ
சந்த்ர ரேகையு மரவமு மணிதரு
செஞ்ச டாதரர் திருமக வெனவரு முருகோனே-

செண்ப காடவி யினுமித ணினுமுயர்
சந்த னாடவி யினுமுறை குறமகள்
செம்பொ னூபுர கமலமும் வளையணி புதுவேயும் ;

இந்து வாண்முக வனசமு ம்ருகமத
குங்கு மாசல யுகளமு மதுரித
†இந்த ளாம்ருத வசனமு முறுவலு மபிராம-

§இந்த்ர கோபமு மரகத வடிவமு
**மிந்த்ர சாபமு மிருகுழை யொடுபொரு
மிந்த்ரநீலமு ††மடலிடை யெழுதிய
பெருமாளே. (41)

---

*இது அருணகிரியார் திருவடி தீட்சை பெற்ற வரலாற்று விவரம் கூறுவது; திருவண்ணாமலைப் பதிகத்தில், 'அருணை நகர் மிசை கருணையொ டருளிய பரம ஒரு வசனமும் இருசரணமும் மறவேனே" *(513)* என வருவதைக் காண்க.

† சிந்து வாரம் - நொச்சி. இது சிவபிரான் சூடுவது- "நொச்சியே வன்னி கொன்றை மதி கூவிளம் உச்சியே புனைதல் வேடம் விடை யூர்தியான்" சம்பந்தர் II-*12-2*; வஞ்சி பித்திகம் சிந்து வாரம்" சிந்துவாரம் - கருநொச்சிப்பூ - குறிஞ்சிப் பாட்டு *189* உரை.

‡ வள்ளியின் சொல் - பண் போன்றது. 'பண்கள் தங்கு அடர்ந்த இன்சொல்' 'ரஞ்சிதாம்ருத வசனம்' திருப்புகழ் *96, 97.*

§ இந்த்ர கோபம் - வாய் இதழுக்கு உவமை. 'இந்த்ர கோபம் ஒத்த தொண்டைதுவண்டு அமுதந்தர' திருப்புகழ் *1148.*

** இந்திர சாபம் - நுதல் (நெற்றி), புருவத்துக்கு உவமை 'இந்த்ராதி சிலை தோற்ற நுதல்' (திருப்புகழ் *390*)

*231*ம் பக்கம் பார்க்க.

சஞ்சரி (சஞ்சரீகம்) (வண்டுகள்) கரிகரம் (சுரதலிலையால்) இசைபாடுகின்ற பொன்னாலாய கிண்கிணி முதலிய பலவித அணிகள் உள்ள (அல்லது கிண் கிணி முதலிய அணிந்ததும், இன்பத்தைத் தருவதுமான) திருவடி யிணை மலரை (நீ அடியேனுக்குச்) சூட்டிய பேரருளைக் கனவிலும் மறவேன், நனவிலும் (விழித்திருக்கும் போதும்) மறவேன்-

நொச்சி, கொன்றை, இளமையும் புதுமையும் வாய்ந்த (மூன்றாம் பிறை) ஒளி நிலவு, பாம்பு இவைகளை அணிந்துள்ள சிவந்த சடையைத் தாங்கிய பெருமானுடைய அழகிய குழந்தையெனத் தோன்றிய முருகனே!

செண்பகக் காட்டிலும், (தினைப்புனத்துப்) பரண் மீதும், உயர்ந்த சந்தனக் காட்டிலும் உறைந்த குறமகள் (வள்ளியின்) செம்பொன்னாலாய சிலம்பணிந்த மலரடிகளையும், வளையல்கள் அணிந்த புதுமூங்கில் அனைய தோள்களையும்

சந்திரனை ஒத்த (குளிர்ந்த) ஒளி வீசும் முகமென்னும் தாமரையையும், கஸ்தூரி, குங்குமம் இவை யணிந்த மலையன்ன இரண்டு கொங்கைகளையும், இனிமை இன்பம் தருவதான பண் இந்தளம் (நாத நாமக்கிரியை) போன்ற அமிருத மொழி களையும், பற்களையும், அழகு வாய்ந்த

தம்பலப் பூச்சி போன்ற (சிவந்த)* வாயிதழ்களையும், பச்சை நிறத்தையும் இந்த்ர சாபம் (இந்திரவில் - வானவில்) போன்ற புருவத்தையும், இரண்டு காதணியாம் குழைகளைத் தாக்குகின்ற இந்த்ர நீலம் (நீலோற்பல மலர்) போன்ற கண்களையும் மடலின்கண் எழுதி (மகிழ்ந்த) பெருமாளே!

(பேரருள் கனவிலும் நனவிலும் மறவேனே!)

---

*பவழம் சிந்தியவை போலக் கோபம் தவழும் தகைய புறவு - கார் நாற்பது 5.

227ம் பக்கத் தொடர்ச்சி

அத்தகைய சமய வாதிகளாற் பெற அரியது அந்தப் பேரின்பப் பொருள் என்று இந்தப் பாடலிலும், 'சமய பஞ்ச பாதகர் அறியாத ... சரண புண்டரீகம்" என்று 674-ஆம் பாடலிலும் தெளிவுற அருணகிரியார் விளக்குகின்றனர்.

## 290. தணிகை என்று ஓத

தனன தனனத் தனன தனனத்
தனன தனனத் தனதான

*சொரியு முகிலைப் பதும நிதியைச்
சுரபி தருவைச் சமமாகச்-
சொலியு மனமெட் டனையு நெகிழ்விற்
†சுமட ரருகுற் றியல்வாணர்;
தெரியு மருமைப் பழைய மொழியைத்
‡திருடி நெருடிக் கவிபாடித்-
திரியு மருள்விட் §டுனது **குவளைச்
சிகரி பகரப் பெறுவேனோ;
கரிய புருவச் சிலையும் வளையக்
கடையில் விடமெத் தியநீலக்-

---

*கொடையிற் சிறந்தன:- மேகம், பதும நிதி, காமதேனு, கற்பக விருட்சம் - "தரு கொடையால் - மணி (சிந்தாமணி) மேகராசி, சுரபி அவற்றொடு சங்க கஞ்ச பஞ்ச சாலத்தை வென்றன" (புயவகுப்பு)

† சுமடர் - கீழ்மக்கள்.

‡ "முதுமொழிகளை நாடித் திருடி ஒருபடி நெருடி அறிவிலர் செவியில் நுழைவன கவிபாடித் திரியுமவர் சில புலவர்"-

திருப்புகழ் 395.

§ "உனது புகழைத் தினமு முணரப் பெறுவேனோ' எனவும் பாடம்.

**குவளைச் சிகரி - திருத்தணி. தணிகை என்று ஓதுவதால் வரும் பயன்:-

"தணிகைஎன் றொருகால் ஓதிற் சாலோக பதவி எய்தும்
தணிகைஎன் றிருகால் ஓதிற் சாமீப பதவி சாரும் (செவ்வேள்
தணிகைஎன் றுரைக்கின் முக்கால் சாரூபம் நண்ணும்
தணிகைஎன் றுரைக்கின் நாற்கால் சாயுச்யம் அடைவர் தாமே"
(தணிகைக் கலம்பகம் -39)

## 290

(மழை) சொரிகின்ற மேகத்தையும், பதும நிதியையும், காமதேனுவையும், கற்பக விருட்சத்தையும் (நீ) நிகர்ப்பாய் என்று

சொல்லியும் கூட (புகழ்ந்தாலுங் கூட) மனம் எள்தனையும் (எள்ளளவும்) இளகி இரங்குதல் இல்லாத கீழ் மக்களின் அருகில் (சமீபத்திற்) போய், இயற்றமிழ்ப் புலவர்கள்

தெரிந்து (பாடிய) அருமையான பழம் (பாடல்) மொழிகளைத் திருடியும், திரித்து நுழைத்தும், பாடல்களைப் பாடித்

திரிகின்ற மயக்க அறிவைவிட்டு உன்னுடைய (குவளை-மலர் மலர்கின்ற மலையாம்) **திருத்தணிகை** மலையைக் கூறும்படியான பாக்கியத்தை (நான்) பெறுவேனோ!

கரிய புருவ மென்னும் வில் வளைய (புருவம் காம வேதனையால் வளைந்து சுருங்க), (காமனுடைய ஈற்றுப் பாணம் (ஐந்தாவது பாணமாகிய) விடம் நிறைந்த நீலோற்பலம் என்னும்

---

*228-ம் பக்க தொடர்ச்சி.*

†† மடல் எழுதுதல் - மடல் ஏறுதல் - (திருப்புகழ் 235 பார்க்க.) மடல் எழுதுவதில் - தலைவியின் திருவடி, தோள், முகம், கொங்கை, பல், வாயிதழ், பச்சை நிறம், புருவம், கண் இவை தமை எழுதுவது கூடும்; ஆனால் தலைவியின் வசனம் (மொழியின்பத்தை) எழுதிக் காட்டுதல் அரியதொரு செய்கை யாம்; ஆதலால் நீ தலைவியின் உரையை (வசனத்தை) எவ்வாறு எழுதுவாய் எனத் தலைவனைப் பாங்கி வினைவுகின்றாள்.

"மந்தா கினியணி வேணிப் பிரான் வெங்கை மன்னவ நீ
கொந்தார் குழல்மணி மேகலை நூல் நுட்பங் கொள்வ தெங்ஙன்
சிந்தா மணியுந் திருக் கோவையு மெழுதிக் கொளினும்
நந்தா உரையை எழுத லெவ்வாறு நவின்றருளே" (வெங்கைக்

கோவை 107.) " மென் மொழி அன்ன நடைக்குப் படிச்சந்த மாக்கும் படமுளதோ நும்பரிசகத்தே" திருக்கோவை - 78. அங்ஙனம் எழுதுதற்கு அரிதான வள்ளியின் "இந்தளாம்ருத வசனத்தையும்" எழுதினார் முருகவேள் என்கின்றார் அருணகிரியார். இது முருகன் திறத்தைக் காட்டுகின்றது. அவர் நினைத்த காரியங்கள் எவற்றையும் நிறைவேற்ற வல்லவர். "முருகொத் தீயே முன்னியது முடித்தலின்" (புறநானூறு 56)

கடிய *கணைபட் டுருவ வெருவிக்
கலைகள் பலபட் டனகானிற்;

குரிய குமரிக் கபய மெனநெக்
†குபய சரணத் தினில்வீ ழா-

உழையின் மகளைத் தழுவ மயலுற்
றுருகு முருகப் பெருமாளே. (42)

## 291. கதி பெற

தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன தனதான

தாக்கம ருக்கொரு சாரையை வேறொரு
சாக்ஷிய றப்பசி யாறியை நீறிடு
சாஸ்த்ர வழிக்கதி தூரனை வேர்விழு தவமூழ்குந்-

தாற்பர்ய மற்றுழல் பாவியை நாவலர்
போற்பரி வுற்றுனை யேகரு தாதிகல்
சாற்றுத மிழ்க்குரை ஞாளியை நாள்வரை தடுமாறிப்;

போக்கிட மற்றவ்ரு தாவனை ஞானிகள்
போற்றுத லற்றது ரோகியை மாமருள்
பூத்தம லத்ரய பூரியை நேரிய புலையேனைப்-

போக்கிவி டக்கட னோஅடி யாரொடு
போய்ப்பெறு கைக்கிலை யோகதி யானது
போர்ச்சுடர் வஜ்ரவை வேல்மயி லாவருள் புரிவாயே;

---

*நீலக்கணை - ஐந்தாவதாகிய கடைப் பாணம் (திருப்புகழ் பாட்டு 19; பாட்டு 179 - கீழ்க் குறிப்புக்களைப் பார்க்க.)

†"வள்ளிபதம் பணியும் தணியா அதிமோக தயாபரனே" கந்தர நுபூதி-6. 'வேடிச்சிக்காக மாமயலாகிப் பொற் பாதமே பண்ணி கந்தவேளே." - திருப்புகழ் 343.

கொடுமை வாய்ந்த பாணம் (உன்மேல்) பட்டு உருவ (நீ) அதனால் காமவேதனை மிகுதியாய் அடைந்து அச்சத்துடன் (சென்று), மான்கள் பல உள்ள (அல்லது வேட்டையில் பல அழிந்த) வள்ளிமலைக் காட்டுக்கு-

உரிய குமரியாகிய (வள்ளிக்கு) அபயம் என்று உரைத்து, மனம் நெகிழ்ந்து அவளது இரண்டு பாதங்களிலும் விழுந்து (அந்த)

மான் மகளைத் தழுவ மோகங்கொண்டு உருகி நின்ற முருகப் பெருமாளே!

(உனது குவளைச் சிகரி பகரப் பெறுவேனோ)

# 291

தாக்குகின்ற போர் வந்தால் ஒப்பற்ற சாரைப் பாம்பு போலச் (சீறிப் பாய்பவன்), பிறிதொரு சாட்சி கூட இல்லாமல் மிகவும் எனது பசியையே போக்கிக் கொள்பவன் (தனித்து உண்பவன்), திருநீறு இடுகின்ற நூலின் உபதேச மொழிக்கு வெகு தூரத்தில் உள்ளவன், வேர்பாய்வது போல அழுத்தமான ஆழ்ந்த தவநெறியில் முழுகுவதற்குச் (சிறிதேனும்)

நோக்கம் (கருத்து) (என்பதே) இல்லாமல் திரிகின்ற பாவி, நா வல்ல புலவர்கள்போல அன்பு கொண்டு உன்னைக் கருதாமல், பகை (மூட்டவல்ல) தமிழைக் குலைக்கின்ற நாய், (அல்லது மனிதர்களின் வலிமையைப் புகழ்ந்து பாடும் தமிழ்ப் பாக்கள் பாடிக் குலைக்கின்ற நாய்) நாள்தோறும் (நாள் முழு அளவும்) தடுமாற்றம் கொண்டவனாய் (கலக்கம் உற்றவனாய்)

போய்ச் சேர நல்ல இடம் ஒன்றும் இல்லாத வீணன், ஞானிகளைப் போற்றும் குணமில்லாத துரோகி (பாதகன்), பெரிய மயக்க அறிவு நிரம்பிய (ஆணவம், கர்மம், மாயை எனப்படும்) மும்மலங்களும் நிறைந்தவன், சரியான (முதல் தரமான) கீழ்மகன் (ஆகிய என்னைக்)

கை விடுதல் நீதியோ! அடியார்களோடு போய்ப் பெறும்படியாய் (இந்த எளியனுக்கு) இல்லையா நற்கதி! போரில் வல்லதும், ஒளி வீசுகின்றதும், வயிரம் போல் திண்மை கொண்டதும், கூர்மை கொண்டதுமான வேலாயுதத்தை உடைய மயில் வாகனனே! அருள்புரிவாயாக.

*முக்கறை மட்டைம காபல†காரணி
சூர்ப்பந கைப்படு மூளியு தாசனி
மூர்க்க குலத்திவி பீஷணர் சோதரி முழுமோடி-

மூத்தவ ரக்கனி ராவண னோடியல்
பேற்றிவி டக்கம லாலய சீதையை
மோட்டன் வளைத்தொரு தேர்மிசை யேகொடு
முகிலேபோய்;

மாக்கன சித்திர கோபுர நீள்படை
வீட்டிலி ருத்திய நாளவன் வேரற
மார்க்கமு டித்தவி லாளிகள் நாயகன் மருகோனே-

வாச்சிய மத்தள பேரிகை போல்மறை
வாழ்த்தம லர்க்கழு நீர்தரு நீள்சுனை
வாய்த்த**திருத்தணி** மாமலை மேவிய
பெருமாளே. (43)

---

*இந்தப் பாடலின் 5-6-7 அடிகள் ராமாயண விசயத்தைச் சுருக்கிக் கூறுகின்றன. இராவணன் தங்கை சூர்ப்பணகை ராமரைக் கண்டு காதல் கொண்டு தன்னை மணஞ்செய்யுமாறு வேண்ட, அவர் உடன்படாமையால் அவள் கோபித்துச் சீதையை எடுத்துச் செல்ல முயன்றாள். அது கண்ட இலக்குமணர் சூர்ப்பணகையின் மூக்கு, முலைக்கண்கள், காதுகளை அறுத்துத் துரத்தினார். அவள் அழுது கொண்டு போய் ராவணனிடத்தில் சீதையின் அழகை யெல்லாம் அவனுக்குக் காதல் விளையுமாறு பலவாறு வர்ணித்து, அவனுக்காகத் தான் சீதையை எடுத்துவர முயன்றதாகவும் அப்போது ராமன் தம்பி தன்னை அவ்வாறு பங்கப்படுத்தினதாகவும் கூறி 'நீ போய் அவளைக் கவர்ந்து வா' எனத் தூண்டி விட்டனள்.

"பூமாண் குழலாள்தனை வவ்வுதி போதி" என்றாள் (கம்பராமா. மாரீசன் வதை 153) அங்ஙனமே, ராவணன் சீதையைக் கவர்ந்து வந்து தனது இலங்கையில் அசோக வனத்தில் ராட்சத மாதர்களின் காவலிற் சிறை வைத்தான். பின்னர் ஸ்ரீ ராமர் ராவணனுடன் போர் செய்து அவனை மடிவித்துச் சீதையைச் சிறையினின்றும் மீட்டார்.

அடுத்த பக்கம் பார்க்க.

மூக்கு அறுபட்டவள், பயனற்றவள், மகா பலத்தை உடையவள், (போருக்கே மூல) காரணமா யிருந்தவள், சூர்ப்பநகை என்னும் பேருடையாள். படுமூளி (மிகவும் காது, மூக்கு முதலிய உறுப்புக்கள் குறைந்தவள்), கொடியவள், நெருப்புப் போன்றவள், மூர்க்க குலமான அரக்கர் குலத்தைச் சார்ந்தவள். விபீடணரின் சகோதரி, முழு வஞ்சகி (அல்லது வனக்காளி போன்றவள்)

(தனக்கு) மூத்தவனான அரக்கன் இராவணனோடு சீதையின் வரலாறு, அழகு முதலியவற்றை எடுத்துக் கூறி அவனுக்குக் காமத்தை மூட்டிவிட, தாமரைக் கோயிலில் வீற்றிருக்கும் இலக்குமி தேவியாம் சீதையை (அந்த) மோட்டன் (மூர்க்கன்) சூழ்ச்சியாற் கவர்ந்து ஒரு தேரின்மேல் ஏற்றிக்கொண்டு ஆகாய வழியாகச் சென்று

சிறந்த பெருமையும் அழகும் வாய்ந்த கோபுரங்கள் விளங்கும் தனது ராஜதானியாகிய இலங்கை நகரில் (சிறை) இருத்திக் காவல் வைத்த பொழுது, அவன் (குலம்) வேர் அறும்படியான வழியை எடுத்து முடித்த வில்லாளிகளின் (விற்போர் வல்ல வீரர்களின்) தலைவனாகிய ஸ்ரீ ராமபிரானது (திருமாலின்) மருகனே!

வாத்தியங்களாம் மத்தளம், பேரிகை இவைகளின் ஒலிபோல மறை (வேத மொழி) கூறி வாழ்த்தத், திருத்தணி மாமலை மேவிய பெருமாளே! மலருள் கழுநீர் மலரை (செங்கழுநீர் மலரைத்) தருகின்ற நீண்ட சுனை உள்ள திருத்தணி மாமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அருள் புரிவாயே)

---

† காரணி - சங்காரகாரி - ஹாரணி என்னும் வடமொழி காரணி என நின்றது என்பர் ஆசிரியர் - மு. திருவிளங்கம் அவர்கள்.

## 292. அருள் பெற

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தனனத் தனதான

துப்பா ரப்பா டற்றீ மொய்க்கால்
சொற்பா வெளிமுக் குணமோகம்-
துற்றா யப்பீ றற்றோ லிட்டே
சுற்றா மதனப் பிணிதோயும்;
இப்பா வக்கா யத்தா சைப்பா
*டெற்றே யுலகிற் பிறவாதே-
†எத்தார் வித்தா ரத்தே கிட்டா
எட்டா **அருளைத்** **தரவேணும்;**
தப்பா மற்பா டிச்சே விப்பார்
தத்தாம் வினையைக் களைவோனே!
தற்கா ழிச்சூர் செற்றாய் மெய்ப்போ
தத்தாய் **தணிகைத்** தனிவேலா;
அப்பா கைப்பா லைப்போல் சொற்கா
வற்பா வைதனத் தணைவோனே!
அத்தா நித்தா முத்தா ‡சித்தா
அப்பா குமரப் பெருமாளே (44)

---

*எற்றே - ஏற்றே. † எத்தார் ஏத்தார்.

‡ சித்தன் - 'சித்தன் என்பது பிள்ளையாருக்குத் திருநாமம்' திருமுருகாற் - உரை -176. (பிள்ளையார் என்றது முருகனை). சித்தன் முருகக் கடவுளின் ஆயிர நாமத்துள் ஒன்று.

## 292

(உணவு தரும்) பார் (மண்), அப்பு (நீர்), ஆடல் தீ. (அசைகின்ற நெருப்பு), மொய் (நெருங்கி வீசும்) கால் (காற்று ), சொல்லப்படுகின்ற (புகழப்படுகின்றதும்), பா (பரப்பு உள்ளதுமான) வெளி (ஆகாயம்), - ஆகப் பஞ்ச பூதங்கள், (சத்துவம், இராசதம், தாமதம் எனப்படும்) முக் குணங்கள் ஆசைகள் (மண், பெண், பொன் என்னும் மூவாசைகள்)- இவைகள்

நெருக்கமாக வைக்கப்பட்டுள்ளதும், கிழிந்த தோலிட்டு சுற்றி மேயப்பட்டதும், காம நோய் தோய்ந்துள்ளதுமான

இந்த பாவத்துக்கு ஈடான உடலின் மேல் ஆசைப்படுதலை மேற்கொண்டு உலகில் (மேலும் மேலும்) நான் பிறவாமல்- ன

உன்னை ஏத்தாதாருடைய (பக்தி செய்யாதவர்களுடைய) கல்வி சாமர்த்தியத்துக்குக் கிட்டாததும், எட்டாததுமான (உனது) திருவருளை (எனக்குத்) **தரவேணும்;**

தவறாது (உன்னைப்) பாடித் தொழுபவர் யார் யாரோ அவருடைய வினையைப் போக்குபவனே!

தற்கு (செருக்கும்), ஆழி (ஆக்ஞாசக்கரமும்) கொண்ட சூரனை அழித்தவனே! மெய்ஞ்ஞான மூர்த்தியே! **தணிகையில்** (வீற்றிருக்கும்) ஒப்பற்ற வேலனே!

அந்த சர்க்கரை வெல்லத்தையும், பாலையும் ஒத்த சொற்களை உடைய (தினை) காவல் பூண்ட பெண் (வள்ளியின்) கொங்கையை அணைந்தவனே!

அத்தனே (உயர்ந்தோனே)! நித்தனே (என்றும் அழியாதவனே)! முத்தனே (இயல்பாகவே பாசங்களில் நீங்கியவனே) சித்தனே (சித்து மூர்த்தியே)! அப்பா! குமரப் பெருமாளே!

(அருளைத் தரவேணும்)

## 293. ஓதிப் பிழைக்க

*தனதான தனத்தன தான தனதான தனத்தன தான*
*தனதான தனத்தன தான தனதான*

*நிலையாத சமுத்திர மான சமுசார துறைக்கணின் மூழ்கி*
*நிசமான தெனப்பல பேசி யதனூடே-*

*நெடுநாளு முழைப்புள தாகி பெரியோர்க ளிடைக்கரவாகி*
*நினைவால்நி னடித்தொழில் பேணி துதியாமல்;*

*தலையான வுடற்பிணி யூறி பவநோயி னலைப்பல வேகி*
*சலமான பயித்திய மாகி தடுமாறித்-*

*தவியாமல் பிறப்பையு நாடி யதுவேரை யறுத்துனை யோதி*
*தலமீதில்* **பிழைத்திட வேநி னருள்தாராய்;**

*கலியாண சுபுத்திர னாக குறமாது தனக்குவி நோத*
*கவினாரு* புயத்திலு லாவி விளையாடிக்-*

*களிகூரு முனைத்துணை தேடு மடியேனை சுகப்பட வேவை*
*கடனாகு மிதுக்கன மாகு முருகோனே;*

*பலகாலு முனைத்தொழுவோர்கள் மறவாமல் திருப்புகழ் கூறி*
*படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே-*

*பதியான* **திருத்தணி** *மேவு சிவலோக மெனப்பரி வேறு*
*பவரோக வயித்திய நாத பெருமாளே.* (45)

---

*புயத்தில் உலாவுதல் - புயத்தை அணைத்துத் திளைத்தல்"திருமகள் உலாவும் இருபுய முராரி" (திருப்புகழ் 418) "புன மேவிய தனிமானின் தோளுடன் ஆடிய.. தலைவா" (திருப்புகழ் 677).

நிலை காண முடியாத சமுத்திரம் இது என்று சொல்லத்தக்க சமுசாரம் என்கின்ற நீர்த்துறையில் முழுகி, உண்மை பேசுகின்றேன் எனக் கூறிப் பலவும் பேசி - அத்தகைய வாழ்வில்-

பலநாள் உழைப்பு உள்ளதாகி (உழைத்து), பெரியோர்கள் உள்ள இடத்திற் (கலவாது) மறைந்து (ஒளித்து), (உண்மை) நினைப்புடனே உனது திருவடிக்கு உண்டான (திருப்) பணிகளை விரும்பிப் போற்றி செய்யாது (அன்புடனே பாராட்டாமலும், செய்யாமலும்)

மிகப் பலமான உடல் நோய்களில் ஊறி, பிறவி நோய் என்கின்ற அலைச்சல் பலவற்றையும் அநுபவித்துக், கோபம் கொண்ட பயித்தியக்காரனாகித் தடுமாற்றங் கொண்டு

தவியாமலும், (நமக்குப்) பிறப்பு ஏன் வந்தது என அதன் மூலகாரணத்தை ஆய்ந்து, அந்தப் பிறப்பின் வேரை (வேராகிய ஆசையை) அறுத்து, உன்னைப் புகழ்ந்து ஓதி, இப்பூமியில் நான் பிழைத்து வாழுமாறு உனது திருவருளைத் தந்தருளுக.

கலியாண மாப்பிள்ளையாக, குறமாது வள்ளிக்கு அற்புதமாய் வாய்த்து அவளுடைய அழகு நிறைந்த புயங்களை அணைத்துத் திளைத்து விளையாடி-

மகிழ்ச்சி கொள்ளும் உன்னை (எனக்கு உற்ற) துணையாகத் தேடுகின்ற அடியேனைச் சுகப்படுமாறு வைத்தருளுக! இது உனக்குக் கடமையாகும், இது பெருமையும் ஆகும் முருகனே!

பல முறையும் உன்னைத் தொழுபவர்கள் மறவாது (உனது) திருப்புகழையே கூறி (இந்தப் பூமியில் (உன்னைத்) துதி செய்திருந்து வாழ்வதற்கு அருளும் (செவ்)வேளே! (அல்லது, வாழ்வதற்கு அருள் புரிவாயாக (செவ்) வேளே!

தலமாகிய (உனது) **திருத்தணி**, (யாவரும்) விரும்பும் சிவலோகமே ஆகும் என்று (அல்லது நீ வாழும் சிவலோகமே என்று), அத்தலத்தின் மீது ஆசை கொள்ளும் பெருமாளே! பிறப்பு நோய் (அணுகாவகைக்கு) வயித்தியம் (செய்யவல்ல) தலைவனே! பெருமாளே!

(தல மீதில் பிழைத்திடவே நின் அருள் தாராய்)

## 294. அறிவு பெற

தனத்த தத்ததனத் தனதான

நினைத்த தெத்தனையிற் றவறாமல்-
நிலைத்தபுத்திதனைப் பிரியாமற்-
கனத்த *தத்துவமுற் றழியாமற்-
கதித்த நித்தியசித் தருள்வாயே;
மனித்தர் பத்தர்தமக் கெளியோனே-
மதித்த முத்தமிழிற் பெரியோனே;
செனித்த புத்திரரிற் சிறியோனே-
திருத்தணிப்பதியிற் பெருமாளே. (46)

## 295. பெரியோரை மதிக்க

தனன தானனம் தனன தானனம்
தனன தானனம் தனதான

பகலி ராவினுங் கருவி யாலனம்
பருகி †யாவிகொண் டுடல்பேணிப்-
பழைய வேதமும் புதிய நூல்களும்
‡பலபு ராணமுஞ் சிலவோதி;

---

*தத்துவங்கள் 36 (பாட்டு 157) அசுத்ததத்துவம் 24; சுத்த தத்துவம் 5; சுத்தா சுத்த தத்துவம் 7 - ஆக 36 மூலப் பொருள்கள்; இவை தமைக் கடந்தால் - பேரின்ப நிலை.

" ஆறாறையும் நீத்து அதன் மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா றுளதோ" (கந் அநுபூதி)

ஆறா றுக் கப்பால் அரன் இனிதாமே (திருமந்திரம் 2271).

†ஆவி கொண்டு உடல் பேணி - உயிரை வளர்க்க உடலை வளர்க்க வேண்டும். 'உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' (திருமந்திரம் 724.)
‡நூல்கள் சில கற்றோரிடம் மதிப்பு வைக்க வேண்டும் - (பாடல் 224.)-

## 294

நினைத்தது எந்த அளவும் தவறாமல் இருக்கவும் (நினைத்தவை எல்லாம் நினைத்த படியே கை கூடவும்)

நிலையான புத்தியை விட்டு நான் பிரியாமலிருக்கவும் (என் புத்தி எப்போதும் ஒருவழிப்பட்டு நிலைத்திருக்கவும்)

பெருமை வாய்ந்த உண்மையை (நான்) உணர்ந்து அதன் பயனாக, (அல்லது முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த நிலையை உற்று அதனால்), அழிவிலாது

தோன்றக் கூடிய (உண்டாகக் கூடிய) சாசுவதமான அறிவை அளித்தருளுவாயாக.

*மனிதர்களுக்குள் பக்தர்களுக்கு எளியவனே!*

*மதிக்கப்படும் முத்தமிழ் (அறிவிற்) பெரியவனே!*

*தோன்றிய (சிவ) குமாரர்களுள் சிறியவனே (இளையவனே)!*

*திருத்தணிப் பதியிற் பெருமாளே!*

*(நித்திய சித்து அருள்வாயே)*

## 295

பகலிலும் இரவிலும் (உடல் என்னும்) கருவியால் அன்னம் (உணவு) பருகி (உண்டு), ஆவி கொண்டு (உயிரை ஓம்பி) உடலை விரும்பி வளர்த்து-

பழைய வேத நூல்களையும், புதிய (நல்ல) நூல்களையும் பலவகையான புராணங்களையும் ஒருவாறு (சிலவற்றை) ஓதி (உணர்ந்து)

*அகல நீளமென் றளவு கூறரும்
பொருளி லேயமைந் தடைவோரை-

அசடர் மூகரென் றவல மேமொழிந்
தறிவி லேனழிந் திடலாமோ;

சகல லோகமும் புகல நாடொறுஞ்
†சறுகி லாதசெங் கழுநீருந்-

தளவு நீபமும் புனையு மார்பதென்
தணிகை மேவுசெங் கதிர்வேலா;

சிகர பூதரந் தகர நான்முகன்
சிறுகு வாசவன் சிறைமீளத்-

திமிர சாகரங் கதற மாமரஞ்
சிதற வேல்விடும் பெருமாளே.(47)

## 296. திருவடியிற் சேர

தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன தனதான

பழமை செப்பிய ழைத்தித ‡மித்துடன்
முறைம சக்கிய ணைத்துந கக்குறி
படஅ ழுத்திமு கத்தைமு கத்துற வுறவாடிப்-

பதறி யெச்சிலை யிட்டு§ம ருத்திடு
விரவு குத்திர வித்தைவி ளைப்பவர்
பலவி தத்திலு மற்பரெ னச்சொலு மடமாதர்;

---

*அகல நீளம் அளவு கூறரும் பொருள் - திருப்புகழ் 1046 பார்க்க.

†சறுகிலாத கழுநீர் - 'கடவுள் நீலம் மாறாத தணிகை' என்புழிப் போல - பாட்டு 272.

‡மித்துடன் - மித்தையுடன். இதம் - இத்துடன் என்றுமாம்.

§ மருத்திடுதல் - மருந்திடுதல் - பாட்டு 230

அகலம், நீளம் என்ற ஓர் அளவு சொல்லுதற்கு இயலாத (பேரின்பப்) பொருளில் (மனம்) அமைந்து (அப்பொருளை) அடைய வல்லோரை

அசடர் என்றும் (மூடர் என்றும்), மூகர் என்றும் (ஊமையர் என்றும்), வீண் பேச்சுக்களைப் பேசி (துன்பந்தரும் பேச்சுக்களைப் பேசி), அறிவிலியாகிய நான் அழிந்து போகலாமா!

எல்லா உலகங்களும் புகழும்படி நாள் தோறும் மலர்தல் தவறாத செங்கழுநீரும்,

முல்லையும், கடம்பும் அணிகின்ற (திரு) மார்பனே! அழகிய தணிகையில் வீற்றிருக்கும் (அல்லது தணிகையை விரும்பும்) செவ்விய ஒளி வாய்ந்த வேலனே!

சிகரங்களை உடைய மலையாகிய (கிரௌஞ்சம்) பொடி யாகவும், பிரமனும், (தன் உயர்ந்த நிலை) தாழ்வுபட்ட இந்திரனும் சிறையினின்றும் மீட்சி பெறவும்.

இருண்ட கடல் கதறி ஒலிக்கவும், (அதன் நடுவில் நின்ற) மாமரம் (சூரன்) சிதறுண்டு பிளவு படவும் வேலாயுதத்தைச் செலுத்தின பெருமாளே!

(அறிவிலேன் அழிந்திடலாமோ)

## 296

பழைய உறவை எடுத்துக் கூறி அழைத்து, இன்பமும் பொய்யும் கலந்து (அல்லது இன்பமும் இதனுடன்), (அத்தான், மாமா) என முறை வைத்துக் கூறி மயங்கச் செய்து, அணைத்து, நகக்குறி உடலிலே படும்படி அழுத்தி, முகத்தை முகத்தோடு வைத்து உறவாடி-

முன் யோசனை யின்றி அவசரப்பட்டு - பதைபதைத்து எச்சில் கூடிய மருந்தை ஊட்டி, கலந்த வஞ்சக தந்திரச் செயல்களை (வஞ்சகம் கலந்த தந்திரச் செயல்களை)ச் செய்பவர்கள், பல வகைகளிலும் அற்பர் எனச் சொலத்தக்க மடமாதர்கள் (அறிவிலா மாதர்களுடன்)

அழிதொ ழிற்குவி ருப்பொடு நத்திய
அசட னைப்பழி யுற்றஅ வத்தனை
அடைவு கெட்டபு ரட்டனை முட்டனை அடியேனை-

அகில சத்தியு *மெட்டுறு சித்தியு
மெளிதெ னப்பெரு வெட்டவெ ளிப்படு
மருண **பொற்பத முற்றிட வைப்பது** **மொருநாளே;**

†குழிவி ழிப்பெரு நெட்டல கைத்திரள்
கரண மிட்டுந டித்தமி தப்படு
‡குலிலி யிட்டக ளத்திலெ திர்த்திடு மொருசூரன்-

குருதி கக்கிய திர்த்துவி ழப்பொரு
நிசிச ரப்படை பொட்டெழ விக்ரம
குலிச சத்தியை விட்டருள் கெர்ச்சித மயில்வீரா;

§தழையு டுத்தகு றத்திப தத்துணை
வருடி வட்டமு கத்தில தக்குறி
தடவி வெற்றிக தித்தமு லைக்குவ டதன்மீதே-

---

*எட்டுறு சித்தி - அட்ட சித்திகள். அவைதாம் :-

(1) அணிமா - அணுப்போல சிறிய உருவாகும் ஆற்றல்.

(2) மகிமா - இஷ்டம்போல உருவத்தைப் பெரிதாக்கும் ஆற்றல். (3) கரிமா - மிகக் கனமாம் ஆற்றல் (இரும்பு மலையினுங் கனத்தல்); (4) லகிமா - கனமின்மை யாகும் ஆற்றல் (பஞ்சினும் நொய்தாதல்); (5) பிராத்தி - விரும்பியதை அடைதலாகிய பெரும்பேறு; (6) பிராகாமியம் - நினைத்த போக மெல்லாம் பெறுவது (ஏக காலத்திற் பெண்கள் பல ரொடும் இன்பம் அனுபவிக்கும் ஆற்றல்); (7) ஈசத்துவம் - யாவர்க்கும் தேவனாகுதல்; (8) வசித்துவம் - எல்லாவற்றையும் தன் வசமாக்கும் ஆற்றல்.

† பேய்களுக்குக் குழிவிழி :- 'பறைக்காட்டும் குழிவிழி கண் பல்பேய்' - அப்பர் VI-51-7.

‡ குலிலி - வீராவேச ஒலி.

§ தழை யுடுத்த குறத்தி - "தழை - ஒரு வகை உடை; அஃது ஆம்பல் முதலிய மலர்களினாலேனும், தளிர்களினாலேனும் விரவிய இவ்விரண்டி-னாலேனும் ஆக்கப்படுவது."

- புறநானூறு செய்யுள் 61, 116, 248.

அழிந்து போம் தொழில்களில் விருப்பத்துடன் ஆசைப்படும் முட்டாள், பழிக்கு ஆளான வீணன், தகுதியில்லாத (புகலிடம் இல்லாத) பொய்யன், மூடன் - ஆகிய அடியேனை

சகல சக்தியும், அட்ட சித்திகளும், எளிதிற் கிட்டும்படி பெரிய வெட்ட வெளியில் தோன்றும் உனது சிவந்த அழகிய பாதங்களை நான் சேரும்படியாக (நீ) வைக்கும் ஒரு (பாக்கிய) நாள் எனக்குக் கிடைக்குமா!

குழிந்த விழிகளைக் கொண்ட பெரிய நீண்ட பேய்க் கூட்டங்கள் கூத்தாடி நடித்து, அமிதப்படு - மிதமற்ற (அளவிலாத) வீராவேச ஒலி செய்த போர்க்களத்தில் எதிர்த்து வந்த ஒப்பற்ற சூரன்-

ரத்தத்தைக் கக்கி அதிர்ச்சியுடன் விழும்படியும் போர் புரிந்த அசுரசேனைகள் பொடிபட்டழியவும் பராக்ரமம் பொருந்திய குலிசப் படையை (வஜ்ராயுதம் போன்ற படையைச்) செலுத்தின வீரனே! பேரொலி செய்யும் மயில் வீரனே!

தழைகளையே உடையாகக் கொண்ட குறத்தி (வள்ளியின்) பாதமிரண்டையும் வருடியும் (கால் பிடித்தும்), அவளது வட்டமாகவுள்ள முகத்தில் பொட்டு அடையாளத்தை வைத்தும், வெளித் தோன்றும் கொங்கை மலைகளின் மேல்-

---

"சிறு வெள்ளாம்பல்...தழையாயினவே" புறநா - 248.

"ஆம்பலோ டார்தழை தைஇ" அகநா-20, 176.

"மரா அத்த வாலிணர் இடை இடுபு சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை" முருகாற் -201-3.

இந்தத் திருப்புகழின் 7-8 அடிகள் -அகப்பொருளில் - 'அணி திருத்தல்' என்னும் துறை; 'ஏற்புற அணிதல்' என்னலுமாம்.

தலைமகளுடன் கலவியின் மகிழ்ந்தபின் தலைவன் கலவியிற் கலைந்த அவளுடைய அணிகளைத் திருத்துதல்.

"ஒளிர் நுதல் தைவந்து, மின் பருமந் தழையப் பயிற்றிப் பதநூபுரந் திருத்தி, அருமந்த மெய் முழுதுந் தொட என்னோ அருந்தவமே" - தணிகைப்புராணம் - களவுப்படலம் - 186.

"இளங்கொடியே! தேசம் புகழும் கலிங்கமும் காஞ்சியும் சேரக் கட்டி, நேசந்தரப், பணி யாவுந் திருத்தினன் நேர் பெறவே" (கலிங்கம் - உடை; காஞ்சி - ஒருவகை மேகலை) சிராமலைக் கோவை - 23.

247-ம் பக்கம் பார்க்க.

*தரள பொற்பணி கச்சுவி சித்திரு
குறைத்தி ருத்திய ருத்திமி குத்திடு
**தணிமலைச்**சிக ரத்திடை யுற்றருள் பெருமாளே. (48)

## 297. திருவடியைத் துதிக்க

தனதன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதான

புருவ நெறித்துக் குறுவெயர் வுற்றுப்
புளகித வட்டத் தனமானார்-
பொருவிழி யிற்பட் டவரொடு கட்டிப்
புரளு மசட்டுப் புலையேனைக்;
கருவழி யுற்றுக் குருமொழி யற்றுக்
கதிதனை விட்டிட் டிடுதீயக்-
கயவனை வெற்றிப் புகழ்திகழ் பத்மக்
**கழல்கள் துதிக்கக்** கருதாதோ;
செருவசு ரப்பொய்க் குலமது கெட்டுத்
திரைகட லுட்கப் பொரும்வேலா-
தினைவன முற்றுக் குறவர் மடப்†பைக்
கொடிதன வெற்பைப் புணர்மார்பா;
பெருகிய நித்தச் சிறுபறை ‡கொட்டிப்
§பெரிகை முழக்கப் புவிமீதே-
ப்ரபலமுள் சுத்தத் **தணிமலை** யுற்றுப்
ப்ரியமிகு சொக்கப் பெருமாளே. (49)

---

*'சதிர்பெ றத்தமு விப்புணர் வித்தக
முநிவர் சித்தர் கணத்தர் துதித்திடு
தலைமை பெற்றரு ணைப்பதி யிற்றிகழ் பெருமாளே'

என்றும் பாடம்.

† பைக்கொடி - பைங்கொடி. ‡'கொட்டப், பெருகிய சத்தப் புவியோனே - பிணமலை வைத்துக் கணமலை சுற்றப் பிசினரு யுத்தப் பெருமாளே' என்றும் பாடம். § பெரிகை - பேரிகை.

முத்தாலாகிய அழகிய ஆபரணங்களையும், ரவிக்கை-யையும் அணிவித்தும், (கழன்றிருந்த) இரண்டு குழைகளையும் பொருந்த இடம் பெற வைத்தும், காதல் பெருகும் பெருமாளே! தணிமலை உச்சியில் வீற்றிருந்தருளும் பெருமாளே!

(பொற்பதம் உற்றிட வைப்பதும் ஒருநாளே!)

## 297

புருவத்தை நெறித்து, சிறு வெயர்வை உற்று புளகிதங் கொண்ட வட்ட வடிவுள்ள கொங்கையை உடைய (பொது) மாதர்களின்-

பூசலிடும் கண்களின் (மாயையிற்) பட்டு, அவர்களோடு கட்டிப் புரளுகின்ற அசடனும் இழிந்தவனுமான எனக்கு-

கருவில் விழும் வழியிலேயே பொருந்தி, குருமொழியைக் கைவிட்டு, நற்கதி அடைதலை விட்டிடுகின்ற கொடிய-

கீழ் மகனான எனக்கு - உனது வெற்றியும், புகழும் விளங்குகின்ற தாமரைத் திருவடிகளைத் துதிக்கும் கருத்துத் தோன்றுதலாகாதா - (தோன்றக் கூடாதா)!

போர் செய்யும் அசுரர்களுடைய பொய் வாழ்க்கைக் குலம் அழியவும், அலைகடல் அஞ்சவும் பொருத வேலாயுதனே!

(வள்ளிமலைத்) தினைவனத்தை அடைந்து (அங்கே) குறவர் மடக்கொடி, பைங்கொடி (வள்ளியின்) கொங்கை மலையை அணைந்த மார்பனே!

பெருகி ஒலிக்கின்ற - தினந்தோறும் (ஒலிக்கின்ற) - சிறிய பறை கொட்டி முழக்க, பேரிகை முழக்கப் பூமியில்-

பிரதாபம் (புகழ்) கொண்ட பரிசுத்தத் தலமாம் **தணிகை மலையில்** வீற்றிருந்து (அம்மலையின் மீது) பிரியம் மிகக் கொண்டுள்ள அழகு வாய்ந்த பெருமாளே!

(என் உள்ளம் உனது கழல்கள் துதிக்கக் கருதாதோ)

---

*முருகவேளுக்குத் தணிகை - மிகப் ப்ரீதியான மலை - (பாட்டு 268 பார்க்க).

245ம் பக்கத் தொடர்ச்சி

" அலர்த் தொடையே, கலையே, வளையே, அணியே, பழம்படியே அணிந்தேன், அமுதே, எனது மணியே, என் கண்ணின் மணியே! திருவாரூர்க் கோவை 24.

## 298. பாதம் போற்ற

தானனத் தத்த தத்த தானனத் தத்த தத்த
தானனத் தத்த தத்த தனதான

பூசலிட் டுச்ச ரத்தை நேர்கழித் துப்பெ ருத்த
போர்விடத் தைக்கெ டுத்து வடிகூர்வாள்-

போலமுட் டிக்கு ழைக்கு ளோடிவெட் டித்தொ ளைத்து
போகமிக் கப்ப ரிக்கும் விழியார்மேல்;

ஆசைவைத் துக்க லக்க மோகமுற் றுத்து யர்க்கு
ளாகிமெத் தக்க ளைத்து ளழியாமே-

ஆரணத் துக்க ணத்து ளாண்மலர்ப் பொற்ப தத்தை
யான்வழுத் திச்சு கிக்க அருள்வாயே;

வாசமுற் றுத்த ழைத்த தாளிணைப் பத்த *ரத்த
மாதர்கட் கட்சி றைக்கு ளழியாமே-

வாழ்வுறப் புக்கி ரத்ன ரேகையொக் கச்சி றக்கு
மாமயிற் பொற்க ழுத்தில் வரும்வீரா;

வீசுமுத் துத்தெ றிக்க வோலைபுக் குற்றி ருக்கும்
வீறுடைப் பொற்கு றத்தி கணவோனே-

வேலெடுத் துக்க ரத்தி †னீலவெற் பிற்ற ழைத்த
வேளெனச் சொற்க ருத்தர் பெருமாளே.(50)

---

*அத்த மாதர்கள் - பொருட் பெண்டிராகிய வேசிகள்

† நீல வெற்பு - திருத்தணி

## 298

போர் புரிவது போல் அமைந்து, அம்பைத் (தனது) கூர்மைக்கு முன் நேர் நிற்க முடியாது வெருட்டித் தள்ளி, மிகுதியானதும் செறிந்து நெருங்கி வந்ததுமான (ஆலகால) விடத்தை வென்று அழித்து, மிகக் கூர்மை கொண்ட வாள்-

போலத் தாக்கிக் காதிலுள்ள குழைக்குள் ஓடிப் (பாய்ந்து), (கண்டவர் தம் உயிரை) வெட்டி (உடலைத்) தொளைத்துப். போக இன்பத்தைத் தன்னிடம் நிரம்பத் தாங்குகின்ற (கொண்டுள்ள) கண்ணை உடைய பொது மகளிர் மேல்-

ஆசை வைத்து, உள்ளத்தைக் கலக்கும் மோகத்தைக் கொண்டு, அதனால் துயரத்துக்கு உள்ளாகி, மிகவும் களைத்து, உள்ளம் குலையாமல் (அழியாமல்)

வேதத்தின்கண் (வேதங்களில்) விரும்பிப் போற்றப் படுகின்ற உனது புது மலர் அணிந்துள்ள அழகிய திருவடியை நான் போற்றிச் சுகம்பெற அருள்புரிவாயாக!

(மலர்களின்) நறுமணம் கொண்டு விளங்குகின்ற உனது இணையடிகளைப் பற்றிய பக்தர்கள் - பொருட் பெண்டிராகிய வேசைகளின் கண் எனும் சிறைச்சாலையில் அடைபட்டு அழியாமல்-

நல்வாழ்வை அடையும் பொருட்டு - அந்தப் பக்தர்களை ஆளும் பொருட்டுப், புறப்பட்டு ரத்ன ரேகைகள் (வரிகள்) போலப் பிரகாசிக்கும் நிறம் கொண்ட மயிலின் அழகிய கழுத்தில் வரும் வீரனே!

ஒளி வீசும் முத்துக்கள் சிதறுண்ண, ஓலையாலாய பரண்மீது புகுந்து வீற்றிருக்கும், பெருமை வாய்ந்த அழகிய குறத்தி (வள்ளியின்) கணவனே!

வேல் கொண்டு கையில் (கையில் வேலாயுதத்துடனே) நீலோற்பலம் மலர்கின்ற **தணிகை** மலையில் மகிழ்ந்து வீற்றிருக்கும் செவ்வேள் எனக் கூறிப் புகழும் கருத்துள்ள அடியார்கள் தம் பெருமாளே!

(பொற் பதத்தை யான் வழுத்திச் சுகிக்க அருள்வாயே)

## 299. (அகப்பொருள்) மாலையைப் பெற

*தனனத் தந்ததனத் தனனத் தந்ததனத்*
*தனனத் தந்ததனத் தனதான*

*பொருவிக் கந்தொடடர்ச் *செருவிக் கன்றொடுமிப்*
*புதுமைப் †புண்டரிகக் கணையாலே-*

*புளகக் கொங்கையிடத் திளகக் ‡கொங்கையனற்*
*பொழியத் தென்றல்துரக் குதலாலே;*

*தெருவிற் பெண்கள்மிகக் கறுவிச் சண்டையிடத்*
*திரியத் திங்களுதிப் பதனாலே-*

*செயலற் றிங்கணையிற் றுயிலற் றஞ்சியயர்த்*
*தெரிவைக் **குன்குரவைத்** **தரவேணும்;***

*§அருவிக் குன்றடையப் பரவிச் செந்திணைவித்*
*தருமைக் குன்றவருக் கெளியோனே-*

*அசுரர்க் கங்கயல்பட் டமரர்க் கண்டமளித்*
*தயில்கைக் கொண்டதிறற் குமரேசா;*

*தருவைக் கும்பதியிற் றிருவைச் சென்றணுகித்*
*தழுவிக் கொண்டபுயத் திருமார்பா-*

*தரளச் சங்குவயற் றிரளிற் றங்குதிருத்*
***தணிகைச்** செங்கழநிப் பெருமாளே.* (51)

---

*செரு இக்கன் தொடும் எனப் பிரிக்க; இக்கன் - கரும்பு வில்லையுடைய மன்மதன்.

† புண்டரிகக் கணை - தாமரைப் பாணம். காம நினைப்பை ஊட்டும் முதற் பாணம் (பாட்டு 19.)

‡ கொங்கு - பூந்தாது.

§ அருவித்துறை யெலாம் தேடிப் பரவியது - "சுனையோ டருவித் துறையோடு பசுந் தினையோ டிதணோடு திரிந்தவனே" (கந் - அநுபூதி - 40)" தினை வேடர் காவல் தங்கு மலை காடெலாம். உழன்று சிறுபேதை கால் பணிந்த குமரேசா" என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 1270).

# 299

பொருதற்கு உற்ற வீ(மலர்ப் பாணங்களின்) கந்தொடு (பற்றுக் கோட்டுடன்) (மலர்ப் பாணங்களால்) அல்லது பொரு வீக்கம் தொ(ட்)டு (பொருகின்ற பெருமை - கர்வம் கொண்டு), பேர் செய வந்த இக்கன் (கரும்பு வில்லேந்திய காமன்) பிரயோகிக்கின்ற இந்தப் புதுமைவாய்ந்த தாமரைப் பாணங்களால்-

புளகங் கொண்டுள்ள கொங்கை யிடத்தில் நெகிழ்ச்சி யுற்ற பூந்தாதுக்கள் நெருப்பைப் பொழிந்து வீசத், தென்றற் காற்று சோர்வடையச் செய்ய,

தெருவில் பெண்கள் மிகுதியாகப் பகை கொண்டு சண்டையிடவேண்டித் திரிய, திங்கள் (சந்திரன்) உதித்து (நிலவு) வீசத் தொடங்க,

செயல் எல்லாம் அற்று, இங்குப் படுக்கையில் தூக்கம் இல்லாது அச்சத்துடனும் சோர்வுடனும் கிடக்கும் இந்தப் பெண்ணுக்கு உன் குராமாலையைத் தந்தருள வேணும்-

அருவி (நீரருவி) வீழும் வள்ளிமலைப் ப்ரதேசம் முழுமையையும் (வள்ளி வாழ்ந்திருந்தமையால்) புனித நிலமாகப் போற்றித் திரிந்து, செந்தினை விதைத்திருந்த அருமை வாய்ந்த வேடர்களுக்கு எளியவனாய் நின்றவனே!

அசுரர்களுக்கு அங்குப் பகைவனாய் நின்று, தேவர்களுக்கு அவர்களுக்குரிய உலகை அளித்து, வேலாயுதத்தைக் கையிற் கொண்ட பராக்ரமம் வாய்ந்த குமரேசனே!

கற்பக விருட்சம் வைத்துள்ள அமராவதி நகரில் இருந்த இலக்குமியாம் தேவசேனையிடம் போய்ச் சேர்ந்து அந்தத் தேவியைத் தழுவிக் கொண்ட புயங்களை உடைய அழகிய மார்பனே!

முத்தும் சங்கும் வயல்களிற் கூட்டமாய்க் கிடக்கும் திருத்தணிகைப் பெருமாளே! செங்கழுநீர் மலரைப் புனையும் பெருமாளே!

(உன் குரவைத் தரவேணும்)

## 300. பொது மகளிர் மயக்கு அற

தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தானா

பொற்குட மொத்தகு யத்தைய சைப்பவர்
கைப்பொருள் புக்கிட வேதான்-

புட்குரல் விச்சைபி தற்றுமொ ழிச்சியர்
பொட்டணி நெற்றிய ரானோர்;

அற்பவி டைக்கலை சுற்றிநெ கிழ்ப்பவர்
*அற்பர மட்டைகள் பால்சென்-

றக்கண்வ லைக்குள கப்படு புத்தியை
அற்றிட வைத்தருள் வாயே;

†கொக்கரை சச்சரி மத்தளி யொத்துவி
டக்கைமு ழக்கொலி யாலக்-

‡கொக்கிற கக்கர மத்தம ணிக்கருள்
§குத்த **தணிக்கும ரேசா;

சர்க்கரை முப்பழ மொத்தமொ ழிச்சிகு
றத்தித னக்கிரி மேலே-

தைக்கும னத்தச மர்த்தஅ ரக்கர்த
லைக்குலை கொத்திய வேளே. (52)

---

*அற்பர் அ மட்டைகள் - அற்பர்களாகிய அந்த மட்டைகள்.

† "கொக்கரையின் சச்சரியின் பாணி யானை" - அப்பர் VI-29-1. கொக்கரை, சச்சரி, மத்தளி - வாத்திய வகைகள்; மத்தளம் - மத்து ஓசைப் பெயர்; இசையிடனாகிய கருவிகட் கெல்லாம் தள மாதலான் மத்தளம் என்று பெயராயிற்று (சிலப்பதிகார உரை); ஒத்து - 'அந்தரக் கொட்டென்றும், முகமென்றும், ஒத்தென்றும் கூறுப, (சிலப்பதி. உரை); நாக சுரத்துக்குச் சுருதி கூட்டும் ஓர் ஊது குழல். இடக்கை வினைக்கிரியைகள் இடக்கையாற் செய்தலின் இடக்கை என்று பெயராயிற்று. (சிலப்பதி. உரை.)

‡ சிவபிரான் கொக்கின் இறகு சூடின வரலாறு-பாட்டு 180 பார்க்க

§ குத்தம் - குஹ்யம் - இரகசியம். **தணி - திருத்தணி.

## 300

பொன்னாலாய குடம் போன்ற கொங்கையை அசைப்பவர்கள், கையில் பொருள் புகுந்த பின் (கிடைத்த பின்) தான்-

புட்குரல் காட்டி மாய வித்தைகளைக் குழறிப் பேசும் பேச்சுக்களை உடையவர்கள், பொட்டணிந்த நெற்றியை உடையவர்கள்,

மெல்லிய இடையில் ஆடையைச் சுற்றி நெகிழ்த்தும் செயலினர்கள், அற்பர்கள், அந்தப் பயனற்றவர்களாகிய (பொது மகளிரிடத்தே) சென்று

(அவர்களுடைய) அந்தக் கண் வலைக்குள் அகப்படுகின்ற புத்தியை (என்னை விட்டு) நீங்கச் செய்து அருள் புரிவாயாக;

கொக்கரை, சச்சரி, மத்தளி, ஒத்து, இடக்கை இவைகள் முழங்கும் ஒலி ஒலிக்கத் (தணிகையில் வீற்றிருக்கும் குமரேசா)!

கொக்கின் இறகு, அக்கு (எலும்பு), அர (பாம்பு) மத்தம் (ஊமத்தம் பூ) இவைகளை அணிந்துள்ள மணிக்கு (அல்லது அணிக்கு அணிந்தவனுக்கு) (சிவபிரானுக்கு) ரகசிய உபதே-சத்தை அருளியவனே! **தணிமலைக்** குமரேசனே!

சர்க்கரை, முப்பழம் (வாழை, மா, பலா) இவைக்கு ஒப்பான மொழியை உடைய குறத்தி (வள்ளியின்) கொங்கை மலை மேலே-

தைத்துள்ள (அதிக பற்றுள்ள) மனத்தனே! சமர்த்தனே! அரக்கர் தலைக்கூட்டத்தைக் கொத்தி (வெட்டி) அழித்த (செவ்) வேளே!

(கண் வலைக்குள் அகப்படு புத்தியை அற்றிட வைத்தருள் வாயே!)

## 301. முத்தி பெற

*தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த*
*தத்த தத்த தத்த தத்த தனதான*

*பொற்ப தத்தி னைத்து தித்து நற்ப தத்தி லுற்ற பத்தர்*
*பொற்பு ரைத்து *நெக்கு ருக்க அறியாதே-*

*†புத்த கப்பி தற்றை விட்டு வித்த கத்து னைத்து திக்க*
*புத்தி யிற்க லக்க மற்று நினையாதே;*

*முற்ப டத்த லத்து தித்து பிற்ப டைத்த கிர்த்ய முற்றி*
*முற்க டைத்த வித்து நித்த முழல்வேனை-*

*முட்ட விக்க டைப்பி றப்பி லுட்கி டப்ப தைத்த விர்த்து*
**முத்தி சற்றெ னக்க ளிப்ப தொருநாளே;**

*‡வெற்ப ளித்த தற்ப ரைக்கி டப்பு றத்தை யுற்ற ளித்த*
*வித்த கத்தர் பெற்ற கொற்ற மயில்வீரா-*

*§வித்தை தத்வ முத்த மிழ்ச்சொ லத்த சத்தம் வித்த ரிக்கு*
*மெய்த்தி ருத்த ணிப்பொ ருப்பி லுறைவோனே;*

---

*நெக் குருக்க - நெகிழ்ந் துருக.

† புத்தகப் பிதற்றை அருணகிரியார் வெறுப்பர்:- 'கலைக் கடலூடும் சுழலாதே' என்றார் பிறிதோரிடத்து - திருப்புகழ் 257.

‡ உமாதேவி இடப் பாகம் பெற்ற வரலாறு:- பிருங்கி முநிவர் சிவபிரானை மாத்திரம் வலம் வந்து தேவியை வலம் வராமற் செல்ல, அதைக் கண்ட தேவி சிவனுடன் நெருங்கி வீற்றிருக்க, முநிவர் ஒரு பிருங்கம் (வண்டின்) உருவமெடுத்து இருவர் மத்தியில் நுழைந்து செல்லத், தேவி சிவபிரானை நோக்கி ஏன் இம் முநிவர் என்னை விலக்குகின்றனர் எனக் கேட்க, சிவபிரான் 'இட்ட சித்திபெற விரும்புவோர் உன்னையும், முத்தி பெற விரும்புவோர் என்னையும், வழிபடுவார்' என்று கூறினர். அதைக் கேட்ட தேவி கேதாரம் என்னும் தலத்தில் தவம் புரிந்து சிவபிரானது இடது பாகத்தையே தனக்கு இடமாகப் பெற்றனள். இதனால் சிவபிரான் அர்த்த நாரீசுரர் ஆயினர்.

## 301

அழகிய (உனது) பாதங்களைத் துதித்து மேலான பதவியை அடைந்த பக்தர்களுடைய அழகை எடுத்துரைத்து (உள்ளம்) நெகிழ்ந்து உருக அறியாமலும்-

புத்தகங்களைக் கற்றுப் பிதற்றலை விட்டு, ஞானத்தால் உன்னைத் துதித்திடப் புத்தியில் கலக்கமில்லாத வகையில் (கலக்கம் அற்ற புத்தியுடன்) உன்னை நினையாமலும்-

முற்பட்டுப் பூமியிற் பிறந்து (பூமியிற் பிறத்தலில் முற்பட்டவனாகி)ப், பின்னர் - (பூமியில்) நான் செய்யும் அகிருத்தியச் செயல்கள் (அக்கிரமமான செயல்கள்) நிரம்பி, முன்னும் பின்னும் (எப்போதும்) தவித்து (அல்லது -பிறருடைய முன் வாசல்களில் நின்று தவித்து)த் தினந்தோறும் அலைகின்ற என்னை-

அடியோடு, இந்த இழிவான பிறப்பினுள் (விழுந்து) கிடப்பதினின்றும் நீக்கி, முத்தி (மோட்ச இன்பத்தை) சற்று எனக்கு (நீ) அளித்தருளும் ஒரு (பாக்கிய) நாள் கிடைக்குமா!

(இமய) மலை (அரசன்) போற்றி வளர்த்த உமா தேவிக்கு இடது பாகத்தை அன்பு பொருந்தி அளித்த (வித்தக அத்தர்) ஞான முதல்வர் (சிவபிரான்) பெற்ற வெற்றி மயில் வீரனே!

கல்வி, உண்மை இவையிடங் கொண்ட (அல்லது கல்வியின் இயல்பான அமைப்பைப் பெற்றுள்ள) (இயல், இசை, நாடகம் என்னும் மூன்று வகை கொண்ட) §தமிழ்மொழியின் சொல்லும் பொருளோசையும் நீடித்திருக்கும் (பெருகி இருக்கும்) மெய்ம்மை (விளங்கும்) **திருத்தணி** மலையில் உறைபவனே!

---

முன் பக்கத் தொடர்ச்சி

*"தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி*
*உன்னி நாடிய மறைகளின் முடிவினை உணரா*
*என்னை யாளுடை யானிடஞ் சேர்வனென் றிமயக்*
*கன்னி பூசனை செய்தகே தாரமுன் கண்டான்"*

*-கந்த புராணம். வழிநடை - 3. (1-23-3)*

§ இது அருணகிரியார் காலத்தும் திருத்தணியில் தமிழ் பிரபலமாயிருந்தது என்பதைக் காட்டுகின்றது. (பாடல் 254-குறிப்பைப் பார்க்க.)

கற்ப கப்பு னக்*கு றத்தி கச்ச டர்த்த சித்ர முற்ற
கற்பு ரத்தி ருத்த னத்தி லணைவோனே-
கைத்த ரக்கர் கொத்து கச்சி னத்து வஜ்ர னுக்க மைத்த
கைத்தொ ழுத்த றித்து விட்ட பெருமானே (53)

## 302 கதி பெற

தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தனதான

மலைமு லைச்சியர் கயல்வி ழிச்சியர்
மதிமு கத்திய ரழகான-
மயில்ந டைச்சியர் குயில்மொ ழிச்சியர்
மனது ருக்கிக ளணைமீதே;
கலைநெ கிழ்த்தியே உறவ ணைத்திடு
கலவி யிற்றுவள் பிணிதீராக்-
கசட னைக்குண அசட னைப்புகல்
கதியில் வைப்பது மொருநாளே;
†குலகி ரிக்குல முருவ விட்டமர்
குலவு சித்திர முனைவேலா-
குறவர் பெற்றிடு சிறுமி யைப்புணர்
குமர சற்குண மயில்வீரா;
தலம திற்புக லமர ‡ருற்றிடர்
தனைய கற்றிய அருளாளா-
தருநி ரைத்தெழு பொழில்மி குத்திடு
தணிம லைக்குயர் பெருமானே.(54)

---

* 'கொடிச்சி' என்றும் பாடம்.

† குலகிரி - கிரௌஞ்சம் - 'குலகிரி குத்துப் பட' திருப்புகழ்-1.

‡ உற்ற இடர்.

கற்பக விருட்சங்கள் போன்ற மரங்கள் உள்ள (அல்லது தென்னை மரங்கள் உள்ள வள்ளிமலைச் சார்பான) கொல்லையில் வாசஞ் செய்த குறத்தி (வள்ளியின்) ரவிக்கை நெருங்கும் அழகுள்ள, பச்சைக் கர்ப்பூரம் அணிந்துள்ள, அழகிய கொங்கையில் அணைபவனே!

கைத்து (வெறுத்து) அரக்கர் கொத்து உக சினத்து (அரக்கர் கூட்டம் சிதறுண்டு அழியக் கோபித்து) வச்சிராயுதத்தை உடைய இந்திரனுக்கு அவர்கள் இட்ட கைவிலங்கை முறித்தெறிந்த பெருமாளே!

(முத்திசற் றெனக்களிப்ப தொருநாளே)

## 302

மலைபோன்ற கொங்கையர், கயல்மீன் போன்ற கண்ணினர்,சந்திரன் போன்ற முகத்தினர், அழகுள்ள

மயில் போன்ற நடையினர், குயில் போன்ற மொழியினர், மனத்தை உருக்குபவர், ஆகிய பொது மாதர்களின் படுக்கையின் மீது

ஆடையைத் தளர்த்தி உறவுடன் அணைகின்ற (சம்பந்தம் செய்கின்ற) கலவி யின்பத்திற் கசக்குண்ணும் (வாடுதலுறும்) நோய் நீங்காத-

குற்ற முள்ளவனை, குணங் கெட்ட முட்டாளை, (பெரியோராற்) சொல்லப்படுகின்ற நற்கதியிற் கூட்டி வைக்கும் ஒரு நாள் உண்டோ!

சிறந்த கிரௌஞ்சகிரிக் கூட்டத்தில் உருவச்செலுத்திப் போர் புரிந்த அழகிய கூரிய வேலாயுதனே!

குறவர் பெற்ற சிறுமியை (வள்ளியைக்) கூடின குமரனே! உத்தம குணத்து மயில் வீரனே!

உலகத்திற் போற்றப்படும் (உலகோராற் போற்றப்படும்) தேவர்களுக்கு உற்ற இடரை (துன்பத்தை)ப் போக்கிய அருளாளனே (கிருபா மூர்த்தியே)!

மரங்கள் வரிசையாய் வளர்ந்தோங்கும் சோலைகள் மிக்கு உள்ள தணிமலையில் மேம்பட்டு விளங்கும் பெருமாளே!

(கதியில் வைப்பதும் ஒருநாளே)

## 303. உபதேசப் பெற

தனத்தன தத்தன தனதன தனதன
தனத்தன தத்தன தனதன தனதன
தனத்தன தத்தன தனதன தனதன தனதான

முகத்தைமி னுக்கிக ளசடிகள் கபடிகள்
விழித்தும ருட்டிகள் கெருவிகள் திருடிகள்
மொழிக்குள்ம யக்கிகள் வகைதனில் நகைதனில்
விதமாக-

முழித்தும யற்கொளு மறிவிலி நெறியிலி
புழுக்குட லைப்பொரு ளெனமிக எணியவர்
முயக்கம டுத்துழி தருமடி யவனிடர் ஒழிவாக;

மிகுத்தழ கைப்பெறு மறுமுக சரவண
புயத்திள கிக்கமழ் நறைமலர் தொடைமிக
விசைக்கொடு மைப்பெறு மரகத கலபியும் வடிவேலும்-

வெளிப்படெ னக்கினி *யிரவொடு பகலற
திருப்பதி யப்புக ழமுதியல் கவிசொலி
**விதித்தனெ முத்†தினை தர‡வரு மொருபொரு**
**ளருளாயோ;**

---

*இரவு பகல்: இரவு - தத்துவங்களின் தொழிற் பாடின்றி ஆணவ மலத்தொடு மாத்திரம் கூடியிருக்கும் ஆன்மாவின் கேவல நிலை; பகல் - ஆன்மா தத்துவங்களோடு கூடி விடயங்களை நுகரும் சகல நிலை. (ஆசிரியர் - மு. திருவிளங்கம் அவர்கள் உரை) "இராப் பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே" - கந் - அலங் - 74.

† இனை தர - மெலிய.

(அடுத்த பக்கம் பார்க்க)

# 303

முகத்தை மினுக்குபவர்கள், முட்டாள்கள், வஞ்சகர்கள், கண் விழிக்கொண்டு மருட்டுபவர்கள், கர்வம் கொண்டவர்கள், திருடிகள், மொழி கொண்டு மயக்குபவர்கள் (ஆகிய பொது மாதர்களின்) உபாயத்திலும் நகையிலும், ஒருவகையான-

முழித்து, மோகங் கொண்ட அறிவிலி, ஒழுக்கமிலி, புழுவுள்ள இக்குடலை (உடலை)ப் பொருளென்று மிகவும் எண்ணி அந்தப் பொது மகளிரைத் தழுவுதற்காக அவர்களை அடுத்துத் திரிகின்ற அடியேனுடைய இடர் நீங்க-

மிகுந்த அழகைப் பெற்ற அறுமுகனே! சரவணனே! உனது திருப்புயங்களில் நெகிழ்வுற்று மணம் வீசும் தேன் நிறைந்த பூ மாலையும், மிகவும் வேகமாகச் செல்லும் கடுமை கொண்ட பச்சைநிற மயிலும், கூரிய வேலும்,

வெளிப்பட்டு என்முன் எதிர் தோன்ற, இரவு - பகல் என்னும் வேற்றுமை அற, (கேவல சகலங்கள் அற்ற சுத்த அருள் நிலை உற,) லட்சுமீகரம் பதிய (அழுத்தமாகப் பொருந்த), (உனது) திருப்புகழை அமுது பொருந்தும் பாடல்களாகச் சொல்லிப் (பாடி), - விதி (பிரமன்) எழுதின எழுத்து (என் தலையெழுத்து) மெலிந்து அழிதர, மேம்பட்டு விளங்கும் ஒப்பற்ற பொருளை உபதேசித்தருளுக.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

‡ வரு மொரு பொருள் அருளாயோ - என்னும் பகுதியில் வரும் ஒரு -பொருள் - அருள் - என்பது 'வரு - மொரு - பொரு - ளருள்' என மிகச் சிறிய ஒரு தனிப்பாடலாக அமைவது கண்டு மகிழ்தற்பாலது. இது 'கரந்துறை பாடல்' எனப்படும்.

*புகைத்தழ லைக்கொடு திரிபுர மெரிபட*
*நகைத்தவ ருக்கிட முறைபவள் வலைமகள்*
*பொருப்பிலி மக்கிரி பதிபெறு† மிமையவ ளபிராமி-*

*‡பொதுற்றுதி மித்திமி நடமிடு §பகிரதி*
*எழுத்தறி ருத்திரி பகவதி கவுரிகை*
***பொருட்பய னுக்குரை யடுகிட மைபவள்*
*அமுதாகச்;*

*††செகத்தைய கட்டிடு நெடியவர் கடவள்*
*‡‡அறத்தைவ ளர்த்திடு பரசிவை குலவதி*
*§§திறத்தமி ழைத்தரு பழையவ ளருளிய சிறியோனே-*

---

*வலைமகள் - சிவபிரான் மறைப் பொருளைத் தேவியார்க்கு உபதேசித்த பொழுது, தேவியார் கவனக் குறைவாய் இருக்க, சிவபிரான் 'நீ பராமுகமாய் இருக்கின்றாய்! மீன் பிடிக்கும் வலையருக்கு மகளாகுக' எனச் சபித்தார்; தேவியார் அஞ்சி இரக்க, 'நீ வலைஞர் மகளாய் இருக்கும் பொழுது நாம் வந்து உன்னை மணம் புரிவோம்' என்றனர். தேவி, பாண்டி நாட்டில் கீழ்க்கடல் ஓரத்தில் புன்னைமர நிழலில் ஒரு குழந்தையாய்க் கிடந்து அழும் பொழுது, அவ்வழியில் வந்த குழந்தையிலாத வலைஞர் அரசன் அந்தக் குழந்தையை ஆவலுடன் எடுத்து வளர்த்தான். தேவிக்கு உபதேசித்த பொழுது சிவபிரானது உத்தரவு இன்றி விநாயகரையும் முருகவேளையும் உள்ளே விட்ட காரணத்தால் மீனாகச் சபிக்கப் பெற்ற நந்திதேவர் கடலிற் சுறாமீனாயினர். இந்த மீன், வலைஞர் அரசன் எவ்வளவோ முயன்றும், அவனது வலையில் அகப்படாது இடர் பல செய்து வந்தது. இந்த மீனை வலையிற் பிடிப்பவனுக்கு என்மகளை மணஞ்செய்விப்பேன் என்று வலைஞர் கோமான் பிரதிக்ஞை செய்தனன். சிவபிரான் ஒரு வலைஞனைப் போல வேடம் பூண்டு வந்து அந்த மீனை ஒரே வீச்சில் தன் வலையிற் சிக்க வைத்தார். அற்புதம் அடைந்த வலைஞர் கோமான் தான் கூறியவாறே தன் மகளை அந்த வலைஞனுக்கு மணம் புரிவித்தான். திருமணக் கோலங் கொண்ட இறைவனும் தேவியும் மறைந்து விண்ணில் விடைமேற் காட்சி அளித்து வலைஞர் கோமானுக்கு நற்கதி அளித்தனர். இதன் விரிவைத் திருவிளையாடற் புராணத்தில் 'வலைவீசின திருவிளையாடலிற்' காண்க.

† இமையவள் - தேவி (இமையவர் - தேவர்) என்புழிப் போல.

புகை தரும் நெருப்பினால் திரிபுரம் எரிபட்டு அழியச் சிரித்தவருடைய இடது பாகத்தில் வீற்றிருப்பவள், வலைஞர் (பரதவர்) மகளாகத் தோன்றினவள், மலைகளுள் இமயமலைக் கரசன் பெற்ற இமயவல்லி, அபிராமி,

‡அம்பலத்தில் அமைந்து திமித்திமி என்று நடனம் செய்யும் தேவி, எழுத்து (இலக்கணங்கள்) அறிந்துள்ள ருத்திரி, பகவதி, கௌரி, ஒழுங்காகப், பொருளின் பயனாகச் சொல்லுக்குப் பொருந்தி இருப்பவள் ** (சொல்லும் பொருளும் போலச் சிவத்தொடு கலந்து நிற்பவள்), - அமுதுபோலப்

††பூமியை வயிற்றில் அடக்கிய நெடியோனாம் திருமாலுக்-குத் தங்கை, (காஞ்சியில் முப்பத்திரண்டு) ‡‡அறங்களை வளர்த்த பரசிவை, சிறப்பமைந்தவள், §§நிலைபெற்ற அல்லது (இயல் இசை நாடகம் என்னும்) மூன்று வகையதான தமிழைத்தந்த பழையவள் (உமை) அருளிய குழந்தையே!

---

‡ பொது உற்று; பொது -அம்பலம். "பரத்தின் உச்சியில் நடம் நவில் உமை" திருப்புகழ் 267. தேவியும் சிவனும் ஒன்று கூடி ஆடுவர். 'தற்பரனொ டாடும் அபிராமி சிவகாமி' திருப்புகழ் 644. "நடமாடி மடமாதொடு" சம்பந்தர் - III - 81-10.

§ கங்கையையும், தேவியையும் வேறுபாடின்றிக் கூறுவர் போலும் அருணகிரியார். "வானச் சானவி" (சேவல் விருத்தம் 6) பகிரதி - திருப் -137; திருப். 496

**"சொல்லும் பொருளும் என நடமாடுந் துணைவருடன் புல்லும் பரிமளப் பூங்கொடியே" அபிராமி அந்தாதி 28.

" மலி பொருளோ ருரையும் நிலவுதல் போல் நிட்களத்தைப் பிரியாது மருவி" - பஞ்சாதிகார விளக்கம்.

" சொற் பொருளும்.. எனக் கலந்து சிவத்தில் அந்நியம மாகி" -தணிகாசல புராணம்.

†† செகத்தை வயிற்றில் அடக்கியது - திருப்புகழ் 267 பார்க்க.

‡‡ தேவி அறம் வளர்த்தது - பாட்டு 278 பார்க்க.

§§ தமிழும் தேவியும்:- 'தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டி யருளே' - மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்.

செருக்கும ரக்கர்கள் பொடிபட வடிவுள
கரத்தில யிற்கொடு பொருதிமை யவர்பணி
*திருத்தணி பொற்பதி தனில்†மயில் நடவிய
பெருமாளே. (55)

## 304. அடிமையாக

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

முகிலு மிரவியு முழுகதிர் தரளமு
முடுகு சிலைகொடு கணைவிடு ‡தனு
முடிய வொருபொரு ளுதவிய §புதல்வனு மெனநாடி-

முதிய **கனனென தெய்வதரு நிகரென
முதலை மடுவினி ††லதவிய புயலென
‡‡முகமு மறுமுக முடையவ னிவனென
வறியோரைச்;

---

*தணிகைமலை என்று குறிப்பிடாது - தணிகை, தணிகைப் பதி என வரும் பாடல்கள் தணிகையில் நந்தியாற்றுக்குத் தென் கரையில் உள்ளதும் 'ஆறுமுக சுவாமி கோயில்' என வழங்குவதுமான பழைய கோயிலிலுள்ள முருகவேளுக்கு உரிய பாடல்களாகவும் கொள்ளலாம். இந்த முருகவேளே 'வீராட்டகாசருக்கு உபதேசித்த சாமிநாதராவர்' - (பாடல் 261 பார்க்க).

† முருகவேள் மயில் மீது நடிக்கும் நடன தரிசனம் திருத்தணிகையில் அருணகிரியார்க்குக் கிடைத்தது போலும். பாடல் 308 பார்க்க.

‡ "குன்று தோறாடுங் குமரனே எனவும் கொடுஞ்சிலை மதனவே ளெனவும் புன்றொழில் மனிதர்ப் புகழ்ந்து பாழ்சிறைக்குப் புலமை தீர்த்தெனக் கருள் புரியாய்" - சோணசைல மாலை - 19.

§ புதல்வன் - இது பொதுவோ - சிறப்பாக யாரையேனும் குறிக்கின்றதோ விளக்கம் பெறவில்லை - திருப்புகழ் 577 - ஆம் பாடலிற் கூறிய புதல்வரில் ஒருவனோ! முடிய ஒரு பொருள் உதவிய புதல்வன் - நன்றா என்னுங் குன்றின் மேலேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடுகள்

(அடுத்த பக்கம் பார்க்க)

கர்வங் கொண்ட அரக்கர்கள் பொடிபட்டு விழ, அழகிய திருக்கரத்தில் வேல் கொண்டு சண்டை செய்து, தேவர்கள் பணிந்து போற்றுந் **திருத்தணிகை** என்னும் அழகிய ஊரில் மயில் நடத்தும் (மீது நடிக்கும்) பெருமாளே!

(ஒரு பொரு ளருளாயோ)

## 304

மேகமே (கொடையில்), சூரியனே (புகழொளியில்), பேரொளி வீசும் முத்தே (இனிமையில்), விரைவில் (கருப்பு) வில்லை ஏந்திப் பாணங்களை விடும் மன்மதனே (அழகில்), வேண்டுமளவும் கேட்ட ஒரு பொருளைத் தந்து உதவின பிள்ளையே (ஈதலில்) இவன் என்று விரும்பிச் சென்று-

**பழைய கர்ணனே இவன் என்றும், தெய்வ விருட்சமாம் கற்பகத்தை ஒப்பானவன் இவன் என்றும், ††முதலையை மடுவில் சம்காரஞ் செய்த மேகவர்ணராம் திருமாலே இவன் என்றும், முகமும் ஆறுமுகக் கடவுள் போல ஆறுமுகம் கொண்டவன் இவன் என்றும் தரித்திரங் கொண்டவரை

---

எல்லாவற்றையும் புலவர் கபிலர்க்கு அளித்த செல்வக் கடுங்கோ வாழியாதனா யிருக்கலாம் என்றார் ஆசிரியர் பிரமஸ்ரீ சர்மா அவர்கள். பல் யானைச் செல்கெழு குட்டுவன் பாலைக் கௌதமனார் விரும்பியவாறே பெருவேள்விகளைச் செய்வித்து அப்புலவர் தம் மனைவியுடன் ஒப்பற்ற பொருளான துறக்கத்தை (விண்ணுலகத்தை) அடையச் செய்தான். இவர்களில் எவரையேனும் குறிக்கின்றதோ இது!

**கனன் - கர்ணன் - அங்க தேசத்து அரசனும், தரும புத்திரருக்கு மூத்தவனும், துரியோதனனுக்கு நண்பனுமான கொடையிற் சிறந்த இடை வள்ளல்களில் ஒருவன். வரை வின்றி யாவருக்குங் கொடுக்கும் தலை வள்ளல் எழுவர் :- சகரன், சாரி, நளன், துந்துமாரி, நிருதி, செம்பியன், விராடன்; இரப்போர்க்குக் கொடுக்கும் இடை வள்ளல் எழுவர்:- அந்திமான், சிசுபாலன், அக்குரன், வக்கிரன், சந்திமான், கன்னன், அந்தன்; புகழ்வோர்க்குக் கொடுக்கும் கடை வள்ளல் எழுவர்:- பாரி, எழினி, நள்ளி, ஆய், மலையன், ஓரி, பேகன் (பிங்கலம்),

††அதவிய - சம்ஹாரஞ் செய்த. முதலையை மடுவில் அட்டது - பாட்டு *110* பார்க்க.

# "திருமால் முருகன் அளகேசன் இந்திரன் சேண்முகிலே, பொருமாரன் வீமன் விசயன் மெய்க்கன்னன் புகழ்த்தருமன் வருமான சீவகன் மூவெழு வள்ளல் வனசநிதி, தரமாமணி சங்கம் தேனுவைப் போலவும் சாற்றுவதே" எனவரும் செய்யு ளானும் அறிக. - சோணசைமாலை உரை *19*.

சகல பதவியு முடையவ ரிவரென
*தனிய தநுவல விஜயவ னிவனென
†தபனன் வலம்வரு கிரிதனை நிகரென இசைபாடிச்-

‡சயில பகலவ ரிடைதொறு நடைசெயு
மிரவு தவிரவெ யிருபத மடையவெ
§சவித **அடியவர் தவமதில் வரவருள்** **புரிவாயே;**

$அகில புவனமு மடைவினி லுதவிய
இமய கிரிமயில் **குலவரை தநுவென
அதிகை வருபுர நொடியினி லெரிசெய்த அபிராமி-

அமரு மிட††னன லெனுமொரு வடிவுடை
யவ‡‡னி லுரையவன் §§முதுதமி ழுடையவ
னரியொ டயனுல கரியவ னடநவில்
சிவன்வாழ்வே;

---

*இரக்கம், திறமை அற்றவரை இங்ஙனம் புகழ்தல் 15-ஆம் நூற்றாண்டின் முதலிலிருந்த அருணகிரியார் காலத்திற் போலவே ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தும் இருந்தது போலும். "மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே வில்லுக் கிவனென்று, கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை" - (சுந்தரர் தேவாரம் - VII - 34-2) பாட்டு 236 பார்க்க.

† தபனன் வலம் வரு கிரி - மேரு. பாட்டு 273 பார்க்க; கிரகங்கள் சுற்றி வருவதாகக் கருதப்படுவதான பொன்மலை. 'வரைக்கு வேந்தா யிருக்கின்ற எரிபொன் மேருத்தடப் பெரு வரையின் மாடோர் தனிப்பெரு மழையி லிட்டுக் கிடப்பதோ ரெல்லை யில்லாக் கேடிலாச் சேம வைப்பு" - திருவிளை- மேருவைச்செண்-10.

‡ சயில பக லவர் - கற் பிளவை யொத்தவர். 'கற்பிளவோ டொப்பர் கயவர்' மூதுரை - 24.

§ அடியானாக:- "அடிமையாகு முறைமை ஒன்றை அருள்வாயே" (திருப்புகழ் 227)

" உன் மலர்ப்பதத்தின் பத்தி விடாமனதிருக்கு
நற்றொண்டர்க்கிணையாக உன் அருள் தாராய்"
(திருப்புகழ் 324)

$ தேவி - உலகெலாம் ஈன்றது - பாட்டு 268, பார்க்க. **தேவி புரத்தை எரித்தது:- 'அடங்கார்மதில் தொலைய நூறிய வம்பின் வேய்த் தோளி" - சம்பந்தர் - II-78-3.

சகல சம்பத்தும் உடையவர் இவர் என்றும், ஒப்பற்ற தனிப் பெருமையை உடைய வில் வல்ல அருச்சுனனே இவர் என்றும், சூரியன் வலம் வரும் மேருவை நிகர்ப்பார் இவர் என்றும். இசைப் பாட்டுக்களைப் பாடி-

கற்பிளவை ஒத்த (சற்றேனும் நெஞ்சம் இளகாத) லோபிகளின் இடங்கள் தோறும் நடந்து திரியும், யாசகத் தொழில் (பிச்சை யெடுக்கும் தொழில்) நீங்கவும், உனது இரண்டு பாதங்களை அடையவும், பலதிறத்த அடியவர்களின் தவ நிலை வருமாறு அருள்புரிவாயாக.

சகல புவனங்களையும் முறைப்படி தந்த இமயமலை மயிலாம் (உமை), சிரேட்டமான மலையாம் மேருவை வில்லாகக் கொண்டு, xதிருவதிகை என்னும் பதியில் திரிபுரத்தை ஒரு நொடிப் போதில் எரித்த அபிராமி-

பொருந்தி யிருக்கும் இடது பாகத்தை உடையவன் ††நெருப்பு என்னும் ஒப்பற்ற உருவத்தினன், ‡‡வாக்குக்கு எட்டாதவன், §§பழந் தமிழுக்கு உரியவன், திருமாலும், பிரமனும், உலகோரும் அறிதற்கு அரியவன், நடனம் ஆடும் சிவபிரான் ஆகிய கடவுளின் செல்வனே!

---

*(முன்பக்கத் தொடர்ச்சி)*

x திரு அதிகை (வீரட்டானத்தில்) புரம் எரித்தது:-

" செற்றார் வாழுந் திரிபுரந் தீயெழ விற்றான்
கொண்டெயில் எய்தவர் வீரட்டம்" -அப்பர் V -53-4
" வில்லால் எயில் எய்தான் ஆடும் வீரட்டானத்தே"
- சம்பந்தர் I -46-8.

ஒரு நொடியில் எரித்தது:-

"திரிபுரம் ஒரு நொடியினில் எரி சென்று கொள்வகை"
- சம்பந்தர் I-124-6.

†† சிவன் அனலுருவன்:- "பொங்கு அழல் உருவன்"
- சம்பந்தர் -III - 120 -1.

‡‡ இல் உரையவன் - உரை யிறந்தவன்; உரைக்கு எட்டாதவன் "உரைக்குங் கழிந்திங்கு உணர்வரியான்" -அப்பர் . IV-99-5.

§§ முதுதமிழ் உடையவன் - பாட்டு 126 - குறிப்புரை பார்க்க.

திகிரி நிசிசரர் தடமுடி பொடிபட
திரைக ளெறிகடல் சுவறிட களமிசை
திரடு குறடுகள் புரள்வெகு குருதிகள் பெருகாறாச்-

சிகர கிரிநெரி படபடை பொருதருள்
திமிர தினகர குருபர இளமயில்
சிவணி வருமொரு **தணிகையில்** நிலைதிகழ்
பெருமாளே. (56)

## 305. திருவடியைப் பெற

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனதான

முடித்த குழலினர் வடித்த மொழியினர்
முகத்தி லிலகிய விழியாலும்-

முலைக்கி ரிகள்மிசை யசைத்த துகிலினும்
இளைத்த இடையினு மயலாகிப்;

படுத்த அணைதனி லணைத்த அவரொடு
படிக்கு ளநுதின முழலாதே-

பருத்த மயில்மிசை நினைத்த பொழுதுன
**பதத்து மலரிணை** யருள்வாயே;

துடித்து தசமுகன் முடித்த லைகள்விழ
தொடுத்த சரம்விடு ரகுராமன்-

துகைத்தி *வுலகையொ ரடிக்கு ளளவிடு
துலக்க அரி திரு மருகோனே;

---

*உலகை அளந்தது - பாட்டு 268-பார்க்க.

சக்கராயுதங்களுடன் வந்த (அல்லது தேர்களில் வந்த, அல்லது மலை போல வந்த) அசுரர்களின் பெரிய முடிகள் பொடிபடவும், அலைகள் வீசும் கடல் வற்றிப் போகவும், போர்க்களத்தில் மேடான உயர் நிலங்களிலும் புரண்டெழுந்த மிகுதியான ரத்தம் பெருகி ஆறாக (ஓடும்படி)யும்,

சிகரங்களை உடைய மலை (கிரௌஞ்சம்) நெரிபட்டு பொடியாய் அழியவும், வேற்படையாற் சண்டை செய்தருளிய (அஞ்ஞான) இருளை நீக்கும் (ஞான) சூரியனே! குருபரனே! இளமயிலிற் பொருந்தி வரும் பெருமானே! ஒப்பற்ற தணிகையில் நிலைத்து விளங்கும் பெருமானே!

(அடியவர் தவமதில் வர அருள் புரிவாயே)

# 305

முடித்த கூந்தலை உடையவர்கள், (தேன்) வடிகட்டினதென இனிக்கும் பேச்சுக்களை உடையவர்கள், (ஆகிய மாதர்களின்) முகத்தில் விளங்கும் கண்களாலும்

கொங்கை மலை மீது அசைகின்ற ஆடையாலும், அவர்களின் மெல்லிய இடையாலும் (நான்) மோகங் கொண்டவனாகிப்

படுத்த படுக்கையில் அணைத்த அம் மாதர்களோடு (இந்தப்) பூமியில் தினந்தோறும் திரியாதவாறு-

பருமையுள்ள மயில்மேல் நினைத்த அந்தப் பொழுதிலேயே உன்னுடைய பாதமலரிணைகளைத் தந்தருளுவாயாக.

துடிதுடித்து, பத்துத் தலை ராவணனுடைய கிரீடம் அணிந்த தலைகள் அற்று விழப் பூட்டிய அம்பினைச் செலுத்தின ரகுராமன்-

(பாதத்தால்) மிதித்து இந்த உலகை ஓரடியாலே அளந்து விளங்கக் காட்டிய அரி ஆகிய திருமாலின் அழகிய மருகனே! (அல்லது திருமாலுக்கும், *இலக்குமிக்கும் மருகனே!)

---

*"செய்யாள் மருக" - கந். அந்தாதி - 69.

தடத்து ளுறைகயல் வயற்கு ளெதிர்படு
தழைத்த கதலிக ளவைசாயத்-

தருக்கு மெழிலுறு திருத்த ணிகையினில்
தழைத்த சரவண பெருமாளே. (57)

306. அகப்பொருள் : (தலைவன் வந்தருள)

தத்தத் தனத்தன தத்தத் தனத்தன
தத்தத் தனத்த தனதான

*முத்துத்தெ றிக்கவள ரிக்குச்சி லைக்கைமதன்
முட்டத்தொ டுத்த மலராலே-

முத்தத்தி ருச்சலதி முற்றத்†து தித்தியென
முற்பட்டெ றிக்கு நிலவாலே;

எத்தத்தை யர்க்குமித மிக்குப்பெ ருக்கமணி
இப்பொற்கொ டிச்சி தளராதே-

‡எத்திக்கு முற்றபுகழ் வெற்றித்தி ருத்தணியில்
இற்றைத்தி னத்தில் **வரவேணும்;**

மெத்தச்சி னத்துவட திக்குக்கு லச்சிகர
வெற்பைத்தொ ளைத்த கதிர்வேலா-

---

*முத்துப் பிறக்கும் இடங்கள் எட்டு என்றும் (பாட்டு 278.) இருபது என்றும் கூறுவர்.

"தந்தி வராகம் மருப்பிப்பி பூகம் தழைகதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினமின்னார்
கந்தரஞ் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார்
இந்து உடும்பு கரா முத்தம் ஈனும் இருபதுமே"

"கழை முத்துமாலை" - திருப் (ஆரம்பம்)

† உதித்தி - உதி தீ; உதி - உலைத் துருத்தி.

‡ எத்திக்கும் உற்ற புகழ்... திருத்தணி:- இது "திக்கெலாம் புகழுறுந் திருநெல்வேலி' என்னும் சம்பந்தர் திருவாக்கை நினைவூட்டுகின்றது. (தேவாரம் III-92-7)

குளத்தில் வசிக்கின்ற கயல் மீன்கள் வயல்களிற் காணக்-கிடைக்கும்படி தழைத்த வாழை மரங்கள் சாய்கின்ற

செழிப்பையும் அழகையும் கொண்ட **திருத்தணிகையில்** களிப்புடன் வீற்றிருக்கும் சரவணனே! பெருமாளே!

(உன் பதத்து மலரிணை அருள்வாயே)

## 306

(தனக்குள் இருக்கும்) முத்து வெளியே தெறித்து விழும் படியாக முற்றி வளர்ந்துள்ள கரும்பை வில்லாகக் கையிற் கொண்ட மன்மதன் அடியோடு (நன்றாய்ச்) செலுத்தின மலரம்புகளாலும்-

முத்துக்களைத் தன் அகத்தே கொண்ட அழகிய கடலின் பரப்பிலே உதிக்கின்ற (தோன்றுகின்ற) தீ (நெருப்பு)ப் போன்று (அல்லது - உலைத்துருத்தியின் தீப்போல) எதிர்ப்-பட்டு வீசும் நில வொளியாலும்

எந்த தத்தையர்க்கும் (எல்லாக் கிளி போன்ற பெண்-களுக்கும்) அலர் மொழி பேசுவதால் வரும் இன்பம் பெருகிப் பொருந்துவதைக் கண்டும் (பெண்கள் இவளைப் பற்றி அலர் மொழி பேசி இன்பம் பெறுவதைக் கண்டும்), இந்தப் பொற் கொடி போன்றவள் (நாயகி) தளர்ச்சியுறாத வண்ணம்-

எந்தத் திக்கில் உள்ளவர்களும் புகழ்கின்ற வெற்றி விளங்கும் **திருத்தணியில்** இன்றைய தினத்தில் வந்தருள வேண்டும்;

மிகுதியாகக் கோபித்து வடதிசையில் இருந்த சிறந்த சிகரங்களைக் கொண்டிருந்த மலையை (கிரௌஞ்ச மலையை)த் தொளை செய்த ஒளி வேலனே!

மெச்சிக்கு றத்திதன மிச்சித்* தணைத்துருகி
மிக்குப் பணைத்த மணிமார்பா;

†மத்தப்ர மத்தரணி ‡மத்தச்சடைப்பரமர்
சித்தத்தில் வைத்த கழலோனே-

வட்டத்தி ரைக்கடலில் மட்டித்தெ திர்த்தவரை
வெட்டித் துணித்த பெருமாளே. (58)

## 307. அன்பைப் பெற

தனதனன தனதந்த தனதனன தனதந்த
தனதனன தனதந்த தனதான

முலைபுளக மெழஅங்கை மருவுசரி வளைகொஞ்ச
முகிலளக மகில்பொங்க அமுதான-

மொழிபதற வருமந்த விழிகுவிய மதிகொண்ட
முகம்வெயர்வு பெறமன்ற லணையூடே;

கலைநெகிழ வளர்வஞ்சி யிடைதுவள வுடலொன்று
படவுருகி யிதயங்கள் ப்ரியமேகூர்-

கலவிகரை யழியின்ப அலையிலலை படுகின்ற
கவலைகெட நினதன்பு **பெறுவேனோ;**

அலையெறியு மெழில்சண்ட உததிவயி றழல்மண்ட
அதிரவெடி படஅண்ட மிமையோர்கள்-

அபயமென நடுநின்ற அசுரர்பட அடியுண்டு
அவர்கள்முனை கெடநின்று பொரும்வேலா;

---

*வள்ளியை அணைந்ததால் பணைத்த (பெருமை அடைந்த) மார்பினர் ஆயினர் முருகவேள் - ஏனெனில் - 'தன்கடன் அடியேனையுந் தாங்குதல்' என்ற அப்பர் திருவாக்கின்படி 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்றிருந்த வள்ளியைத் தன் கடமையென அணைந்து மகிழ்வித்தாராதலின்; "குறமாதுடன் மால் கடனாம் எனவே அணைமார்பா" என்றார் பிறிதோரிடத்து. *(திருப்புகழ் 563)*

† மத்தப் ப்ரமத்தர் - மிக்கப் பித்து உடையார் "பித்தா பிறை சூடி" - சம்பந்தர் -I *89-3*, சுந்தரர் VII *-1-1*.

‡ மத்தம் - ஊமத்தம். 'மத்தநன் மலர் புனைவீரே' III *-94-8*.

மெச்சிப் புகழ்ந்து குறத்தி (வள்ளியின்) கொங்கை மீது ஆசைப்பட்டு அவ்வளை அணைந்து, உருகி, மிகவும் பெருமையை அடைந்த அழகிய மார்பனே!

வெறி மிகுந்த பித்தரான (பெரிய பித்தரான) பரமர், ஊமத்தம் பூ அணிந்த சடைப் பரமர் தமது உள்ளத்தில் வைத்துப் போற்றின திருவடிகளை உடையவனே! (முருகவேள் தமக்கு உபதேச குரு ஆதலின் அவரது திருவடிகளைத் தமது உள்ளத்திற் சிவபிரான் தரித்தனர் என்க)

வட்ட வடிவுள்ள அலை வீசுங் கடலில் (அசுரர்களை) முறித்து அழித்து, எதிர்த்து நின்றவரை வெட்டித் துண்டாக்கிய பெருமாளே!

(திருத்தணியில் இற்றைத் தினத்தில் வரவேணும்)

## 307

கொங்கை புளகங் கொள்ள, அழகிய கையில் உள்ள சரி (வளை வகை), வளையல் இவை மெல்ல ஒலிக்க, மேகம் போன்ற கூந்தல் அகில் மணம் வீச, அமுதம் போன்ற

மொழிகள் நடுக்கமும் விரைவுங் காட்ட, அருமை வாய்ந்த கண்கள் குவிய, நிலவு போன்ற முகத்தில் வெயர்வு எழ, நறுமணமுள்ள படுக்கையில்-

ஆடை தளர, செழுமை வாய்ந்த கொடி போன்ற இடை துவட்சி உற (நெளிய), உடல் ஒன்றோடொன்று சேர, உருகி, உள்ளம் அன்பு மிக்கு,

கலவி (புணர்ச்சித் தொழில்) கரை (அளவு) கடந்து இன்ப அலையில் அலைபடுகின்ற கவலை ஒழிய உன்னுடைய அன்பைப் பெறுவேனோ!

அலை வீசும் அழகிய வலிமை வாய்ந்த கடலின் உட்புறத்தில் நெருப்பு நெருங்கி மிக, அதிர்ச்சியுடன் வெடிபட அண்டம், (அண்டம் அதிர்ந்து வெடிபட)த், தேவர்கள்

அபயம் என்று முறையிட, இடை நிலத்தே நின்ற அசுரர்கள் அழிய அடிபட்டு, அவர்களுடைய (போர் முனையும்- அல்லது துணிவும்) கெட்டு அழிய நின்று சண்டை செய்த வேலனே!

தலைமதிய நதிதும்பை யிளவறுகு கமழ்கொன்றை
சடைமுடியி லணிகின்ற பெருமானார்-

தருகுமர விட*வைந்து தலையரவு தொழுகின்ற
**தணிமலையி** லுறைகின்ற பெருமாளே. (59)

## 308. பரம ஒளியிற் கூட

தனதனன தனதனன தத்தத்த தத்ததன
தனதனன தனதனன தத்தத்த தத்ததன
தனதனன தனதனன தத்தத்த தத்ததன தனதான

மொகுமொகென நறைகொண்மலர் வறகத்தி லற்புடைய
முளரிமயி லனையவர்கள் நெய்த்துக்க றுத்துமழை
முகிலனைய குழல்சரிய வொக்கக்க னத்துவள ரதிபார-

முலைபுளக மெழவளைகள் சத்திக்க முத்தமணி
முறுவலிள நிலவுதர மெத்தத்த வித்தசில
மொழிபதற விடைதுவள வட்டச்சி லைப்புருவ
இணைகோட

அகில்மிருக மதசலிலம் விட்டுப் பணித்தமல
ரமளிபட வொளிவிரவு ரத்நப்ர பைக்குழையொ
டமர்பொருத நெடியவிழி செக்கச்சி வக்கமர மதநீதி-

---

*தணிகையில் வாசுகியும், ஆதிசேடனும் பூசித்ததாகத் தணிகைத் தல புராணங்கள் கூறுகின்றன:-

திருப்பாற்கடல் கடைந்த போது மத்தாக இருந்த மந்தர மலையில் இருந்த பிளப்பினில் கயிறாக இருந்த ஆதிசேடன் சிக்கக், கடைந்த வேகத்தில், ஆதிசேடனுடைய தோல் சுரசுரப்பை அடைந்தது. திருமால் உரைத்த உபதேசப்படி, ஆதிசேடன் திருத்தணிகையை அடைந்து தவம்புரிய, முருகவேள் எதிர்தோன்றி ஆதிசேடனுடைய உடம்பைத் தமது கரத்தினால் தடவ சேடன் சருச்சரை (சொர சொரப்பு) நீங்கிப் பழைய வலிய தேகத்தைப் பெற்றான். (இது தணிகாசல புராணம்)

இங்ஙனம் இடர் உற்றுப் பூசித்துப் பேறு பெற்றது வாசுகி என்னும் நாகம் என்று தணிகைப் புராணம் கூறுகின்றது.

(அடுத்த பக்கம் பார்க்க)

தலையில் நிலவு, கங்கை (நதி), தும்பை, இள அறுகம்புல், மணம் வீசும் கொன்றை இவைகளைச் சடைமுடியில் அணிகின்ற பெருமானார் (சிவபிரான்)-

தந்த குமரனே! விடங் கொண்ட ஐந்து தலைகளை உடைய பாம்பு பூசித்து வணங்கும் பெருமாளே! தணிகைமலையில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(கவலை கெட நினதன்பு பெறுவேனோ)

# 308

மொகு மொகு (கம கம) என்னும் வாசனை கொண்ட மலர்க் கூட்டத்தில் ஆசையுள்ள (தாமரை மலரில் வீற்றி-ருக்கும்) இலக்குமி போன்ற மகளிருடைய - நெய்ப்பும், கருமையும் கொண்ட கருமேகம் போன்ற கூந்தல் சரிய, ஒன்றுபோல (ஒருசேரப்) பருத்து வளர்ந்துள்ள அதிக கனங் கொண்ட

கொங்கைகள் புளகம் கொள்ள, வளையல்கள் ஒலிசெய்ய, முத்துக்கள் போன்ற பற்கள் இள நிலவின் (குளிர்ந்த) ஒளியை வீச, மிகவும் தவிப்புக் கொள்ளும் சில மொழிகள் அசைவுற்று வெளிவர, இடை நெளிவுஉற, வட்டவடிவான வில்லை ஒத்த புருவங்கள் இரண்டும் வளைவு உற,

அகில், மிருகமதம் (கஸ்தூரி) பன்னீர் விட்டு அலங்கரிக்கப்பட்ட மலர்ப் படுக்கை கலைய (அல்லது மலர் கலைதலுற), ஒளி கலந்த ரத்னங்களால் அமைக்கப்பட்ட ஒளிவீசம் குழைகளுடன் போர் புரிவதுபோல நீண்டுள்ள கண்கள் மிகவும் சிவக்க- (இவ்வாறு கலவியின்பத்தில்) அமர (பொருந்துவதால்), மதம் (கொள்கை,அறிவு, மகிழ்ச்சி), நீதி

---

நாக தீர்த்தம் திருத்தணி மலையின் மேல் - மேற்குப் பக்கத்தில் குருக்கள்மார் வீடுகளுக்கு எதிரில் உள்ள விஷ்ணு தீர்த்தத்துக்கும் அப்பால் மேற்கே சென்றால் தென்புறம் இருக்கின்றது.

*அடல்வடிவு நலமிதனில் மட்கச்செ ருக்கியுள*
*முருகநரை பெருக*வுட லொக்கப்ப ழுத்துவிழு*
*மளவிலொரு* **பரமவெளி யிற்புக்கி ருக்கவெனை**
**நினையாதோ;**

*செகுதகெண கெணசெகுத செக்குச்செ குச்செகுத*
*கிருதசெய செயகிருத தொக்குத்தொ குத்தொகுத*
*டிமிடடிமி டிமிடிமிட டிட்டிட்டி டிட்டிமிட டிடிதீதோ-*

*திரிகடக கடகதிரி தித்திக்ர தித்ரிகட*
*திமிர்ததிமி திமிர்ததிமி தித்தித்தி தித்திதிதி*
*செணுசெணுத தணசெணுத தத்தித்தி குத்ரிகுட*
*ததிதீதோ;*

*தகுடதிகு திகுடதிமி தத்தத்த தித்திகுட*
*குகுகுகுகு குகுகுகுகு குக்குக்கு குக்குகுத*
*தரரரர ரிரிரிரிரி றிற்றித்த றிற்றிரிரி யெனவேநீள்-*

*சதிமுழவு பலவுமிரு பக்கத்தி சைப்பமுது*
*சமையபயி ரவியிதய முட்கிப்ர மிக்கவுயர்*
†**தணிகை***மலை தனின்மயிலி னிர்த்தத்தி னிற்கவல*
*பெருமாளே.* (60)

## 309. அகப்பொருள் (தனிமை நீங்க) நற்றாயிரங்கல்

*தந்தந் தனதன தந்தந் தனதன*
*தந்தந் தனதன தனதான*

*வங்கம் பெறுகட லெங்கும் பொருதிரை*
*வந்துந் தியதிரு மதனாலே-*

*வஞ்சம் பெறுதிட நெஞ்சன் தழலுற*
*வஞ்சம் பதும்விடு மதனாலே;*

---

*இறந்து போம் போது இறைவனே என்னைக் குறிக்கொள் என வேண்டுகின்றார். "இறக்கின்று நும்மை மறக்கினும் என்னைக் குறிக் கொண்மினே" என்றார் அப்பரும் (IV -95-10).

† "தணிமலையி லரியதொரு நிரத்தத்தில் நிற்கவல பெருமாளே!" என்றும் பாடம். மயிலில் நிர்த்த தரிசனம் அருணகிரி யார்க்கு இங்குக் கிடைத்ததை இது குறிக்கின்றது.

(பாடல் 303. பார்க்க)

வலிமை, வடிவு (உருவம், அழகு), நலம் (நன்மை, குணம்) இவையெல்லாம் - இதனுள் (இந்தக்கலவிப்பித்தில்) மட்க (ஒலி மங்கும்படியாக, வலி குன்றும்படியாக) மிகுதலுற்று (அளவு கடந்து) அதன் பயனாக, உள்ளம் தளர்ச்சி அடைந்து உருக, நரை பெருக, உடல் ஒரு சேர (மிகவும்) பழுத்து (முதிர்ந்து கிழமாய்) (ஈற்றில்) விழும்போது (உடல் விழும்போது - இறந்து போகும் அந்த சமயத்தில்) ஒப்பற்ற பரஞ்சோதியாம் பேரின்ப வீட்டில் (நான்) புகுந்து ஓய்வு பெற்று இருக்க என்னைக் குறித்து (உனது) திருவுள்ளம் நினையாதோ!

செகுதகெண, கெணசெகுத ... டிட்டிட்டி, டிட்டிமிட டிடி தீதோ-

திரிகடக கடகதிரி.. தத்தித்தி குத்ரிகுட ததிதீதோ-

தகுடதிகு திகுடதிமி... றிற்றித்த றிற்றிரிரி என்னும் ஒலி பெருகி நீள-

தாள ஒத்துடன் முழவு வாத்தியங்கள் பலவும், இரண்டு பக்கங்களிலும் ஒலிக்கவும், பழைமை வாய்ந்தவளும், உடனிருந்த வளுமான துர்க்கையும் உள்ளம் அஞ்சித் திகைப்பு அடையவும், சிறப்பு வாய்ந்த **தணிகைமலை**யில் மயில் மீது நடன நிலையில் நிற்கவல்ல (நடனம் செய்கின்ற) பெருமாளே!

(பரம ஒளியிற் புக்கிருக்க எனை நினையாதோ)

## 309

கப்பல்கள் செல்லப் பெற்ற கடலில் எங்கும் மாறுபட்டு எழும் அலைகள் எழுந்து, பெருகிச் சென்று (அதிரும்) ஒலிக்கின்ற காரணத்தாலும்-

வஞ்சகம் கொண்ட திடம் (உறுதி) அமைந்த நெஞ்சத்தினனாகிய (மன்மதன்)) நெருப்பு வீசிப் பொருந்த அஞ்சு அம்பு அதும் (ஐந்து மலர்ப்) பாணங்களையும் ஒருசேர விட்ட அந்தக் காரணத்தாலும் - (அல்லது திட நெஞ்சினனாய்), நெருப்பு உற, ஐந்து பாணங்களையும் செலுத்தும் (மன்) மதனாலும்-

பங்கம் படுமென தங்கந் தனிலுதி
பண்பொன் றியவொரு கொடியான-
பஞ்சொன் றியமயில் நெஞ்சொன் றியெயழல்
பொன்றுந் *தனிமையை நினையாயோ;
தெங்கந் திரளுட னெங்குங் கதலிகள்
சென்றொன் றியபொழி லதனூடே-
தெந்தெந் தெனதென என்றண் டுறஅளி
நின்றுந் திகழ்வொடு மயிலாடப்;
பொங்குஞ் சுனைகளி லெங்குங் குவளைகள்
†என்றும் புகழ்பெற மலர்நீனும்-
பொன்றென் றணிகையில் நின்றங் கெழுபுவி
யென்றுஞ் செயவல பெருமாளே(61)

## 310. திருவடியைப் போற்றும் குணத்தைப் பெற

தனத்ததன தனதான தனத்ததன தனதான
தனத்ததன தனதான தனதான

வரிக்கலையி னிகரான விழிக்கடையி லிளைஞோரை
மயக்கியிடு மடவார்கள் மயலாலே-
மதிக்குளறி யுளகாசு மவர்க்குதவி மிடியாகி
வயிற்றிலெரி மிகமூள அதனாலே;
ஒருத்தருட னுறவாகி ஒருத்தரொடு பகையாகி
ஒருத்தர்தமை மிகநாடி யவரோடே-
‡உணக்கையிடு படுபாவி எனக்குனது கழல்பாட
உயர்ச்சிபெறு குணசீல மருள்வாயே

---

* "தனிமையை நினைகிலை சங்கரா!" - திருவிசைப்பா - 26-8.

† தணிகைமலையில் இந்திர நீலசுனை - என்றும் மலர் தரும் புகழ் கொண்டது - பாட்டு 272 பார்க்க.

‡ உணக் கை யிடு - உண்ண கை இடு.

வெட்கம் (அவமானம்) உறுகின்ற என்னுடைய உடலில் உதித்த (பிறந்த) நல்ல குணம் பொருந்திய ஒரு கொடி போன்ற-

பஞ்சு போல மெலிந்த மயிலனைய (என் மகள்), தனது உள்ளத்திற் சேர்ந்த (காமத்)தீயால் இறந்துபடும் தனிமை நிலையை (முருகா) நீ நினைத்து அருளுதலாகாதா!

தென்னை மரங்களின் கூட்டத்துடன் எங்கும் வாழைகள் அமைந்து பொருந்திய சோலைக்கு உள்ளே-

தெந்தெந் தென தென என்னும் ஒலியுடன் நெருக்கம் உற்று வண்டுகள் நின்றும் (நின்று பாடவும்), விளக்கத்துடனே மயில்கள் ஆடவும்-

(நீர்) நிறைந்த சுனைகளில் எங்கும் குவளைகள் எக்காலத்தும் புகழ் பெறும்படி மலர்களைத் தருகின்ற-

மிக அழகிய **தணிகையில்** வீற்றிருந்தருளி, ஏழு உலகங்களையும் என்றும் படைத்தளிக்கவல்ல பெருமாளே!

(பொன்றுந் தனிமையை நினையாயோ)

## 310

வரி (உயர்ச்சி - அல்லது நீளம்; கோடு) கொண்டுள்ள மானுக்கு ஒப்பான கண் கடையால் (கடைக் கண்ணால்) இளைஞரை மயக்கும் (பொது) மாதர்களின் மீதுள்ள மோகத்தாலே - (எனது)

அறிவு குழப்பம் அடைந்து, உள்ள காசும் (பொருளும்) அம்மாதர்களுக்கே கொடுத்து (அதனால்) வறுமையடைந்து, வயிற்றில் நெருப்பு மிகவும் மூண்டு எழ - அது காரணத்தால்

ஒருத்தருடன் நட்பு பூண்டும், ஒருத்தருடன் பகைமை பூண்டும், ஒருத்தரை மிகவும் விரும்பித் தேடியும் - (இப்படிப் பட்டவர்களிடத்தே ஊடாடி)

உண்ண வேண்டிக் கையை நீட்டுகின்ற பெரும் பாவியாகிய எனக்கு உன்னுடைய திருவடியைப் பாடும்படியான சிறந்த குண தூய்மையைத் தந்தருளுக.

விரித்தருண கிரிநாத னுரைத்ததமி ழெனுமாலை
மிகுத்தபல முட்னோத மகிழ்வோனே-

வெடித்தமணர் கழுவேற *ஒருத்திகண வனுமீள
விளைத்ததொரு தமிழ்பாடு புலவோனே;

செருக்கியிடு பொருசூரர் குலத்தையடி யறமோது
திருக்கையினில் வடிவேலை யுடையோனே-

திருக்குலவு மொருநீல மலர்ச்சுனையி லழகான
**திருத்தணிகை** மலைமேவு பெருமாளே. † (62)

## 311. திருவடியைப் பெற

தானத்தன தானன தந்தன
தானத்தன தானன தந்தன
தானத்தன தானன தந்தன தனதான

வாருற்றெழு பூண்முலை வஞ்சியர்
காருற்றெழு நீள்குழல் மஞ்சியர்
வாலக்குயில் போல்மொழி கொஞ்சியர் தெருமீதே-

மாணுற்றெதிர் மோகன விஞ்சையர்
சேலுற்றெழு நேர்விழி விஞ்சியர்
வாகக்குழை யாம‡ப ரஞ்சியர் மயலாலே;

சீருற்றெழு ஞானமு டன்கல்வி
நேரற்றவர் மால்கொடு மங்கியெ
சேருற்றறி வானத ழிந்துயி ரிழவாமுன்-

---

*ஒருத்தி கணவன் - மங்கையர்க்கரசியா ருடைய கணவனாகிய கூன் பாண்டியன். ஈண்டுக் கூறிய (சம்பந்த மூர்த்தியின்) திருவிளையாடலைப் பாட்டு 103 பாட்டு 181-கீழ்க் குறிப்பிற் பார்க்க.

† இச்செய்யுள் அருணகிரிநாதருடைய திருவாக்கென்பதைப் பற்றிச் சிறிது ஐய மிருப்பினும், பழைய பிரதிகள் பலவற்றினுங் காணப்பட்ட படியால் விடாது சேர்க்கப்பட்டது.

‡ அபரஞ்சியர் - புடமிட்ட பொன் போன்றவர் - பசும் பொன் அனையார்; "வஞ்சியே அபரஞ்சியே மடமயிலே வரிக்குயிலே, கொஞ்சியே பழி அஞ்சி யார் உனைக் கூடுவா ரினி அம்மே!"-

- மீனாட்சியம்மை குறம் 5.

விரிவாக அருணகிரி நாதன் பாடியுள்ள (திருப்புகழ் என்னும்) தமிழ் மாலையை மிகுந்த பலமுடன் ஓத மகிழ்பவனே!

பொறாமையாலும் அவமானத்தாலும் துடித்துச் சமணர்கள் கழுவி லேறவும், ஒப்பற்ற மங்கையர்க்கரசியின் கணவன் (கூன் பாண்டியன் என்னும் நெடுமாறன்) திரு நீறிடும் வழிக்கு மீண்டு வரவும் (சமணச் சார்பினின்றும் நீங்கி உய்யவும்), வழி செய்த ஒப்பற்ற தமிழ்ப் பாடல்களைப் பாடின புலவனே!

ஆணவத்துடன் போர் செய்த சூரர்களின் (அசுரர்களின்) குலத்தை அடியோடு அற்றுப்போக மோதித் தாக்கின திருக்கை வடிவேலை உடையவனே!

அழகு விளங்கும் ஒப்பற்ற நீலோற்பலமலர்ச் சுனையைக் கொண்டதாய் அழகு அமைந்த **திருத்தணிகை** மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(உயர்ச்சி பெறு குண சீலம் அருள்வாயே)*

*311*

இரவிக்கை பொருந்தி எழுகின்ற, ஆபரணம் அணிந்த, கொங்கையை உடைய வஞ்சிக் கொடி போல்பவர்கள், மேகத்தின் கருநிறத்தை ஒத்து எழுகின்ற நீண்ட கூந்தலின் அழகுடையோர்கள், இளங்குயில் போல (இனிமை உள்ள) மொழி பேசிக் கொஞ்சுபவர்கள் - தெருவிலே-

மாட்சிமையுடன் (விளக்கத்துடன்) எதிர்ப்படுகின்ற காம மயக்கம் உண்டாக்க வல்ல மாய வித்தை வல்லவர்கள், சேல் மீனுக்கு நிகராய் எழுகின்ற கண்கள் மேம்பட்டு விளங்குபவர்கள், அழகுள்ள குழை அணிந்துள்ள - புடமிட்ட பொன் போன்றவர்கள் - ஆகிய பொது மாதர் மீதுள்ள மோக மயக்கால்-

சீரான ஞானமும் கல்வியும் ஒழுக்கமும் அற்ற அப் பொது மாதர்கள் மேலுள்ள மோகத்தால் நான் ஒளி மழுங்கி - நிறம்குன்றி - எனக்குள்ள அறிவும் அழிந்து உயிரை இழப்பதன் முன்பதாக-

சேவற்கொடி யோடுசி கண்டியின்
 மீதுற்றறி ஞோர்புகழ் பொங்கிய
 *தேசுக்கதிர் கோடியெ னும்பத மருள்வாயே;

போருற்றிடு சூரர்சி ரங்களை
 வீரத்தொடு பாரில ரிந்தெழு
 †பூதக்கொடி சோரிய ருந்திட விடும்வேலா-

பூகக்குலை யேவிழ மென்கயல்
 தாவக்குலை வாழைக ளுஞ்செறி
 போகச்செநெ லேயுதி ருஞ்‡செய்க ளவைகோடி;

சாரற்கிரி தோறுமெழும்பொழில்
 §தூரத்தொழு வார்வினை சிந்திடு
 **தாதுற்றெழு கோபுர மண்டப மவைசூழுந்-

---

* 'சதகோடி சூரியர்கள் உதயமென... ஒரு சோதி வீசுவதும் .. சீறடியே' (சீர்பாத வகுப்பு)

† பூத கொடி - பூத கோடிகள்; பூதங்களும் காக்கைகளும் என்றும் பொருள் கொள்ளலாம்; கொடி - காக்கை.

‡ செய்கள் - வயல்கள்.

§ தூரத் தொழுதாலே தணிகைமலை தரிசித்தோருடைய வினையை ஒழிக்கும் என்கின்றார்.

'அத்தலந் தன்னையாம் அடைகு வாமெனப்
புத்தியில் நினைப்பினும் புறத்திற் செல்லினும்
பத்தடி நடப்பினும் பரித்த நோயெலாம்
கொத்தொடும் அவர்புறம் வழிக்கொண் டோடுமே'

தணிகைப்புராணம் - அகத்தியர் 37. 'கல்லார கிரிச் சிகரம் காதலுடன் தரிசித்தோர்... கந்தவுல கெய்திடுவர்" - தணிகாசலப் புராணம் - கல்லாரகிரி - 7. இங்ஙனம், மலையைத் தூரத் தொழுதாலும் வினை சிந்திடும் தலங்கள்:-

'கருத்தங்கு பவமெலாம் தூரத்திலே நின்று
கண்டோர்க் கொழித்தருள்மலை'

- சேத்திரக்கோவை பிள்ளைத்தமிழ்.

(i) திருக்கழுக்குன்றம்:

'சேய தற்பர வுருத்திரகோடி மாச் சிகரம் தூய ரெத்தனை தூரத்திற் காண்கினும்.... சிவபதத் தடைவார்"- (உருத்திர கோடி - திருக்கழுக்குன்றம்)- திருக்கழுக்குன்றப் புராணம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

சேவலங் கொடியுடன் மயில் மீது நீ ஆரோகணித்து (ஏறி) அறிஞர்கள் பாடிய உனது புகழ் நிறைந்துள்ள, ஒளிச்சோதி கோடி யெனும்படி வீசுகின்ற திருவடியைப் பாலித்தருளுக;

போர்க் கோலம் பூண்டெழுந்த சூரர்களின் (அசுரர்களின்) தலைகளை வீரத்துடன் (இந்தப்) பூமியில் அரிந்து, (அப்போர்க் களத்தில்) எழுந்துள்ள பூதகணங்களும், காக்கை-களும் (அல்லது பூத கோடிகள்) (களத்தில்) ரத்தத்தை உண்ணும்படி செலுத்தின வேலனே!

பாக்கு மரங்களின் (கமுக மரங்களின்) குலைகள் சாய்ந்து விழும்படி மிருது (உடல்) வாய்ந்த கயல்மீன்கள் தாவ, அந்தக் குலைகள் வீழ்வதால் கீழுள்ள வாழைக் குலைகளும், நெருங்கிச் செழிப்புடன் வளர்ந்துள்ள செந்நெற் கதிர்களும், உதிர்ந்து விழும் வயல்கள் (கோடிக் கணக்கானவைகளும்) பலப்பலவும்,

சாரற்கிரி (கிரிச்சாரல் - மலைச் சாரல்) தோறும் எழுந்து வளர்ந்துள்ள சோலைகளும், தூரத்தே கண்டு தொழுபவர்-களுடைய வினையைத் தொலைக்கும் பொன் மயமான கோபுரங்-களும், மண்டபங்களும், சூழ்ந்துள்ள (தணிகையம்பதிப் பெருமாளே)!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

**(ii) ஸ்ரீசைலம்** (திருப்பருப்பதம்)

'சேண் பார்த்தவர்க்கு வீடருள் சீபர்ப்பத நற்றலம்"
(ஞானவரோதயர் உபதேச கண்டம் 1166.)

**(iii) திருவாரூர்** "ஆரூரைத் தூரத்தே தொழுவார் வினை தூளியே" (அப்பர் - V -7-9).

* *தூரது - பொன்.

தார்மெத்திய தோரண மென்தெரு
*தேர்சுற்றிய வார்பதி அண்டர்கள்
தாமெச்சிய நீள்தணி யம்பதி பெருமாளே.† (63)

## 312. அகப்பொருள் - தரிசனம் பெற

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்த தனதான

வெற்றிசெய வுற்றகழை விற்குதைவ ளைத்துமதன்
விட்டகணை பட்ட விசையாலே-

வெட்டவெளி யிற்றெருவில் வட்ட‡பணை யிற்கனல்வி
ரித்தொளிப ரப்பு மதியாலே;

பற்றிவசை கற்றபல தத்தையர்த மக்கு §மிசை
பட்டதிகி ரிக்கு **மழியாதே-

பத்தியையெ னக்கருளி முத்தியைய ளித்துவளர்
பச்சைமயி லுற்று **வரவேணும்;**

நெற்றிவிழி பட்டெரிய நட்டமிடு முத்தமர்நி
னைக்குமன மொத்த கழல்வீரா-

---

* தேர் சுற்றிய ஊர் தணிகை என்றதனால் அருணகிரியார் காலத்தில் ரதோற்சவம் நடந்தது தணிகையில் என்பது தெரிகின்றது. பல ஆண்டு-களுக்கு முன் மலைமேல் உள்ள ரத வீதியில் ரதோற்சவம் நடந்து வந்தது. பல ஆண்டுகளாகத் தேர் இல்லை. தேர் ஒன்று செய்து ரதோற்- சவத்தை மீளச் செய்வித்தல் அன்பர்களின் கடமையாகும்.

† இந்தப் பாடலில், முருகன் திருவடி, சேவல், மயில், வேல் இவை வரும் பான்மை கவனிக்கற்பாலது.

‡ பணை - பறை.

$ இசைபட்ட திகிரி - புல்லாங்குழல்; திகிரி - மூங்கில்.

**மன்மதன் கணை, நிலவொளி, பெண்கள் வசைப் பேச்சு, குழல் ஓசை இவை காமம் மிக்கார்க்கு வேதனை தரும் - (பாட்டு 218பார்க்க).

கிண்கிணி மாலைகளையும் நிறைந்த தோரணங்களையும் கொண்ட அமைதி பூண்ட தெருக்கள் உள்ள பெரிய ஊர், தேர் சுற்றி வரும் பெரிய ஊர் - தேவர்கள் யாவரும் புகழும் பெரிய ஊராகிய **தணிகை**யம்பதிப் பெருமாளே!

(தேசுக்கதிர் கோடி யெனும் பதம் அருள்வாயே)

# 312

செயமே தரவல்ல கரும்பு வில்லின் முனையை வளைத்து மன்மதன் செலுத்தின பாணங்கள் மேலே தைத்த வேகத்தாலும்-

வெட்ட வெளியிடங்களிலும், தெருக்களிலும், வட்டமான பறை போல விளங்கி - நெருப்பை வீசி ஒளியைப் பரப்புகின்ற நிலவாலும்-

பற்றிவசை (வசை மொழிகளைக் கொண்டு) அவை-களையே பயின்று பேசும் பல மாதர்களின் (வசைப்-பேச்சாலும்) இசையை எழுப்பும் மூங்கிலாலும் (புல்லாங் குழலின் இசையாலும்) நான் மெலிவுற்று அழியாமல்-

பத்தி நெறியை எனக்குத் தந்துதவி முத்தியையும் அளித்துதவ உயர்ந்த பச்சை மயில் மீது ஏறி வர வேண்டுகின்றேன்.

*நெற்றிக் கண்ணின் தீ பட்டு (மன்மதன்) எரிந்துபோக, நடனம் செய்த பெரியோன் (சிவபிரான்) †உன்னைத் தியானிக்க அவர் மனத்தில் பொருந்தி எழுந்தருளிய திருவடிகளை உடைய வீரனே! (அவர் மனத்துக்கு இசைந்து - இனிமைதரு கழல் வீரனே!

---

*ஒரு வீரச் செயலின்பின் இறைவர் ஒரு நட்டம் இடுவர் (நடனம் செய்வார்). காமனை (மன்மதனை)ச் சிவபிரான் எரித்த தலம் திருக்குறுக்கை. அது மாயூரத்துக்கு அருகில் உள்ள தலம். அங்கே உள்ள நடன சபையின் பெயர் " காமாங்கநாசனி சபை" (வேதாரணிய புராணம் - சபைச் சருக்கம் - 6)

† சிவபிரானுடைய தியானத்தில் இருந்தது முருகன் திருவடி - "சடைப்பரமர் சித்தத்தில் - வைத்த கழலோனே" என்றார் 306-ஆம் பாடலிலும்.

நெய்க்கமல மொக்குமுலை மெய்க்குறவி யிச்சையுற
நித்தமிறு கத்த முவுமார்பா;

*எற்றியதி ருச்சலதி சுற்றியதி ருத்தணியில்
எப்பொழுது நிற்கு முருகோனே-

எட்டசல மெட்டநில முட்டமுடி நெட்டசுரர்
இட்டசிறை விட்ட பெருமாளே. (64)

## வள்ளிமலை

(இது சித்தூர் மாவட்டத்திலுள்ளது. வட ஆற்காடு மாவட்டம் திருவல்லம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 14.கி. மீட்டர் மகா புநிதமான தேவீபீடம். சுவாமி வள்ளியம்மையுடன் களவிற் பல திருவிளையாடல்கள் செய்து அவ்வம்மையை மணந்த பழம்பதி; இத்தலத்துத் திருப்புகழ்ப் பாடல்களையுங் கன்னபுரத்துத் (815) திருப்புகழையுங் காண்க. மலை வலம் வரலாம். வள்ளி நீராடிய சுனை, கணேசர் குண்டு முதலிய காட்சிகளை மலைமீது காணலாம். 1916-ஆம் ஆண்டு முதல் 1950 -ஆம் ஆண்டு வரையில் வள்ளிமலை உச்சியில் தவநிலையில் இருந்து நாடெங்கும் திருப்புகழ்ப் பாக்களை அவைக்குப் பொருத்தமான தெய்விக இசையிற் பரப்பிய திருப்புகழ் சுவாமிகள் என்ற ஸ்ரீ சச்சி தானந்த சுவாமிகள் இருந்த ஆசிரமம் வள்ளிமலை உச்சியில் இருக்கின்றது.)

### 313. யமன் வரும் நாளில் திருவடியைப் பெற

தய்யதன தான தய்யதன தான
தய்யதன தானத் தனதான

†அல்லிவிழி யாலு முல்லைநகை யாலு
மல்லல்பட ஆசைக் கடலீயும்

அள்ளவினி தாகி நள்ளிரவு போலு
முள்ளவினை யாரத் தனமாரும்;

---

* "திரைக்கடல் சூழும் புவிக்குயி ராகும் திருத்தணி" என்றார் 258 - ஆம் பாடலில்.

† அல்லி - தாமரை - "அல்லிமாதர் புல்க நின்ற ஆயிரந் தோளன்" பெரிய திருமொழி [illegible]

தேன் பொருந்திய (கமலம் ஒக்கும் எனவும்) தாமரை (மொக்குப்) போன்ற கொங்கையை உடைய உண்மை நிலை தவறாத குறத்தி (வள்ளி) அன்பு கொள்ளும்படி தினந்தோறும் அவளைக் கெட்டியாய் அணைக்கும் மார்பனே!

(அலை) வீசும் கடல் சூழ்ந்த (பூமியில்) திருத்தணி (என்னும் தலத்தில்) எப்பொழுதும் வீற்றிருக்கும் முருகனே!

எட்டு அசலம் (அட்டகிரிகள் வரையிலும்) எட்டிப் பரவவும், நிலம் முழுமையும் (பரவவும்), தங்கள் முடியை (அரச சின்னத்தை அரசாட்சி அதிகாரத்தை)த் தள்ளிச் செலுத்தின அசுரர் இட்ட (தேவர்) சிறையை நீக்கின (விடுவித்த) பெருமாளே.

(பச்சை மயிலுற்று வரவேணும்)

---

## 313

தாமரை யிதழ் ஒத்த கண்ணாலும், முல்லை யரும்பு ஒத்த பல்லாலும், துயரம் உறும்படி காம - ஆசைக் கடலை (ஆசைப் பெருக்கைத்) தருகின்ற-

*அள்ளலாம் போல இனிதாக அமைந்து, நடு இரவு போல (அடர்ந்த இருள்) உள்ளதான செய்கைகளை உடையவர்களான அந்த நிறைந்த கொங்கைகளை உடைய (தான் பழகியிருந்த அந்த விலை மகளிரும் பொது மகளிரும்) (அல்லது நள்ளிரவு போன்ற உள்ளத்தையும் செய்கைகளையும் உடைய பொது மகளிரும்) அந்தச் செல்வம் நிறைந்த

---

* "அள்ளிக் கொளலாய் அடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்- உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதயமே போன்ற திரா"

என்று பொது மகளிரின் உள்ளத்தை இவ்வாறே விளக்கியுள்ளார் புகழேந்திப் புலவர்

*இல்லுமிளை யோரு மெல்ல அயலாக
வல்லெருமை மாயச் †சமனாரும்;

எள்ளியென தாவி கொள்ளைகொளு நாளில்
**உய்யவொரு நீபொற் கழல்தாராய்;**

‡தொல்லைமறை தேடி யில்லையெனு நாதர்
சொல்லுமுப தேசக் குருநாதா-

துள்ளிவிளை யாடு புள்ளியுழை நாண
§வெள்ளிவன மீதுற் றுறைவோனே;

வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லைவடி வேலைத் தொடுவோனே-

வள்ளிபடர் சாரல் **வள்ளிமலை** மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே. (1)

## 314. திருவடியைப் பெற

தய்யதன தான தய்யதன தான
தய்யதன தானத் தனதான

**ஐயுமுறு நோயு மையலும வாவி
னைவருமு பாயப் பலநூலின்-

அள்ளல்கட வாது துள்ளியதில் மாயு
முள்ளமுமில் வாழ்வைக் கருதாசைப்;

---

* "இல்லும் பொருளும் இருந்த மனையளவே" - சேத்திரத் திருவெண்பா.

† சமன்வரும் அன்றைக் கடியிணை தரவேணும்' திருப்புகழ்-95.

‡ 'வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே'- திருவாசகம் - சிவபுராணம். "செஞ் சொன் மறைக் கெட்டானை" - திருப்பரங்குன்றப் புராணம்.

§ எள்ளி - எள்ளினவள் (வள்ளி). வள்ளி யிருந்த வனத்தில் முருகவேள் திரிந்து இருந்தது - "வெங்காடும் புனமும் கமழும் கழலே" "தினையோ டிதணோடு திரிந்தவனே" - கந்- அநுபூதி. 44, 40.

** ஐ - கோழை. "ஐ யினால் மிடறு அடைப்புண்டு"- அப்பர் - VI - 61-7.

மனைவியும் (அல்லது வீடும்), இளைஞர்களும் (தனக்கு வயதிற் சிறியவர்களும்) மெதுவாக வேறாக (நிற்கும்படி), வலிய எருமை (மீது வரும்) மாயம் வல்ல யமனாரும் - (என்னை)

இகழ்ந்து என்னுடைய உயிரைக் கொள்ளை யடித்துக் கொண்டு போகும் (அந்த) தினத்தில் (நான்) உய்யுமாறு ஒப்பற்றவனாகிய நீ உனது அழகிய கழலை (எனக்குத்) தந்தருளுக.

பழைய வேதங்கள் தேடி நின்று காணுதற்கு இல்லை என்று முறையிடுகின்ற நாதராம் சிவபிரான் (உன்னிடம் கற்றுச்) சொல்லும் உபதேசத்தைச் செய்த குரு நாதனே!

துள்ளி விளையாடுகின்ற புள்ளி மானும் நாணும்படி (வெட்கும்படி) எள்ளினவளாகிய (இகழ்ந்தவளாகிய) வள்ளி (வாழ்ந்திருந்த) (வள்ளிமலைக்) காட்டில் நின்று தங்கினவனே!

வல் - அசுரர் (வலிமை வாய்ந்த அசுரர்கள்) மாளவும் (இறக்கவும்), நல்ல சுரர் (தேவர்கள்) வாழவும், விரைவில் கூரிய வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

வள்ளிக் கொடி படர்ந்திருந்த சாரல் கொண்ட (மலைப் பக்கங் கொண்ட) **வள்ளிமலையில்** வீற்றிருக்கும் வள்ளி மணவாளப் பெருமாளே!

(உய்ய ஒரு நீ பொற் கழல் தாராய்)

## 314

கோழையும், சேரும் நோய்களும், மோகங்களும், ஆசைகளை (எழுப்பும்) ஐம் பொறிகளும், அவைகளின் சூழ்ச்சிகளும், பல (கலை) நூல்களும் - (ஆகிய இந்தச்)

சேற்றினைத் தாண்டாது துள்ளி அவைகளுக்கு உள்ளேயே விழுந்து இறந்து போகின்ற உள்ளமும், மனை வாழ்க்கையையே எண்ணுகின்ற ஆசையும்

பொய்யுமக லாத மெய்யைவள ராவி
உய்யும்வகை யோகத் தணுகாதே-

புல்லறிவு பேசி யல்லல்படு வேனை
நல்ல **இரு தாளிற்** **புணர்வாயே;**

மெய்* பொழில் நீடு தையலை†மு நாலு
செய்யபுய மீதுற் றணைவோனே-

வெள்ளையிப மேறு வள்ளல்கிளை வாழ
‡வெள்ளமுது மாவைப் பொருதோனே;

வையமுழு தாளு மையமயில் வீர
§வல்லமுரு காமுத் தமிழ்வேளே-

வள்ளிபடர் சாரல் **வள்ளிமலை** மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே. (2)

## 315. மனோலயம் பெற

தய்யத்த தான தந்த தய்யத்த தான தந்த
தய்யத்த தான தந்த தனதான

கையொத்து வாழு மிந்த மெய்யொத்த வாழ்வி கந்து
பொய்யொத்த வாழ்வு கண்டு மயலாகிக்-

கல்லுக்கு நேரும் வஞ்ச வுள்ளத்தர் மேல்வி ழுந்து
கள்ளப்ப யோத ரங்க ளுடன்மேவி;

உய்யப்ப டாமல் நின்று கையர்க்கு பாய மொன்று
பொய்யர்க்கு மேய யர்ந்து ளுடைநாயேன்-

---

* பொழிலில் வள்ளியை அணைந்தது:- "குமரன் ஆங்கண் உறைமதுப் பொதும்ப ருள்ளால் ஒண்டொடி மாதைக் கொண்டு நிறைமகிழ் திளைப்பப் புக்கு" - தணிகைப்புரா - களவு - 181.

† மு நாலு - பன்னிரண்டு.

‡ வெள்ளம் - சமுத்திரத்தினிடத்தில்.

§ வல்லம் என்பது திருவ(ல்)லம்; வள்ளிமலைக்குத் தெற்கு 14 கி. மீட்டரில் உள்ளது. பாடல் 274- பார்க்க.

பொய்யும் நீங்காத (இந்த) உடலை வளர்க்கின்ற உயிர் உய்யும்படியான (நல்ல) யோகவழிகளை (நான்) அணுகாமல்

இழிவான அறிவுப் பேச்சுக்களைப் பேசித் துன்பம் உறுகின்ற என்னை (உனது) நல்ல திருவடியிணைகளிற் சேர்த்தருளுவாயாக-

மெய்யனே! (வள்ளி மலைப்) பொழிலில் நீண்ட நேரம் தையலை (வள்ளியை) முந்நான்கு (பன்னிரண்டு) சிவந்த புயங்களும் (அவள்) மேலே பட அணைந்தவனே!

வெள்ளை யானை மேல் ஏறும் வள்ளலுடைய (தேவேந்திரனுடைய) சுற்றத்தாராய தேவர்கள் வாழக், கடலிடத்தே (நூற்றெட்டு யுகம் ஆண்டு) முதுமை உற்ற மாமரமாய் நின்ற சூரனுடன் போர் புரிந்தவனே!

உலகு முழுமையும் ஆளும் ஐயனே! மயில் வீரனே! வல்லம் என்னும் தலத்தில் (வீற்றிருக்கும்) முருகனே! முத்தமிழ் வேளே!

வள்ளிக் (கிழங்கின்) கொடி படர்கின்ற மலைச்சாரல் உள்ள **வள்ளிமலையில்** வீற்றிருக்கும் வள்ளி மணவாளப் பெருமாளே!

(நல்ல இருதாளிற் புணர்வாயே)

## 315

செய்யத் தக்கதை அறிந்து அதன்படி வாழும் அந்த மெய்யான வாழ்க்கையை விடுவித்து, பொய்யான வாழ்க்கையைப் பார்த்து அதில் - மோகம் கொண்டு

கல்லே போன்ற (கடின) வஞ்சக உள்ளத்தராம் (வேசையர்) மேல் விழுந்து, அவர்களுடைய கள்ளத்தனம் பொருந்திய கொங்கைகளின் மேற் பொருந்தி-

உய்யும் வழியிற் சேராது நின்று, வஞ்சகருடனும் உபாயம்(தந்திரம்) பொருந்திய பொய்யருடனுமே கலந்து சோர்வடைந்து உள்ளம் குலைகின்ற அடியேனுக்கு.

உள்ளப் *பெ றாக நின்று தொய்யப்ப டாம லென்று
†முள்ளத்தின் மாய்வ தொன்றை மொழியாயோ;

ஐயப்ப டாத ‡ஐந்து பொய்யற்ற சோலை தங்கு
தெய்வத்தெய் வானை கொங்கை புணர்வோனே-

§அல்லைப்பொ றாமு ழங்கு சொல்லுக்ர சேவ லொன்று
வெல்லப்ப தாகை கொண்ட திறல்வேலா;

**வையத்தை யோடி யைந்து கையற்கு வீசு தந்தை
மெய்யொத்த நீதி கண்ட பெரியோனே-

வள்ளிக்கு ழாம டர்ந்த **வள்ளிக்கல்** மீது சென்று
வள்ளிக்கு வேடை கொண்ட பெருமாளே. (3)

## 316. அன்பரல்லாதார் இணக்கம் அற

தய்யத்த தான தந்த தய்யத்த தான தந்த
தய்யத்த தான தந்த தனதான

முல்லைக்கு மார னங்கை வில்லுக்கு மாதர் தங்கள்
பல்லுக்கும் வாடி யின்ப முயலாநீள்-

முள்ளுற்ற கால் மடிந்து கொள்ளிக்குள் மூழ்கி வெந்து
பள்ளத்தில் வீழ்வ தன்றி யொருஞான;

---

* பெறாக - பேறாக. †உள்ளத்தின் மாய்வு - மனோ லயம்.

‡ ஐந்து... சோலை - சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரி சாதம், கற்பகம் என்னும் ஐவகைத் தருக்கள் நிறைந்த சோலை.

§ இரவு நீங்கச் சேவல் கூவுதலால் - இரவைப் பொறுக்காத (சகிக்காத) சேவல் என்றார். சூரியனைக் கூவி அழைப்பதால் சூரியனைக் கக்கும் (உமிழும்) சேவல் என்றார் - 387-ஆம் பாடலில். "வெயிலுமிழ்தொடி" சித்துவகுப்பு 16.

**சிவன் வேறு முருகன் வேறு என்பதற்கு இல்லாமல் சிவனே முருகபிரான் ஆதலின், சிவனுடைய (அல்லது தம்முடைய) சர்வவியாபக உண்மை நீதியை, ஒரு நொடியில் சகல உலகங்களையும் தாம் வலம் வந்து, முருகவேள் காட்டினர் என்ப.

உள்ளப் பேறாக நின்று (உள்ளத்தில் பெறற்கரிய செல்வமாக பாக்கியப் பொருளாக நின்று), சோர்வு அடையாமல் - எப்போதும் (நிலைத்துள்ள) மனோலயத்தைத் தருவதான (மனம் நசிவதான) ஓர் உபதேச மொழியைச் சொல்ல மாட்டாயா!

சந்தேகப்படாதவாறு (நிச்சயமாக) ஐந்து எனப்படும் பொய்யாத வகையில் (கேட்டதைத் தரும்) கற்பக விருட்ச சோலையில் தங்கி வளர்ந்த தெய்வ மகள் தேவ யானையின் கொங்கையைச் சேர்பவனே!

இரவைப் பொறாதபடி ஒலிக்கும் சொல்லை உடைய உக்ரமான சேவல் பொருந்தும் வெற்றி கொண்ட அந்தக் கொடியைக் கொண்ட பராக்ரம வேலனே!

உலகம் முழுமையும் ஓடி வலம் வந்து, ஐந்து திருக்கரங் களைக் கொண்ட கணபதிக்கு (மாதுளங்கனியை அல்லது மாங்கனியைத்) தந்த தந்தை சிவபிரானுடைய உண்மைக்குப் பொருந்திய நீதி முறையைத் தெரிவித்த பெரியோனே!

வள்ளிக் (கொடிகளின்) கூட்டம் நெருங்கியுள்ள **வள்ளி-மலை** மேலேறிச் சென்று வள்ளிவேட்டை யாடின பெரு-மாளே! (வள்ளி நாயகியின் மீது விருப்பம் மோகம் கொண்ட பெருமாளே!)

(உள்ளத்தின் மாய்வ தொன்றை மொழியாயோ)

## 316

(மன்மதனது) முல்லை மலர்ப்பாணத்துக்கும், மன்மதனது அழகிய கையில் உள்ள (கரும்பு) வில்லுக்கும், மாதர்களின் வசைப் பேச்சுக்கும் வாடி, இன்பத்தை அடைய முயன்று அதனால் நீண்ட-

முள் தைத்த கால் போல மடங்கிக் கிடந்து, (துன்பக்) கொள்ளி நெருப்பில் முழுகி (உள்ளம்) வெந்து, கீழ் நிலையில் விழுவதல்லாமல் (கீழ் நிலையில் விழுவதோடு), ஒப்பற்ற ஞான-

எல்லைக்கு மார ணங்கள் சொல்லித்தொ ழாவ ணங்கு
மெல்லைக்கும் வாவி நின்ற னருள்நாமம்-

எள்ளற்கு மால யர்ந்து வுள்ளத்தி லாவ என்று
முள்ளப்பெ றா*ரிணங்கை யொழிவேனோ;

†அல்லைக்க ‡வானை தந்த வல்லிக்கு மார்பி லங்க
அல்லிக்கொள் மார்ப லங்கல் புனைவோனே-

அள்ளற்ப டாத கங்கை வெள்ளத்து வாவி தங்கி
§மெள்ளச்ச ரோரு கங்கள் பயில்நாதா;

**வல்லைக்கு மார கந்த தில்லைப்பு ராரி மைந்த
††மல்லுப்பொ ராறி ரண்டு புயவீரா-

வள்ளிக்கு ழாம டர்ந்த வள்ளிக்கல் மீது சென்று
வள்ளிக்கு வேடை கொண்ட பெருமாளே. (4)

---

* இணங்கை - இணக்கத்தை.

† அல்லைக்கு - இரவில்; இரவில் வள்ளியைக் களவாடி முருகவேள் அவள் குடிசையிலிருந்தும் கொண்டு போனார்.

"கன்னல்மொழிக்... கெண்டையாளைக் கன்னமிடப் பின்னிரவில்... கன்னிலையிற் புகா வேர்த்து நின்ற வாழ்வே!" (திருப்புகழ் 815)

"நீர் கங்குற் போதில் ஈங்குவந் திடுவ தொல்லாது... ஆங்கவள் தன்னைக் கொண்டே அகலுதிர் அடிகள் என்றாள்"-

" நள்ளிருள் யாமந் தன்னில் இறைவ நீர் நடப்பதே!"
கந்த புரா - வள்ளி திருமணம் 162, 165.

‡ ஆனை தந்த வல்லி: "கோற்றொடிக் கொடிச்சியை..இலை. வேற்கைம் மலர்த்தனி இளவற்கு .. கானத்து ...புக்கு உறுத்தவன்"
- தணிகைப்புராணம். (விநா - காப்பு)

§ "சரவணத்தின் வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந்தருளினானே" -கந்த புரா - திரு அவதார - 96.

** வல்லைக் குமாரன். வல்லை-வல்லக் கோட்டை எனவும் கொள்ளலாம். வல்லக் கோட்டை என்பது கோடை நகர் - சிங்க பெருமாள்

அடுத்த பக்கம் பார்க்க

எல்லையையும், வேதங்கள் சொல்லித் தொழுது வணங்கும் எல்லையையும் அணுகாது விலகித்தாண்டி, உன்னுடைய அருள் பாலிக்கும் திருநாமத்தை

இகழ்ந்து பேசுதற்கு ஆசை கொண்டு, (தமது) உள்ளத்தில் கடவுளே அபயம் என்னும் இரக்க உணர்ச்சியை என்றும் எண்ணப் பெறாதவர்களாய் இருக்கின்ற கீழ் மக்களது இணக்கத்தை (நட்பை) விட மாட்டேனோ!

இரவில் (இருளில்), அந்த ஆனை (கணபதி) தந்து உதவின கொடியன்ன வள்ளிக்கு (வள்ளி நாயகிக்கு) அவளது மார்பு விளங்கும்படித் தாமரையாலாய (உனது) மார்பிலிருந்த மாலையை அணிந்தவனே! (இருளில் வள்ளியை அழைத்துச் சென்று மணந்தவனே)

சேறு படாத கங்கை யாற்றில் (சரவண) மடுவில் தங்கி அங்கு மெல்லத் தாமரை மலரில் வீற்றிருந்த (பயின்ற) தலைவனே!

திருவல்லம் என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் குமரனே! கந்தனே! தில்லை (சிதம்பரத்தில்) உள்ளவரும், திரிபுரத்தை எரித்தவருமான சிவனது மைந்தனே! மல்யுத்தப் போருக்குப் பொருந்திய (திரண்ட) பன்னிரண்டு புயங்களைக் கொண்ட வீரனே!

வள்ளிக் கொடிகளின் கூட்டம் நெருங்கிய **வள்ளிமலை** மேற்சென்று வள்ளியம்மையைப் பெற வேட்டையாடிய (அல்லது விருப்பங் கொண்ட) பெருமாளே!

(உள்ளப் பெறார் இணங்கை ஒழிவேனோ)

---

முன் பக்கத் தொடர்ச்சி

கோயிலுக்கு வடமேற்கு 10 மைலில் உள்ள முருகன் கோயில். பாடல் 707 - 713 பார்க்க.

†† மல்லேபுரி பன்னிருவாகு - அநுபூதி 29.

## 317. பிறப்பற

தய்யத்த தாத்த தய்யத்த தாத்த
தய்யத்த தாத்த தனதான

கள்ளக்*கு வாற்பை தொள்ளைப்பு லாற்பை
†துள்ளிக்க னார்க்க யவுகோப-

கள்வைத்த தோற்பை ‡பொள்ளூற்ற காற்பை
கொள்ளைத்து ராற்பை பசுபாச;

அள்ளற்பை மாற்பை §ஞெள்ளற்பை சீப்பை
வெள்ளிட்ட சாப்**பி சிதமீரல்-

அள்ளச்††சு வாக்கள் சள்ளிட்டி ழாப்பல்
கொள்ளப்ப டாக்கை தவிர்வேனோ;

தெள்ளத்தி சேர்ப்ப ‡‡வெள்ளத்தி மாற்கும்
§§வெள்ளுத்தி மாற்கு மருகோனே-

சிள்ளிட்ட காட்டி லுள்ளக்$கி ரார்க்கொல்
புள்ள¶த்த மார்க்கம் வருவோனே;

---

* குவால் - கூட்டம். † துள் இக்கன் எனப் பிரிக்க.

‡ பொள் ளூற்ற - பொள்ளென வுற்ற: விரைந்து செல்லும்.

§ ஞெள்ளல் - தவறு. **பிசிதம் - இறைச்சி

✓ †† சுவாக்கள் - நாய்கள்.

§§ வெள் ளத்தி மால் - வெள்ளை யானையை யுடைய இந்திரன்.

‡‡ வெள் ளுத்தி மால் - வெள் ளுந்தி மால்: திருப்பாற்கடலையுடைய விட்டுணு; உந்தி - கடல்.

$ கிரார் - கிராதர் - இடைக்குறை.

¶ அத்தம் - காடு. காட்டின் கடிய வழியில் முருகவேள் சென்றது:-

" தினைவேடர் காவல் தங்கு மலைகாடெலாம் உழன்று" திருப்புகழ் 1270. "வலிய சிங்கமும் கரடியும் உழுவையும் உறை செழும்புனம் தினைவிளை யிதண்மிசை மறவர் தங்கள் பெண் கொடிதனை ஒருதிரு வுளநாடிச்... சென்று" - திருப்புகழ் 552

## 317

கள்ளத்தனம் (வஞ்சனை, பொய்) இவைகளின் நிறைவு கொண்ட ஒரு பை, ஓட்டைகளை உடைய மாமிசப் பை, துள்ளுகின்ற இக்கன் (கரும்பு வில்லைக் கொண்ட, மன்மதனுடைய சேட்டைகளினால் உண்டாகும் தளர்வு, கோபம் (அல்லது மிக்க கோபம்),

களவு இவைகளுக்கு இருப்பிடமாம் தோல் பை, விரைந்து செல்லும் தசவாயுக்கள் கொண்ட (காற்றடைத்த) பை, யமன் சூறையாடிக் கொண்டு போவதற்கு என அமைந்த செத்தையாம் பை, பசு (சீவான்மா), பாசம் (பந்தம், தளை) இவைகளுக்கு இடமாம்

சேற்றுப்பை (இவை நெருங்கும் பை), ஆசை மயக்கத்துக்கு இடமாம் பை, தவறுகளுக்கு (குற்றங்களுக்கு) இருப்பிடமாம் பை, சீ (சீழ்) சேருகின்ற பை, கலப்பிலாத (மிக்க) அசா (தளர்ச்சி) (இவற்றோடு கூடியதாய்), இறைச்சி, ஈரல் (உடம்பிலுள்ள உறுப்பு)- (இவற்றை)

அள்ளி உண்ண வேண்டி நாய்கள் சள்ளிட்டு (குலைத்தும்), இழுத்தும் பற்களில் கொள்ளுகின்ற இந்த யாக்கையை (உடலை) ஒழிக்க மாட்டேனா!

தெளிவு (அறிவு) நிறைந்த அத்தி (யானை - தேவசேனையின்) தலைவனே! வெள்ளை யானையை உடைய இந்திரனுக்கும், திருப்பாற் கடலிற் (பள்ளி கொள்ளும்) திருமாலுக்கும் மருமகனே!

சிள் வண்டுகள் நிறைந்த காட்டில் உள்ள கிராதர் (மலை வேடர்கள்) கொல்கின்ற பறவைகளுள்ள கடிய காட்டு வழியில் (வள்ளியின் பொருட்டு) வந்தவனே!

*வள்ளிச்சன் மார்க்கம் †விள்ளைக்கு ‡நோக்க
வல்லைக்கு ளேற்று மிளையோனே-
வள்ளிக்கு ழாத்து வள்ளிக்கல் காத்த
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே. (5)

## 318. சமய வாதத் துன்பு அற

தய்யத்த தாத்த தய்யத்த தாத்த
தய்யத்த தாத்த தனதான

வெல்லிக்கு வீக்கு முல்லைக்கு வீக்கு
வில்லிக்க தாக்க ருதும்வேளால்-
வில்லற் றவாக்கொள் சொல்லற்று காப்பொய்
யில்லத் துறாக்க வலைமேவு;
பல்லத்தி வாய்க்க அல்லற் படாக்கை
நல்லிற் பொறாச்ச மயமாறின்-

---

*வள்ளிச் சன்மார்க்கம்:- இதற்கு 'வள்ளி அநுட்டித்த நன்னெறி' என்பது பொருள். வள்ளி அநுட்டித்த நிலைதான்" தன்னை மறந்தாள் தன் நாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" என அப்பர் சுவாமிகள் குறிப்பிட்ட நிலை; இதனால் பெறப்படுவது யாதோ எனின் - "யாரொருவர் தன்னை யிழந்து (யான் - எனது என்பன அற்று)த் தலைவனை நாடுகின்றனரோ அவரை இறைவன் தானே நாடிவந்து அருள்புரிவான்" என்பது.

வள்ளியம்மை கைப்பற்றி ஒழுகின இந்த நன்னெறியே இறைவனை வசப்படுத்தக் கூடிய நெறி என்றும், இந்த ரகசிய நெறியைத் தான் முருகபிரான் சிவபிராற்கு உபதேசித்தனர் என்றும் அருணகிரியார் இந்தப் பாட்டில் வெளியிடுகின்றார். இதன் விரிவை "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்" என்னும் எனது நூலில் பக்கம் 299-302- பார்க்கவும்.

† விள் ஐக்கு - வினவிய தாதைக்கு.

‡ நோக்க வல்லைக்குள் - நோக்கம் - கண்ணொடிப் பொழுது, (கண் இமைக்கும் நேரம்); வல்லை- வல்லே - விரைவில். ஒரு க்ஷணநேரம் தவநிலையில் இருந்து சிவபிரான் முருகவேளிடம் உபதேசம் பெற்றாராதலின் திருத்தணிகைக்கு க்ஷணிகாசலம் (க்ஷணிக வெற்பு) எனப் பெயர் போந்தது.

(அடுத்த பக்கம் பார்க்க)

"வள்ளிச் சன்மார்க்கம்" (வள்ளி அநுட்டித்த நன்னெறி) என்னும் உபதேசத்தை - (ரகசிய உண்மைப் பொருள் எது ஓதுவாயாக என்று) கேட்ட தந்தைக்கு (சிவபிராற்கு)க் கண்ணிமைப் பொழுதில் (ஒரு க்ஷண நேரத்தில்) விரைவில் அவருடைய செவியிலேற்றிய (உபதேசித்த) இளையவனே!

வள்ளிக்கொடிகள் கூட்டமாய் அடர்ந்த **வள்ளிமலைத்** (தினைப் புனத்தில்) காவல் பூண்டு காத்திருந்த வள்ளி நாயகியார்க்கு வாய்த்த பெருமாளே!

(ஆக்கை தவிர்வேனோ)

# 318

வெல்லி குவிக்கும் - உலகத்தை வென்ற குவிக்கத் தக்க,-முல்லை கை - முல்லை மலர்ப்பாணந் தரித்த கையினையுடைய, - வீக் குவில் இக்கதா கருதும் வேளால் - நாண் கட்டிய வில் கரும்பாக விரும்பிய மன்மதனால், (யாரையும் வென்று அடக்கத்தக்க முல்லை மலர்ப் பாணம் ஏந்திய கையில் (சுரும்பு) நாண் கட்டிய கரும்பை வில்லாக விரும்பி எடுத்துள்ள மன்மதனாலும்).

வில் அற்ற - ஒளி மழுங்கி, அவா கொள் சொல் அற்று- ஆசை கொண்டுரைக்குஞ் சொல்லும் போய், - உகா - (மனம்) நெகிழ்ந்து, - பொய் இல்லத்து உறா - (அதனோடு) பொய் வாழ்வுடைய இல்ல த்திற் சென்று - கவலை மேவு, (ஒளி மழுங்கி, ஆசை கொண்டு பேச்சும் சொல்லும் அடங்கி (நீங்கி), மனம் தளர்ந்து, பொய் வாழ்வுடைய இல்லத்தில் இருந்து கவலை சேர்கின்ற)

பல் அத்தி வாய்க்க - (அங்கே) பல கவலைக் கடல் நேர - அல்லல் படு ஆக்கை - (அவற்றின் மூழ்கித்) துன்பப் படும் இவ்வுடல் உடையேன், - நல்லில் பொறா - நன்மார்க்கத்தில் தரியாத, - சமயம் ஆறின், அறுவகைச் சமயத்து [பல (துன்பக் கடல்) கூடிட, அதனால் துயரம் அடையும் இந்த உடலை உடைய நான் நல்லிடத்தைக் காணாத (நல்வழியை அறியாத) ஆறு சமயங்களின்]

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

" பணிகிள ராரப் பண்ணவன் முருகற் படர்ந்து அருந்தவத்தினை யாங்குக் கணிகமே புரிந்து கருத்து முற்றுறலாற் கணிக வெற்பெனப் பெயர் விளங்கும்" - தணிகைப்புராணம்- வீராட்ட - 121.

பல்லத்த மார்க்க வல்லர்க்கர் மூர்க்கர்

*கல்விக் கலாத்த லையலாமோ;

அல்லைக்கொல் வார்த்தை சொல்லிக்கி தோத்து

சொல்குக்கு டார்த்த இளையோனே-

அல்லுக்கு மாற்றி னெல்லுக்கு மேற்புல்

கெல்லைப்ப டாக்க ருணைவேளே;

வல்லைக்கு மேற்றர் தில்லைக்கு மேற்றர்

வல்லிக்கு மேற்ற ரருள்வோனே-

வள்ளிக் குழாத்து வள்ளிக்கல் காத்த

வள்ளிக்கு வாய்த்த பெருமாளே. (6)

---

* சமய வாதக் கலைகளை வேண்டாவெனல் - பாடல் 289 பார்க்க.

பல் அத்த மார்க்க - (அறுவகைச் சமயத்துப்) பல பொருள் மார்க்கத்தையுடைய, - வல் அர்க்கர் மூர்க்கர் - வல்லரக்கராகிய மூர்க்கர்களுடைய, கல்விக் கலாத்து அலையல் ஆமோ- (குதர்க்க வாதக்) கல்விப் போரிலேயம் புகுந்து வருந்தலாகுமா? (பலபொருள் கொண்ட வழிகளிற் செல்லும் வல் அரக்கர் போன்ற மூர்க்கர்களின் குதர்க்க வாதக் கல்விப் போரில் வருந்தலாமா)

அல்லைக் கொல் வார்த்தை சொல்லிக்கு - இராக்காலம் ஒழியாதா என்னும் சொல்லையுடைய ஒருதலைக் காமமுற்ற தலைவிக்கு, - இதம் ஒத்து சொல் - இதமாக அவளோ டொத்து இரவை யொழிக்குங் குரலாகக் கொக்கரிக்கின்ற, - குக்குடம் ஆர்த்த இளையோனே - சேவலைக் கொடியின்கண் ஆர்த்த முருகனே! (இரவுப் பொழுது போகாதா (பொழுது விடியாதா) என்று சொல்லிக் கொண்டிருக்கும் தலைவியின் (கவலையை ஒழிப்பது போல) அவளுக்கு ஒத்து (அவளுக்கு இன்பம் உண் டாகும்படி) (இரவை ஒழிக்குங் குரலுடன்) கொக்கரிக்கின்ற சேவலைக் கொடியாக விளங்க வைத்திருக்கும் இளையோனே!)

அல்லுக்கும் ஆற்றின் எல்லுக்கும் மேல் - இவையும் சிறிது வழி தெரிவிக்கும் பகலையு ங் கடந்த மேலிடத்தில், அதாவது கேவல சகலங் கடந்த நிலையில், புல்கு எல்லைபடா கருணை வேளே - எழுந்தருளியிருக்கின்ற அளவுபடாத தயாசமுத்திர மாகிய அழகனே! (இரவுக்கும் அதற்கு மாறான பகலுக்கும் (இரவு பகலுக்கும் மேலாக உள்ள) (இரவு பகல் கடந்த சுத்த நிலையில் உள்ள) வேளே: அளவுக்கு அகப்படாத கருணை வேளே!)

வல் ஐக்கும் ஏற்றர் - வலிய அழகாகிய இடப வாகனத்தை யுடைய வரும் - தில்லைக்கும் ஏற்றர் வல்லிக்கும் ஏற்றர் - தில்லைப் பதிக்கும் சிவகாமிவல்லிக்கும் ஏற்றவருமாகிய சிவபெருமான், அருள்வோனே - ஈன்றருளிய குமாரனே! (வலிய அழகுள்ள இடபவாகனத்தை உடையவர் (அல்லது திருவல்லம் என்னும் தலத்தில் எழுந்தருளி யுள்ளவர்), சிதம்பரம் என்னும் தலத்துக்கும் ப்ரீதியுள்ளவர். சிவகாமவல்லியையும் (இடது பாகத்தில்) ஏற்றுக் கொண்டவர் ஆகிய சிவபிரான் அருளிய புதல்வனே!)

வள்ளிக் குழாத்து வள்ளிக் கல் காத்த - கூட்டமாகிய வள்ளிக் கொடிகள் அடர்ந்த வள்ளி மலையைக் காத்த, - வள்ளிக்கு வாய்த்த பெருமாளே - வள்ளி நாயகியாருக்கு வாய்த்த பெருமாளே . (வள்ளிக் கொடிகளின் கூட்டமுள்ள **வள்ளிமலையில்** (தினைப் புனத்தைக்) காத்த வள்ளி நாயகிக்கு வாய்த்த பெருமாளே!)

(சமயமாறின் - கல்விக் கலாத்து அலையலாமோ)

## 319. உண்மைப் பொருளைக் காண

தனதன தனதன தனதன தனதன
தய்யத்த தாத்த தனதான

ககனமு *மநிலமு மனல்புனல் நிலமமை
கள்ளப் புலாற்கி ருமிவீடு-

கனலெழ மொழிதரு சினமென மதமிகு
கள்வைத்த தோற்பை சுமவாதே;

யுகஇறு திகளிலு மிறுதியி லொருபொருள்
உள்ளக்க ணோக்கு மறிவூறி-

ஒளிதிக ழுருவுரு வெனுமறை யிறுதியி
†லுள்ளத்தை நோக்க அருள்வாயே;

ம்ருகமத பரிமள விகசித ‡நளினநள்
வெள்ளைப் பிராட்டி §இறைகாணா-

**விடதர குடிலச டிலமிசை ††வெகுமுக
வெள்ளத்தை யேற்ற பதிவாழ்வே!

---

*அநிலம் - காற்று.

† "உள்ளவர் காண வந்தருளாய்" - திருவாசகம் 22-1.

‡ நளின நள் வெள்ளைப் பிராட்டி இறை - சரசுவதி தேவியின் நாயகனான பிரமன். "வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு வெள்ளைக் கமலத்து வீற்றிருப்பாள்" என்றார் சரசுவதியை காளமேகப் புலவர்.

§ யாமே பரம், யாமே பரம் என்று பிரமனும் திருமாலும் தர்க்கித்துப் போர் புரியும்போது அவ்விருவர் நடுவில் பெரிய சோதி மலையாய் நின்றனர் சிவபிரான். அன்னமாய்ப் பிரமன் முடியைத் தேடியும், பன்றியாய் நிலத்தைக் கீண்டு திருமால் தேடியும் - அடிமுடி காணக் கிடைக்காமல் இருவரும் அயர்ந்தனர். இதுவே "திருஅண்ணாமலை" (அண்ணா - எட்ட முடியாத.)

"மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரும் மாதவனும்
அணிகொண்ட புண்டரிகம் அகலாத சதுமுகனும்
ஞானக்கண் ணதுகொண்டு நாடுமா றுணராதே
ஏனத்தின் வடிவாகி எகினத்தின் வடிவாகி

## 319

ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மண் எனப்படும் பஞ்ச பூதங்களால் ஆயதும், கள்ளத்தனத்துக்கு இடமானதும், மாமிசமும், புழுக்களும், உள்ளதுமான வீடு-

நெருப்பு எழுவது போலப் பேச்சுக்கள் பிறக்கின்ற கோபம் என்கின்ற ஆணவம் நிறைந்த களவுத்தனமுள்ள தோலாலாய பை - ஆகிய இந்த உடம்பை இனி நான் சுமக்காதபடி-

யுக முடிவுகளிலும் முடிவு அடையாத ஒப்பற்ற அந்த (பேரின்பப்) பொருளை எனது உள்ளத்தினிடத்தே கண்டு அறியக் கூடிய அறிவு ஊறி (பேரின்பப் பொருளை ஞானக் கண்ணால் அறியும் அறிவு ஊறி யெழ)

ஒளி விளங்குவ தென்றும், அருவமானதென்றும் (ரூபம் இல்லாதது என்றும்), உரு (ரூபம்) உள்ளதென்றும், வேதங் களின் முடிவில் நிற்பதாய், (என்றும் அழியாது நிற்பதாய்) உள்ள அந்தப் பொருளை யான் காண அருள் புரிவாயாக;

கத்தூரியின் மணம் வீசும் நறுமணமுள்ளதும், மலர்ந்துள்ளதுமான தாமரையின் நடுவில் வீற்றிருக்கும் அல்லது தாமரை விரும்பும் அல்லது தாமரையால் விரும்பப் படும் வெள்ளை நிறத்தியாம் சரசுவதியின் தலைவனான பிரமன் காண முடியாத-

நஞ்சைக் கண்டத்தில் தரித்தவரும், வளைந்த சடா பாரத்தின் மீது ஆயிர முகத்து நதியான கங்கை வெள்ளத்தை ஏற்ற தலைவருமான சிவபிரானது செல்வரே!

---

அடிதேடி அறிவலென அவனியெலாம் முழுதிடந்தும்
முடிதேடி வருவலென மூதண்ட மிசைப் பறந்தும்
காணரிய ஒருபொருளாய்க் களங்கமற விளங்கு பெருஞ்
சோணகிரி யெனநிறைந்த சுடரொளியாய் நின்றருள்வோய்"
(அருணைக் கலம்பகம்)

** விடதரர் - நஞ்சைக் கண்டத்தில் அடக்கியவர் - பாடல் 286- பார்க்க.

†† வெகுமுக வெள்ளம் - "கங்கை நங்கை ஆயிரமா முகத்தினொடு வானில் தோன்றும்" - அப்பர் VI- 18-51 "வெகுமுக குலப் பழைய உதக மகள்" வேடிச்சிகாவலன் வகுப்பு.

வகுளமு முகுளித *வழைகளு மலிபுன
வள்ளிக் †குலாத்தி கிரிவாழும்-

வனசரர் மரபினில் வருமொரு மரகத
வள்ளிக்கு வாய்த்த பெருமாளே (7)

குறிப்பு:- இப்பாடலில் ஒவ்வொரடியினும் இறுதியிலுள்ள பாகத்தை எடுத்தமைக்கப் பின்வருமாறு பிறிதொரு பாடலாமாறு காண்க:-

கள்ளப் புலாற்கி ருமிவீடு-கள்வைத்த தோற்பை சுமவாதே-
உள்ளக் கணோக்கு மறிவூறி-உள்ளத்தை நோக்க அருள்வாயே;
வெள்ளைப் பிராட்டி யிறைகாணா-வெள்ளத்தை யேற்ற பதிவாழ்வே-
வள்ளிக் குலாத்தி கிரிவாழும்-வள்ளிக்கு வாய்த்த பெருமாளே.

## 320. அகப்பொருள் (கடப்ப மாலை பெற) (நற்றாயிரங்கல்)

தய்யதன தந்த தய்யதன தந்த
தய்யதன தந்த தனதான

‡அல்லசல டைந்த வில்லடல நங்கன்
அல்லிமல ரம்பு தனையேவ-

அள்ளியெரி சிந்த பிள்ளைமதி தென்ற
லையமுது கிண்ட அணையூடே;

சொல்லுமர விந்த வல்லிதனி நின்று
தொல்லைவினை யென்று முனியாதே-

துய்யவரி வண்டு செய்யமது வுண்டு
துள்ளியக டம்பு தரவேணும் ;

---

*வழை - சுரபுன்னை.

† குலத் திகிரி என்பது குலாத்திகிரி என்றாயிற்று; வள்ளிக்குலத் திகிரி - சிரேட்டமாகிய வள்ளி மலை.

‡ 'அல்லிடை யடைந்த' என்றும் பாடம். அல்லின் அயலில் இரவின் அருகில் - மாலைப் பொழுதில் - "காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலருமிந் நோய்"- திருக்குறள் 1227.

மகிழ மரமும், அரும்புகள் விடும் சுரபுன்னையும் நிறைந்துள்ள, தினைப்புனமுள்ள, **வள்ளிமலை** என்னும் சிரேட்டமான மலையில் வாழ்கின்ற

வேடர் மரபில் தோன்றி வளர்ந்த ஒப்பற்ற பச்சை நிறமுள்ள வள்ளி நாயகிக்கு வாய்த்த பெருமாளே!

(உள்ளத்தை நோக்க அருள்வாயே)

களளத்துக்கும் மாமிசத்துக்கும் புழுக்களுக்கும் இடமான வீடு, களவுத்தனமுள்ள தோலாலான பையாகிய இவ்வுடலைச் சுமக்காதபடி,

ஞானக்கண்ணால் நோக்கும் அறிவு ஊறி, அழியாது நிற்பதாய் உள்ள அந்தப் பொருளை யான் காண அருள்வாயே;

சரசுவதியின் கணவனான பிரமன் காண முடியாதவரும், கங்கையை(ச்சடையில்) ஏற்றி வைத்துள்ளவருமான தலைவரின் செல்வப் புதல்வரே;

**வள்ளிமலை** யென்னும் விசேட மலையில் வாழும், வள்ளி நாயகிக்கு வாய்த்த பெருமாளே!

(உள்ளத்தை நோக்க அருள்வாயே)

## 320

இரவின் அசலில் (அயலில்)- (மாலைப் பொழுதில்), வந்து சேர்ந்த வில் ஏந்திய வெற்றி பொருந்திய மன்மதன் தனது தாமரை மலர்ப் பாணத்தைச் செலுத்த-

அள்ளி நெருப்பை வீச, பிள்ளைப்பிறையும் தென்றலும் (நிலவும் தென்றலும் நெருப்பை வீச), வியக்கத்தக்க வகையில் அறிவைக் கலக்க, (அல்லது - ஐயம் உது கிண்ட அங்ஙனம் நெருப்பு வீசும் (உது) அது - தலைவன் அருள் புரிவனோ என்றும் ஐயத்தைக் கிளப்ப படுக்கையில்-

(அலர்ப் பேச்சுக்களாற்) சொல்லப்படுகின்ற இந்த தாமரையில் வாசம் பண்ணும் வல்லி போன்ற (இலக்குமி போன்ற) இப் பெண் தனிமையாகக் கிடந்து "என் பழவினையால் இங்ஙனம் வேதனைப் படுகின்றேன்" எனக் கூறி தன்னைத் தானே வெறுக்காமல்-

பரிசுத்தமான இரேகைகள் உள்ள வண்டு சிவந்த (நல்ல) தேனை உண்டு களி மயக்கில் துள்ளுகின்ற உனது கடப்ப மாலையை நீ (அவளுக்குத்) தரவேணும்;

கல்லசல மங்கை யெல்லையில் விரிந்த
*கல்விகரை கண்ட புலவோனே-

கள்ளொழுகு கொன்றை வள்ளல்தொழ அன்று
கல்லலற வொன்றை யருள்வோனே;

வல்லசுர ரஞ்ச நல்லசுரர் விஞ்ச
வல்லமைதெ ரிந்த மயில்வீரா-

வள்ளிபடர் கின்ற **வள்ளிமலை** சென்று
வள்ளியை மணந்த பெருமாளே. (8)

## 321. திருவடியை உணர

தனதாத்த தய்ய தனதாத்த தய்ய
தனதாத்த தய்ய தனதான

குடிவாழ்க்கை யன்னை மனையாட்டி பிள்ளை
குயில்போற்ப்ர சன்ன மொழியார்கள்-

குலம்வாய்த்த நல்ல தனம்வாய்த்த தென்ன
குருவார்த்தை தன்னை யுணராதே;

---

*கல்வி கரைகண்ட வரலாறு:-

ஒரு காலத்தில் கலைப்புலவர்களும், தேவர்களும், முனிவர்களும் கூடியிருந்த சபையில் யார் முதன்மைப் புலமை உடையார், அவருக்கு **வித்வ தாம்பூலம்** கொடுக்க வேண்டும் என்ற ஆராய்ச்சி நிகழ்ந்தது; கலைமகளின் அம்சமான ஔவையாரே இத்தாம்பூலத்துக்கு உரியவர் என்று தீர்மானித்து அந்த அம்மையாரிடம் யாவரும் சென்று நிகழ்ந்ததைக் கூற, ஔவையார் 'இதைப் பெறத் தக்கவள் நான் அன்று; புலவர்கள் எனப்படும் தேவர்களுக்கு அதிபன்; 'ஐந்திர வியாகரணம்' என்னும் அருமையான இலக்கண நூலை இயற்றினவன் இந்திரன்; அவனிடம் செல்லுங்கள், என்றனர்; அங்ஙனமே, இந்திரனிடம் அவர்கள் போய்க் கூற இந்திரன் மிக அஞ்சி "அந்தோ! ஒரு இலக்கண நூல் இயற்றி ஒருவன் சகல கலா வல்லவன் ஆய்விடுவானா! முருகவேளிடம் தமிழ் கற்ற அகத்திய முனிவரே இத் தாம்பூலத்தை வாங்குவதற்கு உரியவர்" என்றான். இதைக் கேட்டு யாவரும் அகத்தியரிடம் செல்ல, அவர் 'சகல கலா வல்லி', 'கலைமகள்' என்றே பெயர் கொண்ட சரசுவதி தான் இத் தாம்பூலத்தை வாங்கும் தகுதி உடையாள்" என, யாவரும் கலைமகளிடம் சென்று, வந்த செய்தியைக் கூற, கலைமகள் "யான்

*மலை மங்கையாம் பார்வதி வரையில் சென்ற கல்விப் (போட்டியில்) கரை கண்ட (தலையிடம் பெற்ற) -சகல கலா வல்லவனாய் விளங்கிய புலவனே!*

தேன் ஒழுகும் கொன்றையை அணிந்த வள்ளலாம் சிவபிரான் வணங்கி நிற்க அன்று குழப்பமற (ஐயம் அற) ஒப்பற்ற பிரணவப் பொருளை உபதேசித் தருளினவனே!

வன்மை வாய்ந்த அசுரர்கள் அஞ்ச, நல்ல தேவர்கள் மேம்பட்டு விளங்க, உனது சாமர்த்தியத்தைத் (திறலைக்) காட்டிய மயில் வீரனே!

வள்ளிக் கொடிகள் படர்கின்ற **வள்ளிமலைக்குப்** போய் வள்ளி நாயகியை மணந்த பெருமாளே!

(துள்ளிய கடம்பு தரவேணும்)

## 321

இல்லற வாழ்க்கையில் ஏற்பட்ட தாய், மனையாள், பிள்ளை, குயில் போலப் பேசி எதிர்ப்படும் மொழியார் (பெண்கள்)

குலம், கிடைத்துள்ள நல்ல செல்வம்- இவையெலாம் நமக்கு உள்ளன என்று (ஆணவம் கொண்டு) குருவின் உபதேச மொழிகளை உணர்ந்தறியாமல்

---

'கற்றது கைம் மண்ணளவு கல்லா துலகளவு' வாகீசுரி, ராஜ ராஜேசுரி எனப்படும் பார்வதிதேவியே இப்பரிசுக்கு ஏற்றவள், என்று கூற, யாவரும் தேவியிடம் போய் விண்ணப்பித்தனர். தேவி புன்னகை புரிந்து நான் வாழைப்பழத்தின் தோல் போன்றவள் எனக்குள் இருந்த கனி, முத்து, முத்துக்குமரனே இப்பரிசுக்கு உரியவன் எனக் கூறி விடுத்தனள். பின் யாவரும் கந்தபுரம் சென்று நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறி இதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என முருகவேளிடம் தாம்பூலத்தை நீட்ட. "நன்று, நாம் ஏற்றுக் கொள்வோம்" எனத் தடையின்றிக் கூறி அந்தப் பரிசை அவர் ஏற்றுக்கொண்டார். இங்ஙனம் 'சகல கலா வல்லவன் நான் என்று மார் தட்டும் பெருமாள்' ஆயினர் நமது முருகவேள்.

மலைமங்கை வரைக்கும் போய் அந்த அம்மையார் கல்விகரை கண்டவன் எம்புதல்வனே எனக் குறித்தபடியால் "கல்லசல மங்கை எல்லையில் விரிந்த கல்விகரை கண்ட புலவன்" ஆயினர் கந்தவேள். இதன் விரிவை 'சுப்பிரமணிய பராக்ரமம்' என்னும் புத்தகத்திற் 'சகலகலா வல்லப மூர்த்தி' சரித்திரத்தைப் பார்க்க.

இடநாட்கள் வெய்ய நமனீட்டி தொய்ய
இடர்கூட்ட இன்னல் கொடுபோகி-
இடுகாட்டி லென்னை எரியூட்டு முன்னு
**னிருதாட்கள் தம்மை யுணர்வேனோ;**
வடநாட்டில் வெள்ளி மலைகாத்து புள்ளி
மயில்மேற்றி கழ்ந்த குமரேசா-
வடிவாட்டி வள்ளி அடிபோற்றி **வள்ளி**
மலைகாத்த நல்ல மணவாளா;
*அடிநாட்கள் செய்த பிழைநீக்கி யென்னை
யருள்போற்றும் வண்மை தரும்வாழ்வே-
அடிபோற்றி யல்லி முடிசூட்ட வல்ல
†அடியார்க்கு நல்ல பெருமாளே(9)

## 322. அன்பு உற

தனதந்த தந்தனம் தனதந்த தந்தனம்
தனதந்த தந்தனம் தனதான

சிரமங்க மங்கைகண் செவிவஞ்ச நெஞ்சு‡செஞ்
சலமென்பு திண்பொருந் திடுமாயம்-
சிலதுன்ப மின்ப§மொன் றிறவந்து பின்புசெந்
தழலின்கண் வெந்துசிந் திடஆவி;
விரைவின்க ணந்தகன் பொரவந்த தென்றுவெந்
துயர்கொண்ட லைந்துலைந் தழியாமுன்-
வினையொன்று மின்றிநன் றியலொன்றி நின்பதம்
**வினவென்று அன்புதந் தருள்வாயே;**

---

* இது 'அருணகிரியாரின்' வரலாற்றைக் குறிப்பதாகும்.

† இறைவன் அடியார்க்கு நல்லர். "கருவூரு ளாநிலை அண்ணலார் அடியார்க்கு நல்லரே" - சம்பந்தர் II- 28-3.

"அடியார்க்கு நல்ல பெருமாள்" - கந். அலங்-33.
" புரியிழை பொறுக்கு சோமி" - திருப்.
" பிழையெலாந் தவிரப் பணிப்பானை" - சுந்.தேவா.

‡ செஞ் சலம் - இரத்தம். § ஒன்றிற - ஒன்றி + இற.

நாள்களைக் கழிக்க, (ஈற்றில்) கொடிய யமன் நெருங்கிச் சோர்வுறும்படி இடர்களைத் (துன்பங்களை)த் தர, துன்பத்துடன் கொண்டு போய்

இடு காட்டில் (சுடு காட்டில்) என்னை எரி யூட்டுவதற்கு முன்பாக உனது இரண்டு தாள்களை உணர்ந்தறியேனோ!

வட நாட்டில் உள்ள வெள்ளிமலை (கயிலை மலையைக்) காத்து புள்ளி மயில் மேல் விளங்கின குமரேசனே!

அழகு நிறைந்த வள்ளி நாயகியின் அடிகளைப் போற்றி (துதித்து) வள்ளிமலையில் (வள்ளி வேளைக்காரனாகக்) காத்து நின்ற நல்ல மணவாளனே!

அடி நாளில் (முன் நாள்களில் நான்) செய்த பிழைகளைப் பொறுத்துக் களைந்து எனக்கு உனது திருவருளைப் போற்றும் வண்மையை (வளப்பமான குணத்தை) அருள் செய்த என் செல்வமே!

உனது திருவடியைப் போற்றித் தாமரை மலரை உனது முடியிற் சூட்ட வல்ல அடியார்களுக்கு நல்ல பெருமாளே!

(உன் இரு தாள்கள் தம்மை உணர்வேனோ)

## 322

தலை என்னும் உறுப்பு, அழகிய கை, கண், காது, வஞ்சகத்து இடமாம் நெஞ்சு, இரத்தம், எலும்பு இவை திண்ணிதாக (நன்றாகப்) பொருந்தியுள்ள மாயமான (தேகம்)-

சில துன்பங்களும் இன்பங்களும் பொருந்தி ஈற்றில் முடிவு வந்து சேரப், பின்பு செவ்விய நெருப்பில் வெந்து (பிரிய ஆவி) ஆவி பிரிதலுறும்படி-

விரைவில் யமன் வந்து போரிட வந்து விட்டான் என்று கொடிய துக்கத்தைக் கொண்டு, அலைச்சலும் நிலை குலைதலும் உற்று அழிபடுவதற்கு முன்பாக-

வினையாவும் தொலைந்து, நல்ல செய்கைகளே பொருந்தி, உனது பாதங்களை ஆய்ந்தறிய வேண்டும் என்கின்ற அன்பை எனக்குத் தந்து அருள்புரிவாயாக;

அரவின்கண் முன்துயின் றருள்கொண்ட லண்டர்கண்
டமரஞ்ச மண்டிவந் திடுசூரன்-

அகலம் பிளந்தணைந் தகிலம் பரந்திரங்
கிடஅன் றுடன்றுகொன் றிடும்வேலா;

மரைவெங் கயம்பொருந் திடவண் டினங்குவிந்
திசையொன்றமந்தி*சந் துடனாடும்-

வரையின்கண் வந்துவண் குறமங்கை பங்கயம்
வரநின்று கும்பிடும் பெருமாளே (10)

## 323. நினைக்க

தனதன தந்தன தந்த தந்தன
தனதன தந்தன தந்த தந்தன
தனதன தந்தன தந்த தந்தன தனதான

†வரைவில்பொய் மங்கையர் ‡தங்க ளஞ்சன
விழியையு கந்துமு கந்து கொண்டடி
வருடிநி தம்பம ளைந்து தெந்தென §அளிகாடை-

மயில்குயி லன்றிலெ னும்பு ளின்பல
குரல்செய்தி ருந்துபி னுந்தி யென்கிற
மடுவில்வி ழுந்துகி டந்து செந்தழல் மெழுகாகி;

---

* வள்ளிமலையில் சந்தனக் காடு இருந்தது என்பது:-

"உயர் சந்த னாடவி யினும்உறை குறமகள்"- திருப். 289; அங்கே குரங்குகள் விளையாடின என்பது:-

"தேனைப் பருக மர்க்கட சமூகம் அமை தொட்டு இறால் எட்டு வரை" -பூத வேதாள வகுப்பு. (அமை - மூங்கில்)

† வரைவின் மகளிர் - " தந்நலம் விலை கொடுப்பார் யாவர்க்கும் விற்ப தல்லது அதற்கு ஆவார் ஆகாதா ரென்னும் வரைவு (அளவு) இலாத மகளிர்" (திருக்குறள் - அதி -92)

‡ பாடபேதம் :- 'தங்கள் பங்கய '

§ புட்குரல் பாட்டு 197 பார்க்க.

(அடுத்த பக்கம் பார்க்க)

(ஆதிசேடனாம்) பாம்பின் மேல் முன்பு துயின்று அருள் புரியும் மேகவர்ணனாம் திருமாலும் தேவர்களும் பார்த்துப் போருக்கு அஞ்சும்படி நெருங்கி எதிர்த்து வந்த சூரனுடைய-

மார்பைப் பிளந்து, பொருந்திய எல்லா இடங்களிலும் (அவன் அரற்றி விழும் ஒலி) பரந்து ஒலிக்க அன்று கோபங் கொண்டு போர் புரிந்து (அவனைக்) கொன்ற வேலனே!

தாமரை விரும்பத்தக்க குளங்களிற் பொருந்த, வண்டின் கூட்டங்கள் கும்புகூடி இசை ஒலிக்க, குரங்குகள் சந்தன மரங்களில் விளையாடுகின்ற

மலையினிடத்தே (வள்ளிமலைக்கு) வந்து, வளப்பமுள்ள குறமங்கை (வள்ளியின்) (பாத) தாமரை வரக்கண்டு (வள்ளி வருதலைக் கண்டு) அங்கேயே நின்று (வள்ளியைக்) கும்பிட்ட பெருமாளே!

(பதம் வினவென்று அன்புதந் தருள்வாயே)

## 323

பொது மகளிராம் பொய்யர்களுடைய மை பூசிய கண்ணில் மகிழ்ந்தும், (அந்த இன்பத்தைப்) பருகியும் (விரும்பியும்), அவர்களுடைய காலைப் பிடித்துத் தடவியும், அல்குலை அனுபவித்தும், தெந்தென (என்று) வண்டு, காடை (ஒரு புள்),

மயில், குயில், அன்றில் (கிரவுஞ்ச பட்சி) எனப்படும் பறவைகளின் பல ஒலிகளை எழுப்பிப் பின்னர்க் கொப்பூழ் என்கின்ற மடுவில் (ஆழ்ந்த நீர் நிலையில்) விழுந்தும், கிடந்தும், செவ்விய நெருப்பிற்பட்ட மெழுகு போல ஆகி,

(முன் பக்கத் தொடர்ச்சி)

"மயில்புற வன்னங் காடை வண்டுவா ரணஞ்செம் போத்துக்
குயிலென இசைக்கும் எட்டின் குரலினைப் பயின்று காமர்
இயலுறு மகளிர் பாங்கர் எய்துழி இவையில் வேண்டுஞ்
செயல்வகை புரியு மாறு சிறந்த சீற் கார மாமே" - கந்தபுரா.

இந்திர புரி-45. (சீற்காரம் - மூச்சை உள்வாங்குதலால் எழும் ஒலி.)

உருகியு கந்திதழ் தின்று மென்றுகை
யடியின கங்கள்வ ரைந்து* குங்கும
உபய தனங்கள்த தும்ப அன்புட னணை†யாமஞ்-

சுலவிய கொண்டைகு லைந்த லைந்தெழ
அமளியில் மின்சொல்ம ருங்கி லங்கிட
உணர்வழி ‡யின்பம றந்து **நின்றனை நினைவேனோ;**

விரவி நெருங்குகு ரங்கி னங்கொடு
மொகுமொகெ னுங்கட லுங்க டந்துறு
விசைகொடி லங்கைபு குந்த ருந்தவர் களிகூர-

வெயில்நில §வும்பரு மிம்ப ரும்படி
ஜெயஜெய வென்றுவி டுங்கொ டுங்கணை
விறல்நிரு தன்தலை சிந்தி னன்திரு மருகோனே;

அருகர் கணங்கள்பி ணங்கி டும்படி
$மதுரையில் வெண்பொடி யும்ப ரந்திட
அரகர சங்கர வென்று வென்றருள் புகழ்வேலா-

¶அறம்வளர் சுந்தரி மைந்த தண்டலை
வயல்கள் பொருந்திய சந்த வண்கரை
****யரிவை விலங்கலில்** வந்து கந்தருள்
பெருமாளே(11)

---

* பாடபேதம் - 'சந்தன'

† பாடபேதம் - 'அணை மீதே உலவிய'

‡ பாடபேதம் -'இன்ப மனம் பிரிந்துனை'

§ "உம்பரும் இம்பரும் உய்ய அன்று" - திருவாசகம்- 9-17.

$ மதுரையிற் சம்பந்தராய் வென்று திருநீற்றைப் பரப்பியது:- பாட்டு 181 பார்க்க.

¶ அறம்வளர் சுந்தரி - பார்வதி; பாட்டு 278 பார்க்க.

** அரிவை விலங்கல் - வள்ளி மலை. பாடபேதம் -'அரவவிலங்கலில் வந்து கந்தருள் பெருமாளே', - அரவ விலங்கல்-சர்ப்பகிரி-திருச்செங்கோடு.

உருகிக் களித்து, அதர பானஞ் செய்து (வாயிதழைத்) தின்றும் மென்று உண்டும் (பருகியும்), கையடியிலுள்ள நகங்களால் குறியிட்டும் (நகக் குறியிட்டும்), குங்குமம் உள்ள இரு கொங்கைகள் பூரித்து அசைய, அன்புடனே அணைந்து, மஞ்சு (அழகு)

உலவிய (விளங்கும்) கொண்டை அவிழ்ந்து அலைச்சல் உற, படுக்கையில் மின்னல் எனச் சொல்லத்தக்க இடை விளக்கந் தர, நல்லுணர்வை (நல்லறிவை) அழிக்கும் அந்த இன்பத்தை மறந்து உன்னை நினைக்க மாட்டேனோ!

தன்னுடன் கலந்து கூடி நெருங்கி வந்த குரங்குகளின் கூட்டத்துடன் சென்று, மொகு மொகு என்று ஒலிக்கும் கடலைத் தாண்டி, பொருந்திய வேகத்துடன் இலங்கையிற் புகுந்து, அருமையான தவப் பெரியோர்கள் மகிழ்ச்சி நிரம்பக் கொள்ள-

ஒளி பொருந்திய தேவர்களும், இவ்வுலகோரும், பூமியில் செய செய என்று (மகிழ்ந்து) ஒலி செயச் செலுத்தின கொடிய அம்பால் வீரமுள்ள அரக்கன் ராவணனுடைய தலையை (அறுத்துத்) தள்ளின ஸ்ரீராமபிரானுடைய (திருமாலுடைய) மருமகனே!

சமணரது கூட்டம் குழம்ப (மாறுபட்டுக் கலங்கி நிற்க), மதுரையில் திருநீறு பரவ, யாவரும் ஹர ஹர! சங்கர! என்று புகழ் கூற, வெற்றி பெற்று அருளிய புகழ் கொண்ட வேலனே!

அறத்தைக் (காஞ்சியில்) வளர்த்த அழகி - பார்வதியின் குமாரனே! குளிர்ந்த சோலைகளும் வயல்களும் பொருந்திய அழகிய வளப்பமுள்ள நீர்க்கரைகளுள்ள அரிவை விலங்கலில் (வள்ளிமலையில்) வந்து மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் பெருமாளே!

(நின்றனை நினைவேனோ)

## திருக்கழுக்குன்றம்

(செங்கற்பட்டு புகைவண்டி நிலையத்திற்குத் தென்கிழக்கு 9-மைல். நால்வர் பாடலும் பெற்ற தலம். இது 'கதலிவனம்', 'வேதகிரி', 'பக்ஷிதீர்த்தம்' எனவும் வழங்கும். வேதங்களுங் கழுகுகளும் பூசித்த பழம்பதி. சுவாமிகள் 'கழுகு தொழு வேதகிரி' என்பர். இன்றும் இத்தலத்திற் பக்ஷி தரிசனஞ் செய்தலும் மலைவலம் வருதலும் விசேடமாகக் கொண்டாடப் படுகின்றன. அந்தகக் கவி வீரராகவ முதலியார் பாடியருளிய தலபுராணம் ஒன்றுண்டு. "குடங்கள் நிரைத்தேறு" எனத் தொடங்கும் 885-ஆம் பாடலும் அதன் பாட பேதப்படி இத்தலத்துக்கு உரிய பாடலாகும்.)

### 324. தொண்டனாக

தனத்த தத்தம் தத்தன தானன
தனத்த தத்தம் தத்தன தானன
தனத்த தத்தம் தத்தன தானன தனதான

அகத்தி னைக்கொண் டிப்புவி மேல்சில
தினத்து மற்றொன் றுற்றறி யாதுபின்
அவத்துள் வைக்குஞ் சித்தச னாரடு கணையாலே-

அசுத்த மைக்கண் கொட்புறு பாவையர்
நகைத்து ரைக்கும் பொய்க்கடல் மூழ்கியெ
அலக்க ணிற்சென் றுத்தடு மாறியெ சிலநாள்போய்;

இகத்தை மெய்க்கொண் டிப்புவி பாலர்பொன்
மயக்கி லுற்றம் பற்றைவி டாதுட
லிளைப்பி ரைப்பும் பித்தமு மாய்நரை முதிர்வாயே-

எமக்க யிற்றின் சிக்கினி லாமுனுன்
மலர்ப்ப தத்தின் பத்திவி டாமன
திருக்கு* நற்றொண் டர்க்கிணை யாகவு னருள்தாராய்;

---

* "சவித அடியவர் தவமதில் வர அருள்புரிவாயே" என்றார் 304-ஆம் பாடலில்: அடியார் குழுவிற் சேருதலே கதி தரும் என்பது ஆன்றோர் கொள்கை. "சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் தொண்டர் குழாம் சாரிற் கதி யன்றி வேறிலை (அடுத்த பக்கம் பார்க்க.)

## திருக்கழுக்குன்றம்

## 324

இல்லறத்தைத் தழுவி (அல்லது, செய்த பாவம் காரணமாக, அல்லது அகங்காரம் பூண்டு) இந்தப் பூமியில் சிலநாள்கள் வேறு ஒரு (நன்) மார்க்கத்திலும் பொருந்த அறியாமல் பின்பு பயனிலாத (கேடு தரத்தக்க) மன்மதன் செலுத்தி வருத்தும் பாணங்களாலே-

அசுத்தமானதும், மை பூசினதுமான கண் கொண்டு சுழற்றும் பெண்கள் (வேசையர்) சிரித்துப் பேசும் பொய்யெனும் கடலில் நான் முழுகி, துக்கத்திற் பட்டுத் தடுமாறியே இங்ஙனம் சில நாள் போக-

இம்மை வாழ்வே மெய்யென எண்ணி இந்தப் பூமி, குழந்தைகள், பொன் என்னும் மாயையில் அகப்பட்டு அந்தப் பற்றை (ஆசையை) விடாமல், உடலில் இளைப்பு, மூச்சு வாங்குதல், பித்தம் இவைகள் மேலிட நரை வந்து கிழமாகி

எமனுடைய பாசக்கயிற்றின் சிக்கில் நிற்பதற்கு முன் (அகப்படு முன்னதாக), உனது மலரடியில் வைத்த பத்தியை விடாதுள்ள மனத்தைப் பெற்றுள்ள நல்ல தொண்டர்களுக்கு (தொண்டு செய்யும் அடியார்களுக்கு) நானும் சமமாகும்படியாக உன்னுடைய திருவருளைத் தர வேண்டுகின்றேன்;

---

காண்" என்றார் கந்தரலங்காரத்தில் *(19)*; 'விண்டொழிந்தன நம்முடை வல்வினை... தொண்டரோ டினிதிருந்தமையாலே' என்றார் சம்பந்தர் *(II-106-2)*; 'நமக்கு உண்டு கொலோ... தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே' - அப்பர் *(IV- 101-2)*

"ஆரூரன் அடிமை கேட்டுவப்பார் ஆரூரில் அம்மானுக் கன்பராவாரே" - சுந்தரர் *(VII - 39-11.)*

"அப்பன் ஆண்டுதன் அடியாரிற் கூட்டிய அதிசயங்கண்டாமே" மணிவாசகர் - திருவாசகம் - *26.*

புகழ்ச்சி லைக்கந் தர்ப்பனு மேபொடி
படச்சி ரித்தண் முப்புர நீறுசெய்
புகைக்க னற்கண் பெற்றவர் காதலி யருள்பாலா-

*புவிக்குள் யுத்தம் புத்திரர் சேயர
சனைத்து முற்றுஞ் செற்றிட வேபகை
புகட்டி வைக்குஞ் சக்கிர பாணிதன் மருகோனே;

திகழ்க்க டப்பம் புட்பம தார்புய
மறைத்து ருக்கொண் டற்புத மாகிய
தினைப்பு னத்தின் புற்றுறை பாவையை யணைசீலா-

செகத்தி லுச்சம் பெற்றம ராவதி
யதற்கு மொப்பென் றுற்றழ கேசெறி
**திருக்கழுக்குன் றத்**தினில் மேவிய பெருமாளே. (1)

## 325. துதி

தனதனன தான தனதனன தான
தனதனன தான தனதான

†எழுகுநிறை நாபி‡ அரிபிரமர் சோதி
யிலகுமரன் மூவர் முதலானோர்-

இறைவியெனுமாதி பரைமுலையி னூறி
யெழுமமிர்த நாறு கனிவாயா;

புழுகொழுகு காழி கவுணியரில் ஞான
புநிதனென ஏடு தமிழாலே-

---

* "நீ பாரத அமரில் யாவரையும் நீறாக்கிப் பூபாரந் தீர்க்கப் புரிந்தாய் புயல் வண்ணா!" - வில்லிபாரதம்.

† ஏழுலகம் நிறைந்த வயிற்றை உடையவன் (திருமால்); கு - பூமி (பாட்டு 267 பார்க்க.)

‡ தேவியின் தலைமை:-

"அரன் அரி அயன் அண்டர்க் கரியாள்" திருப்புகழ் 640. "முதற்றேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ் நகையே" " முதல் மூவருக்கும் அன்னே" "கமலாலயனும், மதியுறுவேணி மகிழ்நனும் மாலும் வணங்கி என்றும் துதியுறு சேவடியாய்"- அபிராமி அந்தாதி 92, 25,7.

யாவரும் புகழத்தக்க (கரும்பு) வில்லை ஏந்திய மன்மதனும் பொடிபட்டெரிந்து போகவும் சிரித்துத், தம்மை அணுகிவந்த முப்புரங்கள் சாம்பலாகவும் புகைநெருப்பைத் தந்த கண்ணைக் கொண்டவரான சிவபிரானது காதலியாகிய பார்வதி அருளிய குமரனே!

பூமியில் யுத்தம் வரவும், பிள்ளைகளும் குழந்தைகளும் அரசர்களும் யாவரும் முழுப்பகையாகவும், பகையை மூட்டி வைத்த சக்ராயுதக் கையராகிய திருமாலின் மருமகனே!

விளங்குகின்ற கடப்பமலர் மாலை நிறைந்த புயங்களை மறைத்து, (வேறு) கோலத்தைப் பூண்டு, அற்புதம் நிறைந்த (வள்ளிமலைத்) தினைப்புனத்திலே இன்பத்துடன் பாவை வள்ளியை அணைந்த நீதிமானே!

பூமியில் மேலான சிறப்பைப் பெற்று, தேவேந்திரன் நகராம் அமராவதிக்கு ஒப்பாகும் இவ்வூர் என விளங்கி அழகு நிறைந்துள்ள **திருக்கழுக்குன்றத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(நற்றொண்டர்க் கிணையாக உன் அருள்தாராய்)

## 325

ஏழுலகையும் தமது நாபியிடங் (கொப்பூழிற்) கொண்ட திருமால், பிரமர், சோதி உருவம் விளங்கும் அரன், இவர் மூவர் முதலான பிறதேவர்கள், இவர்கள் யாவருக்கும்

*தலைவி எனப்படும் ஆதி பராசக்தியின் கொங்கையில் ஊறி எழுந்த அமுதம் (ஞானப்பால்) மணக்கும் இனிமை வாய்ந்த வாயை உடையவனே!

புழுகு (வாசனைப் பண்டம்) நிறைந்துள்ள சீகாழியில் கவுணியர் குலத்தில் ஞான பரிசுத்த மூர்த்தி (ஞானசம்பந்தன்) எனத் தோன்றி (சமணரொடு செய்த வாதில் வைகையாற்று நீர் வெள்ளத்தில் இட்ட) ஏடு - அதன் கண் இருந்த தமிழ்ப் பாசுரத்தின் மகிமையாலே-

---

* சம்பந்தர் வரலாறு - பாடல் 103,110, 181 பார்க்க.

புனலிலெதி ரேற சமணர்கழு வேற
பொருதகவி வீர குருநாதா;

மழுவுழைக பால டமரகத்ரி சூல
மணிகரவி நோத ரருள்பாலா-

*மலரயனை நீடு சிறைசெய்தவன் வேலை
வளமைபெற வேசெய் முருகோனே;

†கழுகுதொழு வேத கிரிசிகரி வீறு
கதிருலவு வாசல் நிறைவானோர்-

கடலொலிய தான மறைதமிழ்க ளோது
**கதலிவன** மேவு பெருமாளே. (2)

---

*பிரணவத்துக்குப் பொருள்தெரியாத பிரமனைச் சிறையிலிட்டு அவனது சிருட்டித் தொழிலை முருகவேள் தாமே செய்தார் - (பாட்டு 215) "மறைமுத லவனை முன்னோர் வைகலின் வல்லி பூட்டிச் சிறையிடை வைத்துத் தானே திண்புவி யளித்து" "பரம்பொருள் மகன் ஓர் திரு முகங்கொடு சதுர்முகன் போல் விதிசெய்தான்" (கந்த. புரா - IV- 7-25; I - 16 - 17.) பிரமனுடைய வேலையை வளம்பெறச் செய்தார் முருகவேள் - அவர் படைத்த உயிர்கள் நன்குணத்தவராய்ப் பேறு பெற்றனர்; 'செவ்வேள் முற்றுமத் தொழிலிற் பட்ட மூதுயிர் பெற்ற பேற்றை இற்றெனக் கிளக்கலாமே யெஃகறி வுடையார்க் கேனும்" - தணிகைப் - வீராட்ட. 83.

† திருக்கழுக்குன்றம்.

கழுகு குன்றம் - கழுக்குன்றம். இத்தலத்திற் கழுகு தொழுவது இன்றும் காணக் கிடக்கின்றது. சண்டன், பிரசண்டன் என்னும் கழுகுகள் கிருதயுகத்திலும், சம்பாதி, சடாயு என்னும் கழுகுகள் திரேதாயுகத்திலும், சம்புகுத்தன், மாகுத்தன் என்னும் கழுகுகள் துவாபர யுகத்திலும் பூசித்தன. சம்பு, ஆதி என்னும் கழுகுகள் கலியுகத்திற் பூசிக்கின்றன.

வேதங்கள் சிவபிரானைப் பூசித்து "உனதடிக்கீழ் நிலைபெற நிறுத்தல் வேண்டும்" என வேண்டச், சிவபிரான் "குன்றென நின்மின் நுங்கள் கொழுந்திடை அடைவோம் யாமும்" " நாமம் உங்கட்கு " வேதகிரி" யென ஞாலத் தோங்கும்" - எனக் கூறினர் - ஆகவே, திருக்கழுக்குன்றம் வேதகிரியாம்.

நீரில் எதிர் ஏறிச் செல்ல, சமணர்கள் கழு ஏற, வாதப் போர் (தருக்கப் போர்) செய்த கவி வீரனே! குருநாதனே!

மழு, மான், கபாலம், தமருகம் (துடி), முத்தலைச் சூலம், மணி இவற்றை ஏந்தும் திருக்கரங்களை உடைய அற்புத மூர்த்தியாம் சிவபிரான் அருளிய பாலனே!

(தாமரை) மலரில் வீற்றிருக்கும் பிரமனைப் பெரிய சிறையில் வைத்து, பிரமனது சிருட்டித் தொழிலைச் செப்பம் உறவே செய்த முருகனே!

கழுகு தொழுகின்ற **வேதகிரி** என்னும் (திருக்கழுக்குன்ற) மலைமீது விளங்கும் ஒளி பொருந்திய (திருக்கோயிலின்) வாசலில் (முன் புறத்தில்) கூட்டமாய் நிறைந்த தேவர்கள்.

* கடலின் ஒலி போலப் பெரு முழக்குடன் வேதங்களையும் தமிழ்ப் பாக்களையும் ஓதுகின்ற (அல்லது - தமிழ் வேதங்களை, தேவார திருவாசகங்களை ஓதுகின்ற) † கதலிவனம் (வாழைக்-காடு) எனப்படும் **திருக்கழுக்குன்றத்தில்** வீற்றிருக்கின்ற பெருமாளே!

---

* 15 - ஆம் நூற்றாண்டிலிருந்த அருணகிரியார் காலத்தில் மறையும் தமிழும் கடலொலி போலத் திருக்கழுக்குன்றத்தில் முழங்கின. அவருக்குப் பின்னர் 17-ஆம் நூற்றாண்டிலிருந்த அந்தகக்கவி வீரராகவ முதலியார் காலத்திலும் அங்ஙனமே முழக்கொலி இருந்ததென-

" முழாவொலி யாழொலி முக்க ணாயகன்
விழா வொலி மணத்தொலி வேள்வி யாவையும்
வழா வொலி மறை யொலி வானை யுங்கடந்
தெழா வொலி கடல் கிளர்ந் தென வொலிக்கு மால்"

என அவர் பாடிய பாடலால் தெரிகின்றது. (திருக்கழுக்குன்றப் புராணம். நகர -13)

† கதலிவனம் - திருக்கழுக்குன்றத்துக்கு ஒரு பெயர்; இந்தத் தலத்து விருட்சம், வாழை - திருவிழாவில் 5-ஆம் நாளன்று பகலில் வாழை விருட்ச வாகனம் உண்டு. வாழை இப்போதும் இங்கே இருக்கின்றது. 'தூய கதலி வன மீதெனத் தொல்லை நாள் போய பழமை புதுக்குவார்" (திருக்கழுக்-குன்ற உலா - 116) ஆடலின் இளைப்பைக் கதலிவனம் குளிர்ச்சியாற் போக்கும் என்றபடி.

"சாற்றும் வடவனத்தி லாடித் தனதிளைப்பு மாற்றுங் கதலி வனத்தினோன்" - கழுக்குன்ற உலா 20.

## 326. ஆறெழுத்தை நினைக்க; குகா குகா என

தான தத்த தனந்த தனா தனாதன
தான தத்த தனந்த தனா தனாதன
தான தத்த தனந்த தனா தனாதன தனனதான

ஓல மிட்ட சுரும்பு தனா தனாவென
வேசி ரத்தில் விழுங் *கை பளீர் பளீரென
வோசை பெற்ற சிலம்பு கலீர் கலீரென விரகலீலை-
†ஓர்மி டற்றி லெழும்புள் குகூ குகூவென
வேர்வை மெத்த வெழுந்து சலா சலாவென
ரோம குச்சு நிறைந்து சிலீர் சிலீரென அமுதமாரன்;
ஆல யத்து ளிருந்து குபீர் குபீரென
வேகு திக்க வுடம்பு விரீர் விரீரென
ஆர முத்த மணிந்து அளா வளாவென மருவுமாதர்-
ஆசை யிற்கை கலந்து சுமா சுமாபவ
சாக ரத்தி லழுந்தி எழா எழாதுளம்
‡**ஆறெழுத்தை நினைந்து குகா குகாவென**
**வகைவராதோ;**
மாலை யிட்ட சிரங்கள் செவேல் செவேலென
மேலே ழுச்சி தரும்பல் வெளேல் வெளேலென
வாகை பெற்ற புயங்கள் கறேல் கறேலென
எதிர்கொள்சூரன்-
மார்பு மொக்க நெரிந்து கரீல் கரீலென
பேய்கு திக்க நிணங்கள் குழூ குழூவென
வாய்பு தைத்து விழுந்து ஐயோ ஐயோவென
உதிரமாறாய்;

---

*கை - ஒழுங்கு † புட்குரல் - பாட்டு 197 பார்க்க.

‡ 'ஆறெழுத்து -"ஓம் நமசிவாய" என்றும், "குமாராய நம" என்றும், "சரவண பவ" என்றும் கூறுவர். " ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வி" என வரும் திருமுருகாற்றுப்படை உரையில் "நமோ குமாராய" என்பது மந்திரம் என்பர் நச்சினார்க்கினியர். திருப்புகழில் "சரவண பவா" என்னும் மந்திரம் 148 ஆம் பாடலிலும், 'குமாராய நம' என்னும் மந்திரம் கந்தரனுபூதி 36-ம் பாடலிலும் ஆளப்பட்டுள்ளன. 'ஓம் நமசிவாய' ஆறெழுத்தென்பதற்கு ஆதாரம் "தாரகப் பிரமமாகி முன்மொழிகின்ற நந்தம் மூவிரண்டெழுத்தும் ஒன்றாய் உன்மகன் நாமத் தோரா றெழுத்தென உற்றதன்றே" கந்தபுராணம் -1-14-18.

## 326

ஒலிக்கின்ற வண்டு தனாதனா என்றும் ஒலியுடனே தலையில் உள்ள (புது மலரை நாடி) விழுகின்ற ஒழுங்கு பளீர் பளீர் எனப் பிரகாசிக்க, ஓசை தரும் காற் சிலம்பு கலீர் கலீர் என்று சப்திக்க, சுரத லீலையில் - (காமக் கலவி லீலையில்)

ஒப்பற்ற கண்டத்தினின்றும் உண்டாகின்ற புட்குரல்கள் குகூ குகூ என்று ஒலிக்க, வேர்வை மிகவும் உண்டாகி, சலசல என வியர்க்க, மயிர்க்கூச்சு நிரம்பி அது சிலீர் சிலீர் எனச் சிலிர்த்துப் புளகம் கொள்ள, அமுதம் (இந்திரியம்) மன்மதனது-

இருப்பிடத்தினின்றும் குபீர் குபீர் என்றே வெளிவந்து பாய, உடம்பு காம இச்சையால் விருவிருப்பை அடைய, மாலை முத்து (முத்து மாலை) அணிந்தவராய்க் கலவியின்பம், கொள்க, கொள்க எனச் சேருகின்ற (பொது) மாதர்களின்-

ஆசையில் நன்கு கலந்து அடிக்கடி பிறவிக் கடலில் ஆழ்ந்து எழுதல் உண்டாகாமல் (பிறவி யற), **உள்ளம் உனது** ஆறெழுத்தை நினைந்து, (வாய்) 'குகா குகா' என்னும்படியான மனப்பான்மையைப் பெறும் (பாக்கியம்) எனக்கு வராதோ!

மாலை அணிந்த தலைகள் (ரத்தம் பெருகுவதால்) செக்கச் செவேலென ஆக, வேல் போல் கூரியதாய் எழுந்துள்ள பற்கள் வெள்ளை வெளேலென ஒளிதர, வெற்றி பெற்றிருந்த தோள்கள் கன்னங்கறேலெனக் கரிந்து போக, எதிர்த்து வந்த சூரனுடைய

மார்பு முழுமையும் நெரிபட்டு மிகக் கரிந்துபோக, பேய்கள் (உணவு கிடைத்த தென்று களிப்பினால்) குதித்து மகிழும்படி மாமிசங்கள் கும்பல் கும்பலாய்க் கிடக்க, (அசுரர்கள்) வாய் அடைந்து விழுந்து ஐயோ ஐயோ என்று அழ, ரத்தம் ஆறாகப் பெருக-

*வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீலென*
*மாலை வெற்பு மிடிந்து திமீல் திமீலென*
*மேன்மை பெற்ற ஜனங்கள் ஐயா ஐயாவென*
*விசைகள்கூற-*
*வேலெ டுத்து நடந்த திவா கராசல*
*வேடு வப்பெண் மணந்த புயா சலாதமிழ்*
**வேத வெற்பி** *லமர்ந்த க்ருபா கராசிவ*
*குமரவேளே.* (3)

## 327. புத்தி பெற

*தான தத்த, தான தத்த, தான தத்த தனதான*

*வேத வெற்பி லேபு னத்தில் மேவி நிற்கு மபிராம-*
*வேடு வச்சி பாத பத்ம மீது செச்சை முடிதோய;*
*ஆத ரித்து வேளை புக்க ஆறி ரட்டி புயநேய-*
*ஆத ரத்தொ டாத ரிக்க* **ஆன புத்தி புகல்வாயே;**
**காது முக்ர வீர பத்ர காளி வெட்க மகுடாமா-*

---

* "உமையவள் - பத்திரகாளியை நல்க துங்க வீரபத்திரன் தனை அடைந்தனள் துணையாய்" கந்த. புரா - வீரபத்திர - 15. இந்தக் காளி நாணும்படி ஆடலில் அவளை வென்றனர் சிவபிரான். மகிடாசுரனைக் காளி சங்காரம் செய்தபின் பெருஞ் செருக்குக் கொண்டு உலகை அழிக்கத் தொடங்கினள். அவள் செருக்கை அடக்கச் சிவன் அவளை வெல்லும் பொருட்டுத் திருவாலங்காட்டில் நடனம் பல செய்ய அவளும் உடனுக்குடன் ஆடிவர, சிவபிரான் தனது காதிற்கழன்ற குண்டலம் தானே சேர்ந்திடுமாறு காலைக் காதளவும் தூக்கி நடனம் புரிய, பெண் பாலான அவள் அங்ஙனம் காலைத் தூக்க நாணித் தோற்றுச் செருக்கு அடங்கி நின்றனள்.

"கொடிய வெஞ்சினக் காளியிக் குவலய முழுதும்
முடிவு செய்வனென் றெழுந்த நாள் முளரியான் முதலோர்
அடைய அஞ்சலும் அவள் செருக் கழிவுற அழியாக்
கடவுள் ஆடலால் வென்றதோர் வடவனம் கண்டான்"
*(கந்தபுரா - வழிநடை - 8)*

"அடிபெயர்த் தாடல் செய்ய அருகுறுங் காளி நோக்கி
ஓடிவுற்று நாணின் மேவி ஒளிமுகம் இறைஞ்சி ஒல்கி
வடிவுறு பாவை போலச் செயலற மயங்கி நின்றாள்"
*(திருவாலங்காட்டுப் புராணம்.)*

"ஏழை அறிவேனோ குழைநக்கும் பிஞ்ஞகன்தன் கூத்து
*(திருவள்ளுவர்)*

கடல் (வேலாயுதத்தின் சூட்டினால்) வற்றி வறண்டு சுறீல் எனச் சுருங்க, மாயை மயக்கங்கள் செய்த (கிரவுஞ்ச மலை இடிந்து தடால் தடால் என்று விழ மேலான) சனங்கள் (தேவர் - முநிவர், முதலானோர்) ஐயா, ஐயா என்று உனை வாழ்த்திப் புகழ் இசைப் பாடல்களைப் பாட-

வேலாயுதத்தை எடுத்து நடந்த (ஞான) சூரியனே! அசல வேடுவப்பெண் (வள்ளிமலை வேடப்பெண்) (அல்லது சுனையிடத்தே தனது (சலத்தை) கோபத்தைக் காட்டிய வேடப்பெண்) வள்ளியை மணந்த புய மலைகளை உடையவனே! தமிழ் (முழங்கும்) வேதகிரியில் (**திருக்கழுக்-குன்றத்தில்**) வீற்றிருந்தருளும் கிருபாகர மூர்த்தியே! சிவ குமரனாம் வேளே!

(ஆறெழுத்தை நினைந்து குகா குகா என வகை வராதோ)

## 327

**வேதகிரி**யாகிய (திருக்கழுக்குன்றத்திலும்) (வள்ளிமலைத்) தினைப்புனத்திலும் (அல்லது வேதமலையாம் வள்ளிமலையில் தினைப்புனத்தில்) விரும்பி வீற்றிருக்கும் அழகனே!

வேடுவச்சி (வள்ளியின்) பாத தாமரையின்மேல் வெட்சி மாலை அணிந்த உனது திருமுடி படும்படி-

அன்பு வைத்து (காதலித்து) (ஆட்கொள்ள வேண்டிய) சமயம் இது என்றறிந்து (அவளிருக்கும் தினைப் புனத்தே) புகுந்த பன்னிரண்டு திருப்புயங்களை உடைய நண்பனே!

அன்புடனே நான் உன்னை அன்பு வழிபாடு செய்வதற்கு உரிய புத்தியை (உபதேச மொழியை)ச் சொல்லியருளுக.

பகைத்து வந்த வீரபத்ரரின் துணைவியான காளி (அல்லது வீரமுள்ள பத்ரகாளி) நாணும்படி தமது *மகுடம் (கிரீடம்) (ஆகாசத்தை)

---

*மகுடா மாகாச முட்ட - மகுடம் ஆகாசம் முட்ட

காச முட்ட வீசி விட்ட காலர் பத்தி *யிமையோரை;
ஓது வித்த நாதர் கற்க வோது வித்த முநிநாண-
†ஒரெ ழுத்தி லாறெ ழுத்தை யோது வித்த
பெருமாளே. (4)

---

* "பத்தி இமையோரை ஓதுவித்த நாதர் - சிவபிரான்; அவர் (தேவர்களுக்கு வேதத்தைத் திருவோத்தூரில் உபதேசித்தார். "இத்தகைய மாமறை நூல் முன்னாளித் திருக்காஞ்சி வரைப்பிற்றென்சார், தத்துநீர் அலை புரட்டுஞ் சேயாற்றின் தடங் கரைக் கண் இமையோர்கட்கும், மெய்த்தவர்க்கும் ஓதுவித்தோம் ஆதலினால் மேவு திரு வோத்தூ ரென்னும், அத்தலத்தில்** - காஞ்சிப்புரா - திருவேகம்ப - 80 "ஓது வித்த முநி" - சிவபிரான் ஓதுவித்த முநி - பிரமன்; வேதத்தைச் சிவபிரான் பிரமனுக்கு ஓதுவித்தார். என்பது - "மையுலா வரு களத்தினன் அளப்பிலா மறைகள்.. பற்பலபுரிந்ததிற் சில யான் உய்யுமா றருள் செய்தனன் அவையுணர்ந்துடையேன்" எனப் பிரமன் கூறுவதால் தெரிகின்றது. கந்தபுரா - அயனைச் சிறை 7, 'முநி' என்பது பிரமனைக் குறிக்கும்-'அருநெறிய மறைவல்ல முநி' - சம்பந்தர்- I - 1 -11 'அருமா மறை வல்ல முநிவன்' - II 8-9 (சம்பந்தர்)

நாதர் கற்க, முருகவேள் ஓதுவித்தார்:

"மைந்த எமக்கருள் மறையின் என்னாத் தன் திருச் செவியை நல்கச் சண்முகன் குடிலை யென்னும் ஒன்றொரு பதத்தின் உண்மை உரைத்தனன்" - கந்தபுரா - I-17-39. பிரமன் பொருள் தெரியாது வெட்கமுற்றது :- 'உரை பொருளென நவில மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித் திகைத்திருந்தனன் கண்டிலன் அப்பொருட் டிறனே' கந்த புரா - 1-16-10.

† ஒ ரெழுத்து - 'ஓம்' என்பது.

"ஓ மெனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி" - திருமந்திரம் 2676

"ஓ மெனும் ஓரெழுத்துள் நின்ற ஓசைபோல்" - திருமந்திரம் 2824; இதனை "மறை எவற்றிற்கும் ஆதியின் நவில்வான் நின்றதோர் **தனி மொழி**" என்ப - கந்த புரா - I - 16-8.

'ஓம்' என்னும் ஓரெழுத்தினின்றே 'ஓம் நம சிவாய' என்னும் ஆறெழுத்து விரியும் எனக் காட்டி விளக்கினர் முருகவேள்.

(அடுத்த பக்கம் பார்க்க)

ஆகாசத்தை முட்டும்படி (அவ்வளவு உயரம்) வீசி விட்ட (ஆடின) பாதத்தர், பத்தியுள்ள தேவர்களுக்கு (வேதத்தை)

ஓதுவித்த (கற்பித்த) நாதராகிய சிவபிரான் கற்க (உன்னிடம் பாடம் கேட்கவும்), அவரால் (சிவபிரானால்) ஓதுவிக்கப்பட்ட முநி (பிரமன்) வெட்கமடையவும்-

ஓரெழுத்தாகிய (பிரணவத்தில் - ஓம் - என்பதில் ஆறெழுத்தும் (ஓம் நமசிவாய என்னும்) ஆறெழுத்தும் அடங்கி உளதென்று விளங்கக்காட்டி (அந்தச் சிவனுக்கு) உபதேசம் செய்த பெருமாளே!

(ஆதரத்தொ டாதரிக்க ஆன புத்தி புகல்வாயே)

---

முன்பக்கத் தொடர்ச்சி

ஓரெழுத்தாகிய ஓம் என்பதே அ,உ,ம என்னும் மூன்றெழுத்தாய், அம் மூன்றுங் கூடி ஓம் என்று எழுதும் போது விந்துவாயும் ஓம் என்று உச்சரிக்கும் போது நாதமாயும் விரிதலால், அ,உ,ம என்னும் மூன்றெழுத்தும், விந்து நாதங்களாகிய வரிவடிவும் ஒலி வடிவுங்கூடி ஐந்தெழுத்தாயிற்று; ஆகவே பிரணவமே (ஓம் என்பதே) பஞ்சாக்கரமாம். ஸ்ரீ பஞ்சாக்கர விளக்கம் - பக்கம் 9. "ஓங்காரமாம் ஐந்தெழுத்தாற் புவனத்தை உண்டு பண்ணி" தாயுமானவர் ஓம் என்னும் இவ்வோரெழுத்தொடு 'நம சிவாய' என்னும் பஞ்சாக்கரம் கூட ஆறெழுத்து விரியும் என்ப. ஓம் என்னும் ஓரெழுத்தின் விரிவு மேற் கூறியவாறு ஆக, சிவாய நம என்னும் **ஐ**ந்தெழுத்தும் பின்வருமாறு விரியும். **சி**காரம் சிவத்தையும், **வ**காரம் அருட் சத்தியையும், **ய**காரம் ஆன்மாவையும், **ந**காரம் திரோதானத்தையும், **ம**காரம் ஆணவ மலத்தையும் உணர்த்துவனவாம் - சிகார வகாரங்கள் **பதி**யையும், **ய**காரம் **பசு**வையும், **ந**கார **ம**காரங்கள் **பாசத்**தையும் விளக்குவனவாம் (*ஸ்ரீ* பஞ்சாக்கர விளக்கம் - பக்கம் 13)

"தகதி யெனுங் குண்டலியில் அழலோம்பி **ந**கர **திரோதானத** தோடே, **ம**கர **மலம்**, **ய**கரம் **உயி**ர், **சி**கர **மிசை**, **சத்தி**மற்றை **வ**கர மாகும், **ந**கர **ம**கரங்களந்த **ய**கர முற வகையினடு வணைய தாகுஞ், **சி**கர **வ**க ரங்கூடனை முதலாயஞ் செழுத்துரைத்தான் செங்கை வேலான்" - *தீர்த்தகிரிப்புராணம் - கந்த தீர்த்த - 36.*

ஆகவே ஓரெழுத்தை ('ஓம்' என்பதை) விளக்கி - அதன் விரிவாக 'ஓம் நமசிவாய' என்னும் ஆறெழுத்தையும் சிவபிராற்கு விளக்கினர் முருகவேள். முழுதுணர்ந்தும் உணர்வரியதொன்றை ஓம்மொழியில்விண்ட சிறுபிள்ளை" - *முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ். 4*

## பேறை நகர்

*(இது பெரும் பேறு. செங்கற்பட்டு மாவட்டத்தில் அச்சிறுபாக்கத்திற்கடுத்த "தொழுப்பேடு" புகைவண்டி நிலையத்திற்கு அருகில் உள்ள ஊர். சிறிய மலை. கோயில் மலை மேல் உளது)*

## *327 - 1. மாதர் மயக்கு அற

*தானதன தான தந்த, தானதன தான தந்த*
*தானதன தான தந்த தனதான*

*நீலமயில் சேரு மந்தி மாலை நிக ராகி யந்த*
*காரமிக வேநி றைந்த குழலாலும்-*
*நீடுமதி ரேக இன்ப மாகியச லாப சந்த்ர*
*னேர்தருமு கார விந்த மதனாலும்;*
*ஆலினிக ரான வுந்தி யாலுமட வார்கள் தங்கள்*
*ஆசைவலை வீசு கெண்டை விழியாலும்*
*ஆடியக டாமி சைந்த வார்முலைக ளாலு மந்த*
*னாகிமயல்* **நானுழன்று திரிவேனோ;**
**கோலவுரு வாயெழுந்து பாரதனை யேயி டந்து*
*கூவிடு† முராரி விண்டு ‡திருமார்பன்-*
*கூடமுறை நீடு செம்பொன் மாமதலை யூடெழுந்த*
*கோபவரி நார சிங்கன் மருகோனே;*

---

*இந்தப் பாடல் எங்கள் பதிப்பில் பாடல் எண் 726 ஆக உள்ளது. கோயில் மலை மேல் இருப்பதால் குன்றுதோறாடலில் இங்கே சேர்க்கப்பட்டுப் பதிப்பிக்கப்பெற்றது.

*திருமால் பன்றி உருவாகிச் சென்று பூமியை மீட்டு வந்த வரலாறு:- பாடல் 229 கீழ்க் குறிப்பைக் காண்க.

† முராரி - கண்ணபிரான் (திருமால்), பாட்டு 231.

‡ திருமார்பன் - திருமாலின் மார்பில் இலக்குமி வாசம்:

"பங்கயத்திருந்த பொன்னை ஆகத்தில் ஒருவன் வைத்தான்"

- கம்ப . ராமா மாரீசன் வதை - 76.

# பேறை நகர்

## 327 - 1

நீலமயில் (சேர்ந்து விளையாடும்) மாலைப் பொழுதுக்கு (இன்பந்தருவதில்) ஒப்பதாகி, (அந்தகாரம்) பேரிருள் மிக்கு நிறைந்துள்ள கூந்தலாலும்-

நீடித்துள்ள (அதிரேகம்) மிக்க இன்பம் தருவதாகிய சல்லாபம் (இன்பமாய்ப் பேசத்தக்க) சந்திரனுக்கு ஒப்பான முகத் தாமரையாலும்-

ஆலிலைக்கு ஒப்பான வயிறாலும், பெண்கள் தங்கள் ஆசை வலையை வீசுகின்ற கெண்டை மீன் போன்ற கண்களாலும்-

கடைந்தெடுத்த குடம் போன்ற ரவிக்கை அணிந்த கொங்கையாலும் - அறிவு மழுங்கினவனாகி - காம மயக்கத்தில் நான் கலங்கித் திரிவேனோ.

கோலம் (பன்றியின்) உருவோடு சென்று, பூமியைத் தோண்டிச் சென்று, கூ (பூமியை) விடு (மீட்டு வந்த) (அல்லது கூவிடு - இரைந்து வந்த) முராரி (முரன் என்னும் அசுரனுக்குப் பகைவனான) விண்டு (திருமால்), இலக்குமியை மார்பில் வைத்தவன்.

(மாளிகையின்)*கூடத்தில் இருந்த பெரிய செம்பொன்னாலாய உயர்ந்த (மதலையூடு) தூணிடத்தே தோன்றி எழுந்த, கோபம் நிறைந்த நரசிங்க மூர்த்தியின் மருகனே!

---

*அசுரன் - இரணிய கசிபின் குமாரன் பிரகலாதன் "இரண்யாய நம " என்று ஆசிரியர் சொல்லிக் கொடுத்தும் " நாராயணாய நம" என்றே பிடிவாதமாகக் கூற, இரணியன் அவனைப் பலவாறு தண்டித்தும் அவன் அரி நாமத்தையே சொல்ல, அசுரன் கோபித்து உன் தேவன் எங்கு உள்ளான், இந்தத் தூணில் இருக்கின்றானோ எனக் கூடத்துப் பொன் தூணைக் காட்ட பிரகலாதன் 'ஆம், அங்கும் உளன்' என்று விடை அளிக்க, அசுரன் அந்தத் தூணை அறையத் தூணில் இருந்து வெளிப்பட்டார் நர சிங்க மூர்த்தி. அம்மூர்த்தி இரணியனைத் தன் தொடை மேலிருத்தி நகத்தாற் கிழித்து அவன் ரத்தத்தைக் குடித்து, அவனுடைய குடல் மாலையை அணிந்தனர்.

" கையா லெற்றினான் எற்ற லோடும் திசைதிறந்
தண்டங் கீறிச் சிரித்தது செங்கட் சீயம்"

- கம்ப. ராமா இரணியன் வதை 127.

பீலிமயில் மீது றைந்து சூரர்தமை யேசெ யங்கொள்
பேர் பெரிய வேல்கொள் செங்கை முருகோனே!
பேடைமட ஓதி மங்கள் கூடிவிளை யாடு கின்ற
**பேறை நகர்** வாழ வந்த பெருமாளே.

## மயிலம்

(தென் ஆற்காடு மாவட்டம் மயிலம் புகைவண்டி நிலையத்திலிருந்து 3 - மைல்.)

## 328. திருவடியைப் பெற

தனதந்த தானன தானா தானா
தனதந்த தானன தானா தானா
தனதந்த தானன தானா தானா தனதான

கொலைகொண்ட போர்விழி கோலோ வாளோ
விடமிஞ்சு பாதக வேலோ சேலோ
குழைகொண்டு லாவிய மீனோ மானோ எனுமானார்-
குயில்தங்கு மாமொழி யாலே நேரே
யிழைதங்கு நூலிடை யாலே மீதூர்
குளிர்கொங்கை மேருவி னாலே நானா விதமாகி;
உலைகொண்ட மாமெழு காயே மோகா
யலையம்பு ராசியி னூடே மூழ்கா
வுடல்பஞ்ச பாதக மாயா நோயா லழிவேனோ-
உறுதண்ட பாசமொ டாரா வாரா
எனையண்டி யேநம னார்தூ தானோர்
**உயிர்கொண்டு போய்விடு நாள்நீ மீதா ளருள்வாயே;**
அலைகொண்ட வாரிதி கோகோ கோகோ
எனநின்று வாய்விட வேநீள் மாசூ
ரணியஞ்* சராசனம் வேறாய் நீறா யிடவேதான்-

---

*சராசனம் - வில்.

தோகை நிறைந்த மயில் மீது வீற்றிருந்து சூராதியரைச் செயித்த கீர்த்தி மிக்க வேலாயுதத்தைக் கொண்ட திருக்கையை உடைய முருகனே!

அறியாமை உள்ள பெண் அன்னங்கள் ஒன்று கூடி விளையாடுகின்ற **பேறை நகரில்** வீற்றிருந்தருளும் பெருமாளே!

(நான் உழன்று திரிவேனோ)

## மயிலம்

## 328

கொலைத் தொழிலைத் தன்னிடத்தே அடக்கி உள்ள, சண்டை செய வல்ல, கண்ணானது அம்போ, வாளோ, விடம் நிறைந்து பாவத் தொழில் செய்ய வல்ல வேலோ, சேல் மீனோ, (காதில் உள்ள) குழையைத் தொடும் அளவும் உலவிவரும் மீனோ, மானோ, எனச் சொல்லத்தக்க மாதர்களின்

குயிலின் குரல் போல் அமைந்த சிறந்த (இனிய) மொழி களாலே, கண்ணெதிரே தோன்றும் (நூலின்) இழைபோல் நுண்மை கொண்ட நூல் போன்ற இடையாலே, மேலே பொருந்தியுள்ள குளிர்ந்த கொங்கை எனப்படும் மேருமலை யாலே பலவிதமாக (நெஞ்சம் கலங்கி)

நெருப்பு உலையிற்பட்ட நல்ல மெழுகுபோல (உருகி), காம மோகம் என்னும் அலை வீசும் கடலினுள் முழுகி, உடல் (கொலை, பொய், களவு, கள்ளுண், குரு நிந்தை எனப்படும்) பஞ்சபாதகத்துக்கும் ஈடாகி, ஒழியாத (நீங்காத) நோயால் அழிவேனோ!

(கையில்) உள்ள தண்டம், பாசக்கயிறு இவையுடன் ஆரவாரஞ்செய்து என்னை நெருங்கியே யமதூதர்கள் (என்) உயிரைக் கொண்டு போய்விடும் அந்த நாளில் நீ உன் மேன்மை பொருந்திய திருவடியைத் தந்தருளுக.

அலை வீசும் கடல் கோ கோ என்று சப்தித்து வாய் விட்டு ஓலமிட(அதனுள்) பெரிய மாமரமாய் நின்ற சூரன் வைத்திருந்த அழகிய வில்லுகள் வேறுபட்டு விழ அற்று) தூளாகவே-

அவிர்கின்ற சோதிய வாரார் நீள்சீ
ரனலங்கை வேல்விடும் வீரா தீரா
அருமந்த ரூபக ஏகா வேறோர் வடிவாகி;
மலைகொண்ட வேடுவர் கானூ டேபோய்
குறமங்கை யாளுட னேமா லாயே
மயல்கொண்டு லாயவள் தாள்மீ தேவீழ் குமரேசா-
*மதிமிஞ்சு போதக வேலா ஆளா
மகிழ்சம்பு வேதொழு பாதா நாதா
மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர் பெருமாளே.

## திரிசிராப்பள்ளி

(சம்பந்த சுவாமிகள் அப்பர் சுவாமிகள் இவர்களது பாடல் பெற்ற தலம். திரிசிரன் என்னும் அரக்கன் பூசித்த திருப்பதி. இத்தலத்துத் தாயுமானவர் கோயில் மிகவும் விசேடமானது. சைவ - எல்லப்ப நாவலர் பாடிய செவ்வந்திப் புராணமும், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய உறையூர்ப் புராணமும் இத்தலத்துப் பெருமையை விளக்குவன. பாடல் 235, 352- இவையுள்ளும் இத்தலம் கூறப்பட்டுள்ளது.)

### 329. திருவடியைத் தொழ

தந்த தாத்தன தத்தத் தானன
தந்த தாத்தன தத்தத் தானன
தந்த தாத்தன தத்தத் தானன தனதான

அங்கை நீட்டிய ழைத்துப் பாரிய
கொங்கை காட்டிம றைத்துச் சீரிய
அன்பு போற்பொய்ந டித்துக் காசள வுறவாடி-
அம்பு தோற்றக ணிட்டுத் தோதக
†இன்ப சாஸ்த்ரமு ரைத்துக்‡கோகிலம்
அன்றில் போற்குர லிட்டுக் கூரிய நகரேகை;

*'மதிமிஞ்சு போதக ஞானாஈசா, செவியின் சொல்வாசக வேழுபா தீதா, மகிழ் சம்பு தானருள் வேலா வானோர் பெருமாளே' என்றும் பாடபேதம் முண்டு.

(அடுத்த பக்கம் பார்க்க)

விளக்கம் தரும் சோதியைத் தன்னிடத்தே கொண்ட நேர்மை நிறைந்த, பெரிய, பெருமை வாய்ந்த, நெருப்பெனும் படியான திருக்கை வேலைச் செலுத்தின வீரனே! தீரனே! அருமை வாய்ந்த அழகுள்ள உள்ளத்தனே! (உருவத்தனே)! ஒப்பற்ற ஒருவனே! வேற்று வடிவத்தைப் பூண்டு (வேட உருவுடன்)

மலையை இருப்பிடமாகக் கொண்ட வேடர்கள் வாழ்ந்த காட்டிடையே போய் (அங்கிருந்த) குற மங்கை வள்ளி மீது ஆசை கொண்டு மோக உள்ளத்தனாய் உலவி அவள் பாதத்தின் மீது வீழ்ந்து வணங்கிய குமரேசனே!

அறிவு நிறைந்த ஞான வேலனே! உனக்கு ஆளாக (தொண்டனாக) சீடனாக (உபதேசத்தைப் பெற்று) நின்று மகிழ்ந்த சிவன் தொழுகின்ற பாதனே! நாதனே! மயிலம் என்னும் குளிர்ந்த சிறந்த மலையில் வாழ்பவனே; தேவர் பெருமாளே!

(உயிர் கொண்டு போய்விடு நாள் நீ மீதாள் அருள்வாயே)

---

## திரிசிராப்பள்ளி

## 329

அழகிய கையை நீட்டி அழைத்தும், பருத்த கொங்கையைக் காட்டியும் மறைத்தும், சிறந்த அன்புள்ளவர் போலப் பொய் வேடத்துடன் நடித்துத், தாம் பெற்ற காசின் அளவுக்குத் தகுந்த உறவு காட்டிச் (சல்லாபம் செய்து)

அம்பும் தோற்கும்படியான அவ்வளவு கூரிய கண்ணால் மயக்கியும், வஞ்சகம் நிறைந்த *காம இன்ப சாத்திரங்களை எடுத்துப் பேசியும், †குயில், அன்றில் பறவை போலப் புட் குரலைக் காட்டியும், கூர்மையான நகம் கொண்டு குறியிட்டு

---

† இன்ப சாத்திர விளக்கத்தைக் கந்த புராணம்-இந்திர புரிப் படலத்தில்-

" புல்லுதல் சுவைத்திடல் புணர் நகக் குறி
பல்லுறல் மத்தனம் பயிலுந் தாடனம்
ஒல்லொலி கரணமோ டுவகை யாதிய
எல்லையில் புணர்நிலைக் கியைந்த என்பவே"

- ஆதிய (38-50) பாடல்களைப் பார்க்க.

‡ இது புட்குரல் - பாட்டு 197, பார்க்க.

பங்க மாக்கிய லைத்துத் தாடனை
கொண்டு வேட்கையெ ழுப்பிக் காமுகர்
பண்பில் வாய்க்கம யக்கிக் கூடுத லியல்பாகப்-

பண்டி ராப்பகல் சுற்றுச் சூளைகள்
தங்கள் மேற்ப்ரமை விட்டுப் பார்வதி
பங்கர் போற்றிய 'பத்மத் தாள்தொழ அருள்வாயே;

எங்கு மாய்க்குறை வற்றுச் சேதன
அங்க மாய்ப்பரி சுத்தத் தோர்பெறும்
இன்ப மாய்ப்புகழ் *முப்பத் தாறினின் முடிவேறாய்-

†இந்த்ர கோட்டிம யக்கத் தான்மிக
மந்த்ர மூர்த்தமெ டுத்துத் தாமத
மின்றி வாழ்த்திய சொர்க்கக் காவல வயலூரா;

செங்கை வேற்கொடு துட்டச் சூரனை
வென்று தோற்பறை கொட்டக் கூளிகள்
தின்று கூத்துந டிக்கத் தோகையில் வரும்வீரா-

செம்பொ னாற்றிகழ் சித்ரக் கோபுர
மஞ்சி ராப்பகல் மெத்தச் சூழ்தரு
தென்சி ராப்பளி வெற்பிற் றேவர்கள்
பெருமாளே. (1)

---

*தத்துவம் முப்பத்தாறு - பாட்டு 294, பார்க்க.

† கோட்டி - கூட்டம்; மயக்கம் - கலப்பு, ஒன்று சேருதல்;- இந்திரனாதி தேவர்கள் ஒன்றுகூடி முருகவேளைச் சூரசம்ஹாரத்துக்கு முன்பு மந்த்ரங்கள் ஓதித் தேவகிரியிற் பூசித்து வாழ்த்தினார்கள்.

" எந்தை பாங்கரின் ஈண்டி அவன் பெயர்
மந்திரங்கொடு மஞ்சனம் ஆட்டினார்."
- கந்த புராணம் I 21-25.

விகாரப்படுத்தி, அலைத்து, (காம சாஸ்திர முறையில்) தட்டுதல் செய்து, காம ஆசையை எழுப்பி, காமங்கொண்டவர் தமது வசப்படும்படி ஆக்கி மயக்கித் தம்மொடு கூடுதலையே ஒழுக்கமாம்படி செய்து

முதலிருந்தே இரவும் பகலும் சுற்றி யலைக்கும் வேசிகளின் மேல் உள்ள மயக்கத்தை ஒழித்துப், பார்வதி பாகராம் சிவபிரான் போற்றித் துதித்த (உனது) தாமரைத் தாளைத் தொழும்படியான பாக்கியத்தைத் தந்தருளுவாயாக;

எங்கும் நிறைந்தவனாய், குறைவிலாதவனாய், அறிவே அங்கமானவனாய், பரிசுத்த அன்பர்கள் பெற்று மகிழும் இன்பப் பொருளாய், புகழ் கொண்டவனாய் (அல்லது புகழப்படும்) முப்பத்தாறு தத்துவங்களின் முடிவுக்கும் வேறானவனாய்-

இந்திராதி கூட்டத்துத் தேவர்கள் கலந்து ஒன்று கூடிச் சிறந்த மந்த்ர ரூப பூசனை செய்து, தாமதிக்காமல் வாழ்த்திய தேவ லோக காவலனே! வயலூர் அண்ணலே!

திருக்கை வேல் கொண்டு துஷ்டனான சூரனைச் செயித்துத், தோலாலாய பறை சப்திக்க, பேய்கள் (அல்லது பெருங் கழுகுகள்) (அசுரப் பிணங்களைத்) தின்று கூத்தாடி நடிக்க மயில் மீது வரும் வீரனே!

செம் பொன்னால் விளங்கும் அழகிய கோபுரத்தின் மீது மஞ்சு (மேகங்கள்)இரவும் பகலும் நிரம்பச் சூழ்ந்துள்ள அழகிய திரிசிராப்பள்ளி மலையில் வீற்றிருக்கும் தேவநாயகனே (தேவர் பெருமாளே)!

(பத்மத் தாள் தொழ அருள்வாயே)

## 330. 'மைந்தா குமரா என' (மனதுக்கு) உபதேசம்

தந்தாதன தானன தாத்தன
தந்தாதன தானன தாத்தன
தந்தாதன தானன தாத்தன தனதான

அந்தோமன மேநம தாக்கையை
நம்பாதெயி தாகித சூத்திர
மம்போருக னாடிய பூட்டிது இனிமேல்நாம்-
அஞ்சாதமை யாகிரி யாக்கையை
பஞ்சாடிய வேலவ னார்க் *கிய
லங்காகுவம் வாஇனி †தாக்கையை ஒழியாமல்
வந்தோமிது வேகதி யாட்சியு
‡மிந்தாமயில் வாகனர் சீட்டிது
வந்தாளுவம் நாமென வீக்கிய சிவநீறும்-
வந்தேவெகு வாநமை யாட்கொளு
வந்தார் §மத மேதினி மேற்கொள
மைந்தாகும ராவெனு மார்ப்புய மறவாதே;
திந்தோதிமி தீதத மாத்துடி
தந்தாதன னாதன தாத்தன
செம்பூரிகை பேரிகை யார்த்தெழ மறையோதச்-

---

*இயல் - உழுவல் அன்பு (எழுமையும் தொடர்ந்த அன்பு.)

† ஆக்கையை ஒழியாமல் - ஆக்கையை (வீணாக்காமல்); "ஆக்கையைப் போக்கப் பெற்று மெலிகின்ற என்னை" (பிறவியை வீணாக்கி வருந்துகின்ற என்னை) என்றார் மாணிக்க வாசகரும் - திருவாசகம் - நீத்தல் - 10. 147 ஆம் பாடலில்- "உரைக்கப்படிக் குடிலை ஒழியாதே" - என்ற இடத்தும் உரைக்கும் தன்மையை உடைய இந்த உடலை ஒழித்து வீணாக்காமல்" எனப் பொருள் காணலாம்.

‡ மதம் - மகிழ்ச்சி "காதலி சொல்லிற் பிறக்கும் உயர் மதம்" (நான் மணிக்கடிகை 5). சமயக் கொள்கை என்றுமாம்.

§ 'சிவானந்த வாழ்வை இந்தா எனக் காட்டி' - இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி-26.

'இந்தா இஃதோர் இளங்குழவி' - கந்தபுரா. 6-24-35.

## 330

ஐயோ! மனமே! (நீ) நம்முடைய உடலை நம்பாதே! (ஏனெனில் இவ்வுடல்) இதத்துக்கும் (இன்பத்துக்கும்) அகிதத்துக்கும் (துன்பத்துக்கும்) இடந்தரும் ஒரு பொறி (யந்திரம்); தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் ஆய்ந்து செய்த ஒரு பூட்டு இது (இந்த உடல்); இனிமேல் நாம் (என்ன செய்ய வேண்டுமென்றால்)-

(அஞ்சுதல் இல்லாமல்) பயப்படாமல் அமையா (அமைந்து) பொருந்தி யிருந்து, (கிரவுஞ்ச) மலையின் உடலைப் (பஞ்சாடிய) சிதற அடித்த (தூளாக்கிய) வேலவர்க்கு (இயல்) உழுவல் அன்பு, (அங்கு ஆகுவம் வா இனிது) (நினைத்த அவ்விடத்திலேயே) உடனே கொள்வோம் வா இன்பத்துடனே! ஆக்கையை ஒழியாமல் (இந்த உடலை வீணாக் கழித்து ஒழித்து விடாமல்); (இவ்வுடலை வீணாக்காமல் வேலவர்க்கு அன்பு அடிமைப் படுவோம் வா - என்றபடி).

(அங்ஙனம்) அன்படிமைப் பட வந்து விட்டோம்; இது தான் நற்கதி தந்து (ஆண்டவன்) நம்மை ஆள்வதற்கு (உற்ற வழி); இந்தா (இதோ பார்)! மயில் வாகனப் பெருமான் ஆளுவோம் என்றதற்கு அறிகுறியாக (அவர்) தந்த சீட்டும், வந்து ஆட் கொள்வோம் நாம் எனக் கூறிக் கட்டித்தந்த சிவ நீறும் (சிவ நீற்றுப் பொட்டணமும்)!

(ஆதலால் அவர்) வந்து அநேகமாய் நம்மை ஆட்கொள்ள மகிழ்ந்துள்ளார் (என்பது நிச்சயம்); (இக்காரணத்தால்) இதனினும் பெரிதாக மதிக்கத்தக்க பேறு அல்லது மகிழ்ச்சி ஏது இனி உண்டு நாம் அடைவதற்கு? (அல்லது நாம் இனி மேற் கொள்ள வேண்டிய சமய வழிபாடு வேறு என்ன இருக்கின்றது) - ஒன்றுமில்லை என்றபடி, (ஆதலால் மனமே நீ) "மைந்தா குமரா" "மைந்தா குமரா மைந்தா குமரா" என்னும் ஆர்ப்பை (நிறை பேரொலியை) உய (உய்ய) - ஈடேற வேண்டி மறவாமல் ஓதுவாயாக.

திந்தோதிமி தீதத என்று சிறந்த உடுக்கையும் தந்தாதன னாதன தாத்தன என்று செவ்விய (பூரிகை) ஊது குழலும், பேரிகை (முரசும்) சப்தித்து ஒலியை எழுப்ப, வேதங்கள் முழங்க,

*செங்காடென வேவரு மூர்க்கரை*
*சங்காரசி காமணி வேற்கொடு*
**செண்டாடிம காமயில் மேற்கொளு முருகோனே;*

*இந்தோ † டிதழ் நாக‡ம காக்கடல்*
*கங்காள §மி னார்சடை சூட்டிய*
*என்தாதை $ச தாசிவ கோத்திர னருள்பாலா-*

*எண்கூடரு ளால்நெளவி நோக்கியை*
*நன்பூமண மேவிசி ராப்பளி*
*யென்பார்மன மேதினி நோக்கிய பெருமாளே (2)*

---

* செண்டாடுதல் - நிலை குலைத்தல்." தக்கன் தன் வேள்வியைச் செண்ட தாடிய தேவர் அகண்டனை" - அப்பர் - V- 7- 7.

"அமண் கையரை வாதினில் செண்டடித்து"

- சம்பந்தர் - III- 47-7.

† இதழ் - இதழி - கொன்றை- "இதழ் மலர் கொக்கிறகு" திருப்புகழ் 180. 'கமழ்மா இதழ் சடையார்' திருப்புகழ் 568.

‡ மகாக் கடல் - பெருங்கடல்போலப் பெருகிவந்த கங்கை.

§ சடை - மின் ஒக்கும் " பொலிந்திலங்கு மின் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ் சடை" - பொன் வண்ணத் தந்தாதி -1.

$ சதாசிவ கோத்திரன் அருள் பாலா:- இறைவன் ஒன்பது வர்க்கத்தில் நின்று தொழில் புரிவன்: அவை தாம் சிவம், சத்தி, நாதம், விந்து ஆகிய அருவத் திருமேனி நான்கு; மகேசன், உருத்திரன், மால், அயன் ஆகிய உருவத் திருமேனி நான்கு; சதாசிவமாகிய அருவுருவத் திருமேனி ஒன்று;

" சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தரு ளுருத்திரன்தான் மாலயன் ஒன்றி னொன்றாய்ப்
பவந்தரும் அருவம் நாலிங் குருவநால் உபயம் ஒன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்"
சிவஞான சித்தி 2-164.

சதாசிவ கோத்திரன் அருள் பாலா - என்றதனால் முருகவேளும் தாதையே போல அருவுருவத் திருமேனியான் என்பது பெறப்படும்.

" அருவமும் உருவு மாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பு" -கந்த புரா - I- 11-92.

செங்காடு போல (ரத்தம் பெருக), வந்த மூர்க்கரான அசுரர்களை, சங்காரஞ் செய்த (சங்கரித்த) சிகாமணியே! வேல் கொண்டு அவர்களைச் சிதற அடித்தவனே (நிலை குலைத்தவனே)! பெருமை மிக்க மயில் மீது ஏறிவரும் முருகவேளே!

பிறை நிலா, கொன்றை, பாம்பு, பெருங்கடல் போன்ற கங்கை, எலும்புக் கூடு இவைகளை மின் போன்ற ஒளிவிடு சடையில் தரித்துள்ள என் பிதா - சதாசிவ வர்க்கத்தான் அருளிய பாலனே!

(வள்ளியின் தவ நிலையில்) மதிப்புக் கலந்த திருவருளால் மான் போற் கண்ணியாம் வள்ளியைச் சிறந்த அழகிய (களவியல்) வழியில் திருமணம் விரும்பிச் செய்து, †திரிசிராப் பள்ளி என்னும் தலப் பெயரை செபிப்போர் மனமாகிய பூமியில் (இடத்தில்) (வீற்றிருக்க) விரும்பும் பெருமாளே!

(மனமே! மைந்தா குமரா எனும் ஆர்ப்பு உய மறவாதே)

---

*திருச்சிராப்பள்ளி - என்னும் தலப்பெயரை ஓதுதலின் பயன்:- இந்தத் திருப்புகழைப் பாடினபோது அருணகிரியார்க்கு அப்பர் சுவாமிகளது தேவாரம் நினைவில் வந்திருக்கலாம்; ஏனெனில் அருணகிரியார் திரிசிராப்பள்ளித் திருப்புகழாகிய இந்தப் பாட்டில் தமது மனத்தை விளித்துத் திரிசிராப்பள்ளி என்னும் தலத்தின் நாமத்தை ஓதுதலின் பலனைக் காட்டி, இறைவன் திருநாமத்தை ஓதுக என்றது போல, அப்பர் பெருமானும் திரிசிராப்பள்ளிப் பதிகத்தில் தமது நெஞ்சை அழைத்து-

" நெஞ்சே ஒன்று சொல்லக்கேள், திருச்சிராப்பள்ளி
யென்றலுந் தீவினை நரிச்சிராது நடக்கும் நடக்குமே'-

என்கின்றார் (V-85-3); இங்ஙனம் திரிசிராப்பள்ளி என்னும் தலத்தின் நாமத்துக்கே விசேடம் இருப்பதால் திரிச்சிராப்பள்ளி என்பவர் மனத்தில் வீற்றிருக்க விரும்புகின்றார் இறைவர். இனி,

(336ஆம் பக்கம் காண்க)

## 331. ஆண்டருள

தனதன தந்தன தாத்தன
தனதன தந்தன தாத்தன
தனதன தந்தன தாத்தன தனதான

அரிவையர் நெஞ்சுரு காப்புணர்
தருவிர கங்களி னாற்பெரி
தவசம்வி ளைந்து டாய்த்தடர் முலைமேல்வீழ்ந்

தகிலொடு சந்தன சேற்றினில்
முழுகியெ ழுந்தெதிர் கூப்புகை
யடியி*ன கம்பிறை போற்பட விளையாடிப்;

பரிமளம் விஞ்சிய பூக்குழல்
சரியம ருங்குடை போய்ச்சில
†பறவைக ளின்குர லாய்க்கயல் விழிசோரப்

பணிமுக முங்குறு வேர்ப்பெழ
இதழமு துண்டிர வாய்ப்பகல்
பகடியி டும்படி தூர்த்தனை விடலாமோ;

---

*நகக்குறி-பிறை, மயில் அடி, முயலின் கால், முதலிய வகையது; "சுரிதகம் எண்ணாள் திங்கள் தூய மண்டலமே மஞ்ஞை நிரலடி முயலின் புன்கால், நெய்தலின் இதழே, வேங்கை உருகெழு நக விரேகை யுருவி லேழுறுப்பி லெங்கும், வரன் முறை நகத்தால் தீட்டல் வள்ளுகிர்க் குறிய தன்றே" - கந்த புரா - V - 5-42.

† பறவைகளின் குரல்-புட் குரல் - பாட்டு 197 பார்க்க.

# 331

மாதர்களின் மீது உள்ளம் உருகி, சேர வேண்டும் என்னும் இச்சை தருகின்ற- பிரிவு என்னும், காம நோயால் மிகவும் வசம் அழிதல் ஏற்பட்டு, காம தாகம் அதிகரித்து, நெருங்கிய கொங்கை மேலே வீழ்ந்து - (அதன் மேலுள்ள)

அகில், சந்தனம் இவை தம் கலவிச் சேற்றில் முழுகியும், எழுந்தும், எதிரே கூப்பிய கையடியில் உள்ள நகம் பிறை போலப் படும்படி விளையாடி-

நறுமணம் மிக்க பூ நிறைந்த கூந்தல் சரிய, இடையில் இருந்த உடை (புடைவை) விலக, சில புட்களின் குரல் ஒலிகள் எழ, மீன் போலும் கண் சோர்வடைய

குளிர்ந்திருந்த முகத்தில் சிறு வெயர்வு எழ, வாயிதழ் அமுதை உண்டு, பகலும், இரவாகும்படி (இரவும் பகலும் ஒன்று போலக் கழித்து)க், (கலவிக்) கூத்தாடும்படி (இந்தத்) தூர்த்தனை (காமுகனாகிய) கொடியவனைக் கைவிடலாமா!

---

*(335 பக்கத் தொடர்ச்சி)*

'மைந்தா, குமரா' என்பன போன்ற- இறைவன் திருநாமங்களே பிறவித் துன்பத்தை ஒழிக்கவல்லன. "மருந்தவை மந்திரம் மறுமை நன்னெறியவை மற்றும் எல்லாம் அருந்துயர் கெடும் அவர் நாமமே சிந்தை செய் நன்னெஞ்சமே", "சோதி நாமமே ஓதி உய்ம்மினே" என்றார் சம்பந்தர் *(1-96-3; III-92-1)*; இக் காரணத்தால்தான் மனத்தை விளித்து இறைவன் நாமத்தை ஓதுக, மைந்தா குமரா என்னும் ஆர்ப்பு உ(ய்)ய மறவாதே' என்கின்றார் அருணகிரியார். இங்ஙனம் மனத்தை (நெஞ்சத்தை) விளித்துக் கூறுவதின் காரணம் - ஒருவழிப்பட்டு நின்று இறைவன் நாமத்தை ஓதிப் பிறவித்துயரை நீக்க, நெஞ்சம் அல்லது வேறு துணை யில்லாமையே.

"துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி"- என்றார் திருவள்ளுவர்
*(திருக்குறள் 1299.)*

இங்ஙனம் மனத்தை விளித்து நல்லறிவு சொல்லும் பிறிதொரு பாடல் " பாட்டில் உருகிலை" எனவரும் *399* ஆம் பாட்டு.

*சரியையு டன்க்ரியை போற்றிய
பரமப தம்பெறு வார்க்கருள்
தருகணன் ரங்க† பு ரோச்சிதன் மருகோனே-

‡சயிலமெ றிந்தகை வேற்கொடு
மயிலினில் வந்தெனை யாட்கொளல்
சகமறி யும்படி காட்டிய குருநாதா;

திரிபுவ னந்தொழு பார்த்திபன்
மருவிய மண்டப கோட்டிகள்
தெருவில்வி ளங்குசி ராப்பளி மலைமீதே-

---

*(1) திருக்கோயிலில் திரு அலகு இடுதல், மெழுகுதல், விளக்கு இடுதல், நந்தவனம் வைத்தல், பூ எடுத்தல், மாலை அமைத்தல், இறைவனை வாழ்த்துதல், திருவேடங் கண்டு பணிதல்- இவை சரியையாம். இது 'சாலோகம்' தரும் ; இது தாத மார்க்கம்.

(2) பூசை உபகரணங்களை அமைத்துப் பரஞ்சோதியை அருச்சித்து நித்யாக்கினி காரியம் செய்தல் - கிரியை - இது சாமீபம் தரும்; இது புத்ர மார்க்கம்.

(3) புலன்களை அடக்கிப் பிராண வாயுவைச் சலனமற நிறுத்தி ஆறாதாரங்களின் பொருளை உணர்ந்து, சந்திர மண்டல அமிர்தத்தை தேக முழுவதும் நிரப்பி, முழுச்சோதியை நினைத்திருத்தல் யோகம்; இது சாரூபம் தரும். இது சக மார்க்கம் (தோழ நெறி).

4. புறத்தொழில் அகத் தொழில் இன்றி, அறிவு மாத்திரையானே, செய்யும் வழிபாடு ஞானம். இது சாயுச்யம் தரும் - இது சன்மார்க்கம் சிவஞான சித்தியார்- 8-சூத்-19-22.

† புரம்- கோயில். "மூவர்க் கோதிய புரமும்"- கல்லாடம் 24,

‡ சம்பந்தாண்டானொடு அருணகிரியார் வாது செய்த போது தேவியைச் சபையில் வரவழைப்பேன் என்ற சம்பந்தாண்டான் அங்ஙனம் வரவழைக்க இயலாது தோல்வி யடைய, கந்தவேளை வரவழைப்பேன் என்ற சந்தப் புலவராம் நமது அருணகிரியார் "அதல சேடனாராட" என்னும் பாடலைப் பாடி "மயிலும் ஆடி நீ ஆடி வரவேணும்" (திருப்புகழ் 1056) என வேண்ட, அங்ஙனமே முருகவேள் (திரு அருணையிற்) சபையிற் காட்சி அளித்தார். அந்த வரலாறு இங்கே குறிப்பிக்கப்பட்டுளது;

(அடுத்த பக்கம் பார்க்க)

சரியை மார்க்கத்தையும் கிரியை மார்க்கத்தையும் அநுட்டித்து மேலான பதத்தைப் பெற விரும்புவார்க்கு அருளைத் தருகின்ற ரங்க கண்ணன் புர உசிதன் ஸ்ரீரங்கம் என்னும் திருக்கோயிலிற் பள்ளி கொண்டுள்ள மேன்மை யாளனாம் திருமாலின் மருகனே!

(கிரௌஞ்ச) - கிரியைப் பொடிபடச் செலுத்தின கை-வேலை விளங்க ஏந்தி மயில் மீது வந்து என்னை ஆட்கொண்ட திருவருளை உலகோர் அறியும் வண்ணம் (அன்று திருவண்ணா மலையிற்) காட்டிய குருநாதனே!

*முப்புவனங்களும் வணங்கி நின்ற (பல்லவ) அரசன் (குணதரன் என்ற மகேந்திரவர்மன்), ராஜ ராஜ கேசரிவர்மன் முதலான †பல மன்னர்களால் கட்டப்பட்ட மண்டபக் கூட்டங்கள் (ஆயிரக்கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம் , பதினாறுகால் மண்டபம், மணி மண்டபம், சித்திர மண்டபம் முதலியன) தெருவிலே தோற்றந்தரும் திரிசிராப்பள்ளி மலை மேலே-

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

" உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில்
ஒரு நொடி தனில்வரு மயில் வீரர் "

என்னும் 755 ஆம் பாடலும் இதற்குச் சான்றாம்- "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்" என்னும் எனது நூலில் பக்கம் 17-20 பார்க்க.

*முடியுடை வேந்தரான சோழருடைய இராசதானிநகரமாயிருந்த உறையூர் திரிசிராப்பள்ளிக்கு அருகில் உள்ளது. 'திரிபுவனந் தொழு-பார்த்திபன்' என்றது ராஜராஜ சோழனாதிய வேந்தர்களுள் திரிசிராப் பள்ளியில் மண்டபம் முதலிய கட்டுவித்துத் திருப்பணி செய்த ஒருவரைக் குறிக்கின்றது போலும்.

† திரிசிராமலைக் கோயில் வரலாறு-பக்கம் 12-17 பார்க்க.

*தெரியஇ ருந்தப ராக்ரம
உருவளர் †குன்றுடை யார்க்கொரு
திலதமெ னும்படி தோற்றிய பெருமாளே. (3)

## 332. பொது மகளிரால் வரும் கலக்கம் அற

தனதன தானான தானன தனதன தானான தானன
தனதன தானான தானன தந்ததான

அழுதழு தாசார நேசமு முடையவர் போலேபொய் சூழ்வுறும்
அசடிகள் மாலான காமுகர் பொன்கொடா நாள்-

அவருடன் வாய்பேசி டாமையு முனிதலு மாறாத தோஷிகள்
அறுதியில்காசாசைவேசைகள் நஞ்சுதோயும்;

விழிகளினால்மாடவீதியில் முலைகளையோராமலாரொடும்
விலையிடு மாமாய ரூபிகள் பண்பிலாத-

விரகிகள் வேதாள மோவென முறையிடு கோமாள மூளிகள்
வினைசெய லாலேயெனாவியு யங்கலாமோ;

---

* "சிராப்பள்ளி மலை மீதே தெரிய இருந்த" - இங்ஙனமே 342 -ஆம் பாட்டில் 'திரிசிரகுன்றில் முதனாளில் தெரிய இருந்த பெரியவர்'- என்றதையும் காண்க. திரிசிரன் என்னும் அரக்கன் பூசித்த காரணத்தால் திரிசிராமலை எனப் பெயர் போந்தது:

வாயுவுக்கும் ஆதிசேடனுக்கும் நடந்த பலப் போட்டியில் ஆதிசேடன் தனது படத்தால் மூடியிருந்த கயிலைக் கொடு முடிகளில் மூன்று சிகரங்களை வாயு அடித்துத் தள்ளிற்று; அவை தாம்- திருக்காளத்தி, திரிசிராமலை, (ஈழ நாட்டுத்) திருக்கோணமலை; இவை மூன்றும் ' தக்ஷிண கைலாசம்' எனப்படும்.

"முன்னர் வீழ்ந்திடு சிகரிகா ளத்தியா மொழிவர்
பின்னர் வீழ்ந்தது திரிசிரா மலையெனும் பிறங்கல்
அன்ன தின்பிற கமைந்தது கோணமா அசலம்
இன்ன மூன்றையும் தக்ஷிண கயிலையென் றிசைப்பார்
- (செவ்வந்திப் புராணம்)

† " குன்றுடையார்'' - இது "நன்றுடையானை" என்னும் இத்தலத்து (சம்பந்தர் அருளிய) "சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என் உள்ளங் குளிரும்மே" - என்னும் தேவாரப் பகுதியின் I-98-1 ஞாபகத்திற் பிறந்த திருவாக்காம்.

விளங்க வீற்றிருக்கும் வீரனே! அழகிய உருவுடன் விளங்கும் (சிராமலைக்) குன்றுடையவராம் தாயுமான சிவபிரானிடம் நெற்றிப் பொட்டுப் போலச் சிறந்து வெளித் தோன்றிய பெருமாளே!

(தூர்த்தனை விடலாமோ)

## 332

மேல்மேல் அழுது, ஒழுக்கம் வாய்ந்த நண்பு உடையவர் போலப் பொய் வழியிலேயே சூழ்ச்சி செயும் மூடர்கள், தம் மீது ஆசைப்படும் காமுகர்கள் (தூர்த்தர்கள்) தமக்குப் பொன் கொடாத நாளில்

அவர்களோடு வாய் பேசாதிருத்தலும், கோபித்தலும் நீங்காத குற்றம் உடையவர்கள், எல்லை யில்லாத (முடிவு இல்லாத) காசாசை கொண்ட வேசைகள், விஷம் தோய்ந்துள்ள

கண்களினால் மாட வீதிகளில் கொங்கையை- ஆராயாமல் எவரோடும் விலைக்கு விற்கும் மகாமாய உருவினர், நற்குணம் இல்லாத-

காமிகள், பேய் பிசாசோ என்று சொல்லும்படி குறை சொல்லிக் ( கூச்சலிட்டுக்) கும்மாளம் போடும் (கூத்தடிக்கும்) விகாரத்தினர் இத்தகைய பொது மாதர்களின் சூழ்ச்சிச் செயல்களாலே என் உயிர் வருந்தலாமா!

*வழியினில் வாழ்ஞான போதக பரமசு வாமீவ ரோதய
வயலியில் வேலாயு தாவரை யெங்குமானாய்-

மதுரையின் மீதால வாயினில் எதிரம ணாரோ †ரெணாயிரர்
மறிகழு மீதேற நீறுப ரந்துலாவச்;

செழியனு மாளாக ‡வாதுசெய் கவிமத சீகாழி மா§முனி
சிவசிவ மாதேவ காவென **வந்துபாடும்-

திருவுடையாய் ††தீதி லாதவர் உமையொரு பாலான மேனியர்
**சிரகிரி** வாழ்வான தேவர்கள் தம்பிரானே. (4)

---

* வழி- மலைப்பக்கம் "வழிவளர் மயில" - சிந்தாமணி- 2074

† எதிர்த்தவர்- எண்ணாயிரம் சமணர் தலைவர்; சம்பந்தர் ஒரு வைதிக வாரணம் (யானைக் கன்று).

"தளம்பு நெஞ் சுடைய எண்ணா யிரஞ்சமண் தலைவ ராயோர்
உளம்பரி வொடுக முக்கண் யோசனை யகல மேற
வளம்பட வந்து செய்த வாரணம் என்னும் நாமம்
விளங்கிய தன்று முன்னா மேதகு தராத லத்தே "
(திருவால. திருவிளை- 38-49)

'மண்ணா உடம்பு தங்குருதி மண்ணக் கழுவின் மிசை வைத்தார்
எண்ணாயிரவர்க் கெளியரோ நாற்பத்தெண்ணா யிரவரே'
- தக்கயாகப் பரணி 219.

‡ சம்பந்தர் சமணரொடு வாது செய்தது- பாட்டு 181.

§ முநி- சம்பந்தர்- " ஞான முநிவன் சம்பந்தர் தேவாரம் II-84-11, II-85-11.
முனி- யானைக்கன்று. "வைதிகவாரணம் "
- தக்கயாகப்பரணி-183 தாழிசை.

**முநி-வந்து பாடும் திருவுடையாய் - "சீகாழி முநிவராகத் தோன்றிச் சிவ சிவ மாதேவா - புரந்தருளுக" என்று சிவத்தைப் பாடின செல்வம் நிறைந்தவனே! 'சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக் குன்றுடையானை" என்னும் சம்பந்தர் தேவார நினைவுச் சொற்கள் இவை (I-98-1).

(அடுத்த பக்கம் பார்க்க)

நீதி முறைப்படி (அல்லது மலையிடங்களில்) வாழும் ஞானோபதேசம் செய்யவல்ல பரம சுவாமியே! (தேவர்கள் வேண்ட அவர்களின் வேண்டுகோளுக்கு இரங்கிச் சிவன் அவர்களுக்கு அளித்த) வரத்தால் தோன்றியவனே ! வயலூரில் வீற்றிருக்கும் வேலாயுதனே! மலைத்தலம் எங்கும் வீற்றிருப்பவனே!

மதுரையாம் திருவாலவாய்த் தலத்திலே எதிர்த்து வந்த சமணர் எண்ணாயிரம் பேர் அழிபடக் கழுவின் மீது ஏறத், திருநீறு (மதுரையில்) பரந்து விளங்க,

பாண்டியனும் அடிமைப்பட, வாது செய்து கவி மதத்தைப் பொழிந்த (அருமைப் பதிகங்களைப் பாடின. சீகாழி யானைக் கன்றே! சிவ சிவ மகா தேவா! காத்தருள் என்று (திருவாலவாய்ச் சிவபெருமானிடம் சென்று பாடின)

(பெருஞ்) செல்வம் பெற்றவனே! ††தீது இலாதவரும் உமையை ஒரு புறத்தில் வைத்த திருமேனியரும் ஆன சிவனது (திரி) சிர கிரியில் வாழ்வு கொண்டிருக்கும் (தேவர்கள்) தம்பிரானே!

(என் ஆவி உயங்கலாமோ)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

"ஞான சம்பந்தர்.....திருசிராப்பள்ளிச் சிலம்பணைந்தார். "சிராப்பள்ளி மேய செழுஞ் சுடரை... உளங்குளிர ... சொற்றமிழ் மாலை வேய்ந்து" - பெரிய-புராணம் திருஞான. 343, 344.

"வாது செயத் திருவுள்ளமே.. ஆலவாயில் உறையும் எம் ஆதியே" எனப் பாடி விடைபெற்றுச் சம்பந்தர் வாது செய்தார் III-108 தேவாரம்.

†† இது சம்பந்தப் பெருமானுடைய திரிசிராப்பள்ளிப் பதிகத்தில் வரும்- "நன்றுடையானைத் தீயதில்லானை" 'உமையொரு பாகம் உடையானை' என்னும் திருவாக்கைத் தழுவுகின்றது.

## 333. அன்பு பெற

*தனதன தந்தத் தனதன தந்தத்*
*தனதன தந்தத் தனதான*

*இளையவர் நெஞ்சத்* தளையமெ னுஞ்சிற்*
*றிடைகொடு வஞ்சிக் கொடிபோல்வார்-*
*இணையடி கும்பிட் டணியல் குல்பம்பித்*
*திதழமு துந்துய்த் தணியாரக்;*
*களபசு கந்தப் புளகித இன்பக்*
*கனதன கும்பத் திடைமுழ்குங்-*
*கலவியை நிந்தித் திலகிய நின்பொற்*
*கழல்தொழு* **மன்பைத் தருவாயே;**
*தளர்வறு மன்பர்க் குளமெனு மன்றிற்*
*சதுமறை சந்தத் தொடுபாடத்-*
*தரிகிட தந்தத் திரிகிட திந்தித்*
*தகுர்தியெ னுங்கொட் டுடனாடித்;*
*தெளிவுற வந்துற் றொளிர்சிவ னன்பிற்*
*சிறுவஅ லங்கற் றிருமார்பா-*
*†செழுமறை யஞ்சொற் பரிபுர சண்டத்*
**திரிசிர குன்றப்** *பெருமாளே* (5)

---

* தளையம் - விலங்கு.

† சிலம்பு - மறை ஒலி செய்கின்றது ; "மறை சதுர் விதந்தெரிந்து வகை சிறு சதங்கை கொஞ்சும்" என்றார் 50 ஆம் பாடலில்.

# 333

வாலிபர்களுடைய நெஞ்சுக்கு விலங்கு எனச் சொல்லத் தக்க சிற்றிடையைக் கொண்ட வஞ்சிக் கொடி போன்ற பொது மகளிரது-

இணையடியைக் கும்பிட்டு, அழகிய அல்குல் எழுச்சி அடையச் செய்து, வாய் இதழ் அமுதத்தைப் பருகி அநு-பவித்து, அணியான முத்துமாலையும்-

கலவைச் சாந்தின் நறுமணமும் புளகிதமும் கொண்ட இன்பம் தருவதான, கனத்த, கொங்கைக் குடத்தின் மத்தியிலே முழுகும்-

கலவி யின்பத்தை வெறுத்துத் தள்ளி, விளங்கும் உனது அழகிய திருவடியைத் தொழும் அன்பைத் தந்தருளுக.

சோர்வு இலாத அன்பர்களுடைய உளம் என்னும் மன்றத்தில் (நடன சாலையில்), நான்கு மறைகளும் உரிய சந்தத்துடனே பாட - (அல்லது அழகாய்ப் பாட) -

தரிகிட தந்தத் திரிகிட திந்தித் தகுர்தி யென்னும் கொட்டு முழக்கத்துடன், நடனம் செய்து

தெளிவு பெறும் வண்ணம் (அந்த அன்பர்கள் உள்ளத்தே) வந்து, இருந்து, விளங்கும் சிவபெருமானது அன்புக்கு உரிய குழந்தையே! மாலை யணிந்த அழகிய மார்பனே!

செழுமறைகளை அழகாகச் சொல்லுகின்ற (ஒலிக்கின்ற) சிலம்பை அணிந்தவனே! வலிமை வாய்ந்த திரிசிரமலைப் பெருமாளே!

(அன்பைத் தருவாயே)

## 334. அலைச்சல் அற

தனதன தத்தம் தனதன தத்தம்
தனதன தத்தம் தனதான

பகலவ னொக்குங் கனவிய ரத்நம்
பவளவெண் முத்தந் திரமாகப்-
பயிலமு லைக்குன் றுடையவர் சுற்றம்
பரிவென வைக்கும் பணவாசை;
அகமகிழ் துட்டன் பகிடிம ருட்கொண்
டழியும வத்தன் குணவீனன்-
அறிவிலி சற்றும் பொறையிலி பெற்றுண்
டலைதலொ ழித்தென் றருள்வாயே;
சகலரு மெச்சும் பரிமள பத்மந்
தருணப தத்திண் சுரலோகத்-
தலைவர்ம கட்குங் குறவர்ம கட்குந்
தழுவஅ ணைக்குந் திருமார்பா;
செகதல மெச்சும் புகழ் *வய லிக்குந்
திகுதிகெ னெப்பொங் கியவோசை-
திமிலைத விற்றுந் துமிகள்மு ழக்குஞ்
*சிரகிரி யிற்கும் பெருமாளே (6)

---

*வயலிக்கும் -சிரகிரியிற்கும்- உருபு மயக்கம்- நான்காம் வேற்றுமைக் 'குவ்வுருபு' இடப்பொருளாய், கண்ணுருபாக, நிற்கின்றதெனக் கொள்ளலாம் - "வந்து வைகிற்றிவ் வார் பொழிற்கே" திருக்கோவையார் 120. 'கிழங்கு மணற்கீன்ற'- அகநானூறு 212 - என்புழிப்போல, நன்னூல் சூத்திரம் 317.

வயலூர் திரிசிராமலைக்கு ஆறு மைல் தூரத்தில் உள்ள பிரபல முருகர் ஸ்தலம், அருணகிரிநாதருக்கு அண்ணாமலையில் குருமூர்த்தமாய் அருளின முருகவேள் வயலூரில் மறுமுறை அனுக்கிரகித்த தலம், வயலூர் அண்மையில் இருப்பதால் திரிசிராப்பள்ளிப் பதிகங்களில் வயலூர் அதிகமாக வரும்- 334- ஆம் பாடலில் வயலூர் சிராப்பள்ளி இரண்டு தலங்களும் இணைத்துப் பாடப்பட்டன.

## 334

சூரியனைப் போன்று ஒளி வீசும் பெருமை வாய்ந்த ரத்னம், பவளம், வெண் முத்து (மாலைகள்) -திடமாக (நன்றாக)

நெருங்கி விளங்கக் கொங்கை மலையை உடையவர் களுடைய கூட்டமே அன்புக் கிடமென வைக்கின்ற (துஷ்டன்) பண ஆசையில்

உள்ளம் களிக்கின்ற துஷ்டன், வெளி வேஷக்காரன், மோக மயக்கம் கொண்டு அழிகின்ற வீணன், இழிகுணத்தோன்,

அறிவில்லாதவன், சிறிதேனும் பொறுமை இல்லாதவன் (இத்தகைய நான்) (பொருள் தேடிப்) பெற்றும், உண்டும் அலைகின்றேன்- அங்ஙனம் அலைதலை ஒழித்து என்று எனக்கு அருள்வாய்!

யாவரும் மெச்சும் நறுமணமுள்ள தாமரை போன்ற இளமை வாய்ந்த திருவடிகளை உடையவனே! திண்ணிய தேவலோகத்

தலைவரான இந்திரன் மகள் (தேவ சேனைக்கும்) குறவர்-மகள் (வள்ளிக்கும்) தழுவ அணைக்கத் தருகின்ற அழகிய மார்பனே! (அல்லது அவர்கள் இருவரும் (உன்னைத்) தழுவ அவர்களை (நீ) அணைந்து தழுவும் திருமார்பனே)!

பூவுலகம் மெச்சுகின்ற புகழ் வாய்ந்த வயலூரிலும் தகுதிகெனப் பொங்கி யெழும் ஒலி கொண்ட

திமிலை (ஒருவகைப் பறை), தவில் (மேள வகை) துந்துமிகள் (பேரிகைகள்) - முழக்கம் செய்யும் திரிசிராமலை யிலும் (விளங்கும்) பெருமாளே! அல்லது வயலூருக்கும், திரிசிரகிரிக்கும் (பெருமானாய் விளங்கும்) பெருமாளே!

(அலைதல் ஒழித்தென் றருள்வாயே)

## 335. திருவடியைப் பெற

தனதனன தந்த தனதனன தந்த
தனதனன தந்த தனதான

ஒருவரொடு கண்கள் ஒருவரொடு கொங்கை
ஒருவரொடுசெங்கை யுறவாடி-
ஒருவரொடு சிந்தை ஒருவரொடு நிந்தை
ஒருவரொடி ரண்டு முரையாரை;
மருவமிக அன்பு பெருகவுள தென்று
மனநினையு மிந்த மருள்தீர-
வனசமென வண்டு தனதனன வென்று
மருவு சரணங்க ளருளாயோ;
அரவமெதிர் கண்டு நடுநடுந டுங்க
அடலிடுப்ர சண்ட மயில்வீரா-
அமரர்முத லன்பர் முநிவர்கள்வ ணங்கி
அடிதொழுவி ளங்கு *வயலூரா;
†திருவையொரு பங்கர் கமலமலர் வந்த
திசைமுகன்ம கிழ்ந்த பெருமானார்-
திகுதகுதி யென்று நடமிட முழங்கு
த்ரிசிரகிரி வந்த பெருமாளே (7)

---

* "செய்ப்பதியும் (வயலூரையும்) வைத்து உயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு" (திருப்புகழ்- விநா-3,) எனக் கட்டளை பெற்றாராதலின்- திரிசிராப்பள்ளி ஆதிய தலங்களில் 'வயலூரா'- என மறவாது முருகனை அழைக்கின்றார்.

† திருவை ஒரு பங்கர்- திருமாலைக் குறிப்பதாகக் கொள்ளலாம். (இலக்குமியை) மார்பிலே அல்லாமல் ஒரு பங்கில் (ஒரு பக்கத்தில்) உடையவர் என்றும் நூல்கள் கூறும்:

" திருமடந்தை மண் மடந்தை இரு பாலும் திகழ"
- பெரிய திருமொழி *3-10-1.*

திரு-பார்வதியாகவும் கொள்ளலாம்:
" பேழைவார்சடைப் பெருந் திருமகள் தனைப்
பொருந்தவைத் தொருபாகம் " - சம்பந்தர் II-*107-6.*

## 335

ஒருவரொடு கண்கொண்டு (உறவாடியும்) (அதாவது ஒருத்தரைக் கண்ணால் அழைத்தும்), ஒருவரொடு கொங்கை கொண்டு (உறவாடியும்) (அதாவது ஒருத்தரை மார்பில் அணைத்தும்), ஒருவரொடு செங்கை கொண்டு (உறவாடியும்) (அதாவது ஒருத்தரொடு கை குலுக்கியும்- கையால் அழைத்தும்).

ஒருத்தரொடு சிந்தை கொண்டும் (அதாவது ஒருத்தரை மனத்தில் வைத்து விரும்பியும்), ஒருத்தரை தூசணம் செய்து வெறுத்தும், ஒருத்தரொடு விருப்பு வெறுப்பு இரண்டும் காட்டாமல் மௌனம் சாதித்தும் - இருக்கின்ற பொது மகளிரைச்

சேர்தற்கு மிக்க காதல் பெருக உள்ளது என்று மனத்தில் நினைக்கின்ற இந்த மோக மயக்கம் தொலைய (நீங்க) - (எனக்கு நீ) -

தாமரையென நினைத்து வண்டுகள் தனதனன என்னும் ஒலியுடன் வந்து பொருந்துகின்ற (உனது) திருவடிகளை அருள மாட்டாயா!

பாம்பு (தன்னை) எதிரில் கண்டதும், நடு நடுங்கும்படி தனது வலிமையைக் காட்டும் கடுமைவாய்ந்த மயில் வீரனே!

தேவர் முதலான அன்பர்களும் முநிவர்களும் வணங்கி உனது திருவடியைத் தொழ விளங்குகின்ற வயலூரனே!

இலக்குமியை ஒரு பாகத்தில் உடைய திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் (அல்லது திருமாலின் உந்திக் கமலத்தில் வந்த நான்முகனும்) (பிரமனும்) மகிழ்ந்து போற்றும் பெருமானார் (சிவபிரான்) அல்லது, திருவை (லட்சுமீகரம் பொருந்திய மாதை - பார்வதியை) ஒரு பங்கில் (இடது பாகத்தில்) உடையவர்,...பிரமன் மகிழ்ந்த பெருமானார் (சிவபிரான்)

திகுதகுதி என்று நடன மிட (முழவு முதலிய வாத்தியங்கள்) முழங்குகின்ற திரிசிராப்பள்ளியில் எழுந்தருளியுள்ள பெருமாளே!

(சரணங்கள் அருளாயோ)

## 336. ஈடேற

தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதான

குமுத வாய்க்கனி யமுத வாக்கினர்
கோலே வேலே சேலே போலே அழகான-

குழைகள் தாக்கிய விழிக ளாற்களி
கூரா வீறா தீரா மாலா யவரோடே;

உமது தோட்களி லெமது வேட்கையை
ஓரீர் பாரீர் வாரீர் சேரீர் எனவேநின்-

றுடைதொ டாப்பண மிடைபொ றாத்தன
மூடே வீழ்வே னீடே றாதே யுழல்வேனோ;

தமர வாக்கிய அமரர் வாழ்த்திய
தாதா வேமா ஞாதா வேதோ கையிலேநீ-

சயில நாட்டிறை வயலி நாட்டிறை
சாவா மூவா மேவா நீவா இளையோனே;

திமிர ராக்கதர் சமர வேற்கர
தீரா வீரா நேரா *தோரா உமைபாலா-

திரிசிராப்பளி மலையின் மேற்றிகழ்
தேவே கோவே வேளே வானோர் பெருமாளே. (8)

---

* "தோரா வென்றிப் போரா" என்றார் பிறிதோரிடத்து (பாட்டு-57)

# 336

குமுத மலர் போன்ற வாயினின்றும் பழம் போலவும் அமுதம் போலவும் இனிமைதரும் பேச்சினர், அம்பு, வேல் சேல் மீன் போன்ற அழகான-

குழைகள் தாக்குகின்ற கண்களினால் (கண்களைக் கண்டு) (நான்) மகிழ்ச்சி மிக்குப், பெருமையுடன், முடிவு இல்லாத மோகத்துடன், அப் பொதுமகளிரோடே-

உம்முடைய தோள்களின் மீது எமக்கு உள்ள ஆசையை நீர் அறிய மாட்டீர், எம்மைப் பார்க்க மாட்டீர், எம்மிடம் வரமாட்டீர், எம்மொடு சேர மாட்டீர் என்றெல்லாம் கூறி நின்று-

(அவர்களுடைய) ஆடையைத் தொட்டு, அவர் தம் பணத்திலும் (பாம்பின் படம் போன்ற அல்குல் இடத்தும், இடை தாங்கமுடியாத (கனத்த) கொங்கைகளின் இடத்தும்) விழுகின்ற நான் ஈடேறும் வழியைக் காணாமலே திரிவேனோ!

ஒலி செயும் (துதிச்) சொற்களுடனே தேவர்கள் (ஓதி) வாழ்த்துகின்ற தாதாவே (பெரியோனே! கொடையாளனே)!; சிறந்த ஞானவானே (ஞானியே) ! மயில் வாகனனே!

மலைப் ப்ரதேசங்களுக்குத் தலைவனே! வயலூர் நாட்டுக்குத் தலைவனே! இறத்தல், மூத்தல் இலாத நீ, வா, இளையோனே!

இருள் போற் கரிய அரக்கர்களுடன் போர் செய்த வேல் ஏந்திய திருக்கரத்தனே! தீரனே! வீரனே! நேர்மை (நீதி) யுள்ளவனே! தோல்வி யிலாத உமையின் குழந்தையே!

திரிசிராப்பள்ளி மலையின்மேல் விளங்கும் தேவே! அரசே! வேளே! தேவர் பெருமாளே!

(ஈடேறாதே உழல்வேனோ)

## 337. மோகம் அற

தனன தானன தத்தன தந்தன
தனன தானன தத்தன தந்தன
தனன தானன தத்தன தந்தன தனதான

குவளை பூசல்வி ளைத்திடு மங்கயல்
கடுவ தாமெனு மைக்கண் மடந்தையர்
குமுத வாயமு தத்தை நுகர்த்திசை பொருகாடை-
குயில்பு றாமயில் *குக்கில் சுரும்பனம்
வன்†ப தாயுத மொக்கு மெனும்படி
‡குரல்வி டாஇரு பொற்குட மும்புள கிதமாகப்;
பவள ரேகைப டைத்தத ரங்குறி
யுறவி யாளப டத்தை யணைந்துகை
பரிச தாடன மெய்க்கர ணங்களின் மதனூலின்-
படியி லேசெய்து ருக்கிமு யங்கியெ
அவச மாய்வட பத்ர நெடுஞ்சுழி
படியு மோகச முத்ரமழுந்துத லொழிவேனோ;
தவள ரூப§ச ரச்சுதி யிந்திரை
ரதிபுலோமசை க்ருத்திகை ரம்பையர்
சமுக சேவித **துர்க்கை பயங்கரி புவநேசை-
சகல காரணி சத்தி பரம்பரி
யிமய பார்வதி ருத்ரி நிரஞ்சனி
சமய நாயகி நிஷ்களி குண்டலி யெமதாயி;
சிவைம நோமணி சிற்சுக சுந்தரி
கவுரி வேதவி தக்ஷணி யம்பிகை
த்ரிபுரை யாமளை யற்பொடு தந்தருள் முருகோனே-

---

* குக்கில் - செம்போத்து. † பதாயுதம்- கோழி.

‡ குரல் - புட்குரல், பாடல் 197, 323-பார்க்க. எட்டுப் பறவைகளும் இப்பாடலிற் கூறப்பட்டுள. § சரச்சுதி- சரஸ்வதி.

** இது தேவியின் திருநாமங்கள் பல வருகின்ற பாடல். துர்க்கை முதலாக 21 திருநாமங்களால் தேவி போற்றப்படுகின்றாள்.

## 337

குவளை மலர் போன்றும், போர் புரியும் அழகிய கயல் மீன் போன்றும், விடம் போன்றும் உள்ள மை பூசிய கண்களை உடைய மாதர்களின் குமுதம் போன்ற வாயிதழ் அமுதத்தைப் பருகி, ஒலி பொருந்தும் காடை (குறும்பூழ் என்னும் பறவை),

குயில், புறா, மயில், செம் போத்து, வண்டு, அன்னம் அழகிய கோழி - இவைதம் குரலை நிகர்க்கும் என்று சொல்லத் தக்க (புட்) குரலைக் காட்ட, இரண்டு தங்கக் குடம் என்னும்படியான கொங்கைகள் புளகிதம் கொள்ள,

பவள ரேகை போன்ற வாயிதழிற் குறி உண்டாகப், பாம்பின் படம் போன்ற அல்குலை அணைந்து, கை பரிசம் (தொடுகை), தாடனம் (தட்டுகை) முதலிய உடல் கொண்டு செய்யும் தொழில்களைக் காம நூலின் (கொக்கோக சாத்திரத்தின்)

முறைப்படி செய்து உருக்கிக், கூடித், தன் வசமழிந்து, (மாதர்களின்) ஆலிலை போன்ற வயிற்றுச் சுழியில் முழுகுகின்ற ஆசைக் கடலில் அழுந்துதலைத் தவிரேனோ!

வெண்ணிறங் கொண்ட சரசுவதி, இலக்குமி, இரதி, இந்திராணி, கிருத்திகை மாதர், அரம்பையர்கள் (ஆதிய) கூட்டத்தாரால் வணங்கப்படுகின்ற துர்க்காதேவி, பயங்கரி புவனேசுரி,

சகல காரியங்களுக்கும் காரணமாயிருப்பவள், சத்தி, முழு முதலாம் தேவி, இமய ராசன் மகளாம் பார்வதி, ருத்ரி, அழுக்கற்றவள், சமயங்களுக்குத் தலைவி, உருவ மில்லாதவள், சிவனது பரிக்கிரக (அங்கீகாரம், பற்றுகை) ரூபையான கிரியா சக்தி, எம் தாய்,

சிவன் தேவி, மநோமணி (மனத்தை ஞான நிலைக்கு எழுப்புபவள்,) அறிவு ரூப ஆனந்த அழகி, கௌரி, வேதத்திற் சிறப்பாக எடுத்து ஓதப்பட்டவள், அம்பிகை, திரிபுரை (பிங்கலை, இடைகலை, சுழுமுனை என்னும் மூன்று நாடிகளிலும் இருப்பவள்), யாமளை (சியாமள நிறத்தை உடையவள்) - ஆகிய பார்வதி அன்புடன் பெற்றருளிய முருகனே (குழந்தையே)!

*சிகர கோபுர சித்திர மண்டப*
*மகர தோரண ரத்ந அலங்க்ருத*
**திரிசிராமலை*** *அப்பர் வணங்கிய பெருமாளே.* (9)

## 338. திருவடியைப் பெற

*தத்த தானா தனாதன தத்த தானா தனாதன*
*தத்த தானா தனாதன தந்ததான*

*சத்தி பாணீ நமோநம முத்தி ஞானீ நமோநம*
*தத்வ வாதீ நமோநம* †*விந்துநாத-*

*சத்து ரூபா நமோநம ரத்ந தீபா நமோநம*
*தற்ப்ர தாபா நமோநம என்றுபாடும்;*

*பத்தி பூணா மலேயுல கத்தின் மானார் சவாதகில்*
*பச்சை பாடீர பூஷித கொங்கைமேல்வீழ்-*

‡*பட்டி மாடான நானுனை விட்டிரா* §*மேயு லோகித*
*பத்ம சீர்பாத* **நீயினி வந்துதாராய்;**

***அத்ர தேவா யுதாசுர ருக்ர சேனா பதீசுசி*
††*யர்க்ய சோமாசி யாகுரு சம்ப்ரதாயா-*

---

* அப்பர்- சிவபெருமான். " வெண்ணீற் றப்பர் சோற்றுத் துறை சென் றடைவோமே - சம்பந்தர் I *-28-1.*

† நாதம்-விந்து . விந்து- சத்தி பேதம்; நாதம்- சிவ பேதம்.
*(திருப்புகழ் 100- பார்க்க)*

‡ பட்டி மாடு - அடங்காமல் திரியும் மாடு.

§ உலோகிதம் - செம்மை நிறம்.

** அத்ர தேவாயுத - அத்திர தேவர் - உற்சவ காலங்களில் சுவாமி புறப்படுவதற்கு முன் வீதியைச் சுற்றிக்கொண்டுவரும் ஆயுத வடிவமான மூர்த்தி. முருகவேளுக்கு அத்தகைய ஆயுத மூர்த்தி - வேலாயுதம்: "உடம்பிடித் தெய்வம்", "எண்ணரும் படைகட்கெல்லாம் இறைவ" என்றார் கந்த புராணத்தில் - *(IV-13-407) (IV-5-213);* உடம்பிடி - வேல்,

†† அர்க்கியம்- தேவர்களுக்கு மந்திர தீர்த்தத்தாற் செய்யும் ஒரு வகை உபசாரம்.

மலை உச்சியுங், கோபுரமும், அழகிய மண்டபங்களும், மகர மீனின் வடிவமைந்த அலங்காரத் தொங்கல்களும், ரத்ன சிங்காரங்களும் நிரம்பிய **திரிசிராமலையில்** எழுந்தருளியுள்ள அப்பர் (சிவபெருமான்) வணங்கிய பெருமாளே!

(மோக சமுத்ரம் அழுந்துதல் ஒழிவேனோ)

## 338

(ஞான) சத்தி வேலை ஏந்திய திருக்கரத்தனே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், முத்தியைத் தரவல்ல ஞான மூர்த்தியே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; தத்துவங்களுக்கு ஆதி மூர்த்தியாய் விளங்குபவனே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; விந்து - நாதம் (சத்தி-சிவம்) இவை யிரண்டின்

சத்தான ரூபம் வாய்ந்தவனே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், ரத்னத்தின் பேரொளி விளக்கமே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (யாவரும் அறிந்த) அந்த (அல்லது தனக்குத் தானே நிகரான இயல்பாய்ப் பொருந்திய) - கீர்த்திமானே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன் என்றெல்லாம் பாடித் துதிக்கும்

பத்தியைப் பூணாமல், உலகத்திலே மாதர்களுடைய சவ்வாது, அகில், பசுஞ் சந்தனம் இவை அணிந்துள்ள கொங்கையின் மேலே விழுகின்ற

கொண்டி மாடாகிய நான் உன்னை (இனி) விட்டு இராமல் சிவந்த தாமரை யனைய உனது சிறந்த திருவடியை நீ இனியேனும் வந்து எனக்கு அருள்வாயாக;

சத்தி வேலாயுதனே! தேவர்களுக்குத் தலைமை பூண்ட உக்கிரம் வாய்ந்த சேனாபதியே! பரிசுத்தமான - தீர்த்த உபசாரங்கள் கொண்ட (அல்லது நெருப்பில் அர்க்கியம் இடப்படும்) *சோமாசி யாக கர்த்தாவே! (உபதேச) குரு பரம்பரைக்கு முதல்வனே!

---

*சோமாசியா- யாக கர்த்தா. முருகவேளுக்கு " யாகரட்சக மூர்த்தி" என்றொரு பெயர் உண்டு, "ஒரு முகம் மந்திர விதியின் மரபுளி வழாஅ, அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே" - திருமுருகாற்றுப் படை, 'அந்தண் மறை வேள்வி காவற்கார ' - திருப்புகழ் 41.

அர்ச்ச னாவாக னாவய லிக்குள் வாழ்நாய காபுய
*அக்ஷ மாலா தராகுற மங்கைகோவே;

சித்ர கோலா கலாவிர லக்ஷ்மி சாதா ரதாபல
திக்கு பாலா சிவாகம தந்த்ரபோதா-

சிட்ட நாதா **சிராமலை** யப்பர் ஸ்வாமீ மகாவ்ருத
தெர்ப்பை யாசார வேதியர் தம்பிரானே. (10)

## 339. அநுபூதி நிலைபெற

தனதனதனத் தனதான

†பகலிரவினிற் றடுமாறா-
பதிகுருவெனத் தெளிபோத;
ரகசியமுரைத் தநுபூதி-
**‡ரதநிலைதனைத் தருவாயே;**
இகபரமதற் கிறையோனே-
இயலிசையின்முத் தமிழோனே;
**§சகசிரகிரிப் பதிவேளே-**
சரவணபவப் பெருமாளே. (11)

---

* அக்ஷமாலா - ருத்ராட்ச மாலிகை-
" ஒருகரந்தனில் கண்டிகை வடம் பரித்து"
- கந்தபுராணம் I-16-17.

† பகல் இரவு - "இரவொடு பகலற - திரு பதிய" என்றார் பிறிதோரிடத்து- பாட்டு 303.

‡ இரதம்- இனிமை . "இரத முடைய நடமாட்டுடையவர்"
- திருக்கோவை 57.

§ சகம் - பூமி, 'சிரகிரி' என்பதைச் சென்னிமலை என்னும் தலமெனக் கொண்டு இப்பாடலை அத்தலத்துக்கு உரியதாகவும் ஓதலாம். 'சென்னிமலை ஆண்டவன் காதல்' என்னும் நூலிற் 'சிந்துரத்தின் மீதில் சிரகிரி பிரதக்கணமாய் வந்தார் பவனி வந்தார்' என்று சென்னிமலையைச் 'சிரகிரி' என்று ஓதப்பட்டுளது.

அருச்சனைகளை ஏற்றுக் கொள்பவனே! மந்திரங்களால் அழைக்க எழுந்தருள்பவனே! (அல்லது அருச்சனையில் எழுந்தருள்பவனே)! வயலூரில் வாழ்ந்தருளும் தலைவனே! திருப்புயங்களில் ருத்ராட்சமாலை தரித்தவனே! குறமங்கை (வள்ளியின்) தலைவனே!

அழகிய ஆடம்பர மூர்த்தியே! வீர லட்சுமியாம் பார்வதியிடம் சாதா- ஜாதா (தோன்றியவனே) ! அல்லது வீர லட்சுமி விளங்குபவனே! இரதா (இனிமை வாய்ந்தவனே) ! பல திக்குகளையும் காத்துப் பரிபாலிப்பவனே! சிவாகம நூல்களை உபதேசிக்கும் ஞான மூர்த்தியே!

மேன்மை தங்கும் நாதனே! சிராமலை அப்பராம் தாயுமானவர்க்கும் சுவாமியே (குருமூர்த்தியே)! மிகச் சிறந்த ஒழுக்கம் பூண்டவராய்த் தருப்பைப் புல் ஏந்தும் (அல்லது தருப்பை ஆசனம் கொண்ட) ஆசார அந்தணர்களுடைய தம்பிரான் மூர்த்தியே!

(பத்ம சீர்பாதம் நீ இனிவந்து தாராய்)

## 339

பகல், இரவு என்கின்ற வேற்றுமை நிலையில் தடுமாறாமல் இருக்க (இரவு பகல் அற்ற இடத்தை அடைய)

பதி (ஆண்டவன்) எனவும், குரு எனவும் தெளிவு தரும் ஞான

ரகசிய உபதேசத்தை போதித்து, அநுபூதி (திருவருட் பிரசாதப் பேறு ) என்கின்ற

இனிய நிலையைத் தந்தருளுக.

இகத்துக்கும் பரத்துக்கும் தலைவனாய் நிற்பவனே!

இயல், இசை (நாடகம்) எனப்படும் முத்தமிழுக்கும் உரியவனே!

பூமியில் சிரகிரி என்னும் தலத்தில் எழுந்தருளிய (குமர) வேளே!

சரவணத்தில் உதித்த பெருமாளே!

(ரத நிலைதனைத் தருவாயே)

## 340. யம தண்டனை ஒழிய

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத் தனதான

புவனத் தொருபொற் றொடிசிற் றுதரக்
கருவிற் பவமுற் றுவிதிப் படியிற்
புணர்துக் கசுகப் பயில்வுற் றுமரித் திடிலாவி-
*புரியட் டகமிட் டதுகட் டியிறுக்
கடிகுத் தெனஅச் சம்விளைத் தலறப்
புரள்வித் துவருத் திமணற் சொரிவித் தனலூடே;
தவனப் படவிட் டுயிர்செக் கிலரைத்
தணிபற் களுதிர்த் தெரிசெப் புருவைத்
தழுவப் பணிமுட் களில்கட் டியிசித் திடவாய்கண்-
சலனப் படஎற் றியிறைச் சியறுத்
தயில்வித் துமுரித் துநெரித் துளையத்
தளையிட் டுவருத் தும்யமப் ரகரத் துயர்தீராய்;
பவனத் தையொடுக் குமனக் கவலைப்
ப்ரமையற் றைவகைப் புலனிற் கடிதிற்
படரிச் சையொழித் ததவச்† சரியைக் க்ரியையோகர்-
பரிபக் குவர் ‡நிட் டைநிவிர்த் தியினிற்
பரிசுத் தர்விரத் தர்கருத் ததனிற்
பரவப் படுசெய்ப் பதியிற் பரமக் குருநாதா;

---

* புரி அட்டகம் - "ஆசை சேர் மனாதி தன்மாத் திரைபுரியட்ட கந்தான்" - சிவஞான - சுபக்கம் 2-சூ-64. தன்மாத்திரை- பஞ்ச மகா பூதங்கட்குக் காரணமான சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற மூலப் பொருள்கள். இவை ஐந்துடன் மனம், புத்தி, அகங்காரம் என்னும் மூன்றும் கூடியது புரியட்டக உடம்பு ( சூக்குமதேகம்)

† சரியை, கிரியை, யோகம்- பாடல் 331 பார்க்க.

‡ நிட்டை இன்னதென்பது- இளசைப் பதிற்றுப்பத்து- 76.

## 340

இப்பூமியில் ஓர் அழகிய பெண்ணின் சிறிய வயிற்றில் கருவில் தோற்றம் உற்று, விதியின் ஆட்சியின்படியே கூடுகின்ற துக்கத்தையும், சுகத்தையும் அநுபவித்து, இறந்த பின் உயிரை,

சூக்கும சரீரத்திற் புகுத்தி, அந்தத் தேகத்தைக் கட்டி, அழுந்தக் கட்டு, அடி, குத்து என்றெல்லாம் பயத்தை உண்டுபண்ணி, அலறி அழப் புரட்டி, வருத்தப்படுத்தி, (வாயில்) மணலைச் சொரிவித்து, நெருப்பினுள்ளே-

சூடேறும்படியாக விட்டு, அந்த உயிரைச் செக்கில் இட்டு அரைத்து, வரிசையாயுள்ள பற்களை உதிரும்படி அடித்து, எரிகின்ற செம்பாலாகிய உருவம் ஒன்றைத் தழுவும்படி பண்ணி (செய்து), முட்களில் கட்டி இழுத்து, வாயும், கண்ணும்

கலங்கி அசையும்படியாக மோதி, மாமிசத்தை அறுத்து உண்ணும்படி செய்வித்து, (எலும்பை) ஒடித்து, நொறுக்கி நசுக்கி, வருந்தும்படி விலங்கு பூட்டி, துன்பப் படுத்தும் யம தண்டனை என்னும் துயரத்தை ஒழித்தருளுக.

பிராண வாயுவை ஒடுக்கும் மனக்கவலையாம் மயக்கத்தை விலக்கி, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் (ஐவகையான) புலன்களில் வேகமாகச் செல்லுகின்ற ஆசையை ஒழித்த தவம் வாய்ந்த சரியையாளர்கள், கிரியையாளர்கள், யோகினர்-

மலபரிபாகம் பெற்றவர்- மலம் அழிதற்குரிய பக்குவ நிலையினர் (ஞான முதிர்ச்சி கொண்டவர்கள்), நிட்டை (தியானம்), துறவு பூண்ட பரிசுத்தர்கள், உலகப்பற்று விட்டவர்கள் ஆகிய பெரியோர்கள் தத்தம் கருத்தில் வைத்துப் போற்றப்படும் குருநாதனே! வயலூரில் வீற்றிருக்கும் குரு நாதனே! பரமனுக்கும் (அல்லது மேலான) குரு நாதனே !

சிவனுத் தமனித் தவுருத் திரன்முக்
கணனக் கன்மழுக் கரனுக் ரரணத்
த்ரிபுரத் தையெரித் தருள்சிற் குணனிற் குணனாதி-
செகவித் தனிசப் பொருள்சிற் பரனற்
புதனொப் பிலியுற் பவபத் மதடத்
த்ரிசிரப் புரவெற் புறைசற் குமரப் பெருமாளே (12)

## 341. பொது மகளிர் மீதுள்ள இன்பம் அற

தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன தந்ததான

பொருளின் மேற்ப்ரிய காமா காரிகள்
பரிவு போற்புணர் க்ரீடா பீடிகள்
புருஷர் கோட்டியில் நாணா மோடிகள்
கொங்கைமேலே-
புடைவை போட்டிடு மாயா ரூபிகள்
மிடிய ராக்குபொ லாமூ தேவிகள்
புலையர் மாட்டும றாதே கூடிகள் *நெஞ்சமாயம்;
கருதொ ணாப்பல கோடா கோடிகள்
விரகி னாற்பலர் மேல்வீழ் வீணிகள்
கலவி சாத்திர நூலே யோதிகள் தங்களாசைக்-
கவிகள் கூப்பிடு மோயா மாரிகள்
†அவச மாக்கிடு பேய்நீ ரூணிகள்
கருணை நோக்கமி லாமா பாவிக ளின்பமாமோ;

---

* "விரகுடன் நூறாயிர மனமுடை மாபாவிகள்" (திருப்புகழ் 583)
'வஞ்சமே கோடி கோடிகள் நெஞ்சமே சேர மேவிய வன்கணார்'
(திருப்புகழ் 237)
'கோடா கோடிய மனதானார்' (திருப்புகழ் 1180)
'உண்ணிறை உடைய அல்ல ஒராயிர மனத்த ஆகும்'.
(சிந்தாமணி 1597)
†அவசமாக்கும் நீர் - 'ஆவேச நீர்' என்றார் பிறிதோரிடத்து
(திருப்புகழ் 362)

சிவன், உத்தமன், அழிவிலாத உருத்திரன், முக்கண்ணன், நக்கன் (நிர்வாணி - திகம்பரன்) (அல்லது அக்கன் - எலும்பாபரணன்), (மழு ஏந்திய கரத்தன்), உக்ரமான போர்க் களத்தில் திரிபுரத்தை எரித்தருளிய ஞான குணத்தினன், குணமிலாதவன், ஆதி மூர்த்தி-

செகத்துக்கு (உலகுக்கு) வித்தன் (வித்து - மூலப்பொருளா யிருப்பவன்), நிசப் பொருள் (உண்மைப் பொருளா யிருப்பவன்), அறிவுக்கு எட்டாதவன், அற்புதன், ஒப்பிலி - ஆகிய சிவபிரானிடத்தே (உற்பவித்தவனே) தோன்றினவனே! தாமரைத் தடாகங்கள் உள்ள திரிசிராப்பள்ளிமலை மேல் வீற்றிருக்கும் சற் குமர (நல்ல குமரப்) பெருமாளே!

(யமப் ப்ரகரத் துயர் தீராய்)

## 341

பொருளின்மேல் ஆசை கொண்ட காம உருவத்தினர், அன்பு உடையவர்கள் போலச் சேரும் காம லீலைக்கு இருப்பிடம் ஆனவர்கள், ஆண் பிள்ளைகளின் கூட்டத்தில் வெட்கமில்லாத செருக்கினர்கள், கொங்கையின் மேலே

புடைவை போட்டுள்ள மாயா உருவத்தினர், (தம்மிடம் வந்தவரை) வறியராக்குகின்ற (தரித்திர நிலையிற் கொண்டு வருகின்ற) பொல்லாத மூதேவிகள் - கீழ் மக்களிடத்தும் (சண்டாளரிடத்தும்) மறுக்காமல் சேர்பவர்கள், தமது நெஞ்சத்தில் வஞ்சனை (எண்ணங்கள்)

எண்ண முடியாத பல கோடிக் கோடிக் கணக்காக உடையவர்கள், தந்திரத்தாற் பலர்மேல் விழுகின்ற பயனிலிகள், கலவி சாத்திர (காம சாத்திர) நூல்களையே படிப்பவர்கள், தங்களுக்கு ஆசையான

பாடல்களைப் பாடி அழைப்பதில் ஓயாத மழை போன்றவர்கள், தன் வசத்தை இழக்கச் செய்கின்ற - தீமையைத் தருகின்ற - நீர் (ஆவேச நீர்) கள்ளை உண்பவர்கள், இரக்கமுள்ள பார்வையே இல்லாத மகாபாவிகள் (ஆகிய பொது மகளிருடன் கூடும்) இன்பம் நல்லதா! (நல்லதல்ல என்றபடி)

குருக டாக்ஷக லாவே தாகம
பரம வாக்கிய ஞானா சாரிய
குறைவு தீர்த்தருள் ஸ்வாமீ கார்முக வன்பரான-
கொடிய வேட்டுவர்*கோகோ கோவென
மடிய நீட்டிய கூர்வே லாயுத
‡குருகு க்ஷேத்ரபு ரேசா §வாசுகி அஞ்ச மாறும்;
செருப ராக்ரம **கேகே வாகன
சரவ ணோற்பவ மாலா லாளித
திரள்பு ††யாத்திரி யீரா றாகிய கந்தவேளே-

---

*கோ கோ எனல் - பேரொலி செய்தற் குறிப்பு: - முருகவேள் வள்ளியைக் களவாடிச் சென்றபோது வேடர்கள் அவரைப்பின் தொடர்ந்து சூழ்ந்து கோ கோ என்னும் பேரொலி செய்து வளைந்தனர். அது கண்டு வள்ளி "ஐயனே! நும் மேல் அம்புகளைச் செலுத்தும் அவர்கள்மீது வேலை ஏவுங்கள்" என வேண்டினள். அப்போது கொடி மேல் நின்ற சேவல் ஒரு கொக்கரிப்புப் பேரொலி செய்ய வேடர்கள் யாவரும் பொள்ளென வீழ்ந்து மாண்டனர். பின்னர் நாரதரின் வேண்டுகோளின்படி, முருகவேளின் சொற்படி, வள்ளி "யாவரும் எழுக" என்னலும் வேடர்கள் உயிர் பெற்றெழுந்தனர் - என்பது வரலாறு.

கோகோ - எனல் - பேரொலிக் குறிப்பு:- 'போர்வேடர் கோ என" - திருப்புகழ் *940*.

'கோ கோ என்று வந்திருகை தலை புடைத்து" (பாரத - பதினேழாம் - *254*).

பேரொலியுடன் முருக வேளைச் சூழ்ந்தனர்- என்பது.

"குறவர்கள் முதல்வன் தானும் கொடுந் தொழில் எயினர் யாரும் மறிகடல் என்ன ஆர்த்து... அம்பு வீசி முருகனை வளைந்து கொண்டார்" - கந்த புராணம் வள்ளி திருமணம் - *181*.

மடிய நீட்டிய வேலாயுதம் -

" வள்ளி தன்னை... நும்மேற் செல்லத் தொட்டிடு கையர் தம்மைச் சுடருடை நெடுவேல் ஏவி அட்டிடல் வேண்டும்" "என்றிவை குமரி செப்ப.. சேவல் ஆர்ப்புக் கொள்ள... யாரும் பொள்ளெனப் புவியில் வீழ்ந்தார்"

- கந்த புராணம் - வள்ளி திருமணம் *183, 184*,

(அடுத்த பக்கம் பார்க்க)

குரு மூர்த்தியாய்க் கடாட்சிக்க (கடைக்கணித்தருள) வல்லவனே! கலை, வேதம், ஆகமம் ஆகிய சிறப்பான மொழிகளை உபதேசிக்கவல்ல ஞான சாரியனே! குறைகள் எல்லாவற்றையும் தீர்த்தருளும் சுவாமியே! வில்லை ஏந்திய வலிமையாளரான

பொல்லாத வேடர்கள் கோ, கோ, கோ என்று கூச்சலிட்டு (கோ கோ என்னும் பேரொலியுடன்) உன்னைச் சூழ்ந்த போது அவர்கள் இறக்கும்படி எடுத்து நீட்டின கூரிய வேலாயுதனே! குருகு சேத்திர புரத்தில் (கோழியூர் என்கின்ற தலத்தில்)- உறையூர் - (மூக்கீச்சுரத்தில்) வீற்றிருக்கும் ஈசனே! வாசுகி (என்னும் பெரும் பாம்பும்) பயப்படும்படி எதிர்த்து

போர் செயும் வீரத்தையுடைய மயில் வாகனனே! சரவணத்தில் தோன்றியவனே! பெருமையால் அழகு பெற்ற திரண்ட புயமலைகள் பன்னிரண்டு கொண்ட கந்தவேளே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

வேடர்மீது வேலை ஏவினர் என்பர் அருணகிரியார்: - 344-ஆம் பாடலின் உரைக் குறிப்பைப் பார்க்க.

† குருகு க்ஷேத்ரபுரம் - என்பது கோழியூர் - உறையூர் - திருமூக்கீச்சுரம் எனப்படும். குருகு - கோழி; இங்கு யானையைக் கோழி வென்றமையால் இத்தலத்துக்குக் கோழியூர் என்று ஒரு பெயர். இந்தத் தலம் திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 1 மைலில் உள்ளது.

§ வாசுகி மயிலுக்கு அஞ்சுதல்:-

" வாளெயிற துற்ற பகுவாய் தொறு நெருப்புமிழும்

வாசுகி எடுத்துதறும் வாசிக் காரனும்"

- வேளைக்காரன் வகுப்பு.

**கேகயம் - மயில். ††திரள் புய அத்திரி (மலை)-

" பனிரண்டு புயமலை கிழவோனே" - திருப்புகழ் 975.

சிகர தீர்க்கம காசீ கோபுர
முக*ச டாக்கர சேணா டாக்ருத
திரிசிராப்பளி வாழ்வே தேவர்கள் தம்பிரானே (13)

## 342. திருவடியைப் புகழ

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான

பொருள்கவர் சிந்தை அரிவையர் தங்கள்
புழுககில் சந்து பனிநீர்தோய்-
புளகித கொங்கை யிளகவ டங்கள்
புரளம ருங்கி லுடைசோர்;
இருள்வளர் கொண்டை சரியஇ சைந்து
இணைதரு பங்க அநுராகத்-
திரிதலொ ழிந்து மனதுக சிந்து
னிணையடி யென்று புகழ்வேனோ;
மருள்கொடு சென்று பரிவுட னன்று
மலையில் விளைந்த தினைகாவல்-
மயிலை மணந்த அயிலவ எங்கள்
வயலியில் வந்த முருகோனே;
தெருளுறு மன்பர் பரவ விளங்கு
திரிசிர குன்றில் முதனாளில்-
தெரிய இருந்த †பெரியவர் தந்த
சிறியவ அண்டர் பெருமாளே. (14)

---

*சடாக்கரம் - ஆறெழுத்து - திருப்புகழ் 326, 327 - பார்க்க.

†பெரியவர் - சிவபிரான் (தாயுமானவர்); "பெரியவன் சிராப்பள்ளியைப் பேணுவார் அரி அயன் தொழ அங்கிருப்பார்களே" என்னும் அப்பர் திருவாக்கையும் காண்க (V-85-2).

பெரியவர் தந்த சிறியவ: முரண் அணி.

சிகரங்கள் நீண்ட மகா விசேடமான கோபுர முகப்பில் (வாயிலில்) வீற்றிருப்பவனே! ஆறட்சரங்களுக்கு உரியவனே! சேணாடு (விண்ணுலகம்) போல் உயர்ந்த திரிசிராப்பள்ளி-யில் வீற்றிருப்பவனே! தேவர்கள் தம்பிரானே!

(மா பாவிகள் இன்பம் ஆமோ)

## 342

பொருளைக் கவர்வதே மனத்திற்கொண்ட (எண்ணமாகக் கொண்ட) மாதர்களுடைய புழுகு (வாசனைப்பண்டம்), அகில், சந்தனம், பன்னீர் ஆகிய இவைகள் தோய்ந்த-

புளகிதங் கொண்ட கொங்கை நெகிழ அசைய, அணிந்துள்ள (முத்துசரம் முதலிய), மணி மாலைகள் புரள, இடையில் ஆடை நெகிழ-

இருள் நிறைந்த (கரிய) கூந்தல் சரிய (அவிழ்ந்து புரள), மனம் ஒத்துச் சேருகின்ற, குற்றத்துக்கு இடமான, காமப்பற்றில் பட்டுக்

கெடுதல் நீங்கி, மனது நெகிழ்ந்து உருகி, உன்னுடைய இணையடிகளை என்று நான் புகழ்வேனோ!

மோகத்துடன் சென்று அன்புடன் அன்று (வள்ளி) மலையில் விளைந்த திணைப்புனம் காவல்கொண்ட-

மயில்போன்ற வள்ளியை மணந்த வேலவனே! எங்கள் வயலூரில் எழுந்தருளியுள்ள முருகனே!

தெளிந்த அறிவை உடைய அன்பர்கள் போற்ற விளங்கு-கின்ற திரிசிராமலையில் ஆதிநாள் முதலாக -

விளங்க வீற்றிருக்கும் பெரியவர் - தாயுமானவர் (சிவபிரான்) அருளிய சிறியோனே (குழந்தையே) - தேவர் பெருமாளே!

(உன் இணையடி என்று புகழ்வேனோ)

## 343. ஞானம் பெற

தானத்தத் தான தானன தானத்தத் தான தானன
தானத்தத் தான தானன தந்ததான

வாசித்துக் காணொ ணாதது பூசித்துக் கூடொ ணாதது
வாய்விட்டுப் பேசொ ணாதது நெஞ்சினாலே-
மாசர்க்குத் தோணொ ணாதது நேசர்க்குப் பேரொ ணாதது
மாயைக்குச் சூழொ ணாதது *விந்துநாத;
ஓசைக்குத் தூர மானது மாகத்துக் கீற தானது
லோகத்துக் காதி யானது கண்டுநாயேன்-
யோகத்தைச் சேரு மாறுமெய்ஞ் ஞானத்தைப் போதி யாயினி
யூனத்தைப் போடி டாதும யங்கலாமோ;
ஆசைப்பட் டேனல் காவல்செய்† வேடிச்சிக் காக மாமய
லாகிப்பொற் பாத மேபணி கந்தவேளே-
‡ஆலித்துச் சேல்கள் பாய்வய லூரத்திற் §காள மோடட
ராரத்தைப் பூண்ம யூரது ரங்கவீரா;

---

* 'விந்து நாத ஓசைக்குத் தூரமானது' - இந்த அருமை அடியை 1488 A.D- யில் இருந்த மதுரைச் சிவப்பிரகாசர் "சிவப்பிரகாசத்து" க்குத் தாம் எழுதிய உரையில் எடுத்து ஆண்டுள்ளார். இதனால் *1450* A.D-யில் இருந்த அருணகிரியாரின் திருவாக்கு அவர் காலத்துக்கு அண்மையிலேயே சாத்திர உரையில் எடுத்தாளப்படும் பெருமை வாய்ந்ததாய் இருந்தது என்பது புலப்படுகின்றது - இதன் விவரத்தை 'அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்' என்னும் எனது நூலிற் பார்க்கவும் (பக்கம் 61).

† 'வள்ளி காலிற் பணிந்தது - திருப்புகழ் 290 பார்க்க.

‡ ஆலித்து - களித்து.

§ " நீளக் காள புயங்க கால... கலாபத்தேர்"

"பூட்டு பணிப் பத மாமயில்"

என்றார் பிற இடங்களிலும் - திருப்புகழ் 68, 789.

# 343

நூல்களை வாசித்து அதனாற் காணலாம் என்றால் அங்ஙனம் காணுதற்குக் கிட்டாதது; பூசை செய்து அதனால் கூடலாம் என்றால் அங்ஙனம் கூடுதற்குக் கிட்டாதது; வாய்விட்டுப் பேசி விவரிக்கலாம் என்றால் அத்தகைய பேச்சுக்கு அகப்படாதது! நெஞ்சில்

மாசு (அழுக்கு) உடைய மாக்களுக்குப் புலப்படாதது அன்புடைய அடியாரைவிட்டு நீங்காதது; மாயைதன்னைச் சூழ்வதற்கு இடம் தராதது; (யோக மார்க்கப் பயிற்சியில் கோ என முழங்கும் சங்கத் தொனியாகிய) விந்து சம்பந்தநாத

ஓசைக்குத் தூரமானது; ஆகாயத்துக்கும் அப்பாற்பட்டது; உலகத்துக்கு முதற்பொருளாயுள்ளது - (எதுவோ அதைக்) கண்டு அடியேன்-

(சிவ)யோகத்தைச் சேரும்படிக்கு மெய்ஞ்ஞானத்தை உப-தேசித்தருளுக; இனியும் நான் ஊன் அதை- இவ்வுடலை வெறுத்துவிடாது மயங்கலாமோ (அல்லது - குற்றங்களைத் தொலைத்து நீங்காமல் மயங்குதல் நன்றா)!

ஆசைப்பட்டுத் தினைப்புனத்தைக் காவல் செய்த வேடிச்சி (வள்ளிக்காக) மிக்க காமம் கொண்டு அவளுடைய அழகிய பாதத்தைப் பணிந்த கந்தவேளே!

ஒலிசெய்து களித்துச் சேல்மீன்கள் பாய்கின்ற வயலூரதில் (வயலூரில்) பாம்பை நெருக்கித் தாக்கி அதை ஆரம் (மாலை போலக் காலிற்) பூணுகின்ற மயில் எனும் குதிரை வீரனே!

நாசிக்குட் ப்ராண வாயுவை* ரேசித்தெட் டாத யோகிகள்
நாடிற்றுக் காணொ ணாதென நின்றநாதா-
நாகத்துச் சாகை போயுயர் மேகத்தைச் சேர்சி ராமலை
நாதர்க்குச் சாமி யேசுரர் தம்பிரானே. (15)

## 344. திருவடி மறவாமை, நன்றி மறவாமை

தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன தனதான

வெருட்டி யாட்கொளும் விடமிகள் புடைவையை
நெகிழ்த்த ணாப்பிகள் படிறிகள் சடுதியில்
விருப்ப மாக்கிகள் விரவிய திரவிய மிலரானால்-
வெறுத்து நோக்கிகள் கபடிகள் நடமிடு
பதத்தர் தூர்த்திகள் ம்ருகமத பரிமள
விசித்ர மேற்படு முலையினு நிலையினு மெவரோடும்-
மருட்டி வேட்கைசொல் மொழியினும் விழியினும்
அவிழ்த்த பூக்கமழ் குழலினு நிழலினு
மதிக்கொ ணாத்தள ரிடையினு நடையினு மவமேயான்;
†மயக்க மாய்ப்பொருள் வரும்வகை க்ருஷிபணு
தடத்து மோக்ஷம தருளிய பலமலர்
மணத்த வார்க்கழல் **கனவிலு நனவிலு** **மறவேனே;**

---

* ரேசகம் - வாயுவை நாசியாற் புறத்தே கழிக்கை.

பூரகம் - பிராணாயாமத்துக்கு உறுப்பானதும் வாயுவை உள்ளே இழுப்பதுமான செயல்.

கும்பகம் - பூரித்த வாயுவை உள்ளே நிறுத்தும் பிராணாயாம வகை.

† அருணகிரியாரின் வரலாற்றைக் காட்டுவது இந்த அடி. தம்மை எந்தச் சமயத்தில் - எந்த நிலையில் தாம் இருந்த போது முருகவேள் தம்மை ஆட்கொண்டருளினர் என்பதை இங்கு விளக்குகின்றார் ஆசிரியர்.

நாசியால் (மூக்கால்) பிராணவாயுவை ரேசித்து (புறத்தே கழித்து) எட்டமுடியாத யோகிகள் நாடியும் காணுதற்குக் கூடாதது என நின்ற தலைவனே!

சுரபுன்னை மரத்தின் கிளைகள்போய் உயர்ந்து மேகத்தைச் சேர்கின்ற **திரிசிராமலை** நாதர்க்குச் சாமியே (குருநாதனே)! தேவர்கள் தம்பிரானே!

*(ஊனத்தைப் போடிடாது மயங்கலாமோ)*

# 344

வெருட்டுதல் செய்து (வந்தவர்களை) ஆட்கொள்ள வல்ல (அடிமைப்படுத்தவல்ல) விஷமிகள், ஆடையைத் தளர்த்தி ஏமாற்றுபவர்கள், பொய் சொல்பவர்கள், வெகுவேகத்தில் (தம்மீது) விருப்பம் வரும்படி செய்ய வல்லவர்கள், தமக்குச் சேரவேண்டிய பொருளைக் கொடுக்க இயலாதவராயிருந்தால்- (அப்படிப்பட்ட ஆடவர்களை)

வெறுப்புடன் பார்ப்பவர்கள், வஞ்சனை எண்ணத்தவர்கள், நடனம் செய்யும் காலை உடையவர்கள், கொடியோர்கள்- ஆகிய பொது மகளிரின் - கத்தூரி (ஆதிய) நறுமணம் வீசும், விசித்திரம் (பேரழகு) மேம்பட்டு விளங்கும் கொங்கையினும், நிற்கின்ற சாயலினும், யாரையும்

மயக்குவித்து, ஆசைமொழிகளைச் சொல்லும் சொற்களிலும், கண்களிலும், அவிழ்ந்து விழும் பூ மணக்கும் கூந்தலினும், ஒளியினும், மதிக்கமுடியாத தளர்ந்த இடையினும், நடையினும் வீணாக நான்

மயக்கங்கொண்டு (அப்பொதுமகளிருக்குக் கொடுப்பதற்காக) பொருள் சேகரிப்பதற்காக வேண்டிய முயற்சிகளைச் செய்து கொண்டிருந்த சமயத்தில், (எனக்கு) வீடுபேற்றை அருளிய பல மலர்களும் நறுமணம் வீசும் பெருமை வாய்ந்த (உனது) திருவடியைக் கனவிலும் மறவேன், நனவிலும் மறவேன்-

இருட்டி லாச்சுர ருலகினி லிலகிய
சகஸ்ர நேத்திர முடையவன் மிடியற
இரக்ஷை வாய்த்தருள் முருகப னிருகர குகவீரா-

இலக்ஷ மீச்சுர பசுபதி குருபர
சமஸ்த ராச்சிய ந்ருபபுகழ் வயமியல்
*இலக்க ரேய்ப்படை முகடெழு ககபதி களிகூரத்;

திருட்டு ராக்ஷதர் பொடிபட வெடிபட
எடுத்த †வேற்கொடு கடுகிய முடுகிய
செருக்கு வேட்டுவர் திறையிட முறையிட மயிலேறும்-

செருப்ப ராக்ரம நிதிசர வணபவ
சிவத்த பாற்கர னிமகரன் வலம்வரு
**திருச்சி ராப்பளி** மலைமிசை நிலைபெறு
பெருமாளே. (16)

---

*வயம் இயல் இலக்கர் - தேவியின் சிலம்பின் நவமணிகளில் தோன்றிய நவசக்திகளின் " வியர்ப்பதனில் தேவதேவனதருளினால் ஓவிலா விறல் வீரர்கள் இலக்கர் வந்துதித்தார்" - கந்த புராணம் I-*12-11*. இவர்கள் செவ்வேளின் தம்பியர் கந்த-புரா. I *-11-127*

† வள்ளியம்மையைப் பின் இரவிற் களவாடிய முருகனைப் பின் தொடர்ந்து கோ கோ என்று கூச்சலிட்டு வேடர்கள் வர, அவர்கள் வருதலைக் கண்டு வள்ளியம்மை மிக அஞ்சினள். அஞ்சாதே! கவலைப்படாதே என்று முருகவேள் கூறி, வந்த வேடர்களைத் தமது வேல் கொண்டு மடிவித்தனர். பின்னர், முருகவேள் கூறியபடி வேடர்களை வள்ளியம்மை எழுப்ப, உயிர் பெற்றெழுந்த வேடர்கள், வள்ளியைத் திருடினவர் தாம் வழிபடும் ஆண்டவனே என அறிந்து அவரை வணங்கிப் போற்றி 'ஐயனே! எங்கள் குல தெய்வமே! தாயே பிள்ளைக்கு விடம் ஊட்டினால் யார் என்ன செய்ய முடியும்! வேலியே பயிரை மேய்ந்தால் என் செய்வது! எங்கள் குடிக்குப் பழி வரலாமோ! தாங்கள் எங்கள் ஊருக்கு எழுந்தருளி வந்து அக்கினி சாட்சியாக வள்ளியைத் திருமணஞ் செய்து கொள்ள வேண்டும்' என்று முறையிட்டுக் கொண்டார்கள். முருகவேளும் அதற்கு இசைந்து அங்ஙனமே வள்ளிமலைக்குச் சென்று தீ முன் வள்ளியை மணந்தனர்; இங்ஙனம் வேடர்கள் முருகனை வணங்கி முறையிட்டதை 'வேட்டுவர் திறையிட முறையிட" என்றார். (திறையிடல் - வணக்கம் காட்டுதல்)

(அடுத்த பக்கம் பார்க்க.)

இருட்டு இல்லாத தேவலோகத்தில் (விண்ணுலகில்) விளங்கி நிற்கும் ஆயிரங்கண்களை உடையவனாம் (தேவேந்திர னுடைய) துன்பம் நீங்க அவனுக்குப் பாதுகாப்பைத் தந்தளித்த முருகனே! பன்னிருகரத்தனே! குகனே! வீரனே!

லட்சுமீகரம் விளங்கும் ஈசுரனே! பசுபதியாம் சிவனுக்குக் குருமூர்த்தியே! சகல ராச்சியங்களுக்கும் அரசே! புகழும், வெற்றியும் பொருந்திய இலக்கர் ஆதியோர் உள்ள சேனைக் கூட்டத்தின் மேலே பறந்துலவும் (பட்சிராசனாகிய) கருடன் மகிழ்ச்சி மிக அடைய-

திருட்டுக் குணத்தராம் ராட்சதர்கள் அடிபட்டுச் சிதறுண்ணும்படி (திருக்கரத்தில்) எடுத்த வேலாயுதத்தைக் கொண்டு, (நம் பெண் வள்ளியைக் களவாடினான் இவன் என்று) கடுமையுடன் முடுகிவந்த அகங்காரம் கொண்ட வேடர்கள் திறையிடும்படியும் (வணங்கும்படியும்), முறையிடும் படியும் (தாங்கள் கற்பியலில் வள்ளியைத் திருமணம் செய்து திருவருள் புரிய வேண்டும் என முறை யிட்டுக் கொள்ளும்படியும்) செய்த மயிலேறும்

போர்வீரனே! (என்) நிதியே! சரவணபவனே! சிவந்த ஒளியுள்ள கிரணங்களை உடைய சூரியனும், பனியனைய குளிர்ந்த கிரணங்களை உடைய சந்திரனும் வலம் வருகின்ற திருச்சிராப்பள்ளி மலைமீது நிலைபெற்று விளங்கும் பெருமாளே!

(உனது வார்கழல் கனவிலும் நனவிலும் மறவேனே!)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

கந்த புராணமும் தணிகைப் புராணமும் சேவலின் ஆர்ப்பால் வேடர்கள் மாண்டு வீழ்ந்தார் எனக் கூறும்; வேல் கொண்டு வேடர்களை மடிவித்தார் என்பர் அருணகிரியார்.

"வேட்டுவர் கோ கோ கோ என மடிய நீட்டிய கூர் வேலாயுத" - திருப்புகழ் 341.

"வேற்கொடு.. வேட்டுவர் திறையிட முறையிட மயிலேறும் பராக்ரம" -திருப்புகழ் 344.

" சோரனென நாடிவரு வார்கள் வன வேடர் விழ சோதி
கதிர் வேலுருவு மயில் வீரா" - திருப்புகழ் 846.

" போர் வேடர் கோ என, இனையும் அங்குறப் பாவாய்! வியாகுலம் விடுவிடென்று கைக் கூர் வேலை ஏவிய இளையோனே!" - திருப்புகழ் 940.

## திருக்கற்குடி

(இது திரிசிராப்பள்ளிக்குத் தென்மேற்கு 2½ மைல். உய்யக் கொண்டான் என வழங்குகின்றது. வயலூருக்குப் போகும் வழியில் உள்ளது. மூவர் தேவாரமும் பெற்றது.)

## 345. திருவடியைப் பெற

*தனத்தத் தனத்தத் தனத்தத் தனத்தத்*
*தனத்தத் தனத்தத் தனதான*

*குடத்தைத் தகர்த்துக் களிற்றைத் துரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்-
குலத்தைக் குமைத்துப் பகட்டிச் செருக்கிக்
குருத்தத் துவத்துத் †தவர்சோரப்;
புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புறப்பட்ட கச்சுத் தனமாதர்-
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற் றிருக்கப்
புரித்துப் பதத்தைத் தருவாயே;

---

*முதல் மூன்றடி- கொங்கையின் சிறப்பைக் கூறும் வர்ணனை; குடம் உடையும், கொங்கை உடையாது; யானையைக் காட்டுக்குள் துரத்தலாம். கொங்கையை அங்ஙனம் செய்யலாகாது; மலையை அடக்கியுள்ளார்கள் அகத்தியரும் இந்திரனும், கொங்கை அங்ஙனம் அடக்கப்படவில்லை; சக்கரவாகப்புள் - ஆணும் பெண்ணும் இரவில் இணைபிரிந்து வருந்து-வதாகக் கூறப்படும், கொங்கைக்கு அந்தக் குறைவு இல்லை. (மேருவுடன் பகைத்து விந்தமலை மிக வளர்ந்து அகத்திய முனிவற்குப் போவதற்கு வழி கொடாமல் இருக்க, அந்த விந்தம் பாதலத்தில் அழுந்தும்படி அகத்தியர் அதை அடக்கினர் - (கந்த புராணம் 1-25.))

மலைகளின் சிறகை இந்திரன் அரிந்தனன் - பாடல் 216 - பார்க்க.

(அடுத்த பக்கம் பார்க்க)

## திருக்கற்குடி

## 345

குடத்துக்கு ஒப்பிடலாம் என்றால் குடத்தை நொறுங்க உடையச் செய்தும், யானைக்கு ஒப்பிடலாம் என்றால் யானையைக் காட்டில் துரத்தியும், மலைக்கு ஒப்பிடலாம் என்றால் மலையை அடக்கியும் (விந்தமலையை அகத்தியர் அடக்கியும், எல்லா மலைகளையும் சிறகை அறுத்து இந்திரன் அடக்கியும்), சக்கரவாகப் பட்சிகளின் கூட்டத்தின்

குலத்தை ஒப்பிடலாம் என்றால் அந்தப் பறவை இனத்தை வருந்தவைத்தும், ஆடம்பரங் காட்டி அகந்தை பூண்டு, குரு தானத்திலிருந்து அறிவுரைகளை எடுத்து ஓதும் தவசிகளும் சோர்ந்து மயங்கும்படி-

பருத்துச் செழிப்புற்று, மிகவும் எழுச்சியுற்று வெளித் தோன்றுவதும் - ரவிக்கை யணிந்ததுவுமான கொங்கையை உடைய மாதர்களின்-

சேர்க்கை என்னும் கடலில் ஊடாடுதல் நீங்கி இருக்க அநுக்கிரகித்து உனது திருவடியைத் தந்தருளுக.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

பறவைகளுள் சக்கரவாகப் புள்ளைக் கொங்கைக்கு உவமை கூறுவர்- "வல்லுச் சக்கர வாகம் மதன் மகுடம்" உசித சூடாமணி. 'சக்கிரம் வைத்துப் பொற்குடம் ஒத்திட்டுத் திகழ்முலை' - திருப்புகழ் 653.

இந்தப் புள் இணை பிரிந்தால் வருந்தும்-

" சேவற் குருகொடு சக்கர வாகச் செழும் பெடைகாள்
நாவற் குருமலர்ச் சாகையஞ் சேக்கையுள் நைவதெல்லாம்"
- தணிகைப் புராணம் - களவு - 347.

† தவர் சோரப் புடைத்து - தவசிகளும் சோர்தல் - பாட்டு 158 பார்க்க.

கடத்துப் புனத்துக் குறத்திக்கு மெத்தக்
கருத்திச்சை யுற்றுப் பரிவாகக்-
கனக்கப்ரி யப்பட் டகப்பட்டு மைக்கட்
கடைப்பட்டு நிற்கைக் குரியோனே;
*தடத்துற் பவித்துச் சுவர்க்கத் தலத்தைத்
தழைப்பித்த கொற்றத் தனிவேலா-
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய்ப் பதிக்குத்
தருக்கற் குடிக்குப் பெருமாளே. (1)

## 346. யம தண்டனை வராது காக்க, - துதிக்க

தனத்தத் தனத்தத் தத்த
தனத்தத் தனத்தத் தத்த
தனத்தத் தனத்தத் தத்த தனதான

நெறித்துப் பொருப்புக் கொத்த
முலைக்குத் தனத்தைக் கொட்டி
நிறைத்துச் சுகித்துச் சிக்கி வெகுநாளாய்-
நினைத்துக் கொடத்துக் கத்தை
யவத்தைக் கடுக்கைப் பெற்று
நிசத்திற் சுழுத்திப் பட்ட அடியேனை;
இறுக்கிப் பிடித்துக் கட்டி
யுதைத்துத் துடிக்கப் பற்றி
யிழுத்துத் துவைத்துச் சுற்றி யமதூதர்-
எனக்குக் கணக்குக் கட்டு
விரித்துத் தொகைக்குட் பட்ட
இலக்கப் படிக்குத் தக்க படியேதான்;

---

*தடம் - குளம். சரவண மடு - இதில் தோன்றியதால் முருகவேள் குளவன் என்றும், சரவண பவன் என்றும் போற்றப் படுகின்றனர்.

காட்டில் தினைப்புனத்தில் (இருந்த) குறத்தி (வள்ளியின் மேல்) மிகவும் கருத்தில் (எண்ணத்தில்) ஆசை கொண்டு அன்புடனே-

மிகவும் காதல் பூண்டு (அவள் மையலில்) அகப்பட்டு, மை அணிந்த (அவளது) கண்ணின் கடையில் (கடைக் கண்ணில்) வசப்பட்டு நிற்பதற்கு ஆளானவனே!

(சரவண) மடுவில் தோன்றிப், பொன்னுலகை வாழ்வித்த வீரம் பொருந்திய ஒப்பற்ற வேலனே!

தமிழ்ப்பெருமாளே! கவி (ராசப்) பெருமாளே! புகழப்படும் வயலூர்ப் பெருமாளே! விருட்சங்கள் நிறைந்த கற்குடி மலைப் பெருமாளே!

(பதத்தைத் தருவாயே)

## 346

(காமத்தால்) மனம் குழைந்து வளைவு பூண்டு, மலைக்கு ஒப்பான கொங்கைக்குப் பொருள் எல்லாவற்றையும் கொட்டி, நிரம்ப இன்பத்தை அனுபவித்து, அதில் அகப்பட்டு, பல நாள்களாக-

(அந்த இன்பத்தையே) நினைத்துக்கொண்டு (அதனால் வரும்) துக்கங்களுக்கும் அவஸ்தைகளுக்கும் (வேதனைகளுக்கும்) அடுக்கைப்பெற்று (ஆளாகி), உண்மைப் பொருளில் (செயலற்று) உறங்கின (உண்மைப் பொருளைக் காணாது தூங்கின- (காலங்கழித்த) அடியேனை-

அழுத்தமாகப் பிடித்தும், கட்டியும், உதைத்தும், துடி துடிக்கப் பற்றியும், இழுத்தும், மிதித்து இழுத்தும், (என்னைச்) சூழ்ந்தும் யமதூதர்கள்-

எனக்கு (என்னுடைய) கணக்குக்கட்டை விரித்துக் காட்டி (நான் இவ்வுலகிற் செய்த பாபச் செயல்கள் குறிக்கப்பட்டுள ஏட்டின் கணக்கு ஓலைக்கட்டை விரித்துக்காட்டி) - அந்தக் கணக்கில் உள்ள எண்ணிக்கைக்குத் தக்கபடியே-

முறுக்கித் திருப்பிச் சுட்டு
மலத்திற் புகட்டித் திட்டி
முழுக்கக் கலக்கப் பட்டு அலையாமல்-
மொழிக்குத் தரத்துக் குற்ற
தமிழ்க்குச் சரித்துச் சித்தி
முகத்திற் களிப்புப் பெற்று மயிலேறி;
உறுக்கிச் சினத்துச் சத்தி
யயிற்குத் தரத்தைக் கைக்குள்
உதிக்கப் பணித்துப் **பக்கல்** **வருவாயே**-
உனைச்சொற் றுதிக்கத் தக்க
**கருத்தைக் கொடுப்பைச்** *சித்தி
**யுடைக்கற் குடிக்குட்** பத்தர் பெருமாளே. (2)

## இரத்னகிரி - (வாட்போக்கி)

(திரிசிராப்பள்ளி மாவட்டம் குழித்தலை புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கு ஆறரை மைல். அப்பர் சுவாமிகளுடைய தேவாரம் பெற்றது. கோயில் மலைமேல் உள்ளது.)

## 347. நற்கதி பெற

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

கயிலைச் சருவிப் †பிணையொத் தலர்பொற்
கமலத் தியல்மைக் கனினாலே-
கடிமொய்ப் புயலைக் கருதிக் கறுவிக்
கதிர்விட் டெழுமைக் குழலாலே;
நயபொற் கலசத் தினைவெற் பினைமிக்
குளநற் பெருசெப் பிணையாலே-

---

*சித்திகளைக் கொண்ட கற்குடி என்றார். இங்கு வீற்றிருக்கும் சிவபிரானை அப்பரும் சுந்தரரும் "கற்குடிக் கற்பகம்" என்று துதித்துள்ளார்கள். (அடுத்த பக்கம் பார்க்க)

என்னை முறுக்கியும், திருப்பியும், சுட்டும், மலத்தில் புகுவித்தும், திட்டியும், (வைதும்), முழுமையும் கலக்க - அந்தக் கலக்கத்தில் அகப்பட்டு நான் அலையாமல்-

அடியேனது மொழியையும், தகுதி (மேன்மை) உள்ள தமிழையும் அங்கீகரித்து (ஏற்றுக்கொண்டு), வீடுபேற்றைத் தரும் திருமுகத்தில் மகிழ்ச்சியுடனே மயிலில் ஏறித்-

தண்டிக்கும் கோபம் வாய்ந்த சக்திவேலைத் தகுதியுடன் திருக்கரத்தில் தோன்ற எடுத்து (அடியேன்) பக்கத்தில் வந்தருளுக-

உன்னைச் சொற்கொண்டு துதிப்பதற்குத் தகுந்த கருத்தைக் கொடுத்தருளுவாய்! (அட்ட) சித்திகளும் அணைந்துள்ள **திருக்கற்குடிப்** பெருமாளே! பக்தர் பெருமாளே!

*(பக்கல் வருவாயே)*

## இரத்னகிரி

## 347

கயல்மீனொடு பொருது, பெண்மானை ஒத்து, மலராம் அழகிய தாமரையின் தன்மைகொண்ட, மை பூசின கண்ணினாலும்-

விளக்கமுற்று நெருங்கின மேகத்தை நோக்கிக் கோபித்து ஒளி வீசி எழுந்து திகழும் கரிய கூந்தலாலும்-

இனிமையும் அழகும் கொண்ட குடத்தையும், மலையையும், மேம்பாடு உள்ள நல்ல, பெரிய, கரகத்தையும் ஒத்த கொங்கை இரண்டாலும்-

---

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

காளத்திமலை போலக் கற்குடி மலையும் சித்தி சம்பந்தப்பட்டது போலும். காளத்தியை "அட்ட மாசித்திகள் அணை தரு காளத்தி" என்றார் சம்பந்தர்.

†'பிணையேர் மட நோக்கு' - *திருக்குறள் 1089.*

நலமற் றறிவற் றுணர்வற் றனனற்
கதியெப் படிபெற் றிடுவேனோ;
புயலுற் றியல்மைக் கடலிற் புகுகொக்
கறமுற் சரமுய்த் தமிழ்வோடும்-
பொருதிட் டமரர்க் குறுதுக் கமும்விட்
டொழியப் புகழ்பெற் றிடுவோனே;
*செயசித் திரமுத் தமிழுற் பவநற்
செபமுற் பொருளுற் றருள்வாழ்வே-
†சிவதைப் பதிரத் தினவெற் பதனிற்
றிகழ்மெய்க் குமரப் பெருமாளே (1)

## 348. திருவடியைப் பெற

தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன தனதான

சுற்றகப டோடுபல சூதுவினை யானபல
கற்றகள வோடுபழி காரர்கொலை காரர்சலி
சுற்றவிழ லானபவி ஷோடுகடல் மூழ்கிவரு
துயர்மேவித்-
துக்கசமு சாரவலை மீனதென கூழில்விழு
செத்தையென மூளுமொரு தீயில்மெழு கானவுடல்
சுத்தமறி யாதபறி காயமதில் மேவிவரு பொறியாலே;

---

*செய - சித்திர - முத்தமிழ் - உற்பவ - நற்செபம் - முற்பொருள் உற்று - இது (முருகவேள்) செயவீர சம்பந்தராய்ப் பாடின (தேவார) முத்தமிழிற் போதித்த மந்திரங்களையும் பேரின்பப் பொருளையும் குறிக்கின்றது - எனக் கொள்ளலாம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

*இன்பம் - அழகு முதலிய நலங்களை இழந்து, அறிவுபோய் உணர்வையும் இழந்த நான் நற்கதியை எப்படிப் பெறுவேனோ!*

மேகங்கள் படியும் தன்மை வாய்ந்த கருங்கடலிற் புகுந்து நின்ற மாமரம் (சூரன்) அறுபடும்படி முன்பு (வேல்) ஆயுதத்-தை விட்டு - அடக்கி ஆழ்த்தும் (ஆற்றலோடு)

சண்டை செய்து தேவர்களுக்கு இருந்த துக்கம் அவர்களை விட்டு நீங்கச் செய்த புகழைப் பெற்றவனே!

வெற்றியைத் தரும் அழகிய முத்தமிழ்ப் (பாக்கள் மூலமாக) வெளித்தோன்றும் சிறந்த மந்திரங்களையும் மேலாம் பொருளையும் அநுபவித்து உலகுக்கு (அவைதமை) அருளிய செல்வமே!

சிவதைப்பதி (சிவாயம் எனப்படும்) ரத்தினகிரியில் (திருவாட் போக்கியில்) விளங்கும் உண்மை வடிவாம் குமரப் பெருமாளே!

(நற்கதி எப்படி பெற்றிடுவேனோ)

## 348

சூழ்ந்துள்ள வஞ்சனைகள் பலவும், சூது நிறைந்த தொழில்கள் பலவும், (கொண்டு) கற்ற கள்ளத் தொழிலோடு பழிக்கு இடம் தருபவர்கள், கொலைகாரர்கள், (இவர்களுடன் கூடிச்) சலிப்புற்று அலைந்து வீணான பெருமையோடு (வாழ்க்கைக்) கடலில் முழுகி, அதில் உண்டாகும் துன்பங்களை அடைந்து-

துக்கந் தரும் சமுசாரம் என்னும் கடலில் மீன்போல அலைந்தும், கூழில் விழுந்த குப்பைபோலக் கிடந்தும், மூண்டு எரியும் பெரிய நெருப்பிற்பட்ட மெழுகுபோல (உருகும்) உடல், சுத்தம் என்பதையே அறியாத (அழுக்கு மெய்யான) பாரம் வாய்ந்த உடல் - இத்தகைய உடலிற் பொருந்தி வேலை செய்யும் - (மெய், வாய், கண், மூக்கு, செவி) என்னும் இந்திரியங்களால்-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

† ரத்தின வெற்பு, அரதனாசலம், சிவாயம் என்பன வாட் போக்கித் தலத்தின் பிற பெயர்கள், சிவதைப்பதி - சிவாயம். (திருப்புகழ் 1304 பார்க்க)

" சடைவிராய விருப்புச் *சிவாயமே

சங்கரற்க விருப்புச் சிவாயமே" வாட்போக்கிக் கலம்பகம் 65. (இருப்பு- உச்சி * வாயம் - நீர் (கங்கை); விருப்பு- சிவாயம் என்னும் தலம்:)

சற்றுமதி யாதகலி காலன்வரு நேரமதில்
தத்துஅறி யாமலொடி யாடிவரு சூதரைவர்
சத்தபரி சானமண ரூபரச மானபொய்மை
விளையாடித்-

தக்கமட வார்மனையை நாடியவ ரோடுபல
சித்துவிளை யாடுவினை சீசியிது நாறவுடல்
*தத்திமுடி வாகிவிடு வேனொமுடி யாதபத
மருள்வாயே;

தித்திமித தீதிமித தீதிமித தீமிதத
தத்ததன தானதன தானனன தானனன
திக்குடுடு டுடமட டாடமட டுடுடுடு
எனதாளம்-

திக்குர்முகி லாடஅரி யாடஅய னாடசிவ
னொத்துவிளை யாடபரை யாடவர ராடபல
திக்கசுரர் வாடசுரர் பாடமறை பாடஎதிர்
களமீதே;

எத்திசையு நாடியம னார்நிணமொ டாடபெல
மிக்கநரி யாடகழு தாட கொடி யாடசமர்
எற்றிவரு பூதகண மாடவொளி யாடவிடு
வடிவேலா-

---

*தத்தி - தத்துறுதல் உற்று - தத்து றுதல் - வருந்துதல்.

"தத்துறல் ஒழி நீ" - (கம்ப ராமா - மிதிலை - 125)

† முகில் - திரள் (பிங்கலம்).

சிறிதேனும் மதிக்காத (இரக்கமில்லாமல் வரும்) வலியும் செருக்கும் கொண்ட காலன் வருகின்ற நேரத்தில் (வரும் பொழுது) - இந்த ஆபத்து வருகின்றதே என்பதை அறியாமல் ஓடியும் ஆடியும் வருகின்ற சூதாடிகளான ஐவர் (ஐம்புலன்கள் என்போர்), சப்தம், ஸ்பரிசம், மணம், ரூபம், ரசம், எனப்படும் பொய் (யின்பங்களில்) திளைத்து விளையாடி - (அது சம்பந்தமாக)-

தகுந்த மாதர்களையும் (அவர்கள்) வீடுகளையும் தேடிச் சென்று அம்மாதர்களோடு பல மாய வித்தைகளை விளையாடுகின்ற தொழில் - சீசீ இது என்று பலருக்கும் வெறுப்புடன் கூறத்தக்கதாய்த் தோன்ற - (இங்ஙனம் எல்லாம்) என் உடல் தத்தி (தத்துறுதல் உற்று) வருத்தமடைந்து நான் இறந்து படுவேனோ! நீ உனது அழிவில்லாத திருவடியைத் தந்தருளுக.

தித்திமித தீதிமித ..... டாடமட டுடுடுடு என்று தாளம்-

திக்குகளில் திரண்டு (அல்லது மேகம்போல்) ஒலிக்க, அரி (திருமால் களிப்புடன்) ஆட, அயன் (பிரமன் களிப்புடன்) ஆட சிவனும் மகிழ்ந்து களிகூர, தேவி களித்து ஆட, வரர் (சிறந்த முநிவர்கள்) களிப்புடன் கூத்தாட, பல திக்குகளிலும் இருந்த அசுரர்கள் வாடி மயங்க, தேவர்கள் பாட, மறை (வேதம்) பாடித் துதிக்க, எதிர்த்து வந்த போர்க்களத்திலே-

எல்லாத் திசைகளையும், தேடிச் சென்று, எமனார் (எமதூதுவர்) (போர்க்களத்திற் கிடந்த) மாமிசக் கொழுப்பில் (அங்குமிங்கும்) நடைசெய, (நிரம்ப உணவு கிடைக்கின்றதென்று) பலம் மிக உள்ள நரி களித்துக் குதிக்க, பேய் (களித்துக்) கூத்தாட, காக்கைகள் (களித்து) ஆட, போரில் மோதி வருகின்ற பூதகணங்கள் ஆட, ஒளியை வீசும்படி விடுத்த கூரிய வேலனே!

எத்தியொரு மானைதினை காவல்வல பூவைதனை
சித்தமலை காமுககு கா* நமசி வாயனொடு
ரத்நகிரி வாழ்முருக னேயிளைய வாவமரர்
பெருமாளே. (2)

## 349. முத்தி பெற

தத்தனா தானனத் தனதான

பத்தியால் யானுனைப் பலகாலும்-
பற்றியே மாதிருப் புகழ்பாடி;
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்-
முத்தியே சேர்வதற் கருள்வாயே;
உத்தமா தானசற் குணர்நேயா-
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா;
வித்தகா ஞான†சத் திநிபாதா-
வெற்றிவே லாயுதப் பெருமாளே. (3)

---

*நமசிவாயன் - சிவனது சிறப்புப் பெயர்.

(நம) சிவாயன் உறைவதால் தான் இரத்நகிரிக்குச் சிவாயம் எனப் பேர் போலும்.

"நக்கர்தம் நாமம் நமச்சிவாயவ் வென்பார் நல்லரே" சம்பந்தர் III-9-9.

"நாதன் நாமம் நமச்சிவாயவே" - III-49-4.

† சத்திநி பாதமானது - (பக்குவமுடைய ஆன்மாவிலே திருவருள் பதிகை) " புண்ணியபாவம் துலை யொத்த ஆன் மாக்களைத் திரோதான சத்தி நிக்கிரகமும் அநுக்கிரக சத்தி பதிதலுமாம்"

சத்திநி பாதம் நாலு பிரகாரமா யிருக்கும். முதற் சத்திநி பாதமாகிய மந்தம் வாழைத் தண்டிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. இரண்டாம் சத்திநி பாதமாகிய மந்ததரம் பச்சை விறகிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. மூன்றாம் சத்திநி பாதமாகிய தீவிரம் உலர்ந்த விறகிலே நெருப்புப் பற்றினாற் போலென அறிக. நாலாம் சத்திநி பாதமாகிய தீவிரதரம் கரியிலே நெருப்புப் பற்றினாற்போலென அறிக. முதற் சத்திநி பாதமாவது நமக்குப் பேறாயுள்ளதொரு கர்த்தா உண்டென்று அறிவெழுந்

(அடுத்த பக்கம் பார்க்க)

(வேடன், வேங்கை, செட்டி, முதியோன் ஆகிய வேடங்களைக் காட்டி) ஏமாற்றி, ஒப்பற்ற மான் போன்ற வள்ளியின், தினைக்காவலில் வல்லவளான பூவையின் நாகண வாய்ப்புள் போன்ற வள்ளியின், உள்ளத்தை அலைத்த (கலக் குவித்த) காமுகனே (காமம் கொண்டவனே)! சிவபிரானோடு **இரத்னகிரி** எனப்படும் **வாட்போக்கித்** தலத்தில் வாழும் முருகனே! என்றும் இளையவனே! தேவர் பெருமாளே!

(முடியாத பதம் அருள்வாயே)

## 349

பத்தி பூண்டு நான் உன்னைப் பலகாலும்

(எப்பொழுதும்) பற்றி (உள்ளத்தில் தியானித்து) சிறந்த உனது திருப்புகழ்களைப் பாடி

முத்தனாமாறு (மோட்சநிலை - ஞானநிலை பெற்றவனா மாறு) என்னைப் பெருவாழ்வாகிய (சிறந்த வாழ்வாகிய)

முத்திநிலையிற் சேர்வதற்கு (நான் முத்திநிலையை அடைய) அருள்புரிவாயாக.

உத்தமனே! ஈகைக்குணம் உள்ள நற்குணத்தவர்களுக்கு நேசனே! (அல்லது - உத்தம ஆதான சற்குணர் நேயா - உத்தம குணங்கள் சேர்ந்துள்ள சற்குணர்களுக்கு நேசனே! ஆதானம் - வைக்கை, பற்றுகை)

ஒப்பு இல்லாத (நிகரில்லாத) சிறந்த மணிக்கிரி (**இரத்னகிரி**) வாசனே!

வித்தகா (ஞானியே)! ஞான பக்குவம் அடைந்தவர்க்கு அநுக்கிரக சக்தியாய்ப் பதிகின்றவனே!

வெற்றி வேலாயுதத்தை ஏந்தும் பெருமாளே!

(முத்தியே சேர்வதற் கருள்வாயே)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

திருக்கை; இரண்டாஞ் சத்திநிபாதமாவது அந்தக் கர்த்தாவைப் பெறுகைக்கு வழி எப்படி என்று ஆராய்கை; மூன்றாம் சத்திநி பாதமாவது அப்படி ஆராய்ந்தறிந்த கர்த்தாவைப் பெற வேணுமென்று பிரபஞ்சத்தை உவர்த்தும் புளியம் பழமும் அதன் தோடும் போல நிற்றல்; நான்காம் சத்திநி பாதமாவது பிரபஞ்சத்தை முற்றத் துறந்து ஆசாரியனே பொருளென்று கொண்டு தானற நின்று வழிபடுகை. "கர்த்தா ஆசாரிய மூர்த்தமாக வந்து இரட்சிக்கு மிடத்துக் கேவலாவத்தையும் சகலாவத்தையும் நீக்கிச் சுத்தா வத்தையிலே நிறுத்துவன்"- சிவப்ரகாச உரை சூ -2-49.

## விராலிமலை

[இது புதுக்கோட்டை சமத்தானத்தைச் சேர்ந்திருந்தது. புதுக்கோட்டைக்கு வடமேற்கு 25-மைல். திரிசிராப்பள்ளி யிலிருந்து 18-மைல். 'சமுத்திரம்' புகைவண்டி நிலையத்திற்குச் சமீபம். இத்தலத்து முருகபிரான் வயலூரிலிருந்த அருணகிரி நாதர் முன்பு தோன்றி அவரை இத் தலத்துக்கு வரவழைத்துக் காட்சி தந்தனர் - *354, 358, 915*ஆம் பாடல்களைக் காண்க.]

## 350. திருவுருவத் தியானம்

*தானான தான தான தனதன*
*தானான தான தான தனதன*
*தானான தான தான தனதன தனதான*

*சீரான *கோல கால நவமணி*
*மா†லாபி ஷேக பார வெகுவித*
*தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும்-*

*சீராடு வீர மாது மருவிய*
*ஈராறு தோளு நீளும் வரியளி*
*சீராக மோது நீப பரிமள இருதாளும்;*

*ஆராத காதல் வேடர் மடமகள்*
*‡ஜீமூத மூர்வ லாரி மடமகள்*
*ஆதார பூத மாக வலமிட முறைவாழ்வும்-*

*ஆராயு நீதி வேலு மயிலு மெய்ஞ்*
*ஞானாபி ராம §தாப வடிவமும்*
*ஆபாத னேனு நாளு நினைவது பெறவேணும்;*

---

*கோலாகலம் என்பது 'கோலகாலம்' என நிலைமாறியது; கோலாகலம் - சம்பிரமம். †அபிடேகம் - முடி.

‡ ஜீமூதம் - மேகம். § தாபம் - பிரதாபம்.

## விராலிமலை

## 350

சீரானதும், ஆடம்பரமுள்ள (கம்பீரமுள்ள) நவமணிகள் பதிக்கப்பெற்ற, பெருமை பொருந்திய கிரீடங்களின் பாரம் தாங்கப்பெற்றதும், பலவகையரான தேவாதிதேவர்களெல்லாம் சேவிக்கின்றதுமான திருமுக மலர் ஆறினையும்-

சிறப்புற்று ஓங்கும் வீரலட்சுமி விளங்கும் பன்னிரண்டு தோள்களையும், நீடித்து நின்று ரேகைகள் உள்ள வண்டுகள் சீராகம் என்கின்ற ராகத்தைப் பாடும் கடப்ப மலரின் மணம் வீசும் இரண்டு திருவடிகளையும்-

முடிவிலாத ஆசை - உன் மேற்கொண்ட (அல்லது நீ கொண்டுள்ள) வேடர் மடமகள் வள்ளியும், மேகத்தை வாகனமாகக் கொண்டு செலுத்தும் இந்திரனுடைய மடமகள் தேவசேனையும் - பற்றுக் கோட்டின் இருப்பாக - (பக்தர்களுக்கு உதவுதற்குப் பக்கத் துணைவியர்களாக) உனது வலப்பாகத்திலும் இடப்பாகத்திலுமாக உறைகின்ற உனது திருக்கோல வாழ்க்கையையும்-

*ஆராய்ச்சியுடன் (சோதித்து) நீதி செலுத்தும் உனது வேலையும் - மயிலையும் - மெய்ஞ்ஞான சொரூபமான, அழகிய கீர்த்திபெற்ற உனது திருவுருவத்தையும், மிகக் கீழ்ப்பட்டவனான (தீயனான) நானும் நாள்தோறும் தியானஞ் செய்யும்படியான பேற்றைப் பெறுமாறு வேண்டுகின்றேன்;

---

*ஆராயு நீதிவேல் - ஆய்ந்து நீதியைச் செலுத்தும் வேல் - துட்ட நிக்கிரகம் சிட்டபரிபாலனம் செய்யும் வேல்; சூரனை அடக்கி நக்கீரனைப் புரந்தது: "உடம்பிடித் தெய்வம்", "தனிவேற் பெம்மான் கந்தனே" என்றார் கந்த புராணத்தில் (IV - *13-487*; IV- *5 - 212*).

*ஏராரு மாட கூட மதுரையில்*
*மீதேறி *மாறி யாடு மிறையவர்*
*†ஏழேழு பேர்கள் கூற வருபொரு ளதிகாரம்-*
*ஈடாய வூமர் போல வணிகரி*
*லூடாடி யால வாயில் விதிசெய்த*
*லீலாவி சார தீர வரதர குருநாதா;*

---

*மாறியாடும் இறையவர்:- இது கால் மாறியாடின திருவிளையாடற் சரித்திரத்தைக் குறிக்கின்றது.

ராசசேகரன் என்னும் பாண்டியனுடைய சபைக்குச் சோழ நாட்டிலிருந்து வந்த ஒரு புலவன் 'எங்கள் அரசன் கரிகாற் பெருவளத்தானுக்கு ஆடல் நூல் வரும், தங்களுக்கு வராது' என்று சுட்டிக்காட்ட, பாண்டியன் நாண முற்றுத் தானும் அக்கலையைப் பயிலத் தொடங்கினான். அக்கலை உடலுக்கு மெத்த அயர்வு தருவதைக் கண்டு "அந்தோ! வெள்ளி யம்பலத்தில் திருக்கூத்தாடும் இறைவன் எப்போதும் இடது திருவடியைத் தூக்கிக் கூத்தாடிக் கொண்டே இருக்கின்றாரே! அது அவருக்கு எவ்வளவு அயர்ச்சி தரும்" என எண்ணி, கூத்தப்பிரானது முன்னிலையில் நின்று "பெருமானே! தூக்கிய இடது திருவடியை நில மீது ஊன்றி உனது வலது திருவடியை எடுத்து வீசி ஆட வேண்டும்; அடியேன் பொருட்டு இங்ஙனம் கால் மாறி யாட வேண்டும். இன்றேல், அடியேன் உயிரை விடுவேன்" என உளம் நெகிழ்ந்து உரைக்கக், கூத்தப்பிரான் அவனது வேண்டுகோளுக்கு இரங்கி அங்ஙனமே கால் மாறி யாடினர்.

† ஏழேழு பேர்கள் - சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மர்.

ஏழேழு பேர்கள் கூற வரு பொருளதிகாரம் **ஊமர் விதிசெய்தது. அகப் பொருள் இலக்கணம் இல்லையே என்று பாண்டியன் வருந்தச், சொக்கலிங்க மூர்த்தியே 60 சூத்திரங்கள் கொண்ட நூலை எழுதி அளித்தார். இந் நூல் 'இறையனார் அகப்பொருள்' எனப் பெயர் பெறும். இந்நூலுக்கு நாற்பத்தொன்பது சங்கப் புலவர்களும் உரை கண்டு, தத்தம் உரையே சிறந்ததென வாதாடினர். "ஆலவாய் அண்ணலே! நீ தான் எங்கள் கலகத்தைத் தீர்க்க வேண்டும்" என்று இறைவன் முன் முறையிட்டனர். இறைவன் ஒரு புலவர் போல வந்து - 'இவ்வூரில் வணிகன், உப்பூர் கிழாரின் மகன், ஊமை, பாலன், சரவண குகனே வந்துள்ளான், அவன் ஒப்பிலா ஞானி, அவன் பெயர் உருத்திர சன்மன்; அவன் முன் உங்கள் உரையைச்

(அடுத்த பக்கம் பார்க்க)

அழகு நிறைந்த மாடகூடங்கள் உள்ள மதுரை நகரில் (வெள்ளியம்பலத்தில் நடனமேடையின்மேல்) ஏறிக் கால் மாறி யாடின இறையவராம் நடராசப் பெருமான் அருளிய - ஏழேழு (நாற்பத்தொன்பது) சங்கப்புலவர்கள் (பொருள்) கூறிவந்த பொருளதிகாரத்தின் (இறையனார் அகப்பொருள் என்னும் நூலின்) உண்மைப் பொருள் இதுதான் என்று கூறத்

தகுதியுள்ள ஊமைப்பிள்ளை போலச் செட்டி குலத்தில் தோன்றி விளையாடி, திருவாலவாய் என்னும் மதுரைத் திருக் கோயிலில் (சங்கமண்டபத்தில்) (உண்மைப் பொருளை) நிலை நிறுத்திக் காட்டின திருவிளையாடலைப் புரிந்த ஆராய்ச்சி மிக்க தீரனே! வரங்களைக் கொடுப்பவனே! குருநாதனே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

சொல்லுங்கள்; எவருடைய உரையை அவன் கொள்கின்றானோ அதுவே உண்மை உரை; இதற்கு ஐயமில்லை, கவலை வேண்டாம்" என்றனர். ஊமை எங்ஙனம் பேசுவான் எனப் புலவர்கள் கேட்க, அந்தச் செந்தமிழ் தேர் செட்டிக்கு - எவருடைய உரையைக் கேட்டால் உடலிற் புளகமும் கண்ணில் (ஆனந்த) நீரும் தோன்றுகின்றனவோ அந்த உரையே உரை, மற்றவை உரையல்ல எனக் கூறி மறைந்தனர். புலவர்கள் வியந்து அங்ஙனமே அந்த ஊமைப் பிள்ளையைப் பத்தியுடன் வரவழைத்து, சிறப்புடன் சிங்காசனத்தில் அமர்த்தித், தூப தீபம் தந்து, தத்தம் உரையை உரைத்தனர். வளமுறு கீரன் (நக்கீரன்), தரைபுகழ் கபிலன், மாசறு பரணன் இம் மூவர் உரையைக் கேட்ட போது ஊமை பெரு விருப்பைக் காட்டிப் புளகிதமும், துளிபடு கண்ணுமாய்ப் பொருந்தினன். அது கண்ட புலவர்கள் அதிசயித்து இம் மூவர் உரைத்த பொருளே உண்மைப் பொருள் எனக் கண்டு தங்கள் கலகம் தீர்ந்தனர். "அருந்தமிழ்ச் செட்டியாம் செட்டி இலகிய மயின் மீது அறு முகத்தோடும், இனிய பன்னிருகரத்தோடும், புலவர் கண்டிறைஞ்ச அருளினால் விளங்கிப் போயினான்" - இது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் 19- 'ஊமை தமிழறிந்த திருவிளையாடல்' ஆகும். இவ் வரலாற்றைக் கந்தபுராண ஆசிரியர்- "திருத்தகு மதுரை தன்னிற் சிவன் பொருள் நிறுக்கு மாற்றால் உருத்திர சன்மனாகி உற்றிடும் நிமலன்" எனக் குறித்துள்ளார்- (கந்த புராணம் - சூரபன்மா வதை 261). திருப்புகழ் 126, பாட்டு 254, பார்க்க.

*கூராழி யால்முன் வீய நினைபவ
னீடேறு மாறு பாநு மறைவுசெய்
கோபால ராய னேய முளதிரு மருகோனே-

கோடாம லார வார அலையெறி
காவேரி யாறு பாயும் வயலியில்
†கோனாடு சூழ்வி ராலி மலையுறை பெருமாளே. (1)

## 351. நரகத்தில் விழாதவகை காத்தருள

தானான தான தான தனதன
தானான தான தான தனதன
தானான தான தான தனதன தனதான

பாதாள மாதி லோக நிகிலமு
மாதார மான ‡மேரு வெனவளர்
பாடீர பார மான முலையினை விலைகூறிப்-

---

* கூராழியால் பாநு மறைவுசெய் எனக் கூட்டுக. வீய நினைபவன் - அருச்சுனன்.

(கண்ணபிரான் தமது) ஆழியால் பாநுவைச் (சூரியனை) மறைத்து அருச்சுனனைக் காத்த வரலாறு:- பாரத யுத்தத்தில் 13-ஆம் நாள் போரில் சயத்திரதன் அருச்சுனனுடைய பிள்ளை அபிமனைக் கொன்று விட்டான். இதை யறிந்த அருச்சுனன் " நாளைக்குச் சூரியன் அத்தமிப்பதற்குள் நான் அந்த சயத்திரதனைக் கொல்லாவிட்டால், தீயில் குதித்து இறப்பேன்" எனச் சபதஞ் செய்தான். இங்ஙனம் சபதம் செய்ததை அறிந்த துரியோதனாதியர் சயத்திரதனைப் பகல் முழுதும் காத்திருந்தார்கள். அத்தமிக்கு முன்பாகக் கண்ணபிரான் தமது சக்கரத்தை விட்டுச் சூரியனை மறைத்தார். அஸ்தமித்துவிட்டது என்ற நினைத்து சயத்திரதன் தைரியமாய் வெளிவந்து நின்ற போது, கண்ணபிரான் அவனை அருச்சுனனுக்குக் காட்டிக் கொடுக்க அருச்சுனன் பாசுபதாத்திரத்தைவிட்டுச் சயத்திரனைக் கொன்றான். அத்தமித்த பின்பு அருச்சுனன் கொன்றது சத்திய விரோதம் என்று துரியோதனாதியர் கூறும்போது, கண்ணபிரான் சக்கரத்தைத் திருப்பி வரவழைக்க, உடனே சூரியன் பிரகாசித்தது. இதைக் கண்ட துரியோதனாதியர் ஏமாந்து போய் விட்டோமே; இது கண்ணபிரான்

(அடுத்த பக்கம் பார்க்க)

கூர்மையுள்ள சக்கரத்தால் - முன் (பாரதப்போர் நடந்த அந்தக் காலத்தில்) இறந்துபோவதற்கு எண்ணித் துணிந்த-வனாகிய அருச்சுனன் உய்யுமாறு - சூரியனை மறைத்து வைத்த கோபாலர்களுக்கு அரசனான கிருட்டிண பகவான் (திருமால்) அன்பு வைத்துள்ள அழகிய மருமகனே! (அல்லது - அன்பு வைத்துள்ள இலக்குமியின் மருகனே!)

தவறுதலின்றி ஆரவாரத்துடன் அலைகளை வீசிவரும் காவேரியாறு பாய்கின்ற வயலூரிலும், † கோனாடு என்னும் நாட்டுப் பகுதியில் உள்ள **விராலிமலையிலும்** வீற்றிருக்கின்ற பெருமாளே!

(நாளும் நினைவது பெறவேணும்)

## 351

பாதாளம் முதலிய லோகங்கள் எல்லாவற்றுக்கும் ஆதாரமான (பொன்மலை) மேருபோல உயர்ந்து வளர்ந்துள்ள சந்தனம் அணிந்த பாரமுள்ள கொங்கையை விலைகூறி-

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

செய்த வேலை என்று தெரிந்து ஏக்கங் கொண்டார்கள். இங்ஙனம் இறந்துபடுதற்கு இருந்த அருச்சுனனைக் கண்ணபிரான் காத்தளித்தனர்.

† கோனாடு - என்பது எறும்பீசர் மலைக்கு மேற்கு; மதிற்கரைக்குக் கிழக்கு; காவிரி நதிக்குக் தெற்கு; பிரான்மலைக்கு வடக்கு. இந் நான்கு எல்லைக்கு உட்பட்டது. கொங்கு மண்டல சதகம், பக்கம் 27.

‡ஆதாரமான மேரு - மேரு லோகங்களைக் கோத்துக் கொண்டு காத்தல் - " மகாமேருப் பறியுண்ண உலகு நிலைகுலையும்" - தக்க - பரணி - தாழிசை 161 உரை.

"மேருத்தூண் ஒன்று நடுநட்டு" மீனாட்சி - பிள்ளைத்தமிழ் 16, " மேரு நடுநாடி" - திருமந்திரம் 2747. " தாங்குமால் வரை" - சம்பந்தர் II-51-7. மேரு உயர்ச்சியைக் காட்டும் - பாட்டு 273 - உரை; பாட்டு 286 பார்க்க.

*பாலோடு பாகு தேனெ னினியசொ*
*லாலேய நேக மோக மிடுபவர்*
*பாதாதி கேச மாக வகைவகை கவிபாடும்;*

*வேதாள ஞான கீனன் விதரண*
*நாதானி லாத பாவி யநிஜவன்*
*வீணாள்ப டாத போத தவமிலி பசுபாச-*

*வ்யாபார முடன் யானு முனதிரு*
*சீர்பாத தூளி யாகி* **நரகிடை**
**வீழாம லேசு வாமி திருவருள் புரிவாயே;**

*தூதாள ரோடு காலன் வெருவிட*
*வேதாமு ராரி யோட அடுபடை*
*சோரா *வ லாரி சேனை பொடிபட*
*மறைவேள்விச்-*

*‡சோமாசி மார்சி வாய நமவென*
*மாமாய வீர கோர முடனிகல்*
*சூர்மாள வேலை யேவும் வயலியி*
*லிளையோனே;*

---

*வலாரி - வலாசுரனுடைய அரி (பகைவன்) இந்திரன், வலன் - ஒரு அசுரன்; இவன் இறந்தால் தன்னுடல் நவமணிகள் ஆகும்படியான வரத்தைப் பெற்றனன். இந்திரன் செய்த வஞ்சனையால் அவனுக்கு யாகப்பசுவானான் - யாகத்தில் மறைந்த இவன் உடல் விலையுயர்ந்த ரத்னங்களாயின. இவன் உடலில் இருந்த ரத்தம் மாணிக்கங்கள் ஆயிற்று. பற்கள் முத்துக்களாயின; மயிர்கள் வைடூரியமாயின; எலும்புகள் வைரமாயின; பித்தம் மரகதம் ஆயிற்று; நிணம் கோமேதகம் ஆயிற்று; தசைகள் பவளமாயின; கண்கள் நீலமாயின; கபம் புஷ்பராக மாயிற்று. (அபிதான சிந்தாமணி - பக்கம் 172)

†சோமாசிமார் - சோமயாகம் செய்பவர்கள். வேதாகமங்களில் விதித்தவாறு சிவயாகங்களை நியம நியதியுடன் செய்கின்ற மறையோர் சோமாசி - சோமயாசி எனப் பேர் பெறுவர். சோமயாகம் - தேவர் பொருட்டுச் சோமரசம் அளிக்கும் வேள்வி வகை. சோமம் - யாகங்களில் தேவதைகளுக்கு நிவேதித்துப் பின் யாகம் செய்பவர் பருகுதற்குரிய இரசம் சித்தஞ்செய்யுங் கொடி.

பால், சர்க்கரை, தேன் இவைபோன்ற இனிப்புள்ள மொழிகளாலே நிரம்ப காம மோகத்தைத் தருபவர்களாகிய பொதுமகளிருடைய பாதம் முதல் கூந்தல் வரையும் உள்ள உறுப்புக்களை வகைவகையாக வர்ணித்துப் பாடல் பாடும்-

பேயன், ஞானம் குறைபாடுடையவன் - விவேகமுள்ள நாதான் (நாக்கே) இல்லாத பாவி, நிசம் என்பதே இல்லாதவன் (உண்மையிலாதவன்), வீணாள் உண்டாகாமற் காக்கும் அறிவும் தவமும் இல்லாதவன் - உயிரைப் பற்றியும், உலகப்-பற்றுக்களைப் பற்றியுமே-

வியாபாரம் செய்கின்ற (பேசிப் பொழுது போக்குகின்ற) அதாவது - பதிஞானம் -(இறைவனைப் பற்றிய அறிவு) இல்லாத மூடன் ஆகிய இத்திறப்பட்ட நானும் உன்னுடைய அழகிய (அல்லது உன்னுடைய இரண்டு) சிறப்பு நிறைந்த பாதங்களின் தூளியாகும் பேறுபெற்று அத்தகைய பேற்றினால், நரகினிலே வீழாதவாறு சுவாமியே! நீ திருவருள் புரிந்தருளுக!

(தன்னுடைய) தூதர்களுடன் காலன் அஞ்சவும், பிரமனும், திருமாலும் (அஞ்சி) ஓடவும். கொல்லவல்ல படை சோர்ந்து போய் இந்திரனுடய சேனை பொடிபட்டழியவும், வேத வேள்விகள்

சோம யாகம் ஆதிய செய்யும் பெரியோர்கள் " சிவாயநம" என்னும் ஐந்தெழுத்தோதி (பஞ்சாட்சரத்தை) ஓதித் துதித்து நிற்கவும் - மகாமாயங்களும் வீரமும் கோரமும் பொருந்தப் போர் செய்த சூரன் இறக்கும்படி வேலாயுதத்தைச் செலுத்தின இளையோனே! வயலூரில் வீற்றிருக்கும் இளையோனே!

கூதாள நீப நாக மலர்மிசை
சாதாரி தேசி நாம க்ரியைமுதல்
கோலால நாத கீத மதுகர மடர்சோலை-

*கூராரல் தேரு நாரை மருவிய
கானாறு பாயு மேரி வயல்பயில்
கோனாடு சூழ்வி ராலி மலையுறை
பெருமாளே (2)

## 352. மனோலயம் பெற

தனாதன தனாதன தனாதன தனாதன
தனாதன தனாதனன தனதான

இலாபமில் பொலாவுரை சொலாமன தபோதன
ரியாவரு மிராவுபக லடியேனை-

இராகமும் விநோதமு முலோபமு டன்மோகமு
மிலானிவ னுமாபுருஷ னெனஏய;

சலாபவ மலாகர சசீதர விதாரண
சதாசிவ மயேசுரச கலலோக-

சராசர வியாபக பராபர †மநோலய
சமாதிய நுபூதிபெற நினைவாயே;

---

*நாரை - ஆரல் மீன் தேர்தல் - நாரை வெள்ளிய சிறகையும், பசிய காலையும், செவ்வாயையும் உடைய பறவை. இது ஆரல், கெண்டை, நெற்கதிர் முதலியவற்றை உண்ணும்.

"பகுவாய் நாரை ஆரல் வாரும் பாசூரே" - சம்பந்தர் II-60-9.

'ஆரல் அருந்த வயிற்ற நாரை' - குறுந்தொகை 114.

† மநோலய சமாதி அநுபூதி - வேண்டும் பிற திருப்புகழ்ப் பாடல்கள்:- 235, 506,1110.

கூதளம் (ஒரு பூ), கடப்ப மலர், சுரபுன்னை மலர் இவைகளின்மீது மொய்த்துப் பண் சாதாரி (பந்துவ-ராளிராகம்), தேசி (ஒரு ராகம்), நாமக்கிரியை (நாத நாமக்கிரியை) முதலான ஆடம்பரமான நாதகீதங்களை (ஒலி இசைகளைப் பாடும்) வண்டுகள் நிறைந்த சோலைகளும்-

நிரம்ப ஆரல் மீன்களை ஆய்ந்து தேடும் நாரை (நீர்ப் பறவைகள்) பொருந்திய காட்டாறு பாய்கின்ற ஏரிகளும், வயல்களும் நெருங்கியுள்ள கோனாடு என்னும் பிரதேசத்தில் உள்ள விராலிமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(நரகிடை வீழாமல் திருவருள் புரிவாயே)

## 352

இலாபம் இல்லாத பொல்லாத மொழிகளைச் சொல்லாத மனத்தை உடைய தவத்தினர்கள் யாவரும் இரவும் பகலும் அடியேனைக் குறித்து (இவன்) -

ஆசை, விளையாடல்களில் இன்ப மகிழ்ச்சி, பொருளாசை (ஈயாமைக்குணம்), காம மயக்கம் இவை இல்லாதவன், இவனும் ஒரு சற்புருடன் என்று சொல்லும் சொல் பொருந்தும்படியாக,

சல்லாபம் (சரசம் - இனிய குணத்ததான), அமலாகர - அமல ஆகர (பரிசுத்தத்துக்கு இருப்பிடமான), சசீதர (சந்திரனைத் தரித்த), விதரண (கருணை நிறைந்த)- (அல்லது விதாரண - அழிக்கின்ற தொழில் பூண்டவரே!) சதாசிவ மகேசுர - நிலையதாய் - சகல லோகங்களிலும் உள்ள-

நடப்பன - நிற்பன (இயங்குவன - நிலைத்திருப்பன) வான எவற்றினும் கலந்ததான - பரம்பொருளாய் உள்ள - மனம் ஒடுங்கிய சமாதி அநுபூதி நிலையை அடியேன் பெற நீ நினைந் தருளுமாறு வேண்டுகின்றேன்-

*நிலாவிரி நிலாமதி †நிலாதவ நிலாசன
‡நியாயப ரிபாலஅர நதிசூடி-

நிசாசர குலாதிப $திராவண புயாரிட
நிராமய **சரோருகர னருள்பாலா;

††விலாசுகம் வலாரெனு முலாசவி த‡‡வாகவ
§§ வியாதர்கள் விநோதமகள் மணவாளா-

விராவுவ யலார்புரி சிராமலை பிரான்மலை
**விராலிமலைமீதிலுறை** பெருமாளே (3)

## 353. ஆசை அற

தனாதன தனாதன தனாதன தனாதன
தனாதன தனாதனத் தனதான

§நிராமய புராதன பராபர வராம்ருத
நிராகுல சிராதிகப் ப்ரபையாகி-

---

*நிலா விரி நிலா மதி - சந்திரிகை விரிந்து பிரகாசிக்கின்ற மதியையும்

† நில்லாத அநில அசன -நில்லாது அலைகின்ற காற்றைப் புசிக்கின்ற.

‡ நியாய பரிபால அர - நியாய பரிபாலனஞ் செய்வதில் வல்ல ஆதி சேடனாகிய சர்ப்பத்தையும்; ஆதிசேடன் - சிவமூர்த்தியின் முடியி லிருந்து நாம் சகலராலும் பூசிக்கப்படுகிறோம் என்று இறுமாந்த காலத்துச் சிவமூர்த்தியால் இழுத்து எறியப்பட்டச் சிரம் ஆயிரம் பிளவுகளாயின; அவைகளைத் தவத்தால் தலைகளாகப் பெற்றுச் சிவமூர்த்தியை அடைந்தவன்; அதிக புத்தி உடையவன்; சகல கலைகளும் அறிந்தவன் (அபிதான சிந்தாமணி பக்கம் 126).

ஆதிசேடனை அரன் அணிதல்:- 'வாயுவான பஞ்சடைத்துத் திருமால் துயிலும் மலரணையே! ஆய விடமாம் யாக்கையமைத் தரனார் அணியும் அரும்பணியே! , - (செவ்வந்திப் புராணம் - திருமலை -30)

$ ராவணன் புயம் நெரிப்பு உண்டது:

பாட்டு 188, பாட்டு 224, பார்க்க.

புயாரிட - புய அரிட; புயங்களுக்கு அரிட்டத்தை யுண்டாக்கிய; அரிட்டம் - கேடு. (அடுத்த பக்கம் பார்க்க)

சந்திரிகை விரிந்து பிரகாசிக்கின்ற பிறையையும், நில்லாது அலைகின்ற அனிலம் (காற்றை) அசனம் (உணவாகக் கொள்ளும்) நியாய பரிபாலனம் செய்வதில் வல்ல ஆதிசேடனாகிய சர்ப்பத்தையும், கங்கையையும் சூடினவரும்-

அரக்கர் குலத்துக்கு (அதிபதி தலைவனான ராவண னுடைய புயங்களுக்குக் கேடு உண்டு பண்ணினவரும், நோயற்ற மூர்த்தியும், தாமரையில் வீற்றிருப்பவருமான அரன் (அல்லது தாமரையன்ன கரத்தை உடைய) சிவன் அருளிய குழந்தையே!

வில் - அம்பு விடுதலில் (தாம்) வல்லவர் என்னும் மனக்களிப்பின் இதம் (இன்பம்), கொண்டு போரிடும் வேடர்களின் அற்புத மகளாம் வள்ளியின் மணவாளனே!

பொருந்திய வயலார்புரி (வயலூர்), திரிசிராமலை, பிரான்மலை (கொடுங்குன்றம்), (இவைகளை இடமாகக் கொண்டு) விராலிமலை மீதில் உறைகின்ற பெருமாளே!

(மநோலய சமாதி அநுபூதிபெற நினைவாயே)

## 353

நோயிலாத, பழமையான, எல்லாவற்றுக்கும் மேலான, வரம் என்னும் இனிமையைத் தருவதான (இனிய வரங்களைத் தருவதான) (அல்லது சிரேட்டமான அழிவிலாத), கவலை (கலக்கம்) இல்லாத, மேன்மை மிக்க ஒளியாய் விளங்கும் (பொருளை)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

**சிவபிரான் தாமரையில் வீற்றிருத்தல்:

பதும நன் மலரது மருவிய சிவன்ஃ- சம்பந்தர் I-21-1.

சுடர்க் கமலப் போதகஞ் சேர் புண்ணியனார் - சம்பந்தர் I-66-2

††வில் ஆசுகம்; ஆசுகம் - அம்பு. ‡‡ஆசுவம் - போர்.

§§வியாதர்கள் - வேடர்கள்:

$ சம்பந்தர் தேவர்ரத்தில் அருணகிரியார்க்கு மிகப் பழக்கம் உண்டு என்பது திரிசிராப்பள்ளிப் பதிகம் 332-ன் கீழ்க்குறிப்பிற் காட்டப்பட்டது. இந்தப் பாடலில் "நிராமய பு... தன பராபர" என்பது சம்பந்தர் தேவாரத்தில் 'நிராமய பராபர புராதன" எனவரும் பாடல் நினைவு போலும் (III- 67 - 6).

நிராமயம் - நோயிலாமை; ஆமயம் - நோய் 'ஆமயந் தீர்த்தடியேனை ஆளாக் கொண்டார்' - அப்பர் - VI-96-1.

*நிராசசி வராஜத வராஜர்கள் பராவிய*
**நிராயுத புராரியச் சுதன்வேதா;*

*†சுராலய தராதல சராசர பிராணிகள்*
*சொரூபீ மி வராதியைக் குறியாமே*

*துரால்புகழ் பராதின கராவுள பராமுக*
*துரோகரை* **தராசையுற் றடைவேனோ;**

*இராகவ இராமன் §முன் இராவண **இராவண*
*இராவண இராஜனுட் குடன் ††மாய்வென்-*

*‡‡றிராகன்ம லாரணிஜ புராணர்கு மராகலை*
*யிராஜசொ லவாரணர்க் கிளையோனே;*

*§§விராகவ சுராதிப் பொராதுத விராதடு*
*$விராயண பராயணச் ¶செருவூரா-*

*விராவிய குராவகில் பராரைமு திராவளர்*
**விராலிம லை¶¶** *ராஜதப் பெருமாளே.* (4)

---

* நிராயுத புராரி - திரிபுரம் எரித்த வரலாற்றை பாடல் 285 பார்க்க. தேவர்கள் யாவரும் தாம் தாம் போருக்கு வேண்டிய உதவி புரிவதால் தான் சிவபிரான் வெற்றி யுறுவர் எனத் தருக்கித்து நினைவு கொண்டவரா யிருந்தன ராதலின் சிவபிரான் அம்பு ஒன்று கூட ஏவாமலே திரிபுரத்தைச் சிரித்து எரித்தார்.

" ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை உந்தீபற" திருவாசகம் (திருவுந்தியார்)

†சுராலயம் - தேவலோகம். ‡ இவர்தல் - கலத்தல்.

§ முன் இராவண-(கைலாசகிரியை அசைத்தெடுத்துச் சிவபெருமா னால் அடர்க்கப்பட்ட) அந்நாளில் அழுகுரலோசை யுற்ற.

** இரா வண - இராவின் வண்ணமாகிய கருநிறத்தையுடைய.

††மாய வென்ற இராகன் மலர் ஆள் நிஜ புராணர் - மாயும்படி வென்ற அம்பையுடையவராகிய விட்டுணுவின் கண்ணையே மலராகக் கொண்டருளிய நிஜ புராணர்.

(அடுத்த பக்கம் பார்க்க)

ஆசையற்ற, சிவராச (சிவத்துடன் மகிழும் சுகாநுபவ நிலையைக் கொண்ட) தவ சிரேட்டர்கள் போற்றுகின்ற, ஆயுதம் இல்லாமலே (ஆயதத்தைப் பிரயோகிக்காமலே) பரத்தை (திரிபுரத்தை) எரித்த சிவன், திருமால், பிரமன்,

விண்ணுலகம், மண்ணுலகம், (நடப்பன) இயங்குவன, நிற்பன (நிலைத்திருப்பன) ஆன உயிர்க் கூட்டங்களின் உருவங்களிற் கலந்துள்ள ஆதிப்பொருளை (நான்) குறித்துத் தியானிக்காமல்

துரால் (செத்தை) அனைய புகழ் கொண்டு (உபயோக மற்ற புகழைக் கொண்டு - நற்புகழ் இல்லாத), சுதந்திரமில்லாத, (பிறருக்கு அடிமைப்பட்ட), கரா உள்ள (முதலை போன்ற உள்ளத்தை உடையராய்) அலட்சியம் செய்யும் துரோகிகளை இந்த மண்ணின் மீதுள்ள ஆசை பூண்டு (பிரபஞ்ச ஆசையினால்) சேர்வேனோ!

இரகுவமிசத்தைச் சார்ந்த ராமன் முன்பு - அழுகுரலோசை யுற்ற - இராவின் வண்ணமாகிய கரு நிறத்தையுடைய - ராவணன் என்னும் அரசன் அச்சப்பட்டு மாயும்படி வென்ற

இராகன் (அன்பு உடையவனான விட்டுணுவின் கண்ணையே) மலராகக் கொண்டருளிய உண்மைப் பழைய வரலாற்றையுடைய சிவபிரானது குமரனே! நூல்கள் விசேட மேன்மையுடன் சொல்லும் புகழை உடைய யானை முகவர்க்கு இளையவனே! (அல்லது கலைராசனே! புகழப்படும் அந்த யானை முகவர்க்கு இளையவனே)!

ஆசையில்லாதவனே! தேவர்களுக்கு அதிபனே! போர் புரியாமலே, தவிராமலே (தவறுதல் இல்லாமலே) அடுதல் வல்ல (வெல்லவல்ல) வீர வழியில் விருப்பம் உள்ளவனே! திருப்போரூரா!

கலந்து விளங்கும் குரா, அகில், இவைகளின் பருத்த அடிமரம் முதிர்ந்து (முற்றி) வளரும் விராலிமலையில் வீற்றிருக்கும் ராசத குணப் பெருமாளே!

(துராசையுற் றடைவேனா)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

††திருமால் கண் மலரிட்டுச் சிவனைப் பூசித்தது: பாடல் 80, பார்க்க

§§ வி ராகவன் - ஆசை யில்லாதவன்

$ வீர அயண பராயணம் - வீர வழியில் விருப்பம்.

¶ செரு வூர் - திருப்போரூர்.

¶¶ ராஜதம் - பாட்டு 197, குறிப்பைப் பார்க்க.

## 354. முத்தி நெறி தெரிய

தனதன தனதன தனன தனதன
தனதன தனதன தனன தனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனதன தனதன தனன தனதன
தனதன தனதன தனன தனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனதன தனதன தனன தனதன
தனதன தனதன தனன தனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன தனதான

*இதமுறு விரைபுனல் முழுகி †யகில்மண
முதவிய புகையினி லளவி வகைவகை
கொத்தலர்க ளின்தொடையல் வைத்துவளர் கொண்டலென
அறலென இசையளி யெனந ளிருளென
நிறமது கருகிநெ டுகிநெ றிவுபட
நெய்த்து முசு வின்திரிகை யொத்தசுருள் குந்தளமும்
இலகிய பிறையென எயினர் சிலையென
‡விலகிய திலதநு தலும திமுகமும்
உற்பலமும் வண்டுவடு விற்கணைய மன்படரு முனைவாளும்-
இடர்படு கவுநடு வனும்வ லடல்பொரு
கடுவது மெனநெடி தடுவ கொடியன
இக்குசிலை கொண்டமதன் மெய்த்தவநி றைந்த விழி
தளவன முறுவலு மமுத குமுதமும்

---

* இச்செய்யுளிற் கேசாதிபாத வருணனைச் சிறப்பு கவனிக்கற்பாலது.

†கூந்தலுக்கு அகிற் புகை யூட்டுதல்:

" காழ் அகிற் கொழும் புகை கொளீஇ
நெறித்து நெறிப்பட வாருநர் முடித்து"

- பெருங்கதை 3-22-109.

(அடுத்த பக்கம் பார்க்க)

## 354

இன்பத்தைத் தருகின்ற வாசனை கலந்த நீரில் முழுகி, அகிலின் நறுமணம் வீசும் புகையை ஊட்டி, விதம் விதமான கொத்து மலர்களாலாய மாலைகளை (ஒழுங்கு பெற) வைத்து, நிறைந்து பெருகும் மேகம் போன்றும், கருமணல் போன்றும், இசைபாடும் வண்டின் கூட்டம் போலவும், நடு இருள் போலவும், நிறமானது கறுத்து நீளமுள்ளதாய், சுருள் உள்ளதாய், நெய்ப்பு (வாசனைத் தயிலம் தடவினதால் பள பளப்புள்ளதாய்), கருங்குரங்கின் சுருளுற்ற வளைவுள்ள (கரிய கை போன்று சுருண்டுள்ள) **கூந்தலும்**, (அல்லது முசுமுசுக் கையின் சுருண்ட கொடி போன்ற கூந்தலும்), விளங்கும் பிறை போன்றும், வேடர்களின் வில்லைப் போன்றும், விலகிய அல்லது - இலகிய (விளக்கமுள்ள) பொட்டணிந்த **நெற்றியும்**, திங்கள் போன்ற **முகமும்**, நீலோற்பலமும், வண்டும், மாவடுவும், வில்லம்பும், யமனும், பாய்ந்து வரும் கூரிய வாளும்- (என நின்று)

இடர் படு(க்)கவும் (இடரை உண்டாக்கவும்), யமனும், மிக்க வலிமை பொருந்திய கடு (விடமும்) போன்று, நீண்ட நேரம் வருத்துவனவாய், (பொல்லாதனவாய்) கரும்பை வில்லாகக் கொண்ட மன்மதனது உண்மைத் தவம் நிறைந் துள்ளனவாய் விளங்குகின்ற, **§கண்களும்**, முல்லையரும்புக்கு ஒத்த **பற்களும்**, அமுதம் போன்றதாய் குமுத மலர் ஒத்த வாயினின்றும்

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

**கூந்தலுக்கு உவமை:** "சூல் மேகம் .... கருமையடர் கங்குல் ... சிறை வண்டினம்... அறல்... தேன் துளிப்ப வழிந்தொழுகுந் தகரக் குழலுக் கிணையாமே" - (உசித சூடாமணி நிகண்டு).

‡ விலகிய - விசாலமான

**§கண்ணுக்கு உவமை:** 'வேல்வாள் ... கருங்குவளை ... மாவின் வடு கோல், கூற்று, விடம், வண்டு... விழிக் கொப் பிவையாமே."

(உசித சூடாமணி)

விளைநற வினியமொ ழியுமி னையதென
   ஒப்பறுந கங்கள் *விரல் துப்பெனவு றைந்துகமு
கிடியொடி படவினை செயும்வின் மதகலை
நெடிய †க வுடியிசை முரலு சுரிமுக
   நத்தனைய கண்டமும்வெண் முத்துவிளை ‡விண்டனைய
எழில்தோளும்;

விதரண மனவித னமதை யருள்வன
சததள மறைமுகி ழதனை நிகர்வன
   புத்தமிர்து கந்தகுடம் வெற்பெனநி ரம்புவன
இமசல ம்ருகமத களப பரிமள
தமனிய ப்ரபைமிகு தருண புளகித
   சித்ரவர மங்கலவி சித்ரவிரு துங்ககன
விகலித மிருதுள ம்ருதுள நவமணி
முகபட விகடின தனமு முயர்§ வட
   பத்திரமி ருந்தகடி லொத்தசுழி யுந்தியுள மதியாத-
விபரித முடையிடை யிளைஞர் களைபட
அபகட மதுபுரி யரவ சுடிகைய
   ரத்நபண மென்பவழ குற்றவரை யும்புதிய
நுணியத ளிரெனவு லவிய பரிபுர
அணிநட னபதமு முடைய வடிவினர்,
   பொற்கலவி யின்பமதி துக்கமென லன்றியவர்
விரகினி லெனதுறு மனம துருகிய
பிரமையு மறவுன தருள்கை வரவுயர்
   பத்திவழி யும்பரம முத்திநெறி யுந்தெரிவ
தொருநாளே;

---

*விரல் துப்பென - 'செய்ய பவளத்தின் விரல்கள் ஐய'
(கம்பராமா - மாரீசன் - 70)

†கவுடி என்பது ஒருவித பண். ‡ விண்டு - மூங்கில்.

§ வட பத்திரம் இருந்த அகடில் - ஆலிலை போன்ற அடி வயிற்றில்.

வருகின்ற தேன் போல இனிக்கும் சொற்களும், இன்னத்துக்குத்தான் நிகராகும் என்று சொல்லுதற் கில்லாததான நகங்களோடு கூடிய விரல் பவளம் போல் விளங்கவும், கமுகு - (இதற்கு நிகராகாது) இடிபட்டு ஓடிய, தொழில் புரியும் வில் ஏந்திய கரமானது சாத்திரத்துக்குப் பொருந்த அமைந்த பெரிய கவுடி (கௌடி) என்னும் பண் வகையை (ராகத்தின்) இசையை ஒலிக்கின்ற (சுரிமுக நத்து) சங்குக்கு ஒப்பான கழுத்தும், வெண்மை நிற முத்துக்கள் விளைகின்ற மூங்கில் போன்ற அழகிய தோளும்-

விவேகம் உள்ள மனத்தில் வேதனைத் துயரைத் தருவனவாய், நூற்றிதழ்த் தாமரை மொட்டை ஒப்பனவாய், புதிய அமிர்த வாசனைக் குடம் (புதிய அமிர்து கொண்டதாய் மகிழத் தக்கதான குடம்), மலை, இவை போன்று நிரம்பி (பூரித்து) இருப்பனவாய், பனி நீர், (பன்னீர்), கத்தூரி, கலவைச் சாந்து இவை தமைக்கொண்டனவாய், நறுமண முள்ளனவாய், பொன் ஒளி மிகுந்தனவாய், இளமை கொண்டனவாய், புளகிதம் பூண்டனவாய், அழகு, சிரேட்டம், மங்கலம், அதிசயம், கொண்டனவாய் - இரண்டு என்னும் எண்ணிக்கை உடையனவாய் - உயர்ந்த, பெருமை வாய்ந்த, சரிவு (சாய்வு) இல்லாத மிக்க மென்மையைப் பூண்டனவாய், நவரத்ன மாலையையும், மூடும் அலங்காரத்துணியையும் கொண்டனவாய், பரப்பு வாய்ந்தனவாய் உள்ள கொங்கை களும், உயர்ந்த ஆலிலை போன்ற அகடு (வயிற்றில்) பொருந்திய சுழிவுற்ற கொப்பூழும், உள்ளத்தில் ஆராயாத-

மாறுபாடான எண்ணத்தை உடையராய் அத்தகைய எண்ணத்தின் இடையே அகப்பட்டவரான இளைஞர்கள் சோர்வு அடைய பொல்லாங்கு (தீங்கு) செய்கின்ற, பாம்பின் தலை யுச்சியில் உள்ள ரத்ன படம் என்று சொல்லத்தக்க, அழகு வாய்ந்த அல்குலும், புதிய நுண்ணிய தளிர் போன்றதாய், உலவுகின்ற சிலம்பு அணிந்த அழகிய நடனத்துக்கு உற்ற பாதங்களும் உடைய உருவத்தினராம் பொது மகளிருடைய அழகிய கலவி (சேர்க்கை) இன்பமானது (உண்மையிலே) அதிக துக்கம் தருவது என்று உணர்தலோடு கூட, (அப்பொது மகளிரின்) தந்திரச் செயல்களில் எனக்குள்ள மனமானது உருகிடும் மயக்கமானது ஒழிய, உனது திருவருள் கைகூட, உயர்ந்த பத்தி வழியும், மேலான முத்தி நெறியும் எனக்குப் புலப்படும் படியான பாக்கிய நாள் ஒன்று உண்டா (கிடைக்குமா!)

*தததத தததத ததத தததத*
*திதிதிதி திதிதிதி திதிதி திதிதிதி*
*தத்ததத தந்ததத தித்திதிதி திந்திதிதி*

*டகுடகு டிகுடிகு டகுகு டிகுடிகு*
*டிகுடிகு டகுடகு டிகுகு டகுடகு*
*தத்ததிமி டங்குகுகு தித்திதிமி டிங்குகுகு*
*தமிதமி தமிதக தமித திமிதக*
*திமிதிமி செககண திமித திகதிக*
*தத்திமித தந்திமித தித்திமிதி திந்திமிதி*
*யெனவேதான்-*

*தபலைகு டமுழவு திமிலை படகம*
*தபுதச லிகைதவில் முரசு கரடிகை*
*மத்தளித வண்டையற வைத்தகுணி துந்துமிகள்*
*மொகுமொகு மொகுவென அலற விருதுகள்*
*திகுதிகு திகுவென அலகை குறளிகள்*
*விக்கிடநி ணம்பருக *பக்கியுவ ணங்கழுகு*

*சதிர்பெற அதிர்தர உததி சுவறிட*
*எதிர்பொரு நிருதர்கள் †குருதி பெருகிட*
*வப்புவின்மி தந்தெழுப தற்புத‡க வந்தமெழ*
*வெகுகோடி;*

*மதகஜ துரகர தமுமு டையபுவி*
*யதலமு தல்முடிய இடிய நெடியதொர்*
*மிக்கொலிமு ழங்கஇரு ளக்கணம்வி டிந்துவிட*

*இரவியு மதியமு நிலைமை பெறஅடி*
*பரவிய அமரர்கள் தலைமை பெறஇயல்*

---

*பக்கி - பட்சி † 'குருதி பெருகிடு அவ் அப்புவில் மிதந்து எழுபது அற்புத கவந்தம் எழ' எனப் பிரிக்க.

‡ கவந்தம் - சிறிது தொழிலுடன் கூடிய தலையற்ற உடல்; 'அனேகம் ஆயிரம் பேர் படக் கவந்தம் ஒன்று ஆடும்' என்பது மரபு.

**தத தத தததத தத்த தததத**
*திதி திதி திதிதிதி திதிதி திதிதிதி*

** ** **

*தத்திமித தந்திமித தித்திமிதி திந்திமிதி*
எனும் ஒலிகளுடன் -

*தபலை (மத்தள வகை), குடமுழவு (முழவு வாத்திய வகை), திமிலை (ஒருவகைப் பறை), படகம் (சிறு பறை வகை), அபூத (முன் இல்லாததான - புதுவகையதான) சல்லிகை (சல்லென்ற ஓசை உடைய பெரும்பறை வகை) - தவில் (மேள வகை), முரசு (பறைப்பொது), கரடிகை (கரடி கத்தினாற் போலும் ஓசையுடைய பறை வகை), மத்தளி (வாத்திய வகை), தவண்டை (பேருடுக்கை), அறவைத் தகுணி (அற வைத்த தகுணி) - நிரம்ப இருந்த தகுணிச்சம் (பறைப் பொது), துந்துமிகள் (பேரிகை-கள்) ஆகிய இவ்வாத்தியங்கள் எல்லாம்- மொகு மொகு மொகுவென்று பேரொலி எழுப்ப - வெற்றிச் சின்னங்கள் திகு திகு திகு என்று விளங்க, பேய்களும், மாய வித்தைக் குறளிப் பிசாசுகளும் விக்கல், வருமளவு மாமிசக் கொழுப்பை உண்ண, பறவைகளான கருடனும் கழுகும் பேறு பெற்றோமென்று ஆரவாரிக்க, கடல் வற்றிப் போக, எதிர்த்துப் போர் புரிந்த அசுரர்களின் ரத்தம் பெருகி வரும் அந்தச் செந்நீரில் மிதந்து எழுபது கணக்கான அற்புதமான கவந்தங்கள் எழ, பல கோடிக் கணக்கான -

மத யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் உடைய பூமியும், அதலம் முதலான கீழேழ் உலகம் முழுமையும் அதிர்ச்சியுற்றுக் கலங்க, நீண்ட, பெருத்த, ஒலி முழங்கி எழ, இருள் (உலகின் துயர்) அந்தக் கணத்திலேயே விலகி ஒழிய, சூரியனும் சந்திரனும் நிலை பெற்று விளங்க, திருவடியைப் போற்றின தேவர்கள் தலைமை (மேன்மைத் தானத்தைப்) பெற,

---

* உத்தமமான மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழா - இவை அக முழவு; மத்திமமான தண்ணுமை, தக்கை, தகுணிச்சம் அகப்புற முழவு; (சிலப்பதிகாரம் 3 - உரை) தகுணி - தகுணிச்சம்; கடைக் குறை

**அத்திறல ணாங்குசெய சத்திவிடு கந்த *திரு**
வயலியி லடிமைய குடிமை யினலற
மயலொடு மலமற அரிய பெரியதி
ருப்புகழ்வி ளம்புவென்மு னற்புதமெ ழுந்தருள்கு
கவிராலி-
மலையுறை குரவந லிறைவ வருகலை
பலதெரி விதரண முருக சரவண
உற்பவக்ர வுஞ்சகிரி நிக்ரகஅ கண்டமய
நிருபவி மலசுக சொருப பரசிவ
குருபர வெளிமுக டுருவ வுயர்தரு
சக்ரகிரி யுங்குலைய விக்ரம‡ ந டம்புரியு
மரகத கலபமெ ரிவிடு மயில்மிசை
மருவியெ யருமைய இளமை யுருவொடு
சொர்க்கதல மும்புலவர் வர்க்கமும்வி ளங்கவரு
பெருமாளே. (5)

## 355. ஞான சித்தி பெற

தனதான தான தத்த தனதான தான தத்த
தனதான தான தத்த தந்ததான

உருவேற வேஜெ பித்து வொருகோடி யோம சித்தி
யுடனாக ஆக மத்து கந்துபேணி-
உணர்வாசை யாரி டத்து மருவாது வோரெ ழுத்தை
யொழியாது வூதை விட்டி ருந்துநாளும்

* இது அருணகிரியாரின் வரலாற்றுக் குறிப்பு: அரிய பெரிய திருப்புகழ் - " விகட பரிமள" எனத் துவக்கும் 921-ஆம் பாடல்: வயலூரில் அருணகிரியார் "விகட பரிமள" எனத் துவக்கும் அரிய பெரிய திருப்புகழைப் பாட இறைவன் உவந்து அவர் முன் அற்புத கோலத்தோடு எழுந்தருளி அவரது இன்னலை ஒழித்து, ஞானோபதேசம் செய்து, விராலிமலைக்கு வா என்று அழைத்தார்: இதை-

"விராலி மாமலையில் நிற்பம், நீ கருதி உற்று வா, என
அழைத்து என் மனதாசை மாசினை அறுத்து, ஞானமு
தளித்த வாரம் இனி நித்தம் மறவேனே" என வரும்

திருப்புகழ் (915) விளக்குகின்றது. (அடுத்த பக்கம் பார்க்க)

பொருந்திய அந்த வீரலட்சுமி விளங்கும் வெற்றி வேலைச் செலுத்தின கந்தனே! திருவயலூரில் அடிமையின் (அடியேனுடைய) குடிப்பிறப்பின் இன்னல் (துன்பங்கள்) நீங்க, மயக்கமும், (ஆணவம், கன்மம், மாயை என்னும்) மும்மலங்களும் நீங்க, அருமையான பெரிய திருப்புகழைச் சொன்ன என் (கண்) முன்னே அற்புதக் (காட்சியுடன்) எழுந்தருளின குகனே! விராலி

மலையில் வீற்றிருந்தருளும் குருமூர்த்தியே (பெரியோனே)! பெருமை பொருந்திய இறைவனே! உள்ள கலைகள் பலவும் தெரிந்த கருணை வாய்ந்த முருகனே! சரவண மடுவில் தோன்றினவனே! கிரவுஞ்சமலையை அழித்தவனே! எங்கும் பூரணமாய் நிறைந்த அரசே! மாசற்ற - பரிசுத்தமான - சுக சொரூபரான பரசிவ குருபரனே! (பரசிவனுக்குக் குரு மூர்த்தியே)! அண்டத்தின் புற வெல்லையுந் தாண்டி உயர்ந்து செல்லும் சக்ரவாளகிரியும் நடுக்கமுற, பராக்ரமம் பொருந்திய நடனத்தைச் செய்த பச்சைநிறமான தோகைகள் ஒளி வீசும் மயில்மேல் பொருந்திய - அருமை வாய்ந்த இளமை உருவத்தோடு, விண் உலகமும், தேவர் கூட்டமும் விளங்க எழுந்தருளும் பெருமாளே!

(பத்திவழியும் — முத்தி நெறியும் தெரிவது ஒரு நாளே!)

## 355

நிரம்ப உரு ஏறும்படியாக (உருப்போடுகின்ற எண்ணிக்கை நிரம்ப ஆகும்படி) செபம் செய்து, ஒப்பற்ற, கோடிக் கணக்கான, ஓமம் (வேள்வியால் வரும்) சித்தி உடனாக (பேறுகள் கூடிவர), சிவாகம விதிகளை மகிழ்ச்சியுடன் அநுசரித்து விரும்பி-

அறிதலும், ஆசை காட்டுதலும் யாரிடத்தும் பொருந்த வைக்காமல், ஓரெழுத்தாகிய பிரணவத்தை எப்போதும் ஓதி, (முறைப்படி) வாயுவை விடுத்திருந்து, நாள்தோறும்-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

† முருகன் ஆடல் - குடையும், துடியும். " அறுமுகத்தோன் ஆடல் குடை", " துடியாடல் வேல் முருகன் ஆடல்" - சிலப்பதிகாரம் 3-உரை. "மாக்கடல் நடுவண் நீர்த்திரை அரங்கத்து நிகர்த்து முன் நின்ற சூர்த்திறங் கடந்தோன் ஆடிய துடியும், "படை வீழ்த்தவுணர் பையுள் எய்தக் குடைவீழ்த் தவர்முன் ஆடிய குடையும்" - (சிலப்பதி. 49 - 53.)

*தரியாத போத கத்தர் குருவாவ ரோரொ ருத்தர்
தருவார்கள் ஞான வித்தை தஞ்சமாமோ-
†தழலாடி வீதி‡வட்ட மொளிபோத ஞான சித்தி
தருமாகி லாகு மத்தை கண்டிலேனே;
குருநாடி ராச ரிக்கர் துரியோத னாதி வர்க்க
குடிமாள மாய விட்டு குந்திபாலர்-
குலையாமல் நீதி கட்டி யெழுபாரை யாள விட்ட
§குறளாக னூறில் நெட்டை கொண்டஆதி;
மருகா புராரி¶ சித்தன் மகனே விராலி சித்ர
மலைமே லுலாவு சித்த அங்கைவேலா-
**மதுரா புரேசர் மெய்க்க அரசாளு மாறன் வெப்பு
வளைகூனை யேநி மிர்த்த தம்பிரானே. (6)

---

*குரு ஆகத் தகாதவர்களும்; அவர்கள் செய்யும் உபதேசப் பயனும்:- 'வேதாகம நெறிகாணான்.........அசற்குருவாமே' திருமந்திரம் - 2044.

'குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே' - திருமந்திரம் - 1680

† தழலாடிவீதி - நெற்றி; 'கற்பகந் தெருவில் வீதி கொண்டு - என்றார் பிறிதோரிடத்து - திருப்புகழ் 612.

‡ வட்டம் - புருவ மத்திய தானம்.

§ குறளாகன்: வாமனர், நெட்டை கொண்டது:
பாட்டு 268 பார்க்க.

"வடிவு குறளாகி மாபலியை வலிய சிறையிட
வெளியின் முகடு கிழிபட முடிய வளரு முகில்"
- சீர்பாத வகுப்பு.

¶ சித்தன் - இது எல்லாம் வல்ல சித்தரான திருவிளையாடலைக் குறிக்கும். மதுரையில், அபிடேக பாண்டியன் காலத்தில், மதுரைச் சொக்கநாதர், ஒரு சித்தர் வேடம் பூண்டு வந்து மதுரை வீதிகளிலே பல சித்து விளையாடல்களைக் காட்டி மகிழ்வித்தார்.

** 'ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென் ஆல வாயில் உறையும் எம் ஆதியே" என்று சம்பந்தப் பெருமான் வேண்டியவாறு (III - 108)

(அடுத்த பக்கம் பார்க்க)

நிலைத்த ஞானம் இல்லாத அறிவினர் - குரு என்னும் தானத்தைப் பூண்பார்கள் ஒரொருத்தர் (சிலர்); ஞானோபதேசத்தையும் செய்வார்கள்; (அப்படிப்பட்டவர்கள்) தருகின்ற ஞான உபதேசம் புகலாகுமா (பற்றுக்கோடு ஆகுமா?) ஆகாது என்றபடி.

நெற்றியிற் புருவ மத்திய தானம் ஒளி பொருந்திய பெருஞான சித்தியைக் கொடுக்குமென்றால் அங்ஙனம் கொடுக்கின்ற அதை (அந்தப் பொருளை) நான் காண இல்லையே!

குரு நாட்டை இராசரிகம் (அரசாட்சி) செய்த துரியோதனாதியர் கூட்டத்தின் குடி அழியும்படி மாயச் செயல்களைச் செய்து, குந்திதேவியின் குழந்தைகளான தரும புத்திரராதியோரை

அழிந்து போகாமற் காத்து, நீதி முறையை நிலைப்படுத்தி, ஏழுலகையும் (அவர்கள்) ஆளும்படி வைத்தவனும், குறளனுடைய தேக அளவினனாய் வந்து (வாமன ரூபனாக வந்து) கெடுதலிலாத நீண்ட உருவத்தை (திரிவிக்ரம ரூபத்தைக்) கொண்ட ஆதி மூர்த்தியாம் திருமாலின்-

மருகனே! திரிபுரத்தைப் பகைத்து எரித்தவனும்! (எல்லாம் வல்ல) சித்தனுமான அந்த மூர்த்தியின் மகனே விராலி எனப்படும் அழகிய மலைமேல் உலாவுகின்ற சித்தனே! அழகிய கையில் வேல் ஏந்தியவனே!

மதுராபுரியில் வீற்றிருக்கும் சொக்கநாதரின் உண்மை விளங்க, (மதுரையை) ஆண்டிருந்த பாண்டியனுடைய சுரத்தைப் போக்கி வளைவுபட்டிருந்த (அவனது) கூனையும் நிமிர்த்தின தம்பிரானே!

(ஞான சித்தி... கண்டிலேனே!)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

சமணரொடு செய்த வாதிற் சம்பந்தர் வெற்றி பெற்று சிவபிரானது மெய்மையை உலகுக்கு விளக்கியருளினார்.

" அமணிருள் மாய்ந்த தன்றே" " தேனலக் கொன்றையார் தந் திருநெறி நடந்த தன்றே" என்றார் சேக்கிழார் பெருமான். (பெரிய புராணம் - ஞானசம் 858, 859).

## 356. மாதர் கலவி யற

தனதனனந் தான தாத்த தனதனனந் தான தாத்த
தனதனனந் தான தாத்த தனதான

எதிரெதிர்கண் டோடி யாட்கள் களவதறிந் தாசை பூட்டி
இடறிவிழும் பாழி காட்டு மடமாதர்-

*இறைவைகொளுங் கூவல் மூத்த கறையொழுகுந் தாரை பார்க்கி
லிளமைகொடுங் காத லாற்றில் நிலையாத;

அதிவிகடம் †பீழ லாற்ற அழுகிவிழும் பீற லூத்தை
அடையுமிடஞ் சீலை தீற்று கருவாயில்-

அருவிசலம் பாயு மோட்டை அடைவுகெடுந் தூரை பாழ்த்த
அளறிலழுந் தாம லாட்கொ டருள்வாயே;

‡விதுரனெடுந் த்ரோண மேற்று எதிர்பொருமம் பாதி யேற்றி
விரகினெழுந் தோய நூற்று வருமாள-

விரவுஜெயன் காளி காட்டில் வருதருமன் தூத § னீற்ற
விஜயனெடும் பாக தீர்த்தன் மருகோனே;

---

* 2-4 அடிகள் அல்குலைக் குறிப்பன.

† பீழல் - பீழை - துக்கம்; பீளல்-பெண் குறி.

‡ பாண்டவரிடமிருந்து தூதராக வந்த கிருட்டிண பகவான் ராச ராசனாகிய தான் ஏற்படுத்தி யிருந்த மாளிகையில் வந்து தங்காது விதுரருடைய வீட்டில் தங்கினாரென்று கோபங் கொண்ட துரியோதனன் விதுரரை நோக்கி, "என் பிதாவோடு பிறந்தும் இன்று வரையில் என் கைச் சோற்றை உண்டும், பொது மடந்தைக்குப் புதல்வனாம் நீ அந்த கிருட்டிண-னுக்கு உபசாரம் செய்த வியப்பை நான் என்ன சொல்லி வெறுப்பேன்" என்றான். இவ்வசை மொழியைக் கேட்ட விதுரர் மிக்க கோபங் கொண்டு "வசை சொன்ன உன் வாய் குருதி கக்கும்படி உன் முடியை நான் துணிப்பேன் - ஆயினும் பொறுக்கின்றேன்; பாண்டவர்க்கு நான் உதவி செய்யப்புகின் யார் என்னைத் தடுக்கக் கூடும். இனி நான் போரில் அம்பைத் தொடேன்" என்று கூறித் தன் கையிலிருந்த மிகச் சிறந்த வில்லை இரண்டுபட வெட்டி யழித்துத் தனது வீட்டுக்குச் சென்றார். "இனிச் சமரினின்று வெங்கணை தொடேன் எனா உயர்ந்த வில்லதனை வேறிரண்டு பட வெட்டினான்" வில்லிபாரதம் - கிருஷ்ணன் தூது - 131.

# 356

எதிரில் எதிரில் (வருகிறவர்களைக்) கண்டதும் ஓடிச் சென்று, வருகின்ற ஆள்களின் நிலையைத் திருட்டுத்தனமாக வஞ்சனை வழியில் அறிந்து, அவர்களுக்கு ஆசை ஊட்டி, அவர்கள் தடுக்கி (துன்பப்பட்டு) விழுதற்கு (குகையன்ன) இடத்தைக் காட்டுகின்ற மடமாதர்களுடைய—

இறைகூடையைக் கொள்கின்ற கிணறு, பழைய அழுக்குகள் ஒழுகுகின்ற (துவார) வழி, ஆய்ந்து பார்க்கில் இளம் பருவத்துக் கொடிய காதல் ஆற்றில், நிலைக்க முடியாத

மிக்க பரப்புள்ள (அல்லது பயங்கரமான) பீழல் (பீழை) துக்கம் விளைக்கும் இடம், ஆற்ற (மிகவும்) அழுகி விழுகின்ற கிழியுண்ட இடம், அழுக்கு சேரும் இடம், ஆடை மூடுகின்ற கரு உண்டாகும் துவார வாசல்-

அருவி போல நீர் பாய்கின்ற ஓட்டை, தகுதியற்ற அடிப்பாகம், (ஆகிய) சீர்குன்றிய சேற்றில் (நான்) அழுந்தாமல் (என்னை) ஆட்கொண்டருள் புரிவாயாக;

விதுரன் தனது பெரிய வில்லை எடுத்து, எதிரியுடன் போர் செய்ய அம்பு முதலிய பாணங்களை அதில் ஏற்றிச் சாமர்த்தியத்துடன் எழுந்து போர் புரிதல் ஒயுமாறும் (இல்லாமற் போகவும்), துரியோதனன் ஆகிய நூற்றுவரும் இறந்து போம்படியும்,

உபாயஞ் செய்த செயவீரன், *காளிகாட்டில் (காடுகிழாள்) துர்க்கை வாழும் வனத்தில் வாசஞ்செய்து வந்த தரும புத்திரருடைய தூதன், திருநீறிட்டு தவஞ்செய்த அருச்சுனனுடைய பெரிய தேர்ப்பாகனாம் (சாரதியாம்) பரிசுத்தமூர்த்தி - ஆகிய திருமாலின் மருகோனே!

---

*காளிகாடு - இடும்பாவனம்.

§ நீற்ற விசயன் - பாசுபதாத்திரம் பெறும்பொருட்டுத் தேக முழுதும் நீறு பூசிக்கொண்டு தவஞ்செய்த அருச்சுனன்.

மதியணையுஞ் சோலை யார்த்து மதிவள*சந் தான
கோட்டின்
வழியருளின் பேறு காட்டி ய†விராலி-
மலைமருவும் பாதி யேற்றி ‡கடிகமழ்சந் தான கோட்டில்
§வழியருளின் பேறு காட்டு பெருமாளே. (7)

## 357. உபதேச நெறி பெற

தந்த தானன தான தனதன
தந்த தானன தான தனதன
தந்த தானன தான தனதன தனதான

ஐந்து பூதமு மாறு சமயமு
மந்த்ர வேதபு ராண கலைகளும்
ஐம்ப தோர்வித மான லிபிகளும் வெகுரூப-
அண்ட ராதிச ராச ரமுமுயர்
புண்ட ரீகனு மேக நிறவனும்
அந்தி போலுரு வானு நிலவொடு வெயில்காலும்;
சந்த்ர சூரியர் தாமு $மசபையும்
விந்து நாதமு மேக வடிவம
தன்சொ ரூபம தாக வுறைவது சிவயோகம்-
தங்க ளாணவ மாயை கருமம
லங்கள் போயுப தேச குருபர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ;

---

* சந்தானக்கோட்டின் வழியருளின் பேறு காட்டிய - சந்தானம் என்னும் தெய்வவிருட்சம் தன்னை அடைந்தோர்க்கு அவர்கள் வேண்டிய பொருள்களை வேண்டியவாறு கொடுக்கும் என்பதை உலகத்தோர்க்குத் தெரிவித்த,

† விராலிமலை மருவும் பாதி ஏற்றி - விராலிமலைக்குப் பாதியளவு வரையில் அவர்களை ஏறச்செய்து.

‡ கடி கமழ் சந்தான கோட்டில் - அவ்விடத்துற்ற தெய்வ மணம் கமழ்கின்ற சந்தானகோடு என்னு மிடத்தில் எழுந்தருளியிருந்து கொண்டு.

(அடுத்த பக்கம் பார்க்க)

சந்திரன் அணையும்படி உயர்ந்துள்ள சோலைகளோடு கூடி, அதிக வளப்பமுள்ள சந்தானம் என்னும் தெய்வ விருட்சம் போலத் தன்னை வழிபட்டோர்க்குப் பேற்றினை (விரும்பின வற்றைப் பெறும்படி) உதவுகின்ற **விராலி**

**மலைக்குப்** பாதியளவு வரையில் (அன்பர்களை வரச்செய்து, அவ்விடத்துற்ற தெய்வ மணம் கமழுகின்ற **சந்தானகோடு** என்னும் இடத்தில் எழுந்தருளியிருந்து கொண்டு, தம்மை அடைந்த அன்பர்கட்கு இட்ட காமியங்களை ஈந்தருளிக் காட்டுகின்ற பெருமாளே!

(ஆட்கொ டருள்வாயே)

## 357

(மண், நீர், தீ, காற்று, விண் என்ற) ஐந்து பூதங்களும், (வைரவம், வாமம் காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்னும்) சமயங்கள் ஆறும், மந்திரமும், வேதமும், புராணங் களும், கலைகளும், ஐம்பத்தொரு விதமான அட்சரங்களும் (எழுத்துக்களும்), பல உருவங்களை உடைய-

தேவர்கள் முதலானவர்களும், இயங்கும் பொருள், இயங்காத பொருள் ஆனவையும், உயர்ச்சியுள்ள பிரமனும், மேக நிறத்துத் திருமாலும், அந்திவண்ணனாம் உருத்திரனும், நிலவு, வெயில் என்பற்றை வீசுகின்ற

சந்திரனும், சூரியனும், அசபை என்னும் அம்ச மந்திரமும், விந்துவும், நாதமும் (இவை யெல்லாம்) கலந்த ஏக வடிவம் (ஒன்றாய வடிவமே) அந்தப் பரம்பொருளின் சொரூபமெனப் பாவித்து (அல்லது - ஒன்றாய வடிவமே தனது சொரூபம் என்று பாவித்து) இருத்தலே சிவயோகம் - (இந்தச் சிவயோக நிலையைப் பெறுதற்கு)

அவரவர்க்குரிய ஆணவம், மாயை, கருமம் என்னும் மும்மலங்களும் நீங்கப்பெற்று, உபதேச குருபர சம்பரதாய வழியில் (பரம்பரையான குருமூர்த்தியின் வழியாய் உபதேசம் பெற்ற வழியில்) அந்த உபதேசப்படி பொருந்துகின்ற நெறியை (வழியைப்) பெறுவேனோ!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

§ வழியருளின் பேறு காட்டு - தம்மை யடைந்த அன்பர்கட்கு இட்ட காமியங்களை ஈந்தருளிக் காட்டுகின்ற

$ அசபை என்பது அம்சமந்திரம். அந்த மந்திரம் அவன் நான் எனப்படும் சோகம். சோகம் பாவனை என்பது சீவான்மாவும் பரமான்-மாவும் ஒன்றெனப் பாவிக்கை

வந்த தானவர் சேனை கெடிபுக
இந்த்ர லோகம்வி பூதர் குடிபுக
மண்டு பூதப சாசு பசிகெட மயிடாரி-
வன்கண் வீரிபி டாரி ஹரஹர
சங்க ராஎன மேரு கிரிதலை
மண்டு தூளெழ வேலை யுருவிய வயலூரா;
வெந்த நீறணி வேணி *யிருடிகள்
பந்த பாசவி கார பரவச
வென்றி யானச மாதி முறுகுகல் முழைகூடும்-
†விண்டு மேல்மயி லாட இனியக
ளுண்டு காரளி பாட ‡இதழிபொன்
விஞ்ச வீசுவி ராலி மலையுறை பெருமாளே (8)

## 358. கிழம்படுமுன் பதம் பெற

தனதன தந்தன தந்த தந்தன
தனதன தந்தன தந்த தந்தன
தனதன தந்தன தந்த தந்தன தனதான

கரதல முங்குறி கொண்ட கண்டமும்
விரவியெ ழுந்துசு ருண்டு வண்டடர்
கனவிய கொண்டைகு லைந்த லைந்திட அதிபாரக்-

---

*விண்டு, மலை எனப் பொருள் கொண்டு, இருடிகள் சமாதி கல்முழை (யிற்) கூடுகின்ற விண்டு (மலை) என்றாவது, விண்டு மூங்கில் எனப் பொருள் கொண்டு இருடிகள் சமாதி கல்முழையிற்கூடுகின்ற விராலிமலை என்றாவது கூட்டுக

† இந்த அருமையான அடி ஒரு இயற்கை நாடகக் காட்சியை வருணிக்கின்றது. மலை அல்லது மூங்கில் நாடக மேடை, நடனம் செய்பவர் மயில், பாடல் பாடுபவர் வண்டு, கண்டு களித்துப் பொற்காசைப் பரிசாகத் தருபவர் கொன்றை - என அழகுற அமைக்கின்றார் ஆசிரியர். இக்கருத்தை-

"வரை சேரும் முகில் முழவ மயில்கள் பல நடமாட வண்டு பாட விரை சேர் பொன் இதழிதர மென் காந்தள் கையேற்கும் மிழலை" - சம்பந்தர் I - 132-4.

(அடுத்த பக்கம் பார்க்க.)

எதிர்த்து வந்த அசுரர்களின் சேனை அச்சம் அடைந்து முடிவுற, இந்திர லோகத்தில் தேவர்கள் குடியேற, நெருங்கி வந்த பூதங்களும், பிசாசுகளும் தத்தம் பசியாற, மகிடாசுரனைப் பகைத்தழித்த துர்க்கை-

வீரம் வாய்ந்த காளி, பிடாரி முதலிய தேவதைகள் அர அர சங்கரா என்னும் ஒலியை எழுப்ப, மேருமலையின் உச்சி யளவும் நெருங்கும் தூள் கிளம்ப வேலைச் செலுத்தின வயலூரனே!

வெந்த திருநீற்றை அணிந்த சடையையுடைய இருடிகள் பந்தபாசம் ஆகின்ற (உலகக் கட்டு, உலக ஆசை ஆகின்ற) விகாரங்களை (கலக்கங்களை) அப்புறப்படுத்தின - வசமழியச் செய்த - வென்றி யான (வெற்றி நிலையான) சமாதி நிலையைத் திண்மை வாய்ந்த மலைக்குகையில் (அல்லது கற்குகையில்) கூடுகின்ற - (விராலிமலையுறை பெருமாளே) (அல்லது கூடுகின்ற மலையின்மேல்)

மூங்கிலின்மேல் (அல்லது மலையின்மேல்) நின்று மயில் ஆட, இனிப்புள்ள மதுவை உண்டு கரிய வண்டுகள் பாட, கொன்றை மரமானது பொன்னை மிக வீசுகின்ற விராலிமலையில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(குருபர சம்ப்ரதாயமொடேயு நெறியது பெறுவேனோ)

## 358

கையும், நகக்குறி கொண்ட கழுத்தும், கலந்தெழுந்து சுருண்டு, வண்டு நெருங்கப் பெருமை வாய்ந்ததான கூந்தல் குலைந்து அலைய, அதிக பாரமானவையும்.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

" மயிலின் கணங்கள் நின்றாடக் கண முகில்
முரசநின் றதிரத் தேனுலா வரி வண்டு இன்னிசை முரலும்"
- பெரிய திருமொழி 9-1-7.

'காந்தள் இரவலர் போற் கையேற்பக் கொன்றை கொடை
வேந்தனெனப் பொன் சோரியும் வேங்கடமே"
திருவேங்கட அந்தாதி.

என வருவனவற்றில் காணலாம்.

‡ இதழி - கொன்றை.

களபசு கந்தமி குந்த கொங்கைக
ளிளகமு யங்கிம யங்கி யன்புசெய்
கனியித ழுண்டுது வண்டு பஞ்சணை மிசைவீழா-
இரதம ருந்தியு றுங்க ருங்கயல்
பொருதுசி வந்துகு விந்தி டும்படி
யிதவிய வுந்தியெ னுந்த டந்தனி லுறமூழ்கி-
இனியதொ ரின்பம்வி ளைந்த ளைந்துபொய்
வனிதையர் தங்கள்ம ருங்கி ணங்கிய
*இளமை **கிழம்படு முன்ப தம்பெற வுணர்வேனோ;**
†பரத சிலம்புபு லம்பு மம்பத
வரிமுக ‡எண்கினு டன்கு ரங்கணி
பணிவிடை சென்றுமு யன்ற குன்றணி
யிடையேபோய்ப்-
பகடியி லங்கை கலங்க அம்பொனின்
மகுடசி ரந்தச முந்து ணிந்தெழு
படியுந டுங்கவி ழும்பனம்பழ மெனஃவாகும்;
மருதமு தைந்தமு குந்த னன்புறு
மருககு விந்தும லர்ந்த பங்கய
வயலியில் வம்பவிழ் சண்ப கம்பெரி யவிராலி-

* 'தளையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்பம் எய்த இளையனும் அல்லேன்' (IV - 78-9) என அப்பர் பெருமான் கூறினதில் நின்றும் அப் பதிகம் பாடின போது அவர் முதியவர் என்பது புலப்படுவது போல், 'வனிதையர் மருங்கிணங்கிய இளமை கிழம்படுமுன்' - என அருணகிரியார் கூறினதில் நின்றும் விராலி மலையைத் தரிசித்து இப்பாடலைப் பாடின பொழுது அவர் இளம் பருவத்தினர் என்பது புலப்படுகின்றது.

†'இனிய நாத சிலம்பு புலம்பிடும் அருண ஆடக கிண்கிணி தங்கிய அடி.' என்றார் - பிறிதோரிடத்து. திருப்புகழ் - 23.

பரத சிலம்பு - 'பரதரு' 'பரதமாடி' என்றார் சிவபிரானை - திருப்புகழ் 17, 359.

‡ எண்கு - கரடி. கரடி, குரங்கு - சேனைகள் இராமபிரானுடன் போருக்குச் சென்றன என்பதைத் திருப்புகழ் 8-ல் பார்க்க. "ஆயிர கோடியினிரட்டியிற் கணித்த, எண்கின் ஈட்டங் கொண்டெறுழ்வலி இடும்பன் வந்திருத்தான்," "கண்ணுதலானுக்குங் கதுவா மண்ணின் மேல் வந்த வானரச் சேனையின் வரம்பே" - கம்ப ராமா-தானைகாண் - 5, 23

§ ஆகும் - ஆக்கும்.

கலவை நறுமணம் மிகுந்தவையுமான கொங்கைகள் நெகிழ்ந்து அசையும்படி கூடி, காம மயக்கில் மயங்கி, அன்பு காட்டும் (கொவ்வைக்) கனிபோன்ற வாயிதழ் (அமுதை) உண்டு, துவட்சியுற்று (சோர்வு) உற்று, பஞ்சு மெத்தையின் மேல் வீழ்ந்து-

வாயூறு நீரைப் பருகிப் பொருந்திய கரிய மீன்போலுங் கண்கள் ஒன்றுபட்டுச் சிவந்து குவியுமாறு, இன்பத்தைத் தரும் கொப்பூழ் என்கின்ற குளத்திற் பொருந்த முழுகி

இனிமை தரும் ஒரு இன்பம் உண்டாக அதை அனுபவித்து, பொய் நிறைந்த (பொது மகளிரின் மாட்டு பொது மகளிர் பால்) ஈடுபடும் எனது இளம்பருவம் முதுமைப் பருவத்தை அடைவதன் முன்னர் உனது திருவடியைப் பெறும் வழியை உணர்வேனோ (உணரும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமோ!)

பரதநாட்டியத்துக்கு அணிந்துகொள்ளும் சிலம்பு ஒலிக்கின்ற அழகிய அடிகளை உடையவனே! ஒளி பொருந்திய (அல்லது வரிகளை உடைய) முகத்தை உடைய சாம்புவான் முதலான கரடிப்படையும், குரங்குப் படையும் பணி புரிய (ஏவல் செய்ய) - (போர்க்குச்) சென்று முயற்சி கொண்டு மலை வரிசைகளின் இடையே போய் -

(வெளி வேடக்காரனான) மோசக்காரனான ராவணனது இலங்கை கலங்கும்படி அவனுடைய பொன்னாலாய கிரீடங்-களை அணிந்த தலைகள் பத்தும் துணிபட்டு, ஏழுலகும் நடுங்க, விழுகின்ற பனம்பழம்போல விழும்படி ஆக்கினவரும்-

*மருத மரங்களை ஒடிந்து விழ வைத்தவருமான முகுந்தன் (திருமால்) அன்புவைத்துள்ள மருகனே! குவிந்து மலர்கின்ற தாமரைகள் உள்ள வயலூரிலும், மணம் வீசும் சண்பகம் (மலரும்) பெருமை வாய்ந்த விராலி

*மருதம் உதைந்த வரலாறு - பாட்டு 143, பார்க்க.

மலையில் விளங்கிய கந்த என்றுனை
மகிழ்வொடு *வந்திசெய் மைந்த னென்றனை
†வழிவழி யன்புசெய் தொண்டு கொண்டருள்
பெருமாளே. (9)

## 359. ஞானம் பெற

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

‡கரிபு ராரி காமாரி திரிபு ராரி§ தீயாடி
கயிலை யாளி காபாலி ¶கழையோனி-
$கரவு தாச னாசாரி **பரசு பாணி ††பானாளி
‡‡கணமொ டாடி காயோகி சிவயோகி-
§§பரம யோகி மாயோகி பரிய ராஜ டாசூடி
¶¶பகரொ ணாத மாஞானி $$பசுவேறி-

---

*வந்திசெய் -வந்தனை செய்.

†அருணகிரியார் வழி வழி அன்புசெய் தொண்டர் என்பது-

'நாயேன் வழி வழியடிமை' - திருப்புகழ் 1080.
'பழைய நினது வழி யடிமை'- திருப்புகழ் 1127.
'முடிய வழி வழி யடிமை எனுமுரிமை அடிமை'
- சீர்பாத வகுப்பு.

‡ கரியின் (புரம் - உடல்) கஜசம் ஹாரம் - திருப்புகழ் 286. பார்க்க.

§ தீயாடி - சிவபெருமான் ஊழி இறுதியில் வடவா முகாக் கினியே மஞ்சனமாக ஆடுவார்; 'ஊழித் தீ உவந்தாடுவ தோர்ந்ததோ' - தக்கயாகப் பரணி 673. யுகாந்தாக்கினி - மகாதேவர்க்கு நீர், மற்றையவர்க்கு நெருப்பு -ஷ 656 உரை.

¶ கழை யோனி - மூங்கிலிற் பிறந்தவர். சிவபிரான் மூங்கிலடியில் தோன்றினதாகத் திருநெல்வேலி, திருப்பாசூர் என்னும் தலங்களின் மான்மியங்கள் கூறும்:

திருநெல்வேலி :- "பொருநைத் துறைவாய்ப் பிறவாக் கடவுள்
வேய் வயிற்றிற் பிறந்த தொன்னகர்" - திருவிளை - அருச்சனை - 33.

$ கர உதாசனன் (கையில் நெருப்பு ஏந்தினவன்)- 'எரி யொருகரத்தினர்' - சம்பந்தர் - I - 79-4.

(அடுத்த பக்கம் பார்க்க)

மலையிலும் விளங்கிய கந்தனே! என்று உன்னை மனமகிழ்ச்சியுடன் வந்தனை செய்கின்ற பிள்ளையாம் அடியேனுடைய வழிவழி அன்பு செய்கின்ற தொண்டினை (பாடற்பணியை) ஏற்றுக்கொண்டு அருளும் பெருமாளே!

(இளமை கிழம்படுமுன் பதம்பெற உணர்வேனோ!)

## 359

யானையின் உடலை அழித்தவர், காமனுக்குப் பகைவர் (மன்மதனை அழித்தவர்), திரிபுரத்துக்குப் பகைவர் (திரி புரத்தை அழித்தவர்), தீ அபிடேகம் கொள்பவர் (அல்லது தீ ஏந்தி ஆடுபவர்), கயிலைமலை இறைவர், (பிரம) கபாலத்தைக் கையிற் கொண்டவர், மூங்கிலடியில் தோன்றினவர்,

கையில் நெருப்பை எந்தின தலைவர், பரசு (மழு ஆயுதத்தைக்) கையிலுடையவர், நள்ளிரவை (நள்ளிருளை) உகந்தவர், கணம் (பேயுடன்) ஆடி, (நள்ளிரவில் பேயுடன் ஆடுபவர்), காக்கும் யோகி (அல்லது - யோக காயம்) உடலினர், அல்லது, (காயம்) விண் (ஆதிய பஞ்சபூதங்களிலும் கலந்த யோகி), - அல்லது- காய்கின்ற - அழிக்கின்ற) யோகி, சிவயோகி,

பரமயோகி, மகாயோகி, பெரிய பாம்பைச் சடையிற் சூடியுள்ளவர், சொல்லுதற்கு அரிய மகா ஞானி, பசு வாகன முடையவர்-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

** பரசுபாணியர்' III-*112-1* (சம்பந்தர்)

†† பானாளி - 'ஆடுவர் - நள்ளிருள்' - சம்பந்தர் - II -*120-5*.

‡‡ கணத்துடன் ஆடுதல் - 'பல்கணப் பேய்கள் அவை சூழ... ஆடல்' புரிசேடர்-I-*135-5*.

கணம் - பேய் 'பேழ்வாய்க் கருங்கணம்"

கந்த புராணம் - II - *36-16*.

§§ பரமயோகி - 'நான் மறை பாடும் பரமயோகி" - சம்பந்தர் I -*119-3*.

$$ மா ஞானி என்பது - " பெருஞான முடைப் பெருமான்"

சம்பந்தர் II - *20-11*.

"ஞானத்திரளாய் நின்ற பெருமான்" - சம்பந்தர் - I-*69-3*.

¶¶ பசு ஏறி - 'பசு ஏறும் எங்கள் பரமன்" - சம்பந்தர் II-*85-9*.

*பரத மாடி †கானாடி பரவ யோதி காதீத
பரம ஞான வூர்‡ பூத அருளாயோ;
§சுருதி யாடி தாதா$வி வெருவி யோட மூதேவி
¶துரக கோப மீதோடி வடமேரு-
**சுழல வேலை தீமூள அழுத ளாவி வாய்பாறி
††சுரதி னோடு சூர்மாள வுலகேழும்;
‡‡திகிரி மாதி§§ராவார திகிரி சாய வேதாள
திரளி னோடு பாறோடு கழுகாடச்-
செருவி னாடு $$வானீப கருணை மேரு வேபார
திருவி ராலி யூர்மேவு பெருமாளே. (10)

## 360. நன்றி மறவாமை

தானாத்தன தான தனதன
தானாத்தன தான தனதன
தானாத்தன தான தனதன தனதான

¶¶காமாத்திர மாகி யிளைஞர்கள்
வாழ்நாட்கொடு போகி யழகிய
காதாட்டிய பார இருகுழை யளவோடிக்-
கார்போற்றவ ழோதி நிழல்தனி
லார்வாட்கடை யீடு கனகொடு
***காலேற்றுவை வேலின் முனைகடை யமதூதர்;

---

* பரதம் ஆடி - 'பரதத்தை அடக்கி நடிப்பவர்' திருப்புகழ் 1177. பரதம்- கூத்து . "பாவமொ டராகம் தாளமிம் மூன்றும் பகர்வதாற் பரதம் என்றுரைப்பர்" (பரத-பாவ-14).

† கான் ஆடி என்பது - "காடுபேணிநின் றாடு மருதனே" சம்பந்தர் I-95-1. " கானிடை ஆடி " சம்பந்தர்- II-86-2.

‡ பூத -புகுத.

§ சுருதி யாடி தாதா- வேதாத்யயநஞ் செய்யும் பிரமன். 'சுருதியான்'- சம்பந்தர் III -118-5.

$ வி- மிகவும். ¶ துரக - அகல

** மேரு சுழல, வேலை தீ மூள, சூர் மாள :- " வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனும் மேருவுமே" - கந்தர் -அலங்-62.

" கடலழக், குன்றழச், சூரழ" ... கந்-அலங்-5.

(அடுத்த பக்கம் பார்க்க)

பரதம் (கூத்து ஆடுபவர்), காட்டில் ஆடுபவர், மேலானவர், மூப்பைக் கடந்தவர் ஆகிய பரமசிவனது ஞான இடத்தில் (நிலையிற்) புகும்படி அருள்புரிய மாட்டாயோ!

வேதங்களில் ஊடாடியுள்ள தந்தை (பிரமன்), மிகவும் பயந்து ஓடவும், மூதேவி அகன்று ஓடவும், கோபம் மிகவும் கொண்டு, வடக்கிலிருந்த மேரு

சுழன்று கலங்கவும், கடல் தீக் கொளுந்தவும், அழுகை கலந்து (அழுது) வாய் கிழிபடும்படி சப்தத்தோடு சூரன் இறக்கவும் - உலகங்கள் ஏழும்,

வட்டமாகிய திக்குகளை மறைக்கின்ற சக்கரவளாகிரியும் சாயவும், பேய்க் கூட்டங்களுடன், பருந்தும், கழுகும் ஆட

போரை நாடிச் சென்ற (அல்லது போரில் ஆடல் புரிந்த) பரிசுத்தமான கடப்ப மாலையை அணிந்தவனே! கருணை மேருவே! பெருமை வாய்ந்த திருவிராலியூரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(பரமஞான ஊர்பூத அருளாயோ)

## 360

மன்மத பாணமாகி இளைஞர்களுடைய வாழ்நாளைக் கொண்டுபோய், அழகிய காதில் ஆடுகின்ற கனத்த இரண்டு குழைகள் வரையும் ஓடிச்சென்று,

மேகம்போலத் தவழ்ந்து விளங்கும் கூந்தலின் நிழலில் நிறைந்து நின்று வாள்முனை போன்று, ஈடு, கனம் (கொண்டு)-வலிமை, பெருமை கொண்டதாய், கால் ஏற்று (கருநிறம் கொண்டு) அல்லது கொடுங் காற்றின் தன்மை கொண்டு, கூரிய வேலின் முனை நுனி போன்று யமதூதர்களும்

---

(முன் பக்கம் தொடர்ச்சி)

†† சுரதினோடு -சுரத்தினோடு; சப்தத்தோடு.

‡‡ திகிரி மாதிர ஆவார திகிரி- வட்டமாகிய திக்குகளை மறைக்கின்ற சக்ரவாளகிரி. §§ ஆவாரம்- மறைப்பு.

$$ வா னீப- வான் நீப.

¶¶காமாத்திரம்- காம அத்திரம்; மன்மத பாணம்.

*** கால்- கரு நிறம் ; 'கால்தோய் மேனி'

கம்பராமா- வானர-21.

ஏமாப்பற மோக வியல்செய்து
நீலோற்பல ஆசில் மலருட
னேராட்டவி நோத மிடும்விழி மடவார்பால்-

*ஏகாப்பழி பூணு மருளற
நீதோற்றிமு னாளு மடிமையை
யீடேற்றுத லாலுன் **வலிமையை** **மறவேனே;**

சீமாட்டியு மாய திரிபுரை
காலாக்கினி கோப பயிரவி
சீலோத்தமி நீலி சுரதிரி புவநேசை-

†சீகார்த்திகை யாய அறுவகை
மாதாக்கள்கு மார னெனவெகு
சீராட்டொடு பேண வடதிசை கயிலாசக்;

கோமாற்குப தேச முபநிட
வேதார்த்தமெய்ஞ் ஞான நெறியருள்
கோதாட்டிய ஸ்வாமி யெனவரு மிளையோனே-

கோடாச்சிவ பூஜை பவுருஷ
மாறாக்கொடை நாளு மருவிய
கோனாட்டுவி **ராலி மலை**யுறை பெருமாளே. (11)

---

*இது அருணகிரியாரின் வரலாற்றை விளக்கும்.

† "உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்க அவர் ஒருவ ரொரு வர்க்கு அவன் ஓர் புத்ர னானவன்"

- வேடிச்சி காவலன் வகுப்பு.

'மறுவறும் ஆரலாகு மாதர் மூவிருவர்' -

கந்த புரா. திரு அவதார - *116.*

(இக்கண்களின் கொடுமை முன் நாம் எவ்வளவு என்று தங்கள்) இறுமாப்பை இழக்க, மோகத்தன்மையை ஊட்டி நீலோற்பலத்தின் குற்றமில்லாத மலருடன் ஒப்பான கூத்து விநோதத்தைக் காட்டும் (அல்லது - மலர்போன்று அழகிய கூத்து வேடிக்கையைச் செய்யும்) கண்களை உடைய (பொது) மகளிரிடத்தே - (மகளிர் காரணமாக)-

நீங்காத பழியை (நிந்தை - அலர்ப்பேச்சைக்) கொண்டிருந்த மயக்கம் எனைவிட்டு நீங்க - நீ (அடியேன்) எதிரில் தோன்றி, முன்பு, ஆட்கொண்ட அடிமையாகிய என்னைக் கரையேற்றின (உய்யச் செய்த) காரணத்தால் உன் (அருள்) வலிமையை நான் **மறவேன்.**

சீமாட்டி (பெருமாட்டி) யாகிய திரிபுரை, காலாக்கினி (யுகாந்தகால நெருப்புப்போன்ற) கோபம் கொள்ளும் பயிரவி, சீல (நல் லொழுக்கமுள்ள) உத்தமி, நீலி (நீலநிற முடையவள்) விண் ஆதிய முப்புவனங்களுக்கும் ஈசுரி-

ஸ்ரீ கார்த்திகையாய அறுவகை மாதர்களும் குமாரன் என்று மிக்க செல்லப் பாராட்டுடன் (உன்னைப்) போற்ற (வளர்ந்து), வடதிசையில் உள்ள கயிலாயத்தில் வீற்றிருக்கும்-

தலைவராகிய சிவபிராற்கு உபதேசமாக உபநிடதம் வேதம் இவை தமக்குப் பொருளான மெய்ஞ்ஞான மார்க்கத்தை அருளி விளங்க வைத்த (அறியாமை என்னும் குற்றத்தை நீக்கின) குருமூர்த்தி எனப் பெயர் விளங்க வந்த இளையவனே!

நெறி தவறாத முறையிற் சிவபூசையும், ஆண்மையும் மறுத்தல் இல்லாத (இல்லை என்னாத) கொடையும் நாளும் பொருந்தியுள்ள (அத்தகைய பெரியோர்கள் வாழ்கின்ற) கோனாட்டைச் சேர்ந்த **விராலிமலையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(உன் வலிமையை மறவேனே)

## 361. யமனை விலக்கியருள்

தனாதனன தான தந்த தனாதனன தான தந்த
தனாதனன தான தந்த தனதான

கொடாதவனை யேபு கழ்ந்து குபேரனென வேமொ ழிந்து
குலாவியவ மேதி ரிந்து புவிமீதே-

எடாதசுமை யேசு மந்து எணாதகலி யால்மெ லிந்து
எலாவறுமை தீர அன்று னருள்பேணேன்;

சுடாததன மான கொங்கை களாலிதய மேம யங்கி
சுகாதரம தாயொ ழுங்கி லொழுகாமல்-

கெடாததவ மேம றைந்து கிலேசமது வேமி குந்து
*கிலாதவுட லாவி நொந்து மடியாமுன் ;

தொடாய்மறலி யேநி யென்ற சொலாகியது னாவ
ருங்கொல்
சொலேழுலக மீனு மம்பை யருள்பாலா-

நடாதசுழி மூல விந்து நளாவிவிளை ஞான நம்ப
†நபோமணி சமான துங்க வடிவேலா;

படாத குளிர் சோலை யண்ட மளாவியுயர் வாய்வ ளர்ந்து
பசேலெனவு மேத ழைந்து தினமேதான்-

விடாதுமழை மாரி சிந்த அநேகமலர் வாவி பொங்கு
**விராலிமலை** மீது கந்த பெருமாளே. (12)

---

* கிலாத - ஆற்றல் இல்லாத. † நபோமணி - சூரியன்.

# 361

கொடை என்பதே அறியாதவனைப்புகழ்ந்து, அவனைக் குபேரன்தான் என்று கூறி, அவனை மகிழ்ந்து துதித்து, வீணாகத் திரிந்து, இந்தப் பூமியின்மீது-

எடுக்க முடியாத பாரங்களை எல்லாம் சுமந்து (தாங்க முடியாத கவலைப்பாரங்களைத் தாங்கி), எண்ணுதற்கும் முடியாத கலிபுருடனது (கொடுமையால்) நான் மெலிந்து (வாடி), அதனால் உண்டான எனது சகல துன்பங்களும் தொலைய அன்று (முன்னாளிலேயே) உனது திருவருளைப் போற்றி விரும்பாது காலங்கழித்தேன்!

சுடாத்தனம் (பசும்பொன்) அனைய கொங்கைகளால் உள்ளம் மயக்கம் பூண்டு சுகாதாரமான (சுகத்தைத் தரக்கூடிய) வழியில் நெறியுடன் நடக்காமல்-

கெடுதலில்லாத தவநெறியும் மறைந்துபோக, துக்கமே மிகப்பெருகி, ஆற்றல் இல்லாத (வலிமையற்ற) உடலில் ஆவி நொந்து நான் இறந்துபடு முன்பாக - யமன் என் உயிரைப் பிரிப்பதற்குமுன் நீ தயை புரிந்து) அவன் முன்புதோன்றி,

"தொடாதே (இவனை) ஏ! யமனே நீ" என்ற சொல்லானது உனது நாவில் வருமோ! சொல்லியருளுக! ஏழுலகங்களையும் பெற்ற தேவி (உமை) அருள் பாலனே!

நட்டு வைக்கப்படாத சுழி (சுழிமுனை - தசநாடியுள் இடைக்கும் பிங்கலைக்கும் இடையில் உள்ளது), மூலம் (மூலாதாரம் முதலிய ஆறாதாரங்கள்), விந்து (சத்திபேதம்) ஆகிய இவைகளின் நள் (மத்தியில் உள்ள) ஆவியில் தோன்றி விளங்கும் ஞான நம்பனே (ஞான மூர்த்தியே)! சூரியனுக்குச் சமமான ஒளியை உடைய பரிசுத்தமான கூரிய வேலனே!

(வெயில் படாத) குளிர்ந்த சோலைகள் வானத்தை அளாவி உயர்ந்து வளர்ந்து பச்சென்ற நிறத்துடன் தழைத்து, நாள் தோறும்,

விடாமல் மழை பெய்வதால், பல (நீர்ப்பூக்கள்) தடாகங்களில் நிரம்பி மலரும் **விராலிமலை** மேல் விளங்கும் கந்தனே! அல்லது விராலிமலையை உகந்த (விரும்பும்) பெருமாளே!

(தொடாய் மறலியே நீ யென்ற சொல் உன் நா வருங்கொல்)

## 362. விலைமாதர் உறவு அற

தானா தனான தனத்த தத்தன
தானா தனான தனத்த தத்தன
தானா தனான தனத்த தத்தன தனதான

மாயா சொரூப முழுச்ச மத்திகள்
ஓயா வுபாய மனப்ப சப்பிகள்
வாணாளை யீரும் விழிக்க டைச்சிகள் *முநிவோரும்-

மாலாகி வாட நகைத்து ருக்கிகள்
†ஏகாச மீது தனத்தி றப்பிகள்
வாரீ ரிரீரென் முழுப்பு ரட்டிகள் வெகுமோகம்;

ஆயாத வாசை யெழுப்பு மெத்திகள்
ஈயாத போதி லறப்பி ணக்கிகள்
ஆவேச நீருண் மதப்பொ றிச்சிகள் பழிபாவம்-

ஆமா றெணாத திருட்டு மட்டைகள்
கோமாள மான குறிக்க ழுத்திகள்
ஆசார வீன **விலைத்தனத்திய** **ருறவாமோ;**

காயாத பால்நெய் தயிர்க்கு டத்தினை
ஏயா வெணாம லெடுத்தி டைச்சிகள்
காணாத வாறு குடிக்கு மப்பொழு துரலோடே-

கார்போலு மேனி தனைப்பி ணித்தொரு
போர்போ ‡லசோதை பிடித்த டித்திட
காதோடு காது கையிற்பி டித்தழு தினிதூதும்;

வேயா லநேக விதப்ப சுத்திரள்
சாயாமல் மீள அழைக்கு மச்சுதன்
விறான மாம னெனப்ப டைத்தருள் வயலூரா-

---

*முநிவோரும்... வாட பாட்டு 158 பார்க்க.

† ஏகாசம் - மேற் போர்வை.

‡ யசோதை - கண்ண பிரானை வளர்த்த தாய். கண்ணன் தயிர் பால் உண்டு அடியுண்டு அழுதது:-

"அளை தயிர் பாலுண்டு... கண்டு பிடிக்கப் பிடியுண்டு...
ஆப்புண்டிருந்தானால்.... அடியுண் டழுதானால்"
- பெரியாழ்வார் திருமொழி 2-10-5.

## 362

மாயையே உரு எடுத்தாற் போன்ற முழுச்சமர்த்திகள், முடிவே இலாத தந்திரம் நிறைந்த மனத்தொடு பசப்புபவர்கள் (இன்முகங் காட்டி ஏய்க்கின்றவர்கள்), வாழ்நாளை அறுத்த-ழிக்கும் கடைக் கண்ணினர் (கடை விழியினர்), முநிவர்களும்-

காம மயக்கத்தால் வாடும்படி சிரித்து அவர்களை உருக்க வல்லவர்கள், மேலே இட்ட ஆடையின்மீது கொங்கையைத் திறந்து காட்டுப்பவர்கள் (கொங்கை வெளிபெறக் காட்டுபவர்) வாருங்கள், இருங்கள், என்றெல்லாம் கூறும் முழு மோசக் காரிகள் மிக்க மோகத்தையும்,

ஆய்வதற்கு இடமில்லா வகையில் ஆசையையும் எழுப்பு கின்ற வஞ்சனை வாய்ந்தவர்கள், காசு கொடுக்காத போது மிகவும் ஊடுபவர்கள் (மாறுபட்டு நிற்பவர்கள்), கள் உண்டு (மதம்) மகிழ்ச்சி கொள்ளும் மனத்தினர்கள், பழி, பாவம்,

ஆகுமோ என்று எண்ணாத திருட்டு வீணிகள் (பயனற்றவர்கள்), வேடிக்கையான நகக்குறிகள் உள்ள கழுத்தை உடையவர்கள், ஆசாரக் குறைவுள்ளவர்கள், விலைக்குக் கொங்கையை அளிப்பவர்கள் - (ஆகிய) பொது மகளிரின் உறவு நல்லதா - (உறவு கூடாது என்றபடி)

காய்ச்சாத பால், நெய், தயிர்க்குடங்களைப், பொருந்திய மனத்துடன், சற்றேனும் யோசியாமல், எடுத்து இடைச்சி களுக்குத் தெரியாதபடி குடித்துக் கொண்டிருக்கும்போது, உரலுடன் (அவரது)

மேகம்போன்ற திருமேனியைக் கட்டி, ஒரு போரிடுவது போல அசோதை என்பவர்பிடித்து அடிக்க, அப்போது இரண்டு காதுகளையும் கைகளாற் பிடித்துக் கொண்டு அழுதவரும், இனிமையாக ஊதும்,

புல்லாங்குழல் கொண்டு அனேக விதமான பசுக் கூட்டங்களை (ஒன்றும்) தவறாதபடி (தளராத வண்ணம் அழைத்து வரும் அச்சுதனாம் (திருமாலைச்) சிறப்பு வாய்ந்த) மாமனாகக் கொண்டருளும் வயலூரனே!

வீணாள் கொடாத படைச்செ ருக்கினில்
சூர்மாள *வேலை விடுக்கும் அற்புத
வேலா **விராலிமலைத்த** லத்துறை பெருமாளே. (13)

## 363. ஞானோபதேசம் பெற

*தானான தான தானான தான*
*தானான தான தனதான*

மாலாசை கோப மோயாதெ நாளு
மாயா விகார வழியேசெல்-
மாபாவி †காளி தானேனு நாத
மாதா பிதாவு மினிநீயே;
நாலான வேத நூலாக மாதி
நானோதி னேனு மிலைவீணே-
நாள்போய் விடாம ‡லாறாறு மீதில்
**ஞானோபதேச மருள்வாயே;**
பாலா §கலார ஆமோத லேப
பாடீர வாக அணிமீதே-
பாதாள பூமி யாதார மீன
$பானீய ¶மேலை வயலூரா;
வேலா **விராலி** வாழ்வே **சமுக
வேதாள பூத பதிசேயே-
வீரா கடோர சூராரி யேசெ
வேளே சுரேசர் பெருமாளே. (14)

---

* வேலை - கடலில். † காளி - விடகுணமுள்ளவன்.

‡ ஆறாறு மீதில் - பாட்டு 294 பார்க்க.

§ கல்லாரம் - செங்குவளை. செங்குவளைப்பிரியர் - தணிகை முருகர்; ஆதலினால் கல்லார ஆமோத என்பதற்குக் கல்லார மலர்ப் பிரியனான கல்லார கிரியனே (தணிகை நாதனே) எனக் கொள்ளலாம்.

$ பானீயம் - தண்ணீர்.

¶ மேலை வயலூர் - திரிசிராபள்ளிக்கு மேற்கில் உள்ள வயலூர்.

(அடுத்த பக்கம் பார்க்க)

வீணாக நாள் கொடுக்கப்படாத (என்றும் போர் இருந்த) படை நம்மாட்டு உண்டு என்னும் அகந்தை கொண்டிருந்த சூரன் இறந்துபட (அவன் மாமரமாய் நின்ற) கடலிற் செலுத்திய அற்புத வேலாயுதத்தை ஏந்தியவனே! **விராலிமலை** தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(விலைத் தனத்தியர் உறவு ஆமோ)

## 363

மயக்கம், ஆசை, கோபம் இவை ஒய்வு இல்லாமல் எந்நாளும் (பிரபஞ்ச மாயா விகாரங்களின் வழியிலேயே) போகின்ற

மகா பாவி, விட குணம் உள்ளவன்தான் - நான் என்றிருந்த போதிலும் நாதனே! தாயும் தந்தையும் இனி எனக்கு நீதான்!

நான்கு வேத நூல்களையும், ஆகமங்கள் ஆகிய பிற நூல்களையும் நான் படித்ததும் இல்லை; வீணாக (என்)

(வாழ்) நாள் போய்விடாமல், முப்பத்தாறு தத்துவங்களுக்கு அப்பாற்பட்ட நிலையதான ஞானோபதேசத்தை அருள்வாயே!

பாலனே! செங்குவளைமலர்ப் பிரியனே! லேபபாடீர வாகு அணிமீதே (அணிமீதே பாடீர லேப வாகு) ஆபரணங்களின் மேலே சந்தனக் கலவைப் பூச்சு (அணிந்துள்ள) அழகனே!

பாதாளம், பூமி இவைகளுக்குப் பற்றுக்கோடாயுள்ளவனே! மீன் நிறைந்த (நீர் சூழ்ந்த) மேலை வயலூரனே!

வேலனே! **விராலிமலைச்** செல்வனே! திரளான பேய்க் கணங்கள், பூத கணங்களுக்குத் தலைவராம் சிவனது குமாரனே!

வீரனே! கொடுமை வாய்ந்த சூரனுக்குப் பகைவனே! செவ்வேளே! தேவேசப் பெருமாளே!

(ஞானோபதேசம் அருள்வாயே)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

** சமூக வேதாள பூத பதி சிவபிரான் - 'பூத பதியாகிய புராணமுனி' - சம்பந்தர் III - *80-5.*

'பூத கண நாதர்' - சம்பந்தர் - I -*66-2.*

'பேய்க்கணக் குழுவினான்' - சம்பந்தர் III - *48-3.*

## 364. திருவடி மறவாமை

தானன தந்தன தாத்தன தானன தந்தன தாத்தன
தானன தந்தன தாத்தன தனதான

மேக மெனுங்குழல் சாய்த்திரு கோக னகங்கொடு கோத்தனை
மேல்விழு கின்ற பராக்கினி லுடைசோர-

மேகலை யுந்தனி போய்த்தனி யேகர ணங்களு மாய்க்கயல்
வேல்விழி யுங்குவி யாக்குரல் *மயில்காடை;

கோகில மென்றெழ போய்க்கனி வாயமு துண்டுரு காக்களி
கூரவு டன்பிரி யாக்கல வியின்மூழ்கிக்-

கூடி முயங்கி விடாய்த்திரு பார †தனங்களின் மேற்றுயில்
கூரினு மம்புய **தாட்டுணை** **மறவேனே**;

மோகர துந்துமி யார்ப்ப ‡ **விராலி** விலங்கலின் வீட்டதில்
§ மூவுல குந்தொழு தேத்திட வுறைவோனே-

மூதிசை முன்பொரு காற்றட $மேருவை யம்பினில் வீழ்த்திய
மோகன ¶சங்கரி வாழ்த்திட மதியாமல்;

ஆக மடிந்திட வேற்கொடு சூரனை வென்றடல் போய்த்தனி
யாமையின் வென்றவ னாற்பிற கிடுதேவர்-

ஆதி **யிளந்தலை காத்தர சாள அவன்சிறை மீட்டவ
னாளு லகங்குடி யேற்றிய பெருமாளே. (15)

---

*மயில் காடை இவை புட்குரல் - பாட்டு 197 பார்க்க.

† 'தன பாரம்... மேவி மால் கூருகினும் உன் நீப சீர்பாதம் மறவேனே' - திருப்புகழ் 1054. ‡ விராலி விலங்கல் - விராலி மலை.

§ மூவுலகு - பூலோகம், பரலோகம், பாதாளலோகம். (அல்லது) பூமி, அந்தரம், சுவர்க்கம்; சுவர்க்கம் - மத்தியம் பாதாளம்.

$ மேருவை வீழ்த்தினது:- மேரு - கிரௌஞ்சம் என்றும் கொள்ளலாம். மேருவைச் செண்டாலடித்த திருவிளையாடலையும் கொள்ளலாம். (பாட்டு 3 பார்க்க). ' மேரு தூளெழ'- திருப்புகழ் 68 பார்க்க. 'சண்ட மேருக்கிரி யளைந்து வீழப் பொருத கதிர் வேலா' - திருப்புகழ் 869.

¶ சங்கரி - சங்கையுடைய அரி.

(அடுத்த பக்கம் பார்க்க)

## 364

மேகம் போன்ற கூந்தலைச் சாய்த்து, இரண்டு தாமரையன்ன கண்களைக்கொண்டு இழுத்துச் சேர்த்து, படுக்கையின்மேல் விழுகின்ற விளையாட்டில், ஆடை நெகிழ-

மேகலை (இடையணி)யும் தனியாக நீங்க, தனிப்பட்டு (ஒன்றுபட்டு) இந்திரியங்களும் இயங்க, (இந்திரியங்கள் ஒன்றுபட), மீன், வேல் போன்ற கண்களும் குவிய, குரலானது மயில், காடை,

குயில் என்று எழ (புட்குரல்கள் ஒலிக்க), சென்று கொவ்வைக்கனி போன்ற வாயிதழ் ஊறலை உண்டு உருகி மகிழ்ச்சி மிக, கூடவேயிருந்து, நீங்குதல் இல்லாத (எப்போதும்) சேர்க்கை (புணர்ச்சி இன்பத்தில்) முழுகி-

கூடித், தழுவிக், களைப்படைந்து இரண்டு பாரமுள்ள கொங்கைகளின் மேல் துயிலுதல் மிகக் கொண்டாலும், உனது தாமரைத் திருவடி யிரண்டையும் மறவேன்;

பேராரவாரத்துடன் பேரிகை பேரொலி செய்ய **விராலிமலையின்** திருக்கோயிலில் மூன்று உலகோரும் தொழுது போற்ற உறைபவனே!

வடதிசையில், முன்பு ஒருமுறை, மலையாகிய மேருவை (அம்பினால்) ஆயுதத்தால் வீழ்த்தின வசீகரனே! சங்கம் ஏந்திய திருமால் வாழ்த்தச், (சூரனைப்) பொருட் படுத்தாமற் சென்று (அவன்)

உடல் அழியும்படி வேல்கொண்டு அவனை (சூரனை) வென்று, (திக்கு விசயத்தில்) போர்க்குப் போய் (எங்கும்) குறைவுபடாதபடி பலரையும் வென்ற சூரனால் (சூரனுக்குப் பயந்து) ஓடின தேவர்களின்

தலைவனான இந்திரனுடைய (இளந்தலை) பிள்ளையாகிய சயந்தனைக் காத்து (அல்லது இந்திரனுக்கு எளிமை உண்டாகாதபடி அவனைக் காத்து), அரசாட்சி புரியும்படியாக அவன் ஆளும் விண்ணுலகைக் குடியேற்றி வைத்த பெருமாளே!

(உன் அம்புய தாட்டுணை மறவேனே)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

**இளந்தலை - எளிமை என்று பொருள்படும்: 'வீடுமன் இளைத்தான் இளந்தலை யுறாதபடி ஏகுமின்" (பாரத முதற்போர் - 59)

இளந்தலை இளமைப் பருவம்: இளம் பருவத்தினனான இந்திரன் மகன் சயந்தன் எனக் கொள்ளலாம். சிறையிடப்பட்ட சயந்தனை முருகவேள் சூரனிட்ட சிறையை நீக்கிக் காத்தனர்.

## 365. தரிசனம் பெற

தான தனதனன தான தனதனன
தான தனதனன தந்ததான

மோதி யிறுகிவட மேரு வெனவளரு
மோக முலையசைய வந்துகாயம்-

மோச மிடுமவர்கள் மாயை தனில்முழுகி
மூட மென அறிவு கொண்டதாலே;

காதி வருமியம தூதர் கயிறு கொடு
காலி லிறுகளனை வந்திழாதே-

காவ லெனவிரைய வோடி யுனதடிமை
**காண வருவதினி யெந்தநாளோ;**

*ஆதி மறையவனு மாலு முயர்சுடலை
யாடு மரனுமிவ †ரொன்றதான-

ஆயி யமலைதிரி சூலி குமரிமக
மாயி கவுரியுமை தந்தவாழ்வே;

சோதி நிலவுகதிர் வீசு மதியின் மிசை
தோய வளர்கிரியி னுந்திநீடு-

‡சோலை செறிவுளவி **ராலி நகரில்வளர்**
தோகை மயிலுலவு தம்பிரானே.(16)

---

*பிரமன் மறையவர்க்கு ஆதி என்பதை - "தீயோம்பும் மறை வாணர்க் காதியாம் திசைமுகன்" எனவரும் தேவாரத்தினும் காண்க - சம்பந்தர் - II-81-9.

†மூவரும் ஒன்றதான ஆயி: தேவியின் தலைமை
- பாட்டு 325 பார்க்க.

‡ 'சோலை செறியுமியல் வாத நகரில் வளர்' என்றும்,
'சோலை செறியுமியல் வாகை நகரில் வளர்' என்றும் பாடம்.

## 365

மேலெழுந்து, திண்ணிதாய், வடக்கிலுள்ள மேருமலை போல வளருவதாய், மோகத்தை ஊட்டுவதான, கொங்கை அசையும்படி வந்து (தங்கள்) உடல் கொண்டு (உடல் நலத்தைத் தந்து) -

மோசம் செய்கின்ற (பொது மகளிரின்) மாயையில் முழுகி, மூடத்தன்மை யென்னும்படியான அறிவைக் கொண்ட காரணத்தால்–

(உயிரைப்) பிரிக்க வரும் யமதூதர்கள் கயிறுகொண்டு என் காலில் அழுத்தமாகக் கட்டி என்னை வந்து இழுக்காமல்-

(அடியேனுக்குக்) காவலாக நீ விரைவாக ஓடி வந்து உன்னுடைய அடிமையாகிய (நான்) காணும்படி நீ வருவது இனி எந்த நாளோ!

ஆதிமறையவனாகிய பிரமனும், திருமாலும், பெரிய சுடலையில் ஆடும் அரனும் ஆக இவர் மூவரும் ஒன்றதான-

தாய், குற்றமற்றவள், முத்தலைச் சூலமேந்தினவள் குமரி, மகமாயி, கவுரி, உமை ஈன்ற செல்வமே !

சோதியாகிய ஒளிக் கிரணங்கள் வீசும் சந்திரன் மேலே தோயும்படி வளர்ந்துள்ள மலைமீது, உந்தி (ஆறும், அல்லது நீரும்) நீண்ட

சோலைகளும் நெருங்கியுள்ள **விராலி** நகரில் பொலிந்து வீற்றிருக்கும் தம்பிரானே! தோகை மயில்மேல் உலவும் தம்பிரானே!

(காண வருவதினி எந்த நாளோ!)

## விநாயகமலை

(இது பிள்ளையார் பட்டி, இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூருக்குக் கிழக்காய்க் குன்றக்குடிக்குப் போகும் வழியில் 5-மைல். கதிர் காமத்திலும் விநாயகமலை என்றிருப்பதாகத் தெரிகிறது.)

### 366. அருள்பெற

*தனதன தானா தனாதன தனதன தானா தனாதன*
*தனதன தானா தனாதன தனதான*

*சரவண ஜாதா நமோநம கருணைய தீதா நமோநம*
*சததள பாதா நமோநம அபிராம-*

*தருணக தீரா நமோநம *நிருபமர் வீரா நமோநம*
*†சமதள வூரா நமோநம ஜகதீச;*

*பரம சொரூபா நமோநம சுரர்பதி பூபா நமோநம*
*பரிமள நீபா நமோநம உமைகாளி-*

*பகவதி பாலா நமோநம இகபர மூலா நமோநம*
*பவுருஷ சீலா நமோநம* **அருள்தாராய்;**

*இரவியு மாகாச பூமியும் விரவிய தூளேற வானவ*
*ரெவர்களு மீடேற ‡ ஏழ்கடல் முறையோவென்-*

---

* 'நிருபம வீரா' என்றும் பாடம். † சமம்- போர்

‡ ஏழ்கடல் -உப்பு, கருப்பஞ்சாறு, கள், நெய், தயிர், பால், நன்னீர்க் கடல்கள்.

# 366

சரவண மடுவில் (நாணற் காட்டு மடுவில்) தோன்றியவனே உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; கருணை மேம்பட்டவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்கு கின்றேன்; (நூற்றிதழ்த்) தாமரை போன்ற திருவடிகளை உடையவனே உன்னை வணங்குகின்றேன்; அழகிய- (அல்லது அழகனே)-

இளமை விளங்கும் கதிர் ஒளியை உடையவனே! (அல்லது இளமை கொண்டுள்ள தீரனே) உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; ஒப்பிலா வீரனே (நிர் - உபம வீரா! அல்லது நிருப - அரசனே! அமர் வீரா - போர் வீரனே!), உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; போர்க்கள ஊரா (திருப்போரூரா) உன்னை வணங்குகின்றேன், வணங்கு கின்றேன்- உலகத்துக்கு ஈசனே!

பரம்பொருட் சொரூபனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், தேவர்களுக்குத் தலைவனாம் இந்திரனுக்கும் அரசனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; நறுமணம் வீசும் கடப்ப மலர் அணிந்தவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; உமை, காளி,

பகவதி- எனப்படும் பார்வதியின் குமரனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; இம்மைக்கும் மறுமைக்கும் மூலகாரணனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; ஆண்மை நிறைந்த பரிசுத்தனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன் - அருள் புரிவாயாக.

சூரியனும், ஆகாசமும், பூமியும் கலக்கும்படி தூசியேறி நிறைய, தேவர்கள் யாவரும் ஈடேற, எழுகடலும் (சூர்மாவைப் பிளக்க வந்த வேலின் வெப்பத்தைத் தாங்க முடியாமல்) முறையோ என்று -

*றிடர்பட மாமேரு பூதர மிடிபட வேதா னிசாசர*
*ரிகல்கெட மாவேக நீடயில் விடுவோனே;*

*[*]மரகத ஆகார ஆயனு மிரணிய ஆகார வேதனும்*
*[†]வசுவெனு மாகார ஈசனு மடிபேண-*

*மயிலுறை வாழ்வே* **விநாயகமலையுறை** *வேலா மகீதர*
*வனசர ராதார மாகிய பெருமாளே* (1)

---

## திருச்செங்கோடு

(இது தேவாரத்திற் கொடி மாடச் செங்குன்றூர் என வழங்கும். திருஞான சம்பந்த சுவாமிகளுடைய பாடல் பெற்றது. சேலம் மாவட்டம் சங்கரிதுர்க்கம் புகை வண்டி நிலையத்திற்குத் தென்கிழக்கு 6-மைல். கோயில் மலைமேல் இருக்கின்றது. இங்கே சுப்பிரமணிய சுவாமி சந்நிதி தனியாகவும் பெரிதாகவு மிருக்கின்றது. "செங்கோடனைச் சென்று கண்டுதொழ நாலாயிரங்கண் படைத் திலனே யந்த நான்முகனே" (கந்தரலங்காரம்-9) என சுவாமிகள் வியந்து துதித்துள்ளனர். மலை சிவந்த நிறமாயிருப்பதால் இதற்குத் "திருச்செங்கோடு எனப்பெயர் போந்தது. மேலை வீதியிலிருந்து பார்த்தால், மலை நாகம்போற் காணப்படுகின்றது. மலைக்கு நாககிரி என்றும் பெயர். 1181 ஆம் பாடலிற் " **கொங்கின் புஜக கோத்திரி** என்பதையுங் காண்க. அர்த்தநாரீசுரருடைய சந்நிதி விசேடமானது. மலையடிவாரத்தில் ஆறுமுகசுவாமி தேவிமாருடன் திருக்கோயில் கொண்டிருக்கின்றார். இதற்குத் தலபுராணமுண்டு.) பாடபேதப்படி 323-ஆம் பாடல் இத்தலத்துக்கு உரியதாம்.

---

[*]திருமால்- மரகத நிறம்- 'மரகத நாராயணன்' திருப்புகழ்-583. பிரமன்-பொன் நிறம்- 'பொன் நிற நான்முகன்'-சம்பந்தர்-III-7-9. ஈசன்-நெருப்பு உருவு-'அழல் மேனியவன்'- சம்பந்தன் -III-80-9. [†] வசு-அக்கினி.

வேதனைப்பட, மகா மேருமலை இடிபட்டுப் பொடி-படவே, அசுரர்களின் வலிமை கெட மிக்க வேகமுள்ள நெடு வேலைச் செலுத்தினவனே!

மரகதம் போன்ற (பச்சை நிற) உருவம் உள்ள ஆயன் (இடையன்) திருமாலும், பொன் உருவம் உள்ள பிரமனும், நெருப்பு உருவம் உள்ள ஈசனும் (உனது) திருவடியை விரும்பிப் போற்ற -

மயிலில் வீற்றிருக்கும் வாழ்வே **விநாயக மலையில்** வீற்றிருக்கும் வேலனே! பூமியைத் தாங்குபவனே! அல்லது-மலைகளுக்கு உரியவனே! அல்லது - மலையில் வாழ்பவர்களாகிய, (வனத்தில் சஞ்சரிப்பவர்களாகிய) வேடர்களுக்குப் பற்றுக் கோடாக விளங்கும் பெருமாளே!

(அருள்தாராய்)

## 367. அலைச்சல் அற

தந்தான தந்த தந்தான தந்த
தந்தான தந்த தனதான

அன்பாக வந்து உன்றாள் பணிந்து
ஐம்பூத மொன்ற நினையாமல்-

அன்பால் மிகுந்து நஞ்சாரு கண்க
ளம்போரு கங்கள் முலைதானும்;

கொந்தே மிகுந்து வண்டாடி நின்று
கொண்டாடு கின்ற குழலாரைக்-

கொண்டே நினைந்து மன்பேது மண்டி
குன்றா *மலைந்து அலைவேனோ;

மன்றாடி தந்த மைந்தா மிகுந்த
வம்பார் கடம்பை யணிவோனே-

வந்தே பணிந்து நின்றார் பவங்கள்
வம்பே †தொலைந்த வடிவேலா;

‡சென்றே யிடங்கள் கந்தா § எனும்பொ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்-

செஞ்சாலி கஞ்ச மொன்றாய் வளர்ந்த
செங்கோ டமர்ந்த பெருமாளே. (1)

---

* மலைதல் - ஒருவழிப்படாது நிற்றல்.

† தொலைந்த - தொலைத்த.

‡ இந்த அடி மிக்க அருமையான மனப்பாடஞ்செய்ய வேண்டிய 'மகுட' அடியாகும்.

§ எனும்பொ- எனும்பொழுது.

## திருச்செங்கோடு

## 367

அன்பாக வந்து உனது தாளைப் பணிந்து (மண், நீர், தீ, காற்று, வான் என்னும்) ஐம்பூதங்களும் ஒருவழிப்பட்டு உன்னை நினையாமல் -

அன்பு மிக்கு, விடம் நிறைந்த கண்கள், தாமரை மொட்டுகள் போன்ற கொங்கைகள்-

பூங்கொத்துக்கள் நிரம்பி வண்டுகள் விளையாடுகின்ற மகிழ்கின்ற கூந்தல், இவைகளைக் கொண்ட (பொதுமகளிரை)-

(மனத்திற்) கொண்டு நினைந்து, மன் (மிகவும்), பேது அறியாமை (அல்லது வருத்தம்) நிறைந்து, மனம் குன்றிப் போய் (சோர்வடைந்து) ஒரு வழிப்படாது அலைச்சல் உறுவேனோ!

சபையில் நடனம் புரியும் சிவபிரான் (கூத்தப்பிரான்) தந்த குமரனே! மிக்க வாசனை நிறைந்த கடப்ப மலரை அணிபவனே!

வந்து பணிந்து நின்ற (அடியார்களுடைய) பிறப்புக்களை (அல்லது பாவங்களைத்) தொலைக்கும் கூரிய வேலனே!

செல்லும் இடங்களில் (போகும் இடங்களில்) 'கந்தா' என்று நான் அழைக்கும்பொழுது, செவ்விய சேவலை ஏந்தி (அடியேன் முன்) வரவேணும்.

செந்நெற் பயிரும் (செந்நெல்லும்) தாமரையும் ஒன்றாக வளரும் திருச்செங்கோட்டில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மலைந்து அலைவேனோ!)

## 368. அருள்பெற

தந்தான தந்த தந்தான தந்த
தந்தான தந்த தனதான

பந்தாடி யங்கை நொந்தார் பரிந்து
பைந்தார் புனைந்த குழல்மீதே-
பண்பார் சுரும்பு பண்பாடு கின்ற
பங்கே ருகங்கொள் முகமீதே;
மந்தார மன்றல் சந்தார மொன்றி
வன்பாத கஞ்செய் தனமீதே-
மண்டாசை கொண்டு விண்டாவி நைந்து
மங்காம லுன்ற னருள்தாராய்;
கந்தா அரன்றன் மைந்தா விளங்கு
கன்றா முகுந்தன் மருகோனே-
*கன்றா †விலங்க லொன்றாறு கண்ட
கண்டா வரம்பை மணவாளா;
செந்தா தடர்ந்த கொந்தார் கடம்பு
திண்டோள் நிரம்ப அணிவோனே-
திண்‡கோ டரங்க §ளெண்கோ டுறங்கு
செங்கோட மர்ந்த பெருமாளே. (2)

---

* கன்றா - கோபித்து.

† விலங்கல் ஒன்று ஆறு கண்ட- ஒரு மலையை வழிகண்ட-1+6=7 பாடல் 374 பார்க்க. அருணகிரிநாதர் வரலாறு பக்கம் 54.

‡ கோடரங்கள்- குரங்குகள். § எண்கு- கரடி.

## 368

பந்து விளையாடி அழகிய கை நொந்துள்ள (மாதர்கள்) ஆசை வைத்து பசுமை வாய்ந்த (புதிய) பூமாலையை அணிந்த கூந்தல் மேலும் -

பண்பு (செய்கை அல்லது அழகு) நிறைந்த வண்டுகள் பண் (இசை) பாடுகின்ற தாமரைபோன்ற முகத்தின் மீதும் -

மந்தாரம் என்கின்ற தெய்வ விருட்சத்தின், வாசனையைக் கொண்ட சந்தனம், முத்துமாலை இவை சேர்ந்தனவாய், கொடிய பாதகங்களுக்கு இடம் தரும் கொங்கைகளின் மீதும் -

மூண்டு நிரம்பி எழும் ஆசையைப் பூண்டு, விண்டு ஆவி (ஆவி- உயிர் பிரிவது போல) நைதல் உற்று (வருந்தி) விளக்கம் குறையாமல் (சோர்வு அடையாமல்) உன்னுடைய திருவருளைத் தந்தருளுக .

கந்தனே! அரன் (சிவன்) மைந்தனே! விளங்குபவரும் கன்றுதல் (முதிர்தல், கோபித்தல்) இல்லாதவருமான முகுந்தன் (அல்லது, கன்று + ஆ கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் ஆன பிரியமுள்ள முகுந்தன்) மருகோனே!

கன்றா (கன்றி - கோபித்து), விலங்கல் (மலை) ஒன்றை கிரவுஞ்சத்தை ஆறு கண்ட (வழி திறக்கச் செய்த, (தொளைத்த) கண்டா) வீரனே! தேவ மகளாம் தேவ சேனையின் மணவாளனே;

செவ்விய பூந்தாது நிரம்பிய பூங்கொத்துக்கள் நிறைய-வுள்ள கடப்ப மாலையைத் திண்ணிய தோள் நிரம்ப அணிபவனே!

திண்ணிய (வலிய) குரங்குகள் கரடியுடன் தூங்குகின்ற திருச் செங்கோட்டில் வீற்றிருக்கின்ற பெருமாளே !

(ஆவி நைந்து மங்காமலுன் றன் அருள்தாராய்)

## 369. திருவடி மறவாதிருக்க

தந்தான தந்த தந்தான தந்த
தந்தான தந்த தனதான

*வண்டார் †மதங்க ளுண்டே மயங்கி
வந்தூரு ‡கொண்ட லதனோடும்-
வண்காம னம்பு தன்§கால் மடங்க
வன்போர் மலைந்த விழிவேலும்;
கொண்டே வளைந்து கண்டார் தியங்க
நின்றார் குரும்பை முலைமேவிக்-
கொந்தா ரரும்பு நின்தாள் மறந்து
குன்றாம லுன்ற னருள்தாராய்;
பண்டாழி சங்கு கொண்டாழி தங்கு
பண்போ னுகந்த மருகோனே-
பண்சார நைந்து நண்போது மன்பர்
பங்காகி நின்ற குமரேசா;
சென்டாடி யண்டர் கொண்டாட மன்றில்
நின்றாடி சிந்தை மகிழ்வாழ்வே-
செஞ்சாலி மிஞ்சி மஞ்சாடு கின்ற
செங்கோ டமர்ந்த பெருமாளே. (3)

---

* வண்டார்- வண்டு- திணைவழுவமைதி- நன்னூல் சூ. 379.

† மதம்- தேன், 'மதம் கமழ் கோதை'- சிந்தாமணி- 2584.

‡ கொண்டல்- மேகம்போன்ற குழல்.

§ கால்- செவ்வி 'கால்மலியும் நறுந்தெரியல்' - பு.வெ.8, 18.

## 369

வண்டு தேன் உண்டு மயக்கம் கொண்டு (மயக்கத்துடன்) வந்து மொய்க்கின்ற மேகம் போன்ற கூந்தலுடன் -

வளப்பம் பொருந்திய மன்மதனுடைய (மலர்ப்) பாணத்தின் கால் மடங்க (செவ்வி) குறைய (செவ்வியையும் குறைக்கவல்ல) வலிய போரை எதிர்த்த கண் என்னும் வேற்படைய்யயும் -

கொண்டு வளைந்து கண்டவர்கள் சஞ்சலம் அடைய நிற்கின்றவர்களாம் (பொது மகளிரின்) தென்னங் குரும்பை ஒத்த கொங்கையில் விருப்பம் வைத்து (மனம் பொருந்தி) -

பூங்கொத்துக்கள் நிரம்பித் தோன்றும் உனது திருவடியை மறந்து நான் அழிவு அடையாமல் உனது திருவருளைத் தந்தருளுக.

முன்பு முதலே, சக்கரம், சங்கு இவைகளுடன் கடலில் தங்கும் (துயில் கொள்ளும்) தன்மை வாய்ந்த திருமால் மகிழும் மருமகனே!

இசை பொருந்தவும், உள்ளம் நெகிழவும், நண்பை (அன்பான துதிகளை) ஓதும் அன்பர்களின் பங்கில் நிற்கும் குமரேசனே!

(அசுரர்களைச்) சிதற அடித்துத் தேவர்கள் கொண்டாடச் சபையில் நின்று ஆடும் (சிவபிரான்) உள்ளத்தில் மகிழ்கின்ற செல்வமே!

செந்நெல் (மிஞ்சி - மிஞ்ச) மிகுந்து வளர மேகங்கள் சஞ்சரிக்கின்ற (திருச்) செங்கோட்டில் வீற்றிருக்கும் பெருமாளே!

(நின்தாள் மறந்து குன்றாமல் உன்றன் அருள்தாராய்)

## 370. அடியரொடு கூட

தனதன தனதன தனதன தனதன
தந்தான தந்த தனதான

கரையற வுருகுதல் தருகயல் விழியினர்
கண்டான செஞ்சொல் மடமாதர்-

கலவியில் முழுகிய நெறியினி லறிவுக
லங்காம யங்கும் வினையேனும்;

உரையையு மறிவையும் உயிரையு முணர்வையும்
உன்பாத கஞ்ச மலர்மீதே-

உரவொடு புனைதர நினைதரு மடியரொ
டொன்றாக என்று பெறுவேனோ;

வரையிரு துணிபட வளைபடு சுரர்குடி
வந்தேற இந்த்ர புரிவாழ-

மதவித கஜரத துரகத பததியின்
வன்சேனை மங்க முதுமீன;

திரைமலி சலநிதி முறையிட நிசிசரர்
திண்டாட வென்ற கதிர்வேலா-

ஜெகதல மிடிகெட விளைவன வயலணி
*செங்கோ டமர்ந்த பெருமாளே. (4)

---

* 'செம்பே டமர்ந்த பெருமாளே' என்றும் சில பிரதிகளிலிருக்கின்றது. செஞ்சிக்கு மேற்கு 7-மைல் தூரத்தில் உள்ளது செம்பேடு.

## 370

எல்லை கடந்து உருகும்படிச் செய்யும் மீன் போன்ற கண்ணினர், கற்கண்டுபோன்ற செவ்விய சொல்லினராகிய மடப்பம் பொருந்திய மாதர்களின்-

சேர்க்கை யின்பத்தில் முழுகிய வழியில் அறிவுகலங்கி, மயங்கும் வினைக்கு ஈடான நானும்-

(எனது) சொற்களையும், (எனது) அறிவையும், (எனது) உயிரையும், (எனது) உணர்வையும் உனது திருவடித் தாமரை மலர்மேல்-

உறுதியுடன் பொருந்த வைக்க, (உன்னை) நினைக்கின்ற அடியார்களுடன் ஒன்றாம்படி கூடும்படியான பாக்கியத்தை என்று பெறுவேனோ!

மலை (கிரௌஞ்சம்) இரண்டு கூறுபட, வளைபடு (வளைதல் பட்ட - மனம் சோர்வு பட்டிருந்த) தேவர்கள் குடி புகுந்து ஏற, தேவந்திரனது பொன்னுலகம் வாழ,

மதம் பல கொண்ட யானை, தேர், குதிரை, பதாதி (காலாட்படை) இவை கொண்ட பலத்த சேனை அழிபட, பழமை கொண்ட மீன்கள் உள்ள

அலை நிறைந்த கடல் அலறி முறையிட, அசுரர்கள் திண்டாட்டம் கொள்ள, வெற்றிபெற்ற ஒளிவேலனே!

பூதலத்தின் மிடி (தரித்திரம்) கெடும்படியான விளைச்சல் கள் உள்ள வயல்கள் சூழ்ந்த (வயல்கள் அலங்கரிக்கும்) திருச்செங்கோட்டில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அடியரொ டொன்றாக என்று பெறுவேனோ)

## 371. ஈதற்குண மில்லாதாரைப் பாடும் குணம் ஒழிய

தனந்தாத் தனந்தாத் தனந்தாத் தனந்தாத்
தனந்தாத் தனத்தம் தனதான

இடம்பார்த் திடம்பார்த் திதங்கேட் டிரந்தேற்
றிணங்காப் பசிப்பொங் கனல்மூழ்கி-

இறுங்காற் கிறுங்கார்க் கிரும்பார்க் குநெஞ்சார்க்
கிரங்கார்க் கியற்றண் டமிழ்நூலின்;

உடம்பாட் டுடன்பாட் டியம்பாத் தயங்காத்
துளங்காத் திடப்புன் கவிபாடி-

ஒதுங்காப் பொதுங்காப் பதுங்காப் புகன்றேத்
துறும்பாற் *குணக்கன் புறலாமோ;

†கடந்தோற் கடந்தோற் றறிந்தாட் கருந்தாட்
கணைந்தாட் கணித்திண் புயமீவாய்-

‡கரும்போற் கரும்போர்க் குளங்காட் டிகண்டேத்
து செங்கோட் டில்நிற்குங் கதிர்வேலா;

அடைந்தோர்க் குணந்தோர்க் களிந்தோர்க் கமைந்தோர்க்
கவிழ்ந்தோர்க் குணற்கொன் றிலதாகி-

அலைந்தோர்க் குலைந்தோர்க் கினைந்தோர்க் கலந்தோர்க்
கறிந்தோர்க் களிக்கும் பெருமாளே. (5)

---

* குணக்கு - குணத்துக்கு. † கடம் தோல் கடம்

தோற்ற- மத யானை காட்டில் எதிர்ப்பட

‡ கரும்போற்கு அரும்போர் குளம் காட்டி - மன்மதனுக்கு அரிய போராக நெற்றிக்கண் காட்டிய பரமசிவன்.

## 371

(எந்த இடத்திற் போனால் (எவரிடத்திற்போனால்) பணம் கிட்டும் என்று) இடம் பார்த்து , இடம் பார்த்து, இதமான மொழிகளை அவர்கள் கேட்கும்படிச் சொல்லி, இரத்தல் தொழிலை மேற்பூண்டு, அத்தகைய தொழிலுக்கு மனம் பொருந்தி, பசியாகிய பொங்கி யெழுகின்ற நெருப்பில் மூழ்கி-

இறும்-கால்-கு (அழிந்து போகும் காலத்திற் கூட) உள்ளம் உறுதி அடையாதவரிடம், இரும்பு போன்ற கடின நெஞ்சத்தவரிடம், இரக்கம் இல்லாதவரிடம், (இயல் தண் தமிழ் நூலின்) தகுதி பெற்றுள்ள குளிர்ந்த தமிழ் நூல்களில்

உடம் பாட்டுடன் (மன ஒருமையுடன்) பாடல்களை அமைத்து, தயங்கி (வாட்டமுற்று), துளங்கி (துளக்கம் கொண்டு - மனக்கலக்கம் கொண்டு), திடத்துடன் புல்லிய பாடல்களைப் பாடி-

(அச்சமுற்று) ஒதுங்கியும் (அல்லது ஓதும் காப்பு- சொல்லப்பட்ட காவல்களுக்கு) ஒதுங்கா- ஒதுங்கியும் பதுங்கியும் (போய்த்) தான் பாடிய பாடல்களைச் சொல்லிப் புகழும் இயல்பினைக் கொண்ட குணத்துக்கு அன்பு வைக்கலாமா (இயல்பினைக் கொண்ட குணத்தை நான் (ஒதுக்காது) கொள்ளலாமா -கூடாது என்றபடி).

மத யானை காட்டில் எதிர்ப்பட அறிந்தவளாய் (கண்டவளாய்) (உனது) அருமையான திருவடிகளை அணைந்த அவளுக்கு (வள்ளிக்கு) அழகிய திண்ணிய (உனது) திருப்புயங்களை (அணைதற்குத்) தந்தவனே!

கரும்பு வில்லை ஏந்திய மன்மதனுக்கு அரிய போராக குளம் (நெற்றிக்) கண் காட்டி (காட்டினவனான சிவபிரான்) கண்டு போற்றும் திருச் செங்கோட்டில் விளங்கி நிற்கும் ஒளி வேலனே!

(உன்னை) அடைந்தவர்க்கும், மெலிந்தவர்க்கும், கருணை- யுள்ளம் படைத்தவர்க்கும், மன அமைதி கொண்டவர்க்கும், பக்தியால் உள்ளம் நெகிழ்ந்தவர்க்கும், உண்பதற்கு ஒன்றும் இல்லாதவராகி-

அலைகின்றவர்க்கும், நிலை குலைந்து அலைபவர்க்கும், கவலையுற்று வருந்துபவர்க்கும், துன்பம் உற்றவர்க்கும், ஞானிகட்கும் , திருவருள் பாலிக்கும் பெருமாளே!

(புன்கவி பாடி ஏத்து குணக்கு அன்புறலாமோ)

## 372. மனத்தில் தீமை அற

தனத்தந் தானன தனத்தந் தானன
தனத்தந் தானன தனதான

கலக்குங் கோதற வடிக்குஞ் சீரிய
கருப்பஞ் சாறெனு மொழியாலே-

கருத்தும் பார்வையு முருக்கும் பாவிகள்
கடைக்கண் பார்வையி லழியாதே;

விலக்கும் *போதக மெனக்கென் றேபெற
விருப்பஞ் சாலவு முடையேனான்-

வினைக்கொண் டேமன நினைக்குந் தீமையை
**விடற்கஞ் சேலென அருள்வாயே;**

அலைக்குந் தானவர் குலத்தின் சேனையை
அறுக்குங் கூரிய வடிவேலா-

அழைத்துன் சீரிய கழற்செந் தாமரை
யடுக்கும் போதக முடையோராம்;

---

* 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்னும் பொய்யில் புலவர் திருவாக்குக்கு ஏற்ப, யாரும் பெறாத ஞானத்தையும், வாக்கு வன்மையையும் தாம் பெற வேண்டும் என்ற ஆசை கொண்டவர் அருணகிரியார்.

" போதகம் எனக் கென்றே பெற விருப்பம் சாலவும் உடையேன் நான்" என்று இந்தப் பாடலிலும், "எனக்கென்றப் பொருள் தங்க, தொடுக்கும் சொல் தமிழ் தந்து ஆள்வாய்" என 33-ஆம் பாடலிலும் கூறுவதைக் காண்க.

"சீருந் திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக் கீழ் ஆரும் பெறாத அறிவு பெற்றேன். பெற்றது ஆர்பெறுவார் உலகில்" என்னும் திருப்பல்லாண்டு இங்கு உணர்ந்து ஒப்பிடத் தக்கது.

(அடுத்த பக்கம் பார்க்க)

# 372

கலக்கத்தைத் தரும் சக்கைகள் நீங்க, வடித்து எடுக்கப்பட்ட சிறப்பான கரும்பின் சாறு என்று சொல்லத்தக்க மொழியால் (பேச்சினால்)

கருத்தையும், நோக்கத்தையும் உருக்குகின்ற பாவிகளாம் (பொது மகளிரின்) கடைக்கண் நோக்கத்தில் (நான்) அழிவு உறாமல் -

(அத்தகைய மயக்கத்தை) விலக்கவல்ல ஞானோபதேசத்தை எனக்கு என்றே பெற - (பிறருக்குக் கிட்டாத வகையில் நான் ஒருவனே சிறப்பாகப் பெற்று விளங்க) ஆசை மிகவும் கொண்டுள்ள நான்-

(ஊழ் ) வினையின் பயனாக மனத்தில் நினைக்கின்ற தீய குணங்களை விட்டு உய்யும் பொருட்டு, நீ "அஞ்சல்" எனக் கூறி(ப் புரந்து) அருள்வாயாக .

(தேவர் முதலானோரை) அலைத்து வந்த அசுரர்கள் குலத்துச் சேனைகளை அறுத்த கூரிய வடிவேலனே!

அழைத்து உனது சீரிய திருவடிச் செந்தாமரைகளை அடுத்துள்ள (பற்றியுள்ள) ஞானத்தை உடையவர்களாகிய

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

அருணகிரியாரும் அத்தகைய ஞான போதகத்தைப் பெற்றார் என்பது- " கடத்திற் குறத்தி பிரான் அருளால், கலங்காத சித்தத்திடத்திற் புணையென யான் கடந்தேன் காம சமுத்திரமே" என வரும் கந்தரலங்காரத்தாலும் (29), "பிமரங்கெட மெய்ப் பொருள் பேசியவா" என்னும் அநுபூதியாலும் (8) விளங்கும்.

சிலர்க்கன் றேகதி *பலிக்குந் தேசிக
திருச்செங் கோபுர வயலூரா-
திதிக்கும் பார்வயின் மதிப்புண் டாகிய
திருச்செங் கோடுறை பெருமாளே. (6)

## 373. கண் பார்த்தருள

தந்த தாத்தத் தனத்தந் தாத்தத்
தந்த தாத்தத் தனத்தந் தாத்தத்
தந்த தாத்தத் தனத்தந் தாத்தத் தனதான

துஞ்சு கோட்டிச் சுழற்கண் காட்டிக்
கொங்கை நோக்கப் பலர்க்குங் காட்டிக்
கொண்ட ணாப்பித் துலக்கஞ் சீர்த்துத் திரிமானார்-
தொண்டை வாய்ப்பொற் கருப்பஞ் சாற்றைத்
தந்து சேர்த்துக் கலக்குந் தூர்த்தத்
துன்ப வாழ்க்கைத் தொழிற்பண் டாட்டத் துழலாதே;
†கஞ்சம் வாய்த்திட் டவர்க்குங் கூட்டிக்
கன்று மேய்த்திட் டவர்க்குங் கூற்றைக்
கன்ற மாய்த்திட் டவர்க்குந் தோற்றக் கிடையாநீ-
கண்டு வேட்டுப் பொருட் கொண்டாட்டத்
தின்ப வாக்யத் தெனக்குங் கேட்கத்
தந்து காத்துத் திருக்கண் சாத்தப் பெறுவேனோ;

---

* பலிக்கும்- பாலிக்கும். † இந்த அடி மனப்பாடஞ் செய்ய வேண்டிய அழகிய அருமை மகுடமாம் அடி.

† "கஞ்சம் வாய்த்தவர் கன்று மேய்த்தவர் கொன்று கூற்றுவர்"
கன்றமாய்த்தவர் கண்ட நாட்டிய மன்று காட்டிய கந்தவேளே"

அருட்புகழ் 24-1-54

சிலருக்கு அப்பொழுதே (தாமதமின்றிக்) கதி அளிக்கும் (வீடு பேறு அருளும்) குருமூர்த்தியே! அழகிய, செவ்விய கோபுரம் வாய்ந்துள்ள வயலூரனே!

(நீ) காத்தளிக்கும் (இப்) பூமி யிடத்தே மதிப்பு (சிறப்பு) ஓங்கி விளங்கும் திருச் செங்கோட்டில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தீமையை விடற்கு அஞ்சேல் என அருள்வாயே).

## 373

சோர்வு உற்றது போலச் சுழற்கண் காட்டி (கண்ணைச் சுழற்றிக் காட்டி), கொங்கைகள் தெரியும்படி பலருக்கும் காட்டி, அழைத்துக் கொண்டு போய் ஏமாற்றி, விளக்கம் (தங்கள் பிரதாபம் - கீர்த்தி) சிறப்புடன் ஓங்கத் திரிகின்ற மாதர்களின்-

கோவைக் கனி போன்ற வாயிதழின் கரும்பின் சாரம் போன்ற ஊறலைத் தந்து அணைத்துச் சேரும் கொடிய துன்ப வாழ்க்கைத் தொழிலாகிய பழைய ஆட்டங்களிற் சுழன்று திரியாமல்-

தாமரையில் வீற்றிருக்கும் பிரமனுக்கும், ஒன்று சேரச் செய்து பசுவின் கன்றுகளை மேய்த்திட்ட திருமாலுக்கும், யமன் வாட்டமுற்று மாயும்படி (இறக்கும்படி செய்த) சிவபிரானுக்கும் காண்பதற்குக் கிடையாத நீ -

என்னைக் கண்டு (நான் ஒருவன் இருக்கின்றேன் என்பதை அறிந்து), என்மீது விருப்பம் வைத்து, பொருட் கொண்டாட்டத்து (கொண்டாடத்தக்க பொருள் அமைந்த) இன்ப உபதேச வாக்கியத்தை அடியேனும் கேட்டு உணரும்படி போதித்துக் காத்து உனது திருக்கண்ணோக்கம் அடியேன் மீது படும்படியான பாக்கியத்தைப் பெறுவேனோ!

வஞ்ச மாய்ப்புக் கொளிக்குஞ் *சூற்கைத்
துன்று சூர்ப்பொட் டெழச்சென் றோட்டிப்
பண்டு† வாட்குட் களிக்குந் தோட்கொத்
துடையோனே;

வண்டு பாட்டுற் றிசைக்குந் தோட்டத்
தண்கு ராப்பொற் புரக்‡கும் பேற்றித்
§தொண்டர் கூட்டத் திருக்குந் தோற்றத்
திளையோனே;

கொஞ்சு வார்த்தைக் கிளித்தண் சேற்கட்
குன்ற வேட்டிச் சியைக்கண் காட்டிக்
கொண்டு வேட்டுப் புனப் $பைங் காட்டிற்
புணர்வோனே-

கொங்கு லாத்தித் தழைக்குங் காப்பொற்
கொண்ட லார்த்துச் சிறக்குங் காட்சிக்
கொங்கு நாட்டுத் திருச்செங் கோட்டுப்
பெருமாளே. (7)

---

* சூல் -சூலம். † வாளாலும் சூரனை வெட்டினார் என்பது; " சூர் தூளாய் வீழ ... சீரா வாலே வாளாலே வேலாலே சேதித்திடும் வீரா -திருப்புகழ் 1045.

‡ கும்பு ஏற்றி - கும்பு கூட்டி, § ' ஏத்துவாரவர் பலர் கூட நின்ற குழகனார்' - சம்பந்தர் III-93-6. $ பைங்காட்டிற் புணர்ந்தது; "கன்னி தனையோர் கடிகா வினிற்கலந்து"

- கந்த புராணம் வள்ளி திருமணம்- 115.

வஞ்சகமாகப் புகுந்து ஒளிக்கும் சூல மேந்திய கையினனாய் நெருங்கிய சூரன் அழிபடும்படி சென்று அவனை ஓட வைத்து, முன்பு, வாளாயுதத்தைச் செலுத்திக் களிப்புற்ற (பன்னிரு) கைத் தோள் கொத்தை உடையவனே!

வண்டு பாடல் பாடி இசை எழுப்பும் தோட்டத்தில் உள்ள குளிர்ந்த குராமலர் சூடிய (பொன்-புர) அழகிய சரீரத்தனே! (அல்லது-பொற்பு-உர-அழகிய மார்பனே)! கும்பு கூட்டி அடியார் கூட்டத்திலிருந்து காட்சி யளிக்கும் இளையவனே!

கொஞ்சும் சொற்களை உடைய கிளியைக், குளிர்ந்த சேல்மீன் போன்ற கண்ணைக் கொண்ட (வள்ளி) மலை வேடப் பெண்ணைக், கண் காட்டி அழைத்துக் கொண்டு போய் அவளை விரும்பித் தினைப்புனத்துக்கு அடுத்த பசுங்காவில் அணைந்தவனே!

வாசனையை வீசி உலவச் செய்து தழைத்து நிற்கும் சோலைகளில் அழகிய மேகங்கள் நிறைந்து சிறக்கும் காட்சியைக் கொண்ட கொங்குதேசத்தில் உள்ள திருச்செங்கோட்டுப் பெருமாளே!

*(திருக்கண் சாத்தப் பெறுவேனோ)*

## 374. முருகா என ஓத - முத்தி பெற

தானனந் தானதன தானனந் தானதன
* * * * தந்ததான

*நீலமஞ் சானகுழல் மாலைவண் டோடுகதி
நீடுபந் தாடுவிழி யார்பளிங் கான†நகை
நீலபொன் சாபநுத லாசையின் தோடசையு
நீள்முகந் தாமரையி னார்மொழிந் தாரமொழி
நேர்சுகம் போலகமு கானகந் தாரர்புய
‡நேர்§சுணங் Xகாவி 0கிளை யோர்சிறந் தார்மலைமி
ரண்டுபோல-

நீளிபங் கோடிளநிர் தேனிருந் தாரமுலை
நீடலங் காரசர மோடடைந் தார்மருவி
நீள்மணஞ் $சாறுபொழி யாவளம் போதிவைமி
¶னீலவண் டேவியநல் காம**னங் காரநிறை
நேசசந் தான††அல்குல் காமபண் டாரமுதை
நேருசம் போகரிடை நூலொளிர்ந் ‡‡தாசையுயிர்
சம்பையா§§ரஞ்;

---

* 354 ஆம் பாடல் போலக் கேசாதிபாத வருணனையைக் கொண்டன முதல் 3 அடிகள். நீலம் - கறுப்பு. " செங்கை நீலக் குஞ்சி நீங்கா தாகலின்" - மணிமே - 22-154.

† நகை - பல் - 'நிரை முத்தனைய நகை' - மணிமே - 20-49.

‡ நேர் - நேர்ந்த. § சுணங்கு - தேமல்.

X ஆவி - வாசனை. 0 கிளை - மூங்கில்.

$ சாறு பொழி அ வள்ளம் எனப்பிரிக்க: வள்ளம் - கிண்ணம்.

¶ நீல வண்டு - நீலோற்பலக் கணை; வண்டு - அம்பு. ' வேள்கர வண்டே' - வெங்கைக்கலம்பகம். நீலோற்பல பாணம் - கொல்லும் குணத்தது பாட்டு 19 பார்க்க.

** அங்காரம் - ஆங்காரம்: இறுமாப்பு.

(அடுத்த பக்கம் பார்க்க)

# 374

கரிய மேகம் போன்ற கூந்தலில் உள்ள மாலையில் வண்டுகள் மொய்க்கின்ற நிலையும், நீண்ட நீளமுள்ளதாய்ப் பந்து ஆடுவது போல அங்கும் இங்கும் புரள்கின்ற கண்களை உடையவர்கள், பளிங்குபோல வெண்ணிறத்த பற்களும், கறுத்த அழகிய வில் போன்ற புருவமும், ஆசையின் (பொன்னாலாகிய) தோடு என்னும் அணிகலன் அசைகின்ற ஒளி கொண்ட முகம் என்னும் தாமரையும், விளங்குபவர்கள், பேசி நிறையும் பேச்சுக்கள் (நேர் சுகம் போல - சுகம்போல நேரும்) கிளியின் மொழியை நிகர்ப்பவர், கமுகை ஒக்கும் கந்தாரர் (கந்தரத்தினர்) கழுத்தினர் தோள்கள் பொருந்திய தேமலொடு, வாசனை கொண்டு மூங்கிலின் அழகைக் கொண்ட சிறப்பினர்; மலை இரண்டு போலவும்,

நீண்ட யானைக் கொம்பு, இளநீர், தேன் போன்று இனிக்கும் முத்து மாலை அணிந்த கொங்கையர், நீண்ட, அலங்காரமான, (கண்ட) சரம் - கழுத்து - அணியோடு கூடினவர்கள், பொருந்தி மிக்க நறுமணச் சாற்றினைப் பொழிகின்ற (கலவைச் சந்தனம் உள்ள) அந்தவள்ளம் கிண்ணம் போன்ற கொங்கையர், மலர்களுள் (காமபாண மலர்களுள்) நீலோற் பலப் பாணத்தை ஏவின நல்ல மன்மதனது இறுமாப்பு நிறைந்துள்ள அன்புக்கு இடமானதும், சந்ததியைத் தருகின்றதுமான அல்குல் என்கின்ற காம நிதியாம் அமுதத்தை உதவும் சம்போகத்தினர் (புணர்ச்சி அனுபவத்தைத் தருபவர்); இடையானது நூல் போல நுண்ணியதாய், விளங்கி, திக்குகளில் வாய்விட்டு மின்னும் மின்னல் போன்றவர்கள், அழகு

---

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

†† காம பண்டார அல்குல் (திருப்புகழ் 619), போக பண்டாரபணி (திருப்புகழ் 390)

## ஆசை உயிர் சம்பையார் - திக்குக்களில் வாய்விட்டு மின்னும் மின்னல் போன்ற இடையை யுடையவர்கள்.

§§ அம்சாலு - அழகு நிறைந்த.

சால்*பொன் தோகையமை பாளிதஞ் சூழ்சரண
தாள்சிலம் போலமிட வேநடந் தானநடை
சாதிசந் தானெகின மார்பரந் தோகையென
தானெழுங் கோலவிலை மாதரின் பார்கலவி
தாவுகொண் டேகலிய நோய்கள்கொண் டேபிறவி
தானடைந் தாழுமடி யேனிடஞ் சாலும்வினை
யஞ்சியோடத்-

தார்கடம் பாடுகழல் பாதசெந் தாமரைகள்
தாழ்பெரும் பாதைவழி யேபடிந் தேவருகு
தாபம்விண் டேயமுத வாரியுண் டேபசிகள்
தாபமுந் தீரதுகிர் போனிறங் காழ்கொளுரு
சாரவுஞ் சோதிமுரு காவெனுங் காதல்கொடு
தானிருந் தோத†இரு ‡வோரகம் பேறுறுக
விஞ்சைதாராய்;

சூலியெந் தாய்கவுரி மோகசங் காரிகுழை
தோடுகொண் டாடுசிவ காமசுந் தாரிநல
§தூளணைந் தாளிநிரு வாணியங் காளி¶'கலை
தோகைசெந் தாமரையின் மாதுநின் றேதுதிசெய்
தூயஅம் பா$கழைகொள் தோளிபங் காளக்ருபை
தோய்பரன் சேயெனவு மேபெரும் பார்புகழும்
விந்தையோனே-

---

* பொன் தோகை அமை பாளிதம் - பொன் சரிகையிட்ட முன்தானை யமைந்த பட்டுப் புடைவை.

† இரு - பெருமை பொருந்திய.

‡ ஓர் - ஒப்பற்ற. § தூள் - விபூதி.

¶ 'கலை தோகை - சரசுவதி.

$ கரும்பு வில்லைக்கொண்ட வெற்றியாளி.- தோளி - கரத்தி எனினுமாம்.

நிறைந்த பொன் சரிகையிட்ட முன்தானை அமைந்த பட்டுப் புடவை சூழ்ந்துள்ள கால்களில், பாதத்திற் சிலம்பு ஓலமிட (ஒலிக்க), நடந்து, ஆன நடை- கூடிய நடையானது உயர்ந்த வமிசத்து அன்னம் எனவும், அழகிய மார்பராய், அழகிய மயில் எனவும், எழுந்து தோன்றுபவராம் அழகிய விலைமாதர்களின் இன்பம் நிறைந்த கலவி (சேர்க்கையில்) தாவுதலைக் கொண்டு (பாய்தலைக் கொண்டு), கலிய (துன்பத்தைத் தருவதான) நோய்களை அடைந்து, பிறவி (பல) அடைந்து, ஆழ்ந்து விழும் அடியேனிடத்தில் நிரம்பிவரும் வினை பயந்து நீங்க-

மாலைக் கடம்பு (கடம்பு மாலை) அசைகின்ற கழல் அணிந்த பாத செந்தாமரைகளை விரும்பி, அந்தப் பெரிய பாதையாம் நெறியில் (திருவடியை விரும்பும் நெறியில்) ஆழ்ந்து பொருந்தி, அடுத்து வரும் தாகங்களை (ஆசைகளை) ஒழித்து, (அருள்) அமுத வெள்ளத்தைப் பருகி, பசியும் தாகமும் நீங்க, பவளம் போல நிறமும், ஒளிகொண்ட உருவமும் பொருந்த, 'சோதி முருகா' எனக் கூறும் ஆசை (ஒன்றையே) கொண்டு மன அமைதியுடன் இருந்து ஓத, பெருமை வாய்ந்த ஒப்பற்ற உள்ளம் பேறு பெறும்படியான ஞானத்தைத் தந்தருளுக.

திரிசூலத்தை ஏந்தினவள், எனது தாய், கவுரி, ஆசையை அறுப்பவள், *குழையும் தோடும் பூண்டு விளையாடும் சிவகாம சுந்தரி, நல்ல விபூதியை அணிந்து ஆள்பவள், திகம்பரி, அழகிய காளி, கலைமகள் (சரசுவதியும்), செந்தாமரையில் வீற்றிருக்கும் மாது (இலக்குமியும்) - ஆக இருவரும் நின்று துதிக்கின்ற பரிசுத்தமான அம்பா (தாய்), கழை **(மூங்கில்) போன்ற தோளை உடையவள் (வேயுறு தோளி) ஆகிய பார்வதியைப் பங்கில் உடையவராய், கிருபை (திருவருள்) நிறைந்தவராய் உள்ள பரமசிவனது குழந்தை என்றே பெரிய உலகத்தோர் புகழும் விசித்திர வள்ளலே!

---

* குழை - காதில் தோடு கொண்டாடு - தோட்டையணிந்து ஆடும்.

** கரும்பு போன்ற தோளியுமாம். வேயுறு தோளி பங்கன் - தேவாரம் (சம்பந்தர்)

சூரசங் காரசுரர் லோகபங் காவறுவர்
தோகைமைந் தாகுமர வேள்கடம் பாரதொடை
தோள்கண் டா*பரம தேசிகந் தாவமரர்
தோகைபங் காஎனவே தாகமஞ் சூழ்சுருதி
†தோதகம் ‡பாட§மலை யேழுதுண் டாயெழுவர்
சோரிகொண் டாறுவர வேலெறிந் தே¶நடன
முங்கொள்வேலா;

$மாலியன் பாறவொரு **ஆடகன் சாகமிகு
வாலியும்††பாழி‡‡மர மோடுகும் §§பாகனநு
¶¶மாழியுங் கோரவலி ராவணன் பாறவிடு
மாசுகன் கோலமுகி லோனுகந் தோதிடையர்
மாதுடன் கூடிவிளை யாடுசம் போகதிரு
மார்பகன் $$காணமுடி யோனணங் கானமதி
யொன்றுமானை-

* பரமதேசிக அந்தா எனப்பிரிக்க.

† தோதகம் - வருத்தம் - 'தோதகமாக எங்கும்' சிந்தாமணி 463. தோதகம் - சாமர்த்தியம், வல்லமை - " தோதகம் பல காட்டி" - திருவால - புராணம் 13 - 7.

‡ பாட - கூற " அறம் பாடிற்றே" (புற நா - 34)

§ ஏழுகிரியை முருகவேள் அழித்தது - 'ஏழ்தடம் தூளி கொண்டு' திருப்புகழ் 83:- " எழுகிரி விலக்கிப்படர்ந்தது கடவுட் செவ்வேல்' (கந்த புரா - சூர - வதை - 488) - திருப்புகழ் 257, அருணகிரிநாதர் வரலாறு 54 பார்க்க.

¶ சூரனைச் சங்கரித்தவுடன் முருகவேள் ஆடின நடம் - (துடிக் கூத்து):- " மாக்கடல் நடுவண்... சூர்த்திறங் கடந்தோன் ஆடிய துடியும்" சிலப்பதி - 6-51. பாட்டு 354 பார்க்க.

$ மாலியன் - மாலியவான், இராவணன் பாட்டனும் தலைமை அமைச்சனுமான அரக்கன் - 'மதிநெறி யறிவு சான்ற மாலிய வான்' கம்பராமா. இலங்கை காண் - 6. மாலி-மாலியவான் விட்டுணு சக்கரத்தால்

(அடுத்த பக்கம் பார்க்க)

சூரனைச் சங்கரித்தவனே! தேவலோகத்துக்கு வேண்டிய வனே! ஆறு (கிருத்திகை) மாதர்களின் குழந்தையே! குமரனே! வேளே! கடப்ப மலர் நிறைந்த மாலை அணிந்துள்ள தோளனே! வீரனே! பரமருக்கு (சிவனுக்குக்) குருவே! அழகனே! தேவ மகள் (தெய்வயானையின்) பங்கனே (கணவனே)! என்றெல்லாம் வேதங்களையும் ஆகமங்களையும் ஆய்ந்த (தேவர்களின் ) சுருதி (முறையீட்டு) ஒலி தோதகம் (சூரனிடம் தாங்கள் படும்) வருத்தத்தைப் பாட (எடுத்துக் கூற) அல்லது வேதாகம ஒலி யெல்லாம் உனது சாமர்த்தியத்தை எடுத்துப் பாட), மலை ஏழு (ஏழுகிரிகளும்) துண்டாகப் பொடிபட, அம்மலைகளில் எழுந்திருந்த அசுரர்களின் இரத்தம் பெருகி ஆறாக வர வேலாயுதத்தைச் செலுத்தி நடனம் கொண்ட வேலனே!

மாலியவான் இறக்கவும், ஒப்பற்ற இரணியன் சாகவும், (வலி மிக்க) வாலியும் பருத்த மராமரமும் அழியவும், கும்ப கர்ணனும், கடலும், பயங்கரமான வலிமை கொண்டிருந்த இராவணனும் அழியவும் செலுத்தின ஆசுகன் (அம்பினைக் கொண்டவன்), அழகிய மேக நிறத்தினன்; மன மகிழ்ச்சியுடன் இடையர் மாதர்களுடன் கூடி விளையாடி (காம லீலைகளை) அனுபவித்தவன், இலக்குமியை மார்பிற் கொண்டவன், பொன் முடியோன், ஆகிய திருமாலின் மகளான அறிவு நிறைந்த ஆனை (தேவசேனை) யின் (அல்லது மான் போன்ற வள்ளியின்)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

கொல்லப்பட்டவன், மாலி - இராவணன் சேனா வீரன், இலக்குமணரால் இறந்தவன் (அபிதான சிந்தாமணி)

** ஆடகன் - இரணியன் - பாடல் 321 - 1 பார்க்க.

†† பாழி - பருத்த; வலிய.

‡‡ மரம்- மராமரம் - பாட்டு 231 பார்க்க.

§§ கும்பாகனன் - கும்பகர்ணன்; இராவணன் தம்பி.

$$ கடல் மீது பாணம் விட்டது; பாடல் 177 பார்க்க

¶¶ காண முடியோன் - பொன் முடியோனாகிய விட்டுணு.

மார்புடன் கோடுதன பாரமுஞ் சேரஇடை
வார்துவண் டாடமுக மோடுகந் தீரரச
வாயிதங் கோதிமணி நூபுரம் பாடமண
வாசைகொண் டாடுமயி லாளிதுங் காகுறவி
மாதுபங்கா *மறைகு லாவுசெங் கோடைநகர்
வாழவந் தாய்கரிய மாலயன் தேவர் புகழ்
தம்பிரானே. (8)

## 375. திருவடியைப் பெற

தந்த தத்தத் தந்த தத்தத்
தந்த தத்தத் தந்த தத்தத்
தந்த தத்தத் தந்த தத்தத் தனதான

பொன்ற லைப்பொய்க் கும்பி றப்பைத்
தும்ப றுத்திட் டின்று நிற்கப்
புந்தி யிற்சற் றுங்கு றிக்கைக் கறியாமே-

பொங்கி முக்கிச் சங்கை பற்றிச்
சிங்கி யொத்தச் சங்க டத்துப்
புண்ப டைத்துக் கஞ்ச மைக்கட் கொடியார்மேல்;

துன்று மிச்சைப் பண்ட னுக்குப்
பண்ப ளித்துச் சம்ப்ர மித்துத்
தும்பி பட்சிக் கும்ப்ர சச்செய்ப் பதிமீதே-

* "மறை குலாவு செங்கோடை" - 'செழுமறைதேர்.... புஜக பூதர' கந்தரந்தாதி 82.

மார்பும் மலையன்ன கொங்கைப் பாரமும் பொருந்த, இடையின், வார் (நுண்மை) நெகிழ்ந்து அசைய, (அல்லது இடையளவில் கச்சு (ரவிக்கை) அவிழ்ந்து அசைய, அவளது திருமுகத்தில் மகிழ்ச்சியுற்று, ஈர ரச (கருணா ரசத்துடன்) கருணையுடன், வாய் இதம் கோதி - வாயினின்று இனிமையாக வரும் இதழ் ஊறலைச் சிறிது சிறிதாகப் பருகி, (அல்லது ஈரமான இரசம் (ஊறல்) உள்ள வாயின் இனிமையை அனுபவித்து) இரத்தினச் சிலம்பு ஒலிக்க, அவளை மணக்கும் காதலைப் பாராட்டும் மயிலனே! பரிசுத்தனே!, குற மாது (வள்ளிக்கு) வேண்டியவனே! வேத முழக்கம் விளங்கும் திருச்செங்கோட்டு நகரில் வாழ வந்தவனே! கருநிறமுள்ள திருமாலும், பிரமனும், தேவர்களும் புகழும் தம்பிரானே!

(பேறுறுக விஞ்சை தாராய்)

## 375

இறத்தல் (அலைச்சல்) கூடியதாய்ப் பொய்யாக முடியும் பிறப்பு என்பதைத் தும்பறுத்திட்டு (இணைக்கும் கயிற்றை அறுத்துத் தள்ளி) இன்று (ஓர் ஒழுக்கத்தில்) நிற்கப்புத்தியில் சற்றேனும் குறிக்கைக்கு (கவனித்து மேற்கொள்ள) அறியாமல்-

காய்ந்து கொதித்தும் முயற்சிகள் செய்தும், சந்தேகம் கொண்டும் (அல்லது எண்ணங்கள் கொண்டும்), விடம் போன்ற சங்கடங்களால் (மனம்) புண்ணாகித், தாமரையன்ன, மை பூசின, கண்ணைக் கொண்ட கொடியனைய மாதர்கள் மீது-

பொருந்தி நெருங்கும் ஆசைப் பொருளனாம் (ஆசைப் பாத்திரனாம்) எனக்கு நற்குணத்தை அளித்துச், சிறப்பும் களிப்பும் அடையச் செய்து, வண்டு உண்ணும் தேன் கொண்ட (பூந்தாதுகள் உள்ள) வயலூர்த் தலத்திலே

தொண்டு பட்டுத் தெண்ட னிட்டுக்
கண்டு பற்றத் தண்டை வர்க்கத்
துங்க ரத்தப் பங்க யத்தைத் தருவாயே;

குன்றெ டுத்துப் பந்த டித்துக்
கண்சி வத்துச் சங்க ரித்துக்
கொண்ட லொத்திட் டிந்த்ர னுக்கிச் சுரலோகா-

கொம்பு குத்திச் *சம்ப ழுத்தித்
†திண்ட லத்திற் றண்டு வெற்பைக்
கொண்ட முக்கிச் சண்டை யிட்டுப் பொரும்வேழம்;

‡சென்று ரித்துச் சுந்த ரிக்கச்
சந்த விர்த்துக் கண்சு கித்துச்
சிந்தை யுட்பற் றின்றி நித்தக் களிகூருஞ்-

செண்ப கத்துச் சம்பு வுக்குத்
§தொம்ப தத்துப் ¶பண்பு ரைத்துச்
செங்கு வட்டிற் றங்கு சொக்கப் பெருமாளே. (9)

---

* சம்பு - சம்பங்கோரை. † திண் தலத்தில் எனப்பிரிக்க.

‡ வேழம் உரித்த வரலாறு பாட்டு 286- பார்க்க. யானையை உரித்துச் சிவபிரான் அதன் தோலைப் போர்த்த போது தேவி அடைந்த அச்சத்தை இறைவன் போக்கினர். " உமையவள் மறுகிட வருமத களிற்றினை... உரித்து அவள் வெருவல் கெடுத்தவர்" (சம்பந்தர்) 1-75-7.

§ தொம்பதம் - தத்வமசி - 'அது நீயாயிருக்கிறாய்' என்று பொருள் கொண்ட வேதவாக்கியம். ¶'பண்பு ணர்த்தித் தென்றலைக்குட் டங்கு சொக்கப் பெருமாளே' - என்றும் பாடம்; தென்றலை கந்தரந்தாதி 82-ஆம் பாடலிலும் 'செழு மறைதேர் தென்றலை' என்ற இடத்து தென்றலை என்பது அப்பெயர் உள்ள தலத்தைக் குறிக்கின்றதோ என்பது ஆராயத்தக்கது. தென்றலை - தென்றி அலை - எனக்கொண்டு தென்றி - (தெற்கு) அலை - அலைவாய் (செந்தூர்) எனவும் கொள்ளலாம்.

தொண்டு செய்யும் பணியை மேற் கொண்டு, அட்டாங்கமாய் வீழ்ந்து வணங்கி, நான் கண்டு பற்றுதற்கு (உனது) தண்டை வர்க்கப் பங்கயத்தை (தண்டை இனங்கள் - தண்டை, சிலம்பு முதலிய அணிந்துள்ள) தாமரை போன்ற திருவடியை, துங்க ரத்தப் பங்கயத்தை - பரிசுத்தமான செந்நிற முள்ள பங்கயத்தை - திருவடித் தாமரையைத் தந்தருளுக.

கிரவுஞ்சகிரியை எடுத்துப் பந்தடித்துச் சங்கரித்து - பந்தை எடுத்து எறிவது போல - வேலால் எடுத்தெறிந்து அழித்து - கண் சிவக்கக் கோபித்து அழித்து - (கைம்மாறு கருதாது உதவும்) மேகம் போல, இந்திரனுக்கு - இ (ஈ - ஈந்த) அளித்த தேவ லோகத்தவனே! (இந்திரனுக்குத் தேவ லோகத்தை ஈந்தவனே - அளித்தவனே)!

கொம்பால் குத்தியும், சம்பங்கோரை போன்ற நுனியால் அழுத்தியும், திண்ணிய இப்பூமியில் தண்டையும் (கதையையும்) மலையையும் கூட அமுக்கி (அடக்கி) அடக்கக்கூடிய அவ்வளவு பலத்துடன் சண்டை செய்து பொருத (எதிர்த்துப் போர் புரிந்த) யானையைப் -

போய் உரித்து, பார்வதிக்கு இருந்த பயத்தை நீக்கி - கண் களிப்புடன் சிந்தையில் பற்று ஒன்றும் இல்லாமல் நாள் தோறும் மகிழ்ச்சி கொள்ளும் -

செண்பக மலரணியும் சம்புவாம் சங்கரனுக்குத் தொம்பதத் துக்கு (தத்வமசி என்ற வேத வாக்கியத்தில் த்வம் என்னும் சொல்லுக்கு) விளக்க இயல்பை எடுத்து விளக்கித் திருச் செங்கோட்டில் தங்கி வீற்றிருக்கும் அழகிய பெருமாளே!

(தண்டை வர்க்கப் பங்கயத்தைத் தருவாயே)

## 376. பொது மகளிர் மீதுள்ள மயக்கம் அற

*தந்தத் தனத்தந் தாத்தன, தந்தத் தனத்தந் தாத்தன*
*தந்தத் தனத்தந் தாத்தன தனதான*

*மந்தக் கடைக்கண் காட்டுவர் கந்தக் குழற்பின் காட்டுவர்*
*மஞ்சட் பிணிப்பொன் காட்டுவ ரநுராக-*

*வஞ்சத் திரக்கங் காட்டுவர் நெஞ்சிற் பொருத்தங் காட்டுவர்*
*வன்பற் றிருப்புங் காட்டுவர் தனபாரச்;*

*சந்தப் பொருப்புங் காட்டுவர் உந்திச் சுழிப்புங் காட்டுவர்*
*சங்கக் கழுத்துங் காட்டுவர் விரகாலே-*

*சண்டைப் பிணக்குங் காட்டுவர் பண்டிட் டொடுக்கங் காட்டுவர்*
**தங்கட் கிரக்கங் காட்டுவ தொழிவேனோ;**

*பந்தித் தெருக்கந் தோட்டினை யிந்துச் சடைக்கண் சூட்டுமை*
*பங்கிற் *றகப்பன் தாட்டொழு குருநாதா-*

*† பைம்பொற் பதக்கம் பூட்டிய அன்பற் கெதிர்க்குங் கூட்டலர்*
*பங்கப் படச்சென் றோட்டிய வயலூரா;*

---

* தகப்பனாருடைய தாளைத்தொழுகின்ற குருநாதனே, தகப்பன் உனது தாளைத் தொழ நின்ற குருநாதனே என இருவகையும் பொருள்பட நிற்கின்ற அழகு போற்றத் தக்கது.

'வள்ளி பதம் பணியும் ... தயாபரனே' எனக் கந்தரநுபூதியில் (6) வருவது போல.

† பதக்கம் பூட்டிய அன்பன் - இன்னாரென்று விளங்கவில்லை. அன்பன் பொருட்டு பகைவரை ஓட்டிய வயலூரா - என்றதனால் ஒரு வேளை இது " நல்லியக் கோடன்" என்னும் சங்க கால அரசனைக் குறிக்கலாம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

# 376

மெதுவாகக் கடைக் கண்ணைக் காட்டுவர், நறுமணமுள்ள கூந்தலைப் பின்பு காட்டுவர், மஞ்சள் அணிந்த அழகை (அல்லது மஞ்சள் நிறம் கூடிய பொன்னாபரணங்களை)க் காட்டுவர் - காமப்பற்று

உள்ளவர்போல வஞ்சனை செய்து தங்கள் இரக்கத்தைக காட்டுவர், நெஞ்சகத்துப் பொருத்தம் (அன்பு) உள்ளவர் போலக் காட்டுவர், வளப்பம் பொருந்திய பற்களின் பாகங்களைக் காட்டுவர், கொங்கையாம் பாரமுள்ள

அழகிய மலையையும் காட்டுவர், கொப்பூழின் சுழியை (வளைவைக்) காட்டுவர், சங்கு போன்ற கழுத்தைக் காட்டுவர், தந்திரமாகச்

சண்டையிட்டு ஊடுதலையும் (மாறுபட்டுக் கோபித்-தலையும்) காட்டுவர், முதலிற் காட்டிய இட்ட (ம்) (நேசம்) ஒடுங்குதலைக் (குன்றுதலைக்) காட்டுவர்; அத்தகைய பொது மகளிர் பால் இரக்கம் (அன்பு - தயை) காட்டுவதை விடமாட்டேனோ!

கட்டப்பட்ட எருக்கம் பூவை - நில வணிந்த சடையின் கண் சூடுபவரும், உமையைப் பாகத்தில் உடையவருமான தகப்பன் (தந்தையாம்) சிவபிரான் தாளைத் தொழுகின்ற குரு நாதனே!

பசிய பொன்னாலாய பதக்கத்தை அணிவித்த அன்பனை எதிர்த்து வந்த (அல்லது, அன்பன் பொருட்டு அவனை எதிர்த்து வந்த) பகைவர்கள் தோல்வியுறும்படிபோய் அவர்களைப் புறங்காட்டி ஓடச் செய்த வயலூரனே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

**நல்லியக் கோடன் வரலாறு:-** இவன் தன் பகை மிகுதிக்கு அஞ்சி முருகக் கடவுளை வழிபட்டான் எனவும், அப்பொழுது முருகவேள் அவன் கனவில் தோன்றி ஊரில் உள்ள ஒரு கேணியிற் பூத்த பூவைப் பறித்துப் பகைவர் மீது விடுக்குமாறு கட்டளை யிட்டன ரெனவும், அந்தப் பூவைத் தன் வேலாக முருகவேள் நிருமித்துத் தர, அந்த வேலைச் செலுத்தி நல்லியக்கோடன் பகைவரை ஓடச் செய்தான் எனவும் அறியப்படுகின்றது. வேல்

(464ஆம் பக்கம் பார்க்க)

கொந்திற் புனத்தின் பாட்டிய லந்தக் குறப்பெண் டாட்டொடு
கும்பிட் டிடக்கொண் டாட்டமொ டணைவோனே-

குன்றிற் கடப்பந் தோட்டலர் மன்றற் ப்ரசித்தங் கோட்டிய
கொங்கிற் றிருச்செங் கோட்டுறை பெருமாளே. (10)

## 377. முருகன் பாலைக் கற்பகம்

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

மெய்ச்சார் வற்றே பொய்ச்சார் வுற்றே
நிச்சார் *துற்பப் பவவேலை

விட்டே றிப்போ கொட்டா மற்றே
மட்டே யத்தத் தையர்மேலே;

பிச்சா யுச்சா கிப்போ ரெய்த்தார்
பத்தார் விற்பொற் கழல்பேணிப்-

---

(463 ஆம் பக்கம் தொடர்ச்சி)

எறிந்து செயித்த ஊர் "வேலூர்" என்பர். வேலூர் இப்போது 'உப்பு வேலூர்' என வழங்குகின்றது என்பர். இவன் சிறந்த முருக பக்தனானதால் ஒரு வேளை முருகனுக்குப் பைம்பொற் பதக்கம் ஒன்று இவன் அணிவித்திருக்கலாம். இவனைப் பற்றிய குறிப்புக்களைப் பத்துப் பாட்டில் டாக்டர் உ. வே. சாமிநாதையர் பதிப்பில் 'பாடப்பட்டோர் வரலாறு' என்பதன் கீழ்ப் பார்க்க . "திறல்வேல் நுதியிற் பூத்த கேணி விறல் வேல் வென்றி வேலூர்" சிறுபாணாற்றுப்படை - 172.

'பதக்கம் பூட்டிய உம்பர்க் கெதிர்க்கும்' என்றும் பாடம்.

* துற்ப - துன்ப.

பூங் கொத்துக்கள் உள்ள தினைப்புனத்தி னிடத்தே பொருந்திய அந்தக் குறப் பெண்ணுடன் விளையாடல் செய்து அவளைக் கும்பிடுதற்கு ஒரு கொண்டாட்டம் (பெருங்களிப்பு) கொண்டு அவளை அணைந்தவனே!

மலையிற் கடப்ப மலர் மலரும் வாசனைப் பிரசித்தத்தை வளைத்துக் கொண்ட (கீர்த்தியைத் தனக்கென்று கொண்ட) கொங்கு நாட்டுத் திருச்செங்கோட்டில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(பொது மகளிர்க்கு - இரக்கங் காட்டுவ தொழிவேனோ)

# 377

உண்மையான புகலிடம் (ஆதார தானத்தை) விட்டு விட்டு, பொய்யான துணையைப் பற்றிக்கொண்டு, நிச்சம் ஆர் (நிச்சார்) - எப்பொழுதும் (நிச்சம் - எப்பொழுதும், அல்லது மெய்யாகவே) நிறைந்த துன்பமே உள்ள பிறப்பு என்னும் கடலைத்-

தாண்டிக் கரை ஏறி அப்புறம் போக முடியாதபடி (தேம்) தேனும் (இவர்கள் சொல்லுக்கு) மட்டே (இனிமையிற் குறைவே) என்று சொல்லத்தக்க அந்த தத்தையர் (கிளி போன்ற பொது மகளிரின்) மீது-

பிச்சாய் (காம வெறியாய் - பைத்தியமாய்), உச்சாகி - (உச்ச நிலையிற் சேர்ந்தவராகி) அல்லது கவர்ச்சி உடையவர்களாகி, போர் (கலவிப் போரில்), எய்த்தார் - இளைத்தவர்கள், பத்தார் (பத்தர்களின்), வில், பொன் கழல் (ஒளி பொருந்திய, அழகிய, திருவடிகளைப்) போற்றிப் பணிந்து-(அந்த நல்ல தொண்டால்)

பிற்பால் பட்டே நற்பால் பெற்றார்
முற்* பாலைக்கற் பகமேதான்;

†செச்சா லிச்சா லத்தே றிச்சே
லூற்றா ணித்துப் பொழிலேறுஞ்-

‡செக்கோ டைக்கோ டுக்கே நிற்பாய்
நித்தா செக்கர்க் கதிரேனல்;

முச்சா லிச்சா லித்தாள் வெற்பாள்
முத்தார் வெட்சிப் புயவேளே -

முத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே. (11)

---

* **பாலைக் கற்பகம்** - பாலை நிலம் என்பது நீண்டு அகன்ற மணல் வெளி; நீரும் நிழலும் இல்லாத சுரமும் சுரம் சார்ந்த இடமும். சுரம். - காடு - அத்தகைய இடத்தில் குளிர்ந்த நிழல் நீர் முதலியன யாவும் தரும் கற்பக விருட்சம் போல, முருகனே நீ நற்பால் (நல்ல குணம் ) பெற்றவர் முன்பு தோன்றி உதவுவாய்;-

" அழல் மண்டு போழ்தின் அடைந்தவர்கட் கெல்லாம்
நிழல் மரம்போல் நேரொப்பத் தாங்கிப் - பழுமரம்போல்
பல்லார் பயன் துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்" - என்னும் நாலடியாரும் (202),

"நிழலின் நீளிடைத் தனிமரம் போல... இரவலர்க் கீயும் வள்ளி-யோன்" என்னும் புறநானூற்று (119) அடியும், "அருஞ் சுரத்தின் மரம்போல அடைந்தார்க் களித்தல் அவற்கியல்பு"- எனவரும் நச்சினார்க்கினியர் உரையும் (சிந்தாமணி - கடவுள் வாழ்த்து 3ஆம் பாடல் உரை.) 'முருகன் பாலைக் கற்பகம் ' - என்றதின் பொருளை நன்கு விளக்கும். குறிப்பு:- இந்தத் திருப்புகழால் - முதலிற் பிழையுள்ள நெறியில் இருந்தாலும் பின்னர் அப்பிழையை உணர்ந்து அடியார் கூட்டத்தில் இணங்கி நல்ல நெறியைக் கைப்பற்றினவர்க்கு முருகன் பாலை நிலத்திற் காணும் கற்பக விருட்சம் போல நல்லருள் புரிவார் என்னும் பேருண்மையைத் தமது அநுபவத்தினின்றே அருணகிரியார் விளக்குகின்றார். நன்னெறி காணாது

(அடுத்த பக்கம் பார்க்க)

பின்பு, பால் பட்டே (தகுதியான நல்ல வழியில் நின்று) நற்பால் பெற்றார் முன் நல்ல குண ஒழுக்கத்தைப் பெற்றவர்களிடத்தே (பெற்றவர்களுக்கு) - நீ - பாலைக் கற்பகமே தான் - பாலை நிலத்திற் கிடைத்த தெய்வ விருட்சமாம் கற்பகமே தான் (கற்பக விருட்சத்தையே நீ நிகர்ப்பாய் - அந்த விருட்சம் போல அவர்களுக்கு நீ வேண்டிய வரத்தைத் தந்து அவர்களைக் காப்பாற்றுவாய்);

செம்மையான நெற் கதிர்க் கூட்டத்தில் ஏறிச் சேல் மீன்கள் ஆணித்துப் பொழில் (அணித்துப் பொழில்) அண்மையில் (சமீபத்தில்) உள்ள சோலையிற் போய்ச் சேரும்-

திருச்செங்கோட்டு மலையிலேயே நிற்பவனே! (விளங்கி நிற்பவனே)! என்றும் அழியாது இருப்பவனே! சிவந்த கதிர் கொண்ட தினை-

மூன்று போகம் விளையும் நெல் வயலில் - நெற் கதிர் இவைகளின் தாள்கள் (அடித் தண்டுகள்) கொண்ட வெற்பாள்- (வள்ளி மலைக்கு உரியவளாம் வள்ளியின்) முத்து (முத்தம் - அல்லது முத்து மாலை) ஆர்- நிறைந்துள்ள புயத்தை உடைய வேளே! வெட்சி மாலை அணிந்த புயவேளே!

முத்தனே (முத்திநிலையில் உள்ளவனே)! முத்தீ அத்தா - (காருக பத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினி என்ற) மூவகை வேதாக்கினிக்கும் தலைமைக் கடவுளே! அத்தனே! சுத்தனே! முத்துப் போன்ற அருமையான (மேலான) முத்தியை (அளிக்கும்) பெருமாளே!

(நீ பாலைக் கற்பகமே தான்)

---

(முன் பக்க தொடர்ச்சி)

தவிக்கும் நமக்கு இப்பாடல் நல்லறிவு ஊட்டும் அருமைப் பாடலாகின்றது.

"முருகனைப் 'பாலைக் கற்பகம்' என்பது மிகவும் பாராட்டத்தக்க சிறப்புப் பெயராய்ப் பொலிகின்றது" எனது கட்டுரை அமிர்தவசனி மலர் 5, இதழ் 4 (1953).

† செச்சாலிச் சாலம் - செந்நெற் கூட்டம்.

‡ செக்கோடைக் கோடுக்கே- திருச்செங்கோட்டு மலையினுச்சியில்.

## 378. அருள் உரை கூறியருள்

*தனத்தந் தான தானன தனத்தந் தான தானன*
*தனத்தந் தான தானன தனதான*

வருத்தங் காண நாடிய குணத்தன் பான மாதரு
மயக்கம் பூண மோதிய துரமீதே -
மலக்கங் கூடி யேயின வுயிர்க்குஞ் சேத மாகிய
மரிக்கும் பேர்க ளோடுற வணியாதே-
பெருத்தும் பாவ நீடிய மலத்தின் தீமை கூடிய
பிறப்புந் தீர வேயுன திருதாளே-
பெறத்தந் தாள வேயுயர் சுவர்க்கஞ் சேர வேயருள்
**பெலத்தின் கூர்மை யானது மொழிவாயே;**
இரத்தம் பாய மேனிக ளுரத்துஞ் சாடி வேல்கொடு
எதிர்த்துஞ் சூரர் மாளவெ பொரும்வேலா-
இசைக்குந் தாள மேளமெ தனத்தந் தான தானன
எனத்திண் கூளி கோடிகள் புடைசூழத்
திருத்தன் பாக வேயொரு மயிற்கொண் டாடி யேபுகழ்
செழித்தன் பாக வீறிய பெருவாழ்வே-
திரட்சங் கோடை வாவிகள் மிகுத்துங் காவி சூழ்தரு
திருச்**செங் கோடு** மேவிய பெருமாளே. (12)

## 379. பிறப்பற

*தான தானன தத்தன தத்தன*
*தான தானன தத்தன தத்தன*
*தான தானன தத்தன தத்தன தனதான*

ஆல காலப டப்பைம டப்பியர்
ஈர வாளற வெற்றும்வி ழிச்சியர்
யாவ ராயினு நத்திய ழைப்பவர் தெருவூடே-

## 378

வருத்தம் உண்டாகும் வழியையே தேடும் குணத்தில் ஈடுபட்ட மாதர்களும், மயக்கம் கொள்ளும்படி அவர்களொடு தாக்குண்ணும் துரம் (சுமை) இது (இவ்வுடல்) - இத்தகைய

துன்பங்களோடு கூடிப் பொருந்திய உயிர்கள் நற்கதி காணாது கேடு அடைய இறந்து போகும் மக்களுடைய உறவைக் கொள்ளாமல்-

பெருத்து வளரும் பாவம் மிக்க மும்மலங்களின் கொடுமை கூடிய (இப்) பிறப்பு ஒழியவே உன்னுடைய இரு திருவடிகளை - (நான்)

பெறுமாறு (எனக்குத்) தந்து (என்னை) ஆண்டருளவும், மேலான சுவர்க்கத்தை நான் சேரவும் நீ அருள் பாலிக்கும் சத்தியின் நுண் பொருளை எனக்கு மொழிந்தருளுக.

ரத்தம் பெருகிப் பாய உடலிலும் மார்பிலும் தாக்கி வேல் கொண்டு எதிர்த்தும், சூரர்கள் இறக்கப் போர் புரிந்த வேலனே!

ஒலிக்கின்ற தாளமும் மேளமும் தனத் தந்தான தானன என்னும் ஒலியைக் காட்ட, வலிய சிவகணங்களாகிய பூதங்கள் கோடிக் கணக்கிற் பக்கங்களிற் சூழ -

திருந்திய அன்புடன் ஒப்பற்ற மயிலை விரும்பி ஏறியே புகழ்மிக வளர்ந்து அன்பே உருவாக மேம்பட்டு விளங்கும் பெருஞ் செல்வமே!

திரண்ட சங்குகள் உள்ள ஓடை (நீர் நிலைகளும்) குளங்களும் மிகுத்து, காவி மலர்கள் (கருங் குவளை மலர்கள்) சூழ்ந்து மலரும் திருச்செங்கோட்டில் விரும்பி வீற்றிருக்கின்ற பெருமாளே!

(அருள் பெலத்தின் கூர்மை யானது மொழிவாயே)

## 379

ஆலகால விடத்தை உடைய பாம்பின் படம்போன்ற அல்குலை உடைய மடமாதர்கள், நெய்ப்பு ஈரம் கொண்ட வாள் போல மிகவும் தாக்க வல்ல கண்களை உடையவர்கள், யாவராயிருந்தாலும் விரும்பி அழைப்பவர்கள், தெருவின் மத்தியிலே-

ஆடி யாடிந டப்பதொர் பிச்சியர்
பேசி யாசை கொடுத்தும ருட்டிகள்
ஆசை வீசிய ணைக்குழு லைச்சியர் பலருடே;

மாலை யோதிவி ரித்துமு டிப்பவர்
சேலை தாழநெ கிழ்த்தரை சுற்றிகள்
வாசம் வீசும ணத்தில்மி னுக்கிகள் உறவாலே-

மாயை யூடுவி ழுத்திய ழுத்திகள்
காம போகவி னைக்குளு னைப்பணி
வாழ்வி லாமல்ம லச்சன னத்தினி லுழல்வேனோ;

மேலை வானொரு ரைத்*தச ரற்கொரு
பால னாகியு தித்தொர்மு நிக்கொரு
வேள்வி காவல்ந டத்தி†ய கற்குரு அடியாலே-

மேவி யேமிதி லைச்சிலை செற்றுமின்
மாது தோள்தழு விப்பதி புக்கிட
வேறு தாயட விக்குள் விடுத்தபி னவனோடே;

ஞால மாதொடு புக்கவ னத்தினில்
வாழும் வாலிப டக்கணை தொட்டவ
னாடி ராவண னைச்செகு வித்தவன் மருகோனே-

---

*தசரதற்கொரு என்பது தசரற்கொரு எனத் திரிந்தது.
**வானோர் புகழும் தசரதன்:-** தேவர்களின் வேண்டு கோளால், கைகேசி தேர் நடத்தச் சென்று சம்பரன் என்னும் அசுரனைக் கொன்ற கீர்த்தியைக் கொண்டவர் தசரதர்.

† அ - கற்கு - உரு - அடியாலே - மேவி (அகலிகையாகிய) அந்தக் கல்லைத் திருவடியினால் (மிதித்துப் பழைய) உருவெய்தும் படிச் செய்து

**கல் உரு எய்திய வரலாறு:-** கௌதம முநிவரின் மனைவி அகலிகையைக் கூட எண்ணின இந்திரன், அவர் இல்லாத சமயத்தில் அவர் உருவத்தோடு அவளைச் சேர, முநிவர் அதை அறிந்து இந்திரன் உடலில் ஆயிரம் பெண் குறி சேரவும், அகலிகை கல்லாமாறும் சபித்தனர். அகலிகை வேண்ட, ஸ்ரீராம பிரானது காலின் தூசிபட உன் சாபம் நீங்கும் என ஓதினர் முநிவர். ஸ்ரீராம பிரான் மிதிலைக்குச் செல்லும் போது அவருடைய 'கழல் துகள்' பட்ட மாத்திரத்திற் கல்லாய்க் கிடந்த அகலிகை பெண்ணுருவை அடைந்தனள். (அடுத்த பக்கம் பார்க்க)

ஆடி ஆடி நடக்கின்ற பித்துப் பிடித்தவர்கள், தங்கள் பேச்சு வன்மையால் ஆசை ஊட்டி மயக்குபவர்கள், ஆசை வலையை வீசி அணைக்கின்ற கொங்கையினர், பலர் மத்தியிலும்,

மாலை அணிந்த கூந்தலை அவிழ்த்து முடிப்பவர்கள், புடைவை கீழே தாழும்படி தளர்த்தி இடையிற் சுற்றுபவர்கள், வாசனை வீசும் நறுமணங் கொண்டு மினுக்குபவர்கள், தமது சம்பந்தத்தாலே-

மாயையின் உள்ளே விழும்படி அழுத்துபவர்கள் - ஆகிய பொது மகளிரின் காம போகச் செயல்களில் ஈடு பட்டதாலே - உன்னைப் பணியும் நல்வாழ்வு இல்லாமல் மும்மலங்களுக்கு ஈடான பிறப்பினில் அலைவேனோ!

மேலுலகத்தில் உள்ள வானோர் (தேவர்கள்) புகழ்ந்த தசரத (ராச) னுக்கு ஒரு குழந்தையாகப் பிறந்து, ஒப்பற்ற (விசுவாமித்திர) முனிவர் செய்த வேள்விக் காவல் புரிந்து ரட்சித்து, (அகலிகையாகிய) அந்த கல்லைத் திருவடியினால் (மிதித்துப்) பழைய உரு

எய்தும்படி செய்து, மிதிலாபுரியில் வில்லை முறித்து, மின் போலும் ஒளி பொருந்திய மாது (சீதையின்) தோள் தழுவி (மணந்து), பதிபுக்கிட (அயோத்தி நகர்க்குத்) திரும்பி வந்து சேர, (அங்கு) மாற்றாந் தாயான (கைகேயி) காட்டுக்குப் போகும்படிச் செய்ய, பின்னவனோடே (தம்பியாகிய) லட்சு-மணனுடனும் -

பூதேவியாம் சீதையுடனும் சென்று அந்தக் காட்டில் வாழ்ந்த வாலி இறக்கும்படி அம்பை ஏவினவனும், தேடிச் சென்று ராவணனை அழித்தவனுமான ஸ்ரீராமபிரானது (திருமாலின்) மருகனே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

" அஞ்சன வண்ணத் தான்தன் அடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோ லிடையாள் முன்னை வண்ணத்த ளாகி நின்றாள்"
(கம்பராமா - அகலிகை - 85)

இப்பாடலின் 5,6,7 அடிகள் " ராமாயணச் சுருக்கமாம்" அழகு பெற்று விளங்குகின்றன.

ஞான தேசிக சற்குரு உத்தம
வேல வா*நெரு வைப்பதி வித்தக
நாக மாமலை சொற்பெற நிற்பதொர்
பெருமாளே. (13)

## 380. ஞானம் பெற

தான தனத் தனதான

காலனிடத் தணுகாதே - காசினியிற் பிறவாதே;
சீல †அகத் தியஞான - தேனமுதைத் தருவாயே;
மாலயனுக் கரியானே - மாதவரைப் பிரியானே;
நாலுமறைப் பொருளானே - ‡நாககிரிப்
பெருமாளே. (14)

## 381. ஆவி உய்ய

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

§தாமா ¶தாமா லாபா லோகா
தாரா தாரத் தரணீசா-
தானா சாரோ பாவா பாவோ
நாகா பாசத் தபராத;

---

* நெருவைப் பதி - நெருவூர் - இது கருவூருக்கு 6 மைல் தூரத்தில் உள்ளது. திருப்புகழ்ப் பாடல் 934- பார்க்கவும்.

† அகத்தியர்க்கு முருகவேள் திருத்தணிகையில் ஞானோபதேசம் செய்தனர். "வேலிறைவன் இயம்பிய ஞானமுற் றுணர்ந்து ...... வாழ்ந்திருந்தனன் முநிவன்" - தணிகைப் புராணம் 512.

சிவபிரானுக்கு நீ சொன்ன உபதேசத்தை எனக்கு அருளுக என வேண்டினதுபோல (பாடல் 173 - கீழ்க்குறிப்பு) இப்பாடலில் அகத்தியர்க்கு நீ உபதேசித்த ஞான உபதேசத்தை எனக்கு அருளுக என வேண்டுகின்றனர் அருணகிரியார்.

‡ நாக கிரி - சர்ப்பகிரி - என்பது திருச்செங்கோடு.
" சமர முகத்திருச் செங்கோடு சர்ப்ப சயில மென்ன
அமரிற் படம்விரித் தாடாத தென்னை யஃதாய்ந்திலையோ
நமரன் குறவள்ளி பங்கன் எழுகரை நாட்டுயர்ந்த
குமரன் திருமருகன் மயில் வாகனம் கொத்து மென்றே"

(அடுத்த பக்கம் பார்க்க)

ஞான தேசிகனே! சற்குருவே! உத்தமனே! வேலவனே! நெருவூரில் வீற்றிருக்கும் ஞான மூர்த்தியே! நாகமாமலை (சர்ப்பகிரி) என்கின்ற திருச்செங்கோட்டில் புகழ் பெற விளங்கி நிற்கும் ஒப்பற்ற பெருமாளே!

(மலச் சனனத்தில் உழல்வேனோ)

## 380

யமனுடைய ஊரை அணுகா வகைக்கும் - பூமியிற் பிறவா வகைக்கும்

நல்லொழுக்கம் வாய்ந்த அகத்தியர்க்கு நீ உபதேசித்ததான ஞானோபதேச அமுதைத் - தேன் போன்ற உபதேச அமுதை (அடியேனுக்குத்) தந்தருளுக -

திருமாலுக்கும் பிரமனுக்கும் அரியவனே! சிவந்த தவ சிரேட்டர்களை விட்டுப் பிரியாதவனே!

நான்கு மறைகளின் பொருளாயுள்ளவனே! - நாககிரி எனப்படும் திருச்செங்கோட்டுப் பெருமாளே!

(ஞான தேனமுதைத் தருவாயே)

## 381

மாலையை உடையவனே! சுக சம்பாடணை உள்ளோனே! உலகுக்கு ஆதாரமாயுள்ளவனே! தாரம் தரணி ஈசா! நீர், மண் (ஆதிய பஞ்ச பூதங்களுக்கு) ஈசனே!

தானம் (கொடை அளிக்கும்) ஆசார (ஒழுக்கமுள்ளவர் களால்) பாவா (தியானிக்கப் படுபவனே)! பாவ நாசனே! பாசங்களிற் பற்று வைத்ததின் அபராதமாக-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

என்னும் பாட்டு திருச்செங்கொட்டு மலையின் பாம்புருவத்தை விளக்குவதாகும். கொங்கு மண்டல சதகம் (50 - குறிப்புரை.)

§ தாமா - மாலையை யுடையவனே.

¶ தாம ஆலாபா - சுக சம்பாடணை யுள்ளோனே.

*யாமா யாமா தேசா ரூடா
யாரா யாபத் தெனதாவி-
யாமா காவாய் தீயே † னீர்வா
யாதே யீமத் துகலாமோ;
‡காமா §காமா தீனா ¶நீணா
காவாய் காளக் கிரியாய்கங்-
காளா லீலா பாலா நீபா
$காமா மோதக் கனமானின்;
**தேமார் தேமா காமீ பாகீ
தேசா தேசத் தவரோதுஞ்-
சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே. (15)

## 382. நரகில் விழாதிருக்க

தத்த தனதனன தத்த தனதனன
தத்த தனதனன தனதான

அத்து கிரினலத ரத்து அலனவள
கத்து வளர்செய்புள கிதபூத-
ரத்தி ருகமலக ரத்தி தயமுருகி
யத்தி யிடனுறையு நெடுமாமம;
ரத்து மலர்கனிய லைத்து வருமிடைத
லத்துரகசிகரி பகராதே-

---

* யாம யாமா தேசார் - தெற்கிலுள்ள யமபுரியோர்; யாமம் - தெற்கு.

† நீர் - (நற்) குணம் - " பெருக்குநீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே" - சம்பந்தர் - III- 24-8. ‡ காமா - அன்பனே.

§ காம ஆதீனா - அன்பர்கள் இச்சிப்பதை அளிக்கும் சுதந்தர முள்ளவனே.

(அடுத்த பக்கம் பார்க்க)

தெற்கில் உள்ள யமபுரியோரிடையே ஆராய்ச்சி யில்லாமல் ஆபத்து நிலையில் என்னுடைய உயிர்

(சேர்தல்) ஆமா? காத்தருளுக! பொல்லேன் ஆகிய நான் நற்குணம் வாய்க்காமல் சுடுகாட்டைத் தாவிச் சேர்தல் நன்றா?

அன்பனே! அன்பர்கள் இச்சிப்பதை அளிக்கும் சுதந்தரம் உள்ளவனே! (நீள) பெரிய நாகவாய் (பாம்புருவம் வாய்ந்துள்ள) காளக்கிரியாய் (நாகமலையில் வீற்றிருப்ப-வனே!) கங்காள-

(கங்காள லீலா பாலா) எலும்பு மாலையை விளையாட்டாக அணிந்துள்ள (ஈசனது) பாலனே (குமரனே)! நீபா (கடப்ப மாலை அணிந்தவனே)! மிகுந்த விருப்பமுள்ள பெருமை பொருந்திய மானின் (வள்ளி நாயகி கொடுத்த)

தேன் கலந்த இனிய தினைமாவின் விருப்பனே! பாகீ (தகுதி யுள்ளவனே)! தேசா (தேசசு - ஒளி யுள்ளவனே)! உலகோர் போற்றும்-

சேயே! வேளே! பூவே (அழகும் பொலிவும் வாய்ந்தவனே)! தலைவனே! தேவனே! தேவர் தம் பெருமாளே!

(ஈமத்து உகலாமோ)

## 382

(அத் துகிரின் நல் அதரத்து) பவளம் போற் சிவந்த இதழி (உதட்டி)லும், (அல் அன்ன அளகத்து) இருள்போன்ற கூந்தலிலும், (வளர்செய் புளகித பூதரத்து) வளரும் புளகித மலையன்ன தனங்களிலும்,

(இரு கமல கரத்து) தாமரைபோன்ற இரு கரங்களிலும், (இதயம் உருகி) மன முருகி, (அத்தி யிட னுறையும் நெடு மாமரத்து) சமுத்திரத்தி லிருந்த சூரனாகிய நெடிய மாமரத்தின்

மலர் கனி யலைத்து - மலரையுங் கனியையும் அலைத்து, (வரும் இடை தலத்து உரக சிகரி) வந்து அமர்ந்தருளிய தலமாகிய நாககிரியை (திருச்செங்கோட்டை) (பகராதே) தோத்திரஞ் செய்யாமல்

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

¶ நீள நாக வாய் காளக் கிரியாய் - சேசாசலத்தில் வீற்றிருப்பவனே. $காம ஆமோத - மிகுந்த விருப்பமுள்ள.

** தேம் ஆர் தே மா காமீ - தேன் கலந்த இனிய தினை மாவின் விருப்பனே.

யத்தி மலவுடல்ந டத்தி யெரிகொள்நிரை
யத்தி னிடையடிமை விழலாமோ;

தத்து கவனவரி ணத்து வுபநிடவி
தத்து *முநியுதவு மொழி †யாறுத்-

தத்தை நறவையமு தத்தை நிகர்குறவர்
தத்தை தழுவியப னிருதோளா;

தத்து ததிதுரக தத்து மிகுதிதிசர்
தத்து மலையவுணர் குலநாகந்-

தத்த மிசைமரக தத்த மணியமயில்
தத்த விடுமமரர் பெருமாளே (16).

## 383. வாக்குப் பெற

தத்த தாத்தத் தத்த தாத்தத்
தத்த தாத்தத் தனதான

அத்த வேட்கைப் பற்றி நோக்கத்
தத்தை மார்க்குத் தமராயன்-

பற்ற கூட்டத் திற்ப ராக்குற்
றச்சு தோட்பற் றியவோடும்;

---

* முநி - திருமால் சிவமுநிவராய்த் தவநிலையிலிருக்கத் திருமகள் மானுருவுடன் எதிரிற் செல்லச் சிவமுநிவரின் திருட்டி பட்டு அந்த மான் கருப்பம் உற்று வள்ளிக்குழியில் ஒரு பெண் குழந்தையை ஈன்று தன் இனம் இல்லை எனக் கண்டு ஓடிப்போயிற்று. இந்தப் பெண் குழந்தையே வள்ளி. வள்ளிக் கிழங்கு தோண்டிய குழியிற் கிடைத்தமையால் வள்ளி எனப் பெயர். இக்குழந்தையைக் கண்டெடுத்த வேடர் தலைவன் வள்ளியை வளர்த்து வந்தான்; தினைப்புனம் காக்க வைத்தான்; இவளது பேரழகை நாரதர் தணிகேசரிடம் சொல்ல அவர் வந்து சில லீலைகள் புரிந்த பின், வள்ளியை மணந்தனர் என்பது கந்தபுராண வரலாறு.

" மாதவனோர் மாதவனாய் மாதவஞ் செய்திடலும்
வனமானாய் வந்தெதிர்ந்த மலர் மானைப் புணரப்

(அடுத்த பக்கம் பார்க்க)

அத்தி மல உடல் நடத்தி - எலும்பும் மலமுங் கூடிய உடலைச் சுமந்து; எரிகொள் நிரையத்தின் இடை அடிமை விழலாமோ - எரிகின்ற நரகத்தில் அடிமை விழலாமோ?

(தத்து கவன அரிணத்து)- வேக நடையை உடைய மானினிடத்து, (உபநிட விதத்து முநி உதவு) வேத ஒழுக்கம் பூண்ட சிவமுநிவர் தந்த, (மொழியால்) சொல்லால்

(துத்தத்தை நறவை அமுதத்தை நிகர் குறவர் தத்தை) பாலையும் தேனையும் அமுதத்தையும் ஒத்த மொழியையுடைய கிளி போன்ற குறமகள் வள்ளி நாயகி) தழுவிய பன்னிருதோளா!

(தத்து உததி துரகதத்து மிகு திதிசர் தத்து மலை அவுணர் குல நாகம்) - (அலை) வீசும் சமுத்திரம் போல மிக்க குதிரைப் படையை உடைய அசுரர்களும் மலையன்ன அவுணர்களும் ஆகிய சர்ப்பக் கூட்டம்,

(தத்த) நடுங்கி ஒடுங்க, (மிசை) (அவர்கள்) மீது, (மரகதத்தமனிய மயில் தத்த விடும் அமரர் பெருமாளே) பசும் பொன் மயில் மீது ஆரோகணித்து வந்த தேவர் பெருமாளே!

(நிரயத்தினிடை அடிமை விழலாமோ)

## 383

பொருள் ஆசை கொண்டு விருப்பம் வைக்கும் அந்த கிளி போன்ற பொது மகளிருக்கு வேண்டியவனாய், அன்பு

இல்லாதவர் கூட்டத்தில் எனது நோக்கத்தை வைத்து உரு அமைந்த அவர்கள் தோளைப் (பற்ற - அணைக்க), ஓடுகின்ற-

---

(முன் பக்க தொடர்ச்சி)

பூதல மங்கை யருருவாய் அவதரித்து வள்ளிப்
பொருப்புறையும் பொருப்பர்மனை விருப்பமுடன் வளர்ந்து
தீதகலும் தினைகாத்து வேங்கையுரு எடுத்த
செவ்வேளை அவ்வேளைச் சேர்ந்திருகைக் கோளும்
காதலுடன் புரிந்திறைவன் வலப்பாகத் தமரும்
கன்னி யெனும் வள்ளிகழல் உன்னி வழுத்திடுவாம்"

- (தணிகாசல புராணம்)

† 'பாய' என்று பாடம்.

குறிப்பு:- இந்தப் பாடலில் 1,3,5,7. அடிகளில் "த்து" "த்து" எனவரும் வழி எதுகையும், 2,4 அடிகளில் "த்தி" "த்தி" என வரும் வழி எதுகையும், 6 ஆவது அடியில் "தத்தை" "தத்தை" என வரும் வழி எதுகையும், 8ஆவது அடியில் "தத்த" என வரும் எதுகையும் கவனிக்கற்பாலன.

சித்த மீட்டுப் பொய்த்த வாழ்க்கைச்
சிக்கை நீக்கித் திணிதாய-
சித்ர வாக்குப் பெற்று வாழ்த்திச்
செச்சை சாத்துப் பெறுவேனோ;
கொத்து *நூற்றுப் பத்து நாட்டக்
கொற்ற வேத்துக் கரசாய-
†குக்கு டாத்தச் ‡சர்ப்ப கோத்ரப்
பொற்ப வேற்கைக் குமரேசா;
§தத்வ நாற்பத் தெட்டு நாற்பத்
தெட்டு மேற்றுத் திடமேவும்-
தர்க்க சாத்ரத் தக்க மார்க்கச்
¶சத்ய வாக்யப் பெருமாளே. (17)

## 384. நன்றி மறவாமை

தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தனதான

பத்தர்க ணப்ரிய நிர்த்தந டித்திடு
பட்சிந டத்திய குகபூர்வ-
பச்சிம தட்சிண வுத்தர திக்குள
பத்தர்க ளற்புத மெனவோதுஞ்;
சித்ரக வித்துவ சத்தமி குத்ததி
ருப்புக ழைச்சிறி தடியேனுஞ்-

---

* "நூற்றுப் பத்தடுக்கிய நாட்டத்து.... திருக்கிளர் செல்வன்" என்றார் இந்திரனை - (திருமுருகாற்றுப்படை).

† குக்குட அத்த - அத்தம் =கை.

‡ சர்ப்ப கோத்திரம் - நாக மலை; கோத்திரம் - மலை.

§ 48+48 = 96 - தத்துவங்கள் - பாட்டு 157 பார்க்க.

¶ சத்திய வாக்கியம் - சம்பந்தராய் அருளிய தமிழ் மறையாம் தேவாரத்தையும் இது குறிக்கலாம்.

மனத்தை அவ்வழியினின்றும் திருப்பிப், பொய்யான வாழ்க்கை என்கின்ற சிக்கை (சிக்கு - மாட்டிக் கொண்ட நிலையை) நீக்கி, வன்மை வாய்ந்த-

அழகிய வாக்கை (நான்) பெற்று, (அவ்வாக்கின் பயனாக உன்னை) வாழ்த்தி, (அவ்வாழ்த்துதலின் பயனாக) உனது வெட்சி மாலையாகிய (பிரசாதத்தை - பரிசாக)ச் சாத்த (அணியப்) பெறும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா!

கூட்டமான நூற்றுப்பத்து (ஆயிரம்) நாட்டம் (கண்களை உடைய) வீர வேந்தனாம் இந்திரனுக்கு அரசனாகிய

கோழிக் (கொடிக்) கையனே! பாம்பு மலை (திருச்செங்கோட்டு) அழகனே! வேலேந்தும் திருக்கரத்துக் குமரேசனே!

தத்துவங்கள் (நாற்பத்தெட்டும் நாற்பத்தெட்டும்) தொண்ணூற்றாறினையும் பொருந்தித் திடமான

தர்க்க சாத்திரங்களிற் சொல்லப்பட்ட தக்க நீதி வழிகளில் உள்ள சத்தியமான சொற்களைப் பேசும் பெருமாளே!

(சித்ரவாக்குப் பெற்று செச்சை சாத்தப் பெறுவேனோ)

## 384

பக்தர் கூட்டங்களின் மீது பிரியமுள்ளவனே! நடனம் நடிக்கவல்ல பட்சியாகிய மயிலை வாகனமாகக் கொண்ட குகனே! கிழக்கு-

மேற்கு, தெற்கு, வடக்கு (என்னும்) நான்கு திசைகளிலும் உள்ள பக்தர்கள் (இது) அற்புதம் எனக் கொண்டாடுகின்ற-

அழகிய கவி(பாடும் திறத்து) அமைப்பின் ஒலி (அல்லது சந்தம்) மிகுந்துள்ள **திருப்புகழ்** என்னும் அருமை வகைக் கவிகளைச் சிறிதளவு அடியேனும்-

*செப்பென வைத்துல கிற்பர வத்தெரி
சித்தவ **நுக்ரக** **மறவேனே;**

கத்திய தத்தைக ளைத்துவி ழத்திரி
கற்கவ ணிட்டெறி தினைகாவல்-

கற்றகு றத்திநி றத்தக ழுத்தடி
கட்டிய ணைத்தப னிருதோளா;

சத்தியை யொக்கஇ டத்தினில் வைத்தத
கப்பனு மெச்சிட மறைநூலின்-

தத்துவ தற்பர முற்றுமு ணர்த்திய
**சர்ப்ப கிரிச்சுரர்** பெருமாளே. (18)

## 385. நிலைத்த பத்தியைப் பெற

தத்ததன தான தத்ததன தான
தத்ததன தான தனதான

† புற்புதமெ னாம அற்பநிலை யாத
பொய்க்குடில்கு லாவு மனையாளும்-

புத்திரரும் வீடு மித்திரரு மான
புத்திசலி யாத பெருவாழ்வு;

நிற்பதொரு கோடி ‡கற்பமென மாய
நிட்டையுடன் வாழு மடியேன்யான்-

---

* "செய்ப்பதி வைத்து" என்றும் பாடம். இந்தப் பாடத்துக்குத் திருப்புகழ்ப் பாடல்களில் 'செய்ப்பதி' வரும்படியாக வைத்து என்றாவது (விநா. திருப்புகழ் 3), வயலூரில் வைத்து (வயலூரில் எனக்கு அனுக்கிரகித்து ) என்றாவது பொருள் காண வேண்டும். "திருப்புகழ் நித்தம் பாடும் அன்பது செய்ப்பதியில் தந்தவன் நீயே" என்றார் பிறிதோரிடத்-தாதலின் (திருப்புகழ் 105-பார்க்க). அண்ணாமலையில் மௌனோபதேசத்-தையும் (திருப்புகழ் 515), வயலூரில் திருப்புகழ்க் கவித்துவக் கீர்த்தியையும் (திருப்புகழ் 135) அருணகிரியார் பெற்றனர் என்பது அவர் திருவாக்கினா-லேயே பெறப்படுகின்றது.

(அடுத்த பக்கம் பார்க்க)

சொல்லும்படியாக வைத்தும், (அந்தப் பாடல்கள்) உலகில் பரவும்படியாக வெளிப்படுத்தியும் (நீ) அநுக்கிரகம் புரிந்ததை மறவேன்;

கத்துகின்ற கிளிகள் களைத்து விழும்படி, சுழற்றும் கவணில் (கல்லெறியும் கருவியில்) கல்லை வைத்து எறிந்து தினைப் புனத்தைக் காவல் செய்யக்

கற்ற குறத்தி (வள்ளியின்) ஒளி பொருந்திய கழுத்தின் அடியிற் கட்டி அணைத்த பன்னிரு தோளனே!

சத்தியை (பராசத்தி பார்வதியை) பொருந்தும்படி இடது பாகத்தில் வைத்த தந்தையாம் (சிவன்) மெச்சும் படியாக மறை நூலின் (வேத நூலின்)

தத்துவம் (உண்மைப் பொருள்), தற்பரம் (பரம்பொருள்) ஆகிய எல்லாவற்றையும் போதித்து விளக்கிய பெருமாளே! சர்ப்பமலை என்னும் திருச்செங்கோட்டுப் பெருமாளே! தேவர் பெருமாளே!

(அநுக்கிரகம் மறவேனே)

## 385

நீர்க் குமிழி என்னும் பேர்படைத்து, சிறிதளவும் நிலைத்திராத பொய்க் குடிசையான (இவ்வுடலுடன்) குலவுகின்ற மனையாளும்-

புத்திரரும், வீடும், நண்பர்களும், ஆன சூழலில் புத்தி சோர்வு அடையாமல் (இவ்வாழ்வு) பெருவாழ்வு, இது

(நிலைத்து) நிற்பது ஒரு கோடி காலம் என்னும் மாயமயக்கத் தியான நிலையில் வாழுகின்ற அடியேனாகிய நான்-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

† புற்புதம் - நீர்க் குமிழி.

‡ கற்பம் - பிரமனது ஒரு நாள் (நானூற்று முப்பத்திரண்டு கோடி வருடங் கொண்டது பிரமனது ஒருநாள்).

நித்தநின தாளில் வைத்ததொரு காதல்
நிற்கும்வகை யோத நினைவாயே;
சற்பகிரி நாத *முத்தமிழ்விநோத
சக்ரகதை பாணி மருகோனே-
†தர்க்கசமண் மூகர் மிக்ககழு வேற
வைத்தவொரு காழி மறையோனே;
கற்புவழு வாது வெற்படியின் மேவு
கற்றைமற வாணர் கொடிகோவே-
கைத்தஅசு ரேசர் மொய்த்தகுல கால
கற்பதரு நாடர் பெருமாளே. (19)

## 386. திருவடி பெற

தத்தத்தத் தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தத்தத் தனதான

பொற்சித்ரப் பச்சைப் பட்டுக்
கச்சிட்டுக் கட்டிப் பத்மப்
புட்பத்துக் கொப்பக் கற்பித் திளைஞோர்கள்-
புட்பட்டுச் செப்பத் துப்பற்
கொத்தப்பொற் றித்தத் திட்பப்
பொற்பிற்‡பெற் றுக்ரச் சக்ரத் தனமானார்;
கற்சித்தச் சுத்தப் பொய்ப்பித்
தத்திற்புக் கிட்டப் பட்டுக்
கைக்குத்திட் டிட்டுச் சுற்றித் திரியாமல்-

---

* முத்தமிழ் விநோத - 'தமிழ்த்ரய விநோதக் கலாதரனும்' - வேடிச்சி காவலன் வகுப்பு. 'தமிழ்த்ரய விநோதக்காரன்' - வேளைக்காரன் வகுப்பு. 'முத்தமிழ் வித்வ விநோதா கீதா' - (திருப்புகழ் 838)

† சமணர்கள் தோல்வியுற்று வாயிழந்தாராதலின் 'மூகர்' எனப்பட்டார். அவர்கள் கழு ஏறின வரலாற்றைப் பாட்டு 181 கீழ்க்குறிப்பிற் பார்க்க. ‡ பெற்றுக்ர - பெற்ற உக்கிர.

தினந்தோறும் உன்னுடைய திருவடியில் வைத்த ஒரு ஆசையானது நிலைத்து நிற்கும் வழியை அடியேனுக்கு உபதேசிக்க நீ நினைத்தருள வேண்டுகின்றேன்;

சர்ப்பமலை (திருச்செங்கோட்டு) நாதனே! முத்தமிழ் விநோதனே! (முத்தமிழிற் பொழுது போக்குபவனே!) சக்கரம் கதை இவைகளைக் கரத்திற் கொண்ட திருமாலின் மருகனே!

வாது செய்த சமண ஊமைகளை நிறைந்த கழுவில் ஏற வைத்த ஒப்பற்ற காழி அந்தணனே!

கற்பு நிலை தவறாமல் வள்ளிமலை அடிவாரத்தில் இருந்த கூட்டமான வேடர்களின் (கொடியன்ன) மகளாம் வள்ளியின் தலைவனே!

(தேவர்கள்) வெறுத்த அசுரத் தலைவர்களின் நெருங்கிய குலத்துக்குக் காலனாயிருந்தவனே (அசுரர் குலத்தை அழித்தவனே)! கற்பக விருட்சம் உள்ள நாட்டினராம் (தேவர்தம்) பெருமாளே!

(நினதாளில் காதல் நிற்கும்வகை ஓத நினைவாயே)

# 386

அழகிய விசித்திரமான பச்சைப் பட்டாலாய ரவிக்கையை அணிவித்துக் கட்டித் தாமரைப் பூவுக்கு ஒப்பாகும் என்று கற்பனை கூறி இளைஞோர்கள்-

பறவை வலையிற் சிக்கினது போல (வேசையர்களின் வலையிற்) சிக்கி நன்றாக (அவ்வேசையர்களின்) பல்லாற் கொத்தப் பெற்று (பல வைதல் மொழிகளாற் பேசப் பெற்று) பொன் தித்த பொன்னை (தனத்தை) அடைவதற்கு வேண்டி அப்பொருளைத் தெளிவான வகையில் பக்குவமாகப் பேசிப் பெறுகின்ற கொடிய சக்கரம் போன்ற வட்ட வடிவுள்ள கொங்கைகளை உடைய மாதர்களின்-

கல்லைப்போன்ற கடினமான நெஞ்சமாகிய சுத்தப் பொய்யான பித்துச் சூழலிற் புகுந்து, அதில் அதிக இட்டத்தை வைத்து, (தன்னைப்போல் அவ்வேசையர்களிடம் வரும் பிற காமுகர்களுடன்) கைக் குத்துச் சண்டையும் போட்டு (அங்கும் இங்கும்) சுற்றித் திரிந்து அலையாமல்-

*கற்றுற்றுச் சித்திக் கைக்குச்*
*சித்திப்பப் பக்ஷத் திற்சொற்*
*கற்பித் *தொப் பித்துக் கொற்றக்* **கழல்தாராய்-**

*குற்சித்துக் கொட்டுக் கொட்டுத்*
*துக்கச்சத் துக்குக் குக்குக்*
*குக்குக்குக் குக்குக் குக்குக்* *கெனமாறா-*

*†குட்சிக்குப் பக்ஷிக் கைக்குக்*
*கக்ஷத்திற் பட்சத் தத்தக்*
*கொட்டிச்சுட் டிக்‡கொக் ரிக்குக்* *குடதாரி;*

*சற்சித்துத் தொற்புத் திப்பட்*
*சத்தர்க்கொப் பித்தட் சத்துச்*
*சத்தத்தைச் சத்திக் கொச்சைப்* *பதிவாழ்வே-*

*தக்ஷப்பற் றுக்கொர்ப் பத்திற்*
*செற்பற்றைச் §செற்றிட் டுச்சச்*
**¶சற்பப்பொற் றைக்குட்** *சொக்கப்* *பெருமாளே.* (20)

---

* "வரிய பதத்தினின் அருவி இருப்பிடம் உனது பதச் சரண்" என்னும் பாடலின் (285) கருத்து இது.

† கோழி பசி எடுத்தால் இரை வேண்டிக் கூவும்-

"பச்சிறைச்சியைப் பசித்து இரைக்கு இசை கூவும்

(பெடைத் திரட் களித்த) குக்குடம்" (திருப்புகழ் - 253)

‡ கொக்ரி - கொக்கரி : கூவிய.

§ செற்றிட்ட உச்ச எனப்பிரிக்க; கருவிற் புகுத்தும் பற்றை ஒழித்த பெருமாளே - என்பது ஆசிரியர் வரலாற்றை விளக்கும்.

¶ சற்பப் பொற்றை - நாக மலை.

(உன்னை) ஓதுதலைக் கொண்டு, நல்ல சித்தியானது கை கூடுதற்கு அன்புடன் (அடியேனுக்கு), உன்னைத் துதிக்கும்) சொற்கள் (என் நெஞ்சில்) தோன்றுமாறு கற்பித்து அச்சொற்களை உனது திருவடிக்கே நான் ஒப்பிக்குமாறு (அடியேனுக்கு) உனது வீரக் கழலைத் தந்தருளுக.

(பசிக்கு இரையில்லையே என்று) அருவருப்புடன், கொட்டுக் கொட்டென்னும் (பசியால்) (துக்கம் - அச்சம்) வருத்தமும் திகிலும் கொண்டு குக்குக் குக்குக் குக்குக் குக்குக் என்று ஓயாமல்-

வயிற்றின் இரைக்காக (தீனிக்காக) விலாப்புறத்துப் பக்கங்களிற் படும்படி (சிறகை) அடித்துக், குறிப்புடன் கொக்கரிக்கின்ற சேவலைத் தரித்தவனே!

என்றும் உள்ளவராய், அறிவுருவானவராய், பழையராய், ஞானியாய், (பட்ச) அன்பு வாய்ந்த அத்தர்க்கு (தந்தையாம் சிவனுக்கு), ஒப்பித்த அட்சத்துச் சத்தத்தை (அட்ச (ர)த்து சத்தத்தை) ஒப்பித்த எழுத்துக்களின் ஒலியைச் சமர்ப்பித்த - (தேவாரப் பாடல்களைப் பாடிச் சமர்ப்பித்த) வல்லமை வாய்ந்த சீகாழிப்பதிச் செல்வனே! (திருஞானசம்பந்தப் பெருமானே)! (அல்லது தந்தையாம் சிவனுக்கு 'ஓம்' என்னும் எழுத்தின் சத்து அதை (சத்ததை) - சத்தான பொருளை ஒப்பித்த (உபதேசித்த சத்தி வாய்ந்த சீகாழிப் பதிச் செல்வனே!) அல்லது அட்ச (ய)த்து சத்து அதை - அழிவிலாத சத்தான பிரணவப் பொருளை உபதேசித்தவனே!

தட்ச(ண)ம் பற்றுவதும் (உடனே பற்றிக்கொள்வதும்) கருவிற் செலுத்துவதுமான பற்றை (மூவாசைகளை)ச் செற்றிட்ட (தடுத்து ஒழித்த) உச்ச (மேலோனே)! அல்லது தடுத்து ஒழித்த பெருமாளே! உச்சம் (உயர்ந்துள்ள) நாகமலை என்கிற திருச்செங்கோட்டில் அழகிய பெருமாளே!

(கொற்றக் கழல் தாராய்)

## 387. முருகன் வர

*தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன தனதான*

கொடிய மறலியு மவனது கடகமு
மடிய வொருதின மிருபதம் வழிபடு
*குதலை யடியவ னினதருள் கொடுபொரு மமர்காண-

குறவர் மகள்புணர் புயகிரி சமுகமு
மறுமு கடும்வெகு நயனமும் †ரவியுமிழ்
கொடியு மகிலமும் வெளிபட இருதிசை யிருநாலும்;

படியு நெடியன எழுபுண ரியுமுது
‡திகிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வருமொரு மரகத துரகத மிசையேறிப்-

பழய அடியவ ருடனிமை யவர்கண
மிருபு டையுமிகு தமிழ்கொடு மறைகொடு
பரவ §வருமதி லருணையி ¶லொருவிசை **வரவேணும்;**

சடில தரவிட தரபணி தரதர
பரசு தரசசி தரசுசி தரவித
தமரு கமிருக தரவனி தரசிர தரபாரத்-

---

* குதலை அடியவன் - அடியார்களுள் தான் ஒரு குழந்தை என்றபடி.

† ரவி யுமிழ் கொடி - கோழிக் கொடி; இருள் ..... மட்கப்... புகல்... கொடி (478), ரவி யுமிழ் துவசம் (1008) என்பர் பின்னும்.

ரவி உமிழ் கொடி - சூரியனைக் கக்குகின்ற சேவல்-

"அல்லைப் பொறா முழங்கு சொல் உக்ரசேவல்" என்றார் 315-ஆம் பாடலில்.

‡ திகிரி திகிரி - சக்ரவாள கிரி.

§ வரும் அதில் - வந்தது போல.

¶ "பரவி வர மதில் அருணையில்" என்றும் பாடம்.

## 387

கொடியவனான யமனும் அவனுடன் வந்த கடகமும் (படையும் சேனையும்) இறந்துபோம்படி, ஒரு நாள் உனது இரண்டு திருவடிகளையும் வழிபட்டு நிற்கும் (இந்த) மழலைச் சொல் பேசும் அடியவன் (குழந்தை அடியானாகிய நான்) உன்னுடைய திருவருளையே துணையாகக்கொண்டு சண்டையிடும் போரினைப் பார்ப்பதற்கு-

குறவர் மகளாம் (வள்ளி) அணையும் புய மலைச் சமூகமும் (பன்னிரு புயத்திரளும்), ஆறு திருமுகங்களும், பலவான (பன்னிரு) கண்களும், இரவி (சூரியனை) உமிழ் (கூவி வெளிப் படுத்தும் - வரவழைக்கும்) கொடியாகிய கோழியும் ஆக எல்லாம் பிரத்தியட்சமாக, பத்துத் திசைகளையும் (அல்லது பெரிய திசைகளாம் எட்டுத் திசைகளையும்)

பூமியையும், பெரிதாய் உள்ள ஏழு கடல்களையும், பழைய சக்கரவாளக் கிரியையும் வலம்வர வேண்டுமென்றாலும் வலம் வரத் தக்கதாய் வலம் வந்த ஒப்பற்ற பச்சைக் குதிரை (மயிலின்) மேல் ஏறி

பழைய அடியார் கூட்டம் தேவர் கூட்டம் (ஆகிய இரு கூட்டமும்) இரண்டு பக்கத்திலும் வர மிக்கெழுந்த ஓசையுடன் தமிழ்கொண்டும், மறை கொண்டும் போற்ற (அடியார் தமிழ் கொடு போற்ற, இமையவர் மறை (வேதம்) கூறிப் போற்ற), அன்று அடியேனை ஆட்கொள்ள (அருணையில்) வந்ததுபோல ஒருமுறை வந்தருளவேண்டும், (யமனொடு அடியேன் செய்யும் போரினைக் காண வரவேணும்)

சடாபாரத்தைத் தரித்தவரும், நஞ்சை உண்டு கண்டத்தில் தரித்தவரும், பாம்பைத் தரித்தவரும் மேலான மழு ஆயுதத்தைத் தரித்தவரும், சந்திரனைத் தரித்தவரும், பரிசுத்தத்தை உடையவரும், விதம் விதமாக ஒலிக்கும் டமருகத்தையும் (உடுக்கையையும்), மிருகம் (மானையும்) தரித்தவரும், வனி (வன்னி) அக்கினியை (கரத்தில்) தரித்தவரும், சிரமாலைகளைத் தரித்தவரும் பாரமான,

*தரணி தரதநு தரவெகு முகசூல*
*தடினி தரசிவ சுதகுண தர*பணி*
*சயில விதரண தருபுர சசிதரு மயில்வாழ்வே;*

*நெடிய வுடலுரு இருளெழ நிலவெழ*
*எயிறு சுழல்விழி தழலெழ எழுகிரி*
*நெரிய அதிர்குரல் புகையெழ இடியெழ நெடுவானும்-*

*நிலனும் வெருவர வருநிசி சரர்தள*
*நிகில சகலமு மடியவொர் படைதொடு*
*நிருப குருபர சுரபதி பரவிய பெருமாளே* (21)

---

## கொல்லிமலை

*(இது சேலம் மாவட்டம் நாமக்கல்லுக்குச் சமீபத்திலுள் ளது; தென் கிழக்கு சுமார் 9 மைல் தூரம்" "சதுரகிரி" என்பது மிதுவே.)*

### 388. மாதர் மயலால் வரும் துன்பம் அற

*தத்த தன்ன தய்ய தத்த தன்ன தய்ய*
*தத்த தன்ன தய்ய தனதான*

*கட்ட மன்னு மள்ளல் கொட்டி பண்ணு மைவர்*
*கட்கு மன்னு மில்ல மிதுபேணி -*

*கற்ற †விஞ்ஞை சொல்லி யுற்ற வெண்மை யுள்ளு*
*கக்க எண்ணி முல்லை நகைமாதர்;*

*இட்ட மெங்ங னல்ல கொட்டி யங்ங னல்கி*
*யிட்டு பொன்னை யில்லை யெனஏகி-*

---

* பணி சயில - நாகமலையி லிருப்போனே!

† விஞ்ஞை - விஞ்சை; வித்தை.

பூமியைத் தாங்குவதான மேரு மலையாகிய வில்லைத் தரித்த வரும், பலமுகமாகப் பரந்து ஓடும் விசேட நதியாகிய கங்கையைத் தரித்தவரும் ஆன சிவபிரானது சுதனே (குமரனே)! நற்குணம் வாய்ந்தவனே! பாம்பு மலையாம் திருச்-செங்கோட்டில் வீற்றிருக்கும் கொடையாளியே; (அல்லது) தயாநிதியே! கற்பக விருட்சம் உள்ள நகரமாகிய அமராவதியில் (பொன்னுலகில்) உள்ள (இந்திரன் மனைவி) சசி (இந்திராணி) வளர்த்த மயிலன்ன தேவசேனைக்கு நாயகனே!

பெரிய உடலும், (உருவம் இருள்போல எழுந்து இருண்டதும்) இருண்ட உருவும், நிலவு போல வெண்ணிற ஒளியை வீசும் பற்களும், சுழலுகின்ற கண்களில் நெருப்பு எழ, ஏழு மலைகளும் நெரிபட, அதிர்ச்சி செய்யும் குரலினின்றும் புகை தோன்றவும், இடிபோல ஒலி பிறக்கவும், பெரிய விண்ணுலகும்,

மண்ணுலகும் அச்சம் கொள்ள வந்த அசுரர்களின் சேனை எல்லாமும் (ஒன்று பாக்கியில்லாமல்) இறந்தொழிய ஒப்பற்ற படை (வேலைப்) பிரயோகித்த அரசே! குருமூர்த்தியே! தேவர் தலைவனாம் இந்திரன் போற்றின பெருமாளே!

(மறலி மடிய பொரும் அமர்காண வரவேணும்)

## கொல்லிமலை

## 388

கட்டங்கள் பொருந்தியுள்ள அள்ளல் சேறு, கொடு கொட்டி ஆடல்போலக் கூத்தாட்டி வைக்கும் ஐவர்கட்கும் ஐம்புலன்களுக்கும் இருப்பான இல்லம் (வீடு), ஆகிய இவ்வுடலை விரும்பி -

நான் கற்ற வித்தைகளைச் சொல்லி, பொருந்திய எளிமையை (சுலபமாக எண்ணம் நிறைவேறும் என்று) உள்ளம் உவக்க (மகிழ) நினைத்து, முல்லை மலர் போன்ற பற்களை உடைய மாதர்களின்

இட்டம் எப்படியோ (அந்த இட்டத்துக்கு அப்படியே இணங்கி), நல்ல (பொருள்களை) எல்லாம் ஒன்றாகக் கொட்டி (அல்லது) அவர்களிடத்திற் கொடுத்த பின்னர், பின்னும் கொடுப்பதற்குப் பொன் இல்லை என்று சொல்ல, வெளி வந்து

எத்து பொய்ம்மை யுள்ள லூற்று மின்மை யுள்ளி
*யெற்று மிங்ங னைவ தியல்போதான்;

†முட்ட வுண்மை சொல்லு செட்டி திண்மை கொள்ள
முட்ட நன்மை விள்ள வருவோனே-

முத்து வண்ண வல்லி சித்ர வண்ண வல்லி
‡முத்தி விண்ண வல்லி மணவாளா;

§பட்ட மன்ன வல்லி ¶மட்ட மன்ன வல்லி
பட்ட துன்னு கொல்லி மலைநாடா-

---

* எற்றுதல் - இரங்குதல் - 'எற்றிய காதலினால் இசைத்தாள்' (தஞ்சை வாணன் 224)

† இந்த அடி முருகவேள் உருத்திர சன்மராக - (செட்டியாக)த் தோன்றி இறையனாரகப் பொருளின் உண்மைப் பொருளைச் சங்கப் புலவர்க்குத் தெளிவுப்படுத்திய திருவிளையாடலைக் குறிக்கும். பாட்டு 92, பாட்டு 126, பாட்டு 234, பாட்டு 350 பார்க்க

‡ தேவ சேனை - முத்தி தரு மாது-

" அமுதத் தெய்வானை திரு முத்தி மாது" - திருப்புகழ் 764.
" முத்தித் தரு பத்தித் திருநகை அத்தி" திருப்புகழ் 1.
" இந்திரன் பெண் இன்ப முத்தி" கோழி பிறப்பு வெண்பா.

§ பட்ட மன்னு அ வல்லி - பட்டம் - வழி - (பிங்கலம்) கொல்லிப் பாவையின் பிரதிமை (உருவம்) அவுணரும் அரக்கரும் வரும் வழியில் நிலை நிறுத்தப்பட்டபடியால் பட்ட மன்னு வல்லி:

¶ மட்டம் - கள் - 'மட்டம் பெய்த மணிக்கலம்' குறுந்தொகை 193.

மட்ட மன்ன மல்லி - கள் போல மயக்கம் (மோகம்) தரும்வல்லி இங்கு வல்லி என்றது 'கொல்லிப் பாவை' யை; கொல்லிப்பாவை. இது கொல்லிமலையில் உள்ள ஒரு பெண்பாற் பிரதிமை; மோகினி வடிவம் உடையது; கொல்லிமலையிலுள்ள தேவரையும் முநிவரையும் துன்புறுத்த வருகின்ற அவுணரும் அரக்கரும் அப்பாவையின் நகையைக் கண்டு மயங்கி உயிர் விடும்படி தேவ தச்சன் ஆக்கிவைத்தது. அவுணரும் அரக்கரும் அங்கு வரும்போது அவர் வாடை பட்டவுடனே தானே நகை செய்யுமாறு பொறி பிரதிமையின் உள்ளே வைக்கப்பட்டது ஆதலால் கொல்லிப்பாவை நகைத்துக் கொல்லும் என்பர்.

(அடுத்த பக்கம் பார்க்க)

ஏமாற்றும் பொருட்டு, பொய் வழியை யோசிக்கலுற்றும், (பொன்) இல்லாமையை நினைத்து இரக்கமுற்றும் - இவ்வாறு மனம் நைந்து வருந்துதல் தக்கதாமோ (தகாது என்றபடி);

முழு உண்மையைச் சொன்ன செட்டியாக (கலாம்செய்த புலவர்கள்) உறுதிப் பொருளை அறிந்து கொள்ள முழுதும் நன்மையே (பெருக) வந்தவனே!

முத்துநிற வல்லி, அழகிய சித்ரநிற வல்லி, முத்திதர வல்ல விண்ணுலக வல்லியாம் தேவசேனையின் மணவாளனே!

பட்டம் மன்னு அ வல்லி (வழியில் அமைக்கப்பட்டிருந்த மோகினிப் பெண்) மட்டம் மன்னு அ வல்லி (மது மயக்கம் போல) மயக்கம் தரும் மோகினிப் பெண் ஆகிய " கொல்லிப் பாவை" இருக்கும் நெருங்கிய கொல்லிமலை நாடனே!

அல்லது, மட்ட மன்னவல்லி பட்ட, பட்டமன்னவல்லி துன்னு கொல்லி மலைநாடா என அந்வயப்படுத்தி, மதுபோல மயக்கவல்ல பெண்ணாம் கொல்லிப் பாவை பட்ட - வள்ளி அழகுக்கு முன் நம் அழகு எந்த மூலை என்று கண்டு கொண்டு கொல்லிப் பாவை தோல்வியுற்ற, பட்ட மன்னவல்லி - அழகு முதலிய உயர்ந்த செல்வங்கள் நிறைந்த வல்லி (வள்ளி நாயகி) நெருங்கி அணையும் மலை நாடனே, கொல்லிமலை நாடனே!

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

" திரிபுரத்தைச் செற்றவனும், கொல்லிச் செழும் பாவையும் நகைக்கக் கற்ற தெல்லாம் இந்த நகை கண்டேயோ" (சித்திரமடல்) (நற்றிணை - 185.)

மன்னு அ வல்லி என்றது - (மன்னுதல் நிலை பெற்றிருத்தல்) இக் கொல்லிப்பாவை - காற்று, மழை, இடி, பூகம்பம் முதலிய இடையூறுகளால் தனது உருக் கெடாமல் என்றும் தன் இயல்பு கெடா திருப்பது. இதனைக் 'கொல்லித் தெய்வம்... கால் பொருது இடிப்பினும், கதழுறை கடுகினும், உருமுடன்று எறியினும், ஊறு பல தோன்றினும், பெரு நிலங் கிளரினும், திரு நல உருவின் மாயா இயற்கைப் பாவை" என்றதனால் அறிகின்றோம்.
(நற்றிணை - 201)

பச்சை வன்னி யல்லி செச்சை சென்னி யுள்ள
பச்சை மஞ்ஞை வல்ல பெருமாளே. (1)

## 389. பேரின்பம் உற

தய்யதன தானந்த தய்யதன தானந்த
தய்யதன தானந்த தனதான

தொல்லைமுதல் * தானொன்று †மெல்லியிரு பேதங்கள்
சொல்லு‡குண மூவந்த மெனவாகி-

துய்யசதுர் வேதங்கள் வெய்யபுல னோரைந்து
தொய்யுபொரு ளாறங்க மெனமேவும்;

பல்லபல நாதங்கள் அல்கபசு பாசங்கள்
பல்குதமிழ் தானொன்றி யிசையாகிப்-

பல்லுயிரு மாயந்த மில்லசொரு பாநந்த
பெளவ முறவேநின்ற தருள்வாயே;

---

* இப்பாட்டில் ஒன்று முதல் ஆறு வரையில் எண்கள் வருவது கவனிக்கற்பாலது: இதன் கருத்தை-

"ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான் குணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே"
(திருமந்திரம் -1)

என்னும் திருமந்திரத்துடன் ஒப்பிட்டுணரலாம்.

† மெல்லி இரு பேதங்கள் - சிவம் சத்தி இரண்டு.

‡ குணம் மூவந்தம் - இராசத, தாமத, சாத்துவீகம் என்னும் முக்குணமும், அவற்றையுடைய திரிமூர்த்திகளும்.

பசுமையான வன்னி, அல்லி, வெட்சி இவைதமை அணிந்த சென்னி (தலை) உள்ள பெருமாளே! பச்சை மயிலை நடத்த வல்ல பெருமாளே!

(நைவ தியல்போதான்)

# 389

பழம் பொருள், முதற்பொருள் எனத் தான் ஒன்றே விளங்குவதாய், சத்தி சிவம் என்னும் இரு வேறு தன்மையதாய், சொல்லப்படும் ராசத தாமத சாத்துவீக மெனப்படும் முக்குண முடிவாய் (முக்குணங்களை உடைய திரி மூர்த்திகளாய்),

பரிசுத்தமான நான்கு வேதங்களாய், கொடிய புலன்கள் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும்) ஓர் ஐந்தையும் சோர்வடையச் செய்யும் பொருள் கொண்ட ஆறு அங்கம் (வேதாங்கம்) சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம் என ஆறுவகைப்பட்ட வேதப்பொருள் உணர்த்துங் கருவிகளாய் விளங்குவதாய்,

பலப்பல ஒலிகளில் தங்குவதாய், உயிர், தனை என்பனவாய், பெருக்கும் தமிழிற் பொருந்தி இசை (இன்னிசை) யாய்

பல உயிர்களுமாய், முடிவில்லாததாய், உள்ள ஆனந்த உருவக் கடலை அடையும்படிச் செய்ய வல்ல பொருள் எதுவோ அந்தப் பொருளை அருளுவாயாக.

*கல்லுருக வேயின்கண் அல்லல்படு †கோவம்பு
கல்வருக வேநின்று ‡குழலூதுங்-

கையன்மிசை யேறும்பன் நொய்யசடை யோனெந்தை
கைதொழமெய்ஞ் ஞானஞ்சொல் கதிர்வேலா;

கொல்லைமிசை வாழ்கின்ற வள்ளிபுன மேசென்று
கொள்ளைகொளு மாரன்கை யலராலே-

கொய்து §தழை யேகொண்டு செல்லு ¶மழ வாகந்த
**கொல்லிமலை** மேனின்ற பெருமாளே. (2)

---

* இசைக்குக் கல்லும் உருகும் - என்பதற்குச் சான்று அகத்திய முநிவர் யாழ் வாசிக்கப் பொதியமலை உருகினது; இவ்வரலாறு பின்வருமாறு:- இராவணன் அகத்தியருடைய இருக்கையான பொதிய மலையிற் புக்க போது, அவனைப் பிணித்துத் தமிழகத்தை விட்டு அகற்றும் பொருட்டு, சுந்தருவ கானத்தைத் தம் யாழ் கொண்டு அகத்தியர் வாசிக்க, அந்த இசைக்குப் பொதிய மலை உருகி இராவணனைத் தன்னுள் சிக்க வைத்தது. பின்னர் இராவணன் வேண்ட அகத்தியர் அவனை விடுவித்தனர்; இவ்வரலாற்றை-

"இனிய பைந்தமிழின் பொதிய மால் வரைபோல் இசைக்கு உருகாது" - சோண சைலமாலை 26ஆம் பாட்டிலும்; மதுரைக் காஞ்சி 40 - 42 - மகாமகோபாத்தியாயர் உரைக்குறிப்பிலும் காணலாம். (பத்துப் பாட்டு 3 - ஆம் பதிப்பு - பக்கம் 342, 343.)

† கோ அம் புகல் வருக - பசுக்கள் அழகிய புகுமிடம் வந்துசேர.

‡ குழலூதும் கையின் மிசை ஏறு உம்பன் - விட்டுணுவாகிய இடபவாகனத்தை யுடைய பரமசிவன். திரிபுரத்தை எரிக்கச் சிவபிரான் தேரின் மீது ஏறின போது தேர் நெரிந்து பூமியில் அழுந்தியது; அப்போது திருமால் இடபமாகி இறைவன் கொடுத்த வலிமையால் தேரை முன்போல நிறுத்தினார். பின்னர், திருமால் இறைவனை வேண்டி அவரை எந்நாளும் சுமக்க மழவிடையாகவும், மாறாத பத்தியாளனாகவும் இருக்க வரம் பெற்றனர்.

(அடுத்த பக்கம் பார்க்க.)

மலையும் உருகும்படியாக மூங்கிலில் - கட்டப்படும் *பசுக்கள் அழகிய புகுமிடம் வந்து சேரும்படி நின்று †குழல் ஊதுகின்ற (புல்லாங்குழல் ஊதுகின்ற)

கையை உடையவனாம் (கண்ணபிரானாம்) திருமாலாகிய விடையின் மேல் ஏறும் உம்பன் (பெரியோன்), புன்சடையோன் - ஆகிய எந்தை சிவபிரான் கைதொழுது நிற்க மெய்ஞ்ஞானத்தைப் போதித்த ஒளி வேலனே!

(தினைக்) கொல்லையில் வாழ்ந்திருந்த வள்ளியின் (தினைப்) புனத்துக்குச் சென்று, (உயிரைக்) கொள்ளை கொளும் மன்மதனது கைம்மலர்ப் பாணங்களின் செய்கை-யாலே -

கொய்து தழை (தழை கொய்து) எடுத்துக் கொண்டு சென்ற கட்டழகுடையோனே! கந்தனே! கொல்லிமலை மேல் விளங்கும் பெருமாளே!

(ஆனந்த பௌவ முறவே நின்றதருள்வாயே)

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

" நினை எந்நாளும் பரித்திடவே - அறங்கள் கெழும மழ விடையாய் அடிமை கொண்டாய்"

- உபதேச காண்டம் (ஞானவரோதயர்) 2135 - 6.

§ தழை கொண்டு - அகப்பொருளில் 'தழை கொண்டு சேறல்' என்பது ஒரு துறை, தலைவிக்குக் கையுறையாகத் தலைவன் 'சந்தனத் தழை' போன்ற தழை ஆடை உடுக்கத் தருவது. "மலயத்து ஆரத் தழை யண்ணல் தந்தால் இவை யவள் அல்குற் கண்டால், ஆர் அத்தழை கொடுவந்தார் எனவரும் ஐயுறவே"- திருக்கோவையார் - 91.

முருகவேள் வள்ளிக்குத் தழை ஆடை கொண்டு சென்றதாக அருணகிரியார் இங்குக் குறிக்கின்றார். " தழை யுடுத்த குறத்தி" என்றார்; 296 - ஆம் பாடலின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

¶ மழவன் - கட்டழகுடையோன்

## ராசகெம்பீர வளநாட்டு மலை

* ராசகெம்பீரன் மலை என்பது திருக்கற்குடிக்குப் பெயர். (திருப்புகழ் பாடல் *345-346* பார்க்க.) *100* -ஆம் பாடலில் ராசகெம்பீர நாடென்றதைக் காண்க. ராசகெம்பீர வளநாடு சோழ நாட்டின் ஒரு பகுதி - தக்கயாகப்பரணி - பக்கம் *247, 381.*)

### 390. பரமார்த்த தரிசனை பெற

தானனந் தானதன தாத்த தனதன
தானனந் தானதன தாத்த தனதன
தானனந் தானதன தாத்த தனதன தந்ததான

†மாகசஞ் சாரமுகில் தோற்ற குழல்கொடு
‡போகஇந்த் ராதிசிலை தோற்ற நுதல்கொடு
மானவண் டேறுகணை தோற்ற விழிகொடு
கண்டுபோல-

மாலர்கொண் டாடுகனி தோற்ற இதழ்கொடு
சோலைசென் றூதுகுயில் தோற்ற இசைகொடு
வார்பொரும் பாரமலை தோற்ற முலைகொடு
§ மன்றுளாடி;

சீகரம் பேணுதுடி தோற்ற இடைகொடு
¶போகபண் டாரபணி தோற்ற அரைகொடு
தேனுகுஞ் சீர்கதலி தோற்ற தொடைகொடு
வந்துகாசு-

---

* ராசகெம்பீரன் மலை திருக்கற்குடி என்று பிரமஸ்ரீ வித்வான் கி. வா. ஜகந்நாதையர் அன்புடன் தெரிவித்தார்.

திருக்கற்குடி சாசனம் XV *1455* A.D . கல்வெட்டு ஒன்று பின் வருமாறு தொடங்குகின்றது;

"தென்கரை இராஜ கெம்பீர வளநாடு கற்பிரம தேயத்து
உய்யக்கொண்டான் திருமலை நயினார் திருக்கோயில்
ஆதிசண்டேஸ்வர தேவர்"

† முதல் மூன்று அடிகள் கேசம் முதல் தொடைவரையும் வர்ணனை.

(அடுத்த பக்கம் பார்க்க)

## ராசகெம்பீர வளநாட்டுமலை
## 390

மாகத்தில் (ஆகாயத்தில்) சஞ்சரிக்கின்ற மேகத்தைத் தோல்வியுறும்படி செய்த கூந்தல் கொண்டும், போகங்களை அனுபவிக்கின்ற இந்திர வில்லை (வானவில்லைத்) தோல்வியடையும்படி செய்த நெற்றிகொண்டும், பெருமை தங்கிய வண்டுகள் சேர்கின்ற (காமனுடைய) மலர்ப் பாணங்களைத் தோல்வியுறச் செய்த **கண்கள்** கொண்டும், கற்கண்டு போல (இனிக்கின்றதென்று)

(காம) மயக்கம் கொண்டவர்கள் கொண்டாடுகின்ற கொவ்வைக்கனியைத் தோல்வியுறும்படி செய்த வாயிதழ் இதழூறல் கொண்டும், சோலையிற் போய் (அங்கே) ஒலி எழுப்புகின்ற குயிலைத் தோல்வி அடையும்படி செய்த **இசை** (இன்பம்) கொண்டும், கச்சு (ரவிக்கை) பொருந்திப் பாரமுள்ள மலையைத் தோல்வியுறும்படி செய்த **கொங்கை** கொண்டும், அம்பலத்தில் ஆடுகின்ற ஸ்ரீ நடராசப் பெருமான்-

திருக்கரத்தில் விரும்பி வைத்துள்ள துடியை (உடுக்-கையை)த் தோல்வி பெறும்படி செய்த **இடை** கொண்டும், காம போகத்துக்குப் பொக்கிச சாலையாம் பாம்பைத் தோல்வியுறச் செய்த அரை (அல்குல்) கொண்டும், தேன் சொட்டும் சிறப்புள்ள வாழையைத் தோல்வியுறச் செய்த **தொடை** கொண்டும், வெளியே வந்து காசு-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

‡ வானவில் நுதலுக்கு உவமை - 289ஆம் பாடலைப் பார்க்க.
§அடியார்களாம் புலவர்கள் உவமை கூறுவது ஈசன் சம்பந்தமாகவே இருக்கும். உதாரணமாக:-

" ஈசற்கு யான்வைத்த அன்பின் அகன்(று, அ)வன் வாங்கிய என்
பாசத்தின் காரென்(று), அவன் தில்லையின் ஒளி போன்(று)
அவன் தோள்
பூசத் திருநீ றெனவெளுத்(து), ஆங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த்தையிற் பெருநீளம் பெருங்கண்களே"
- என்றார் மணிவாசகர் (திருக்கோவை 109)

'நிதம்பம் முக்கணார் பூணாரம் நேரென' - என்றார் அல்குலைத் திருப்புகழிற் பிறிதோரிடத்து (பாடல் 506 பார்க்க).

¶ 'அல்குலைக் காம பண்டாரம்' என்கின்றார் 374, 619 ஆம் பாடல்களில்.

தேடுகின் றாரொடுமெய் தூர்த்த னெனவுற
வாடுகின் றேனைமல நீக்கி யொளிதரு
*சீவனொன் றானபர மார்த்த தெரிசனை
வந்துதாராய்;

†வேகமுண் டாகியுமை சாற்று மளவினில்
மாமகங் கூருமது தீர்க்க வடிவுடை
வீரனென் பானொருப ராக்ர னெனவர
அன்றுசோமன் -

---

* "சீவன் சிவச்சொரும்பம் என தேறி" - என வருவதைக் காண்க (பாடல் 239).

† வேகம் - கோபம்; " ஓவா வேகமோ டுருத்துத் தன்மேற் சென்ற சே" - கலித்தொகை - முல்லை - 3.

இந்தப் பாட்டின் 5,6,7 அடிகள் தக்கயாக தண்டனைகளை விளக்குகின்றன. தன் மருமகனான சிவபிரான் தன்னை மதிக்கவில்லை என்று கோபங்கொண்டு தக்கன் சிவபிரானை ஒதுக்கிவைத்து ஒரு யாகம் செய்யத் தொடங்கினான். அந்த யாகத்தைப் பார்க்க விரும்பி வந்த தக்கன் மகள் (சிவபிரான் மனைவி ) தக்கனாற் புறக்கணிக்கப்பட்டாள் . உமாதேவி தன் தந்தை (தக்கன்) மீது கோபங்கொண்டு இந்த யாகத்தை அழித்தருளுக எனச் சிவபிரானை வேண்ட, அவரது கோபத் தீயினின்றும் " வீரபத்திரர்" தோன்றினர். தேவியின் கோபத் தீயினின்றும் "காளி" தோன்றினள். சிவனது ஆணையின்படி வீரபத்திரரும் காளியும் தக்கனது யாக சாலைக்குப்போய்ச் சிவனை நிந்தித்த தக்கனை வெட்டி வீழ்த்தினார்கள். வீரபத்திரர் அங்கு இருந்த பல தேவர்களுக்கும் பலவித தண்டனைகளை அளித்தார். சந்திரனைக் காலால் தேய்த்தார்; ஒரு சூரியனுடைய பற்களை உடைத்தெறிந்தார்; பிறிதொரு சூரியனுடைய கண்ணைப் பிடுங்கிவிட்டார்; அக்கினியின் கையைத் துண்டம் ஆக்கினார்; சரச்வதியின் மூக்கை அறுத்தார்;

" சுருதியான் தலையும் நாமகள் மூக்கும் சுடரவன் கரமும்
முன்னியங்கு
பருதியான் பல்லும் இறுத்தவர்க் கருளும் பரமனார்" -
(சம்பந்தர் - III - 118 - 5.)

(அடுத்த பக்கம் பார்க்க)

தேடி நிற்கும் வேசையரோடு (பொழுது போக்கும்) உடல் கொண்ட பொல்லான் (அல்லது உண்மைப் பொல்லான்) என்று உறவாடுகின்ற எனது மலங்களை (ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களை) அழித்து நீக்கி, ஒளி வீசும் சீவனோடு ஒன்று பட்டதான பரம்பொருள் விளக்கக் காட்சியை வந்து தந்தருளுக.

வேகம் (கோபம்) தோன்றி, உமை கூறினவுடனே (தக்கனுடைய) பெரிய மகம் மேற்கொண்டு நடப்பதை அழிக்கும் பொருட்டு ஒளிநிறைந்த "வீர பத்திரன்" எனப்பட்ட பராக்ரமசாலியாகிய ஒப்பற்றவன் தோன்றிவர, அன்று, சந்திரன்-

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

" தக்கனது பெருவேள்விச் சந்திரன் இந்திரன் எச்சன் அருக்கன் அங்கி மிக்கவிதா தாவினொடும் விதிவழியே தண்டித்த விமலர்"

(சம்பந்தர் - I *131 - 3)*

" வேகம் உண்டாகி உமை சாற்றின" வாசகம் -

"சிறிய தொல்விதி பெரிதுனை இகழ்ந்தனன் பெரும அன்னவன்
அரிதுசெய் வேள்வியை அழித்தி என்னவே"

(கந்த புரா - உமை வரு. 59)

தேவர்கள் அடைந்த தண்டனைகள்:

அரி - 'கதைய தொன்றால் அடித்தனன்' 'அரிமுன் வீழ்ந்தான்'

பிரமன் - 'குட்டினன் ஒருதன் கையால்'

நாமகள் - 'மூக்கொடு குயமும் கொய்தான்.'

சந்திரன் - 'வீரன் தன்னொரு பதங் கொடே தேய்த்திட்டான்'

சூரியன் - 'கதிரவன்... கவுளிடை எற்றினான் உகுப்பத் தந்தமே'

பிறிதொரு சூரியன் - 'பகனெனும் வெய்யவன் விழிபறித்தனன்'

கூற்றுவன் (எமன்)- 'கூற்றுவன்... ஓடலும் வெட்டினன் அவன் தலை.'

இந்திரன் - 'வாசவன் குயிலென உம்பரில் அடைந்தனன், அண்ணல் விட்டினன்'.

அக்கினி - 'அங்கியை - அவன் கரத்தைத் துண்டமதாகவே துணித்து விட்டினான்'.

தக்கன் - 'ஈசனை இகழ்ந்தனை அதனால் தண்டம் ஈதென வாள் கொடே அவன் தலை தடிந்தான்'.

(கந்தபுராணம் - யாக சங்காரம் - 20-50.)

மேனியுந் தேயகதிர் தோற்ற எயிறுக
*ஆனுகுந் தீகையற †சேட்ட விதிதலை
வீழநன் பாரதியு மூக்கு நழுவிட வந்தமாயன்;

ஏகநின் றாகியமர் தோற்று வதறிட
வேகவுங் காரமொடு ஆர்க்க அலகைகள்
ஏறிவென் றாடுகள நீக்கி முநிவரர் வந்துசேயென்-

றீசநண் பானபுரு ஷார்த்த தெரிசனை
தாவெனுங் கேள்விநெறி கீர்த்தி மருவிய
ராசகெம் பீரவள நாட்டு மலைவளர் தம்பிரானே. (1)

---

## ஞானமலை

(இடம் விளங்கவில்லை. நாமக்கல்லுக்கருகில் நைனா மலையென்று மலையொன் றுண்டு.)

### 391. பொது மகளிர் உறவு அற

தானதன தான தானதன தான
தானதன தான தனதான

சூதுகொலை கார ராசைபண மாதர்
‡தூவையர்கள் சோகை முக§ நீலர்-

சூலைவலி வாத மோடளைவர் பாவர்
தூமையர்கள் கோளர் தெருவூடே;

சாதனைகள் பேசி வாருமென நாழி
தாழிவிலை கூறி தெனவோதி-

---

* ஆன் உகும் தீ - யாகப்பசுவை (தகித்து) பொடியாக்கும் அக்கினி.

† சேட்ட விதி - முதன்மையான தட்சப்பிரசாபதி.

‡ தூவையர்கள் - மாமிச பட்சணிகள். § நீலம் - விடம்.

உடல் தேய, சூரியனுக்கு உள்ள பற்கள் உதிர, (யாகப்) பசுவை(த் தடுத்து)ப் பொடியாக்கும் தீ (அக்கினியின்) கை அற்றுவிழ, முதன்மையான தக்கப்பிரசாபதியின் தலை அற்றுவிழ, நல்ல சரசுவதியின் மூக்கு அறுபட்டு நழுவி விழ, (அங்கு) வந்திருந்த திருமால் -

ஓட்டம் பிடிக்க அந்த யாக சாலையில் நின்று, போர் விளைத்து, (அங்கிருந்தவர்களை) வைது (திட்டி) கோப உங்காரத்தோடு ஆரவாரஞ் செய்யப் பேய்க்கூட்டங்கள் கூடி வென்று ஆடின அந்த (யாக) சாலையை விட்டு (நீக்க - விலக்க)- (அல்லது) (யாவரையும்) வெளியே நீக்கினவனான சிவனும், முனிவர்களும் வந்து (சேயே) என்றும்

'ஈச' என்றும் போற்றி, அன்பின்பாற்பட்ட (அறம், பொருள், இன்பம், வீடு) என்னும் (நால்வகைப்) புருசார்த்தங்களின் விளக்கக் காட்சியைத் தா (தந்தருளுக) (ஓதி அருளுக) என வேண்டின கேள்வி நெறியின் (விசாரணை செய்த நல்லொழுக்க நெறியின்) புகழைக் கொண்ட ராசகெம்பீரவள நாட்டு மலையில் விளங்கும் தம்பிரானே!

(பரமார்த்த தரிசனை வந்து தாராய்)

---

## ஞானமலை

## 391

சூதும் கொலையும் செய்பவர்கள், ஆசை பணத்திற் (பணத்தில் ஆசை) கொண்ட மாதர்கள், மாமிசம் உண்பவர்கள், ரத்தக் குறைவால் முகம் வெளுத்த விடமிகள்,

சூலைநோய், வலி, வாதநோய் - இவைகளோடு சம்பந்தப் படுபவர்கள் (கலப்பவர்கள்). பாபிகள், (சூதகத்தால்) பரிசுத்தம் இல்லாதவர்கள், கோள் சொல்பவர்கள், தெருவில் -

காரியம் சாதிக்கைக்கு வேண்டிய அழுத்தமான (பொய்ப்) பேச்சுக்களைப் பேசி, வாரும் என அழைத்து, ஒரு நாழி நேரம் (தங்களுடைய) பாண்டத்தின் (உடலின்) விலைத்திட்டம் (விலைக்கூறு) இது என்று சொல்லி-

சாயவெகு மாய தூளியுற *வாக
தாடியிடு வோர்க ளுறவாமோ;

†வேதமுநி வோர்கள் பாலகர்கள் மாதர்
வேதியர்கள் பூச லெனஏகி-

வீறசுரர் பாறி வீழஅலை யேழு
வேலையள றாக விடும்வேலா;

நாதரிட மேவு மாதுசிவ காமி
நாரியபி ராமி யருள்பாலா;

நாரண சுவாமி யீனுமக ளோடு
ஞானமலை மேவு பெருமாளே. (1)

## 392. திருவடி தீட்சை பெற

தனதன தனத்த தான தனதன தனத்த தான
தனதன தனத்த தான தனதான

மனையவள் நகைக்க வூரி னனைவரு நகைக்க லோக
மகளிரு நகைக்க தாதை தமரோடும்-

மனமது சலிப்ப நாய னுளமது சலிப்ப யாரும்
வசைமொழி பிதற்றி நாளு மடியேனை;

அனைவரு மிழிப்ப நாடு மனவிருள் மிகுத்து நாடி
னகமதை யெடுத்த சேம மிதுவோவென்;

* ஆக தாடியிடுவோர் - சரீரத்தைத் தட்டிக் கொடுப்போர்.

† போர் நிகழ்வதாயிருந்தால், நாட்டில் வாழும் அந்தணர், பெண்டிர், பிணியுழந்தோர், ஆனினங்கள் இவைகட்குத் தீமை உண்டாகாதவாறு, 'போர் நடக்கப்போகின்றது; பாதுகாவலான இடத்தை அடைவீராக' என முன் எச்சரிக்கை செய்யும் வழக்கம் முற்காலத்தில் இருந்தது;

‡ ஏகி - ஏகுவித்து.

(அடுத்த பக்கம் பார்க்க)

வந்தவர்கள் தங்கள் பக்கம் சாயும்படி (இணங்கும்படி) வெகு மாயப்பொடியைப் படும்படி அவர்கள்மீது தூவிச் சரீரத்தைத் தட்டிக் கொடுப்பவர்களாம் (வேசையர்களது) உறவு ஆமோ (உறவு கூடாது என்றபடி)

வேதம் (வல்ல) முநிவர்கள், குழந்தைகள், மாதர்கள், வேதியர்கள் இவர்களைப் போர் நடக்கப் போகிறதென்று அப்புறப்படுத்தி விட்டு,

(மிக்கு வந்த) மேலிட்டு வந்த அசுரர்கள் அழிந்து விழ, அலைகடல் ஏழும் வற்றிச் சேறாகச் செலுத்தின வேலனே!

சிவபிரானுடைய இடது பாகத்தில் உள்ள மாது, சிவகாமி, நாரி, அபிராமி அருளிய பாலனே!

நாராயணமூர்த்தி ஈன்ற மகள் (வள்ளியுடனே) **ஞானமலையில்** விரும்பி வீற்றிருக்கும் பெருமாளே!

(மாயதூளியுற ஆகதாடியிடுவோர்கள் உறவாமோ)

## 392

மனையாள் நகைக்க, ஊரில் உள்ள யாவரும் நகைக்க, உலகிலுள்ள மகளிர் நகைக்கத், தந்தை, சுற்றத்தாரோடும்

மனம் சலிப்ப (வெறுப்பு அடைய), அடியேனும் உள்ளம் வெறுப்ப, யாவரும் பழிப்பு மொழியைப் பலகால் ஆராயாது பேசி நாள்தோறும் அடியேனை-

எல்லாரும் இழிவாகப் பேச, எண்ணமிடும் மனத்தில் இருள் மிகுந்து, யோசித்துப் பார்த்தால் நான் (பிறப்பை) எடுத்த இன்பம் இதுதானோ என்று-

---

1 (முன்பக்கத் தொடர்ச்சி)

"ஆவும் ஆனியற் பார்ப்பன மக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்" - புறநானூறு - 9.

" தாபதர், நோயோர், பெண்டிரும் நும்மரண் ஏகுதிர் பெட்டென்று... பறை சாற்றி" - (காஞ்சிப்புரா - நாடு - 21.)

*றடியனு நினைத்து நாளு முடலுயிர் விடுத்த போது
மணுகிமு **னளித்த பாத** **மருள்வாயே;**

தனதன தனத்த தான எனமுர சொலிப்ப வீணை
தமருக மறைக்கு ழாமு மலைமோதத்-

†தடிநிக ரயிற்க டாவி யசுராக ளிறக்கு மாறு
சமரிடை விடுத்த சோதி முருகோனே;

எனைமன முருக்கி யோக அநுபுதி யளித்த பாத
‡எழுதரிய பச்சை மேனி யுமைபாலா-

இமையவர் துதிப்ப **ஞான மலை**யுறை குறத்தி பாக
இலகிய சசிப்பெண் மேவு பெருமாளே. (2)

---

## ஊதிமலை

(இது கோயமுத்தூர் மாவட்டத்தில் தாராபுரத்திலிருந்து காங்கேயத்துக்குப் போகும் வழியில் இடை நடுவில் பத்துக்கல் தூரத்தில் உள்ளது. 444 - ஆம் பாடலும் பாட பேதத்தின்படி, இத்தலத்துக்கு உரியதாம்.)

## 393. வணங்க

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான

ஆதிமக மாயி யம்பை தேவிசிவ னார்ம கிழ்ந்த
§ஆவுடைய மாது தந்த குமரேசா-

---

* இங்கு அருணகிரியாரின் வரலாறு உளது; தமது வாழ்க்கைத் துன்பத்தை நினைத்துத் தாம் உயிர் துறக்க நினைந்த வரலாற்றை நாலாவது அடியிலும், இறைவன் திருவடி சூட்டி யோகாநு பூதியைத்தமக்கு அருளிய திறனை ஏழாவது அடியிலும் அருணகிரியார் விளக்குகின்றனர். 'மனையவள் நகைக்க' என இப்பாடல் தொடங்குவதால் அருணகிரியார்

(அடுத்த பக்கம் பார்க்க)

அடியேனும் நினைத்து நாளும் (நாள்தோறும் நினைத்து) (முடிவில்) உடலினின்றும் உயிரை விடத் துணிந்த சமயத்தில் அடியேனிடம் வந்து - நீ அப்போது அளித்த (திருவடி தீட்சை செய்த) பாதத்தை - அருள்புரிந்து உதவுக.

தனதன தனத்த தான என்று முரசு (பறை) ஒலி செய்ய வீணை, தமருகம் (உடுக்கை), வேத ஒலிக் கூட்டம் இவை யெல்லாம் அலைமோதுவதுபோலப் (பெருக)-

மின்னல் போல ஒளிவிடும் வேலைச் செலுத்தி அசுரர்கள் இறக்குமாறு போர்க்களத்தே விடுத்த சோதி முருகனே!

என் மனத்தை உருக்கி, யோக அநுபூதியை அளித்த திருவடிகளை உடையவனே! எழுதுதற்கு அரிய பச்சை மேனியை உடைய உமையின் பாலனே!

தேவர்கள் துதிக்க ஞானமலையில் வீற்றிருக்கும் குறத்தி வள்ளியின் பங்கனே! விளங்குகின்ற சசி (இந்திராணி) யின் மகள் (தேவசேனை) விரும்புகின்ற பெருமாளே!

(முன் அளித்த பாதம் அருள்வாயே)

---

## ஊதிமலை

## 393

ஆதி, மகமாயி, அம்பை, தேவி, சிவபிரான் மகிழ்ந்த ஆ உடைய மாது (பசு ஏறும் பிராட்டி), பெற்ற குமரேசனே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)
மனைவியுடன் முதலில் வாழ்ந்தனர் என்று சிலர் கூறுவர்.

† தடி - மின்னல்.

‡ 'எழுதரிய சாமளமேனிச் சகலகலா மயில்' - அபி-அந்-96.

§ 'ஆவுடைய மாது' - திருப்பரங்குன்றத்துத் தேவி (பார்ப்பதியின்) பெயர் "ஆவுடை நாயகி"

அன்பார் திருப்பரங்குன் றாவுடை நாயகிசேர்
நன்பாற் பரங்கிரிநன் னாயகா!
- சிவசேத்திர சிவநாமக் கலிவெண்பா.

ஆதரவ தாய்வ ருந்தி யாதியரு ணேச ரென்று
ஆளுமுனை யேவ ணங்க அருள்வாயே;

*பூதமது வான வைந்து பேதமிட வேய லைந்து
பூரணசி வாக மங்க ளறியாதே;

பூணுமுலை மாதர் தங்கள் ஆசைவகையே நினைந்து
போகமுற வேவி ரும்பு மடியேனை;

நீதயவ தாயி ரங்கி நேசவரு ளேபுரிந்து
நீதிநெறி யே விளங்க வுபதேச-

நேர்மைசிவ னார்திகழ்ந்த காதிலுரை வேத மந்த்ர
நீலமயி லேறி வந்த வடிவேலா;

ஓதுமறை யாக மஞ்சொல் யோகமது வேபு ரிந்து
ஊழியுணர் வார்கள் தங்கள் வினைதீர-

†ஊனுமுயி ராய் வளர்ந்து ‡ஓசையுடன் வாழ்வு தந்த
ஊதிமலை மீது கந்த பெருமாளே.(1)

## 394. அருள் பெற

தான தனத்தத் தனத்த தந்தன
தான தனத்தத் தனத்த தந்தன
தான தனத்தத் தனத்த தந்தன தனதான

கோதி முடித்துக் கனத்த கொண்டையர்
சூது விதத்துக் கிதத்து மங்கையர்
கூடிய அற்பச் சுகத்தை நெஞ்சினில் நினையாதே-

---

* 'ஐம்பூதத்தா னாகியதோ ராக்கைக் குகை' - வேல்பத்து - 9. 'ஐம்பூதத்தாலே அலக்கழிந்த தோசமற' - தாயுமானவர் - எந்நாட்.

† 'ஊனாகி உயிராகி அதனுள் நின்ற உணர்வாகிப் பிறவனைத்தும் நீயாய் நின்றாய்' - அப்பர் VI - 62-2.

‡ ஓசை - கீர்த்தி - 'பெற்றதாய் ஓசைகொள் மைந்தரொடு உசாவி' - வில்லி பாரத - வேத. 22.

அன்புடனே, மனக் கசிவுடன், ஆதி அருணாசலேசுரர் என்று என்னை ஆண்டருளும் உன்னையே வணங்க (அருணாசலேசுரர் நீயே என்று உன்னை நான் வணங்க) அருள்புரிக.

(ஐம்பூதங்களால் ஆகிய உடலில்) பூதம் ஐந்தும் (மண், நீர், தீ, காற்று, வான் ஐந்தும்) வேற்றுமைப்படவே, அதனால் அலைந்து, முழுமையான சிவாகமங்களை ஓதி அறியாமல்,

ஆபரணங்கள் அணிந்த கொங்கையை உடைய மாதர்களின் மேல் ஆசை பலவாறு மனதிற்கொண்டு, அவர்களுடன் காமபோக இன்பத்தையே விரும்புகின்ற அடியேன்மேல்

நீ தயவுடன் இரக்கம் வைத்து, நண்பான அருள்புரிந்து, நீதி மார்க்கமே திகழ, உபதேச அறத்தின்

நுண்மையைச் சிவபிரானது விளங்கும் திருச்செவியில் உரைத்த வேத மந்திரத்தவனே (வேதமந்திரம் உரைத்தவனே)! நீல மயிலில் ஏறிவரும் கூரிய வேலனே!

ஓதப்படும் வேதமும் ஆகமமும் சொல்கின்ற யோகத்தையே புரிந்து, *(ஊழி) விதியின் போக்கை (அல்லது - உலகை) உணர்ந்து கொள்பவர்களுடைய வினை ஒழிய-

அவர்தம் ஊனும் உயிருமாய்க் கலந்து வளர்ந்து, கீர்த்தியுடன் அவர்களுக்கு நல்வாழ்வை அருளும் பெருமாளே! **ஊதிமலைமேல்** பிரியமுள்ள பெருமாளே! (அல்லது ஊதிமலைமேல் வீற்றிருக்கும்) கந்த! பெருமாளே!

(உனையே வணங்க அருள்வாயே)

## 394

மயிர் சிக்கெடுத்து, முடித்த, பெருத்த கூந்தல் முடியை உடையவர்கள், சூதான வழிகளுக்கு நன்கு வழி செய்யும் மங்கையர்கள், (ஆகிய பொதுமகளிரைக்) கூடுவதால் வரும் அற்பமான இன்பத்தை நெஞ்சில் நினையாமல் அந்த (அற்ப இன்பத்தை மனத்தினும் விலக்கி)

---

* ஊழி - விதி - " நல்லூழிச் செல்வம்" - கலித்தொகை 130. ஊழி- உலகம் என்னலுமாம். " ஊழி ஏழான ஒருவா போற்றி" (அப்பர்- VI - 55- 8).

கோழை மனத்தைக் கெடுத்து வன்புல
ஞான குணத்தைக் கொடுத்து நின்செயல்
கூறு மிடத்துக் கிதத்து நின்றருள் புரிவாயே;

நாத நிலைக்குட் கருத்து கந்தருள்
*போதக மற்றெச் சகத்தை யுந்தரு
நான்முக னுக்குக் கிளத்து தந்தையின் மருகோனே-

நாடு †மகத்தெற் கிடுக்கண் வந்தது
தீரிடு தற்குப் பதத்தை யுந்தரு
நாயகர் ‡புத்ரக் குருக்க ளென்றருள் வடிவேலா;

தோதிமி தித்தித் திமித்த டிங்குகு
டீகுகு டிக்குட் டிகுக்கு டிண்டிமி
தோதிமி தித்தித் தனத்த தந்தவெ னிசையோடே-

§சூழ நடித்துச் சடத்தில் நின்றுயி
ரான துறத்தற் கிரக்க முஞ்சுப
சோபன முய்க்கக் கருத்தும் வந்தருள் புரிவோனே;

ஓது¶ வெழுத்துக் கடக்க முஞ்சிவ
காரண பத்தர்க் கிரக்க முந்தகு
ஓமெ னெழுத்துக் குயிர்ப்பு $மென்சுட
ரொளியோனே-

**ஓதி யிணர்த்திக் குகைக்கி டுங்கன
காபர ணத்திற் பொருட் பயன்றரு
ஊதி கிரிக்குட் கருத்து கந்தருள் பெருமாளே. (2)

---

* போதக - ஞானகுருவே.

† அகத்தெற்கு - அடியேனுக்கு.

‡ புத்ரக் குருக்கள் - தகப்பன் சாமி.

§ இஃது அருணகிரியாரை முருகவேள் ஆண்டருளின வரலாற்றை விளக்கும்.

¶ எழுத்து - மந்திரம். $ என் - எனவுள்ள.

** ஓதி - ஒதி, ஒதியமரம்.

திடம் இல்லாத மனத்தை ஒழித்து (திடம் பெற்ற நெஞ்சைப் பெற்று), திடமுள்ள கூரிய மதியையும் ஞானத்தையும் கொண்ட குணத்தைத் தரப்பெற்று, உனது திருவிளையாடல்களைப் பேசும் இடங்களில் இன்பம் ஊற நான் நிற்கும்படி அருள் புரிவாயாக.

நாத நிலையில் (சிவதத்துவத்தில்) கருத்து வரும்படி மகிழ்ந்து அருள்புரியும் ஞானகுருவே! எல்லா உலகங்களையும் படைக்கும் பிரமனுக்குத் தாதையென்று சொல்லப்படும் திருமாலின் மருகனே!

உன்னை நாடும் அடியேனுக்குத் துன்பம் வந்தது (அடியேனுக்கு வந்த துன்பம்) தீரும்படி திருவடியைத் தந்த கூரிய வேலனே! நாதராம் சிவபிரான் 'பிள்ளைக்குருவே' (தகப்பன் சாமியே) என்று அன்புடன் உன்னை அழைத்தருளின வடிவேலனே (கூரியவேலா)!

தோதிமி தித்தித் திமித்த டிங்குகு.. தனத்த தந்த என்று இசையுடனே -

(கணங்கள்) சூழ நடனம் செய்து, உடலினின்றும் நான் உயிரை (விடுதற்கு) விடும்போது என் மீது இரக்கமும், என்னைச் சுப மங்கள வாழ்த்து நிலையிற் சேர்ப்பிக்கத் திருவுள்ளமும் கூடி வந்து எனக்கு அருள் புரிந்தவனே!

ஓதப்படும் மந்திரங்களுக்கு உட்பொருள் என்றும், சிவ சம்பந்தமான பத்தர்களிடத்தில் இரக்கமுள்ளவனென்றும், உயர்ந்த பிரணவ எழுத்துக்கு உயிர் நாடி என்றும் சொல்ல நின்ற பேரொளியானவனே!

ஒதியமரம் பூத்துக் குகையில் உதிர்க்கின்ற பொன் ஆபரணம் போல அருமையான மோட்சப் பலனைத்தரும் பெருமாளே! **ஊதிமலையில்** உள்ளம் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் பெருமாளே!

(அருள் புரிவாயே)

## குருடிமலை.

(இது கோயமுத்தூருக் கடுத்த துடியலூர் புகைவண்டி நிலையத்திற்கு அண்மையிலுள்ளது).

### 395. உலகோரைப் பாடுதல் ஒழிய

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான

கருடன் மிசைவரு கரிய* புயலென
கமல மணியென வுலகோரைக்-

கதறி யவர் பெயர் செருகி மனமது
கருதி †முதுமொழி களைநாடித்;

திருடி யொருபடி நெருடி யறிவிலர்
செவியில் நுழைவன கவிபாடித்-

திரியு மவர்சில புலவர் மொழிவது
சிறிது முணர்வகை யறியேனே;

‡வருடை யினமது முருடு படுமகில்
மரமு மருதமு மடிசாய-

§மதுர மெனுநதி பெருகி யிருகரை
வழிய வகைவகை குதிபாயுங்;

குருடி மலையுறை முருக குலவட
குவடு தவிடெழ மயிலேறுங்-

குமர குருபர திமிர தினகர
குறைவி லிமையவர் பெருமாளே. (1)

---

* புயல் - மேகம். புயல்நிறத் திருமால், இவை கைம்மாறு கருதாது அளித்தற்கும்; பதுமநிதி, சிந்தாமணி - வேண்டியதைக் கொடுப்பதற்கும், உவமையாம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

குருடிமலை

# 395

கருடன் மேல் வருகின்ற கருமேகம் போன்ற திருமால் (நீ) என்றும், தாமரை (பதுமநிதி), மணி (சிந்தாமணி) (நீ) என்றும் உலகத்தவரைக்-

கூச்சலிட்டுப் பாடிப், (பாடலில்) பாடப்படுபவருடைய பெயரை வைத்து அழைத்து, மனத்தில் மிக்க கருத்துடன் பழைய (செஞ்) சொற்களைத் தேடியும்.

திருடியும், ஒருபடி அளவுக்குத் திரித்து (அப்பாடலில்) அமைத்தும், அறிவில்லாதவர்களுடைய செவியில் நுழையும் படியாகப் பாடல்களைப் பாடித்-

திரிகின்றவர்களாகிய சில புலவர்கள் கூறுவது (கூறும் நெறியைச்) சற்றேனும் உணரும்படியான வழியை அறிந்திலேன் நான்;

மலையாட்டின் கூட்டமும், கரடு முரடு உள்ள அகில்-மரமும் மருத மரமும் அடி பெயர்ந்து சாயும்படி

'மதுரம்' என்னும் ஆறு பெருகி இரண்டு கரைகளும் வழியப் பலவகையாகக் குதித்துப் பாய்கின்ற

குருடிமலையில் வீற்றிருக்கும் முருகனே! சிறந்த வடமலை (கிரௌஞ்சம்) தவிடுபொடியாய்த் தூளெழ மயிலில் ஏறும்-

குமரனே! குருபரனே! இருட்டுக்கு (அஞ்ஞான இருளுக்குத்) தினகர! (ஞான சூரியனே)! குறைவிலாத தேவர் பெருமாளே!

(உணர்வகை அறியேனே)

---

(முன் பக்கம் தொடர்ச்சி)

† பழைய மொழியைத் " திருடி நெருடிக் கவிபாடி" - திருப்புகழ் - 290.

‡ வருடை - மலையாடு.

§ 'மருத மெனுநதி' - என்றும் பாடம்

## தென்சேரிகிரி

('செஞ்சேரிமலை' என மருவி வழங்கும் இத்தலம் கோயமுத்தூர் மாவட்டம், பல்லடம் வட்டம், கஸ்பா பல்லடத்துக்குத் தெற்கே 12 மைல் தூரத்திலுள்ளது. திருப்பூர் புகைவண்டி நிலையத்தில் இறங்கிப் பொள்ளாச்சிக்குப் போகும் பேருந்து வண்டியில் சுமார் 22 மைல் சென்று, சுல்தான்பேட்டையில் இறங்கி, உடுமலைப்பேட்டை பேருந்து வண்டியில் ஏறி, 4மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். கோவில் சிறுகுன்றின்மேல் உள்ளது. 'பாட பேதத்தின்படி 574 ஆம் பாடலும் இத்தலத்துக்கு உரியதாம்.)

## 396. அருள் பெற

*தந்தான தனதனன தந்தான தனதனன*
*தந்தான தனதனன தனதான*

*எங்கேனு மொருவர்வர அங்கேக ணினிதுகொடு*
*இங்கேவ ருனதுமயல் தரியாரென்-*

*றிந்தாவெ னினியஇதழ் தந்தேனை யுறமருவ*
*என்றாசை குழையவிழி யிணையாடித்;*

*தங்காம லவருடைய வுண்டான பொருளுயிர்கள்*
*சந்தேக மறவெபறி கொளுமானார்-*

*சங்கீத கலவிநல மென்றோது முததிவிட*
**தண்பாரு முனதருளை யருள்வாயே;*

*சங்கோடு திகிரியது கொண்டேயு நிரைபிறகு*
*†சந்தாரும் ‡வெதிருகுழ லதுவூதித்-*

*தன்காதல் தனை§யுகள என்¶றேழு மடவியர்கள்*
*தங்கூறை கொடுமரமி லதுவேறுஞ்;*

---

* தண்பு - தண்மை, குளிர்ச்சி.

† சந்து - தொளை, இசை; 'சந்துலாம்தமிழ்' சம்பந்தர் - II - *109 - 17.*

‡ வெதிர் - மூங்கில்.

(அடுத்த பக்கம் பார்க்க.)

# தென்சேரிகிரி

## 396

எங்கேயாவது ஒருவர் வரக் கண்டால் அங்கே கண் கொண்டு இனிமையாகப் பார்த்து அழைத்து, இங்கு யார்தான் உன் மீது மோகம் கொள்ளமாட்டார் என்று கூறி-

இந்தா, என்னுடைய இனிய வாயிதழ் ஊறல், அதைத் தரும் என்னைப் பொருந்திச் சேர்வாயாக; என்று ஆசை மொழிகளை மனம் குழையக் கூறியும், கண்ணிணைகளை ஆட்டி அசைத்து,

தாமதிக்காமல், வந்தவர்களுக்கு உளதான பொருளையும், உயிரையும், சந்தேகம் இல்லாமல் அடியோடு பறித்துக் கொள்ளும் மான்போன்ற பொது மகளிருடைய-

சங்கீதமும், சேர்க்கையும் நன்மை தரும் என்று (அல்லது சங்கீதம், சேர்க்கை இன்பம் என்று) ஓதப்படும் காமக் கடலினின்றும் கரையேற குளிர்ச்சி மிக்க உனது திருவருளைத் தந்தருளுக.

சங்கும் சக்கரமும் கொண்டு, பொருந்திய, பசுக் கூட்டங்களின் பின், சந்து (தொளை அல்லது இசை) நிரம்பிய மூங்கிற் குழலை (புல்லாங்குழலை) ஊதி-

தம் மேற் கொண்ட ஆசையைக் கடக்க (நிறைவுறச்செய்ய) மன எழுச்சியைக் கொண்ட பெண்களின் ஆடையை எடுத்துக் கொண்டு மரத்தில் ஏறின-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

§ உகள - கடக்க.

¶ ஏழு மடவியர்கள் - ஏழு - எழும்; கண்ணனைக் கணவனாகப் பெறும் பேற்றை விரும்பி, யமுனையில் நீராடி நின்ற கோவியருடைய துகில்களை யெல்லாம் வாரிக்கொண்டு கண்ணபிரான் குருந்த மரத்தில் ஏறினர் என்ப.

" விரைவினில்வந் தாய்ச்சியர் பொற் கலைகள் வாரி
வெறிய மலர்க் குருந்தேறி நகைத்து நின்றான்
அம்பரமெல்லாம் வாரி அழகிய குருந்தி னேறும்
உம்பர்கள் பெருமான்" (வரதராசர் - பாகவதம் கூறைகொள் படலம்)
" குருந்திடைக் கூறை பணியாய்"- (ஆண்டாள் பாசுரம்)

சிங்கார அரிமருக பங்கேரு கனுமருள
 சென்றேயும் அமரருடை சிறைமீளச்-

செண்டாடி அசுரர்களை ஒன்றாக அடியர்தொழு
 **தென்சேரி** கிரியில்வரு பெருமாளே.(1)

## 397. உபதேசம் பெற

தந்தானத் தந்த தனதன
தந்தானத் தந்த தனதன
தந்தானத் தந்த தனதன தனதான

கொண்டாடிக் கொஞ்சு மொழிகொடு
 கண்டாரைச் *சிந்து விழிகொடு
 கொந்தாரச் சென்ற குழல்கொடு வடமேருக்-

குன்றோடொப் பென்ற முலைகொடு
 நின்றோலக் கஞ்செய் நிலைகொடு
 கொம்பாயெய்ப் புண்ட விடைகொடு பலரோடும்;

பண்டாடச் சிங்கி யிடுமவர்
 விண்டாலிக் கின்ற மயிலன
 பண்பாலிட் டஞ்செல் மருளது விடுமாறு-

பண்டேசொற் றந்த பழமறை
 கொண்டேதர்க் கங்க ளற†வுமை
 பங்காளர்க் கன்று பகர்பொருள் அருள்வாயே;

---

* சிந்துதல் - அழித்தல்; "புரமூன்றும் மூரல் கொடு சிந்தியருள் பாவநாசர்" காஞ்சிப்புரா - இருபத்தெண்டளி - 131; "அடியார் மேல்வினை சிந்துவான்" - சம்பந்தர் - III - 23 -5. "சிந்து வேலும்" திருப்புகழ் - 16.

† சிவபிராற்கு உரைத்த உபதேசத்தை எனக்கும் போதித்தருள் என வேண்டுவர் அருணகிரியார்:- திருப்புகழ் 173 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

அலங்கார உருவினராம் திருமாலின் மருகனே! தாமரையான் (பிரமனும்) மயங்கி அச்சமுறப் போய் முறை-யிட்டு நின்ற தேவர்களுடைய சிறைநீங்கச்

செண்டாடி அசுரர்களை ஒன்றாக (ஒன்றாக அசுரர்-களைச்) செண்டாடி (எல்லா அசுரர்களையும் சிதற அடித்து), (அல்லது - சிதற அடித்து) - ஒன்றாக அடியர் தொழு (அடியர் ஒன்றாகத் தொழு - அடியர் ஒன்றுகூடித் தொழுகின்ற - அல்லது ஒருத்தனாம் வகை வேண்டி அடியார் தொழுகின்ற) பெரு-மாளே! தென்சேரிகிரியில் எழுந்தருளியுள்ள பெருமாளே!

(உன தருளை அருள்வாயே)

## 397

சிறப்பித்துப் பேசி, கொஞ்சிப் பயிலும் பேச்சுக்களைக் கொண்டு, தாம் சந்தித்துப் பார்ப்பவர்களின் உள்ளத்தை, வெட்டி அழிப்பது போன்ற விழிகொண்டும், பூங்கொத்துக்கள் நிரம்பப் புகுத்தியுள்ள கூந்தல் கொண்டும் - வடமேரு

மலைக்கு நிகரான கொங்கை கொண்டும், நின்று சபாமண்டபத்தில் கொலு வீற்றிருப்பது போன்ற நிலை கொண்டும், கொம்புபோல இளைத்துப்போன இடை கொண்டும் - பலருடனும்

பழைமை விளங்க வசப்படுத்துபவராம் பொது மகளிரின் வாய்விட்டுக் கூவுகின்ற மயில்போன்ற நடிப்பால் எனது இட்டம் அவர்பாற் செல்லுகின்ற மயக்கமது நீங்கும்படி-

பழைமை வாய்ந்த சொற்களால் அமைந்த பழைய வேத மொழியைக் கொண்டு, தருக்கவாதங்களுக்கு இடமில்லாதபடி தெளிவாக, உமையைப் பங்கிற்கொண்ட சிவபிரானுக்கு அன்று உபதேசித்த பொருளை (எனக்கு) அருள்புரிவாயாக.

வண்டாடத் தென்றல் தடமிசை
தண்டாதப் புண்ட ரிகமலர்
மங்காமற் சென்று மதுவைசெய் வயலூரா-

வன்காளக் கொண்டல் வடிவொரு
சங்க்ராமக் *கஞ்சன் விழவுதை
மன்றாடிக் கன்பு தருதிரு மருகோனே;

திண்டாடச் சிந்து நிசிசரர்
தொண்டாடக் கண்ட வமர்பொரு
செஞ்சேவற் செங்கை யுடையசண் முகதேவே-

சிங்காரச் செம்பொன் மதிளத
லங்காரச் சந்த்ர கலைதவழ்
**தென்சேரிக் குன்றி** லினிதுறை பெருமாளே. (2)

## கொங்கணகிரி

(இது கோயமுத்தூர் மாவட்டம், சோமனூர் புகை வண்டி நிலையத்திலிருந்து 4 மைல். நொய்யலாற்றின் தென்கரை. சேலத்துக் கருகிலுள்ள ராசபுரத்துக்கு மேற்கு 3-மைலிலும் கொங்கணகிரி (அலைவாய்மலை) என்னும் மலையொன் றுள்ளது.)

### 398. அருள்வாயே

தந்ததன தத்ததன தந்ததன தத்ததன
தந்ததன தத்ததன தனதான

†ஐங்கரனை யொத்தமன மைம்புலம கற்றிவள
‡ரந்திபக லற்றநினை வருள்வாயே-

---

* கஞ்சன் மாண்ட வரலாறு: தன் தங்கை தேவகி வயிற்றிற் பிறக்கும் எட்டாவது சிசுவால் தனக்கு மரணம் உண்டாகும் என அசரீரியால் அறிந்த கஞ்சன் அந்த எட்டாவது குழந்தையாகிய கண்ணனைக் கொல்ல முயற்சிகள் செய்தும் முடியாது போய் ஈற்றில் கண்ணனாற் கொல்லப்பட்டான்.

† ஐங்கரனை ஒத்த மனம் - ஐம்புலன்களின் வழியே பொருந்தி ஓடுகின்ற மனம்; ஐங்கரன் (விநாயகர்) எங்ஙனம் இருந்த இடத்திலேயே

(அடுத்த பக்கம் பார்க்க)

வண்டுகள் களித்து விளையாடத் தென்றற் காற்றும் வீசும் குளத்தை நீங்காது அங்குள்ள தாமரை மலர்கள் வாட்டம் உறாமல் அவைகளிடம் போய்த் தேனைப் பருகும் வயலூரனே!

வலிய கரிய மேகத்தின் வடிவுடையவனாய், அந்தப் போர் புரியும் எண்ணத்தினனாம் கம்சன் (இறந்து) விழும்படித் தாக்கி உதைத்து வாதாடின கண்ணபிரானுக்கு(த் திருமாலுக்கு) அன்புகாட்டும் அழகிய மருமகனே! (அல்லது - திருமாலுக்கு அன்பு காட்டும் இலக்குமியின் மருமகனே!)

சிதறுண்ட நிசிசரர் (அசுரர்கள்) திண்டாடும் படியாகவும் அடிமை பூணும்படியாகவும் செய்த போரைப் புரிந்த சண்முக தேவே! செந்நிறத்த சேவலைச் செங்கையிற் கொண்ட சண்முக தேவே!

அழகிய செம்பொன் மதிலின் அலங்காரம் கொண்டதாய் சந்திரனுடைய கலைகள் தவழுகின்றதான தென்சேரிமலையில் இன்பத்துடன் வீற்றிருக்கும் பெருமாளே!

(உமைபங்காளர்க்கு அன்று பகர்பொருள் அருள்வாயே!)

## கொங்கணகிரி

## 398

ஐந்து கரங்களை உடைய விநாயகமூர்த்தியை ஒத்த மனத்தையும், ஐம்புலங்களையும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப்படும் ஐம்புலங்களையும் நீக்கி (விலக்கி அடக்கி) - அதன் பலனாகக் கிடைக்கும் இரவு பகல் அற்ற நிலையை அருள்புரிவாயாக;

---

((முன் பக்கத் தொடர்ச்சி)

(தந்தையை வலம் வந்ததால்)அகில அண்டங்களையும் மிக விரைவில் வலம் வந்தவராயினரோ அவ்வாறு மனமும் இருந்த இடத்திலேயே அகிலமெல்லாம் சஞ்சரிக்க வல்ல வேகத்தோடு கூடியது. மனோவேகத்துக்கு ஐங்கரனார் அகிலத்தையும் மிக எளிய வழியில் வலம் வந்த வேகத்தைத் தான் ஒப்பிடக் கூடும்.

ஐங்கரன் - ஒருகளிறு; ஐம்புலன் - அஞ்சுகளிறு. " தொண்டர் அஞ்சுகளிறு" - சம்பந்தர். " மதக்களி றஞ்சின" - அப்பர் - 159-8.

விநாயகர் ஐந்துகரம் கொண்டு வேலை செய்வது போல், மனமும் ஐம்பொறிகளின் வழியாய் வேலை செய்கின்றது; அது பற்றியும் "ஐங்கரனை ஒத்த மனம்" என்றார்.

1 அந்தி இரவு, அந்தி பகல், இரவு பகல் பாடல் 303 பார்க்க.

அம்புவித னக்குள்வளர் *செந்தமிழ்வ ழுத்தியுனை
அன்பொடுது திக்கமன மருள்வாயே;
தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற
†சந்திரவெ ளிக்குவழி யருள்வாயே-
‡தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்
சம்ப்ரமவி தத்துடனெ யருள்வாயே;
மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமன
முன்றனைநி னைத்தமைய அருள்வாயே-
§மண்டலிக ¶ரப்பகலும் வந்தசுப ரட்சைபுரி
வந்தணைய புத்தியினை யருள்வாயே;
$கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுஉட லுற்றபொரு ளருள்வாயே-

---

* 'வேலுஞ் செஞ்சேவலும் செந்தமிழாற் பகர் ஆர்வம் ஈ" (கந்தர் அலங் - 52)

† சந்திரவெளி - பாட்டு 244 பார்க்க; இது யோக நிலையிற் காண்பது: "தாணுவிற் சந்திரன் தானும் தலைப்படு தன்மையைச் சந்தியிலே கண்டு சமாதியுடை யொளியோகியே" திருமந்திரம்704.

‡ அருணகிரியார் காலத்திற் பெரும் புலவர்கள் பல்லக்கு முதலிய விருதுகளைக் கொண்டிருந்தனர். (பாட்டு 80 பார்க்க.)

§ நாட்டு அரசர்களும் அருணகிரியாரை எவ்வளவு உயர்வாக மதித்திருந்தார்கள்; எங்ஙனம் அவருடைய சுபரட்சையை, மங்கல ஆசியைப் பெற விரும்பினார்கள் என்பது...

" ஆபாதனேன் மிகப் ப்ரசித்திபெற்று - எத்திசைப்புறத் தினும் ஏடேவு ராஜதத்தினைப் பணித்தது(ம்) - மறவேனே" - திருப்புகழ் 1132 என வருவதால் அறிதலாகும்.

¶ ராப்பகல் என்பது ரப்பகல் என்றாயிற்று.

$ இந்த ஏழாவது அடியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலையுண்ட பாலனை உயிர் பெற்றுவர எழுப்பினாரே அந்த ரகசிய வழியை எனக்கும் அருளுக - என அருணகிரியார் வேண்டுகின்றனர். மதலையை எழுப்பின இடம் அவிநாசிப் புக்கொளியூர் - இது கொங்கு நாட்டைச் சேர்ந்தது. அருணகிரியார் காலத்திற் கொங்கு நாட்டில், தென்கரை நாட்டுப் பகுதியில் சேர்ந்ததாயிருக்கலாம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

(இப்) பூமியில் பெருகி வளரும் செந்தமிழால் போற்றி உன்னை அன்புடனே துதிக்க (விரும்பும்) மனநிலையை அருள்புரிவாயாக.

நிலைத்துள்ளதான தவநிலை உணர்ச்சியைத் தந்து அடிமையாகிய நான் முத்திநிலையைப் பெறவேண்டி சந்திர வெளியைக் காணும்படியான வழியை (க் காட்டி) அருள் புரிவாயாக.

பல்லக்கு, பெருமை, கௌரவம், இவைதமை எட்டுத் திக்கில் உள்ளோரும் மதிக்கும்படியாக ஓங்கும் சிறப்பு வகையில் அருள்புரிவாயாக.

மாதர்களின் (கலவி) இன்பமே மிக்க இனிமை தருவதாம் என்று நினைக்கின்ற என் மனம் உன்னை நினைத்த நிலையாய் அங்ஙனே இருக்க அருள்புரிவாயாக.

நாட்டு அதிகாரிகள் (அரசர்கள்) இரவும் பகலும் வர, (அவர்களுக்கு) சுபம் தருவதான காப்பு (பாதுகாப்புப்) புரிதல் வேண்டி அவர்கள் என்னை வந்து அணைய, காண அவர்களுக்கு வேண்டிய சுபரட்சை தரவல்ல புத்தியை எனக்கு அருள்புரிவாயாக.

கொங்கு தேயத்தில் உயிர் (மீளப்) பெற்று, (உடல்) வளரப் பெற்று, *தென்கரை நாட்டுத் திருப்புக்கொளியூர் அவிநாசி அப்பராம் சிவபிரானது திருவருளைப் பெற்று - முதலையுண்ட பாலனுடைய உடலில் உயிர் பொருந்தி வந்த ரகசிய நிகழ்ச்சிப் பொருள்களை எனக்கு அருள் புரிவாயாக.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

**உயிர்பெற்று உடலுற்றது ;**

திருப்புக்கொளியூர் ஏரியில் குளிக்கச்சென்ற ஒரு அந்தணச் சிறுவனை ஒரு முதலை உண்டது. அந்நிகழ்ச்சிக்குச் சில ஆண்டுகளுக்குப் பின் அவனூருக்குச் சென்ற சுந்தரமூர்த்தி சுவாமிகள் இந் நிகழ்ச்சியை அறிந்து, இறந்த சிறுவனுடைய பெற்றோர் மகிழப் பதிகம் பாடி அந்த ஏரியில் நீர் நிரம்பவும், முதலை வந்து சேரவும், கடந்த ஆண்டுகளுக்கு உரிய உடல் வளர்ச்சியுடன் உயிர் பெற்ற அந்தச் சிறுவனை அம் முதலை ஏரியின் கரையில் உமிழவும் செய்தார். இந் நிகழ்ச்சி கை கூடினதற்கு எந்த ரகசியப் பொருள் வேலை செய்ததோ அதை எனக்கு அருளுக என முருகவேளை வேண்டுகின்றனர்.

* தென்கரை நாடு கொங்கு நாட்டு எல்லைக்குட்பட்ட 24 நாடுகளில் ஒன்று. கொங்கு மண்டல சதகம்.

குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கணகி ரிக்குள்வளர் பெருமாளே. (1)

## தீர்த்த மலை

(இது சேலம் மாவட்டம் மொரப்பூர் புகைவண்டி நிலையத்திற்கு 8-மைல் தூரத்திலுள்ள ஹரூருக்கு வட கிழக்கு 9 மைல், 4 பர்லாங். மலையடிவாரத்திலும் மலை மேலும் கோயில்கள் இருக்கின்றன. இதற்குச் சைவ - எல்லப்ப நாவலர் பாடிய தலபுராணம் ஒன்றுண்டு.)

### 399. மனதுக்குப் புத்தி கூறுவது (முருகனைச் சந்திப்பாயாக)

தாத்த தனதன தாத்த தனதன
தாத்த தனதன தாத்த தனதன
தாத்த தனதன தாத்த தனதன தனதான

*பாட்டி லுருகிலை கேட்டு முருகிலை
கூற்று வருவழி பார்த்து முருகிலை
†பாட்டை யநுதின மேற்று மறிகிலை தினமானம்-

பாப்ப ணியனருள் வீட்டை விழைகிலை
நாக்கி னுனிகொடு ஏத்த அறிகிலை
பாழ்த்த பிறவியி லேற்ற ‡மனது நல் வழிபோக;

மாட்ட மெனுகிறை கூட்டை விடுகிலை
யேட்டின் விதிவழி யோட்ட மறிகிலை
பார்த்து மினியொரு வார்த்தை அறைகுவ
னிதுகேளாய்-

வாக்கு முனதுள நோக்கு மருளுவ
னேத்த புகழடி யார்க்கு மெளியனை
வாழ்த்த இருவினை நீக்கு முருகனை மருவாயோ;

* இப்பாடல் 330 - ஆம் பாடல்போல மனதுக்குப் புத்தி கூறுவது : பாடல் 330 - கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† பாட்டை - கட்டத்தை. ‡ மனது - மனமே!

யானைமுகப் பெருமான் (கணபதிக்கு) இளையவனாம் கந்த (வேள்) என செயப்புகழ் பெற்ற பெருமாளே! கொங்கணகிரி என்னும் மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அருள்வாயே)

## தீர்த்த மலை
## 399

(மனமே நீ) பாட்டின் பொருள் அறிந்து உருகுதல் இல்லை; பாட்டையும் பாட்டின் பொருளையும் சொல்லக் கேட்டும் உருகுதல் இல்லை; யமன் வரும் வழியைக் கண்டும் (இறைவனிடத்தே பத்தியாய்) உருகுதல் இல்லை; கட்டங்களைத் தினந்தோறும் அநுபவித்தும் (உண்மைப்பொருளை) அறிகின்றாயில்லை - நாள்தோறும் -

பாம்பை அணிந்துள்ள சிவபிரான் அருளும் வீட்டின்-பத்தை விரும்புகின்றாயில்லை; நாவின் நுனிகொண்டு (பிரானை)ப் போற்ற அறிகின்றாயில்லை; பாழ்படும் (இந்தப்) பிறப்புக்களிலேயே ஈடுபடுகின்ற (என்) மனமே! நீ நல்ல வழியே போக-

மாட்டேன் என்கின்றாய்; (உடற் சிறையாகிய இந்த) கூட்டினை விடுகின்றாயில்லை; ஏட்டில் (எழுதியுள்ள) விதி (தலைவிதி) எந்த வழியாக ஓடுகின்றது என்பதை அறிகின்றிலை; (இங்ஙனம் எல்லாம் நீ இருக்கும் வகையைப்) பார்த்தும், (சும்மா இருக்க முடியாமல் நான்) இனி ஒரு வார்த்தை சொல்லுகின்றேன் - இதைக் கேட்பாயாக-

வாக்கும் உனதுள நோக்கும் அருளுவன் ஏத்த புகழ் (புகழ் ஏத்த வாக்கும் உனதுள நோக்கும் அருளுவன்) - அவனது திருப்புகழை ஓதி அவனை ஏத்த உனக்கு நல்ல வாக்கையும் உனது உள்ளத்தில் (நல்ல) கருத்தையும் அருள் புரிவான்; (ஆதலால்) அடியார்க்கு எளியனைத் தன்னை வாழ்த்து-வோருடைய இருவினையை (நல்வினை - தீவினையை) விலக்கும் முருகனை நீ சிந்திப்பாயாக.

ஆட்டி வடவரை வாட்டி யரவொடு
பூட்டி *திரிபுர மூட்டி †மறலியி
னாட்ட மறசர ணீட்டி ‡மதனுடல் திருநீறாய்-

ஆக்கி §மகமதை வீட்டி யொருவனை
¶யாட்டின் முகமதை நாட்டி $மறைமக
ளார்க்கும் வடுவுற வாட்டு முமையவ னருள்பாலா;

**சீட்டை யெழுதிவை யாற்றி லெதிருற
ஓட்டி யழல்பசை காட்டி சமணரை
சீற்ற மொடுகழு வேற்ற அருளிய குருநாதா-

தீர்த்த எனதக ††மேட்டை யுடனினை
ஏத்த அருளுட னோக்கி அருளுதி
தீர்த்தமலைநகர் காத்த சசிமகள் பெருமாளே.

---

* திரிபுரம் எரித்த வரலாறு : பாட்டு 285 பார்க்கவும்.

† கூற்றை உதைத்த வரலாறு :- மார்க்கண்டருக்கு விதித்திருந்த பதினாறு ஆண்டு முடிந்ததென்று அவர் உயிரைக் கவரக் காலன் வந்தான். அவர் சிவபூசை செய்து கொண்டிருந்தார். அப்போது சிவபூசை செய்கின்றாரே என சற்றும் மதியாமல் பாசத்தைவீசி இழுக்கலுற்றான். மார்க்கண்டர் சிவனைத் தியானிக்க இறைவன் அங்கு எழுந்தருளிக் காலனை உதைத்துத் தள்ள யமன் வீழ்ந்திறந்தான்.

" பதிமூன்றும் சிதைத்தான் வாமச் சேவடி தன்னால் சிறிதுந்தி உதைத்தான் கூற்றன் விண்முகில் போல்மண் ணுற வீழ்ந்தான்"

(கந்தபுராணம் - II - 5- 253)

‡ காமனை எரித்தது :- பிரமதேவனது வேண்டுகோளின்படி காமன் யோகத்திருந்த சிவன்மீது மலர்ப்பாணம் ஐந்தையும் விட்டான். சிவன் சீற்றத்துடன் சிறிது பார்த்தார் காமனை. அவரது நெற்றிக்கண்ணின் தீ காமனைச் சுட்டெரித்தது (கந்தபுராணம் I - 4- 89)

§ தக்கன் யாகத்தைக் குலைத்த வரலாறு:- பாட்டு 390 பார்க்க.

¶ தக்கனுக்கு ஆட்டுத் தலை வந்தது:

வீரபத்திரரால் உயிரிழந்த தக்கனுடைய உடலுடன் ஆட்டின் தலை சேர்ப்பிக்கப்பட்டு - தக்கன் இறைவரால் எழுப்பப்பட்டான்.

" மைத்தலை கண்டு சேர்த்தி எழுகென்றான்"

- (கந்தபுராணம் - யாகசங் - 163)

(அடுத்த பக்கம் பார்க்க)

உலகையே ஆட்டி வைப்பவராகிய கூத்தப்பிரான் (சிவன்) வடக்கில் உள்ள மேரு மலையை வருத்திச் சிலையாக வளைத்து, அதில் வாசுகி என்னும் பாம்பை (நாணாகக்) கட்டி திரிபுரத்தைத் தீயில் மூட்டி (வேவச் செய்து), யமனுடைய கருத்து அழியும்படி காலை நீட்டி (அவனை உதைத்துத் தள்ளி), மன்மதனுடைய உடலை சாம்பலாகும்படி-

ஆக்கித், (தக்கனுடைய) யாகத்தைக் குலைத்து, (அந்த) யாகத்தை நடத்தின தக்கன் என்பவனுக்கு ஆட்டின் முகத்தைப் பொருந்த வைத்து, மறை மகளாம் சரசுவதிக்கு கேடு (காயம்) உண்டாகும்படி வாட்டின உமை கணவன் (சிவன்) அருளிய பாலனே!

"வாழ்க அந்தணர்" என்னும் திருப்பாசுரம் எழுதின ஏட்டை வைகையாற்று வெள்ளத்தில் எதிர் ஏற ஓட்டியும், நெருப்பில் இட்ட ஏடு பச்சை நிறத்துடன் விளங்கும்படி காட்டியும், சமணரைக் கோபித்துக் கழுவேற வைத்தருளின குருநாதனே!

பரிசுத்தனே! என் மனம் விருப்புடன் உன்னை ஏத்தும்படி (நீ) திருவருளைப் பாலித்து என்னைக் கண்பார்த்தருளுதி, **தீர்த்த மலை** நகரில் வீற்றிருக்கும் பெருமாளே! இந்திராணியின் மகள் தேவசேனைக்குப் பெருமாளே!

(நோக்கி அருளுதி)

---

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

"ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டியவா பாடி யுந்தீபற" - திருவாசகம் - திருவுந்தியார்.

$ மறைமகள், சரசுவதி - " வேத முதல்வி" (பிங்கலம்)
" எழுதா மறையும் .... அன்பர் கண்ணும் கருத்தும் நிறைந்தாய்"
*(சகலகலாவல்லிமாலை - 6.)*

**மறைமகள் வடுவுற்றது:**

" வாக்குறு தேவி தன்னை மற்றவர் தம்மை வாளால்
மூக்கொடு குயமும் கொய்தான்" - (கந்த புரா - யாக சங்.22)
" நாமகள் நாசி சிரம் பிரமன் பட" - திருவுந்தியார் 13.

** திருஞானசம்பந்தர் சமணரொடு வாது செய்தது.
*பாட்டு 181 பார்க்க.*

†† ஏட்டை - விருப்பம்.

## கநக மலை

(இது 'கிணற்றுக் கடவு' கோயமுத்தூரிலிருந்து 12 மைல். வட ஆற்காடு போளூர் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கு 9 மைல். தேவிகாபுரம் என வழங்குவர். மலை-கனகாசலம். மலைமேல் கோயில். கல்வெட்டு உள்ளது. இறைவர் - கனககிரீசுரர். தேவி பெரியம்மை.)

## 400. வணங்க

*தனதனன தனன தந்தத்*
*தனதனன தனன தந்தத்*
*தனதனன தனன தந்தத் தனதான*

அரிவையர்கள் தொடரு மின்பத்
துலகுநெறி மிகம ருண்டிட்
டசடனென மனது நொந்திட் டயராமல்-
அநுதினமு முவகை மிஞ்சிச்
சுகநெறியை விழைவு கொண்டிட்
டவநெறியின் விழையு மொன்றைத் தவிர்வேனோ;
பரிதிமதி நிறைய *நின்ற ஃ
தெனவொளிரு முனது துங்கப்
படிவமுக மவைகள் கண்டுற் றகமேவும்-
படர்கள்முழு வதும கன்றுட்
பரிவினொடு துதிபு கன்றெற்
பதயுகள மிசைவ ணங்கற் கருள்வாயே;
செருவிலகு மசுரர் மங்கக்
குலகிரிகள் நடுந டுங்கச்
சிலுசிலென வலைகு லுங்கத் திடமான-
செயமுதவு மலர்பொ ருங்கைத்
தலமிலகு மயில்கொ ளுஞ்சத்
தியைவிடுதல் புரியு முன்பிற் குழகோனே;

---

* இங்கு ஆயுத எழுத்து வல்லோசைச் சந்தத்துடன் நிற்கின்றது.

### கநக மலை

## 400

மாதர்களைத் தொடர்ந்து செல்லும் சிற்றின்பத்து உலகு நெறியில் அதிகமாக மருட்சி (மோகம்) கொண்டு, அசடன் எனப் பிறர் கூற மனம் வேதனைப்பட்டுச் சோர்வு அடையாமல்-

தினந்தோறும் களிப்பு மிக்கு, சுக வழியிலேயே விருப்பம் கொண்டு நடந்து பாவ வழியிற் செல்ல விரும்பும் (அந்த) ஒரு புத்தியை நீக்கமாட்டேனோ!

சூரியன், சந்திரன் இரண்டும் பூரண ஒளியுடன் நின்ற அந்த தன்மையை ஒப்ப, விளங்குகின்ற உனது பரிசுத்தமான வடிவுள்ள திருமுகங்களைக் கண்டு (அக்காட்சியை மனத்தில் நிறுத்தி, என் மனத்திலுள்ள)

துயர் முழுமையும் நீங்கப் பெற்று, உள்ளத்தில் அன்புடனே உன்னைத் துதித்து, (எல்) ஒளி பொருந்திய உனது திருவடியிணை மிசை வணங்குதற்கு அருள்புரிவாயாக.

போரில் பின்னிட்ட (அல்லது விளங்கின) அசுரர்களின் பெருமை குறைய, சிறந்த மலைகளெல்லாம் நடுநடுங்க, சிலுசிலென்று கடல் கலங்கப் பலமுள்ளதும்,

வெற்றியை உதவுவதுமான, மலர் போன்ற திருக்கரத்தில் விளங்கும் கூர்மை கொண்ட சத்திவேலைப் பிரயோகிக்கும் (வலிமை அல்லது) பெருமை வாய்ந்த இளையோனே!

கருணைபொழி கிருபை முந்தப்
*பரிவினொடு கவுரி கொஞ்சக்
கலகலென வருக டம்பத் திருமார்பா-

கரிமுகவர் தமைய னென்றுற்
றிடுமிளைய குமர பண்பிற்
**கநககிரி** யிலகு கந்தப் பெருமாளே (1)

## புகழி மலை

(திரிசிராப்பள்ளி மாவட்டம் புகலூர் புகைவண்டி நிலையத்திலிருந்து 2 மைல். பாலசுப்பிரமணியர்.)

### 401. மயில்மேல் வந்தருள

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதான

மருவுமலர் வாச முறுகுழலி னாலும்
வரிவிழியி னாலு மதியாலும்-

மலையினிக ரான இளமுலைக ளாலு
மயல்கள்தரு மாதர் வகையாலும்;

கருதுபொரு ளாலு மனைவிமக வான
கடலலையில் மூழ்கி அலைவேனோ-

கமலபத வாழ்வு தர**மயிலின் மீது**
கருணையுட னேமுன் **வரவேணும்;**

அருமறைக ளோது பிரமன்முதல் மாலும்
அமரர்முநி ராசர் தொழுவோனே-

---

* கவுரி பரிவினோடு முருகனோடு கொஞ்சுதல்; "பரிவினொடு கோசலை புகல வருமாயன்" - என்பதனை நினைவூட்டும் (திருப்புகழ் 74)

கருணை பொழியும் அருளே முந்துவதால் அன்புடன் கவுரி (பார்வதி), கொஞ்சி நிற்க, கலகலென்று (தண்டை ஒலிக்க) வருகின்ற கடம்பணியும் திருமார்பனே!

யானைமுகக் கடவுளைத் தமையனாக வாய்க்கப்பெற்ற இளைய குமரனே! அழகுடன் கனககிரி (பொன்மலை)யில் விளங்க வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

(வணங்க அருள்வாயே)

## புகழிமலை

## 401

பொருந்திய மலரின் நறுமணம் கொண்ட கூந்தலாலும், ரேகைகள் கொண்ட கண்ணாலும், திங்கள் போன்ற முகத்தாலும் (அல்லது அறிவாலும்)

மலைக்கு ஒப்பான இளங் கொங்கைகளாலும், மோகத்தைத் தருகின்ற பெண்களின் இனத்தாலும் (அல்லது உபாயத்தாலும்)

வேண்டியது என்று எண்ணப்படும் பொருளாலும், மனைவி, குழந்தை என்கின்ற கடல் அலையில் (நான்) முழுகி அலைவேனோ;

தாமரையன்ன (உனது) திருவடி வாழ்வை (அடியே-னுக்குத்) தர மயில் மீது கருணையுடனே அடியேன் முன்வர-வேணும்.

அரிய வேதங்கள் ஓதும் பிரமன் முதலாகத் திருமாலும் தேவர்களும் முநிவேந்தர்களும் தொழுவோனே!

அகிலதல மோது நதிமருவு சோலை
அழகுபெறு போக வளநாடா;

பொருதவரு சூரர் கிரியுருவ வாரி
புனல்சுவற வேலை யெறிவோனே-

புகலரிய தான தமிழ்முநிவ ரோது
புகழிமலை மேவு பெருமாளே. (1)

## பூம்பறை

(இது கொடைக்கானலுக்கு மேற்கு 12 மைல் தூரத்தில் பழநிக்குத் தெற்கே வராககிரிமேல் இருக்கின்றது. பழநியிலிருந்து வராககிரி 4 மைல் அப்பால் மலைமேல் பத்துமணி நேர பயணஞ் சென்றால் பூம்பறையை அடையலாம்.)

### 402. பொது மகளிர் உறவு அற

தாந்ததன தான தாந்ததன தான
தாந்ததன தான தனதான

மாந்தளிர்கள் போல வேய்ந்தவுடல் மாதர்
*வாந்தவிய மாக †முறைபேசி-

வாஞ்சைபெரு மோக சாந்திதர நாடி
வாழ்ந்தமனை தேடி உறவாடி;

ஏந்துமுலை மீது சாந்துபல பூசி
ஏங்குமிடை வாட விளையாடி-

‡ஈங்கிசைகள் மேவ §லாஞ்சனையி லாமல்
ஏய்ந்தவிலை மாதர் உறவாமோ;

---

* வாந்தவியமாக - பாந்தவியமாக. † 'அத்தான்' என்னும் உறவு கூறுதலைத் திருப்புகழ் 737-ல் பார்க்க.

‡ ஈங்கிசை - பாட்டு 287 பார்க்க. § லாஞ்சனை - லச்சை.

எல்லாத் தலங்களில் உள்ளாரும் புகழ்கின்ற நதி சேரும் சோலைகளால் அழகு பெறு செல்வ (அல்லது இன்ப) வளங்கள் கூடிய நாடனே!

போர் செய்ய வந்த சூரர்களும், (கிரௌஞ்ச) கிரியும் ஊடுருவும்படியும், கடலில் நீர் வற்றவும், வேலைச் செலுத்தியவனே!

சொல்லுதற்கரிதான தமிழ் முனிவராகிய அகத்தியர் புகழ்கின்ற புகழிமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மயிலின் மீது வரவேணும்)

## பூம்பறை

## 402

மாந்தளிர் போல (நிறமுள்ள தோலால்) மூடப்பட்ட உடலை உடைய மாதர்கள் (அத்தான் - மாமா) என்னும் உறவு முறையாக முறை பேசி (க் காட்டும்)

விருப்பமானது பெருத்த மோகத்துக்குச் சாந்தியை (அமைதியைத்) தரவேண்டி (அப்பொது மகளிர்) வாழ்ந்த வீடுகளைத் தேடி அவர்களோடு உறவாடி-

உயர்ந்து நிற்கும் கொங்கை மேல் சந்தனம் ஆகிய பல (நறுமணங்களைப்) பூசி, இளைத்து நிற்கும் இடை ஒடுங்க விளையாடிப் - (பின்னர்)

ஈங்கிசைகள் (இம்சைகள் - உபத்திரவம்) உண்டாக, லச்சையில்லாமல் பொருந்திய விலைமாதர்களின் (பொது மகளிரின்) உறவு நன்றா? (உறவு கூடாது என்றபடி)

*பாந்தண்முடி மீது தாந்ததிமி தோதி
தாஞ்செகண சேசெ எனவோசை-

பாங்குபெறு தாள மேங்கநட மாடு
பாண்டவர்ச காயன் மருகோனே;

பூந்தளிர்கள் வீறு வேங்கைகள்ப லாசு
பூங்கதலி கோடி திகழ்சோலை-

பூந்தடமு லாவு †கோம்பைகள்கு லாவு
‡பூம்பறையின் மேவு பெருமாளே. (1)

## கொடுங்குன்றம்

(பிரான்மலை யென்பதும் இதுவே. திருஞானசம்பந்த சுவாமிகளுடைய பாடல் பெற்றது. இராமநாதபுரம் மாவட்டம் சிவகங்கைக்கு 22 மைல் தூரத்திலுள்ள திருப்புத்தூர் என்னும் தேவாரம் பெற்ற தலத்துக்கு வடமேற்கு 15 மைல். காரைக்குடி புகைவண்டி நிலையத்திலிருந்து திருப்புத்தூர் 12 மைல். திருப்புத்தூர் தஞ்சை மாவட்டம் அறந்தாங்கி புகைவண்டி நிலையத்திலிருந்து 27 மைல். 352ஆம் பாடலில் இத்தலம் கூறப்பட்டுள்ளது.)

### 403. தொண்டு கண்டு இறைவன் இன்புற

தனந்த தந்தம் தந்தம் தந்தந் தந்ததான

அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங் கண்களாலே-

அடர்ந்தெ ழும்பொன் குன்றங் கும்பங் கொங்கையாலே;

---

* அரவின்மீது கண்ணபிரான் நடனம் செய்தது. பாட்டு 245-2 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

"கானக மாமடுவில் காளியன் உச்சியிலே
தூய நடம் பயிலும் சுந்தர என்சிறுவா"
பெரியாழ்வார் திருமொழி I-5-6.

(அடுத்த பக்கம் பார்க்க)

பாம்பின் முடியின்மேல் தாந்ததிமி தோதி சேசெ என்னும் ஓசையை

அழகாகத் தருகின்ற தாளம் ஒலிக்க நடமாடுகின்ற பாண்டவர் துணைவனாம் ஸ்ரீ கிருட்டிணபிரானது (திருமாலின்) மருகனே!

அழகிய தளிர்கள் விளங்கும் வேங்கை மரங்களும், புன முருக்கு மரங்களும், அழகிய வாழை மரங்களும் கோடிக் கணக்காக (நிரம்ப) விளங்கும் சோலையும்,

அழகிய குளமும், உலவித் திரியும் †கோம்பை நாய்களும் திகழும் ‡ பூம்பறையில் வீற்றிருக்கும் பெருமாளே.

(விலைமாதர் உறவாமோ)

## கொடுங்குன்றம்

## 403

மன்மதனுடைய அம்பு ஒன்று அஞ்சும் (ஒன்று அம்பு அஞ்சும்) (பொருந்திய மலர்ப் பாணங்கள் ஐந்தும்) தங்குகின்ற கண்களாலே-

நெருங்கி எழுந்துள்ள பொன்மலை, குடம் போன்ற கொங்கையாலே-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

† கோம்பை - தேங்காய் முதலியவற்றின் மேலோடு. இங்கு " உலாவு கோம்பைகள் குலாவு" என வருவதால் கோம்பைகள் என்பது கோம்பை நாய்களைக் குறிக்கலாம். கோம்பை நாய்கள் மதுரை மாவட்டம் கோம்பை என்னும் ஊரில் உள்ள பெரிய செந்நிற நாய்கள்; காவல் காப்பதில் தேர்ச்சி பெற்றவை.

‡ பூம்பறை - கணவாய்த் தொடக்கத்தின் சமபூமியில் உள்ள ஒரு ஊர். மேலைப் பழநிக் கிராமங்களுள் முக்கியமானவற்றுள் அது ஒன்று; முருகவேளுக்கு விசேடமான திருக்கோயிலைக் கொண்டது. (மதுரை மாவட்ட கசெட்டீர்.)

முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே-
முடங்கு மென்றன் தொண்டுங் கண்டின்
றின்புறாதோ;
தெனந்தெ னந்தெந் தெந்தெந் தெந்தெந்
தெந்தெனானா-
செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் தும்பிபாடக்;
குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலை-
கொழுங்கொ டுந்திண் குன்றந் தங்குந்
தம்பிரானே. (1)

## 404. நிர்த்தச் சரண்களை மறவாமை

தனதனன தனதனன தத்தத்த தந்ததன
தத்தத்த தந்ததன ****** தந்ததான

எதிர்பொருது கவிகடின கச்சுக்க ளும்பொருது
குத்தித் திறந்துமலை
யிவைகளென வதிம்ருகம தப்பட்டு நின்றொழுகி
முத்துச் செறிந்தவட
மெனு*நிகள மவையறவு தைத்திட்ட ணைந்துகிரி
னிற்கொத்து மங்குசநெ ருங்குபாகர்-
எதிர்பரவ உரமிசைது கைத்துக்கி டந்துடல்ப
தைக்கக்க டிந்துமிக
இரதிபதி மணிமவுலி யெற்றித்ரி யம்பகனு
முட்கத்தி ரண்டிளகி
யிளைஞருயிர் கவளமென மட்டித்த சைந்தெதிர்பு
டைத்துச்சி னந்துபொரு †கொங்கையானை;

---

* நிகளம் - யானை கட்டுஞ் சங்கிலி. முதல் இரண்டடி கொங்கை வர்ணனை.

† கொங்கை - யானையாக உருவகப் படுத்தப்பட்டது.

கோபங்கொண்டு பொதுச்சபை ஏறியும் தமக்கு உரிய பொருளை வசூலிக்கும் பெண்களாலே-

முடக்கம் உறும் (தடைபடும்) என்னுடைய தொண்டையும் கண்டு இன்று (உனது) திருவுள்ளம் இன்பம் அடையாதோ!

தெனந் தெனந் தெந்தெந்தெந் தெந்தெனானா (என்று)

கூடி நெருங்கிச் சென்று நல்லமுறையில் வண்டுகள் பாட-

வளைந்து விளங்கும் கொம்புகளும் பூங்கொத்துகளும் நெருங்கிய சோலை சூழ்ந்துள்ள

செழுமையுள்ள திண்ணிய கொடுங்குன்ற (பிரான்) மலையில் வீற்றிருக்கும் தம்பிரானே.

(தொண்டு கண்டு இன்புறாதோ)

## 404

எதிர்நோக்கிப் போர் புரிந்தும் மூடப்பட்டும் வலிய ரவிக்கையுடன் போரிட்டு, அதைக்குத்தித் திறந்து, மலையே இவைகள் என்று (வதி) இருக்கின்றனவும், கத்தூரி பூசப்பட்டு நின்றொழுகுவனவும், முத்து நிறைந்த மாலை என்கிற யானை கட்டும் சங்கிலிகள் இற்றுப்போம்படி இடித்து அணைந்து உகிரின் நகங்களாகிய கொத்துகின்ற அங்குசத்துடன் நெருங்குகின்ற பாகர்கள் (யானையைச் செலுத்துவோர் - அணைதற்கு வரும் காமுகர்கள்)

எதிர்நின்று போற்ற, மார்பை மிதித்துழக்கிக் கிடந்து (கண்டவர்தம்) உடல் பதைக்கும்படி அடக்கி, நன்றாக ரதிதேவியின் கணவனாகிய மன்மதனது மணிக்கிரீடத்தை மோதியும், முக்கண்ணனும் அஞ்சும்படித் திரண்டும், நெகிழ்ந்தும், இளைஞர்தம் உயிரே உண்ணும் கவளமாக, வட்டவடிவுடன் நின்று, அசைந்து, முன்னே பருத்து, கோபித்துப் பொருதற்கு உற்றனவுமான யானை போன்ற கொங்கைகளை

பொதுவில்விலை யிடுமகளிர் பத்மக்க ரந்தழுவி
யொக்கத்து வண்டமளி
புகஇிணைய வரிபரவு நச்சுக்க ருங்கயல்கள்
செக்கச்சி வந்தமுது
பொதியுமொழி பதறஅள கக்கற்றை யுங்குலைய
முத்தத்து டன்கருணை தந்துமேல்வீழ்-

புதுமைதரு கலவிவலை யிற்பட்ட ழுந்தியுயிர்
தட்டுப்ப டுந்திமிர
புணரியுத தியில்மறுகி மட்டற்ற இந்திரிய
சட்டைக்கு ரம்பையழி
பொழுதினிலும் அருள்முருக *சுத்தக்கொ டுங்கிரியி
னிர்த்தச் சரண்களைம றந்திடேனே;

திதிதிதிதி திதிதிதிதி தித்தித்தி திந்திதிதி
தத்தத்த தந்ததத
தெததெதெத தெததெதெத தெத்தெத்த தெந்தெதெத
திக்கட்டி கண்டிகட
ஜெகணகெண கெணஜெகுத தெத்தித்ரி யந்திரித
தக்கத்த குந்தகுர்த திந்திதீதோ-

திகுடதிகு தொகுடதொகு திக்கட்டி கண்டிகட
டக்கட்ட கண்டகட
டிடிடுடுடு டிடிடுடுடு டிக்கட்டி கண்டிகட
டுட்டுட்டு டுண்டுடுடு
திகுகுதிகு திகுகுகுகு திக்குத்தி குந்திகுகு
குக்குக்கு குங்குகுகு என்றுதாளம்;

---

* இத்தலத்தில் அருணகிரியார்க்கு முருகவேள் நிர்த்த தரிசனம் தந்த வரலாறு பெறப்படும்.

பொதுவில் (நின்று உடலை) விலைக்கு விற்கும் மகளிருடைய தாமரையன்ன கரங்களைத் தழுவி, ஒரு சேர நெகிழ்ந்து, படுக்கையிற் புக்குச் சேர, ஒழுங்கான ரேகைகள் பரந்துள்ள விடமுள்ள கரிய கயல்மீன் போன்ற கண்கள் செக்கச்சிவந்து, அமுதம் கொண்ட சொற்கள் கலங்கிவர, கூந்தற்கட்டு குலைந்து அவிழ, முத்தமிடுவதுடன் அன்பு பாராட்டி மேலே விழுகின்ற-

அதிசயத்தைத் தரும் புணர்ச்சி வலையிலே பட்டு அழுந்தி உயிர் தடையுண்டு அலைச்சல் உறும் இருள் சேர்ந்த பெருங் கடலில் கலக்கம் உற்று, அளவு கடந்த இந்திரியம் (சுக்கிலம்) தங்கும் மாநுடச்சட்டையாம் இந்தக் கூடு (உடல்) அழிந்து போகும் பொழுதிலும் அருள்பாலிக்கும் முருகனே; (அல்லது - அருள் புரிவாயாக முருகனே!) பரிசுத்த தலமான கொடுங்-**கிரியில்** (பிரான்மலையில்) நீ காட்சி தந்தருளிய (உனது) நிர்த்த பாதங்களை நான் மறக்கமாட்டேன் (அல்லது - அருள் நிறை முருகனே! குரம்பை அழிகின்றபோதும் கொடுங்கிரியில் நீ காட்சி தந்தருளிய நிர்த்தச் சரண்களை மறவேன் - எனலுமாம்.)

*திதிதிதிதி திதிதிதிதி தித்தித்தி திந்திதிதி*

..... ...... ..... ......

*தக்கத்த குந்தகுர்த திந்திதீதோ*

*திகுடதிகு தொகுடதொகு திக்கட்டி கண்டிகட*

..... ...... ...... ......

*குக்குக்கு குங்குகுகு என்று தாளம் -*

முதிர்திமிலை கரடிகையி டக்கைக்கொ டுந்துடியு
டுக்கைப்பெ ரும்பதலை
முழவுபல மொகுமொகென *வொத்திக்கொ டும்பிரம
கத்திக்க ளும்பரவ
முகடுபுகு வெகுகொடிகள் பக்கத்தெ ழுந்தலைய
மிக்கக்†க வந்தநிரை தங்கியாட-
முதுகழுகு கொடிகருட னொக்கத்தி ரண்டுவர
வுக்ரப்பெ ருங்குருதி
முழுகியெழு ‡பயிரவர்ந டித்திட்ட கண்டமும்வெ
டிக்கத்து ணிந்ததிர
முடுகிவரு நிசிசரரை முட்டிச்சி ரந்திருகி
வெட்டிக்க ளம்பொருத தம்பிரானே. (2)

## குன்றக்குடி

(இது இராமநாதபுர மாவட்டம் காரைக்குடி புகைவண்டி நிலையத்திலிருந்து மேற்கு 7 மைல். திருப்புத்தூருக்குக் கிழக்கு 7-மைல். தேவகோட்டைக்கு மேற்கு 15-மைல். இது மயூரகிரி எனவும் பெயர் பெறும். மலை சிறிது; வலம் வரலாம். சுவாமி ஆறு திருமுகங்களுடையவர். இதற்குத் தல புராணம் உண்டு. 1041 ஆம் பாடலையும் இத்தலத்துக்குக் கொள்ளலாம்.)

### 405. பெண்களால் வரும் துயர் அற

தனன தந்த தந்த தனன தந்த தந்த
தனன தந்த தந்த தனதான

அழகெ றிந்த சந்த்ர முகவ டங்க லந்த
அமுத புஞ்ச இன்சொல் மொழியாலே-
அடிது வண்ட தண்டை கலிலெ னுஞ்சி லம்பொ
டணிச தங்கை கொஞ்சு நடையாலே;

* ஒத்தி - ஒத்த - (ஒன்றோடொன்று பொருந்தி ஒலி செய)-
(அடுத்த பக்கம் பார்க்க)

முற்பட்டொலிக்கும் திமிலை (ஒருவகைப்பறை), கரடிகை (கரடி கத்தினாற்போன்ற ஓசை உடைய பறைவகை), இடக்கை (இடக்கையாற் கொட்டும் தோற்கருவி), வளைவுள்ள துடி (உடுக்கைபோன்ற பறைவகை), உடுக்கை (இடைசுருங்கிய பறைவகை), பெரிய பதலை (ஒருகட் பகுவாய்ப்பறை), முழவு ((முரசு)- இவை பலகூடி மொகுமொகென்று ஒத்தி, (ஒத்த ஒலிக்க), கொடிய (கொலைத் தொழிலால் எற்பட்ட) பேயுருவங்கள் போற்ற, மேலே உச்சியிற் புகும் பல கொடி-களும் பக்கங்களில் பறந்தெழுந்து அலைய, அதிகமாகக் †கவந்தங்களின் வரிசை (அங்கங்கு) தங்கி ஆட -

பழைய கழுகுகள், காகங்கள், கருடன்கள் இவையெல்லாம் ஒன்றுகூடித் திரண்டுவர, உக்ரத்துடன் பெரியரத்த (வெள்ளத்தில்) முழுகி எழுகின்ற ‡பயிரவர்கள் நடனஞ் செய்ய, அகண்டமும் (எல்லாம்) வெடிபட, துணிவுகொண்டு, (பூமி) அதிர முடுகி வந்த அசுரர்களை எதிர்த்துத் தாக்கி அவர்-களுடைய தலைகளைத் திருகியும், வெட்டியும், போர்க்களத்திற் சண்டை செய்த தம்பிரானே!

*(நிர்த்தச் சரண்களை மறந்திடேனே)*

## குன்றக்குடி
## 405

அழகு வீசும் நிலாப்போன்ற முக வட்டத்தினின்றும் (முக மண்டலத்தினின்றும்) அமுதம் போன்ற திரண்ட இனிய உரைப் பேச்சினாலே-

பாதத்தில் நெளிந்து கிடக்கும் தண்டை, கலீல் என ஒலிக்கும் சிலம்பு, அழகிய சதங்கை இவைகள் கொஞ்சி ஒலிக்கின்ற நடையாலே -

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

" செயிர்த்தவன் சிவந்து நோக்கிச் சீறடி சென்னி சேர்த்தி"
என்புழி, நோக்கி - என்பது - நோக்க - என வந்தது போல.
- *(சிந்தாமணி - 1989)*

'இன்பரசத்தே பருகி' - என்ற இடத்துப், பருக - பருகி என வந்தது போல. (விநா. திருப்புகழ் - 2)

† கவந்தம் - பாடல் *354* கீழ்க் குறிப்பைப் பார்க்க.

‡ பயிரவர் போர்க்களத்தில் நடித்தல் - பாடல் *1* பார்க்க.

சுழியெ றிந்து நெஞ்சு சுழல நஞ்ச ணைந்து
தொடுமி ரண்டு கண்க ளதனாலே-

துணைநெ ருங்கு கொங்கை மருவு கின்ற பெண்கள்
**துயரை யென்றொ ழிந்து விடுவேனோ;**

எழுது *கும்ப கன்பி னிளைய தம்பி நம்பி
யெதிர டைந்தி றைஞ்சல் புரிபோதே-

இதம கிழ்ந்†தி லங்கை யசுர ரந்த ரங்க
மொழிய வென்ற கொண்டல் மருகோனே;

மழுவு கந்த செங்கை அரனு கந்தி றைஞ்ச
‡மநுவி யம்பி நின்ற குருநாதா-

வளமி குந்த **குன்றநகர்**பு ரந்து துங்க
மலைவி ளங்க வந்த பெருமாளே. (1)

## 406. பிறப்பற

தனதனன தனதனன தனதனன தனதனன
தந்தத்த தத்ததன தந்தத்த தத்ததன
. . . . தனதானா

§ககுபநிலை குலையவிகல் மிகுபகடின் வலியுடைய
தந்தத்தி னைத்தடிவ தொந்தத் திரத்தையுள
அகிலமறை புகழ்பரமர் ஞெகிழிகல கலகலெனும்
அம்பொற்ப தத்தர்தநு வம்பொற்பொ ருப்படர்வ
களபபரி மளமெழுகும் எழிலில்முழு குவமுளரி
யஞ்சப் புடைத்தெழுவ வஞ்சக்க ருத்துமத
னபிஷேகங்-*

---

*கும்பகன் பின் இளைய தம்பி - கும்பகர்ணன் தம்பியாகிய விபீடணன்.

† இலங்கை அசுரர் அந்தரங்கம் ஸ்ரீராமர் கேட்க விபீடணர் கூறினர். (கம்ப ராமா - இலங்கை கேள்வி - 16)

" ஆர்கலி இலங்கையின் அரணும் அவ்வழி
வார்கெழு கனைகழல் அரக்கன் வன்மையும்
தார்கெழு தானையின் அளவுந் தன்மையும்
நீர்கெழு தன்மையாய் நிகழ்த்துவா யென்றான்"

(அடுத்த பக்கம் பார்க்க)

சுழி எறிந்து நெஞ்சு சுழல (நெஞ்சு சுழி யெறிந்து சுழல) நெஞ்சமானது நீர்ச் சுழிபோல சுழலுகை உற்றுச் சுழல, விடத்தைக் கலந்திருக்கின்ற இரண்டு கண்கள் அவைகளாலே (கண்களாலே) நான் கலக்கமுற்று

ஒன்றோடொன்று இணைந்து நெருங்கும் கொங்கைகளை உடைய பெண் மயக்கத் துயரை (காமத் துயரை) என்று ஒழிந்து விடுவேனோ (அறிகிலேன் என்றபடி)

எழுது (அடைக்கலம் புக - எழு (ந்) து) கும்பகர்ணனுடைய இளைய தம்பியாகிய விபீடணன், (ஸ்ரீராமரின் திருவருளில் வைத்த). நம்பிக்கையுடன் ஸ்ரீராமபிரானது எதிரில் வந்து சேர்ந்து வணங்கினபோதே (வணங்கின அந்தச் சமயத்திலேயே)

இத(ய)ம் மகிழ்ந்து (அல்லது இனிமையுடன் - மகிழ்ந்து), இலங்கையில் உள்ள அசுரர்களுடைய ரகசியங்களை எடுத்துரைக்க, வெற்றிபெற்ற மேகவர்ணனாம் ஸ்ரீராமரின் (திருமாலின்) மருகனே!

மழுவை (பரசு - கோடாலி) மகிழ்ச்சியுடன் ஏந்தும் திருக்கரத்து அரன் (சிவன்) மகிழ்ச்சியுடன் வணங்க (பிரணவ) மந்திரத்தை உபதேசித்து நின்ற குருநாதனே!

வளப்பம் மிக்க குன்ற நகரில் ஊரைக் காத்து அங்குள்ள பரிசுத்தமான மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(பெண்கள் துயரை என்றொழிந்து விடுவேனோ)

# 406

திசைகளின் நிலையைக் குலைக்கவல்ல வலிமை மிகுந்த யானையின் பலத்த தந்தங்களைத் தடிய (அழிக்க) வல்லனவும், புணர்ச்சிக்கு உரிய வலிமை கொண்டனவும், சகல வேதங்களும் புகழ்கின்ற பரமர், ஞெகிழி (சிலம்பு) கலகலவென்று ஒலிக்கும், அழகிய பொலிவுள்ள திருப்பாதங்களை உடையவர் ஆகிய சிவபிரான் ஏந்தின வில்லாகிய அழகிய சிறந்த மலையாகிய மேருவைத் தாக்க வல்லனவும், களப பரிமள மெழுகும் (பரிமள களப மெழுகும்) நறுமணமுள்ள களபச் சாந்து பூசப்பட்ட, எழிலில் (அழகில்), முழுகுவனவும், தாமரை (மொட்டு) பயப்படும்படி பெருத்து எழுவனவும், வஞ்சனையுள்ள கருத்தையுடைய மன்மதனுடைய கிரீடத்தை-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

‡ மநு - மந்திரம். § ககுபம் - திசை "ககுபமே எண்களிறு" மாயூரபுராணம் (பக்கம் - 48.)

பாடல் 406-இல் முதல் இரண்டடிகள் கொங்கை வர்ணனை

கடிவபடு கொலையிடுவ கொடியமுக படமணிவ
இன்பச்சு டர்க்கனக கும்பத் தரச்செருவ
பிருதில்புள கிதசுகமு மிருதுளமும் வளரிளைஞர்
புந்திக் கிடர்த்தருவ பந்தித் தகச்சடர்வ
கயல்மகர நிகரமிக வியன்மருவு நதியில்முதிர்
சங்கிப்பி முத்தணிவ பொங்கிக் கனத்தொளிர்வ
முலைமாதர்;

வகுளமலர் குவளையிதழ் தருமணமு மிருகமத
மொன்றிக்க றுத்துமுகில் வென்றிட்டு
நெய்த்தகுழல்
அசையருசி யமுர்தக்ருத வசியமொழி மயில்குயிலெ
னும்புட் குரற்பகர வம்புற்ற மற்புரிய
வருமறலி யரணமொடு முடுகுசமர் விழியிணைகள்
கன்றிச் சிவக்கமகிழ் நன்றிச் சமத்து*நக
நுதிரேகை-

வகைவகைமெ யுறவளைகள் கழலவிடை துவளவிதழ்
உண்டுட்ப்ர மிக்கநகை கொண்டுற் றணைத்தவதி
செறிகலவி வலையிலென தறிவுடைய கலைபடுதல்
†உந்திப் பிறப்பறநி னைந்திட்ட முற்றுணடி
வயலிநகர் முருகசெரு முயல்பனிரு கரகுமர
துன் ‡றட்ட சிட்டகுண குன்றக் குடிக்கதிப
அருளாதோ;

---

* நகக்குறி வகைகள் - பாட்டு 331 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

† உந்துதல் - நீங்குதல். 'உந்தாத அன்பொடு உருத்திரம் சொல்லி' (திருத்தொண்டர் திரு அந்தாதி - 19)

‡ அட்ட குணங்கள் :

தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பில் இன்பம் உடைமை, (குறள் 9 உரை) அல்லது-

பவமின்மை, இறவின்மை, பற்றின்மை, பெயரின்மை, உவமையின்மை, ஒருவினையின்மை, குறைவிலறிவுடைமை, கோத்திரமின்மை (பிங்கலம்).

அடக்க வல்லன, பொல்லாத கொலைத் தொழிலுக்கு இடங்கொடுப்பன, கொடிதான முகபடாம் (மேலாடை) அணிவன; இன்பந்தரும் ஒளி பொருந்திய தங்கக் குடத்துடன் தக்க முறையில் நன்றாக போர்புரிய வல்லன; விருதில் (வெற்றிச் சின்னமாக) புளகாங்கித சுகத்தாலும் மென்மையாலும் - வளர்கின்ற இளைஞர்களின் புத்திக்கு இடர் (வருத்தத்தை) தருவ (விளைவிப்பன), கட்டப்பட்ட ரவிக்கையால் நெருக்கு உண்பன; கயல்மீன், மகரமீன் இவைகளின் நிகரம் (கூட்டம்) மிக்கு வியன் (சிறப்பு) பொருந்திய நதியில் முதிர் (நிறைந்த) சங்கு, இப்பி (சிப்பி), முத்து இவைகளை அணிவன, மேலெழுந்து பாரங்கொண்டு விளங்குவன ஆகிய கொங்கை களை உடைய மாதர்கள்.

மகிழம்பூ, குவளை மலரின் இதழ் இவைதரு மணமும், கத்தூரியும் கலந்து, கருநிறத்தால் மேகத்தையும் வென்று வாசனை எண்ணெய் பூசப்பட்ட கூந்தல் அசைய, ருசிக்கின்ற இனிப்புள்ள அமுதத்தாலாகியதும், தன் வசப்படுத்தக் கூடியதுமான மொழியானது மயில், குயில் என்கின்ற புட்குரலைக் காட்ட, வம்பு தருகின்ற மல்யுத்தம் (கலவிப்போர்) செய்ய, வருகின்ற யமனுடைய அரணமொடு வேலுடன் ஒத்து முடுகிப் போர் புரியும் கண்கள் இரண்டும் மிகவும் சிவக்க மகிழ்ந்து (கொடுத்த பொருளுக்கு) நன்றி பாராட்டுவதான (கலவிப்) போரில் நகத்தின் நுனி ரேகைகள் (குறிகள்)

வகைவகையாக உடலிற் பொருந்த, வளைகள் கழன்று விழ, இடை நெகிழ்ச்சியுற, வாயிதழ் ஊறலை உண்டு, உள்ளம் பிரமிக்க, ஆசை பூண்டு பொருந்தி அணைக்கும் (அவதி) துன்பம் நிறைந்த புணர்ச்சி வலையில் என்னுடைய அறிவு கொண்டுள்ள கலை (நூலறிவு) அழிவுபடுதல் நீங்குதலாகி (நீங்கி), என் பிறப்பு அறும்படியான வழியை (நீ)நினைத்து, இட்டம் உற்று என் மேல் அன்பு வைத்து உன் அடி (உன் திருவடியை) வயலிநகர் முருகனே! போருக்கு உற்ற பன்னிரு கரத்தனே குமரனே! பொருந்திய அட்ட சிட்ட குண (சிட்ட அட்ட குண!) சிரேட்டமான எண் குணத்தனே! குன்றக்குடிக்குத் தலைவனே! (உனது) திருவருள் தந்தருளாதோ!

தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு
தங்குத் தகுத்தககு திங்குத் திகுத்திகிகு
சகணசக சகசகண செகணசெக செகசெகெண
சங்கச் சகச்சகண செங்கச்செ கச்செகண
தனனதன தனதனன தெனனதென தெனதெனன
தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன
தனனானா-

தகுதகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி
தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத்திகுகு
டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிண
டண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி
தரரதர தரதரர திரிரிதிரி திரிதிரிரி
தன்றத் தரத்தரர தின்றித் திரித்திரிரி யெனதாளந்;

தொகுதிவெகு *முரசுகர டிகைடமரு முழவுதவில்
தம்பட்ட மத்தளமி னம்பட் டடக்கைபறை
பதலைபல திமிலைமுத லதிரவுதிர் பெரியதலை
மண்டைத் திரட்பருகு சண்டைத் திரட்கழுகு
துடர்நிபிட கருடனடர் தரகரட மொகுமொகென
வந்துற் றிடக்குடர்நி ணந்துற் றிசைத்ததிர முதுபேய்கள்-

சுனகனரி நெறுநெறென வினிதினிது தினவினைசெய்
வெங்குக் குடத்தகொடி துங்குக் குகுக்குகென
†வடனமிடு திசைபரவி நடனமிட வடலிரவி
திங்கட்ப்ர பைக்கதிர்கள் மங்கப்ர சித்தகுல
துரககஜ ரதகடக முரணரண நிருதர்விறல்
மிண்டைக் குலைத்தமர்செய் தண்டர்க் குரத்தையருள்
பெருமாளே (2)

---

* முரசு, கரடிகை, டமருகம், முழவு, தவில், தம்பட்டம், மத்தளம், டக்கை (இடக்கை), பறை, பதலை, திமிலை - இவை வாத்திய வகைகள். திமிலை - சல்லரி எனப்படும். கரடிகை - தட்டை எனப்படும்: பதலை என்பது ஒரு கட் பகுவாய்ப் பறை; முரசு - துந்துபி எனப்படும். தம்பட்டம் முரசு முழவு எனப் பொருள்படும்; இடக்கை ஒருவகைப் பறை (பிங்கலம்) - திருப்புகழ் 404 - அடி 7 - பார்க்க. † வடு - வடுத்தல் - வெளிப்படுத்துதல். "வடுத்தெழுகொலை முலை " கல்லா - 5.

***தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு***

***　　***　　***　　***

***தந்தத்த னத்தனன தெந்தத்தெ னத்தெனன தனனானா***

***தகுததகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி***

****　　****　　****　　****

***தன்றத்த ரத்தரர தின்றித்தி ரித்திரிரி என்று தாளக்***

*கூட்டங்களும்,* பல *முரச* வாத்தியங்களும், கரடிகை, தமருகம், முழவு, தவில், தம்பட்டம், மத்தளம், பறையினத்தைச் சேர்ந்த டக்கை (இடக்கை), பறை, பதலை, பல *திமிலைகள்* முதலான வாத்தியங்கள் அதிர்ச்சியான ஒலிகளைச் செய்ய, போரில் *அற்றுவிழும்* பெரிய *தலை* (மண்டைத்) *திரளை* (கூட்டத்தை) *உண்ணும் சண்டையிடும் கூட்டமான கழுகுகளும்* அவைகளைத் *தொடரும் நெருங்கிக்* (கூட்டமாய் வந்த) *கருடன்கள் நெருங்கி வர, கரடம்* (காக்கைகள்) *மொகு மொகு என்று வந்து உற்றிட* (சேர), (இவை யாவும்) *குடல், நிணம்* (மாமிசம்) இவைகளைத் *துற்று* (உண்டு), *இசைத்து அதிரக் கூச்சலிட்டு முழங்கப் பழம் பேய்கள்*-

*சுனகன்* (நாய்), *நரி* இவை *நெறு நெறு* என்னும் ஒலியுடன் *இனிது இனிது தி(ன்)ன* - (ருசிக்கின்றது, ருசிக்கின்றது உண்ண) என்று *தின்னும் தொழிலைச் செய்ய,* (வெங் குக்குடத்த கொடி) *கொடிய கோழியை உடைய கொடி* - *துங்குக் குகுக்கு* - என்று ஒலிக்க, *வடனம் இடு திசையைப் பரவி* (வடு அன்னம் - வடு வெளிப்படும் - அன்னம் - உணவு - இடு - கிடைக்கின்ற, அல்லது - அடனம் இடு - அலைந்து திரியும்) திசையைப் போற்றி செய்து, *நடனமிட* - கூத்தாட, *வலிமை வாய்ந்த, சூரியன், சந்திரன்* இவைதம் ஒளிக்கிரணங்களும் *மழுங்க பேர்பெற்ற சிறந்த குதிரை, யானை, தேர், சேனை, வலிய அரணம்* (கோட்டை மதில்) இவைகளைக் *கொண்ட அசுரர்களின் வலிமையையும், துடுக்கையும் அடக்கி ஒடுக்கிப் போர் புரிந்து தேவர்களுக்கு உரத்தை* (வலிமையை) *அருளிய பெருமாளே!*

*(உன் அடி அருளாதோ)*

## 407. மாதர் மேலுள்ள மயல் அற

தனதனன தந்த தானன, தனதனன தந்த தானன
தனதனன தந்த தானன தனதான

கடினதட கும்ப நேரென வளருமிரு கொங்கை மேல்விழு
கலவிதரு கின்ற மாதரொ டுறவாடிக்-

கனவளக பந்தி யாகிய நிழல்தனிலி ருந்து தேனுமிழ்
கனியிதழை மென்று தாடனை செயலாலே;

துடியிடைநு டங்க வாள்விழி குழைபொரநி ரம்ப மூடிய
துகில்நெகிழ *வண்டு கோகில மயில்காடை-

தொனியெழவி ழைந்து கூரிய கொடுநகமி சைந்து தோள்மிசை
துயில்வச இன்ப மேவுத லொழிவேனோ;

இடிமுரச றைந்து பூசல்செய் அசுரர்கள்மு றிந்து தூளெழ
எழுகடல்ப யந்து கோவென அதிகோப-

எமபடரு மென்செய் வோமென நடுநடுந டுங்க வேல்விடு
இரணமுக †சண்ட மாருத மயிலோனே;

வடிவுடைய ‡அம்பி காபதி கணபதிசி றந்து வாழ்தட
வயலிநகர் குன்ற மாநக ருறைவோனே-

வகைவகைபு கழந்து வாசவன் அரிபிரமர் சந்த்ர சூரியர்
வழிபடுதல் கண்டு வாழ்வருள் பெருமாளே. (3)

---

* வண்டு, கோகிலம், முதலிய புட்குரல் - பாட்டு 197.

† சண்டமாருத மயில் :- "விசைகொண்ட வாகனப் பீலியின் கொத்து அசைபடு கால் பட்டசைந்தது மேரு" -கந். அலங்.11.

‡ அம்பிகாபதி - வயலூர் சிவபெருமானுக்கு 'அக்கினீசுரர்' என்று பெயர். கணபதிக்குப் பொய்யாக் கணபதி என்று பெயர் 910 -ஆம் பாட்டு ஈற்றடியில்-

" அருளிற் சீர் பொயாத கணபதி
திருவக்கீசன் வாழும் வயலியின்
அழகுக் கோயில் மீதில் மருவிய பெருமாளே"

என வருதல் காண்க.

# 407

வலிமையும் அகலமும் உள்ள குடத்துக்கு ஒப்பாக வளர்கின்ற இரு கொங்கைகளின் மேலே விழுகின்ற புணர்ச்சி தருகின்ற பெண்களுடன் உறவுபூண்டு-

கனத்த கூந்தற் கட்டாகிய நிழலில் இருந்து, தேனின் இனிப்பைத் தருகின்ற கொவ்வைக்கனி போன்ற வாயிதழை மென்று, தாடனைச் செயலாலே (காம சாத்திரப்படி தட்டுகை என்னும் செயல் செய்து)

உடுக்கை போன்ற இடை துவள, வாள்போன்ற கண்கள் காதில் உள்ள குழைகள் அளவும் சென்று போர்புரிய, நிரம்ப மூடியிருக்கும் புடைவை தளர்ந்து விழ, வண்டு, குயில், மயில், காடை இவைகளின்

ஒலி உண்டாக, ஆசையுடன் கூர்மையான வளைந்த நகக்குறிகளை வைத்து, தோளின்மேல் தூங்கும் மயக்க இன்பத்தை விரும்புதலை ஒழிக்கமாட்டேனா.

இடிபோல முழங்கும் முரசு (பேரிகை) வாத்தியத்தை ஒலித்து, போர் செயும் அசுரர்கள் தோல்வியுற்று முறிபட்டுப் பொடியாக, ஏழு கடல்களும் பயங்கொண்டு - கோ - என்று சப்திக்க. அதிக கோபமுள்ள

யமதூதர்களும் என் செய்வோம் என்று நடு நடுங்க வேலாயுதத்தைச் செலுத்தும் மயிலோனே! போர்க்களத்திற் பெருங்காற்று போலச் (சிறகை வீசிப் பறக்கும்) மயிலோனே!

அழகு நிறைந்த அம்பிகாபதி (அக்கினீசுரர் என்னும்) சிவபெருமானும், கணபதி (பொய்யாக் கணபதி) என்னும் விநாயகப் பெருமானும் சிறப்புடன் வாழ்கின்ற இடமாகிய வயலூரிலும், **குன்றமா நகர் என்னும் குன்றக்குடியிலும்** வீற்றிருப்பவனே!

விதம் விதமாக (உன்னைப்) புகழ்ந்து இந்திரன், திருமால் பிரமன், சந்திரன், சூரியன் இவர்கள் வழிபடுவதை அறிந்து அவர்களுக்கு வாழ்வு அருள் பெருமாளே!

(அவச இன்பமேவுதலொழிவேனோ)

## 408. பொது மகளிர் உறவு அற

தானா தானா தந்தன தத்தன
தானா தானா தந்தன தத்தன
தானா தானா தந்தன தத்தன தனதான

நேசா சாரா டம்பர மட்டைகள்
பேசா தேயே சுங்கள மட்டைகள்
நீசா ளோடே யும்பழ கிக்கவர் பொருளாலே-

நீயே நானே யென்றொரு சத்தியம்
வாய்கூ சாதோ துங்க படத்திகள்
நேரா லேதா னின்றுபி லுக்கிகள் எவர்மேலும்;

ஆசா பாசா தொந்தரை யிட்டவர்
மேல்வீழ் வார்பால் சண்டிகள் கட்டழ
காயே மீதோ லெங்கு மினுக்கிகள் வெகுமோகம்-

ஆகா தாவே சந்தரு திப்பொழு
தோகோ வாவா வென்று பகட்டிக
ளாகா மோகா வம்பிகள் கிட்டிலு முறவாமோ;

*பேசா தேபோய் நின்றுறி யிற்றயிர்
வாயா வாவா வென்று குடித்தருள்
பேரா லேநீள் †கஞ்சன் விடுத்தெதிர் வருதூது-

---

* 'தயிர்ச் சோரன்' என்றார் 165 - ஆம் பாடலில், "தயிர் நெய் விழுங்கிட்டு ஆய்ச்சியர் தாம்பினால் ஆர்க்கத் தழும்பிருந்த தாமோதரா" பெரிய திருமொழி - 10 -5- 3.

"மத்தளவும் தயிரும் வாரிவிழுங்கி" - பெரியாழ்வார் 1-5-5. திருப்புகழ் 362.

† கஞ்சன் அனுப்பின பேயின் முலையுண்டது - பாடல் 115 பார்க்க. 'பேய் மாய முலையுண்டு இவ்வுலகுண்ட பெருவயிற்றன்' பெரிய திருமொழி 5-5 -4.

"தன்மகனாக வன்பேய்ச்சிதான் முலையுண்ணக் கொடுக்க வன்மகனாய் அவள் ஆவி வாங்கி முலையுண்ட நம்பீ' - பெரிய திருமொழி 10-4-7.

## 408

(நேச ஆசார ஆடம்பர மட்டைகள்) அன்பு, ஆசாரம் ஆடம்பரம் இவை பொருந்திய பயனிலிகள், பேசாமலிருந்து கொண்டே பிறரைப் பழிக்கின்ற (கள்ள) வீணிகள், கீழ்க் குலத்து இழிந்தோர்களோடும் கூடப் பழகிப் பறிக்கின்ற பொருளாலே-

(நீயே நானே என்றொரு சத்தியம்) உன்மேல் ஆணை, என்மேல் ஆணை என்று ஆணையிட்டு வாய் கூசாமல் பேசுகின்ற வஞ்சனை எண்ணத்தினர், எதிரிலேயே நின்று தளுக்கு, ஆடம்பரஞ் செய்பவர்கள், யார் மேலும்

ஆசையாகிய பந்தத்தைக் காட்டித் தொந்தரவு செய்து மேல் வீழ்பவரிடத்தே சண்டித்தனம் செய்பவர்கள் (பிடிவாதம் பிடிப்பவர்கள்), நல்ல பேரழகுடனே மேலே தோலெங்கும் மினுக்குபவர்கள், அதிக மோகம் -

வைக்கலாகாதா! ஆவேசம் தருகின்றது இப்பொழுது - (காம மயக்க ஆவேசம் இப்போது உண்டாகின்றது.) ஓகோ! வா! வா! (வாரும், வாரும்) என்று கூறி வஞ்சிப்பவர்களுடைய ஆகாத (பொருந்தாத! உண்மையல்லாத) மோகந்தரும் வீணர்களின் கிட்டேயும் (அருகிலும்) உறவு சம்பந்தம் ஆமோ! உறவு கூடாது என்றபடி.

பேசாமல் (யாருக்கும் தெரியாமல்) போய் நின்று உறியிலிருந்த தயிரை வாயால் ஆ ஆ ஆ என்று குடித்து, (அருள் நீள் பேராலே) அருள், பேர் அளவுக்கு மாத்திரம், பெரிதும் வைத்து - (உண்மையில் அருளே இலாது வஞ்சனையுடன்) கம்சன் அனுப்பி எதிரில் வந்த தூதாகிய-

பேழ்வாய் வேதா எம்பக டைப்பகு
வாய்நீள் மானா ளுஞ்சர ளத்தொடு
பேயானாள் போர் வென்றெதி ரிட்டவன் மருகோனே;

மாசூ டாடா டும்பகை யைப்பகை
சூரா ளோடே வன்செரு வைச்செறு
மாசூ ராபா ரெங்கும ருட்பொலி முருகோனே-

வானா டேழ்நா டும்புகழ் பெற்றிடு
*தேனா றேசூழ் துங்க மலைப்பதி
மாயூ ராவாழ் குன்றை தழைத்தருள் பெருமாளே. (4)

## 409. பெண்கள்மேல் மயக்கு அற

தனதன தந்தத் தனதன தந்தத்
தனதன தந்தத் தனதான

பிறர்புக ழின்சொற் பயிலுமி ளந்தைப்
பருவம தன்கைச் சிலையாலே-

பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்
பெருவழி சென்றக் குணமேவிச்;

சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்
செயலும ழிந்தற் பமதான-

தெரிவையர் தங்கட் கயிலைவி ரும்பிச்
சிலசில பங்கப் படலாமோ;

கெறுவித வஞ்சக் கபடமொ டெண்டிக்
கிலுமெதிர் சண்டைக் கெழுசூரன்-

---

* 'தேனாறு புடை பெருகு மாயூர கிரி முருக' இது மதுநதி எனவும்படும்; " தரளஞ் சிதறும் மதுநதி உடையாய்" - மயூரகிரி நாதர் (பிள்ளைத் தமிழ்).

பெரிய வாயைக்கொண்ட வேதாளம் (பூதனை என்னும் பேய்), பகடு (பரந்த) ஐ (வியக்கத்தக்க) பகுவாய் (பிளந்தவாயைக் கொண்ட) பெரிய மானாள் (பெண்ணும்) சரளத்தொடு எளிதாகவே, பேய் ரூப மெடுத்தவளாகிய பூதகி என்பவளின் (வஞ்சனைப் போரை) செயித்து எதிர் நின்றவனாகிய கண்ணபிரானது (திருமாலின்) மருகனே!

குற்றத்திலே ஊடாடி ஆடுகின்ற பகைவர்களையும், பகைத்து நின்ற சூரர்களையும் வலிய போரில் அழித்த மகா சூரனே! உலகம் முழுமையும் அருள்பாலித்து விளங்கும் முருகனே!

வானாடு முதலான ஏழு பூமியும் புகழ்பெற்று விளங்குவதும் தேனாறு என்னும் நதி சூழ்ந்துள்ளதுமான, பரிசுத்த மலைத்தலத்து மயிலனே! அல்லது துங்கமலைப்பதி மாயூரா - (துங்க மாயூரமலைப்பதியாய்) (மயூரகிரித் தலத்து உறைபவனே)! வாழ்வு நிறைந்த குன்றக்குடி என்னும் தலத்தில் விளங்கியருளும் பெருமாளே.

(மோகா வம்பிகள் கிட்டிலும் உறவாமோ)

## 409

பிறர் (ஞானியர் அல்லாத பிறர்) புகழும் இனிய-சொல்லைப் பயிலும் இளந்தை (பால்ய) பருவமுள்ள மன்மதனுடைய கையில் உள்ள வில்லாலே-

பிறவியினால் உண்டாகின்ற சிக்கல்கள் பெருகும் பொய்யான பெரிய வழியில் சென்று அப்பொய்க் குணத்தையே பொருந்தி-

(அதனால்) சிறுமை அடைந்து, பெருமை சுருங்கி, செயல்கள் அழிந்து, அற்பகுணமுள்ள-

மாதர்களின் கண் கயலை (கயல்மீன் போன்ற கண்ணை) விரும்பி ஈடுபட்டு (அதனாற்) சிலசில அவமானங்களை அடையலாமா!

கர்வமும், வஞ்சனை எண்ணமும், சூதும் கொண்டு எட்டுத் திக்கிலும் எதிர்த்து சண்டைக்கு என்று எழுந்த சூரன்-

கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்
கிழிபட துன்றிப் பொருதோனே;

குறுமுநி யின்பப் பொருள்பெற அன்றுற்
பனமது வுஞ்சொற் குருநாதா-

குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
குடிவளர் கந்தப் பெருமாளே. (5)

## 410. அகப்பொருள்

தனன தனன தனத்தந் தனதான

தவள மதிய மெறிக்குந் தணலாலே-
சரச மதனன் விடுக்குங் கணையாலே;
கவன மிகவு முரைக்குங் குயிலாலே-
கருதி மிகவு மயக்கம் படவோநான்;
பவள நிகரு மிதழ்ப்பைங் குறமானின்-
பரிய வரையை நிகர்க்குந் தனமேவுந்;
திவளு மணிகள் கிடக்குந் திருமார்பா-
திகழு மயிலின் மலைக்கண் பெருமாளே. (6)

## 411. உடனிருக்க

தானான தனதான தானான தனதான
தானான தனதான தனதான

நாமேவு குயிலாலு மாமார னயிலாலு
நாடோறு மதிகாயும் வெயிலாலும்-

நார்மாதர் வசையாலும் வேயூது மிசையாலு
நாடாசை தருமோக வலையூடே;

சுற்றத்தாருடன் மங்கி அழிய, அவர்கள் தலைமுடிகள் சிதைந்து கிழிபட, நெருங்கிச் சண்டை செய்தவனே!

அகத்திய முநிவர் இன்பந்தரும் (உண்மைப்) பொருளை அறியும்படி அன்று திருவுளத்தில் உதித்த மந்திரத்தை உபதேசித்த குருநாதனே!

சிரேட்டமான கிரியாக, பரிசுத்தமான கிரியாக, மேம்பட்டு விளங்கும் குன்றக்குடியில் வீற்றிருந்தருளும் கந்தப் பெருமாளே!

(தெரிவையர் கண்கயலை விரும்பிப் பங்கப் படலாமோ)

## 410

வெண்ணிறமுற்ற சந்திரன் வீசம் நெருப்பாலே-

காமசேட்டைக்கு இடம் கொடுக்கும் மன்மதன் செலுத்தும் பாணத்தாலே-

கவனம் (கலக்கம்) மிகவும் (தனது கூவுதலால்) தெரியப்படுத்தும் குயிலாலே-

(எனது) கருத்தில் மிக்க மயக்கத்தை அடையலாமோ நான்-

பவளத்துக்கு ஒப்பான இதழ்களை உடைய பச்சைக் குறமானாகிய வள்ளியினுடைய -

பருத்த மலைக்கு ஒப்பான கொங்கையின் மேலுள்ள-

ஒளிவீசும் மணிமாலைகள் பொருந்தும் அழகிய மார்பனே!

விளங்குகின்ற மயில்மலை (மாயூரகிரி) என்கின்ற, குன்றக்குடியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மயக்கம் படவோ நான்)

## 411

நாம் (அச்சத்தைத்) தரும் குயிலாலும் (அல்லது (நா - மேவு) கூவுதல் செய்கின்ற குயிலாலும்), சிறந்த மன்மதனது கூரிய பாணங்களாலும், நாள்தோறும் அதிகமாகிக் காய்கின்ற (நிலவின்) ஒளியினாலும்-

அன்புள்ள மாதர்கள் பேசும் வசைமொழியாலும், புல்லாங்குழல் ஊதும் இசையாலும், விரும்புகின்ற ஆசையால் வரும் மோகம் என்கின்ற வலைக்குளே - (நான்)

ஏமாறி முழுநாளு மாலாகி விருதாவி
லேவாரும் விழிமாதர் துயரூடே -
ஏகாம லழியாத மேலான பதமீதி
லேகீயு னுடன்மேவ அருள்தாராய்;
தாமோக முடனூறு பால்தேடி யுரலூடு
தானேறி விளையாடு மொருபோதில்-
தாயாக வருசோதை *காணாது களவாடு
†தாமோத ‡ரன்முராரி மருகோனே;
மாமாது வனமாது கார்மேஷ் சிலைமாது
மாலாகி §விளையாடு புயவீரா -
வானாடு புகழ்நாடு தேனாறு புடைசூழு
மாயூர கிரிமேவு பெருமாளே. (7)

## பொதியமலை

(இது பாவநாசம். திருநெல்வேலி மாவட்டத்திலுள்ளது. அம்பாசமுத்திரம் புகைவண்டி நிலையத்திலிருந்து 7-மைல். பாவநாசத் தலபுராணத்தைப் பார்க்க.)

### 412. பெண்கள் மீதுள்ள மயக்கம் அற

தத்த தத்த தான தான, தத்த தத்த தான தான
தத்த தத்த தான தான தனதான

மைக்க ணிக்கன் வாளி போல வுட்க ளத்தை மாறி நாடி
மட்டி முற்ற கோதை ¶போத முடிசூடி-

---

* காணாது களவாடு - திருப்புகழ் 362 - பார்க்க.

† கயிற்றினால் வயிற்றிற் கட்டப்பட்ட படியால் கண்ணன் தாமோதரன் ஆயினன் (தாமம் - கயிறு; உதரம் - வயிறு.)

‡ முராரி - பாட்டு 231 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

(அடுத்த பக்கம் பார்க்க)

ஏமாற்றம் அடைந்து முழுநாளும் வீணாகவே நீண்டு நிறைந்த கண்களை உடைய மாதர்களால் வரும் துயர்க்குள்ளே

செல்லாமல், (துயரடையாத வண்ணம்), அழிவிலாததும் மேலானதுமான நிலையை அடைந்து (நான்) உன்னுடன் பொருந்தி இருக்க அருள் தருவாயாக.

தாம் மோகமுடன் (ஆசையுடன்) கறந்த பாலைத்தேடி, உரலுடன் ஏறி விளையாடின ஒரு பொழுதில்-

தாயாக வந்த (அசோதை) காணாவண்ணம் (அந்த) பாலைக் களவாடின தாமோதரன், முராரி எனப்படும் திருமாலின் மருகனே!

மா (இலக்குமி) பெற்ற மாது (அல்லது - சிறந்த மாது) காட்டில் (வள்ளிமலைக் காட்டில்) வளர்ந்த மாது, மேகம் படியும் சிலை (மலை - வள்ளிமலையில்) வாழ்ந்த மாது - ஆகிய வள்ளி ஆசைபூண்டு விளையாடுகின்ற புயங்களை உடைய வீரனே!

வானநாட்டாரும் புகழ்கின்ற நாட்டில் தேனாறு பக்கத்தில் சூழ்ந்துவரும் மாயூரகிரி என்கின்ற குன்றக்குடியில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(உடன் மேவ அருள்தாராய்)*

## பொதியமலை
## 412

மை பூசிய கண் இக்கன் (கரும்பு வில்லை உடைய மன்மதனுடைய) பாணங்கள் போல (வேலை செய்ய), உள்ளே இருக்கின்ற கள்ளக் குணத்தை வேறாக மூடிவைத்து, விருப்பம் காட்டி, வாசனை உள்ள மாலையைச் செவ்வையாகத் தலைமுடியில் அணிந்து-

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

§ வள்ளி விளையாடு புயவீரா - " குறமாது தனக்கு விநோத கவினாரு புயத்தில் உலாவி விளையாடிக் களிகூரும் உனை" - திருப்புகழ் 293.

¶ போத - செவ்வையாக.

' போதத் தன் செவித்தோலை யிருகைகளாற் பொத்தி' (கம்பராமா - இரணி - 22)

மத்த கத்தி னீடு கோடு வைத்த தொத்தின் மார்பி னூடு
வட்ட மிட்ட வாரு லாவு முலைமீதே;

*இக்கு வைக்கு மாடை வீழ வெட்கி யக்க மான பேரை
யெத்தி முத்த மாடும் வாயி †னிசைபேசி-

எட்டு துட்ட மாதர் பாய லிச்சை யுற்றெ னாக மாவி
யெய்த்து நித்த **மான வீன முறலாமோ;**

துர்க்கை ‡பக்க சூல காளி §செக்கை புக்க தாள வோசை
தொக்க திக்க தோத தீத வெனவோதச்-

சுற்றி வெற்றி யோடு தாள்கள் ¶சுத்த நிர்த்த மாடு மாதி
சொற்கு நிற்கு $மாறு தார மொழிவோனே;

திக்கு மிக்க வானி னூடு புக்க **விக்க மூடு சூரர்
††திக்க முட்டி யாடு தீர வடிவேலா-

செச்சை பிச்சி மாலை மார்ப விச்சை கொச்சை மாதி னோடு
‡‡ **செப்பு வெற்பில்** சேய தான பெருமாளே. (1)

---

* இக்கு - தடை.

† இசை - இசைதல், முதனிலைத் தொழிற் பெயர்.

‡ பக்க - பகுப்புற்ற; முக் கிளையாகப் பிரிந்த.

§ செக்கை -செங்கை.

¶ சுத்த நிர்த்தம் - சொக்கம் என்னும் கூத்து - அது நூற்றெட்டுக் கரணம் உடைத்து. சிலப்பதி - *3 - 12* உரை

$ மா றுதாரம் - மறு உத்தரம்

** விக்கம் - வீக்கம், கர்வம் - 'இலங்கைக் கோமான் தன்னை வீக்கம் தவிர்த்த விரலார்' - அப்பர் *6 -35 -10.*

†† திக்க - பலவழியாகச் சிதற.

‡‡ செப்பு வெற்பு என்பது பொதிய மலை; 'செம்புடற் பொதிந்த தெய்வப் பொதியமும்' 'தென்கால் விடுக்கும் செம்பிற் பொருப்பு' - கல்லாடம் *65, 52.*

யானையின் மத்தகத்தில் நீண்டிருக்கும் தந்தங்கள் வைத்ததை ஒத்து (நிகர்த்து ) (இன்) அழகிய மார்பிலே, வட்ட வடிவாய், ரவிக்கை அணிந்ததாய். அமைந்துள்ள கொங்கை மேலே-

தடையாயுள்ள ஆடைவிழ, வெட்கப்பட்டு, இயக்கமான பேரை (குறிப்பின் வழி நடக்கும் ஆள்களை) வஞ்சித்து முத்தமிடுகின்ற வாயால், இசைதலை - (உடன்படுதலைப்) பேசி

*எட்டு - தங்களுக்கு இசைந்தவர்களை எட்டுகின்ற (கிட்டும்) (அணுகும்), துட்ட மாதர்களின் படுக்கையில் ஆசை பூண்டு என் உடலும் உயிரும் களைத்துப் போய்த் தினந்தோறும் மான பங்கத்தை அடையலாமா!

துர்க்கை, முக்கிளையாகப் பிரிந்த (திரிசூலத்தை ஏந்திய) காளியின் செங்கையில் உள்ள தாளத்தின் ஓசை தொக்க திக்க தோத தீத என்று சப்திக்க-

சுழன்று செயத்துடன் தாள்கள் சுத்த நிர்த்தத்தை- **'சொக்கம்'** என்னும் நடத்தை ஆடுகின்ற முதல்வராம் சிவ பிரானுடைய சொல்லுக்கு (நீ எனக்கு உபதேசிப்பாயாக என்று சொன்ன சொல்லுக்கு) நிற்கும் (இணங்கும்) மறு மொழியை மொழிந்தவனே! (உரிய உபதேசத்தை உணர்த்தியவனே);

திக்குகளிலும் பெரியவானினிடத்தும் சென்ற விக்கம் - வீக்கம் - கர்வம் மிகுந்த - சூரர்கள் பலவழியாகச் சிதற அவர்களைத் தாக்கிப்போர் புரிந்த தைரியம் உள்ள கூரிய வேலனே!

வெட்சி, பிச்சிப்பூ இவையாலாய மாலையை அணிந்த மார்பனே! அறிவுள்ள,கொச்சைச் சொல் பேசும் - அல்லது இழிந்த (வேடர் குலத்தவளான) மாது - வள்ளியுடன் **பொதிய மலையில்** சேயாக (குழந்தை முருகனாக) விளங்கும் பெருமாளே!

(மான ஈனம் உறலாமோ)

---

* இசை பேசிகளாம் எட்டுக் கணக்கான துட்டமாதர் - எனவுமாம்.

## 413. ஐக்கிய நிலைபெற

தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன தந்ததான

*வெடித்த வார்குழல் விரித்து வேல்விழி
விழித்து மேகலை பதித்து வார்தொடு
மிகுத்த மாமுலை யசைத்து நூலின்ம ருங்கினாடை-

மினுக்கி யோலைகள் பிலுக்கி யேவளை
துலக்கி யேவிள நகைத்து கீழ்விழி
மிரட்டி யாரையு மழைத்து மால்கொடு தந்தவாய்நீர்;

குடித்து நாயென முடக்கு மேல்†பிணி
யடுத்து பாதிகள் படுத்த தாய்தமர்
குலத்தர் யாவரு நகைக்க வேயுடல் மங்குவேனைக்-

குறித்து நீயரு கழைத்து மாதவர்
கணத்தின் மேவென அளித்து ‡வேல்மயில்
கொடுத்து வேதமு §மொருத்த னாமென சிந்தைகூராய்;

---

* வெடித்த - நறுமணங் கமழ்கின்ற.

† பிணி அடுத்த உபாதிகள் படுத்த எனப் பிரிக்க.

‡ வேல் மயில் கொடுத்தல்: வேல் பொறி, மயில்பொறி அளித்தல் - முருகன் அடியான் எனக் காட்டத் தோளில் வேல் மயில் இவைகளின் குறிகளைப் பொறித்தல் (அடையாளங்களைப் பதித்தல்). இக்குறிகளைக் கண்டால் யமன் அணுகான்-

"பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்
போற்றி செய்யும்
என்னாவி காப்பதற் கிச்சை யுண்டேல் இருங்கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூல மென் மேற்பொறி மேவு கொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே
இடபம் பொறித்தென்னை ஏன்று கொள்ளாய்"

- அப்பர் - IV *109 -1, 3*

எனப்பாடிச் சூலக்குறி, இடபக்குறி வேண்டுமென அப்பர் பெருமான் வேண்டினதுபோல, அருணகிரியாரும் வேற்பொறி, மயில் பொறியை

(அடுத்த பக்கம் பார்க்க)

## 413

நறுமணங் கமழுகின்ற நீண்ட கூந்தலை விரித்து, வேல் போலும் விழியை விழித்து, மேகலை (இடையணியை) அணிந்து, ரவிக்கை அணிந்த மிகப் பெரிய கொங்கை அசைத்து. நூல்போல மெல்லிய இடையில் ஆடையை-

மினுக்கியும், (காதில்) ஓலையைப் பிலுக்கியும் (போலிப் பிரகாசம் காட்டவைத்தும்), வளையலை ஒளிபெறச் செய்தும், (விள்ள) வெளிப்படையாகச் சிரித்து, கீழ்க்கண்ணால் மிரட்டி யாரையும் (வாரும்) என அழைத்து, மோகத்துடன் கொடுத்த வாய் நீரை (இதழ் ஊறலை)க்

குடித்து நாய்போல, முடக்கும் ஏல் பிணி, முடக்கத்தைச் சம்பவிக்கச் செய்யும் - தடைகளைத் தரும் பிணிகள் (அல்லது வாதம் என்னும் நோயும் மேலும் (பிற) பிணிகளும்) வந்துகூட அவை தம்மால் வேதனைகள் உண்டாகத், தாயும், சுற்றத்தினரும், குலத்தவர் யாவரும் சிரிக்கவே உடல் வாட்டம் உறுகின்ற என்னைக்-

கவனித்து நீ (உன்) சமீபத்தில் அழைத்து, மகா தவசிகளின் கூட்டத்தில் சேர்வாயாக என எனக்கு அருள் புரிந்து, வேல் பொறி (வேல் அடையாளம்) மயில் பொறி (மயில் அடையாளம் பொறித்து) தந்து, வேதமும் என்னை இவனொரு ஒப்பற்றவன் என்று கூறும்படி திருமனது கூர்ந்தருளுவாயாக.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

இடும்படி வேண்டுகிறார். எட்டிகுடித் திருப்புகழிலும் "தற்பொறி வைத்தருள் பாராய் தாராய்" (838) என வேண்டினர். இவ்வேண்டுகோளின் படி அருணகிரியார்க்கு வேல் மயில் பொறி கிடைத்தது என்பது 'அடைக்கலப் பொருளாமென நாயெனை அழைத்து வேல் மயில் அருள்வோனே" - (850) எனவரும் திருத்துருத்தித் திருப்புகழால் அறிகின்றோம். இதன் விவரத்தை யான் எழுதிய 'அருணகிரிநாதர் நூலாராய்ச்சி" என்னும் நூலில் - (பக்கம் 41, 108) பார்க்கலாம்.

" இயல் வேலுடன்மா அருள்வாயே"

திருப்புகழ் " சிவமாது" 563

§ 'ஒருத்தனாம் என சிந்தை கூராய்' - பாடல் 173 அடி 3
உரைக் குறிப்பைப் பார்க்க

உடுட்டு டூடுடு டுடுட்டொ டோவென
திகுத்த தீதிகு திகுர்த்த தாவென
உடுக்கை பேரிகை தவிற்குழா முமி ரங்குபோரில்-

உலுத்த நீசர்கள் பதைப்ப மாகரி
துடிப்ப நீள்கட லெரித்து சூர்மலை
யுடைத்து நீதிகள் பரப்பி யேயவ ரும்பராரை;

அடைத்த மாசிறை விடுத்த வானுல
களிக்கு *மாயிர திருக்க ணானர
சளித்து நாளுமெ னுளத்தி லேமகி ழுங்குமாரா-

அளித்த தாதையு மிகுத்த மாமனும்
அனைத்து ளோர்களு மதிக்க வேமகிழ்
**அகத்ய மாமுநி** பொருப்பின் மேவிய தம்பிரானே (2)

## கழுகுமலை

(இது திருநெல்வேலிக்கு வடக்கு 28-மைல். கோயில் பட்டியிலிருந்து 12-மைல். கோயில் மலையடிவாரத்தில் இருக்கின்றது. மலைவலம் 1 மைல் இருக்கும்.)

### 414. பெண்கள்மேல் மயக்கு அற

தனன தனதனா தனத்த தானன
தனன தனதனா தனத்த தானன
தனன தனதனா தனத்த தானன தனதான

குதலை மொழியினார் நிதிக்கொள் வாரணி
முலையை விலைசெய்வார் தமக்கு மாமயல்
கொடிது கொடிததால் வருத்த மாயுறு துயராலே-

மதலை மறுகிவா லிபத்தி லேவெகு
பதகர் **கொடியவா ளிடத்தி** லேமிக
வறுமை புகல்வதே யெனக்குமோ இனி **முடியாதே;**

---

* கௌதம முநிவரின் சாபத்தால் (பாட்டு 376 கீழ்க் குறிப்பு) ஆயிரம் குறிபெற்ற இந்திரனுடைய பிழையைப் பொறுக்கும்படி பிரமனாதிய

(அடுத்த பக்கம் பார்க்க)

உடுட்டு டுடுடு ...... எனவும், திகுத்த தீ திகு... எனவும், உடுக்கை, பேரிகை, தவில் இவைகளின் கூட்டம் ஒலிக்கின்ற போர்க்களத்தே-

லோபிகளாகிய கீழோர் (அசுரர்கள்) பதைபதைக்க, பெரிய யானைகள் துடிக்க, நீண்ட கடலை எரித்து, சூரனையும் கிரௌஞ்ச மலையையும் உடைத்துப் பொடியாக்கி, நீதியை நிலைநிறுத்தி எங்கும் பரப்பி, அவர் (அந்த அசுரர்கள்) தேவர்களை-

அடைத்து வைத்த பெரிய சிறையினின்றும் விடுவித்துத், தேவர்களுக்குத் தேவலோகத்தை அளித்த குமாரா! ஆயிரம் அழகிய கண்களைக் கொண்ட இந்திரனுக்கு (வானுலக) அரசாட்சியை அளித்து மகிழும் குமாரா! நாள்தோறும் - என் உள்ளத்தில் (இருந்து) மகிழும் குமாரா!

ஈன்ற தந்தையாம் (சிவனும்), பேர்பெற்ற மாமனும் (திருமாலும்), (மற்றும்) எல்லோரும் மதிக்கும்படி மகிழ்ச்சி-யுடன் அகத்திய முனிவரின் பொருப்பாகிய (மலையாகிய) **பொதியமலையில்** வீற்றிருக்கும் தம்பிரானே!

(ஒருத்தனாமெண சிந்தை கூராய்)

## கழுகுமலை

## 414

மழலைச் சொல்போலப் பேசுபவர்; பொருளைப் பறிப்பவர் அழகிய கொங்கையை விலைக்கு விற்பவர் - ஆகிய பொது மகளிரின்மேல் உள்ள பெரிய மயக்கம் பொல்லாதது, பொல்லாதது; அம்மயக்கத்தால் வருத்தம் தரும் துன்ப நிகழ்ச்சிகளாலே-

பிள்ளையாகிய நான் கலக்கம் உற்று (வாலிபத்திலே) இளமையிலே மிகப்பாதகர்கள் (பாபிகளாம்) கொடியவர் களிடத்திலே (சென்று) மிகவும் என் வறுமையை (தரித்திர நிலையை)க் கூறிநிற்பதோ! எனக்கும் இனி (இவ்வாறு) கூறிநிற்பது ஒரு முடிவுக்கு வராதோ! (அல்லது, எனக்கு இனி (இவ்வாறு) கூறிநிற்பது முடியாது);

---

தேவர்கள் வேண்ட அக்குறிகளை ஆயிரங் கண்களாக விளங்கக் கௌதமர் அநுக்கிரகித்தார்.

"அமரர்கள் பிரமன் முன்னா வந்து கோதமனை வேண்ட
மற்றவை தவிர்த்து ... சிந்தையின் முனிவு தீர்ந்து
சிறந்த ஆயிரங் கண் ஆக்க - கம்ப ராமா. அகலிகை. 81.

அது முதல் இந்திரன் " ஆயிரங் கண்ணன்" ஆயினன்.

முதல வரிவிலோ டெதிர்த்த சூருடல்
மடிய அயிலையே விடுத்த வாகரு
முகிலை யனையதா நிறத்த மால்திரு மருகோனே—
கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
யிசையை முரலமா வறத்தில் மீறிய
**கழுகு மலை**மகா நகர்க்குள் மேவிய பெருமாளே. (1)

## 415. வேசைகள் உறவு அற

தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன தனதான

முலையை மறைத்துத் திறப்ப ராடையை
நெகிழ வுடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை *முத்திக் கொடுப்பர் பூமல ரணைமீதே-
†அலைகுலை யக்‡கொட் டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர்பொரு ளைக்கைப் பறிப்பர் **வேசைக ளுறவாமோ;**
தலைமுடி பத்துத் தெறித்து ராவண
னுடல்தொளை பட்டுத் துடிக்க வேயொரு
தநுவை வளைத்துத் தொடுத்த வாளியன் மருகோனே-
§கலைமதி யப்புத் தரித்த வேணிய
ருதவிய வெற்றித் திருக்கை வேலவ
**கழுகு மலை**க்குட் சிறக்க மேவிய பெருமாளே. (2)

---

* முத்தி - முத்தம் " மணி வாயில் முத்தி தரவேணும்" திருப்புகழ் 199.

† அலைகுலைய - நிலை குலைய:- 'கயிலை தன்னைத் ... தாக்கினான் தன்னை யன்று அலைகுலையாக்குவித்தார் அவளிவ ணல்லூராரே'

‡ கொட்டணைப்பர் - கொண்டணைப்பர் . (அப்பர் IV -59-4)

§ தக்கன் தனது 27 பெண்களையும் சந்திரனுக்குத் திருமணஞ் செய்வித்தான். கார்த்திகை, ரோகணி என்னும் பெண்களிடத்துச் சந்திரன் அதிக ஆசை காட்டின காரணத்தால், ஏனைய பெண்கள் தக்கனிடம் முறையிடத் தக்கன் 'உன் கலைகள் எல்லாம் தேய்ந்தொழிய' என்று சந்திரனைச் சபித்தான். சந்திரனுடைய கலைகள் அவ்வாறே தேய ஒரு கலை

(அடுத்த பக்கம் பார்க்க)

முதல! (முதல்வனே)! கட்டப்பட்ட வில்லோடு எதிர்த்த சூரனுடைய உடல் அழிய வேலைச் செலுத்தினவனே! கறுத்த மேகத்தை ஒத்த நிறத்தை உடைய திருமாலின் அழகிய மருகனே!

வாழை, கமுகு சூழ்ந்துள்ள வயலில் வண்டுகள் இசைகளை எழுப்பச், சிறந்த தருமச் செயல்கள் மேம்பட்டு விளங்கும் **கழுகுமலை** மகா நகர்க்குள் வீற்றிருக்கும் பெருமாளே!

(கொடியவாளிடத்திலே எனக்கு இனி முடியாதே)

## 415

கொங்கையை மூடித் திறப்பார்கள்; ஆடையைத் தளர உடுத்துப் படுப்பார்கள்; வாயிதழ் ஊறலையும் முத்தத்தையும் முறை முறை (மாற்றி மாற்றிக்) கொடுப்பார்கள், அழகிய - அல்லது பொலிவுள்ள - மலர்ப்படுக்கையின்மேல்-

நிலைகுலையக் கொண்டு அணைப்பார்கள், ஆண்களின் மனோதிடத்தைக் கலங்க வைப்பார்கள், மோக மயக்கம் பெரிதாகத் தந்து அவர் பொருளைக் கையிற் பறிப்பார்களாகிய வேசையர்களின் உறவு ஆமோ! (ஆகாது என்றபடி).

தலைமுடி பத்தும் தெறிப்புண்டு (சிதறுண்டு), இராவணனுடைய உடல் தொளைப்பட்டுத் துடித்திடவே, ஒப்பற்ற வில்லை வளைத்துச் செலுத்தின அம்பினனாம் ஸ்ரீராமரின் (திருமாலின்) மருமகனே!

கலை (ஒற்றைக்கலையில் நின்ற) சந்திரன், (கங்கை) நீர், இவைகளைத் தரித்த சடையர் அளித்த வெற்றித் திருக்கை வேலனே! **கழுகுமலையிற்** சிறப்புடனே வீற்றிருக்கும் பெருமாளே!

(வேசைகள் உறவாமோ)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

எஞ்சி நின்ற சமயத்திற் சிவபிரானை வேண்ட, அவர் திங்களைத் தமது சடையிற் சூடினதால், தக்கன் சாபம் சாராது, அந்த ஒரு கலை தேயாது எஞ்சி நின்றது.

"எம்முடிச் சேர்த்திய சிறப்பால் அந்தமில்லை இக்கலை"
- (கந்தபுரா. சந்திர சாப - 44)

## 416. திருவடியைச் சேர

தாந்த தனன தனன, தாந்த தனன தனன
தாந்த தனன தனனந் தனதான

*கோங்க முகையு மெலிய வீங்கு புளக களப
மேந்து குவடு குழையும் படிகாதல்-
கூர்ந்து குழையை அமளி தோய்ந்து குலவு மினிய
தேங்கு கலவி யமுதுண் டியல்மாதர்;
வாங்கு பகழி விழியை மோந்து பகலு மிரவும்
வாய்ந்த துயிலை மிகவுந் தணியாத-
வாஞ்சை யுடைய அடிமை நீண்ட பிறவி யலையை
நீந்தி அமல அடிவந் தடைவேனோ;
†ஓங்க லனைய பெரிய சோங்கு தகர மகர
மோங்கு ததியின் முழுகும் பொருசூரும்-
ஒய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்
ஊர்ந்து மயில துலவுந் தனிவேலா;
‡வேங்கை யடவி மறவர் ஏங்க வனிதை யுருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா-
§வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி லுதவும் பெருமாளே. (3)

---

* கோங்கமுகை - கொங்கைக்கு உவமை. 'கோங்கரும்பன்ன முலையாய்' - நாலடி 400.

† ஓங்கல் அனைய சோங்கு - 'மலையின் மிக்குயர்ந்த மரக்கலம்' (சம்பந்தர் 3-118 -7)

(அடுத்த பக்கம் பார்க்க)

# 416

கோங்க மரத்தின் மொட்டும் மெலியும்படியாகப் பருத்து புளகாங்கிதத்தையும், (சந்தனக்) கலவையையும் கொண்ட, குவடு - மலையன்ன கொங்கை - குழையும்படிக் காதல்-

மிக்குத் தளிர் மலர் விரித்த அழகிய படுக்கையில் தோய்ந்து குலவுகின்ற இனிமையானதும் நிறைந்ததுமான புணர்ச்சி இன்ப அமுதத்தை உண்டு, அழகிய மாதர்கள்

செலுத்தும் பாணமாகிய கண்களை மோந்து, பகலும் இரவும் ஏற்படும் தூக்கம் அதிகரிக்கவும், குறைவு படாத

விருப்பம் பூண்ட அடிமையாகிய நான், பெரிய இந்தப் பிறவிக் கடலை நீந்திக் குற்றமற்ற (உனது) திருவடியைச்சேரப் பெறுவேனோ!

மலைபோன்ற பெரிய கப்பல்களும், தகர் (ஆண் சுறாமீன்களும், அ - மகரம் அந்த மகர மீன்களும்) நிறைந்துள்ள கடலில் (மாமரமாய்) முழுகி நின்று சண்டை செய்த சூரனும்

ஓய்ந்து (ஓய) தளர்ச்சி அடைய, பிரமன் அஞ்ச, அமைந்த கழுகுமலையில் (மயில் ஊர்ந்து உலவும்) மயில் ஏறி உலவுகின்ற ஒப்பற்ற வேலனே!

‡ வேங்கைமரம் (அல்லது புலி) உள்ள காட்டு வேடர்கள் திகைக்க (ஆரவாரிக்க), (வள்ளிப்) பெண் மனம் உருக, வேங்கை மரத்தின் உருவத்தை எடுத்த குமரேசனே!

வேண்டி நிற்கும் அடியார்களும், புலவர்களும் உன்னை வேண்ட, (அவர்கள் வேண்டும்) அரிய பொருளை அல்லது, வேண்டுதற்கு அருமையான பொருளை, அவர்கள் வேண்டின அளவுக்கு (அல்லது அவர்கள் வேண்டின உடனே, அல்லது, அவர்களுக்கு அவசியமான அளவுக்கு அல்லது வேண்டும் அளவில் - திருப்தி வரும் அவ்வளவு பெரிய அளவில் - நிரம்பத்) தந்து உதவும் பெருமாளே!

(அமல அடிவந் தடைவேனோ)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

‡ முருகவேள் மானிட வடிவுடன் குமரனாய் வள்ளியின் தினைப்புனத்துப் பரணின் அண்டையிற் போய் வள்ளியிடம் தன்

(அடுத்த பக்கம் பார்க்க)

# வள்ளியூர்

(இது திருநெல்வேலிக்குத் தெற்கு 19மைலில் உள்ள நாங்குநேரிக்குத் தென் கிழக்கு 9 மைல். கோயில் மலையடி வாரத்தில் இருக்கிறது. சுப்பிரமணிய சுவாமி சந்நிதி விசேடமானது. கோயிலுக்கருகில் அழகிய இரண்டு திருக்குளங்கள் உள்ளன. சித்திரை மாத உற்சவத்தில் அநேகங் காவடிகள் வருகின்றன. மலைவலம் $\frac{1}{2}$ மைல் இருக்கும்.)

## 417. உடல்மாயை ஒழிய

*தய்ய தானன தனதான*

*அல்லில் நேருமி னதுதானும்-*
*அல்ல தாகிய உடல்மாயை;*
*கல்லி னேரஅ வழிதோறுங்-*
*கையு நானுமு* **லையலாமோ;**
*சொல்லி நேர்படு முதுசூரர்-*
*தொய்ய வூர்கெட விடும்வேலா;*
*வல்லி மாறிரு புறமாக-*
**வள்ளியூருறை** *பெருமாளே.*

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

காதலைக் காட்டிப் பேசி நின்ற பொழுது, வள்ளியின் தாதை (வேடராசன்) ஏனைய வேடர்களோடு வரக்கண்ட உடனே வேங்கை மரத்தின் உருவமெடுத்து நின்றார். 'வேங்கையின் உருவமாகி வேற்படை வீரன் நின்றான்." திடீரென வேங்கை மரம் ஒன்று அங்கு இருப்பதைக் கண்டு வேடர்கள் "விம்மிதம்" அடைந்தார்கள். வேடராசன் இம் மரத்தை. வெட்டவேண்டாம் இது வள்ளிக்குத் துணையாயிருக்கும் என்று கூறிச் சென்றான்.

# வள்ளியூர்
# 417

இரவில் காணப்படும் மின்னல் அதுதானும்-

அன்று என்று சொல்லும்படியான (மின்னல் நிலைத்து நிற்கும் அந்நேரம் கூட நிலைத்து நிற்காத) உடல் ஒருமாயை.

கல்லுக்கு ஒப்பான அந்த மாயை வாழ்க்கை வழியெல்லாம் (கல்லும் முள்ளும் நிறைந்த அந்த வாழ்க்கை வழியிலே)

கையும் (என் ஒழுக்க நிலையும்) நானும் அழியலாமா!- அல்லது கையும் (கைத்தல் பூணும்) நைந்து வருந்துகின்ற நான் நிலைகுலையலாமா! (அழியலாமா)!

(தத்தம் வீரப்ரதாபங்களைச்) சொல்லிக்கொண்டு எதிர்த்து வந்த பெரிய சூரர்கள்

தொய்ய (சோர்வு அடைய, அழிய) வும், அவர்கள் ஊர் பாழ்படவும் செலுத்தின வேலனே!

கொடியனைய மாதர்கள் (தேவசேனை - வள்ளி) இருபுறமாக-

**வள்ளியூரில்** வீற்றிருக்கின்ற பெருமாளே!

(நான் உலையலாமோ)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

'ஏந்திழை அஞ்சேல், நன்றிவண் வைகுதி நாண்மலர்வேங்கை
யின்றுணை யாயிவண் எய்தியது என்னாக்
குன்றுவன் வேடர் குழாத்தொடு போனான்" - என்பது
(கந்த புராணம் - வள்ளி திருமணம் -81)

§ "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்"
(அப்பர் 6 - 23 - 1)

"வேண்டிய போதடியார் வேண்டிய போகமது
வேண்ட வெறாதுதவு பெருமாளே" (திருப்புகழ் 246 - 47)

"வேண்ட முழுதுந் தருவோய் நீ" - (திருவாசகம் - குழைத்த - 6)

## கதிர்காமம்

(இஃது ஈழ நாட்டில் (இலங்கைத்தீவில்) தென்கிழக்குப் பாகத்தில் உள்ளது. மாணிக்க கங்கை என்னும் நதிக்கரையில் உள்ளது. இலங்கை அரசு மாத்தரை புகைவண்டி நிலையத்திலிருந்து வடகிழக்கு சுமார் 80 மைல். தனுக்கோடி வரை புகைவண்டி; தனுக்கோடியிலிருந்து தலைமன்னார் வரை கப்பல்; தலைமன்னாரிலிருந்து கொழும்பு - காலி - வழியாக மாத்தரைவரை (இலங்கைப்) புகைவண்டி; மாத்தரையிலிருந்து திசமார (72 மைல்) பேருந்து வண்டி; திசமாரவிலிருந்து கதிர் காமம் 12 மைல் - காட்டுப்பாதை - மாட்டு வண்டி போகும்.)

### 418. துதி

தனதனன தான தனதனன தான
தனதனன தானத் தனதான

திருமக ளுலாவு மிருபுய முராரி
திருமருக நாமப் பெருமாள்காண்-
செகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
தெரிதரு குமாரப் பெருமாள்காண்;
மருவுமடி யார்கள் மனதில்விளை யாடு
மரகதம யூரப் பெருமாள்காண்-
மணிதரளம் வீசி யணி*யருவி சூழ
**மருவுகதிர் காமப்** பெருமாள்காண்;
அருவரைகள் நீறு படஅசுரர் மாள
அமர்பொருத வீரப் பெருமாள்காண்-
அரவுபிறை வாரி விரவு†சடை வேணி
அமலர்குரு நாதப் பெருமாள்காண்;
‡இருவினையி லாத தருவினைவி டாத
இமையவர்கு லேசப் பெருமாள்காண்-
இலகுசிலை வேடர் கொடியினதி பார
இருதனவி நோதப் பெருமாளே. (1)

---

*அருவி - கதிர்காமத்துக்கு அருகில் உள்ள மாணிக்க நதியைக் குறிக்கும்.

(அடுத்த பக்கம் பார்க்க)

## கதிர்காமம்

## 418

இலக்குமிதேவி விளையாடும் இரண்டு திருப்புயங்களை உடைய முராரி (திருமாலின்) அழகிய மருகன் என்னும் திருநாமத்தை உடைய பெருமான் நீ-

மண்ணுலகிலும் விண்ணுலகிலும் மிக்க பொலிவு பெறு பாடல்களை (அல்லது மண்ணுலகோரும் விண்ணுலகோரும் மிகவும் போற்றிப் புகழும் பாடல்களை) (தேவாரப் பாடல்களை) அளித்தருளிய குமாரப் பெருமான் நீ.

(உனது திருவடியைச்) சார்ந்த அடியார்களின் மனதில் விளையாடும் பச்சை மயில் (ஏறும்) பெருமான் நீ-

மணியையும் முத்தையும் வீசி அழகிய அருவி சூழ்ந்து விளங்கும் கதிர்காமத் தலத்துப் பெருமான் நீ-

பெரிய மலைகள் (கிரௌஞ்சம், ஏழுகிரி) இவை களெல்லாம் பொடிபட, அசுரர்கள் இறக்கப், போர் புரிந்த வீரப் பெருமான் நீ-

பாம்பு, நிலவு, கங்கை நீர் இவை கலந்துள்ள †பெருஞ் சடையை உடைய மலம் (குற்றம்) இல்லாதவராம் சிவனுடைய குருநாதப் பெருமான் நீ-

‡ இருவினை (நல்வினை - தீவினை) என்பது இல்லாதவர் களும் கற்பக விருட்சங்களை விட்டு நீங்காதவர்களுமான தேவர் குலத்து ராசன் தேவேந்திரனுக்கும் பெருமான் நீ-

விளங்கும் வில் ஏந்திய வேடர்மகள் (வள்ளியின்) அதிக பாரமுள்ள இரண்டு கொங்கைகளிலும் களிகூரும் பெருமாளே.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

†சடைவேணி -'அடவிகாடே' என்பது போல ஒரு பொருள் இரட்டைச் சொல். மிகுதி குறிக்கும்.

‡ 'இருவினை யிலாத பொருளினை விடாத' - இருவினையிலாத திருவினை விடாத' - என்றும் பாடங்கள்.

## 419. வீணரைப் பாடாதபடி

தனன தான தானான, தனன தான தானான
தனன தான தானான தனதான

*அலகின் மாறு மாறாத †கலதி பூத வேதாளி
அடைவில் ‡ஞாளி கோ மாளி அறமீயா-

அழிவு கோளி நா ணாது புழுகு பூசி வாழ் மாதர்
அருளி லாத தோ டோய மருளாகிப்;

பலக லாக ரா மேரு மலைக ராச லா வீசு
பருவ மேக மே தாரு வெனயாதும்-

பரிவு றாத மா பாதர் வரிசை பாடி யோ யாத
பரிசில் தேடி மா யாத படிபாராய்;

இலகு வேலை நீள் §வாடை யெரிகொள் வேலை மாசூரி
லெறியும் ¶வேலை மாறாத திறல்வீரா-

இமய மாது பா கீர திநதி பால கா சார
லிறைவி கான மால் வேடர் சுதைபாகா;

கலக வாரி போல் மோதி $வடவை யாறு சூழ் சீத
கதிர காம மூ தூரி லிளையோனே-

கனக நாடு வீ டாய கடவுள் யானை வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (2)

---

* அலகின்மாறு - விளக்குமாறு. †கலதி - மூதேவி.

‡ ஞாளி - நாய். § வாடை யெரி - வடவாமுகாக்கினி.

¶ இறைவன் கையில் வேல் எப்போதும் விளங்கும். 'வேலை மறவாத கரதலா விசாகா' - 1050.

$ வடவை - வடவையாறுதான் மாணிக்க கங்கை.

## 419

விளக்குமாறு, மாறுதலில்லாத மூதேவி, பூதம், வேதாளி (பேய் அல்லது காளி), முறை அல்லது தகுதி இல்லாத நாய், கோணங்கி, தருமம் செய்யாமல்

அழிவைக் கொள்ளுபவன், வெட்கமில்லாமல், புனுகு சட்ட வாசனைகளைப் பூசி, வாழ்கின்ற பொது மகளிரின் அன்பு இல்லாத தோள்களைச் சேரவேண்டிக் காம மயக்கம் கொண்டு (அதற்காகப் பொருள் தேடவேண்டி)

பல கலைகளுக்கும் (ஆகார) இருப்பிடமானவனே! (கருணையில் - கொடையில்) மேருமலை போன்ற, கர அசலா - புயமலையை உடையவனே! மழைவீசும் பருவ காலத்து மேகமே! கற்பக விருட்சமே என்று கூறினாலும் ஒரு சிறிதும்

அன்பு கொள்ளாத மகா பாதகர்களின் பெருமைகளைப் புகழ்ந்து பாடி ஓய்வே யில்லாமல் பரிசுப் பொருளைக் (கொடைப் பொருளைத்) தேடி நான் இறந்து போகா வண்ணம் கண் பார்த்தருளுக.

விளங்குகின்ற வேலாயுதத்தைப் பெரிய வடவா முகாக்கினியைக் கொண்ட கடல்மீதும், மாமரமாய் நின்ற சூரன் மீதும் செலுத்திய தொழிலைக் கைவிடாத திறமை வாய்ந்த வீரனே! (அல்லது விளங்கும் வேலை (அலை) நீண்டுள்ளதும், வடவாமுகாக்கினி கொண்டதுமான கடல்மீதும் மாமரமாய் நின்ற சூரன்மீதும் செலுத்தின வேலாயுதத்தைக் கையினின்றும் விடாத திறல் வீரா)

இமயமலை மாது, கங்கைநதி இவர் இருவர்க்கும் பாலகனே (குழந்தையே)! சாரல் இறைவி (வள்ளிமலைச் சாரலில் (பக்கலில் இருந்த தலைவி)யும், காட்டில் இருந்த வேடன் புதல்வியுமான வள்ளியைப் பக்கலிற் கொண்டவனே!

கலகம் (பேரொலி) கொண்ட கடல்போல (அலை) மோதி வரும் வடவையாறு (வட ஐ ஆறு - வலது பக்கத்தினின்று வரும் மாணிக்க கங்கை என்னும் அழகிய ஆறு) சூழ்ந்து குளிர்ச்சி தரும் கதிர்காமம் என்னும் பழைய ஊரில் வீற்றிருக்கும் இளையவனே!

பொன்னுலகு இருப்பிடமான தேவயானைக்கு வாழ்வான கருணை மேருவே! தேவர் பெருமாளே!

(பரிசில்தேடி மாயாதபடி பாராய்)

## 420. ஆண்டருள

தனத்தத் தனதான தானன
தனத்தத் தனதான தானன
தனத்தத் தனதான தானன தனதான

உடுக்கத் துகில்வேணு நீள்பசி
யவிக்கக் கனபானம் வேணுநல்
ஒளிக்குப் புனலாடை வேணுமெய் யுறுநோயை-
ஒழிக்கப் பரிகாரம் வேணுமுள்
இருக்கச் சிறுநாரி வேணுமொர்
படுக்கத் தனிவீடு வேணுமிவ் வகையாவுங்;
கிடைத்துக் க்ருஹவாசி யாகிய
மயக்கக் கடலாடி நீடிய
கிளைக்குப் பரிபால னாயுயி ரவமேபோம்-
க்ருபைச்சித் தமுஞான போதமு
மழைத்துத் தரவேணு மூழ்பவ
கிறிக்குட் சுழல்வேனை யாளுவ தொருநாளே;
*குடக்குச் சிலதூதர் தேடுக
வடக்குச் சிலதூதர் நாடுக
குணக்குச் சிலதூதர் தேடுக வெனமேவிக்-
குறிப்பிற் குறிகாணு மாருதி
யினித்தெற் கொருதூது போவது
குறிப்பிற் குறிபோன போதிலும் வரலாமோ-

---

*சீதையைத் தேட வடக்கு திசைக்குச் சதவலியையும் கிழக்குத் திசைக்கு வினகனையும், மேற்குத் திசைக்குச் சுசேணனையும், தெற்குத் திசைக்கு அநுமார், சாம்புவான், நீலன், அங்கதன் முதலானோர்களையும் சுக்கிரீவன் அனுப்பினான். வடக்கு, கிழக்கு, மேற்கு மூன்று திசைகளிற் சென்றவர்கள் தேடிக் காணாமல் ஒரு மாதத்துக்குள் திரும்பினார்கள். தெற்கே சென்றவர்கள் தேடிக் காணாது 'சடாயுவைப்போல நாம் இறப்பதே நன்று' எனப் பேசிக் கொண்டபோது, சடாயுவின் தமையன் சம்பாதி இதைக்

(அடுத்த பக்கம் பார்க்க)

# 420

உடுப்பதற்கு ஆடைவேண்டும், பெரும் பசியைத் தணிப்பதற்கு நிரம்பப் பருகும் உணவு வேண்டும், தேகம் நல்ல ஒளி தருவதற்கு (குளிக்க) நீரும் (உயர்ந்த) ஆடையும் வேண்டும், உடலுறு நோய்களை

ஒழிப்பதற்கு பரிகாரம் (வைத்தியம்) வேண்டும், வீட்டில் இருப்பதற்கு இளம் பெண் ( மனைவி) வேண்டும், படுப்பதற்கு ஒரு தனி வீடு வேண்டும், இவ்வாறாகச் சௌகரியங்கள் எல்லாம்

கிடைக்கப்பெற்று, குடும்பத்தனாகி, அந்த இல்லறம் என்னும் மயக்கக் கடலில் திளைத்து ஊடாடி - பெருத்த (தனது) சுற்றத்தார்களைப் பரிபாலிப்பவனாயிருந்து (ஈற்றில்) உயிர் வீணாகக் கழிந்துபோம். (ஆதலால் இறைவா நீ எனக்கு)

கிருபைச் சித்தத்தையும் (கருணை உள்ளத்தையும்), ஞான போதமும் (ஞானநிலை அறிவையும்), (என்னை) அழைத்துத் தரவேணும்; ஊழ்வினைப்படி பிறப்பு என்கின்ற மலைச் சூழலில் சுழலுகின்ற என்னை (அங்ஙனம்) ஆண்டருளும் நாளும் ஒன்று உண்டோ! ஆண்டருளும் நாள் கிடைக்குமா!

மேற்கே சில தூதர்கள் தேடவேண்டும், வடக்கே சில தூதர்கள் தேடவேண்டும், கிழக்கே சில தூதர்கள் தேட வேண்டும் என்று மேவுவித்து (அனுப்பி வைத்து)

குறிப்பினாலேயே குறித்த பொருளைக் காணவல்ல மாருதி (அநுமார்) இனி, தென்திசைக்கு ஒரு தூதனாகப் போக வேண்டியது; சொல்லியனுப்பும் குறிப்பு விவரத்தின்படி குறித்த பொருள் கிட்டுதல் தவறிப் போனபோதிலும் திரும்பி வீணே வரலாமோ (வருதல் நன்றல்ல) (என்று சுக்கிரீவன் சொல்லி அனுப்ப)-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

கேட்டு இராவணன் சீதையைக் கொண்டுபோன விவரத்தைக் கூற, அநுமார் சீதையின் இருப்பிடத்தை அறிந்து கடலைத் தாண்டி இலங்கையிற் சீதையைக் கண்டனர் என்பது வரலாறு.

அடிக்குத் திரகார ராகிய
அரக்கர்க் கிளையாத தீரனு
மலைக்கப் புறமேவி மாதுறு வனமேசென்-

றருட்பொற் றிருவாழி மோதிர
மளித்துற் றவர்மேல் மனோகர
*மளித்துக் **கதிர்காம** மேவிய பெருமாளே. (3)

## 421. திருவடியை நினைக்க

தனன தான தத்த தனதான

எதிரி லாத பத்தி தனைமேவி-
இனிய **தாள்நி னைப்பை** யிருபோதும்;
இதய வாரி திக்கு ளுறவாகி-
எனது ளேசி றக்க **அருள்வாயே;**
**கதிர காம** வெற்பி லுறைவோனே
கனக மேரு வொத்த புயவீரா;
மதுர †வாணி யுற்ற கழலோனே-
‡வழுதி கூனி மிர்த்த பெருமாளே. (4)

---

* கதிர்காமத்து முருகப்பிரான் அநுமாருக் கருளியதாய் ஐதிகங் குறிக்கப்பட்டிருக்கின்றது போலும்.

† வாணி - நாதம் தோன்றும் இடம்.

'நாத கீத கிண்கிணி (திருப்புகழ் 236), இனிய நாத சிலம்பு (திருப்புகழ் 23) என்றார் பிற இடங்களில்.

வாணி யுற்ற கழலோன் - சரசுவதியும் பிரமனும் திருத்தணிகையில் பூசித்ததாகத் தணிகைப் புராணம் கூறும்.

‡ வழுதி கூன் நிமிர்த்தது - திருஞானசம்பந்தர் அருளிய லீலை — பாட்டு 181 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

சுத்த வஞ்சகர்களாகிய அரக்கர்களிடம் தோற்று இளைக்-காத தீரனாய்க், கடலைத் தாண்டி அப்புறம் (இலங்கைக்குச்) சென்று, (சீதேவி) மாது இருந்த (அசோக) வனத்தை அடைந்து-

ஸ்ரீராமபிரான் தந்தருளிய பொன்னாலாகிய அழகிய மோதிரத்தைச் சீதைக்கு அளித்துற்றவராகிய அநுமார்க்கு அன்புடன் அனுக்கிரகித்துக் **கதிர்காமத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(பவகிரிக்குட் சுழல்வேனை யாளுவ தொருநாளே)

## 421

இணையில்லாத பத்திநிலையை அடைந்து

இனிய (உனது) திருவடிகளின் நினைப்பை காலை மாலை இருபோதிலும்

(எனது) இதயம் (நெஞ்சம்) என்னும் கடலில் உறவு பூண்டு

(அத் திருவடிகள்) எனது உள்ளத்தே சிறந்து விளங்க அருள்வாயே

**கதிர்காம மலையில்** உறைபவனே!

பொன்மய மேருமலைக்கு ஒப்பான புயவீரனே!

இனிமை தரும் (நாதம் பொருந்திய) கழல்களை உடைய-வனே! (அல்லது இனிய சரசுவதி தியானித்து வணங்கும் கழலோனே!)

பாண்டியனது கூனை நிமிர்த்தின பெருமாளே!

(இனிய தாள் நினைப்பை அருள்வாயே)

## 422. அவா இடர்கள் அற

தனதன தனதன தனதன தனதன
தானத் தனந்தந் தனதான

கடகட கருவிகள் தப்*வகி ரதிர் கதிர்
காமத் தரங்கம் மலைவீரா-

கன†கத நககுலி புணரித குணகுக
‡காமத் தனஞ்சம் புயனோட;

§வடசிக ரகிரித விடுபட நடமிடு
மாவிற் புகுங்கந் தவழாது-

வழிவழி தமரென வழிபடு கிலனென
வாவிக் கினம்பொன் றிடுமோதான்;

¶அடவியி ருடியபி நவகும ரியடிமை
யாயப் புனஞ்சென் றயர்வோனே-

$அயிலவ சமுடன ததிதிரி தருகவி
யாளப் புயங்கொண் டருள்வோனே;

---

* வகிர் - கீற்றுக்களையுடைய புலி.

† கத நகம் - கோபத்தையுடைய மலையை யொத்த யானை.

‡ காம அத்தன் - மன்மதன் பிதாவாகிய விட்டுணு. 'காமத்தன் அஞ்ச அம்புயன் ஓட' எனப் பிரிக்க.

§ மேரு தவிடுபட நடமிடும் மயில்:

" வாசி விசைகொண்ட வாகனப் பீலியின் கொத் தசைபட கால்பட்டசைந்தது மேரு, அடியிட எண்டிசைவரை தூள்பட்ட"

(கந்தர் அலங் . 11)

¶ அடவி இருடி - சிவ முநிவராய்க் காட்டில் தவஞ்செய்திருந்த திருமால். பாட்டு 382 கீழ்க்குறிப்பு

$ அவசமுடன் அ - ததி - திரிதரு - கவி (யை) ஆள - அயில் புயங்கொண்டருள்வோனே - என்றது பொய்யாமொழியார் வரலாற்றைக் குறிக்கும். வரலாறு : பொய்யாமொழிப் புலவர் என்பவர் சிவபிரானையே பாடும் வழக்கத்தினர். முருகனைப் பாடுக என்றால் " கோழியையும் பாடிக் குஞ்சையும் பாடுவேனோ" என்று ஆணவத்துடன் இருந்தனர். இவரது ஆணவத்தை அடக்க முருகவேள் இவர் தனிமையிற் போம்போது

(அடுத்த பக்கம் பார்க்க)

## 422

கடகட என்று ஒலி செய்யும் பறை முதலிய கருவிகளின் ஒலியும் கெடும்படி - ஒலியினும் மேம்பட்டதாய்க் - கீற்றுக்களை உடைய புலி ஒலி செய்கின்ற கதிர்காம! (கதிர்காம தலத்தினனே)! தரங்கம் (கடலை) அலை (அலைத்த -வருத்திய) வீரனே!

பெருமை தங்கியதும், கோபத்தை உடையதும் ஆன நகம் (மலையொத்த யானை ஐராவதம்) வளர்த்த சிரேட்டமான தேவசேனையைப் புணர் - இத - குண - அணைந்த இனிமை யான குணத்தையுடைய குகனே! மன்மதன் பிதாவாகிய விட்டுணு அஞ்ச (பயப்பட), அம்புயன் (தாமரையினன் ஆகிய) பிரமன் ஓட-

வட சிகரி (வடமலை - மேரு) தவிடுபட (தூளிபட) நடனம் செய்கின்ற, மாவில் (குதிரைமேல்) மயில்மீது புகும் - ஏறும் கந்தனே! தவறுதலில்லாமல்

வழிவழியான உறவினன் என்னும்படி (நான் உன்னை) வழிபடும் ஆற்றல் இல்லாத வனாய் இருக்கின்றேன்; என் அவா - எனக்குள்ள மூவாசைகளும், விக்கினம் (மற்றுள்ள தடைகளும்) பொன்றிடுமோ தான் (என்றேனும்) அழிந்தொழியுமோ!

காட்டில் தவத்திலிருந்த இருடியின் (சிவமுநிவரின்) அற்புத புதுமையான குமரியாம் (வள்ளிக்கு) அடிமையாகிப்போய், அப்புனம் (அவளிருந்த) தினைப்புனத்துக்குப் போய்த் தளர்ச்சி யுற்றவனே!

அயில் அவசமுடன் அ ததி திரிதரு கவி ஆளப் புயங்கொண்டு அருள்வோனே! (அவசமுடன் அ ததிதிரிதரு கவி(யை) ஆள அயில் புயங்கொண்டு அருள்வோனே!)- (வெயிலால்) மயக்கமுடன் அந்த ஒரு சமயத்தில் (காட்டுவழியில் - சுரத்தில்) போய்க்கொண்டிருந்த கவியாகிய பொய்யா மொழியை ஆண்டருள, வேலைத் தோளிலேந்திச் சென்று அருள் புரிந்தவனே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

வேடனாய் வழிமறித்துத் தன் பெயர் 'முட்டை' என்று சொல்லி என் பெயரை வைத்துப் பாடினால் உன்னை விடுவேன் என வெருட்டப் பொய்யாமொழியார் அகப்பொருள் 'நற்றாயிரங்கல்' துறையில்-

(அடுத்த பக்கம் பார்க்க)

இடமொரு மரகத மயில்மிசை வடிவுள
ஏழைக் கிடங்கண் டவர்வாழ்வே-

இதமொழி பகரினு மதமொழி பகரினு
மேழைக் கிரங்கும் பெருமாளே. (5)

## 423 . கிருபை கூர

தனதனன தானத்த தனதனன தானத்த
தனதனன தானத்த தனதான தானனா

சமரமுக வேலொத்த விழிபுரள வாரிட்ட
தனமசைய வீதிக்குள் மயில்போ லுலாவியே-

(முன் பக்கத் தொடர்ச்சி)

'பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே - மின்போலு
மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
கானவேல் முட்டைக்குங் காடு'

எனப் பாடினர். கள்ளி தீப்பட்டு பொறி பறக்குமாயின் வேல முள் சாம்பலாகப் போயிருக்குமே, அது எவ்வாறு தைக்கும்? நீ பாடின பாடலிற் பொருட்குற்றம் உளதே என எள்ளி நகையாடினர் முருகவேள். பொய்யா மொழியார் வெட்கமுற்றுத் தலைவணங்க, உன் பெயரைக் கூறுக, நான் பாடுகிறேன் பார் - என்று கூறி, அவர் பெயர் பொய்யமொழி எனக் கூறக்கேட்டு-

'விழுந்த துளி அந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடு மென்றுஞ் - செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்துப் பெய்வளையும் போயினளே
பொய்யா மொழிபகைஞர் போல்'

என அருமையாகப் பாடிக், கோழிக்குஞ்சைப் பாடமாட்டேன் என்றாயே - இப்போது முட்டையையும் பாடிவிட்டாயே எனக் கூறி, அவருக்கு நல்லறிவு ஊட்டி ஆட்கொண்டனர் ஆண்டவர். இவ் வரலாற்றை-

'பொய்யா மொழிப்புலவர் மதுரையிற் சங்கம்
புரக்க எழுநாள் மறவனாய்ப்
புறவுற வளைத்தெனது பெயர் 'முட்டை' பாடெனப்
'பொன்போலும்' என்றுபாட
வெய்யான பாலைக்கி தேலாது நும்பெயர் விளம்பென
விளம்ப அவர்மேல்

(அடுத்த பக்கம் பார்க்க)

தமது உடலில் இடது பாகத்தில் ஒப்பற்ற மரகதமயிலுக்கு மேலான அழகு உள்ள ‡ ஏழை (பார்வதிக்கு) இடம் கண்டவர் - இடம் தந்தவரான சிவபிரானது செல்வனே! (அல்லது, இடங்கொண்டு ஒப்பற்ற மரகத மயில்மேல் வடிவுள்ள வாழ்வே! ஏழைக் கிடங்கண்டவர் வாழ்வே!)

§அடியேன் இனிமையான (வணக்க) மொழிகளைக் கூறினாலும், மதமொழி (ஆணவம்) காட்டும் பேச்சுக்களைப் பேசினாலும் (இந்த) ஏழையினிடத்தில் இரக்கம் (கருணை) காட்டும் பெருமாளே!

(என் அவா விக்கினம் பொன்றிடுமோ தான்?)

## 423

போர் முகத்துக்கு என்று கூர்மை பிறங்கும் வேல் போன்ற கண்கள் புரள, ரவிக்கை அணிந்த கொங்கைகள் அசைய, வீதியில் மயில் உலவுவது போல உலாவியே

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

'விழுந்ததுளி' என்றெடுத்துப் பாடி யவர்நாவில்

வேல்கொடு பொறித்த சதுரா" - எனக் குறிக்கின்றார் வரகவி மார்க்கசகாயதேவர் (திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் - சப்பாணி - 4). முருகனைப் பாடமாட்டேன் என்று முரட்டுத்தனம் செய்தபடியால் பொய்யாமொழியாரை "முரட்டுப் புலவன்" என்கின்றார் அருணகிரியார்:-

'முற்பட்ட முரட்டுப் புலவனை முட்டைப் பெயர் செப்பிக்
கவிபெறு பெருமாளே' - திருப்புகழ் 1171.

'நற்றாயிரங்கல்' துறையிற் பாடினரென்பது-

"நற்றாயிற் காட்டிப் புகழ்கலை கற்றார் சொற்கேட்கத் தனி வழி வருவோனே" என்னும் திருப்புகழாலும் (1022) அறியலாம்.

‡ ஏழை - பார்வதி 'எருதேறி ஏழையுடனே' - சம்பந்தர் 2-85-2.

'ஏழை பங்காளனையே பாடேலோ ரெம்பாவாய்' - திருவாசகம்.

§ இந்தத் திருப்புகழின் ஈற்றடி மனப்பாடஞ் செய்யத் தக்க அருமை அடி.

சரியைக்ரியை யோகத்தின் வழிவருக்ரு பாசுத்தர்
தமையுணர ராகத்தின் வசமாக மேவியே;

உமதடியு னாருக்கு *மனுமரண மாயைக்கு
முரியவர் மகாதத்தை யெனுமாய மாதரார்-

ஒளிரமளி பீடத்தி லமடுபடு வேனுக்கு
முனதருள் க்ரு பாசித்த மருள்கூர வேணுமே;

இமகிரிகு மாரத்தி யநுபவைப ராசத்தி
யெழுதரிய காயத்ரி யுமையாள் குமாரனே-

எயினர்மட மானுக்கு † மடலெழுதி மோகித்து
இதணருகு சேவிக்கு முருகா விசாகனே;

அமரர்சிறை மீள்விக்க அமர்செய்துப்ர தாபிக்கு
மதிகவித சாமர்த்ய ‡ கவிராஜ ராஜனே-

§ அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த
அரியகதிர் காமத்தி லுரியாபி ராமனே. (6)

---

* அநுமரணம் - உடனிறக்கை. மரண மாயைக்கும் உரியவர் - கர்மிகள் - "மரிப்பார் வெறுங் கர்மிகளே" (கந் . அலங் - 26)

† மடல் எழுதினது - திருப்புகழ் 289 - கீழ்க்குறிப்பைப் பார்க்க.

'வடமணி முலையும் அழகிய முகமும் ..... இரு காதும், மரகத வடிவும் மடலிடை எழுதி வள்ளி புனத்தில் நின்ற மயில் வீரா' (திருப்புகழ் 660)

‡ கவிராசன் - சம்பந்தப் பெருமான் எனலுமாம்.

§ இக்கருத்தை

" வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்"

என்னும் பெரியபுராணத் திருவிருத்தத்திற் காண்க.

பெரியபுராணம் - ஞானசம்பந்தர் 1119 - பார்க்க.

சரியை, கிரியை, யோகம் என்னும் வழிகளில் நிற்கும் அருளும் பரிசுத்தமும் வாய்ந்த பெரியோர்களும் தம்மை உணரும்படியாகத் (தம்மைக் கண்டு மோகிக்கும்படியாக) ஆசை (காட்டும்) வழிகளிற் பொருந்தி-

உமது திருவடியை உன்னாருக்கும் (நினையாதவர்க்கும்) (அனுமரண மாயைக்கும்) மரணத்தொடு கூடிய மாயையிற் பட்டவர்க்கும் (அல்லது மாயைக்கும்) உரியவராய் (சொந்தக் காரராய்), விசேடம் பொருந்திய கிளிகள் எனப்படும் மாயைகள் வல்ல பொது மாதர்களுடைய-

விளங்குகின்ற படுக்கையிடத்தே சிக்கிக்கொண்ட எனக்கும் உனது அருட்கிருபாசித்தத்தை (திருவருட்பிரசாதத்-தை) அருள் கூர்ந்தளிக்கவேணும்.

இமயமலையின் குமாரி, அநுபவை (அநுபோகங்களை - இன்ப நுகர்ச்சிகளை ஊட்டுபவள்), பராசத்தி, எழுதுதற்கரிய காயத்திரி மந்திரத்தினள், உமையவள் ஆகிய பார்வதி குமாரனே!

வேடர் மடமானாம் வள்ளியின் பொருட்டு மடல் எழுதி மோகத்தைக் காட்டி, (அவளிருந்த) பரண் அருகே சேவித்து நின்ற முருகா! விசாகனே!

தேவர்களைச் சிறையினின்று விடுவிக்க வேண்டிப் போர் செய்து கீர்த்தியுற்ற மிக மேலான திறமை வாய்ந்த கவிராசராசனே!

அழுது, தேவியின் திருமுலைப் பாலுண்டு, உலகை (திருப்பதிகங்களைப் பாடியும், திருநீற்றைப் பரப்பியும்) வாழ்வித்த கவுணியகுலச் சூரியனே! அருமை வாய்ந்த கதிர் காமத்துக்கு உரிய அழகனே!

(உன தருள் க்ருபாசித்தம் அருள் கூர வேணுமே)

## 424. திருவடியைப் பெற

தனத்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தனதான

*சரத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருசூரைச்-

சரிப்போன மட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்றா னிருகூறாச்;

சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்-

சிறைச்சேவல் செற்றாய் † வலக்கார முற்றாய்
**திருத்தா மரைத்தா ளருள்வாயே;**

புரத்தார் ‡ வரத்தார் § சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது-

பொறுத்தார் பரித்தார் ¶ சிரித்தா ரெரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேபின்;

கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் $ மருத்தூர் மதனாரைக்-

கரிக்கோல மிட்டார் **கணுக்கான முத்தே
**கதிர்க்காம** முற்றார் முருகோனே. (7)

---

* சரம் - நாணல், நீர். சரத்தே உதித்தாய் - சரவணபவன் ஆனாய்.
† வலக்காரம் - வலம் : வென்றி.

‡ வரத்தார் - வரப்பிரசாதிகள். § சரம் - அம்பு, யுத்தம் சேகரம் - தயாரிப்பு, கூட்டம். ¶ சிரித்தார் எரித்தார் பொரித்தார் - நெற்றிக் கண்ணால் சிரித்தும் எரித்தார்; (நெற்றிக் கண்ணை) விழித்தும் எரித்தார் என்க - பாட்டு 285, 288 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

$ மருத்து ஊர் - தென்றற் காற்றாகிய தேரை நடத்தும்.
** கணுக்கான - கன்றுறுக்கான.

## 424

நாணற் காட்டின் இடையே தோன்றினாய், வலிவுடன் குதித்து, சாமர்த்தியமாய் எதிர்த்து வந்த சூரனைச் -

சரியாய் நடந்தவரையில் சும்மா விட்டிருந்தாய்; சரி தப்பினபின் அடுத்து நெருங்கினாய், பிளந்தாய் உடலை இருகூறு ஆகும்படி -

தலையுடன் மார்பையும் அறுத்துக் குவித்தாய், கொன்றாய் பல மாலைகளை விருதாகப் பெற்றாய், - வெற்றிக்கு அடையாளமாக(ப் பெற்றாய்)

சிறகை உடைய சேவல் (ஒன்றைப்) பெற்றாய்; வெற்றியை அடைந்தாய் - அத்தகைய நீ - (உனது) அழகிய தாமரையன்ன திருவடியைத் தந்தருளுக.

திரிபுரத்திலிருந்த வரப்ரசாதிகள், போருக்குத் தயாராக வந்தவர்கள், (அல்லது) அம்பின் கூட்டத்தைக் கொண்டவர்கள், சண்டை செய்வதற்கு எதிர்த்து வந்தபோது

பொறுமையுடன் இருந்தார், (போர்க்கோலத்தைத்) தாங்கினார், (பின்பு) சிரித்தார், (திரிபுரத்தை) எரித்தார், பொரிபடச் செய்தார் நெற்றிக் கண்ணால், பின்பு,

யானையின் தோலை உரித்தார், அதை விரித்தார், அதை அணிந்து கொண்டார், பிரமனாதிய தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கித் தம்மீது அம்பு எய்யும் கருத்துடன் தென்றற்காற்றாகிய தேர்மீது ஊர்ந்து வந்த மன்மதனாரைக்-

கரியலங்கார மாக்கினார் (சாம்பலாக்கினார்) - அத்தகைய சிவபிரானுடைய கண்ணுக்குப் பிரியமான முத்தே; **கதிர்காமம்** என்னும் தலத்திற் பொருந்தி வீற்றிருக்கும் முருகனே!

(திருத்தாமரைத் தாள் அருள்வாயே)

## 425. சுக சொரூபம் பெற

தனதனா தத்தனத் தனதனா தத்தனத்
தனதனா தத்தனத் தனதான

* சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய-

சமயபே தத்தினுக் கணுகொணா மெய்ப்பொருட்
டருபரா சத்தியிற் பரமான;

துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற் பதிநீடு-

துகளில்சா யுச்சியக் கதியையீ றற்ற சொற்
† **சுகசொரு பத்தையுற் றடைவேனோ;**

புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்யசற்
புருஷவீ ரத்துவிக் ரமசூரன்

புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்‡ திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே;

§ கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்-

கதலிசூ தத்தினிற் பயிலுமீ ழத்தினிற்
¶ **கதிரகா மக்கிரிப்** பெருமாளே. (8)

---

* சரியை, கிரியை, யோகம் - பாடல் 331 - பார்க்க.

† சுகசொரூபம் - பேரின்ப நிலை. இச் சொற்களின் தொனியில் இனி பெறுவதற்கிருந்த கிளி உருவ நிலை மறைந்து கிடக்கின்றது.

'அருணகிரிநாதர் நூலாராய்ச்சி' - பக்கம் 147 பார்க்க.

‡ இது சுவாமிகளின் வரலாற்றைக் குறிக்கும்.

§ கரிய யூகம் - கருங் குரங்கு.

(அடுத்த பக்கம் பார்க்க)

## 425

சரியை மார்க்கத்தில் இருப்பவர்க்கும், கிரியை மார்க்கத்தில் இருப்பவர்க்கும், நல்ல எல்லாவித யோக-நிலையில் இருப்பவர்க்கும் எட்டுதற்கு அரிதானதும்-

சமய வேறுபாடுகளால் (வேறுபாடுள்ள சமயங்களால்) நெருங்க முடியாததுமான உண்மைப் பொருளைத் தரவல்ல பராசத்தியினும் மேலதானதும்,

யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர் நிலைக்கும் மேம்பட்டதானதும், அற்புதமான பரம ஞானத் தனி ஒளி பரந்துள்ள சிறந்த இடமாய், நீடியதாய்-

குற்றமில்லாததான சாயுச்சிய பதவியை, முடிவிலாததும், புகழ்கொண்டதுமான பேரின்ப நிலையைப் பொருந்தி அடைவேனோ!

மதில் சூழ்ந்த வயலூர்க்கு உரிய சாமார்த்திய சாலியே! உத்தம புருடனே! வீரமும் பராக்கிரமமும் கொண்ட சூரன்

புரண்டுவிழ வேலாயுதத்தைச் செலுத்திய திருக்கரத்தை யுடைய குமரனே! மேன்மை பொருந்திய திருப்புகழை ஓதுவதற்கு எனக்கு அருள்புரிந்தவனே!

கருங் குரங்குக் கூட்டங்கள் பலாப்பழத்தின் மீதிலிருந்து சுளைப்பழங்களைக் கீறிக் கிழித்து உண்டு சண்டையிட்டு

வாழைமரங்களிலும் மாமரங்களிலும் நெருங்கி விளையாடும் ஈழ நாட்டிற் *கதிர்காம மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சுக சொரூபத்தை யுற்றடைவேனோ)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

¶ கதிர்காம மலை - மலை உச்சியை அடைவதற்குப் படிகள் கட்டப்படவில்லை. பிள்ளையார்மலை வரை பாதை அவ்வளவு துன்பமாக இல்லை. அதன் பிறகு செங்குத்தாக இருக்கின்றது. மலையுச்சிக் கேறிவிட்டால் இயற்கை எழில் மூலம் முருகன் அழகைக் கண்டு மகிழலாம். (இலங்கைப் புராதன சைவாலயங்கள் - கதிர்காமம் - பக்கம் 19)

## 426. திருவடியை மறவேன் என்பது

தானதன தத்தத்த தானதன தத்தத்த
தானதன தத்தத்த தனதான

பாரவித முத்தப்ப டீரபுள கப்பொற்ப
யோதர நெருக்குற்ற இடையாலே-

பாகளவு தித்தித்த கீதமொழி யிற்புட்ப
பாணவிழி யிற்பொத்தி விடுமாதர்;

காரணி குழற்கற்றை மேல்மகர மொப்பித்த
காதில்முக வட்டத்தி லதிமோக-

* காமுக னகப்பட்ட வாசையைம றப்பித்த
கால்களைம றக்கைக்கும் வருமோதான்;

† தேரிரவி யுட்கிப்பு காமுதுபு ரத்திற்றெ
சாசிரனை மர்த்தித்த அரிமாயன்-

சீர்மருக அத்யுக்ர யானைபடும் ‡ ரத்நத்ரி
கோணசயி லத்துக்ர கதிர்காம;

வீரபுன வெற்பிற்க லாபியெயி னச்சிக்கு
மேகலை யிடைக்கொத்தி னிருதாளின்-

§ வேரிமழை யிற் ¶ பச்சை வேயிலரு ணக்கற்றை
வேல்களி லகப்பட்ட பெருமாளே. (9)

---

* இது சுவாமிகளின் வரலாற்றைக் குறிக்கும்.

† ராவணனுடைய ஆணைக்கு அஞ்சிச் சூரியன் இலங்கை நகருள் புகமுடியாதிருந்தான்.

" பகலவன்மீ தியங்காமைக் காத்த பதியோன்" - சம்பந்தர் 3 -10 -11

" பகலவன்மீ தியங்காத இலங்கை" - பெரிய திருமொழி 7-8-7

" ஆதவன் நிகரில் இரதமும் விடுக்கா நகர்" - திருப்புகழ் 1184

"ஞாயிறு விலகிய புரிசை இலங்கை" - திருப்புகழ் 749

‡ " கனமணி வரன்றிக் குரைகடல் ஓதம்
நித்திலங் கொழிக்கும் கோணமாமலை" - சம்பந்தர் . 3-123-1.

§ வேரி மழை - வாசனை தங்கிய மேகம் போன்ற குழல்.

¶ பச்சை வேய் - பசிய மூங்கிலை யொத்த தோள்.

## 426

பாரங்கொண்டதும் முத்துமாலை அணிந்ததும், சந்தனம் அணிந்ததும், புளகாங்கிதம் கொண்டதும். அழகியதுமான கொங்கைகளால் நெருக்குண்ணும் இடையினாலும்-

சர்க்கரை போலத் தித்தித்த ராகமொழியினாலும், (மன்மதனது) மலர்ப்பாணம் போல(த் தைக்கும்) கண்களாலும், (கண்டோர் மனதை) காமமயக்கால் மூடிவிடுகின்ற மாதர்களின்

மேகம் போன்ற கூந்தற் கட்டினாலும், மகர மீன்போன்ற குழை அலங்காரம் உள்ள காதினாலும், முகமண்டலத்தாலும், அதிக மோகம் கொண்ட

காமியாகிய நான் சிக்கிக்கிடந்த ஆசையை (அடியோடு) மறக்கச் செய்த (உனது) திருவடிகளை மறக்கவும் வருமோ (மறக்கவும் கூடுமோ)- மறவேன், மறவேன் என்றபடி;

தேரில் எழுந்தருளும் சூரியன் (ராவணனுடைய அதிகாரத்துக்கு) அஞ்சி உள்ளே புகாத பழைய ஊராகிய இலங்கையில் பத்துத்தலையனாம் ராவணனைக் கலக்கிப் பிசைந்து கடைந்த அரிமாயன் (திருமாலின்)

சீரான மருகனே! மிக உக்ரமான யானைகள் எதிர்ப்படும் - மணிகள் (ரத்னங்கள்) கிடக்கும் திருக்கோணமலையில் வீற்றிருக்கும் உக்ரமான கதிர்காம (முருகனே)!

வீரனே! (தினைப்) புன மலையாம் வள்ளிமலையில் மயில் போன்ற வேடப்பெண் வள்ளியின் மேகலை அணிந்த இடையின் கொத்திலும் (அலகால் குத்துதல் போன்ற கொத்துதலிலும்), இரண்டு தாள்களிலும் (மரம், தினைப்பயிர் முதலியவற்றின் அடிப்பாகத்திலும்),

வாசனை தங்கிய மேகம் போன்ற கூந்தலிலும், பசிய மூங்கிலை ஒத்த தோள்களிலும், சிவந்த (ஒளித்) திரளைக்கொண்ட வேல் போன்ற கண்களிலும் சிக்கிக்கொண்ட பெருமாளே!

(கால்களை மறக்கைக்கும் வருமோதான்)

## 427. அகப்பொருள்

தனதனா தத்த தனதனா தத்த
தனதனா தத்த தனதான

மருவறா வெற்றி மலர்தொடா விற்கை
வலிசெயா நிற்கு மதனாலும்-
மதில்கள்தா வுற்ற கலைபடா வட்ட
மதிசுடா நிற்கு மதனாலும்;
இருகணால் முத்த முதிர * யா மத்தி
னிரவினால் நித்த மெலியாதே-
இடருறா மெத்த மயல்கொளா நிற்கு
மிவளைவாழ் விக்க வரவேணும்;
கரிகள்சேர் வெற்பி லரியவே டிச்சி
கலவிகூர் சித்ர மணிமார்பா-
† கனகமா ணிக்க வடிவனே மிக்க
கதிரகா மத்தி லுறைவோனே;
முருகனே பத்த ரருகனே முத்தி
முதல்வனே பச்சை மயில்வீரா-
முடுகிமே லிட்ட கொடியசூர் கெட்டு
முறியவேல் தொட்ட பெருமாளே. (10)

## 428. நரகிற் கிடப்போர்

தானதன தானத் தனதான

மாதர்வச மாயுற் றுழல்வாரும்-
மாதவமெ ணாமற் றிரிவாரும்;
தீதகல வோதிப் பணியாரும்-
தீநரக மீதிற் றிகழ்வாரே;

* யாமம் - மூன்று மணி நேரம் 7 $^{1}/_{2}$ நாழிகை - கொண்டது ஒரு சாமம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

## 427

வாசனை நீங்காததும், செயமே பெறுவதுமான மலர்ப் பாணங்களைத் தொட்டுப், பயிலும் வில்லைக் கையில் வைத்து வலித்து நிற்கும் மன்மதனாலும்,

மதில்களைத் தாண்டிவரும் கிரணங்களைக் கொண்ட வட்ட வடிவான சந்திரன் (பூரண நிலா) சுட்டு நிற்பதனாலும்,

இரண்டு கண்களினின்றும் முத்தும் (முத்துப் போன்ற கண்ணீர்) உதிர (சிந்த), ((முதிர - நிரம்ப) யாமங்கள் தோறும் இரவில் தினந்தோறும் மெலிவு அடையாதவாறு-

துன்பம் அடைந்து மிகவும் காம மயக்கம்கொண்டு நிற்கும் இவளை வாழ்விக்க நீ வந்தருள வேண்டும்.

யானைகள் வாழும் மலையில் (வள்ளிமலையில்) அருமை வாய்ந்த வேட்டுவப் பெண் வள்ளியின் கலவியின்பம் மிக்க அழகிய மணிமார்பனே!

கனக மாணிக்க உருவத்தனே! சிறந்த கதிர்காமத் தலத்தில் உறைபவனே!

முருகனே! பக்தருக்கு அருகில் இருப்பவனே! முத்திதரும் முதன்மையனே! பச்சை மயில் வீரனே!

விரைந்து வந்து மேலிட்டு எதிர்த்த பொல்லாத சூரன் கேடு உற்று அழிபட வேலைச் செலுத்திய பெருமாளே!

(இவளை வாழ்விக்க வரவேணும்)

## 428

பெண்கள் வசப்பட்டுத் திரிபவர்களும்,

நல்ல தவச்செயல்களை எண்ணாமல் திரிபவர்களும்,

தீமைகள் விலகும்படி (நல்ல) நூல்களை ஓதிப் பணியாதவர்களும்,

கொடிய நரகத்திலே விளக்கமுறக் கிடப்பார்கள்

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

† 'கனக மாணிக்க வடிவன்' என்பதனைக் கொண்டு அருணகிரியார் இங்குத் தரிசித்தபொழுது மாணிக்கத்தால் அமைந்த திருவுருவம் இருந்திருத்தல் கூடும் என்று கருதுகின்றார்கள்.

இலங்கைப் புராதன சைவாலயங்கள் - கதிர்காமம் - பக்கம் 13.

* நாதவொளி யேநற் குணசீலா-
நாரிமிரு வோரைப் புணர்வேலா;
சோதிசிவ ஞானக் குமரேசா-
தோமில் **கதிர்காமப்** பெருமாளே. (11)

## 429. அகப்பொருள்

*தனன தான தான தத்த தனன தான தான தத்த*
*தன்ன தான தான தத்த தனதான*

†முதிரு மார வார நட்பொ ‡டிலகு மார வார மெற்றி
முனியு மார வார முற்ற கடலாலே-
முடிவி லாத தோர் §வடக்கி லெரியு ¶மால மார்பி டத்து
முழுகி யேறி மேலெ றிக்கு நிலவாலே;
$வெதிரி லாயர் வாயில் வைத்து மதுர ராக நீடி சைக்கும்
வினைவி டாத தாய ருக்கு மழியாதே-
விளையு மோக போக முற்றி அளவி லாத காதல் பெற்ற
விகட மாதை நீ **யணைக்க வரவேணும்;**
**கதிர காம** மாந கர்க்கு ளெதிரி லாத வேல்த ரித்த
கடவு ளேக லாப சித்ர மயில்வீரா-
கயலு லாம்வி லோச னத்தி களப மார்ப யோத ரத்தி
ககன மேவு வாளொ ருத்தி மணவாளா;

---

* நாத ஒளியே - " ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே" - அப்பர் 6-38-1; ஒளி- "முன்னாய ஒளியான்" - சம்பந்தர் - II-87-1.

(பா -ம்) 'நாதவெளியே' என்றும் இருந்திருக்கலாம்.

'நிலநீரொடு தீவளிகாயமென வெளி மன்னிய தூ ஒளியாய்'
- சம்பந்தர் - II- 21 - 4.

† முதிரும் மார வார நட்பொடு - மாரனுக்கு உரிமையாகிய முதிர்ந்த நட்புடன். ‡ இலகும் ஆர் அ ஆரம் எற்றி - பிரகாசிக்கின்ற பொருந்திய அந்த முத்துக்களை எற்றி.

§ வடக்கில் எரி - வடவாமுகாக்கினி.

¶ ஆலம் ஆர்பு இடம் - கடல். $ வெதிர் - வேய்ங்குழல்.

நாதனே! சுடரே! நல்ல குணப் பரிசுத்தனே! (அல்லது ஒலியே! ஒளியே! ஒலி ஒளியே!) நற்குண சீலா!

பெண்கள் இருவரை (தேவசேனை - வள்ளியை)ச் சேரும் வேலனே!

சோதியே! சிவஞானக் குமரேசனே!

குற்றமிலாத கதிர்காமப் பெருமாளே!

(மாதர் வசமாயுற்றுழல்வார் - நரகமீதிற் றிகழ்வார்)

## 429

மார வார முதிரும் நட்பொடு (மன்மதனுக்கு உரிமையாகிய அன்பு முதிர்ந்த நட்புடன்), (இலகும் ஆர் அ ஆரம் எற்றி) பிரகாசிக்கின்ற பொருந்திய அந்த முத்துக்களை எற்றி (வீசி), முனியும் - கோபிக்கும், ஆரவாரம் உற்ற - பேரொலி பொருந்திய கடலாலே - (கடலொலிக்கும்)-

அழிவு இலாததாய், ஒப்பற்ற கடலின் வடக்குப் பக்கத்தில் எரியும் ஊழித்தீயாம் வடவாமுகாக்கினி போல் எரிவதாய், (ஆலம் ஆர்பு இடம்) விடம் நிறைந்து தோன்றிய இடமாம் கடலில் முழுகி (மேலே) ஏறி கிரணங்களை வீசும் நிலவாலே - (நிலவுக்கும்)

மூங்கிலில் (புல்லாங்குழலை) இடையர் வாயில் வைத்து இனிமையான ராகங்களை நெடுநேரம் கேட்கச் செய்யும் இசையொலிக்கும், தமது தொழிலை விடாது செய்யும் தாய்மாருக்கும், அழியாமல்-

உண்டாகின்ற காம போகமே நிரம்பி, அளவு கடந்த ஆசை கொண்டுள்ள இந்த அழகிய பெண்ணை நீ அணைக்கவரவேணும்-

கதிர்காம மகா நகரத்தில் ஒப்பில்லாத வேலாயுதத்தைத் தரித்த கடவுளே! தோகை யழகு வாய்ந்த மயில் வீரனே!

மீன் போன்ற கண்களை உடையவள், கலவைச் சாந்து அணிந்த கொங்கையை உடையவள், (ககனம் - விண்) விண்ணுலகில் வீற்றிருந்தவள் ஆகிய - ஒப்பற்றவளாம் தேவசேனையின் மணவாளனே! (அல்லது ககனம் - காடு எனக் கொண்டு - வள்ளிமலைத் தினைக்காட்டில் இருந்த ஒப்பற்ற வள்ளியின் மணவாளனே!)

* அதிர வீசி யாடும் வெற்றி விடையி லேறு மீசர் கற்க
அரிய ஞான வாச கத்தை யருள்வோனே-
அகில லோக மீது சுற்றி யசுரர் லோக நீறெ ழுப்பி
அமரர் லோகம் வாழ வைத்த பெருமாளே. † (12)

## 430. யம தண்டனை பயத்தை விலக்க

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான

வருபவர்க ளோலை கொண்டு நமனுடைய தூத ரென்று
மடிபிடிய தாக நின்று தொடர்போது-
மயலதுபொ லாத வம்பன் விரகுடைய னாகு மென்று
வசைகளுட னேதொ டர்ந்து அடைவார்கள்;
கருவியத னாலெ றிந்து சதைகள்தனை யேய ரிந்து
கரியபுன லேசொ ரிந்து விடவேதான்-
கழுமுனையி லேயி ரென்று விடுமெனும வேளை கண்டு
கடுகிவர **வேணு மெந்தன் முனமேதான்;**
பரகிரியு லாவு ‡ செந்தி மலையினுட னே §யி டும்பன்
பழநிதனி லேயி ருந்த குமரேசா-

---

* "முழங்கழல் அதிரவீசி ஆடுவாய்" சம்பந்தர் - 3-52-4.
"அதிர வீசி வாதாடும் விடையிலேறுவார்" திருப்புகழ்.

† இந்தத் திருப்புகழில் ஒவ்வோரடியின் பிற்பாகங்கள் ஒன்று சேர, எதுகை ஒன்று நீங்கலாக, ஏனைய இலக்கணங்களும், பொருளும் பொருந்தப் பிறிதொரு திருப்புகழ் பின்வருமாறு அமைகின்றது:-

முனியு மார வார முற்ற கடலாலே
முழுகி யேறி மேலெ றிக்கு நிலவாலே
வினைவி டாத தாய ருக்கு மழியாதே
விகட மாதை நீய ணைக்க வரவேணும்;
கடவுளே கலா பசித்ர மயில்வீரா!
ககன மேவு வாளொருத்தி மணவாளா!
அரிய ஞான வாசகத்தை யருள்வோனே
அமரர் லோகம் வாழ வைத்த பெருமாளே! (அடுத்த பக்கம் பார்க்க)

அதிரவீசி ஆடுகின்ற ஈசன், வெற்றி விடையில் ஏறும் ஈசர் (கற்க) அறியும்படி, அருமையான ஞான உபதேச மொழியை (அவருக்கு) அருளியவனே!

எல்லா வுலகங்களின் மீதும் சுற்றி உலாவி, அசுரர் வாழ்ந்த உலகங்களைத் தூளாக்கி, தேவலோகத்தை வாழவைத்த பெருமாளே!

(விகடமாதை நீ அணைக்க வரவேணும்)

## 430

(என் உயிரைக்கவர) வரும் யமதூதர்கள் எனது ஆயுட் சீட்டு ஓலையை எடுத்துக் கொண்டு வந்து, (நாங்கள்)யமதர்ம ராசாவின் தூதர்கள் என்று கூறி, (மடி பிடியதாக) விடாப்பிடியாக நின்று என்னைத் தொடர்கின்ற போது - (என்னை நோக்கி அவர்கள்)

காமமிக்க பொல்லாத வம்பன் (வீணன்) துட்டன், தந்திரம் உடையவன் ஆகும் இவன் என்று, பழிப்பு வார்த்தைகளுடனே என்னைத் தொடர்ந்து நெருங்குவார்கள்;

ஆயுதங்களை வீசிச் சதைகளை அரிந்து, கரிய (பசிய) (புனல் - நீர்) ரத்தம் சொரிந்து விழுமாறு (சிந்துமாறு)

கழுமுனையில் இரு என்று ஏவி விடுவார்கள், அந்த சமயத்தை அறிந்து நீ வேகமாக வரவேணும் என்றன் முன்னிலையிலே;

பரங்குன்றம், (நீ உலவி விளையாடும்) செந்தூர்மலை, அவையுடன் இடும்பன் கொண்டுவந்த பழநி மலை - ஆகிய தலங்களில் வீற்றிருக்கும் குமரேசனே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

‡ செந்திமலை - பாட்டு 46 பார்க்க.

§ இடும்பன் பழநி - பாட்டு 112, 184 - கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க.

பதிகள்பல வாயி ரங்கள் மலைகள் வெகு கோடி நின்ற
பதமடியர் காண வந்த கதிர்காமா;
அரவுபிறை பூளை தும்பை விலுவமொடு தூர்வை கொன்றை
யணிவர் சடை யாளர் தந்த முருகோனே-
அரகரசி வாய சம்பு குருபரகு மார நம்பு
மடியர்தமை யாள வந்த பெருமாளே. (13)

## அருக்கொணாமலை

(இதுவும் ஈழநாட்டிலுள்ளது. யாழ்ப்பாணத்திலிருந்து 12 மைல்; கீரிமலை என்று வழங்கும்.)

## 431. மாதர்மேலுள மயக்கற

தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன தனதான

தொடுத்த வாளென விழித்து மார்முலை
யசைத்து மேகலை மறைத்து மூடிகள்
துடித்து நேர்கலை நெகிழ்த்து மாவியல் கொளுமாதர்-

சுகித்த ஹாவென நகைத்து மேல்விழ
முடித்த வார்குழல் விரித்து மேவிதழ்
* துவர்த்த வாய்சுரு ளடக்கி மால்கொடு வழியேபோய்;

படுத்த பாயலி லணைத்து மாமுலை
பிடித்து மார்பொடு மழுத்தி வாயிதழ்
கடித்து நாணம தழித்த பாவிகள் வலையாலே-

பலித்து நோய்பிணி கிடத்து பாய்மிசை
வெளுத்து வாய்களு மலத்தி னாயென
பசித்து தாகமு மெடுத்தி டாவுயி ருழல்வேனோ;

---

* துவர்த்த - சிவந்த.

தலங்கள் பல ஆயிரக்கணக்கானவை; மலைகள் வெகுகோடி கணக்கானவை - இவைதமில் நின்ற உனது திருவடிகளை அடியார்கள் காணும் பொருட்டு எழுந்தருளி வந்துள்ள கதிர்காமத் தலத்தனே!

பாம்பு, பிறை, பூளைப்பூ, தும்பைமலர், வில்வம், அறுகு, கொன்றை அணிபவராம் சடையாளர் (சிவபிரான்) தந்த முருகனே! (குழந்தையே)

அரகர, சிவாய, சம்பு, குருபர, குமார, நம்பும் அடியார்களை ஆண்டருள வந்த பெருமாளே!

(வேளைகண்டு கடுகிவரவேணும் எந்தன் முனமேதான்)

அருக்கொணாமலை

## 431

செலுத்தப்பட்ட வாளாயுத மென்று சொல்லும்படி விழித்து, மார்பிலுள்ள கொங்கையை அசைத்து, மேகலை (புடைவை) கொண்டு மறைத்து மூடும் மாதர்கள், துடித்து எதிரே புடைவையைத் தளர்த்தி நல்லொழுக்கத்தைப் பறிகொள்கின்ற மாதர்கள்,

சுகித்து, ஆகா என்று நகைத்து மேலே விழ, முடித்திருந்த நீண்ட கூந்தலை விரித்து, இதழ்சிவக்கும்படி வாயில் (வெற்றிலைச்) சுருளை அடக்கிக், காம ஆசையைக் கொடுக்-கின்ற அந்த வழியிலேயே போய்ப்-

படுத்த படுக்கையில் அணைத்து, அழகிய கொங்கையைப் பிடித்து மார்போடும் அழுத்தி, வாயிதழைக் கடித்து, நாணத்தை அழித்த (பொதுமகளிராம்) பாவிகளின் வலை-யாலே-

உண்டான நோய் பிணியாற் படுக்கை யுற்று, பாயில் விழுந்து கிடப்பதால் உடல் வெளுத்து, வாய்களும் மலம் தின்னும் நாயென ஆக, பசியுற்றும் தாகம் உற்றும் எடுத்திட்ட உயிருடன் திரிவேனோ!

* வெடுத்த தாடகை சினத்தை யோர்கணை
விடுத்து யாகமும் நடத்தி யேயொரு
மிகுத்த வார்சிலை முறித்த மாயவன் மருகோனே-

விதித்து ஞாலம தளித்த வேதனை
யதிர்த்து வோர்முடி கரத்து லாயனல்
விழித்து காமனை யெரித்த தாதையர் குருநாதா;

அடுத்த † ஆயிர விடப்ப ணாமுடி
நடுக்க மாமலை பிளக்க வேகவ
டரக்கர் மாமுடி பதைக்க வேபொரு மயில்வீரா-

‡ அறத்தில் வாழுமை § சிறக்க வேயறு
முகத்தி னோடணி குறத்தி யானையொ
டருக்கொ ணாமலை ¶ தருக்கு லாவிய

பெருமாளே. (1)

## திருக்கோணமலை

(இதுவும் ஈழநாட்டிலுள்ளது. இலங்கைத் தீவில் வட கீழ்ப்பாகத்தில் உள்ள கடற்கரைத் தலம். தட்சிண கைலாசம் எனவும் பெயர் பெறும். திருஞானசம்பந்த சுவாமிகளுடைய பாடல் பெற்றது. இதற்குத் தலபுராண முண்டு.)

---

* தாம் செய்யும் யாகத்தை ராட்சசர்கள் தடுக்கிறார்களென்றும் அவர்களை அழிக்க ஸ்ரீராமரைத் தம்முடன் அனுப்பவேண்டுமென்றும் விசுவாமித்திர முனிவர் தசரத மகாராசாவைக் கேட்க ஸ்ரீராமரும் லட்சுமணரும் முநிவருடன் அனுப்பப்பட்டனர். அவர்கள் போகும் வழியில் தாடகை ஸ்ரீராமரை எதிர்க்க, அவரது பாணத்தால் அவள் மாண்டாள். பின்னர் ஸ்ரீராமர் முநிவரது வேள்வியைக் காத்தனர். யாகத்துக்கு இடையூறுசெய்த சுபாகுவைக் கொன்றனர். மாரீசனை அப்புறப்படுத்தினர்.

பின்னர் ஸ்ரீராமர் விசுவாமித்திரருடன் மிதிலைக்குச் சென்று அங்கே சனகமகாராசர் வைத்திருந்த சிவதனுசை முறித்து சனகமகாராசனுக்குப் பூமிதேவி அளித்த வைதேகி (சீதை)யைத் திருமணம் செய்தனர்.

(அடுத்த பக்கம் பார்க்க)

வெடுவெடுத்து (கோபத்தாற் படபடப்புடன்) வந்த தாடகையின் கோபத்தை ஓர் அம்பு விடுத்து (அடக்கியும்) யாகத்தை நடத்தியும், ஒப்பற்ற விசேடமான நீண்ட வில்லை முறித்தவனான திருமாலின் (ஸ்ரீராமரின்) மருகனே!

சிருட்டித்து இப் பூமியைத் தந்த பிரமனை அதிர்ச்சியுறச் செய்து (கலங்கவைத்து), அவனுடைய ஒரு சிரத்தைத் தமது கையில் உலவவைத்து (சிரத்தைக் கையாற் கிள்ளி அறுத்து), நெருப்புக்கண்ணை விழித்து மன்மதனை எரித்த தந்தையாம் சிவனுக்குக் குருநாதனே!

வரிசையுள்ள ஆயிரம், விடம்கொண்ட, படங்களைக் கொண்ட ஆதிசேடன் நடுக்கமுறவும், கிரவுஞ்சமலை பிளவு பட்டுத் தூள்படவும், வஞ்சக அரக்கர்களின் பெரிய தலைகள் பதைக்கவும் பொருத மயில் வீரனே!

அறங்களை வளர்த்து வாழ்ந்த உமை (தேவி) மகிழ்ச்சியுற, ஆறுதிருமுகங்கள் விளங்க அழகிய குறத்தி (வள்ளி) யுடனும் யானை (தேவசேனை) யுடனும் அருக்கொணாமலை என்னும் தலத்தில் களிப்புடன் உலவும் (விளங்கும்) பெருமாளே! (அல்லது தருகுலாவிய அருக்கொணாமலை எனக்கொண்டு மரங்கள் அடர்ந்த அருக்கொணாமலைப் பெருமாளே - எனலுமாம்).

(உயிர் உழல்வேனோ!)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

† 'சேடன் முடி திண்டாட ஆடல்புரி வெஞ்சூரர் திடுக்கிட நடிக்கு மயிலாம்; 'பாரப்பணாமுடி அனந்தன் முத லரவெலாம் பதைபதைத்தே நடுங்க' - மயில் விருத்தம்.

‡ அறத்தில் வாழ் உமை - காஞ்சியில் 32-அறங்களை வளர்த்த தேவி (திருப்புகழ் 460)

§ சிறத்தல் - மகிழ்தல் " நாகர் கம்மியன்...... உளம் சிறந்து புகலுவான்" - கந்த புராணம் 4-1-31.

¶ தருக்கு - களிப்பு. 'கீதம் வந்த வாய்மையாற் கிளர் தருக்கினார்" சம்பந்தர்-3-52-7.

## 432. அருள் பெற

தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன தனதான

விலைக்கு மேனியி லணிக்கோவை மேகலை
தரித்த வாடையு மணிப்பூணு மாகவெ
மினுக்கு மாதர்க ளிடக்காம மூழ்கியெ மயலூறி-
மிகுத்த காமிய னெனப்பாரு ளோரெதிர்
நகைக்க வேயுட லெடுத்தேவி யாகுல
வெறுப்ப தாகியெ யுழைத்தேவி டாய்படு
கொடியேனைக்;

கலக்க மாகவெ மலக்கூடி லேமிகு
பிணிக்கு ளாகியெ தவிக்காம லேயுனை
கவிக்கு ளாய்சொலி கடைத்தேற வேசெயு
மொருவாழ்வே-
கதிக்கு * நாதனி யுனைத்தேடி யேபுக
ழுரைக்கு நாயெனை யருட்பார்வை யாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள்
**தரவேணும்;**

மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்
திருக்கு மாரனெ முகத்தாறு தேசிக
வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ்
தருவேளே-
வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுநி யிடைக்காடர் கீரனும்
வகுத்த பாவினில் பொருட்கோல மாய்வரு
முருகோனே;

---

* நாதனி - நாதன் நீ.

## திருக்கோணமலை

தக்க விலை பெறும் பொருட்டு (காசு பறிக்கும் பொருட்டு) மேனியில் (உடலில்) அழகிய வடங்களை (பொன்மாலைகளை) அணிந்து, மேகலை (இடையணியைப்) பூண்ட ஆடையுடனும், ரத்னாபரணங்களுடனும் மினுக்கும் மாதர்கள் தரும் காம மயக்கில் முழுகி, மோகத்தில் அழுந்தியூறி-

பெரிய காமலோலன் இவன் என்று உலகில் உள்ளோர் என் எதிரே சிரிக்க உடலெடுத்துத் துன்பமும் வெறுப்பும் கொண்டு உழைத்துக் களைப்புக்கொள்ளும் கொடியவனாகிய நான்

கலக்க நெஞ்சினனாய், மும்மலக் கூடாகிய இந்த உடலில், நிரம்ப நோய்களுக்கு ஆளாகித் தவிக்காமல், உன்னைப் பாட்டில் அமைத்துப் பாடிக் கடைத்தேற (ஈடேற) அருளும் ஒப்பற்ற செல்வமே!

நற்கதியைத் தரும் நாதன் நீ! உன்னைத் தேடி உனது புகழை உரைக்கும் நாயேன் (சிறியன்) (உனது) அருட் பார்வை-யால் உன் திருவடியைக் கூடவே சிறப்பான வழியை (அல்லது, தாய் அன்பை) எனக்கு அருள் புரிய வேண்டும்.

மலைக்குத் தலைவனே (குறிஞ்சி வேந்தனே. - கிரிராசனே)! சிவகாமியம்மையின் தலைவராம் சிவபிரானது அழகிய குமாரனே! திருமுகங்கள் ஆறு கொண்ட குருமூர்த்தி-யே! வடிவழகுள்ள மாது - ஒப்பற்ற குறப்பாவையாள் - வள்ளி மகிழும் வேளே!

வசிட்டர், காசிபர், தவஞ்சிறந்த யோகியர்கள், அகத்திய முனிவர், இடைக்காடர், நக்கீரர் - இவர்கள் அமைத்த பாடல் களில் அவைதம் பொருளுருவமாய் வரும் முருகனே!

*நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்*
** திருக்கொ ணாயலை தலத்தாரு கோபுர*
*+ நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில் வருவோனே-*
*நிகழ்த்து மேழ்பவ கடற்சூறை யாகவெ*
*யெடுத்த வேல்கொடு பொடித்தூள தாஎறி*
*நினைத்த காரிய மநுக்கூல மேபுரி பெருமாளே.* (1)

---

# ஆறாந் திருமுறை

## ஆறாவது திருப்பதி

## பழமுதிர்சோலை

(இது மதுரைக்கு வடக்கு *12* - மைலிலுள்ள கள்ளழகர் கோயில். *443* ஆம் பாடலைப் பார்க்க. *443*-ஆம் பாடலில் 'பிட்ட முதுக் கடிபடு வானோடு.... நெருக்கிய ஆதிச் சோலை-மலை' என்றதனால் இத்தலம் மதுரைக்கு அருகில் உள்ள தலம் என்பதும் *438* ஆம் பாடலில் 'நூபுரம் இரங்கு கங்கை' என்றதனால் (நூபுரம் - சிலம்பு) 'சிலம்பாறு' ஒலிக்கும் தலம் என்பதும் பெறப்படுகின்றன; ஆதலால் கள்ளழகர் கோயிலே பழமுதிர்சோலை என்பதிற் சிறிதளவும் ஐயமில்லை. 'சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற் சோலையொடு தொடர் மொழி மாலிருங் குன்றம்' - (பரிபாடல் *15*). இத்தலத்து மலையை 'இருங்குன்றம்' எனப் பரிபாடலிலும், 'தண்கார்வரை' எனக் கந்தர் அந்தாதியிலும் (*1-,73*) விளக்கப்பட்டுள்ளது.

இத்தலத்தில் முன்பு சிவாலயமும் இருந்த தென்பதற்குச் சான்றுகள் பிரதான மூர்த்தியின் பெயர் "பரம சுவாமி" என்று சிலாசாசனங்களிற் காணப்படுவது, விக்னேசுரர் ஆலயம், விபூதிப் பிரசாதம் முதலிய - என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ள தலபுராணம் விளக்கும் " திருமால் குன்றத்துச் செல்குவீராயின் ... புண்ணிய சரவணம் பொருந்துவீர்" எனச் சரவணப்பொய்கை அங்கு

---

* *திருக்கோணமலை - தட்சிண கயிலாயங்கள் மூன்றில் ஒன்று. திருப்புகழ் 331- கீழ்க்குறிப்பைப் பார்க்க.*

அழியாது நிலைத்து நிற்கும் நாலுவேதங்களைப் பயின்ற சிறந்த அந்தணர்கள் உள்ள திருக்கோணமலை என்னும் தலத்தில் விளங்கும் கோபுர நிலையின் வாயிலில் *"கிளிப்பாடு பூதி" என்னும் இடத்தில் எழுந்தருளி வருபவனே!

நிகழ்கின்ற (நடக்கின்ற) ஏழுபிறப்பு என்னும் சமுத்திரம் சூறைபட (கொள்ளைபோய் அழிய)த் திருக்கரத்தில் எடுத்த வேலைப் பகைவர்கள் பொடிப் பொடியாகப் போகும்படி செலுத்தின பெருமாளே! நினைத்த காரியங்களெல்லாம் அனுகூலமாம்படி அருளும் பெருமாளே!

(அருள் தரவேணும்)

*கிளிப்பாடு பூதி - திருக்கோணமலைக் கோயில் கோபுர நிலையில் ஓரிடத்துக்குக் 'கிளிப்பாடு பூதி' என்று பெயர் என்ப. "அருணகிரிநாதர் கிளியுரு எடுத்து இத்தலத்து எழுந்தருளித் திருப்புகழ் பாடித் தோத்திரம் புரிந்தருள் பெற்றார். அது 'கிளிப்பாடு பூதியில் வருவோனே' என இத்தலத் திருப்புகழிற் கூறி அருளியதனாலும் பெறுதும். அதுபற்றி "வன்னி மங்கலம் என்னும் சிறப்புப் பெற்றுள்ளது." - சுப்பிரமண்ய பராக்ரமம் பக்கம் 346 (வன்னி - கிளி). 'கிளிப்பாடு பூதி' என்பதற்கு (அருணகிரியார் கிளியான பின்பு பாடின) கந்தரநுபூதி எனப் பொருள் கொண்டால் இந்தத் திருப்புகழ் அருணகிரிநாதர் பாடினதா என்பதை ஆராய வேண்டிவரும்.

உளது என்பதைச் சிலப்பதிகாரம் (காடுகாண்காதை) விளக்குகின்றது. திருப்புகழ் பாடல்கள் 572, 938- பாட பேதத்தின் படி இத்தலத்துக்கு உரிய பாடல்களாகும். "மதில்-சூழ் சோலைமலைக் கரசே" பெரியாழ்வார் திருமொழி-70)

## 433. வாழ

*தனதன தான தனதன தான தனதன தான*
*தனதான*

*அகரமு மாகி யதிபனு மாகி யதிகமு மாகி*
*அகமாகி-*

*அயனென வாகி அரியென வாகி அரனென வாகி*
*அவர்மேலாய்;*

*இகரமு மாகி யெவைகளு மாகி யினிமையு மாகி*
*வருவோனே-*

*இருநில மீதி லெளியனும்* **வாழ எனதுமு னோடி வரவேணும்;**

** மகபதி யாகி மருவும் † வலாரி மகிழ் களி கூரும்*
*வடிவோனே-*

---

* மகபதி - நூறு அசுவமேதயாகம் முடித்தவர் இந்திரபதவி அடைவர். பாட்டு 232 பார்க்க.

† வலாரி - இந்திரன். பாடல் -351 பார்க்க.

## பழமுதிர்சோலை

# 433

எழுத்துக்களுள் *அகரம் முதலாய் நிற்பது போல, எப்பொருளுக்கும் முதற்பொருளாகி, எவைக்கும் தலைவனாகி, எவைக்கும் மேம்பட்டதாகி, "நான்" "நான்" என்னும் உட் பொருளாகி,

பிரமன் என்னும் படைப்புத் தொழிலனாகி, திருமால் என்னும் காத்தல் தொழிலனாகி, அரன் என்னும் அழித்தல் தொழிலனாகி, இம்மூவர்க்கும் † மேலான பொருளாகி

இங்குள்ள பொருள்களாகி, பின் எங்குள்ள ‡ எல்லாப் பொருள்களும் ஆகி, § இனிமை தரும் பொருளாகி வருபவனே!

இப்பெரிய பூமியில் எளியனாகிய அடியேனும் வாழ என் முன்பு (இறைவா நீ) ஓடி வரவேணும்,

மகபதி (யாகங்களுக்கு அதிபதி)யாய் விளங்கும் (வலாசுரனுக்குப் பகைவனாம்) இந்திரன் மகிழ்ச்சியும் களிப்பும் மிகவும் கொள்ளும் அழகனே!

---

* 'அகர முதலானை அணி ஆப்பனூரானை' - சம்பந்தர் - 1-88-5.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு-திருக்குறள்.

'அகர உயிர்போல் அறிவாகி எங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து' - திருவருட்பயன்.

'அகரம தாதியான எழுத்தெலாம் ஆகிப். பின்னர், மகரமு மான மேலோன்' - கந்த புராணம் - 4-12-437.

† 'மேலொருவன் இல்லாதான் எங்கள் இறை' - திருவருட் பயன்-6.

‡ எவைகளுமாகி - "எல்லாமாம் எம்பெருமான்" சம்பந்தர் - 2-16-9; 'எல்லாம் ஆயவன்' - சம்பந்தர் 1-113-2.

§ இனிமையுமாகி - "மதுரன் நீ" சம்பந்தர் -3-52-4; "ஊறு தேனவன்" சம்பந்தர் -2; 95-2.

*வனமுறை வேட †னருளிய பூஜை மகிழ்கதிர் காம
முடையோனே;

செககண சேகு தகுதிமி தோதி திமியென ஆடு
மயிலோனே-

திருமலி வான ‡பழமுதிர் சோலை மலைமிசை மேவு
பெருமாளே. (1)

## 434. ஞானம் பெற

தனதன தான தான, தனதன தான தான
தனதன தான தான தனதான

§ இலவிதழ் கோதி நேதி மதகலை யார வார
இளநகை யாட ஆடி மிகவாதுற்-

றெதிர்பொரு கோர பார ம்ருகமத கோல கால
இணைமுலை மார்பி லேற மதராஜன்;

கலவியி லோடி நீடு வெகுவித தாக போக
கரணப்ர தாப லீலை மடமாதர்-

---

* கதிர்காமத்தில் ஒரு வேடன் வேலவரைப் பூசித்துப் பேறு பெற்ற வரலாறு இங்குக் குறிக்கப்பட்டுள்ளது.

முருகவேள் தமது வேலாயுதத்தைப் பாராட்ட, அருகிலிருந்த பிரமன் இந்த வேலுக்குப் பெருமை என்னால் வந்தது என, முருகவேள் கோபித்துப் பிரமனைச் சபிக்கப், பிரமன் பூமியில் 'அந்திமான்' என்னும் வேடனாகப் பிறந்தான். தான் கொல்ல எத்தனித்த பிப்பலாத முநிவரால் அவன் ஞானம் வரப்பெற்றான். முருகவேளை அன்புடன் பூசித்தான். கார்த்திகை விரதம் இருந்து ஆறெழுத்தை ஓதி வேடத்தன்மை நீங்கி அரசனாகி இடைவள்ளல்கள் எழுவரில் ஒருவனாயினான். (சுப்பிரமணிய பராக்ரமம் - சதுர்முக சாபாரி மூர்த்தி - பக்கம். 169) இந்த வேடனைத்தான் இந்தத் திருப்புகழடியிற் குறித்துள்ளார் என்பர். (அடுத்த பக்கம் பார்க்க)

காட்டில் வசித்த வேடன்* அன்புடன் செய்த பூசையை மகிழ்ந்து ஏற்றுக்கொண்ட கதிர்காமத் தலத்தைக் கொண்டவனே!

செககண சேகு தகுதிமி தோதிதிமி யென்று ஆடும் மயில் வாகனனே!

லட்சுமிகரம் நிறைந்த † பழமுதிர்சோலை மலைமேல் வீற்றிருக்கும் பெருமாளே!

(எளியனும் வாழ எனதுமு னோடி வரவேணும்)

## 434

‡ இலவம்பூப் போன்ற சிவந்த வாயிதழ்களை வகைப்படுத்தி, முறையாக மன்மத கலைகளை ஆரவாரமும் புன்சிரிப்பும் தோன்ற விளையாடி, அதிக தர்க்கங்களைப் பேசி

எதிரில் தாக்கும் அச்சந் தரும் பாரமான, கத்தூரி முதலிய அணிந்து ஆடம்பரமாயுள்ள துணைக் கொங்கைகள் மார்பிற் பொருந்த மன்மதராசனுடைய-

காமலீலைச் சேர்க்கையில் (வேகத்துடன்) ஓடி, நெடுநாள் பலவிதமான போகசுகத்தை உண்டுபண்ணும் காமபோக புணர்ச்சியிற் பேர் பெற்ற லீலைகளுடன் மடப்பம் பொருந்திய மாதர்களுடைய

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

† அருளிய - அன்புடன் செய்த பூசை "அவர் அமைத்து அருளிய விருந்து இனிது அமர்ந்து" - பெரிய புராணம் ஞானசம் - *535.*

‡ பழம் - முதிர் - சோலை: முதிர் - மிகுதல். "அரி முதிர் அமரர்க் கரசனாகியும்" (கல்லாடம் - 9) என்புழிப் போல.

§ இலவம்பூ சிவந்த வாய்க்கு உவமை; இலவ மலர் - செந்நிறம். 'எரிமலர் இலவத்து' பெருங்கதை *1-54-143.* 'இலமலர்ச் செவ்வாய்'- பெருங்கதை *1-33-118;* 'இலவலர்வாய் இன்னமிர் தம் எய்தினான்' - சிந்தாமணி *482.*

கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனு மீது
கருதிய ஞான போத மடைவேனோ;
கொலைபுரி காளி சூலி வயிரவி நீலி மோடி
குலிச* குடாரி யாயி மகமாயி-
குமரிவ ராகி மோகி பகவதி யாதி சோதி
குணவதி யால வூணி யபிராமி;
பலிகொள்க பாலி யோகி பரமகல் யாணி லோக
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே-
படையொடு சூரன் மாள முடுகிய சூர தீர
பழமுதிர் சோலை மேவு பெருமாளே. (2)

## 435. நடனம் காண

தானதன தான தந்த தனதான

காரணம தாக வந்து புவிமீதே-
காலனணு காதி சைந்து கதிகாண;
நாரணனும் வேதன் முன்பு தெரியாத-
ஞான நட மேபுரிந்து வருவாயே;
ஆர்† முத மான தந்தி மணவாளா-
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே;
சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா-
‡சோலைமலை மேவி நின்ற பெருமாளே. (3)

---

* குடாரி - யானைத்தோட்டி - அங்குசம். 'பாசாங்குசம் கையில் அணையுந் திரிபுரசுந்தரி' அபிராமி அந்தாதி -2.

† அமுதமான தந்தி - தேவசேனை - அமுதவல்லி ஆதலின். தேவசேனை வரலாறு:-

திருமாலின் கன்னியராம் அமுதவல்லி, சுந்தரவல்லி என்பவர் முருகவேளை மணக்க விரும்பி சரவணத்தில் தவம் புரிந்தனர். முருகன் அவர்கள் எதிர் தோன்றி 'அமுதவல்லி! நீ, இந்திரன் மகளாக வளருவாயாக! இளையவளாம் சுந்தரவல்லி வேடன்பால் வளருவாளாக; பின்னர்; நாம் உங்களை மணம் செய்து கொள்வோம்' என்றனர்; அங்ஙனமே அமுதவல்லி

(அடுத்த பக்கம் பார்க்க)

சேர்க்கையில் முழுகி ஆழ்கின்ற இழிந்த தொழிலை உடைய அடியேனும் மேலாகக் கருதப்பட்ட ஞான அறிவை அடைவேனா!

கொலை செயும் காளி, சூலத்தை ஏந்தியவள், வயிரவி, நீல நிறத்தினள், துர்க்கை (காடுகாள்), குலிசம், அங்குசம் ஏந்தியுள்ள ஆயி, மகமாயி-

குமரி, வராகி, மோகி, பகவதி, ஆதி, சோதி, குணவதி, நஞ்சு உண்டவள், அழகி (அபிராமி),

பலி ஏற்கும் பிரம கபாலத்தினள், யோகத்தினள், பரம கல்யாணி, (அல்லது கபாலி, யோகியாம் பரமரைக் கலியாணம் செய்து கொண்டவள்), லோக பதிவிரதை, வேத ஞானி- ஆகிய பார்வதியின் புதல்வனே!

படையுடன் சூரன் இறக்க, எதிர்த்துச் சென்ற சூரனே! தீரனே! பழமுதிர்சோலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(ஞானபோதம் அடைவேனோ)

## 435

ஊழ்வினையின் காரணமாக வந்து, இப்பூமியின்மேல் (இப்பூமியிற் பிறந்து),

காலன் (எனை) நெருங்காத படிக்கு நீ மனம் பொருந்தி நான் நற்கதியை அடைய

நாரணனும் (திருமாலும்), பிரமனும் முன்பு கண்டறியாத ஞான நடனத்தை ஆடி வந்தருளுக.

நிறைந்த அமுதம் போல் இனிய யானை (மகள்) தேவ சேனையின் மணவாளனே!

ஆறு திருமுகங்களையும், பன்னிரண்டு கைகளையும் உடையவனே!

சூரர் கூட்டங்கள் இறக்கும்படி வென்ற ஒளிவேலனே!

சோலைமலை மேவி விளங்கும் பெருமாளே!

(ஞான நடமே புரிந்து வருவாயே)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

இந்திரனை அடைய இந்திரன் சொற்படி ஐராவதம் (வெள்ளையானை) அமுதவல்லியை வளர்த்தது. அதனால் அமுதவல்லிக்குத் தெய்வயானை எனப் பெயர் எய்தியது. "யானை போற்றியதனைய காரணத்தால் தெய்வயானை என்றொரு பெயர்" (கந்த புரா. 1-18-10)

‡ சோலையொடு தொடர்மொழி மாலிருங்குன்றம் - பரி பாடல் - 15.

## 436. வினை தீர

தானதன தான தந்த, தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான

சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு தடுமாறித்-
தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போக என்று தெருவூடே;

வாலவய தான கொங்கை மேருநுத லான திங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்-
வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழு மென்றன்
மாய**வினை** தீர அன்பு புரிவாயே ;

சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழு மிஞ்சி
சேணிலவு தாவ செம்பொன் மணிமேடை-
சேருமம ரேசர் தங்க ளூரிதென வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா;

ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று
ளாடல்புரி யீசர் தந்தை களிகூர-
ஆனமொழி யேப கர்ந்து **சோலைமலை** மேவு கந்த
ஆதிமுத லாக வந்த பெருமாளே. (4)

# 436

நல்லொழுக்க முள்ள தாய், தந்தை, மனைவி, வீடு, (அல்லது மனையான மாது - மனைவி), மக்கள், சேர்ந்துள்ள பொருள் இவைகளில் ஆசை கொண்டு, மனது தடுமாற்றம் அடைந்து-

கெடுதலைத் தருவதான மாயையால் இவ்வாழ்வே நிலையான தாம் என்று எண்ணி, தேடிச் சேகரித்த பொருள் எல்லாம் தொலைந்து போகவேண்டி, தெருவில்-

பாலிய வயதினராய்க், கொங்கை மேருமலை போலவும், நெற்றி பிறைச் சந்திரன் போலவும் கொண்டுள்ள மாதர்கள் மீதுள்ள காம மயக்கால் என் சிந்தை மெலிந்து போகாமல் - (நீ)

அழியா வாழ்க்கையைக் கொண்ட மயில் மீது வந்து, உனது பதங்கள் இரண்டையும் விரும்புகின்ற (விரும்பிப் போற்றும்) என்னுடைய மாய வினை அழிய (உனது) அன்பைப் பாலித்தருளுக;

சேல்மீன் நிறைந்த (நீர்) வளப்ப நாடு, அன்னங்கள் நிரம்பிய வயல்கள் சூழ்ந்துள்ள மதில்கள் ஆகாயத்தில் உள்ள நிலவைத் தாவ (எட்ட) செம்பொன் மணி மேடைகள்-

கூடினவாய்த் தேவேந்திரர் தம் ஊர் இது என்று சொல்லும்படி விளங்கும் தத்தம் ஊர் வாழ்வில் மகிழ்ச்சி கொண்ட, தைரியம் மிகுந்த, சூரனை வென்ற திறல்வீரனே;

ஆலவிடம் பொருந்திய கண்டத்தை உடையவர், அழகுடன் பெரிய சபையில் கூத்தாடும் ஈசர், தந்தையார் ஆகிய சிவபிரான் மகிழ்ச்சி மிகக் கொள்ள

அவருக்கு வேண்டிய உபதேச மொழியை உபதேசித்து சோலைமலையில் வீற்றிருக்கும் கந்தனே! ஆதிமுதல்வனாய் விளங்கும் பெருமாளே!

(மாயவினை தீர அன்பு தருவாயே)

## 437. பணிய

தானதன தான தந்த, தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான

வீரமத னூல்வி ளம்பு போகமட மாதர் தங்கள்
வேல்விழியி னான்ம யங்கி புவிமீதே-

வீசுகைமி னாலி தங்கள் பேசுமவர் வாயி தஞ்சொல்
வேலைசெய்து மால்மி குந்து விரகாகிப்;

பாரவச மான வங்க ணீடுபொருள் போன பின்பு
பாதகனு மாகி நின்று பதையாமல்-

*பாகம்வர சேர அன்பு நீபமலர் சூடு தண்டை
பாதமலர் நாடி யென்று **பணிவேனோ;**

† பூரணம தான திங்கள் சூடுமர னாரி டங்கொள்
பூவையரு ளால்வ ளர்ந்த முருகோனே-

‡பூவுல கெலாம டங்க வோரடியி னால ளந்த
§பூவைவடி வானு கந்த மருகோனே;

சூரர்கிளை யேத டிந்து பாரமுடி யேய ரிந்து
தூள்கள்பட நீறு கண்ட வடிவேலா-

சோலைதனி லேப றந்து லாவுமயி லேறி வந்து
**சோலைமலை** மேல மர்ந்த பெருமாளே. (5)

---

* பாகம் - பரிபாகம்; பரிபக்குவம்.

† பூரணமதான திங்கள் - என்றுந் தேயாது வளராது ஒரு தன்மையாயிருக்குந் திங்கள்; பாடல் 415-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ உலகு அளந்தது - பாடல் -268 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

§ பூவை வடிவான் - காயாம்பூ வண்ணனாகிய விட்டுணு.

# 437

வீரம் வாய்ந்த மன்மதனது நூலில் (காம சாத்திரத்தில்) சொல்லப்பட்ட போகத்தைத் தருகின்ற மடமாதர் தங்கள் (பொதுமகளிருடைய) வேல் போலும் கண்ணால் மயக்கம் அடைந்து, இப்பூமியின்மேல்-

கைவீசி இதமான (இன்பகரமான) பேச்சுக்களைப் பேசும், அப்பொதுமகளிர் வாயினின்றும் பிறக்கும் இன்பச்-சொற்களுக்கு இணங்கி (அவர்களிட்ட) வேலைகளைச் செய்து அவர்மேல் மோகம் மிகுந்து உற்சாகம் பூண்டு,

கனத்த தன்மை கொண்டு அங்கு மிக்கிருந்த பொருள் (யாவும்) செலவழிந்த பின்னர் நான் பாதகனாய் நின்று தவிக்காமல்,

பரிபக்குவ நிலை வருவதற்குக் கூடிய அன்பினால் கடப்பமலர் சூடியுள்ளதும் தண்டையணிந்ததுமான (உன்) பாத மலரை விரும்பித் தேடி நான் என்று பணிவேனோ!

என்றும் தேயாது வளராது ஒரு தன்மையாயிருக்கும் சந்திரனைச் சூடியுள்ள சிவபிரானது இடது பாகத்தைக் கொண்ட (நாகணவாய்ப் புள் போன்ற) பார்வதியின் திருவருட் சத்தியால் வளர்ந்த குழந்தையே!

மண்ணுலகம் எல்லாம் அடங்கும்படி ஓரடியால் அளந்த காயாம்பூ வண்ணனாகிய திருமால் மகிழும் மருகனே!

சூரர் கூட்டங்களை அழித்து அவர்தம் கனத்தமுடிகளை அரிந்து அவர்கள் பொடிபட்டுச் சாம்பலாகக் கண்ட கூரிய வேலனே!

சோலையிலே பறந்து உலவுகின்ற மயிலில் ஏறி வந்து **சோலை மலைமேல் வீற்றிருக்கும் பெருமாளே!**

(பாதமலர் நாடியென்று பணிவேனோ)

## 438. தொண்டனாக

தானதன தந்த தந்த தானதன தந்த தந்த
தானதன தந்த தந்த தனதான

*வாரண முகங்கி ழிந்து வீழவு மரும்ப லர்ந்து
†மால்வரை யசைந்த நங்கள் முடிசாய-
வாளகிரி யண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்து
‡மாதவ மறந்து றந்து நிலைபேரப்;

பூரண குடங்க டிந்து சீதகள பம்பு னைந்து
பூசலை விரும்பு கொங்கை மடவார்தம்-
போக சயனந் தவிர்ந்து னாடக பதம்ப ணிந்து
பூசனைசெய் **தொண்ட னென்ப** தொருநாளே;

ஆரண முழங்கு கின்ற ஆயிர மடந்த வங்கள்
ஆகுதி யிடங்கள் பொங்கு நிறைவீதி
ஆயிர முகங்கள் கொண்ட §நூபுர மிரங்கு கங்கை
யாரமர வந்த லம்பு துறைசேரத்;

தோரண மலங்கு துங்க கோபுர நெருங்கு கின்ற
சூழ்மணிபொன் மண்ட பங்கள் ரவிபோலச்-
சோதியின் மிகுந்த செம்பொன் மாளிகை விளங்குகின்ற
**சோலைமலை** வந்து கந்த பெருமாளே. (6)

---

* முதல் மூன்றடிகள் கொங்கை வர்ணனை.

சிவபிரான் யானையை அட்டது - பாட்டு -286 கீழ்க்குறிப்பு.

† ராவணன் கயிலையை அசைத்தது - பாட்டு - 188 பார்க்க.

மன்மதனை எரித்தது பாட்டு-288; எரித்த வரலாறு-பாட்டு-399 கீழ்க்குறிப்பு.

‡ மாதவம் - அறம் - துறந்து - "துறவினர் சோரச் சோர நகைத்து" பாட்டு - 158 கீழ்க்குறிப்பு.

§ நூபுரம் இரங்கு கங்கை - இது பழமுதிர்சோலை மலையில் உள்ள சிலம்பாறு: 'சிலம்பாறு பாயும் தென்திருமா லிருஞ் சோலையே' - பெரியாழ்வார் திருமொழி - 4-2-1.

## 438

யானையை ஒப்பிடலாம் என்றால் அதன் முகம் ஒரு-காலத்திற் சிவபிரானாற் கிழிபட்டு விழுந்தது, அரும்பை (தாமரை மொட்டை) ஒப்பிடலாம் என்றால் அது மலர்ந்து வாடுகின்றது, பெரிய மலையை (கயிலை ஒப்பிடலாம் என்றால் அது ராவணனால் அசைக்கப்பட்ட பொழுது அசைவு உற்றது, மன்மதனது கிரீடத்துக்கு ஒப்பிடலாம் என்றால் அந்த முடி அவனைச் சிவபிரான் எரித்த பொழுது சாய்ந்து வீழ்ந்தது,

சக்கிரவாள கிரிபோலத் தேவலோகம் அண்டகோளம் இவைதமை எட்டும்படி நிமிர்ந்தெழுந்து, மகா தவசிகளும் தரும நெறியைக் கைவிட்டு நிலைபேர (நிலைகுலைய)-

பூரணமாகத் திரண்ட குடத்தையும் வென்று, குளிர்ந்த சந்தனக் கலவையை அணிந்து, காமலீலைப் போரை விரும்பும் கொங்கைகளை உடைய மாதர்களின்-

காமபோகப் படுக்கையை விட்டு நீங்கி உனது கூத்துக்கு இயன்ற திருவடியைப் பணிந்து, அதைப் பூசிக்கும் தொண்டன் இவன் என்று கூறும்படியான ஒரு நாள் வருமா!

வேதம் முழங்குகின்ற ஆயிரக் கணக்கான மடங்களும், தவம், ஓமப்புகை இவை நடைபெறும் இடங்களும் விளங்குகின்ற நிறைவுள்ள வீதிகளும்-

பல கிளையாகப் பரந்து வரும் (நூபுரம் ஒலிக்கும் கங்கை) சிலம்பாறு - ஆர - அமர நிரம்பி ஒழுங்காய் - வந்து ததும்பி ஒலிக்கும் நீர்த் துறைகள் பொருந்த-

தோரணங்கள் அசையும் உயர்ந்த கோபுரம் நெருங்கி நின்று சூழ்ந்துள்ள அழகிய பொலிவுள்ள மண்டபங்களும் சூரியன் போல

சோதி மிகுந்த செவ்விய அழகிய மாளிகைகளும் விளங்குகின்ற சோலைமலை வந்து மகிழ்ந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(பூசனைசெய் தொண்டனென்ப தொருநாளே!)

## 439. அட்டாங்கயோகம்

தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன தந்ததான

ஆசை * நாலுசது ரக்கமல முற்றிெனொளி
வீசி யோடியிரு பக்கமொடு றச்செல்வளி
ஆவல் கூர† மண்மு தற்சலச பொற்சபையு
‡ மிந்துவாகை-

ஆர § மூணுபதி யிற்கொளநி றுத்திவெளி
யாரு சோதி ¶ நுறு பத்தினுட னெட்டுஇத
ழாகி $யேழுமள விட்டருண விற்பதியின்
விந்து நாத,

ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக
மோடு கூடியொரு மித் ** தமுத சித்தியொடு
மோது வேத†† சர சத்தியடி யுற்றதிரு
நந்தியூடே-

---

* நாலு சதுரக் கமலம் - மூலாதார கமலம்.

† மண்முதற் சலசம் - சுவாதிட்டான முதல் ஆக்கினை ஈறாக உள்ள ஐவகைக் கமலம்.

‡ இந்து வாகு - சந்திர காந்தி.

§ மூணுபதி - அக்கினியாதி மும்மண்டலம் (1) அக்கினி மண்டலம் - நாற்சதுரமாய் நடுவே மூன்று கோணமாய்ப் பிருதிவியும் அப்புவுங் கூடின இடத்தே நாலிதழுடைய புட்பமாயிருப்பது. (2) ஆதித்த மண்டலம் - இருதய கமல அறு கோணம் எட்டிதழுடைய புட்பமாய் வாழைப்பூப் போன்று கீழ்நோக்கி இருப்பது. (3) சந்திரமண்டலம் - கோடி சந்திராதித்தர் உதயமானாற்போலச் சிரசு நடுவே 'ஒவ்' என்ற அக்கரத்தை முன்னிட்டுப் பேதித்து நிற்கும். இதன் அமிர்த கலை அக்கினி மண்டலத்தை மேனோக்கிச் சோதியாயிருக்கும். இதனடுவே பராசத்தி சுந்தராநந்த வாலையாக எழுந்தருளியிருப்பாள்.

(வேதாந்த தத்துவக் கட்டளை)

¶ நூறு பத்தினுடன் எட்டு இதழ் - 1008 இதழுள்ள குரு கமலம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

## 439

திக்குகள் நான்கு (பக்கங்கள் நான்கு) கொண்ட சதுரமான கமலத்தில் (மூலாதார நான்கிதழ்க் கமலத்திற்) பொருந்தி, இனிய (நல்ல) ஒளி வீசிட ஓடி (இடம் - வலம்) இரண்டு பக்கங்களிலும் பொருந்தச் செய்கின்ற (இடைகலை - பிங்கலை என்னும் இரு நாடிகளின் வழியாக ஓடுகின்ற) வளி - காற்று (பிராணவாயுவை) - விருப்பம் மிக்கெழ, மண் முதற் சலசம்- (பிருதிவியைத் திருவாரூரை ஆதாரத் தலமாகக்கொண்ட மூலாதாரத்துக்கு அடுத்த) சுவாதிட்டான முதல் ஆக்கினை ஈறாக உள்ள ஐவகைக் கமலங்களிலும் ஓடவைத்து, பொற்சபையும் (கனக சபையும்) சந்திர காந்தியும்-

நிரம்பி விளங்க, (அக்கினியாதி) மூன்று மண்டலங்களிலும் பொருந்த நிறுத்தி, பின்பு அங்கே வெளிப்பட்டுப் பிரகாசிக்கும் சோதியாம் ஆயிரத்தெட்டு இதழோடும் கூடியதான குரு கமலத்திற் செல்லச் செலுத்தி - (ஏழும் அளவிட்டு)- ஆறு ஆதாரங்களுடன் பிரமரந்திரம் கூடிய ஏழு இடங்களையும் அளவிட்டறிந்து (கண்டறிந்து), சிவந்த ஒளியுடன் கூடிய துவாதசாந்தத் தானத்தில் விந்து நாத (சிவதத்துவ நாத)-

ஓசை மிகுந்துள்ள ஒப்பற்ற சத்தம் (அதிகப் படிக மோடு) அதிகமான பளிங்கன்ன காட்சியுடன் கூடியதாய், ஒருமித்து (ஒன்று சேர்ந்து) அமுத சித்தியொடும் (மதிமண்டலத்தினின்றும் பெருகிப் பாயும் கலா அமிர்தப் பேறுடன்) சொல்லப்படும் வேத (சர சத்தி அடியுற்ற) வாசி சத்திக்கு ஆதாரமாகவுள்ள ஸ்ரீ நந்தி ஒளிக்குள்ளே-

---

$ ஏழும் அளவிட்டு - ஆறு ஆதாரங்களுடன் பிரமரந்திரமும், பிரமரந்திரம் என்பது - உச்சித் துவாரம்; இதற்கு உரிய தலம் - கயிலை. அருணவிற்பதி - துவாதசாந்தத் தானம் - உச்சிக்குமேல் 12 அங்குலத்தில் உள்ளதாகக் கருதப்படும் போகத் தானம்; இதற்குரிய தலம் - மதுரை, பாட்டு 220 பார்க்க.

** அமுத சித்தி - மதி மண்டலத்தினின்றும் பெருகிப் பாயும் கலா அமிர்தப் பேறு.

†† சரசத்தி அடி உற்ற திரு நந்தி - வாசி சத்திக்கு ஆதாரமாக உள்ள ஸ்ரீ நந்தி ஒளி.

ஊமை யேனையொளிர் வித்துனது முத்திபெற
*மூல வாசல்வெளி விட்டுனது ரத்திலொளிர்
†யோக பேதவகை யெட்டுமிதி லொட்டும்வகை
யின்றுதாராய்;

‡வாசி வாணிகனெ னக்குதிரை விற்றுமகிழ்
வாதவூரனடி மைக்கொளுக்ரு பைக்கடவுள்
§மாழை ரூபன்முக ¶மத்திகைவி தத்தருண
செங்கையாளி-

---

* மூலவாசல் - பிரமரந்திரம்.

† யோக பேதவகை எட்டு. அட்டாங்க யோகம். அவை தாம் இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தி யாகாராம், தாரணை, தியானம், சமாதி.

"இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணாயாமம் பிரத்தி யாகாரம்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்கம் ஆவது மாமே" திருமந்திரம்-552.

யோகத்திற்கு உரிய அட்டாங்கங்களுள்:

**இயமம்:** பொய், கொலை, திருடு, காமம், பொருளாசை - இவற்றினீங்கிப் புலனடக்கி இருத்தல்.

**நியமம்:** தவம், தூய்மை தத்துவம் ஓர்தல், மனமுவந்திருத்தல், தெய்வ வழிபாடு என்ற விதி முறைகளில் வழுவா தொழுகல்.

**ஆதனம்:** யோக ஆசனங்கள் - பதுமாசனம், சுகாசனம் முதலியன.

**பிராணாயாமம்:** இரேசகம், பூரகம், கும்பகம் என்று மூவகையாயச் சுவாசத்தை அடக்கியாளும் யோக முறை.

**பிரத்தியாகாரம்:** இந்திரியங்களை விடயங்களிலிருந்து திருப்புகை. பிரபஞ்ச உபாதியைச் சிவச் சொரூபமாகப் பார்த்தல்.

**தாரணை:** மனத்தை ஒருவழி நிறுத்துகை. முழங்கால், குதம், இதயம், கண்டம், கபாலமாகிய தானங்களில் பிரமன் முதலிய பஞ்ச மூர்த்திகளையும் பாவித்தல்.

**தியானம்;** ஐம்புலத்தையும் அந்தக்கரணத்தையும் அடக்கிச் சிவயோகஞ் சேர்தல்.

**சமாதி:** மனத்தைப் பரம்பொருளோடு ஐக்கியப் படுத்தி நிறுத்துகை.

(அடுத்த பக்கம் பார்க்க)

ஊமையாகிய என்னை விளங்க வைத்து (ஸ்ரீ நந்தி ஒளியை ஊமையேனுக்குத் தெரிசிப்பித்து), நீ அருளும் முத்தி நிலையைப் பெற, பிரமரந்திரம் எனப்படும் மூலவாசல் வெளிவிட்டு விளங்க, உனது அருளாற்றலால், விளங்குகின்ற யோக விதங்கள் எட்டும் இதில் பொருந்தும் வகைமையை இன்று தந்தருளுக.

குதிரை வியாபாரி என வந்து குதிரைகளை விற்று மகிழ்ச்சி கொண்ட திருவாதவூரராம் மாணிக்க வாசகரை அடிமை கொண்ட கிருபாகரமூர்த்தி, பொன் உருவத்தினன், நல்ல நிலை (வடிவு) உடன் இருந்த குதிரைச் சம்மட்டி (சவுக்கு) வகைகளைக் கொண்ட செவ்விய திருக்கையைக் கொண்ட-வனாம் சிவனுடைய-

---

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

‡ பாண்டியனிடத்தில் மந்திரியாக இருந்த திருவாதவூரர் (மாணிக்க வாசகர்) குதிரைகள் வாங்கிவரப், பெரும் பொருள்களை எடுத்துக்கொண்டு போய்த் திருப்பெருந்துறை என்னும் தலத்தில் சிவனே குருமூர்த்தமாக இருக்கக் கண்டு அவரால் ஆட்கொளப்பட்டு, திருவடி தீக்கை பெற்று, கொண்டு வந்த பொருள்களை எல்லாம் சிவன் பணிக்கே செலவிட்டனர். இதை அறிந்த பாண்டியன் இவரை வரவழைத்துக் குதிரைகள் எங்கே எனக்கேட்க, இறைவன் தமக்கு அறிவித்தபடி, ஆவணி மூலத்தன்று வருமெனச் சொன்னார். இறைவனும் குதிரைச் சேவகனாகி நரிகளைக் குதிரைகளாக்கி அன்று கொண்டு வந்து கொடுக்கப் பாண்டியன் மகிழ்ந்து பொன்னாடை தரப்பெற்றார். அக் குதிரைகள் அன்றிரவே நரிகளாய் இருந்த குதிரைகளுக்கும் ஊறு செய்து சென்றன. பாண்டியன் மாணிக்கவாசகர் மீது கோபித்து அவரைத் துன்புறுத்த, இறைவன் அருளால் வைகையாற்றில் வெள்ளம் வரவும், வெள்ளத்துக்கு அணைபோடும் ஆளாகச் சொக்கநாதர் வந்தி என்னும் பிட்டு வாணிச்சிக்குக் கூலியாள் ஆகி, அவள் தந்த பிட்டை உண்டு மண்சுமந்து, வேலை சரிவரச் செய்யவில்லையென்று பாண்டியன் கையாற் பிரம்படியும் பட்டனர். பின்பு இறைவனால் மணிவாசகரின் பெருமையை அரசன் உணர்ந்து அவரைப் போற்றினன். இதன் விரிவைத் திருவாதவூரர் புராணத்திலும் திருவிளையாடல் புராணத்திலும் காணலாகும். திருப்புகழ்ப் பாடல்கள் 4, 653, 964 - பார்க்கவும்.

§ மாழைரூபன் - சிவன் - "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி" - பொன் வண்ணத் தந்தாதி 1. 'பொன்னார் மேனியனே" - சுந்தரர். 24 - 1" பொன்னொளி கொள் மேனி" சம்பந்தர் I -71 -6.

¶ மத்திகை -குதிரைச் சம்மட்டி (சவுக்கு)

*வாகு பாதியுறை சத்திகவு ரிக்குதலை
வாயின் மாதுதுதிர் பச்சைவடி விச்சிவை †யென்
மாசு சேரெழுபி றப்பையும றுத்தவுமை தந்தவாழ்வே;

காசி ராமெசுரம் ‡ரத்நகிரி சர்ப்பகிரி
ஆருர் வேலுர் §தேவுர் கச்சிமது ரைப்¶பறியல்
காவை $மூதூரரு ணக்கிரிதி ருத்தணியல்
செந்தில்நாகை-

காழி வேளூர்பழ நிக்கிரி ** குறுக்கைதிரு
†† நாவ லூர்‡‡ திருவெ ணெய்ப்பதியின் மிக்கதிகழ்
காதல்சோலை வளர்வெற்பி லுறை முத்தர்புகழ்
தம்பிரானே. (7)

---

* வாகுபாதி உறைசத்தி வரலாறு: பாட்டு 301-பார்க்க.

† இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும்.

‡ ரத்னகிரி - திருவாட்போக்கி - திருப்புகழ் பாடல் 347 - 349 பார்க்க.

§ தேவூர் - என்பது நாகப்பட்டினத்துக்கு மேற்கே 7 மைலில் உள்ள கீழ்வேளூர் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கு 2 மைல். சம்பந்தர் தேவாரம் பெற்ற தலம்.

¶ பறியல் - என்பது திருப்பறியலூர் - மாயூரத்துக்கு $4^1/_2$ மைல் தூரத்திலுள்ள விளநகரிலிருந்து 3 மைல். பரசலூர் என வழங்குகின்றது. சம்பந்தர் தேவாரம் பெற்ற தலம். அட்டவீரத் தலங்களில் ஒன்று. தக்கன் யாகத்தை அழித்த தலம்.

$ மூதூர் - பழம்பதி எனக்கொண்டால் (அறந்தாங்கி புகைவண்டி நிலையத்திற்கு 30 மைல் தூரத்தில் உள்ள) திருப்புனவாசலைக் குறிக்கும். திருப்புனவாசல் தேவாரம் பெற்ற தலம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

அழகிய (இடது) பாதியில் உறைகின்ற சத்தி, கௌரி, மழலைச் சொல் பேசும் மாது, பவள நிறமும் பச்சை நிறமும் கொண்ட வடிவினள், சிவை, எனது குற்றம் நிறைந்த ஏழு பிறப்பையும் அறுத்த உமாதேவி ஈன்ற செல்வமே!

காசி, ராமேசுரம், ரத்னகிரி (திருவாட்போக்கி), சர்ப்பகிரி (திருச்செங்கோடு), திருவாரூர், வேலூர், தேவூர், கச்சி (காஞ்சீபுரம்), மதுரை, திருப்பறியல், காவை (திருவானைக்கா), மூதூர் (பழம்பதியாகிய) அருணைக்கிரி (அருணாசலம் திருவண்ணாமலை), திருத்தணிகை, திருச்செந்தூர், நாகப்பட்டினம்-

சீர்காழி, வேளூர், பழநிமலை, திருக்குறுக்கை, திருநாவலூர், திருவெண்ணெய்நல்லூர் என்னும் தலங்களிலும், விசேடமாக விளங்குவதும் உனக்குப் பிரியமான துமான சோலை வளர் மலையிலும் (சோலை மலையிலும்) உறைகின்ற, (சீவன்முத்தர்கள்) வீடுபேறடைந்தோர் புகழ்கின்ற, தம்பிரானே!

(யோக பேதவகை - ஒட்டும் வகை யின்று தாராய்)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

** **குறுக்கை** - இதுவும் அட்டவீரத் தலங்களில் ஒன்று. காமனை எரித்த தலம்; மாயூரத்துக்குப் பத்து மைல் தூரத்தில் உள்ளது. தேவாரம் பெற்ற தலம்.

†† **திருநாவலூர்** - சுந்தரமூர்த்தி நாயனார் திரு அவதாரம் செய்த தலம். விழுப்புரம் திரிசிராப்பள்ளி புகைவண்டி வழியில் திருவெண்ணெய் நல்லூர் ரோடு நிலையத்திலிருந்து 9 மைல்.

‡‡ **திருவெண்ணெய்நல்லூர்** - சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆட்கொளப்பட்ட தலம். திருவெண்ணெய்நல்லூர் ரோடு நிலையத்திலிருந்து 4 மைல்.

**இதன் முற்பாதியின் சுருக்கப் பொழிப்பு.**

இடைகலை பிங்கலை என்னும் இரு நாடி மார்க்கமாக ஓடிக் கழியும் பிராண வாயுவை மூலாதாரத்தி லூன்றி, அங்கிருந்து சுழுமுனை நாடி மார்க்கமாக மற்றை ஆதார கமலங்களிலும் ஒட்டி நிறுத்தி, அப்பால் 1008-இதழோடுங் கூடிய குரு கமலத்திற் செலுத்தி, அங்கு நாத ஓசையும், மதிக்கலாமிர்தமும் பொங்கியெழ, அவற்றோடு கூடி ஒருமிக்கச் செய்து, சரசத்திக்கு ஆதாரமாகவுற்ற ஸ்ரீ நந்தியொளியையும் ஊமையேனுக்குத் தெரிசிப்பித்து, உனது முத்திபெற மூலவாசல் வெளிவிட்டு, இங்ஙனஞ் செய்வதில் அட்டாங்க யோகமும் பொருந்தும் வகைமையை இன்று தந்தருளல் வேண்டும்.

## 440. ஞானம் பெற

தனனாதன தானன தத்தன
தனனாதன தானன தத்தன
தனனாதன தானன தத்தன தனதான

கருவாகியெ தாயுத ரத்தினி
லுருவாகவெ கால்கையு றுப்பொடு
கனிவாய்விழி நாசியு டற்செவி * நரைமாதர்-

கையிலேவிழ வேகிய ணைத்துயி
லெனவேமிக மீதுது யிற்றிய
கருதாய்முலை யாரமு தத்தினி லினிதாகித்;

தருதாரமு மாகிய சுற்றமு
நலவாழ்வுநி லாதபொ ருட்பதி
சதமாமிது தானென வுற்றுனை நினையாத-

சதுராயுன தாளிணை யைத்தொழ
அறியாதநிர் மூடனை நிற்புகழ்
தனையோதிமெய்ஞ் ஞானமு றச்செய்வ தொருநாளே;

செருவாயெதி ராமசு ரத்திரள்
தலைமூளைக ளோடுநி ணத்தசை
திமிர்தாதுள பூதக ணத்தொடு வருபேய்கள்-

† திகுதாவுண வாயுதி ரத்தினை
பலவாய்நரி யோடுகு டித்திட
சிலகூகைகள் தாமுந டித்திட அடுதீரா;

---

* நரைமாதர் - மருத்துவச்சிகள்.

† திகு திகெனல், விரைவுக் குறிப்பு.

# 440

கருவாய் அமைந்து தாயின் வயிற்றிலே உருவம் பெற்று, கால், கை, (என்னும் உறுப்புக்களுடன்) இனிய வாய், கண், மூக்கு, உடல், காது (என்னும் உறுப்புக்களோடும்) மருத்து வச்சியின்

கையில் விழும்படி வந்து, படுக்கையில் தூங்கு என்று மிகவும் (சீராட்டிப்) படுக்கைமேல் தூங்கச்செய்த, தான் கருவாய்க் கிடந்த, தாயின் முலையில் நிறைந்துள்ள அமுதத்தினில் (பாலில்) பிரியனாகி - (வளர்ந்து)

(தனக்கென அமைந்த) மனைவி, உண்டாயுள்ள சுற்றத்தார்களும், நல்வாழ்வும், நிலைத்து நிற்காத பொருளும், ஊரும் (இவை யாவும்) நிலையாம் என்று கருதி, உன்னை நினையாத

சாமர்த்தியம் உடையவனாய், உன் திருவடி இரண்டையும் தொழ அறியாத முழு மூடனை உனது புகழை ஓதி, மெய்ஞ் ஞானம் பெறச் செய்யும் நாளும் ஒன்று உண்டோ!

செருவாய் (போரிடையே) எதிராம் (எதிர்த்து வந்த) அசுரத்திரள் ( அசுரர் கூட்டங்களின்) தலை, மூளை, கொழுப்பு, மாமிசம், இவைகளை (திமிர் - தாது - உள்ள) தேகக் கொழுப்பும் சத்த தாதுக்களும் உள்ள பூதக் கூட்டங்களுடன் வந்த பேய்கள்-

திகுதா (விரைவுடன்), உணவாக உண்டு, ரத்தத்தை நிரம்ப நரியுடன் குடிக்க, சில கோட்டான்களும் கூட நடித்திடக் கொன்ற வீரனே!

அருமாமறை யோர்கள்து தித்திடு
புகர்வாரண மாதுத னைத்திகழ்
அளிசேர்குழல் மேவுகு றத்தியை அணைவோனே-
அழகானபொன் மேடையு யர்த்திடு
முகில்தாவிய **சோலை**வி யப்புறு
* அலையா**மலை** மேவிய பத்தர்கள் பெருமாளே. (8)

## 441. திருவடி பெற

தானதத்த தான தனாதனா தன
தானதத்த தான தனாதனா தன
தானதத்த தான தனாதனா தன தனதானா

சீர்சிறக்கு மேனி பசேல் பசே லென
நூபுரத்தி னோசை கலீர் கலீ ரென
சேரவிட்ட தாள்கள் சிவேல் சிவே லென வருமானார்-

சேகரத்தின் †வாலை சிலோர் சிலோர் களு
நூறுலக்ஷ கோடி மயால் மயால் கொடு
தேடியொக்க வாடி யையோ வையோ வென மடமாதர்;

மார்படைத்த கோடு பளீர் பளீ ரென
‡ஏமலித்தெ னாவி பகீர் பகீ ரென
மாமசக்கி லாசை யுளோ முளோ மென நினைவோடி-

வாடை பற்று வேளை யடா வடா வென
நீமயக்க மேது சொலாய் சொலாயென
வாரம்வைத்த **பாத மிதோ இதோ என அருள்வாயே;**

---

* அலை - மிகுதி.

† வாலை - கட்டிளமைப்பருவம்.

‡ ஏமல் - மனக்கலக்கம். ஏமார்தல் - கலங்குதல்.

அரிய சிறந்த மறையவர்கள் துதிக்கின்ற அழகுள்ள யானை வளர்த்த மாது தேவசேனையையும் விளங்கும் வண்டுகள் சேரும் கூந்தலை உடைய குறத்தி வள்ளியையும் அணைபவனே!

அழகான பொலிவுள்ள மேடைகளும், உயரத்திலுள்ள மேகத்தை அளாவும் **சோலைகளும்** அற்புதத்தைக் கொண்டு நிறைந்து மிக்க **மலையில்** வீற்றிருக்கும் பெருமாளே! பத்தர்கள் பெருமாளே!

(மெய்ஞ்ஞான முறச் செய்வ தொருநாளே)

## 441

அழகு விளங்கும் உடல் பசிய குளிர்ந்த நிறத்துடன் விளங்க, காற்சிலம்பின் ஓசை கலீர் கலீர் என ஒலிக்க, இணைந்து செல்லும் பாதங்கள் சிவேல் சிவேல் எனத் திகழ வருகின்ற மாதர்களின்

கூட்டங்களுக்குக் (கொடுப்பதற்காக) கட்டிளமைப் பருவத்துச் சில சில மாந்தர்கள், நூறுலட்சகோடி மிகப் பலத்த பெருமயலொடு (பெருத்த மோகத்தொடு) தேடின பொருள்கள் அவ்வளவையும் வாட்டமுற்று ஐயோ ஐயோ என்னும் படியாக, (இழக்கச் செய்கின்ற) மட மாதர்களின்-

மார்பிடம் எல்லாம் பரந்துள்ள மலையன்ன கொங்கை பளீர் பளீர் என்று ஒளிவீச, (அதைக் கண்டு) மனக் கலக்க முற்று என் ஆவி பகீர் பகீர் எனப் பிரமை அடைய, அம்மாதர்களின் பெரிய வசீகரச் செயல்களில் (மயங்கச் செய்யும் செயல்களில்) ஆசை உண்டு, உண்டு என்று நினைவானது ஓடி, அந்தக் (காமப் பித்த)

வாடை (காற்று அல்லது வாசனை) என்னைப் பற்றுகின்ற (பிடிக்கின்ற) சமயத்தில் "அடா அடா" என்று என்னைக் கூவி அழைத்து உனக்கு என்ன மயக்கம் இது 'சொல்லுக, சொல்லுக' என வற்புறுத்தி, (நீ) அன்பு வைத்த திருவடி 'இதோ, இதோ' என்று கூறித் தந்து அருள்புரிவாயாக.

பாரதத்தை மேரு * வெளீ வெளீ திகழ்
கோடொ டித்த நாளில் † வரைஇ வரைஇ பவர்
‡ பானி றக்க ணேசர் § குவா குவா கனர்
இளையோனே-

பாடல்முக்ய ¶ மாது தமீழ் தமீ ழிறை
$ மாமுநிக்கு காதி லுணார் வுணார் விடு
பாசமற்ற வேத குரு குரு பர குமரேசா;

போர்மிகுத்த சூரன் விடோம் விடோ மென
நேரெதிர்க்க வேலை படீர் படீரென
போயறுத்த போது குபீர் குபீ ரென வெகுசோரி-

பூமி ** யுக்க வீசு குகா குகா திகழ்
சோலை வெற்பின்மேவு தெய்வா தெய்வானை†† தோள்
பூணி யிச்சை யாறு புயா புயா றுள பெருமாளே (9)

---

* வெளிஇ திகழ்கோடு - வெண்கோடு எனவும் கொள்ளலாம். † பாரதத்தை மேருவில் கோடொடித்து எழுதியது.

பொரி, அவல் பழம் முதலியன நிவேதித்து விநாயகரை வணங்கி வியாச முநிவர் கூறிவர மேருமலையே ஏடாகவும் தமது தந்தமே எழுத்தாணியாகவும் கொண்டு விநாயகர் பாரதத்தை எழுதினர் என்ப.

" நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென் று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபார தஞ்சொன்ன நாள்
ஏடாக மாமேரு வெற்பாக வங்கூ ரெழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ"

- வில்லிபாரதம்.

- திருப்புகழ் விநா(க), *88, 244, 960, 1019, 1098* பார்க்கவும்.

‡ பானு நிறம் - சூரியனைப்போற் சிவந்த நிறம். பவள நிறத்தினர் - திருப்புகழ் *960, 1019, 1117.*

"முக்கட் செம்மேனி எங்களிறே"

மூத்த - திருவிரட்டை மணிமாலை - *18.*

§ குவாகுவாகனர் - கு - சிறுமையைக் காட்டும். "குக்குடில்" என்பதிற் போல. குவ(வு) - ஆகுவாகனர் என் றுமாம்; குவவு - திரட்சி.

குகாதிகழ் சோலை வெற்பு - குகைகள் விளங்கும் சோலை மலை எனலுமாம்.

¶ மாது - அழகு - 'மாதிலங்கிய மங்கையர்' சம்பந்தர் I *137-6*; ' மாது குலாய மென்னோக்கி' திருக்கோவை *316.*

(அடுத்த பக்கம் பார்க்க)

பாரதத்தை மேருமலையின் வெளிப்புறத்தில் விளங்கும்படி, தமது தந்தத்தையே ஒடித்து அந்த நாளில் மலையில் வரைந்தவரும், பானுவின் நிறம் (சூரியனைப் போன்ற சிவந்த நிறத்தைக்) கொண்டவரும், கணேசரும், (கு -ஆகுவாகனர்) - (சிறுமையைக் காட்டும்) பெருச்சாளி வாகனத்தவரும் - ஆகிய விநாயகருக்கு இளையவனே!

பாடல்கள் சிறப்புடனும் அழகுடனும் உள்ள தமிழைத் தமிழ்க் கடவுளாய் நின்று பெரியராம் அகத்திய முநிவருக்குக் காதில் நன்கு உபதேசம் செய்த குமரேசனே!

போரில் மிக்கவனான சூரன் விடுவதில்லை விடுவதில்லை என்று நேராக வந்து எதிர்க்க வேலாயுதம் படீர் படீர் என்னும் ஒலியுடன் அல்லது வேலை - கடல் படீர் படீரென்னும்படி அவ்வசுரர்களைப் போயறுத்தபோது குபீர் குபீர் என நிரம்ப ரத்தம்-

பூமியிற் சிந்த (அவ்வேலை) வீசின குகனே! குகனே! விளங்கும் **சோலைமலையில்** வீற்றிருக்கும் தேவே! தெய்வ யானையின் தோளைப் பூண்ட (அணைந்த) அன்புகொண்ட புயம் ஆறு புயம் ஆறு - (பன்னிரு புயங்களைக்) கொண்ட பெருமாளே!

(வாரம் வைத்த பாதம் இதோ இதோ என அருள்வாயே)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

$ முருகவேள் அகத்தியருக்குத் தமிழ் போதித்தது:

அகத்தியர் சிவபிரானை வணங்கி "யாரு மகிழ்ச்சி திளைக்கும் செந்தமிழ் என்னும் திருத்தகு மொழி தந்தருள்" என வேண்ட அவர் தணிகை முருகனை அண்மிப் பரவுக என்றார். அங்ஙனமே, அகத்தியர் தணிகையில் முருகவேளைப் பூசித்துத் தமிழ் ஞானம் பெற்றனர் என்ப.

"அறுமுகக் கடவுள் அன்னான் தன்னை நற்றமிழின் பாடை தனக்கு முன் குரவனாக்கி " - என்பது தணிகைப் புராணம்

- திருப்புகழ் 49 - பார்க்க.

** உக்க - சிந்த.

†† தொள்- தோள்.

## 442. திருவடி பெற

தனன தான தான தத்த
தனன தான தான தத்த
தனன தான தான தத்த தனதான

துடிகொ ணோய்க ளோடு வற்றி
தருண மேனி கோழை துற்ற
இரும லீளை வாத பித்த மணுகாமல்-

துறைக ளோடு வாழ்வு விட்டு
உலக நூல்கள் வாதை யற்று
சுகமு ளாநு பூதி பெற்று மகிழாமே;

உடல்செய் கோர பாழ்வ யிற்றை
நிதமு மூணி னாலு யர்த்தி
யுயிரி னீடு யோக சித்தி பெறலாமே-

உருவி லாத பாழில் வெட்ட
வெளியி லாடு நாத நிர்த்த
உனது ஞான பாத பத்ம முறுவேனோ;

கடிது லாவு வாயு பெற்ற
மகனும் வாலி சேயு மிக்க
மலைகள் போட ஆழி கட்டி யிகலூர்போய்க்

களமு றானை தேர்நு றுக்கி
தலைக ளாறு நாலு பெற்ற
அவனை வாளி யால டத்தன் மருகோனே;

## 442

துடிக்கச் செய்கின்ற நோய்களால் (உடல்) வற்றி இளமையைக் காட்டும் மேனியிற் கோழை நெருக்க, இருமல், ஈளை (காச இழுப்பு), வாதம், பித்தம் (எனப்படும் நோய்கள் என்னை) அணுகாதபடி-

இல்லறம், துறவறம் என்னும் கூறுகளை உடைய (வழிகளைக் கொண்ட) (இவ்) வாழ்வை விட்டு, உலக நூல்களைக் கற்க வேண்டிய வேதனை நீங்கிச் சுகத்தைக் கொண்ட அநுபூதியைப் பெற்று (நான்) மகிழாமல்-

உடலை வளர்க்கும் கோரமான பாழான வயிற்றைத் தினந்தோறும் உணவினால் வளரச் செய்து, உயிர் (ஆயுள்) வளரும் படியான யோக சித்தியைப் பெறலாமோ (பெறுதல் நன்றோ!) நன்றன்று என்றபடி;

உருவம் கடந்த பாழ்வெளியில், வெட்ட வெளியிலே ஆடுகின்ற ஒலியுடன் கூடிய நடனனே! (கூத்தனே!) உனது ஞான திருவடிக் கமலங்களை அடைவேனோ! (அல்லது) வெளியில் ஆடுகின்ற நாதனே! உனது நிர்த்த, ஞான பாத பத்மம் உறுவேனோ! உனது கூத்தாடும் ஞான மயமான திருவடித் தாமரையை அடைவேனோ!

வேகத்தில் உலாவ வல்ல வாயு பெற்ற மகனாகிய அநுமனும், வாலியின் பிள்ளை அங்கதனும், நிரம்ப மலைகளைப் போட்டுச் சமுத்திரத்தில் அணை கட்டிப் பகைவனுடைய ஊருக்குப் போய்ப்

போர்க்களத்தில் இருந்த ஆனைகளையும் தேர்களையும் தூளாக்கித், தலைகள் (ஆறுநாலு) பத்து கொண்ட அவனை (ராவணனை) அம்பினால் அடு அத்தன் (அம்பினாற் கொன்ற அண்ணல் திருமாலின்) மருகனே!

முடுகு வீர * சூர பத்மர்
தலையின் மூளை நீறு பட்டு
முடிவ தாக ஆடு நிர்த்த † மயில்வீரா-

முநிவர் தேவர் ஞான முற்ற
புநித சோலை மாம லைக்குள்
முருக வேல த்யாகர் பெற்ற பெருமாளே. (10)

## 443. பெண் மாயை அற

தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன தனதான

பாசத் தால்விலை கட்டிய பொட்டிகள்
நேசித் தாரவர் சித்தம ருட்டிகள்
பாரப் பூதர மொத்தத னத்திகள் மிகவேதான்-

பாவத் தால்மெயெ டுத்திடு பட்டிகள்
சீவிக் கோதிமு டித்தள கத்திகள்
பார்வைக் கேமயலைத்தரு துட்டிக ளொழியாத;

மாசுற் றேறிய ‡ பித்தளை யிற்பணி
நீறிட் டேயொளி பற்றவி ளக்கிகள்
மார்பிற் காதினி லிட்ட பிலுக்கிகள் அதிமோக-

---

* சூரபத்மர் - சூரன், பதுமன், சிங்கமுகன், தாரகன் என்னும் நான்கு பூதர்கள் - கருடனாதிய ஊர்திகளுக்கு இடையூறு செய்தமையால் முருகவேளால் அசுரர்களாமாறு சபிக்கப் பெற்றனர். சாபம் நீங்கப் பெறும்போது அவரவர்கள் விரும்பியவாறு சிங்கமுகன் துர்க்கைக்குச் சிங்கவாகனமாயினன், தாரகன் ஐயனாருக்கு யானை வாகனமாயினன், சூரன் கந்த வேளுக்கு மயில்வாகனமானான், பதுமன் அவருக்குச் சேவற் கொடியானான்.

" இருவிர் ஒருவடி வாகி நிருதரிற் சூர பத்மாவென் (று)
றல்கூர் பெயர்தரித் திமையோர்க் குறுபகையா யுடற்றிடுநாள்

(அடுத்த பக்கம் பார்க்க)

முடுகிவந்த சூரபத்மரின் (சூரனுடைய) தலையில் உள்ள மூளையானது தூளாகி முடிவுபெற ஆடின நடனமயில் வீரனே!

முநிவர்களும், தேவர்களும் ஞானம் அடைந்த பரிசுத்தத் தலமான சோலை மாமலைக்குள் (வீற்றிருக்கும்) வேலனே! தியாக மூர்த்தியாம் (கொடையிற் சிறந்த மூர்த்தியாம்) சிவபிரான் ஈன்ற பெருமாளே!

(உனது ஞான பாதபத்மம் உறுவேனோ)

## 443

(தம்மிடம் வருபவர்கள் தம்மீது வைத்த) பாசத்தால் (அவர்தம் காமப்) பற்றை உணர்ந்து விலை பேசி முடிவு செய்யும் வேசிகள்; தம்மை நேசித்தவர்களுடைய சித்தத்தை மருட்டுபவர்கள்; பாரமான மலையை ஒத்த கொங்கைகள் உடையவர்கள், மிகவுமே,

பாவ வினைக் காரணத்தால் தேகம் எடுத்த வியபிசாரிகள். சீவி, ஆய்ந்து, முடித்தகூந்தலை உடையவர்கள், பார்வையாலேயே மோகத்தை எழுப்பும் துட்டர்கள், நீங்காத-

அழுக்குப்பற்றி ஏறிய பித்தளை ஆபரணங்களைச் சாம்ப லிட்டுப் பளபளப்பு உறும்படி விளக்கிவைத்துள்ளவர்கள், மார்பிலும், காதிலும், (அந்த ஆபரணங்களை) அணிந்து தளுக்கு செய்பவர்கள், அதிக ஆசையை ஊட்டுவிக்கும்-

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

மதாணையி லுமக்கொழுகு தாழ்பசுஞ் சிறகர் மாயூரம்
சேவலாம் வடிவுண் டாமென முறுவல் சிறிதுகூர்ந் துரைத்தனுப் பினனால்"

- உபதேச (ஞானவரோதயர்) - செய்யுள் 84,

† சூரனைச் சங்கரித்தவுடன் முருகவேள் ஆடிய கூத்து -'துடி' எனப்படும். 'சூர்த்திறங் கடந்தோன் ஆடிய துடியும், ' சிலப்பதி 6-51.

‡ பித்தளை ஆபரணங்களைச் சாம்பலிட்டு விளக்கி அணிதல். அக்காலத்திய வழக்கத்தை விளக்கும்.

" முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை ஓலை விளக்கியிட்டுப்
பட்டப் பகலின் வெளிமயக்கே செயும் பாவையர் மேல்
இட்டத்தை நீதவிர்ப்பா யிறைவா கச்சியே கம்பனே"

- பட்டினத் - திருஏகம்பமாலை - 29,

வாய்வித் தாரமு ரைக்கும பத்திகள்
நேசித் தாரையு மெத்திவ டிப்பவர்
**மாயைக் கேமனம்** வைத்தத னுட்டின **மலைவேனோ;**

*தேசிக் கானக முற்றதி னைப்புன
மேவிக் காவல்க வட்கல் சுழற்றுவள்
சீதப் பாதகு றப்பெண்ம கிழ்ச்சிகொள்
மணவாளா-

†தேடிப் பாடிய சொற்புல வர்க்கித
மாகத் தூதுசெ லத்தரில் கற்பக
தேவர்க் காதி‡தி ருப்புக லிப்பதி வருவோனே;

ஆசித் தார்மன திற்புகு முத்தம
கூடற் கே§வைகை யிற்கரை கட்டிட
ஆளொப் பாயுதிர் பிட்டமு துக்கடி படுவோனோ-

டாரத் தோடகி லுற்றத ருக்குல
மேகத் தோடொரு மித்துநெ ருக்கிய
ஆதிச் **சோலை மலைப்பதி** யிற்றிகழ்
பெருமாளே. (1)

## 444. தன்குறை கூறல்

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தனதான

வாதினை யடர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயமதொழிந்து தெளியேனே-

---

* தேசி - அழகு.

† பரவையாரைத் திருவாரூரில் மணம் செய்திருந்த சுந்தரர் பின்னர்த் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்தனர். இதனை அறிந்த பரவையார் சுந்தரர் திருவாரூருக்கு வந்ததும் தமது இல்லத்துக்குச் சுந்தரர் வரக்கூடா-தென்று தடுத்தனர். இதைக் கேட்ட சுந்தரர் மனம் மிக வருந்தி பரவையின் கோபத்தைத் தணிக்கத் தூது போம்படி ஆரூர்ச் சிவனையே வேண்டினர். சிவனும் அவர் சொல்லுக்கு இணங்கி ஒரு முறைக்கு இரு முறையாகத் தூது

(அடுத்த பக்கம் பார்க்க)

வாய் விரிவாகப் பேசும் பொய்யர்கள், நண்பு செய்து யாரையும் வஞ்சித்து வடிகட்டுபவர் - விலக்குபவர் - இப்படிப் பட்ட பொதுமகளிரின் மாயைச் செயலுக்கே மனம் வைத்து, அதனுள் (அந்த மாயையுள்) தினந்தோறும் அலைவேனோ!

அழகிய காட்டிடையே இருந்த தினைப் புனத்தை அடைந்து, (அப் புனத்துக்குக்) காவலிருந்து கவண் கல் சுழற்றுபவள், குளிர்ந்த திருவடியை உடையவள் - ஆகிய குறப்பெண் வள்ளி மகிழ்ச்சி கொள்ளும் மணவாளனே!

தலங்கள்தோறும் தேடிச்சென்று (பாடல்) பாடிய சொல் நிறைந்த புலவனாம் சுந்தரமூர்த்திக்கு இன்பம் தரவேண்டி (பரவையிடம்) தூது சென்ற அத்தர் (சிவபிரானிடத்தில்) வந்த கற்பகமே! தேவர்களுக்கு முதல்வனே! சீகாழிப் பதியில் (சம்பந்தராய்) அவதரித்தவனே!

விரும்பி வாழ்த்துவோருடைய மனத்தில் புகும் உத்தமனே! மதுரையில் வைகையில் (வெள்ளம் வந்தபோது) அணைகட்ட ஆளாக ஒப்புக்கொண்டு உதிர்ந்த பிட்டமுது வேண்டி, (பிட்டமுது வேண்டி ஆளாகி) அடிபட்ட சொக்க நாதரோடு - (சொக்கநாதர் வீற்றிருக்கும் மதுரைக்கு அருகே)-

சந்தனமரமும் அகில் மரமும் உள்ள மரக்கூட்டங்கள் மேகத்தோடு சம்பந்தப்பட்டு நெருங்கிய, பழைய சோலைமலை ஊரில் விளங்கும் பெருமாளே!

(மாயைக்கே மனம் வைத்து, அதனுள் தினம் அலைவேனோ)

## 444

தருக்கம் - சண்டையிடும் உணர்ச்சி பொதிந்து நெருங்கும் வேல் போன்ற கண்களை உடைய (பொது) மகளிரின் மாயம் எனைப் பீடியாது ஒழிந்து நான் தெளிவான அறிவைப் பெறுகின்றேன் இல்லை - (பெறஇல்லையே!)

---

சென்று பரவையாரைச் சுந்தரருடன் கூட்டிவைத்தனர். (பாடல் - 140 பார்க்க.)

‡ திருப்புகலிப்பதி - சீகாழி.

§ வைகையில் கட்டி - இவ்வரலாற்றை 439-ஆம் பாட்டின் கீழ்க் குறிப்பிற் காண்க.

மாமலர்கள் கொண்டு மாலைகள் புனைந்து
மாபத மணிந்து பணியேனே;
ஆதியொடு மந்த மாகிய நலங்கள்
* ஆறுமுக மென்று தெரியேனே-
† ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயி லென்ப தறியேனே;
நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நானில மலைந்து திரிவேனே-
‡ நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழுகேனே;
§ சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
¶ சோகமது தந்து **எனையாள்வாய்-**
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
**சோலைமலை** நின்ற பெருமாளே. (12)

---

* ஆறு திருமுகங்களும் - ஆதி சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி, பரா சக்தி, ஞான சக்தி, குடிலா சக்தி என்றும்; அ, உ, ம், நாதம், விந்து, சக்தி என்றும்; சிவபிரானுடைய ஆறு திருமுகங்களாம் என்றும்; ஈசன் திருமுகங்கள் ஐந்துடன் தேவி திருமுகம் ஒன்றும் சேர்ந்து ஆறு ஆயின என்றும்; ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களாம் என்றும் பலவகையாகக் கூறுவர்.

† ஆடுமயில் - ஓங்கார (பிரணவ) ரூபத்தைக் காட்டும்; ஓ (ங்) காரபரி -என வருவதும் உணரத்தக்கது. (திருப்புகழ் 145)

‡ 'நாகம்' - இது - " சூலமென ஓடு சர்ப்ப வாயு" பாட்டு 790, பாட்டு 190 - இன் முதல் நாலடியின் உரைகள் பார்க்க.

§ " ஊதி உணர்கின்ற வாழ்வு சிவமென்ற
யோகமது தந்து எனையாள்வாய்
ஓது தமிழ்கொண்டு ஞானவெளி தந்த
**ஊதிமலை** கொண்ட பெருமாளே" - என்றும் பாடம்.

(அடுத்த பக்கம் பார்க்க)

நல்ல மலர்களைக்கொண்டு மாலைகளைக் கட்டி (உனது) சிறந்த திருவடியில் அலங்கரித்துப் பணிகின்றேன் இல்லை (பணிய வில்லையே!)

முதல் முதற்கொண்டு ஈறுவரையில் (முடிவு வரையில்) உள்ள (சகல) நலங்களும் " ஆறுமுகம்" என்ற உண்மையைத் தெரிகின்றேன் இல்லையே!

போற்றத்தக்க ஒப்பற்ற மந்த்ர ரூப நிலையைக்கொண்டது (ஓம் - என்னும் பிரணவ ரூபத்தை - ஓங்கார ரூபத்தைக் கொண்டது) ஆடும் நிலையில் உள்ள மயில் என்பதை அறிந்தேனில்லையே!

* நாதமும் விந்துவும் (சுரோணிதமும் சுக்கிலமும்) - இவை தம்மால் ஆய (உற்பத்தியான) உடல் கொண்டு இப்பூமியில் அலைந்து திரிகின்றேனே.

நாகம் (சூலமென ஓடு சர்ப்ப வாயு - சூலாயுதம் போல ஓடுகின்ற பாம்பு போன்ற பிராணவாயு) (ஓடி) அடைகின்ற நாதநிலை (ஆறாவது ஆதாரமாகிய) ஆஞ்ஞை தானத்தில் ஒளி வீசுகின்ற ஞான சதாசிவ நிலையைத் தரிசித்து விரும்பி அந்நிலையில் நின்று தொழுகின்றேன் இல்லையே!

சோதி நிலையை உணர்கின்ற வாழ்வே சிவ வாழ்வு என்ற அந்த 'நீ நான்' அற்ற நிலையை ('அதுவே நான்' என்ற நிலையைத்) தந்து என்னை ஆண்டருளுக.

சூரர் குலத்தை வென்று வெற்றியோடு போய்ச் சோலை-மலையில் வீற்றிருக்கும் பெருமாளே.

(எனை ஆள்வாய்)

---

* நாதம் - சுரோணிதம்; உடலின் கூறு - நாதம் - விந்து கலந்தது; "ஒருமடமாதும் ஒருவனுமாகி யின்ப சுகந்தரும் அன்பு பொருந்தி உணர்வு கலங்கி ஒழுகிய விந்து, ஊறு சுரோணித மீது கலந்து, பனியிலொர்பாதி சிறுதுளி மாது, பண்டியில் வந்து புகுந்து திரண்டு" பட்டினத்தார். உடற்கூற்று வண்ணம்.

(முன் பக்கத் தொடர்ச்சி)

¶ சோகம் - ஸா அகம் - அது நான்; சோகம் - சோகம்பாவனை எனப்படும். 'சோகம் பாவனை' என்பது சீவான்மாவும் பரமான்மாவும் ஒன்றெனப் பாவிக்கை. 'அஹம் ப்ரஹ்மம்' என்பதில் நான் என்னும் முனைப்பு முற்பட்டு நிற்பதால் அதை முன்பின் மாற்றி 'ஸோஹம்' என உச்சரிக்கும்படி வைதிக சைவம் பகர்கின்றது.

-(ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம் - பக்கம் 31.)

## 445. பொது மகளிர் உறவு அற

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

வார்குழையை யெட்டி வேளினைம ருட்டி
மாயநம னுக்கு முறவாகி-
மாதவம ழித்து லீலைகள் மிகுத்து
மாவடுவை யொத்த விழிமாதர்;
சீருட னழைத்து வாய்கனிவு வைத்து
தேனித ழளித்து அநுபோக-
சேர்வைதனை * யுற்று மோசம்விளை வித்து
சீர்மைகெட வைப்ப றுறவாமோ;
வாரினை யறுத்து † மேருவை மறித்து
மாகனக மொத்த குடமாகி-
‡ வாரவணை வைத்து மாலளித முற்று
மாலைகளு மொய்த்த தனமாது;
§ தோரணி புயத்தி யோகினி சமர்த்தி
தோகையுமை பெற்ற புதல்வோனே-
சூர்கிளை மடித்து வேல்கர மெடுத்து
சோலைமலை யுற்ற பெருமாளே. (13)

---

* உற்று - உறுவித்து, உறவைத்து.

† "பெருமேருவை வளைத்து - திகழ்ந்து வாழும் ஒப்பிலாமுலை"- திருவாவடுதுறைப் புராணம்.

‡ கொங்கை - அன்புக்கு இடம்; 'அருமறைக் குழவிதன்பால் அன்பாற் பெருநிலைசேர் முலைக்கண்ணும்' - சீகாழிப் புராணம்.

§ தோர் அணி புயத்தி; தோரை - 'தோர்' எனக் குறுகிற்று. தோர் - தோளணி (தோள்வளை) - அருணகிரி நாதரின் புதிய பிரயோகம். தோரை - அணிவடம் "பொற்றோரை மின்ன" சிந்தாமணி 2132. தோரணி - ஒழுங்கு - எனலுமாம்.

## 445

நீண்ட காதணியை எட்டியும், மன்மதனையும் மருட்சியுறச் செய்தும், மாயத்தில் வல்ல யமனுடன் உறவு பூண்டும்-

நல்ல தவ நிலையை அழித்து, காம லீலைகள் மிகுத்து, மாவடுவுக்கு நிகரான கண்களை உடைய (பொதுமகளிர்)-

மரியாதையுடன் அழைத்து வாய்ப்பேச்சில் இனிமையை வைத்துப் பேசித், தேனென இனிக்கும் வாயிதழைத் தந்து (காம) அநுபோகக்

கூட்டுறவில் உறவைத்து, மோசம் விளையும்படி வைத்து, நன்மையைப் (புகழை) அழிய வைப்பார்கள், (அத்தகையோர்களின்) உறவு நல்லதா! (நல்லதன்று என்றபடி)

கச்சு (ரவிக்கையையும்) கிழித்து, மேரு மலையையும் தடுத்து (க்கீழ்ப்படுத்தி)ச், சிறந்த பொன் போன்ற குடம் போல்

விளங்கி-

அன்பாகிய ஆதரவை வைத்து, மிக்க லாவண்யத்தைக் (அழகைக்) கொண்டு, மாலைகள் நெருங்கிய கொங்கை விளங்கும் மாது-

தோரை (கழுத்தணிகளுள் ஒன்று - அணிவடம்) பூண்ட புயங்களை உடையவள், யோகினி, சாமர்த்தியம் நிறைந்தவள், மயிலன்ன உமாதேவி பெற்ற புதல்வனே!

சூரனையும் அவன் சுற்றத்தாரையும் அழித்து, வேலாயுதத்தைத் திருக்கரத்தில் ஏந்தி சோலைமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சீர்மைகெட வைப்பர் உறவாமோ)

## 446. பொது மகளிர் உறவு அற

*தனன தனதன தனத்தத் தாத்த*
*தனன தனதன தனத்தத் தாத்த*
*தனன தனதன தனத்தத் தாத்த தனதான*

அழகு தவழ்குழல் விரித்துக் காட்டி
விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி
அணிபொ னணிகுழை புரித்துக் காட்டி யநுராக-

அவச இதமொழி படித்துக் காட்டி
அதர மழிதுவர் வெளுப்பைக் காட்டி
அமர்செய் நகநுதி யழுத்தைக் காட்டி யணியாரம்;

ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி
* எழுத வரியிடை வளைத்துக் காட்டி
உலவு முடைதனை நெகிழ்த்திக் காட்டி யுறவாடி-

உருகு கடிதட மொளித்துக் காட்டி
உபய பரிபுர பதத்தைக் காட்டி
**உயிரை விலைகொளு மவர்க்குத் தேட்ட**
**மொழிவேனோ;**

முழுகு † மருமறை முகத்துப் பாட்டி
கொழுநர் ‡ குடுமியை யறுத்துப் போட்ட
முதல்வ § குகைபடு திருப்பொற் கோட்டு
முனிநாடா-

---

* எழுதவரியிடை - இடையின் நுண்மையைக் காட்டும், " இடை தானும் - வேதா ஆனோன் எழுதினா னிலையோ"- - திருப்புகழ் 150.

† அருமறை முகத்துப் பாட்டி - கலைமகள்.

" நான்முகன் நாவின்மேவி நான்மறை வடிவாய்... வீற்றிருக்கும் அம்மை" - சிவரகசியம்.

" எழுதா மறையும்... நிறைந்தாய் சகலகலாவல்லியே" (குமரகுருபரர்). முகம் - ஏழாம் வேற்றுமை உருபு. முகம் - வடிவு எனலுமாம் - 'கூன்முகமதி' - பிரபுலிங்க - கைலாச 3 என்புழிப் போல.

(அடுத்த பக்கம் பார்க்க)

## 446

அழகு விளங்கும் கூந்தலை விரித்துக் காட்டியும், கண்ணின் கடைப்புறம் இரண்டையும் புரட்டிக் காட்டியும், அழகிய பொன்னாலாய ஆபரணங்களையும் குழையையும் விளக்கமுறக் காட்டியும், காமத்தை விளைக்கவல்ல-

தன் வசமழிக்க வல்ல இனிய பேச்சுக்களைப் பேசிக் காட்டியும், வாயிதழின் செம்மையழிந்த பவளம் போன்ற வெளுப்பைக் காட்டியும், போரிடும் நகத்தின் நுனி அழுத்தினதைக் காட்டியும் - (நகக்குறியிட்டும்), அழகிய முத்துமாலை (முத்து வடம்)

தொங்குகின்ற இரண்டு கொங்கைகளையும் அசைத்துக் காட்டியும், எழுதுதற்கு அரிய (அரிதான) இடையை வளைத்துக் காட்டியும், அணிந்து உலவி வரும் புடைவையைத் தளர்த்திக் காட்டியும், நட்புப் பேச்சுக்களைப் பேசி-

(உள்ளத்தை உருக வைக்கும்) அல்குற் பிரதேசத்தை ஒளிப்பது போல் காட்டியும், இரண்டு சிலம்பணியும் பாதங்களைக் காட்டியும், உயிரையே விலைக்குக் கொள்பவராம் அந்த விலைமாதர்மேலுள்ள விருப்பத்தை ஒழிக்க மாட்டேனோ!

அருமறை முகத்து முழுகும் பாட்டி (அரிய வேதங்களில் வல்லவளாம் பெரியவள் (அல்லது) முழுகும் அருமறை - (பெரியோர்கள்) ஆழ்ந்து ஓதும் அரிய மறையின் வடிவினளாம் கிழவி - வேதக் கிழவி (வேத முதல்வி) கலைமகளின் கணவன் பிரமனது குடுமியை அறுத்துப் போட்ட (ஆட்டி வைத்த) முதல்வனே! குகைகள் அமைந்த (பொற்கோட்டை) அழகிய பொன்மலையை மேரு அல்லது கிரௌஞ்ச மலையை முனிந்தவனே (கோபித்தவனே)! நாடா (நாடி) - இறைவன் திருவருளை நாடி-

---

*(முன் பக்கத் தொடர்ச்சி)*

‡ *(பிரமன்) குடுமியை அறுத்துப்போட்ட முதல்வ!*

*'செவ்வேள் குட்டினான் அயன் நான்குமா முடிகளும் குலுங்க' - கந்தபுராணம் 1-16-14.*

*'நாலு சிரமோடு சிகை தூளிபட தாளமிடும் இளையோனே' - திருப்புகழ் 987.*

*'குடுமியிலே கரமொடு வீறமோதின மறவா'-திருப்புகழ் 741,*

*(637 பக்கம் பார்க்க)*

*முடுகு முதலையை வரித்துக் கோட்டி
அடியர் தொழமக வழைத்துக் கூட்டி
முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட முதுநீதர்;

† பழைய கடதட முகத்துக் கோட்டு
வழுவை யுரியணி ‡ மறைச்சொற் கூட்டு
பரமர் § பகிரதி சடைக்குட் சூட்டு பரமேசர்-

---

* முதலையுண்ட பாலனைச் சுந்தரர் வரவழைத்தது - பாட்டு 398 பார்க்க.

" முறைசெய்தமிழ்" - 'புக்கொளியூர் அவிநாசியே கரைக் கான் முதலையைப் பிள்ளைதரச் சொல்லு காலனையே" - சுந்தரர் தேவாரம் VII-92-4.

† யானையை உரித்த வரலாறு :- பாட்டு 286 - பார்க்க.

‡ 'மறைச்சொற் கூட்டு பரமர்'- 'வேத மொழியர்' திருவாசகம் அன்னைப்பத்து. " மறைநின்றிலங்கு மொழியார்' - சம்பந்தர் II -80-4.

§ கங்கை சூடிய வரலாறு; - தேவி ஒருமுறை விளையாட்டாக இறைவனுடைய இரண்டு கண்களையும் மூட உலகெல்லாம் இருண்டது. இறைவன் தமது நெற்றிக்கண்ணால் நோக்கி இருளை ஓட்டினர். தேவி தன் கையை எடுக்கத் தேவியின் பத்து விரல்களினின்றும் அச்சத்தால் வியர்வை தோன்றிக் கங்கையோர் பத்தாய்ப் பரவிற்று. கங்கையின் பெருவெள்ளத்தைக் கண்டு அஞ்சின திருமால் முதலானோர் சிவபிரானைவேண்ட அவர் அந்த வெள்ளத்தை அழைத்துத் தம் சடை ஒன்றிற் சூடி அடக்கினர்.

" அந் நீத்தந் தன்னை நினைத்தவண் அழைத்து நாதன் ஒன்று தன் வேணி மேலோர் உரோமத்தின் உம்பர் உய்ப்ப."- கந்தபுராணம் 6-13-372.

"தாழ்தரு புன்சடை ஒன்றினை வாங்கி, வீழ்தரு கங்கை கரந்தார்"- சம்பந்தர் I-39-8.

விரைந்து வரும்படி முதலையை வரவழைத்துச், சூழ்ந்து நின்ற அடியார்கள் தொழ (முதலை உண்ட) பிள்ளையை அழைப்பித்துக் கூட்டி (அந்தப் பிள்ளையின் பெற்றோர்-களிடம் சேர்ப்பிக்க விண்ணப்பஞ் செய்த ("பிள்ளை தரச்சொல்லு காலனையே" - என்று முறையிட்ட சுந்தரர் பாடின) தமிழினை (அன்புப்) பெருக்குடன் கேட்ட பழைய நீதிமான்

பழையதும் மதம்பாயும் இடமாம் முகத்தையும், தந்தத்தையும் கொண்ட யானையின் தோலை உரித்து அணிந்தவர், வேத மொழிகளைக் கூறும் பரமர், கங்கையைச் சடையிற் சூடியுள்ள பரமேசர்-

---

(635 ஆம் பக்க தொடர்ச்சி)

§ குகைபடு திருப்பொற்கோட்டு முனி-

பொன்மலையை முனிந்தவனே (முனி - முனிந்தவனே, கோபித்தவனே!) பொன்மலை - மேரு எனக் கொண்டால் - இது 'மேருவைச் செண்டால் அடித்த திருவிளையாடலைக்' குறிக்கும் - (பாட்டு 2 கீழ்க்குறிப்பு); பொன்மலை - கிரௌஞ்சம் - "குருகு பெயர் பெற்ற கன வடசிகரி பட்டுருவ வேல்தொட்ட சேவகனும்" - வேடிச்சி காவலன் வகுப்பு, (கனம் - பொன்) 'பொன்னஞ் சிலம்பு புலம்பவரும் எங்கோன்' - கந்தர் அலங்காரம் 89. ' கனகிரௌஞ்சத்திற் சத்தியை விட்டு' - திருப்புகழ் 454. இனி, முனி என்பதற்கு முனியே - பெரியோய் - தவத்தோய் என்றும் பொருள் காணலாம். - "முனியே நான்முகனே முக்கணப்பா"- திருவாய்-மொழி 10-10-1.

"ஆட்கொள்ளும் முனிதனை" - சம்பந்தர் II-14-3; "முனிதான் உமையொடு முயங்கி" - சம்பந்தர் 1-34-5; "முருகன் தனிவேல் முனி" கந்தர் அநுபூதி - 13. இந்தப் பொருளில் 'திருப்பொற்கோட்டு முனி!' என்றால் அழகிய "கனககிரி'ப் பெரியாய்" எனப் பொருள்படும். (கனககிரி) பாடல் 400. இனி, 'பொற்கோட்டு முனியை நாடா' எனக் கொண்டு 'சிவனை நாடி' - எனப் பொருள் காண்பர் அன்பர் - அருட்கவி சேதுராமன்; இப்பொருளில் பொன்கோடு என்பது கயிலை. கயிலையைப் 'பொன் நொடித்தான் மலை' என்பர் சுந்தரர் (7-100-10); 'செம்பொற் கயிலாயமலை' - சம்பந்தர் - II-15-5.

பணிய அருள்சிவ மயத்தைக் காட்டு
குமர *குலமலை யுயர்த்திக் காட்டு
பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு
பெருமாளே. (14)

## 447. பிறவியற

தனதன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதன தத்தத் தனதானா

தலைமயிர் † கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி யிட்டுத் தடுமாறித்-
தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்
டசனமும் விக்கிச் ‡ சத்தியெ டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்;
திலதயி லத்திட் டொக்கவெ ரிக்கத்
§ திரிபலை சுக்குத் திப்பிலி யிட்டுத்
தெளியவ டித்துற் றுய்த்துடல் செத்திட்
டுயிர்போமுன்

---

* குலமலை என்பது சோலைமலை.

"குலமலை கோலமலை குளிர்மாமலை கொற்றமலை நிலமலை நீண்டமலை திருமாலிருஞ் சோலையதே"

- பெரியாழ்வார் திருமொழி -4-3-5.

† 'தலை மயிர் கொக்குக்கு ஒக்க நரைத்து'-

"மீனுண் கொக்கின் தூவியன்ன
வானரைக் கூந்தல்" - புறநானூறு 277.

"குயிலொத் திருங்குஞ்சி கொக்கொத்து"

11-ஆம் திருமுறை - சேத்திரத் திருவெண்பா 12.

(அடுத்த பக்கம் பார்க்க)

(உன்னைப்) பணிய (அவருக்கு)ச் சிவமயத்தைப் (பிரணவப் பொருளைக்) காட்டு (உபதேசித்த) குமரனே! சோலைமலையிற் பிரபலமாய் விளங்கும் பெருமாளே! அன்புடன் அழகிய மயிலை நடத்திக் காட்டும் பெருமாளே!

(உயிரை விலைகொளும் அவர்க்குத் தேட்டம் ஒழிவேனோ)

## 447

தலை மயிரானது † கொக்குப் போல வெளுத்து நரைத்து, கலகலெனப் பல்வரிசைகளின் கட்டுவிட்டு, (தளர்நடை பட்டு)- நடை தளர்பட்டு - நடை தளர்ந்து, தத்து - (தத்துகின்ற - தத்தித் தத்தி நடக்கின்ற) - அடியிட்டு அடி வைத்துத் தடுமாறித்-

தடிகொண்டு தத்தி நடந்து, கக்கல் (ஒக்களாம்) அதிகமாகி, உணவும் உண்ண முடியாது விக்கல் எடுத்து, ‡ வாந்தியாகி, சளி மிகுத்து பித்தம் மிக அதிகரித்துப் பலமுறையும்,

தில தயிலத்து இட்டு (எண்ணெயிலிட்டு ) ஒக்க எரிக்க (எரிக்க ஒக்க)- எரித்தல்போல - உடம்பு எரிச்சல் உண்டாக - திரிபலை, சுக்கு, திப்பிலி இவை சேர்த்துத் தெளிய வடித்து உற்று - தெளிய வடித்த கசாயத்தைப் பருகி, உடல் மடிந்து உயிர் போவதற்கு முன்பாக-

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

‡ சத்தி - கக்கல், வாந்தி எடுத்தல்.

'காமரச வல்லி மின்னே திருமலைவேள் தாதை
 கால் கொண்ட பணிதலையிற் கொண்டுசடைப் பட்டே
ஈமமதில் நடமாடு பித்தனவன் செய்தி
 ஈன்றதாய் முழுநீலி தமையன்மண மில்லான்
மாமனென்றா லாயனென்றார் மாடுமேய்த் திருந்தான்
 மையல்தந்த மாப்பிளையோ சீரலைவாய்ச் செட்டி
தாமவன வேடனுறு பிணிமுகமேற் கொண்டும்
 சத்தியெடுத் தேதிரிந்தான் தன்மேல்மால் கொண்டாய்

- திருமலையாண்டவர் குறவஞ்சி - 29

இந்த நிந்தாஸ்துதிப் பாடலிற் 'சத்தி' என்னும் சொல் வேல். கக்கல் என்னும் இரு பொருளில் வந்ததைக் காண்க.

§ திரிபலை - கடுக்காய், தான்றிக்காய், நெல்லி வற்றல் இவை மூன்றையும் திரிபலை என்பர் வைத்திய பரிபாடையில்.

திகழ்புகழ் கற்றுச் சொற்கள்ப யிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
**செனனம றுக்கைக் குப்பர முத்திக் கருள்தாராய்;**

கலணைவி சித்துப் பக்கரை யிட்டுப்
புரவிசெ லுத்திக் *கைக்கொடு வெற்பைக்
கடுகந டத்தித் திட்டென எட்டிப் பொருசூரன்-

கனபடை கெட்டுத் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்
களி †மயி லைச்சித் ரத்தில்ந டத்திப்
பொருகோவே;

‡குலிசன்ம கட்குத் தப்பியு மற்றக்
குறவர்ம கட்குச் சித்தமும் வைத்துக்
குளிர்திணை மெத்தத் தத்துபு னத்திற்
றிரிவோனே-

கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்
§குலகிரி யிற்புக் குற்றுறை யுக்ரப்
பெருமாளே. (15)

---

* கைக்கொடு வெற்பை - கையையுடைய கொடிய மலையை யொத்த யானையை.

† மயில் - சூரன் மயில்வாகனமாவதற்கு முன்பு, போர்க்களத்தில் இந்திரன் மயிலாகி முருகவேளைத் தாங்கினன்.

"பன்னிரு நாட்டத் தண்ணல் படர்சிறை மயூர மாகி
முன்னுறு மகவான் தன்மேல் மொய்ம்புடன் புக்கு வைகி"

- கந்தபுரா - 4-13-382.

(அடுத்த பக்கம் பார்க்க)

விளங்கும் உனது புகழைக் கற்று, (அப் புகழ்ச்) சொற்களை நிரம்பக் கூறிப் (போற்றி செய்து), (உனது) திருவடியைப் பற்றித் தொழுது ஒழுகிப், பிறப்பை நான் அறுக்கும் வண்ணம் மேலான முத்தி யின்பத்தைப் பெற அருள் பாலிப்பாயாக.

சேணம் கட்டி, அங்கவடியிட்டு, குதிரைகளைச் செலுத்தியும், துதிக்கை கொண்ட கொடிய மலைகளை (யானைகளை) வேகமாக நடத்தியும், திடீரென்று நெருங்கி வந்து சண்டையிட்ட சூரனுடைய

பெரிய படை அழிந்து நிலைகுலையவும், சூரனும் அலை கடலுக்குள் ஓடிப் புகும்படி அவனை மோதியும், களிப்பு (மகிழ்ச்சி) கொண்ட மயிலை (இந்திரனாகிய மயிலை) அழகுடன் நடத்திச் சண்டையிட்ட தலைவனே!

(குலிசாயுதங்கொண்ட) இந்திரன் மகள் தேவசேனைக்குத் தெரியாமல் தேவசேனையை விட்டு விலகிச்) சென்று, குறவர் மகள் வள்ளிமீது சித்தத்தை வைத்து (வள்ளியை நாடிச்-சென்று) குளிர்ந்த தினைகள் மிகவும் பரவியுள்ள தினைப்-புனத்தில் திரிந்தவனே!

பொல்லாத கிரவுஞ்ச கிரியை (வேலாற்) குத்தி முறித்துப் போர் புரிந்து, மேம்பட்ட உனது நிலையை விளக்கிச், சோலை மலையிற் புகுந்து வீற்றிருக்கும் உக்ரப் பெருமாளே!

(பரமுத்திக் கருள்தாராய்)

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

‡ "குறட்கு நீரருத்தி வைகைக் குடிஞையா யொழுகு
கங்கை அறற் குழல்....
மறக்கயல் நெடுங்க ணானை வஞ்சித்து ....
புறப்படுவாரைப் போலப் போதுவான் போத மூர்த்தி"
- திருவிளை - மண்சுமந்.

சிவபிரானும் கங்கையை வஞ்சித்துச் சென்றமை ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

§ "குருகிரி" என்றும் பாடம் - குருகிரி ( சுவாமிமலை)

## 448. வேலை மறவாமை

*தனதன தனந்த தான, தனதன தனந்த தான*
*தனதன தனந்த தான தனதான*

*மலரணை ததும்ப மேக குழல்முடி சரிந்து வீழ*
*மணபரி மளங்கள் வேர்வை யதனோடே-*
*வழிபட இடங்க ணாட பிறைநுதல் புரண்டு மாழ்க*
*வளைகலை நெகிழ்ந்து போக இளநீரின்;*

*முலையிணை ததும்ப நூலின் வகிரிடை சுழன்று வாட*
*முகமுகமொ டொன்ற பாய லதனூடே-*
**முதுமயல் கலந்து மூழ்கி மகிழ்கினும் அலங்க லாடு*
*முடிவடிவொ டங்கை வேலு* **மறவேனே;**

*சிலைநுத லிளம்பெண் மோகி சடையழகி யெந்தை பாதி*
*† திகழ்மர கதம்பொன் மேனி யுமைபாலா-*
*சிறுநகை புரிந்து சூரர் கிரிகட லெரிந்து போக*
*திகழயி லெறிந்த ஞான முருகோனே;*

*கொலைமிர் பயின்ற வேடர் மகள்வளி மணந்த தோள*
*குணவலர் கடம்ப மாலை யணிமார்பா-*
*கொடிமின லடைந்த சோதி மழகதிர் தவழ்ந்த ஞான*
**குலகிரி** *மகிழ்ந்து மேவு. பெருமாளே.* (16)

---

* 'கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை - மொண்டுண்டயர்கினும் வேல் மறவேன்' - கந்தர் அலங் 37.

† மகிழ் மரகதம் பெண் ஆகம் அமலணி - திருப். "இருவினை"

# 448

மலரணை அசைந்து கலைய, மேகம் போன்ற (கரிய) கூந்தலின் முடி சரிந்து விழ, மிக்க நறிய மணங்கள் வேர்வையுடனே-

ஒன்றுபட, *இடம் (விசாலமான) கண்கள் அசைய பிறைபோலும் நெற்றி புரண்டு கலங்க, அலங்காரமாய் அணிந்த ஆடை நெகிழ்ந்து போக, இளநீர் போன்ற

கொங்கைகள் இரண்டும் அசைய, நூலின் பிளவு போன்ற நுண்ணிய இடை சுழன்று வாட்டம் கொள்ள, முகம் முகத்தோடு பொருந்த, படுக்கை அணையிலே-

பெரிய மோகச் செயலிற் கலந்து முழுகி (நான்) களி கூர்ந்திருந்தாலும், மாலைகள் அசையும் சிரம் முதலான உனது வடிவத்தையும், அழகிய திருக்கரத்தில் உள்ள வேலாயுதத்தையும் மறக்கமாட்டேன்.

வில்போன்ற நெற்றியை உடைய இளம்பெண், மோகி, (ஆசையைத் தருபவள்), அழகிய சடையினள், எந்தை (சிவனுடைய) பாதியில் (இடதுபாதியில்) விளங்கும் மரகதம் போல் பச்சை நிறத்து அழகிய உருவினளாம் உமையின் பாலனே!

புன்னகை செய்து, சூரனும், மலையும், கடலும் எரிந்து போக, விளங்குகின்ற வேலை எறிந்த ஞான முருகனே!

கொலைத் தொழிலே பயின்றிருந்த வேடர்களின் மகள் வள்ளி மணந்த தோளனே! நற்குணனே! அலர் கடம்ப மாலை (கடம்பு அலர்மாலை) - கடப்பமலர் மாலை அணிந்த மார்பனே! (அல்லது - குணம் - (நிறம் உள்ள) அலர்மாலை மலர்மாலை, கடப்பமாலை இவைகளை அணிந்த மார்பனே!)

கொடி மினல் (மினல்கொடி) - மின்னற்கொடி போன்ற சோதியே! இளங்கதிர் விளங்கும் ஞானனே! குலகிரி (சோலைமலை) யில் மகிழ்ந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(வடிவொடங்கை வேலும் மறவேனே)

---

* இடங்கண் ஆட - இடது கண் ஆடுதல் - பெண்டிர்க்கு நலம் பயக்கும் என்ப.

# ஆறு திருப்பதி

## 449. திருவடி பெற

*தனதன தனதானன தனதன தனதானன*
*தனதன தனதானன தனதான*

*அலைகடல் நிகராகிய விழிகொடு வலைவீசிகள்*
** அபகட மகபாவிகள் விரகாலே-*

*அதிவித மதரா † யத நிதமொழி பலகூறிகள்*
*அசடரொ டுறவாடிகள் அநியாயக்;*

*‡ கலை § பகர் விலைமாதர்கள் இளைஞர்கள் குடிகேடிகள்*
*கருதிடு கொடியாருட னினிதாகக்-*

*கனதன முலைமேல்விழு கபடனை நிருமூடனை*
**கழலிணை பெறவேயினி** *யருள்வாயே;*

*அலைபுனல் தலைசூடிய பசுபதி மகனாகிய*
*அறுமுக வடிவே அருள் குருநாதா-*

*அசுரர்கள் குடியேகெட அமரர்கள் பதியேபெற*
*அதிரிடும் வடிவேல்விடு மதிசூரா;*

---

* அபகடம் - வஞ்சகம். † அதநித - அத அநீத; அதம் - தாழ்வு.

‡ கலை - சரீரம்; கலையிலாளன் - மன்மதன்; - *(சிலப் 10-28)*; புணர்ச்சிக்கு உரிய கரணங்கள் " கலையுணர் மகளிர்"

- *(சிந்தாமணி உரை. 1625)*

பரத்தையர்க்குரிய கலைகள் அறுபத்து நான்கு என்ப-

" யாழ்முதலாக அறுபத் தொருநான்கு
ஏரிள மகளிர்க் கியற்கையென் றெண்ணிக்
கலையுற வகுத்த காமக் கேள்வி"

- *(பெருங்கதை - 1-35-84)*

*(அடுத்த பக்கம் பார்க்க)*

## ஆறு திருப்பதி

## 449

அலை வீசும் கடலுக்கு ஒப்பான கண்கொண்டு (காம) வலையை வீசுபவர்கள், வஞ்சக எண்ணமுடைய மகாபாவிகள் - தமது உபாயத்தாலே-

அதிக (பல) விதமான செருக்குடன் தாழ்வான அநீத-மான (அநியாயமான) பேச்சு பல பேசுபவர்கள், அசட்டு மனிதரொடு உறவு செய்பவர்கள், அநியாய வழியில்-

கலை (உடலை) பகர் (விற்கின்ற) விலை மாதர்கள், இளைஞர்களுடைய குடியைக் கெடுப்பவர்கள், (அல்லது - பாலவயதினர் குடிகேடிகள்), (நான்) மனத்தில் விரும்பிய கொடிபோன்ற மகளிர்-ஆகிய பொது மாதர்களுடன் இன்பகர-மாகக் (கூடி) (அவர்களுடைய-)

பாரமான செல்வமாம் கொங்கைமேலே விழுகின்ற வஞ்சகன், முழுமூடன் உன் திருவடியிணையைப் பெறுமாறு இனி அருள்புரிவாயாக.

அலை வீசும் (கங்கை) நீரைத் தலையிற் சூடிய பசுபதி சிவபிரானது - மகனாகிய ஆறுமுக உருவத்தனே! அருள் பாலிக்கும் குருமூர்த்தியே!

அசுரர்களின் குடி அழியும்படியும், தேவர்கள் தமது ஊரை (அமராவதியைப்) பெறும்படியும், ஒலிபெருக்கிச் செல்லும் கூரிய வேலைச் செலுத்தின அதிசூரனே!

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

"எண்ணெண் கலையோர் இருபெருவீதி"

"எண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற

பண்ணியன் மடந்தையர்' - (சிலப் - 14-167; 22-138)

§ பகர்தல் - விற்றல்; சொல்லுதல்

தலைய யனறியா வொரு சிவகுரு பரனேயென
தரணியி லடியார்கண * நினைவாகா-
† சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய
தடமயில் தனிலேறிய பெருமாளே. (1)

## 450 . அடிமையாக

தானதனத் தனதனன தனதான

ஈனமிகுத் துளபிறவி யணுகாதே;
யானுமுனக் கடிமையென வகையாக;
ஞான அருட் டனையருளி வினைதீர-
‡ நாணமகற் றியகருணை புரிவாயே;

---

* நினைவாகா - நினைக்கும் வாகா. வாகு - அழகு. வாகா அழகனே! "வாகா குமரா மயில் வாகனனே" - கந்தர் அநுபூதி-41.

† சகலமு முதலாகிய அறு பதி - சகல தலங்களுக்கும் முதன்மையாகவுள்ள திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திரு ஆவினன்குடி - (பழநி), திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் தலங்கள். இத் தலங்கள் முருகாற்றுப்படையிற் கூறப்பட்ட முருகவேளின் ஆறு வீடுகள் ஆதலின். ("ஆற்றுப்படை வீடு") ஆறுபடை வீடு என மருவிநிற்கப் பின்னோர் அழைக்கலாயினர்.

‡ இது நாணம் ஒழிந்த பெருநிலையைக் குறிக்கும்:
" சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணதுவாக"

- திருவாசகம் போற்றித் திருவகவல் - 68-69.

(அடுத்த பக்கம் பார்க்க)

சிறந்த பிரமன் அறியமாட்டாத ஒப்பற்ற சிவனுக்கு (அல்லது - சிரசை அயன் அன்னமாய்ப் பறந்தும் காண முடியாத ஒப்பற்ற சிவனுக்கு)க் குருபரனே! என்று பூமியில் உள்ள அடியார் கூட்டம் நினை (நினைக்கின்ற - தியானிக்-கின்ற) வாகா (அழகனே)-

சகல தலங்களுக்கும் முதலாக விளங்கும் ஆறு திருநகர்த் தானங்களில் (ஆறுபடைவீடு எனப்படும் தலங்களில்) வீற்றிருக்கும் பெருமாளே! பெரிய மயில்மேல் ஏறிய பெருமாளே!

(கழலிணை பெறவே இனி யருள்வாயே)

## 450

இழிவு மிகுந்துள்ள பிறப்பு அணுகாத வண்ணம்

நானும் உனக்கு அடிமையாம் வகைக்கு (அடிமையாகும் திறத்தைப் பெற)

'ஞானம்' என்கின்ற பிரசாத அருளைப் பாலித்து என்னுடைய வினைகள் ஒழிய-

'நாணம்' (என்னும் கட்டை - விலங்கை) விலக்கும் உனது கருணையைத் தந்தருளுக.

---

(முன் பக்கத் தொடர்1ச்சி)

அகற்றிய - அகற்றுகின்ற - (விலக்கும்); இறந்த காலம், நிகழ்காலப் பொருளில் வந்துள்ளது.

'பவங்கள் (தொலைந்த) தொலைத்த வடிவேலா' - பாடல் 367;
'அன்பர் பங்காகி நின்ற குமரேசா' - பாடல் 369-என்புழிப்போல்;

* தானதவத் தினின்மிகுதி பெறுவோனே
† சாரதியுத் தமிதுணைவ முருகோனே;
‡ ஆனதிருப் பதிகமரு ளிளையோனே
§ ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே. (2)

---

* தான் தவத்தினில் - தன்னைக் குறித்து அன்பர்கள் செய்யுந் தானத்திலுந் தவத்திலும்.

† சாரதி உத்தமி துணைவன் - சரசுவதியாகிய உத்தமிக்குப் பக்கத் துணையாக இருப்பவன்; சகோதர முறையுடையவன் எனினுமாம்; சா ரதி எனப் பிரித்து அந்த ரதிதேவிக்குச் சகோதரனே எனலுமாம்; முருகவேளுக்குப் பிரமனும் மன்மதனும் மைத்துனர்கள்.

"மதனனுக்கும் சதுர்முகற்கும் மைத்துனன்காண் அம்மே"
(திருமலையாண்டவர் குறவஞ்சி)

‡ சிவபிராற்கு ஆனதும் (உகந்ததும்) உலகத்துக்கு நன்மை தருவதுமான - திருப்பதிகம் - தேவாரப்பாக்களை - அருளிய இளையவனே! (சம்பந்த மூர்த்தியே! அல்லது 'வாழ்க அந்தணர்' என்னும் திருப்பாசுரத்தை அருளிய சம்பந்த மூர்த்தியே), அல்லது ஆன (உனக்கு உகந்த) திருப்பதிகம் ... பாடல்களை.... (அழகிய சந்தத் திருப்புகழ்ப் பாடல்களை) அருள் - பாடும்படி எனக்கு அருளிய - இளையோனே!

§ ஆறு படைவீடு என்னாது ஆறு திருப்பதி என்றும், 'அறுபதி" என்று 449-ஆம் பாடலிலும் கூறியது கவனிக்கற் பாலது; ஆறு திருப்பதிகள் திருமுருகாற்றுப்படையில் நக்கீரரால் எடுத்து ஓதப்பட்ட மேற்சொன்ன (பக்கம் 646- கீழ்க்குறிப்பு) ஆறு வீடுகள் (தலங்கள்) 'ஆற்றுப்படை வீடு' என மருவிற்று. அருணகிரிநாதர் நூலாராய்ச்சி (பக்கம் 134, 151) பார்க்க.

அன்பர்கள் செய்யும் தானத்திலும் தவத்திலும் மேன்மைப் பகுதியைப் பெறுபவனே! (தானமும் தவமும் மிகுதியாக உனைக் குறித்தே அன்பர்கள் செய்வார்கள் என்றபடி)

சரசுவதி தேவியாம் உத்தமியின் துணைவனே! (கலை மகளுக்குத் துணைசெய்பவனே - உதவி புரிபவனே - அல்லது) சகோதர முறை உடையவனே!

சிவபிராற்கு ஆன (உகந்த) திருப்பதிகங்களை (தேவாரப் பாக்களை) அருளிய இளையோனே (சம்பந்த மூர்த்தியே)!

ஆறு திருப்பதிகளில் (ஆறுபடை வீடுகளில்) விளங்கும் பெருமாளே!

(நாணமகற்றிய கருணைபுரிவாயே)

# பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை

(எண்: பாட்டெண்)